# மகாத்மா காந்தி நூல்கள்

## 2

அகிம்சா தருமத்தைக் குறித்து மகாத்மா காந்தி
'எங் இந்தியா' 'ஹரிஜன்' பத்திரிகை
களிலும் மற்றவைகளிலும் எழுதிய
கட்டுரைகள், கடிதங்கள், சொற்
பொழிவுகள் ஆகியவைகளை
விவரமாகக் கொண்டது
இந்நூல்.






*வெளியிடுவோர் :*

**காந்தி நூல் வெளியீட்டுக் கழகம்**

சர்க்கார் எஸ்டேட், மவுண்ட் ரோடு

சென்னை - 2

# அகிம்சா தருமம்

மகாத்மா காந்தி
எழுதியது

தமிழாக்கம் :
ரா. வேங்கடராஜுலு

2042

# பதிப்புரை

அகிம்சையும் சத்தியமும் காந்தியடிகளின் வாழ்க்கைக்கு அடிப்படையாக இருந்தன. இவ்விரண்டு குணங்களேயும் அவர் வேருக நினைக்கவில்லே. ஒரு காசுக்கு இரண்டு பக்கங்கள் இருப்பது போல் உயர் வாழ்விற்கு இவ்விரண்டு குணங்களும் இணைபிரியா அம்சங்களென அவர் கருதினர்.

அகிம்சையைப் பற்றிய விவரமான புத்தகம் ஒன்றை எழுத வேண்டுமென அவரைப் பலர் வேண்டினர்கள். அதற்கு அவர் இணங்கவில்லே. மக்கள் சேவையிலும், நாட்டின் தேசீயப் பிரச்னேகளேத் தீர்ப்பதிலும் அல்லும் பகலும் ஓயாமல் அவர் ஈடுபட்டிருந்தது அதற்கு ஒரு காரணமாயிருக்கலாம். ஆனல், அதற்கு அவர் கொடுத்த காரணம் வேறு. அகிம்சைத் தத்துவம் மிகப் புனிதமானது; கடவுளேப்போல் எட்டுதற்கு அரியது. பலவீனம் நிறைந்து, ஊன் வாழ்க்கையில் ஆழ்ந்திருக்கும் மனிதனின் சிந்தனேக்கு அப்பாற்பட்டது. எனவே மனிதன் செய்யக்கூடியதெல்லாம் இந்த லட்சியத்தை நோக்கிப் பாடுபடுதலேயாம். பூரணமாகத் தெரியாத ஒன்றைப் பற்றி எழுத முற்படுதல் தவறு என்று அவர் கருதினர்.

அவர் உள்ளம், உலகத்தின் புனிதர்கள் உள்ளம் போல், ஆழ்ந்து பண்பட்டது. அவர் வாழ்க்கை அகிம்சையையும் சத்தியத்தையும் குறிக்கோளாகக் கொண்டு நடத்தப் பெற்றது. எனவே, அகிம்சையின் பல அம்சங்களேயும், அவற்றை எப்படிப் பின்பற்றுவது என்பது பற்றியும் அவர் அவ்வப்போது எழுதிய கட்டுரைகளும், கடிதங்களும் அபூர்வமான விளக்கம் தருவனவாக இருக்கின்றன. சத்தியத்தையும் அன்பு வாழ்க்கையையும் பின்பற்றுகிறவர்களுக்கு இவை என்றும் மங்காத சுடர் விளக்காக இருக்கும்.

காந்தி நூல் வெளியீட்டுக் கழகம் வெளியிட்டு வரும் காந்தி நூல்களின் தொகுதிகளில் முதலில் வெளிவந்தது, அவர் எழுதிய 'தென்னுப்பிரிக்க சத்தியாக்கிரகமும்' 'இந்திய சுயராஜ்யமும்'. இது இரண்டாவது தொகுப்பு. இதில் சேர்க்கப்பட்டிருக்கும் விஷயங்கள் முதலில் ஆங்கிலத்தில் தொகுக்கப்பட்டு, பல அறிஞர்களுக்கு அவற்றை அனுப்பி, அவர்கள் யோசனேகள் வேண்டப்பட்டன. எனவே, இத்தொகுதி அவர்கள் ஆலோ

சனையின் பயனையும் பெற்றிருக்கிறது. இத்தொகுப்பைத் திரட்டி, இதை மொழிபெயர்த்த பெருமை ஸ்ரீ ரா. வேங்கடராஜுலு வைச் சார்ந்தது. இப்பணியைப் பக்தியுடன் ஏற்று, அவர் அழகாகச் செய்திருக்கிறார்.

ஒவ்வோர் துறையிலும், காரியத்திலும் அகிம்சையை அனு சரிப்பதைக் குறித்து மகாத்மா கொண்டிருந்த கருத்துக்கள் எளிதில் விளங்க இத்தொகுப்பு பயன்படுவதாக இருக்க வேண்டும். எனவே, மகாத்மா அகிம்சையைக் குறித்து எழுதிய கட்டுரைகள், கடிதங்கள், ஆற்றிய சொற்பொழிவுகள் ஆகியவை பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு இத்தொகுப்பில் கொடுக்கப் பட்டிருக்கின்றன. அகிம்சையின் தத்துவம்; சமயக் கோட் பாட்டில் அகிம்சை ; அகிம்சையில் கொல்லாமை ; போரும் அகிம் சையும் ; அன்னியர் படையெடுப்பு வந்தால் ; போரும் காங்கிரஸ் அகிம்சையும்; சுதந்திரத் தருவாயில் அகிம்சை நிலை; அகிம்சையும் பெண்களும் ; தகாத செயல்களை எதிர்த்து அகிம்சை; ஹிந்து முஸ்லிம் சச்சரவில் அகிம்சை; பொருளாதார விஷயங்களில் அகிம்சை என்பதாக அவை பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு இந்நூலில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொன்றிலும் மகாத்மாவின் அகிம்சை நோக்கு ஆரம்பம் முதல் கடைசி வரை யில் எவ்விதம் இருந்து வந்திருக்கிறது என்பதைக் காட்டும் வகையில் சம்பந்தப்பட்ட கட்டுரைகள் தேதிக் கிரமத்திலும் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

சில கட்டுரைகள் எந்தச் சந்தர்ப்பத்தில் எழுதப்பட்டன என்பதற்கும், அவற்றில் குறிப்பிடப்படும் சம்பவங்களைப்பற்றி யும் விளக்கங்கள் அடிக்குறிப்புக்கள் மூலம் ஆங்காங்கு கொடுக் கப்பட்டிருக்கின்றன.

முதல் தொகுதியை மிகுந்த அன்புடன் ஏந்திய தமிழ் அன் னையும், தமிழ் மக்களும் இதையும் அதே அன்புடன் ஏற்று ஆசி அளிப்பார்களாக.

**காந்தி நூல் வெளியீட்டுக் கழகம்,** **தி. சு. அவினாசிலிங்கம்**
சென்னை-2, 24—6—58.

# பொருளடக்கம்


| | | | பக்கம் |
|---|---|---|---|
| பதிப்புரை | ... | ... | vii |
| பட விளக்கம் | ... | ... | xvii |
| தனி நூல் எழுதாத காரணம் | ... | ... | 1 |

## அகிம்சையின் தத்துவம்

| | | | |
|---|---|---|---|
| பகைவரிடத்திலும் அன்பு | ... | ... | 6 |
| அகிம்சை என்பது என்ன ? | ... | ... | 9 |
| அகிம்சை அல்லது அன்பு | ... | ... | 16 |
| வாளின் தத்துவம் | ... | ... | 20 |
| இயற்கை எது ? | ... | ... | 27 |
| "மனிதத் தன்மையைவிட அதிக மிருகத்தன்மை" | | ... | 30 |
| மனித இனத்தின் சின்னம் | ... | ... | 36 |
| செயலற்று இருப்பதன்று | ... | ... | 44 |
| எல்லோரும் உபயோகிக்கலாம் | ... | ... | 45 |
| கல்வியில் அகிம்சை | ... | ... | 45 |
| மிகத் தீவிரமான சக்திகள் | ... | ... | 50 |
| மாறுதல் இல்லாக் கொள்கை | ... | ... | 51 |
| அபாரமான சக்தி | ... | ... | 56 |
| அன்பிற்கும் மேலானது | ... | ... | 61 |
| அகிம்சைக்கு ஏற்ற துறை | ... | ... | 66 |
| அகிம்சையை வளர்ப்பது எப்படி ? | ... | ... | 68 |
| அகிம்சையில் ஒரு குறைபாடு | ... | ... | 71 |
| சரியான சோதனை | ... | ... | 73 |
| அன்பின் பிணைப்பு | ... | ... | 74 |
| சத்தியமா அல்லது அகிம்சையா ? | ... | ... | 75 |
| அகிம்சை கோழைத்தனமன்று | ... | ... | 77 |
| சர்வ வல்லமையுள்ளது இது | ... | ... | 78 |
| இம்சையின் வழிகள் | ... | ... | 79 |
| அன்பின் அற்புத சக்தி | ... | ... | 80 |
| அகிம்சை - அதன் பரந்த கொள்கை | ... | ... | 82 |

## சமயக் கோட்பாட்டில் அகிம்சை

| | | | |
|---|---|---|---|
| அகிம்சையே என் கடவுள் | ... | ... | 86 |
| சாத்திரங்களின் சோதனை | ... | ... | 86 |
| கீதையும் அகிம்சையும் | ... | ... | 87 |
| கீதையை அனுசரிப்பதாயின் ? | ... | ... | 95 |
| கீதையின் முக்கியமான உபதேசம் | ... | ... | 97 |
| சாத்துவிக எதிர்ப்பு : மெய்யானதும் பொய்யானதும் | | ... | 99 |

| | பக்கம் |
|---|---|
| ஜைன அகிம்சை ... ... | 102 |
| அன்பு வழியே கடவுள் வழி ... ... | 110 |
| டால்ஸ்டாய் கண்ட அகிம்சை ... ... | 113 |
| செயலும் எண்ணமும் ... ... | 116 |
| அகிம்சையின் பணி ... ... | 121 |
| சாத்துவிக எதிர்ப்பும் அகிம்சையும் - இரண்டுக்குமுள்ள பேதம் ... ... | 122 |
| அடக்கமும் அகிம்சையும் ... ... | 126 |

## அகிம்சை : கொல்லாமை

| | |
|---|---|
| இதுவா ஜீவகாருண்யம்? ... ... | 130 |
| எல்லோருக்கும் மிக நன்மையானது ... ... | 165 |
| அக்கினி பரீட்சை ... ... | 169 |
| கொல்லுவது எப்பொழுது அகிம்சையாகும்? ... | 169 |
| கொல்லுவது எப்போது இம்சையாகும்? ... ... | 174 |
| அகிம்சையின் சிக்கல் ... ... | 177 |
| ஒரு புதிர் ... ... | 182 |
| மேலும் அகிம்சையைக் குறித்து ... ... | 185 |
| மேலும் சில கேள்விகள் ... ... | 190 |
| மீண்டும் குரங்குத் தொல்லை ... ... | 195 |
| முற்றிலும் தவிர்க்க முடியாது ... ... | 196 |
| கொல்லுவானேன்? ... ... | 199 |
| பிராணிகளுக்குத் துன்பம் - காளைகளுக்குச் சித்திரவதை | 200 |
| மாடுகளை உபயோகிப்பது சரியா? ... ... | 201 |
| வாயில்லாப் பிராணிகளுக்குக் கொடுமை ... ... | 203 |
| பலி நின்றாக வேண்டும் ... ... | 204 |
| முக்கியப் பொறுப்பு ... ... | 206 |
| பசுப் பாதுகாப்பு ... ... | 207 |
| உன் கடமையை முதலில் செய் ... ... | 210 |
| அகிம்சையாலேயே ஆகும் ... ... | 214 |
| பசுவைக் காப்பது எப்படி? ... ... | 216 |
| அகிம்சை - புலால் மறுப்பு ... ... | 219 |
| சைவ உணவின் சிறப்பு ... ... | 220 |
| புலால் உண்பவராயினும் ... ... | 222 |
| மீன் தின்னுவது அகிம்சையா? ... ... | 222 |
| பால் உண்பது சரியா? ... ... | 223 |
| உயிருள்ளவற்றைத் துண்டித்துச் சோதனை ... ... | 225 |

## போரும் அகிம்சையும்

| | |
|---|---|
| யுத்தத்தில் என் பங்கு ... ... | 228 |
| யுத்தத்தில் நான் உதவியது ஏன்? ... ... | 231 |

| | | | பக்கம் |
|---|---|---|---|
| நம்பிக்கை தகர்ந்து போன விதம் | ... | ... | 236 |
| ஒரு கேள்வி | ... | ... | 238 |
| யுத்தத்திற்கு எதிராக யுத்தம் | ... | ... | 240 |
| மீண்டும் அதைக் குறித்து | ... | ... | 242 |
| மீண்டும் ஒரு விளக்கம் | ... | ... | 246 |
| டால்ஸ்டாயின் நண்பருக்குப் பதில் | ... | ... | 249 |
| கையாளுவதன் கஷ்டம் | ... | ... | 255 |
| சிக்கலான பிரச்னை | ... | ... | 259 |
| நமது வாழ்வின் தருமம் | ... | ... | 263 |
| அகிம்சைப் புதிர்கள் | ... | ... | 267 |
| அகிம்சையோடு இருப்பது எப்படி? | ... | ... | 271 |
| சமாதானத்தின் வல்விதி | ... | ... | 279 |
| ஐரோப்பிய நாகரிகம் | ... | ... | 280 |
| மாறுதலை அடையட்டும் | ... | ... | 284 |
| அகிம்சையின் உறுதியான நிலை | ... | ... | 285 |
| வாளுக்கு எதிராக ஆத்மா | ... | ... | 288 |
| ஆங்கில யுத்த வெறுப்பாளர் போக்கு | ... | ... | 289 |
| கேள்விகளுக்கெல்லாம் மேலான கேள்வி | ... | ... | 291 |
| சீனாவுக்குச் செய்தி | ... | ... | 293 |
| ஏற்படக்கூடிய விளைவு | ... | ... | 294 |
| நான் ஜெக் நாட்டினனாக இருந்தால்? | ... | ... | 299 |
| வல்லரசுகளுக்குக் கூறுவது ஏன்? | ... | ... | 304 |
| அகிம்சையும் உலக நெருக்கடியும் | ... | ... | 307 |
| ஜப்பானிலிருந்து வந்தவர் | ... | ... | 318 |
| சீனாவும் ஜப்பானும் | ... | ... | 321 |
| துன்பத்தில் துடிக்கும் உலகு - 1 - சீனா படும்பாடு | | ... | 323 |
| துன்பத்தில் துடிக்கும் உலகு - 2 | ... | ... | 338 |
| அகிம்சையின் பணி | ... | ... | 344 |
| செய்ய வேண்டியது என்ன? | ... | ... | 348 |
| ஆக்ஸ்போர்டு குழுவும் ஒழுக்கப் புனர்ப்பலமும் | | ... | 353 |
| வரப் போகும் நெருக்கடி | ... | ... | 356 |
| வீரப் போலந்தினருக்கு | ... | ... | 357 |
| ஒரு போலந்து சகோதரியின் வேதனை | ... | ... | 359 |


## அன்னியர் படையெடுப்பு வந்தால்?


| | | | |
|---|---|---|---|
| சமாளித்துக்கொள்ள முடியும் | ... | ... | 362 |
| ஆட்கானியப் பூச்சாண்டி | ... | ... | 365 |
| நம் அண்டையிலுள்ளவர்கள் | ... | ... | 368 |
| எல்லைப்புற நண்பர்கள் | ... | ... | 371 |
| ஆட்கானிய பீதி | ... | ... | 373 |
| வெளிநாட்டுக் கொள்கை | ... | ... | 378 |

| | | | பக்கம் |
|---|---|---|---|
| ஆப்கானிஸ்தானத்திலுள்ள ஹிந்துக்கள் | ... | ... | 380 |
| என் வழி | ... | ... | 382 |
| சுயராஜ்யத்தின் கீழ் | ... | ... | 384 |
| கட்டாய ராணுவப் பயிற்சி | ... | ... | 386 |
| மனசாட்சிக்காக | ... | ... | 388 |
| பெண்களும் யுத்தமும் | ... | ... | 389 |
| நமது விருப்பம் | ... | ... | 391 |
| ராணுவத் திட்டம் | ... | ... | 395 |
| மூடநம்பிக்கை எளிதில் மறைவதில்லை | ... | ... | 398 |
| பிரிட்டிஷார் விலகிவிடும்போது | ... | ... | 402 |
| பெண்களின் விசேட லட்சியம் | ... | ... | 403 |
| இந்தியா ராணுவ நாடா? | ... | ... | 406 |
| அமெரிக்காவிலிருந்து இரு கேள்விகள் | ... | ... | 409 |

## போரும் காங்கிரஸின் அகிம்சையும்

| | | | |
|---|---|---|---|
| போர் பற்றிய தீர்மானம் | ... | ... | 414 |
| சிம்லா விஜயம் | ... | ... | 416 |
| என் அனுதாபத்திற்குக் காரணம் | ... | ... | 419 |
| காரியக் கமிட்டி அறிக்கை | ... | ... | 422 |
| புதிர் போன்ற கேள்விகள் | ... | ... | 425 |
| இந்தியாவின் மனப்போக்கு | ... | ... | 430 |
| சோதனையில் | ... | ... | 434 |
| சிக்கலான கேள்வி | ... | ... | 438 |
| நிபந்தனையில்லா ஆதரவு | ... | ... | 440 |
| சோதனை நேரம் | ... | ... | 442 |
| கடவுளின் நற்கரங்களில் | ... | ... | 449 |
| ஒரு போர் வெறுப்பாளரின் ஐயங்கள் | ... | ... | 454 |
| பாதுகாப்புப் பிரச்னை | ... | ... | 455 |
| பிரிட்டிஷார் விலகிவிடும்போது | ... | ... | 456 |
| சில கேள்விகள் | ... | ... | 457 |
| அகிம்சையால் என்ன பயன்? | ... | ... | 459 |
| ஜனநாயகமும் அகிம்சையும் | ... | ... | 464 |
| பீதி | ... | ... | 466 |
| செய்யவேண்டியது யாது? | ... | ... | 468 |
| ஒரு முக்கியமான பிரச்னை | ... | ... | 470 |
| ஹிட்லரிஸத்தைச் சமாளிப்பது எப்படி? | ... | ... | 471 |
| சந்தோஷமானதும் துக்கமானதும் | ... | ... | 475 |
| ஒவ்வொரு பிரிட்டானியருக்கும் | ... | ... | 481 |
| டில்லித் தீர்மானம் | ... | ... | 485 |
| வருத்தப்படவில்லை | ... | ... | 490 |
| அவ்வளவு மோசமானதல்ல | ... | ... | 494 |

| | | | பக்கம் |
|---|---|---|---|
| அகிம்சை அசாத்தியமா ? | ... | ... | 497 |
| ஒரு பிரிட்டானியர் செய்ய வேண்டியதும் வேண்டாததும் என்ன ? | ... | ... | 503 |
| 'செவிடன் காதில் ஊதிய சங்கு' | ... | ... | 506 |
| காந்தி சேவா சங்கத்தின் முன்பு | ... | ... | 509 |
| கான் சாகேபின் அகிம்சை | ... | ... | 517 |
| 'பலமில்லா மெஜாரிட்டி' | ... | ... | 519 |
| முக்கியமான விஷயம் | ... | ... | 522 |
| தார்மிக ஆதரவு | ... | ... | 525 |
| ஒரு ருசிகரமான உரையாடல் | ... | ... | 529 |
| வீரமுள்ளோரின் அகிம்சை | ... | ... | 540 |
| எப்படித் தணிப்பது ? | ... | ... | 543 |
| காங்கிரஸின் அகிம்சை | ... | ... | 547 |
| அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் பேச்சு | | ... | 548 |
| குறை கூறியவர்களுக்குப் பதில் | ... | ... | 562 |
| வைசிராய் - காந்தி கடிதங்கள் | ... | ... | 566 |
| சமாதான ஸ்தாபனம் | ... | ... | 570 |
| 'ஜெர்மனி வெற்றி பெற்ருல்' ? | ... | ... | 573 |
| அமைதியாக இருக்கக் கோரிக்கை | ... | ... | 575 |
| வெளியேற்றமே விரும்பத் தக்கது | ... | ... | 576 |
| வெளியேற்றம் | ... | ... | 579 |
| 'பொசுக்கல் முறை' - 1 | ... | ... | 580 |
| 'பொசுக்கல் முறை' - 2 | ... | ... | 582 |
| அகிம்சையைப் பலவீனமாக்குவது ? | ... | ... | 584 |
| அகிம்சையான தடுப்பு | ... | ... | 588 |
| ஒவ்வொரு பிரிட்டானியருக்கும் | ... | ... | 591 |
| இரு செயல்கள் | ... | ... | 595 |

## அகிம்சையின் நிலைமை - சுதந்திரத் தருவாயில்

| | | | |
|---|---|---|---|
| நாச வேலையும் ரகசியமும் | ... | ... | 600 |
| கீழுக்குப் போய்க்கொண்டிருக்கிருேமா ? | ... | ... | 605 |
| அகிம்சை முறையும் போட்டி அரசாங்கமும் | | ... | 606 |
| துவேஷத்தைத் திருப்புவது எப்படி ? | ... | ... | 611 |
| நேதாஜி படையினருக்குச் செய்தி | ... | ... | 615 |
| நேதாஜி படையினரின் மனக் குழப்பம் | ... | ... | 620 |
| மீண்டும் நேதாஜி படையினர் | ... | ... | 624 |
| துணையற்று இல்லை | ... | ... | 627 |
| கடற்படையினர் கலகமும் பிறகும் | ... | ... | 630 |
| கருத்துக்களின் மோதல் | ... | ... | 636 |
| வெட்கப்பட வேண்டியது | ... | ... | 639 |
| சிறந்த வழி | ... | ... | 641 |

பக்கம்

காலித்தனத்தை எதிர்த்துச் சத்தியாக்கிரகம் … 643
கடமை என்ன ? … … 645
அகிம்சைத் தொண்டர் படை … … 646
அறப் போரா, மறப் போரா ? … … 648
கொள்ளை … … 650
'இந்தியாவிலிருந்து வெளியேறு' என்பதன் பொருள் … 653
சுதந்திரம் … … 655
சில வினைக்கள் … … 657
படையெடுப்பை எதிர்ப்பது எப்படி ? … … 661
ராணுவங்கள் எதற்கு ? … … 662
அவருக்குச் சம்பந்தமில்லாத துறை … … 663
அகிம்சையும் கதரும் … … 664
பரிகாரம் என்ன ? … … 665
உண்மையான ஆபத்து … … 666
அ. இ. கா. க. கூட்டத்தில் பேச்சு … … 669
நாம் பிரார்த்திப்போமாக … … 676
உலகம் ஒன்றுவதற்குப் பாடுபடுக … … 678
ஆசியா விடுக்கும் செய்தி … … 681
காங்கிரஸ் மந்திரிகளும் அகிம்சையும்: இரண்டு கேள்விகள் … … 683
சரியா, தவறு ? … … 685
சத்தியத்தையும் அகிம்சையையும் நீக்க வேண்டும் … 688
அதிகப்படியான பாராட்டு … … 690
ராமராஜ்யமும் அகிம்சையும் … … 692
காஷ்மீர்மீது படையெடுப்பு … … 695
அணுக்குண்டு … … 697
இம்சையை நிறுத்துவது எப்படி ? … … 698
அணுக்குண்டும் அகிம்சையும் … … 699
இருப்பது அகிம்சை ஒன்றே … … 702
அணுக்குண்டும் ராட்டையும் … … 703
அகிம்சை எங்கே, கதர் எங்கே ? … … 705
கட்சித் தகராறும் ஊழியர் கடமையும் … … 708

## அகிம்சையும் பெண்களும்

புனிதத்தின் சிறப்பு … … 712
மானத்தைக் காத்துக்கொள்வது எப்படி ? … … 713
அக்கிரமமான தாக்குதல்கள் … … 715
பெண்கள் தாக்கப்படுவதும் அகிம்சையும் … … 721
செய்வது என்ன ? … … 723
பெண்களின் துயரம் … … 725
கோழைத்தனம் போன்ற பாபம் வேறில்லை … … 727

| | | | பக்கம் |
|---|---|---|---|
| வாளன்று, ஒழுக்கந்தான் | ... | ... | 728 |
| ஒரு பெண்ணின் சங்கடம் | ... | ... | 729 |
| பெண்களுக்குப் புத்திமதி | ... | ... | 731 |
| அகிம்சையின் ஆட்சி | ... | ... | 732 |


## அகிம்சையும் சுதந்திர இந்தியாவும்


| | | | |
|---|---|---|---|
| போலீஸ் படை பற்றி என் கருத்து | ... | ... | 734 |
| உண்மையான இந்தியா | ... | ... | 737 |
| அகிம்சையும் சுதந்திர இந்தியாவும் | ... | ... | 738 |


## தகாத செயல்களை எதிர்த்து அகிம்சை


| | | | |
|---|---|---|---|
| தேர்தலில் எதிர்க்கட்சியினரின் அடாச் செயல்கள் | | ... | 744 |
| தேர்தலில் காலித்தனங்கள் | ... | ... | 748 |
| கம்யூனிஸ்டு செயல்கள் | ... | ... | 749 |
| கொள்ளையை ஒழிப்பது எப்படி? | ... | ... | 752 |
| வருந்தத்தக்க சம்பவம் | ... | ... | 754 |
| உண்மையாயின் மிருகத்தனமானது | ... | ... | 758 |
| குற்றவாளியும் அகிம்சையும் | ... | ... | 761 |
| திருட்டு | ... | ... | 762 |
| குற்றவாளிகளுக்கு இயற்கை வைத்தியம் | ... | ... | 763 |
| பிகாரே, நீயுமா! | ... | ... | 766 |


## ஹிந்து-முஸ்லிம் சச்சரவில் அகிம்சை


| | | | |
|---|---|---|---|
| பலாத்காரம் செய்யக்கூடியது என்ன? | ... | ... | 770 |
| மாற்று | ... | ... | 772 |
| என்ன செய்வது? | ... | ... | 775 |
| நட்பான பிரஸ்தாபனை | ... | ... | 778 |
| பெருத்த வேதனை | ... | ... | 781 |
| பைத்தியக்காரத்தனத்தின் வெறியாட்டம் | ... | ... | 784 |
| அழைப்பு | ... | ... | 787 |
| பிகாரிலிருந்து கெட்ட செய்தி | ... | ... | 791 |
| பிகாருக்கு | ... | ... | 793 |
| தருமத்திற்கு ஒரு சவால் | ... | ... | 796 |
| தருமத்தின் துணிகரச் செயல் | ... | ... | 798 |
| 'செயல்புரி இன்றேல் செத்தொழி' என்ற தூது | | ... | 801 |
| பத்திரிகைகளுக்கு அறிக்கை | ... | ... | 804 |
| முதல் பாடம் | ... | ... | 807 |
| என்றும் காணாத இருள் | ... | ... | 814 |
| ஸ்ரீராம்பூரில் | ... | ... | 814 |
| 'செய்திடு அல்லது செத்திடு' என்பதன் வேலை | | ... | 821 |

| | | | பக்கம் |
|---|---|---|---|
| இக்கால புத்தர் | ... | ... | 827 |
| அகிம்சை வழி | ... | ... | 828 |
| உண்மையான மதம் | ... | ... | 831 |
| அகிம்சை, வாழ்வின் உண்மை | ... | ... | 832 |
| டில்லியில் | ... | ... | 834 |
| அடிப்படையான பேதம் | ... | ... | 837 |
| பத்திரிகைகளுக்கு அறிக்கை | ... | ... | 840 |
| உண்ணாவிரதத்தின் விளைவுகள் | ... | ... | 844 |
| உண்ணாவிரதம் ஏன்? | ... | ... | 846 |
| அநீதியைச் சகிக்க வேண்டாம் | ... | ... | 847 |
| கட்டுப்பாடு இல்லை | ... | ... | 847 |
| உண்ணாவிரத நிறுத்தம் | ... | ... | 849 |
| பிரார்த்தனையின்போது குண்டுவீச்சு | ... | ... | 852 |

## பொருளாதாரத்தில் அகிம்சை

| | | | |
|---|---|---|---|
| சுதந்திரம் | ... | ... | 858 |
| சோஷலிஸ்டு யார்? | ... | ... | 858 |
| நம்பிக்கை அவசியம் | ... | ... | 895 |
| உடைமையின்மை அல்லது ஏழைமை | ... | ... | 860 |
| சமவிநியோகம் | ... | ... | 863 |
| ஆலைத் தொழிலாளர்களுக்கு | ... | ... | 867 |
| அகிம்சை ஒன்றே பாதுகாப்பு | ... | ... | 874 |
| தொழிலாளர் ஒன்றுபட வேண்டும் | ... | ... | 877 |
| வேலை நிறுத்தங்கள் | ... | ... | 878 |
| அமைதியான வேலை நிறுத்தத்திற்கான நிபந்தனைகள் | | ... | 880 |
| வேலை நிறுத்தங்கள் : அதிகாரம் பெற்றவையும் — பெருதனவும் | ... | ... | 882 |
| முதலாளித்துவமும் வேலை நிறுத்தங்களும் | ... | ... | 884 |
| அமைதியான வேலை நிறுத்தங்கள் | ... | ... | 886 |
| அகிம்சை முறையான வேலை நிறுத்தம் | ... | ... | 886 |
| உழுவோரின் பலம் | ... | ... | 887 |
| என் முரண்பாடுகள் எனப்படுவன | ... | ... | 888 |
| தருமகர்த்தா முறை | ... | ... | 890 |
| வர்க்கப் போராட்டத்தைத் தவிர்க்க முடியுமா? | | ... | 892 |
| பின் சேர்க்கைப் பகுதி | ... | ... | 895 |
| பொருட் குறிப்பு அகரவரிசை | ... | ... | 903 |

# படங்களின் விளக்கம்


பக்கம்

1. அகிம்சையின் சக்தியை நிரூபிக்க தள்ளாத வயதில் தடி தாங்கிப் புறப்பட்ட அண்ணல் காந்தி—(1946 நோவாகாலியில்) —முகப்புப் படம்.

2. இந்தியா சுதந்திரம் அடைந்த தினத்தன்றும் (1947, ஆகஸ்டு 15) மக்களின் அமைதியை நாடி கல்கத்தாவிலிருந்த மகாத்மாவின் ஜாகை முன்பு மக்கள் ஆரவாரம் செய்தனர். அந்த சப்தத்திற்காக காதைப் பொத்துகிருர் காந்திஜி ... 112

3. சேவா கிராமத்தில் மகாத்மா வசித்த மட்குடில் ... 113

4. காந்தியடிகளும் 'எல்லைப்புற காந்தி' அப்துல் கபார்கானும் ... 302

5. வடமேற்கு எல்லைப்புறத்தில் குதா-இ-கித்மத்கார்களுடன் மகாத்மா (1938) ... 303

6. மகாத்மா ராஜகோட் உண்ணுவிரதம் முடித்தபோது (1939) ... 418

7. பிர்லா மாளிகையிலிருந்து வைசிராயைச் சந்திக்கச் செல்லும் மகாத்மா (1939) ... 419

8. பிரிட்டிஷ் மந்திரி சபை தூது கோஷ்டியின் தலைவரான ஸ்ரீ பெதிக் லாரென்ஸுடன் மகாத்மா (1947) ... 550

9. ஸ்ரீ ஜவாஹர்லால் நேருவுடன் மகாத்மா (1946 ஜுலையில் கூடிய அ. இ. கா. கமிட்டிக் கூட்டத்தில்) ... 551

10. மகாத்மாவும், ஸ்ரீ மகாதேவ தேசாயும் (1939) ... 678

11. டில்லியில் கூடிய ஆசிய பிரச்னைகள் மகாநாட்டில் காந்தியடிகள் (2 ஏப்ரல், 1947) ... 679

12. நோவாகாலியில் வகுப்பு வெறித் தீயை அணைக்க கிராமந்தோறும் சென்ற மகாத்மா தனியே மூங்கில் பாலத்தின் மீது நடக்கிருர் ... 730

13. பிகாரில் கஷ்ட நிவாரணத்துக்கு நன்கொடை தந்த ஒரு குருட்டு கிராமவாசியுடன் கருணைமூர்த்தி (26 மார்ச், 1947) ... 731

14. மகாத்மா நோவாகாலிக்குச் செல்லும்போது (நவம்பர், 1946) ... 766

பக்கம்

15. நோவாகாலி யாத்திரையின்போது ஒரு கிராமத்திற்குப் போகும் வழியில் மகாத்மாஜி ... 767

16. துயருற்றவருக்கு ஆறுதல் கூறும் பெருந்தகையார் (நோவாகாலி) 1947 ... 782

17. (நோவாகாலி) அகிம்சை யாத்திரையில் அகிம்சா மூர்த்திக்கு அடிபணிந்து வணங்குகிறுர் அவதியுற்ற ஒரு கிராமவாசி ... 783

18. கடைசி உண்ணுவிரதத்தின்போது காந்தி மகான் (புது டில்லி, 18 ஜனவரி, 1948) ... 800

19. டில்லி பிர்லா மாளிகையில் பிரார்த்தனைக் கூட்டத்திற்குச் செல்லும் வழியில் மகாத்மா (ஜனவரி 1948) ... 801

# தனி நூல் எழுதாத காரணம்

அகிம்சைத் தத்துவத்தை விளக்கி நான் ஒரு நூல் எழுத வேண்டும் என்று ஒரு நண்பர் யோசனை கூறுகிறார்.

அத்தகைய விளக்க நூல் ஒன்றை எழுதுவது என்பது என்னுடைய சக்திக்குப் புறம்பானது. பாண்டித்தியத்திற்குரிய நூல்கள் எழுதப் பழகியவனல்ல நான். எனக்கு உரியது, காரியத்தில் செய்வது என்பதே. என் கருத்துப்படி, எதை என் கடமை என்று உணருகிறேனே, எவை எனக்கு உகந்தவைகளாகின்றனவோ அவற்றை நான் செய்கிறேன். நான் செய்கிறவைகளெல்லாம் சேவை உணர்ச்சியின் பேரில் பிறப்பவை. அகிம்சை, அவ்விதம் விசித்திரமாக எழுதப்பட வேண்டிய நிலையை அடையுமானால், அதைச் சாத்திரமாக ஒழுங்குபடுத்தி எழுதக்கூடியவர்கள் அந்த வேலையைச் செய்யட்டும். என்னால் எழுத முடியாவிட்டால் ஸ்ரீ வினோபா[1],

---

1. 'பூதானத் தந்தை' என்று உலகமே இன்று போற்றும் வினோபா பாவே காந்தீய தர்மத்தில் முற்றிலும் ஈடுபட்டவர். இரண்டாவது உலக யுத்தத்தில் இந்தியாவின் சம்மதமின்றிப் பிரிட்டனின் யுத்தத்தில் இந்தியாவை அது புகுத்திவிட்டதை எதிர்த்து மகாத்மா காந்தி 1940 அக்டோபரில் தனிப்பட்டவர் சத்தியாக்கிரகத்தை ஆரம்பித்தார். தம் பிரதிநிதியாகச் சத்தியாக்கிரகத்தை ஆரம்பிப்பதற்கு வினோபாஜியையே மகாத்மா தேர்ந்தெடுத்தார். 'அவரைத் தேர்ந்தெடுத்தது ஏன்? அவர் யார்?' என்ற கேள்வியைக் கேட்டுக்கொண்டு மகாத்மா 1940 அக்டோபர் 20-ஆம் தேதி 'ஹரிஜன்'-இல் வினோபாஜியைக் குறித்துப் பின் வருமாறு எழுதினார்:

"1916-இல் நான் இந்தியாவுக்கு வந்ததும், வினோபா பாவே பட்டம் பெறுமுன்பே கல்லூரியை விட்டு வந்துவிட்டார். அவர் சம்ஸ்கிருதம் நன்றாகப் படித்தவர். ஆரம்பத்திலேயே ஆசிரமத்திற்கு வந்துவிட்டார். முதலில் சேர்ந்த ஆசிரமவாசிகளில் அவரும் ஒருவர். சம்ஸ்கிருதத்தில் மேற்கொண்டும் படித்துப் போதிய தகுதியைப் பெறுவதற்காக ஆசிரமத்திலிருந்து ஓர் ஆண்டு அனுமதி பெற்றுச் சென்றார். ஓர் ஆண்டுக்கு முன்னால் எந்த நாளில், எந்த நேரத்தில் ஆசிரமத்தை விட்டுப் போனாரோ, சரியாக அதே நேரத்தில் ஓராண்டு கழித்து அவர் முன்னறிவிப்பு எதுவுமின்றி ஆசிரமத்திற்குத் திரும்பி வந்துவிட்டார். அந்த நாளே அவர் திரும்பவேண்டும் என்பதை நானும் மறந்துவிட்டேன். தோட்டி வேலை முதல் சமையல் வேலை வரையில் ஆசிரமத்தின் சின்ன வேலைகளிலெல்லாம் அவர் பங்கு கொண்டார். அவருடைய ஞாபக சக்தி அபாரமானது. இயற்கையை நன்றாக அறிந்தவர். என்றாலும், தமது நேரத்தின் பெரும் பகுதியை நூற்பதிலேயே கழித்துவந்தார். இதில் விசேடத் திறமை பெற்றதில் இவரைப் போன்றோர் மிகச் சிலரே. நூற்கப்படுவதே முக்கியமான காரியமாக எங்கும் இருக்கவேண்டும் என்றும், அப்படிச் செய்தால் கிராமங்களின் வறுமை நீங்கி, சவம் போன்று இருக்கும் அவைகளின் நிலையில் உயிர் உண்டாகும் என்றும் நம்புகிறார். பிறப்பிலேயே அவர் ஆசிரியர். ஆகவே, கைத்தொழில்களின் மூலம் கல்வி போதிக்கும் திட்டத்தின் அபிவிருத்தியில் ஆசா தேவிக்கு வினோபா பாவே அதிக உதவியாக இருந்தார். நூற்பதைக் கைத்தொழி

ஸ்ரீ கிஷோர்லால் மஷ்ருவாலா[2], ஸ்ரீ காகா காலேல்கர் ஆகிய மூவரில் ஒருவர் எழுதலாம் என்றும் அந்நிருபர் யோசனை கூறுகிறார். ஸ்ரீ வினோபாவினால் இதைச் செய்ய முடியும். ஆனால், அவர் இதைச் செய்யமாட்டார் என்பதை அறிவேன். தமது ஒவ்வொரு மணி நேரத்தையும் தம் வேலைகளுக்காக அவர் ஒதுக்கிவைத்திருக்கிறார். இதிலிருந்து கொஞ்ச நேரத்தை ஒரு சாத்திரத்தை எழுதுவதற்குப் பயன்படுத்திவிட்டாலும் அது பாபம் என்று அவர் கருதுவார். நானும் அதை ஒப்புக்கொள்வேன். சாத்திரங்கள் இல்லையே என்று உலகம் ஏங்கிக் கிடக்கவில்லை. அது வேண்டுவதெல்லாம், எப்பொழுதும் வேண்டக்கூடியதெல்லாம், மனப்பூர்வமான காரியத்திற்காகவே. இந்த வேட்கையைத் தணிக்கக்கூடிய ஒருவர், ஒரு சாத்திரத்தை விவரித்துக்கொண்டிருப்பதில் தமது காலத்தைச் செலவிடமாட்டார்.

ஸ்ரீ கிஷோர்லால், தனியாக ஏற்கனவே ஒரு விளக்க நூலை எழுதியிருக்கிறார். அவருக்குத் தேகநிலை சரியாக இருந்தால் மேற்கொண்டும் எழுத அவர் விரும்புவார் என்பதை அறிவேன். அவருடைய நூலை ஒரு சாத்திரம் என்று சொல்

---

லாகக் கொண்டு ஸ்ரீ வினோபா ஒரு பாடப் புத்தகத்தைத் தயாரித்திருக்கிறார். அவரே சிந்தித்துத் தயாரித்ததாகும் அது. நூற்பது மிகச் சிறந்த கைத்தொழில், அடிப்படைக் கல்விக்கு அது சரியான உதவியாக இருக்கிறது என்பதை, முன்னால் அதைக் குறித்து ஏளனம் செய்துகொண்டிருந்தோர் உணரும்படி செய்தார். தக்ளியில் நூற்பதில் புரட்சிகரமான மாறுதல்களைச் செய்தார். இதுவரை அதைக் குறித்துத் தெரியாமல் இருந்த வாய்ப்புக்களையெல்லாம் வெளிப்படுத்தினார். சிறந்த வகையில் தொண்டு செய்வதில் அகில இந்தியாவிலும் யாரும் அவருக்கு இணையில்லை.

" தீண்டாமையின் சாயலைத் தமது உள்ளத்திலிருந்து அடியோடு நீக்கியிருக்கிறார். சமூக ஒற்றுமையில் எனக்கு எவ்வளவு ஆர்வம் இருக்கிறதோ அவ்வளவு நம்பிக்கை அதில் அவருக்கு உண்டு. இஸ்லாத்தின் சிறந்த கருத்தை அறிந்துகொள்ள வேண்டும் என்பதற்காக அசல் குரானையே ஓர் ஆண்டு படித்தார். இதற்கென்றே அரபு மொழியும் பயின்றார். தமக்கு அண்டையில் வாழும் முஸ்லிம்களுடன் நல்ல தொடர்பை வளர்த்துக்கொள்ளுவதற்கு இது அவசியம் என்று கூறினார்.

"...............வினோபா போரை அடியோடு வெறுப்பவர். ஆனால் தம்மைப்போல் முற்றிலும் போரை வெறுப்பவர்களாக இல்லாவிடினும், இப்பொழுது நடந்துவரும் யுத்தத்தில் பங்கு கொள்ளுவதை மனச்சாட்சியின்படி எதிர்ப்பவர்களையும் தம் மனச்சாட்சியுடன் சமமாகவே மதிக்கிறார்........."

2. ஸ்ரீ கிஷோர்லால் மஷ்ருவாலா – காந்தியடிகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு, அவருடைய கருத்துக்களை நன்கு ஆராய்ந்து, அவற்றிற்கு விளக்கமாகப் பல நூல்களைச் செய்தவர். ' செயல் முறையில் அகிம்சை ' என்று 1941-இல் இவர் இயற்றிய நூல் காந்திய அகிம்சா தத்துவத்தின் விரிவானதோர் ஆராய்ச்சி. 1935-இல் மகாத்மாவின் அனுமதியுடன் 14 பாகங்களில் சூத்திரம்போல் தொகுத்துக் கூறும், 'காந்தி விசார தோஹன' (காந்தீய நவநீதம்) என்ற ஒரு நூல் திரட்டை வெளியிட்டார். இவர் இயற்றிய மற்ற நூல்களாவன: ' சத்யமய ஜீவன ' (உண்மை நிரம்பிய வாழ்வு—1935) — ' நிர்ப்பயதா ' (பயமின்மை—1942.)

வது சரியல்ல ; ஆனால், அது கிட்டத்தட்ட ஒரு சாத்திரம் என்றே கூறலாம். இப்பொழுதுள்ள அவருடைய உடல் நிலைமையில் இந்தப் பளுவைத் தாங்க அவரால் முடியும் என்று நான் எண்ணவில்லை ; இச்சுமையை அவர்மீது சுமத்தவும் மாட்டேன். ஸ்ரீ வினோபாவைப் போன்றே அவரும் தம்முடைய நேரத்தைக் கொஞ்சமும் வீணாக்குவதில்லை. பல நண்பர்களின் சொந்தப் பிரச்னைகளைத் தீர்ப்பதிலேயே தமது நேரத்தைப் பெரும்பாலும் செலவிட்டு வருகிறார். ஒவ்வொரு நாளும் முடிவில் முற்றிலும் களைப்படைந்துவிடுகிறார்.

ஸ்ரீ தக்கரைப் போல ஸ்ரீ காகா சாகேபும்[1] திருத்தவே முடியாத ஒரு நாடோடி. தேச, மாகாண மொழிகளின் அபிவிருத்தியையும் அவைகளுக்காகப் பிரசாரம் செய்வதையும் இப்பொழுது தமது முக்கியமான வேலையாகக் கொண்டிருக்கிறார். ஒரு சாத்திரத்தை எழுதுவதில் கொஞ்ச நேரத்தைச் செலவிட அவர் விரும்பினாலும் அப்படிச் செய்ய வேண்டாம் என்று அவரைத் தடுக்கவே நான் முயற்சி செய்வேன்.

ஆகையால், அகிம்சையைப்பற்றிய விளக்க நூலுக்கு இப்பொழுது அவசியமில்லை என்று மேற்கண்டவைகளிலிருந்து முடிவுக்கு வந்துவிடலாம். என் வாழ்நாளில் அத்தகைய நூல் ஒன்று பூர்த்தியற்றதாகவே இருக்கமுடியும். எழுதியாக வேண்டும் என்றால் நான் இறந்த பிறகே அதை எழுத இயலும். அப்படி எழுதினால்கூட அகிம்சையைப்பற்றிய முழு விளக்கத்தையும் கொடுக்கத் தவறியதாகவே அது இருக்கும் என்பதையும் எச்சரிக்கை செய்கிறேன். கடவுளைப்பற்றி முற்றிலும் விவரிக்க யாராலும் முடிந்ததில்லை. அகிம்சையின் விஷயத்திலும் உண்மை அதுவேதான். உண்மை என்று நான் இன்று நம்புவதை நாளைக்கும் நம்புவேன், நம்பிச் செய்வேன் என்று நான் எந்த உத்தரவாதமும் கொடுக்க முடியாது. கடவுள் ஒருவரே எல்லாம் உணர்ந்தவர். சதையாலாகிய மனிதன் குறைகளையுடையவனாகவே இருப்பவன். கடவுளின் படைப்பே மனிதன் ; என்றாலும், கடவுள் அல்ல மனிதன். கட்புலனுக்கு எட்டாதவர் கடவுள் ; மானிடரின் கண்ணுக்குப் புலப்படாதவர். ஆகையால், நாம் செய்யக்கூடியதெல்லாம் தெய்விகத்

1. ஆசார்ய காகா சாகேப் காலேல்கார்-மகாத்மா காந்தி ஞாபகார்த்தப் பொருட்காட்சியின் டைரக்டர். சிறந்த கல்வியாளர். 1928—'34 வரை குஜராத் வித்தியா பீடத்தின் தலைமையாசிரியராகவும் உப அத்தியட்சகராகவும் இருந்தார். மகாத்மா காந்தியின் வாரப் பத்திரிகைகளுக்கு ஆசிரியராகவும் இருந்தார். இந்தியா வெங்கும் இந்தியைப் பரப்பத் தீவிரமாக உழைத்து வந்தவர். குஜராத்தி, மராட்டி, இந்தி மொழிகளில் 30 புத்தகங்களுக்கு மேல் எழுதியிருக்கிறார்.

தன்மை வாய்ந்தவர்கள் என நாம் யாரை எண்ணுகிறோமோ அவர்களுடைய வார்த்தைகளையும், அவர்கள் செயல்களையும் அறிந்துகொள்ள முயல்வதே யாகும். அவை நம்முள் ஊறவேண்டும். அவற்றுள், நமது உள்ளத்திற்கு உவந்தனவாக இருப்பவற்றை மட்டும் காரியத்தில் நிறைவேற்றப் பாடுபடுவோம். இதைவிட எந்தச் சாத்திர விளக்க நூலும் நமக்கு அதிகமாக என்ன செய்துவிட முடியும்?

— **மோ. க. காந்தி.**

புனா,
*25—2—1946.*

—'ஹரிஜன பந்து'விலிருந்து.
'ஹரிஜன்' - *3—3—1946.*

# 1
# பகைவரிடத்திலும் அன்பு[1]

[சென்னை ஒய். எம். ஸி. ஏ. பிரசங்க மண்டபத்தில் மகாத்மா காந்தி 1916 பிப்ரவரி 16-ஆந் தேதி ஒரு பிரசங்கம் செய்தார். அதில் தாம் ஆரம்பித்திருக்கும் சத்தியாக்கிரக ஆசிரமத்தின் விதிகளைக் குறித்துப் பேசினார். அந்த ஆசிரமத்தில் சேர விரும்புகிறவர்கள் செய்துகொள்ள வேண்டிய ஐந்து பிரதிக்ஞைகளைப்பற்றிக் குறிப்பிட்ட மகாத்மா, அதில் ஒன்றான அகிம்சா தருமத்தைப்பற்றிப் பேசிய விவரமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

மகாத்மா காந்தி அப்பொழுது சொன்னதாவது :

சரியாகச் சொன்னால், கொல்லாமையே அகிம்சை. ஆனால், எனக்கோ அது எத்தனையோ பொருள்களைக் கூறுவதாகிறது. அகிம்சை என்றால் கொல்லாமைதான் என்று சாதாரணமாக நான் உணர்வதால் நான் போகக்கூடியதைவிட நிச்சயமாக இன்னும் எவ்வளவோ உயர்வான கட்டத்திற்கு அதன் பொருள் என்னைக் கொண்டு போகிறது. யாரையும் வருத்தக் கூடாது; தம்மை நமக்கு எதிரி என்று எண்ணிக்கொள்ளுபவர் மீதுங்கூடக் கெட்ட எண்ணத்தை மனத்தில் வைத்துக் கொள்ளக்கூடாது என்பதே அகிம்சை என்பதற்கு உண்மையான பொருள். இந்த எண்ணத்தில் எவ்வளவு முன் ஜாக்கிர

1. மகாத்மா காந்தி தென்னாப்பிரிக்காவிலிருந்து இந்தியா திரும்பிய பிறகு இந்நாட்டின் பல பகுதிகளில் நிகழ்த்திய உரைகளில் அகிம்சா தருமத்தைப்பற்றி முதன் முதல் அவர் விரிவாகக் குறிப்பிட்டது 1916-இல் சென்னையில் செய்த மேற்கண்ட பிரசங்கத்திலேயே யாகும். அச்சில் கிடைக்கும் தகவலும் இதுதான். இதற்குப் பிறகு அதே ஆண்டில் அக்டோபர் மாத 'மாடர்ன் ரெவ்யூ' இதழில் அகிம்சையைக் குறித்து ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். அதுவும் இவ்வுரைக்குப் பின்னாலேயே தொடர்ந்து கொடுக்கப்பட்டிருக்கிறது. அதற்கு முன்னால் தென்னாப்பிரிக்கச் சத்தியாக்கிரகப் போராட்டம் முழுவதிலும் அகிம்சையையே அவர் வற்புறுத்தி, கண்டிப்பாக அதை அனுசரித்தும் வந்திருக்கிறார். அப்போராட்ட முடிவில் 1914-இல் 'இந்தியன் ஒப்பினியன்' பத்திரிகையின் பொன் மலருக்கு மகாத்மா ஒரு கட்டுரையை எழுதியிருந்தார். இக்கட்டுரை 'மகாத்மா காந்தி நூல்கள்' முதல் தொகுப்பில், 'சாத்துவிகப் போராட்டத்தின் தத்துவமும் அனுபவமும்' என்ற தலைப்பில் பிரசுரமாகியிருக்கிறது. (முதல் தொகுப்பு 566-ஆம் பக்கத்தில் பார்க்க.)

இதற்கும் முன்னால் அகிம்சையின் மகத்துவத்தைக் குறித்து விளக்கி மகாத்மா எழுதியது 1909-ஆம் ஆண்டில். அப்பொழுது அவர் எழுதிய 'இந்திய சுயராஜ்யம்' என்ற நூலில் 17-ஆம் அத்தியாயத்தில் (முதல் தொகுப்பு 688-ஆம் பக்கம் பார்க்க) 'சாத்துவிக எதிர்ப்பு' என்ற தலைப்பில் விரிவாக இதை விளக்கியிருக்கிறார். இதில் காந்திஜி அகிம்சையைச் சாத்துவிக எதிர்ப்பு ஆத்மபலத்தின் சக்தி என்ற வகையில் விவரித்திருப்பது கவனிக்க வேண்டியதாகும்.

தையான தன்மை அடங்கியிருக்கிறது என்பதையும் கவனிக்க வேண்டும். “உங்கள் விரோதி என்று நீங்கள் எண்ணுபவர்களிடங்கூட” என்று நான் சொல்லவில்லை. “உங்கள் எதிரி என்று தம்மை எண்ணிக் கொள்பவரிடங்கூட” என்று கூறியிருக்கிறேன். அகிம்சா தருமத்தைப் பின்பற்றி நடப்பவருக்கு விரோதி என்று ஒருவர் இருப்பதற்கே இடமில்லை. விரோதி ஒருவன் உண்டு என்பதையே அவர் மறுக்கிறார். ஆனால், தம்மை அவர்களுக்கு விரோதி என்று எண்ணிக்கொள்பவர்கள் இருக்கிறார்கள். ஆகையால், அத்தகைய நிலைமையைத் தவிர்த்துவிட முடியாது. எனவே, அத்தகையவர்மீதுகூட நம் உள்ளத்தில் எந்தவிதக் கெட்ட எண்ணமும் இருக்கக்கூடாது. அடிக்குப் பதில் அடி என்று நாம் திருப்பிக் கொடுப்பதாயிருந்தால் அகிம்சா தருமத்திலிருந்து நாம் தவறிவிட்டவர்களாவோம். ஆனால், இதற்கும் கொஞ்சம் மேலே போய் நான் கவனிக்கிறேன். ஒரு நண்பரின் செய்கையையோ அல்லது விரோதி எனப்படுபவரின் செய்கையையோ நாம் வெறுப்பதாயிருந்தாலும் அப்பொழுதும் இந்தத் தருமத்திலிருந்து தவறிவிட்டவர்களாவோம். ஆனால், நாம் வெறுக்கக் கூடாது என்று நான் சொன்னால், அச்செய்கைகளை நாம் ஒப்புக் கொள்ளவேண்டும் என்று நான் சொன்னதாகாது. வெறுப்பது என்றால், விரோதிக்கு ஏதாவது தீங்கு உண்டாக வேண்டும் என்று விரும்புவது, அல்லது நாம் செய்யும் காரியத்தினாலல்லாவிடினும் வேறு சிலர் செய்வதனாலோ அல்லது தெய்வாதீனமாகவோ எதிரிக்கு இடையூறு ஏற்படவேண்டும் என்று எண்ணுவது என நான் கருதுகிறேன். இத்தகைய எண்ணம் நமது உள்ளத்தில் இருந்தாலும் நாம் அகிம்சா தருமத்திலிருந்து தவறியவர்களாகிறோம். ஆசிரமத்தில் சேருகிறவர்கள் இந்தப் பொருளை அப்படியே ஒப்புக்கொண்டாக வேண்டும். இந்தத் தருமத்தை அப்படியே முற்றிலும் நாம் அனுசரித்து வருகிறோம் என்பதல்ல. நிலைமை அப்படி அன்று. நாம் அடைந்தாக வேண்டிய லட்சியம் அது. அவ்விதம் செய்ய நம்மால் முடிந்தால் நாம் உடனேயே அடைய வேண்டிய லட்சியமும் அதுவே. ஆனால், மனப்பாடம் செய்வதற்கு க்ஷேத்திர கணிதத்தின் ஒரு முறை அன்று அது. உயர் கணிதத்தில் கொண்டு முடிக்க வேண்டியிருக்கும் பெரிய பிரச்னையைப் போன்றதுமல்ல; அவைகளையெல்லாம்விட நிச்சயமாக மிகக் கடினமானதொன்று அது. அந்தப் பிரச்னைகளுக்கு விடை கண்டுபிடிக்கும் முயற்சியில் உங்களில் பலர் இரவெல்லாம் தூங்காமலும் இருந்திருப்பீர்கள். இந்தத் தருமத்தைப் பின்பற்றுவதாயிருந்தால் இரவெல்லாம்

கண் விழிப்பதைவிட இன்னும் அதிகமாக நீங்கள் சிரமப்பட வேண்டியிருக்கும். இந்த லட்சியத்தை அடைவதற்கு முன், இதை ஓரளவுக்கு எட்டுவதற்கும் முன், எத்தனையோ நாட்கள் உறக்கமின்றி, துன்பங்களையும் மனவேதனைகளையும் நீங்கள் அனுபவிக்க வேண்டியிருக்கும். அறத்தோடு ஒட்டிய வாழ்க்கை இன்னதென்பதை நாம் அறிந்துகொள்ள வேண்டுமானால், நீங்களும் நானும் முற்றிலும் அடையவேண்டிய லட்சியம் இதுவேயாம். இந்தத் தருமத்தின் சிறப்பில் நம்பிக்கை வைக்கிறவர், இறுதியில் லட்சியத்தை அடையும் தறுவாயில் உலகம் முழுவதுமே தம் காலடியில் வந்து வணங்குவதைக் காண்பார். உலகம், தம் காலடியில் வணங்கிக் கிடக்க வேண்டும் என்று அவர் விரும்புகிறார் என்பதல்ல. ஆனால், அப்படித் தான் நிகழும்.

விரோதி எனப்படுவோரிடம் உங்கள் அன்பை – அகிம்சையை – அவர் மனத்துள் ஆழப் பதியுமாறு நீங்கள் காட்டுவீர்களாயின், அதே அன்பைத் திரும்ப அவரும் காட்டியே தீருவார். இதிலிருந்து இன்னும் ஓர் எண்ணமும் எழுகிறது. இந்த விதியின்படி கட்டுப்பாடான படுகொலைக்கே இடமில்லை; பகிரங்கமாகச் செய்யப்படும் கொலைகளுக்கும் இடம் கிடையாது. உங்கள் நாட்டிற்காகவும், நீங்கள் அருமையாகப் போற்றும் மனிதரின் மானத்தைக் காப்பதற்கென்றும் பலாத்காரத்தை உபயோகிக்க வேண்டிய அவசியமும் கிடையாது. பொதுவாக மானத்தைக் காக்க என்று சொல்வனவெல்லாம் சரியான வாதங்கள் ஆகமாட்டா. கொடுமை செய்பவன் கையில் நம்மையே ஒப்படைத்துவிடுவதன் மூலம் நம் தரப்பில் உள்ளவர் மானத்தை நாம் பாதுகாத்துவிட முடியும் என்பதை அகிம்சா தருமம் நமக்குப் போதிக்கிறது. ஒருவரைத் தாக்கி அடிப்பதற்கு வேண்டியதைவிட இதற்கு உடலிலும், உள்ளத்திலும் அதிக தீரம் வேண்டும். உங்களுக்கு ஒரு வகையில் உடல்வன்மை இருக்கலாம்—அதைத் தீரம் என்று நான் சொல்லவில்லை. அந்தப் பலத்தை நீங்கள் உபயோகிக்கலாம். அதையும் உபயோகித்துவிட்ட பிறகு என்ன உண்டாகிறது? மாற்றானுக்குக் கோபமும் ஆத்திரமும் ஏற்படுகின்றன. அவனுடைய பலாத்காரத்தோடு உங்கள் பலாத்காரமும் மோதிக் கொள்வதால் அவனுக்கு இன்னும் அதிகக் கோபத்தை மூட்டிவிட்டீர்கள். உங்களைக் கொன்று போட்டுவிட்ட பிறகும் மீதமிருக்கும் பலத்தை உங்கள் பாதுகாப்பில் இருப்பவர்களிடம் காட்டுகிறான். ஆனால், நீங்கள் எதிர்த்துத் தாக்கவில்லை. உங்கள்

பாதுகாப்பில் இருப்பவர்களுக்கும் எதிராளிக்கும் நடுவில் அசையாமல் உறுதியுடன் நின்றுகொண்டு அவன் அடிப் பதையெல்லாம் பொறுமையுடன் வாங்கிக்கொண்டு பதிலுக்குத் திருப்பாமல் நிற்கிறீர்கள் என்று வைத்துக்கொள்வோம். அப்பொழுது என்ன நேரும்? எதிராளியின் பலாத்காரமெல்லாம் உங்கள் பேரிலேயே செலவழிக்கப்பட்டுவிடும் ; உங்கள் பாதுகாப்பில் இருந்தவரும் பாதிக்கப்படாமல் விடுபடுவார். இதை உங்களுக்கு நிச்சயமாகக் கூறுகிறேன். வாழ்க்கை இந்த விதமான திட்டப்படி நடப்பதாக இருந்தால் இன்று ஐரோப்பாவில் நீங்கள் காண்பவை போன்ற யுத்தங்களை நியாயமெனக் கருதும் தேசாபிமானத்திற்கே அதில் இடமில்லை.

[ஸ்ரீ ஜி. ஏ. நடேசன் வெளியிட்ட 'மகாத்மா காந்தியின் சொற்பொழிவுகளும் கட்டுரைகளும்' என்ற நூலிலிருந்து.]

# 2

# அகிம்சை என்பது என்ன?

மகாத்மா காந்தி, கல்கத்தா 'மாடர்ன் ரெவ்யூ' சஞ்சிகையின் 1916 அக்டோபர் மாத இதழில் எழுதியிருந்த கட்டுரை யாவது :

ஆண்மையில் நாம் குறைந்துகொண்டு வருவதனாலேயே அகிம்சை மிதமிஞ்சி உபயோகப்பட்டு வருகிறது என்ற நம்பிக்கைக்குச் சரித்திர பூர்வமான ஆதாரம் எதுவும் இருப்பதாகத் தோன்றவில்லை. சென்ற 1500 ஆண்டுகளில் ஒரு தேசீய சமுதாயம் என்ற வகையில் நமது உடல் பலத்தையும் வீரத்தையும் நிரூபித்து வந்திருக்கிறோம் என்பதற்கு போதிய சான்றுகள் இருக்கின்றன. ஆனால், நமக்குள் சச்சரவுகள் மிகுந்து, நாட்டுப்பற்றைவிடச் சுயநலப்பற்றே நம்மை ஆட்கொண்டுவிட்டது. அற உணர்ச்சியைவிட மற உணர்ச்சியே நமக்கு மிகுந்துவிட்டது எனலாம்.

ஜைனர்கள் வீரமில்லாதவர்கள் என்று எந்த அளவுக்கு அவர்கள்மீது குற்றங் கூறலாம் என்பது எனக்குத் தெரியாது. அவர்களுக்காக வாதாடவும் நான் முன் வரவில்லை. பிறப்பினால் நான் வைஷ்ணவன். குழந்தைப் பருவத்திலேயே அகிம்சையை எனக்குப் போதித்தார்கள். உலகத்தின் மற்றச் சமய நூல்களைப் படித்துப் பயனடைந்திருப்பதைப் போலவே ஜைனச் சமய நூல்களையும் படித்துப் பயன்பெற்று இருக்கி

றேன். காலஞ்சென்ற தத்துவ ஞானியான ராஜசந்திர கவி[1] பிறப்பினுல் ஜைனர். அவருடன் ஏற்பட்ட தொடர்புக்கும் நான் அதிகமாகக் கடமைப்பட்டிருக்கிறேன். ஆகையால், உலகத்தின் பல சமயக் கோட்பாடுகளையும் படித்ததன் பயனுக அகிம்சையைப்பற்றிய என் எண்ணங்கள் உருவானபோதிலும் அந்த நூல்களில் கண்ட ஆதாரங்களுக்கு என் கருத்துக்கள் இப்பொழுது கட்டுப்பட்டவைகளாக இல்லை. அவை எனது வாழ்க்கையின் பகுதிகளாகிவிட்டன. சமய நூல்களில் நான் படித்த விளக்கங்களுக்கு மாறுபட்டவையாக நான் அறிந்து கூறும் கருத்து இருக்குமென்று திடீரெனக் கண்டுகொண்டால், அப்பொழுதுகூட, நான் இங்கே எடுத்துக்காட்ட இருக்கும் அகிம்சையைப்பற்றிய கருத்திலேயே உறுதியுடன் இருப்பேன்.

உண்மையாகவே அகிம்சையைப் பூரணமாக அனுசரிப்பவருக்கு உலகமே அடிபணிந்து கிடக்கும் என்று நம் சாத்திரங்கள் போதிக்கின்றன; இவரைச் சூழ இருப்பவருக்கும் இந்தத் தன்மை பற்றுகிறது; விஷப் பாம்புகள் போன்றவைகளாலும் எந்தவிதமான தீங்குகளும் இவருக்கு நேரா என்கின்றன.

---

1. கவி ராஜசந்திர ரவ்ஜிபாய் - நகை வியாபாரி. அபாரமான ஞாபகசக்தி உடையவர். நூறு காரியங்களை ஏககாலத்தில் சிந்தித்துப் பதில் சொல்லக்கூடிய ஆற்றல் படைத்த சதாவதானி. இவருடைய ஆற்றலைச் சோதித்துப் பார்த்துத் தாம் பிரமித்துவிட்டதாகக் காந்திஜியே கூறியிருக்கிருர். 1891 எப்ரலில் மகாத்மா பாரிஸ்டராகி இங்கிலாந்திலிருந்து திரும்பி' பம்பாய் வந்த பிறகு கவி ராஜசந்திரர் அவருக்கு அறிமுகமானுர்.

கவி ராஜசந்திரர் ஆழ்ந்த தெய்வ பக்தியுள்ளவர். ஹிந்துமத தத்துவங்களை நன்கு கற்றறிந்தவர். இவரிடம் காந்திஜிக்கு அபாரமான மதிப்பும் மரியாதையும் உண்டு. ராஜசந்திரர் ஜைனர்; இளைஞர். ஏறக்குறைய காந்திஜியின் வயதினரே. ஆனுல், 33-ஆம் வயதில் இறந்துவிட்டார். மத சம்பந்தமான விஷயங்களில் காந்திஜி கவி ராஜசந்திரரையே அடிக்கடி கலந்தாலோசித்து வந்தார், மகாத்மா தென்னுப்பிரிக்கா சென்ற பிறகும் இவருடன் கடிதப் போக்குவரத்து அடிக்கடி வைத்திருந்ததோடு மத விஷயங்களில் தமக்கு எழும் சந்தேகங்களுக்கு விளக்கம் கேட்டும் வந்தார். "மத விஷயங்களில் டால்ஸ்டாயைவிட இவரை அதிக மேலானவராகக் கொள்ளுகிறேன். ராஜசந்திரர், டால்ஸ்டாய் ஆகிய இருவருமே தாங்கள் உபதேசிக்கிறபடியே வாழ்ந்தும் வந்தார்கள்" என்று காந்திஜி கூறுகிருர்.

கவி ராஜசந்திரரிடம் மகாத்மாவுக்கு அளவுகடந்த பக்தியும் மதிப்பும் இருந்தும், மத சம்பந்தமான விஷயங்களில் அவரைக் கலந்தாலோசிப்பது வழக்கமென்றுலும், பல சமயங்களில் அவர் தமக்கு வழிகாட்டியாகவும், உதவுபவராகவும் இருந்திருக்கிருர் என்பதைக் காந்திஜி ஒப்புக்கொண்டாலும், "அவரிடத்தில் எனக்கு எவ்வளவோ மதிப்பு இருந்தாலும், அவரை என் குருவாக என் உள்ளத்தின் சிம்மாசனத்தில் ஏற்றிவிட என்னுல் முடியவில்லை" என்கிருர். 'சுயசரிதை' இரண்டாம் பகுதி, முதல் அத்தியாயத்தில் கவி ராஜசந்திரருக்கும் தமக்கும் தொடர்பு ஏற்பட்டு உறவு வளர்ந்த விதத்தைக் காந்திஜி விவரித்திருக்கிருர்.

அஸ்ஸிஸியிலிருந்த பிரான்ஸிஸ்[1] முனிவரின் அனுபவமும் இதுவே என்று சொல்லப்படுகிறது.

எதிர்மறையாக மெய்யாலும் மனத்தாலும் எந்த உயிருக்கும் தீமை செய்வதில்லை என்பதே அதன் பொருளாகிறது. தீமை செய்பவரின் உடலுக்கும் எந்தத் துன்பத்தையும் அகிம்சை உண்டாக்காது; அவர்மீது கெட்ட எண்ணம் எதையும் வைத்து, அதனுல் அவருக்கு மனக் கஷ்டத்தையும் உண்டாக்

1. ஸெயிண்ட் பிரான்ஸிஸ் அவ் அஸ்ஸிஸி (1187-1226) - அம்பிரியாவிலுள்ள அஸ்ஸிஸி நகரில் 1182-ஆம் ஆண்டு பியத்ரோ பெர்ஞர்டோன் என்ற வணிகரின் மகனுகப் பிறந்தார். இவர் கல்வி பயின்றது சொற்பமே. நல்ல வழியில் இவர் தம் இளமையைக் கழிக்கவில்லை. ஆனுல், ஏழைகளுக்கு உதவி செய்வது என்பது இவரிடம் தென்பட்ட விசேஷமான குணம். இவர் தம் இருபதாம் வயதில் பெருகிலா என்ற இடத்தில் மூண்ட ஒரு பூசலில் பங்கெடுத்துக்கொண்டார். அதில் தோல்வியுறவே, இவர் சிறை புக வேண்டியதாயிற்று. பின்னர் அஸ்ஸிஸிக்குத் திரும்பித் தம் பழைய வாழ்வைத் தொடங்கினுர். அச்சமயம் நெடுநாள் இவர் பிணிவாய்ப்படவே வாழ்க்கையில் வெறுப்புத் தோன்றியது. இந்த வெறுப்பு, இவருடைய ஆத்ம வளர்ச்சிக்கு வழிகோலியது. வெகுநாட்கள் இவர் மனத்துள்ளேயே இந்த ஆத்மிகப் போராட்டம் நடந்தது. தீடிரென ஒரு நாள் இவர் மறைந்துவிடவே, இவருடைய நண்பர்கள் தேடிப் பிடித்தபோது தம் நினைவின்றி, ஒரு மயக்கத்தில் இவர் ஆழ்ந்திருப்பதைக் கண்டனர். அன்றே இவர் வாழ்வில் ஒரு மாறுதல் தோன்றியது. தனிமையை நாடுவது, பிரார்த்தனை செய்வது, ஏழை மக்களுக்கு உதவி புரிவது இவ்வாருகச் சிறிது காலம் இருந்தபின், ரோம் நகருக்குப் பிரயாணமானுர். அங்கே இவர் மன நோக்கையே வேறு வழியில் திருப்பிய ஒரு சம்பவம் நிகழ்ந்தது. அங்கமெல்லாம் குறைந்து, அழுகி, தொழு நோயில் உழலும் ஒரு பிச்சைக்காரன் மீது இவருக்கு இரக்கம் பிறந்தது. தம் பணத்தை இத்தகையோருக்குச் செலவு செய்து பணியாற்றினுர். இதனுல் இவருக்கும் இவருடைய தந்தைக்கும் மனத்தாங்கல் மூண்டது. சொத்தையெல்லாம் மகன் தாறுமாருக ஒழித்துவிடுவானே என்று தந்தை அஞ்சி, அதற்கோர் முடிவு காண மகனைத் தம் குருவிடம் அழைத்துச் சென்று அவனுக்குள்ள சொத்துரிமையைப் பறித்துவிட்டார். அக்கணமே பிரான்ஸிஸ் தம் உடைகளைக் களைந்தெறிந்துவிட்டு, 'வானுலகில் இருக்கும் பரமபிதா' வின் கருணையை நம்பி ஸுபாஷியோ மலைக்குப் பக்கத்தில் உள்ள ஒரு காட்டில் தவம் செய்யப் போய்விட்டார். அதன் அருகில் உள்ள ஸெயிண்ட் மேரீ அவ் தி ஏன்ஜெல்ஸ் என்ற இடிந்து போன தேவாலயத்தில் தங்கி, சில நாட்கள் கடவுள் சிந்தையாகவே இருந்தார். சுவிசேஷத்தின் தெய்விகக்குரல் இவர் செவியில் ஒலிக்கத் தொடங்கியது: 'நீ போகுமிடமெங்கும், கடவுளின் ராஜ்யம், இதோ நெருங்கிவந்துவிட்டது என்று பிரசாரம் செய். நோயுற்ருேர்க்குப் பணிவிடை செய். இறப்பவரின் கடைசிச் சடங்கை முடித்துவிடு. கொடிய பேய்களை விரட்டியடி. நீ பெற்ற பொருளை மனமாரத் தானம் செய். பணமோ பொன்னே வைத்துக்கொள்ளாதே. உடுக்க ஓர் உடையே போதும், செருப்பில்லாமல் நடந்து செல். கையில் தடியும் ஏந்தாதே. உழைப்பவனுக்கு எங்கும் மதிப்பு உண்டு' (மத்தேயு X-7-10).

இந்த உபதேசத்தையே உள்ளத்தில் கொண்டு பிரான்ஸிஸ் பூரண சேவையில் இறங்கினுர். (1209) இவருடைய தூய்மையையும் உண்மைப் போக்கையும் கண்டு பலர் இவருக்குச் சீடர்களாயினர். போப் மூன்ருவது இன்னஸெண்ட் இவருக்குத் துறவறத்தில் தீட்சை செய்து வைத்தார். இவர் தம்மை அண்டிய பதினெருதொண்டர்களுடன் நாடெங்கும் சுற்றி நற்பணியாற்றினுர். இவரைப் பின்பற்றும் அத்துறவிக்குழுவினருக்கு பிரான்ஸிஸ்கன் என்று பெயர். பிரம்மசாரிணியான பெண்பாலாரைக் கொண்ட ஒரு சம்பிரதாயத்தையும் நிறுவினுர். 1212-இல் பிரான்ஸிஸ்

காது. கெட்ட எண்ணத்திலிருந்து தோன்ருத மனித இயல்புக்குரிய ஒரு செயலினல் தவறிழைத்தவனுக்குக் கஷ்டம் ஏற்படுவதை இது குறிக்காது. ஆனல், ஒருவர் ஒரு குழந்தையைத் தாக்கக் கையை ஓங்குகிருர் என்று வைத்துக்கொள்வோம். அவரிடமிருந்து குழந்தையை அப்பால் நான் இழுத்துக்கொள்வதை அகிம்சை தடுக்காது. அத்தகைய குழந்தைக்கு எந்த வகையிலாவது நான் பாதுகாப்பாக இருப்பேஞயின், தீமை செய்கிறவரிடமிருந்து அவருக்குப் பலியாகவிருக்கும் குழந்தையை அப்புறப்படுத்திவிடுவது அகிம்சையைச் சரியான வழியில் அனுசரிப்பதேயாகும். ஆகையால், தென்னுப்பிரிக்காவில் யூனியன் அரசாங்கம் தங்களுக்குச் செய்ய முற்பட்ட தீமையைச் சாத்துவிக எதிர்ப்பாளர்கள் எதிர்த்துப் போராடியது முற்றிலும் நியாயமாயிற்று. அந்த அரசாங்கத்தின்மீது அவர்களுக்குக் கெட்ட எண்ணம் எதுவும் இல்லை. அரசாங்கத்திற்குத் தேவைப்பட்ட சமயங்களிலெல்லாம் தங்கள் உதவியை அளிப்பதன் மூலம் இதைத் தெளிவாகக் காட்டினர்கள். அரசாங்கத்தின் கையில் சாக நேர்ந்தாலும், அதன் உத்தரவுகளுக்கு உடன்பட மறுப்பதே அவர்களுடைய எதிர்ப்பின் நோக்கம். அகிம்சைக்கு வேண்டியது, தான் துன்பத்திற்கு உட்படத் தயாராயிருப்பதேயன்றித் தீமை செய்யக்கூடியவர் என்பவரை வேண்டுமென்றே துன்புறுத்துவது அல்ல.

நேரான வகையில் அகிம்சை என்பதற்கு மிகுந்த அன்பு, அதிக அளவு தயை என்பதே பொருள். நான் அகிம்சையைப் பின்பற்றுகிறவனுக இருப்பின் என்னுடைய பகைவனிடத்திலும் நான் அன்போடிருக்க வேண்டும். தவறு செய்யும் தந்தையிடமோ அல்லது மகனிடமோ எந்த முறைகளை அனு

'புனித நாட்டில்' உள்ள அரபுகளையும் கிறிஸ்தவ வழிக்குத் திருப்ப யாத்திரை புறப்பட்டார். ஆனல், கடலில் கலம் கவிழ்ந்துவிடவே திரும்பிவிட்டார். பிறகு 1219-இல் எகிப்து சென்ருர். அந்நாட்டின் சுல்தான் இவரைச் சிறிது காலம் சிறையில் வைத்ததும், 'புனித நாட்டுக்'குச் செல்ல இவரை அனுமதித்தான். அங்கு 1220 வரை இவர் தங்கியிருந்தார். இறப்பதற்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன் அல்வர்னே என்ற மலைக்குச் சென்று பிரான்ஸிஸ் தம் தோழருடன் பிரார்த்தனையிலும் உண்ணு விரதத்திலும் தியானத்திலும் நாற்பது நாட்களைக் கழித்தார். 1224-இல் இவருக்கு ஒரு தெய்விகக் காட்சி புலஞகியது. ஒளிமிக்க ஒரு தேவதூதன் இவரை நோக்கி வருவது போலவும், சிலுவையின் மத்தியில் அறைபட்டு நிற்பது போலவும் இருந்தது அக்காட்சி. அதைப் பார்த்து இவர் உள்ளம் பரமானந்தக் கடலில் முழ்கியது. பிரான்ஸிஸின் உடல் நிலை பலவீனமாகிவிடவே இவரைத் தூக்கிச் செல்ல வேண்டியதாயிற்று. ஆனல், இவர் எப்பொழுதும் தம் மனத் தெளிவையோ, மகிழ்ச்சியையோ இழந்ததில்லை. 1226 அக்டோபர் 3-இல் போர்ட்டினுகுலா என்ற மேரீ ஆலயத்தில் உயிர் நீத்தார். இரண்டு ஆண்டுகள் கடந்ததும் போப் ஒன்பதாவது கிரகோரி இவரை மெய்யடியார் கூட்டத்தில் சேர்த்துவிட்டார்.

சரிப்பேனே அவற்றையே தீமையைச் செய்யும் என் பகைவனிடமும் எனக்கு முன்பின் தெரியாதவரிடமும் நான் அனுசரிக்க வேண்டும். இந்தத் தீவிரமான அகிம்சையில் சத்தியமும் பயமின்மையும் அவசியமாகச் சேர்ந்தே இருக்கின்றன. தாம் அன்பு கொண்டிருப்பவரை ஒருவர் ஏமாற்ற முடியாது. அவனையோ அல்லது அவளையோ கண்டு அவர் பயப்படுவதோ, பயமுறுத்துவதோ இல்லை. உயிர்த் தானமே எல்லாத் தானங்களிலும் சிறந்தது. அதை உண்மையில் யார் அளிக்கிறாரோ அவர் எல்லா விரோதங்களையுமே போக்கிவிடுகிறார்; கௌரவமான வகையில் விஷயங்களை உணர்ந்துகொள்வதற்கும் வழி செய்துவிடுகிறார். பயத்திற்கு அடிமை யாகிவிட்ட யாரும் இந்தத் தானத்தைச் செய்துவிட முடியாது. ஆகையால், அவர் முதலில் பயமற்றவராக இருக்கவேண்டும். பயங்காளியாகவும் ஒருவர் இருந்துகொண்டு அதே சமயத்தில் அகிம்சையையும் அனுசரிப்பது இயலாது. அகிம்சையைக் கடைப்பிடிப்பதற்கு மிக அதிகமான அளவு வீரம் வேண்டும். வீரனுக்குரிய பண்புகளில் மிகச் சிறந்த பண்பு இது. ஒரு கழியை மாத்திரம் வைத்துக்கொண்டிருப்பதாகவே [1]ஜெனரல் கார்டனின் பிரபலமான உருவச் சிலையொன்று செதுக்கப்பட்டிருக்கிறது. அகிம்சைப் பாதையில் இது நம்மை வெகுதூரம் கொண்டு போகிறது. ஆனால், ஒரு போர்வீரனுக்குப் பாதுகாப்பாக ஒரு கழி அவசியமானால் அவன் ஒரு படி வீர மரபிலிருந்து இறங்கியவனாகிறான். மாரியாகப் பொழியும் தோட்டாக்கள் இடையே வீரத்தோடு நின்று சாகவும் அறிந்தவனே உண்மையான போர் வீரன். அப்படிப்பட்டவரே [2]அம்பரீஷர். துர்வாசர்

1. கார்டன், மேஜர்-ஜெனரல் சார்லஸ் ஜார்ஜ் (1833—1885)—பிரக்கியாதி பெற்ற போர்வீரர். அரசாங்க நிர்வாகி; உண்மையான கிறிஸ்தவர். இவரது வாழ்க்கை மிகப் பயனுள்ளதும், தன்னலமற்றதும், துணிவு மிக்கதுமாக விளங்கியது. இவர் கிரிமியா, சீனா, இந்தியா ஆகிய நாடுகளிலுள்ள ராணுவத்தில் முக்கியப் பதவிகளை ஏற்றுத் தம் கடமையை ஆற்றினார். 1873 இல் எகிப்தின் கவர்னராக நியமிக்கப்பட்டார். எகிப்து அரசாங்கத்தின் சார்பில் ஸூடானில் ஏற்பட்ட மஹதிகளின் கலகத்தை அடக்கச் சென்றார். கார்ட்டூமில் உள்ள ஓர் அரண்மனையில் இவர் இருக்கும்போது மஹதிகளில் சிலர் இவரைக் கொலை செய்துவிட்டனர்.

2. அம்பரீஷர் சிறந்த விஷ்ணு பக்தர். இவர் துவாதசி விரதத்தை அனுஷ்டித்து வந்தபோது துர்வாச முனிவர் இவரிடம் வந்து தமக்கு அன்று உணவளிக்க வேண்டும் எனக் கேட்டார். யமுனா நதிக்குச் சென்று நீராடி வருவதாகச் சொல்லிச் சென்றார். அம்பரீஷர் துர்வாசருக்காக நீண்ட நேரம் காத்திருந்தார். துர்வாசர் வராது போகவே, தம் விரத நேரம் தப்பிவிடும் எனக் கருதித் தாம் உண வருந்த உட்கார்ந்து, சாப்பிட ஆரம்பித்தார். அப்பொழுது துர்வாசர் திரும்பி வந்தார். அம்பரீஷர் தம்மை மதிக்காது சாப்பிட ஆரம்பித்துவிட்டதாகக் கோபமடைந்து, தமது சடையில் ஒன்றை அறுத்தெறிந்து அம்பரீஷரைச் சாம்பலாக்குமாறு ஏவினார். இதைக் கண்ட அம்பரீஷர், அது தம்மைத் துன்புறுத்தாதிருக்க விஷ்ணு

மோசமாக நடந்துகொண்டபோதிலும் இவர் எதிர்த்துத் தமது விரலைக்கூட அசைக்காமல் உறுதியுடன் நின்றார். பிரெஞ்சுப் பீரங்கிகள் கொடூரமாகச் சுட்ட சமயத்தில் மூர்கள்[1], அல்லாவின் பெயரை உச்சரித்துக்கொண்டே பீரங்கிகளுக்கு முன்னால் ஓடினர். இவர்களும் அதே போன்றதோர் தீரத்தையே காட்டினார்கள். ஆனால், இவர்களுடைய தீரம் திக்கற்ற நிலையில் ஏற்பட்டது. அம்பரீஷரின் தீரம் அன்பினால் ஏற்பட்டது. என்றாலும், மூர்களின் வீரமும், சாக அவர்கள் தயாராயிருந்ததும் பீரங்கிக்காரர்களை வென்றது. அவர்கள் பரபரப்புற்றுத் தங்கள் தொப்பிகளை எடுத்து, சமிக்ஞை காட்டியதோடு சுடுவதை நிறுத்திவிட்டு, அதுவரையில் தங்களுக்குப் பகைவர்களாக இருந்தவர்களைத் தோழர்கள் என்று அழைத்தார்கள். அவ்விதமே தென்னாப்பிரிக்கச் சாத்துவிக எதிர்ப்பாளர்கள், தங்களுடையச் சொந்த சிறு வசதிகளுக்காக மானத்தை விற்பதைவிட உயிரை விடவும் ஆயிரக்கணக்கில் தயாராக இருந்தார்கள். நடைமுறையில் இதுதான் அகிம்சை. எந்த வகையான கௌரவத்தையும் அது இழந்துவிடுவதில்லை. தன் கையிலிருக்கும் ஆயுதங்களைக் கொண்டு அதனால் முடிந்தவரையில் பாதுகாத்துக்கொள்ள முற்படுபவனைவிட, அகிம்சையைக் கடைப்பிடிப்பவரிடம் ஒரு திக்கற்ற பெண், சிறந்த-நிச்சயமான-பாதுகாப்பை அடைகிறாள். அகிம்சையாளரின் பாதுகாப்பில் அப்பெண் இருக்கும்போது, அவர் சவமாகிய பிறகுதான் ஒரு கொடியவன் அப்பெண்ணை அணுக முடியும். ஆனால், ஆயுதம் ஏந்தி அப்பெண்ணைப் பாதுகாக்க முற்படுபவர் விஷயத்திலோ, அவரைக் கொடியவன் வென்றுவிட்டால் போதும். பாதுகாக்க முற்பட்டவன் தன் உடல் வலிவு இருக்கும்வரை போராடினான் என்பது மட்டுமே திருப்தி

---

வைப் பிரார்த்தித்தார். விஷ்ணு அதை எரிக்க தம் சக்கரத்தை அனுப்பினார். அந்தச் சக்கரத்தைத் தடுக்க துர்வாசர் ஒவ்வொரு தேவரிடமும் போய் உதவியை நாடினார். முடியாது போகவே முனிவர், அம்பரீஷரின் மகிமையை அறிந்து, அவரிடமே சென்று பிரார்த்தித்துக் கொண்டார். அப்பொழுது அம்பரீஷர் சக்கரத்தைத் தடுத்து, முனிவருக்கு அனுக்கிரகம் செய்தார் என்பது புராணம் கூறும் கதை.

1. மூர்கள்—வட ஆப்பிரிக்காவின் மேற்குக் கோடியில் உள்ள மொராக்கோ நாட்டினர். இவர்கள் பேசுவது அரபு மொழி. சிவப்பான மேனியர்; கம்பீரமான தோற்றமுடையவர்கள். கி. பி.171 – இல் இவர்கள் ஸ்பெயின் மீது படையெடுத்து, அந்நாட்டை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தனர். இவர்களுடைய கலாசாரம், மேற்கு ஐரோப்பிய நாடுகளில் பரவி, மக்களின் வாழ்க்கையிலும் நற்கலைகளிலும் பெரிய மாறுதல்களை உண்டாக்கியது. 1609–இல் ஸ்பானிஷ் இன்குவிஸிஷன் என்ற கிறிஸ்தவ மதவீரர்களால் இவர்கள் அடியோடு அப்புறப்படுத்தப்பட்டனர். இன்று பிரெஞ்சு ஆதிக்கத்தின் கீழ்க் குடிகளாக இவர்கள் வாழ்ந்து வருகின்றனர். முதல் உலக மகா யுத்தத்தின்போது தங்களிடம் அட்டூழியங்களைச் செய்த பிரெஞ்சு படைகளிடம் இவர்கள் காட்டிய தீரமே இங்குக் குறிப்பிடப்படுகிறது.

யளிக்கும் ஒழுக்க நியதி யாகிவிடுகிறது. ஆனல், பாதுகாக்க முற்பட்ட அகிம்சைவாதியோ கொடியவனின் வெறும் உடலுக்கு எதிராகத் தமது ஆத்மாவையே நிறுத்துகிருர். இதனல் கொடியவனின் ஆத்மாவும் விழிப்படைகிறது. ஆகையால், அப்பெண்ணுக்குச் சொந்தமாகவும் தீரம் இருக்குமாயின் அவளுடைய மானம் பாதுகாக்கப்படுவதற்கு இதில் நிச்சயமாக அதிகச் சந்தர்ப்பம் உண்டு.

இன்று நாம் வீரம் இழந்தவர்களாக இருக்கிறோம் என்ருல், இது நாம் சாக அஞ்சுவதனலேயேயன்றி எப்படித் தாக்குவது என்பது நமக்குத் தெரியாததனல் அன்று. சாவதற்கு அஞ்சுகிறவன், உண்மையாகவோ அல்லது கற்பித்துக்கொண்டதனலோ ஏற்படும் ஆபத்துக்களுக்கெல்லாம் பயந்தோடுகிறவன், அதே சமயத்தில் இந்த ஆபத்துக்களை உண்டாக்குகிறவர்களை வேறு யாராவது வந்து தொலைக்க வேண்டும் என்றும் விரும்புகிறவன். ஜைன முனிவரான மகாவீரரையோ[1] அல்லது புத்தரையோ, இல்லாவிட்டால் வேதங்களையோ பின்பற்றுபவனுக இவன் இருக்க முடியாது. வர்த்தகத்தில் ஒருவரை ஏமாற்றி அவரை அணு அணுவாகக் கொல்லுபவனே அல்லது ஆயுதங்களின் உதவியைக்கொண்டு சில பசுக்களைப் பாதுகாத்து அவற்றைக் கசாப்புக்காரனுக்குக் கொடுத்துவிடுபவனே, தேசத்திற்கு நன்மையைச் செய்வதாக எண்ணிக்கொண்டு சில அதிகாரிகளைக் கொல்லத் துணிபவனே அகிம்சையைப் பின்பற்றுபவன் ஆகமாட்டான். துவேஷத்திலும், கோழைத்தனத்திலும், பயத்திலும் தூண்டப்பட்டு இவ்விதம் செய்கின்றனர். இங்கே பசுமீது அன்பு என்பதும், நாட்டின்மீது பற்று என்பதும் ஒருவர் தம்முடைய அகம்பாவத்தைத் திருப்தி செய்துகொள்ளவும், குற்றமுள்ள மனச்சாட்சியைச் சாந்தப்படுத்திக்கொள்ளவும் செய்யும் தெளிவற்ற காரியம்.

அகிம்சையைச் சரியானபடி உணர்ந்துகொண்டால், அதுவே இவ்வுலகத்தைப்பற்றியதும் இவ்வுலகிற்குப் புறம்பானதுமான எல்லாத் தீமைகளுக்குமே நிகரற்ற மருந்து என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். அதை

1. மகாவீரர்—வர்த்தமானர் என்னும் இம்மகான் கி. மு. 599-இல் மகத நாட்டில் தோன்றி ஏறக்குறைய புத்தர் தோன்றுவதற்குச் சிறிது காலத்திற்கு முன்னர் வாழ்ந்தவர். ஐம்புலனை வென்றவராதலால் ஜினர் என்று அழைக்கப்பட்டார். இவர் போதித்த சமயக் கொள்கையே ஜைன மதம். அகிம்சை அல்லது எவ்வுயிர்க்கும் தீங்கு செய்யாமை இந்த மதத்தின் முக்கியக் கோட்பாடு. இந்த மதம் இந்தியாவெங்கும் பரவி உயர்வான நிலையை எய்தி இருந்தது.

நாம் மிகைப்படையாகச் செய்துவிடவே முடியாது. இப்பொழுது நாம் அதைச் செய்யவே இல்லை. மற்ற நற்செய்கைகளைக் புறக்கணிப்பது அல்ல அகிம்சை. ஆனால், இதைக் கொஞ்ச அளவேனும் அனுசரிப்பதில் மற்ற நற்செய்கைகளை அகிம்சை அவசியமானவைகளாக்குகிறது. மகாவீரரும் புத்தரும் போர்வீரர்கள்; டால்ஸ்டாயும் போர்வீரரே. அவர்கள் தாம் மேற்கொண்ட காரியங்களை ஆழ்ந்து, உண்மையாகக் கவனித்து, சத்தியமான, ஆனந்தமயமான, கௌரவமான, தெய்விகமான வாழ்க்கையின் ரகசியத்தைக் கண்டார்கள். இந்தப் போதகர்கள் கண்ட உண்மையை நாமும் அவர்களுடன் சேர்ந்து பகிர்ந்துகொள்வோம். நமது நாடு அப்போது மீண்டும் தேவர்களின் உறைவிடமாகும்.

# 3
# அகிம்சை அல்லது அன்பு[1]

சத்தியத்தின் பாதை எவ்வாறு நேரானதோ அவ்வாறு குறுகியதாகவும் இருக்கிறது என்பதைச் சென்ற வாரம் கவனித்தோம். அகிம்சையின் பாதையும் அப்படிப்பட்டதே. அப்பக்கமோ இப்பக்கமோ சாய்ந்துவிடாமல் வாளின் முனையில் நிற்பதைப் போன்றது இது. கயிற்றின்மீது நடப்பவன், தன் கவனத்தையெல்லாம் ஓர் இடத்தில் நிலைக்கச் செய்வதால், அந்த வித்தையில் வெற்றி பெறுகிறான். ஆனால் சத்தியம், அகிம்சை இவற்றின் பாதையில் நடப்பதற்கு அதைவிட இன்

1. மகாத்மா காந்தி எழுதிய இக்கட்டுரை 'எரவாடா மந்திர்' என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டது. இந்நூலுக்குக் காந்திஜி 1932 மார்ச் 6-ஆந் தேதி எரவாடா மத்தியச் சிறையிலிருந்து ஒரு முன்னுரை எழுதியிருக்கிறார். இக்கட்டுரையின் வரலாற்றை அறிவதற்கு அந்த முன்னுரை முக்கியமாகையால் அது கீழே கொடுக்கப்படுகிறது. காந்திஜி எழுதியதாவது:

"1930-இல் நான் எரவாடா மத்தியச் சிறையில் வைக்கப்பட்டிருந்தபோது ஆசிரமத்தில் அனுசரிக்க வேண்டிய கொள்கைகளைக் குறித்த பொதுப்படையான பரிசீலனைகள் அடங்கிய கடிதங்களை வாரந்தோறும் ஆசிரமத்திற்கு எழுதிக்கொண்டிருந்தேன். ஆசிரமத்தின் செல்வாக்கு அதன் எல்லைக்கு வெகு தூரங்களிலும் பரவி விட்டதால் வினியோகிப்பதற்கு அக்கடிதங்களின் பிரதிகள் பல எடுக்கப்பட்டன. அக்கடிதங்களைக் குஜராத்தியில் எழுதினேன். ஹிந்தியிலும், மற்ற இந்திய மொழிகளிலும், ஆங்கிலத்திலுங்கூட, அவற்றின் மொழியாக்கங்கள் வேண்டும் என்றார்கள். ஸ்ரீ வால்ஜி தேசாய் ஆங்கிலத்திலும் நன்றாகவே முற்றிலும் மொழிபெயர்த்தார். இந்தச் சிறைவாசத்தினால் எனக்கு ஓய்வு இருப்பதைக் கண்டு அம்மொழிபெயர்ப்பை ஒத்துப் பார்ப்பதற்காக எனக்கு அனுப்பியிருக்கிறார். அதைக் கவனமாகப் பார்த்து, என் விருப்பத்திற்கு ஏற்ப என் பொருள் அதில் வருமாறு செய்யப் பல இடங்களில் திருத்தியிருக்கிறேன். 1930-இல் ஆசிரமவாசிகளுக்கு நான் தெரிவித்த என் எண்ணங்களை ஆங்கிலத்தில் படிப்பவர்களும் அறியலாம் என்பதற்காக அதில் அடங்கிய வாதங்களில் நான் சிறிதும் மாறுதல் செய்யவில்லை."

னும் அதிக அளவு கவனம் வேண்டும். சிறிதளவு கவனக் குன்றவாக இருந்துவிட்டாலும் கீழே விழுந்துவிட நேரும். இடைவிடாது பாடுபட்டால்தான் சத்தியத்தையும் அகிம்சையையும் ஒருவர் அடைய முடியும்.

ஆனல், இந்தச் சடலத்தில் சிறைப்பட்டுக் கிடக்கும் வரையில் யாரும் பரிபூரண சத்தியத்தை அடைந்துவிட முடியாது. அதை நம் கற்பனைக் கண்ணல் மட்டுமே பார்க்க முடியும். அநித்தியமான இந்த உடலைக்கொண்டு நித்தியமான சத்தியத்தை நேருக்கு நேர் காண்பது என்பதே இயலாத காரியம். இதனலேயே தீராப்பட்சமாக நம்பிக்கை ஒன்றின் மீதே நிற்க வேண்டியதாகிறது.

அழியும் உடலைக்கொண்டு சத்தியத்தைப் பூரணமாக அடைந்துவிடுவது என்பது முடியாததனலேயே சத்தியத்தை நாடிய பழங்காலத்துப் பெரியவர் ஒருவர், அகிம்சையின் உயர்வை உணரலானர் என்று தோன்றுகிறது. "எனக்குச் சங்கடங்களை உண்டாக்குகிறவர்களைச் சகிப்பதா அல்லது அவர்களை நான் அழித்துவிடுவதா?" என்ற கேள்வி அவர் முன் எழுந்தது. அவர் ஒன்றை அறிந்துகொண்டார்: எல்லோரையும் அழித்துக்கொண்டே போகிறவன் எந்த விதத்திலும் முன்னுக்கு வந்துவிடவில்லை; இருந்த நிலையிலேயே அவன் இருந்து வந்தான். ஆனல், இன்னல்களை விளைவிப்பவர் இயற்றும் கஷ்டங்களைச் சகித்துக்கொண்டவனே முன்னுக்கு வருகிருன், மற்றவர்களையும் தன் வழிக்குக் கொண்டு போகிருன் என்பதை உணர்ந்தார். தான் தேடும் லட்சியமான சத்தியம் தன்னுள்ளேயே இருக்கிறதேயன்றி வெளியில் இல்லை என்பதை, அவன் செய்த முதல் அழிவு வேலையே அவனுக்குப் போதிக்கிறது. ஆகவே, பலாத்காரத்தில் ஈடுபட ஈடுபடச் சத்தியத்திலிருந்து விலகியே செல்வதாகும். ஏனெனில், வெளியில் இருப்பதாகக் கற்பனை செய்துகொண்டுள்ள எதிரியுடன் போராடுகையில் உள்ளுக்குள் இருக்கும் எதிரியை மறந்துவிட நேர்கிறது.

திருடர்கள் இடையூறு செய்கிருர்கள் என்று நாம் நினைப்பதால் அவர்களை நாம் தண்டிக்கிருேம். நம்மைத் தொந்தரவு செய்யாமல் அவர்கள் விட்டுவிடலாம். ஆனல், அவர்கள் வேறு சிலரிடம் தங்கள் கவனத்தைச் செலுத்துகின்றனர். இதே திருடர் தொல்லைக்கு ஆளாகிறவர்களும் மனிதர்களே; வேறு உருவில் நாமே இவர்கள். ஆகவே, ஒரு மாயச் சுழலில் சிக்கித் தவிக்கிருேம். திருடுவதே தம் வேலை

என்று திருடர்கள் நினைத்துவிடுவதால் திருடர்களின் தொல்லை தொடர்ந்து அதிகரித்துக்கொண்டு போகிறது. முடிவில் அவர்களைத் தண்டிப்பதைவிடச் சகித்துக் கொண்டிருப்பதே மேல் என்பதைக் காண்கிறோம். இப்படி நாம் சகிப்பது அவர் களுக்கு நல்ல புத்தி ஏற்படுவதற்கு ஏதுவாகக்கூடும். அவர் களைச் சகித்துக்கொள்வதால், அவர்கள் நம்மிலும் வேறானவர்கள் அல்ல, அவர்கள் நம் சகோதரர்களே, நம் நண்பர்களே, அவர் களைத் தண்டிக்க வேண்டியதில்லை என்பதை உணருகிறோம். ஆனால், திருடர்களைச் சகித்துக்கொண்டாலும் அவர்களால் ஏற் படும் தொல்லைகளை நாம் சகித்துக்கொள்ள முடியாமல் இருக்க லாம். அப்படிச் சகித்துக்கொண்டு விடுவது கோழைத்தனத் தையே உண்டாக்கும். ஆகையால், மேலும் ஒரு கடமை இருப் பதை நாம் உணருகிறோம். திருடர்களும் நம் உற்றார் உறவினர் களே என்று நாம் பாவிப்பதால் இந்த உறவை அவர்களும் உணரும்படி செய்ய வேண்டும். எனவே, அவர்களை நம் வழிக் குத் திருப்ப வழி துறைகளைக் கண்டுபிடிப்பதற்கு நாம் பாடுபட வேண்டும். இதுவே அகிம்சை வழி. இதனால் தொடர்ந்து கஷ் டங்களை அனுபவிக்க நேரலாம்; முடிவில்லாமல் பொறுமையை வளர்த்துக்கொள்ள வேண்டியும் இருக்கலாம். இந்த இரண்டு காரியங்களையும் செய்துவந்தால் முடிவில் திருடன் தன் னுடைய தீய செயல்களிலிருந்து கட்டாயம் திரும்பிவிடுவான். இவ்விதம் உலகம் முழுவதையுமே எப்படி நண்பராக்கிக் கொள்வது என்பதைப் படிப்படியாக நாம் அறிகிறோம்; கடவுளின் - சத்தியத்தின் - மகத்துவத்தையும் தெரிந்துகொள் கிறோம். துன்பங்களை அனுபவிக்க நேரினும் நமக்கு மனத்தில் அமைதி அதிகரிக்கிறது. நாம் தீரத்தை அடைவதோடு அதிக முற்போக்குள்ளவர்களாகவும் ஆகிறோம். நித்தியமானதற்கும் அநித்தியமானதற்குமுள்ள பேதத்தையும் தெளிவாக அறிந்து கொள்ளுகிறோம். எது நம் கடமை, நம் கடமை அல்லாதது எது என்பதுபற்றித் தெளிவு கொள்கிறோம். நம் அகந்தை நீங்கி நாம் பணிவுள்ளவர்களாகிறோம். நமக்கு இருக்கும் உலகப் பற்றுக் குறைந்து நம்முள் இருக்கும் தீயன நாளுக்கு நாள் மறைகின்றன.

அகிம்சை, பலர் நினைப்பதுபோல், ஒரு கரடுமுரடான விஷயமன்று. உயிருள்ள எதற்கும் துன்பம் விளைவிக்காமல் இருப்பது அகிம்சையின் ஒரு பகுதி என்பதில் சந்தேகமில்லை. ஆனால், இது அதனுடைய குறைந்தபட்சத் தன்மையாகும். ஒவ்வொரு கெட்ட எண்ணத்தினாலும், அனாவசியமான அவ

சரத்திலும், பொய் சொல்லுவதாலும், பிறருக்குத் தீமை நினைப்பதனுலும், அகிம்சா தருமம் பாதிக்கப்படுகிறது. உலகத்திற்குத் தேவையாக இருப்பதை விடாமல் நாம் வசப்படுத்திக் கொண்டிருப்பதும் அத்தருமத்திற்கு விரோதம். நாம் தினந்தோறும் உண்டு வருவதும் உலகத்திற்குத் தேவைப் படுவதே. நாம் நிற்கும் இடத்திலேயே வேறு எத்தனையோ நுண்ணிய ஜீவன்கள் இருக்கின்றன. ஆகவே, நாம் நிற்கும் இடம் அவற்றின் இடம். நாம் அங்கிருப்பது அவைகளுக்குத் துன்பமாகிறது. அப்படியாயின் நாம் என்ன செய்வது? தற்கொலை செய்துகொண்டுவிடலாமா? உடலின்மீது உயிருக்குப் பற்று இருந்துகொண்டிருக்கும் வரையில், இந்த உடல் அழிந்தாலும், அந்த உயிர் இன்னும் ஓர் உடலையே அடைந்து விடும் என்று நம்புகிறோம். அப்படி நாம் நம்புவதாயிருந்தாலும் நாம் தற்கொலை செய்துகொண்டு விடுவதாலும் பிரச்னை தீர்ந்துவிடாது. உடலைப் பற்றியவற்றையெல்லாம் நாம் என்று விட்டொழிக்கிறோமோ அன்றுதான் உடலும் இனி இல்லை என்றாகும். சத்தியமே கடவுள் என்பதை உணர்வதே பற்றற்றுப் பெறுகிற விடுதலை. அத்தகைய உணர்வு திடீரென்று ஏற்பட்டுவிடாது. நமக்குரியது அன்று இவ்வுடல். அது இருந்துகொண்டிருக்கும் வரை நல்வழிக்கு ஒப்படைக்கப்பட்டிருக்கும் ஒரு பொருளாக அதை நாம் உபயோகப்படுத்த வேண்டும். ஊன் உடலின் காரியங்களை இந்த வகையில் மதித்துச் செய்து வந்தால், என்றாவது ஒரு நாள் உடலின் சுமையிலிருந்து விடுபட்டுவிட நாம் எதிர்பார்க்க முடியும். நம் ஊனின் குறைபாடுகளை உணர்ந்து, நம்முள்ளுக்குள்ளே இருக்கும் பலத்தைக் கொண்டே நமது லட்சியத்தை அடைய நாளுக்கு நாள் நாம் பாடுபட வேண்டும்.

'அகிம்சையைக் கடைப்பிடித்தாலன்றிச் சத்தியத்தை நாடுவது என்பதோ அல்லது அடைவதென்பதோ இயலாது' என்பது மேலே சொன்னவைகளிலிருந்து தெளிவாகியிருக்கும். அகிம்சையும் சத்தியமும் ஒன்றுக்கொன்று பலமாகப் பிணைவுண்டிருப்பவை. அவற்றை வேறாக்குவதோ, பிரிப்பதோ முடியாத காரியம். ஒரு காசின் இரு பக்கங்களை அல்லது முத்திரை இடப்படாத வழுவழுப்பான உலோகத்தால் ஆகிய வட்டத்தைப் போன்றது அது. அதில் முன்பக்கம் இன்னது, பின்பக்கம் இன்னது என்று யாரால் சொல்ல முடியும்? என்றாலும், அகிம்சையே வழி, சத்தியமே குறிக்கோள்; ஏற்றதோர் வழி நமது சக்திக்கு உட்பட்டதாகவே இருக்க வேண்டும். ஆகை

யால், அகிம்சை நமது மிக முக்கியமான கடமை. வழியைப் பற்றிய வரையில் நாம் ஜாக்கிரதையாக இருந்து வருவோமாயின் சீக்கிரத்திலோ அல்லது பிறகோ நாம் நமது லட்சியத்தை அடைந்தே தீருவோம். இதன் நுட்பத்தை மாத்திரம் அறிந்துகொண்டு விடுவோமாயின் முடிவில் வெற்றியைக் குறித்து ஐயமே இல்லை. சத்தியத்தை அடைவதே கடவுளை அடைவதாகும். ஆகையால், இதை நாடிச் செல்வதில் என்னதான் துன்பங்கள் நேரிடினும், எவ்வளவுதான் தோல்விகள் ஏற்பட்டாலும் நமது முயற்சியை மாத்திரம் விட்டுவிடக் கூடாது.

## 4

# வாளின் தத்துவம்

பலாத்காரமா அல்லது கோழைத்தனமா? இவற்றுள் எதை அனுசரிப்பதென்றால், பலாத்காரத்தை அனுசரிக்க நான் யோசனை கூறுவேன் என்றே நம்புகிறேன். 1908-இல் நான் உயிருக்கு ஆபத்தான வகையில் தாக்கப்பட்டேன். அப்பொழுது, தான் அருகில் இருந்திருந்தால் என்ன செய்திருக்க வேண்டும் என்று என் மூத்த மகன் கேட்டபோதும் — அதாவது, ஓட்டம் பிடித்து நான் கொலை செய்யப்படுவதைப் பார்த்துக்கொண்டிருப்பதா அல்லது தன் உடல் வலிமையை உபயோகித்து என்னைப் பாதுகாப்பதா என்று என் மூத்த மகன் என்னைக் கேட்டான்—பலாத்காரத்தை உபயோகித்தாவது என்னைப் பாதுகாக்க வேண்டியது அவனுடைய கடமை என்று சொன்னேன். இதனாலேயே போயர் யுத்தம், ஜுலுக்களின் புரட்சி என்று சொல்லப்படும் கலகம், பின்னர் வந்த உலக யுத்தம் ஆகியவைகளில் நான் கலந்துகொள்ள நேர்ந்தது. பலாத்கார முறையில் நம்பிக்கையுள்ளவர்களுக்கு ஆயுதப்பயிற்சி அளிக்க வேண்டும் என்றும் சொன்னேன். இந்தியா, தான் அவமதிக்கப் படுவதைப் பார்த்துக்கொண்டு கோழைத்தனமாகக் கதியற்றுச் சும்மா இருப்பதைவிட மானத்தைப் பாதுகாத்துக்கொள்வதற்கு ஆயுதம் ஏந்தவும் தயாராக இருக்க வேண்டும் என்றுதான் கூறுவேன்.

என்றாலும், பலாத்காரத்தைவிட அகிம்சை மிகவும் உயர்வானது என்றே நம்புகிறேன். தண்டிப்பதைவிட மன்னித்துவிடுவது ஆண்மை மிக்கது. மன்னித்துவிடும் தன்மை போர் வீரனுக்கு அழகு செய்வது. ஆனால், தண்டிப்பதற்குச் சக்தி இருந்தும் அதைச் செய்யாமல் இருப்பதே மன்னிப்பதாகும். சக்தியில்லாத நிலையில் மன்னித்துவிடுவதாகப் பாசாங்கு

செய்வதில் அர்த்தமில்லை. பூனை எலியைச் சுக்குச்சுக்காகப் பிய்த்துவிடுகிறது. இதற்கு எலி உடன்படும்போது பூனையை அது மன்னித்துவிடுகிறது என்றாகாது. ஆகையால் ஜெனரல் டயரையும் அவரைப் போன்றவர்களையும் சரியானபடி தண்டித்துப் பழி வாங்கிக்கொள்ளவேண்டும் என்று கூறுகிறவர்களின் உணர்ச்சியை நான் அறிகிறேன். முடிந்தால், அவரைப் பிய்த்து எறிந்துவிடுவார்கள். இந்தியா கதியற்றிருக்க வேண்டும் என்று நான் நினைக்கவில்லை. நானும் கதியற்ற பிராணி என்று எண்ணிக்கொள்ளவுமில்லை. ஆனால், இந்தியாவின் பலத்தையும், என் பலத்தையும் நல்லதொரு காரியத்திற்குப் பயன்படுத்தவேண்டும் என்றே நினைக்கிறேன்[1].

என்னை யாரும் தவறாக நினைத்துக்கொண்டுவிட வேண்டாம். பலம், உடல் ஆற்றலிலிருந்து வருவதன்று. அசைக்க முடியாத உறுதியிலிருந்து பிறப்பதே அது. உடல் ஆற்றலை வைத்துப் பார்த்தால் சாதாரணமான ஆங்கிலேயனைவிட ஒரு ஜூலு[2] மிக்க பலசாலியாக இருக்கிறான். ஆனால், அவன் ஆங்கிலச் சிறுவனைப் பார்த்ததுமே ஓடிவிடுகிறான். ஏனெனில்,

1. ஜாலியன்வாலாபாக் சம்பவத்தைக் குறித்தும், மக்கள் மார்பினாலேயே ஊர்ந்து செல்லும்படி செய்யப்பட்ட இடமான சந்தைப்பற்றியுமே காந்திஜி அடிக்கடி நினைவுபடுத்தி வருவது ஏன் என்று ஒரு நண்பர் கேட்டதற்கு, மகாத்மா காந்தி 1921 மார்ச் 16-ஆம் தேதி 'எங் இந்தியா'வில் எழுதிய பதிலும் இச்சந்தர்ப்பத்தில் கவனிக்க வேண்டியதாகும். அதில் அவர் கூறியதாவது :

"இதற்குப் பதில் எளிதானது. மன்னித்துவிடுவது என்பது மறந்துவிடுவது அன்று. ஓர் எதிரியை, அவனை நண்பனாக நீங்கள் மறந்துவிடும்போது, அன்பு காட்டுவதில் பெருமை இல்லை. நேசிக்கப்பட வேண்டியவன் நண்பன் அல்ல என்பதை நன்றாகத் தெரிந்துகொண்டிருந்தும் நேசிப்பதில்தான் பெருமை இருக்கிறது......ஜீவதயையாகிய தருமத்தை அதாவது மன்னித்துவிடுவது என்பதை இந்தியா பூராவும் இன்னும் ஏற்றுக்கொண்டுவிடவில்லை என்பது உண்மை. கொலைகாரர்களைத் தூக்கிலிட வேண்டும் என்றெல்லாம் கூறப்படுவதை அடிக்கடி கேட்கிறோம். ஆனால், பிரிட்டிஷ் கவர்னர்களுக்கும் ஜெனரல்களுக்கும் எதிராகத் தான் பலத்துடன் இருப்பதாக இந்தியா இன்னும் உணரவில்லை. அவர்களுக்கு இப்பொழுதும் பயப்படுகிறது. ஆகவே, ஸர் மிக்கேல் ஓட்வியரையும், ஜெனரல் டயரையும் இந்தியா மன்னிப்பது என்பது அர்த்தமில்லாதது. ஆனால், இந்தியா தினமும் அதிக பலமடைந்து வருவதுடன் மன்னித்துவிடும் தகுதியையும் பெற்று வருகிறது. பஞ்சாப் குற்றவாளிகளைத் தண்டிக்க வேண்டும் என்று ஓர் இந்தியர் சொன்னால், கையாலாகாத ஆத்திரத்திலேயே அவ்விதம் கூறுகிறார். ஆயினும், இந்தியா சுதந்திரமாய் இருக்குமானால், அதாவது, அவர்களைத் தண்டிக்கும் பலத்துடன் இருந்தால், அது தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ளும். ஜாலியன்வாலாபாக் சம்பவம் போன்றவை நடந்துவிடக்கூடியதிலிருந்து விடுதலை பெறவே இந்தியா விரும்புகிறது. ஒத்துழையாமைப் போராட்டம் முழுதும், பழிக்குப் பழி வாங்கும் உணர்ச்சிக்குப் பதில் நீதி உணர்ச்சியுடன் வகுக்கப்பட்டு இருப்பதாகும்."

2. ஜூலு - தென்னாப்பிரிக்காவில் வாழும் நீகிரோ ஜாதியினர். இவர்களைப் பற்றிய குறிப்பினை மகாத்மா காந்தி நூல் - முதல் தொகுப்பில் வரும் 'தென்னாப்பிரிக்கச் சத்தியாக்கிரக'த்தின் 15-ஆம் பக்கத்தில் பரக்கக் காணலாம்.

அச்சிறுவனின் கைத்துப்பாக்கியையும், அவனுக்காக அதை உபயோகிப்பவர்களையும் கண்டு ஜூலு அஞ்சுகிறான். வலுவான உடல்கட்டிருந்தும் அவன் சாவதற்குப் பயப்படுகிறான்; அவனுக்கு நடுக்கம் ஏற்படுகிறது. இந்தியாவில் முப்பது கோடி மக்களை ஒரு லட்சம் ஆங்கிலேயர்கள் பயமுறுத்தி விடமுடியாது என்பதை நாம் எந்த நேரத்திலும் அறிய முடியும். ஆகையால் நிச்சயமாக மன்னித்து விடுவது என்றால், நாம் நிச்சயமாக நமது பலத்தை அறிந்திருக்க வேண்டும். உணர்ந்து மன்னித்துவிடுவதற்கு நம்முள் பிரமாதமான சக்தியின் பெருக்கு எழ வேண்டும். அப்பொழுது ஒரு டயரினாலோ[1] அல்லது ஒரு பிராங்க் ஜான்ஸனாலோ புனிதமான இந்தியாவின் மீது எந்த அவமதிப்பையும் சுமத்திவிடவே முடியாது. என்

---

1. ஜெனரல் டயர், பஞ்சாபில் இருந்த பிரிட்டிஷ் படைகளின் தளபதி. கர்னல் பிராங்க் ஜான்ஸன் லாகூரில் ராணுவ ஆட்சியில் அட்டூழியங்கள் செய்தவன். அமிர்தசரஸில் ஜாலியன்வாலாபாக் என்ற தோட்டத்தில் 1919 ஏப்ரல் 13-ஆம் தேதியன்று 6,000 பேருக்கு மேல் கொண்ட ஒரு கூட்டத்தின் மீது எத்தகைய முன் எச்சரிக்கையுமின்றித் தன் படைகளை டயர் ஏவிவிட்டுச் சுட்டுத் தள்ளினான். தோட்டாக்கள் தீரும் வரையில் சுடும்படியும் உத்தரவிட்டான். அவன் இவ்விதம் சுட்டதில் 379 பேரைக் கொன்றதாகவும் 200 பேருக்குப் பலத்த காயம் என்றும் அரசாங்கமே அப்பொழுது ஒப்புக்கொண்டது. இத்தகைய கொடூரமான செயல்களால் எங்கும் பொதுஜனக் கண்டனங்கள் பலமாக எழுந்த பிறகு பிரிட்டிஷ் அரசாங்கம் அவனை வேலையிலிருந்து நீக்கியது. அப்பொழுது மகாத்மா காந்தி, 'ஜெனரல் டயர்' என்ற தலைப்பின் கீழ் 1920 ஜூலை 14-ஆம் தேதி 'எங் இந்தியா' பத்திரிகையில் வருமாறு எழுதியிருக்கிறார்:

"ஜெனரல் டயர் தவறான முடிவுடைய குற்றத்தைச் செய்திருப்பதாக ராணுவக் கவுன்ஸில் கருதியிருக்கிறது. அரசாங்கத்தின் கீழ் அவருக்கு எந்த உத்தியோகமும் கொடுக்கக்கூடாது என்றும் ஆலோசனை கூறியிருக்கிறது. ஜெனரல் டயரின் நடத்தையைக் குறித்து ஸ்ரீ மாண்டேகுவும் பலமாகக் கண்டித்துப் பேசி வருகிறார். அவருடைய செய்கை மிருகத்தனமானதே. ராணுவக் கவுன்ஸில் முன்பு டயர் கொடுத்திருக்கும் விசித்திரமான சாட்சியத்தின் ஒவ்வொரு வரியிலும் அவருடைய இழிவான, வீரனுக்குப் பொருந்தாத கோழைத்தனமே தெளிவாகிறது. ஆண்களும் பெண்களும் அடங்கிய நிராயுதபாணிகளான ஒரு கூட்டத்தை, விடுமுறை கொண்டாட வந்த கும்பலைப் 'புரட்சிப் பட்டாளம்' என்கிறார். சுற்றிலும் மதில் உள்ள ஓர் இடத்திற்குள் அகப்பட்டுக்கொண்ட மக்களை முயல்களைப் போல் சுட்டுக் கொன்றதன் மூலம் தாம் பாஞ்சாலத்தைக் காத்த வீரனாகிவிட்டதாகவும் நம்புகிறார். இத்தகையவர் ஒரு சிப்பாயாகக் கருதுவதற்கும் தகுதியற்றவர். அவர் செய்கையில் வீரம் எதுவுமே இல்லை. ஒரு சிறு எதிர்ப்பும் இல்லாமல் இருந்தும் எச்சரிக்கைகூடச் செய்யாமல் சுட்டிருக்கிறார். 'முடிவு செய்ததில் தவறு' அல்ல இது. ஆபத்து என்று வீணை எண்ணிக்கொண்டதால் ஏற்பட்ட மருட்சியின் விளைவு. இது தகுதியின்மைக் கொடுங்குற்றத்திற்கும், இரக்கமற்ற தன்மைக்கும் நிரூபணம். ஆனால், ஜெனரல் டயர் மீது காட்டப்பட்ட ஆத்திரம் தவறான இடத்தில் பாய்ந்ததாகும் எனக் கருதுகிறேன். சுட்டது 'பயங்கரமானது', ஒரு பாவமுமறியாதவர்கள் மடிந்தது விசனிக்கத்தக்கது என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால், அதைத் தொடர்ந்து நடந்த விவேகமில்லாத சித்திரவதை, செய்யப்பட்ட அவமானங்கள், கொடுமைகளோ இன்னும் படுமோசமானவை; வேண்டுமென்றே சிந்தித்துச் செய்யப்பட்டவை; மானக்கேடானவை; ஆத்மாவைக் கொல்லுபவை; இக்

கருத்தை ஒப்புக்கொள்ளும்படி செய்வது தற்சமயம் என்னால் முடியாமல் இருப்பதைக் குறித்து நான் கவலைப்படவில்லை. கோபங்கொள்வதற்கோ பழி வாங்குவதற்கோ முடியாத வகையில் நசுக்கப்பட்டிருக்கிறோம் என்று நாம் உணருகிறோம். ஆனால், தண்டிப்பதில் தனக்குள்ள உரிமையை விட்டுக் கொடுப்பதால் இந்தியா வெகுவாய் நன்மையை அடைய முடியும் என்பதை நான் கூறாமல் இருப்பதற்கில்லை.

நான் வெறும் கற்பனை காண்பவன் அல்ல. நான் யதார்த்தமானதோர் லட்சியவாதியே. அகிம்சா தருமம் ரிஷிகளுக்கும் யோகிகளுக்கும் மாத்திரம் ஏற்பட்டதன்று; பொது மக்களுக்கும் வேண்டியதே அது. மிருக இனத்திற்குப் பலாத்காரம் எப்படி ஒரு நியதியோ அப்படியே நம் இனத்திற்கு அகிம்சை ஒரு நியதி. மிருகத்தினிடம் ஆத்ம உணர்ச்சி உறங்கிக் கிடக்கிறது. ஆகவே, உடல் பலம் ஒன்றைத் தவிர அதற்கு வேறு எதுவும் சரியெனத் தெரியாது. ஆனால், உயர்ந்த தர்மத்திற்கு, அதாவது ஆத்ம உணர்ச்சியின் பலத்திற்குப் பணிய வேண்டியது மனிதரின் உயர்ந்த பண்பிற்கு அவசியமாகிறது.

இதனாலேயே, தன்னலத் தியாகம் என்ற தொன்மையான தருமத்தை இந்தியாவுக்கு எடுத்துக் காட்ட நான் துணிந்தேன். ஏனெனில், சத்தியாக்கிரகமும், அதிலிருந்து கிளைத்தெழும் ஒத்துழையாமையும் சட்ட மறுப்பும், இந்தச் சகிப்புத் தருமத்தின் புதுப் பெயர்களேயன்றி வேறல்ல. பலாத்காரத்

---

காரியங்களைச் செய்தவர்கள், ஜாலியன்வாலாபாக் படுகொலைக்கு ஜெனரல் டயருக்குக் கொடுக்கப்பட்டதைவிட அதிகமான தண்டனையை அடைய வேண்டியவர்கள். டயர் சில உயிர்களையே அழித்தார். ஆனால், மற்றவர்களோ நாட்டு மக்களின் ஆத்மாவையே கொன்றுவிட முயன்றிருக்கிறார்கள். மற்றவர்களையெல்லாம்விட மிக மோசமான குற்றவாளியான கர்னல் பிராங்க் ஜான்ஸனைப்பற்றி யார் பேசுகிறார்கள்? குற்றமற்ற லாகூரைக் கொடுமையால் அவர் நடுங்கச் செய்தார். இரக்கமற்ற தம்முடைய உத்தரவுகளினால், ராணுவச் சட்ட அதிகாரிகள் எல்லோருமே அவ்விதம் செய்யும்படி செய்தார். என் கவலையெல்லாம் கர்னல் ஜான்ஸனைப் பற்றிக்கூட அல்ல. கர்னல் ஒபிரியன், ஸ்ரீ பாஸ்வொர்த் ஸ்மித், ராய் ஸ்ரீராம், ஸ்ரீ மாலிக்கான் ஆகியவர்களை உத்தியோகத்திலிருந்து ஒழிக்க வேண்டியது பஞ்சாப் மக்களின், இந்திய மக்களின் முதல் வேலை. ஜெனரல் டயரின் குற்றத்தைப் போன்றே இவர்களுடைய குற்றங்களும் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. ஜெனரல் டயர் மீது தெரிவிக்கப்பட்டிருக்கும் கண்டனம் ஒரு திருப்தி எண்ணத்தை நமக்கு உண்டாக்கிவிட்டது. பஞ்சாப் நிர்வாகத்திலிருந்து தீயவர்களை ஒழிக்காவிட்டால் நாம் நமது கடமையில் தவறியவர்களாவோம். நம்மைப் பொறுத்தவரை நாம் முன்னேறி, மக்களின் டிரஸ்டிகளும் சேவகர்களுமேயன்றி மக்களின் எஜமானர்களாக அதிகாரிகள் தம்மை நினைத்துக்கொண்டிருக்க முடியாது என்ற எண்ணத்தை அவர்களுக்கு உண்டாக்கவேண்டும். வேறாக நடந்து, தங்களிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கும் பொறுப்புக்குத் தகுதியற்றவர்களாகிவிட்டால் உத்தியோகத்தில் இருந்துவிட முடியாது என்றும் அவர்கள் எண்ணும்படி செய்ய வேண்டுமானால் நம்மளவில் நாம் கடுமையான நடவடிக்கை எடுத்தாக வேண்டும்.''

தின் நடுவே அகிம்சா தருமத்தைக் கண்டுபிடித்த ரிஷிகள், [1]நியூடனையும்விடச் சிறந்த அறிவாளிகள். இவர்களே [2]வெல்லிங் டனையும்விடச் சிறந்த போர்வீரர்கள். ஆயுதங்களின் உப யோகத்தை இவர்கள் அறிந்திருந்ததனாலேயே அவை பயனற் றவை என்பதையும் தெரிந்துகொண்டார்கள். அகிம்சையின் மூலமாகத்தான் விமோசனம் அடைய முடியுமேயன்றிப் பலாத் காரத்தினால் அல்ல என்பதை அலுப்புற்ற உலகத்திற்கு அவர் கள் உபதேசித்தார்கள்.

இயங்கும் நிலையில் அகிம்சை என்பது மனமாரக் கஷ்டங்களுக்கு உட்படுவதென்ற பொருளுடையதாகும். தீமை செய்பவனின் விருப்பத்திற்குத் தாழ்ந்து பணிந்து போவதென்று அர்த்தமல்ல; கொடியவனின் சக்திக்கு எதிராக ஒருவ ருடைய முழு ஆத்ம பலத்தையும் நிறுத்தவேண்டும் என்பதே பொருள். நமக்குரியதான இந்தத் தருமத்தைக் கடைப்பிடித்து நடப்பதாயிருந்தால், தம்முடைய மானத்தையும், தம் மதம், தம் ஆத்மா இவற்றையும் காத்துக்கொள்ள, நீதி தவறிய ஏகாதி பத்தியத்தின் முழுப் பலத்தையும் தனிப்பட்ட எவரும் எதிர்த்து நிற்க முடியும். அதோடு, அந்த ஏகாதிபத்தியத்தின் வீழ்ச்சிக்கோ மாறுதலுக்கோ அடிகோலி விடவும் முடியும்.

ஆகையால், இந்தியா பலமற்று இருப்பதனால் அகிம்சை யைக் கைக்கொள்ள வேண்டும் என்று நான் வாதாட வரவில்லை. தனது சக்தியையும் பலத்தையும் உணர்ந்துகொண்டு அகிம் சையை இந்தியா மேற்கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன். தனது பலத்தைப் பெறுவதற்கு இந்தியா எந்தவித ஆயுதப் பயிற்சிக்கும் உட்பட வேண்டியதில்லை. நாம் வெறும் மாமிச பிண்டங்கள் என்ற நினைப்பு வருவதனாலேயே நமக்கு ஆயுதப்

---

1. நியூடன், ஸர் ஐஸக் (1642 - 1727) - புகழ்பெற்ற ஆங்கில விஞ்ஞானியும் கணித மேதையுமான இவர் வானநூல் பற்றிய ஆராய்ச்சியில் பூமியின் ஆகர்ஷண சக்தியை 1666-இல் நிரூபித்தார். அதற்கு முன் ஒளியில் தென்படும் நிறபேதங் களைக் கண்டுபிடித்தார். நியூடன் வுல்ஸ்தார்ப் என்ற கிராமத்தில் தம் உறவின ருடன் தங்கி இருந்தபோது ஆப்பிள் மரத்திலிருந்து விழுந்த ஓர் ஆப்பிள் கனி இவரை ஆகர்ஷண சக்தியை ஆராயத் தூண்டியது.

2 ஆர்தர் வெல்லஸ்லி வெல்லிங்டன் (1769-1852) - பத்தொன்பதாம் நூற்றுண்டில் மிகப் பிரபலமாயிருந்த பிரிட்டிஷ் தளபதி. இந்தியாவிலிருந்து தீபகற்ப யுத்தத்தை வெற்றிகரமாக நடத்தினர். 1814-இல் இவர் பாரிஸில் பிரிட்டிஷ் ஸ்தானிகராயிருந் தார். பின்னர் எல்பாவிலிருந்து நெப்போலியன் போனபார்ட் ஓடிவிடவே இவர் துரிதமாகப் போர் நடத்தினர். வாடர்லூ யுத்தத்தில் நெப்போலியன் முடிவாகத் தோற்றுப் போனர். வெல்லிங்டன் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் மிகவும் முக்கியமான வராகிவிட்டார். 1828 முதல் இரண்டு ஆண்டுகள் பிரதம மந்திரியாக இருந்தார். 1842-இலிருந்து இறக்கும்வரை பிரிட்டிஷ் படைகளுக்குப் பிரதம தளபதியாக இருந்தார்.

பயிற்சி அவசியம் என்று தோன்றுகிறது. இந்தியாவின் ஆத்மா அழிவுறாதது. எந்த உடல் பலவீனத்தையும் சமாளித்தெழுந்து, உலகமே பலத்துடன் திரண்டு வந்தாலும் அதை எதிர்த்து நின்று வெற்றிபெற அதனால் முடியும் இதை இந்தியா உணர வேண்டும் என விரும்புகிறேன். ராமர் யார்? சாதாரணமான மனிதர். ஒரு குரங்குக் கூட்டமே அவருக்கு உதவியாக இருந்தது. இப்படிப்பட்டவர், நாற்புறமும் எறிகடல் சூழ்ந்ததும் பத்திரம் நிறைந்ததுமான இலங்கையில் பத்துத் தலையும் கொடிய வன்மையும் கொண்ட ராவணனை எதிர்த்து வென்றார் என்றால், உடல் வன்மையை ஆத்மபலம் வென்றது என்பதே அதன் பொருளல்லவா? என்றாலும், நான் செயலில் கருத்துள்ளவனாதலால், ராஜீய உலகத்தில் ஆத்மிக வாழ்க்கையின் சாத்தியத்தை இந்தியா அறிந்துகொள்ளும் வரையில் காத்துக்கொண்டிருக்க விரும்பவில்லை. ஆங்கிலேயரின் விமானங்கள், யந்திரத் துப்பாக்கிகள், டாங்கிகள் ஆகியவைகளுக்கு முன்பு, தான் வலிவற்று விலவிலத்துப் போயிருப்பதாகவும், இந்தப் பலவீனத்தின் காரணமாகவே ஒத்துழையாமையை மேற்கொள்வதாகவும் இந்தியா நினைக்கிறது. அப்படியானாலும் அதன் நோக்கம் கைகூடுகிறது. மக்களில் சிலர் இதை நடைமுறையில் பின்பற்றுவார்களானால், நசுக்கி வரும் பிரிட்டிஷ் அநீதியின் பளுவிலிருந்து இந்தியா விடுதலை பெறுவது எளிதாகும்.

இந்த ஒத்துழையாமையைச் [1]சீன் பீனியத்திலிருந்து தனியாக ஒதுக்கிவைக்கிறேன். ஏனெனில், பலாத்காரத்தையும்

---

1. *சீன் பீன்* என்பது அயர்லாந்தின் விடுதலைக்காகப் போராடிய ஒரு ஸ்தாபனம். ஐரிஷ் குடியரசுக் கட்சியை இது ஆதரித்து வந்தது. பலாத்கார நடவடிக்கைகளில் ஈடுபட்டு வந்த இந்த இயக்கம் 1937-இல் அயர்லாந்து பூரண விடுதலை அடைந்தவரையில் இருந்து வந்தது. 1152-ஆம் ஆண்டு முதல் ஆங்கிலேயரின் ஆதிக்கம் அயர்லாந்தில் வளர ஆரம்பித்தது. அது முதலே அயர்லாந்து மக்களும் ஆங்கிலேய ஆட்சியை எதிர்த்து வந்தார்கள். இங்கிலாந்தில் பிராட்டஸ்டண்டு கிறிஸ்தவ மதம் ஆரம்பமானதும் ரோமன் கத்தோலிக்கராயிருந்த ஐரிஷ் மக்களின் எதிர்ப்பு ஆங்கிலேயருக்கு அதிகமாயிற்று. கிராம்வெல், இப்பொழுது வடக்கு அயர்லாந்து எனக் கூறப்படும் பகுதியையெல்லாம் காலி செய்து, அங்கே பிராட்டஸ்டண்டு ஆங்கிலேயரையும் ஸ்காட்லாந்தினரையும் குடிபுகுத்த உத்தரவிட்டார். பிறகு ஆங்கிலேயரே அங்கு நிலப்பிரபுக்களாகிவிட்டனர். இதனால் பிழைக்க வழியற்றுப்போன ஏராளமான ஐரிஷ் விவசாயிகள், 19-ஆம் நூற்றாண்டில் அமெரிக்காவுக்குச் சென்று குடியேறினர். அயர்லாந்தின் மொத்த நில வருமானத்தில் பாதி, இங்கிலாந்தில் இருந்த நிலப்பிரபுக்களுக்கு அப்பொழுது போய்க்கொண்டிருந்தது. பின்னர் லிபரல் கட்சியினரான கிளாட்ஸ்டன், 1884-இலும் 1893-இலும் அயர்லாந்துக்குக் குடியரசு வழங்கச் சட்டம் செய்ய முயன்றும் முடியவில்லை. 1914-இல் முடிவாகக் குடியரசுச் சட்டம் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் நிறைவேறியது. ஆனால், முதல் உலக யுத்தம் காரணமாக அச்சட்டம் அமலுக்கு வரவில்லை. தெற்கு அயர்லாந்தின் தேசீயவாதிகளைக் கொண்ட *சீன் பீன்* இயக்கத்தினர்

கூடவே உபயோகித்துக்கொள்ள முடியாத வகையில் ஒத்துழை யாமை உருவாக்கப்பட்டிருக்கிறது. ஆனால், சமாதானத்தோடு கூடிய ஒத்துழையாமையைப் பரீட்சை செய்து பார்க்குமாறு பலாத்காரத்தில் நம்பிக்கை வைத்திருப்போரையும் நான் அழைக்கிறேன். இதற்கு இயல்பான பலவீனம் காரணமாக அது தோல்வியுறுது. ஆனால், இதை அனுசரிக்க முன் வரு வோர் பலர் இராத குறையினால் இது தோல்வியுறலாம். அப்பொழுதுதான் உண்மையில் ஆபத்தான சமயம். உயர்ந்த எண்ணமுள்ளவர்கள், தேசீய அவமதிப்புக்கு உள்ளாவதை மேலும் மேலும் சகித்துக்கொண்டிருக்க முடியாததனால், தங் கள் ஆத்திரத்தை வெளிப்படுத்தத்தான் விரும்புவார்கள். அவர்கள் பலாத்காரச் செயல்களிலும் ஈடுபடுவார்கள். ஆனால், எனக்குத் தெரிந்த அளவில் அவர்கள் தங்களையோ அல்லது நாட்டையோ அநீதங்களிலிருந்து விடுவிக்காமல் அழிந்தே போவார்கள். ஆயுத பலமே சிறந்தது என்ற கொள்கையை இந்தியா பின்பற்றுவதாயின் அது தாற்காலிகமான வெற்றி யைத்தான் காணும். அந்த இந்தியா, நான் உள்ளூறப் பெரு மைப்படும் இந்தியாவாக இருக்காது. எல்லாவற்றிற்கும் நான் இந்தியாவுக்குக் கடமைப்பட்டிருப்பதே அதனுடன் என் பிணைப்புக்குக் காரணம். உலகத்திற்கு இந்தியா வழிகாட்ட வேண்டியிருக்கிறது என்று நான் முற்றிலும் நம்புகிறேன். கண்மூடித்தனமாக அது ஐரோப்பாவைப் பின்பற்றக்கூடாது. இந்தியா என்றைக்கு வாளின் தத்துவத்தை ஏற்றுக்கொண்டு விடுகிறதோ அதுவே எனக்குச் சோதனைக் காலம் ஆகிவிடும். இந்தக் காலம் வரும்போது நான் திறமையற்றவன் ஆகிவிடமாட் டேன் என்றே நம்புகிறேன். என் தருமத்திற்கு எல்லைக்கோடு எதுவுமே கிடையாது. அதில் எனக்கு உறுதியான பற்று இருக்குமானால், இந்தியாவின்மீது நான் கொண்டிருக்கும் அன்பையும் அது மீறிச் சென்றுவிடும். அகிம்சையே ஹிந்து மதத் தின் ஆணிவேர் என்று நான் நம்புகிறேன். இந்த அகிம்சை

---

ஜெர்மானியருடன் ஒத்துழைத்து 1916-இல் டப்ளினில் ஈஸ்டர் புரட்சியை ஏற்பாடு செய்தனர். இதை அடுத்து பலர் தூக்கில் மாண்டனர்; அடக்குமுறையும் கடுமை யாயிற்று. முதல் உலக யுத்தத்திற்குப் பிறகு பிரிட்டிஷார், வடக்கு அயர்லாந்து தெற்கு அயர்லாந்து என்று இரண்டாக அயர்லாந்தைப் பிரித்தனர். இதைச் *சீன் பீனர்கள்* பலாத்காரத்தைக்கொண்டு எதிர்த்தனர். இவர்களை அடக்குவதற்கு என்று பிளாக்-அண்டு-டான்ஸ் என்ற ஒரு விசேடப் போலீஸ் படையும் அமர்த்தப்பட்டது. இரு தரப்பிலும் அட்டூழியங்கள் பல நடந்தன. *சீன் பீனர்கள்*, பிரிட்டிஷாரையே யன்றித் தங்களிடம் அனுதாபங்கொள்ளாத ஐரிஷ் மக்களையும் தாக்கினர். பிறகு, 1922-இல் அந்நாடு ஐரிஷ் சுதந்திர டொமினியன் நாடாயிற்று. 1937-இல் பொது ஜன வாக்கெடுப்பின் மூலம் அயர் என்ற பெயருடன் தெற்கு அயர்லாந்து பூரண சுதந்திர நாடான வரையில் *சீன் பீன்* இயக்கம் அங்கு இருந்து வந்தது.

மதத்தின் மூலம் இந்தியாவின் சேவைக்கு என் வாழ்க்கையை அர்ப்பணம் செய்துவிட்டேன்.

—எங் இந்தியா. 11-1-1920

# 5
# இயற்கை எது ?

'இயற்கையானது' என்ற சொல்லைவிட அதிகமாகத் தப்பர்த்தம் செய்துகொள்ளப்படும் சொல் வேறு இருப்பதாகத் தெரியவில்லை. உதாரணமாக ஒருவர், 'மனிதனுக்குத் தின்பதும் குடிப்பதும் எப்படி இயற்கையானவையோ அதே மாதிரியே கோபமும்' என்று எழுதுகிறார். இன்னும் ஒருவர் பின் வருமாறு விவாதிக்கிறார்:

"உடலின் மற்றச் செயல்களைப் போலவே ஆண், பெண் சேர்க்கைச் செயல்களும் இயற்கையானவை. அப்படி இல்லாதிருக்குமானல் கடவுள் மனிதனுக்கு அதை அளித்திருக்கமாட்டார். கெட்டவர்களைக் கண்டித்து நல்லவர்களை வாழ்த்துவது நம் கடமையல்ல என்றால், கண்டிக்கவும் வாழ்த்தவும் நமக்கு ஆற்றல் அளிக்கப்பட்டிருப்பானேன்? நம் ஆற்றல்கள் பரிபூரணத்துவத்தை அடையும் வரையில் அவைகளை வளர்த்துக்கொள்ள வேண்டியது நம் கடமையல்லவா? ஆகையால், அகிம்சையைப் போலவே ஹிம்சையும் ஒருவருடைய தருமமாகவே தோன்றுகிறது. சுருங்கச் சொன்னல், நல்லொழுக்கம் தீயொழுக்கம் என்பன எல்லாம் நம் கற்பனையின் பொய்க் கதை. உங்களுடைய அகிம்சை, நமது சுபாவத்தின் ஒரு பகுதியை மாத்திரம் எடுத்துக் காட்டுவதாக இருப்பதால், அது பலவீனத்தின் அறிகுறி. இதை உயர்ந்த தருமம் என்று எண்ணுவதற்குப் பதிலாக உயர்ந்த அதர்மம் என்று ஏன் எண்ணலாகாது? 'அஹிம்ஸா பரமோ தர்ம:' என்பது அசல் வடிவத்தில் 'அஹிம்ஸா பரமோ அதர்ம:' என்று இருக்க வேண்டும். எதிர் மறைக்குள்ள 'அ' எப்படியோ விடப்பட்டிருக்க வேண்டும் அல்லது மனித வர்க்கத்தின் எதிரி ஒருவனல் அழிக்கப்பட்டிருக்கவேண்டும். ஏனெனில், அநேக விஷயங்களில் அகிம்சை உயர்ந்த அதர்மம் என்பதை எடுத்துக் காட்ட முடியும்."

இது ஒருவருடைய வாதம் மாத்திரம் அல்ல; பலருடைய வாதங்களையெல்லாம் சேர்த்து சுருக்கிக் கொடுத்திருக்கிறேன். அகிம்சையிலுள்ள 'அ' என்ற எழுத்து விடப்பட்டிருக்க வேண்டும் என்ற வாதத்தைக் கண்டுபிடித்தவர் ஒரு பழைய பாரிஸ்டர் நண்பர். உண்மை என்று நம்பியே அப்படிச் செய்திருக்கிறார். மிருகம் என்ற வகையில் மனிதனையும் நாம் வைத்திருந்தால் 'இயற்கையானது' என்ற விளக்கத்தின் தலைப்பில் பல விஷயங்கள் வருவதாக நிரூபித்துவிடலாம். ஆனல், மனிதனும் மிருகமும் வெவ்வேறு இனத்தைச் சேர்ந்த படைப்பாக இருந்தால், மிருகத்திற்கு இயற்கையானது எல்லாம் மனிதனுக்கும் இயற்கையானதாக இருப்பதற்கில்லை! மனிதனுக்கு இருக்கும் தனித்தன்மை, அபிவிருத்தி. இது மனிதனுக்கு மாத்

திரமே உண்டேயல்லாமல் மிருகங்களுக்கு அல்ல. மனிதனுக்குப் பகுத்தறிவும் சிந்திப்பதும் இருக்கின்றன. மிருகங்களைப் போல உணவினால் மாத்திரம் மனிதன் வாழ்வதில்லை. மனிதன், கடவுளை வழிபடவும் அவரை அறியவும் தனது சிந்தனையை உபயோகிக்கிறான். அந்த ஞானத்தைப் பெறுவதையே வாழ்க்கையின் இறுதி லட்சியமாகவும் கருதுகிறான். மிருகமும் கடவுளை வழிபடுகிறது என்று சொல்லலாம் என்றால், அதைப்பற்றி எண்ணாமலேயே அது அப்படிச் செய்கிறது. கடவுளை வழிபடும் ஆர்வம் மிருகத்தினிடம் இருக்கிறது என்பது எண்ண முடியாதது. ஆனால், மனிதனோ தானே விரும்பிச் சைத்தானையும் வழிபடலாம். ஆகையால், கடவுளை அறிவதும் காண்பதுமே மனிதனின் இயற்கையாக இருக்க வேண்டும்; இயற்கையாகவும் இருக்கிறது. அவன் சைத்தானை வழிபடும்போது, தன்னுடைய இயற்கைக்கு மாறாக நடக்கிறான். என்றாலும், மனிதனுக்கும் மிருகத்திற்கும் வித்தியாசமே கிடையாது என்போருக்கு இதிலெல்லாம் நம்பிக்கை ஏற்படாது. அவருக்கு நல்லொழுக்கமும் தீய ஒழுக்கமும் உசிதம் போல் மாற்றிக்கொள்ளக்கூடியவை. ஆனால், கடவுளை அறிவதே லட்சியமாகவும் முடிவாகவும் இருக்கும் மனிதனுக்கு, உண்பதும் அருந்துவதுமாகிய செயல்கள்கூட ஓர் எல்லைக்குட்பட்ட இயற்கையாகவே இருக்க முடியும். கடவுளை அறிவதையே முடிவான லட்சியமாகக் கொண்டவன், தின்பதும் குடிப்பதும் உடலை வைத்திருப்பதற்கென்று இருக்க முடியுமேயல்லாமல் இன்பத்தை நுகர்வதற்கென்று இருக்க முடியாது. ஆகையால், கட்டுத்திட்டமும் துறவுமே இச்செயல்களிலும் அவனுடைய குறிக்கோளாக இருக்கும்.

கடவுளை அறிவதும் அடைவதுமே மனிதனின் இயற்கையான சுபாவம் என்றால், சிற்றின்ப நுகர்ச்சிகளில் ஈடுபடுவது அவனுடைய சுபாவத்திற்கு மாறானதாவதோடு பூரணத் துறவே அவன் மேற்கொண்ட காரியத்திற்கு உகந்ததுமாகிறது. ஏனெனில், சிற்றின்ப வேட்கையை அடியோடு துறந்தாலன்றிக் கடவுளை அறிவது என்பது சாத்தியம் அல்ல. தன்னுடைய ஆற்றல்கள் அனைத்தையுமே நிறைவாக வளர்த்துக்கொள்ள வேண்டியது மனிதனின் கடமை அன்று. அவனுடைய கடமை முழுவதும், கடவுள் பாலான ஆற்றல்களையெல்லாம் நிறைவாக வளர்த்துக்கொண்டு அந்நோக்கத்திற்கு எதிரானவைகளையெல்லாம் அடக்குவதேயாகும்.

தேர்ந்தெடுத்துக்கொள்ளவோ அல்லது இஷ்டம் போல் ஏற்றுக்கொள்ளவோ நிராகரித்துவிடவோ ஆற்றலுள்ளவர்கள்,

நன்மைக்கும் தீமைக்கும், நல்லொழுக்கத்திற்கும் தீய செயல்களுக்குமுள்ள பேதங்களைக் காணுதிருக்க முடியாது. ஏற்கத் தக்கவைகளும் உண்டு, ஏற்கத் தகாதனவும் உண்டு என்பதே அதன் பொருள். இவ்விதம் இன்னொருவனின் பொருளைத் திருடுவதென்பது ஏற்கத் தகாதது. எனவே, அது தீயது அல்லது பாபகரமானது. நம் உள்ளத்தில் நல்லாசைகளும் உண்டு, தீய ஆசைகளும் உண்டு. நல்லாசைகளை வளர்த்து, தீய ஆசைகளை அடக்கி அல்லது அழித்துவிட வேண்டியது நமது கடமை. இதில் நாம் தவறிவிடுவோமாயின் மனிதராகப் பிறந்தும் மிருகங்களாகவே இருப்போம். இதனுலேயே மானிடராய்ப் பிறத்தல் அரிது, அது கிடைத்தற்கரிய ஒரு பாக்கியம் என்று எல்லா மதங்களும் சாற்றுகின்றன. அது மனிதன் தன்னைச் சோதித்துக்கொள்ளும் ஒரு நிலை. சீர்தூக்கிப் பார்த்து நாம் தகுதியற்றவர்கள் என்று ஏற்பட்டால் நாம் திரும்பவும் மிருகங்களாகப் பிறக்க வேண்டி வரும் என்று ஹிந்து தருமம் கூறுகிறது.

ஹிம்சையே நிறைந்தது உலகம்; இயற்கை ரத்த வெறி கொண்டதாக இருக்கிறது. ஆனுல், மிருகங்களிலும் உயர்ந்தவன் மனிதன் என்பதை மனத்தில் கொள்ளுவோமாயின் அந்த இயற்கைக்கு உயர்ந்தவனே மனிதன். மனிதன் நிறைவேற்றியாகவேண்டிய தெய்விகக் கடமை ஒன்று இருக்குமானுல், அவனுக்கு உகந்த காரியம் எது எனின், அகிம்சையைப்பற்றிய கடமையே அது. ஹிம்சையின் நடுவிலேயே மனிதன் இருந்துவருவதால் அவன் விலகித் தன்னுடைய உள்ளத்தின் முழு ஆழத்திற்கும் சென்று, தன்னைச் சுற்றிலுமுள்ள ஹிம்சை நிறைந்த இவ்வுலகத்திற்குத் தன்னுடைய கடமை அகிம்சையே என்று எடுத்துரைக்கலாம். அந்த அளவுக்கு அவன் அகிம்சையை அனுசரிப்பதால் தன் வர்க்கத்திற்கு அணி செய்தவனுகிருன். அப்பொழுது மனிதனின் சுபாவம் அகிம்சையேயன்றி ஹிம்சையல்ல. ஏனெனில், தான் ஆத்மாவேயன்றி உடல் அல்ல என்பதையும், தன்னைத்தானே அறிவதற்காக ஆத்மாவைத் தெளிவுபடுத்தவே தான் உடலை உபயோகிக்க முடியும் என்றும், தன்னுடைய ஆழ்ந்த நம்பிக்கையை அனுபவத்தைக்கொண்டு அப்பொழுது அவன் கூறலாம். இந்த அனுபவத்தைக்கொண்டு ஆசை, கோபம், அறியாமை, துவேஷம் முதலிய பாசங்களையெல்லாம் அடக்கும் நீதிமுறைகளையும் உருவாக்கிக்கொண்டு லட்சியத்தை அடைய முழு முயற்சியையும் செய்து முடிவில் வெற்றியையும் காண்கிருன். மனிதனுடைய முயற்சி அந்த

நிறைவை அடையும்போதுதான் அவன் தன்னை நிறைவாக்கிக் கொண்டதாகவும், தனது இயல்பையொட்டி நடந்ததாகவும் ஆகிறான். ஆகையால், ஆசாபாசங்களை அடக்கிக்கொள்வது மனிதனால் ஆகக்கூடியதேயன்றி மனிதனின் சக்திக்கு மீறியதல்ல. அகிம்சையை மேற்கொள்வது உயர்வகையான வீரம். அதில் கோழைத்தனத்திற்கோ பலவீனத்திற்கோ இடம் கிடையாது.

—எங் இந்தியா - 24—6—1926

# 6

# “மனிதத்தன்மையைவிட அதிக மிருகத்தன்மை”

‘இயற்கையானது எது?’ என்ற தலைப்பில் 24-ஆம் தேதி நான் எழுதிய கட்டுரையைக் குறிப்பிட்டு ஒரு வைத்திய நிருபர் வருமாறு எழுதுகிறார்:

“கூட்டமாக இருக்கும்போது மாத்திரமே மனிதனின் பலாத்கார உணர்ச்சி தலைகாட்டுகிறது. அத்தகைய சந்தர்ப்பங்களில் உடல் பலத்தை உபயோகிப்பதைத் தடுப்பது முற்றிலும் அசாத்தியமானதாகும். அத்தகைய பலாத்காரம் ஏற்படாதபடி செய்வது விரும்பத் தக்கதாகுமா என்றுகூட ஆச்சரியப்படுகிறேன். அப்படிச் செய்வது மனிதனுடைய சுபாவத்திற்கே முற்றிலும் விரோதமானதாகும். மனிதன் முதலில் மிருகம்; தனித் தன்மையுடையவனாவது அதன் பிறகே. ஆஸ்டிரேலியக் காட்டுமிராண்டியின் மூதாதையையும் அவனுடைய காலத்தையும் கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள். அப்பொழுது கலை இல்லை, இலக்கியம் இல்லை, விஞ்ஞானம் இல்லை. வெறும் வேட்டைக்காரனாகவே மனிதன் இருந்தான். உடன் இருப்போருடன் வெறும் சமிக்ஞையினாலேயே தன் கருத்தைத் தெரிவித்து வந்தான். நம் ஒழுக்கக் கோட்பாடுகளெல்லாம் வெறும் மெல்லிய மேல் பூச்சுகள்; மிருக உணர்ச்சி நம் உள்ளுக்குள் இன்னும் இருந்துகொண்டே வருகிறது. கடவுளை அறிவதும் காண்பதுமோ அல்லது அவனை வழிபட்டுக்கொண்டிருப்பதுமோ மனிதனின் இயற்கையன்று. இயற்கையாக வளர்க்கப்பட்ட ஒருவருக்கு – பாரபட்சமற்ற, மதச்சார்பற்ற சூழ்நிலையில் படித்தவருக்கு – ஆண்டவனை வழிபடுவது என்ற கருத்தே இயற்கைக்கு மாறானதாக இருக்கும். உலகத்திலுள்ள கோடிக்கணக்கான படித்த வயது வந்தவர்கள், மாதா கோவிலுக்கோ, மசூதிக்கோ, கோவிலுக்கோ போவதில்லை. கடவுள் வழிபாடு என்பது நம்மை வந்து அடையும் ஒரு பழக்கம். புண்ணியம், பாவம் பற்றிய பிரச்னைக்கும் கடவுளுக்கும் சம்பந்தமே இல்லை. சேர்ந்து வாழ்வதன் தேவைகளையொட்டி ஒழுக்கம் பிறக்கிறது. இதில் எது சரி, எது தவறு என்பது மனிதனின் சமூகத் தேவையைப் பொறுத்ததேயன்றித் தெய்வ சித்தத்திற்குட்பட்டதல்ல. கடவுள் உருவாகச் செய்யப்பட்டிருப்பவன் அல்ல மனிதன்; கடவுளே மனிதன் உருவாகச் செய்யப்பட்டிருக்கிறார். மனிதக் குரங்கே உங்கள் புராதன உறவினன் என்று நீங்கள் கருதினால், உங்களுடைய ஒழுக்கம் – கோட்பாடு – தன்மையில் குன்றிவிடாது. உண்பதும் குடிப்பதும், சிற்றின்ப நுகர்ச்சியும் மனிதனுக்கு முற்றிலும் இயற்கையானவை. இவற்றிற்கு எல்லைகளும் உண்டுதான். ஆனால், இவை முற்றிலும்

உடற் கூற்றைப் பற்றியவை. இவற்றில் ஒரு பகுதி வழக்கத்தால் வந்தது. சிற்றின்ப உணர்ச்சியையே முற்றிலும் துறந்துவிட வேண்டும் என்ற இந்தச் சித்தாந்தத்தை நீங்கள் எப்படிப் பிரசாரஞ் செய்ய முடியும்? அதை அதிக அளவுக்கு அனுபவித்துவிட்டாலல்லாமல் அந்த வேட்கை முற்றும் குறைந்து விடும் என்ற நிலையை நாம் அடைவதே முடியாது என்று நீங்கள் நினைக்க வில்லையா? 'மனிதனுடைய இயற்கை அகிம்சையேயன்றி ஹிம்சை அல்ல' என்று நீங்கள் கூறுகிறீர்கள். ஆனால், பிரிட்டிஷ் சாமான்களைப் பகிஷ்காரம் செய்வதென்றே உங்கள் வேலைத் திட்டமே, அது வெற்றிகரமானதாகிவிடின், பிரிட்டிஷ் தொழிலாளருக்கு ஹிம்சை செய்வதாக முடியுமேயன்றி வேறு அல்ல. தடியால் ஒருவனை அடிப்பது எப்படிப் பலாத்காரமோ அதைப் போன்று ஒருவனைக் கட்டிப் போடுவதும் பலாத்காரமே. உங்களுடைய ஆத்மசக்தி அல்லது அன்பின் சக்தி, கற்பனைக் கதை. அகிம்சை, நாகரிகத்தின் கொள்கையே யன்றி மனிதனுடைய இயற்கையல்ல."

வைத்தியரின் இக்கடிதத்தை நான் மிகவும் சுருக்கி யிருக்கிறேன். அதை எழுதியதானதோர் உறுதி என்னைத் திகைப்புறச் செய்கிறது. என்றாலும், நீண்ட நாள் வைத்தியத் தொழிலில் இருப்பவராகத் தோன்றும் இவர் ஆங்கிலப் பட்டம் ஒன்றையும் பெற்றிருக்கிறார். படித்தவர் பலர் இவருடைய கருத்துடையவர்களே. தாம் சொல்லுவது சரி என்று நான் ஏற்றுக்கொள்ளும்படி அவர் செய்துவிடவில்லை என்பதை நான் ஒப்புக்கொள்ளவேண்டும். அவருடைய வாதங்களைக் கவனிப்போம். கூட்டமான மக்கள் அகிம்சையை அடையவே முடியாது என்கிறார். என்றாலும், மனிதவர்க்கத்தின் பொது வேலைகளைக் கூட்டமான மக்கள் சுபாவமாகவே ஒற்றுமையாக நாள்தோறும் செய்து வருவதைக் காண்கிறோம். அவர்களுடைய சுபாவமே பலாத்காரந்தான் என்றால், உலகம் வெகு சீக்கிரத்தில் முடிந்துவிடும். எந்தவிதப் போலீஸோ அல்லது பலவந்தமோ இல்லாமல் இயற்கையாகவே சமாதானத்தோடு இருந்து கொண்டிருக்கிறார்கள். பொது மக்களின் மனம், கெட்டவர்களால் இயற்கைக்கு விரோதமாகத் தூண்டிவிடப்படும்போதே, மனிதக் கூட்டம் பலாத்காரத்தில் இறங்குகிறது. ஆனால், எவ்வளவு சீக்கிரத்தில் செய்கிறார்களோ அவ்வளவு சீக்கிரமாக மறந்தும்விடுகிறார்கள். ஏனெனில், மனத்தை மாற்றிய கெட்ட தூண்டுதல் விலகியதும் உடனேயே இயற்கையான சமாதான சுபாவத்தை அடைந்துவிடுகின்றனர்.

ஓர் இனத்திற்கு இருக்கும் விசேட குணங்களைக்கொண்டே அந்த இனத்தை அறிய வேண்டும், பாகுபாடு படுத்த வேண்டும் என்று இதுவரையில் நாம் போதிக்கப்பட்டு வந்தோம்.

ஆகையால், ஒரு குதிரை முதலில் மிருகம், அதன் பிறகே குதிரை என்பது தவறு என்றே நான் கருதுகிறேன். மற்ற மிருகங்களுடன் குதிரைக்குச் சில ஒற்றுமைகளும் இருக்கின்றன. ஆனால், அது தன்னிடமிருக்கும் குதிரையின் தன்மையை விட்டு மிருகமாகவே இருந்துவிடத் துணிவதில்லை. குதிரை, தனக்குள்ள விசேட குணங்களையெல்லாம் இழந்துவிடுமாயின், அது தன்னுடைய பொதுவான நிலைமையையும் இழந்துவிடுகிறது. அதே போல மனிதன், மனிதன் என்ற முறையில் தனக்குள்ள இயல்பை இழந்துவிட்டு ஒரு வாலையும் வளர்த்துக்கொண்டு, கை கால் ஆகிய நான்கிலும் நடந்து, கையின் பயனையும் இழந்து, இவை எல்லாவற்றையும்விடத் தனது பகுத்தறிவை உபயோகிப்பதையும் இழந்துவிடுவானயின், மனிதன் என்ற வகையில் தனக்கிருந்த தகுதியையே அல்லாமல் மிருகம் என்ற முறையிலிருந்த தகுதியையும் இழந்துவிட மாட்டானா? எருதோ அல்லது கழுதையோ, செம்மறி ஆடோ அன்றி வெள்ளாடோ, அவனைத் தன் இனம் என்று கொள்ளாது. மனிதன், தன்னுடைய மனிதத் தன்மையையும் வைத்துக்கொண்டிருக்கும் வரையில்தான் அவனை மிருகமாகச் சேர்க்க முடியும் என்று வைத்திய நண்பருக்குக் கூறுவேன்.

ஆஸ்டிரேலியக் காட்டுமிராண்டிகளைக் குறித்து என்னிடம் குறிப்பிடுவதிலும் எந்த லாபமும் இல்லை. அந்த ஆஸ்டிரேலியக் காட்டுமிராண்டியுங்கூட அடிப்படையில் மிருகத்திலிருந்து மாறுபட்டவன். ஏனெனில், மிருகம் என்றுமே மிருகமாகத்தான் இருக்கமுடியும். ஆனால், காட்டுமிராண்டிக்கோ, மனிதன் அடையக்கூடிய முழு உயர்வுக்கும் தன்னை விருத்தி செய்து கொள்ளக்கூடிய ஆற்றல் இருக்கிறது. ஆஸ்டிரேலியக் காட்டுமிராண்டிக்கு நாம் போக வேண்டியதில்லை. நம் இந்திய மூதாதைகளுங்கூட ஒரு காலத்தில் ஆஸ்டிரேலியக் காட்டுமிராண்டிகளைப் போன்றே நல்ல, கண்ணியமான காட்டுமிராண்டிகளாகவே இருந்திருக்கிறார்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. நாகரிக நிலை என்று சொல்லப்படும் நம் நிலைமையில்கூட, காட்டுமிராண்டிகளுக்கும் நமக்கும் அதிக வித்தியாசம் இல்லை என்று இக்கடிதத்தை எழுதியிருப்பவர் கூறுவதை நான் முற்றிலும் ஆதரிக்கிறேன். ஆனால், நம் காட்டுமிராண்டி மூதாதைகளின் நாகரிகம் பெற்றுள்ள சந்ததியாரான நம்மை, யாராவது மிருக சிருஷ்டியிலிருந்து வேறாகக் கருதலாம் என்பதை அனுமதிக்க அவர் தயாராயிருக்கிறார்.

மிருகம் மிருகத்தனத்தோடு இருப்பது இயற்கை. இந்த அடைமொழி நமக்குப் பிரயோகிக்கப்படுமானல் அதை நாம் வெறுப்போம்.

'மனிதக் குரங்குக்கு வெகு தூர உறவினன்' என்று என்னை நான் எண்ணிக்கொள்ளக்கூடும் என்று சொன்னதற்குத் தம்மை மன்னிக்கும்படி நிருபர் கோருகிருர். உண்மை என்னவெனில், மனிதக் குரங்குக்கு மாத்திரம் அல்ல, குதிரைக்கும் ஆட்டுக்கும், சிங்கத்திற்கும் சிறுத்தைக்கும், பாம்புக்கும் தேளுக்குங்கூட உறவு கொண்டாட என்னுடைய கோட்பாடு அனுமதிப்பதோடு உறவுகொள்வதை அவசியமாக்குகிறது. என்னை ஆட்கொள்ளுவதும், ஒவ்வோர் ஆணையும் பெண்ணையும் ஆட்கொள்ளுவதுமான கடின நீதிமுறை, இந்தத் தவிர்க்க முடியாத கடமையை நமக்கு விதிக்கிறது. கடவுள் உருவாக மனிதன் ஒருவனே படைக்கப்பட்டு இருப்பதாலேயே அது அவ்விதம் நம்மீது சுமத்தப்பட்டிருக்கிறது. ஆயினும், அதனுடைய அந்தஸ்து அதற்கே உரியது. இதை உணர்ந்துகொண்டதுமே ஆட்டின்மீது தனக்குள்ள ஆதிக்கத்தைக் காட்ட ஆரம்பித்துவிடுகிறது. அதே போல நமக்குள்ள நிலையை நம்மில் சிலர் உணராததால் அந்த நிலைக்கான பலனை அடைவதில்லை என்பதைத் தவிர வேறு எதுவும் இல்லை. ஆனல், தன்னைச் சிங்கம் என்று எண்ணிக்கொண்டு திரியும் ஆடு, சிங்கத்தின் நிலையை என்றுமே அடைந்துவிட முடியாது. கடவுள் உருவில் மனிதன் படைக்கப்பட்டிருக்கிருன் என்று கூறுவதை நிரூபிப்பதற்கு, எல்லா மனிதருமே தங்களிடம் உள்ள அவ்வுருவை வெளிப்படுத்துகிருர்கள் என்பதைக் காட்டியாக வேண்டிய அவசியம் நிச்சயமாக இல்லை. மனிதரில் ஒருவராவது அப்படி வெளிப்படுத்தியிருக்கிருர் என்பதைக் காண்பிப்பதே போதும். மனித வர்க்கத்தின் பெரிய மதாசாரியர்கள் தங்களிடமே கடவுளுருவத்தைக் காட்டியிருக்கிருர்கள் என்பது மறுக்கப்படுமா ?

ஆனல், என்னுடைய நிருபரோ, கடவுளைக் கண்டு அறிவது மனிதனுக்கு இயற்கை என்பதையும் மறுப்பதோடு மனிதன் தன்னுருவிலேயே கடவுளைச் செய்கிருன் என்றும் கூறுகிருர். இதற்கு நான் சொல்லக்கூடியதெல்லாம், அந்த மார்க்கத்தில் சென்றவர்கள் இதுவரை காட்டியிருக்கும் சாட்சிகள் எல்லாம் திடுக்கிடவைக்கும் இக்கூற்றுக்கு முற்றிலும் விரோதமானவையாக இருக்கின்றன என்பதே. கடவுள் வழிபாடு, அது எவ்வளவுதான் நாகரிகமற்றதாக இருந்தாலும்,

அதுவே மனிதனுக்கும் மிருகத்துக்குமுள்ள வித்தியாசத்தைக் காட்டுகிறது என்பது மேலும் மேலும் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. அதிகப்படியானதாகவுள்ள இந்தக் குணம் ஒன்றே கடவுளின் படைப்பின்மீது பெருவாரியான ஆதிக்கத்தையும் மனிதனுக்கு அளிக்கிறது. படித்தவர்களில் கோடிக்கணக்கானவர்கள் மாதா கோயிலுக்கோ, மசூதிக்கோ, கோயிலுக்கோ போவதேயில்லை எனக் காட்டுவது முற்றிலும் பொருத்தமற்றது. கடவுளை வழிபடுவதற்கு அவ்விதம் போக வேண்டியது இயற்கையானதுமல்ல, இன்றியமையாததுமன்று. மரத்துக்கும், கல்லுக்கும் தங்கள் தலையை வணங்குகிறவர்களும், அவதாரங்களில் அல்லது பிசாசுகளில் நம்பிக்கை இருப்பவர்களும், தங்களுக்கும் மேம்பட்டதான சக்தி ஒன்று இருக்கிறது என்பதை ஒப்புக்கொள்ளுகிறார்கள். இத்தகைய வழிபாடு காட்டுமிராண்டித்தனமானது, நாகரிகமற்றது என்பது உண்மை. என்றாலும், இதுவும் கடவுள் வழிபாடுதான். கரடுமுரடான நிலையில் இருந்தாலும் கடவுள் தங்கமே. அறியாதவர்களும் தங்கமென மதிக்கும் ஒரு மாற்றை அது எதிர்பார்க்கிறது. இரும்பை எவ்வளவுதான் சுத்தி செய்தாலும் அது தங்கமாகாது. செம்மையான கடவுள் வழிபாடு மனிதனின் முயற்சியாலேயே என்பதில் சந்தேகம் இல்லை. ஆதாம்[1] எவ்வளவு பழமையானவரோ அவ்வளவு பழமையானது நாகரிகமற்ற வழிபாடும்; மேலான இயற்கையோடு கூடியதாயிராவிடினும் உண்பதையும் பருகுவதையும் போன்று இயல்பானது. மனிதன் பல நாட்கள் சாப்பிடாமலேயே இருந்துவிடக்கூடும். ஆனால், ஒரு நிமிடமேனும் பிரார்த்திக்காமல் அவன் வாழ்வதில்லை. உடலுக்கு ஈரல்கள் உண்டு என்பதையோ அல்லது ரத்த ஓட்டம் இருக்கிறது என்ற உண்மையையோ அறியாதவர்கள் ஒப்புக்கொள்வதில்லை. அதுபோல இதை மனிதனும் ஒப்புக்கொள்ளாதிருக்கக்கூடும்.

சிற்றின்ப சுகத்தை உண்பதோடும் குடிப்பதோடும் ஒன்றாகச் சேர்த்து இந்நிருபர் கூறுகிறார். என்னுடைய கட்டுரையை அவர் கவனமாகப் படித்திருப்பாராயின் அவர் எடுத்துக்காட்டியிருப்பதில் காணப்படும் கருத்துக் குழப்பத்தை அவர் தவிர்த்துக் கொண்டிருக்க முடியும். இன்பத்திற்காகவும் ருசிக்காகவும் உண்பது என்பது மனிதனின் இயற்கையல்ல என்றே நான் கூறினேன். அதையே திரும்பவும் கூறுகிறேன்.

1. கிறிஸ்தவ வேதப்படி கடவுள் படைத்த முதல் மனிதன் ஆதாம். அவன் ஆண். அவனுக்குத் துணையாக ஏவாள் என்ற முதல் பெண்ணையும் கடவுள் படைத்தார் என்று அந்த வேதம் கூறுகிறது.

ஆனால், உயிர் வாழ்வதற்கென்று உண்பது அவன் இயற்கை. சிற்றின்ப நுகர்ச்சியும் அதே போன்றதுதான். தன் திருப்திக்கு என்றல்லாமல் இன விருத்திக்காக அதில் ஈடுபடுவதே மனிதனின் இயற்கை.

சிற்றின்ப இச்சையை முற்றிலும் துறந்தாக வேண்டும் என்று என்னுடைய கடைசி நாள்வரை உபதேசித்து வருவேன் என்றே அஞ்சுகிறேன். "சிற்றின்ப் இச்சையைப் பூரணமாக நிறைவேற்றிக் கொள்வதன் மூலமே அன்றி இத்தகைய துறவு நிலையை எய்த முடியாது" என்று கூறும் முதல் வைத்தியர் இந்நிருபரே. வைத்திய நிபுணர்கள் இதற்கு நேர் மாறாக என்னிடம் கூறுகிறார்கள். அந்த இச்சையைப் பூரணமாக நிறைவேற்றிக்கொள்வது நாசகரமான தளர்ச்சியில்தான் முடியுமேயன்றித் துறவுநிலைக்கு கொண்டு விடுவதில்லை என்கிறார்கள். இச்சையை முற்றிலும் துறப்பதற்கு முயற்சி அவசியமாகிறது என்பதில் சந்தேகமில்லை. ஆனால், எந்தச் சிரமமும் அதற்குத் தகுமல்லவா? ஒலி அல்லது ஒளி, சூடு ஆகியவைகளின் தன்மையைக் கண்டுபிடிப்பதற்காக வாழ்நாள் முழுவதும் அர்ப்பணம் செய்யப்படலாம் என்றால், இவையெல்லாம் அறிந்துள்ள இவ்வுலகின் நன்மைக்கே உதவுகின்றனவெனின், தன்னை அறிவது அல்லது நிச்சயமான கடவுள் ஞானத்திற்குக் கொண்டு போகவல்லதான பூரணத் துறவை அடைவதற்கு அதே போன்ற முயற்சியைச் செய்வது அதிகப்படியாக எதிர்பார்ப்பதாகுமா?

துறவுப்பாதையில் சரியாகச் செல்பவருக்கு, மனிதனை ஆட்கொள்வது அகிம்சை (அன்பு) யேயன்றி ஹிம்சை (துவேஷம்) அன்று எனச் சொல்லவேண்டியதில்லை. உலகத்திற்கு என்று சொல்லக்கூட யத்தனித்தேன். என்னுடைய சொந்த ஹிம்சையைப்பற்றி நிரூபிப்பதற்கு நிருபர் காட்டியிருக்கும் உதாரணம், நான் எழுதியிருப்பவைகளைப்பற்றிய அவருடைய அறியாமையை வெளிப்படுத்துகிறது. அறியாமையைப்பற்றிக் கவலை இல்லை. ஏனெனில், 'எங் இந்தியா' வை யாரும் படிக்க வேண்டும் என்பது இல்லை. ஆனால், ஒருவருடைய கருத்தைக் குறித்துக் குறை சொல்ல முற்படும்போது, அக்கருத்து இன்னதென்பதையே அறியாதிருப்பது மன்னிக்க முடியாதது. அன்னிய நாட்டுத் துணியைப் பகிஷ்கரிக்க வேண்டும் என்றே நாம் கூறியிருக்கிறோம். ஆனால், அவர்கள் உற்பத்தி செய்யும் துணியைப் பகிஷ்கரிப்பதால் வேலையில்லாது போகும் பிரிட்டிஷ் தொழிலாளருக்கு நான் ஹிம்சையைச் செய்யவில்லை. இதற்கு

முக்கியமான காரணம், வெளிநாட்டுத் துணியை வாங்குவதை இந்தியா தன்னுடைய கடமையாக ஏற்றுக் கொண்டிருக்க வில்லை. இதில் ஹிம்சை எதிரான வழியில்தான் இருக்கிறது. பிரிட்டிஷ் துணியை இந்தியாவின்மீது திணிப்பதன் மூலம் பிரிட்டிஷ் தொழிலாளரின் சார்பிலும், அவர்கள் பெயராலும், இந்தியாவுக்கு ஹிம்சை செய்யப்படுகிறது. ஒரு குடிகாரன் குடிப் பழக்கத்தை விட்டுவிடுவதனல் சாராயக்கடையின் சொந்தக் காரருக்கு ஹிம்சை செய்வதாகாது. பொதுமக்களுக்கும் தனக்குமே சேவை செய்தவனுகிருன். அதே போல வெளி நாட்டுத் துணியை வாங்குவதை இந்தியா விட்டுவிடும்போது வெளிநாட்டினருக்கும் தனக்கும் இந்தியா சேவை செய்வ தாகிறது. வெளிநாட்டுத் தொழிலாளர்கள் பட்டினி கிடந்துவிட மாட்டார்கள்; வேறு நல்ல வேலையைத் தேடிக்கொள் வார்கள். இந்தியாவுக்காகத் துணிகளைத் தயாரிப்பதை அவர் களாகவே விட்டுவிடுவார்களாயின் பெரிய ஜீவகாருண்ய இயக்கத்தில் பங்கெடுத்துக் கொண்டவர்களாவார்கள்.

—எங் இந்தியா—8-7-1926

# 7

# மனித இனத்தின் சின்னம்

பலாத்காரமற்ற முறையில் தாம் நடந்து கொள்வதாக ஒருவர் சொல்லிக்கொள்ளுவாராயின், இவர் தமக்குத் துன்பம் இழைப்பவர்மீது கோபமில்லாமலும் இருக்கவேண்டும். அவ ருக்குத் தீமையே எண்ணக்கூடாது; அவருக்கு நல்லதே நினைக்க வேண்டும்; அவரைத் தூஷிக்கவும் கூடாது. அவ ருடைய உடலுக்கு எந்தத் துன்பமும் விளைவிக்கவும் கூடாது. தீயது செய்பவரால் உண்டாகும் துன்பங்களையெல்லாம் இவர் சகித்துக்கொள்ளவும் வேண்டும். இவ்விதம் பலாத்காரமின்மை என்பது பரிபூரணமான மனத்தூய்மையே ஆகும். பூரண மான பலாத்காரமின்மை என்பது, எல்லா உயிர் வாழ்வன விடத்திலும் கெட்ட எண்ணம் எதுவும் இல்லாமலிருப்பதே. விஷ ஜந்துக்கள் அல்லது மிருகங்கள் உள்பட மனிதரினும் தாழ்ந்த எல்லா ஜீவராசிகளிடத்திலும் அப்படி இருக்க வேண்டும். நமக்குள்ளதான நாசப்படுத்தும் போக்குக்கு இரையாக்குவதற்காக அவைகளெல்லாம் படைக்கப்பட் டிருக்கவில்லை. படைத்தவனின் எண்ணத்தை நாம் அறிந்து கொள்வோமாயின் அவன் படைப்பில் அவைகளுக்குரிய இடத்தை நாம் காணவேண்டும். ஆகையால், பலாத்கார மின்மை என்பது, அதனுடைய தீவிர முறையில், எல்லா

உயிர்களிடத்திலும் நல்லெண்ணத்துடன் இருப்பதாகும். அது பரிசுத்தமான அன்பு. ஹிந்து தருமநூல்களிலும், பைபிளிலும், குரானிலும் அதையே நான் காண்கிறேன்.

அகிம்சை, குறைவற்றதோர் நிலை. தம்மையும் அறியாமலேயே எல்லா மனித வர்க்கமும் இயற்கையாகவே அந்த லட்சியத்தை நாடிப் போய்க்கொண்டு இருக்கின்றன. தான் குற்றமே இல்லாதவன் என்று மனிதன் தன்னுள்ளேயே பாவித்துக்கொள்ளும்போது அவன் தெய்விகமாகிறான்; அப்பொழுதுதான் உண்மையில் அவன் மனிதனுமாகிறான். நாம் இன்றுள்ள நிலையில் பாதி மனிதராகவும், பாதி மிருகமாகவும் இருக்கிறோம். அடிக்கு அடி கொடுத்து, அப்படிச் செய்வதற்கு வேண்டிய கோபத்தையும் வளர்த்துக்கொண்டு, நம் இனத்தின் காரியத்தை நாம் நிறைவேற்றி வருவதாக நம்முடைய அறியாமையாலும் திமிரினாலும் சொல்லிக் கொள்ளுகிறோம். பதிலுக்குப் பதில் செய்வதென்பது அனுமதிக்கக்கூடியதாயினும் அது அவசியமில்லை என்பதை ஒவ்வொரு சாத்திரத்திலும் காண்கிறோம். என்றாலும், பதிலுக்குப் பதில் செய்து தீருவதென்பது நமது பிறவியின் நெறி என்று நம்புவதாகப் பாசாங்கு செய்கிறோம். ஆனால், அடக்கமே அவசியமானது; பதிலுக்குப் பதில் செய்வது என்பதில் ஈடுபட எவ்வளவோ கட்டுத் திட்டங்களும் தேவை. அடக்கமே நமது வாழ்வின் நியதி. ஏனெனில், உயர்ந்த வகையில் அடக்கத்தை அனுசரிக்காமல் உயர்ந்த, புனிதமான தத்துவத்தை அடைந்துவிட முடியாது. இவ்விதம் துன்பத்தை அனுபவிப்பதே மனித இனத்தின் சின்னம்.

லட்சியம், நமக்கு எப்பொழுதும் தொலைவில் போய்க்கொண்டே இருக்கிறது. எவ்வளவுக்கெவ்வளவு முன்னேற்றம் அடைகிறோமோ அவ்வளவுக்கவ்வளவு நம் தகுதியின்மையையும் ஒப்புக்கொள்ளுவதாகிறது. முயற்சியில்தான் திருப்தி இருக்கிறதேயன்றி அடைவதில் அல்ல. முழு முயற்சியே முழு வெற்றி.

ஆகையால், அந்த லட்சியத்திலிருந்து எவ்வளவு தூரத்திற்கு அப்பால் இருக்கிறேன் என்பதை முன்னைவிட நான் இப்பொழுது அதிகமாக உணர்ந்தபோதிலும், பூரணமான அன்பு ஒன்றே எனக்கு என் வாழ்வின் நெறி. இதில் ஒவ்வொரு தடவையும் நான் தோல்வியுறும்போதும், அந்தத் தோல்வியினால் என்னுடைய முயற்சி இன்னும் அதிகமாக வலிவு பெறும்.

ஆனால், இந்த முடிவான நியதியைக் காங்கிரஸ் அல்லது கிலாபத் ஸ்தாபனங்களின் மூலம் நான் உபதேசிக்கவில்லை. என்னிடம் இருக்கும் குறைபாடுகளை நான் மிக நன்றாக அறிவேன். அத்தகைய முயற்சி தோல்வியிலேயே முடியும் என்பதும் எனக்குத் தெரியும். ஆண்களும் பெண்களும் அடங்கிய பொது மக்கள் எல்லோருமே உடனே அந்த நியதிக்கு உடன்பட்டு விடுவார்கள் என எதிர்பார்ப்பது, அது வேலை செய்யும் தன்மையையே அறியாததாகும். காங்கிரஸ் மேடையின் மூலம் அந்த நியதியைப்பற்றி நான் உபதேசம் செய்து வருகிறேன். அந்த நியதியின் தன்மையில் ஒரு சிறு பகுதியையே காங்கிரஸ், கிலாபத் ஸ்தாபனங்கள் ஒப்புக்கொண்டிருக்கின்றன. உண்மையான ஊழியர்கள் கிடைத்தால், ஏராளமான பொதுமக்களைப் பொறுத்த வரையில், அது குறிப்பிட்ட அளவு நடைமுறையில் அனுசரிக்கப்படுவதைக் கொஞ்ச காலத்தில் காண முடியும். ஆனால், அந்தக் கொஞ்ச அளவும் உண்மையானதாக இருக்கவேண்டுமாயின், முழுதுக்கும் செய்யப்படும் பரீட்சைக்கு அது நிற்கக் கூடியதாக இருக்க வேண்டும். பரிசோதிப்பவருக்கு, ஓர் ஏரி முழுவதிலும் இருக்கும் நீரின் தன்மையை அதன் ஒரு துளி நீர் காட்டிவிடும். என் சகோதரனிடம் நான் காட்டும் அகிம்சை, பிரபஞ்சத்திடம் நான் காட்டும் அகிம்சைக்கு மாறானதாக இருக்கக்கூடாது. சகோதரனிடம் காட்டும் அன்பைப் பிரபஞ்சம் முழுமைக்குமே காட்ட நான் முற்படும் போது, அதே சோதனையைத் திருப்தி செய்வதாக அது இருக்க வேண்டும்.

ஒரு குறிப்பிட்ட பழக்கம், ஒரு குறிப்பிட்ட காலம் அல்லது இடத்திற்கு அனுசரிக்கப்படுவதாயின் அது ஒரு கொள்கை ஆகிறது. ஆகையால், மிக உயர்வான கொள்கை, முற்றிலும் அனுசரிக்கப்படும் பயிற்சியேயாகும். ஆனால், யோக்கியப் பொறுப்பு, கொள்கையாக இருந்தாலும் அதே யோக்கியப் பொறுப்பு தருமமாக இருந்தாலும், இரண்டும் ஒன்றேதான். யோக்கியப் பொறுப்பே கொள்கை என்று நம்பும் ஒரு வர்த்தகர், யோக்கியப் பொறுப்பையே தருமமாகக் கொண்ட இன்னுமொரு வர்த்தகர் ஒரு ரகத் துணியைக் கஜம் என்ன விலைக்கு விற்கிறாரோ அதே விலைக்கே விற்பார். இந்த இருவருக்கும் உள்ள மாறுபாடு இதுதான். தமக்கு லாபமில்லை என்பதைக் கண்டதும் வெறும் கொள்கை வர்த்தகர் தம்முடைய யோக்கியப் பொறுப்பைக் கைவிட்டுவிடுவார். ஆனால், யோக்

கியப் பொறுப்பை நம்புகிறவரோ, எல்லாமே நஷ்டமாகப் போனாலும் தொடர்ந்து யோக்கியப் பொறுப்புடன் நடந்து வருவார்.

ஒத்துழையாமைக்காரரின் ராஜீய பலாத்காரமின்மை, பெரும்பாலான காரியங்களில் இந்தப் பரீட்சைக்கு நிற்ப தில்லை. இதனாலேயே போராட்டம் நீண்ட காலம் நடக்க வேண்டியதாகிறது. வழிக்கு வராத ஆங்கிலேயரின் போக் கைக் குறித்து யாரும் குறை கூற வேண்டாம். எவ்வளவு தான் கடினமானதாயினும் அன்புத் தீயில் அது உருகியே விடும். இதை நான் நன்கறிவேனாகையால் அந்த நிலையி லிருந்து என்னை மாற்றிவிட முடியாது. தீ இருக்குமேயாயின், பிரிட்டிஷ் அல்லது வேறு ஒரு மனப்போக்கு இன்னும் உருக வில்லை என்றால் அந்தத் தீ பலமுள்ளதாக இல்லை என்றாகிறது.

நமது பலாத்காரமின்மை, பலமுள்ளவர்களுக்காக இராமல், உண்மையுள்ளவருக்காக இருக்கவேண்டும். நாம் பலாத் காரமற்றவர்களானால், ஆங்கிலேயருக்கோ அல்லது அவர்களுடன் ஒத்துழைக்கும் நம் நாட்டவருக்கோ நாம் துன்பத்தை விரும்பக்கூடாது. ஆனால், நம்மில் பெரும் பாலானவர்கள் அவர்களுக்குத் துன்பத்தை விரும்புகிறார்கள். நமது பலவீனத்தினாலோ அல்லது அவர்களுடைய உடலுக்குத் துன்பத்தை உண்டாக்காமல் இருப்பதொன்றே நமது பிரதிக் ஞையை நிறைவேற்றிவிட்டதாகும் என்ற அறியாத்தனமான நம்பிக்கையினாலேயோ, நாம் அவர்களுக்குத் துன்பம் இழைக் காமல் இருக்கிறோம். நமது அகிம்சைப் பிரதிக்ஞை, எதிர் காலத்தில் பதிலுக்குப் பதில் செய்வதன் சாத்தியத்தையும் தவிர்க்கிறது. துரதிருஷ்டவசமாக நம்மில் சிலர் பழி தீர்த்துக்கொள்ளும் தேதியை ஒத்திவைத்திருக்கிறார்கள் என்று மாத்திரமே தோன்றுகிறது.

நான் கூறுவதை யாரும் தவறாக எண்ணிக்கொள்ள வேண்டாம். இக்கொள்கையைக் கைவிடும்போது பழி தீர்த் துக்கொள்வதற்குள்ள சாத்தியத்தை அகிம்சைக் கொள்கை தவிர்க்கிறது என்று நான் சொல்லவில்லை. ஆனால், போராட் டம் வெற்றிகரமாக முடிந்த பிறகு, எதிர்காலத்தில் பழி தீர்த்துக்கொள்வது என்பதற்குள்ள சாத்தியத்தை அது நிச்சய மாகத் தவிர்க்கிறது. ஆகையால், அகிம்சைக் கொள்கையை நாம் அனுசரித்து வரும்போது ஆங்கில நிர்வாகிகளிடமும், அவர்களுடன் ஒத்துழைப்பவர்களுடனும் நாம் தீவிரமாக நட் புடன் இருக்க வேண்டும். இந்தியாவின் சில பகுதிகளில்

ஆங்கிலேயர்களும் அவர்களுடன் ஒத்துழைக்கும் பிரபலமான வர்களும் தாராளமாக நடமாடுவதற்கு முடியாமல் அபாயம் இருந்து வருகிறது. இதை அறிந்தபோது வெட்கமடைந்தேன். சமீபத்தில் நடந்த சென்னைக் கூட்டம் ஒன்றில் மூண்ட மானக் கேடான சம்பவங்கள்[1] அகிம்சையையே முற்றிலும் மறுப்பன வாகும். அக்கூட்டத்தின் தலைவர் என்னை அவமதித்தார் என்ப தற்காக அவரை எதிர்த்துப் பேசவிடாமல் செய்ததன் மூலம் தங்களையும் தங்களுடைய கொள்கையையும் அவமானத்திற்கு உள்ளாக்கிக்கொண்டிருக்கின்றனர். நண்பரும், உதவி செய்து வருபவருமான ஸ்ரீ ஆண்ட்ரூஸின் மனத்தைப் புண்படுத்தி யிருக்கிறார்கள். தங்களுடைய லட்சியத்திற்கும் தீமை செய்து கொண்டிருக்கின்றனர். நான் அயோக்கியன் என்று அக் கூட்டத்தின் தலைவர் நம்பினால் அதைச் சொல்வதற்கு அவருக்கு முழு உரிமையும் உண்டு. அறியாமை ஆத்திரமூட்டு வதாகாது. ஆயினும், ஒத்துழையாமைக்காரர் ஒருவர் ஆத்திர மூட்டும் எவ்வளவு பெரிய காரியத்தையும் சகித்துக்கொள்ளப் பிரதிக்ஞை பூண்டிருக்கிறார். அயோக்கியனைப் போல நான் நடந்துகொள்ளும்போது ஆத்திரமூட்டப்படுவதும் இருக்கக் கூடும். தம்மைத் தவறான வழியில் செலுத்தியதற்காக ஒத்துழையாமைக்காரர் ஒருவர் என் உயிரையே போக்கி விடுவது முற்றிலும் நியாயம். அந்த வகையில் ஒத்துழையாதார் ஒவ்வொருவருக்கும் அகிம்சைக் கொள்கையிலிருந்து விலக்கு அளிப்பது போதும் என்று நான் ஒப்புக்கொள்ளுகிறேன்.

ஒரு குறிப்பிட்ட அளவுக்கு என்று பலாத்காரமின்மையை வளர்ப்பதுகூடப் பெரும்பாலான விஷயங்களில் சாத்திய மற்றதாக இருக்கக்கூடும். எதிராளி எந்தத் தீமையையும் செய்யாமலிருக்கும்போது சுயநலத்தை முன்னிட்டாவது எதி ராளிக்குத் தீமையை எண்ணாமல் இருக்கும்படி நாம் எதிர்பார்க்க முடியாமலும் இருக்கலாம். அப்படியானால், யோக்கியமாக நடப்ப தாயின், நமது போராட்டம் சம்பந்தமாகப் 'பலாத்காரமின்மை' என்ற சொல்லை உபயோகிப்பதென்பதையே தெளிவாகக் கைவிட்டுவிட வேண்டும். உடனே பலாத்காரத்தில் இறங்கி விடுவது என்பது அதற்குப் பதிலான நடவடிக்கையன்று. ஆனால், அப்பொழுது அகிம்சையிலுள்ள கட்டுப்பாடு களுக்கு உடன்பட வேண்டுமென்று மக்கள் கேட்கப்பட

1. மகாத்மா குறிப்பிடும் அக்கூட்டத்தைப்பற்றிய விவரத்தை இப்புத்தகத்தின் கடைசியில் சேர்க்கப்பட்டிருக்கும் பின் சேர்க்கைப் பகுதியில் காண்க.

மாட்டார்கள். சௌரி சௌரா[1] வில் நடந்ததற்குப் பொறுப் பேற்க வேண்டியிருக்கிறது என்று அப்பொழுது என்னைப் போன்றவர்கள் எண்ணிக்கொள்ளமாட்டார்கள். ஓரளவுக்குப் பலாத்காரமின்மை வேண்டும் என்ற எண்ணம் எங்கோ மறை வில் அப்பொழுதும் வளர்ந்துகொண்டுதான் வரும். ஆனால், அதனால் இன்று ஏற்படுவதைப் போன்ற பயங்கரமான பொறுப்பின் பளு அப்பொழுது இராது.

---

1. சௌரி சௌரா என்பது உத்தரப் பிரதேசத்திலுள்ள கோரக்பூர் ஜில்லா வில் ஒரு கிராமம். அங்கு நடந்த கலவரத்தையே காந்திஜி குறிப்பிடுகிறார். 1922 ஜனவரி 31-ஆம் தேதி காங்கிரஸ் காரியக் கமிட்டி சூரத்தில் கூடி, சட்ட மறுப்புப் போராட்டத்தை ஆரம்பிக்க பார்டோலி மக்களுக்கு அனுமதியளித்தது. பம்பாய் மாகாணத்தில் சூரத் ஜில்லாவில் பார்டோலி ஒரு தாலூக்கா. அதன் மொத்த ஜனத்தொகை 87,000. சட்ட மறுப்புப் போராட்டத்தை நடத்த, பார்டோலி தாலூக் காவை அனுமதித்த காங்கிரஸ் காரியக் கமிட்டி, இந்தியாவின் மற்றப் பகுதிகளுக் கும் அதே சமயத்தில் ஒரு கோரிக்கையை வெளியிட்டது. காந்திஜியின் அனு மதியை முன்கூட்டிப் பெறுமல் பார்டோலி தவிர மற்ற இடங்களில் தனிப்பட்ட அல்லது பொதுஜனச் சட்ட மறுப்புப் போராட்டத்தை ஆரம்பிக்காமல் பார்டோ லிக்கு மற்றப் பகுதிகள் உதவி செய்ய வேண்டும் என்பது அந்தக் கோரிக்கை. "பார்டோலித் தீர்மானம் முடிவானது, மாற்ற முடியாதது" என்று கூறி மகாத்மா, வைஸ்ராய் லார்டு ரீடிங்குக்கு 1922 பிப்ரவரி 1-ஆம் தேதி ஓர் இறுதி எச்சரிக்கைக் கடிதமும் அனுப்பினர். அதில் கண்ட கோரிக்கையை ஏற்றுக்கொள்ள முடியாதென இந்திய அரசாங்கம் 6-ஆம் தேதி கூறிவிட்டது. பார்டோலிப் போராட்டத்தை முன்னின்று நடத்துவதற்காக மகாத்மா அங்கே சென்றார். இந்நிலையில் பிப்ரவரி 5-ஆம் தேதி சௌரி சௌராவில் நடந்துவிட்ட கலவரம் பற்றிய செய்தி 8-ஆம் தேதிப் பத்திரிகைகளில் வெளியாயிற்று. அங்கு ஒரு தேசிய ஊர்வலம் நடந்தது. ஊர் வலம் சென்றுவிட்ட பிறகு அதில் சென்றவர்களில் பின் தங்கிவிட்ட சிலரைப் போலீஸ் சேவகர்கள் திட்டினர்கள். கலவரம் மூண்டது. போலீஸ்காரர்கள் சுட்டனர்; தங்க ளிடம் இருந்த தோட்டாக்கள் தீர்ந்ததும் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய்விட்டனர். பொதுக்கூட்டம் போலீஸ் ஸ்டேஷனுக்குத் தீயிட்டது. இருபத்திரண்டு போலீஸ் சேவகர்களைப் பொதுக்கூட்டத்தினர் உயிருடன் கொளுத்திவிட்டனர். இச்செய்தி கேட்டு காந்திஜி திடுக்கிட்டார். இச்சம்பவத்திற்காகத் தம்மைத்தாமே போதுமான படி தண்டித்துக்கொள்ள வேண்டும் என்று கூறிக்கொண்டு 12-ஆம் தேதி 5 நாள் உண்ணாவிரதத்தை ஆரம்பித்தார். சட்ட மறுப்புப் போராட்டத்தையும் நிறுத்தினர். இச்சம்பவத்தைக் குறித்து 16-2-1922 'எங் இந்தியா'வில் காந்திஜி எழுதுகையில் பின் வருமாறு குறிப்பிட்டார் :

"இச்சம்பவம் எனக்குத்தான் மிகவும் மானக்கேடாகிறது. சென்னை என்னை எச்சரிக்கை செய்தது. கவனிக்கத் தவறிவிட்டேன். ஆனால், சௌரி சௌரா மூலம் கடவுள் எனக்குத் தெளிவாகச் சொல்லிவிட்டார். மிருகத்தனமாகக் கொல் லப்பட்டுவிட்ட போலீஸ் சேவகர்கள், ஆத்திரமூட்டும் காரியங்களைச் செய்திருக் கிறார்கள் என்று அறிகிறேன். ஊர்வலத்தினரை ஒன்றும் செய்யப்படமாட்டார்கள் என்று இன்ஸ்பெக்டர் கூறிய வாக்குறுதியையும் அவர்கள் மீறியிருக்கிறார்கள். ஊர்வலம் சென்ற பின்னர், பின்னல் மெதுவாகச் சென்றவர்களிடையே போலீஸ் சேவகர்கள் குறுக்கிட்டுத் திட்டியிருக்கிறார்கள். அவர்கள் உதவிக்குக் கூச்சல் போட்டனர். கூட்டம் திரும்பி வந்துவிட்டது. போலீஸ் சேவர்கள் சுட்டார்கள். அவர்களிடமிருந்த கொஞ்சம் தோட்டாவும் தீர்ந்துவிடவே பத்திரமாகப் போலீஸ் தாணாவுக்குத் திரும்பிவிட்டனர். ஆகவே, பொதுக்கூட்டம் தாணாவுக்குத் தீயிட்டது என்று நான் அறிகிறேன். தாணாவுக்குள் இருந்த போலீஸ் சேவகர்கள் உயிருக்கு

பலாத்காரமின்மையே இந்நாட்டு மக்களின் கொள்கையாக இருந்து வருவதாயின், இந்நாட்டின் மனித வர்க்கத்தின் நற்பெயரை முன்னிட்டு, அதன் முழு அம்சங்களையும் நிறைவேற்றிவைக்க நாம் கடமைப்பட்டிருக்கிறோம். இக்கொள்கையை நிறைவேற்றி வைக்க நாம் விரும்புவதாயின், அதில் நமக்கு நம்பிக்கையும் இருந்தால், ஆங்கிலேயருடனும் அவர்களுடைய ஒத்துழைப்பாளர்களுடனும் நாம் உடனே நண்பர்கள் ஆகிவிட வேண்டும். நாம் அவர்களிடமிருந்து முற்றிலும் மாறுபட்ட கொள்கையையும் எண்ணத்தையும் கொண்டவர்களாக இருந்தாலும், நம் மத்தியில் தாங்கள் பத்திரமாகவே இருப்பதாகவும், நம்மை நண்பர்களாகத் தாங்கள் கருதலாம் என்றும் அவர்களுடைய நற்சாட்சியை நாம் பெறவேண்டும். நம் ராஜீய மேடைகளுக்குக் கௌரவமான விருந்தினராக அவர்களை நாம் அழைக்க வேண்டும். நடுநிலைமையான மேடைகளில் அவர்களை நாம் தோழர்களாகச் சந்திக்க வேண்டும். அத்தகைய சந்திப்புகளுக்கு வழி வகைகளையும் வகுக்க வேண்டும். நமது அகிம்சையிலிருந்து பலாத்காரமோ, துவேஷமோ, கெட்ட எண்ணமோ, பிறக்கக்கூடாது.

---

அஞ்சி வெளியே வந்திருக்கிருர்கள். பொதுக்கூட்டத்தினர் அவர்களைத் துண்டு துண்டாக வெட்டித் தீயில் போட்டுவிட்டார்கள்.

"இக்கொடுமையில் ஒத்துழையாமைத் தொண்டர்களுக்கு எந்தச் சம்பந்தமும் இல்லை என்று சொல்லப்படுகிறது. பொதுஜனக் கூட்டம் ஆத்திரம் மூட்டப்பட்டிருந்தது என்றும், அந்த ஜில்லாவின் போலீஸார் செய்து வந்த அட்டூழியங்களையும் பொது மக்கள் அறிந்திருந்ததால் ஆத்திரங் கொண்டுவிட்டனர் என்றும் சொல்லப்படுகிறது. போலீஸார் அங்கே பாதுகாப்பற்று இருந்திருக்கின்றனர்; இரக்கம் காட்டுமாறு பொதுக்கூட்டத்தினிடம் மன்றாடும் நிலையிலும் அவர்கள் இருந்திருக்கிருர்கள். அப்படியிருக்க, அவர்களை மிருகத்தனமாகக் கொன்றுவிட்டதற்கு ஆத்திரமூட்டப்பட்டு விட்டனர் என்பது நியாயமாகிவிடாது. அகிம்சையோடிருப்பதாக இந்தியா சொல்லிக்கொள்ளும்போது, அகிம்சை முறை கொண்டு விடுதலை அரியாசனத்தில் அமர நம்பிக்கொண்டு இருக்கும்போது, என்னதான் ஆத்திரமூட்டும் காரியங்கள் நடந்தாலும் பொதுஜன பலாத்காரம் நடப்பது கெட்ட சகுனமேயாகும். பார்டோலி அகிம்சைச் சட்ட மறுப்பு வெற்றி பெறக் கடவுள் அனுமதிக்கிருர் என்றும், பார்டோலியில் வெற்றி பெற்றவர்களுக்கு விட்டுக் கொடுத்துவிட்டு இந்திய அரசாங்கம் போய்விடுகிறது என்றும் வைத்துக் கொள்ளுவோம். ஆத்திரம் மூட்டும் செய்கை நடந்தால் மிருகத்தனமான காரியங்களைச் செய்ய முற்பட்டுவிடும் கட்டுக்கடங்காதவர்களை அப்பொழுது கட்டுப்படுத்துவது யார்? அகிம்சை முறையில் சுயராஜ்யம் அடைவதென்ருல், நாட்டிலுள்ள பலாத்காரப் போக்கினரை அகிம்சையால் அடக்குவது என்றும் ஆகிறது. இந்தியாவிலுள்ள கலவரக்காரர்களைக் கட்டுக்குட்படுத்துவதில் வெற்றி பெற்ருல்தான், அதாவது ஒத்துழையாமைப் போராட்டம் நடந்துகொண்டிருக்கும் காலத்திலாவது தேசாபிமானத்துடனே அல்லது மதப் பற்றேடோ பலாத்காரச் செய்கைகளைச் செய்யாதிருந்தால்தான், அகிம்சையோடு கூடிய ஒத்துழையாதார் வெற்றி பெற முடியும். ஆகையால், சௌரி சௌராவில் நடந்த துக்ககரமான சம்பவம் என்னை முழுதும் துயரத்தில் ஆழ்த்திவிட்டது........."

நம் காரியங்களைக்கொண்டு நம்மைத் தீர்மானிக்கட்டும் என்று மற்றவர்களைப் போலவே நாமும் இருக்கிறோம். சுயராஜ்யத்தை அடைவதற்கு அகிம்சை வேலைத் திட்டமென்றால், நம் காரியங்களைப் பலாத்காரமற்ற வகையில் செய்யும் ஆற்றல் என்று தான் பொருள். அதன் பொருள், பணியும் உணர்ச்சியை அடைவது என்பது. பலாத்காரத்தின் தத்துவம் ஒன்றையே அறிந்திருப்பவரான ஸ்ரீ சர்ச்சில், இந்தியப் பிரச்னை ஐரிஷ் பிரச்னைக்கு மாறானது என்று சொல்வது மிகவும் சரி. பலாத்காரத்தின் மூலம் தங்கள் சுயராஜ்யத்தை அடைந்த ஐரிஷ்காரர்கள், அவசியம் ஏற்பட்டால் அதைப் பலாத்காரத்தினாலேயே பாதுகாக்க முடியும் என்பதே அவர் கருத்து. ஆனால், இந்தியாவோ உண்மையில் அகிம்சையின் மூலம் சுதந்திரத்தை அடைந்துவிடுமாயின் அகிம்சை முறையைக்கொண்டே அதை நிர்வகிக்கவும் நம்மால் முடிய வேண்டும். இக்கொள்கையைக் காரியத்தினால் இந்தியா செய்து காட்டினாலன்றி இது சாத்தியமானது என்று ஸ்ரீ சர்ச்சிலினால் நம்பவே முடியாது. மக்கள் மொத்தத்தில், அதாவது, தங்கள் ராஜீய வாழ்வில் அகிம்சைக்கு உடன்பட்டு சமூகத்தில் அகிம்சை வியாபித்தாலன்றி, அவ்விதம் செய்து காட்டிவிடுவது என்பது சாத்தியமன்று. இப்பொழுது இருப்பதைப் போல ராணுவ அதிகாரம் முக்கியமானதாக இல்லாமல் மக்கள் அதிகாரம் முக்கியமாக இருக்க வேண்டும்.

பலாத்காரமின்மையால் சுயராஜ்யத்தை அடைவதென்றால், இடைக்காலத்தில் குழப்பம், அராஜகம் இருப்பது என்பது பொருள் அல்ல. அகிம்சையின் மூலம் சுயராஜ்யம் என்பது, நன்றாக வளர்ந்த ஒரு மரத்தில் முற்றிலும் பழுத்த பழம் எவ்விதம் இயற்கையாகவே விழுமோ அது போல. நெருங்கிய தனிப்பட்ட ஒரு சிலரிடம் இருக்கும் ஆட்சி அதிகாரம், மக்களின் பிரதிநிதிகளுக்கு மாறுவது, மேலும் மேலும் அமைதியான முறையில் ஏற்படும் புரட்சியாக இருக்க வேண்டும். ஆனால், அத்தகைய காரியத்தை அடைவது முற்றிலும் அசாத்தியமாக இருக்கலாம் என்பதை மீண்டும் கூறுகிறேன். ஆயினும், அகிம்சையின் தத்துவம் அதற்குக் குறைந்தது எதுவுமல்ல என்பதை அறிவேன். அப்படிப்பட்ட பலாத்காரமற்ற சூழ்நிலையை அடைவது சாத்தியம் என்பதை இப்பொழுதுள்ள ஊழியர்கள் நம்பாவிட்டால், அவர்கள் அகிம்சை வேலை முறையைக் கைவிட்டுத் தனிமையில் அதற்கு முற்றிலும் மாறான மற்றொரு முறையை அமைத்துக்கொள்ளவேண்டும். மனத்தில்

வேறு ஒன்றை வைத்துக்கொண்டு நாம் நம் வேலைத் திட்டத்தை மேற்கொண்டால், முடிவில் ஆயுத பலம் கொண்டு தான் பிரிட்டிஷாரிடமிருந்து அதிகாரத்தைப் பறிக்க முடியும் என்று நாம் நினைத்து வந்தால், நமது அகிம்சைக் கொள்கைக்கு நாம் பொய்யர்களாவோம். நமது வேலைத் திட்டத்தை நாம் நம்புவதாயின், ஆயுத பலத்திற்குச் சந்தேகமறப் பணிந்து விடக் கூடியவர்களாய் இருப்பதுபோல அன்பின் சக்திக்குப் பணிந்துவிடக்கூடாதவர்களல்ல பிரிட்டிஷார் என்பதையும் நம்பக் கடமைப்பட்டிருக்கிறோம். இதை நம்பாதவர்களுக்குச் சரியான பள்ளிக்கூடங்கள், சில தலைமுறைகளுக்கு நீடிக்கக்கூடிய தான அவமானங்களையே கடுமையான வேலைத் திட்டங்களாகக் கொண்ட சட்டசபைகளே. இல்லாவிடில், உலகம் இதற்கு முன்னால் என்றும் கண்டிராததான, துரிதமான, ஆனால் பயங்கரமான புரட்சி. அத்தகைய புரட்சியில் பங்கு கொள்ள எனக்கு விருப்பமில்லை. அதை உண்டாக்குவதற்கு உடன்படுபவனாகவும் நான் இருக்கமாட்டேன். ஆகையால், இருப்பதெல்லாம் ஒத்துழையாமையுடன் யோக்கியமான அகிம்சை. இந்த இரண்டும் அவசியமாகச் சேர்ந்திருக்க வேண்டியவை. அப்படி இல்லையானால், பரஸ்பர ஒத்துழைப்புக்குத் திரும்பிவிடவேண்டும். அதாவது முட்டுக்கட்டையும் ஒத்துழைப்பும்.

—எங் இந்தியா - 9—3—1922.

# 8

# செயலற்று இருப்பதன்று!

முழுதும் பலாத்காரமின்மையே நியாயம் என்று சொல்லுகிறேன்; மனிதனுக்கு மனிதன், நாட்டுக்கு நாடு என்ற உறவில் இது சாத்தியம் என்றும் கருதுகிறேன். ஆனால், 'கொடுமையை எதிர்த்து நடக்கும் உண்மையான போராட்டத்தில் அக்கறையின்றி ஒதுங்கி நிற்பது' அல்ல அகிம்சை. இதற்கு மாறாக நான் கருதும் அகிம்சை, பதிலுக்குப் பதில் செய்வது என்பதைவிடக் கொடுமையை எதிர்த்து மிகத் தீவிரமாகவும் உண்மையாகவும் போராடுவதாகும். பதிலுக்குப் பதில் செய்வதான இயல்பு கொடுமையை அதிகரித்தே தீரும். நெறி தவறிய காரியங்களைச் சிந்தையாலும் நேர்மையாலும் எதிர்ப்பது என்பதே நான் நினைப்பதாகும். கொடுமை செய்பவனின் வாள் முற்றிலும் மழுங்கிப் போகுமாறு செய்ய முயல்வேன். இதைச் செய்வது அவனுடைய வாளுக்கு எதிரே ஒரு வாளை நிறுத்துவதன்று; நான் உடல் வலிமையைக் கொண்டு தாக்குவேன் என்று எதிர்பார்க்கும் அவன்

ஏமாற்றமடையும்படி செய்வதேயாம். நான் காட்டும் ஆத்ம எதிர்ப்பு அவனை அக்காரியத்திலிருந்து விலக்கும். இது, முதலில் அவன் திகைக்கும்படிச் செய்யும்; முடிவில் இதை அங்கீகரிக்கும்படியும் கட்டாயப்படுத்தும். அப்படி அவன் அங்கீகரிப்பது அவனை அவமதிப்புக்குள்ளாக்காது. ஆனல், மேன்மைப்படுத்தும்.

—எங் இந்தியா - 8—10—1925.

அறிந்தே துன்பங்களை அனுபவிப்பது என்பதே தீவிர மான நிலையில் அகிம்சையின் பொருள். தீமையைச் செய்கிற வனுக்குப் பேசாமல் பணிந்துவிடுவது என்பதன்று அதன் அர்த்தம். ஆனல், கொடியவனின் உறுதிக்கு எதிராகத் தனது முழு ஆத்மாவையும் நிறுத்துவதாகும். நமது வாழ்வின் இந்த நியதியை அனுசரிப்பதாயின் ஒரு தனிப்பட்டவர், தம்முடைய கௌரவம், தமது மதம், தமது ஆத்மா ஆகியவைகளைக் காக்க ஓர் அக்கிரமக்கார சாம்ராஜ்யத்தின் முழுப் பலத்தையும் எதிர்த்து நிற்பதோடு, அந்தச் சாம்ராஜ்யத்தின் அழிவுக்கு அல்லது அது சீர்திருந்துவதற்கு அடிகோலிவிடவும் முடியும்.

—எங் இந்தியா - 11—8—1920.

# 9

# எல்லோரும் உபயோகிக்கலாம்

அன்பினல் எதிர்ப்பது என்பது தனிப்பட்டவர்களேயன்றி சமூகங்களும் உபயோகிக்கக்கூடிய சிறந்த சக்தி; ராஜீயத்திலு மேயன்றி வீட்டுக் காரியங்களிலும் அதை உபயோகிக்கலாம். சகலத்திற்கும் அது பயன்படும் என்பதிலிருந்தே அது நிரந் தரமானது என்பதும், தோல்வியற்றது என்பதும் தெளி வாகிறது. ஆண்கள், பெண்கள், குழந்தைகள் முதலிய எல்லோ ருமே அதை உபயோகிக்கலாம். பலாத்காரத்தைப் பலாத் காரத்தினல் சமாளிக்க முடியாதவர்களாயிருக்கும்போது பலம் இல்லாதவர்கள் உபயோகிக்கும் ஆயுதமே இது என்பது முற்றிலும் பொய்யானது......இருளுக்கு ஒளி எப்படியோ அப் படியே இந்தச் சக்திக்கு, பலாத்காரமும் எல்லாக் கொடு மைகளும், எல்லா அநீதிகளுக்கும்.

—எங் இந்தியா - 3—11—1927.

# 10

# கல்வியில் அகிம்சை

[1928-ஆம் ஆண்டுவாக்கில் மகாத்மா காந்தி வாரந்தோறும் குஜராத்தி வித்தியாபீட மாணவர்களுக்குச் சிறிது நேரம் உரை நிகழ்த்துவது வழக்கம். அப்பொழுது மாணவர்களும் ஆசிரியர்களும்

தம்மைக் கேள்விகள் கேட்கலாம் என்று காந்திஜி கூறுவார். அவர்களுடைய கேள்விகளுக்கும் பதில் சொல்லுவார். கேள்விகள் முடிவதற்கு முன்னால் அவர்களுடைய விருப்பப்படி மகாத்மா 'இந்திய சுயராஜ்யம்' என்ற நூலை அவர்களுடன் சேர்ந்து படிப்பார். அவர்களுடைய கேள்விகளில் சில எல்லோருக்குமே முக்கியமானவைகளாகையால் அவற்றிற்கு 'நவஜீவன்' பத்திரிகையில் பதில் எழுதி வந்தார். அத்தகைய கேள்விகளில் ஒன்றும், அதற்கு மகாத்மா 'நவஜீவ'னில் எழுதிய பதிலும் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன. இதைக் குஜராத்தியிலிருந்து ஸ்ரீ மகாதேவ தேசாய் மொழிபெயர்த்து 'எங் இந்தியா' பத்திரிகையில் வெளியிட்டார்.]

என்னிடம் கேட்கப்பட்ட கேள்விகளில் ஒன்று வருமாறு:

"அகிம்சை என்பதைப் பற்றிப் பேச ஆரம்பித்ததும் பல சாதாரணமான கேள்விகளெல்லாம் எழுகின்றன. நாய்கள், புலிகள், ஓநாய்கள், பாம்புகள், பேன்கள் முதலியவைகளைக் கொல்லுவது அனுமதிக்கப்படுகிறதா? கத்திரிக்காய், உருளைக் கிழங்கு ஆகியவைகளைச் சாப்பிடலாமா என்பவைகளைப் போன்றன அக்கேள்விகள். இல்லாவிட்டால், ராணுவத்தை வைத்துக்கொண்டிருப்பது அல்லது ராணுவத்தின் மூலம் எதிர்ப்பது ஆகியவைகளை ஆட்சேபிப்பதில் கேள்வி கேட்போரில் சிலர் ஈடுபடுகின்றனர். கல்வியின் ஒரு பகுதியாக அகிம்சா தருமம் இருப்பது என்பதைக் குறித்து விசாரிப்பதில் யாரும் சிரத்தை எடுத்துக்கொள்வதாகக் காணோம். தயை செய்து இப்பிரச்னையைக் குறித்துக் கொஞ்சம் விளக்குவீர்களா?"

இது ஒரு புதுப் பிரச்னையே அல்ல. ஒரு முறை இல்லாவிட்டால் மற்றொரு முறையில் இதைப்பற்றி இப்பத்திரிகையில் விவரமாக விவாதிக்கப்பட்டு வந்திருக்கிறது. ஆனால், வாசகர்களுக்கு இதை முற்றிலும் தெளிவாக்குவதில் நான் வெற்றி பெற்றுவிடவில்லை என்பதை அறிவேன். இந்த வேலை என் ஆற்றலுக்கு மிஞ்சியது என்றும் அஞ்சுகிறேன். ஆனால், இப் பிரச்னையைத் தீர்ப்பதற்கு ஏதாவது கொஞ்சம் செய்வதில் வெற்றி பெற்றாலும் நான் ஆனந்தப்பட வேண்டியதே.

குறுகிய புத்திப் போக்கை வெளிப்படுத்திவிடும் கேள்விகள் அடிக்கடி கேட்கப்படுகின்றன என்பதை இக்கேள்விகளின் ஆரம்பப் பகுதி காட்டுகிறது. தாழ்ந்த நிலையிலிருக்கும் மிருகங்களையும் ஜீவன்களையும் கொல்லுவது சரியா என்பதைப்பற்றிய கஷ்டமான கேள்விகளில் அனாவசியமாக நம் சிந்தனைகளைச் செலுத்திவிடுவதால் நம் முக்கியமான கடமைகள் யாவை

என்பதையே நாம் அடிக்கடி மறந்துவிடுகிறோம். தீமை விளை விப்பவையான மிருகங்களைக் கொல்லும் பிரச்னை, ஒவ்வொரு வருக்கும் தினமும் ஏற்பட்டுக்கொண்டிருப்பது அன்று. கொடிய ஜந்துக்களிடத்திலும் அகிம்சையை அனுசரிக்கும் வகையில் நம்மில் பலர் இன்னும் தைரியத்தையும் அன்பையும் அடைந்துவிடவில்லை. நம் உள்ளத்திலிருக்கும் கோபத்தினாலும், கெட்ட எண்ணத்தினாலும் விஷ ஜந்துக்களை நாம் கொல்லு வதில்லை. ஆனால், துஷ்ட மிருகங்களைக் கொல்லுவது சரியா என்பதைக் குறித்து வீணான வாதங்களைக் கிளப்பிக் கொண் டிருக்கத் துணிகிறோம். இவ்விதம் இத்தகைய காரியங்களில் சுழன்றுகொண்டே இருக்கிறோம். நம் ஆரம்பக் கடமைகளில் தவறிவிட்டு, கொடிய ஜீவன்களைக் கொல்லாமல் இருக்கிறோம் என்பதைக் கொண்டு நமது ஆத்மா பரிசுத்தமாக இருப்பதைக் காட்ட முற்படுகிறோம். அகிம்சையை அனுசரிக்க விரும்பு கிறவர், இப்போதைக்குப் பாம்புகள் போன்றவைகளை மறந்து விட வேண்டும். அவைகளைக் கொல்லாமல் இருக்க முடிய வில்லை என்றால், அதற்காகக் கவலைப்பட வேண்டாம். எல்லா வற்றினிடமும் அன்பாயிருக்கப் பழகிக்கொள்வதற்கு முதற் காரிய மாக, பொறுமையான முயற்சியுடன் மனிதரிடம் கோபமும் கெட்ட எண்ணமும் இல்லாமல் இருந்து உயர்ந்தவர்க ளாகட்டும்.

முடிந்தால் கத்திரிக்காயையும் உருளைக் கிழங்கையும் உபயோகிக்காமல் இருங்கள். ஆனால், இவற்றைத் தவிர்த்து விட்டதால் நீங்கள் அகிம்சையை அனுசரித்து வருவதாகத் தயை செய்து பெருமையடித்துக்கொள்ள வேண்டாம்; புனித மாகி விட்டதாக எண்ணிக்கொள்ளவும் வேண்டாம். இந்த எண்ணம் ஒன்றே ஒருவர் வெட்கப்படுவதற்குப் போதுமானது. அகிம்சை, சாப்பாட்டு விஷயத்தைப்பற்றியது மாத்திரம் அன்று; அதற்கும் அப்பாற்பட்டது—ஒருவர் என்ன சாப் பிடுகிறார், எதைக் குடிக்கிறார் என்பது சின்ன விஷயம். அதில் இருக்கும் தியாகமும் புலனடக்கமுமே முக்கியமானவை. உங்கள் சாப்பாட்டுக்கு வேண்டியவைகளில் நீங்கள் விரும்பும் வகையில் கட்டுத்திட்டங்களை அனுசரியுங்கள். இத்தகைய கட்டுத்திட்டங்கள் பாராட்டத்தக்கவை; அவசியமானவை. ஆனால், இவை அகிம்சையின் வெளிவிளிம்பை மாத்திரமே எட்டுகின்றன. ஒருவர் தம்முடைய ஆகார விஷயத் தில் எந்தவிதமான தங்குதடையுமே இல்லாதவராக இருக்க லாம். ஆனால், அவருடைய உள்ளம் அன்பு நிறைந்து ததும்பு

வதாக இருக்குமானல், பிறருடைய துன்பங்களைக் காணும் போது உருகுவதாயிருக்குமாயின், ஆசைகளையெல்லாம் அவர் துறந்தவராயிருப்பின், அவரே அகிம்சையின் உருவானவர். அவருக்கு மரியாதை செலுத்த வேண்டியவர்களாகிறோம். ஆனல், இதற்கு மாருக ஒருவர், சாப்பாட்டு விஷயத்தில் எப்பொழுதுமே குற்றமற்றவராயிருந்து, உள்ளத்தில் சுயநலத்திற்கும் ஆசைகளுக்கும் அடிமைப்பட்டவராயிருந்து கடின சித்தமுள்ளவராகவும் இருப்பின், அகிம்சையே அவரிடம் இல்லை என்பதாவதோடு பச்சாத்தாபப்படக்கூடிய வகையில் அவர் மோசமானவரும் ஆவார்.

'இந்தியாவுக்கு ராணுவம் வேண்டுமா, வேண்டாமா? அரசாங்கத்தை ஆயுதங்கொண்டு எதிர்ப்பதா, கூடாதா?' என்பவை, ஒரு நாளைக்கு நாம் முடிவுக்கு வந்தாக வேண்டிய முக்கியமான விஷயங்களே. காங்கிரஸ், அதனுடைய கொள்கையைப் பற்றியவரையில், இவைகளுக்கு ஓரளவு பதிலை அளித்திருக்கிறது. ஆனல், இப்பிரச்னைகள் முக்கியமானவைகளாகவே இருந்தாலும், சாதாரண மக்கள் அவ்வளவாகக் கவலைப்பட்டுக்கொண்டிருக்க வேண்டிய விஷயங்களல்ல இவை. கல்வியாளரோ அல்லது மாணவரோ அக்கறை கொள்ள வேண்டியதான அகிம்சைக்கும் இதற்கும் சம்பந்தமும் கிடையாது. மாணவனின் வாழ்க்கைக்குச் சம்பந்தமுடையதான அகிம்சைக்கும் பெரிய ராஜீய விஷயங்களுக்கும் சம்பந்தமில்லை. கல்வியில் அகிம்சை மாணவர்களுக்குள் உள்ள உறவுக்குப் பொருத்தமானதாக இருக்கவேண்டும். முழுச் சூழ்நிலையிலும் அகிம்சையின் மணம் கமழ்ந்துகொண்டிருக்குமானல், ஒன்ருகப் படித்துக்கொண்டிருக்கும் சிறுவர்களும் சிறுமிகளும் சகோதர சகோதரிகளாகச் சுயேச்சையாக வாழ்வார்கள். என்ருலும், தாங்களே கட்டுத்திட்டங்களையும் ஏற்படுத்திக்கொள்வார்கள். ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் பரஸ்பர மரியாதையும் பரஸ்பர நம்பிக்கையும் இருப்பதோடு பெற்ருேருக்கும் பிள்ளைகளுக்கும் இருக்கவேண்டியதான அன்பினல் பிணைக்கப்பட்டவர்களாகவும் இருக்க வேண்டும். இந்தப் பரிசுத்தமான சூழ்நிலையே அகிம்சையின் லட்சிய பாடமாகத் தொடர்ந்து இருந்து வரவேண்டும். இப்படிப்பட்டதோர் சூழ்நிலையில் வளர்ந்த மாணவர்கள், தங்களுடைய உதார குணத்திலும், விசாலமான நோக்கத்திலும், சேவைக்குள்ள விசேஷ ஆற்றலிலும் எப்பொழுதும் சிறந்து விளங்குவார்கள். இவர்களுக்கு இருக்கும் பலமான அன்பு சமூகத் தீமைகளையெல்லாம்

எரித்துவிடப் போதுமானதாக இருக்குமாகையால் சமூகத்தில் இருக்கும் தீமைகளால் இவர்களுக்கு எந்தவிதமான சங்கடமும் இராது. உதாரணமாக, குழந்தைப் பருவத்தில் விவாகஞ் செய்து விடுவது என்பதே இவர்களுக்கு வெறுப்பாக இருக்கும். தங்களுக்கு வரதட்சிணை கொடுக்கவேண்டும் என்று பெண்களின் பெற்றோருக்குக் கஷ்டம் உண்டாக்க எண்ணவும் மாட்டார்கள். இப்படிப்பட்டவர்கள் விவாகஞ் செய்துகொண்ட பிறகு தங்கள் மனைவிகளை அடிமைகள் என்றும், தங்கள் காம இச்சைகளைத் தணித்துகொள்வதற்கான சாதனங்களே அவர்கள் என்றும், எண்ண இவர்கள் எப்படித் துணிவார்கள்? இத்தகைய அகிம்சைச் சூழ்நிலையில் வளர்ந்த ஓர் இளைஞர், தம்முடைய அல்லது வேறு மதத்தைச் சேர்ந்த ஒரு சகோதரரிடம் போராட எவ்விதம் நினைப்பார்? எப்படி இருந்தாலும், இத்தகைய காரியங்களையெல்லாமோ, அல்லது சிலவற்றையோ செய்யும் யாருமே தாம் அகிம்சையைப் பின்பற்றுகிறவர் என்று சொல்லிக்கொள்ளவே மாட்டார்.

சுருங்கச் சொன்னால், விஷயம் இதுதான்: அகிம்சை இணையில்லாத சக்தி வாய்ந்த ஆயுதம். அதுவே வாழ்க்கையின் கதிமோட்சம்; அதுவே வீரர்களின் சின்னம். உண்மையில் அவர்களுடைய எல்லாமே அதுதான். கோழைக்கு எட்டவே எட்டாதது அது. மரக்கட்டை போன்ற அல்லது உயிரற்ற ஒரு தத்துவம் அன்று அது. ஆனால், அது உயிருள்ளதும், உயிர் அளிப்பதுமான சக்தி; ஆத்மாவின் விசேடச் சின்னம். இதனாலேயே எல்லாவற்றிலும் உயர்வான தருமமாக அது கூறப்படுகிறது. ஆகையால், கல்விப் போதனையில் ஈடுபட்டிருப்போரின் கையில் என்றும் வாடாத பரிசுத்தமான அன்பாகவும், ஒவ்வொரு காரியத்திலும் தன்னையே வெளிப்படுத்துவதாயிருக்கும் வற்றாத வாழ்க்கையின் ஊற்றாகவும் அது இருந்து வரவேண்டும். கெட்ட எண்ணம் என்பது அதன் முன்னால் நிற்க முடியாது. துவேஷம், கோபம், படுபகை போன்ற இருள் எல்லாம் அகிம்சைச் சூரியன் முன்பு மாய்ந்து விடுகின்றன. அதே போல, கல்வியில் அகிம்சை அதிகத் தெளிவாகவும் அதிக தூரமும் பிரகாசிக்கிறது; சூரியனை எவ்விதம் மறைத்துவிட முடியாதோ அதேபோல இப்பிரகாசத்தையும் மறைத்துவிட முடியாது. இந்த அகிம்சைச் சூழ்நிலையே வித்தியாபீடத்தில் நிறைந்துவிடும் போது குழப்பம், கஷ்டமான பிரச்னைகளெல்லாம் அவர்களைத் தொல்லைப்படுத்தமாட்டா.

—எங் இந்தியா - 6--9--1928.

# 11

# மிகத் தீவிரமான சக்திகள்*

இந்தியாவில் நாங்கள் அனுசரித்து வரும் முறையில் மோசடி, பொய் சொல்லுதல், ஏமாற்றுவது, பலாத்காரம், பொய்மை இவற்றின் கோரமான செயல்களுக்குச் சிறிதேனும் இடமில்லை. ஒவ்வொன்றும் வெளிப்படையாகவும் சந்தேகத்திற்கு இடம் வைக்காமலும் செய்யப்படுகின்றது. ஏனெனில், ரகசியம் என்பதையே சத்தியம் வெறுக்கிறது. எவ்வளவுக்கெவ்வளவு நீங்கள் வெளிப்படையாக இருக்கிறீர்களோ அவ்வளவுக்கவ்வளவு நீங்கள் உண்மையாகவும் இருக்க முடியும். சத்தியம், அகிம்சை இவற்றின் அடிப்படையில் வாழ்க்கையை அமைத்துக்கொண்டவர்களின் அகராதியில் தோல்வி அல்லது சோர்வு என்ற சொல்லுக்கு இடமே கிடையாது. என்றாலும் அகிம்சை முறை, எந்த உருவத்திலும் அல்லது எந்த வகையிலும் எதிர்த்து நிற்காத அல்லது செயலற்றதான முறையே அன்று. முக்கியமாக அது தீவிரமான இயக்க ஆற்றல் படைத்தது. ரத்தத்தைச் சிந்தும் ஆயுதங்களை உபயோகிப்பவரின் முறையைவிடத் தீவிரமானது. உலகின் சக்திகள் எல்லாவற்றையும்விடச் சத்தியமும் அகிம்சையுமே தீவிர இயக்க வன்மை கொண்டனவாகும். தமக்கு விரோதிகள் என்று தாம் நினைப்பவர்களை அழித்துவிட ஆயுதங்களை உபயோகிப்பவருக்கு இடையில் சற்று ஓய்வாவது வேண்டும். ஒவ்வொரு நாளும் சிறிது பொழுதாவது அவர் தம்முடைய ஆயுதத்தைக் கீழே வைத்தாகவேண்டும். ஆகையால், அந்த நாளின் குறிப்பிட்ட நேரத்திலாவது அவர் செயலற்றிருக்கிறார். சத்தியத்தையும் அகிம்சையையும் வழிபடுபவர் விஷயமோ அப்படியல்ல. இதற்கு முக்கிய காரணம் அவை வெளிப்படையில் தோன்றும் ஆயுதமல்ல. இந்த ஆயுதங்கள் மனித உள்ளத்திலேயே இருக்கின்றன. நீங்கள் விழித்திருந்தாலும் தூங்கினாலும், சாவதானமாக நடந்துகொண்டிருந்தாலும் அல்லது ஒரு விளையாட்டில் தீவிரமாக ஈடுபட்டிருந்தாலும், இந்த ஆயுதங்கள் அவற்றின் வழியில் தீவிரமாக வேலை செய்துகொண்டிருக்கின்றன. சத்தியம்,

---

* 1931-இல் லண்டனில் நடந்த இரண்டாவது வட்டமேஜை மகாநாட்டுக்குச் சென்றுவிட்டு மகாத்மா காந்தி இந்தியாவுக்குத் திரும்புகையில் பிரான்ஸ், சுவிட்ஜர்லாந்து முதலிய நாடுகளிலும் சில நாட்கள் தங்கினார். அப்பொழுது லாஸேனில் பியர்ரி சிரஸோல் என்பவர் காந்திஜியைச் சந்தித்து அகிம்சா தருமத்தின் தத்துவத்தைக் குறித்து நீண்ட நேரம் விவாதித்தார். சர்வதேசச் சமாதானத் தொண்டர் படையை அமைப்பதில் முக்கியமான பங்கு வகித்தவர் பியர்ரி சிரஸோல். அகிம்சையின் சக்தியைப் பற்றி மகாத்மா கூறிய இந்த விஷயம், பியர்ரி சிரஸோலுக்குக் அவர் அளித்த பதிலிலிருந்து எடுக்கப்பட்டதாகும்.

அகிம்சை என்ற ஆயுதங்களை முற்றும் பூண்டிருக்கும் ஒரு போர் வீரன் என்றும் இடைவிடாது தீவிரமாகச் செயலில் ஈடுபட்டு இருப்பான்.

—எங் இந்தியா - 31—12—1931

# 12

# மாறுதல் இல்லாக் கொள்கை

[1938 மார்ச் 25-ஆந் தேதி ஒரிஸ்ஸாவிலுள்ள டெலாங் என்ற இடத்தில் காந்தி சேவா சங்கம் துவக்கியபோது மகாத்மா காந்தி பேசியதன் சுருக்கமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

என்னைவிட மிக நோயுற்றிருப்பவரான நம் தலைவர் கிஷோர் லால்பாய், நீண்ட, சிறந்த பிரசங்கத்தைத் தயாரித்திருக்கிறார். நம்மிடையே இருந்துவரும் பரஸ்பர தப்பபிப்பிராயங்கள், நமக்குள் இருக்கும் தகராறுகள், ஒருவரையொருவர் அறிந்து கொண்டு சகித்துப் போக மறுப்பது போன்றவைகளையெல்லாம் விவரமாக எடுத்துக் கூறி, நமது கொள்கை நம்முடைய அன்றாட வாழ்க்கையில் மேலும் மேலும் பிரதிபலிக்காது போகுமாயின் அந்தக் கொள்கையால் என்ன பயன் என்றும் கேட்டார். ஒவ்வொரு நாளும் நமது லட்சியத்தை நோக்கி மேலும் முன்னேறிப் போய்க்கொண்டிருப்பதாக நாம் உணருகிறோமா? ஓர் ஆண்டிற்கு முன்னால் நாம் சந்தித்தபோது இருந்ததைவிட இன்று அதிக அகிம்சையோடு இருக்கிறோம் என்று நாம் உணருகிறோமா? எரிச்சலுக்கும் கோபத்திற்கும் நாம் சில சந்தர்ப்பங்களிலாவது இடங் கொடுக்காமல் இருந்தோமா? இத்தகைய கேள்விகளை நாம் திரும்பத் திரும்ப நம்மையே கேட்டுக்கொள்ள வேண்டும். ஏனெனில், அகிம்சை, சத்தியம் இவற்றின் பாதை கத்தி முனையைப் போன்று மிகக் கருக்கானது. அதை அனுசரித்து நடப்பது நமது அன்றாட ஆகாரத்தைவிட முக்கியமானது. நல்ல முறையில் உட்கொண்ட ஆகாரம் உடலைப் போஷிக்கும். நல்ல முறையில் அனுசரித்த அகிம்சை ஆத்மாவை வாழச் செய்கிறது. உடலுக்கான ஆகாரத்தை ஓர் அளவோடு குறிப்பிட்ட நேரத்தில்தான் நாம் உட்கொள்ள முடியும். ஆத்ம உணவான அகிம்சையையோ நாம் தொடர்ந்து உட்கொள்ள வேண்டும். இதில் தெவிட்டிப் போவது என்பது கிடையாது. லட்சியத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறேன் என்று ஒவ்வொரு நிமிடமும் நான் உணர்வுடன் இருப்பதோடு அந்த லட்சிய வகையில் என்னை நானே சோதித்துக்கொள்ளவும் வேண்டும்.

அகிம்சையின் முதல் படி, நம் அன்றாட வாழ்க்கையில் நமக்குள் உண்மையோடிருப்பதும், அடக்கம், சகிப்புத் தன்மை, உள் அன்பு ஆகியவற்றை நாம் வளர்த்துக்கொள்ளுவதுமே யாகும். நேர்மையே சிறந்த கொள்கை என்று ஆங்கிலத்தில் கூறுகிறார்கள். ஆனால், அகிம்சையைப்பற்றியவரையில் அது வெறும் கொள்கை மட்டுமன்று. கொள்கைகள் மாறலாம், மாறுகின்றன. அகிம்சை, மாறுதல் இல்லாத ஒரு கொள்கை. உங்களைச் சுற்றிப் பலாத்காரம் ஓங்கி இருக்கும்போது இதைக் கடைப்பிடித்தாக வேண்டும். பலாத்காரமற்றவரிடம் அகிம்சையை அனுசரிப்பது பெரிதன்று. அது அகிம்சைதானா என்று சொல்லத் தோன்றுகிறது. ஆனால், பலாத்காரத்திற்கு எதிரிடையாக அதை உபயோகிக்கும்போது இந்த இரண்டுக்குமுள்ள பேதத்தை ஒருவர் அறிய முடிகிறது. நாம் எப்பொழுதும் விழிப்புடனும், கண்காணிப்புடனும், அதற்கான முயற்சியுடனும் இருந்தாலன்றி இதை நாம் சாதிக்க முடியாது.

ஐக்கிய மாகாணக் கலவரங்கள் என் மனத்தை அதிகமாகப் பாதித்துவிட்டன. அகிம்சை வழியில் இதைப்பற்றி மௌலானா ஆஜாதுடனும், போஸ் சகோதரர்களுடனும் விவாதித்தேன். நாம் நமது லட்சியத்தையே நெருங்கிக்கொண்டிருப்பதற்குப் பதிலாக விலகிப் போய்க்கொண்டிருக்கிறோம் என உணர்ந்தேன். நாம் வலுவடைந்து வருகிறோம்; நமக்குள் குறைபாடுகள் இருந்தபோதிலும் நம் வாழ்நாளிலே நாம் சுயராஜ்யத்தைக் காண முடியும் என்று நம்புவதற்கான காரணத்தை ஹரிபுரா[1] எனக்கு அளித்தது. இந்த ஆண்டில் அந்தப்

1. 1938 பிப்ரவரி இரண்டாவது வாரத்தில் குஜராத்திலுள்ள ஹரிபுராவில் காங்கிரஸ் வருடாந்தர மகாநாடு நடந்தது. ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸ் தலைமை வகித்தார். அம்மகாநாட்டுச் சமயத்தில் ஐக்கிய மகாணத்திலும் பிகாரிலும் மந்திரி சபை நெருக்கடி உண்டாயிற்று. ஆட்சியில் இருந்த காங்கிரஸ் மந்திரிகள், அரசியல் கைதிகள் எல்லோரையுமே விடுதலை செய்துவிடும் உரிமை தங்களுக்கு உண்டு என்று வற்புறுத்தினர். வைசிராயின் ஆதரவுடன் அவ்விரு மாகாணங்களின் கவர்னர்களும் அதற்கு உடன்பட மறுத்தனர். இதனால் அவ்விரு மந்திரி சபைகளும் பிப்ரவரி 15–ஆம் தேதி ராஜீநாமாச் செய்தன. அதன் பேரில் வைசிராயின் குறுக்கீட்டைக் கண்டித்து, மந்திரிகளின் முடிவில் தலையிடுவதை நிறுத்துவது பற்றி வைசிராய் தமது போக்கை மாற்றிக்கொள்ள வேண்டும் என்று ஹரிபுரா காங்கிரஸ் தீர்மானம் செய்தது. தமது நிலைமையை விளக்கி வைசிராய் பிப்ரவரி 22–ஆம் தேதி ஓர் அறிக்கை வெளியிட்டார். மறுநாளே மகாத்மா அதற்குப் பதில் சொல்லும் முறையில் ஓர் அறிக்கை வெளியிட்டார். இதன் பலனாக பிப்ரவரி மாதக் கடைசியில் ஐக்கிய மாகாண, பிகார்ப் பிரதம மந்திரிகள் ஹரிபுராவிலிருந்து ஊர் திரும்பியதும், அம் மாகாணங்களின் கவர்னர்கள் பிரதமர்களை அழைத்துப் பேசி சமரசமான முடிவுக்கு வந்தார்கள். இவ்விதம் ஹரிபுரா காங்கிரஸ் ஆரம்பத்தில் ஏற்பட்ட பிகார், ஐக்கிய மாகாண மந்திரி சபைகள் நெருக்கடி தீர்ந்தது. அதோடு காங்கிரஸிலிருந்த பல

பலத்தை நாம் அடைந்துவிட வேண்டும் என்று நான் எண்ணினேன். ஆனால், அலாகாபாதிலும் மற்ற இடங்களிலும் நடந்த கலவரங்கள்[2] எனக்குப் பெரிய அதிர்ச்சியை உண்டாக்கிவிட்டன. போலீஸ், ராணுவ உதவியை நாம் நாட வேண்டி வந்துவிட்டது வெட்கப்படவேண்டியதாகும்.

காங்கிரஸின் தலைவரை வைசிராய் அழைத்து, சமரசத்திற்கான காங்கிரஸின் நிபந்தனைகளைக் கூறும்படி கேட்கிறார் என்று வைத்துக்கொள்வோம். 'நிர்வாகத்தை வகிக்கக்கூடிய பலம் காங்கிரஸிற்கு இருக்கிறது, பிரிட்டிஷார் போகலாம்' என்று சொல்லக்கூடிய திடம் அவருக்கு இருக்கும் என்று நினைக்கிறீர்களா? 'போலீஸும் ராணுவமும் இல்லாமலேயே நாம் சமாளித்துக்கொள்ள முடியும், சுதேச மன்னர்கள், ஜமீன்தார்கள், முஸ்லிம்கள் இவர்களுடன் சமரசத்திற்கு வந்துவிட நம்மால் முடியும் என்று நாம் அவரிடம் கூறமுடியும் என்று நினைக்கிறீர்களா? இவர்களுடன் எளிதில் நாம் சமரச முடிவுக்கு வந்துவிட முடியும் என்று நாம் உளமாறக் கூற முடியாது என்றே நான் அஞ்சுகிறேன். என்றாலும், நம்முள் உண்மையான அகிம்சை இருக்குமாயின், இவற்றைச் சொல்லவும், செய்துவிடவும் நம்மால் முடியும்.

அகிம்சை, பலமுள்ளவர்களின் ஆயுதமாகவே இருக்க வேண்டுமாதலால், அது பலவீனர்களின் ஆயுதமாகவே இருக்

---

தரப்பட்ட கருத்துள்ளோரிடையே இருந்த வேற்றுமை நீங்கி ஒற்றுமை ஏற்பட்டது இதனாலேயே காந்திஜி, ஹரிபுரா தமக்கு நம்பிக்கையை அளித்தது என்கிறார்.

2. 1938 ஆரம்பத்தில் அலாகாபாதில் நடந்த வகுப்புக் கலவரங்களையே மகாத்மா குறிப்பிடுகிறார். 'நமது தோல்வி' என்ற தலைப்பில் 1938 மார்ச் 26-ஆம் தேதி 'ஹரிஜன்'-இல் காந்திஜி இதைப்பற்றி எழுதியதாவது: "காங்கிரஸ் தலைமைக் காரியாலயம் இருக்கும் அலாகாபாதில் வகுப்புக் கலவரங்கள் ஏற்பட்டு போலீஸ் உதவியையும் ராணுவத்தின் உதவியையும்கூட அழைக்க நேர்ந்திருப்பது, பிரிட்டிஷ் அதிகாரத்திற்குப் பதிலாக ஆட்சி அதிகாரத்தை வகிக்க இன்னும் காங்கிரஸ் தகுதியைப் பெறவில்லை என்பதையே காட்டுகிறது. இந்த உண்மை எவ்வளவுதான் வருந்தத்தக்கதாய் இருப்பினும், அப்பட்டமான இந்த உண்மையை ஒப்புக்கொண்டு சமாளிப்பதே சிறந்ததாகும்.

............காரியத்தைச் செய்து காட்டக் காங்கிரஸ் அழைக்கப்படுமானால், அப்படிச் செய்யக் காங்கிரஸுக்கு இச்சமயம் தகுதியில்லை என்பதை எந்தக் காங்கிரஸ்காரரும் சந்தேகிக்க முடியாது. அதற்குத் தகுதியிருந்தால் அழைப்பு வரும் வரையில் அது காத்துக்கொண்டிருக்காது. ஆனால், காங்கிரஸ் அப்படிப்பட்ட ஒரு ஸ்தாபனமாய் வேகமாக ஆகிக்கொண்டிருக்கிறது என ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் நம்புகிறார். இந்த உண்மைக்கு ஆதாரமாக ஹரிபுராவின் பிரமாதமான வெற்றியும் எடுத்துக் காட்டப்படும். கலகங்களும். நான் குறிப்பிடக்கூடிய மற்றும் சில காரியங்களும் நின்று, காங்கிரஸ் பலத்திலிருந்து மேலும் அதிக பலத்திற்கு உண்மையிலேயே வளர்ந்துகொண்டிருக்கிறதா என்று நம்மை நாமே கேட்டுக்கொள்ளும்படியே செய்யும்............"

கிறதா என்று உங்களைக் கேட்பதோடு என்னையும் கேட்டுக் கொள்கிறேன். பலவீனர்களின் கையிலும் அது ஓரளவுக்கு வேலை செய்ய முடியும் என்பது உண்மை. நம்மிடத்தில் அது அவ்விதமே வேலை செய்திருக்கிறது. ஆனால், அது நமது பலவீனத்திற்கு ஒரு மறைப்பாகிவிடும்போது அது நம்மை வீர மற்றவர்கள் ஆக்கிவிடுகிறது. இவ்விதம் ஆண்மையற்றவர்களாக இருப்பதைவிட உடல் வலிவை உபயோகிப்பவர்களின் வீரமே மேல். கோழையாக இருப்பதைவிட போராடிச் சாவது சிறந்தது. ஆரம்பத்தில் நாம் எல்லோருமே மிருகங்களாக இருந்திருக்கக்கூடும். இவ்விதம் மிருகத்திலிருந்து மெல்ல மெல்லப் பரிணமித்து மனிதரானோம் என்பதை நான் நம்பத் தயார். இவ்விதம் மிருக பலத்துடன் நாம் பிறந்தோம். ஆனால், நம்முள் இருக்கும் கடவுளை அறிவதற்காக நாம் மனிதராகப் பிறந்திருக்கிறோம். இதுவே மனிதனுக்கு உள்ள உரிமை; மிருகப் படைப்பிலிருந்து இதுவே மனிதனை வேறுபடுத்திக் காட்டுகிறது. ஆனால், கடவுளை அறிவதற்கு எல்லா உயிர்களிலும் அவனைக் காணவேண்டும். அதாவது, எல்லாப் படைப்பையும் போலவேதான் நாமும் அமைந்திருக்கிறோம் என்பதை உணர வேண்டும். நாம் முழு விருப்புடன் பலத்தை மறுத்து, நம் ஒவ்வொருவரிடமும் இருந்து வரும் அகிம்சை உணர்வை விருத்தி செய்து கொண்டாலன்றி இது சாத்தியமே அல்ல. அந்தத் திடத்திலேயே இது கைகூடும். பலமுள்ளவர்களுக்கான அகிம்சை நம்மிடம் இருக்கிறதா? நாம் விரும்பினால், இது அசாத்தியமான லட்சியம் என்று வெறுத்துவிட்டு அதற்குப் பதிலாகப் பலாத்கார முறையை மேற்கொள்ளலாம். ஆனால், எது வேண்டும் என்று நாம் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும்.

பலமுள்ளவர்களின் ஆயுதமே இது என்றால், அப்பொழுது சில தவிர்க்க முடியாத முடிவுகள் இருக்கின்றன. கலவரங்களைச் சமாளிப்பது நம்மால் முடிவதோடு ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே அதிகரித்துக்கொண்டு வரும் பகைமையையும் நிறுத்த வேண்டும். இக்கலவரங்களை அடக்க அகிம்சைவாதிகளான நாம் என்ன செய்திருக்கிறோம் என்று நீங்கள் கேட்கலாம். சரி, கலவரங்களைப் போக்குவது முக்கியமாகக் காங்கிரஸ் கமிட்டியின் வேலை. இது போன்ற நெருக்கடியில் சேவை செய்ய நம்மிடம் ஆயிரக்கணக்கான தொண்டர்கள் இருக்கவேண்டும். 1921-ஆம் ஆண்டில் தொண்டர்கள் எடுத்துக்கொள்ளவேண்டிய பிரதிக்ஞைகளைத் தயாரித்தோம். எண்ணத்திலும், பேச்சிலும், காரியத்திலும் ஒரு தொண்டர்

அகிம்சையோடு இருக்கவேண்டும் என்று அதில் சேர்க்கப் பட்டது. அப்பொழுது தலைவராயிருந்த ஹகீம் சாகிப் அஜ்மல் கான், கிலாபத் தொண்டர்களும் அதே பிரதிக்ஞையை ஏற்றுக்கொள்ளும்படி செய்தார். கிலாபத் மகாநாடு இந்தப் பிரதிக்ஞையை ஏற்றுக்கொள்ளும்படி செய்தது சற்றுச் சிரமமான காரியமாகவே இருந்தது. ஒரு தொண்டர், பேச்சிலும் செயலிலும் அகிம்சையோடு இருப்பது என்பது சரிதான் என்று சில முஸ்லிம்கள் கூறினார்கள்; ஆனால், எண்ணத்தில் அகிம்சையோடு இருப்பார்களென்று எதிர் பார்ப்பது நடக்காத காரியம் என்றார்கள். அவர்களுடைய மனத்தை ஆட்கொள்ள நான் விரும்புகிறேன் என்றனர். ‘இல்லை’ என்றேன் நான். ‘ஆட்கொள்ள வேண்டியது அகிம்சையேயன்றி எந்தத் தனிப்பட்ட நபருமல்ல’ என்றும் கூறினேன். முடிவில் பிரதிக்ஞையை ஏற்றுக்கொண்டனர். ஆனால், இந்தப் பிரதிக்ஞையை 17 ஆண்டுகளுக்கு முன்னால் நாம் ஏற்றுக்கொண்டிருந்தும், அத்தகைய அகிம்சையை ஏற்ற தனால் அசைக்கவொண்ணாத பலம் என்ன இருக்கவேண்டுமோ அதை நாம் வளர்த்துக்கொள்ளவில்லை. அத்தகைய அகிம் சைச் சேனையை உருவாக்க நாம் அக்கறைப்படவில்லை; சிரமம் எடுத்துக்கொள்ளவில்லை என்பதே அதற்குக் காரணம். அப்படி நம்மால் செய்ய முடியவில்லை என்றால், பிரதிக்ஞையை நம்மால் நிறைவேற்றி வைக்க முடியவில்லையாயின், நமது நிலையைப் பற்றித் திரும்ப யோசித்துக்கொள்ளுவதே நல்லது. பிர திக்ஞை இன்னும் இருந்து வருகிறது; காகிதத்திலேயே அது இருக்கிறது என்பதே வருந்தத்தக்க விஷயம். பிரதிக்ஞை யில் கோருவதுபோல் போதிய அளவுக்கு அகிம்சைச் சேனை நம்மிடம் இருந்திருக்குமானால், இந்தக் கலவரங்களே ஏற்பட் டிரா. கலகங்களே மூண்டிருந்தாலும் அவற்றைத் தணித்திருப் போம். அம்முயற்சியில் நாமே உயிர்த்தியாகமும் செய்திருப் போம். இவ்விதம் உயிர் நீத்த ஒருவரைப்பற்றி மாத்திரமே நாம் கேள்விப்பட்டோம். *அவருடைய உயிர்த் தியாகத்தைப்

* 1938 ஆரம்பத்தில் உத்திரப் பிரதேசத்தில் அலாகாபாதிலும் மற்றும் சில இடங் களிலும் வகுப்புக் கலவரங்கள் மூண்டபோது பிரபல காங்கிரஸ்வாதியான ஸ்ரீ பசுபதி நாத குப்தா வீரத்துடன் கலவரம் செய்தவர்களிடையே புகுந்து சமாதானத்தை உண்டாக்கப் பாடுபட்டார். அத்தீரச்செயலில் அவர் பலமான கத்திக் குத்துக்கு ஆளானார். 1938 மார்ச் 26-ஆம் தேதி ‘ஹரிஜன்’ — இல் மகாத்மா எழுதிய கட் டுரையிலும் ஸ்ரீ குப்தாவின் உயரிய சேவையைப் பாராட்டியிருக்கிறார். “சமாதானம் ஏற்படும்படி செய்த முயற்சியில் ஒரு வீர பசுபதிநாத குப்தாவுக்குப் பதில் நூற்றுக்கணக்கான குப்தாக்களை உண்டாக்குவது நம்மால் முடிந்திருக்க வேண்டும்” என்று காந்திஜி எழுதினார்.

போற்றுகிறேன். இதே போன்று இன்னும் பல குப்தாக்கள் உயிரைத் தியாகம் செய்திருப்பராயின் என் உள்ளம் ஆனந்தத்தால் பூரித்துப் போயிருக்கும்.

இதெல்லாம் வெறுங் கனவு என்று நீங்கள் நினைக்கிறீர்களா? அத்தகைய அகிம்சைச் சேனையைக் கொண்டும் கலகங்களை அடக்க நம்மால் முடியாது என்று நினைக்கிறீர்களா? உண்மையிலேயே நீங்கள் அப்படித்தான் நினைப்பதாயின், அமைதியாக ஆழ்ந்து சிந்தித்த பிறகு நீங்கள் வந்துள்ள முடிவு இதுவேயென்றால், சுயராஜ்யத்தையும் அகிம்சையினால் அடைய முடியாது என்ற முடிவுக்கே நீங்கள் வரவேண்டும்.

—ஹரிஜன் - 2—4—1938

# 13

# அபாரமான சக்தி

நான் செய்யும் காரியம் ஒவ்வொன்றுக்கும் வேராக இருப்பது அகிம்சை. ஆகையால், நான் இப்பொழுது என் முழுச் சக்தியையும் கண்கூடாக உபயோகித்து வேலை செய்து வரும் மூன்று பொதுஜன வேலைகளுக்கும் அகிம்சையே அடிப்படை. பொதுவாகத் தீண்டாமை, கதர், கிராமப் புனருத்தாரணம் ஆகிய மூன்றுமே அந்த வேலைகள். ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை என்னுடைய நான்காவது ஆசை. ஆனால், வெளிப்படத் தோன்றும் அதன் போக்கைக் கொண்டு அதில் தோல்வி அடைந்துவிட்டேன் என்பதை ஒப்புக்கொண்டுவிட்டேன். இதிலிருந்து நான் செயலற்றிருக்கிறேன் என்று பொது மக்கள் கருதிவிட வேண்டாம். என் வாழ்நாளில் இராது போனாலும் நான் இறந்துபோன பிறகாவது, சமூகச் சமரசத்திற்காகப் பாடு படாமல் நான் இருந்ததே இல்லை என்பதற்கு, ஹிந்துக்களும் முஸ்லிம்களுமே சாட்சிகளாக இருப்பார்கள் என்பதை அறிவேன்.

அகிம்சை ஒரு கொள்கையாக இருக்க வேண்டுமாயின், அது எல்லாவற்றிலும் பரவியதாக இருக்கவேண்டும். என்னுடைய காரியங்களில் ஒன்று அகிம்சையோடும் மற்றவை பலாத்காரத்தோடும் இருக்க முடியாது. அது கொள்கையாக இருக்கலாமேயன்றி ஜீவ சக்தியாக இருக்க முடியாது. அப்படி இருக்கும்போது அபிஸீனியாமீது இத்தாலி*

* ரோம சாம்ராஜ்யத்தைத் திரும்ப அமைத்துவிட வேண்டும் என்ற வெறி கொண்ட இத்தாலிய சர்வாதிகாரி முஸோலினி நாடு பிடிக்கும் வெறியில் அபிஸீனியா என்ற எதியோபியாமீது 1935-இல் படையெடுத்து அந்நாட்டை அடிமைப் படுத்திக் கொண்டார். இரண்டாவது உலக யுத்தத்தில் இத்தாலி தோல்வியடைந்ததும் எதியோபியா இத்தாலியிடமிருந்து விடுபட்டுச் சுதந்திர நாடாயிற்று.

தொடுத்திருக்கும் போரைக் குறித்து நான் அசிரத்தையாக இருப்பதற்கில்லை. ஆனால், என்னுடைய அபிப்பிராயத்தை வெளியிட்டு, நாட்டுக்கு வழிகாட்ட வேண்டும் என்று வற்புறுத்தி வந்த அழைப்புகளுக்கெல்லாம் ஒன்றும் கூறாமல் இருந்தேன். சத்தியம், அகிம்சை இவற்றை முன்னிட்டுத் தன்னைத்தான் அடக்கிக்கொள்வது எப்பொழுதும் அவசியமாகிறது. ஒரு தேசீயச் சமுதாயம் என்ற வகையில் இந்தியா ஒரு குழுவாகவோ அல்லது நாடு முழுவதுமாகவோ அகிம்சையை மேற்கொண்டிருந்திருக்குமாயின், அதற்கு வழிகாட்டிச் செல்ல நான் தயங்கியிருக்க மாட்டேன். ஆனால், இந்நாட்டில் கோடிக் கணக்கான மக்களிடம் எனக்குச் செல்வாக்கு இருந்த போதிலும், அதிலுள்ள ஆழ்ந்த, வெட்ட வெளிச்சமான குறைபாடுகளையும் அறிவேன். தொன்று தொட்டே இந்தியா அகிம்சைக் கொள்கையை வழிவழியாக ஏற்று வந்திருக்கிறது. ஆனால், அதன் பண்டை வரலாற்றில் எனக்குத் தெரிந்தவரை செயல் முறையில் நிறைவான அகிம்சை நாடெங்கும் பரவி இருந்ததாகத் தெரியவில்லை. என்றாலும், மனித வர்க்கத்திற்கு அகிம்சையை உபதேசிக்கும் பாக்கியம் இந்தியாவுக்கு இருக்கும் என்பது என்னுடைய அசைக்க முடியாத நம்பிக்கை. இது நிறைவேறுவதற்கு எத்தனையோ யுகங்கள் ஆகலாம். ஆனாலும், இக்காரியத்தை நிறைவேற்றி வைப்பதில் வேறு எந்த நாடும் இந்தியாவை முந்திக்கொண்டுவிடாது என்பதே எனது துணிபு.

அது எப்படியாயினும் இணையற்றதான இந்தச் சக்தியின் தன்மையைக் குறித்துச் சிந்திப்பது இச்சமயத்திற்குப் பொருத்தமானதாகும். அன்றொரு நாள் நண்பர்கள் உருப்படியான மூன்று முக்கியமான கேள்விகளைக் கேட்டார்கள்.

1. போதிய ஆயுதபலமில்லாத அபிஸீனியா, அகிம்சையை அனுசரிப்பதாக இருந்தால், ஆயுதபலம் மிக்கதான இத்தாலிக்கு எதிராக என்ன செய்யக்கூடும்?

2. சர்வதேச சங்கத்தின் மிகப் பலமுள்ளதும் சக்தி வாய்ந்ததுமான உறுப்பு நாடான இங்கிலாந்து, நீங்கள் கருதுகிற முறையில் (இங்கிலாந்து) அகிம்சையை அனுசரிப்பதாக இருந்தால், எதற்கும் துணிந்த இத்தாலிக்கு எதிராக என்ன செய்யக்கூடும்?

3. நீங்கள் கருதுகிற வகையில் இந்தியா திடீரென்று அகிம்சையை மேற்கொள்ளத் தொடங்கிவிட்டால் இந்தியா என்ன செய்யக்கூடும்?

இக்கேள்விக்குப் பதில் சொல்லுவதற்கு முன்னர் நான் அறிந்திருக்கும் வகையில் அகிம்சையைப்பற்றிய ஐந்து எளிய சூத்திரங்களைக் கூறுகிறேன்:

(அ) மனித யத்தனத்தில் முடிந்த அளவு தன்னைத் தானே பூரணமாகத் தூய்மையாக்கிக்கொள்வதே அகிம்சை யின் உட்கருத்து.

(ஆ) அகிம்சையின் பலம் ஆளுக்கு ஆள், அவரவர் திறமைக்கு ஏற்ற அளவில் இருக்கிறது; ஆனால் அகிம்சையை அனுசரிப்பவர் பலாத்காரத்தை உபயோகிக்கும் உறுதியில் அது இல்லை.

(இ) விதி விலக்கு எதுவுமின்றி அகிம்சை பலாத்காரத் தைவிட உயர்வானது. அதாவது, அகிம்சையோடு இருப்பவ ருக்கு இருக்கும் சக்தி, அவரே பலாத்காரத்தை உபயோகிக்க முற்படும்போது அவருக்கு ஏற்படும் சக்தியைவிட எப்பொழு தும் அதிகமானதாகவே இருக்கிறது.

(ஈ) அகிம்சையில் தோல்வி என்பதற்கே இடமில்லை; பலாத்காரத்தின் முடிவு நிச்சயமாகத் தோல்வியே.

(உ) வெற்றி என்ற சொல்லை அகிம்சைக்கும் உபயோ கிக்கலாமெனின், அகிம்சையின் முடிவு நிச்சயமான வெற்றியே யாகும். உண்மையில் எங்கே தோல்வியின் எண்ணமே இல் லையோ அங்கே வெற்றியின் எண்ணமும் கிடையாது.

இந்தச் சூத்திரங்களைக் கொண்டே மேலே காணும் கேள்வி களுக்குப் பதில் சொல்லிவிடலாம்.

1. அபிஸீனியா அகிம்சையை அனுசரிப்பதாயிருந்தால் ஆயுதங்களை வைத்துக்கொள்ளாது; அவை தேவையுமில்லை. படைப் பலம் கொண்டு தலையிட வேண்டும் எனச் சர்வதேச சங்கத்திற்கோ அல்லது வேறு எந்த வல்லரசுக்கோ அது வேண்டுகோளையும் அனுப்பாது. புகார் சொல்லப்படுவதற்கே அது இடம் வைத்துக்கொள்ளாது. அபிஸீனியர்கள் ஆயுத பலங்கொண்டு எதிர்க்கவில்லையானால், விரும்பியோ அல்லது பலவந்தத்தின் காரணமாகவோ ஒத்துழைப்பையும் அளிக்க மறுத்துவிடுவார்களானால், வென்று சாதிப்பதற்கு இத்தாலிக்கு எதுவும் இராது. அந்த நிலையில் அந்நாட்டை இத்தாலி ஆக்கிர மித்துக்கொள்வது அதன் ஜனங்களையல்ல, அதன் நிலப் பரப்பைத்தான். இத்தாலியின் உண்மையான நோக்கம் இது அல்லவே அல்ல. அவ்வழகிய நாட்டின் மக்கள் தனக்கும் அடி பணிய வேண்டும் என்பதே அதன் விருப்பம்.

2. ஆங்கிலேயர்கள், உள்ளத்தில் அகிம்சையையே கொள்ளும் ஒரு நாட்டினராக விளங்கினுல், அவர்கள் ஏகாதிபத்தியத்தைத் துறந்துவிடுவார்கள்; ஆயுத பலத்தை உபயோகிப்பதையும் விட்டுவிடுவார்கள்; அத்தகைய துறவின் காரணமாக ஏற்படும் உயர்நெறி இத்தாலியை நடுங்க வைக்கும்; அதன் கொடிய நோக்கங்களையும் அது விருப்பத்துடனேயே விட்டுவிடும். இங்கிலாந்து அப்போதுதான் நான் வகுத்துள்ள சூத்திரங்களுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கும். இவ்விதம் ஏற்படும் விளைவுகள் எக்காலத்திலுமே கண்டறியாததோர் அற்புதமாகத் திகழும். என்ருலும், அகிம்சை வெறுங் கனவாக இல்லாதிருக்குமாயின், இத்தகைய காரியம் என்ருவது, எங்கேயாவது நிகழ்ந்தே தீரும்; அந்த நம்பிக்கையிலேயே நான் வாழ்கிறேன்.

3. கடைசிக் கேள்விக்குப் பின்வருமாறு பதில் சொல்லலாம்: நான் கூறியிருப்பதைப் போல அகிம்சையின் முழுப் பொருளின்படி ஒரு தேசீயச் சமுதாயம் என்ற வகையில் இந்தியா அகிம்சையைப் பின்பற்றவில்லை. பலாத்காரத்தை உபயோகிக்க அதற்குச் சக்தியும் இல்லை. இது, ஆயுதங்களில்லை என்பதால் அன்று. ஆயுதங்களைக் கையில் வைத்திருக்கவேண்டும் என்பது வீரர்களுக்கு அவசியமில்லை. இந்தியாவின் அகிம்சை, பலவீனத்தினுல் ஏற்பட்ட அகிம்சை. இந்தப் பலவீனத்தைத் தன்னுடைய அன்ருடக் காரியங்கள் பலவற்றில் அது காட்டிக்கொண்டும் வருகிறது. உலகத்தவர் கண்ணுக்கு அது அழிவுற்று வரும் ஒரு நாடாகத் தோன்றுகிறது. இதை நான் ராஜீயக் கருத்துடன் மாத்திரம் சொல்லவில்லை. முக்கியமாக அகிம்சை, ஒழுக்கக் கருத்துடனும் கூறுகிறேன். உடல் வலிவால் எதிர்க்கும் திறமையும் அதற்குப் போதாது. பலத்தைப்பற்றிய உணர்வே அதற்கு இல்லை. தனது பலவீனத்தைப்பற்றிய உணர்வு ஒன்றே அதற்கு இருக்கிறது. இதைவிட இந்தியா வேறு விதமாக இருந்திருக்குமானுல், வகுப்புப் பிரச்னையோ அல்லது ராஜீயப் பிரச்னையோ தோன்றி இராது. தன்னுடைய பலத்தைப்பற்றிய உணர்வில் அகிம்சையோடு இந்நாடு இருந்திருக்குமானுல், வெற்றியடைந்த ஆங்கிலேயர்கள் நம் நம்பிக்கைக்கு உரியவராயிருப்பார்கள். நமக்குத் தோன்றியவாறு ராஜீய விஷயங்களைப்பற்றி நாம் பேசலாம்; ஆங்கில ஆட்சியாளர் மீது நியாயமாகவும் குற்றஞ் சாட்டலாம். ஆனுல், இந்தியர்களான நாம், தாக்குவதை வெறுக்கும் சக்திவாய்ந்த மக்கள்

என்று ஒரு கண நேரமாயினும் நம்மை நினைத்துக் கொள்ளுவோமானல், சிப்பாய்களாயிருந்தாலும், வர்த்தகர்களா யிருப்பினும் அல்லது ஆளுவோராக இருந்தாலும், ஆங்கிலேய ருக்குப் பயப்படுவதை நாம் விட்டொழித்துவிட வேண்டும். அவர்களுக்கும் நம்மிடம் அவநம்பிக்கை இருக்கக்கூடாது. ஆகையால், நாம் உண்மையிலேயே அகிம்சைவாதிகளாகி விடுவோமானல், நாம் செய்யும் எல்லாக் காரியங்களிலும் ஆங்கிலேயரையும் நம்முடன் கொண்டு செல்ல வேண்டும். அதாவது, நாம் கோடிக்கணக்கில் இருப்பதால் உலகில் நேர்மை மிகுந்த பெரிய சக்தியாக இருப்போம்; நட்போடு கூடிய நம் சொல்லுக்கு இத்தாலியும் செவி சாய்க்கும்.

என்னுடைய வாதம், என்னுடைய கோட்பாடுகளை நிரு பிக்கக் கூறப்படும் பலமற்றதும், குழப்பமானதுமான முயற்சி யாகத் தோன்றும். அது சரியானது எனின், தனக்குத் தானே நிரூபித்துக்கொள்ளும் என்பதை வாசகர்கள் இதற் குள் அறிந்திருப்பார்கள் என நம்புகிறேன்.

க்ஷேத்திர கணிதத்தை அறிந்துகொள்ளும் கண் எனக் குத் திறக்கும் வரையில் *யூக்ளிடின் பன்னிரண்டு சூத்திரங் களையும் நான் திரும்பப் படிக்கப் படிக்க என் மூளை குழம்பிக் கொண்டுதான் இருந்தது. என் கண் திறந்தவுடன் அறிந்து கொள்வதற்கு க்ஷேத்திர கணிதம் மிகவும் எளிதாகி விட்டது. அகிம்சை விஷயத்திலும் அதேபோலத்தான். ஓர் எல்லைக்கு மேல் அது நம்பிக்கையையும் அனுபவத்தையும் பொறுத்ததேயன்றி ஏது எடுத்துக்காட்டுகளுக்கும் உட்படாதது. நம்பிக்கை ஏற்படாத வரை ஓர் அதிசயம் நிகழுவதற்கு உலகம் காத்துக்கொண்டிருக்க வேண்டியதே. அதாவது, பெருத்த அளவில் அகிம்சையை மக்கள் கண் முன்பு செய்து காட்டவேண்டும். அகிம்சை மனித இயல்பிற்கே மாருனது, தனிப்பட்டவரிடமே அது பொருந்தி இருக்கும் என்கிருர்கள். அப்படியானல், இனம் என்ற வகையில் மனிதனுக்கும் மிருகத் திற்கும் பேதம் எங்கே இருக்கிறது?

—ஹரிஜன் — 12—10—1935.

* யூக்ளிட் – கிரேக்க கணித நிபுணர். இவர் கி. மு. மூன்ரும் நூற்ருண் டில் இருந்தவர். ப்ரோக்லஸ் (கி. பி. 412 - 488) என்பவர் கொடுக்கும் தகவலைக் கொண்டுதான் அவர் வாழ்ந்த காலம் தெரிகிறது. எகிப்து நாட்டரசனை முதலாம் தாலமி (கி. மு. 323 - 285) காலத்தவர் இவர். அலெக்ஸாண்ட்ரியாவில் இருந்த கணித நூல் ஆராய்ச்சிக் கழகம் இவர் நிறுவியதே. இவர் ஜியாமிதி (க்ஷேத்திர கணிதம்) கணிதத்தை விளக்கும் 13 பிரிவுகள் அடங்கிய ஜியாமிதிக சூத்திரங்களை வகுத்தவர். இத்துடன் இரண்டு தனிப் பிரிவுகளும் இவர் இயற்றியன வாகக் கூறப்படினும், பின்னர் வாழ்ந்த ஹிப்ஸைக்கிளிஸ் என்பவருடையனவாகும் அவை.

# 14

# அன்பிற்கும் மேலானது

[டாக்டர் தர்மானின் தலைமையில் அமெரிக்க நீகிரோக்களின் தூதுக் குழு ஒன்று மகாத்மா காந்தியைக் கண்டு பேசியது. அப்பொழுது காந்திஜிக்கும் அவர்களுக்குமிடையே நடந்த பேச்சைக் குறித்து உடனிருந்த ஸ்ரீ மகாதேவ தேசாய் 'ஹரிஜன்' பத்திரிகையில் பிறகு எழுதினார். அகிம்சையைப்பற்றி நடந்த விவாதத்தின் அப்பகுதி கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

"உங்கள் கருத்தின்படி அகிம்சை ஒரு நேரடி நடவடிக்கை முறையா?" என்று டாக்டர் தர்மான் கேட்டார்.

"அது ஒரு முறையல்ல; அது ஒன்றே முறை" என்றார் காந்திஜி.

"நேரடி நடவடிக்கை என்ற சொல் தொடரை அதன் சாதாரணப் பொருளோடு நிறுத்திவிடவில்லை. ஆனால், நேரடியான செயல் அதிலிருந்து வெளிப்படாவிடில், என் மனத்தில் அகிம்சை என்பதற்கு அர்த்தமே இல்லை. உலகிலேயே அது மகத்தானதும், செயல்புரியக் கூடியதுமான ஒரு சக்தியாகும். யாரும் செயலற்று அகிம்சையோடு இருக்க முடியாது. உண்மையில், அகிம்சையின் மூலக் கருத்து வெளிப்பட வேண்டும் என்பதற்காகவே 'பலாத்காரமின்மை' என்ற பெயரை உண்டாக்கினேன். 'இன்மை' என்ற எதிர்மறையான விகுதி அச்சொல்லில் இருந்தாலும் அது எதிர்மறையான சக்தி அன்று. மேலெழுந்தவாரியாகப் பார்த்தால், வாழ்க்கையில் சண்டையும் ரத்தக்களரியுமே சூழ்ந்திருக்கின்றன. ஓர் உயிர் இன்னும் ஒன்றைக் கொன்று வாழ்கிறது. ஆனால், பல்லாண்டுகளுக்கு முன்னர் உண்மைதான் என்ன என்பதை ஊடுருவி ஆராய்ந்த பெரிய மகான் யாரோ ஒருவர், 'மனிதன் தன்னுடைய பிறவிப் பயனை அடைவதும், உடனிருக்கும் மற்றவர்களுக்குத் தனது கடமையைச் செய்ய முடிவதும் அகிம்சையினாலேயேதான்; சண்டையினாலும் பலாத்காரத்தினாலும் அல்ல' என்றார். மின்சாரத்தையும்விட அதிக ஆக்கச் சக்தியுடையது இது; வானத்துச் சக்தியைவிட வலிமையுள்ளது. அகிம்சையினுள் அடங்கியிருக்கும் ஒரு சக்தி தானே இயங்கவல்லது. [1]பால் முனிவரின் கருத்தோடு கவனித்

---

1. ஸெயிண்ட் பால் – இன்முகத்துடன் துன்பங்களை ஏற்று, கடைசியில் கிறிஸ்தவ தருமத்தை ரோம் நாட்டவர்களுக்குப் போதித்துத் தம் உயிரையும் தியாகம் செய்த கிறிஸ்து அடியார்களில் தலையாயவர். இளமையில் இவருக்கு ஸால் என்ற பெயரே இருந்தது. ஸெர்ஜியஸ் பால்ஸ் என்பவரைத் தம் கொள்கைக்கு மாற்றியதால் இப்பெயர் ஏற்பட்டதாம். இவருடைய சின்னங்கள் வாளும்

தால் அகிம்சை ‘ அன்பு ’ என்று பொருள்படுகிறது. பால் முனிவரின் அழகான விளக்கம் நடைமுறைக் காரியங்களுக்குப் போதுமானது என்று நான் அறிவேன். ஆயினும், பால் முனிவர் விவரித்த ‘ அன்பு ’க்கும் மேற்பட்டது இது. மனித வர்க்கத்தையேயன்றி ஜீவராசி எல்லாவற்றையுமே உள்ளே கொண்டது அகிம்சை. மேலும் ‘அன்பு’ (Love) என்ற சொல்லுக்கு ஆங்கிலத்தில் மற்றப் பொருள்களும் உண்டு. ஆகவே, எதிர்மறையான பதத்தை உபயோகித்தாக வேண்டிய நிர்ப்பந்தம் எனக்கு ஏற்பட்டது. ஆனால், உங்களுக்கு நான் சொன்னது போல எதிர்மறையான சக்தியை அது விவரிக்கவில்லை. எல்லாச் சக்திகளையும் ஒன்று சேர்த்தாலும் அவற்றிற்கெல்லாம் மேலான ஒரு சக்தியையே அது விவரிக்கிறது. ஒருவர் தமது வாழ்க்கையில் அகிம்சையைக் காட்ட முடிந்தால், மிருகத்தனமான சக்திகளுக்கெல்லாம் உயர்ந்ததான ஒரு சக்தியைக் கையாளுபவர் ஆவார்.

**கேள்வி :** தனிப்பட்டவர் யாராவது இதை அடைந்து விடுவது சாத்தியமா ?

**காந்திஜி :** நிச்சயமாகச் சாத்தியம். இன்னாரால்தான் முடியும் என்ற விலக்கு இதில் ஏதாவது இருக்குமானால் இதை நான் உடனே நிராகரித்துவிட வேண்டும்.

**கேள்வி :** உடைமை எண்ணம் எதுவும் இதற்கு மாறுபட்டதா ?

**காந்திஜி :** ஆம். இது எதையும் உடையதன்று. ஆகவே, இது எல்லாவற்றையும் உடையதாகிறது.

**கேள்வி :** தகுதியை இடைவிடாது வெற்றிகரமாகப் படையெடுத்து வருவதை எதிர்த்து நிற்பது ஒரு தனிப்பட்டவரால் சாத்தியமா ?

---

திறந்த புத்தகமுமேயாகும். வாள், இவர் அதற்கு இரையாகித் தம் உயிரைச் சீரிய கொள்கைக்குத் தியாகம் செய்ததைக் குறிக்கும். திறந்த புத்தகம், ஜென்டைல் என்போரின் குரவராக இவர் மதப்பிரசாரம் செய்ததைக் குறிக்கும். சில உருவங்களில், இவர் குள்ளமாகவும் வழுக்கைத் தலையாகவும், நரைத் தாடியுடனும் தென்படுகிறார்.

இவர் ஜுடெயா நாட்டில் கிஸ்ஸலிஸ் என்ற நகரில் பிறந்தார். அங்கிருந்து ஸிலிஷியாவிலுள்ள டார்ஸஸ் என்ற இடத்திற்குத் தம் பெற்றோருடன் போய்விட்டார். இவர் செய்த மதப்பிரசாரத்தை வெறுத்த நீரோ என்ற ரோம் நாட்டு அரசனுடைய, வாளுக்கு இவர் இரையானார். அதே நாளில் பீட்டர் என்ற முனிவரும் சிலுவையில் ஏற்றப்பட்டு மாண்டார். கிறிஸ்து மகான் காட்டிய அன்பு மார்க்கத்தை அதாவது ‘ சிலுவை வழி ’யை அனுசரிக்குமாறு உலகோருக்கு எடுத்துச்சொல்வதையே தம் வாழ்க்கையின் பணியாகக்கொண்டார். இதனால் பல துன்பங்களை இவர் அனுபவிக்க நேரிட்டது.

**காந்திஜி :** அது சாத்தியமே. நீங்கள் கருதுவதைவிட உங்கள் கேள்வி எல்லாவற்றிற்குமே பொருந்துவதாக இருக்கக்கூடும். உதாரணமாக, முப்பது கோடி இந்தியர் வஞ்சிப்பதை ஒரே ஓர் இந்தியர் மாத்திரம் எதிர்ப்பது சாத்தியம் அல்லவா என்றுதானே நீங்கள் கேட்க விரும்புகிறீர்கள்? அல்லது உலகமே ஒரு தனிப்பட்டவரைத் தனியாகத் தாக்குவதைப்பற்றிக் கூறுகிறீர்களா?

**டாக்டர் தர்மான் :** ஆம். அது கேள்வியில் ஒரு பாதி. பலாத்காரம் முழுவதையும் ஒருவர் மாத்திரம் தடுத்துவிட முடியுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

**காந்திஜி :** அது அவரால் முடியவில்லை என்றால், அவர் அகிம்சையின் உண்மையான பிரதிநிதி அல்ல என்ற முடிவுக்கே நீங்கள் வரவேண்டும். உண்மையில் தன்னுடைய எதிரியின் மனம் மாறுபடும்படி செய்வதைப்பற்றிய ஒரு சம்பவத்தையாவது ஒருவருடைய வாழ்க்கையில் நான் காட்ட முடியவில்லையெனின், அகிம்சையை அதன் முழு அம்சத்திலும் காட்டக்கூடிய ஒருவராவது தென்படவில்லை என்பதே அதற்குக் காரணம்.

**கேள்வி :** அப்படியானால், எல்லாச் சக்திகளுக்கும் மேலானதாக அது இருக்கிறதல்லவா?

**காந்திஜி :** ஆம் ; வாழ்க்கையில் அது ஒன்றே உண்மையான சக்தி.

விவாதத்தில் முற்றிலும் ஆழ்ந்திருந்த டாக்டர் தர்மான், "இப்பொழுது இக்கேள்வி கேட்டதற்காக என் பலவீனத்தை மன்னியுங்கள். ஆனால், இந்தக் கஷ்டமான ஆற்றலைப் பெறுவதற்குத் தனிப்பட்டவர்களுக்கோ அல்லது சமூகங்களுக்கோ எவ்விதம் பயிற்சியளிப்பதென்று கேட்கிறேன்" என்றார்.

**காந்திஜி :** இந்த மரபின்படி வாழ்க்கையில் நடந்துகொள்ள வேண்டும். அது வாழ்க்கைக் கோட்பாடாக இருக்க வேண்டும். இதைத் தவிர இதற்கு வேறு எந்த ராஜபாட்டையும் கிடையாது. இது ஒருவருடைய வாழ்க்கையிலேயே விளங்கவேண்டுமாயின் அவர் அதிக உழைப்பும் மகத்தான விடா முயற்சியும் கொள்வதோடு தம்முள் இருக்கும் எல்லா மாசுகளையும் போக்கிக்கொள்ளவும் வேண்டும். சாதாரண விஞ்ஞானத்தில் முதிர்ந்த தேர்ச்சி அடைவதற்கு வாழ்நாள் எல்லாம் செலவிட வேண்டியிருக்கிறது என்றால், மனிதவர்க்கம் அறிந்தவற்றில் மிகப் பெரியதான ஆத்ம சக்தியில் தேர்ச்சி பெறுவதற்கு

இன்னும் எத்தனை வாழ்நாட்களைச் செலவிட வேண்டியிருக்குமோ? ஆனால், வாழ்நாட்கள் பல செலவிட வேண்டியிருந்தாலும் அதற்காகக் கவலைப்படுவானேன்? வாழ்வில் நிரந்தரமான விஷயம் இது ஒன்றே என்றால், சிறப்புடையது இது ஒன்றே எனின், இதில் தேர்ச்சி அடைவதற்காக எவ்வளவு தான் பாடுபட்டாலும் அது நலனுக்குச் செய்ததேயாகும். முதலில் சுவர்க்கத்தைத் தேடுங்கள், மற்ற எல்லாம் உங்களுக்குத் தானே கிட்டிவிடும். சுவர்க்கம் என்பது அகிம்சை.

ஸ்ரீமதி தர்மான் இதுவரையில் எதுவும் பேசாமல் அடக்கத்துடன் கேட்டுக்கொண்டிருந்தார். ஆனால், என்றைக்காவது ஒரு நாள் எழக்கூடிய இந்தக் கேள்விக்கு ஒரு தீர்வு காணாமல் அவர் எங்ஙனம் போகக்கூடும்? ஆகவே, "என் சொந்தச் சகோதரன், என் கண் முன்னாலேயே உயிரோடு சுட்டெரிக்கப்படும்போது நான் எப்படி நடந்துகொள்ளுவது?" என்று அவர் கேட்டார்.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: "தன்னையே தான் மாய்த்துக்கொள்ளுவது என்ற ஒன்று உண்டு. நான் ஒரு நீகிரோ என்று வைத்துக்கொள்ளுவோம். ஒரு வெள்ளைக்காரன் என் சகோதரியை மானபங்கப்படுத்துகிறான் அல்லது ஒரு சமூகமே அவனை உயிரோடு கொளுத்திவிடுகிறது என்று வைத்துக்கொண்டால் அப்பொழுது என் கடமை என்ன?— என்னை நானே கேட்டுக்கொள்ளுகிறேன். இந்தப் பதிலே எனக்குப் பிறக்கிறது: 'இவர்களுக்குத் தீமையை நான் எண்ணலாகாது, இவர்களுடன் நான் ஒத்துழைக்கவும் கூடாது. சுட்டு வதைக்கும் அச்சமூகத்தினரைச் சாதாரணமாக நான் என் பிழைப்புக்காக அண்டியிருக்கவேண்டியவனாகவும் இருக்கலாம். அவர்களுடன் ஒத்துழைக்க நான் மறுக்கிறேன். அவர்களிடமிருந்து கிடைக்கும் ஆகாரத்தைத் தொடவும் மறுக்கிறேன். அந்த அநியாயத்தைச் சகித்துக்கொண்டிருக்கும் என் சகோதர நீகிரோக்களுடனும் ஒத்துழைக்க மறுக்கிறேன். தன்னைத் தானே மாய்த்துக்கொள்ளுவது என்று நான் கூறுவது இதுதான். என் வாழ்க்கையில் அடிக்கடி இத்திட்டத்தை நான் மேற்கொண்டிருக்கிறேன். பட்டினி இருப்பது என்பது செய்கை அளவில் பெரியது எதுவுமில்லைதான். உயிர், நிமிடத்திற்கு நிமிடம் துடித்துக்கொண்டிருக்கையிலும் நம்பிக்கை மாத்திரம் மங்காமல் இருந்து வரவேண்டும். ஆனால், அகிம்சையைக் கடைப்பிடிப்பதில் நான் மிக எளிமையானதோர் உதாரணம். என்னுடைய பதில் உங்களுக்குத் திருப்தி அளிக்

காமல் இருக்கலாம். என்ருலும், கஷ்டப்பட்டுப் பலமாக முயற்சி செய்துகொண்டு வருகிறேன். என் வாழ்நாளிலேயே நான் முற்றிலும் வெற்றி பெருதுபோனுலும் எனக்கிருக்கும் நம்பிக்கை மாத்திரம் மங்காது.''

ஸ்ரீமதி தர்மான், உள்ளத்தை உருக்கும் வகையில் பாட வல்ல சிறந்த பாடகி. எங்களுடைய நினைவில் இருக்குமாறு எதையாவது விட்டுவைக்காமல் எங்களிடமிருந்து போய்விட டாக்டர் தர்மான் விரும்பவில்லை. நீகிரோக்களின் இரு தெய்விக கீதங்களை அப்பெண்மணி பாடக் கேட்டு நாங்கள் மெய்ம்மறந்திருந்தோம். 'எங்கள் கர்த்தனை அவர்கள் சிலுவையில் அறைந்தபோது நீங்கள் அங்கிருந்தீரோ?' என்பதும், 'ஜாகோப்பின் ஏணியில் நாங்கள் ஏறிக்கொண்டிருக்கிருேம்' என்பதும் அந்தக் கீதங்கள். பிந்திய கீதம் எங்களுக்கும் வந்திருந்த விருந்ினருக்கும் பொருத்தமாகவே அமைந்தது. லட்சியத்தை அடைந்து வெற்றி காணும்வரையில் முன்னேறிக்கொண்டே இருப்பதற்கு, ஒடுக்கப்பட்டிருக்கும் ஒவ்வொரு சமூகத்தின் உள்ளத்தில் ஆழ்ந்துகிடக்கும் நம்பிக்கையும் ஆர்வமும், இந்தக் கீதத்தின் மூலம் வெளிப்பட்டது.

பிரியும் கட்டம் வந்தது. ''நீங்கள் அமெரிக்காவுக்கு வரவேண்டும்'' என்று விருந்தினர் அழைத்தனர். ஆழ்ந்த அன்போடு வற்புறுத்தியும் சொன்னுர்கள். ஸ்ரீமதி தர்மான் வார்த்தைகளிலிருந்து அந்த அன்பையும் வேண்டுகோளையும் அறிய முடிந்தது. ''வெள்ளையரின் அமெரிக்காவுக்கு உங்களை அழைக்கவில்லை; நீகிரோக்களுக்காக அழைக்கிருேம். தீர்க்கப்படுவதற்கான பிரச்னைகள் எங்களுக்கு எத்தனையோ இருக்கின்றன. உங்கள் உதவி எங்களுக்குக் கட்டாயம் வேண்டும்'' என்ருர் அவர். ''வரவேண்டும் என்றுதான் நானும் ஆசைப்படுகிறேன்'' என்ருர் காந்திஜி. ''நான் இதுகாறும் வாயால் சொல்லியதைக் கண்ணெதிரில் செய்துகாட்டாத வரையில் உங்களுக்கு நான் கொடுக்கக்கூடியது எதுவுமில்லை. இந்த உபதேசத்தை உங்களுக்குப் புகட்டுவதற்கு முன்பு அதை நான் இங்கு நன்கு பயன்படுத்தவேண்டும். தோல்வியடைந்துவிட்டேன் என்று நான் சொல்லவில்லை. என்னையே இன்னும் சரியாக்கிக் கொள்ளவேண்டியிருக்கிறது. அழைப்பை என்னுள் நான் உணரும்போது அங்கே வர நான் தயங்கவே மாட்டேன் என்பதை நீங்கள் நிச்சயமாக நம்பலாம்.''

இந்த உபதேசத்தை ஏற்றுக்கொள்ள நீகிரோக்கள் தயாராயிருக்கின்றனர் என்று டாக்டர் தர்மான் விளக்கினர். ''அமெரிக்

காவில் எங்களுடைய வாழ்க்கை ஒரு விநோதமான சூழ்நிலையைக் கொண்டது. அது, தனியானதோர் நோக்கிலிருந்து கிறிஸ்தவ சமயத்தை நாங்கள் கொண்டிருப்பதே ஆகும். நீகிரோக்களின் நூற்றுக்கணக்கான தெய்வப் பாக்களைப் படித்தால் பல அபூர்வமான விஷயங்கள் என் நினைவுக்கு வருவதோடு நீங்கள் இன்று எங்களுக்குச் சொன்னவைகளையே நினைவூட்டுகின்றன" என்றார்.

அவர்களை வாழ்த்தி வழியனுப்பிக் காந்திஜி கூறினார்: "கலப்பற்ற அகிம்சா தருமம் நீகிரோக்களினாலேயே உலகிற்கு அளிக்கப்படும் என்பது நடக்கப்போவதாய் இருந்தால் நல்லதுதானே."

—ஹரிஜன் – 14—3—1936

# 15
# அகிம்சைக்கு ஏற்ற துறை

அகிம்சையை அனுசரிப்பதற்கு மூன்று துறைகளைப்பற்றிச் சென்ற வாரம் எழுதினேன். அகிம்சையைக் கைக்கொள்வதற்கு நான்காவதான சிறந்ததோர் துறையைக் குறித்துக் கவனிக்கும்படி இன்று கேட்பதென்று இருக்கிறேன். குடும்பத் துறை அது; குடும்பம் என்பதற்குச் சாதாரணமாக உள்ள பொருளைவிட விரிவான பொருளில் உள்ளதே குடும்பத் துறை. இவ்விதம் ஒரு ஸ்தாபனத்தின் உபயோகங்களை ஒரு குடும்பமாகப் பாவிக்கவேண்டும். இத்தகைய குடும்பங்களின் உறுப்பினர்களுக்குள் அகிம்சையை அனுசரிப்பது எளிதாக இருக்கும். அதில் தோல்வி அடைந்துவிட்டால் பரிசுத்தமான அகிம்சைக்கு வேண்டிய ஆற்றலை நாம் விருத்தி செய்துகொள்ளவில்லை என்பதே அதன் பொருள். ஏனெனில், நம் உறவினருள் - நம் குடும்பம் அல்லது ஸ்தாபனத்தின் உறுப்பினருக்குள் - நாம் காட்டவேண்டிய அன்பை, நம் எதிரிகள், கொள்ளைக்காரர்கள் ஆகியோரிடத்திலும் நாம் காட்டவேண்டும். இதில் ஒன்றில் நாம் தோற்றுவிடுவோமானால், இன்னுமொன்றில் வெற்றி என்பது வெறும் மருளே.

குடும்பத்துறையில் அகிம்சையைக் கையாளுவது முடியாததாக இருந்தாலும், ராஜீயத் துறையில் அதை அனுசரிப்பது சாத்தியம் என்று நாம் பொதுவாக எண்ணிக்கொள்ளுகிறோம். இது வெறும் மயக்கம் என்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இதுவரை நாம் அனுசரித்த முறைகளையே அகிம்சை என்று கூறி, அகிம்சையையே ஒரு கேலிச் சித்திரமாக வரைந்திருக்கிறோம். அது தான் அகிம்சை என்றால், நெருக்கடியான சமயத்தில் அது

பயனற்றுப் போயிருப்பதால் அது வீணனதாகிறது. அகிம்சையின் அரிச்சுவடியைக் குடும்பமாகிய பள்ளிக்கூடத்தில் தான் நன்கு அறிந்துகொள்ள முடிகிறது. அங்கு நமக்கு வெற்றி கிடைத்துவிட்டால், நிச்சயமாக எங்குமே வெற்றியைக் காண முடியும் என்று அனுபவ வாயிலாக நான் கூற இயலும். ஏனெனில், அகிம்சையை மேற்கொள்ளுபவருக்கு உலகம் முழுவதுமே ஒரே குடும்பந்தான். இதனல் அவர் யாருக்கும் அஞ்சமாட்டார்; மற்றவர்களும் அவரைக் கண்டு பயப்படமாட்டார்கள்.

இப்படிப்பட்ட பரீட்சையில் தேறிவிடக்கூடியவர் மிக மிகச் சிலரே; இவர்கள் எங்கோதான் இருக்க முடியும் என்று பதில் சொல்லக்கூடும். இருக்கலாம். ஆனல், நான் கூறியிருப்பதற்கு இது பதிலாகிவிடாது. அகிம்சையில் தங்களுக்கு நம்பிக்கை இருப்பதாகச் சொல்லிக்கொள்ளுகிறவர்கள், அத்தகைய நம்பிக்கையின் தன்மையை அறியவேண்டும். இவை அவர்களைப் பயமுறுத்துமாயின், அப்படிப்பட்டவர்கள் தாராளமாக அந்த நம்பிக்கையைக் கைவிட்டுவிடலாம். காங்கிரஸ் காரியக் கமிட்டி இப்பொழுது நிலைமையைத் தெளிவாக்கிவிட்டதால், அகிம்சையில் தங்களுக்கு நம்பிக்கை இருப்பதாகச் சொல்லுகிறவர்கள் தாங்கள் செய்ய வேண்டியது இன்னது என்பதை அறிந்து கொள்ள வேண்டியது அவசியம். இதன் பலனுக அகிம்சைச் சேனையில் இருப்பவர்களின் தொகை மிகவும் குறைந்துவிடுமானல் அதைப் பற்றிக் கவலையில்லை. உண்மையில், அகிம்சையோடு கூடிய வீரர்களைக்கொண்ட சைனியம் என்னதான் சிறிதாக இருந்தாலும், என்றைக்காவது ஒருநாள் அது தானே பெருகிவிடும். உண்மையிலேயே அகிம்சையை அனுசரிக்காதவர்களைக் கொண்ட சேனை – அது பெருகினலும், குறைந்தாலும் – எந்தப் பயனையும் அளிக்கவே முடியாது.

அகிம்சையின் எல்லாத் தத்துவங்களையும் தங்களுடைய வாழ்க்கையில் கண்டிப்பாக அனுசரிக்கிறவர்களுக்கு மாத்திரமே அகிம்சைச் சேனையில் இடமுண்டு என்று மேலே கண்டவைகளிலிருந்து யாரும் நினைத்துவிட வேண்டாம். இத்தத்துவங்களை ஒப்புக்கொண்டு அவற்றைக் கடைப்பிடிக்க மேலும் மேலும் முயல்பவர்களுக்கும் அதில் இடம் உண்டு. குறைபாடின்றி முற்றிலும் அகிம்சையை அனுசரிப்பவர்களைக் கொண்டதான ஒரு சேனை இருக்கவே முடியாது. அகிம்சையை அனுசரிக்க நேர்மையுடன் முயல்பவர்களைக் கொண்டு இந்தச் சேனை ஆரம்பமாகும். சென்ற ஐம்பது ஆண்டுகளாக எனது வாழ்க்கை மேலும் மேலும் அகிம்சையை ஒட்டியதாக இருக்கும்படி

செய்ய நான் பாடுபட்டிருப்பதோடு இதே வழியில் நடக்கும்படி என் சக ஊழியர்களைத் தூண்டவும் முயன்றிருக்கிறேன். இதில் ஓரளவுக்கு வெற்றியும் பெற்றிருக்கிறேன் என்றே நம்புகிறேன். சுற்றிலும் வளர்ந்துகொண்டு வரும் இருள், என்னுடைய உற்சாகத்தைக் குறைத்து, எனது நம்பிக்கையையும் மங்கவைப்பதற்குப் பதிலாக அவை பிரகாசிக்கும்படி செய்வதோடு அகிம்சையின் கருத்துக்களை மிகத் தெளிவாக நான் புரிந்துகொள்ளவும் செய்கிறது.

சேவாகிராமம், 15-7-1940 —ஹரிஜன் - 21—7—1940.

# 16

# அகிம்சையை வளர்ப்பது எப்படி?

**கேள்வி**: 'அகிம்சை, அகிம்சை' என்று ஓயாமல் கத்திக்கொண்டிருப்பதில் என்ன பயன்? அப்படிக் கத்திக்கொண்டிருப்பது அகிம்சையோடு இருக்கும்படி மக்களுக்குப் போதித்துவிடுமா? இதைவிடப் பரிசுத்தமான அகிம்சையை அல்லது பலமுள்ளவர்களின் அகிம்சையை வளர்த்துக்கொள்ளுவது எப்படி என்பதை மக்களுக்குச் சொல்லுவது நல்லதல்லவா?

**பதில்**: சந்தர்ப்பத்திற்கு ஏற்ற கேள்வியை நீங்கள் சரியான சமயத்தில் கேட்டிருக்கிறீர்கள். இதற்கு முன்பே பல தடவைகளில் இதற்குப் பதில் சொல்ல நான் முயன்றதுண்டு. அம்முயற்சி, ஒன்றில் ஆரம்பமாகி இன்னொன்றில் போய் முடிந்துவிட்டது என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். இதன்மீது நான் அதிகமாக என் கவனத்தை ஈடுபடுத்தியதில்லை; அல்லது அதற்குரியதான முக்கியத்துவத்தைக் கொடுக்கவுமில்லை. அரசாங்கத்துடன் போராடுவதற்கான வழிகளை வகுப்பதில் எனது முழுச் சக்தியையும் உபயோகித்துக்கொண்டிருந்தபோது இப்படி இருந்தது சரி. ஆனால், இதன் பலனைப் பரிசுத்தமான அகிம்சை வளர்வது தடைப்பட்டுவிட்டது. ஆகவே பலமுள்ளவரின் அகிம்சைக்குக் கிட்டத்தில்கூட நாம் இல்லை. இப்பொழுது நாம் மேற்கொண்டும் முன்னேற விரும்புவோமாயின் சிறிது காலத்திற்காவது, ஆட்சி அதிகாரத்திற்குப் பலாத்காரமற்ற எதிர்ப்புத் தொடுப்பதை முற்றிலும் மறந்துவிடவேண்டும். குடும்பத் துறையில் அகிம்சையை வெற்றிகரமாக அடைந்துவிடுவோமானால், ஆட்சி அதிகாரத்திற்கு எதிராக அதைப் பரிசுத்தமான வகையில் மீண்டும் நிச்சயமாக உபயோகிக்க முடியும்; தடுக்க முடியாததாகவும் அது இருக்கும்.

நான் இப்பொழுது காங்கிரஸில் இல்லையாகையால் என் அளவில்கூட அதன் பெயரால் சட்ட மறுப்புச் செய்ய இயலாது.

ஆனால், என் சொந்த முறையில் அவசியம் ஏற்படும்போதெல் லாம் சட்ட மறுப்புச் செய்ய எனக்குச் சுதந்திரம் உண்டு. பலமுள்ளவர்கள் அனுஷ்டிக்கும் அகிம்சையில் நாடு போதனை பெற்று வரும் சமயத்தில், சட்ட மறுப்பு அச்சம் தரக்கூடியது என்று யாரும் நினைத்துவிட வேண்டாம். ஆனால், நான் கருது வதான அகிம்சைப் படையில் சேர விரும்புகிறவர்கள், சட்டமறுப் புக்கு உடனடியான சந்தர்ப்பமுண்டு என்று நினைக்கக்கூடாது. தங்களளவில் அகிம்சையைப் பரிசுத்தமான வகையில் அடையா மல் இருக்கும் வரையில், அவர்களுக்குச் சட்ட மறுப்பு கைகூடாது என்பதை அவர்கள் அறியவேண்டும்.

பரிசுத்தமான அகிம்சை என்று சொல்லுவதைப் பார்த்து யாரும் மருண்டுவிட வேண்டாம். அது இன்னது என்பதைத் தெளிவாக உணர்ந்துகொண்டிருப்போமாயின், அதன் இணை யற்ற ஆற்றலில் உறுதியான நம்பிக்கையும் நமக்கு இருக்கு மாயின், அதை நடைமுறையில் அனுசரிப்பது சில சமயங்களில் கருதப்படுவது போல் அவ்வளவு கஷ்டமே அன்று. இது சம்பந்தமாக அழிவற்ற அந்த மகாபாரதச் செய்யுளை நினைவு படுத்திக்கொள்வது நல்லது. ரிஷி கவி அதில், உலகைப் பார்த்து, 'தர்மம், தன்னுள் நியாயமான பொருள், இன்பம் இரண்டையும் கொண்டிருக்கிறது; இம்மை, மறுமை சுகத்தை அளிக்கவல்ல நேரான வழியை மானிடர் ஏன் பின் பற்றவில்லை?' என்று கேட்கிறார். இங்கே தர்மம் என்பது வெளி அனுஷ்டானங்களை மட்டும் குறிப்பிடவில்லை. சத்தியம், அகிம்சை இவற்றின் வழியைத்தான் அது குறிப்பிடுகிறது. அழிவற்ற இரு கோட்பாடுகளை அறநூல்கள் நமக்கு அளித் திருக்கின்றன. அவற்றுள் ஒன்று: 'அகிம்சையே மேலான நியதி அல்லது தர்மம்.' மற்றொன்று: 'சத்தியத்திற்கும் மேலானதோர் நியதி அல்லது தர்மம் இல்லை.' நியாயமான பொருள், இன்பம் இவற்றை அடையும் வழியை இவ்விரு கோட்பாடுகளும் திறந்து காட்டுகின்றன. அப்படியிருக்க, அவற் றின்படி நடக்க நாம் தயங்குவானேன்? எளிய காரியங் களை மிகவும் கஷ்டமானவை என்று எப்பொழுதும் மக்கள் கருதுகின்றனர். இது விசித்திரமாகத் தோன்றலாம்; ஆனால், உண்மை இதுதான். இதற்குக் காரணம் பௌதிக விஞ்ஞானச் சொல்லைக்கொண்டு கூறுவதாயின், நமக்குள்ள சலனமின்மை தான். சலனமில்லாதிருப்பது பொருளின் தன்மைக்கு அவசிய மானது; அதனளவில் அதிக உபயோகமானது என்று பௌதிக விஞ்ஞானிகள் கூறுகின்றனர். இது ஒன்றே பிரபஞ்சம் நிலை

பெற்றிருக்கும்படி செய்து, கண்டபடி சிதறி ஓடிவிடாதபடியும் தடுக்கிறது என்கிருர்கள். அப்படி இல்லாதிருக்குமாயின் பிரபஞ்சத்தில் சலனக் குழப்பம் உண்டாகிவிடும். ஆனல், இந்தச் சலனமின்மை, மனத்தைப் பழைய சுவட்டிலே பிடித்துக் கட்டிவிடும்போது அது அமுக்கும் பேயாகவும் தீமையாகவும் ஆகிவிடுகிறது. சுத்தமான அகிம்சையை அனுசரிப்பது மிகக் கஷ்டம் என்ற எண்ணம் நம்மிடம் படிந்துவிட்டதற்கு இச் சலனமின்மையே காரணம். இந்தப் பேயின் பிடியிலிருந்து நாம் விடுபட்டாக வேண்டும். இதற்குச் செய்யவேண்டிய முதற் காரியம், எவ்வளவு தியாகங்களுக்கு ஆளாக நேர்ந்தாலும் சரி, இனிமேல் பொய்யும் இம்சையும் பயம் தரும் விஷயங்கள் என்று திடமாக உறுதிகொண்டு விடுவதேயாம். பொய்யும் இம்சையும் செய்வதுபோன்ற நன்மையெல்லாம் வெறும் தோற்றத்திலேதான். ஆனல், உண்மையில் அந்த நன்மை பயங்கரமான விஷயமே. நாம் செய்துகொள்ளும் தீர்மானம் உறுதியுடன் இருக்குமாயின், நம்பிக்கையும் தெளிவாக இருப்பின், பாதி வெற்றி கிட்டிய மாதிரிதான். அப்போது இவ்விரு பண்புகளேயும் நடைமுறையில் அனுசரிப்பதும் நமக்கு அதிக எளிதாகிவிடும்.

அகிம்சையைப்பற்றி மாத்திரமே நாம் கவனிப்போம். கைராட்டை, கிராமக் கைத்தொழில்கள் முதலியன எல்லாம் அகிம்சைக்குத் துணே செய்வன என்று நாம் நீண்ட காலமாகக் கருதி வந்திருக்கிரேம். அது உண்மையே. அவை நிலேத்தாக வேண்டும். ஆனல், இப்பொழுது நாம் ஒரு படி மேலே போக வேண்டியிருக்கிறது. அகிம்சையையே வழிபடுபவர், இதுவரையில் செய்யாதிருந்தாலும், தம்முடைய பெற்ரேர்கள், தம் குழந்தைகள், மனேவி, வேலேக்காரர்கள், தம்மை அண்டி வாழ்பவர்கள் இவர்களிடமுள்ள உறவை அகிம்சை அடிப்படையில் கொள்ள வேண்டும். ஆனல், உண்மையான சோதனே, ராஜீய அல்லது வகுப்புக் கலவரங்களின்போதோ, இல்லாவிட்டால் திருடர்கள் அல்லது கொள்ளேக்காரர்களால் ஆபத்து நேரும் போதோதான் ஏற்படும். இந்தச் சந்தர்ப்பங்களில் உயிரை அர்ப்பணஞ் செய்வது என்ற உறுதி மாத்திரம் போதாது. இந்தத் தியாகத்தைச் செய்வதற்கு வேண்டிய தகுதியும் இருக்க வேண்டும். நான் ஹிந்து என்ருல், முஸ்லிம்களுடனும் மற்றவர்களுடனும் நெருங்கிய உறவு கொள்ளவேண்டும். இவர்களுடன் நடந்துகொள்ளுவதில் என் மதத்தினருக்கும் மற்ற மதங்களேச் சேர்ந்தவர்களுக்கும் எந்தவிதமான பாகுபாட்டையும் காட்டக்கூடாது.

பயம் அல்லது இது இயல்புக்கு முரணனது என்ற உணர்ச்சி எதுவுமே இல்லாமல் அவர்களுக்குச் சேவை செய்வதற்கான வாய்ப்பைத் தேடிக்கொள்ள வேண்டும். அகிம்சையின் அகராதியில் 'பயம்' என்ற சொல்லுக்கு இடமே இல்லே. இவ்விதம் தன்னலமற்ற தொண்டுகளின் மூலம் தகுதிபெற்ற பரிசுத்தமான அகிம்சைவாதியே வகுப்புக் கலவரங்களில் தம்மைப் பலி கொடுத்துக்கொள்ளக்கூடியவர் ஆவார். இதே போலத் திருட்டு, கொள்ளே அபாயங்களேச் சமாளிப்பதற்கு, பொதுவாக எந்தச் சமூகத்திலிருந்து திருடர்களும் கொள்ளேக்காரர்களும் கிளம்புகிருர்களோ அவர்களிடையே சென்று அவர்களுடன் நட்புறவை வளர்த்துக்கொள்ள வேண்டும்.

இத்தகைய வேலேக்கு ஓர் அற்புத எடுத்துக்காட்டாக விளங்குபவர், ரவிசங்கர மகாராஜ். குஜராத்தில் குற்ற பரம்பரையினரிடையே இவர் செய்திருக்கும் சேவைகளேப் பரோடா சமஸ்தான அதிகாரிகளும் போற்றியிருக்கின்றனர். இந்த விதமான வேலேக்கு வரையறையற்ற துறைகள் இருக்கின்றன. தூய அன்பு ஒன்றைத் தவிர இந்த வேலேயைச் செய்ய ஒருவருக்கு வேறு எந்தவிதமான ஆற்றலும் தேவையில்லே. ரவிசங்கர மகாராஜுக்கு ஆங்கிலமே தெரியாது. குஜராத்தி மொழி அறிவுகூட அன்ருடப் பழக்கத்திற்குப் போதுமான அளவே அவருக்கு உண்டு. ஆனல், அக்கம் பக்கத்தில் இருப்பவர்களிடம் காட்ட வேண்டிய அளவு கடந்த ஆண்மையைக் கடவுள் அவருக்கு அளித்திருக்கிருர். அவருடைய எளிமை எல்லோருடைய உள்ளங்களேயும் கவர்ந்துவிடுகிறது. யாவரும் பொருமைப்பட வேண்டியதாயும் இருக்கிறது. இதே போலச் சத்தியாக்கிரகத்தின் மற்றத் துறைகளில் ஈடுபட்டிருப்போருக்கு அவருடைய உதாரணம் வழிகாட்டியாகவும் உற்சாகமூட்டுவதாகவும் இருக்கட்டும்.

சேவாகிராமம், 16—7—1940

—ஹரிஜன்—21—7—1940

# 17

# அகிம்சையில் ஒரு குறைபாடு

**கேள்வி** : ஆயுதங்களேப் போட்டுவிட்டு அகிம்சையை மேற்கொள்ளும்படி பிரிட்டானியரை நீங்கள் கேட்டுக்கொண்டிருக்கிறீர்கள். ஆனல், இது ஒழுக்கநெறிபற்றிய ஒரு சங்கடத்தை உண்டாக்குகிறது. ஒருவரின் அகிம்சை, இன்னெருவரை இம்சைக்குத் தூண்டிவிடுகிறது. அவர் உள்ளத்தை ஊடுருவிப் பார்க்க முடியாதபடி செய்து விடுகிறது. அகிம்சை

வாதி ஒருவர் ஜடப்பொருளுக்கு எதிராக வரும்போது, அவருடைய அகிம்சை அதனிடம் எந்தப் பலனையும் உண்டாக்குவதில்லை. ஆகையால், உங்கள் நம்பிக்கையில், ஏதோ குறைபாடு இருக்கவேண்டும். ஒரு குறிப்பிட்ட துறையில் அகிம்சை வெற்றி அளிப்பதாக இருக்கலாம். அப்படியாயின் உலகப் பரவலான காரியங்களுக்கும் அதனால் என்ன உபயோகம்? எனவே, உலகத்துக்கெல்லாம் அது பயன்படும், வேண்டும் என்று நீங்கள் கூறும் வாதம் அடிபட்டுப் போகிறது.

**பதில்:** நீங்கள் நினைக்கிறபடி அகிம்சையை அவ்வளவு எளிதில் தள்ளிவிட முடியாது. அறிந்துள்ள சக்திகளில் மிகப் பலமானது அகிம்சை. ஆனால், மிகப் பலம் வாய்ந்த இதை எல்லோருமே சுலபமாக உபயோகித்துவிடலாம் என்றால், இதன் சிறப்பை இது இழந்துவிடும். நீரைப்போல் அன்றாட வாழ்க்கையில் நாம் உபயோகித்து வரும் பொருளில் அடங்கியிருக்கும் பல தன்மைகளின் உண்மை அளவு என்ன என்பதை நாம் இன்னும் கண்டுபிடித்தபாடில்லை. அதில் அடங்கியிருப்பவற்றுள் சில நம்மை வியப்படையச் செய்கின்றன. ஆகையால், அகிம்சை போன்ற மிக நுட்பமான ஒரு சக்தியைக் குறித்து அலட்சியமாக நாம் கருதிவிடக்கூடாது. அதனுள் மறைந்து கிடக்கும் சக்திகளைக் கண்டுபிடிக்கப் பொறுமையோடும் நம்பிக்கையோடும் முயற்சி செய்வோம். மிகக் குறைந்த காலத்திற்குள் இந்தச் சக்தியை உபயோகிக்கும் ஒரு பெரிய பரீட்சையில் வெற்றிதருவதான முடிவையே கண்டிருக்கிறோம். அந்தச் சக்தியினால் அதிகம் நான் திரட்டி வைத்திருக்கவில்லை என்பதை நீங்கள் அறிவீர்கள். இதை அகிம்சையில் ஒரு சோதனை என்று சொல்லக்கூட நான் தயங்கினேன். கல்லையும் மிதக்கச் செய்ய வல்லது ராமநாமம் என்று புராணக் கதைகள் கூறுவது போலவே அகிம்சையின் பெயரால் நடத்தப்பட்ட ஓர் இயக்கம் நாட்டில் பெரிய விழிப்பை உண்டாக்கியிருப்பதோடு நம்மை முன்னேக்கியும் கொண்டு போயிருக்கிறது. தளராத நம்பிக்கையுள்ளவர்கள் இந்தச் சோதனையை மேலும் செய்து முன்னேறிப் போவது எப்பொழுது சாத்தியமாகும் என்பதை முன்கூட்டியே கூறுவது கஷ்டம். பலாத்காரத்தை உபயோகிப்பவர்கள் எல்லோரும் அறிவற்றவர் என்று கூறுவது மிகைப்படுத்திச் சொல்லுவதாகும். சிலர் அறிவிழந்துவிடுவதாகத் தோன்றுகிறார்கள். அப்படிப்பட்ட சிலரைக்கொண்டு ஓர் ஒழுக்க நியதியையே அடிப்படையாக நாம் ஏற்றுவிடுவதாயின் நாம் தவறான எண்ணம் கொண்டவர் ஆவோம். நமக்குப் பழக்கமாக ஏற்படும் அனுபவத்தைக்

கொண்டு நியதிகளை அமைத்துக்கொள்ளுவதே பத்திரமான வழியாகும். பல சந்தர்ப்பங்களில் பலாத்காரத்திற்குச் சரியான முறிப்பு மருந்து அகிம்சையே என்பதுதான் நமக்குப் பழக்கமாகியுள்ள அனுபவம். இதனால் மிகப் பெரிய பலாத்காரத்தை மிகப் பெரிதான அகிம்சையைக்கொண்டு சமாளிக்கலாம் என்ற முடிவுக்கு நாம் பயமின்றி வர முடியும்.

ஆனால், உயிரற்ற பொருள்களைப்பற்றியும் சற்றுக் கவனிப்போம். ஒரு கல்லின்மீது தலையை மோதிக்கொள்பவருக்கு மண்டை நிச்சயமாக உடைந்தே போகும். ஆனால், இடைவெளியிலிருந்து ஒரு கல் நம்மை நோக்கி வந்துகொண்டிருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். ஒதுங்கிக்கொள்வதன் மூலம் அதினின்று தப்பித்துக்கொண்டுவிட முடியும். ஒதுங்குவதற்கு இடம் இராதுபோனால் இருந்த இடத்திலேயே தீரமாக நின்று கல் நம்மீது விழட்டும் என்று இருக்கலாம். இதனால் ஏற்படும் காயம் சொற்பமாகவும் போகலாம். உயிருக்கே ஆபத்தாக முடிந்தாலும் இச்சாவு, கல்லைத் தடுக்கும் முயற்சியில் ஏற்படுவதைவிடத் துன்பம் தருவதாக இராது.

இதே கருத்தை இன்னும் சற்று விரிவுபடுத்திக் கவனித்தால் ஒன்றைச் சுலபமாகக் காணலாம். அறிவிழந்த ஒருவனை அவன் இஷ்டம்போல் விட்டு அவனைத் தடுக்க யாரும் முயற்சி செய்யாவிட்டால் அவனே களைத்துப் போய் ஓய்ந்துவிடுவது நிச்சயம். பலர் அன்போடு செய்யும் தியாகம், அறிவிழந்தவனை நிதானத்திற்குக் கொண்டு வந்துவிடும் என்பது நினைக்க முடியாதது அல்ல. முற்றிலும் புத்தி கெட்டுப் போனவர்கள் திருந்தியது உண்டு என்பதற்குச் சான்றுகள் இராமலில்லை.

சேவாகிராமம் - 22—7—1940 ஹரிஜன் - 28—7—1940

# 18

# சரியான சோதனை

கருணை, அகிம்சை, அன்பு, சத்தியம் ஆகிய நற்பண்புகள் ஒருவரிடம் இருக்கின்றனவா என்பதை உண்மையாகச் சோதிக்க வேண்டுமானால், கொடூரம், இம்சை, பொய்மை ஆகியவற்றிற்கு எதிராக இவற்றை நிறுத்திப் பார்ப்பதனாலேயே முடியும்.

இதுவே உண்மையானால், ஒரு கொலைகாரனுக்கு முன்பு அகிம்சை பலிக்காது என்று சொல்லுவது தவறு என்றாகிறது. ஒரு கொலைகாரனிடம் அகிம்சையைக்கொண்டு சோதிப்பது என்பது தன்னையே அழித்துக்கொள்ள முற்படுவதாகும் என்று நிச்சயமாகச் சொல்லலாம். ஆனால், அகிம்சைக்கு இதுவே

சரியான பரீட்சை எனினும், வேறு வழியில்லை என்பதனால் கொல்லப்படத் தாமே இடம் தந்தவர் இந்தச் சோதனையில் தேறினார் என்று சொல்ல முடியாது. தாம் கொல்லப்படும் போது கொலைகாரன்மீது கோபமோ தாபமோ கொள்ளாமல் அவனை மன்னித்துவிடும்படி கடவுளிடம் கோருபவரே உண்மையில் அகிம்சையை அனுசரிப்பவராவார். இயேசு கிறிஸ்து இவ்விதமே செய்தார் என்று சரித்திரம் கூறுகிறது. சிலுவையில் அறையுண்டு உயிரை விடும் தறுவாயில் அவர் பின்வருமாறு சொன்னாராம்: "தாங்கள் செய்யும் பிழையை அவர்கள் உணரவில்லை. பிதாவே! அவர்களை மன்னித்துவிடும்." மற்ற மதங்களிலும் இதே போன்ற சம்பவங்களைப்பற்றிய உதாரணங்கள் உண்டு. ஆனால், இது உலகப் பிரசித்தமானதால் மேற்கண்ட உதாரணம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

நமது அகிம்சை அப்படிப்பட்ட உச்ச நிலையை இன்னும் அடைந்துவிடவில்லை என்பது வேறு விஷயம். ஆனால், நம்மிடம் பலவீனம் இருக்கிறது என்ற காரணத்தினாலோ அல்லது நமக்கு அனுபவம் போதவில்லை என்பதனாலோ அகிம்சையின் தரத்தைக் குறைப்பது என்பது முற்றிலும் தவறானதாகும். லட்சியம் இன்னதென்பதை உண்மையிலேயே உணர்ந்து கொள்ளாத வரையில் அதை நாம் அடைந்துவிட முடியும் என்று எதிர்பார்க்கவே முடியாது. ஆகையால், அகிம்சையின் சக்தியை அறிந்துகொள்வதற்கு நம் பகுத்தறிவைப் பயன்படுத்த வேண்டியது அவசியம்.

புது டில்லி, 21—4—1946.
ஹரிஜன், 28—4—1946. —('ஹரிஜன பந்து'விலிருந்து)

# 19

# அன்பின் பிணைப்பு

மாலைப் பிரார்த்தனையில் பாடப்பட்ட 'சபாஸே உஞ்சி பிரேம் சகாய்' என்ற பாடலைக் குறித்து மகாத்மா காந்தி கூறியதாவது :

"இப்பாடலில் கவிஞர் அன்பு அல்லது அகிம்சையின் பிணைப்பைப்பற்றிக் கூறியிருக்கிறார். அன்பைவிட உயர்ந்த சக்தி வாய்ந்த பிணைப்பு வேறு எதுவுமே கிடையாது. *சுதாமா

* சுதாமா அல்லது குசேலர். இவர் கிருஷ்ண பகவானின் சகபாடி, ஆப்த நண்பர். வறுமையினால் இருபத்தேழு குழந்தைகளுடன் வாடும்போது, மனைவியின் வற்புறுத்தலின்பேரில், துவாரகையில் சிறப்புடன் விளங்கும் தம் பழைய நண்பரை அண்டி, ஏதாவது உதவி கேட்கத் துவாரகைக்குச் சென்றார். நண்பருக்குக் கையுறையாக ஒரு கந்தையில் அவலைக் கட்டிக்கொண்டு சென்றார். கிருஷ்ணர் அவரைக் கண்

வின் அன்பின் சக்தியால் கிருஷ்ண பகவான் அவர் கந்தைத் துணியில் முடிந்து வைத்திருந்த அவலில் கொஞ்சம் உண்டு ஆனந்தித்தார். துரியோதனன் அளித்த சிறந்த கனிகளைப் பொருட்படுத்தாமல் கிருஷ்ண பகவான் விதுரர் அளித்த இலை, தழைகளைத் தின்று மகிழ்ந்தார். மேலும், அர்ஜுனனின் பக்தியின் ஆர்வம் காரணமாகப் பகவான், தம்முடைய பெருமையையும் கவனிக்காமல் அர்ஜுனனுக்குத் தேரோட்டியாக ஆனார். அர்ஜுனனின் வெற்றிக்கு அவனுடைய வில்வன்மையைவிடப் பகவானின் ஆற்றலே மிக உதவியாக இருந்தது என்றும் சொல்லப்படுகிறது. ஒருவர் இன்னொருவருக்குச் செய்யக்கூடிய எல்லாச் சேவைகளையும்விடத் தலைசிறந்தது, அன்பின் சேவையே. பிரதிபலனை அது எதிர்நோக்கி இருக்கவில்லை. அன்பு, பிரதிபலனையோ, அதற்கு ஈடானதொன்றையோ பாதிக்குமேயானால் அதன் மதிப்புக் குறைந்து இழிவாகிவிடுகிறது. தானே விரும்பி அன்போடு செய்யும் சேவை, தூய்மையையும் உயர்வையும் அளிக்கிறது.''

புது டில்லி,--27—5—'46. ஹரிஜன்—2—6—1946.

# 20

# சத்தியமா அல்லது அகிம்சையா?

மகாத்மா காந்தியுடன் பழகும் உரிமைபெற்ற நண்பர் ஒருவர் அவருடன் ஒரு நாள் மாலையில் பேசிக்கொண்டிருக்கையில், ''காந்திஜி, நீங்கள் எங்களைச் சுதந்திரத்தின் வாசலுக்குக்கொண்டு வந்துவிட்டீர்கள், இதற்காக நாங்கள் உங்களுக்கு நன்றி செலுத்தாமல் இருக்க முடியாது. ஆனால், நீங்களோ இதெல்லாம் அகிம்சையால்தான் என்பீர்கள். ஏனெனில், அது

---

டதுமே ஓடிவந்து தழுவிக்கொண்டார். சுதாமாவின் அக்குளில் ஏதோ ஒரு சிறு முடிச்சு இருப்பதைக் கவனித்து, ''இது என்ன, அண்ணா? எனக்கு ஏதாவது கொண்டு வந்திருக்கிறாயா?" என்று கேட்டபோது குசேலர் அவலை அவரிடம் கொடுத்தார். கிருஷ்ண பகவான் அதில் ஒரு பிடி வாயில் போட்டு, ''உன் வறுமை எல்லாம் நீங்குக'' என்று அருள் கூர்ந்தார். மறு பிடியை வாயில் போட்டுக்கொள்ளும்போது, ருக்மிணி தேவி, ''எனக்கு அந்தப் பிடி'' என்று தடுத்து வாங்கிக்கொண்டாள். இதை அவள் செய்யாது இருந்தால் துவாரகையின் செல்வமெல்லாம் குசேலரை அடைந்து இருக்கும். பிராட்டி, இந்தச் சங்கடம் நேராமல் காத்துக்கொண்டாள். பின்னர்க் கிருஷ்ணர், சுதாமாவுக்கு விருந்து உபசரணை நடத்தித் தம் நண்பருடன் சில தினங்கள் அளவளாவினார்; மரியாதைகளுடன் அவரை அனுப்பிவைத்தார். சுதாமா தம்மிடத்திற்குத் திரும்பியபோது வறுமை நிலை முற்றிலும் மாறி, தம் மக்களும் மனைவியும் செல்வத்தில் இருப்பதைக் கண்டு வியந்தார். நண்பரின் அன்பை நினைந்து நினைந்து மனமுருகினார். உயர்ந்த நிலையில் இருக்கும்போது தாழ்வுற்ற தம் நண்பரை மறக்காமல், உதவி புரிந்த வள்ளன்மையைக் காட்டுகிறது இக்கதை. இது பாகவதத்தில் வரும் ஓர் உபாக்கியானம். காந்தியடிகள் பிறந்த ஊரான போர்பந்தருக்குச் சுதாமாபுரி என்று பெயர். இதைக் காந்தியடிகளே தம் சுயசரிதையில் குறிப்பிட்டிருக்கிறார்.

உங்கள் அருமைக் குழந்தை. ஆனல், அகிம்சையைவிடச் சத்தியத்திலிருந்தே அதிக பலம் கிடைத்ததாக நாங்கள் கருதுகிரேம் '' என்ருர்.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: "எனக்கு அகிம்சையில் பற்றுதல் அதிகம் என்பதனல் சத்தியத்திற்கு இரண்டாவது இடத்தையே நான் தருவதாக நீங்கள் நினைப்பதும் தவறு. அதே போல் அகிம்சையைவிடச் சத்தியத்திடமிருந்தே நாட்டுக்கு அதிக பலம் கிடைத்தது என்று நீங்கள் எண்ணுவதும் தவறு. ஆனல், இதற்கு மாருக, நாடு ஏதாவது அபிவிருத்தியை அடைந்திருக்குமாயின் அகிம்சையைத் தன்னுடைய போராட்ட முறையாக நாடு மேற்கொண்டதுதான் அதற்குக் காரணம் என்று நான் திடமாக நம்புகிறேன்."

"உங்களுடைய அகிம்சையை நாடு புரிந்துகொள்ளவில்லை. ஆனல், சத்தியத்தைப் புரிந்துகொண்டிருக்கிறது. அதுவே அதற்குப் பலத்தை அளித்திருக்கிறது என்றே கூறுகிறேன் '' என்ருர் மீண்டும் அந்த நண்பர்.

"இதற்கு முற்றிலும் மாருனதே நடந்திருக்கிறது'' என்று காந்திஜி பதில் சொன்னதோடு மேலும் கூறியதாவது : "நாட்டில் பொய்மை எவ்வளவோ இருக்கிறது. இதனல் மூச்சுத் திணறுவது போலவும் சில சமயங்களில் உணருகிறேன். ஆகையால், எவ்வளவுதான் குறைபாடுகளை உடையதாயினும் அகிம்சையை அனுசரித்தது ஒன்றே நம்மை இவ்வளவு தூரத்திற்குக் கொண்டு வந்திருக்கிறது என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன். மேலும், நீங்கள் கருதுவதுபோலச் சத்தியத்திற்கு நான் இரண்டாவதான இடத்தைக் கொடுத்துவிடவில்லை. ஜினிவாவில் ஒரு பொதுக்கூட்டத்தில், 'கடவுளே சத்தியம் என்று நான் இதுவரையில் கூறி வந்தேன். சத்தியமே கடவுள் என்ற முடிவுக்கு நான் இப்பொழுது வந்திருக்கிறேன்' என்று சொல்லி எல்லோரும் திகைப்படையும்படியும் செய்திருக்கிறேன்.

இதற்குத் தம் கட்சியை விட்டுக்கொடுக்காமல் அந்த நண்பர், "என்ருலும், அகிம்சையைப்பற்றியே நீங்கள் அதிகமாக வற்புறுத்தி வந்திருக்கிறீர்கள். உங்களுடைய வாழ்க்கையின் லட்சியமே அகிம்சைதான் என்றும் பிரசாரம் செய்து வந்திருக்கிறீர்கள் '' என்ருர்.

காந்திஜி கூறிய பதிலாவது : "இதிலும் நீங்கள் கருதுவது தவறு. அகிம்சை முடிவான லட்சியம் அன்று. சத்தியமே

லட்சியம். ஆனல், மானிட உறவைப் பொறுத்தவரையில் சத்தியத்தை அடைவதற்கு அகிம்சையை உபயோகிப்பதைத் தவிர வேறு உபாயமே இல்லை. உறுதியாக அகிம்சையை நாடுவது, தவிர்க்க முடியாத வகையில் சத்தியத்துடன் கட்டுண்டது; இம்சையுடன் கட்டுண்டதல்ல. அதனலேயே இவ்வளவு அகிம்சைமீது சபதம் செய்து கூறுகிறேன். சத்தியம் எனக்கு இயல்பாகவே வந்தது. ஒரு போராட்டத்திற்குப் பிறகு அகிம்சையை நான் அடைந்தேன். அகிம்சையே உபாயமாக இருப்பதால் நமது அன்ருட வாழ்க்கையில் இயற்கையாகவே இதுவே நமக்கு முக்கியமாகிறது. ஆகையால், நமது பொது மக்களுக்கு அகிம்சைப் போதனையே வேண்டும். இயற்கையான முடிவாக, சத்தியத்தில் பயிற்சி தானே பின்தொடரும்.''

புது டில்லி, 17—6—1946. ஹரிஜன், 23—6—1946

# 21

# அகிம்சை கோழைத்தனம் அன்று

**கேள்வி :** அகிம்சை கோழைத்தனம் அன்று, அநீதிக்கு அது ஒரு வகையான எதிர்ப்பு என்பது உங்கள் கருத்து. சாத்துவிகச் சட்ட மறுப்பாளர்கள் ஒரு குற்றமும் செய்யாதவர்களாகையால் அவர்களைக் கைது செய்து சிறையில் அடைப்பது தவறு என்றும் நீங்கள் ஒப்புக்கொள்ளுகிறீர்கள். நீங்களும் கைதியாகிச் சிறைப்படுவதற்குச் சந்தோஷமாக முன் வந்தீர்கள். இது முன்னுக்குப் பின் முரணனதும் கோழைத்தனமும் அல்லவா ?

**பதில் :** அகிம்சை எப்படி வேலை செய்கிறது என்பது உங்களுக்குத் தெரியவில்லை என்றே தெளிவாகிறது. ஓர் அநீதியான சட்டம் இம்சை இனத்தைச் சேர்ந்ததே. அச்சட்டத்தை மீறுவதற்காகக் கைது செய்யப்படுவதும் அப்படிப்பட்டதே. இம்சை அகிம்சையினல் எதிர்க்கப்பட வேண்டுமேயன்றிப் பதிலுக்கு இம்சையினல் அல்ல என்று அகிம்சையின் சட்டம் விதிக்கிறது. ஒரு சட்டத்தை மீறும் எந்தக் குற்றத்திற்கும் தண்டனையும் உண்டு. அது அநீதியானது என்று நான் சொல்லுவதால் மாத்திரம் அது அநீதியானதாகி விடுவதில்லை. என்ருலும், என் அபிப்பிராயத்தில் அது அநீதியானதே. அச்சட்டம், சட்டப் புத்தகத்தில் இருக்கும்போது அதை நிறைவேற்றும் உரிமை ஓர் அரசாங்கத்திற்கு உண்டு. அகிம்சையால் நான் அதை எதிர்க்கவேண்டும். சட்டத்தை மீறுவதாலும், கைதியாவதற்கும், சிறைப்படுவதற்கும் அமைதியோடு உடன்படுவதன் மூலமும் நான் அதைச் செய்கிறேன். இப்படிச் செய்வது தேவைப்

படும் அளவுக்கு வீரம் மிகுந்த செயல் என்று நான் சொல்லு கிறேன். சாதாரணமாகச் சிறையில் நடத்தப்படும் விதம் என்னுடைய மனநிலையில் எந்த மாறுதலையும் உண்டாக்காது என்று கருதுவதாயின், என்னைப்போன்ற ஒருவருக்கு விதிக்கப்படும் சிறைத் தண்டனையால் இன்று துன்பம் எதுவும் இல்லை என்பது பொருத்தமற்றதாகும். ஆகவே, விவாதிக்கப்படும் இந்த விஷயத்தில் எதிர்ப்பின்மை அகிம்சைக்கு அவசியமாக வேண்டியதுதான்; கோழைத்தனத்தின் அடையாளம் அல்ல இது. ஆனால், இதற்கு மாறாகக் கைதியாவதற்கு மறுப்பது என்ற வகையில் செய்யும் எதிர்ப்பு, நிச்சயமாக வீண் பயமுறுத்தலும் அறிவற்ற பலாத்காரமுமேயாகும். அதோடு கோழைத்தனத்தால் பிதற்றும் பேச்சின் ரகத்தைச் சேர்ந்ததே இது.

புது டில்லி, 14—9—1946. —ஹரிஜன், 22—9—1946

## 22

# சர்வ வல்லமையுள்ளது இது

**கேள்வி:** *உலகத்தில் பார்க்குமிடமெங்கும் இம்சையையும் ராஜீய அதிகாரத்திற்காக நடக்கும் தந்திரங்களையும் தவிர வேறு எதுவும் தென்படவில்லை. ஜனநாயக நாடுகளான இங்கிலாந்து, அமெரிக்கா இந்நாடுகளிலுங்கூட இந்த நிலைமையே இருந்து வருகிறது. இத்தகைய நிலைமையில் உங்களுடைய அகிம்சை என்ன செய்யமுடியும் என்பதை யோசித்தீர்களா?*

**பதில்:** ராஜீய அதிகாரத்தைக் கைப்பற்ற எங்குமே தந்திரங்கள் நடந்து வருகின்றன என்பது உண்மை. ஆனால், அமெரிக்கா அல்லது இங்கிலாந்தில் உண்மையான ஜனநாயகம் இருக்கிறது என்று நீங்கள் நினைப்பதாயிருந்தால் அது முற்றிலும் தவறாகும். மக்களின் குரலே கடவுளின் குரல், பஞ்சாயத்துக் குரல் என்று சொல்லலாம். ஆனால் இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் இருப்பதைப்போல மக்களே பிறரை வஞ்சித்துப் பிழைப்பவர்களாக இருக்கும்போது அங்கே கடவுள் குரல் எப்படி இருக்க முடியும்? வெள்ளையரல்லாத மற்ற மக்களைப் பயன்படுத்திக்கொண்டு அவர்கள் வாழ்கிறார்கள். மக்கள் குரலே கடவுளின் குரலாக இருக்க வேண்டுமானால் அவர்கள் கட்சிச் சார்பற்று இருப்பார்கள். கடவுளின் தராசுக்கோலில் சத்தியம், அகிம்சை இரண்டுமே சமமாகத் தட்டில் நிற்கும். என் பதில் இதில் அடங்கியிருக்கிறது. என்னுடைய அகிம்சை முடிவானதோ அல்லது பலவீனமானதோ அன்று. அது சர்வ வல்லமை வாய்ந்தது.

அகிம்சை இருக்கும் இடத்தில் சத்தியமும் இருக்கும்; சத்தியமே கடவுள். அவர் எந்த உருவில் வெளிப்படுகிறார் என்பதை என்னால் கூற இயலாது. அவர் எங்கும் நிறைந்திருக்கிறார். அவர் இருக்கும் இடமெங்கும் எல்லாம் நன்மையாகவே இருக்கிறது என்பதைமட்டும் நான் அறிவேன். ஆகையால், எல்லோருக்கும் ஒரு சட்டமே உண்டு. உலகில் சத்தியமும் அகிம்சையும் ஓங்கி நிற்கும் இடத்தில் அமைதியும் ஆனந்தமும் நிலவுகின்றன. இவை எங்குமே இல்லை என்றால், சில காலம் இவை மனிதனுக்குக் கிடைக்காமல் ஒளிக்கப்பட்டிருக்கின்றன என்பதையே அது காட்டுகிறது. ஆனால், இவை என்றுமே மறைந்துவிட முடியாது. நம்பிக்கையுள்ளவரை இந்த நம்பிக்கையே தாங்கி நிற்கும்.

ஹரிஜன் — 29—9—1946. (குஜராத்தியில் எழுதியதிலிருந்து)

# 23

# இம்சையின் வழிகள்

ஒன்றுதான் நேர்க் கோடாக இருக்க முடியும். அகிம்சை ஒரு நேர்க் கோடு. நேராக இல்லாத கோடுகளோ பல. பேனாவினால் எப்படி எழுதுவது என்பதைக் கற்றுக்கொண்டுவிட்ட குழந்தை, அது விரும்பியபடியெல்லாம் எத்தனையோ கோடுகளை வரையலாம். தற்செயலாகவன்றி நேர்க் கோட்டை வரைய அக்குழந்தையினால் ஆகாது. நான் ‘அனுமதித்துள்ள’ பலாத்காரத்தின்படி தாங்கள் குறிப்பிடும் பல காரியங்களைச் சேர்த்துக்கொள்ளலாமா என வாசகர்கள் பலர் என்னைக் கேட்கிறார்கள். இக்கடிதங்கள் எல்லாமே ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருப்பது விசித்திரமானதேயாகும்! கடிதம் எழுதியிருப்போர் என்னுடைய கட்டுரையைத் திரும்பப் படிக்க வேண்டும். அப்பொழுது அவர்களுடைய கேள்விக்கு நான் ஏன் பதில் அளிக்க முடியாது என்பதைத் தெரிந்துகொள்ளுவார்கள். நான் பலாத்காரத்தையே பின்பற்றியதில்லை என்ற காரணத்தினாலேயே நான் அதற்குத் தகுதியில்லாதவனாகவும் இருக்கலாம். எல்லாவற்றையும்விடப் பலாத்காரத்தை நான் அனுமதித்ததே கிடையாது. வீரம், கோழைத்தனம் ஆகியவற்றின் இரு வகைகளைப்பற்றி மாத்திரமே நான் குறிப்பிட்டிருக்கிறேன். நீதி நிரம்பிய ஒரே காரியம் அகிம்சையாகத்தான் இருக்க முடியும். இங்கே கொண்டுள்ள கருத்துப்படி, அதாவது, மனிதன் செய்த சட்டங்களினால் அல்லாமல், ஆனால், மனிதனின் இயற்கைப்படி செய்யப்பட்ட சட்டத்தின்படி, பலாத்காரம் நீதி சம்மதமாகாது. எனினும், தற்காப்

புக்கோ அல்லது பாதுகாப்பற்றவர்களைக் காக்கவோ அது உபயோகிக்கப்படும்போது கோழைத்தனமாகப் பணிந்துவிடுவதைவிட அது எவ்வளவோ வீரமிக்க செயலாகும். கோழைத்தனமாகப் பணிவது ஆணுக்கும் சரி, பெண்ணுக்கும் சரி உகந்தது அன்று. பலாத்கார வழியில் தோன்றும் வீரத்திற்குப் பல நிலைகளும் வகைகளும் உள்ளன. இதை ஒவ்வொருவரும் தமக்குத்தாமே முடிவு செய்துகொள்ள வேண்டும். இதில் தலையிட வேறு யாருக்கும் உரிமை இல்லை, அவர்களால் முடியவும் முடியாது.

புது டில்லி, 18—10—1946. ஹரிஜன், 27—10—1946

# 24

# அன்பின் அற்புத சக்தி

[மகாத்மா காந்தி 1931-இல் லண்டனில் நடந்த இரண்டாவது சமரச மகாநாட்டிற்கு இந்தியாவின் பிரதிநிதியாகச் சென்றார். அவ்வாண்டு செப்டம்பர் அவர் கப்பலில் பிரயாணமாகி டிசம்பரில் திரும்பினார். கப்பல் பிரயாணத்தின்போது ஒவ்வொரு நாளும் மாலையில் பிரார்த்தனைக் கூட்டத்திற்குப் பிறகு காந்திஜி சிறிது நேரம் பேசுவார். அகிம்சையில் தமக்குள்ள நம்பிக்கையைக் குறித்து மகாத்மா பேசிய கீழ்க்கண்ட விவரம், லண்டன் போகும் வழியில் கப்பல் சூயஸில் இருந்த சமயம் கூறப்பட்டதாகும். அச்சமயம் அங்கே கப்பலில் ஏறிய எகிப்திய நண்பர்களுக்கும் மகாத்மாவின் பேச்சைக் கேட்கும் பாக்கியம் கிடைத்தது.]

"நமது அன்றாட வாழ்க்கையில் நாம் ஒருவக்கொருவர் அறிந்தோ அறியாமலோ அகிம்சையோடேயே நடந்துகொண்டு வருகிறோம். ஒழுங்கோடு கூடிய எல்லாச் சமூகங்களும் அகிம்சை நியதியின் அடிப்படையிலேயே அமைந்திருக்கின்றன. அழிவிற்கு இடையே வாழ்வும் இருந்துகொண்டு வருவதை நான் காண்கிறேன். ஆகையால், அழிவிற்கும் மேலானதோர் நியதி இருக்கவே வேண்டும். அந்த நியதியின்படியே ஒழுங்காக அமைந்த சமூகம் இருக்க முடிவதோடு வாழ்க்கையும் வாழத்தக்கதாக இருக்க முடியும். இதுவே வாழ்க்கையின் நியதி என்றால், இதை நம்முடைய அன்றாட வாழ்க்கையில் நடத்திக் காட்டவேண்டும். எங்கெங்கே சச்சரவுகள் இருக்கின்றனவோ, எங்கெல்லாம் நீங்கள் எதிரியைச் சமாளிக்கவேண்டி வருகிறதோ, அங்கெல்லாம் அன்பினால் அவனை வெற்றி கொள்ளுங்கள். கரடுமுரடான வகையில் அதை என் வாழ்க்கையில் செய்து வந்திருக்கிறேன். என்னுடைய கஷ்டங்கள் யாவுமே இதனால் தீர்ந்துவிட்டன என்று அர்த்தமல்ல. அழிவின் சட்டம், என்றுமே செய்தறியாத வகையில் இந்த அன்பின் சட்டம், நல்ல பலனைத் தந்திருக்கிறது என்பதைக் கண்டிருக்

கிறேன். இந்தியாவில் சாத்தியமான அளவு பரவலான வகை யில் இந்தச் சட்டம் வேலை செய்திருப்பதையும் கண் முன்பு நாம் கண்டிருக்கிறோம். முப்பது கோடி மக்களிடத்திலும் அகிம்சை ஊடுருவிவிட்டது என்று நான் சொல்லிக்கொள்ள வில்லை. ஆனால், வேறு எந்த உபதேசத்தையும்விட இது மிகக் குறைந்த கால அளவிற்குள் ஆழமாக ஊடுருவியிருக் கிறது என்று கூறுவேன். நாங்கள் எல்லோரும் ஒரு முக மாக அகிம்சைவாதிகள் ஆகிவிடவில்லை. என்றாலும், பெரும்பான்மையான மக்களுக்கு அகிம்சை ஒரு கொள்கை யாக ஆகியிருக்கிறது. ஆகையால், அகிம்சையின் பாதுகாக் கும் சக்தியினால் நாடு அதிசயிக்கத்தக்க அபிவிருத்தியை அடைந்திருக்கவில்லையா என்பதை நீங்கள் கண்டுகொள்ள வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.''

வேறொருவர் கேட்ட கேள்விக்கு மகாத்மா காந்தி கூறிய தாவது :

''அகிம்சை மனப்பான்மையை அடைவதற்குக் கஷ்டமான பயிற்சி முறையே அவசியமானதாகிறது. ஒரு சிப்பாயின் வாழ்க்கையைப் போன்றதான கட்டுத்திட்டங்களுக்குட்பட்ட வாழ்க்கையை ஒருவர் விரும்பாவிட்டாலும் அன்றாட வாழ்க் கையில் கட்டுத்திட்டங்களுடன் கூடிய பயிற்சி வேண்டும். ஆனால், ஒன்றை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். மனம் பூரணமாக ஒத்துழைத்தாலன்றி வெளி அனுஷ்டானங்கள் எல்லாம் சாதாரணப் போர்வையாகவே இருக்கும். இவ்விதம் செய்கிறவருக்கும் மற்றவர்களுக்கும் அதனால் தீமையே உண்டு. மனம், மொழி, மெய் ஆகிய மூன்றும் சரியானபடி இணைந்து வேலை செய்யும்போதுதான் பூரண நிலை ஏற்படு கிறது. ஆனால், எப்பொழுதுமே பலத்த மனப்போராட்டம் இருக்கக்கூடிய விஷயம் இது. உதாரணமாக, எனக்குக் கோபமே வராது என்பது அல்ல. ஆனால், பெருவாரியாய் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் என்னுடைய உணர்ச்சிகளை அடக்கி வைப்பதில் நான் வெற்றி பெறுகிறேன். இதன் விளைவு எதுவாயினும், அகிம்சைக் கோட்பாடுகளை யோசித்து இடைவிடாமல் அனுசரிப்பதில் என் மனத்திற்குள் எப்பொழுதும் போராட்டம் இருந்து வருகிறது. அத்தகைய போராட்டம் அதற்கு வேண்டிய பலத்தையும் ஒருவருக்கு அளிக்கிறது. பலமுள்ளவர்களின் ஆயுதமே அகிம்சை. பல வீனமுள்ளவர்களிடமோ அது வெறும் ஒப்பாசாரமாகவே இருக்கமுடியும். பயங்கொள்ளித்தனமும் அன்பும் ஒன்றுக் கொன்று முரணானவை. பதிலுக்குத் தான் அடைவதன் அள

வைச் சிறிதும் பொருட்படுத்தாமல் எதையும் தருவது அன்பு. அன்பு, தன்னுடன் மட்டுமன்றி உலகத்துடனும் போராடி முடிவில் எல்லா உணர்ச்சிகளையும் தன் வச மாக்கிக்கொண்டு விடுகிறது. சத்தியத்தின், அகிம்சையின் கோட்பாட்டை நமது வாழ்க்கையின் கோட்பாடாக்கிக் கொண்டுவிட்டால் ஒவ்வொரு பிரச்னையும் தானே தீர்ந்து விடுகிறது என்பது என் அனுபவமும், என்னுடன் இருந்து வேலை செய்து வருகிறவர்களுடைய அன்றாட அனுபவமுமாகும். ஏனெனில், சத்தியமும், அகிம்சையும் எனக்கு ஒரே காசின் இரு புறங்களைப் போன்றவை.

"நாம் ஒப்புக்கொண்டாலும், ஒப்புக்கொள்ளாது போயினும், ஆகர்ஷண சக்தி எப்படித் தன் வேலையைச் செய்து கொண்டிருக்கிறதோ அது போலவே அன்பின் கோட்பாடும் வேலை செய்யும். இயற்கையின் சக்திகளைப் பயன்படுத்திக் கொள்ளுவதனால் விஞ்ஞானியால் எவ்விதம் பல அற்புதங்களைச் செய்ய முடிகிறதோ அதே போன்று அன்பின் தத்துவத்தை யும் ஒருவர் சரியானபடி மாத்திரம் பயன்படுத்தினால் இன்னும் அதிக அற்புதங்களைச் செய்ய முடியும். ஏனெனில், இயற்கை யின் சக்திகளில், உதாரணமாக, மின்சார சக்தியைவிட அகிம் சையின் சக்தி மேலும் அதிக அற்புதம் நிரம்பியதும் நுட்பம் வாய்ந்ததுமாகும். நமக்காக அன்பின் தத்துவத்தைக் கண்டு பிடித்தவர்கள், நமது இக்கால விஞ்ஞானிகளைவிட மிகப் பெரிய விஞ்ஞானிகளாவார்கள். நமது ஆராய்ச்சி இதில் போதிய அளவு இல்லாததனால் அது எவ்விதம் வேலை செய்கிறது என்பதை எல்லோரும் கண்டுகொள்வது சாத்தியமாகாமல் இருக்கிறது. இது ஒரு மயக்கமாகவே இருக்குமாயின், இந்த மயக்கத்தில்தான் நான் இருந்து வருகிறேன். இந்தக் கோட் பாட்டை ஒட்டி நான் அதிகமாக வேலை செய்யச் செய்ய வாழ்க்கையில் நான் இன்பத்தைக் காண்கிறேன்; இப்பிரபஞ்ச அமைப்பிலும் ஆனந்தம் காண்கிறேன். இது எனக்குச் சாந்தி அளிக்கிறது; நான் விவரிக்க வொண்ணாத இயற்கையின் ரகசியங்களையும் இது எனக்குக் காட்டுகிறது."

['தேசத்தின் குரல்' என்ற நூலிலிருந்து]

## 25

# அகிம்சை - அதன் பரந்த கொள்கை

அகிம்சை விரிவானதொரு கொள்கையைத் தன்னுள் கொண்டதாகும். இம்சை என்னும் பெருந்தீயில் சிக்கித்

தவிக்கும் உதவியற்ற மனிதர்கள் நாம். 'ஓர் உயிர் மற்ருென்றைத் தின்று வாழ்கிறது' என்ற பழமொழியில் ஆழ்ந்த கருத்துப் பொதிந்திருக்கிறது. அறிந்தோ, அறியாமலோ மனிதன் வெளிப் படையில் இம்சை புரிந்து வருகிருன். அவன் வாழும் விதமும், உணவு கொள்வதும், பருகுவதும், செய்வதும் ஓரளவுக்கு இம்சைமீதே; அது சிறிதேயாளுலும், உயிரினத்தின் அழிவு மீதே அது நிற்கிறது. உள்ளத்தில் இரக்கமும், சிறு பிராணிக்கும் தீங்கு இழைக்காது அதைக் காப்பாற்றும் தன் மையும், தம் கொள்கையில் ஓர் உறுதிப்பாடும் உடையவரே இம்சையின் கொடிய சுழலிலிருந்து விடுபடுவார்கள். இவரே உண்மையில் அகிம்சையின் உபாசகர்கள் ஆவார்கள். தன்னடக் கமும், இரக்கமும் இடையருது இவர்களிடம் வளரத் தொடங்கும். இருப்பினும், வெளிப்படையில் இம்சையிலிருந்து முழுவதும் விலகி நிற்கவே முடியாது. உயிரினத்தில் தோன் றும் ஓர் ஒற்றுமையே அகிம்சைக்கு அடிப்படையாக இருப் பதால் ஒருவர் செய்த தவறு மற்றவரையும் பாதிக்கும். ஆகவே, இம்சையிலிருந்து முழுவதும் விடுபட்டு இருக்க மனிதனுல் ஆகாது.

சமூகத்தில் ஒருவனுக இருக்கும்வரை, சமூகம் நிலைப்பதற்கு இன்றிமையாத இந்த இம்சையில் மனிதன் பங்குகொண்டு தான் ஆக வேண்டியிருக்கிறது. இரு நாடுகள் போரிடும்போது அகிம்சையை வழிபடுபவனின் கடமை போரை நிறுத்த முயல்வதேயாம். இந்தக் கடமைக்குத் தகுதியற்றவனே, போரைத் தடுக்க வலிவற்றவனே, அதற்கான ஆற்றல் இரா தவனே, போரில் ஈடுபட்டாலும் தன்னையும், தன் நாட்டையும், உலகத்தையும் போரின் கொடுமையிலிருந்து விடுபெற உளமாற முயற்சி செய்யவேண்டும்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின்மூலம் எனது நிலையும், நாட்டின் நிலையும் சீரடைந்து ஓங்குமென நான் நம்பியிருந்தேன். இங்கி லாந்தில் இருந்தபோது பிரிட்டிஷ் கடற்படையின் காப்பில் இருந்தேன். அதன் ஆயுத பலத்தின்கீழ் அடைக்கலம் புகுந்து இருந்ததால், அதனுல் விளையக்கூடிய இம்சையில் கலந்த வனுவேன். ஆகவே, ஏகாதிபத்தியத்துடன் தொடர்பையும், அதன் கொடியின்கீழ் வாழ்வதையும் நான் விரும்புவதாக இருந்தால், எனக்குப் புலனுகும் மூன்று வழிகளுள் ஏதாவது ஒன்றை நான் பின்பற்றித்தான் ஆகவேண்டும். வெளிப்படை யாகப் போருக்கு என் எதிர்ப்பைத் தெரிவித்து, சத்தியாக் கிரகம் வகுக்கும் நெறியில் சாம்ராஜ்யம் அதன் ராணுவக்

கொள்கையை மாற்றிக்கொள்ளும்வரை அதைப் பகிஷ்காரம் செய்துவிடலாம்; சட்டமறுப்புச் செய்துச் சிறை புகலாம்; சாம் ராஜ்யத்தின் சார்பில் போரில் ஈடுபட்டுப் போரின் கொடுமையைத் தடுக்க அதற்கேற்ற தகுதியைப் பெறலாம். இதற்கான தகுதியோ, ஆற்றலோ எனக்கு இல்லை. ஆகவே, போரில் ஈடுபட்டுச் சேவை செய்வதைவிட வேறு வழியில்லை என்றே எனக்குத் தோன்றியது.

அகிம்சை நோக்கிலிருந்து பார்த்தால், போரில் நேர்முகமாக ஈடுபடுவோருக்கும் அப்படி ஈடுபடாதவர்களுக்கும் இடையே வேற்றுமை இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. ஒரு கொள்ளைக் கூட்டத்தாருக்கு ஏவல் செய்பவனும், அவர்கள் செய்யும் காரியத்திற்கு உடந்தையாகக் காவல் புரிபவனும், அவர்களுக்குக் காயம்பட்டபோது சிகிச்சை செய்பவனும், அவர்களைப் போலவே கொள்ளைக் குற்றத்திலிருந்து விடுபட முடியாது.

போலக்கிடமிருந்து தந்தி கிடைப்பதன் முன் இவ்வாறு எனக்குள்ளேயே இந்த விஷயத்தை வாதித்து வந்தேன். அந்தத் தந்தியைப் பார்த்ததும் பல நண்பர்களிடம் இதுபற்றி நான் ஆலோசனை செய்தேன். போரில் கலந்துகொண்டு சேவை செய்வதே எனது கடமை என்ற முடிவுக்கு வந்தேன். இந்த வாதமுறையில் பிசகு இருப்பதாக இன்றளவும் எனக்குப் புலப்படவில்லை. அச்சமயம் பிரிட்டிஷாரின் சார்பில் என் அபிப்பிராயம் இருந்தபடியால் நான் செய்த காரியத்துக்காக வருத்தப்படவுமில்லை.

நான் வந்துள்ள முடிவுபற்றி என் நண்பர்கள் திருப்தி அடையவில்லை என்பதை அறிவேன். இது நுட்பமானதொரு பிரச்னை. கருத்து வேறுபாட்டிற்கு இது இடம் அளிக்கிறது. ஆகவே, அகிம்சையில் உறுதியான நம்பிக்கை கொண்டு அதைத் தம் வாழ்வில் ஒவ்வொரு துறையிலும் நடத்திக் காட்டத் தீவிர முயற்சி எடுத்துக்கொள்வோருக்கு எனது வாதத்தை மிகத் தெளிவாக எடுத்துரைக்கிறேன். உண்மையை வழிபடுவோன், சம்பிரதாயமெனக் கருதி எந்த விஷயத்தையும் செய்யக் கூடாது. தான் எப்போதும் திருந்துவதற்கு அவன் தயாராக இருக்கவேண்டும். தான் செய்தது தவறு எனக் கண்டவுடன், எது நேரிட்டபோதினும், அதை அவன் ஒப்புக்கொண்டு அதற்குப் பிராயச்சித்தமும் செய்துகொள்ள வேண்டும்.

[['சுயசரிதை'யிலிருந்து எடுத்தது - பக். 427—428]

# 1

# அகிம்சையே என் கடவுள்

அகிம்சையே என் கடவுள்; சத்தியமே என் கடவுள். அகிம்சையை நான் நாடும்போது, 'என் மூலம் அதை அறி' என்று சத்தியம் எனக்குக் கூறுகிறது. சத்தியத்தை நான் நாடும்போது அகிம்சை, 'என்னைக்கொண்டு அதைக் காண்' என்கிறது.

– எங் இந்தியா—4—6—1925

# 2

# சாத்திரங்களில் சோதனை

படித்ததையெல்லாம் அப்படியே சரி என்று ஏற்றுக் கொண்டுவிடுபவன் அல்ல நான். ஆகையால், உலகிலுள்ள பல தரப்பட்ட சாத்திரங்களின் கருத்துக்களை அறிந்துகொள்ள நான் முயற்சி செய்கிறேன். இந்தச் சாத்திரங்களில் கூறப் பட்டிருப்பவைகளை விவரித்துக்கொள்ள, சத்தியத்தையும் அகிம்சையையும் கொண்டு சோதிக்கிறேன். அந்தச் சோத னைக்குப் பொருத்தமற்றவைகளை நிராகரித்துவிடுகிறேன். அதற் குப் பொருத்தமாக உள்ளவற்றை எடுத்துக்கொள்ளுகிறேன். வேதங்களைப் படிக்கத் துணிந்ததற்காக ஒரு சூத்திரனை ராம சந்திரர் தண்டித்தார் என்ற கதை பின்னால் வந்த இடைச் செருகல் என்று கருதி நிராகரிக்கிறேன். நான் ராமரைப் பூசிக் கிறேன். ஆனால், நான் பூசிப்பது சரித்திரத்தில் காணும் ராமரை அன்று. ஏனெனில், சரித்திர ராமரின் வாழ்க்கை, சரித்திரபூர்வமாகப் புதிதாகக் கண்டுபிடிக்கப்படுபவைகளையும், ஆராய்ச்சிகளையும் கொண்டு மாறுதல் அடையும். ஆகவே, என் கருத்துப்படி பூரண புருஷரான ராமரையே நான் பூசிக் கிறேன். சரித்திரம் கூறும் ராமருக்கும் துளசிதாசருக்கும் சம் பந்தமே கிடையாது. சரித்திரத்தைக் கொண்டு சோதிப்பதா யின் துளசிதாசரின் ராமாயணம் வெறும் குப்பைக் காகிதத் திற்கே சமம். ஆனால், ஆத்மிக அனுபவத்தைக் கொண்டதான அவருடைய நூல், என்னைப் பொறுத்தவரையில் இணையற்ற தாகும். என்றாலும், துளசிதாசரின் ராமாயணம் என்ற பெயரால் பிரசுரமாகியிருக்கும் பல பதிப்புக்களிலும் கூறப்பட்டிருக்கும் ஒவ்வொரு வார்த்தையையும் நான் அப்படியே ஏற்றுக்கொண்டு விடுவதில்லை. பொதுவாக, அந்நூலில் காணும் சீரிய கருத்தே என்னை வசப்படுத்திக் கொள்கிறது.

–எங் இந்தியா–27—8—1925

# 3
# அகிம்சையும் கீதையும்

ஒரு நண்பர் கீழ்வருமாறு கேட்கிறார் :

கீதை, இம்சையைப் போதிக்கிறதா அல்லது அகிம்சையைப் போதிக்கிறதா என்ற வாக்குவாதம் வெகுகாலத்திற்கு இருந்துவரும் என்று தோன்றுகிறது. கீதையில் நாம் காணும் பொருள் என்ன அல்லது என்னவிதமான கருத்தை நாம் அதில் காண விரும்புகிறோம் என்பது ஒரு விஷயம்; விருப்பு வெறுப்பு இல்லாது படிப்பதால் பெறும் பொருள் என்பது வேறு விஷயம். ஆகையால், வாழ்க்கையின் நிரந்தரமான லட்சியமே அகிம்சைதான் என்று உறுதியாக ஒப்புக்கொள்ளுகிறவர்களுக்கு இதில் எந்தவிதமான கஷ்டமும் இருப்பதற்கில்லை. கீதை அகிம்சையைப் போதிப்பதாக இருந்தால்தான் அதைத் தாம் ஏற்றுக்கொள்ள முடியும் என்பார் அவர். மகத்தான நூலாகிய கீதை, நிரந்தர தர்மமான அகிம்சையைவிட உயர்வானதொன்றைப் போதிக்கவில்லை எனக் கருதுவார். அது அப்படிப் போதிக்கவில்லையானாலும், அது அவருக்கு தவறற்ற வழியைக் காட்டும் நூலாக இருக்கமுடியாது. அப்பொழுதும் அது மதிப்பிற்குரிய நூலாகவே இருக்கலாம். ஆனால், குறைபாடு இல்லாத நூல் என்று ஆகாது.

அகிம்சை உணர்ச்சியின் மேலீட்டினால் அர்ச்சுனன், தன் வசமிருந்த ஆயுதங்களையெல்லாம் கீழே போட்டு விட்டுக் கௌரவர்களின் கையில் மாளத் தயாராகிவிடுகிறான் என்ற செய்தியைக் கீதையின் முதல் அத்தியாயத்தில் காண்கிறோம். தன் கண்முன் வரப்போகும் நாசத்தைக் காண்கிறான்; இம்சையிலுள்ள பாபத்தையும் உணர்கிறான். சிரத்தையே இல்லாதவனாக, பயந்து நடுங்கிக்கொண்டே அவன், "எவ்வளவு பெரிய பாதகத்தைச் செய்ய வேண்டியவர்களாக இருக்கிறோம்!" என்கிறான்.

இந்த மன நிலையில் இருக்கும் அர்ச்சுனனைச் சுட்டி ஸ்ரீ கிருஷ்ணர் சொல்லுகிறார்: " இந்த வேதாந்தம் எல்லாம் போதும். கொல்பவனுமில்லை; கொல்லப்படுபவனுமில்லை. ஆத்மா அழிவற்றது; அழிய வேண்டியது உடலே. ஆகவே, உனது கடமையாகக் கருதிப் போர் செய். வெற்றி, தோல்வியைப் பற்றிய கவலை உன்னுடையதன்று. இப்பணிக்குத் தகுதி உடையவனாக ஆக்கிக் கொள்."

கீதையின் பதினொன்றாவது அத்தியாயத்தில் பகவான் பிரபஞ்சத்தின் விசுவரூபத்தையும் அர்ச்சுனனுக்குக் காட்டிக் கூறுகிறார்: " நான் காலன், உலகங்களனைத்தையுமே நாசம் செய்பவன்; தொன்மையானவன், உலகங்களை அழிக்கும் என் வேலையில் நான் இங்கு ஈடுபட்டிருக்கிறேன். என்னால் முன்னாலேயே கொல்லப்பட்டிருப்போரை நீ கொல். துக்கத்திற்கு உன்னை ஆளாக்கிக் கொள்ளாதே."

கடவுள் முன்பு இம்சையும் ஒன்றே; அகிம்சையும் ஒன்றே. ஆனால், மனிதனுக்குக் கடவுளின் ஆக்ஞை என்ன? 'போர் செய். ஏனெனில், உன் எதிரிகளைப் போர்க்களத்தில் நீ முறியடிப்பது நிச்சயம்' என்பதுதானா அது? கீதை அகிம்சையைப் போதிப்பதாய் இருந்தால் அதனுடைய முதல் அத்தியாயமும் பதினொன்றாவது அத்தியாயமும் அதற்கு முரணானவையாக இருக்கின்றன. எப்படியும் அவை அகிம்சைத் தத்துவத்தை ஆதரிப்பனவாய் இல்லை. என்னுடைய சந்தேகத்தைப் போக்குவதற்கு உங்களுக்கு அவகாசம் இருக்கும் என்றே விரும்புகிறேன்.

கேட்கப்பட்டிருக்கும் கேள்வி நிரந்தரக் கருத்தைப் பற்றியது. கீதையைப் படித்து வருகிறவர்கள் ஒவ்வொருவரும் இதற்குத் தாமே தீர்வும் காண வேண்டும். என் பதிலையும் நான் கூறப் போகிறேன். என்றாலும், முடிவாக ஒருவருக்கு வழிகாட்டியாக இருப்பது அறிவல்ல, உள்ளமே என்பதை அறிவேன். உள்ளம் ஒரு முடிவை ஒப்புக்கொள்ளுகிறது. பிறகு அறிவு அதற்கான காரணங்களைக் கண்டுபிடிக்கிறது. சித்தாந்தத்தைத் தொடருகின்றன வாதங்கள். தான் செய்வதற்கு, செய்ய விரும்புவதற்கு, ஆதாரமான காரணங்களையே பொதுவாக மனிதன் கண்டுபிடிக்கிறான்.

ஆகையால், கீதைக்கு நான் கூறும் விளக்கத்தை ஒப்புக்கொள்ள முடியாமல் இருப்பவர்களின் நிலையை நான் உணருகிறேன். நான் செய்யவேண்டியதெல்லாம், என் பொருளை எப்படி நான் கொண்டேன், இப்பொருள் கொள்ளுவதற்கு எந்தவிதமான விளக்கத்தை நான் மேற்கொண்டேன் என்பதைத் தெரிவிப்பதேயாகும். நான் வெற்றி அடைவதாயிருந்தாலும், தோல்வி அடைவதாயிருந்தாலும், நான் கண்ட பொருளுக்காகப் போராடுவது என் பொறுப்பு.

நான் முதன் முதலில் கீதையை அறிந்தது 1889-ஆம் ஆண்டில். அப்பொழுது எனக்கு வயது இருபது. அகிம்சைத் தத்துவத்தைப்பற்றிச் சிறிதளவு அறிவேனும் அப்பொழுது எனக்குக் கிடையாது. குஜராத்திக் கவிஞரான சியாமல் பட்டரின் கீதத்தில் வரும் ஓர் அடியான, 'அன்பினால் எதிரியையும் வெல்லலாம்' என்ற போதனை என் உள்ளத்தில் பதிந்துவிட்டது. அகிம்சையின் அழிவற்றதான தத்துவத்தை நான் அதினின்றும் பெறவில்லை. உதாரணமாக, எல்லா உயிர்களையும் குறித்ததுமன்று அது. இதற்கு முன்னால் நான் இந்தியாவில் இருந்த போது மாமிசம் சாப்பிட்டிருக்கிறேன். பாம்புகள் போன்ற விஷப்பிராணிகளைக் கொல்ல வேண்டியது கடமை என்றும் எண்ணியதுண்டு. ஆனால், இன்றோ, அகிம்சையை அனுசரிப்பவர் விஷப்பிராணிகளையும் கொல்லக்கூடாது என்பது என்னுடைய துணிபு. ஆங்கிலேயருடன் போராடுவதற்கு நம்மைத் தயார் செய்துகொள்ள வேண்டும் என்று அந்தக் காலத்தில் நம்பினேன். 'பிரிட்டன் ஆளுகிறது என்பதில் என்ன அதிசயம்' என்ற ஒரு குஜராத்திக் கவியின் சிந்துப் பாடலை அடிக்கடி சொல்லுவேன். ஆங்கிலேயருடன் போராடுவதற்கு என்னைத் தகுதி யாக்கிக்கொள்ளுவதற்கு முதற் படியாகவே நான் மாமிசம் உண்டேன். இங்கிலாந்துக்குப் போவதற்கு முன்னால் நான்

இருந்த நிலை இது. அங்கு மாமிசம் உண்பது போன்ற பழக்கங்களிலிருந்து மீண்டேன். என் அன்னைக்குச் செய்து கொடுத்திருந்த சத்தியத்தைச் சாகும் வரையில் நிறைவேற்ற நான் கொண்டிருந்த உறுதியே அதற்குக் காரணம். சத்தியத்தில் எனக்கு இருந்த ஆர்வம் என்னைப் பல தவறுகளிலிருந்தும் காத்தது.

நான் இங்கிலாந்தில் இருந்தபோது இரண்டு ஆங்கில நண்பர்களுடன் ஏற்பட்ட தொடர்பே கீதையைப் படிக்கும்படி என்னைத் தூண்டியது; 'படிக்கும்படி தூண்டியது' என்கிறேன். ஏனெனில், என் விருப்பத்தின் காரணமாக நான் அதைப் படிக்கவில்லை. இவ்விரு நண்பர்களும் தம்முடன் என்னையும் கீதையைப் படிக்குமாறு சொன்னபோது என்னுடைய அறியாமைக்காக வெட்கினேன். என்னுடைய சமய நூல்களை முற்றிலும் நான் அறிந்திருக்கவில்லை என்பது தெரிந்ததும் எனக்கு மனவேதனை உண்டாயிற்று. என் அகந்தை இந்த நினைப்புக்கு அடிப்படையாக இருக்கவேண்டுமென்பது என் எண்ணம். பிறருடைய உதவியின்றிக் கீதையின் எல்லாச் சுலோகங்களையும் புரிந்துகொள்ளுவதற்குப் போதிய சம்ஸ்கிருத ஞானம் எனக்கு இல்லை. அந்த நண்பர்களுக்கோ சம்ஸ்கிருதமே தெரியாது. சர் எட்வின் ஆர்னல்டின் அற்புதமான கீதை மொழிபெயர்ப்பை என்னிடம் தந்தார்கள். ஆரம்பம் முதல் இறுதி வரையில் அந்நூலைப் படித்தேன்; அதிலேயே மயங்கிக் கிடந்தேன். இரண்டாவது அத்தியாயத்தின் கடைசிப் பதினெட்டுச் சுலோகங்கள் அன்றே என் உள்ளத்தில் அப்படியே பொறிக்கப் பட்டுவிட்டன. எனக்கு வேண்டிய எல்லா ஞானமும் அதில் அடங்கியிருக்கின்றன. அதில் உபதேசிக்கப்பட்டிருக்கும் உண்மைகள் நிரந்தரத்தன்மையன. தருக்க வழியில் நிரூபிக்கும் உண்மைகள் அதில் இருக்கின்றன. ஆனால், அவை அனுபவ வாயிலான ஞானங்களே.

அதன் பின்னர்க் கீதையின் பல மொழிபெயர்ப்புக்களையும் விளக்கங்களையும் படித்திருக்கிறேன்; திருப்தி அடையும்வரை அதன்மீது விவாதித்தும் ஆலோசனை செய்தும் இருக்கிறேன். ஆனால், அதை முதன் முதலில் படித்ததும் எனக்கு ஏற்பட்ட கருத்து மாத்திரம் மாறவே இல்லை. அந்தச் சுலோகங்கள், கீதையின் விளக்கத்திற்குத் திறவுகோல்கள். முரண்பட்ட கருத்துடையனவாகத் தோன்றும் சுலோகங்களை நிராகரித்துவிடலாம் என்றும் நான் கூறுவேன். ஆனால், பணிவுடன் ஆராய்பவன் நிராகரிக்கவேண்டியது எதுவும் இல்லை. "இந்த

முரண்பாட்டைத் தீர்மானிக்க என்னல் இயலவில்லை என்றால், எனக்குப் போதிய அறிவில்லை என்பதேயாம். பிறகு எப்பொழுதாவது என்னல் அது முடியலாம்'' என்று மாத்திரமே அவன் கூறுவான். தனக்கும் மற்றவர்களுக்கும் இவ்விதமே அவன் சமாதானம் கூறிக்கொள்ளவேண்டும்.

மத நூல்களுக்குச் சரியான விளக்கத்தைப் பெறுவதற்கு, பக்தியோடு அவற்றைப் பயிலுவதும் அனுபவமும் மிக அவசியம். ஒரு சூத்திரன் வேதங்களைப் படிக்கக்கூடாது என்று விதிக்கப்பட்டிருக்கும் தடைக்குப் பொருள் இல்லாமல் இல்லை. ஆத்மிகப் பண்பாடு இல்லாத அறிவிலி என்பதே சூத்திரன் என்பதற்குப் பொருள். வேதங்களுக்கும் சாத்திரங்களுக்கும் நேரிய பொருளுக்கு மாருக அவன் தவருன பொருள்களைக் கொள்ளக்கூடும். பீஜ கணிதத்தில் சமீகரணத்தை எல்லோருமே எளிதில் போட்டு விட முடியாது. இதற்கு ஆரம்பப் பயிற்சி இருக்கவேண்டியது இன்றியமையாத விஷயம். 'நானே பிரமன்' என்ற பேருண்மை, பாபத்திலேயே உழலும் ஒருவனுடைய வாயிலிருந்து வருமாயின், அது எவ்வளவு கோரமாக இருக்கும்! அதை எவ்வளவு படுமோசமான காரியங்களுக்கு அவன் பயன்படுத்திவிடுவான்! அவனிடம் அது எவ்வளவு சீர்கேடு அடையும்!

ஆகையால், சாத்திரங்களுக்கு விளக்கம் செய்பவர் ஆத்மிகக் கட்டுப்பாடுகளையும் உடையவராக இருக்க வேண்டும். ஒழுக்கத்திற்கு நித்திய வழிகாட்டிகளான நியமங்களையும் அவர் அனுசரிக்கவேண்டும். மேலெழுந்தவாரியான பயிற்சியினல் பயனில்லை. குருவின் அவசியத்தைச் சாத்திரங்கள் கூறுகின்றன. ஆனல், இக்காலத்தில் குரு கிடைப்பது அரிதாகையால் பக்தியைப் புகட்டும் இக்கால நூல்களைப் படிக்க வேண்டுமென ரிஷிகள் குறிப்பிட்டிருக்கின்றனர். பக்தியில்லாதவர், நம்பிக்கையற்றவர், சாத்திரங்களுக்கு விளக்கம் கூறத் தகுதியற்றவர்கள். அறிவாளிகள், அவற்றிற்கு அறிவோடுகூடிய பெரிய விளக்கங்களைக் கூறக்கூடும். ஆனல் அவையெல்லாம் உண்மையான விளக்கங்கள் ஆகா. அனுபவமுள்ளவர்கள் மாத்திரமே சாத்திரங்களுக்கு உண்மை விளக்கங்களைக் காண்பார்கள்.

ஆனல், அனுபவமற்றவர்களுக்குக்கூடச் சில நிபந்தனைகள் உண்டு. சத்தியத்திற்கு மாறுபட்டதாய் இருக்கும் விளக்கம் உண்மையான விளக்கமாகாது. சத்தியத்தையே சந்தேகிக்கிறவர்களுக்குச் சாத்திரமே பயனில்லை. அவர்களுடன் யாரும் வாதிக்கவும் இயலாது. சமய நூல்களில் அகிம்சையைக் காணுதவனுக்கு ஆபத்தே தவிர அவனுக்கு அழிவு ஏற்படுவதில்லை.

உண்மை-சத்தியம் - நேரானது ; அகிம்சை எதிர்மறையானது. சத்தியம் உள்ளதைக் காட்டுகிறது ; அகிம்சை இன்மையைக் குறிக்கிறது. என்றாலும், அகிம்சையே மிக உயர்ந்த தருமம். சத்தியம் தானே புலனாவது ; அகிம்சையோ அதன் முதிர்ந்த கனி. சத்தியத்தில் அது அடங்கியிருக்கிறது. ஆனால், அது தானாகப் புலனாகக் கூடியதல்ல என்பதனால் அதை ஒப்புக்கொள்ளாமலேயே ஒருவர் சாத்திரங்களுக்கு விளக்கம் காண முற்படலாம். ஆனால், சத்தியத்தை அவர் ஒப்புக்கொண்டு விடுவாரானால் அகிம்சையையும் அவர் ஒப்புக்கொள்ளும்படி அது செய்து விடுவது நிச்சயம்.

உண்மையை அடைவதற்கு உடல் ஆசைகளைத் துறப்பது அவசியம். உண்மையைக் கண்ட முனிவர்கள், தம்மைச் சுற்றிலும் சீறிய இம்சையிலிருந்து அகிம்சையைக் கண்டார்கள். 'இம்சை பொய்மையானது, அகிம்சையே உண்மையானது' என்றனர். அகிம்சையாலன்றி உண்மையை அறிவது சாத்தியமில்லை. பிரம்மசரியம், கள்ளாமை, (அஸ்தேயம்) உடைமையின்மை, (அபரிக்கிரகம்) ஆகியவையே அகிம்சையை அடைய மார்க்கங்கள். சத்தியத்தின் ஆத்மா, அகிம்சை. அது இல்லாத மனிதன் வெறும் மிருகம். சத்தியத்தை நாடுகிறவர் அதைத் தேடுவதில் இதையெல்லாம் உணர்வார். அதன் பிறகு சாத்திரங்களுக்கு விளக்கம் கூறுவதில் அவருக்கு எந்தவிதமான கஷ்டமும் இராது.

விளக்கம் காண்பதற்குள்ள மற்றொரு நிபந்தனை, எழுத்தை மாத்திரம் கவனித்துவிடாமல் அதன் உட்கருத்தையும் கவனிக்க வேண்டும். துளசிதாசரின் ராமாயணத்தில் தூய்மை, இரக்கம், பக்தி ஆகிய கருத்துக்கள் நிறைந்திருப்பதால் அது உயர்ந்த நூலாகிறது. அதிலுள்ள ஒரு பாடல், தம்பட்டம், சூத்திரர்கள், முட்டாள்கள், பெண்கள் ஆகியோர் அடிபடத் தகுந்தவர்கள் என்று கூறுகிறது. தன் மனைவியை அடிப்பதற்கு ஆதாரமாக இப்பாடலை மேற்கோளாகக் காட்டுபவன் நாசத்தையே அடைவான். ராமர் தம் மனைவியை அடித்ததே இல்லை என்பது மாத்திரமல்ல, அவள் அதிருப்தி அடைய எதையும் செய்ததுமில்லை. தங்கள் மனைவிகளை அடிப்பதற்கு இப்பாடலை மிருகத்தனமான சிலர் ஆதாரமாகக் காட்டிவிடக்கூடும் என்பதைத் துளசிதாசர் அறியாமல், அக்காலத்தில் வழங்கிவந்த ஒரு பழமொழியைச் சாதாரணமாகத் தம் பாடல்களில் சேர்த்துவிட்டார். அவருடைய நாளில் இருந்து வந்த பழக்க வழக்கத்தை அனுசரித்துத் துளசிதாசரே தம் மனைவியை அடித்தார் என்று வைத்துக்கொள்ளுவோம். அதனால்

என்ன? இருந்தாலும், அடிப்பது தவறே. மனைவிமாரைக் கணவன்மார் அடிப்பது நியாயம் என்று எடுத்துக்காட்டுவதற்காக எழுதப்பட்டதன்று ராமாயணம். மனிதரில் உத்தமராக ராமரையும், லட்சிய மனைவியாகச் சீதையையும், சகோதர பக்திக்குப் பரதனையும் எடுத்துக்காட்ட எழுதப்பட்டதே ராமாயணம். அதில் பல பழக்க வழக்கங்களுக்கு ஏதாவது நியாயம் கூறப்பட்டிருந்தால் அதை நிராகரித்துவிட வேண்டும். தம்முடைய ஒப்பற்ற நூலைப் பூகோள சாத்திரம் போதிப்பதற்காகத் துளசிதாசர் எழுதவில்லை. ஆகையால், ராமாயணத்தில் பூகோள சம்பந்தமான தவறுகள் எவையேனும் இருப்பின் அவற்றை உடனே நிராகரித்துவிட வேண்டும்.

இதுவரையில் கூறியவைகளைக் கொண்டு கீதையை ஆராய்வோம். தன்னைத்தான் அறிதலும் அதற்கான உபாயங்களுமே கீதையின் விஷயமாகும். இரு சேனைகளுக்குமிடையே யுத்தம் என்பது இக்கருத்தை விளக்கக் கூறப்பட்டிருப்பது. கவி, யுத்தத்திற்கோ பலாத்காரத்திற்கோ எதிர்ப்பாளரல்ல. ஆகையால், யுத்த சந்தர்ப்பத்தை உபதேசத்திற்காக எடுத்துக் கொள்ள அவர் தயங்கவில்லை என்று நீங்கள் விரும்பினால் சொல்லிக்கொள்ளலாம். ஆனால், மகாபாரதத்தைப் படித்ததில் எனக்கு ஏற்பட்ட கருத்து முற்றிலும் மாறானது. அற்புதமான அழகோடு கூடிய அப்பெருங் காவியத்தின் மூலம் கவி வியாசர், யுத்தம் எவ்விதம் வீணானது என்பதை எடுத்துக் காட்டியிருக்கிறார். "கௌரவர்கள் அழிந்தால்தான் என்ன, பாண்டவர்கள் வெற்றி பெற்றால்தான் என்ன, வெற்றியடைவோரில் மிஞ்சுகிறவர்கள் எத்தனை பேர்? அவர்கள் கதி என்ன? தாய் குந்தியின் வாழ்வு என்ன முடிவுக்கு வந்தது? அந்த யாதவர்கள் இன்று எங்கே?" என்று அவர் கேட்கிறார்.

போரின் வர்ணனையும், பலாத்காரம் நியாயம் என்பதும் காவியத்தின் முக்கியமான நோக்கமாக இல்லாதபோது அந்த அம்சங்களை வலியுறுத்துவது முற்றிலும் தவறானதாகும். சில பாடல்களை, அகிம்சை போதனைக்கு உடன்பாடுடையவைகளாகக் கொள்வது கஷ்டமாயிருப்பின் கீதை முழுவதையுமே பலாத்கார அடிப்படைக்குப் பொருத்திவிடுவதும் பின்னும் கஷ்டமானதாகும்.

கவி எழுதும்போது தம் பாடல்களுக்கு என்னவெல்லாம் வியாக்கியானங்களும் வருமென்பதை அறிந்தவரல்ல. கவியின் சிருஷ்டியான காவியம் கவியையும் மீறிச் செல்வதே கவிதைக்குரிய அழகாகும். அவர் உயர்ந்த கற்பனையில் காணும் உண்மை

கள், அவருடைய வாழ்க்கையில் வெகுவாகத் தென்படுவதில்லை. இவ்விதம் ஒரு கவியின் வாழ்க்கைச் சரித்திரம் அவருடைய பாடல்களைப் பொய்யாக்கிவிடுகின்றது. கீதையின் முக்கியமான போதனை அகிம்சையேயன்றி இம்சை அல்ல என்பது இரண்டாவது அத்தியாயத்தில் ஆரம்பித்து முடிவான பதினெட்டாவது அத்தியாயத்தில் சுருக்கமாகச் கூறப்பட்டிருக்கும் விஷயத்திலிருந்து தெளிவாகிறது. மற்ற அத்தியாயங்களில் தென்படுவதும் இதற்கு ஆதாரமாகவே இருக்கின்றது. கோபம், பற்று, துவேஷம் இவையல்லாமல் இம்சை தோன்றுவதற்கு சாத்தியமில்லை. கீதையோ, கோபம், துவேஷம் முற்றிலும் தோன்ருத சத்வ, ரஜஸ், தமஸ் இந்நிலைகளுக்கு அப்பால் நம்மை இட்டுச் செல்கிறது. ஆனால், ஒவ்வொரு தடவையும் அர்ச்சுனன் தனது வில்லில் அம்பைத் தொடுத்து நாணினைத் தன் காதளவுக்கு இழுக்கும்போதெல்லாம் சினத்தால் அவன் கண்கள் சிவந்துவிடுவதை இப்பொழுதும் என் மனக்கண் முன்பு ஒரு சித்திரமெனக் காண்கிறேன்.

அர்ச்சுனன் போருக்குப் போக மறுத்தது அகிம்சை உணர்ச்சியினால் அன்று. அதற்கு முன்னால் பல யுத்தங்களில் போராடியிருக்கிருன். இத்தடவையில் அவனுக்குப் போலி இரக்கம் மேலிட்டுவிட்டது. தன் உற்ருர் உறவினர்களைக் கொல்லத் தயங்கினன். கொல்லுவது என்ற ஒரு விஷயத்தைக் குறித்து அர்ச்சுனன் விவாதிக்கவே இல்லை. ஒருவனை மிகக் கொடியவன் என்று தான் கருதினலும் அவனைத் தான் கொல்லப் போவதில்லை என்று அர்ச்சுனன் சொல்லவில்லை. ஒவ்வொருவரின் உள்ளத்தில் இருப்பதும் இன்னதென்பதை ஸ்ரீ கிருஷ்ணர் அறிவார். அர்ச்சுனனுக்குத் திடீரென்று ஏற்பட்டிருக்கும் இந்த மயக்கத்தின் காரணத்தை அவர் அறிவார். ஆகவே அவனை நோக்கி அவர், "கொல்லுவதை நீ முன்னலேயே செய்துவிட்டாய். இப்பொழுது திடீரென்று நீ அகிம்சைவாதியாக ஆகிவிட்டதாக விவாதிக்க முடியாது. முன்பே நீ ஆரம்பித்துவிட்டதைச் செய்து முடித்துவிடு" என்ருர். ஸ்காட்லாண்டு எக்ஸ்பிரஸில் பிரயாணம் செய்துகொண்டிருப்பவர், திடீரென்று பிரயாணத்தில் வெறுப்புக்கொண்டு அதிலிருந்து குதித்துவிடுவாரானல் அவர் தற்கொலைக் குற்றத்தைச் செய்தவர் ஆவார். பிரயாணம் செய்வது வீணனது என்பதையோ அல்லது ரெயில் பிரயாணம் வீண் என்பதுபற்றியோ அவர் தெரிந்து கொள்ளவில்லை. அர்ச்சுனனின் விஷயமும் இதுவே. அகிம்சையாளரான கிருஷ்ணர் இதைத்தவிர அர்ச்சுனனுக்கு

வேறு விதமான புத்திமதியைக் கூறுவதற்கில்லை. ஆனால், ஒரு குறிப்பிட்ட சந்தர்ப்பத்தில் கொல்லும்படி புத்திமதி கூறப் பட்டிருக்கிறது என்பதற்காகக் கீதை பலாத்காரத்தைப் போதிக் கிறது அல்லது யுத்தம் நியாயம் என்கிறது என்னும் வாதம் 'அன் றாட வாழ்க்கையில் இம்சையும் ஓரளவுக்குத் தவிர்க்க முடியாத தாக இருக்கிறது என்ற காரணத்தினால் வாழ்க்கையின் தருமமே இம்சைதான்' என்று கூறுவதைப் போன்றே தவறான தாகும். கீதையின் கருத்தை உணருவோருக்கு அது அகிம்சை யின் ரகசியத்தையும் இவ்வுடலைக்கொண்டே தன்னை அறிந்து கொள்ளும் ரகசியத்தையுமே போதிக்கிறது.

திருதராட்டிரன், யுதிட்டிரன், அர்ச்சுனன் ஆகியோர் யாவர்? கிருஷ்ணர் யார்? இவர்களெல்லாம் சரித்திரபூர்வமான பாத் திரங்களா? அப்படித்தான் என்று கீதையாவது சொல்லு கிறதா? போரின் நடுவில் அர்ச்சுனன் திடீரென்று போரிடு வதை நிறுத்திவிட்டுக் கிருஷ்ணரைக் கேள்விக் கேட்டான். அவன் முன்பு கிருஷ்ணர் கீதை முழுவதையுமே உபதேசிக் கிறார் என்பதாவது உண்மையா? அர்ச்சுனன் தன்னுடைய மயக்கமெல்லாம் நீங்கிவிட்டதென்று சொன்னதும், கீதையை மறந்துவிட்டுக் கீதையைத் திரும்பக் கூறும்படி அவன் கிருஷ்ணரைக் கேட்டுக்கொண்டதும். அவ்வாறு செய்ய முடி யாததால்தான்; அநுகீதை வடிவில் அவர் கூறிய அந்தக் கீதை தான் என்ன?

துரியோதனனையும் அவனுடைய கட்சியினரையும் மனிதனிட முள்ள ஈனத்தன்மை என்று நான் கருதுகிறேன். அர்ச்சுன னும் அவனுடைய கட்சியினரும் மனிதனிடம் உள்ள உயரிய தன்மைகளையே குறிக்கின்றனர். போர்க்களம் நமது உடலே. இந்த இருவிதமான தன்மைகளுக்கும் இடையே எப்பொழுதுமே போராட்டங்கள் நடந்துகொண்டு வருகின்றன. தீர்க்கதரிசியான கவி அவற்றை விரிவாக வர்ணனை செய்திருக்கிறார். நம் உள்ளத்தில் உறைந்து தூய மனத்துடன் நமக்கு அறிவு புகட்டு பவர் கிருஷ்ணர். கடிகாரத்திற்கு வேண்டுவதுபோல உள்ளத் திற்கும் தூய்மையின் சாவி கொடுத்தல் வேண்டும். இராது போனால் உள்ளத்தில் கோயில் கொண்டவன் பேசுவதை நிறுத்திவிடுவான்.

உடல் வன்மைபற்றிய போராட்டம் என்ற பிரச்னையே இல்லை என்பது அல்ல. அகிம்சையை அறியாதவர் களுக்கு மனம் தளர்ந்துவிடும் உபதேசத்தைக் கீதை செய்யவில்லை. எவன் பயப்படுகிறானோ, எவன் தப்பி ஓடுகிறானோ,

எவன் உணர்ச்சி வயப்படுகிருனே அவன், அவனல் முடிந்தாலும் முடியாவிட்டாலும் உடல்வலி கொண்டு போராடியே ஆகவேண்டும். ஆனல், அது அவன் தருமம் அன்று. தருமம் என்பது ஒன்றே ஒன்றுதான். அகிம்சை என்பது மோட்சம்; உண்மையை அடைவதே மோட்சம். இதில் கோழைத்தனத்திற்கே இடமில்லை. இந்த விசித்திர உலகத்தில் இம்சை என்றும் இருந்துகொண்டுதான் இருக்கும். அதனிடமிருந்து விடுபடும் மார்க்கத்தைக் கீதை காட்டுகிறது. பயங்கொள்ளித்தனத்திலிருந்தும் மனச்சோர்விலிருந்தும் தப்பப் பார்ப்பது அதற்கு வழியே அன்று என்பதையும் கீதை காட்டுகிறது. கோழையாக இருப்பதைவிடப் போர்க்களத்தில் கொல்லுவதும், கொல்லப்படுவதும் எவ்வளவோ மேல்.

ஆரம்பத்தில் கூறப்பட்டிருக்கும் கடிதத்தை எழுதியவர் குறிப்பிட்டிருக்கும் சுலோகங்களின் பொருள் இன்னும் தெளிவாகவில்லையாயின் அதைத் தெளிவாக்கும் திறமை எனக்குப் போதவில்லை என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். எல்லாம் வல்ல இறைவன் படைப்பவனுகவும், காப்பவனுகவும், அழிப்பவனுகவும் இருக்கிருன் என்ருல், அப்படித்தான் இருக்க வேண்டும் என்பது ஒப்புக்கொள்ளப்படுகிறதா? படைப்பவர் அவரே என்ருல் அழிக்கவும் சந்தேகத்திற்கிடமின்றி அவருக்கு உரிமை உண்டு. பிறந்தன யாவும் இறந்தேயாகவேண்டும் என்பது அவர் ஆணை; அவர் கருணை அதில்தான் இருக்கிறது. அவர் ஆணை அசைக்க முடியாதது. தம் மனம் போனபடி அவர் இதை மாற்றிக்கொண்டே இருப்பாராயின் நாம் எல்லோரும் எங்கே இருப்போம்?

– எங் இந்தியா - 12—11—1925.

4

# கீதையை அனுசரிப்பதாயின்?

கீதையின் முக்கியமான உபதேசங்களை வாழ்க்கையில் அனுசரிக்க முற்படுவதாயின் ஒருவர் சத்தியத்தையும் அகிம்சையையும் பின்பற்றவேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. பலனில் ஆசை இல்லாதபோது பொய்மைக்கும் இம்சைக்கும் தூண்டுதலும் இல்லை. பொய்மை அல்லது பலாத்காரம் சம்பந்தமான எந்தச் சம்பவத்தைக் கவனித்தாலும் சரி, ஆசைப்படும் ஒரு முடிவை அடையும் ஆர்வமே அதற்குக் காரணமாக இருப்பதைக் காணலாம். ஆனல், அகிம்சையை நிலைநாட்டுவதற்காகக் கீதை எழுதப்படவில்லை என்பதைத் தாராளமாக ஒப்புக்கொள்ள

லாம். கீதையின் காலத்திற்கு முன்பும் அது எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட முதல் கடமையாக இருந்தது. பலனைத் துறக்க வேண்டும் என்ற போதனையைக் கீதை செய்ய வேண்டியிருந்தது. இது தொடக்கத்திலேயே இரண்டாவது அத்தியாயத்தில் எடுத்துக் கூறப்பட்டிருக்கிறது.

ஆனல், கீதை அகிம்சையில் நம்பிக்கை கொள்ளுவதா யிருந்தால் அல்லது பற்றின்மையில் ஈடுபட்டிருக்குமாயின் கீதையின் ஆசிரியர் போரைப்போன்ற ஓர் உதாரணத்தை எடுத்துக்கொள்ளுவானேன்? கீதை எழுதப்பட்ட காலத்தில் மக்களுக்கு அகிம்சையில் நம்பிக்கை இருந்தபோதிலும், போர்கள் தடுக்கப்பட்டவையாக இல்லாததோடு அவைகளுக்கும் அகிம்சைக்கும் இடையே மாறுபாடு இருந்ததை யாரும் காணவில்லை.

பலனைத் துறப்பதன் விளைவுகளைக் குறித்து ஆராயுங்கால் கீதையின் ஆசிரியர் எண்ணத்தில் அகிம்சை போன்றவைகளில் இருந்த குறைபாடுகளைக் குறித்து நாம் துருவிப் பார்க்கவேண்டியதில்லை. ஏனெனில், ஒரு கவிஞர் ஒரு குறிப்பிட்ட உண்மையை உலகிற்கு எடுத்துக் காட்டும்போது, அதனுடைய பெரும் விளைவுகளைப்பற்றியெல்லாம் அவர் அறிந்திருக்க வேண்டும், பரிசீலனை செய்திருக்கவேண்டும், அல்லது அப்படிச் செய்திருந்தால் அவைகளை முற்றிலும் எடுத்துக்காட்ட அவரால் முடிந்திருக்கும் என்பதற்கு இல்லை. காவியத்தின்—கவியின்—பெருமையெல்லாம் இதில்தான் அடங்கியிருக்கிறது. ஒரு கவியின் பொருள் எல்லை இல்லாதது. மனிதனைப் போன்றே பெரிய காவியங்களின் பொருளும் காலப்போக்கில் மாறுதல் அடைகின்றது. மொழிகளின் வரலாற்றைக் கவனித்தால் முக்கியமான சொற்களின் பொருள்கள் மாறியும், விரிவடைந்தும் இருக்கின்றன என்பதைக் காண்கிறோம். இதேதான் கீதையின் விஷயத்திலும். சாதாரணமாக வழங்கிய சில சொற்களின் பொருள்களை அதன் ஆசிரியரே விரிவாக்கியிருக்கிறார். மேலெழுந்தவாரியாகக் கவனித்தாலே இது புலனாகும். கீதைக்கு முற்பட்ட காலத்தில் வேள்வியில் மிருக பலி அனுமதிக்கப்பட்டதாக இருந்திருக்கக்கூடும். ஆனல், கீதையில் காணும் வேள்விக்கு அப்பொருள் இருப்பதாக அறிகுறி எதையுமே காணமுடியாது. கடவுளை இடைவிடாது தியானிப்பது ஒன்றே கீதை கூறும் தலையான வேள்வி. 'சேவைக்கென உடல் உழைப்பே வேள்வி என்பதற்கு முக்கியமான பொருள்' என்று மூன்றாவது அத்தியாயம் காட்டுவதாகத் தோன்றுகிறது. மூன்றாவது, நான்கா

வது அத்தியாயங்களைச் சேர்த்துப் படித்தால் வேள்வி என்பதற்கு வேறு பொருள் ஏற்படுகிறதேயன்றி மிருக பலி என்ற கருத்தே தோன்றுவதில்லை. இதே போலச் சன்னியாசம் என்ற சொல்லுக்குப் பொருளும் கீதையில் மாற்றத்தை அடைந்திருக்கிறது. செயல்கள் எல்லாவற்றையுமே நிறுத்திக்கொண்டுவிடுவது என்பதைக் கீதை கூறும் சன்னியாசம்[1] ஒப்புக்கொள்வதாயில்லை. செயல் புரிவது, செயலற்று இருப்பது இரண்டுமே கீதையின் சன்னியாசத்திற்குப் பொருள். இவ்விதம் கீதையின் ஆசிரியர் சொற்களின் பொருளை விரிவுபடுத்தித் தம்மை அனுசரித்து நடக்கவும் போதிக்கிறார். கீதா வாசகத்தின்படி பலனைக் கருதாமல் இருப்பதுடன் போரும் பொருத்தமானதேயாகிறது என்று சொல்லுவது சாத்தியம் என்றே வைத்துக் கொள்ளுவோம். ஆனால், கீதா போதனைகளை என் வாழ்க்கையில் முற்றிலும் அனுசரிப்பதற்காக நாற்பது ஆண்டுகளாய் இடைவிடாது முயற்சி செய்து வந்த பிறகு மிகப் பணிவுடன் நான் உணர்ந்ததாவது: அகிம்சையை எல்லா உருவிலும் முறையிலும் முற்றிலும் அனுசரிக்காமற் போனால் பூரணமான துறவு சாத்தியமே அல்ல என்பதுதான்.

--எங் இந்தியா – 6--8--1931.

# 5

# கீதையின் முக்கியமான உபதேசம்

"கீதையின் முக்கியமான உபதேசம் தன்னலமற்ற செயல்களைப் புரிவது என்பதா அல்லது அகிம்சையா?"

"அனாஸக்தி அல்லது தன்னலமற்ற செயலே முக்கியமான உபதேசம் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. கீதையின் என்னுடைய சிறு மொழிபெயர்ப்புக்கு 'அனாஸக்தி யோகம்'[2]

---

1. கீதையின் 3 ஆம் அத்தியாயம் கர்மயோகத்தை விளக்குகிறது.
   ,, 4 ஆம் அத்தியாயத்தில் யாகத்தைப் பற்றிக் காண்க.
   ,, 5 ஆம் அத்தியாயம் சன்னியாசத்தைப் பற்றிக் கூறுகிறது.

2. பகவத் கீதையின் இரண்டாவது அத்தியாயத்தில் பகவான் பற்றின்மை, கர்ம பலனைத் துறத்தல், ஸ்தித பிரக்ஞன் யார், சமநோக்கு யாது என்பது குறித்து அர்ச்சுனனுக்கு விளக்கி அவனுடைய ஐயங்களைப் போக்குகிறார். அதில் வரும் 47, 50, 51, 56, 57 ஆம் சுலோகங்கள் அந்த உபதேசத்தின் ரத்தினச் சுருக்கமெனலாம். காந்தியடிகள் 1930இல் கீதைக்கு ஓர் உரை வகுத்து அதை 'அனாஸக்தி யோகம்' (பற்றின்றி வாழ்தல்) என்று நூலாகக் குஜராத்தியில் வெளியிட்டார். 'கீதை ஒரு மகத்தான தரும காவியம். அதில் காணும் நுட்பமான கருத்துக்களுக்குப் புதிய அழகிய பொருள்களும் செய்துகொள்ளலாம். அதன் அர்த்தம் காலத்திற்கேற்ப மாறுதல் அடைந்தாலும், அதன் மூலக்கருத்து மட்டும் என்றும் மாறாதது. புத்தியினால் அதை அறிந்துகொள்ள முடியாது, இதயத்தினால்தான் முடியும். அதில் நம்பிக்கையுள்ளவருக்கே அது பயன் தரும்'—இவ்வாறு அந்நூலின் முன்னுரையில் அவர் குறிப்பிட்டிருக்கிறார்.

என்றும் பெயரிட்டிருக்கிறேன். அகிம்சைக்கு மேற்பட்டது அனாஸக்தி. அனாஸக்தனாக (பற்றற்றவனாக) இருப்பவன் அந்நிலையை அடைவதற்கு அகிம்சையைப் பழகிக்கொள்ள வேண்டும். ஆகையால், அவசியமான முதற்படியே அகிம்சை; அதுவும் 'அனாஸக்தி' யில் அடங்கியிருக்கிறது. அதற்கும் மேல் அது போய்விடவில்லை."

"ஆனால், கீதை இம்சை, அகிம்சை இரண்டையுமே போதிக்கிறதா?"

"அந்தப் பொருளைக் கீதையில் நான் காணவில்லை. அகிம்சையைப் பரப்புவதற்கு மட்டும் என்று கீதையின் ஆசிரியர் அதை எழுதாமல் இருந்திருக்கவும் கூடும். ஆனால், ஓர் உரைகாரர் ஒரு காவியத்திற்குக் கணக்கற்ற விளக்கங்களைச் செய்வது போன்று நானும் கீதைக்கு என் விளக்கத்தைத் தருகிறேன். அதன் முக்கியமான போதனை அனாஸக்தி என்றால், அகிம்சையையும் அது போதிக்கிறது என்பதே என் பொருள். நாம் இச்சடலத்துடனிருந்து பூமியில் நடமாடிக்கொண்டிருக்கும் வரையில் அகிம்சையை அனுசரித்து வரவேண்டும். இந்த வாழ்வுக்குப் பிறகு இம்சை அல்லது அகிம்சை என்பது எதுவுமே இல்லை."

உடனே பாலாசாகிப் கேர்*, "ஆனால், கிருஷ்ண பகவான் உண்மையில் அகிம்சைத் தத்துவத்தை மறுக்கிறார். ஏனெனில், அர்ச்சுனன் போரை வெறுக்கும் தன் முடிவை, 'என்னுடைய உற்றார் உறவினர்கள் என்னைத் தாக்கினால் பதிலுக்குப் பதில் அவர்களுக்கு அடி கொடுப்பதைவிட நிராயுதபாணியாக அவர்கள் முன்பு நின்று அவர்களுடைய அம்புகளுக்கும் ஈட்டிகளுக்கும் என் மார்பைத் திறந்துகாட்டுவதே மேலானது' என்று கூறுகிறான். ஆனால், கிருஷ்ண பகவானே அடிக்குப் பதில் அடி கொடுக்க அர்ச்சுனனுக்குப் போதிக்கிறார்" என்றார்.

---

* புனாவிலிருந்து சில முக்கியமான நண்பர்கள் 1940 ஆகஸ்டில் சேவாகிராமத்திற்குச் சென்று அகிம்சையைப்பற்றி நீண்ட நேரம் மகாத்மா காந்தியுடன் விவாதித்தார்கள். அகிம்சையைப்பற்றித் தங்களுக்கு இருந்த சந்தேகங்களைப் போக்கிக் கொள்ள வேண்டும் என்பதற்காகவே இவர்கள் காந்திஜியிடம் சென்றிருந்தனர். இவர்கள் அகிம்சையில் அதிக நம்பிக்கையுள்ளவர்கள். இதனாலேயே தங்களுடைய சந்தேகங்களைப் போக்கிக்கொள்வது அவசியம் எனக் கருதி மகாத்மாவிடம் சென்றனர். பம்பாய் மாஜி முதல் மந்திரி ஸ்ரீ பால கங்காதர கேரும் அவர்களுடன் சென்றிருந்தார். சேவாகிராமத்தில் இவர்களுக்கும் காந்திஜிக்கும் நடந்த உரையாடலை 'ஒரு ருசிகரமான விவாதம்' என்ற தலைப்பில் ஸ்ரீ மகாதேவ தேசாய் இரு கட்டுரைகளாக 'ஹரிஜன்' பத்திரிகையில் எழுதினார். அவற்றுள் ஒரு கட்டுரையின் பகுதியே இது.

இதற்கு மகாத்மா கூறியதாவது:

"இதோ இந்த விஷயத்தைக் குறித்து நான் வாதுக்கு வருகிறேன். அர்ச்சுனனுடைய அந்த வார்த்தைகள் போலியான ஞானத்தை வெளிப்படுத்துகின்றன. அவனிடம் கிருஷ்ணர், 'தகாத செயல் இது என்ற எண்ணம் ஒரு சிறிதும் இல்லாமல் நேற்றுவரையில் ஆபத்தான ஆயுதங்களைக் கொண்டு உன்னுடைய உற்றார் உறவினருடன் போராடிக்கொண்டிருந்தாய். இன்றுங்கூட, எதிரி உன்னுடைய உற்றார் உறவினராக இல்லாமல் வேறு யாராவதாயிருந்தால் நீ தாக்க முனைந்திருப்பாய்' என்கிறார். அவன் முன்னால் நின்ற பிரச்னை, அகிம்சையே அன்று; நெருங்கிய உற்றாரையும் உறவினர்களையும் கொல்ல வேண்டுமா என்பதேயாகும்."

ஹரிஜன் - 1—9—1940.

# 6

# சாத்துவிக எதிர்ப்பு: மெய்யானதும் பொய்யானதும்

பெருமளவில், இனம்பற்றிய சச்சரவுகளுக்கு அமெரிக்கா இருப்பிடமாக இருக்கிறது. துணிவுமிக்க செயல்கள் மலிந்த அந்நாட்டில் இந்தக் கடினமான பிரச்னைக்குத் தீர்வு காண உண்மையிலேயே முயற்சி செய்துவரும் ஆண்பாலாரும் பெண்பாலாரும் உள்ளனர். அத்தகைய அமெரிக்க நண்பர் ஒருவர், 'தி இன்குவயரி' என்ற பத்திரிகை ஒன்றை அனுப்பியிருக்கிறார். சாத்துவிக எதிர்ப்புத் தத்துவத்தைக் குறித்துச் சுவைமிக்க விவாதம் அதில் அடங்கியிருக்கிறது. சாத்துவிக எதிர்ப்புடன் சேர்க்கத் தகுதியுடைய சம்பவங்கள் அதில் இருக்கின்றன. உதாரணத்திற்கு அவற்றில் மூன்றை எடுத்துக் கூறுகிறேன்:

"ஒரு சீன மாணவர் தாம் படித்துப் பட்டம் பெறவிருந்த ஒரு 'ஸ்டேட்' பல்கலைக் கழகத்தில் தமக்கு ஏற்பட்ட அனுபவங்களைக் கூறியிருக்கிறார். அதில் சிலர் இவருடன் நட்புக்கொள்ளத் தம்மால் இயன்றனவெல்லாம் செய்தபோதிலும், வார இறுதி விடுமுறைக்கு இவர்களில் ஒருவர் இச்சீன மாணவரைத் தம் வீட்டிற்கு அழைத்தார் என்றாலும், பொதுவாக இவருக்கு அங்கே கிடைத்த வரவேற்பு நட்போடு கூடியதாக இல்லை. இவர் இருந்த அறைக்குப் பக்கத்து அறையில் இருந்த ஒரு மாணவன், இவருடைய கதவின்மீது செருப்புகளை வீசுவதும், வெறுக்கத்தக்க மற்ற விஷமங்கள் செய்வதுமாய் மோசமாக நடந்து கொண்டான். ஓர் அமெரிக்கர் தம்முடைய தாய்க்கும் சகோதரிக்கும் அறிமுகம் செய்துவைக்க இச்சீன மாணவரைத் தம் வீட்டுக்கு அழைத்துப் போவதைக் குறித்து இந்த அமெரிக்க மாணவன் சினந்து பேசியதும், இச்சீன மாணவரின் காதில் விழுந்தது. உடனே அவர், தமக்காக அல்லவென்றாலும்

தமது அருமை நாட்டை முன்னிட்டாவது தம்மை அம்மாணவன் மதிக்கும்படி செய்யவேண்டுமென்ற ஒரு திடமான முடிவுக்கு வந்தார்.

"அதன் பேரில் தாமே வலியப் போய்ப் பக்கத்து அறையிலிருந்த அந்த மாணவனுடன் நண்பனாக இருக்க முயன்றார். தினந்தோறும் காலையில் அவனுக்குப் புன்முறுவலுடன் காலை வந்தனம் கூறுவார். முதலில் அவன் பதிலுக்கு வந்தனம் செலுத்தாமல் இருந்தும் தமக்கு அவன் இழைக்கும் அவமதிப்புக்களையெல்லாம் பொருட்படுத்தாமல் தாம் அவனுக்கு நல்லவராகவும் பயனுள்ளவராகவும் இருக்க முயன்றார். பக்கத்து அறையில் இருந்த மாணவனுக்கு ஏதோ மனச்சஞ்சலம் என்பதை அறிந்ததும் தம்முடன் சினிமாவுக்கு வருமாறு அழைத்தார். நாளாவட்டத்தில் இருவரும் ஒருவருக்கொருவர் அதிகமாகப் பேசத் தலைப்பட்டனர். இருவருக்கும் விருப்பமூட்டும் பொதுவான விஷயங்கள் பல உள்ளன என்பதையும் கண்டுகொண்டனர். சில நாட்களுக்கெல்லாம் அம் மாணவர் அச்சீனரைத் தம் வீட்டிற்கு அழைத்தார்.

"சீன மாணவர் முடிவாகக் கூறுவதாவது: "நாங்கள் சிறந்த நண்பர்களாகிவிட்டோம். அதற்குப் பிறகு பல விடுமுறை நாட்களையும் வார இறுதி நாட்களையும் சேர்ந்து கழித்திருக்கிறோம். பல்கலைக் கழகத்தை விட்டு நான் வரும்போது, என்னுடன் பழகிய மாணவருள் ஒருவர், நான் இல்லாததைக் குறித்து அதிகம் வருந்துவார் என்பதை நான் அறிவேன்.

"ரெயில் பாதையில் வேலை செய்வோரின் கிறிஸ்தவ இளைஞர் சங்கச் செயலாளர் ஒருவர், ஒருநாள் மாலை பன்னிரண்டு டேனிஷ்காரர்களைக் கட்டிடத்திற்குள் அழைத்து வந்தார். அவர்கள் ரெயில் பாதையில் வேலை செய்பவர்கள். படுத்துறங்குவதற்கு வேறு இடமில்லை அவர்களுக்கு. ஆங்கிலம் பேசுவோர், இன வெறுப்பின் காரணமாக இதை ஆட்சேபித்து அன்னியர் உள்ளே கொண்டு வரப்படுவதை எதிர்த்தனர். ஆனால், புதிதாக வந்தவர்களில் ஒருவர் இசையில் தேர்ந்தவர். அமெரிக்கர், காரியதரிசியிடம் தங்களுடைய எதிர்ப்பைத் தெரிவித்துக்கொண்டிருந்த சமயத்தில் அவர் 'அக்கார்டியன்' வாத்தியத்தை எடுத்து வாசிக்கத் தொடங்கினார். அவர் எழுப்பிய இன்னிசை உடனே நல்ல பலனைத் தந்தது. அமெரிக்காவில் பிறந்தவர்களின் முகத்தில் தோன்றிய சினக் குறி மறைந்துவிட்டது. அவர்களுடைய கண்டனப் பேச்சுக்களும் அடங்கின. அவர்களுடைய உள்ளம் மென்மையாகியது. அன்றிரவு அந்த அன்னியர் வாசித்ததை எல்லோரும் நீண்ட நேரம் கேட்டுக்கொண்டிருந்தார்கள். ('புதிய குடியேற்றம்' பீட்டர் ராபர்ட்ஸ் எழுதிய நூல்; மாக்மில்லன் கம்பெனி, 1922 ஆம் ஆண்டு வெளியான பதிப்பு, பக்கம் 300.)

"கலிபோர்னியாவில் X என்ற இடத்தில் ஜப்பானியரின் குடியேற்றம் ஒன்று இருக்கிறது. பல ஆண்டுகளுக்கு முன்பு நில விற்பனை ஏஜெண்டுகள் சிலர் ஏராளமான நிலங்களை ஜப்பானியருக்கு விற்க முயன்றனர். ஜப்பானியர் உள்ளே வந்து புகுந்துவிடக்கூடும் என்ற நினைப்பில் வெள்ளைக்காரர்கள் கொதிப்படைந்தார்கள். கூட்டங்கள் நடந்தன. முக்கியமான தெருவின் முனையில் ஒரு பெரிய பலகையில், 'ஜப்பானியர் யாருமே இங்கு வேண்டாம்' என்றும் எழுதிவைக்கப்பட்டது.

"கலிபோர்னியாவிலிருந்த பழைய ஜப்பானியர்கள், வெள்ளையருடன் நல்ல முறையில் வாழ்ந்து வந்தார்கள். விவசாயிகள் சங்கத்தில் அவர்களும் உறுப்பினர்கள். அவர்கள் வெள்ளையரிடம் சென்றனர். அவர்களுடன் கலந்து ஆலோசித்து, ஜப்பானியர் ஜனத்தொகை அங்கு மேற்கொண்டும் பெருகுவது

நல்லதல்ல என்று ஒப்புக்கொண்டார்கள். பலகையில் எழுதியிருந்ததை 'மேற்கொண்டும் ஜப்பானியர் இங்கு வேண்டாம்' என்று மாற்றி எழுதினர்கள்

"அச்செய்கை சமூகத்தில் ஒற்றுமையை வளர்த்தது என்றும் அவ்விடத்தில் வெள்ளைக்காரருக்கும் ஜப்பானியருக்கும் இடையே உறவை அதிகரித்தது என்றும் அந்த வரலாற்றைக் கூறுகிறவர் சொல்கிறர். அதற்குச் சாட்சியமாகப் பின் வரும் விவரத்தையும் குறிப்பிடுகிறர் :

"X என்ற இடத்திலிருந்த ஜப்பானியர், அமெரிக்கக் கிறிஸ்தவாலயம் பணக்கஷ்டத்தில் இருக்கிறது என்பதை அறிந்ததும் தங்கள் சொந்த ஜப்பானியக் கிறிஸ்தவாலய வேலைகளை நடத்துவதுடன் உதவியாக அதற்கும் ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட தொகையைக் கொடுப்பது என முன்வந்தார்கள்."

இந்தச் சம்பவங்களில் முதலாவது, உண்மையான சாத்துவிக எதிர்ப்பைச் சேர்ந்ததாகிறது. இரண்டாவது சம்பவம் சாத்துவிக எதிர்ப்பு என்பதைவிடச் சமயோசித புத்தியையே காட்டுகிறது. மூன்ருவது சம்பவமோ, கூறப்பட்டிருப்பவைகளிலிருந்து பார்த்தால், விவாதிப்பவர்களில் சிலர் கூறுவது போல் கோழைத்தனம் அன்ருயினும், நிச்சயமாக அது சுயநலம். அங்கே குடியேறியிருந்த ஜப்பானியர் தங்களிடமிருந்த உடைமைகள் போய்விடாமல் இருப்பதற்காக மேற்கொண்டும் ஜப்பானியர் வந்து குடியேறுவதைத் தடுப்பதற்கு உடன்பட்டனர். அது சரியான கொள்கையாக இருக்கலாம். அது ஒன்றே அந்நிலைக்கு உசிதமான கொள்கையாகவும் இருக்கக் கூடும். ஆனல், அது சாத்துவிக எதிர்ப்பு ஆகாது.

சாத்துவிக எதிர்ப்பென்பது சமூகத்தின் நன்மையை முன்னிட்டு வலிய மேற்கொள்ளும் ஒரு கட்டுப்பாடாகும். ஆகையால், அது தீவிரமாக இயக்க வல்லதும் தூய்மைப்படுத்துவதுமான உள்ளத்தின் வல்லமையாகும். சாத்துவிகத்தை மேற்கொள்ளுகிறவரின் சொந்த நன்மைக்கு அது எப்பொழுதுமே எதிரானதாக இருக்கும்; அவருடைய நலங்களைப் பாழாக்கி விடுவதாகவும் ஆகக்கூடும். அது ஆத்மபலத்தை வேராகக் கொண்டது; பலவீனத்திலிருந்து எழுந்தது அன்று. நன்கு உணர்ந்தே அதை இயக்க வேண்டும். ஆகையால், உடலைக் கொண்டு எதிர்க்கும் ஆற்றலும் உண்டு என்பதைக் காட்டும். ஆகவே, கடைசியாகக் கூறப்பட்டிருக்கும் சம்பவத்தில் மேற்கொண்டும் ஜப்பானியர் வந்து குடியேறுவதற்கான உரிமைகளை விட்டுக்கொடுப்பதற்கு மாருக அவர்கள் தங்களுடைய சொத்துக்களையெல்லாம் விட்டிருந்தார்களானல் சாத்துவிக முறையில் எதிர்த்தவராவார்கள். மேலும், அவர்கள் மனத்தாலும் பதிலுக்குப் பதில் செய்ய எண்ணமல் சாவுக்கும், உயிருடன் சுட்டு எரிக்கப்படுவதற்கும் உடன்பட்டுத் தங்களைத் துன்

புறுத்துகிறவர்களின் மனத்தை இளகும்படி செய்திருக்க வேண்டும். தங்களுக்கு எந்தவித இடைஞ்சல்களுமே இல்லாமல் தங்களுடைய சொத்தை அவர்களால் காப்பாற்றிக்கொள்ள முடிந்தது என்பது சத்தியத்தின் வெற்றியல்ல. சாத்துவிக எதிர்ப்பென்ற வகையிலிருந்து பார்த்தால், கஷ்டத்திலிருந்த அமெரிக்கக் கிறிஸ்தவாலயத்திற்கு அவர்கள் அளித்த பணவுதவி லஞ்சமேயல்லாமல் எந்த விதத்திலும் நல்லெண்ணத்தின் அறிகுறியோ அல்லது தாராளமான தானமோ ஆகாது.

தனக்கென வாழாத பண்பில் நெடுநாள் பயிற்சியும், நம்முள் மறைந்துகிடக்கும் சக்திகளை அறியும் ஆற்றலும் இருந்தாலே சாத்துவிக எதிர்ப்பின் உணர்ச்சியை அடைய முடியும். அது, வாழ்க்கையைப்பற்றிய ஒருவருடைய மனோபாவத்தையே மாற்றிவிடும். காரியங்களுக்கு அது மாறுபட்ட மதிப்பை உண்டாக்குவதுடன் முன்னால் இருந்து வந்த மதிப்பீடுகளையெல்லாம் தலைகீழாக்கி விடும். அது போதிய தீவிரத்தை அடைந்துவிடும்போது முழுப் பிரபஞ்சைத்தையுமே மிஞ்சி நிற்கும். ஆத்மாவின் உயர்வான வகையில் வெளிப்பாடானதால் அது மிகப் பெரிய சக்தியாகிறது. அது முழுதும் இயங்குவதற்கு ஒரே அளவில் எல்லோருக்கும் சாத்துவிக எதிர்ப்பின் உணர்வு இருக்கவேண்டும் என்பது இல்லை. ஒரு தளபதியின் கொடியின்கீழ்ச் செயல் புரியும் லட்சக்கணக்கான சிப்பாய்களுக்கு, அந்த ஒரு தளபதியின் தன்மை ஏன் அவ்வாறு இருக்கிறது, எதற்காக அவ்வாறு உள்ளது என்பன புரியாது போனாலும், அந்தச் சிப்பாய்களின் பலத்தையெல்லாம் ஒழுங்குபடுத்தி உபயோகித்துக்கொள்வதற்கு எப்படி ஒரு தளபதி மாத்திரம் போதுமோ அதே போல ஒருவருக்கு மாத்திரமே அது இருந்தாலும் போதும். பத்துத் தலை ராவணனுக்கு உச்சந் தலையிலிருந்து உள்ளங்கால் வரை ஆயுதபாணிகளாயிருந்த பட்டாளம் எவ்வளவோ பெரியதாயிருந்தும் அதை நிர்மூலம் செய்ய ஒரு ராமரின் குரங்குகள் போதுமானவையாய் இருந்தன.

- எங் இந்தியா - 23—9—1926-

## 7

# ஜைன அகிம்சை ?

ஜைன தத்துவ நூல்களையும் மற்ற தத்துவங்களையும் நன்றாகப் படித்தவரெனப் புகழ் பெற்ற ஒரு ஜைன நண்பர், அகிம்சையைப்பற்றி எனக்கு நீண்ட கடிதம் ஒன்று எழுதி

யிருக்கிறார். நன்றாகக் கவனித்து இதற்குப் பதில் அளிக்க வேண்டியதாகிறது. அவர் கூறுவதன் சாராம்சமாவது :

"அகிம்சைக்கு நீங்கள் கூறும் விளக்கம் குழப்பத்தை உண்டாக்குகிறது. சாதாரணமாகக் கூறுவதானால், உடலிலிருந்து உயிரைப் போக்குவது இம்சை ; அப்படிச் செய்யாதிருப்பது அகிம்சை. உயிர் வாழும் எதற்கும் உடல் துன்பத்தை உண்டாக்காமல் இருப்பதென்பது மூலமான பொருளை விரிவு படுத்திக்கொண்டதேயாகும். ஆனால், உயிரைப் போக்குவது என்பதும் இதில் அடங்கியிருப்பதாக எந்தவிதத்திலும் பொருள் கொண்டுவிட முடியாது. சாத்தியமான ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் உயிரைப் போக்குவது என்பது எல்லாவற்றையுமே தவறு என்று நான் கருதுவதாக இதிலிருந்து நீங்கள் எண்ணிக் கொண்டுவிடக் கூடாது. ஏனெனில், விதி விலக்கு எதையுமே ஒப்புக் கொள்ளாத, அதுவே முடிவானது என்று சொல்லக்கூடிய நீதிக் கோட்பாடு எதுவும் இவ்வுலகத்தில் இருப்பதாக நான் நினைக்கவில்லை. 'அகிம்சையே மிக உயர்வான அல்லது மேலான கடமை' என்ற கோட்பாடு ஒரு சிறந்த அடிப்படையான உண்மையைக் கொண்டது. ஆனால், மனிதரின் கடமைகள் எல்லாமே அதில் அடங்கிவிடவில்லை. ஆகையால், 'சாத்துவிகமாகக் கொல்லுதல்' என்று நீங்கள் கூறுவது சரியானதாக இருக்கலாம். ஆனால், அதை அகிம்சை என்று சொல்ல முடியாது."

வாழ்க்கை எவ்விதம் மாறிக்கொண்டும் அபிவிருத்தி அடைந்துகொண்டும் வருகிறதோ அதே போலச் சில முறைகளின் பொருள்களும் இடைவிடாது பரிணமத்தை அடைந்து கொண்டு வருகின்றன என்பதே என் கருத்து. எந்த மதத்தின் வரலாற்றிலிருந்தும் இதற்கு உதாரணங்களைக் கூறிப் போதிய அளவு நிரூபிக்க முடியும். ஹிந்து மதத்திலுள்ள யக்ஞம் அல்லது வேள்வி என்ற சொல் இதற்கு ஓர் உதாரணம். ஸர் ஜே. ஸி. போஸ் புதிதாகக் கண்டுபிடித்திருப்பவை உயிர் வாழ்வனபற்றிப் பொதுவாக இருந்துவந்த கருத்தில் புரட்சிகரமான மாறுதலை உண்டாக்கியிருக்கின்றன. அதே போல நாம் அகிம்சையை முற்றிலும் அடைந்துவிடுவோமாயின் அகிம்சைத் தத்துவத்தின் புதிய விளைவுகளைக் கண்டுபிடிக்க நாம் தயங்கவே மாட்டோம். 'அகிம்சையே மிக உயர்வானது ; மேலான கடமை' என்ற ஒப்பற்ற கோட்பாட்டில் நாம் எந்த அபிவிருத்தியும் செய்ய முடியாது. ஆனால், பரம்பரையாக வரும் நமது ஆத்மிகச் செல்வத்தை நாம் அப்படியே வைத்திருப்பின் மகத்தானதும் எல்லாவற்றிற்கும் ஏற்றதுமான இந்தக் கோட்பாட்டின் உண்மைகளைப் பரிசீலனை செய்யக் கடமைப்பட்டிருக்கிறோம். ஆனால், பெயர்களைப்பற்றி எனக்கு அக்கறையில்லை. நான் சொல்லியிருக்கும் சந்தர்ப்பங்களில் உயிரைப் போக்குவது சரி என்று ஏற்படுமாயின், அது அகிம்சை என்றோ, இல்லை என்றோ சொல்லப்படுவதைப்பற்றி எனக்குக் கவலை இல்லை.

இதே நண்பர் பின்வருமாறு மற்ெறாரு கடினமான பிரச்னை யையும் எழுப்புகிறார் :

"காரணமற்ற ஒரு சந்தர்ப்பத்தை நீங்கள் விவரித்துக்கொண்டு, அப்படிப் பட்ட நிலையில் உங்கள் மகளைக் கொல்லுவீர்கள் என்று கூறும் உங்களுடைய கற்பனையான விளக்கத்தையும் என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. அத் தகைய நிலைமையில் முரட்டுத்தனம் செய்கிறவனைக் கொல்லுவது சரியாக இருக் கலாம். ஆனால், அப்பாவியான அந்தப் பெண் செய்துவிட்ட தவறு என்ன? அப்பாவியான ஒருவர் கெடுக்கப்பட்டுவிட்டது சாவின் மூலம் தடுக்கப்பட வேண்டிய ஓர் அவமானம் என்று நீங்கள் கருதுகிறீர்களா? இத்தகைய நிலைமை யில் பொதுஜன இழிசொல்லுக்கும் அவமானத்திற்கும் அஞ்சித் தன் உயிரைப் போக்கிவிடுமாறு அப்பெண் கெஞ்சினாலும் அந்த விருப்பத்திலிருந்து அவளைத் திருப்ப வேண்டியது உங்கள் கடமை என்று நீங்கள் கருதவில்லையா? என்னைப் பொறுத்தவரையில், அவமானம் செய்யப்படுவது அல்லது கற்பழிக்கப்படுவதான ஒரு சம்பவத்திற்கும், பலாத்காரத்தினால் ஒருவருடைய கையோ, காலோ துண் டிக்கப்பட்டுவிடுவதற்கும் எந்த வித்தியாசமும் இருப்பதாக நான் காணவில்லை."

நான் குறிப்பிட்டிருந்த சந்தர்ப்பத்தில் என் மகளைக் கொல்லுவேன் என்பதற்குப் என் காரணம், அவள் மாசு அடைந்துவிடுகிறாளே என்று நான் அஞ்சியது அல்ல. ஆனால், தன் விருப்பத்தை அவள் கூற முடிந்தால் செத்துவிடுவதை அவளே விரும்புவாள் என்பதேயாம். பொது ஜனங்கள் அவ தூறாகப் பேசுவார்கள், ஏசுவார்கள் என்பதற்குப் பயந்து கொண்டு தன் உயிரைப் போக்கிக்கொள்ள என் மகள் விரும்புவாளானால், அந்த விருப்பத்திலிருந்து அவளை மாற்ற நான் நிச்சயமாக முயற்சி செய்வேன். தான் செத்துவிடவே விரும்புகிறாள் என்பதை நிச்சயமாக நான் தெரிந்துகொண் டாலேயே அவளுடைய உயிரை மாய்ப்பேன். ராவணனிடம் கற்பை இழப்பதைவிடச் சாவதையே சீதை விரும்பியிருப்பாள் என்பதை அறிவேன். நம் சாத்திரங்களும் இதையே கூறு கின்றன என்று நான் நம்புகிறேன். அவமானப்படுவதைவிடத் தாங்கள் சாவதே மேல் என்பதே ஆயிரக்கணக்கான ஆண் களுக்கும் பெண்களுக்கும் தினசரிப் பிரார்த்தனையாக இருக்கிறது என்பதையும் அறிவேன். இத்தகைய உணர்ச்சிக்கு உற்சாகம் அளிக்க வேண்டியது மிகவும் அவசியம் என்றும் கருதுகிறேன். கற்பை இழப்பதும், கையையோ காலையோ இழப்பதும் ஒன்று தான் என்பதை ஒப்புக்கொள்ள நான் தயாராயில்லை. ஆனால், முடமாகிவிடுவதைவிடச் சாவே மிகவும் மேலானது என்ற முடி வுக்கு வரவேண்டிய சந்தர்ப்பங்களும் உண்டு என்பதை நான் ஊகித்துக்கொள்ள முடியும்.

எழுப்பப்பட்டுள்ள மூன்றாவது பிரச்னை கூறுவதாவது :—

"நேரே குரங்குகளைக் கொன்று அழித்துவிடுவதற்குப் பதிலாக, அவற்றைப் பயமுறுத்தி விரட்டிவிடுவதற்குச் சில குரங்குகளைக் காயப்படுத்திவிடலாம்

என்ற கருத்துச் சகிக்க முடியாததென நீங்கள் ஏன் கருதுகிறீர்கள் என்பதும் எனக்கு விளங்கவில்லை. கண்ணை இழந்து, முடமாகிவிட்ட மிருகங்களுக்குக்கூட இன்னும் உயிரோடிருக்க வேண்டும் என்ற ஆவல் அதிகமிருக்கிறது என்பதை நீங்கள் உணரவில்லையா? ஒரு மிருகம் படும் துன்பத்தைப் பார்த்து நம்மால் சகிக்க முடியவில்லை என்பதற்காக அதைக் கொன்றுவிட நினைப்பது ஒரு வகையான சுயநலம் என்று நீங்கள் கருதவில்லையா?''*

ஒரு குரங்கைக் காயப்படுத்துவது என்பது என்னல் சகிக்க முடியாது. ஏனெனில், காயப்பட்ட குரங்கு பல நாள் துன்பப்பட்டுச் சாகும் என்பதை நான் அறிவேன். நான் செய்யும் ஒரு காரியத்தால் குரங்குகள் சாக வேண்டியதே என்ருல், துளித்துளியாக அவைகளைச் சாக விடுவதைவிட உடனேயே அவை கொல்லப்பட வேண்டியது மேல் என்பேன். ஒரேயடியாகக் கொன்றுவிடாமல் குரங்குகளைக் காயப்படுத்துவதன் மூலம் அகிம்சையை எப்படி நான் கையாளுபவனுவேன் என்பதும் எனக்குப் புரியவில்லை. காயம்பட்ட குரங்குகளுக்கென ஒரு வைத்தியசாலையையும் வைக்கிறேன் என்ருல், அப்பொழுது அது வேறு விஷயம். முடமாகிவிட்டவையும், குருடாகிவிட்டவையும் குணமடையலாம், பரிகாரம் கிடைக்கும் என்ற நம்பிக்கை ஏதாவது இருந்தால் மேலும் உயிர் வாழ்வதில் அவைகளுக்கு ஆர்வம் இருக்கலாம் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனல், குருடான, ஏதும் அறியாத ஒரு பிராணி கடவுளிடத்தில் நம்பிக்கையும் இழந்து, எந்த உதவியுமே கிடைக்காத பாலைவனத்தில் சிக்கித் தன் கதி என்னவாகுமென்று அறியாமல் தவிப்பதாக வைத்துக்கொள்வோம். அத்தகைய பிராணி உயிர் வைத்துக்கொள்ள விரும்பும் என்று நான் நம்பவில்லை. மேலும், எல்லாச் சந்தர்ப்பங்களிலுமே உயிர் வைத்திருக்க வேண்டும் என்ற ஆர்வத்தை வளர்த்துக்கொள்வது ஒருவருடைய கடமை என்று ஒப்புக்கொள்ளவும் நான் தயாராயில்லை.

எழுப்பப்பட்டிருக்கும் நான்காவது பிரச்னை வருமாறு:

'சந்தர்ப்பம் எதுவாக இருந்தாலும் சரி, அல்லது படும் துன்பம் எவ்வளவாயினும் சரி, உயிர் வாழ்வதில் உள்ள உறுதியை வேண்டுமென்றே துறந்துவிடுவதோ அல்லது தான் அனுபவிக்கும் துன்பத்திலிருந்து தன்னை மற்றொரு

* மகாத்மாவின் சபர்மதி ஆசிரமத்தில் குரங்குகள் தொல்லை அதிகமாயிற்று. அங்கே பயிரிடப்பட்டு வந்த கறிகாய்களையும், பழ மரங்களையும் குரங்குகள் நாசம் செய்து வந்தன. இந்தத் தொல்லை தீருவதற்குக் குரங்குகளைக் கொல்ல வேண்டியதாகிறது என்று மகாத்மா எழுதினுர். அதன்பேரில் பலமான ஆட்சேபங்கள் எழுந்தன. இது அகிம்சைக்கு விரோதமல்லவா என்ற கேள்விகளும் பிறந்தன. இதைக் குறித்துக் கிளம்பிய எதிர்ப்புக்களுக்குப் பதில் தர மகாத்மா எழுதிய விவரங்களை 'அகிம்சை — கொல்லாமை' என்ற பகுதியில் இத்தொகுப்பில் காணலாம்.

வர் விடுவிக்க வேண்டுமென்று விரும்புவதோ யாருக்குமே அசாத்தியமானது. ஆகையால், உயிரைப் போக்கிவிடுவதென்பது எந்தச் சந்தர்ப்பத்திலுமே தருமத்தின்படி நியாயமானதல்ல.

'இம்சையை அவசியமாக்கும் செயல்களே நிறைந்துள்ள இந்த உலகில் கதிமோட்சம் அடைய விரும்புகிறவர், கூடியவரை குறைந்த அளவு காரியங்களில் ஈடுபடுவதன் மூலம் அகிம்சையைப் பின்பற்ற வேண்டும்.

'இம்சையில் இரண்டு வகைகள் இருக்கின்றன. ஒன்று, விவசாயத்தில் சம்பந்தமுடையதான நேரடி இம்சை. இன்னுமொன்று, விவசாயத்திலிருந்து உற்பத்தியானவைகளைத் தின்பதனுல் ஏற்படுவதான மறைமுகமான இம்சை. இந்த இரண்டினின்றும் ஒருவர் தப்பிவிட முடியாதபோது அகிம்சைவாதி என்பவர் நேரடியான இம்சையையாவது தவிர்க்க முயற்சி செய்ய வேண்டும்.

'அகிம்சையின் இந்த மூன்று ஜைனக் கோட்பாடுகளையும் குறித்துப் பரிசீலனை செய்து, 'நவஜீவன்' இல் விவாதிக்குமாறு உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். அகிம்சையைப்பற்றிய உங்கள் கருத்துக்கும் ஜைனர்களின் கருத்துக்கும் முக்கியமான மாறுபாடுகள் இருக்கின்றன என்பதைக் காண்கிறேன். அகிம்சையைப்பற்றிய உங்கள் கருத்து, செயல்களின் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது. ஜைனர்களின் கருத்தோ, செயல்களையே துறப்பதென்பதை அடிப்படையாகக் கொண்டது. இன்றைய யுகம், செயல்களின் யுகம். அகிம்சைத் தத்துவம் காலத்தினுலோ அன்றி இடத்தினுலோ மாறுபாடு அடைந்துவிடாமல், என்றும், எல்லா இடங்களுக்குமே நிரந்தரமாக இருந்து வருவதாக இருப்பின், ஒன்று மிகவும் முக்கியமானதாகிறது: துறவுத் துறை ஒன்றிலேயே இதுவரை அடங்கிக் கிடந்துவிட்டதான அகிம்சையைச் செயல்கள் நிறைந்ததான இக்கால வாழ்க்கைக்கு எப்படி அமைத்துக்கொள்ளுவது, இப்புதிய சூழ்நிலைக்கு இதை அனுசரித்தால் இது என்ன உருவை அடையும் என்பதைக் குறித்துத் தங்களுக்குத் தாங்களே சிந்தித்துக்கொள்ளும்படி மக்கள் மனத்தைக் கிளறிவிட வேண்டியது அவசியம்.''

இந்தக் கொள்கைகளைக் குறித்து அதிகத் தயக்கத்துடனேயே நான் விவாதத்தில் இறங்க வேண்டியிருக்கிறது. இத்தகைய விவாதங்களிலுள்ள சங்கடங்களை நான் அறிவேன். ஆனுல், இதிலிருந்து தப்புவதற்கும் வழியில்லை. முதல் கொள்கையைப் பொறுத்தவரையில், இக்கட்டுரையின் முதல் பகுதியில் என் கருத்தை நான் தெரிவித்திருக்கிறேன். எந்த நிலைமையிலும் உயிரை விடாமல் இருக்கப் பார்ப்பது என்பது கோழைத்தனத்தையே காட்டுகிறது என்பதே என்னுடைய திடமான முடிவு. நம்மைச் சுற்றிலும் இம்சை மிகுந்திருப்பதற்குக் காரணமே இதுதான். குருட்டுத்தனமாக இக்கொள்கையைப் பின்பற்றிக் கொண்டிருப்பது இம்சையைக் குறைப்பதற்குப் பதிலாக அதிகரித்தே தீரும். ஜைனக் கொள்கை இங்கே கூறப்பட்டிருப்பதைப் போன்றே இருக்குமாயின், மோட்சத்தை அடைவதற்கு அது இடையூறு என்றே எனக்குத் தோன்றுகிறது. உதாரணமாக, மோட்சத்திற்காகவே இடைவிடாது பிரார்த்தனை செய்துகொண்டிருக்கும் ஒருவர்,

இன்னொருவருடைய சிரமத்தினால் தாம் உயிர் வாழ்ந்து வர வேண்டும் என்று விரும்பவே மாட்டார். அறியாமையில் மூழ்கிக் கிடக்கும் ஒருவரே, மோட்சம் இன்னது என்பதைக் கொஞ்சங் கூடப் புரிந்துகொள்ளாதவரே, எப்படியானாலும் உயிர் வாழ்ந்தால் போதும் என்று விரும்புவார். ஆசைகளையெல்லாம் அடியோடு அழித்துவிடுவதொன்றே மோட்சத்திற்கு இன்றியமையாதது. அப்படி இருக்கும்போது மோட்சத்தை விரும்பும் ஒருவர், கேவலமாகச் சுயநலத்துடன் இருக்கவோ, அல்லது எப்படியானாலும் அழியும் இந்த உடலை அப்படியே வைத்திருக்க வேண்டும் என்று விரும்பவோ எப்படித் துணிய முடியும்? கதிமோட்சத் துறையிலிருந்து குடும்பம், ஒருவருடைய நாடு அல்லது உலகின் மனிதவர்க்கம் ஆகியவற்றிற்கு இறங்கி வந்தால், தங்களுடைய குடும்பத்தின், நாட்டின், உலகின் சேவைக்காகத் தங்களுடைய சொந்த வாழ்க்கையையும் பொருட்படுத்தாது அர்ப்பணம் செய்துவிடும் ஆண்களும் பெண்களும் பலர் இருப்பதைக் காண்கிறோம். இந்த முழுத் தன்னலத் தியாகம் - தன்னல மறுப்பு - இன்று உலகம் எங்குமே உணரப்பட்டு வருகிறது. எப்படியானாலும் சரி, உயிரோடிருந்தால் போதும் என்பது சுயநலத்தின் உச்சம் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால், தன்னலம் ஒன்றே சரி என்ற இவ்வித இழிநிலையிலிருந்துகூட ஒருவரைப் பலாத்காரத்தைக் கொண்டு வெளிப்படுத்தலாம் என்று நான் கருதுவதாக யாரும் எண்ணிவிட வேண்டாம். எப்படியானாலும் உயிர் வாழ்ந்தால் போதும் என்ற தத்துவம் எவ்வளவு தவறானது என்று காட்டுவதற்காக மாத்திரமே இந்த வாதத்தைக் கூறுகிறேன்.

இரண்டாவது கோட்பாட்டைப் பொறுத்தவரையில் அதை ஒரு கோட்பாடு என்றுகூடச் சொல்ல முடியுமா என்பது எனக்குத் தெரியவில்லை. அது எப்படி இருந்தாலும் சரி, அது மறுக்க முடியாத உண்மையாக எனக்குத் தோன்றுகிறது; நான் மனமார அதை ஒப்புக்கொள்ளுகிறேன்.

மூன்றாவது கோட்பாட்டிற்கு வருவோம். இந்த நண்பர் அதைக் குறிப்பிட்டிருக்கும் வகையினால் இதில் பெருந் தவறுக்கு இடம் ஏற்படுகிறது. இந்தக் கோட்பாட்டின் மோசமான விளைவு இது என்றே எனக்குத் தோன்றுகிறது. இந்தக் கோட்பாட்டை நாம் ஏற்றுக்கொள்ளுவதாயின், ஓர் அகிம்சைவாதி, மனித வர்க்கம் உயிர் வாழ்வதற்கு விவசாயம் அத்தியாவசியமானது, விவசாயத்தின் பலனை அனுபவிக்காமல் துறக்க முடியாது என்பதை அறிந்திருந்தும், விவசாயத்தைத் துறந்துவிட

வேண்டும். நிலத்தை உழுது வாழும் கோடிக்கணக்கான மக்கள், இவர்களுடைய உழைப்பினல் வாழும் ஒரு சிலர் அகிம்சையை அனுசரிப்பது சாத்தியமாக இருக்க வேண்டும் என்பதற்காக இம்சையில் மூழ்கிக்கிடக்க வேண்டும் என்ற எண்ணம் மாத்திரமே அகிம்சையின் உயர்ந்த கடமைக்கு உகந்ததல்ல, பொருத்தமானதல்ல என்று எனக்குத் தோன்று கிறது. அகிம்சையின் உள்தெளிவைச் சரியாகப் புரிந்துகொள் ளாததையே இது காட்டுகிறது என்றும் கருதுகிறேன். தருக்க ரீதியாக இதன்படி காரியங்களைச் செய்யும் அளவுக்குப் போய் விட்டால் அதனல் என்ன நேரும் என்பதை உதாரணத்திற் காகக் கவனிப்போம். ஒரு பாம்பை நீங்கள் கொல்லாமல் இருக்கலாம். ஆனல், வேறு ஒருவரைக் கொண்டு அதைக் கொல்லுவீர்கள். ஒரு திருடனைப் பலவந்தமாக நீங்கள் விரட்டி யடிக்கமாட்டீர்கள். ஆனல், உங்களுக்காக அந்த வேலையைச் செய்ய மற்றொருவனை அமர்த்திக்கொள்ளுவீர்கள். கொடியவ னின் கோபாவேசத்திலிருந்து காப்பதற்காக உங்களிடம் ஒப் படைக்கப்பட்ட ஒரு குழந்தையின் உயிரைக் காக்க நீங்கள் விரும்பினல், அக்கொடியவனது கோபாவேசத்தின் கொடுமை களை உங்களுக்காக மற்றொருவன் தாங்கிக்கொள்ளவேண்டும். இவ்விதம் அகிம்சை என்ற புனிதமான பெயரில் நேரடியான செயலை நீங்கள் தவிர்த்துக்கொள்ளுகிறீர்கள்! இது என் அபிப்பிராயத்தில், மதமும் அல்ல, அகிம்சையும் அல்ல. குறிப்பிடப்பட்ட அபாயங்களை ஏற்றுக்கொள்ளவும், விளைவு களை எதிர்த்து நிற்கவும் ஒருவர் தயாராயில்லாதபோது அவர் பயமே இல்லாதவராக இருக்க முடியாது. எல்லா அச்சங் களையும் விட்டொழிக்காமல் இருக்கும்வரையில் அகிம்சையை அனுசரிக்க அவர் தகுதியற்றவரே ஆவார். எல்லாவற்றையுமே வெல்ல வல்லது அகிம்சை என்று நம் சமய நூல்கள் கூறு கின்றன. அதன் முன்பு, பயங்கரமான மிருகங்களும் அவற்றின் மூர்க்கத்தனத்தை இழந்துவிடுகின்றன; மிகவும் வன்னெஞ்சின ரான கொடியர்களுங்கூடத் தங்களுடைய கோபத்தை மறந்து விடுகின்றனர். நான் கையாண்டு வரும் அகிம்சை முற்றிலும் போதுமானதாக இல்லை; குறைபாடுள்ளதாக இருக்கிறது. என்றாலும், இக்கொள்கையின் உண்மையை நான் உணரும்படி செய்கிறது. இந்த நண்பர் எடுத்துக்காட்டியிருக்கும் அகிம்சை யின் மூன்றாவது கோட்பாட்டிற்கு ஜைன சமயம் உதவி செய் திருக்கிறது என்பதில் எனக்குள்ள சந்தேகத்தை மற்றொரு முறையும் நான் தெரிவித்துக்கொள்ள வேண்டியதாகிறது. ஆனல், நண்பர் கூறுகிறபடியே ஜைனக் கோட்பாடு இருப்ப

தாயினும் அதற்கு நான் உடன்படுவதற்கில்லை என்பதை நான் சொல்லியே ஆகவேண்டும்.

துறப்பதா, செயல் புரிவதா என்ற பிரச்னைக்கு இனி வருவோம்: துறவுத் தத்துவத்தில் எனக்கு நம்பிக்கை உண்டு. ஆனால், செயல் மூலமே துறவைத் தேட வேண்டும் என்பது என் கருத்து. உடலில் இருக்கும் உயிரின் இன்றியமையாத தோர் துடிப்பே செயல். ஏதாவது ஒரு வகையில் செயல் எதுவுமே இல்லாமல் வாழ்க்கைச் சகடம் ஒரு விநாடிகூடச் சுழல இயலாது என்பதுபற்றிச் சொல்லத் தேவையில்லை. ஆகையால், இந்த நிலைமையில் உடல் செயலில் ஈடுபட்டிருந்தாலும் பற்றற்றிருப்பது அல்லது அந்தச் செயல் களிலிருந்து ஆத்மா சுயேச்சையாக இருப்பது என்பதே துறவு என்பதற்குப் பொருளாக இருக்க முடியும். துறவு மார்க்கத்தைப் பின்பற்றுகிறவர், செயல் எதுவுமே இல்லாத வகையில் அதை அடைய முற்படுவதில்லை. ஆனால், பற்றற்ற மனோபாவத்துடன் மற்றவர்களின் நன்மையைக் கவனிப்ப தொன்றையே உண்மைக் கடமையெனத் துறவு மார்க்கத்தைப் பின்பற்றுகின்றனர். ஒருவர் ஒரு காரியத்தைத் தன்னலமற்ற சேவைக்காகவே செய்து வருவாரானால், தன்னலமே முக்கியம் என்பதோ அல்லது அகம்பாவமோ, ஆசையோ சிறிதுமே அவருக்கு இல்லாதிருக்குமாயின், துறவு மார்க்கத்திலிருந்து ஒரு சிறிதும் வழுவாமல், விவசாயம், நூற்பது அல்லது வேறு எந்த வேலையை வேண்டுமானாலும் செய்து வரலாம். ஆகையால், என்னைப் போலத் துறவைப்பற்றி இத்தகைய கருத்துடையவர்கள், உடலில் இருக்கும் உயிருக்கு அகிம்சைத் தத்துவம் எந்த அளவுக்கு உடன்பாடுடையதாக இருக்கிறது, அன்றாட வாழ்க்கைக் காரியங்களுக்கு அதை எப்படி அனுசரிக்க லாம் என்பதைத் தாங்களே கண்டுகொள்ளலாம். ஒரு தருமம் என்பதற்குள்ள தனிச் சிறப்பு, அது எல்லோருக்கும் ஏற்றதாக இருக்கிறது, அதை அனுசரிப்பது ஒரு சிலருக்கு மாத்திரம் ஏகபோகமானதாக இல்லை, அதை அனுசரிக்க எல்லோ ருக்குமே உரிமையுண்டு என்று இருப்பதேயாம். சத்தியம், அகிம்சை இவற்றிற்கான வாய்ப்பு உலகப் பரவலானது என்பது என்னுடைய திடமான நம்பிக்கை. இதனாலேயே சத்தியம், அகிம்சை இவைபற்றிய ஆராய்ச்சியில் என்னுடைய வாழ்க்கையை அர்ப்பணம் செய்வதில் குறைவற்ற இன்பத்தை நான் காண்பதுடன் இதே போலச் செய்வதில் என்னுடன் பங்குகொள்ளுமாறு மற்றவர்களையும் அழைக்கிறேன்.

- எங் இந்தியா - 24—10—1928.

# 8

# அன்பு வழியே கடவுள் வழி

கானன் ஷெப்பர்டும் இங்கிலாந்திலுள்ள மற்ற உண்மை யான கிறிஸ்தவர்களும் நடத்தி வரும் 'யுத்தம் வேண்டாம்' என்ற இயக்கத்தைப் பலமாகக் கண்டிப்பதற்காக டில்லி 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகை நான்கு கட்டுரைகளை வெளியிட் டிருக்கிறது. தன் வாதத்திற்கு ஆதரவாக இப்பத்திரிகை பக வத் கீதையின் ஆதாரத்தையும் காட்டிப் பின்வருமாறு கூறுகிறது:

"கிறிஸ்தவத்தின் உண்மையான, ஆனால் கடினமான உபதேசம், 'சமூகம் தன் எதிரிகளுடன் போராட வேண்டும். ஆனால், அவர்களிடம் அன் புடன் இருக்க வேண்டும்' என்பதே எனத் தோன்றுகிறது.

"இதேதான் பகவத் கீதையின் தெளிவான உபதேசமும். ஸ்ரீ காந்தி தயை கூர்ந்து இதைக் கவனிக்கட்டும். கீதையில் அர்ச்சுனனுக்குக் கிருஷ்ணர் கூறுகையில், பயம் என்பதே கொஞ்சமேனும் இல்லாமல் யார் போராடுகிறானே, அவன் துவேஷம் என்பதே இல்லாது இருப்பானாயின், வெற்றி அவனுக்கே உரித் தாகும் என்கிறார். மனச்சாட்சியின்படி யுத்தத்தை எதிர்ப்பவருக்கும் சிறந்த போர் வீரருக்குமிடையே உயர்வான கட்டத்தில் நடக்கும் வாக்குவாதம் அத் தகைய சிறந்த நூலின் இரண்டாவது பகுதியில் நிரந்தரமாகத் தீர்க்கப்பட்டும் இருக்கிறது. அதை முழுவதும் இங்கு எடுத்துக்காட்ட போதிய இடமில்லை. அந்தக் காவியம் முழுவதும் ஒரு முறை மாத்திரமல்ல, பன்முறை படிக்க வேண்டியதாகும்."

இக் கட்டுரைகளை எழுதியவர் எந்தச் செய்யுட்களைக் குறிப்பிட்டிருக்கிறாரோ அதையே பயங்கரவாதிகளும், தாங்கள் செய்வது நியாயமே என்பதற்கு ஆதாரமாகக் காட்டிவருகிறார் கள் என்பது இக்கட்டுரையாளருக்கு ஒரு வேளை தெரியாமல் இருக்கலாம். ஆனால், உண்மை என்னவெனில், பகவத் கீதையை எந்தவிதப் பற்றுச் சார்புமின்றிப் படித்ததில்,'ஸ்டேட்ஸ் ம'னில் எழுதியிருப்பவர் அதற்குக் கொடுத்திருக்கும் பொரு ளுக்கு மாறுபட்டதான பொருளையே எனக்குத் தோற்றுவித் திருக்கிறது. அர்ச்சுனன், மேற்கத்திய யுத்த எதிர்ப்பாளர்கள் இருப்பதைப் போன்ற வகையில் மனச்சாட்சிப்படி யுத்தத்தை எதிர்ப்பவனல்ல என்பதை அக்கட்டுரையாளர் மறந்துவிட் டார். அதற்கு முன்னால் கௌரவர்களை எதிர்த்து அவன் பன் முறை போராடியிருக்கிறான். ஆனால், இரு தரப்புப் படை களும் போருக்கு ஆயத்தமாக யுத்த களத்தில் அணிவகுத்து நின்றதும், தன் உற்றார் உறவினர்களுடனும் தன்னுடைய மதிப் பிற்குரிய குருமாருடனும் தான் போராட வேண்டியிருக்கிறது என்பதைத் திடீரென உணர்ந்துகொண்டதும், அர்ச்சுனன் சோர்வடைந்துவிட்டான். மனிதர்மேல் கொண்ட விருப்போ

அல்லது யுத்தத்தின்மீது ஏற்பட்ட வெறுப்போ கேள்வி கேட்க அர்ச்சுனனைத் தூண்டவில்லை. கிருஷ்ணர், தாம் அளித்த பதிலைத் தவிர வேறு பதில் கொடுத்திருக்க முடியாது. மகாபாரதம் என்ற பெருங்காவியத்தில் கீதையும் ஒரு பகுதி. அந்த இலக்கியச் சுரங்கத்தில் அடங்கியிருக்கும் ரத்தினங்களில் கீதை மிகப் பிரகாசமானது என்பதில் சந்தேகமே இல்லை. மகாபாரதம் வரைந்த நீடுபுகழ் எய்திய ஆசிரியர், 'அம் மாபெரும் போரில் வெற்றி கண்டவர்கள் பயனற்ற புகழையே எய்தினர். லட்சக்கணக்கானவர்கள் ஈடுபட்ட, இரு முனையிலும் எவ்வளவோ அட்டூழியங்கள் நடந்துவிட்ட, அப்போரில் வெற்றி பெற்ற எழுவர் மாத்திரமே உயிருடன் இருந்தார்கள்' எனக் கூறி, யுத்தம் எவ்விதம் வீணானது என்பதை உலகிற்கு எடுத்துக்காட்டியிருக்கிறார். ஆனால், யுத்தம் மாயை, தவறானது என்பதை எடுத்துக் காட்டுவதோடு வேறு சிறந்த போதனைகளும் மகாபாரதத்தில் அடங்கியிருக்கின்றன. மனிதன் அழிவற்றவன் என்று கருதும் வகையில் மனிதனது ஆத்ம வளர்ச்சியின் வரலாறு அது. தம்மைச் சுற்றிலுமுள்ள ஒரு சிறு உலகத்தில் அவர் காலத்தில் நடந்த ஒரு சரித்திர பூர்வமான நிகழ்ச்சியைப் பூதக்கண்ணாடி கொண்டு பார்ப்பதுபோல் காட்டியிருக்கிறார். இன்றிருக்கும் மதிப்பைக் கொண்டு பார்த்தால் அதில் முக்கியத்துவம் எதுவுமில்லை. இன்று இருப்பதைப் போல உலகம் அன்று ஒரு குண்டூசியின் தலையளவுக்குக் குறுகிவிடவில்லை. இன்று இவ்வுலகின் ஒரு சிறு பகுதியில் நடக்கும் இயக்கம் உலகு முழுவதும் பரவி விடுகிறது. மனித உள்ளத்தில் நல்ல சக்திகளுக்கும் தீய சக்திகளுக்கும் இடையே தினந்தோறும் இடைவிடாமல் போராட்டம் நடந்துகொண்டே இருக்கிறது. இப்போராட்டத்தில் நல்ல சக்திகளே எப்பொழுதும் வெற்றி பெறுகின்றன; எனினும், தீமையும் தீரமாக எதிர்த்து நின்றே வருவதால் நுண்ணிய அறிவுள்ளவர்களுக்கும் இதனால் திகைப்பு ஏற்படுகிறது. மகாபாரதம் இப்போராட்டத்தையே எடுத்துக் காட்டுகிறது. நேர்மையுள்ள காரியங்களைச் செய்வதற்கான ஒரே வழியையும் அது காட்டுகிறது.

பகவத் கீதையின் உண்மையான போதனை எதுவாக இருந்தாலும் சரி, சமாதான இயக்கத் தலைவர்கள் முக்கியமாகக் கவனிப்பதற்குரியது தங்களுடைய ஆத்மத் தெளிவை விளக்கும் அகராதியான பைபிள் என்ன கூறுகிறது என்பதேயாம்; கீதை என்ன கூறுகிறது என்பதன்று. அப்பொழுதும், கிறிஸ்தவ ஆலய அதிகாரிகள் பைபிளுக்கு என்ன பொருள் சொல்லு

கிறார்கள் என்பதை அவர்கள் கவனிக்கக்கூடாது. பக்தியுடன் அதைப் படிக்கும்போது படிப்பவருக்கு என்ன பொருள் தோன்றுகிறது என்பதுதான் முக்கியம். அகிம்சை என்பதைப் 'பலாத்காரமின்மை' என்று ஆங்கிலத்தில் கூறுவது சரியான பொருளாகாது. இதில் எல்லாவற்றையும்விட அதிக முக்கியமானது, அன்பு அல்லது அகிம்சா தருமத்தைப்பற்றிப் போரை வெறுப்போர் ஊகிக்கும் விதந்தான். 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகையில் வெளியாகியிருக்கும் கட்டுரைகள், யுத்த ஆட்சேபணையாளருக்கு நல்ல சவாலாக ஒரு வேளை இருக்கலாம். அந்த இயக்கத்தைப்பற்றி எனக்குப் போதிய அளவு தெரியாததால் அதுபற்றித் திட்டமான அபிப்பிராயம் கூறமுடியாததற்கு வருந்துகிறேன். யுத்த ஆட்சேபணையாளரிடம் என் கருத்து எந்த மாறுதலையும் உண்டாக்குவதாக இருக்கும் என்பதற்குமில்லை. ஆனால், அதில் எனக்கு நன்றாகத் தெரிந்தவர்கள் சிலர் இருக்கிறார்கள்; அவர்கள் என்னுடன் கடிதத் தொடர்பும் வைத்துக்கொண்டிருக்கின்றனர். அவர்கள் இப்பொழுது ஒரு படி மேலேயும் போயிருக்கிறார்கள். ஸ்ரீ ரிச்சர்டு கிரெக்கின் 'பலாத்காரமின்மையின் சக்தி' என்ற நூலை* அநேகமாகத் தங்களுக்குப் பாடப் புத்தகமாகவும் கொண்டிருக்கின்றனர். என்னுடைய விளக்கத்தின்படி அகிம்சை எதுவோ அதன் மேனாட்டு விளக்கமே அந்நூல் என்று அதன் ஆசிரியர் கூறுகிறார். ஆகையால், அகிம்சையின் விளைவுகள், அதன் வெற்றிக்கான நிபந்தனைகளை எந்தவித விவாதமுமின்றி நான் குறிப்பிடுவேனாயின் என்னைப் பொறுத்தவரையில் தவறாக இல்லாமலும் இருக்கலாம். இவை வருமாறு:

1. அகிம்சை, மனிதவர்க்கத்தின் தருமம்; மிருகபலத்தை விட அது பெரியது; உயர்வானது.

2. அன்பேயான கடவுளிடம் உறுதியான நம்பிக்கை இல்லாதவர்களுக்குக் கடைசிப் பட்சமாகவும் அது வாய்ப்பதில்லை.

---

* ஸ்ரீ ரிச்சர்டு பி. கிரெக் எழுதிய இந்நூல், அகிம்சையின் மேன்மை வெகு நீண்ட காலத்திற்கு முன்னாலிருந்தே வளர்ந்து வந்திருக்கிறது என்பதை விளக்குகிறது. எப்பொழுதும் இம்முறை பல நாடுகளில் வெற்றியுடன் கையாளப்பட்டு வந்திருக்கிறது என்பதை இந்நூலாசிரியர் ஆதாரங்களுடன் காட்டுகிறார். இந்தியாவிலும் சீனாவிலும் கி. மு. 1000-க்கும் முன்னாலேயே அகிம்சையால் எதிர்ப்பது என்பது உருவாகியிருக்கிறது என்றும், தனிப்பட்டவர்களே அதைக் கையாண்டிருக்கிறார்கள் என்றும், பெரும் அளவில் மக்கள் அதை உபயோகிப்பது என்பது மகாத்மா காந்தி காலத்திலேயே என்றும் ஸ்ரீ. கிரெக் இப் புத்தகத்தில் கூறுகிறார். அகிம்சைத் தத்துவத்தையும் அதன் நன்மையையும் அறிவதற்கு இது ஒரு சிறந்த நூல். இது ஆங்கிலத்தில், அலாகாபாத் நவஜீவன் பிரசுராலயத்தினால் வெளியிடப்பட்டிருக்கிறது.



இந்தியா சுதந்திரம் அடைந்த தினத்தன்றும் (1947 ஆகஸ்டு 15)
மக்களின் அமைதியை நாடி கல்கத்தாவிலிருந்த மகாத்மாவின் ஜாகை முன்பு
மக்கள் ஆரவாரம் செய்தனர். அந்த சப்தத்திற்காக காதைப் பொத்துகிறார் காந்திஜி.



சேவாகிராமத்தில் மகாத்மா வசித்த மட்குடில்

3. ஒருவருடைய சுயமதிப்புக்கும் கௌரவ உணர்ச்சிக்கும் அகிம்சை முழுமையுமான பாதுகாப்பை அளிக்கிறது. நிலவுடைமையையும் மற்றச் சொத்துக்களையும் பாதுகாத்துக் கொள்ளுவதற்கு ஆயுதந் தாங்கிய ஆட்களை வைத்துக்கொள்வதை விட அகிம்சை நல்ல பாதுகாப்பு என்பதை வழக்கமாக அதை அனுசரிப்பது நிரூபித்தாலும், அந்தச் சொத்துக்களுக்கு அகிம்சை எப்பொழுதுமே பாதுகாப்பளிப்பதில்லை. அகிம்சை அதனுடைய இயற்கையான தன்மையினாலேயே, கெட்ட வழியில் அடைந்த லாபங்களுக்கும், ஒழுக்கக்கேடான செய்கைகளுக்கும் பாதுகாப்பளிக்க உதவியாக இராது.

4. அகிம்சையைக் கையாளும் தனிப்பட்டவர்களோ அல்லது நாட்டினரோ (நாட்டினராயின் கடைசி மனிதர் வரையில்) தங்களுடைய மானத்தைத் தவிர மற்ற எல்லாவற்றையுமே தியாகம் செய்துவிடத் தயாராக இருக்கவேண்டும். ஆகையால் இன்னுமொரு மக்களின் நாட்டை வைத்துக்கொண்டிருப்பது, அதாவது இக்கால ஏகாதிபத்தியம் அதன் பாதுகாப்புக்குப் பலாத்காரத்தையே அடிப்படையாகப் பகிரங்கமாகக் கொண்டிருப்பதால், அது அகிம்சைக்குப் பொருத்தமற்றதாகும்.

5. ஒவ்வொருவரும் அன்பேயான கடவுளிடம் திடமாக நம்பிக்கையும், எல்லா மனிதவர்க்கத்தினிடமும் சமமான அன்பும் கொண்டிருப்பார்களானால் குழந்தைகள், இளைஞர்கள், பெண்கள், முதியோர் ஆகிய எல்லாருமே சமமாகக் கையாளக் கூடிய சக்தி அகிம்சை. அகிம்சையை வாழ்க்கையின் கோட்பாடாக ஏற்றுக்கொண்டுவிட்ட பிறகே எல்லாவற்றிலுமே அது வியாபிக்கவேண்டுமேயல்லாமல் ஒரு சில காரியங்களுக்கு மாத்திரம் என்று அதைப் பயன்படுத்திக்கொள்ளுதல் கூடாது.

6. தனிப்பட்டவர்களுக்கு மட்டும் நலம் தரும் ஒரு தருமம், மனிதவர்க்கத்திற்கு உகந்தது அன்றெனநினைப்பது மகத்தான தவறு.

—ஹரிஜன் - 5—9—1936.

## 9

# டால்ஸ்டாய் கண்ட அகிம்சை

[1928-இல், சபர்மதி சத்தியாக்கிரக ஆசிரமத்தில் டால்ஸ்டாயின் நூற்றாண்டு தினத்தை அகமதாபாத் இளைஞர் சங்கத்தினர் கொண்டாடியபோது மகாத்மா காந்தி குஜராத்தியில் டால்ஸ்டாயின் பெருமைகளைக் குறித்துப் பேசினர். அதில் டால்ஸ்டாய் கண்ட அகிம்சையை

யும் அவருடைய சத்திய வழியையும்பற்றிக் காந்திஜி குறிப்பிட்டார். காந்திஜியின் அப்பேச்சில் அகிம்சையைப்பற்றிய பகுதி மாத்திரம் கீழே மொழிபெயர்த்துக் கொடுக்கப்பட்டிருக்கிறது.]

........என்னுள்ளிருந்த சிறிய சிம்மாசனத்தில் யாருமில்லாதிருந்த சமயத்தில், என்னுடைய வாழ்க்கையில் ஆத்மிக உணர்ச்சியை மூட்டிய இக்காலத்தவர் மூவரில் காலஞ்சென்ற ராஜசந்திரருக்குப் பிறகுதான் டால்ஸ்டாய். மூன்றாமவர் ரஸ்கின்[1]. நாற்பது ஆண்டுகளுக்கு முன்னால் எதிலும் நம்பிக்கையற்றுச் சந்தேகமே குடிகொண்ட நிலையில் தீவிர நெருக்கடிக்கு நான் ஆளாகியபோது, 'இறைவனின் ராஜ்யம் உன்னுள்ளேயே இருக்கிறது' என்ற நூல் எனக்குக் கிடைத்தது. அது என்னை மிகவும் கவர்ந்துவிட்டது. அச்சமயம் நான் பலாத்காரத்தில் நம்பிக்கையுள்ளவனாக இருந்தேன். [2]டால்ஸ்டாயின் வாழ்க்கையில் என்னை வெகுவாய்க் கவர்ந்ததெல்லாம் தாம் உபதேசித்தபடி அவர் நடந்து வந்ததும், சத்தியத்தை நாடிச் செல்வதில் எந்தச் சிரமத்தையும் அவர் பெரிதாகப் பாராட்டாமல் இருந்ததுமேயாகும். அவருடைய எளிய வாழ்க்கையை எடுத்துக் கொள்ளுங்கள்; அது அற்புதமானது. ஒரு பெரிய பணக்காரக் குடும்பத்தில் பிறந்து ஆடம்பரத்திலும் சுகங்களிலும் வளர்ந்தவராக இருந்தபோதிலும், ஆசைப்பட்டதை எல்லாம் அனுப

1. ஜான் ரஸ்கின் (1819-1900) -- சிறந்த எழுத்தாளர்; கீர்த்தி வாய்ந்த ஓவியக்கலை விமர்சகர். 'இக்கால ஓவியக் கலைஞர்கள்' என்று அவர் எழுதிய நூல், ஓவியக் கலையின் உயர்ந்த தத்துவத்தை எடுத்துக் காட்டுவதோடு ஒப்பற்ற இலக்கியமுமாகும். ரஸ்கின் பொருளாதார விஷயங்களில் அதிக சிரத்தை எடுத்துக்கொண்டார். மிகச் சிறந்த சிந்தனையாளர். சித்திரக்கலை, மதம், யுத்தம் போன்றவைகளைக் குறித்து தாம் செய்த பல சொற்பொழிவுகளைப் புத்தகமாக வெளியிட்டார். மக்களின் நல்வாழ்வையும் சுகத்தையுமே முக்கியக் குறியாகக் கொண்டவை அவருடைய கருத்துக்கள்.

2. மகாத்மா காந்தி தென்னாப்பிரிக்காவில் இருந்த காலத்தில் டால்ஸ்டாய்க்கு எழுதிய கடிதங்களை, 'மகாத்மா காந்தி நூல்கள் - முதல் தொகுதி' யில் 744-47-ஆம் பக்கங்களில் காணலாம். காந்திஜியின் சத்தியாக்கிரகப் போராட்ட முறையை டால்ஸ்டாய் பாராட்டினார். அதுவே உலகம் உய்ய வழி என்றார். மகாத்மாவின் பேரில் டால்ஸ்டாய்க்கு அதிக மதிப்பு இருந்தது. இதைக் குறித்து டால்ஸ்டாயின் மகளே காந்திஜியிடம் கூறிய விவரத்தை இச்சமயத்தில் நினைவுபடுத்திக் கொள்ளுவது அவசியமாகும். 1931 டிசம்பரில் லண்டனில் நடந்த வட்டமேஜை மகாநாட்டிற்குச் சென்றுவிட்டுக் காந்திஜி இந்தியாவுக்குத் திரும்பும் வழியில் ரோமுக்கும் போயிருந்தார். அங்கிருந்த கடைசி தினத்தன்று டால்ஸ்டாயின் மகள், சினோரா அல்பொட்னி மகாத்மா காந்தியைப் பார்த்தார். அவர் காந்திஜியிடம் கூறியதாவது: "உங்களைக் குறித்து என் தந்தை மிகப் பெருமையாக எண்ணினார். தம்மால் புரிந்துகொள்ள முடியாமலிருப்பவர்கள் டால்ஸ்டாயர்கள் என்போரே என்று என் தந்தை கூறுவது வழக்கம். தம்மை மக்கள் பின்பற்ற வேண்டும் என்று என் தந்தை விரும்பவில்லை. அவர்கள் அகிம்சையை அனுசரிக்க வேண்டும் என்றார். அது ஒன்றே வழி என்றார். உங்களுடையதும் அவருடையதுமான அனுபவத்திற்கு ஏற்ற இந்த வேலைத்திட்டம், உங்களிருவருக்கும் கனவு காண்போர், ஒன்றும் தெரியாதவர்கள், முட்டாள்கள் என்ற அடைமொழிகளைத் தந்திருப்பதே விசித்திரமாகும்."

விப்பதற்கு வேண்டிய உலக இன்ப வசதிகளை எல்லாம் ஏராளமாகப் பெற்று வாழ்க்கையில் இன்பங்களும் களி யாட்டங்களும் கண்டிருந்தும், அவர் தமது நல்ல யௌவனத்தில் அவற்றையெல்லாம் வெறுத்தார். அதன் பின்னர் அவற்றை அவர் திரும்பிப் பார்த்ததுகூடக் கிடையாது.

அவர் காலத்தில் அவரே மிகுந்த சத்தியசீலராக விளங் கியவர். சத்தியத்தைக் காண இடைவிடாத முயற்சியாகவும், அதற்காக நீடித்துப் பாடுபடுவதுமாகவே அவருடைய வாழ்க்கை இருந்தது. சத்தியத்தை மறைக்கவோ, அதைக் குறைக்கவோ அவர் முயன்றதே கிடையாது. ஆனால், அதை எந்தவிதமான வழியிலும் மழுப்பவோ அல்லது சமரசப்படுத்தும் வகையிலோ விபரீத சக்தி எதற்கும் அஞ்சிப் பின்னடையாமல், முழுவதையும் உலகோருக்கு எடுத்துக் காட்டினர். இக்காலத்தில் தோன்றி யுள்ள அகிம்சைவாதிகளில் அவரே மிகச் சிறந்தவர். அவருக்கு முன்னரும் அன்றிப் பின்னரும் அவரைப் போல வேறு எந்த மேனாட்டினரும் பலாத்காரமின்மையைப்பற்றி நிறைவாகவும் உறுதியாகவும் ஆழ்ந்த கருத்துடனும் ஞானத்துடனும் எழுதியதோ அல்லது பேசியதோ கிடையாது. இந்தத் தத்துவத்தைப்பற்றி அவர் கூறியிருக்கும் அற்புத மான விளக்கங்கள், நம் நாட்டின் அகிம்சைவாதிகள் அதற்குக் கூறிவரும் குறுகிய அரைகுறையான விளக் கங்களை நாணித் தலை குனியும்படி செய்கின்றன என்றே கூறுவேன். இந்நாடு கர்மபூமி என்று பெருமையாகக் கூறப் படினும், அகிம்சைத் துறையில் நம் பண்டைய முனிவர்கள் எவ்வளவோ உண்மைகளைக் கண்டுபிடித்திருந்தபோதிலும், அகிம்சை என்ற பெயரால் இன்று நம்மிடம் இருப்பவை எல்லாம் வெட்கக்கேடானவை. உண்மையான அகிம்சை என்பது கெட்ட எண்ணமோ, துவேஷமோ, கோபமோ ஒரு சிறிதும் இல்லாமல் எல்லாரிடத்திலும் அன்பு நிறைந்து வழிவதாக இருக்கவேண்டும். நம்மிடையே இவ்வகையான உயர்ந்த அகிம்சை ஏற்படுவதற்குக் கடலென அன்பு ததும்பும் டால்ஸ் டாயின் வாழ்க்கை வழிகாட்டும் ஒளியாகவும், வற்றாத உணர்ச்சி ஊற்றாகவும் இருந்துவரும். டால்ஸ்டாயைப்பற்றிக் குறை கூறுவோர், அவருடைய வாழ்க்கை பெரிய தோல்வி என்றும், தமது லட்சியத்தை அவர் காணவே இல்லை என்றும், கானல் நீரை உண்மையென நம்பி அவர் வாழ்க்கையெல்லாம் அவல மாகியதென்றும் கூறுகிறார்கள். இவர்கள் கூறுவதை நான் ஏற்றுக்கொள்ளவே முடியாது. அவரே அவ்விதம் கூறியிருக் கிறார் என்பது உண்மை. ஆனால், அது அவருடைய பெருமை

யைக் காட்டுகிறது. தமது லட்சியம் முழுவதையுமே அவர் தமது வாழ்க்கையில் அடையாமல் இருக்கலாம். ஆனால், அது மனித இயல்பு. உயிரோடு இருக்கும் வரையில் யாருமே பூரணத்துவத்தை அடைந்துவிட முடியாது. இதற்கு முக்கிய மான காரணம் 'நான்' என்ற அகந்தையை முற்றிலும் வென்றாலன்றி யாருமே சரியான நிலையை அடைவது என்பது அசாத்தியம். உடலின் தளையில் ஒருவன் சிக்குண்டிருக்கும்வரை யில் இந்த 'நான்' என்பதை அடியோடு ஒழித்துவிடுவது என்பது இயலாத காரியம். லட்சியத்தை அடைந்துவிட்ட தாக ஒருவர் நம்பிவிட்டதுமே மேற்கொண்டும் அவர் அடைய வேண்டிய அபிவிருத்தி நின்றுவிடுகிறது. அவருடைய இறக்கம் ஆரம்பமாகிவிடுகிறது; நாம் நெருங்க நெருங்கத் தொலைவாக விலகிவிடுவது லட்சியத்திற்குரிய தன்மையாகும் என்று டால்ஸ்டாய் அடிக்கடி கூறுவார். ஆகையால், தாம் தவறி விட்டதாக டால்ஸ்டாயே ஒப்புக்கொண்டிருக்கிறார் என்று சொல்வது அவருடைய பெருமையை ஒரு சிறிதும் குறைத்து விடாது; அவருடைய அடக்கத்தையே அது காட்டுகிறது.

......இளைஞர்கள், சரியான வகையிலேயே தேச சேவை யைத் தங்கள் லட்சியமாகக் கொண்டிருக்கின்றனர். ஆனால், அன்பு அல்லது அகிம்சையில் அது வேரூன்றி இராது போனால் சேவை சாத்தியம் அன்று. வெறும் கொல்லாமை அகிம்சை ஆகாது. வெறுக்கத் தகுந்த ஜீவன்களைக் கொல்லாமல் விலகி நிற்பவருக்கு உயிர் வாழ்வன எல்லாவற்றினிடமும் உள்ளத்தில் அன்பு இல்லாதிருக்குமாயின், அவர் சுவர்க்கத்தை எய்தமாட் டார். உண்மையான அன்பு கடல் போன்று கரையற்றது. அது ஒருவருடைய உள்ளத்தில் நிறைந்து தானே பொங்கி எழுந்து எல்லா அணைகளையும் எல்லைகளையும் கடந்து முழு உலகத் தையே உள்ளடக்கிக்கொள்கிறது...

—எங் இந்தியா - 20—9—1928

## 10

# செயலும் எண்ணமும்

[அகிம்சையைக் குறித்து மகாத்மா காந்திக்கும் பாரதானந்தஜி* என்பவருக்கும் சேவா கிராமத்தில் 1940 செப்டம்பர் ஆரம்பத்தில் நடந்த ஒரு விவாதத்தைக் குறித்து ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய விவரமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

---

* பாரதானந்தஜி போலந்து தேசத்தவர். அவருடைய முந்திய பெயர் மாரிஸ் பிரைட்மான். அவர் போலந்தில் என்சினீயராக இருந்தார். எதையும் புதிதாகக் கண்டு பிடிப்பதில் நிபுணர். இரண்டாவது உலக யுத்தத்தின் ஆரம்பத்தில் ஜெர்மன் படை

பாரதானந்தஜி தமது நாட்டினரான போலந்து தேசத்தினரைப்பற்றிக் காந்திஜி பாராட்டிக் கூறியதைக் கேட்டதும் மனம் சோர்ந்தார். "போலந்துவாசிகள் 'அநேகமாக அகிம்சைவாதி'களாக இருந்தார்கள் என்று நீங்கள் கூறுகிறீர்கள். நான் அப்படி நினைக்கவில்லை. போலந்தின் நெஞ்சில் கடுமையான பகை இருந்தது. ஆகவே, அவர்கள் பாராட்டுக்கு உரியவர்கள் என்று நான் நினைக்கவில்லை" என்றார்.

"நான் கூறுவதை நீங்கள் அப்படியே எடுத்துக்கொண்டு விடக் கூடாது. முற்றிலும் ஆயுதபாணிகளான ஆயிரம் சிப்பாய்களடங்கிய படையைப் பத்தே சிப்பாய்கள் எதிர்த்து நிற்கிறார்கள் என்றால் இந்தப் பத்துச் சிப்பாய்களும் முற்றிலும் அகிம்சையோடு நடந்துகொண்டவர்களே.[1] ஏனெனில், சரிக்குச் சரியான பலாத்காரத்தை உபயோகிப்பதற்கான சக்தி எதுவும் அவர்களிடம் இல்லை. ஆனால், நான் சொன்ன பெண்ணின் உதாரணம் மிகவும் பொருத்தமானதாகும். ஒரு பெண், நகங்களை வளர்த்து வைத்திருந்தால், தன்னைத் தாக்குகிறவனை அந்த நகங்களினாலோ அல்லது பற்கள் இருந்தால் பற்களினாலோ தாக்குவாளாயின் அவள் முற்றிலும் அகிம்சையுடன் நடந்தவளாவாள். ஏனெனில், அவளிடம் முன்கூட்டியே ஆலோசித்து முடிவு செய்துகொண்ட பலாத்காரம் எதுவும் இல்லை. அவளுடைய பலாத்காரம், பூனையிடம் ஒரு சுண்டெலி காட்டும் பலாத்காரத்தைப் போன்றது" என்றார் காந்திஜி.

"அப்படியானால் பாபுஜி, நான் ஒரு சம்பவத்தைச் சொல்லுகிறேன். ஓர் இளம் ருஷியப் பெண்ணை ஒரு சிப்பாய் தாக்குகிறான். அவள் தன்னுடைய நகங்களையும் பற்களையும் உபயோகித்து அவனைக் கிழித்து எறிந்துவிடுகிறாள். அவள் அநேகமாக அகிம்சையை அனுசரித்தவளா?"

"அவளுடைய எதிர்ப்பு, சமயத்தில் திடீரென்று ஏற்பட்டதாக இருக்குமானால், அது வெற்றிகரமானதாயிற்று என்பதால்

---

கள் போலந்தில் புகுந்து அந்நாட்டை நாசப்படுத்திவிட்டன. அதற்கு முன்னாலேயே மாரிஸ் பிரைட்மான் இந்தியாவுக்கு வந்து இந்தியாவில் வசிக்க ஆரம்பித்தார். தம் பெயரையும் பாரதானந்தஜி என மாற்றிக்கொண்டார். 1935-ஆம் ஆண்டு வாக்கில் அவர் மகாத்மா காந்தியை முதன்முதலில் பெங்களூரில் சந்தித்தார். அப்பொழுது அவர் மைசூர் அரசாங்கத் தொழில் நுட்ப இலாகாவில் உத்தியோகத்தில் இருந்தார். புது வகையான ராட்டினத்தைக் கண்டுபிடிப்பதைக் குறித்துப் பேசவே அவர் காந்திஜியைச் சந்தித்தார். பிறகு தனுஸ் தக்ளி என்ற ராட்டையைக் கண்டுபிடித்தார்.

1. ஹிட்லர் படைகளை போலந்து மக்கள் எதிர்த்து நின்றதைக் குறித்து மகாத்மா காந்தி எழுதியிருக்கும் மற்ற கட்டுரைகளை இந்நூலில் 'போரும் அகிம்சையும்' என்ற பகுதியில் காணலாம்.

அது எவ்விதம் அகிம்சையல்லாது போகும்?" என்று நான் இடைமறித்துக் கேட்டேன்.

"இல்லாது போகாது" என்று பராக்காகவே காந்திஜி கூறிவிட்டார்.

"அப்படியானல் நான் உண்மையில் குழப்பம் அடைகிறேன்" என்ருர் பாரதானந்தஜி. "முன்னரே யோசித்து வைத்திருந்த பலாத்காரமும் சரிக்குச் சரியான பலாத்காரத்தை உபயோகிக்கும் சக்தியும் இருக்கக்கூடாது என்று நீங்கள் கூறலாம். இங்கு இவ்விஷயத்தில் அப்பெண் தன்னுடைய வெற்றியின் மூலம், தனக்குச் சக்தி இருக்கிறது என்பதை நிரூபித்துவிட்டாள்" என்ருர்.

இதற்குக் காந்திஜி, "மகாதேவின் கேள்விக்கு நான் கவனமில்லாமல், 'இல்லாது போகாது' என்று கூறிவிட்டதற்காக வருந்துகிறேன். அதில் பலாத்காரம் இருக்கிறது. அது சம பலமுள்ளதாகவும் இருக்கிறது" என்ருர்.

**பாரதானந்தஜி :** அப்படியானல், ஒருவர் கொள்ளும் நோக்கமே முடிவான சோதனையாகிறதல்லவா? ரண சிகிச்சை செய்கிறவர் தமது கத்தியை அகிம்சையோடு உபயோகிக்கிருர்; அல்லது சமாதானத்தைப் பாதுகாப்பவர், சமூகத்தைப் பாதுகாப்பதற்காகத் துஷ்டர்கள்மீது பலாத்காரத்தை உபயோகிக்கிருர். இருவரும் அதை அகிம்சையுடனேயே செய்கிருர்கள்.

**காந்திஜி :** நோக்கம் சரியானது என்று முடிவு கூறுவது யார்? நாம் அல்ல. நமக்குப் பல விஷயங்களில் செயல் ஒன்றே சரியான பரீட்சை. சாதாரணமாக, நாம் செயல்களைக் கவனிக்கிறேமேயன்றி நோக்கத்தைக் கவனிப்பதில்லை. நோக்கத்தைக் கடவுள் ஒருவரே அறிவார்.

**பாரதானந்தஜி :** அப்படியானல், எது இம்சை, எது அகிம்சை என்பதும் கடவுள் ஒருவருக்கே தெரியும்.

**காந்திஜி :** ஆம். கடவுள் ஒருவரே முடிவான நீதிபதி. அகிம்சை என்று நாம் கருதுவது கடவுள் கண்ணுக்கு இம்சையாகவும் இருக்கக்கூடும். ஆனல், நமக்கு வழி வகுக்கப்பட்டிருக்கிறது. அகிம்சையை நுட்பமான அறிவிலும் விழிப்புடைய மனச்சாட்சியோடும் அனுசரிப்பதே உண்மையாக அகிம்சையை அனுசரிப்பதாகும் என்பதையும் நீங்கள் அறிய வேண்டும். அப்படிப்பட்டவர் தவறு செய்வது கஷ்டம். போலந்தைக் குறித்து அந்தச் சொற்களை நான் உபயோகித்தபோது, தான் திக்கற்றிருப்பதாகத் தானே நம்பும் ஒரு பெண்,

பலாத்காரக் குற்றஞ் செய்யாமல் தன்னுடைய நகங்களையும் பற்களையும் உபயோகிக்கலாம் என்று நான் அவளுக்குச் சொன்னபோது என் மனத்திற்குள் இதற்கு இருக்கும் பொருளையும் நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும். மிகுதியான பலத்திற்கு எதிரே சாவு நிச்சயம் என்பதை நன்றாய் அறிந்திருந்தும், பணிய அங்கே மறுப்பு இருக்கிறது. தாங்கள் தூளாக்கப்பட்டு நாசமுறுவது போலந்தினருக்குத் தெரியும். என்றாலும், ஜெர்மன் படைகளை எதிர்த்து நின்றார்கள். அதனாலேயே அது அநேகமாக அகிம்சை என்றேன்.

"ஆனால், பாபுஜி, இதில் தீர்மானிக்க வேண்டியவர் கடவுள். கடவுள் பலாத்காரத்தை அனுமதிக்கிறார் என்பதை எப்படியோ என்னால் மறக்க முடியவில்லை. ஒரு புராணக் கதை இருக்கிறது. அதை உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். சிவனும் பார்வதியும் பேசிக்கொண்டிருந்தபோது சிவன் திடீரென்று எங்கோ மறைந்துவிட்டார். ஆனால், திரும்பவும் தோன்றினார். எங்கே போயிருந்தார் என்று பார்வதி கேட்ட போது, தாக்கப்பட்ட ஒரு பக்தனைக் காப்பாற்ற தாம் சென்றதாகவும், தன்னைத் தாக்கியவனை அந்தப் பக்தன் ஒரு கல்லினால் தாக்கித் தன்னையே காத்துக்கொண்டுவிட்டதைக் கண்டு தாம் திரும்பிவிட்டதாகவும் சிவன் கூறினாராம்."

**காந்திஜி :** சரி ; சரி, எவ்வளவுதான் விவாதித்தாலும் அவை நமக்கு அகிம்சையைப் போதித்து விடா. பதஞ்சலி போன்ற சிறந்த யோகியர் வகுத்துள்ள ஆத்மிகப் பயிற்சி முழுவதிலும் தேர்ந்தாலன்றித் தன்னுடைய எண்ணம் பரிசுத்தமாக இருக்கிறது என்று யாரும் நிச்சயித்துக்கொள்ள முடியாது என்பதை நீங்கள் மறந்துவிடக் கூடாது. வேறு எந்த வழியிலும் பூரணமான மனத்தூய்மையை அடைந்துவிட முடியாது.

காந்திஜி கூறியதைப் பாரதானந்தஜி ஒப்புக்கொண்டதாகத் தோன்றியது. யாருமே தன்னைத்தானே எளிதில் ஏமாற்றிக்கொண்டுவிட முடியும் என்பதை ஒப்புக்கொண்டார். ஆனால், மற்றொரு பிரச்னையைக் கிளப்பினார் : "அகிம்சை, பிரம்மசரியம், நூற்பது முதலியவைகளெல்லாம் சாதனங்கள். ஒருவருக்கு ஏற்றதாக இருக்கும் ஒன்று இன்னொருவருக்கு ஏற்றதாக இல்லாது போகும். அகிம்சையை எல்லோருக்குமான கோட்பாடாக ஏன் செய்திருக்கிறீர்கள் ?" என்றார்.

**காந்திஜி :** ஓர் உபாயத்தை ஒரு விஞ்ஞானி சோதித்து அதில் நிச்சயமான பலன் இருக்கிறது என்பதைக் கண்ட

பிறகே அதை எல்லோர் முன்னும் வைக்கிறுன். 'தனிப்பட்டவருக்கு எது உண்மையாகிறதோ அதுவே பிரபஞ்சம் முழுமைக்கும் உண்மையானதாகிறது' என்ற அறிவுரையை நீங்கள் அறிவீர்கள்.

**பாரதானந்தஜீ :** ஆனல், முனிவருக்கும் திருடனுக்கும் நீங்கள் ஒரே சட்டத்தை விதிக்கிறீர்கள்.

**காந்திஜீ :** சட்டம் ஒன்றே. ஆனல், முனிவருக்கு இருப்பதைவிடத் திருடனுக்கு வழி மிகக் கஷ்டமானதாக இருக்கக்கூடும். சட்டம் ஒரு லட்சியம். அந்த லட்சியத்திற்குத் தனிப்பட்டவர்கள் எவ்வளவு தகுதியற்றவர்களாகிருர்கள் என்பதைப் பற்றிக் கவலையில்லை.

**பாரதானந்தஜீ :** ஆனல், லட்சியத்திற்கு முன்னுலுள்ள ண்மை நிலையை நீங்கள் மறந்துவிடுகிறீர்கள்.

**காந்திஜீ :** அப்படி இல்லை. உண்மை நிலை எப்பொழுதுமே என் முன்னல் இருந்து வருகிறது. ஆனல், என் முயற்சியெல்லாம் லட்சியத்தை அடைவதிலேயே இருக்கிறது. யூக்ளிடின் நேர்க்கோடு நமது எண்ணத்தில்தான் இருக்கிறது. ஆனல், நாம் எப்பொழுதும் அதை அடையப் பார்க்க வேண்டியிருக்கிறது. யூக்ளிடின் கற்பனைக் கோட்டிற்குச் சரியாக ஓர் உண்மையான கோட்டைப் போட நாம் எப்பொழுதும் முயன்று வரவேண்டியிருக்கிறது.

இதை நான் கேட்டுக்கொண்டிருந்தபோது இதே போன்ற சொற்களில் கார்லைல்* சொன்னது எனது எண்ணத்தில் வந்தது. அதாவது : கருத்துக்களை முற்றிலும் காரியத்தில் கொண்டு வந்துவிட முடியாது. என்ருலும், லட்சியங்கள் இருந்து கொண்டுதான் வருகின்றன; அவற்றைப் பயன்படுத்திக்கொள்ளாமற்போனல் எல்லாமே நாசமாகிவிடுகின்றன என்பதை மறந்துவிடவே கூடாது. கொத்து வேலை செய்கிறவர் யாரும் சரியானபடி செங்குத்தாகச் சுவரை எழுப்பிவிடுவதில்லை; கணித சாஸ்திரப்படி இது சாத்தியமும் இல்லை. ஓர் அளவுக்குச் செங்குத்தாக இருப்பது அவருக்குப் போதும். தம் வேலையைச் செய்து முடித்த நல்ல கொத்து வேலைக்காரரைப் போலவே இவரும் அப்படியே விட்டுவிடுகிருர். என்ருலும், அவர்

---

* தாமஸ் கார்லைல் (1795–1881) சிறந்த ஆங்கிலச் சிந்தனையாளர்; எழுத்தாளர். எடின்பரோ சர்வகலாசாலையில் படித்துப் பட்டம் பெற்றதும் சிறிது காலம் உபாத்தியாயராக இருந்தார். அத்தொழில் அவருக்குப் பிடிக்கவில்லை. பிறகு 1824-இல் லண்டனுக்கு வந்து நூல்கள் எழுதத் தொடங்கினர். அவர் எழுதிய 'பிரெஞ்சுப் புரட்சி அன்றும் இன்றும்' போன்ற நூல்கள் ஆங்கில இலக்கியத்தில் கீர்த்தி வாய்ந்தவை.

செங்குத்திலிருந்து அதிக அளவு விலகிப்போய் விட்டாரானல், கையிலிருக்கும் மட்டப்பலகையையும் குண்டையும் எறிந்து விட்டுக் கைக்கு வந்தபடியெல்லாம் கல்லே அடுக்க ஆரம்பித்து விடுவாராயின், தவருன வழியில் வேலே செய்தவராகிருர்; அவர் தம்மையே மறந்துவிட்டார். பூமியின் ஆகர்ஷண சக்தி தன் வேலேயை மறந்துவிடுவதில்லே. அவர் எழுப்பிய சுவர் கீழே விழுந்து குலேந்துபோகிறது.

சேவா கிராமம், 2—9—1940 —ஹரிஜன், 8—9—1940

# 11
# அகிம்சையின் பணி

[1947 அக்டோபர் 30-ஆந் தேதி பிரார்த்தனைக் கூட்டம் நடப்பதற்கு முன்னல் பிரார்த்தனையின் பகுதியாகக் குரானிலிருந்து சில வாசகங்கள் ஓதப்படுவதில் அங்கே கூடியிருப்பவர்களில் யாருக்காவது ஆட்சேபம் உண்டா என்று வழக்கம்போல் கேட்கப்பட்டது. ஒருவர் எழுந்து தமக்கு ஆட்சேபம் இருப்பதாக விடாப்பிடியாகச் சொல்லிக்கொண்டிருந்தார். அதன்பேரில் காந்திஜி, அத்தகைய ஆட்சேபணை இருக்குமானல் பொதுஜனப் பிரார்த்தனையோ, பிரார்த்தனைக்குப் பிறகு அன்றுடச் சம்பவங்களை குறித்துத் தாம் சொற்பொழிவோ செய்யப் போவதில்லே என்று சொல்லி விட்டார். ஆனல் அங்கே கூடியிருந்த மக்களோ காந்திஜியைப் பார்க்காமல் கலேய மறுத்துவிட்டனர். எனவே, மகாத்மா மேடைக்குச் சென்று, பிரார்த்தனைக் கூட்டத்தை நடத்தாதது குறித்தும், தாம் அறிந்தவரையில் அகிம்சை வேலே செய்யும் தன்மையையும் சில வார்த்தைகளில் விளக்கினர். அச்சிறு உரையே கீழே கொடுக்கப் பட்டிருக்கிறது.]

முக்கியமாகத் தனிப்பட்ட ஒருவரின் தோட்டத்தில் பிரார்த்தனை நடக்கும்போது அதை ஆட்சேபிப்பதென்பது யாருக்கும் அழகில்லாததாகும். ஆட்சேபிப்பவர் ஒருவரேயெனினும், ஏராளமானவர்கள் அந்த ஒருவரை வாய்திறவாமல் இருக்கும்படி செய்துவிடக்கூடும். என்ருலும், அகிம்சை எனக்கு எச்சரிகை செய்கிறது. கூடியிருப்போர் எல்லோருமே ஆட்சேபித்தால், அப்பொழுது நிலேமை வேறு விதமானது. நான் தாக்கப்படும் ஆபத்து நேரினும் நான் பிரார்த்தனையை நடத்தியாக வேண்டியது அப்பொழுது என் கடமையாகிறது. ஆட்சேபிக்கும் ஒருவருக்காகப் பெரும்பாலானவர்கள் ஏமாற்றம் அடையும்படி செய்யக்கூடாது என்ற ஒன்றையும் கவனிக்க வேண்டியிருக்கிறது. இதற்குள்ள பரிகாரம் மிக எளிதானது. பெரும்பாலானவர்கள் தங்களே அடக்கிக்கொள்ளுவார்களானல், ஒருவரேயான ஆட்சேபக்காரர்மீது கோபங்கொள்ளாமலும்

அவருக்குத் தீங்கு எதையும் செய்ய எண்ணமலும் இருப்பார்களாயின், பிரார்த்தனையை நடத்தியாகவேண்டியது என் கடமை. சாத்தியம் என்னவெனில், கூடியிருக்கும் மக்கள் எல்லோருமே எண்ணத்திலும் செயலிலும் அகிம்சையோடு இருப்பார்களானல், ஆட்சேபிப்பவரும் தம்மைத் தாமே அடக்கிக்கொள்ளக்கூடும். அகிம்சை செய்யக்கூடிய வேலை அத்தகையது. சத்தியமும் அகிம்சையும், தேர்ச்சி பெற்ற ஒரு சிலரின் ஏகபோக உரிமைகளல்ல. கடவுளின் ஆக்ஞைகள் என்று சொல்லப்படும் பொதுவான நன்னடத்தைக் கோட்பாடுகள்-மன உறுதி இருக்குமானல்—அறிவதற்கோ, நிறைவேற்றிவைப்பதற்கோ அவ்வளவு இலகுவானவை; எளியவை. மனிதவர்க்கத்தை ஆட்கொண்டிருக்கும் அசிரத்தையினுலேயே அவை கடினமாகத் தோன்றுகின்றன. முன்னேறிக்கொண்டே போகிறவன் மனிதன். இயற்கையில் எதுவுமே நின்ற இடத்திலேயே நிற்பதில்லை. கடவுள் ஒருவரே சலனமற்றவர். ஏனெனில், அவர் ஒருவரே நேற்று இருந்தபடியே இன்றும் நாளையும் இருந்தாலும் சலனத்துடனும் இருப்பார். கடவுளின் தன்மைகளைப்பற்றிக் கூறப்படுபவைகளைக் குறித்து நாம் கவலைப்பட வேண்டியதில்லை. நாம் முன்னேறிக்கொண்டே வந்திருக்கிறோம் என்பதை நாம் உணர வேண்டும். ஆகவே, மனித வர்க்கம் வாழ வேண்டுமானல் சத்தியம், அகிம்சை இவற்றின் ஆதிக்கத்தின்கீழ் அது நாளுக்குநாள் அதிகமாக வரவேண்டும். இந்த அடிப்படையான இரண்டு ஒழுக்கக் கோட்பாடுகளை முன்னிட்டு நானும் நீங்களும் வேலை செய்து வாழவேண்டும்.

பிர்லா மாளிகை 30—10—'47 ஹரிஜன்—9—11—1947.

# 12

# சாத்துவிக எதிர்ப்பும் அகிம்சையும்

## இரண்டுக்குமுள்ள பேதம்

ஸ்ரீமதி எட்மண்ட் பிரிவட் 1947 ஆகஸ்டு 27-ஆந் தேதி காந்திஜிக்கு எழுதிய கடிதம் வருமாறு:

"இந்தியாவில் இப்பொழுது அண்மையில் நடந்திருக்கும் மகத்தான சம்பவங்களைக் குறித்து உள்ளூற நாங்கள் எவ்வளவு ஆனந்தம் அடைந்திருக்கிறோம் என்பதை நான் உங்களுக்குச் சொல்லியாக வேண்டும் என்று எண்ணுகிறேன். இந்தியா விடுதலை அடைந்திருப்பதையும், அது குறித்து நாங்கள் எவ்வாறு மகிழ்வெய்தினேம் என்பதையுமே கூறுகிறேன்.

"ஆம்; அதையெல்லாம்பற்றி நீங்கள் மகிழ்ச்சி அடையவில்லை என்பதை நாங்கள் அறிவோம். 'ஹரிஜன்' பத்திரிகையில் நீங்கள் எழுதியிருந்த

கட்டுரையைப் படித்தோம். ஆனால், ஓ பாபூ, மனம் தளர்ந்துவிட வேண்டாம். எண்ணிப் பாருங்கள். மேற்கத்திய நாடுகளில் இருக்கும் எங்களுக்கு அது எவ்வளவு முக்கியமானது என்பதை எண்ணிப் பாருங்கள். எதிராளியின் ரத்தத்தைச் சிந்தாமலேயே இந்தியா தன்னுடைய புரட்சியைச் செய்துவிட்டது; விடுதலை அடைந்துவிட்டது. முன்னிருந்த நிலைக்கு இது மகத்தானதோர் முன்னேற்றம். இதற்கு முன்பு என்றும் நடந்தறியாத வகையில் சரித்திரத்தில் ஒரு கட்டத்தை அடைந்திருக்கிறது.

"ஓ, பாபூ! பயங்கரமான ரத்தக் களறியிலிருந்து வெளியேறிக்கொண்டிருக்கும் மேற்கத்திய நாட்டினரான எங்களுக்குப் புதிதாகப் பிறந்திருக்கும் இந்தியா எவ்வளவு பிரகாசமாக, தெய்விகமாகத் தோன்றுகிறது என்பதை நீங்கள் காணவில்லையா!

"எங்களுடைய ஆனந்தம், நாங்கள் கொண்டுள்ள அற்புதமான நம்பிக்கை இவற்றால் மன ஆறுதல் அடையுங்கள்; உற்சாகம் கொள்ளுங்கள். உங்களை எங்கள் ஆத்மிகத் தலைவராக மட்டுமன்றி, தாம் நம்பும் வழியில் தம் அன்றாட வாழ்க்கையில் நிதானத்தையோ அல்லது அறிவையோ இழந்துவிடாமல் நடந்து காட்டி, மனிதனுக்கு உதாரணமாக விளங்குபவராகவும் மதிக்கிறோம். பலனைக் கருதாமல், மற்றதையெல்லாம் கடவுள் கவனித்துக் கொள்ளட்டும் என்று விட்டுவிட்டு, முழுமனத்துடன் கடமையைச் செய்யவேண்டும் என்ற உங்கள் மதத்தின் மிகச்சிறந்த தருமத்தை எங்களுக்கு உபதேசித்தவர் நீங்களே அல்லவா? சரி; உங்களுடைய முழு நம்பிக்கையையும், தீரத்தையும் கொண்டு செய்யக்கூடியதை நீங்கள் செய்திருக்கிறீர்கள். அழிவிலிருந்து எங்களுடைய நாகரிகத்தைக் காப்பதற்கு எங்களுக்கு இருக்கும் ஒரே உபாயமான, அற்புத நம்பிக்கையான அகிம்சையினால் எதை அடைய முடியும் என்பதை இப்பொழுது கடவுள் எங்களுக்குக் காட்டுகிறார். உபயோகிக்கப்பட்ட அகிம்சை முற்றிலும் பரிசுத்தமானதாக இல்லை என்பது ஒரு வேளை உண்மையாக இருக்கலாம். ஆனால், உங்களிடமிருந்து உற்சாகத்தைப் பெற்ற உங்கள் நல்ல மக்கள் நிச்சயமாக உள்ளன்போடு முயற்சி செய்திருக்கிறார்கள் என்பதுமட்டும் தெளிவு; அதில் நான் திருப்தியடைகிறேன்.

"இந்த உபதேசத்திற்குத் தகுதி வாய்ந்தவர்களாக நாங்கள் இருப்போம். சாத்தியமானவரையில் முழு அளவுக்கு இதனைப் பயன்படுத்திக்கொள்ளுவோம் என்ற நம்பிக்கை எங்களுக்கு இருக்கட்டும்.

"இதன் உண்மையான பொருளை இங்கே சிலர் மாத்திரமே அறிகிறார்கள் என்பது உண்மை. இதை ஏற்றுக்கொள்ளுவதற்கு மண் தயாராயிருக்கிறது.

"உள்ளூற நாங்கள் இதைச் செய்துவருவோம். கடவுள் ஒருவர் நமக்கெல்லாம் மேலே இருக்கிறார்.

"இந்தக் கடிதத்தின் ஆரம்பத்தில் நான் குறிப்பிட்ட 1947 ஜூலை 27-ஆம் தேதி 'ஹரிஜன்'-இல் நீங்கள் எழுதிய கட்டுரை, எட்மண்டினால் மொழிபெயர்க்கப்பட்டு 'எஸ்ஸார்'-இன் அடுத்த இதழில் வெளிவரப் போகிறது. (உண்மையில் அந்த இதழ் முழுதும் இந்தியாவைப்பற்றியதே.)

"சாத்துவிக எதிர்ப்புக்கும் அகிம்சைக்கும் இருக்கும் அடிப்படையான மாறுபாட்டை நீங்கள் வற்புறுத்துவதைக் குறித்து 'எஸ்ஸார்' வாசகர்கள் மீண்டும் தம் கவனத்தை அதில் செலுத்த வேண்டும் என்பதற்காக நான் மகிழ்ச்சியடைகிறேன்.

"இதைப்பற்றி அதிகமாக நான் சிந்திக்கச் சிந்திக்க இந்த மாறுபாட்டை மக்களால் அறிந்துகொள்ள முடியவில்லை, அறிந்து கொள்ளவும் முடியாது என நான் நன்கு புரிந்துகொண்டேன். சாத்துவிக எதிர்ப்பை உபயோகித்துப் பார்க்கின்றனர். தங்கள் முயற்சி நேரிதாக இருந்தாலும், வெற்றி பெருத காரணத்தினல் சோர்வடைந்துவிடுகின்றனர்.

"பொதுவாக உண்மை என்னவெனில், மக்கள் தங்களையும் அறியாமல் தங்களுக்கே பொய் சொல்லிக்கொள்கின்றனர்.

"இதனலேயே இப்பொழுது மனத்தை ஆராயும் தத்துவத்தைக் குறித்தும் கொஞ்சம் தெரிந்துகொள்ள முயன்று வருகிறேன். நம் உள்ளத்தில் சாத்தான் செய்துவரும் விஷமங்களைக் குறித்து எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்று முன்பெல்லாம் மக்களுக்கு விளக்கி வந்தார்கள்.

"இன்றோ உண்மையை அடைவதற்கு மக்களுக்கு அதிக விஞ்ஞான முறைகள் தேவையாகின்றன. நரம்புத் தளர்ச்சி நோய்களுக்கு மருத்துவ முறையைக் கையாள்வதோடு சாதாரண மக்கள், தங்கள் உணர்ச்சியின் இயல்புகளினல் பூரணத் தெளிவை அடைவதற்கும்—அவர்கள் உண்மையில் சிரத்தையுள்ளவர்களாக இருந்தால்—உண்மையாகவே அகிம்சையை அவர்கள் உபயோகிக்க வேண்டும் என்ற முழு உணர்வையும் பெறுவதற்கும் மனத்தை ஆராயும் தத்துவமுறை உதவி செய்யலாம்."

இக்கடிதத்திற்குக் காந்திஜி எழுதிய பதிலாவது:

சாத்துவிக எதிர்ப்பிற்கும் அகிம்சையோடு கூடிய எதிர்ப்புக்குமுள்ள அடிப்படையான மாறுபாட்டை நீங்கள் அறிந்துகொண்டிருக்கிறீர்கள் எனக் காண்கிறேன். இரண்டு முறைகளும் எதிர்ப்பே. ஆனல், உங்களுடைய எதிர்ப்பு, சாத்துவிகமாக இருக்கும்போது எதிர்ப்பவரின் பலவீனத்தின் காரணமாக நீங்கள் அதற்கு அதிக விலை கொடுக்க வேண்டியிருக்கும். நாஜரத்து ஏசுவின் ஞானம் நிறைந்த தீரமான எதிர்ப்பைப் பலவீனரின் எதிர்ப்பான சாத்துவிக எதிர்ப்பு என்று ஐரோப்பா தவருக எண்ணிக்கொண்டுவிட்டது. புதிய ஏற்பாட்டில் முதல் தடவையாக நான் படித்தபோது நான்கு சுவிசேஷங்களில் காட்டப்பட்டிருப்பது போன்று ஏசுவிடம் சாத்துவிகமோ, பலவீனமோ இல்லை என்பதைக் கண்டுகொண்டேன். டால்ஸ்டாய் எழுதிய 'சுவிசேஷங்களின் ஒருமைப்பாடு' என்ற நூலையும் அதைச் சார்ந்த அவருடைய மற்ற நூல்களையும் படித்த பிறகு அதன் பொருள் எனக்கு மிகத் தெளிவாயிற்று. ஏசுவைச் சாத்துவிக எதிர்ப்பாளராக மேற்கத்திய நாடுகள் கருதியதால் பெருங் கஷ்டங்களை அவை அடையவில்லையா? பழைய ஏற்பாட்டிலும் சரித்திர பூர்வமானவை அல்லது பாதி சரித்திர பூர்வமானவையான குறிப்புக்களில் விவரிக்கப்பட்டுள்ள யுத்தங்களை எல்லாம் தோற்கடிக்கும் பெரும் போர்களுக்கு கிறிஸ்தவ உலகமே பொறுப்பு. இன்றைய அல்லது பழங்காலத்துச் சரித்திரங்களைப் பற்றி எனக்குள்ள அறிவு மேலெழுந்தவாரியானதேயாகும்.

ஆகையால், தவறு இருந்தால் திருத்திக்கொள்ளத் தயாரா யிருக்கிறேன் என்ற நிலையிலேயே இதைக் கூறுகிறேன்.

எனது சொந்த அனுபவத்தைக் கவனிப்போம். சாத்துவிக எதிர்ப்பினாலேயே எங்களுடைய ராஜீய சுதந்திரத்தை நாங்கள் அடைந்தோம் என்பதில் சந்தேகமே இல்லை. இதைக் குறித்து மேனாட்டைச் சேர்ந்த சமாதானத்தை விரும்புகிறவர்களான உங்களையும், உங்கள் நல்ல கணவரையும் போன்றவர்கள் உற்சாகம் அடைகிறீர்கள். ஆனால், சாத்துவிக எதிர்ப்பை அகிம் சையோடு கூடிய எதிர்ப்பாக நாங்கள்-முக்கியமான நான்-அறியா மலேயே தவறாக எண்ணிக்கொண்டுவிட்டதற்கு நாங்கள் தினந் தோறும் பெருங்கஷ்டங்களை அனுபவித்துக்கொண்டு வருகிறோம். இத்தவறு செய்யாதிருந்திருப்போமாயின், பலவீனமான சகோ தரன் தன்னுடைய பலவீனமான சகோதரனைச் சிறிதும் சிந்தித் துப் பாராமல், மனிதத்தன்மையே இல்லாமல் கொன்றுவிடும் மானக்கேடான காட்சியைக் காணும் துன்பத்திலிருந்து தப்பி யிருப்போம்.*

இந்த ரத்தக்களறி சீக்கிரத்தில் முடிந்துவிடும். தவிர்க்க முடியாத இந்தப் படுகொலைகளிலிருந்து புதிதும் பலமுள்ளது மான ஓர் இந்தியா எழும். அந்த இந்தியா மேற்கத்திய நாடு களில் தென்படும் தீமைகளையெல்லாம் அனுசரிப்பதாக இல்லா மல், மேற்கத்திய நாடுகள் அளிக்கவல்ல சிறப்பான விஷயங்களை அறிந்து, ஆசியாவுக்கும் ஆப்பிரிக்காவுக்கும் மாத்திரமே யன்றித் துயரில் உழலும் உலகம் முழுமைக்குமே நம்பிக்கை தரும் புதிய இந்தியாவாக இருக்க வேண்டும் என்று நான் நம்பிக்கொண்டிருப்பதுடன் இதற்காகப் பிரார்த்தனையும் செய்து வருகிறேன். இங்கும் உலகத்தின் மற்றப் பகுதிகளிலும் இருக்கும் எல்லா நண்பர்களும் என்னுடன் சேர்ந்து இந்த நம்பிக்கையுடன் பிரார்த்திக்கவேண்டும் என்று விரும்புகிறேன்.

நம்பிக்கைக்கு இடம் இல்லாததை நம்புவதேயாகும் இது என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஏனெனில், இன்று நாங்கள் ராணுவமும் வெறும் உடல் பலமும் குறிப்பனவற்றில் நம்பிக்கை கொண்டவர்களாக இருக்கிறோம். இரு தலைமுறை

---

* இந்தியா சுதந்திரமடைந்ததைத் தொடர்ந்து நாட்டில் சில இடங்களில் ஏற்பட்ட வகுப்பு வெறியையும் படுகொலைகளையுமே மகாத்மா வேதனையுடன் இவ்விதம் குறிப்பிடு கிறார். வகுப்பு வெறியைப் போக்கி மக்களிடையே அன்பு நெறியைப் புகட்ட மகாத்மா அல்லும் பகலும் பாடுபட்டு வந்த சமயத்தில் எழுதியது இக்கட்டுரை. மேலும், வகுப்பு வெறியனின் துப்பாக்கி வேட்டுக்கு மகாத்மா பலியானதற்குச் சரியாக இரு மாதங்களுக்கு முன்னால் இக்கட்டுரையை அவர் எழுதியிருக்கிறார் என்பதும் முக்கியமாக கவனிக்கத் தக்கதாகும்.

யாகவே எங்கள் ராஜதந்திரிகள், பிரிட்டிஷ் ஆட்சியில் யுத்த தள்வாடங்களுக்காக ஏராளமாகச் செலவிடுவதை எதிர்த்து வந்திருக்கிறார்கள். ஆனால், ராஜீய அடிமைத்தனத்திலிருந்து நாங்கள் சுதந்திரத்தை அடைந்துவிட்ட பிறகு எங்களுடைய ராணுவச் செலவு அதிகரித்திருக்கிறது; இன்னும் அதிகரித்தே ஆகும்போல் மருட்டுகிறது. இதைக் குறித்து நாங்கள் பெருமையும் படுகிறோம்! இதுபற்றி எங்கள் சட்டசபைகளில் ஒருவர்கூட எதிர்த்து எதுவும் கூறவில்லை. பைத்தியக்காரத்தனமும் மேற்கத்திய நாடுகளின் பகட்டை அப்படியே பின்பற்றுவதும் இருந்து வந்தபோதிலும், இந்த அழிவுக்கூத்திலிருந்து இந்தியா தப்பிப் பிழைக்கும், சிறிதும் குறையற்றதெனச் சொல்லமுடியாவிட்டாலும் 1915-ஆம் ஆண்டிலிருந்து முப்பத்திரண்டு ஆண்டுகளாக இடைவிடாமல் அகிம்சையில் பயிற்சி பெற்று வந்ததால் அதற்குரித்தான உயர்ந்த ஒழுக்க நிலையை அது அடையும் என்ற நம்பிக்கை என் உள்ளத்திலும் மற்றும் பலருடைய உள்ளங்களிலும் இன்னும் தயங்கிக்கொண்டிருக்கிறது.

புது டில்லி, 29-11-'47 — ஹரிஜன் - 7—12—1947.

# 13

# அகிம்சையும் அடக்கமும்

அடக்கம், தனியாக அனுசரிக்கப்படவேண்டிய ஓர் ஒழுக்கமாக இருக்கமுடியாது. ஏனெனில், வேண்டுமென்றே அனுசரிக்கப்படுவதற்கு அது தன்னளவில் விடுவதில்லை. என்றாலும், அகிம்சைக்கு அது இன்றியமையாத பரீட்சை. அகிம்சையில் ஒருவர் ஊற ஊற அவருடைய சுபாவத்தோடு கலந்து அதுவும் ஒரு பகுதிகிவிடுகிறது.

சத்தியாக்கிரக ஆசிரமத்திற்கு வேண்டிய விதிகள், கட்டுத்திட்டங்கள் இவற்றின் பூர்வாங்கமான அமைப்பு, காலஞ்சென்ற ஸர் குருதாஸ் பானர்ஜி உள்பட பல நண்பர்களுக்கு அனுப்பப்பட்டது. ஆசிரமத்தில் அனுசரிக்கவேண்டிய நியமங்களில் அடக்கத்திற்கும் ஓர் இடம் இருக்க வேண்டும் என்று அவர் யோசனை கூறினார். நான் இப்பொழுது குறிப்பிட்டிருக்கும் காரணத்தை முன்னிட்டு அந்த யோசனையை இப்பொழுது ஏற்றுக்கொள்ளவில்லை.

ஆனால், அனுசரிக்கவேண்டிய ஒழுக்கங்களில் அடக்கமும் ஒன்றாக இல்லாவிட்டாலும், மற்றவை போலவே அது நிச்சயமாக முக்கியமானது. பயிலுவதனால் மாத்திரம் அது யாருக்கும் வந்து

விடுவதில்லை. அன்பையும் சத்தியத்தையுங்கூடப் பயின்றுகொள்ளலாம். ஆனால், அடக்கத்தைப் பயிலுவது என்பது கபடத்தை வளர்த்துக்கொள்வதற்குச் சமமாகும். நற்பழக்கம் அல்லது மரியாதை இவற்றை அடக்கம் குறிப்பதாக இங்கே குழப்பிவிடக் கூடாது. ஒருவருக்கு இன்னொருவர்மீது நெஞ்சில் துவேஷம் நிறைந்து இருந்தாலும் அவர் காலில் விழுந்து வணங்கக்கூடும். இது அடக்கம் அன்று; தந்திரமே. ஒருவர், ராமநாமத்தை உச்சரித்துக்கொண்டும், நாளெல்லாம் ஜபமணியை உருட்டியும் ஒரு முனிவரைப் போன்றே சமூகத்தில் பழகலாம். ஆனால், அவர் சுயநலத்தையே தம் உள்ளத்தில் கருதி இருப்பாராயின் அவர் கரவு மிக்கவரேயன்றி அடக்கம் உள்ளவர் ஆகமாட்டார்.

அடக்கமுள்ளவர் தமக்கிருக்கும் அடக்கத்தையே அறியமாட்டார். சத்தியம் போன்றவைகளுக்கு அளவு என்பதாவது உண்டு; ஆனால், அடக்கத்திற்கு அதுவும் இல்லை. தம்மிடத்திலேயே பிறந்ததான அடக்கத்தை மறைத்துவைக்கவே முடியாது. என்றாலும், அது தன்னிடம் இருக்கிறதென்பது அதைப் பெற்றவருக்குத் தெரியாது. வசிஷ்டர், விசுவாமித்திரரின் கதை இதற்கு ஒரு நல்ல எடுத்துக்காட்டாகிறது. அடக்கம் உள்ளவரை, 'நாம் எம்மாத்திரம், ஒன்றுமேயில்லை' என்று உணரும்படி செய்வதே அடக்கத்தின் லட்சணம். நாமுந்தான் முக்கியம் என்று சற்று நினைத்தாலும் அகம்பாவமாகிவிடும். சில நியமங்களை அனுசரிப்பவர்கள், அவைகளை அனுசரிப்பதற்காகப் பெருமைப்படும்போது அவற்றின் முழுப் பலன்களையும் இழந்துவிடாவிடினும் பெரும் பகுதியையாவது இழந்துவிடுகின்றனர். தன்னுடைய நல்லொழுக்கத்தைக் குறித்துப் பெருமைப்பட்டுக்கொள்பவன் பெரும்பாலும் சமூகத்தின் சாபக்கேடாகிவிடுகிறான். சமூகம் அதைப் பாராட்டாது; அவனும் அதிலிருந்து எந்தவிதப் பயனையும் அடையமாட்டான். ஜீவன்கள் இப்பெரிய பிரபஞ்சத்தில் அணுவைப்போல மிகச் சிறியன; சற்றுச் சிந்தித்துப் பார்த்தாலேகூட இதை நாம் உணர்ந்துகொள்ள முடியும். உடல் எடுத்த நம் வாழ்வு சதமல்ல, சிறிதுகாலக் கூத்தே. ஒரு நூறு ஆண்டுகள் என்பது அனந்தமான காலத்தில் எம்மாத்திரம்! ஆனால், அகந்தையின் தளையை அறுத்தெறிந்து மானிடர் நலம் என்ற சமுத்திரத்தில் கலந்துவிடுவோமானால் அதன் கௌரவத்தில் நாமும் பங்கு கொள்ளுகிறோம். நாமும் முக்கியம் என்று எண்ணுவது, நமக்கும் கடவுளுக்கும் இடையே ஒரு தடையை எழுப்புவதாகும். நாமும் முக்கியம் என்ற எண்ணம் இல்லாதிருப்பது

கடவுளோடு ஒன்றுவதாகும். சமுத்திரத்தின் ஒரு துளி, தன் பெருமையை அறியாவிட்டாலும், தாயான சமுத்திரத்தின் பெருமையில் அதுவும் பங்கு கொள்ளுகிறது. சமுத்திரத்தினின்று தனித்து வாழ முற்பட்டதுமே அச்சிறு துளி வற்றி விடுகிறது. இவ்வுலகில் வாழ்க்கை என்பது நீர்மேல் குமிழி என்ருல், மிகைப்படுத்திக் கூறுவதாகாது.

சேவையில் ஈடுபட்ட வாழ்க்கை அடக்கத்தோடு கூடியதாக இருக்கவேண்டும். மற்றவர்களுக்காகத் தம்முடைய உயிரையே தியாகம் செய்யும் ஒருவருக்குத் தமக்கென ஓர் இடத்தை இவ்வுலகில் ஒதுக்கிக்கொள்வதற்கு நேரமே இல்லை. ஹிந்து தருமத்தில் இருப்பது போல வாளா இருப்பதென்பதை அடக்கம் என்று தவருக எண்ணிக்கொள்ளக்கூடாது. முற்றிலும் மனித நலத்தின் பொருட்டு—சேவைக்கென்றே—இடைவிடாமல் முழு முயற்சியுடன் பாடுபடுவதே அடக்கம் என்பதன் பொருள். ஒரு சிறிதும் ஓய்வின்றிக் கடவுள் செயல் புரிந்துகொண்டே இருக்கிருர். அவருக்குச் சேவை செய்தால், அவருடன் ஒன்ருகிவிட்டால், அவர் செயல்போல் நம்முடையதும் சலிப்பற்றதாகும். சமுத்திரத்திலிருந்து தனியாகிவிட்ட சிறு துளிக்குத் தற்சமயத்துக்கு ஓய்வு இருப்பதாயிருக்கலாம். ஆனல், சமுத்திரத்தில் இருக்கும் துளிக்கோ ஓய்வேது, ஒழிவேது! நமது விஷயமும் அதேதான். கடவுள் உருவிலுள்ள கடலுடன் நாம் ஒன்ருகிவிடுவோமாயின் பிறகு நமக்கு ஓய்வு என்பது இல்லை; நமக்கு அது அவசியமும் இல்லை. நமது தூக்கமும் செயலே. ஏனெனில், உள்ளத்தில் கடவுளின் சிந்தனையோடு நாம் தூங்குகிருேம். இந்த ஓய்வின்மையே உண்மையான ஓய்வுமாகிறது. இந்த அடங்காத கிளர்ச்சியே பரிபூரணமான அமைதிக்குத் திறவுகோல். முற்றிலும் அடைக்கலம் புகுவதான இந்த உயர்வான நிலையைக் குறித்து விவரிப்பது எளிதன்று. ஆனல், இது மனித அனுபவத்திற்கு அப்பாற்பட்டதல்ல. தம்மை அர்ப்பணம் செய்துகொண்ட பல ஆத்மாக்கள் இதை அடைந்திருக்கின்றன ; நாமும் அதை அடைந்துவிடக்கூடும். சத்தியாக்கிரக ஆசிரமவாசிகளான நாம் நம்முன் வகுத்துக் கொண்டிருக்கும் லட்சியம் இதுவே. நம் கோட்பாடுகளும், நடவடிக்கைகளும் அதை அடைவதற்கென்று வகுக்கப்பட்டிருப்பவை. நம்மிடம் வாய்மை மாத்திரம் இருக்குமாயின் நம்மையும் அறியாமலேயே நாம் ஒரு நாளைக்கு அதை அடைந்தே தீருவோம்.

—' எராவ்டா மந்திரம் ' என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டது.

# இதுவா ஜீவகாருண்யம் ?

## 1

அகமதாபாது ஜீவகாருண்ய சங்கம் எனக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கிறது. அதிலிருந்து சில பொருத்தமான பகுதிகளைக் கீழே கொடுக்கிறேன் :

"சேட்...விருப்பத்தின் பேரில் அவருடைய மில் விடுதிக்குள் 60 நாய்கள் கொல்லப்பட்டன என்பதைக் குறித்து அகமதாபாது நகரம் முழுதும் ஒரே பேச்சாக இருக்கிறது. இச்சம்பவத்தினுல் ஜீவகாருண்யமுள்ள உள்ளம் பல, மிக்க கலவரம் அடைந்திருக்கின்றன. எந்த ஜீவனின் உயிரையும் கொல்லக் கூடாது என்று ஹிந்து தருமம் தடுக்கும்போது, அப்படிக் கொல்வது பாபம் என்று அது சொல்லும்போது, பைத்தியம் பிடித்த நாய்கள் மனிதரைக் கடித்துவிடும், மற்ற நாய்களை அவை கடிப்பதால் அந்த நாய்களுக்கும் பைத்தியம் பிடித்துவிடும் என்பதற்காக அந்த நாய்களைக் கொல்லுவது சரி என்று நீங்கள் நினைக்கிறீர்களா? அந்த நாய்களை உண்மையில் கொல்லுகிறவன், எவனுடைய தூண்டுதலின் பேரில் இவற்றைக் கொல்லுகிருனே அவன் ஆகிய இருவருமே பாபம் செய்கிறவர்கள் அல்லவா?

"எங்கள் சங்கத்தைச் சேர்ந்த மூன்று கனவான்கள் சேட்டிடம் 28-ஆம் தேதி தூது சென்றனர். மனிதரின் உயிரைக் காப்பதற்காகத் தாம் இவ்விதம் செய்ய வேண்டியதாயிற்று என்று அவர்களுடன் பேசிக்கொண்டிருந்தபோது சேட் ஒப்புக்கொண்டார். அவர் மேலும் சொன்னர்: 'அந்த முடிவுக்கு வந்த அன்றிரவு நானும் தூங்கவே இல்லை. மறுநாள் காலை மகாத்மாஜியைச் சந்தித்து இவ்விஷயத்தில் அவருடைய கருத்தைக் கேட்டேன். அவர், வேறு என்னதான் செய்ய முடியும் என்ருர்.' இது உண்மையா? அப்படியானுல் இதன் பொருள் என்ன?

"இவ்விஷயத்தில் உங்கள் கருத்தைத் தெரிவித்து, இதன்மீது எழுந்துள்ள விவாதம் முடிவு பெறும்படி செய்து, சேட் போன்ற முக்கியஸ்தர்கள் செய்த காரியத்தினுல் ஜீவகாருண்யத்திற்கு மூண்டிருக்கும் அபாயத்தைத் தடுப்பீர்கள் என்று நம்புகிருேம். தெருவில் அலையும் நாய்களுக்கு விதையடித்துவிடுவது என்ற தீர்மானத்தைச் சமீபத்தில் அகமதாபாது முனிசிபாலிட்டியில் கொண்டுவரப் போகின்றனர் என்றும் கேள்விப்பட்டோம். இது நியாயமா? ஒரு மிருகத்தை விதை அடிப்பதை மதம் அனுமதிக்கிறதா? இதைப்பற்றியும் உங்கள் கருத்தை அறிவிப்பீர்களாயின் நன்றியுள்ளவர்களாவோம்."

இதில் குறிப்பிட்டுள்ள மில் முதலாளியின் பெயரை அகமதாபாது அறியும். 'நவஜீவன்' அகமதாபாதுக்கு வெளியிலும் படிக்கப்படுவதால், ஒரு கொள்கையைப்பற்றி விவாதிக்கும்போது ஆளைக் குறிப்பிடுவதில்லை என்ற என் வழக்கத்தை அனுசரித்து, அவருடைய பெயரை நான் கூருமல் விடுகிறேன். ஜீவகாருண்ய சங்கத்தினர் எழுப்பியிருக்கும் விஷயம் மிகவும் சிக்கலான பிரச்னை. இச்சம்பவத்திலிருந்து-அதற்கு முன்னுலுங்கூட-இதைக் குறித்து விவாதிக்கவேண்டும் என்று எண்ணிக்கொண்டிருந்தேன். ஆனுல், பிறகு

ஏதோ எண்ணத்தில் இதை விட்டுவிட்டேன். சங்கத்தினர் எழுதியிருக்கும் கடிதம் இவ்விஷயத்தைக் குறித்துப் பகிரங்கமான விவாதத்தில் இறங்கும்படி என்னைக் கட்டாயப்படுத்தி விட்டதோடு, அவ்வாறு செய்வது எனது கடமையென்றும் வற்புறுத்துகிறது.

மில் சொந்தக்காரருடன் எனக்குள்ள தொடர்பு இனிமையானது; நட்புடன் கூடியதென்றும் சொல்ல வேண்டும். அவர் என்னிடம் வந்து, நாய்களைக் கொன்றுவிட உத்தரவிட்டதால் தமக்கு ஏற்பட்ட மனச்சஞ்சலத்தைப்பற்றி என்னிடம் கூறி, அதைக் குறித்து என்னுடைய கருத்தையும் கேட்டார். அவர் மேலும், "இதில் எனக்கு வழிகாட்ட அரசாங்கம், முனிசிபாலிட்டி, [1]மகாஜன் ஆகிய எல்லோரும் தவறிவிட்டபோது நான் இவ்விதம் செய்ய வேண்டியதாயிற்று" என்றார். நான் கூறியதாகச் சங்கக் கடிதம் கூறும் பதிலையே அவருக்கு நான் சொன்னேன்.

அதன் பிறகும் இதைப்பற்றிச் சிந்தித்துப் பார்த்தேன். என்னுடைய பதில் முற்றிலும் சரியானது என்றே கருதுகிறேன்.

நாம் பரிபக்குவமடையாத, பிசகக்கூடிய மனிதர்களேயாகையால், பைத்தியம் பிடித்த நாய்களைக் கொன்றுவிடுவதைத் தவிர நமக்கு வேறு வழியில்லை. ஒருவன் மக்களைக் கொல்லுவதைக் காணும்போது அவனையே கொல்லுவதற்குத் தவிர்க்க முடியாத கடமை சில சமயங்களில் நமக்கு நேரலாம்.

தெருவில் அலையும் நாய்களுக்குத் தொந்தரவு இழைக்காமல் வைத்துக்கொள்வதென்ற நிலைக்கு வருவோமானால், அவைகளை விதையடித்துவிடுவது அல்லது கொன்றுவிடுவது என்ற கடமை நமக்குச் சீக்கிரத்தில் ஏற்படும். இதற்கு இருக்கும் மூன்றாவது பரிகாரம்; நாய்களுக்கு என்று தனியான [2]பிஞ்சராபோல் விடுதிகளை அமைப்பது. நகரில் விடுவெட்டியாகத் திரிந்துகொண்டிருக்கும் ஆடுமாடுகளை நாம் சமாளிக்க முடியாமல் இருக்கும் போது நாய்களுக்கென விடுதிகள் அமைப்பது விபரீத யோசனை என்றே எனக்குத் தோன்றுகிறது.

---

1. மகாஜன்: கிராமங்களில் சமூகப் பெரியவர்கள், முக்கியஸ்தர்களைக் குறிக்கும் சொல். இத்தகையோர் அடிக்கடி கூடிச் சமூகத்தின் பிரச்னைகளை ஆராய்வார்கள். குஜராத், வங்காளம் போன்ற இடங்களில் முக்கியமாக இவர்கள் இருப்பதைக் காணலாம்.

2. பிஞ்சராபோல்: கிழட்டுக் கால்நடைகளின் பராமரிப்புக்கென ஜீவகாருண்ய அடிப்படையில் அமைந்த ஸ்தாபனம். இந்தியாவெங்கும் இத்தகைய ஸ்தாபனங்கள் பொதுஜனம், தனவந்தர்கள் இவர்களது நன்கொடையின் பேரில் நடத்தப்படுகின்றன.

உயிரோடிருக்கும் ஒன்றைக் கொல்லுவது பாபம் என்றே ஜீவகாருண்யம் கருதுகிறது என்பதில் எந்தவிதக் கருத்து வேறு பாடும் இருப்பதற்கில்லை. இக்கொள்கையை எல்லா மதங் களுமே ஒப்புக்கொள்ளுகின்றன என நினைக்கிறேன். ஒரு கொள் கையை வகுப்பதில் பொதுவாக எந்தவிதச் சங்கடமும் இல்லை. அதை நடைமுறையில் செய்ய முற்படும்போதே கஷ்டம் வருகிறது. நிறைவானதாகிய ஒன்றைக் காட்டுவதே கொள்கை. குறைபாடு கள் உள்ளவர்களேயான நாம் நிறைவானதைச் செய்ய இயலாது. அனுசரிப்பதில் சமரசமாக ஓர் எல்லையையும் அப்போதைக் கப்போது வகுத்துக்கொள்ளுகிறோம். ஆகவே, பலிக்காகக் கொல்லுவது இம்சை அல்ல என்று ஹிந்து தருமம் விதிக் கிறது. இதில் உண்மை ஓரளவுக்குத்தான் உண்டு. இம்சை எப்பொழுதும் இம்சையே; எல்லா இம்சையும் பாபகர மானவையே. ஆனால், தவிர்க்க முடியாதது எதுவோ அதைப் பாபம் என்று கருதுவதில்லை. ஆகவே, அன்றாட வாழ்க்கைத் தத்துவம் பலிக்காகக் கொல்லுவதிலுள்ள இம்சை தவிர்க்க வொண்ணாததென்று கூறுவதோடு, அதைப் புண்ணியச் செய்கை யாகவும் கருதுகிறது.

ஆனால், தவிர்க்க முடியாததான இம்சை, இன்னதுதான் என்பதை விளக்கிக் கூறிவிட முடியாது. ஏனெனில், அது இடம் பொருள் ஏவலுக்குத் தக்கவாறு மாறுகிறது. ஒரு சமயத்தில் பொறுத்துக்கொள்ளக்கூடியதாக இருக்கும் ஒன்று, மற்றொரு சமயத்தில் பொறுத்துக்கொள்ள முடியாததாகக் கருதப்படுகிறது. குளிர் கடுமையாக இருக்கும் காலத்தில் உடம்பு சூடாக இருக்க வேண்டும் என்பதற்காகக் குளிர் காய விறகையோ அல்லது நிலக்கரியையோ கொளுத்துவதிலுள்ள இம்சை தவிர்க்க முடியாததாகவும் கடமையாகவும் இருக் கலாம். ஆனால், கோடையில் தீயை அனாவசியமாகக் கொளுத் துவது கட்டாயம் இம்சையேயாகும்.

நாசகாரி மருந்துகளைக் கொண்டு விஷக்கிருமிகளைக் கொன் றாக வேண்டியதைக் கடமையாகக் கொள்ளுகிறோம். அதுவும் இம்சையேயாயினும் அது ஒரு கடமை. அவ்வளவு தூரம் போவானேன்? மூடிய, இருளான அறையில் இருக்கும் காற்றில் விஷக்கிருமிகள் நிறைய இருக்கின்றன. அக்கதவைத் திறந்து விட்டுக் காற்றும் வெளிச்சமும் உள்ளே போகும்படி செய்வதும் உண்மையில் கிருமிகளை அழிப்பதே. ஆனால், கிருமி நாசகாரி களில் மிகச் சிறந்ததான சுத்தமான காற்றை உபயோகிக்க வேண்டியதும் ஒரு கடமையாகிறது.

இன்னும் எத்தனையோ உதாரணங்களைக் கூறிக்கொண்டே போகலாம். இதுவரை சொன்ன உதாரணங்களில் அனுசரிக்கப் படும் கொள்கையே பைத்தியம் பிடித்த ஒரு நாயைக் கொல்வ தற்கும் ஆகிவரும். நாயைக் கொல்வது குறைந்த அளவில் இம்சை செய்வதாகும். இரக்கமே உருவாகக் கொண்டு காட்டில் ஏகாந்தமாக வசித்து வரும் தவசி பைத்தியம் பிடித்த நாயைக் கொல்லாமல் இருக்கலாம். ஏனெனில், அவர் தம் கருணையின் மகிமையால் நாயின் நோயைக் குணப்படுத்தி விடக் கூடும். ஆனால், தம்முடைய கவனிப்பில் இருக்கும் உயிர் களைப் பாதுகாக்கும் பொறுப்புடைய ஒரு நகரவாசி, ஏகாங் கிக்கு இருக்கும் தன்மைகள் இராததால், பைத்தியம் பிடித்த நாயைக் கொன்றுவிட முடியுமாயினும், கடமை பற்றிய குழப்பம் அவருக்கு ஏற்படுகிறது. அவர் நாயைக் கொன்றால் பாபம் செய்தவர் ஆகிறார்; அதைக் கொல்லாது போனாலோ இன்னும் பெரிய பாபத்தைச் செய்தவராகிறார். ஆகையால், சிறிய பாபத்தைச் செய்து, பெரிய பாபத்திலிருந்து தம்மைக் காத்துக்கொள்ளப் பார்க்கிறார்.

நான் முற்றிலும் அகிம்சையில் ஊறியவன் என்று நம்பு கிறேன். அகிம்சையும் சத்தியமும் எனக்கு இருக்கும் இரு சுவாசப் பைகள்; அவையின்றி நான் வாழ இயலாது. ஆனால், அகிம்சையின் மகத்தான சக்தியையும் மனிதனின் சிறுமை யையும் ஒவ்வொரு சமயத்திலும் மேலும் மேலும் மிகத் தெளி வாக நான் காண்கிறேன். காட்டில் வாழ்கிறவருக்கு இரக்கம் எல்லையற்று இருந்தாலும் அவரும் இம்சையிலிருந்து விடுபட முடியாது. ஒவ்வொரு மூச்சிலும் அவரும் ஓரளவுக்கு இம்சை செய்தே வருகிறார். உடலே ஒரு கசாப்புக்கடைதான். எனவே, சடலத்தை முற்றிலும் நீத்தால்தான், மோட்ச இன்பம் கை கூடும். அது ஒன்றைத் தவிர மற்ற இன்பங்கள் நிலையற்றவை; நிறைவில்லாதவை.

விஷயம் இவ்வாறு இருப்பதால் அன்றாட வாழ்க்கையில் கசப்பான இம்சைகள் பலவற்றை நாம் பருகவே வேண்டி யிருக்கிறது. ஆகவே, இத்தெய்விக நாட்டில், தெருவில் அலையும் நாய்களைப்பற்றிய பிரச்னை இவ்வளவு பிரமாத மான அளவுக்கு வளர்ந்து போவது மிகவும் வருந்தத்தக்க விஷயம். இப்பெருங் கொள்கைபற்றி நமக்கு இருந்துவரும் ஆழ்ந்த அறியாமையின் காரணமாக அகிம்சையின் பெயரால் இம்சையைப் பரப்பி வருகிறோம் என்பது எனது திடமான கருத்து. பைத்தியம் பிடித்த நாய்களையும், அந்நோய் பற்றக்

கூடிய நாய்களையும் கொன்றுவிடுவது பாபமாக இருக்கலாம். ஆனால், இந்த நிலைமைக்கு நாமும் சமூகத் தலைவரான மகாஜனும் பொறுப்பாளிகள். தெருவில் நாய்களை மகாஜன் அலைய விடாமல் இருக்கலாம். தெரு நாய்களுக்கு உணவு அளிப்பது பாபம்; பாபமாக இருக்கவேண்டும். தெருவில் அலையும் ஒவ்வொரு நாயையும் சுட்டுவிட வேண்டும் என்ற சட்டம் இருந்தால் நாம் பல நாய்களைக் காப்பாற்றியிருப்போம். தெரு நாய்களுக்குச் சோறு போட்டவர்கள் தம் தவறான இரக்கத்திற்காக அபராதம் செலுத்தச் சம்மதித்தால் தெரு நாய்கள் என்ற சாபக்கேட்டிலிருந்து நாம் விடுபடுவோம்.

**ஜீவகாருண்யம் உள்ளத்தின் உயர்ந்த பண்பு.** சில மீன்களையோ அல்லது சில நாய்களையோ காப்பாற்றிவிடுவதனால் இந்தக் காருண்யம் தீர்ந்துவிடுவதில்லை. அப்படிக் காப்பதும் பாபகரமாக இருக்கக்கூடும். என் வீட்டில் எங்கும் ஒரே எறும்பு மயமாக இருக்குமாயின் அவற்றிற்கு உணவளிப்பதாக ஒருவர் வந்தால் அவர் செய்வது பாபமேயாகும். ஏனெனில், எறும்புகளுக்குக் கடவுள் தானியம் அளித்திருக்கிறார். ஆனால் அவற்றிற்கு உணவளிக்க வருகிறவர் என்னையும் என் குடும்பத்தையும் நாசமாக்கிவிடக்கூடும். நாய்களையெல்லாம் என் வயல்களுக்கு அருகில் கொண்டு வந்து வைத்துவிடுவதால் தாங்கள் பத்திரமாக இருப்பதோடு நாய்களையும் காப்பாற்றினற்போல இருக்கும் என்று மகாஜன் எண்ணிக்கொள்ளலாம். ஆனால், அதன் மூலம் என் உயிருக்கு ஆபத்தை உண்டாக்கியிருப்பதால் அதைவிட மிகப் பெரிய பாபத்தைச் செய்தவரே யாவர். பகுத்தறிவு, ஈகை, அஞ்சாமை, அடக்கம், தெளிவான நோக்கு இவை இல்லாமல் காருண்யம் சாத்தியமேயன்று. இம்சையே நிறைந்த இவ்வுலகில் அகிம்சையின் கூரிய வாள் மீது நடந்துவிடுவது எளிது அன்று. செல்வம் எதுவும் செய்து விடாது; கோபமே அகிம்சையின் விரோதி; அதை அப்படியே விழுங்கிவிடும் பூதம் அகந்தை. குறுகியதும் கடினமானதுமான இந்த அகிம்சா தருமத்தின் அனுசரிப்பில் இம்சை என்று கூறப்படுவதும் உண்மையான அகிம்சை யாகலாம் என்பதையும் அறிய வேண்டும்.

இந்த உலகத்தில் காணப்படுவனவெல்லாம் உண்மையல்ல; உள்ளன உள்ளபடி தெரிவதும் இல்லை; அல்லது உள்ளதை உள்ளபடியே பார்க்கிறோம் என்றால், பல காலம் தவம் புரிந்து தங்களைப் பக்குவப்படுத்திக்கொண்ட ஒரு சிலருக்கே அவை அப்படித் தெரியும். ஆனால், உள்ளதை இதுவரை விண்டவர்களும் யாரும் இல்லை; அது யாராலும் இயலாது.

## 2

எனக்கு ஏற்கனவே இருக்கும் தொல்லைகளின் பளுவோடு இன்னும் ஒன்றையும் சேர்த்துக்கொள்கிறேன் என்பதை இவ் விஷயத்தைக் குறித்து நான் கட்டுரை எழுதியபோதே அறிவேன். ஆனால், அது தவிர்க்க முடியாதது.

கோபம் நிறைந்த கடிதங்கள் வந்து குவிந்துகொண்டிருக் கின்றன. நாளெல்லாம் வேலை செய்துவிட்டு நான் படுக்கைக் குப் போகத் தயாராயிருந்த நேரத்தில் மூன்று நண்பர்கள் என்மீது படையெடுத்து, ஜீவகாருண்யத்தின் பெயரால் அகிம்சா தருமத்தை மீறி, அது பற்றிய விவாதத்திற்கு என்னை இழுத்தார்கள். ஜீவகாருண்யத்தின் பெயரால் அவர்கள் வந் தார்கள். அவர்களைப் பார்க்க நான் எப்படி மறுக்கமுடியும்?

ஆகவே, அவர்களைச் சந்தித்தேன். அதில் ஒருவர் கோபத்தையும் துவேஷத்தையும் அகம்பாவத்தையும் வெளிப் படுத்திக்கொண்டார் என்பதைக் கண்டேன். தம் சந்தேகங் களைப் போக்கிக்கொள்ள வந்தவராக அவர் எனக்குத் தோன்ற வில்லை. என்னைத் திருத்திவிடவே அவர் வந்தார். அப்படிச் செய்ய யாருக்கும் உரிமை உண்டு. ஆனால், இவ்வேலையில் ஈடு படுகிறவர்கள் என் நிலைமையையும் அறிய வேண்டும். இந்த நண்பர் என் நிலையை அறியச் சிரமம் எடுத்துக்கொள்ளவே யில்லை. ஆனால், இதற்கு அவரைக் குறை சொல்லிப் பயனில்லை. பலாத்காரத்தின் அடையாளமேயான இந்தப் பொறுமை யின்மை எங்குமே காணப்படுகிறது. அகிம்சைவாதியான ஒரு வரால் இந்தப் பலாத்காரம் காட்டப்பட்டதால் இவ்விஷயத்தில் அது எனக்கு மனவேதனையாயிற்று.

தாம் ஜைனர் என்று அவர் சொல்லிக்கொண்டார். ஜைன மதத்தைப் பற்றி நான் நன்ருக ஆராய்ந்திருக்கிறேன். வந்த வரின் அகிம்சை, ஜைன சமயத்தில் நான் கண்ட உண்மையின் சிதைவேயாகும். ஆனால், அகிம்சை ஜைனர்களுக்கு ஏகபோகச் சொத்தல்ல. எந்த மதத்திற்கும் இது தனிப்பட்ட உரிமையு மன்று. அனுசரிக்கும் முறை மாத்திரம் மதத்திற்கு மதம் வேருக இருக்கிறதேயன்றி ஒவ்வொரு மதமும் அகிம்சையையே அடிப்படையாகக் கொண்டிருக்கிறது.

இன்று மற்றவர்களைவிட ஜைனர்கள் அகிம்சையைச் சிறப் பாக அனுசரித்து வருகிருர்கள் என்று நான் கருதவில்லை. நானும் ஜைனன் என்று பலர் கருதும் அளவுக்கு ஜைனர் களுடன் எனக்குள்ள பழக்கம் பழமையானதாகையால் நான்

இதைச் சொல்ல முடியும். மகாவீரர் ஜீவகாருண்யத்தின்-அகிம்சையின்-அவதாரம். அவரைப் பின்பற்றுகிறவர்கள் அவருடைய அகிம்சையையும் பின்பற்றுபவர்களாக இருக்க வேண்டும் என்பது என் ஆசை.

சிறு ஜீவராசிகளைக் காப்பது, அகிம்சையின் அத்தியாவசியமான ஒரு பகுதியே. ஆனால், எல்லாம் அதற்குள்ளேயே அடங்கிவிடுவதில்லை. அகிம்சை அதிலிருந்து ஆரம்பமாகிறது. மேலும், காப்பதென்பது கொல்லாமலிருப்பது என்பது மாத்திரம் அல்ல. சித்திரவதை அல்லது மரித்தொழிய வேண்டிய ஜீவன்களை அனாவசியமாகப் பெருக்குவதில் நேரடியாகவோ, மறைமுகமாகவோ உடந்தையாக இருப்பதும் இம்சையே.

நாய்கள் விருத்தியடைவது அவசியமற்றது. சொந்தக்காரர் யார் என்பது இல்லாமல் திரியும் நாய்கள், சமூகத்திற்கு அபாயம்; இவை ஒரேயடியாகப் பெருகிவிடுவது சமூகம் நிலைத்திருப்பதற்கே இடையூறானது.

பட்டணங்களிலோ அல்லது கிராமங்களிலோ நல்ல முறையில் நாய்களை வைத்துக்கொள்ள நாம் விரும்பினால், எந்த நாய்க்கும் அலைய வேண்டிய தொல்லை இராது. கட்டுவாரற்று அலையும் ஆடுமாடுகள் இருக்கக்கூடாது என்பதைப் போல் தெருவில் சுற்றிக்கொண்டிருக்கும் நாய்களும் இருக்கக்கூடாது. இத்தகைய பிரச்னைகளுக்கு ஜீவகாருண்யச் சங்கங்கள் மதச் சார்புடைய பரிகாரம் ஒன்றைக் கண்டுபிடிக்க வேண்டும்.

தெருச் சுற்றும் நாய்களுக்குத் தனிப்பட்ட யாராவது பொறுப்பு வகிக்க முடியுமா? முடியாது என்றால் இவற்றைப் பராமரிக்க நாய் விடுதிகளை அமைக்க முடியுமா? இந்த இரண்டும் முடியாதவையெனின், அவைகளைக் கொன்றுவிடுவதைவிட வேறு எந்த மார்க்கமும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை.

இருக்கிற நிலைமை அப்படியே இருக்கட்டும் என்று சகித்துக்கொண்டிருப்பதோ, அல்லது அதற்கு உடந்தையாக இருப்பதோ அகிம்சை அன்று. அதில் சிந்தனையோ அல்லது பகுத்தறிவோ இல்லை. சமூகத்திற்கு இடைஞ்சலாக இருக்கும்போது நாய்கள் கொல்லப்படும். ஒரு குடும்பத்தாரின் வாழ்க்கையில் இது தவிர்க்க முடியாதது என நான் கருதுகிறேன். அவற்றிற்குப் பைத்தியம் பிடிக்கும் வரையில் பொறுத்திருப்பது என்பது அவைகளிடம் காருண்யம் காட்டுவதாகாது. நாய்கள் ஒரு கூட்டம் கூடுவதாக வைத்துக்கொள்வோம்; நாம் அதன் நிலையில் இருந்தால், எதை விரும்புவோமோ, அதையே அதுவும் விரும்பும்.

அதாவது உயிர் வைத்திருக்கவே நாம் விரும்பமாட்டோம். நம்மில் பலர் அப்படிப் பொறுத்திருக்கிறார்கள் என்பது நமக்குக் கௌரவம் அளிப்பதும் அன்று. பைத்தியம் பிடித்த அல்லது தெரு நாய்களை எப்படி நடத்துகிறார்களோ அதே போல மனிதர் ஒருவரையொருவர் நடத்துவார்கள் என்று அறிவாளிகளின் கூட்டம் ஒருபோதும் முடிவு செய்யாது. நாய்களுக்கு நாம் எசமானர்களாக இருப்பது போல நமக்கு எசமானர்களாக வேறு ஏதேனும் உயிரனம் இருந்தால் அதனிடமிருந்து நாம் என்ன எதிர்பார்ப்போம்? நாய்களைப்போல நடத்தப் படுவதைவிடக் கொல்லப்பட்டுவிடுவதே மேல் என நாம் விரும்புவோம். நாய்களைத் தெருப் பொறுக்கிகளாக்கி, மிஞ்சுவதை-நாம் போடுவதையோ அல்லது எச்சில் இலைகளில் இருப்பதையோ-அவை தின்று வாழும்படி விட்டிருப்பதால் ஓர் இனம் என்ற வகையில் நாம் நாய்களுக்குத் தவறு இழைக்கிறோம். அவ்விதம் செய்வதன் மூலம் நம் அக்கம் பக்கத்தில் வசிப்பவர்களுக்கும் தீங்கு இழைக்கிறோம்.

உயிரைக் கொடுத்தாயினும் துன்பப்படும் நாய் வாழும்படி பார்க்க வேண்டியது ஒருவருடைய கடமையே என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால், குழந்தை குட்டிகளைப் பெற்றுச் சமூகத்தையும் பாதுகாத்துத் தானும் வாழ விரும்பும் ஒரு குடும்பத்தினருக்கு இந்தத் தருமம் பொருந்தாது. சில நாய்களைப் பராமரிப்பது என்ற நடுவாந்தர வழியையே ஒரு குடும்பத்தினர் அனுசரிக்க முடியும்.

முன்னால் காட்டு மிருகங்களாக இருந்தவையே இன்று நம் வீட்டு மிருகங்கள் ஆகியிருக்கின்றன. எருமை இந்தியாவில் மட்டுமே வீட்டு மிருகமாக இருக்கிறது. இவற்றை மனிதன் வீட்டு மிருகங்கள் ஆக்கியிருப்பது அவனுடைய சுயநலத்தின் பொருட்டாதலால் காட்டு மிருகங்களை வீட்டு மிருகமாக்கியதே பாபச் செய்கை. பசுவையும் எருமையையும் அவன் வீட்டு மிருகங்கள் ஆக்கியிருப்பது தன் சொந்த உபயோகத்திற்காகவேயன்றி அவற்றின் மீதுள்ள கருணையால் அன்று. ஆகையால், பசுவையோ அல்லது எருமையையோ கேட்பாரற்றுத் தெருவில் விடுவதில்லை. இதே கடமை நாய்கள் விஷயத்திலும் ஏற்படுகிறது. ஆகையால், நாம் ஜீவகாருண்ய தருமத்தைக் கைக்கொள்வதாயின் நாய்களை வைத்திருப்பவர்கள் அவற்றைப் பத்திரமாகக் காவல் காக்க வேண்டும். அவைகளைத் தெரு நாய்கள் ஆக்கிவிடக் கூடாது. குறிப்பிட்ட தேதிக்குப் பிறகு தெரு நாய்கள் கொல்லப்படும் என்பதை வற்புறுத்தச் சட்டம் இருக்க வேண்டும் என்பதே என்னுடைய திடமான அபிப்பிராயம்.

மகாஜனுக்கு நாய்களிடம் ஏதாவது கருணை இருக்குமானல், தெரு நாய்களையெல்லாம் அவர் ஏற்றுக்கொண்டு அவற்றை வைத்துக்கொள்ள விரும்புகிறவர்களுக்குப் பகிர்ந்து கொடுத்துவிட வேண்டும். பசுக்களைப் பாதுகாப்பது போல நாய்களை நாம் பாதுகாத்துவிட முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை.

ஆனல், நாய்களை வளர்ப்பதற்குச் சரியான சாஸ்திரீய முறை இருக்கிறது. மேற்கத்திய நாட்டினர் அதை வகுத்து ஒழுங்குபடுத்தியிருக்கிருர்கள். அவர்களிடமிருந்து இதை நாம் கற்று நமது பிரச்னைக்கு ஏற்ற வகையில் பரிகாரம் தேடிக் கொள்ள வேண்டும். பொறுமை, புத்திசாலித்தனம், விடா முயற்சி இவையின்றி இவ்வேலை நடக்காது.

நாய்களைப்பற்றி அவ்வளவுதான். அகிம்சையின் விரிவான தன்மையைக் குறித்து மற்ருெரு சமயம் எழுத எண்ணியிருக்கிறேன்.

## 3

ஸ்ரீ அம்பாலாலின் உத்தரவின் பேரில் அந்த நாய்கள் கொல்லப்பட்டதைக் குறித்து அபிப்பிராயம் கூறியதில் நான் தவறு செய்திருக்கக்கூடும் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனல், அது தவிர்க்க முடியாததாகையால் என் கருத்தைக் கூறியதற்காக நான் வருத்தப்படவில்லை. இதுவரையில் பலன் எல்லாம் நன்மையானதே. அத்தகைய மிருகங்களைப்பற்றி நமது கடமை என்ன என்பதை நாம் இப்பொழுது ஒருவேளை தெளிவாக அறியக்கூடும். அறியாமையாலும், கபடத்தினலும், பொதுஜன அபிப்பிராயத்திற்கு அஞ்சுவதாலும் எவ்வளவோ தவறு செய்யப்பட்டிருக்கிறது. அவை யாவும் இப்பொழுது நிற்க வேண்டும்.

ஆனல், நல்லது நீடிக்கும்படி செய்ய வேண்டுமாயின் வாசகர்களும் நானும் ஒருவரையொருவர் நன்கு புரிந்துகொள்ள வேண்டியது அவசியம். இதுபற்றி எனக்கு ஏராளமான கடிதங்கள் வந்திருக்கின்றன; நட்போடு எழுதப்பட்டவை சில; சில கடுமையாக எழுதப்பட்டவை; சில கசப்பானவை. ஸ்ரீ அம்பாலால் நாய்களைக் கொன்றதைக் குறித்து என் போக்கு இன்னதென்பதை அவர்கள் சரியாகப் புரிந்துகொண்டதாகத் தெரியவில்லை. என்னைத் தப்பாக அர்த்தம் செய்துகொள்ளும் துர்ப்பாக்கியம் எனக்கு அடிக்கடி நேர்ந்திருக்கிறது. தென்னப்பிரிக்காவில் என்னுடைய திடமான கொள்கைக்கு ஏற்புடைய

ஒரு செயலுக்காக என் உயிருக்கே ஆபத்து நேரிட்டது.[1] கொள்கைக்கு அது முரணானதென்று கண்மூடித்தனமாகப் பிறர் கருதினரெனப் பின்னர் நிரூபிக்கப்பட்டது. பர்டோலி சம்பந்த மான 'ஹிமாலயத் தவறு' சமீபத்தில் நடந்த ஒன்று.[2] பம்பாய் அரசாங்கம் அன்போடு என்னை எரவாடா சிறையில் அடைத்து, என்னுடைய நிலைமையை விளக்கவும், தெளிவு படுத்தவும் ஏராளமாக எழுத வேண்டிய கஷ்டத்திலிருந்து என்னைக் காப்பாற்றியது. பர்டோலி முடிவு தவறு அன்றென இன்றும் உறுதியாகச் சொல்லுவேன். இதற்கு மாறாக, அது பரிசுத்தமான அகிம்சைச் செயல், நாட்டிற்கு ஒப்பற்ற சேவை. இப்பொழுதுள்ள பிரச்னையில் என் கருத்துச் சம்பந்தமாகவும் அந்தத் தெளிவையே உணருகிறேன். அகிம்சையைப்பற்றிய என் எண்ணத்திற்கு அக்கருத்து ஏற்புடையது என்றே கூறு வேன்.

குறை கூறுகிறவர்கள் நண்பராயினும் எதிர்ப்பாளராயினும் நான் கூறுவதைப் பொறுமையுடன் கவனிக்க வேண்டும். குறை கூறுவோரில் எதிரிகளாக உள்ளவர்கள், மரியாதைக்குரிய எல்லையையும் மீறிப் போயிருக்கிறார்கள். என் நிலைமையைப் புரிந்துகொள்ள அவர்கள் முயற்சி செய்யவே இல்லை. என்

1. தென்னாப்பிரிக்க இந்தியர் போராட்டத்தின்போது அரசாங்கத்துடன் செய்து கொண்ட ஒப்பந்தப்படி பதிவுப் பத்திரத்தில் தாமே முதலில் கையெழுத்திட்டுப் பத்து விரல் ரேகை முத்திரைகளையும் தருவது என்று 1908 பிப்ரவரி 10-ஆம் தேதி மகாத்மா சென்றபோது மீர் ஆலம் என்ற பட்டாணியர் அவரைப் பலமாகத் தாக்கிவிட்டதையே காந்திஜி இங்கே குறிப்பிடுகிறார். இச்சம்பவத்தைப்பற்றிய விவரங்களை, 'மகாத்மா காந்தி நூல்கள் - முதல் தொகுப்பு-இல் 'எதிர்ப்பும் தாக்கு தலும்' என்ற அத்தியாயத்தில் (பக்கங்கள் 206 – 226) காணலாம்.

2. மகாத்மா காந்தியின் ஆலோசனையின் பேரில் 1922 ஜனவரி 31-ஆம் தேதி சூரத்தில் நடந்த காங்கிரஸ் காரியக் கமிட்டி பர்டோலிப் போராட்டத்தை ஆரம்பித்து விடுவது என்று முடிவு செய்தது. பிப்ரவரி 5-ஆம் தேதி வைசிராய்க்கு ஓர் இறுதிக் கடிதத்தையும் காந்திஜி அனுப்பினார். பிறகு பிப்ரவரி 5-ஆம் தேதி சௌரி சௌராவில் கலவரம் நடந்துவிட்டதை மகாத்மா அறிந்ததும் பர்டோலிப் போராட் டத்தை ரத்து செய்துவிடுவது என்று உடனே முடிவு செய்துவிட்டார். இவ்விதம் போராட்டத்தைத் திடீரென நிறுத்திவிட்டது எல்லோருக்கும் அதிர்ச்சியாகி விட்டது. காங்கிரஸ் தலைவர்கள் அநேகர் அப்பொழுது சிறையில் இருந்தார்கள். அவர்களுக்கும் மற்றும் பலருக்கும் ஆத்திரமுண்டாயிற்று. இதனால் எல்லா பக்கங் களிலிருந்தும் காந்திஜியைத் தாக்கிப் பேசினர்; எழுதினர். காந்திஜி செய்த முடிவைக் கண்டித்துச் சிறையிலிருந்த பண்டித மோதிலால் நேரு, லாலா லஜபதி ராய் முதலியோர் எழுதினர். மகாத்மா, ஹிமாலயத் தவறே செய்துவிட்டதாகக் கூறினர். மோதிலால் நேரு, "கன்னியாகுமரியிலிருக்கும் ஒரு கிராமம் சாத்துவிகச் சட்ட மறுப்புப்படி நடந்து கொள்ளத் தவறிவிட்டதென்றால், அதற்காக ஹிமாலயத்தின் அடிவாரத்திலிருக்கும் ஒரு பட்டணத்தைத் தண்டிப்பானேன்? சௌரி சௌராவையும் கோரக்பூரையும் ஒதுக்கிவிட்டுத் தனிப்பட்ட, பொதுஜனச் சட்ட மறுப்பை நடத்திக்கொண்டு போங்கள்" என்று எழுதினர். தமது முடிவுக்கு இவ்விதம் எதிர்ப்புப் பலமாக இருந்தும் காந்திஜி உறுதியுடனிருந்து தாம் செய்த பர்டோலி முடிவே நியாயமானது என்றார். அதையே மேலே குறிப்பிடுகிறார்.

கருத்தை அவர்களால் சிறிதும் சகிக்க முடியவில்லை என்றே தோன்றுகிறது. இப்பொழுது அவர்கள் இரண்டில் ஒன்ருகத் தான் இருக்கவேண்டும். அவர்கள் எனக்கு ஆசிரியராக இருக்க வேண்டும், அல்லது என்னை ஆசாஞக மதிப்பதாயின் அவர்கள் மரியாதையாகவும் பொறுமையோடும் இருப்பதோடு என்மீது நம்பிக்கை கொண்டு நான் எழுதுவதைப்பற்றிச் சிந்திக்க வேண்டும். அவர்கள் எனக்கு ஆசிரியர்கள் என்ருல், என்னிடம் தயை காட்டி, தங்களால் முடிந்தவரையில் அன்போடும் பொறுமையோடும் நியாயத்தை எனக்கு விளக்க அவர்கள் முயற்சி செய்ய வேண்டும். என் பராமரிப்பில் இருக்கும் குழந்தைகளுக்கு அவர்களிடம் கோபமாக இருப்பதன் மூலம் நான் போதிக்க இயலாது. அவர்களுக்கு நான் போதிப்பதா யிருந்தால் அவர்களிடம் அன்பு காட்டி, அவர்களுடைய அறி யாமையை அனுமதித்து, அவர்களுடன் விளையாடிக்கொண்டு போதிக்கிறேன். கோபம்மிகுந்த என் ஆசிரியர்களிடமிருந்தும் இதே போன்ற அன்பையும், சகிப்பையும், விட்டுக்கொடுக்கும் மனப்பான்மையையும் நான் எதிர்பார்க்கிறேன். நாய்கள் சம்பந்தமாக என்னுடைய கருத்தை நல்லெண்ணத்தின் பேரிலும் கடமையை முன்னிட்டும் தெரிவித்தேன். நான் தவறு செய் திருந்தால், எனக்குப் புத்தி புகட்டிக் குறை கூறும் இவர்கள், பொறுமையோடும் தருக்க ரீதியாகவும் நியாயத்தை எடுத்துச் சொல்லட்டும். கோபமான, பொருத்தமற்ற வாதங்களால் எனக்குச் சமாதானம் கூறிவிட முடியாது.

ஒரு நாள் மாலை நேரம் கழித்துக் கனவான் ஒருவர் என்னைப் பார்க்க வந்தார். எனக்கு ஓய்வே இல்லை என்பதை அவர் அறிவார்; என்னை வாதத்துக்கு இழுத்தார். கடுமையான, கசப்பான மொழிகளை உபயோகித்தார். என்மீது ஆத்தி ரத்தையும் பொழிந்தார். அவருடைய கேள்விகளுக்குப் பொறுமையோடும் வேடிக்கையாகவும் பதில் சொல்லி வந்தேன். இந்தப் பேச்சைத் துண்டுப்பிரசுரமாக வெளியிட்டு விற்று வருகிருர். அது என் முன்னுல் இருக்கிறது. உண்மையின் எல்லையை மட்டுமல்ல. மரியாதையின் வரம்பையும் அது கடந்து விட்டது. அந்தப் பேச்சைப் பிரசுரிக்க என்னிடம் அனுமதி கேட்கவுமில்லை, பிரசுரிப்பதற்கு முன்னுல் எனக்குக் காட்டவு மில்லை. இந்த வகையில் எனக்குக் கற்றுத்தர அவர் முற்படு கிருரா ? உண்மையைத் துச்சமாகக் கருதுபவர் அகிம்சையை வேரிலேயே துண்டிப்பவராவார். கோபத்துக்கு இடம் தருபவர் இம்சையைச் செய்பவராவார். அப்படிப்பட்டவர் எனக்கு எவ்விதம் அகிம்சையை உணர்த்த முடியும்?

இவ்விதமாகக் குறை கூறும் எதிர்ப்பாளர்கள் எனக்கு ஒரு சேவையைச் செய்கிருர்கள். என்னையே நான் சோதித்துக் கொள்ளவும், கோபத்தினுல் ஏற்படும் விளைவு ஏதாவது என்னிடம் தோன்றுகிறதா என்று நான் பார்த்துக்கொள்ளவும் அவர்கள் வாய்ப்பு அளிக்கின்றனர். அவர்களுடைய கோபத்தின் காரணத்தைக் கவனிக்கும்போது அன்பையே நான் காண்கிறேன். தாங்கள் புரிந்துகொண்டிருக்கும் அகிம்சையை நானும் புரிந்து கொண்டிருப்பதாகவே எண்ணிவிட்டார்கள். இப்பொழுது நான் அதற்கு முரணுக நடப்பதாகக் கண்டு என்மீது கோபப் படுகிருர்கள். என்னை ஒரு சமயம் மகாத்மா என்று கருதினர். மக்களிடம் எனக்கிருந்த செல்வாக்கு அவர்கள் விருப்பத்திற்கு ஏற்றதாக இருக்கவே சந்தோஷப்பட்டார்கள். அவர்கள் கருத்தில் இன்று நான் அல்ப ஆத்மா ; மக்களிடம் எனக்குத் இருக்கும் செல்வாக்கு நல்லதல்ல என்று இப்போது எண்ணு கின்றனர். இதைக் கண்டுபிடித்துவிட்டதால் வேதனைப்படு கிருர்கள். தங்களைத் தாங்களே அடக்கிக்கொள்ள அவர்களால் இயலாததனுல் மனவேதனையைக் கோபமாக மாற்றுகின்றனர்.

இதில் அடங்கிய நோக்கத்தை நான் பாராட்டுகிறேனுகை யால் இந்தக் கோபாவேசத்தை நான் பொருட்படுத்தவில்லை. பொறுமையோடு நியாயத்தை அவர்களுக்கு எடுத்துக் கூற நான் முயற்சி செய்ய வேண்டும். என் முயற்சிக்கு அவர்கள் உதவி செய்வதாயிருந்தால், கோபத்தைத் தவிர்த்துக்கொள்ளுமாறு அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். நான் சத்தியத்தை வழிபடுபவன் ; அதை நாடுபவன். நான் செய்தது தவறு என்பதை உணர்ந்தால், நான் எப்பொழுதும் செய்து வந்திருப் பதைப் போன்று, தவறுகளை ஒப்புக்கொண்டு உடனே மாற்றிக் கொண்டுவிடுவேன். சத்தியத்தைக்கடைப்பிடிப்பவனின் தவறுகள் யாருக்குமே தீங்கு செய்வதில்லை என்பது சாத்திரங்களின் கூற்று. அதுவே சத்தியத்தின் மகத்தான ரகசியம்.

குறை கூறும் நண்பர்களுக்கும் ஒரு வார்த்தை : உங்கள் கடிதங்களைப் பத்திரப்படுத்தி வைத்திருக்கிறேன். தனித்தனி யாக ஒவ்வொருவருக்கும் நான் பதில் எழுதுவது வழக்கம். இச்சமயம் எனக்கு வரும் கடிதங்கள் ஏராளமாகிவிட்டதாலும், இன்னும் ஏராளமாக வந்துகொண்டிருப்பதாலும், அவை வழக் கத்திற்கு மாருக நீளமாக இருப்பதாலும், உங்களுக்குத் தனித்தனியாகப் பதில் எழுதுவதற்கில்லை. கடிதம் வந்ததாக எழுதக்கூட எனக்கு நேரம் இராது என்று அஞ்சுகிறேன். கடிதம் எழுதியிருப்போரில் சிலர், தங்கள் கடிதத்தை ‘நவஜீவன்’

பத்திரிகையில் வெளியிடுமாறு கேட்டிருக்கிறார்கள். இக்கோரிக்கையை வற்புறுத்த மாட்டார்கள் என நம்புகிறேன். என்னால் முடிந்த வரையில் பொருத்தமான வாதங்களுக்கெல்லாம் பதில் சொல்ல முயற்சி செய்வேன். இதுவே அவர்களுக்குத் திருப்தி யளிக்கும் என நம்புகிறேன்.

அவசியமான இம்முன்னுரைக்காக வாசகர்கள் மன்னிப்பார்களாக. இனி என் முன்னால் இருக்கும் கடிதங்களை எடுத்துக் கொள்ளுகிறேன். ஒரு நண்பர் கூறுகிறார் :

"தெரு நாய்களுக்கு உணவளிக்க வேண்டாம் என்று எங்களுக்குக் கூறுகிறீர்கள். நாங்கள் அவைகளை வருந்தி அழைக்கவில்லையே; அவை தாமாகவே வருகின்றன. அவற்றை எப்படி விரட்டிவிடுவது? அவை ஏராளமாகிவிடுவதற்கு இன்னும் சில காலமாகும். நாய்களுக்கு உணவளிப்பது கருணை உணர்ச்சியை வளர்க்கிறது, அவைகளை விரட்டிவிடுவதால் உள்ளம் கடினமாகிவிடுகிறது என்பதில் ஏதாவது சந்தேகம் உண்டா? நாம் எல்லோருமே பாபிகள்; நம்மால் முடிந்த சிறிது அன்பையாவது ஏன் காட்டக்கூடாது?"

கருணையைக் குறித்த இந்தப் பொய்யான எண்ணத்திலேயே அகிம்சையின் பெயரால் இம்சைக்கு இடம் தந்து வருகிறோம். அறியாமையை, மனிதன் இயற்றியுள்ள சட்டங்களின் விஷயத்தில் எப்படி ஒரு சாக்காகக் கருத முடியாதோ அது போலவேதான் தெய்வ நீதி விஷயத்திலும்.

ஆனால், இந்த வாதத்தை ஆராய்வோம். நம் தலை வாசலுக்கு வரும் பிச்சைக்காரனுக்கு ஒரு பிடி போடுகிறோம். இதனால் புண்ணியம் அடைந்துவிட்டதாகவும் எண்ணிக்கொள்ளுகிறோம். ஆனால், உண்மையில் அதனால் பிச்சைக்காரர் தொகையை அதிகரித்து, பிச்சை எடுக்கும் தீமையை அதிகமாக்கி, சோம்பேறித்தனத்தை வளர்த்து, தீமையை விருத்தி செய்கிறோம். உண்மையில் உதவிக்குரிய பிச்சைக்காரர்களைப் பட்டினி போட்டுவிட வேண்டும் என்பதல்ல இதன் பொருள். கண்ணிழந்தவர்களையும், முடமாகிவிட்டவர்களையும் பராமரிக்க வேண்டியது சமூகத்தின் பொறுப்பு. ஆனால், இப்பொறுப்பை ஒவ்வொருவரும் தாமே எடுத்துக்கொண்டுவிட முடியாது. சமூகத்தின் தலைவரான மகாஜனே, ஒழுங்காக அமைக்கப்பட்டிருப்பின் அரசாங்கமோ இந்த வேலையை ஏற்றுக் கொள்ள வேண்டும். தரும சிந்தனை உள்ளவர்கள் அத்தகைய ஸ்தாபனங்களுக்கு நிதி உதவி செய்ய வேண்டும். மகாஜன் என்னும் சமூகத்தலைவர் சுத்தமான மனமுடையவராயும் அறிவுள்ளவராகவும் இருப்பின் பிச்சைக்காரர்களின் நிலையைச் சரியாகக் கவனித்து உதவிக்குரியவருக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டும். இது நடக்காது போயின், அதாவது, கண்டபடி யெல்

லாம் நிவாரணம் அளிப்பதனல் பிச்சைக்காரர்கள் வேடத்தில் அயோக்கியர்கள் அதன் பலனையெல்லாம் அடைவார்கள் ; நாட்டின் வறுமை அதிகரிக்கும்.

இவ்விதம் பிச்சைக்காரர்களுக்கு உணவளிக்கும் வேலையைத் தனிப்பட்டவர் ஏற்பது பாபமானது என்றால், தெரு நாய்களுக்கு அவர் உணவளிப்பதும் பாபமேயாகும். அது கருணையைப்பற்றிய பொய்யான உணர்வாகும். பட்டினி கிடக்கும் நாய்க்குச் சிந்தியதைப் போடுவது என்பது அதை அவமதிப்பதாகும். அலைந்துகொண்டிருக்கும் நாய்கள், சமூகத்தின் நாகரிகத்திற்கோ அல்லது கருணைக்கோ எடுத்துக் காட்டாக இல்லை. இதற்கு மாறாகச் சமூகத்தினரின் அறியாமையையும், சோம்பலையுமே காட்டுகின்றன. தாழ்வினமான மிருகங்கள் நம் சகோதரர்கள். இவைகளுடன் சிங்கத்தையும் புலியையும் சேர்க்கிறேன். நம்முடைய அறியாமையால் மாமிசம் தின்பனவாகிய இந்த மிருகங்களுடன் சேர்ந்து வாழ நமக்குத் தெரியவில்லை. மனிதன் தன்னை நன்றாக அறிந்துகொள்ளும் போது இவைகளுடன் சிநேகமாக இருப்பது எப்படி என்பதையும் தெரிந்துகொள்ளுவான். ஆனால், இன்றோ, வேற்று மதத்தினருடனே அல்லது ஒரு வெளிநாட்டினருடனே எப்படிச் சிநேகமாக இருப்பதென்பது அவனுக்குத் தெரியவில்லை.

நாய் நன்றியுள்ள துணைவன். நாய்களின், குதிரைகளின் நன்றியைச் சொல்ல எத்தனையோ உதாரணங்கள் உள்ளன. ஆகவே, அவைகளை நம் தோழர்களை நடத்துவதைப் போன்று நாம் நடத்தவேண்டுமேயன்றி அவைகளை அலைய விட்டுவிடக் கூடாது என்றாகிறது. தெரு நாய்களின் தீமையை அதிகமாக்கி விடுவதால் அவைகளிடம் நமக்குள்ள கடமையை நாம் சரிவரச் செய்தவர்கள் ஆகமாட்டோம். தெரு நாய்கள் இருப்பது நமக்கே அவமானம் என்று நாம் கருதுவதாயிருந்தால், இதனால் அவைகளுக்கு உணவளிக்க மறுப்பதாயின், ஓர் இனம் என்ற வகையில் நாய்களுக்கே நாம் சேவை செய்வதாவதோடு அவைகள் இன்பத்துடன் இருக்கச் செய்ததும் ஆகும்.

அப்படியானால், தெரு நாய்களைப்பற்றி ஜீவகாருண்யமுள்ள மனிதன் செய்யக்கூடியது என்ன ? தனது வருவாயில் ஒரு பகுதியை இதற்கென்று ஒதுக்கிவைத்து, அவைகளின் பாதுகாப்புக்கென்று ஏதாவது ஒரு ஸ்தாபனம் இருந்தால் அப்பணத்தை அதற்கு அனுப்ப வேண்டும். அத்தகைய ஸ்தாபனம் அசாத்தியமெனின்-அசாத்தியமல்லவெனினும் இது

அதிகச் சிரமமானது என்பதை அறிவேன்-ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட நாய்களைத் தனக்குச் சொந்தமாக்கிக்கொள்ள முயற்சி செய்ய வேண்டும். அப்படிச் செய்ய அவனால் முடிய வில்லை யென்றால், இந்த நாய்களைப்பற்றிக் கவலைப்படுவதையே விட்டுவிட்டு மற்ற மிருகங்களுக்குச் சேவை செய்வதில் தன் னுடைய ஜீவகாருண்யத்தைத் திருப்ப வேண்டும்.

"ஆனால், அவைகளை அழித்துவிடும்படி சொல்லுகிறீர் களே?" என்று கோபமாக அல்லது அன்போடு மற்றவர்கள் கேட்கிறார்கள். நாய்களை அழித்துவிடுவது முடிவானதோர் கடமை என்று நான் கூறவில்லை. சில நாய்களைக் கொன்று விடுவதை, 'வேறு வழியில்லாததால் கடமை'யாகக் குறிப்பிட்ட சந்தர்ப்பத்தை முன்னிட்டு நான் கூறுகிறேன். அரசாங்கமோ, மகாஜனமோ தெரு நாய்களைக் குறித்துக் கவனிக்காமல் இருக் கும்போது, தாமே அவைகளைக் கவனிக்க யாரும் தயாராயில்லாதபோது, சமூகத்திற்கு அவற்றால் அபாயம் என்று நினைத்தால் அவைகளைக் கொன்று, துளித்துளியாகச் சாகும் துன்பத்திலிருந்து அவற்றிற்கு நிவாரணம் அளிக்க வேண்டியதே. இது வெறுப்பைத் தரும் விஷயந்தான் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். எனினும், இதை ஏற்றுக்கொள்ளுவதி லேயே உண்மையான அன்பும் காருண்யமும் இருக்கின்றன என்பதே எனது மனமார்ந்த கருத்து.

இந்நாட்டில் இருக்கும் வலுவிழந்த மிருகங்கள், மனிதர்கள் என்ன கதியில் இருக்கிறார்களோ அதே மோசமான நிலையில் தான் இன்று இந்தியாவில் நாய்களும் இருக்கின்றன. இந்தத் துக்ககரமான நிலைமைக்குக் காரணம் அகிம்சையைப்பற் றிய நமது தவறான எண்ணமும், அகிம்சை இல்லாததுமே யாகும் என்பது எனது திடமான கருத்து. சக்தியின்மையும், வறுமையும், பஞ்சமும் அகிம்சையைக் கையாளுவதன் பலனாக இருக்க முடியாது. இது தெய்விக நாடு என்றால், வறுமை இந்நாட்டை உருக் குலைப்பதை நாம் பார்த்துக்கொண்டிருக்கக் கூடாது. அவசரக்காரர்களும் பொறுமையற்றவர்களுமான சில ஆத்மாக்கள், இந்த நிலைமையைக் கொண்டு அகிம்சை தரும மன்று என்ற முடிவுக்கு வருகிறார்கள். ஆனால், இதில் தவறுடையது அகிம்சை அல்ல; அதைக் கையாளுகிறவர்களே தவறு செய்கிறார்கள் என்பதை நான் அறிவேன்.

அகிம்சை க்ஷத்திரியனின் தருமம். மகாவீரர் க்ஷத்திரியர்; புத்தர் க்ஷத்திரியர்; ராமரும் கிருஷ்ணரும் க்ஷத்திரியர்கள். இவர்கள் யாவரும் அகிம்சையை வழிபட்டவர்கள். இவர்க

ளுடைய பெயரால் அகிம்சையைப் பரப்ப நாம் விரும்புகிறோம். ஆனால், இன்றோ அகிம்சை பயங்காளியான வைசியர்களின் ஏகபோக உரிமையாக இருக்கிறது. இதனாலேயே அதன் ஒளி மங்கிவிட்டது. மன்னிப்பின் இறுதியான எல்லையே அகிம்சை. ஆனால், மன்னித்துவிடுவது வீரருக்கு உரிய குணம். அஞ்சாமையின்றேல் அகிம்சை சாத்தியமேயில்லை.

பசுக்களை நம்மால் பாதுகாக்க முடியவில்லை. நாய்களைக் கண்ட இடத்திலெல்லாம் உதைத்துத் தள்ளி, தடிகொண்டும் அடிக்கிறோம்; அவற்றின் விலா எலும்பும் முறிந்துவிடுகிறது. என்றாலும், நம்மைப்பற்றி நாம் வெட்கப்படுவதில்லை; தெரு நாய்கள் கொல்லப்பட்டால் உடனே கூக்குரல் போடுகிறோம். இந்த இரண்டில் எது நல்லது? அரைப் பட்டினியோடு ஐயாயிரம் நாய்கள் தெருவில் அலைந்துகொண்டு மலம், ஆபாசம் இவற்றைத் தின்றுகொண்டு படுமோசமாக வாழ்வதா? அல்லது இவற்றில் ஐம்பது செத்தொழிந்து மற்றவை நல்ல நிலையில் இருப்பதா? நாய்களை எப்பொழுதும் அடித்து உதைத்துக் கொண்டிருப்பது நிச்சயமாகப் பாபமானதே. ஆனால், இவ்விதம் சித்திரவதை செய்யப்படுவதைக் கண்டு சகிக்க முடியாமல் நாய்களை ஒருவர் கொன்றுவிடுவாரானால் அவர் செய்த காரியம் போற்றத் தக்கதாகவே இருக்கும். உயிரைப் போக்கிவிடுவது என்பது எப்பொழுதும் இம்சை அல்ல, உயிரைப் போக்காமல் இருப்பதே அதிக இம்சை என்றும் ஒருவர் சொல்லலாம். இந்த நிலைமையை இன்னுமொரு கட்டுரையில் ஆராய்வோம்.

4

உயிரைப் போக்குவதும் கடமையாகலாம். இந்த நிலைமையையும் கவனிப்போம். உடல் நிலைத்திருப்பதற்கு எவ்வளவு அவசியம் என்று நினைக்கிறோமோ அவ்வளவு உயிரை நாசப் படுத்துகிறோம். இவ்விதம் உணவுக்காக உயிர்களையும், காய் இனங்களையும் அழித்துவிடுகிறோம்; நம் உடல் நலத்துக்காகக் கொசுக்கள் முதலியவைகளைக் கிருமி நாசகாரிகளைக்கொண்டு அழிக்கிறோம். அப்பொழுதெல்லாம் அதர்மமான காரியங்களைச் செய்து வருவதாக நாம் நினைப்பதில்லை.

இது ஒருவரின் சொந்த உடலைப்பற்றிய வரைக்குமே. ஆனால், மற்றவர்களுக்காக, அதாவது, இனத்தின் நன்மைக்காக மாமிச பட்சிணிகளான மிருகங்களைக் கொல்லுகிறோம். சிங்கங்களாலும் புலிகளாலும் தங்கள் கிராமங்களுக்குத்

தொல்லை ஏற்படும்போது அவைகளைக் கொல்லுவதோ, கொல்லும்படி செய்வதோ கடமை என்று கிராமவாசிகள் கருதுகின்றனர்.

மனிதனைக் கொல்லுவதும் சில காரியங்களுக்கு அவசிய மானதாக இருக்கலாம். ஒருவன் திடீரென்று வெறிபிடித்துக் கையில் வாள் ஏந்திக் கோபாவேசத்துடன் கிளம்பி, எதிர்ப்படு கிறவர்களை யெல்லாம் கொல்லுகிறுன். அவனை உயிருடன் பிடிக்க யாருக்கும் துணிவில்லை என்று வைத்துக்கொள்ளு வோம். அந்தப் பைத்தியக்காரனை எவராவது கொன்றுவிடுவா ராஞல் அவர் சமூகத்தின் நன்றியறிதலைப் பெறுவதோடு மிகவும் உபகாரியாகவும் கருதப்படுவார்.

அகிம்சை நோக்கிலிருந்து கவனித்தால் அப்படிப்பட்ட வெறியனைக் கொல்ல வேண்டியது ஒவ்வொருவரின் கடமை யாகிறது. இதற்கு விலக்கு ஒன்று உண்டு. ஆபத்து விளை விக்கக்கூடிய அவனுடைய கோபாவேசத்தைத் தணிக்கவல்ல ஒரு யோகி அவனைக் கொல்லாதிருக்கலாம். ஆஞல், பூரண மாகப் பக்குவமடைந்துவிட்டவர்களின் விஷயத்தைக் குறித்து நாம் இங்கே கவனித்துக்கொண்டிருக்கவில்லை. சமூகத்தின் கடமையைக் குறித்தும், குறைபாடுகளுடைய சாதாரண மனிதர்களைப்பற்றியுமே கவனித்து வருகிறேம்.

நான் கூறிய உதாரணம் சரிதாஞ என்பதில் மாறு பட்ட கருத்து இருக்கலாம். அது போதுமானதல்லவா யின் மற்றவைகளை எளிதாக ஊகித்துக்கொள்ளலாம். உயிரைப் போக்காமல் இருப்பது எந்தச் சந்தர்ப்பத்திலும் முடிவான கடமையாகிவிடாது என்பதைக் காட்டுவதே அந்த நோக்கம்.

உண்மை என்னவெனில், அகிம்சைக்குக் கொல்லாமை சாதாரணப் பொருள் அல்ல. கோபத்தாலோ அல்லது சுய நலத்திற்காகவோ அல்லது துன்பம் விளைவிக்க வேண்டும் என்ற நோக்கத்துடனே ஓர் உயிரைக் கொல்லுவதும் துன்புறுத்துவதுமே இம்சை என்பதற்குப் பொருள். அப்படிச் செய்யாதிருப்பதே அகிம்சை.

வைத்தியர் உங்களுக்குக் கசப்பான மருந்தைக் கொடுத் துத் துன்பப்படுத்துகிறுர். ஆஞல், அவர் செய்வது இம்சை அல்ல. கசப்பான மருந்தைக் கொடுக்க வேண்டியது அவசிய மாக இருக்கும்போது அவர் அப்படிக் கொடுக்கத் தவறிவிடு வாராஞல் அகிம்சையில் அவர் தமது கடமையைத் தவறியவ

ராவார். நோயாளிக்கு நோவுமே என்று பயந்துகொண்டு, ரண சிகிச்சை செய்யும் வைத்தியர் அழுகிப்போன ஓர் அங்கத்தைத் துண்டிக்கத் தயங்குவாராயின், அவர் இம்சைக் குற்றத்துக்கு ஆளாவார். தம் பாதுகாப்பில் இருக்கும் ஒருவரைக் கொல்லப் போகும் தறுவாயில் அக்கொலைகாரனை - வேறு வழிகளில் அவனைத் தடுக்க முடியாதபோது - ஒருவர் கொல்லாதிருந்து விடுவாராயின் அவர் போற்றற்குரியர் ஆகார்; பாபம் செய்தவரே ஆவார்; அகிம்சையை அனுசரித்தவரும் ஆகமாட்டார்; ஆனல், அகிம்சையைப்பற்றிய மூடமான கருத்துக் கொண்டு இம்சை செய்தவரே ஆவார்.

அகிம்சையின் மூலத்தை இப்பொழுது கவனிப்போம்: முற்றிலும் தன்னலமற்றதே அது. தன்னலமற்றதெனின், ஒருவரின் உடலைப்பற்றிச் சிறிது அக்கறை கொள்வதிலிருந்தும் விடுபெற்றதென்பதே பொருள். தன்னுடைய உடலின் நன்மைக்காக மனிதன், சிறிதும் பெரிதுமான பல உயிர்களைக் கொன்று வருகிறன் என்பதை ஒரு முனிவர் கண்டபோது அவனுடைய அறியாமையைப் பார்த்துத் திடுக்கிட்டார். அழியும் உடலுக்குள் அழிவற்ற ஆத்மா அடங்கியிருக்கிறது என்பதை அவன் மறந்துவிட்டதைக் குறித்தும், ஆத்மாவின் நித்திய ஆனந்தத்தைவிட மாயும் உடலின் இன்பத்தையே அவன் கருதுவதைக் குறித்தும் அவர் வருந்தினர். அதிலிருந்து முற்றிலும் தம்மை அறவே ஒடுக்கிக்கொள்ளும் கடமையை அறிந்தார். ‘தன்னைத்தானே-அதாவது, உண்மையை-அறிய மனிதன் விரும்பினல், இந்த உடலிலிருந்து முற்றிலும் துறவு பூண்டே-அதாவது, தன்னல் யாதொரு தீங்கும் நேராதென மற்ற உயிர்கள் உணரும்படி செய்தால் மாத்திரமே-அதை அடைய முடியும்’ என்பதை அவர் கண்டார்; அதுவே அகிம்சையின் வழி.

இந்த உண்மையை அறிவதிலிருந்து இம்சையிலுள்ள பாபம் உயிரைப் போக்குவதில் மாத்திரமில்லை, அழிவுறும் ஒருவரது உடலுக்காக வேறென்றின் உயிரைப் போக்குவதிலும் இருக்கிறது என்பது தெரிகிறது. ஆகையால், உணவு கொள்வதிலும், குடிப்பதிலும், மற்றவைகளிலும் நேரிடக்கூடிய உயிர்களின் அழிவு சுயநலத்திற்கானதாகையால் இம்சையே ஆகும். ஆனல், இவை தவிர்க்க முடியாதவை என்று மனிதன் கருதி இவற்றைச் சகித்துக்கொள்ளுகிறன். எனினும், உபாதையால் துடிக்கும் ஜீவன்களை அவற்றின் அமைதிக்காகவே அழிப்பதை இம்சை என்று கருதிவிட முடியாது. ஒருவரின் பாதுகாப்

பில் இருப்பவரைக் காக்க வேண்டிய தவிர்க்க முடியாத நிலையில் ஓர் உயிரை அழிப்பது இம்சையாகாது.

இந்த விதமான நியாய வாதம் மிகவும் விஷமத்தனமாகவும் உபயோகிக்கப்பட்டுவிடக் கூடும். இந்நியாயம் தவறானது என்பதனால் அன்று இது. ஆனால், தன்னுடைய சுயநலம் அல்லது அகந்தையைத் திருப்தி செய்வதற்காகத் தன்னைத் தானே ஏமாற்றிக்கொள்ளுவதற்கு எந்தச் சாக்குப்போக்குக் கிடைத்தாலும் அதைக் கெட்டியாகப் பற்றிக்கொள்வதென்ற ஒரு பலவீனம் மனிதனிடம் இருப்பதே இதற்குக் காரணம். எனினும், அகிம்சையின் உண்மையான தன்மையை எடுத்துக் காட்டுவதிலிருந்து ஒருவரை இத்தகைய ஆபத்து மன்னித்து விடாது. மேற்கண்டவைகளிலிருந்து கீழ்க்கண்ட முடிவுக்கு வருகிறோம் :

(1) மற்ற உடல்களுக்கு ஓர் அளவுக்கு நாசம் விளைவிக்காமல் ஒருவர் தம் உடலைத் தாங்குவது என்பது சாத்தியம் அன்று.

(2) யாருமே ஏதாவது ஒரு ஜீவனை நாசம் செய்ய வேண்டியிருக்கிறது.

(அ) தங்களுடைய உடல் போஷணைக்காகவும், (ஆ) தங்கள் பராமரிப்பில் இருப்பவர்களைக் காப்பதற்கும், (இ) சில சமயங்களில் கொல்லப்பட்ட ஜீவனை முன்னிட்டும் இவ்வாறு செய்ய வேண்டியிருக்கிறது.

(3) மேலே கூறிய இரண்டாவதன் (அ), (ஆ) ஆகிய பகுதியில் வருவது ஏறத்தாழ இம்சையாகிறது. (இ) பகுதியில் வருவது இம்சையாகாது. ஆகவே, அது அகிம்சை. (அ), (ஆ) இரண்டிலும் வரும் இம்சை தவிர்க்க முடியாதது.

(4) ஆகையால் முற்போக்குள்ள அகிம்சைவாதி, (அ), (ஆ) இரண்டிலுமுள்ள இம்சையைச் சாத்தியமான அளவு குறைவாக-அது தவிர்க்க முடியாததாக இருக்கும்போது மாத்திரமே, நன்கு சிந்தித்து, அதைத் தவிர்ப்பதற்கான எல்லாப் பரிகாரங்களையும் செய்துவிட்ட பிறகே-புரிகிறார்.

நான் கூறியிருக்கும் நாய்களை அழிப்பது (4)-ஆம் பிரிவில் வருகிறது. ஆகையால், அது தவிர்க்க முடியாததாக இருக்கும் போது, வேறு பரிகாரம் எதுவும் இல்லாத சமயத்தில், தீரச் சிந்தித்த பிறகு செய்ய வேண்டியது என்றாகிறது. ஆனால், அழிப்பது தவிர்க்க முடியாததாக இருக்கும்போது அப்படி அழிக்காமல் இருந்துவிடுவது நாய்களைக் கொல்லுவதைவிட மோசமானது ;

இது குறித்து எனக்கு எந்தவிதச் சந்தேகமும் கிடையாது. ஆகவே, நாய்களைக் கொல்லுவது முடிவான கடமை அன்று என்றாலும் சிலருக்குச் சில சமயங்களில், சில சந்தர்ப்பங்களில், அது அவசியமான கடமையாகிறது.

என்னைக் கேட்டிருக்கும் கேள்விகளை இனி ஒவ்வொன்றாக எடுத்துக்கொள்ளுகிறேன். கடிதம் எழுதியிருக்கும் சிலர் தங்களுக்கு நேரடியாகப் பதில் வேண்டும் என்றும், அப்படி நான் எழுதாதுபோனால் தங்கள் கருத்துக்களை வெளியிட்டுவிடப் போவதாகவும் பயமுறுத்துகின்றனர். கடிதம் எழுதியிருக்கும் ஒவ்வொருவருக்கும் தனித்தனிப் பதில் எழுதிக்கொண்டிருப்பது என்னால் முடியாத காரியம். அவசியமானவைகளுக்கு இங்கேயே பதில் கூறுகிறேன். மற்றப் பத்திரிகைகளில் இந்த விவாதத்தை நடத்திக்கொண்டு போகிறவர்களை நிறுத்த எனக்கு உரிமையும் இல்லை, விருப்பமும் இல்லை ; நின்று, நிதானமாகத் தருமத்தைப்பற்றி நடத்தும் விவாதத்தில் மிரட்டலுக்கோ, ஆத்திரத்திற்கோ இடமில்லை என்பதைக் கடிதம் எழுதியிருப்போருக்கு நினைவூட்டுகிறேன்.

ஒருவர் கேட்கிறார் : 'நாய்களைக் கொல்லும் தருமத்தைக் கிழமான–57 வயது கிழவரான–நீங்கள் எப்படிக் கூற முற்பட்டீர்கள் ? இதற்கு முன்னடியே இது உங்களுக்குத் தோன்றியிருந்தால் இதுவரை ஏன் மௌனமாக இருந்தீர்கள் ?'

கிழ வயதானாலும், ஒருவர் உண்மையை எப்பொழுது கவனிக்கிறாரோ, எப்பொழுது அது அவசியமாகிறதோ அப்பொழுது அவர் அதை வெளியிடுகிறார். அப்படிப்பட்ட மிருகங்களை மேலே சொன்ன கட்டுத்திட்டங்களுக்குட்பட்டுக் கொல்லவேண்டியது கடமை என்பதை உணர்ந்திருக்கிறேன். தக்க சமயங்களில் அதன்படியும் நடந்திருக்கிறேன். வெளியிலிருந்து கிராமத்திற்கு வந்துவிடும் நாய்களைக் கொல்வது கடமையென இந்தியக் கிராமவாசிகள் வெகு காலமாக ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். வெளி நாய்களை விரட்டுவதற்கென்றே நாய்களை வளர்க்கிறார்கள் ; உயிரோடு தப்பித்து ஓடிவிடாவிடின் கொன்றுவிடுகின்றனர். இந்தக் காவல்நாய்களை, மற்ற வெளி நாய்கள் முதலியவைகளிடமிருந்தும், திருடர்கள் கொள்ளைக்காரர்களிடமிருந்தும் கிராமங்களைப் பாதுகாப்பதற்கென்றே வளர்க்கின்றனர் ; அவை பயமின்றி வெளி நாய்களையும் திருடர் முதலியோரையும் தாக்கும். நகரங்களில்தான் நாய்களினால் தொல்லை. தெரு நாய்களுக்கு எதிரான சட்டம் இருப்பதே

இதற்குச் சரியான பரிகாரம். இதில் நாய்களைக் கொல்ல வேண்டிய நிமித்தம் குறைவாவதுடன் நகர மக்களுக்கும் இது பாதுகாப்பாகிறது.

இன்னும் ஒருவர் கேட்கிறார் : "அகிம்சையைப் போன்ற ஒரு விஷயத்தில் தருக்க ரீதியான விவாதத்தைக் கொண்டு மக்களைத் திருப்தி செய்துவிட முடியும் என்று எதிர் பார்க்கிறீர்களா ?'

இதில் அடங்கியிருக்கும் வகையில் சிறிது விஷயமும் இல்லாமல் இல்லை. ஆனால், யாருக்கும் திருப்தியளிக்க நான் விரும்பவில்லை. அகிம்சையின் மாணவன், அதை அனுசரிக்கிறவன் என்ற முறையில், அவசியம் ஏற்படும்போது என்னுடைய கருத்தை வெளியிட வேண்டியதாகிறது. ஒரு தருமத்தைப் பற்றிய விவாதத்தில் தருக்க வாதத்திற்கும் நியாயத்தை எடுத்துரைப்பதற்கும் சிறிது இடமுண்டு என்பது அனுபவத்தை ஒட்டிய என் கருத்து.

5

ஒரு நண்பர் எனக்கு நீண்ட கடிதம் எழுதியிருக்கிறார். அதில் தமக்கிருக்கும் சங்கடங்களைக் குறிப்பிட்டு, *சிராவகரான தமக்கு ஜைன சமயம் இதில் என்ன விதித்திருக்கிறது என்பதையும் குறிப்பிட்டிருக்கிறார். அவருடைய கேள்வி யாவது :

"தெருவில் திரியும் நாய்களைப் பராமரிக்கத் தனிப்பட்டவர்கள் பொறுப்பு ஏற்றுக்கொள்ளாவிடில், அவைகளைக் கவனிக்கப் பிஞ்சராபோல் ஏற்படுத்தாது போனால், பிறகு செய்யக்கூடியதெல்லாம் அவற்றைக் கொன்றுவிடுவதே என்கிறீர்கள். பைத்தியம் பிடிக்காமல் தெருவில் திரியும் ஒவ்வொரு நாயையும் கொன்றுவிட வேண்டுமா? தீமை விளைவிக்கக்கூடிய மிருகங்கள், பறவைகள், பாம்புகளை அவை நமக்குத் தீமை விளைவிக்காமல் இருக்கும்போது சும்மா விட்டுவிடுகிறோம் என்பதை ஒப்புக்கொள்ளுகிறீர்களா? இதில் நாய்களுக்கு மாத்திரம் விதி விலக்கு ஏன்? திரிவதைக் கண்டதுமே நாய்களைச் சுட்டுக் கொன்றுவிடுவது என்பதில் ஜீவகாருண்யம் எங்கு இருக்கிறது? எல்லா ஜீவன்களின் நலனையும் கோரும் ஒருவர் இதை எப்படிச் செய்ய முடியும்?"

நான் கூறியதன் பொருளை இக்கடிதம் எழுதியவர் தவறாகப் புரிந்துகொண்டிருக்கிறார். பைத்தியம் பிடித்த நாய்களைப் பைத்தியம் பிடித்துவிட்டதென்பதற்காகக் கொல்லவேண்டுமென்று, அதிலும் தெருவில் அலையும் நல்ல நாய்களைக் கொல்லவேவேண்டுமென்று - நான் சொல்லவில்லை ; இந்த நாய்களைக் கண்டதுமே கொன்று போடவேண்டுமென்றும் கூறவில்லை. இதைக் கட்டுப்படுத்த ஒரு சட்டம் இருந்தால் நன்மை என்பதைச் சுட்டிக் காட்டி

*சிராவகர் – ஜைனர்களில் இல்லறம் நடத்துபவர்.

னேன். சட்டம் இயற்றியதும் காருண்யமுள்ளவர்கள் விழித்துக்கொள்ளுவார்கள், தெரு நாய்களைப் பராமரிக்கச் சிறந்த வழிகளைக் காணுவார்கள் என்பதற்காகவே கூறினேன். சில நாய்களைச் சிலர் தங்களுக்குச் சொந்தமாக்கிக் கொள்ளலாம்; வேறு சில வற்றை ஒதுக்கித் தனி இடத்தில் அடைத்து வைக்கலாம். பரிகாரம் செய்யும்போது அது நிரந்தரமானதாக இருக்க வேண்டும். தெரு நாய்கள் ஆகாயத்திலிருந்து குதித்தவை அல்ல. அவை சமூகத்தின் சோம்பல், அசிரத்தை, அறியாமை, இவற்றின் அறிகுறியே. அவை தொல்லை யாகிவிடுவது நமது அறியாமையாலும் காருண்யக் குறைவினாலுமே. தெரு நாய்க்கு நீங்கள் சோறு போடவில்லையானால் அது ஓடிவிடும். சமூகத்தின் நன்மையை முன்னிட்டேயன்றி நாய்களின் நலனைக் கருதியும் மேற்கண்ட முறைகளை நான் கூறுகிறேன். எந்த ஜீவனையும் கண்டபடியெல்லாம் அலைய விடாமல் இருப்பது ஜீவகாருண்யமுள்ளோரின் கடமை. இந்தக் கடமையை நிறைவேற்றுவதில் சில சமயம் சில நாய்களைக் கொல்ல வேண்டியதும் கடமையாகலாம்.

மற்றோர் கேள்வி இது :

"சமூகத்திற்கு ஆபத்தாகிவிடும்போது நாய்களை மனிதன் கொன்றுவிடுவது நிச்சயம் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால், 'அவைகளுக்குப் பைத்தியம் பிடிக்கும் வரையில் பொறுத்திருப்பது அவைகளிடம் காருண்யம் காட்டுவதாகாது' என்று நீங்கள் கூறுகிறீர்கள். அப்படியானால், ஒவ்வொரு நாய்க்கும் பைத்தியம் பிடித்துவிடக்கூடும்; ஆகவே, முன்னெச்சரிக்கையாக அதைக் கொன்றுவிட வேண்டும் என்றாகிறது. ஆசிரமத்தைச் சேர்ந்த ஒரு நண்பரைப் பார்த்தேன். இதுவல்ல உங்கள் கருத்து என்றும், நாய்கள் ஆபத்தாகிவிடும்போது கடைசி வழியாக அப்படிச் செய்யவேண்டும் என்றுதான் நீங்கள் கூறியிருப்பதாகவும் அவர் சொன்னார். உங்கள் கட்டுரைகளிலிருந்து இது தெளிவாகவில்லை; தெளிவுபடுத்துவீர்களா?"

என்னுடைய முந்திய கட்டுரைகளிலும் முதல் கேள்விக்கு நான் தந்துள்ள பதிலிலும் தெளிவுபடுத்த வேண்டியது எதுவும் இல்லை. நாய்களுக்குப் பைத்தியம் பிடிக்கும் வரையில் பொறுத்திருக்கக்கூடாது என்று நான் சொல்லுவதன் கருத்தை விளக்குகிறேன். தெருவில் திரியும் ஒவ்வொரு நாயும் தீமை விளைவிப்பதே. இத்தீமை நகரங்களில் மாத்திரமே இருக்கிறது; இது நிற்கவேண்டும். ஒரு பாம்பு நம்மைக் கடிக்கும் வரையில் நாம் பொறுத்திருப்பதில்லை. நாய்க்கு இருக்கும் நோய் அதன் கடியின் வலுவில் மறைந்திருக்கிறது. அகமதாபாது வைத்தியசாலையில் நாய்க்கடி நோய்க்குச் சிகிச்சை பெற்றவர்களின் தொகையைக் காட்டும் குறிப்பு ஒன்றை ஒரு நண்பர் எனக்கு அனுப்பியிருக்கிறார் :

| காலம் | நகரில் | ஜில்லாக்களிலிருந்து | மொத்தம் |
|---|---|---|---|
| 1925 ஜனவரி முதல் டிசம்பர் வரை | 194 | 923 | 1,117 |
| 1926 ஜனவரி முதல் செப்டம்பர் வரை | 295 | 695 | 990 |

இந்தப் புள்ளி விவரம் ஒவ்வொருவரையும், முக்கியமாக ஜீவகாருண்யம் மிகுந்தவரைக் கட்டாயம் திடுக்கிடச் செய்யும். இதில் நோயுற்றவர்கள் எல்லோருமே நாய்க்கடியினுல் பாதிக்கப்பட்டவர்கள் அல்ல என்று இருக்கலாம்; இதையும் ஒப்புக்கொள்ளுகிறேன். ஒரு நாய் நோய் பிடித்ததா, இல்லையா என்பதைச் சொல்லுவது கஷ்டம். ஆனுல், பல நாய்கள் பைத்தியம் பிடித்தவை என்று பின்னுல் காணப்படுவதால் பலர் பயந்துகொண்டு வைத்தியசாலைக்கு ஓடுகின்றனர். அவர்களுக்கு இருக்கும் இந்தப் பயத்தைப் போக்குவதற்குள்ள ஒரே வழி, நாய்களைத் திரியவிடாமல் செய்வதே.

நாற்பது ஆண்டுகளுக்கு முன்னுல், பைத்தியம் பிடித்த நாய்களை ஒழிப்பதற்கு இங்கிலாந்தில் கடுமையான நடவடிக்கைகளை எடுத்தபோது நான் அங்கு இருந்தேன். அங்கே தெருவில் அலையும் நாய்களே இல்லை. சொந்தக்காரர்களிடம் இருக்கும் நாய்கள்கூட, கழுத்துப்பட்டையும் அதில் அந்நாயின் சொந்தக்காரர்களின் பெயரும் விலாசமும் எழுதிய பில்லையும் இல்லையானுல் கொல்லப்படும் என்று ஓர் உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. முற்றிலும் பொதுஜன நன்மையை முன்னிட்டே அந்த நடவடிக்கை எடுக்கப்பட்டது. மறுநாளே லண்டனிலிருந்த எல்லா நாய்களும் கழுத்துப் பட்டை, சங்கிலியுடன் காணப்பட்டன. ஆகவே, கொல்ல வேண்டியிருந்தது ஒரு சில நாய்களையே. மேற்கத்திய நாட்டு மக்கள் ஜீவகாருண்யம் என்பதையே அறியாதவரென்று யாராவது நினைத்தால் அது தவறு. ஜீவகாருண்ய லட்சியம் மேற்கத்திய நாடுகளில் ஒரு வேளை குறைவாயிருக்கலாம். ஆனுல், அதை நாம் அனுசரிப்பதைவிட அவர்கள் மிகவும் ஒழுங்காக அனுசரிக்கின்றனர். உயர்ந்த லட்சியத்தோடு நாம் திருப்தி அடைந்து விடுகிறோம். அதைக் கையாளும்போது சோம்பலாகவோ மெதுவாகவோ நடந்துகொள்கிறோம். நம்மிடையே உள்ள ஆடுமாடுகள், பரம ஏழைகள், மற்ற மிருகங்கள் இவை நாம் இருளில் அழுந்திக் கிடப்பதைச் சுட்டிக் காட்டும். நமக்கு இருக்கும் தருமத்தைவிடத் தருமமின்மையையே இவை நன்ருகப் புலப்படுத்துகின்றன.

இது மூன்றாவது கேள்வி :

" தனிப்பட்டவருக்கும் சமூகத்திற்கும் நீங்கள் வெவ்வேறு தருமத்தைக் கூறுகிறீர்கள். இரண்டுக்கும் ஏன் ஒரே தருமமாக இருக்கக்கூடாது? இரண்டுக்கும் லட்சியம் ஒன்றாகவே இருக்க வேண்டும். அதை நிறைவேற்றி வைப்பது கஷ்டமாயிருக்கும் என்பது வேறு விஷயம். ஏனெனில், தனிப்பட்டவரின் காரியத்தில்கூடத் தம்முடைய லட்சியத்தை நடைமுறையில் அவரால் எந்த அளவுக்கு நிறைவேற்ற முடியும் என்பதைச் சந்தர்ப்பம் ஒன்றே காட்டமுடியும். 'என் உயிரைக் கொடுத்தாயினும் கொடிய மிருகத்தையும் காப்பாற்றவேண்டும் என்பதே என் லட்சியம் என்று நீங்கள் கூறி இருக்கிறீர்கள். ஆனால் அத்தகைய மிருகத்திற்கு எதிர்ப்படும்போது உண்மையில் நீங்கள் என்ன செய்வீர்கள் என்பதைச் சொல்லமுடியாது என்றும் நீங்கள் கூறுகிறீர்கள். இவ்விதமே சமூகமும் உயர்ந்த லட்சியத்தை மேற்கொண்டு தனிப்பட்டவர்கள் தங்கள் ஆற்றலுக்கு ஏற்றபடி அதை அனுசரித்துக்கொள்ளட்டும் என்று ஏன் விட்டு விடக்கூடாது ?"

தனிப்பட்டவருக்கும் சமூகத்திற்குமான தருமத்தைப்பற்றிய என் விளக்கம் ஒரே மாதிரியானதே. எப்பொழுதும் லட்சியம் ஒன்றாகவே இருக்கவேண்டும். ஆனால், அதை மேற்கொள்வதில் தனிப்பட்டவர்களுக்கும் சமூகத்திற்கும் பாகுபாடு இருப்பதாகக் கருதுகிறேன். உண்மையைச் சொன்னால், மேற்கொள்ளுவதில் தனிப்பட்டவர் ஒவ்வொருவர் விஷயத்திலும் வேறுபாடு இருக்கிறது. இருவர், அகிம்சைக்குக் கொள்ளும் கருத்து ஒன்றேயாயினும் அந்த இருவருக்கும் அகிம்சையில் ஒரே அளவான பயிற்சி இருப்பதாக நான் அறிந்ததில்லை. இதை மேற்கொள்வதற்குச் சமூகத்திற்கு இருக்கும் பயிற்சியின் அளவு, அந்தச் சமூகத்தின் உறுப்பினர்களது பலதரப்பட்ட ஆற்றலின் சராசரியேயாகும். உதாரணமாக, சமூகத்தின் ஒரு பகுதியினர் பாலே சாப்பிடுகிறவர்களாகவும், மிகுதிப் பேர் பழங்கள் சாப்பிடுபவர்களாகவும் இருந்தால், சமூகத்திற்கான பழக்கம் பாலின் அல்லது பழங்களின் உபயோக அளவை ஒட்டியே இருக்கும்.

இக்கடிதத்தை எழுதியிருப்பவர் பிறகு இரு ஜைன தத்துவங்களை வருமாறு குறிப்பிடுகிறார் :

" ஜைன சமயம் 'ஸ்யாத்வாத'த்தை -பல முகமான உண்மையை- அடிப்படையாகக் கொண்டது. 'பூரணமான விதி எதுவும் சரியல்ல; பொருந்தும் விதியே சரியான விதி' என்று சரியானபடி சொல்லப்பட்டும் இருக்கிறது. ஒரு குறிப்பிட்ட சந்தர்ப்பத்தில் இம்சை என்று சொல்லப்படுவது மற்றச் சந்தர்ப்பங்களில் அகிம்சையாகலாம் என்பதே அதன் பொருள். தன்னுடைய நடத்தை சரியா என்பதை நிர்ணயித்துக்கொள்ளுவதில் மனிதன் எப்பொழுதும் தன் பகுத்தறிவை உபயோகிக்க வேண்டும். ஜைனர்களில் சாதுக்கள் (துறவிகள்), சிராவகர்கள் (இல்லறத்தோர்) என இரு பகுதியினர் இருக்கின்றனர். அவர்களுடைய ஒழுக்கக் கோட்பாடு வருமாறு வகுக்கப்பட்டிருக்கிறது: சாது, எப்பொழுதும் அகிம்சையோடு இருப்பவர்; தம்மைக் காத்துக்கொள்ள உணவு கொள்

ளாதவர்; தமக்கென்று சமைத்துக்கொள்ளமாட்டார்; தம் பொருட்டு என்று ஓர் அடி எடுத்துவைத்தும் நடக்கமாட்டார். அவர் நடவடிக்கை முழுவதுமே சமூகத்தின் நன்மைக்காகத்தான். சாத்தியமான அளவு அது தீமையற்றதாகவும் இருக்க வேண்டும். தவிர்க்க வேண்டுவன எனச் சாத்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கும் நாற்பத்திரண்டையும் அவர் தவிர்க்க வேண்டும். சாது, நிர்க்கிரந்தர், அதாவது பந்தங்களிலிருந்து விடுபட்டவர் என்று கூறப்படுகிறது. ஆனல், மேற்சொன்ன வகையான சாது எவருமே இன்று இல்லை.

"சிராவகர் தமக்கு அத்தியாவசியமானதாக இருந்தாலன்றி எந்த ஜீவனையும் கொல்லவோ, துன்புறுத்தவோ கூடாது. அவர் உலகத்தில் வாழ வேண்டியவராகையால் இதற்கு மேல் அவர் தமது ஜீவகாருண்யத்தை அனுசரிக்க முடியாது. ஆகவே, ஒரு சாதுவிடமிருந்து நூற்றுக்கு நூறு காருண்யம் எதிர்பார்க்கப்படுகிறது என்ருல், சிராவகரிடமிருந்து நூற்றுக்கு ஒன்றே காலே எதிர்பார்க்கப்படுகிறது. பின்னர்க் கூறப்பட்டவர் தம்மிடம் எதிர்பார்க்கப்படுவதற்கு அதிகமான ஜீவகாருண்யமுள்ளவராயின் அவர் சாதுவின் நிலையை எய்துவார். ஆனல், சிராவகரிடமிருந்து வேறு அதிகமாக எதுவும் எதிர்பார்க்கப்படவில்லை."

இதிலுள்ள பாகுபாட்டின் கருத்தை நான் அறிவேன். இந்தக் கட்டுரைகளில் நான் வெளியிட்டிருக்கும் என் கருத்துக்கள், ஜைனக் கோட்பாடுகளுக்கு மாறுபட்டவை அல்ல என்பதை உணர்ந்தே இருக்கிறேன். மேலே குறிப்பிடப்பட்டுள்ள விளக்கத்தை ஜைனர்கள் ஒப்புக்கொள்ளுவதாயின் நான் கூறியிருக்கும் கருத்துக்களை அதிலேயே காணலாம். ஆனல் அவர்கள் ஏற்ருலும், ஏற்காது போனலும் என்னுடைய கருத்துக்கள் சுயமாகவே நியாயமானவை, அதற்குத் தகுதியுடையவை என்பதைப் பணிவுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

## 6

ஒரு நண்பர் பல கேள்விகள் அடங்கிய ஒரு நீண்ட கடிதத்தை எழுதிப் பல சங்கடங்களை எழுப்புகிருர். 'நவஜீவன்' பத்திரிகையில் பிரசுரமாகியிருக்கும் என் கட்டுரைகளுக்கு அப்பிரதிகளின் பக்கத்திலேயே மிக விரிவாகக் குறிப்புக்களை எழுதி எனக்கு அனுப்பியிருக்கிருர். அவருடைய கேள்விகளில் சிலவற்றிற்கு முன்பே இப்பத்திரிகையில் பதில் கூறியிருக்கிறேன். மற்றக் கேள்விகளையெல்லாம் இங்கே கொடுக்காமல் அவற்றிற்குப் பதில்களை மாத்திரமே கொடுக்கிறேன்.

இப்பிரச்னை முழுவதையும் விருப்பு வெறுப்பு எதுவுமின்றி ஆராய்கிறேன் என்று நான் நினைக்கிறேன். இம்சையைப் பற்றியோ அல்லது இவ்விஷயத்தில் எனக்குள்ள விசித்திரமான கருத்துக்கள் பற்றியோ பாரபட்சமாக நான் நடப்பதாகக் குற்றம் கூற முடியாது என்றும் எண்ணுகிறேன். அகிம்சையின்

மூலம் சத்தியத்தை நான் நாடுகிறேன். என் பட்சமெல்லாம் சத்தியத்தினிடமே. வேறு எந்த வழியிலும் அதை அடைய முடியாது என்பது எனது திடமான கருத்து. சிக்கலாக உள்ள இந்தப் பிரச்னையில் எனக்குத் தோன்றும் விவாதம், சத்தியம் நமது லட்சியமா, இல்லையா என்பதோ அல்லது அதற்கு அகிம்சைதான் ஒரே வழியா, இல்லையா என்பதோ அன்று. ஆகவே, எனக்கு இதிலுள்ள பிரச்னை இந்தக் கொள்கை களைக் கையாளுவதைப் பற்றியதேயாம். ஒவ்வொரு நாளும் புதிய விஷயங்கள் எனக்குத் தென்படுவதைக் காண்கிறேன். அகிம்சையை கையாளுவதில் நான் தவறு செய்துவிடுவதற் குச் சாத்தியம் உண்டு; தவறுகளைத் தவிர்க்க நான் என்ன முன் எச்சரிக்கையான காரியங்களை எடுத்துக்கொண்டாலும் எப் பொழுதாவது தவறிவிடக்கூடியதும் சாத்தியமே. ஆகவே, தங்களுடைய கருத்திற்கு நான் உடன்பட முடியாதபோது நான் பாரபட்சமாக இருப்பதாக நண்பர்கள் குறை கூற வேண்டாம். தவறினல், என்னை அறியாமலேயே அதைச் செய்தேன் என்று என்னை நம்பிச் சகித்துக்கொள்ளுங்கள். இப்பொழுது என் பதில்களைக் கூறுகிறேன்:

1. தீர்க்க வேண்டிய பிரச்னை, பைத்தியம் பிடித்த நாய்க் கடி நோய் என்னவென்பதோ, அதை எப்படிக் குணப்படுத்து வது என்பதோ அன்று.

2. முனிசிபாலிட்டியோ அல்லது அரசாங்கமோ பொது ஜன நன்மை எது என்று எண்ணுகிறதோ அந்த வகையில் தான் பரிகாரத்தைக் காணுமேயன்றி அகிம்சையை அனு சரித்து அல்ல. சமூகத் தலைவரான மகாஜன் உண்மையிலேயே அகிம்சையோடு இருப்பவராயின் சரியான பரிகாரத்தை அவர் காண முடியும். மிருகங்களை (இந்த விஷயத்தில் நாய்களை)க் கொல்லுதில்லை என்ற முடிவான கொள்கையை அரசாங்கம் என்றுமே ஏற்றுக்கொள்ளாது. முனிசிபாலிட்டிகளில் பல தரப் பட்ட மதங்களையும் சமூகங்களையும் சேர்ந்தவர்கள் உறுப்பினராய் இருக்கின்றனர். ஆகவே, அகிம்சை உபாயத்தைச் சிபாரிசு செய் வார்கள் என எதிர்பார்க்க முடியாது.

3. அகிம்சையோடு கூடிய உபாயத்தைக் காண வேண்டிய கடமை மகாஜனுடையதே. மகாஜன் குற்றமற்றவராயிருக்கிறர் என்பதோ, எதுவும் செய்ய இயலாமல் இருக்கிறர் என்பதோ தவறு.

4. இந்த விவாதத்திற்காகப் பைத்தியம் பிடித்த நாய்க் கும்; கொலை புரியும் வெறியில் உள்ள மனிதனுக்கும் இடையே நான் எந்தப் பாகுபாடும் செய்யவில்லை. பழக்கமாகிவிட்ட

பலாத்காரம் ஒரு நோய். பழக்கமாகவே பலாத்காரம் புரியும் ஒருவன், அப்படியே இருக்க விட்டுவைக்கப்பட்டிருப் பதனாலேயே கொலை போன்ற காரியங்களைத் தொடர்ந்து செய்துகொண்டே போகிறான். வெறி பிடித்த நாயாயினும் சரி, வெறி பிடித்த மனிதனாயினும் சரி, இரங்கத்தக்க உயிர்களே. மற்றவர்களைத் துன்பப்படுத்தும் வேலையில் இந்த உயிர்கள் ஈடு பட்டிருக்கும்போது, இவைகளைக் கொன்றுவிடுவதைத் தவிர வேறு பரிகாரமே இல்லாதபோது, இவைகளுடைய நடவடிக்கையைத் தடுக்க அப்படிச் செய்ய வேண்டியதும் கடமையாகிறது. அகிம்சையைக் கையாளுபவருக்கோ இக்கடமை இன்னும் அதிகமாகிறது.

5. ஒவ்வொருவரும் நாய் வைத்துக்கொள்ள வேண்டும் என்று நான் சொல்லவில்லை. சொந்தக்காரர் என்று ஒருவர் இல்லாமல் எந்த நாயும் இருக்கக்கூடாது என்றே கூறினேன். ஒருவருக்குச் சொந்தமான நாயால் தீமையே இராது என்ப தல்ல; அவைகளுக்கு நோய் வந்தால், அவைகளுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டால், அவற்றிற்கு அந்நாய்களின் சொந்தக்காரர்களே பொறுப்புள்ளவராயிருப்பார்.

6. சொந்தக்காரர் யாரும் இல்லாத தெரு நாய்கள் ஆடு கள்போலச் சாதுவானவையல்ல; அப்படி அவை என்றும் இருந்த தில்லை. ஒருவருக்குச் சொந்தமான நாய்கள் பொதுவாக அவ்விதம் இருக்கின்றன. எல்லா நாய்களும் தீமை விளைவிக் காதவையாகவேண்டும் என்பதே இப்பொழுது நடக்கும் விவா தத்தின் நோக்கம்.

7. தெரு நாய்களைக் கண்ட இடத்திலெல்லாம் கொல்ல வேண்டும் என்று நான் குறிப்பிடவேயில்லை. நாய்களின் நன் மையை முன்னிட்டுச் சட்டம் செய்ய வேண்டும் என்றே யோசனை கூறினேன். இது, ஜீவகாருண்ய நோக்கமுள்ளவர்கள் தங்கள் கடமையை உணரும்படி செய்யும். அவர்கள் அப்போதுதான் அந்த நாய்களைச் சொந்தமாக்கிக்கொள்ளவோ அல்லது மற்றப் பரிகாரங்களின் மூலம் தெரு நாய்களே இராமல் பார்த்துக் கொள்ளவோ முனைவார்கள். பிச்சைக்காரனுக்குப் பிச்சை போட மறுப்பது அவனைப் பட்டினி போடுவதற்காக அல்ல; தன் உதவி யைத் தானே நாட அவனுக்குப் போதித்து, அவனை மனிதனுக்கும் நோக்கத்தாலேயே. நாய்களைக் கொல்லும் கடமை, என்னுடைய முந்திய கட்டுரைகளில் குறிப்பிட்டிருக்கும் சந்தர்ப்பங்களிலும் அளவிலும் ஏற்படுகிறது. நாய்களை ஒழித்துவிடுவது பாபம் என்று கூறுவது நான் கூறுவதை மறுப்பதற்கல்ல. ஏனெனில், இதற்கு மாறான கருத்தை நான் தெரிவிக்கவேயில்லை.

8. ஸ்ரீ அம்பாலாலின் செய்கை சரியானதா, இல்லையா, அதைப்பற்றிய என் கருத்துச் சரியா, தவறு என்று விவாதிப்பது வீண் வேலை. அச்சம்பவத்தின் முழு விவரமும் பொது மக்களுக்குத் தெரியாது. அகிம்சையைப்பற்றிய விரிவான பிரச்னையே விஷயம்; இந்த விவாதத்தில் ஸ்ரீ அம்பாலாலை இழுப்பது விஷயத்தைக் குழப்புவதாகும்.

9. விஷயம் இதுதான்: வேறு எதுவும் சாத்தியம் இல்லாதபோது, சில சந்தர்ப்பங்களில் சில நாய்களைக் கொல்லுவது கடமையாகிறது; அது அகிம்சா தருமத்திற்கு உகந்ததாகுமா என்றால், அப்படி இருக்கலாம் என்கிறேன். இந்த விஷயத்தில் இருவித அபிப்பிராயங்களுக்கும் இடமே இல்லை. ஒரு குறிப்பிட்ட சந்தர்ப்பம் அக்காரியத்தைச் செய்வதை நியாயமாக்குகிறதா என்பதில் மாறுபட்ட கருத்து இருக்கலாம். தன்னுடைய நோக்கத்தைக் கொண்டு அத்தகைய சந்தர்ப்பம் எப்பொழுதுதான் ஏற்படும் என்பது அகிம்சையை அனுசரிப்போருக்கு ஆறுதலாகும்.

10. ஆனால், தாற்காலிகமாக ஒரு மாறுபட்ட கருத்து இருக்கவேண்டியதை நான் காண்கிறேன். ஆலோசனைக்கு எடுத்துக்கொண்டிருக்கும் இக்கடிதத்திலும், மற்றும் பலவற்றிலும், சந்தர்ப்பம் எதுவாயிருந்தாலும் ஜீவராசிகளைக் கொல்லுவது என்பதில் கோரமே தொனிக்கிறது என்பதைக் காண்கிறேன். உதாரணமாக, வேறு ஒரு யோசனை கூறப்படுகிறது: பைத்தியம் பிடித்த நாய்களை ஓர் இடத்தில் அடைத்துவைத்துத் தாமே அவை மெல்ல மெல்லச் சாவதற்கு விடலாம் என்று சொல்லப்படுகிறது. கருணையைப்பற்றிய எனது அபிப்பிராயம் இதற்கு இடமே தராது. ஒரு நாயோ, வேறு எந்த ஜீவனோ, மெல்ல மெல்லச் சாவதானமான சித்திரவதையை அனுபவிக்கும் ஒரு நிலையை நான் சிறிதும் சகியேன். இத்தகைய நிலையில் இருக்கும் ஒரு மனிதனை நான் கொல்லமாட்டேன். ஏனெனில், உதவக்கூடிய பல பரிகாரங்கள் என்னிடம் இருக்கின்றன. இதே நிலையில் இருக்கும் ஒரு நாயை நான் கொல்லவேண்டும். ஏனெனில், அதன் விஷயத்தில் நான் செய்வதற்கான பரிகாரம் இல்லை. பைத்தியம் பிடித்த நாய் என் குழந்தையைக் கடித்துவிட்டால் அக்குழந்தை அனுபவிக்கும் துன்பத்தைப் போக்குவதற்கு உதவியான பரிகாரம் எதுவுமே இல்லையாயின், அக்குழந்தையின் உயிரைப் போக்கிவிடுவதே என் கடமை என நான் கருத வேண்டும். விதியைப்பற்றிய நம்பிக்கைக்கும் எல்லையுண்டு. எல்லாப் பரிகாரங்களையும் செய்து

பார்த்தும் முடியாத நிலையில்தான் விதி என்று விட்டு விடுகிறோம். தாங்கமுடியாத சித்திரவதையை அனுபவிக்கும் ஒரு குழந்தைக்கு அது படும் துன்பத்திலிருந்து அதை நிவர்த்திக்கும் உபாயங்களில் ஒன்றேயானதும், முடிவானதும் அதன் உயிரைப் போக்கிவிடுவதேயாம்.

ஆனால், இந்த விஷயத்தில் நான் அதிகம் வற்புறுத்தக் கூடாது. அகிம்சையை அனுசரிப்பவர்களால் ஆகாதது என்று என் மனத்தில் என்ன படுகிறதோ அது, இந்தத் தருமத்தை உள்ளபடி அறிந்துகொள்ளுவதற்கு ஒரு தடையாகும். ஆகையால், என் கருத்துக்கு மாறுபட்ட கருத்துள்ளவர்கள் இப் போதைக்கு என்னைப் பொறுத்துக்கொள்ளுவார்களாக.

சிந்தனை நிறைந்த நண்பரின் கடிதத்தைக் குறித்து - இவ் வளவு கோபமான ஒரு கடிதத்தைக் குறித்து - இனிக் கவனிக் கிறேன். அக்கடிதம் கூறுவதாவது :

"மேனாட்டு மனப்போக்கு உம்மிடம் படிந்திருப்பதால்,மனிதனுக்காகத் தாழ்ந்த மிருகங்களைக் கொல்லுவது சரியானதே என்று எண்ணக் கற்றுக்கொண் டிருக்கிறீர்கள். உங்கள் பிழையை ஒப்புக்கொண்டு உலகத்தினிடம் மன்னிப்புக் கேட்பது உங்களுக்கு நல்லது. எவ்வளவோ மாறுபாட்டுக்குப் பிறகு இவ்விஷ யத்தில் நீங்கள் ஒரு முடிவுக்கு வந்திருக்க வேண்டும். அதற்குப் பதிலாக நீங்களோ ஆவேசத்தோடு கட்சிவாதம் செய்து உங்களை அவமதித்துக்கொண் டீர்கள்."

இந்த ரகக் கடிதங்களிலிருந்து குறைந்த வசையுள்ள வாக் கியத்தை நான் பொறுக்கி எடுத்திருக்கிறேன். தீர யோசிக்கா மல் நான் எந்தக் கருத்துக்கும் வந்துவிடவில்லை என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இது நான் சமீபத்தில் கொண்ட கருத்துமன்று ; அவசரமாக வந்த முடிவுமல்ல. ஒரு கருத்திற்கு வருவதற்குத் தன்னுடைய பெருமை என்பது குறிக்கிட யாரும் அனுமதிக்கக்கூடாது ; இல்லையானால், உண்மையைக் கண்டறிய முடியாது.

மேனாட்டைப்பற்றிய யாவையுமே நிராகரித்துவிடவேண் டும் என்று நான் எண்ணவில்லை. மேனாட்டு நாகரிகத்தை நான் எவ்வளவோ பலமாகக் கண்டித்திருக்கிறேன். இன்னும் கண்டித்தும் வருகிறேன். ஆனால், மேனாட்டைப்பற்றியன என்ப தற்காக எல்லாவற்றையுமே நிராகரித்துவிட வேண்டும் என்பது இல்லை. மேனாடுகளிலிருந்து எவ்வளவோ கற்றுக் கொண்டிருக்கிறேன். அதற்காக நன்றி செலுத்துகிறேன். மேனாட்டினரின் தொடர்பும் அவர்களுடைய இலக்கியமும் என் மனப்போக்கில் மாறுதல் செய்யாதிருக்குமாயின் நான் துர்ப் பாக்கியன் என்றே எண்ணிக்கொள்ள வேண்டும். ஆனால்,

நாய்களைப்பற்றிய என் கருத்துக்கு, மேனாட்டுக் கல்விக்கோ அல்லது மேனாட்டுச் செல்வாக்கிற்கோ நான் கடமைப்பட்டிருப்ப தாகக் கருதவில்லை. மனிதனுடைய நன்மைக்காகத் தாழ்ந்த மிருகங்களைக் கொல்லுவது பாபமல்ல என்று மேற்கத்திய நாட்டினர் (ஒரு சிறு சம்பிரதாயத்தவரைத் தவிர) எண்ணு கின்றனர். இதனாலேயே உயிருள்ளவற்றை அறுத்துச் சோதிப்பதை அவர்கள் ஆமோதிக்கின்றனர். நாவின் ருசியைத் திருப்தி செய்துகொள்வதற்காக எல்லாவிதமான பலாத் காரங்களையும் உபயோகிப்பது தவறு என்று மேற்கு நாடுகள் நினைப்பதில்லை. இத்தகைய கருத்துக்களை நான் ஆதரிக்கவில்லை. இனியும் பயனில்லை என்றாகிவிடும் மிருகங்களைக் கொன்று விடுவது மேற்கத்திய நிலைமையின்படி பாபமல்ல; இதற்கு மாறாக அது நல்ல காரியம். நானோ, ஒவ்வொரு கட்டத் திலும் எல்லையை ஒப்புக்கொள்ளுகிறேன். தாவர இனங்களை நாசப்படுத்துவதும் இம்சை என நான் கருதுகிறேன். இது மேனாட்டின் போதனையல்ல.

கொள்கைகளையும் அவற்றை மேற்கொள்வதையும்பற்றி விவாதிக்கும்போது, எதிராக வாதிப்பவரின் கருத்துக்களைப் பயன்படுத்த இடமே இல்லை. என்னுடைய கருத்துக்களை, அவை மேற்கு நாடுகளிலிருந்தோ அல்லது கிழக்கு நாடுகளி லிருந்தோ கொண்டனவாகவே இருந்தாலும் அவைகளையெல்லாம் பொருட்படுத்தாது, அவை உள்ளவாறே கவனிக்க வேண்டும். கவனிக்கவேண்டியது எல்லாம், அவை உண்மை அல்லது பொய், இம்சை அல்லது அகிம்சை இவற்றில் எதை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன என்பதே. உண்மையையும் அகிம்சையையுமே அவை அடிப்படையாகக் கொண் டவை என்று நான் திடமாக நம்புகிறேன்.

7

சில சந்தர்ப்பங்களில் நாய்களைக் கொன்றுவிட வேண்டும் என்று நான் கூறிய யோசனையில் அடங்கியிருக்கும் முக்கியமான விஷயத்தை எனக்குக் கடிதம் எழுதி வருபவர்களில் சிலர் புரிந்துகொண்டதாகத் தெரியவில்லை. உதாரணமாக, முற்றிலும் எதையும் நன்கு பயன் படுத்திக்கொள்வது என்ற முறையில் அந்த யோசனையை நான் சொல்லவே இல்லை. அச்செயலினால் சமூகத்திற்கு ஏற்படும் பயன் தானாகவே ஏற்படுவது. ஆனால், முக்கியமான விஷயம் என்னவெனில், அந்த ஜீவன் கள் படும் நாள்பட்ட துன்பத்திலிருந்து—அவை இப்பொழு துள்ள நிலைமையைப் பார்க்கும்போது என்னால் சகிக்கவே

முடியவில்லை—நிவாரணம் அளிக்க வேண்டும் என்பதே. இதைக் குறித்து நான் எழுதிவரும்கட்டுரைகளில் தாழ்வான மிருகங்களைத் தன் விருப்பம்போல் நடத்த மனிதனுக்கு உரிமை இருக்கிறது, தன்னுடைய சௌகரியத்திற்கும் இன்பத்திற்கும் அவைகளை அவன் கொல்லலாம் என்ற யோசனை ஒரு சிறிதும் சுட்டிக் காட்டப்படவில்லை. உயர்ந்த ஆத்மாக்களின் குணம் என்னவென்றால், தம்மைச் சூழ இருக்கும் துன்பங்களைக் கண்டும் வருந்தாதிருப்பது என்று ஒருவர் எழுதித் தமக்குள்ள கருத்துக் குழப்பத்தை வெளிப்படுத்தியுள்ளார். பிறர் அனுபவிக்கும் துன்பத்தைக் கண்டு மனமுருகத் தெரிந்து கொள்ளாதவன்—பிறனுக்கு ஏற்படுவது தனக்கென்றும், தனக்கு ஏற்படுவது பிறரையும் பாதிக்குமென்றும் அறிந்துகொள்ளாத வன்—கடின சித்தனேயன்றி உயர்ந்த ஆத்மாவல்ல. எல்லோரும் இன்புற்று இருக்க வேண்டும் என்று தீவிரமாகக் கொள்ளும் ஆர்வமே அகிம்சை எண்ணத்திற்குப் பிறப்பிடமாகும். கருணையே உருவெடுத்தவரான முனிவர்கள் தம்முடைய உடல் இன்பங்களை யெல்லாம் துறந்துவிட்டு, தம்மைச் சுற்றிலுமுள்ள ஆதரவற்ற ஜீவன்களைச் சிலர் தங்கள் இன்பத்திற்காகக் கொல்லுவதைத் தடுப்பதிலேயே ஆத்மானந்தத்தைக் கண்டனர்.

ஒரு பாம்பு என்னைக் கடிக்க வந்தால் அப்பொழுது நான் என்ன செய்ய வேண்டும் என்பதில் எனக்கு இருந்த சந்தே கத்தை ஸ்ரீ ராஜசந்திரரிடம் நான் கூறியபோது அவர் எனக்குச் சொன்ன புத்திமதியை, கடிதம் எழுதியிருக்கும் ஒருவர் எனக்கு நினைவூட்டுகிறார். பாம்பை நான் கொல்லுவதை விட அது என்னைக் கொல்லட்டும் என்று இருந்துவிட வேண்டும் என்பதே அவர் சொன்ன புத்திமதி. ஆனால், இப்பொழுது விவாதத்தில் இருக்கும் விஷயம் என்னைப்பற்றியதல்ல, பொது வாகச் சமூகத்தின் நன்மையையும் துன்பப்படும் மிருகங்களையும் பற்றியது என்பதை அந்நிருபர் மறந்துவிட்டார். நான் ராஜ சந்திரபாயிடம் போய், சகிக்கமுடியாத துன்பத்தை அனுபவித் துக்கொண்டு வரும் ஒரு பாம்பை, அதன் துன்பத்தை வேறு வழியில் போக்க என்னால் முடியாதிருக்கும்போது அதை நான் கொல்ல வேண்டுமா, கொல்லாதிருக்க வேண்டுமா, என் பாதுகாப்பில் இருக்கும் ஒரு குழந்தையைப் பாம்பு கடிக்க வரும்போது அதை வேறு வழியில் விரட்டிவிட என்னால் முடி யாமல் போனால் அப்பொழுது அந்தப் பாம்பைக் கொன்று விடுவதா, கூடாதா என்று கேட்டிருந்தால் அவர் என்ன பதில் சொல்லியிருப்பார் என்பது எனக்குத் தெரியாது. என்னைப்

பொறுத்தவரையில் பதில் பட்டப்பகல் போல் எனக்கு விளங்குகிறது. அதையே கூறியிருக்கிறேன்.

சிரமம் பாராத ஒருவர், ஒரு ஜைன தத்துவ ஞானியின் சில பாடல்களை எனக்கு அனுப்பி, அவற்றில் குறிப்பிட்டிருக்கும் நிலைமையை நான் ஒப்புக்கொள்ளுகிறேனா எனக் கேட்கிறார். அதில் ஒரு செய்யுள், 'பிற உயிர்களைக் கொன்று தின்றுவிடும் ஒரு மிருகத்தைக் கொல்லுவதால் பல உயிர்களைப் பாதுகாக்கலாம். எனினும் அந்த மிருகத்தைக் கொல்லலாகாது' என்று கூறுகிறது. இன்னுமொரு செய்யுள், 'நீண்ட காலம் வாழ்வதற்கு அவைகளை விட்டால் பாபத்தில் இன்னும் ஆழமாக அவை மூழ்கிவிடுமே என்ற ஜீவகாருண்ய உணர்ச்சியால்கூட அவைகளைக் கொல்லலாகாது' என்கிறது. மூன்றாவது செய்யுள், 'துன்பப்படும் ஜீவன்களையும், அவைகளின் துன்பங்களைக் குறைத்துவிடலாம் என்று கருதிக் கொல்லக்கூடாது' என்கிறது.

இச்செய்யுட்களின் பொருள் எனக்குத் தெளிவாகிறது. எல்லாவற்றிற்குமே ஒரு குறிப்பிட்ட கோட்பாடு செயலின் ஊற்றாகிவிடக்கூடாது என்பதே அது. உங்களுக்கு இஷ்டமானதாக இருக்கும் ஒரு கோட்பாட்டைச் செயல் மூலம் அடைந்துவிட வேண்டும் என்பதற்காக அல்லாமல், அது உங்களுக்குத் தவிர்க்கமுடியாத கடமையாகிவிட்டது என்பதனால், நீங்கள் இம்சையைச் செய்யலாம். தானே ஒருவரைத் தேடிக்கொண்டு வரும் பணியை ஆற்றுவது, கீதா வாக்கியத்தின்படி பற்றற்ற செயல் புரிவது, இவை மோட்சத்தை நாடுபவரின் கடமையாகும். இவ்வாறு தாமே நேரும் வேலைகளில் உங்கள் சக்தியை ஈடுபடுத்துங்கள், செயலுக்குப் புதிய துறைகளை நாடாதீர்கள் என்று அந்த ஜைன தத்துவஞானி கூறுவதாக எண்ணுகிறேன். இம்சை அவசியமானதாகவும், தவிர்க்க முடியாததாகவும் இருக்கும்போது ஒருவருடைய செயலில் பற்றற்ற மனப்போக்கே நிலவ வேண்டும் என்பதை அச்செய்யுட்கள் எனக்கு விளக்குவனவாகத் தோன்றுகின்றன.

என் கருத்துக்கள், மூலத்தில் பல ஆதாரங்களிலிருந்து பெறப்பட்டனவாக இருக்கலாம். ஆனால், என்னுடைய இப்போதைய கருத்துக்கு, எந்த ஆதாரத்தையும் தழுவாமல் நான் தனித்து யோசனை செய்த பிறகே வந்திருக்கிறேன். தத்துவஞானியின் உபதேசத்திற்கு இது மாறுபட்டது என்று நிரூபிக்கப்பட்டாலும் அகிம்சைக்கு இது முற்றிலும் பொருத்தமானது என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

## 8

இது சம்பந்தமான கடிதங்கள் இன்னும் வந்து குவிந்து கொண்டிருக்கின்றன. ஆனால், அவைகளில் புதிய கேள்விகளையோ அல்லது புதிதாகக் கூறப்படும் வாதங்களையோ நான் காண வில்லை. ஆகையால், இவ்விஷயத்தைக் குறித்து நினைத்துக் கொண்டிருப்பவர்கள் இதுபற்றி நான் தொடர்ந்து எழுதி வந்திருக்கும் கட்டுரைகளைத் திரும்பத் திரும்பப் படிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். அக்கட்டுரைகள், அவசரப்பட்டுக் கொண்ட ஓர் அபிப்பிராயத்தைப் பற்றியன அல்லவாகையால்-பல ஆண்டு அனுபவத்தின் பேரிலேயே ஏற்பட்டனவாகை யால்-கொஞ்சமும் தயக்கமின்றி அவ்விதம் கூறுகிறேன். புதிய கொள்கை எதையும் நான் சொல்லவில்லை; பழைய கொள்கை களையே மீண்டும் கூற முயன்றிருக்கிறேன். நான் எடுத்துக் காட்டியிருப்பது எவ்வளவு தூரம் சரி என்பதை நான் கூற முடியாது. ஆனால், என்னுடைய நேர்மையான கருத்தையே அது பிரதிபலிப்பதால், அகிம்சையில் பல சிக்கலான பிரச்னைகளை நான் தீர்க்க வேண்டுமென்று பல நண்பர்கள் எதிர்பார்ப்பதால், நான் தொடர்ந்து எழுதி வந்திருப்பவைகளைத் திரும்பப் படிக் கும்படி நான் அவர்களைக் கேட்டுக்கொள்ளத்தான் முடியும். எனக்குக் கடிதம் எழுதியிருப்பவர்களில் சிலர், நான் எழுதி யிருப்பவைகளில் சில வாக்கியங்களை அவற்றின் சந்தர்ப்பங் களிலிருந்து பெயர்த்து எடுத்து எனக்கு விரோதமாக அவை களைக் குறிப்பிடுகின்றனர். சிலர் அவைகளில் ஒரு பகுதியை மேற்கோளாகக் காட்டி எஞ்சியிருக்கும் முக்கியமான பகுதியை விட்டுவிடுகின்றனர்.

இவ்விதம் நாய் இனத்தையே அடியோடு அழித்துவிட வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளவே இல்லை. இதற்கு மாறாக அவை சீராக இருத்தல் வேண்டும் என்பதற்கே யோசனை கூறியிருக்கிறேன். சில நாய்களை, சில சந்தர்ப்பங் களில் கொன்றுவிட வேண்டும் என்று கூறினேன் என்பதைத் திரும்பத் திரும்பச் சொல்லியிருக்கிறேன். இதுவும் ஆட்சேபிக் கப்படலாம். அப்படியானால், அவ்விதம் ஆட்சேபிப்பவர் அதைப் பற்றி மாத்திரம் தம்மைத் தாமே கேட்டுக்கொள்ள வேண்டுமே யன்றி அதற்கு மேல் போகக்கூடாது.

நான் முன்னால் இருந்தபடி அதே அகிம்சைவாதியாகவே தொடர்ந்து இருந்து வருகிறேன். மனிதனிடமும் மிருகங்களிடமும் இருக்கும் உயிர் மாத்திரமல்ல, செடி, பூ ஆகியவைகளி லிருக்கும் உயிரும் தெய்விகமானது என்றே இன்னும் கருது

கிறேன். என்றாலும், காய் வகைகளையும், மலர்களையும், பழங்களை யும் உபயோகித்துக்கொள்ளுகிறேன். உபயோகிப்பதிலுள்ள உணர்ச்சி ஒன்றே முக்கியம். "ஊனுடலுக்கு ஊட்டுவது ஊழலையே விளைவிக்கும். ஆனால், ஆத்ம உணர்ச்சிக்கு ஊட்டு பவன் நித்தியமான வாழ்வையே பெறுவான்." தவிர்க்க முடியாத கடமை யாகிவிடும்போதும், ஊனுடலுக்குப் பதிலாக ஆத்ம உணர்ச்சிக்கென முற்படும்போதுந்தான் செடி அல்லது காய் வகையைப் போல நாய்களை அழிக்கும் யோசனை கூறப் பட்டிருக்கிறது.

என்னை வேதனைப்படுத்துவதெல்லாம் அகிம்சைவாதியிட முள்ள பலமின்மையே. பலமின்மையன்று அகிம்சை; சக்தி யின்மையுமன்று அகிம்சை. அகிம்சை வெல்லற்கரிய சக்தி யாகும். அதன் அளவு கடந்த சக்தியின் பிரகாசத்தில் நாம் திகைத்துப் போவதால் அதனிடமிருந்து பின்வாங்கிக்கொள் கிறோம். நம்மில் சிலரே அதை ஓரளவில் நோக்க முடியும். கட்டுக்கு அடங்காத உணர்ச்சியின் விசேடமான தன்மையே அகிம்சை. பகுத்தறிவு, பற்றில்லாமை, தவம், நடுநிலைமை, ஞானம் ஆகிய மற்றும் பல குணங்களுக்கு வேராக இருப்பது அது. அது வீரர்களின் வழியேயன்றிக் கோழைகளின் வழி அன்று. அகிம்சையை அறிந்திருப்பவர், தம்முடைய வாழ்க் கையில் தாம் காணும் தவிர்க்க முடியாததான இம்சையை யும் பொருளையும் புரிந்துகொண்டு இருக்க வேண்டும். இப்படிக் கூறுவது தவறாக உபயோகிக்கப்பட்டுவிடும் என்பதை அறிவேன். ஆனால், எதுதான் இந்த ஆபத்துக்கு உட்படா மல் இருக்கிறது? கடவுளின் பெயர் வைத்து மோசமான காரியங்களைக்கூட நடத்திவிடவில்லையா? அவர் பெயரால் ரத்த ஆறே பெருக்கெடுக்குமாறு செய்யவில்லையா? அவ ருடைய பெயரால் பேயை நாம் வணங்கவில்லையா? ஆனால், அவையெல்லாம் அவருடைய பெருமையைக் குறைத்துவிட வில்லை. அப்படியானால், அவருடைய பெயரை ஒரு ரகசியமான மூலையில் கொண்டுபோக வேண்டும் என்பது அல்ல.

எல்லாச் செயல்களுமே, இம்சையை முன்கூட்டிக் காட்டு வது போல் கறை பிடித்தவையே. என்றாலும், செயலின் மூலமே செயலின் பிணைப்பிலிருந்து நம்மை விடுவித்துக்கொள் கிறோம். இந்த உடலே பாபக் களஞ்சியம். என்றாலும், பாபத்தின் உறைவிடமான உடலைக் கடவுள் வாழும் புனிதக் கோயிலாக்கி முக்தியை அடையப் பாடுபடுகிறோம். இம்சை விஷயத்திலும் அதுவேதான்.

நம்மை முன்னுக்குக் கொண்டு போவதற்காக வகுக்கப் பட்டிருக்கும் இந்த இம்சை, தானே தோன்றுவதாயும், மிகக் குறைந்த அளவினதாயும், கருணையிலிருந்து முளைத்தெழுவதா யும், பகுத்தறிவுடையதாயும், கட்டுக்கடங்கியதாயும், பற்றற்ற தாயும், ஒவ்வொரு கணமும் அகிம்சையின் பாதையில் நம்மை முன்னுக்குக் கொண்டு போவதாயும் இருக்கவேண்டும்.

ஆசிரமத்தில் நாய்கள் பிரச்னையை எப்படிச் சமாளித்து வரு கிறோம் என்பதை உதாரணம் காட்டுவதற்காகச் சுருக்கமாகக் கூறி இந்தக் கட்டுரைத் தொடரை முடிப்பதாயிருக்கிறேன்.

ஆசிரமம் எவ்வளவு பழமையானதோ அவ்வளவு பழமை யானது இப்பிரச்னையும். மகாஜனின் நடவடிக்கை அதை இன் னும் அதிக தீவிரமாக்கிவிட்டது; தயக்கத்துடனேயே இதைச் சமாளித்துக்கொண்டு வருகிறோம். பைத்தியம் பிடித்த நாய்களைக் கொன்றுவிடுவது நம் வழக்கம். சென்ற பத்து ஆண்டுகளில் இத் தகைய சம்பவங்கள் இரண்டு அல்லது மூன்று நேர்ந்திருக்கின் றன. நோயில்லாதிருக்கும் நாய்கள் கொல்லப்படுவதில்லை. அவை களுக்கு உணவு அளிப்பதில்லை. இந்த விதி கண்டிப்பாக அனுசரிக்கப்படுமாயின் நாம் எல்லோரும் ஆனந்தமாயிருக்க லாம். ஆனால், அவ்வாறு செய்ய நம்மால் முடியாதே. இதன் அவசியத்தை ஒவ்வோர் ஆசிரமவாசியும் இன்னும் உணர்ந்து கொள்ளவில்லை. இதைச் செய்பவர்கள், அனுசரிக்கப்பட வேண்டிய விதிகளைப் போதிய அளவுக்குத் தெரிந்துகொள்ளாமல் இருக்கிறார்கள். ஆசிரமத்தில் வேலைக்காரர்கள் வேறு இருக்கி றார்கள். விதிகளை அனுசரிக்கும்படி அவர்களை எப்படிச் செய்ய முடியும்?

வேறு வழியின்றிச் சில நாய்களுக்கு உணவளிக்கிறோம். இரண்டு பெண் நாய்களும் அவற்றின் குட்டிகளும் இப் பொழுது பராமரிக்கப்பட்டு வருகின்றன. குட்டிகளைக் குளிரி லிருந்து காப்பதற்காக அடக்கமான பெட்டிகளில் அல்லது கூடைகளில் வைத்துப் பால் கொடுத்து வருகிறோம். தாய் களுக்கு அவைகளுக்கெனத் தயாரித்த உணவைப் போடு கிறோம்.

தெரு நாய்களை இங்கிருந்து அப்புறப்படுத்துமாறு மகா ஜனத்திடம் கோரினோம். அவைகளை எடுத்துச் செல்லும் வண்டி இன்னும் வராவிடினும் எங்கள் கோரிக்கை ஏற்றுக் கொள்ளப்பட்டது.

நாய்கள் சம்பந்தமாக நமக்குள்ள கடமையைக் குறித்து எனக்குத் தெரிந்தமட்டில் நான் விளக்கியிருக்கிறேன்.

ஒவ்வொருவரும் தங்களுக்குச் சரியெனத் தோன்றும் வகையில் நடந்துகொள்ள வேண்டும். அழிக்கும் கடமையை யாரும் என்னிட மிருந்து தெரிந்துகொள்ள வேண்டாம். சில சந்தர்ப்பங்களில் தாமே அம்முறையைக் கையாளும் நிலைமைக்கு வந்துவிடக் கூடும் எல்லையை நான் கூறியிருக்கிறேன். சட்டத்தை ஒவ்வொருவரும் தம்முடைய சக்திக்கு ஏற்ற வகையிலேயே அனுசரிப்பார்கள். என் கருத்தின் பொருள் இன்னதென் பதற்கு ஓர் உதாரணம் காட்டவே, ஆசிரமத்தில் இப்பொழுது என்ன செய்துவருகிறோம் என்பதைக் கூறியிருக்கிறேன்.

நமக்கு எவ்வளவு அசௌகரியங்கள் இருந்தாலும், நம் உயிருக்கே ஆபத்து நேர்ந்தாலும், மற்றவர்களுக்குப் பெருமளவு சௌகரியங்களை அளிப்பது என்பதையே அகிம்சா தருமம் போதிக்கிறது. அசௌகரியத்தை எவ்வளவுக்குச் சகித்துக் கொள்ளவேண்டுமென்பதை, ஒவ்வொருவரும் தமக்குத் தாமே நிர்ணயித்துக்கொள்ள வேண்டும். மூன்றாமவரான ஒருவர் இதை அவருக்காக வகுக்க முடியாது. ஆத்மாவைப் போன்றே தரும மும் ஒன்றுமாகும் ; பலவுமாகும்.

—'எங் இந்தியா'—21-10-26

## 2

# எல்லோருக்கும் மிக நன்மையானது

'எங் இந்தியா'வை விடாமல் படித்துவரும் ஒருவர் கீழ்க் கண்டவாறு எழுதி அனுப்பியிருக்கிறார்:

"சில சந்தர்ப்பங்களில் உயிரைக் கொல்லுவதும் கடமையாகிறது என் பதைக் குறித்து, 'இதுவா ஜீவகாருண்யம்?' என்ற தலைப்பில் நீங்கள் தொடர்ந்து 'எங் இந்தியா'வில் எழுதிவரும் கட்டுரைகளில், முக்கியமாக நவம்பர் 4-ஆந் தேதி வெளியாகியிருக்கும்நான்காவது, கட்டுரையில், நீங்கள் விளக்கியிருக்கும் கருத்துக்கு ஆதரவாயிருக்கும், ஓர் ஆண்டுக்கு முன்னால் வெளியான செய்தித் துண்டு இத்துடன் இருக்கிறது:

['டைம்ஸ் அவ் இந்தியா'வுக்கு விசேடச் செய்தி]

விட்டில்டன் (கொலோராடோ) நவ, 13(1925)

ஹெரால்டு பிளேஜர் என்ற 61 வயதான கிராம டாக்டர் தமக்கு முடிவுக் காலம் சீக்கிரத்தில் வந்துவிட்டது என்றும், தாம் இறந்த பிறகு தம்முடைய மகளை யாரும் கவனிக்கமாட்டார்கள் என்றும் கருதியதால் அவளுக்குக் 'குளோர பாரம்' என்ற மயக்க மருந்து கொடுத்துச் சாக அடித்துவிட்டார். இவ்வழக்கை விசாரித்த ஜூரிகள், பதினான்கு மணி நேரம் விவாதித்த பிறகும் ஏகோபித்த முடிவுக்கு வர முடியவில்லை. முடிவில் எதிரியை விடுதலை செய்யவேண்டும் என்ப தற்குப் பதினொரு பேர் ஆதரவாக இருந்ததால் வழக்கைத் தள்ளிவிடுமாறு பிராசிகியூஷன் தரப்பில் கோரவே, அவர் குற்றவாளியே அல்ல என விடுவிக்கப் பட்டார். டாக்டர் பிளேஜரின் வக்கீலான ஸ்ரீ ஹெளரி கூறியதாவது: 'மற்ற வர்களுக்குச் சுமையாக இருக்க அப்பெண்ணை விடாமல் பிளேஜர் முப்பத் திரண்டு ஆண்டுகள் கவனித்து வந்திருப்பது நேர்மையும் நீதி மிக்கதுமான காரி யமே. கை, கால், பேசும் சக்தி, சிந்திக்கும் ஆற்றல் இவை இல்லாமல், ஒருவர்

மென்று கொடுக்கும் உணவையே உண்ண' வேண்டியிருந்த கோரமான இப்பெண்ணுக்கு ஆத்மா என்பதே இருந்திராது.'

"சென்ற ஆண்டு அதே சமயத்தில் ஒரு பாரிஸ் வழக்கைப் படித்த நினைவு இருக்கிறது. அது, ஒரு நடிகை தன் காதலனைச் சுட்டுக்கொன்றதைப் பற்றிய வழக்கு. குணமாகுமென்ற நம்பிக்கையே இல்லாத ஒரு நோயினால் தாங்க முடியாதவாறு துன்பப்பட்டு வந்த அவன் பிடிவாதமாக வற்புறுத்தவே, அந்த நடிகை அவனைச் சுட்டுக் கொன்றுவிட்டாள். கொலைக் குற்றத்திற்காக அவள் மீது விசாரணை நடந்தது. சந்தர்ப்பத்தைக் கவனிக்கையில் எந்தக் குற்றமும் செய்யப்படவில்லை என்ற ஜூரிகள் முடிவின் பேரில் அவள் விடுதலை அடைந்தாள். அத்தகைய தீர்ப்பு நியாயம் என்பதற்குச் சட்டம் எதுவும் பிரான்ஸில் இல்லை என்று தோன்றுகிறது. ஆனால், டென்மார்க்கில் இதற்கென்றே சட்டம் செய்யப்பட்டிருக்கிறது எனப் படித்திருக்கிறேன். மேலே குறிப்பிட்டது போன்ற சந்தர்ப்பங்களில் அங்கீகாரம் பெற்ற சிலர் ஓர் உயிரை அதன் நன்மைக்காகவே போக்கிவிடுவது குற்றமாகாது என்பதே அந்தச் சட்டம். இந்தச் சம்பவங்கள் உங்களுக்கும், என்னைப் போன்று 'எங் இந்தியா'வைப் படிக்கும் மற்றவர்களுக்கும் முக்கியமாக உதவுமென நம்புகிறேன்."

என் சொந்த நிலைமையைத் தெளிவுபடுத்துவதற்கு உதவியாக இருப்பதால் இக்கடிதத்தை உள்ளது போலவே பிரசுரிக்கிறேன். இக்கடிதத்தை எழுதியிருப்பவர், 'எங் இந்தியா'வை மிகவும் ஊன்றிப் படித்து வருபவர் என்பதை நான் அறிவேன். இவரே என் நிலைமையைத் தவருகப் புரிந்து கொண்டிருக்கிரூர் என்பதை இவருடைய கடிதம் காட்டுவதால், என்றைக்கோ படிக்கிறவர்களில் இப்படித் தவருகப் புரிந்து கொண்டிருப்பவர்கள் எத்தனையோ பேர் இருப்பார்கள் என்று தெரிகிறது. நம் உள்ளம் வழக்கமாகவே கடினமாயிருப்பதாகவும், பலாத்காரத்தை உபயோகித்துக் கொள்வதற்குக் கிடைக்கும் சந்தர்ப்பங்களையெல்லாம் பயன்படுத்திக்கொள்ளத் தூண்டிவிடுகிறது என்றும், இதனால் தவருன கருத்து ஏற்பட்டுவிடக்கூடிய அபாயம் உண்டு என்பதைப் பல வாசகர்கள் கவனத்துக்குக் கொண்டு வருகின்றனர். நுண்மையான பிரச்னைகளைக் கையாளுவதில் ஒருவர் உஷாராக இருக்க மாத்திரமே கூடும் – இருக்க வேண்டும். ஆனால், கூறுவது தவருக உபயோகிக்கப்பட்டுவிடுமோ என்ற பயம், அடிப்படையான உண்மைகளைப்பற்றித் தாராளமாகவும் நேரிதாகவும் விவாதிப்பதற்கு இடைஞ்சலாக நிற்க அனுமதிக்கக் கூடாது. என்னைப் பொறுத்தமட்டில் பிரார்த்தனை உள்ளத்துடன் செய்யும் விவாதம், தெளிவுபடுத்தல், ஒருவர் கருத்தை மற்றவர் பரிமாறிக்கொள்ளுதல் இவற்றின் மூலமே நான் எப்படி இருப்பது, சரியானதை எப்படிச் செய்வதென்பதைக் கற்றுக் கொள்வேன். மேற்கோளாகக் காட்டியுள்ள கடிதம் இவ்விஷயத்திற்கு ஓர் உதாரணம். ஒரே கொள்கையை விளக்குவதில்

இக்கடிதத்தை எழுதியிருப்பவருக்கும் எனக்குமுள்ள மதபேதம் பற்றி உள்ளம் விண்ட தப்பபிப்பிராயம் இருப்பதை இந்த விவாதம் வெளிப்படுத்தியிருக்கிறது.

நான் விதித்திருக்கும் சோதனையின்படி டாக்டர் பிளேஜரை விடுதலை செய்தது சரியென நான் கருதியபோதிலும், அவர் தம்முடைய மகளின் உயிரைப் போக்கியது தவறு தான். தம்மைச் சுற்றிலும் உள்ளவர்களின் ஜீவகாருண்யத்தில் அவருக்கு நம்பிக்கையில்லாததையே அது வெளிப்படுத்துகிறது. மகளை மற்றவர்கள் கவனித்துக்கொள்ள மாட்டார்கள் என்று ஊகித்துக்கொள்ள அவருக்கு எந்தவித அதிகாரமும் கிடையாது. இந்தச் சந்தர்ப்பத்தில் நாய்கள் விஷயத்தில் நான் எண்ணிக்கொண்ட நிலைமைக்கும் டாக்டர் பிளேஜர் தம்மைக் காணும் நிலைமைக்கும் அடிப்படையிலேயே அதிக மாறுபாடு உண்டு. முட்டாளுக்கு ஆத்மாவே கிடையாது என்ற கருத்தை நான் ஏற்றுக்கொள்வதற்கில்லை. சிருஷ்டியிலுள்ள தாழ்ந்த உயிர்களுக்கும் ஆத்மா உண்டு என்று நம்புகிறேன்.

மற்றோர் உண்மையான வாசகர் கூறுவது சங்கடத்தை இன்னும் அதிகப்படுத்தி இருக்கிறது. அதை வருமாறு சுருங்கச் சொல்லலாம் :

"நீங்கள் மேற்கொண்டிருக்கும் நிலையை நான் பாராட்டுகிறேன். அது ஒன்றே உண்மையான நிலை. ஆனல், உங்கள் வாதம், பெரும்பாலோருக்கு மிகவும் நன்மை புரிவதென்ற உபயோக தத்துவத்திற்கே கொண்டு வந்துவிடுவதாக இருக்கிறதல்லவா? உங்கள் நிலை அதுவே என்றால், அகிம்சையாகப் பாசாங்கு செய்யாததும், உயிரை அழிப்பது அதிகத் தொகையினருக்கு அதிக நன்மையானதாக இருந்தால் அப்படிச் செய்யத் தயங்காததுமான உபயோக தத்துவத்திலிருந்து உங்களுடைய அகிம்சா தருமம் எந்த இடத்தில் மாறுபடுகிறது?"

முதலாவதாக, வெளிப்படையில் செயல் ஒரே மாதிரியாக இருந்தாலும், அச்செயலைப்புரியத் தூண்டும் நோக்கத்தை அனுசரித்து விளைவுகள் மாறுபடும். இவ்விதம் மேற்கு நாடுகளில் அகிம்சை, அதுவும் சாத்தியமாகும்போது மாத்திரம், மனிதன் வரைக்கும் நின்றுவிடுகிறது. மனிதனுடைய அதிக நன்மைக்கு என்று கருதப்படுபவைகளுக்காகவோ அல்லது அதே உபயோக தத்துவம் என்பதன் பெயரால் நாசத்தை உண்டாக்கும் ஆயுதங்களைக் குவித்துவைப்பதற்காகவோ, மிருகங்களை அங்கம் அங்கமாக வெட்டிச் சோதிப்பதைக் குறித்தோ யாரும் வருத்தப்படுவதில்லை. அதற்கு மாறாக அகிம்சையை வழிபடுவோன் ஒருவன், உபயோக தத்துவவாதிகளுக்குப் பொருந்தும் வகையில் அழிக்கும் செயல் ஒன்றைச் செய்திருக்கலாம். ஆனல், அங்கம் அங்கமாக அறுத்துச் சோதனை செய்வதற்கோ அல்லது முடிவில்லாமல் யுத்த தளவாடங்களைப் பெருக்கிக்

கொண்டு போவதற்கோ உடந்தையாக இருப்பதைவிட அவன் உயிர் விடத் தயாராகவே இருப்பான்.

உண்மை என்னவென்ருல், உபயோககரமானது என்ற முறையை அகிம்சைவாதி ஒப்புக்கொள்ளவே முடியாது. எல்லாருக்கும் மிக நன்மை ஏற்படவேண்டும் என்பதற்காக அவன் பாடுபட்டு அந்த லட்சியத்தை அடையும் முயற்சியில் உயிரையும் விடுவான். ஆகையால், மற்றவர்கள் உயிர் வாழட்டும் என்பதற்காகத் தான் சாகத் தயாராயிருப்பான். தான் சாவதன் மூலம் மற்றவர்களுடன் தனக்கும் சேவை செய்துகொள்ளுவான். எல்லோருக்கும் அதிகப்படியான நன்மை என்பதில் அதிகப்படியானவர்களின் நன்மை தாளுகவே சேர்ந்திருக்கிறது. ஆகவே, அகிம்சைவாதியும் உபயோக தத்துவவாதியும் தம் வாழ்க்கையில் பல விஷயங்களில் ஒன்ருயிருக்க முடியும். ஆனல், இருவரும் பிரிந்து, எதிர் எதிரான வழிகளில் வேலை செய்ய வேண்டிய காலமும் வந்தே தீருகிறது. உபயோக தத்துவவாதி, தருக்கரீதியில் கவனித்தால் தன்னை எப்பொழுதும் தியாகஞ் செய்துகொள்ளமாட்டான். எல்லாம் கடவுள் செயலே என்று நம்புகிறவன் தன் உயிரையும் தியாகம் செய்வான். அவன் ஒரு நாயைக் கொல்லும்போது பலவீனத்தினுலேயே அவ்வாறு செய்கிருன்; அபூர்வமாகச் சில சந்தர்ப்பங்களில் நாயின் நன்மைக்க.ாகவே அவ்வாறு செய்கிருன். நாய்க்கு நல்லது எது, நல்லதல்லாதது எது என்பதை முடிவு கட்டுவது ஆபத்தானது. ஆகவே, அவன் பெருந்தவறு செய்துவிடக்கூடும் என்பது செய்கையைத் தூண்டும் நோக்கத்தைப்பற்றிய உண்மைக்குப் பொருத்தமில்லாதது. கடவுள் செயலே என்பதில் நம்பிக்கையுள்ளவனுக்கு அழிவுசெய்வதற்கான வாய்ப்பு மிகக் குறுகிய வகையில் சாத்தியமுள்ளதாகவே என்றும் இருக்கும். உபயோகவாதிக்கு வரையறை கிடையாது. அகிம்சையின் தன்மையைக் கொண்டு கவனித்தால், போன யுத்தம் முற்றிலும் தவருனது. உபயோகத் தத்துவத் தன்மையைக் கொண்டு கவனித்தால், உபயோகத்தைப்பற்றி அதனதன் கருத்துக்கு இணங்க ஒவ்வொரு கட்சியும் அது நியாயம் என்று கருதியிருக்கிறது. உபயோக தத்துவ அடிப்படையில் ஜாலியன்வாலாபாக் அட்டூழியங்களும் நியாயம் என்றே அதைச் செய்தவர்கள் கூறுகிருர்கள். அதே முறைப்படி பயங்கரவாதிகளும் தாம் புரியும் படுகொலைகள் நியாயம் என்கிருர்கள். ஆனல், எல்லோருக்கும் அதிகமான நன்மை என்ற கொள்கைப்படி இச்செய்கைகளில் எதுவுமே நியாயமானதாகாது.

—'எங் இந்தியா' — 9—12—1926.

# 3

# அக்கினி பரீட்சை

[பைத்தியம் பிடித்த நாய்களைச் சில சந்தர்ப்பங்களில் கொன்று விடுவது இம்சையாகாது என்று மகாத்மா காந்தி கூறிய கருத்தின்மீது எழுந்த விவாதங்களையும், அவற்றிற்கு மகாத்மா அளித்த விளக்கங்களையும் இதற்கு முன்னால் பிரசுரமாகியிருக்கும் எட்டுக் கட்டுரைகளும் தெளிவாக்கும். 1926-இல் நடந்ததைப் போன்ற கடுமையான விவாதம் 1928-இல் மற்றொரு விஷயத்தில் திரும்பவும் கிளம்பியது. பிந்தியது, ஆசிரமத்தில் நோயுற்றிருந்த ஒரு கன்றைக் கொன்றது சம்பந்தமாக எழுந்ததாகும். இச்சம்பவம் அகமதாபாதில் சில வட்டாரத்தினரிடையே மிகுந்த ஆத்திரத்தை உண்டாக்கிவிட்டது. அதைக் குறித்துக் கோபாவேசத்துடன் மகாத்மாவுக்குப் பல கடிதங்கள் எழுதினார்கள். அகிம்சைத் தத்துவத்தை அனுசரித்து இப்பிரச்னையைக் காந்திஜி ஆராய்ந்து, 'அக்கினி பரீட்சை' என்ற தலைப்பில் 'நவஜீவன்' பத்திரிகையில் எழுதினர். அக்கட்டுரைகள் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டு 'எங் இந்தியா' 1928 அக்டோபர் 4-ஆம் தேதி இதழிலும் பிந்திய இதழ்களிலும் வெளியாயின. அவையே கீழே வருவன.]

## 1

## கொல்லுவது எப்பொழுது அகிம்சையாகும்?

கோ சேவா சங்கத்தின் சார்பில் மற்றவர்களுக்கென்று சிறு அளவில் ஒரு மாதிரிப் பால் பண்ணையும், தோல் பதனிடும் இடமும் நடத்த ஆசிரமத்தில் முயற்சி செய்யப்படுகிறது. இது சம்பந்தமாக வேலை செய்யும்போது ஒவ்வொரு கட்டத்திலும் நீதி சம்பந்தமான சிக்கலான பிரச்னைகள் எதிர்ப்படுகின்றன. அகிம்சை ஒன்றின் மூலமாகவே சத்தியத்தை நாடுவது என்ற ஆசிரமத்தின் லட்சியத்தை நிறைவேற்றுவதில் சிரத்தை இல்லாதிருக்குமானல் இத்தகைய சிக்கல்கள் ஏற்படமாட்டா.

உதாரணமாக, சில தினங்களுக்கு முன்னல் முடமாகி விட்ட ஒரு கன்று ஆசிரமத்தில் துடித்துக்கொண்டு வேதனையுடன் கிடந்தது. சாத்தியமான எல்லா வைத்தியமும் சுசுருஷைகளும் அதற்குச் செய்தோம். வைத்தியரை அழைத்து ஆலோசனை கேட்கப்பட்டது. உதவி செய்யும் கட்டத்தையும், நம்பிக்கை இருக்கிறது என்ற கட்டத்தையும் அது கடந்து விட்டது என்று அவர் சொன்னர். அது அனுபவித்து வந்த வேதனை கொஞ்சமன்று ; சற்றுப் புரண்டாலும் தாங்க முடியாத வலி அதற்கு ஏற்பட்டது.

இந்த நிலைமையில் அதனுடைய உயிரைப் போக்கி, அதன் மூலம் அதனுடைய துன்பத்தைத் தீர்ப்பது ஜீவகாருண்ய முள்ள காரியம் என்று கருதினேன். நிர்வாகக் குழுவினருடன் கலந்தாலோசித்தேன். என் கருத்தை அவர்களும் ஏற்றுக் கொண்டார்கள். பிறகு இவ்விஷயம் ஆசிரமத்தைச் சேர்ந்த எல்லோர் முன்பும் வைக்கப்பட்டது. அதன் துன்பத்தைப் போக்குவதற்கென்றாலும் அதைக் கொன்றுவிடுவது என்ற கருத்தைப் பக்கத்தில் இருப்பவர் ஒருவர் பலமாக எதிர்த்தார்; செத்துக்கொண்டிருக்கும் அக்கன்றைத் தாம் கவனித்துக் கொள்வதாகவும் கூறினார். ஆசிரம சகோதரிகளின் ஒத் துழைப்புடன் அதன் மீது ஈக்கள் உட்காராமல் பார்த்துக் கொள்வதும், அதற்குத் தீனி கொடுப்பது, இவ்வாறான தொண்டு நடந்து வந்தது. உயிரை உண்டாக்க முடியாதவருக்கு ஓர் உயிரைப் போக்கவும் உரிமை கிடையாது என்பதே அந்த நண்பரது ஆட்சேபத்தின் அடிப்படை. இதில் அவருடைய வாதம் அர்த்தமில்லாததாக எனக்குத் தோன்றிற்று. சுயநலத் திற்காக ஓர் உயிரைக் கொல்லும் விஷயமாயிருந்தால் இந்த ஆட்சேபத்திற்கு அர்த்தமுண்டு. முடிவாக மிக்க பணிவோடும் கொள்கையில் அதிகத் தெளிவுடனும், என் முன்னிலையிலேயே ஒரு டாக்டரைக் கொண்டு கன்றுக்கு அமைதி ஏற்பட விஷ மருந்தை உடம்பில் குத்தி ஏற்றச் செய்தேன். இரண்டு நிமிடங்களுக்குள்ளேயே எல்லாம் முடிந்துவிட்டது.

பொதுஜன அபிப்பிராயம், முக்கியமாக அகமதாபாதில், நான் செய்தது சரி என ஏற்றுக்கொள்ளாது; இதில் முற்றி லும் இம்சை இருப்பதாகவே அது காணும் என்பதை அறிவேன். ஆனால், பொதுஜன அபிப்பிராயம் எதுவானாலும், தான் செய்யவேண்டிய கடமை என்பது ஒருவருக்குத் தனியாக இருக்கிறது என்பதையும் நான் அறிவேன். மற்றவர்களுக்கு ஒன்று தவறு என்று தோன்றினாலும், தனக்குச் சரி என்று பட்டதை ஒருவர் செய்தே ஆகவேண்டும் என்பதே என்னுடைய நாள்பட்ட கருத்து. அது ஒன்றுதான் சரியான வழி என்றும் அனுபவம் காட்டியிருக்கிறது. சரியானதைத் தப்பானது என்றோ அல்லது தப்பானதைச் சரியென்றோ ஒரு வர் எண்ணிக்கொண்டுவிடும் சந்தர்ப்பமும் எப்பொழுதும் இருக்கிறது என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால், தம் மையும் அறியாமல் செய்த தவறினாலேயே எப்பொழுதும் ஒருவர் தாம் செய்த தீங்கைத் தெரிந்துகொண்டு விடுகிறார். இதற்கு மாறாக, பொதுஜன அபிப்பிராயத்திற்குப் பயந்தோ

அல்லது இதுபோன்ற வேறு காரணங்களினுலோ ஒருவர் தம் முள் இருக்கும் ஒளியைப் பின்பற்றத் தவறிவிடுவாராளுல், நன்மை தீமைக்கிடையே உள்ள வேற்றுமை என்பதை அவர் என்றுமே அறிய முடியாது போவதோடு இந்த இரண்டிற்கு முள்ள பேதத்தை அறியும் உணர்ச்சியையும் முடிவில் அவர் இழந்துவிடுவார். இதனுலேயே கவி, 'அன்பின் வழி, தீக்குளிக் கும் சோதனையை ஒக்கும், அஞ்சுவோர் அதனிடமிருந்து விலகிப் போனேரேயாவர்' என்ருர்.

அகிம்சையின் பாதையில், அதாவது அன்பின் வழியில் ஒரு வர் எப்பொழுதும் தன்னந் தனியாகவே போகவேண்டி யிருக்கும்.

நியாயமாகவே என்னிடம் ஒரு கேள்வி கேட்கக்கூடும். கன்று விஷயத்தில் நான் கடைப்பிடித்திருக்கும் கொள்கையை மனிதர் விஷயத்திலும் நான் அனுசரிப்பேனு? என் சொந்த விஷயத்திலேயே இது கையாளப்பட நான் விரும்புவேனு? ஆம், என்பதே என் பதில். இரண்டு விஷயங்களுக்கும் அதே கோட்பாடு பொருந்தும். 'பிண்டத்திற்குள்ளதே அண்டத் திற்கும் (யதா பிண்டே ததா பிரம்மாண்டே) என்ற கோட்பாடு விதி விலக்கையோ அல்லது கன்றைக் கொல்வது தவருனது, பலாத்காரமானது என்பதையோ அனுமதிப்பதில்லே. என்ருலும் பழக்கத்தில் நமக்குப் பிரியமானவர்கள் நோயுற்ருல் அவர்கள் படும் துன்பத்தைச் சாவின் மூலம் போக்குவதில்லே. ஏனெனில், அவர்களுக்கு உதவி செய்வதற்கு நம்மிடம் வசதி எப்பொழு தும் இருப்பதோடு தாங்களே யோசித்துத் தங்களுக்காகத் தாங்களே முடிவு செய்துகொள்ளும் ஆற்றலும் அவர்களுக்கு இருக்கிறது. ஆளுல், நோயுற்றிருக்கும் ஒரு நண்பர் விஷயத் தில் எந்த உதவியையும் நான் செய்ய முடியாதவனுயிருக் கிறேன், குணமாகும் என்பதற்கும் இடமில்லே, நோயாளி பிரக்ஞையற்ற நிலேயில் பயங்கரமான வேதனையை அனுபவித் துக்கொண்டிருக்கிருர் என்று வைத்துக்கொள்வோம். அப் பொழுது சாவின் மூலம் அவருடைய துன்பத்திற்கு ஒரு முடிவை உண்டாக்குவதில் எந்தவித இம்சையும் இருப்பதாக நான் காணவில்லே.

ஒரு நோயாளியின் உடலில் அந்த நோயாளியின் நன்மைக் காக வைத்தியர் கத்தியை உபயோகிக்கும்போது அவர் எவ்விதம் இம்சையைச் செய்யாமல் சுத்தமான அகிம்சையையே உபயோகிக்கிருரோ அதே போல், தவிர்க்க முடியாததான சில சந்தர்ப்பங்களில், இன்னும் கொஞ்சம் அதிகமாகப்

போய், துன்பப்படுகிறவரின் நன்மைக்காக அவருடைய உடலிலிருந்து உயிரைப் போக்க வேண்டிய அவசியம் ஒருவருக்கு ஏற்படலாம். வைத்தியர், நோயாளியின் உயிரைக் காக்கக் கத்தியை உபயோகிக்கிறார். ஆனால், மற்றொரு விஷயத்திலோ நாம் இதற்கு மாறானதைச் செய்கிறோம் என்ற ஆட்சேபணை எழலாம். ஆனால், ஆழ்ந்து ஆராய்ந்து பார்த்தால் இந்த இரண்டிலும் செய்ய முற்படுவதன் முடிவான நோக்கம் ஒன்றே என்பது புலனாகும். அதாவது, இந்த இரண்டிலும் உள்ளிருக்கும் ஆத்மாவைத் துன்பத்திலிருந்து மீட்பதே நோக்கம். ஒன்றில், உடம்பிலிருந்து நோயுற்ற பகுதியை வெட்டி எடுப்பதன் மூலம் அதைச் செய்கிறீர்கள்; மற்றொன்றில் துன்பம் இழைக்கும் உடலை ஆத்மாவிலிருந்து துண்டித்து எடுப்பதன் மூலம் செய்கிறீர்கள். இந்த இரண்டிலும் உள்ளிருக்கும் ஆத்மாவுக்கு வேதனையிலிருந்து நிவாரணம் அளிப்பது நோக்கமாகிறது. உள்ளே உயிர் இல்லையாயின் உடலால் இன்பத்தையோ அல்லது நோயையோ உணர முடியாது. கொல்லுவது அகிம்சையாக இருக்கையில் கொல்லாமை இம்சையாகவும் ஆகலாம் என்பதற்கு மற்றச் சந்தர்ப்பங்களையும் ஊகித்துக்கொள்ளலாம். என் மகள் ஒருவனுடைய பலாத்காரத்துக்கு ஆளாகக்கூடிய அபாயத்தில் இருக்கிறாள்; அவளைக் காப்பதற்கு அந்த நேரத்தில் எனக்கு எந்த வழியுமே இல்லை, அப்பொழுது அவள் விருப்பந்தான் என்ன என்பதையும் என்னால் அறிந்துகொள்ள இயலவில்லை என்று வைத்துக்கொள்வோம். அந்த நேரத்தில் அவளைக் கொன்றுவிட்டு ஆத்திரமடையும் முரடனிடம் நான் சரணம் அடைந்துவிடுவதே அகிம்சையின் பரிசுத்தமான முறை.

ஆனால், நமது அகிம்சைவாதிகளிடம் இருக்கும் தொல்லையெல்லாம், அகிம்சையைக் கண்மூடித்தனமாக அவர்கள் வணங்கி வருவது நம்மிடையே உண்மையான அகிம்சை பரவுவதற்கு இடையூறாக நிற்பதுதான். அகிம்சையைப்பற்றி இப்பொழுது இருந்துவரும் கருத்துத் தவறானது என்பது என் அபிப்பிராயம். அது நமது மனச்சாட்சியை மயக்கி, கடுஞ்சொல், கொடூரமான முடிவுகள், கெட்ட எண்ணம், கோபம், துவேஷம், கொடுமையில் ஆசை போன்ற இம்சையின் வஞ்சகமான அம்சங்களை உணர முடியாதபடி செய்துவிட்டது. மனிதரையும் மிருகங்களையும் மெல்ல மெல்லச் சித்திரவதை செய்துகொண்டிருப்பது, சுயநலத்தின் பேராசை காரணமாக அவைகளைப் பட்டினி போடுவது, அவைகளை

வஞ்சிப்பது, பலவீனர்களை வேண்டுமென்றே அவமதிப்பது, அடக்கி ஒடுக்குவது, அவர்களுடைய சுயமரியாதையை நசுக்குவது இவை நம்மைச் சுற்றிலும் நாம் இன்று கண்டு வருபவை. சாதாரணமாக, கருணையின் பெயரால் உயிரைப் போக்குவதை விட எவ்வளவோ இம்சைகள் இருக்கின்றன என்பதையும் நாம் மறந்துவிடும்படி அது செய்கிறது. அமிர்தசரஸின் அந்தப் பாழும் சந்திலே சித்திரவதைக்கு ஆளாக்கப்பட்டவர்கள் புழுக்களைப்போல வயிற்றினாலேயே ஊர்ந்து செல்லும் படி செய்வதற்குப் பதிலாக அவர்கள் உடனேயே கொல்லப் பட்டிருந்தால் எவ்வளவோ காருண்யமுள்ள செயலாக இருந்திருக்கும் என்பதை யாரேனும் சிறிதாவது சந்தேகிக்க முடியுமா? ஆனால், யாராவது இதை மறுத்து, அப்படி நடத்தப்பட்டவர்களே இன்று வேறுவிதமாக நினைக்கிறார்கள் என்றும், வயிற்றினாலே, ஊர்ந்து சென்றதால் அவர்கள் வருந்தவில்லை என்றும் சொல்லுவாரானால் அகிம்சையைப் பற்றி அவர் கொஞ்சங்கூடத் தெரிந்துகொள்ளவில்லை என்றே தயக்கமின்றிச் சொல்லுவேன். ஒருவருடைய வாழ்க்கையில் தம்முடைய உயிரைக் கொடுத்தே சமாளித்தாக வேண்டிய தவிர்க்கமுடியாத சந்தர்ப்பங்கள் ஏற்படுகின்றன. மனிதனுக்குள்ள இந்த அடிப்படையான உண்மையை உணரவில்லையென்றால், அகிம்சையின் அடிப்படையே அவருக்குத் தெரியவில்லை என்பதையே அது புலப்படுத்துகிறது. உதாரணமாக சத்தியத்தைக் கடைப்பிடிக்கும் ஒருவர், பொய் வாழ்க்கையிலிருந்து தம்மைப் பாதுகாப்பதற்குத் தமக்குச் சாவைக் கொடுக்கும்படி கடவுளைப் பிரார்த்திப்பார். அதே போல் அகிம்சையைக் கடைப்பிடிக்கும் ஒருவர், தாம் அவமானத்துக்கு உள்ளாவதைவிட, மனிதருடைய கண்ணியத்திற்குத் தகாததான காரியங்களைத் தாம் செய்யும் அளவுக்குப் போவதைவிடத் தம்மைக் கொன்றுவிடுமாறு எதிரியிடம் அடி பணிந்து வேண்டுவார். இதனாலேயே 'ஆண்டவன் வழி வீரருக்கேயன்றி வெறுங் கோழைகளுக்கு அன்று' என்று கவியும் பாடியிருக்கிறார்.

அகிம்சையின் தன்மையையும், சக்தியையும் குறித்து இந்த அடிப்படையான தப்பு அபிப்பிராயமும் இதற்குரிய பயன் குறித்த குழப்பமுமே, வெறும் கொல்லாமையை மாத்திரம் நாம் அகிம்சையாகக் கொள்வதற்கும், அஞ்சும் அளவிற்கு அகிம்சையின் பெயரால் இம்சை இருப்பதற்கும் பொறுப்பாகும். நோயுற்றிருக்கும் ஒரு மிருகத்தை, அது படும் துன்பத்திலிருந்து

விடுவிப்பதற்காகக் கொல்லுவதைக் குறித்து ஏதோ பெரிய அக்கிரமம் நடந்துவிட்டதாக அகிம்சைவாதிகள் என்போர் கூறுவதை, நம் வாயில்லாப் பிராணிகளுக்கு இழைக்கப் பட்டு வரும் எண்ணற்ற கொடுமைகளைப் பார்த்தும் அகிம்சை வாதிகள் எனக் கூறிக்கொள்வோர் கவலைப்படாமல் அசிரத்தை யுடன் இருப்பதோடு ஒப்பிட்டுப் பார்க்கட்டும். நாம் அகிம்சை நாட்டில்தான் வாழ்கிறோமா, அல்லது அறிந்தோ அறியாமலோ கபடமே குடிகொண்ட நாட்டில் வாழ்கிறோமா என்று வியப்பே கொள்ள நேரும்.

நமது ஆத்மிகச் செயலின்மையும், ஒழுக்கத்தில் உரமின் மையும், அச்சமற்றுச் சிந்தித்து உண்மையை நேருக்கு நேர் காணும் துணிவு இன்மையுமே இப்பொழுது இருந்துவரும் வருந் தத்தக்க நிலைமைக்குக் காரணம். நம் பிஞ்சராபோல்களை யும் கோசாலைகளையும் பாருங்கள். இவற்றில் பல, கொடிய வதை புரியும் இடங்களாக இன்று இருக்கின்றன. நமது மனச்சாட்சி யைத் திருப்தி செய்ய, துர்ப்பாக்கியமான கதியற்ற ஆடுமாடு களை இவற்றில் அடைத்து வைத்திருக்கிறோம். வாய் திறந்து அவை பேசுவதாயிருந்தால் நமக்கு எதிராகக் கூவி, 'மெல்லச் சாக அடிக் கும் இந்தச் சித்திரவதைக்கு உட்படுத்துவதைவிட எங்களைக் கொன்றுவிடுங்கள்' என்றே அவை சொல்லும். இந்த மௌன வேண்டலை அவைகளின் கண்களில் அடிக்கடி பார்க்கிறேன்.

முடிவாகச் சொன்னால், துன்பத்தை விளைவிப்பதும் அல்லது தீமையை எண்ணுவதும், கோபத்தினாலோ அல்லது தன்னல நோக்கத்துடனோ ஓர் உயிரைக் கொல்லுவதும் இம்சையாகும். இதற்கு மாறாக, அமைதியான, தெளிவான முடிவின் பேரில் ஓர் உயிரின் ஆத்மிக அல்லது உடல் நன்மையை முன்னிட்டு, புனிதமான, சுயநலமற்ற நோக்கத் தோடு அதைக் கொல்லுவது அகிம்சையின் சுத்தமான முறை யாகலாம். இதில் ஒவ்வொரு விஷயத்தையும் தனித்தனியாக அதனதன் தகுதியைக் கொண்டு கவனித்து முடிவுக்கு வர வேண்டும். அது இம்சையா அல்லது அகிம்சையா என்பதைப் பற்றிய முடிவான சோதனை, அச்செய்கையின் நோக்கத்தையே பொறுத்ததாகும்.

## 2

## கொல்லுவது எப்பொழுது இம்சையாகும்?

இன்று ஆசிரமத்திற்கு ஏற்பட்டிருக்கும் மற்றொரு நெருக் கடியான பிரச்னைக்கு இப்பொழுது வருகிறேன். குரங்குத்

தொல்லை மிகவும் அதிகமாகிவிட்டது ; இதற்கு உடனே ஒரு பரிகாரம் செய்தாக வேண்டியது முற்றிலும் அவசிய மாகிவிட்டது. வளர்ந்து வரும் கறிகாய்ச் செடிகளும் பழ மரங்களும், யதேச்சை மிகுந்த இந்த வர்க்கத்தினரின் விசேஷ கவனத்திற்கு வந்துவிட்டன. மரஞ்செடிகள் அடி யோடு அழிந்துவிடும் அபாயம் ஏற்பட்டிருக்கிறது. நாங்கள் என்ன முயற்சி செய்தும், இந்தத் தீமைக்குச் சரியானதும் அகிம்சையோடு கூடியதுமான பரிகாரத்தை எங்களால் இன் னும் கண்டுபிடிக்க முடியவில்லை.

இவ்விஷயம் சில வட்டாரங்களில் கடுமையான விவாதத் தைக் கிளப்பியிருக்கிறது. இதைக் குறித்துக் கோபம் நிறைந்த கடிதங்களும் எனக்கு வந்திருக்கின்றன. 'ஆசிரமத்தில் குரங்கு களைக் கொல்லுவதைக் குறித்தும் அம்புகளால் அவற்றைக் காயப்படுத்துவது பற்றியும்' கண்டித்து ஒருவர் கடிதம் எழுதி யிருக்கிறார். ஆசிரமத்தில் எந்தக் குரங்கும் கொல்லப்பட வில்லை. கடிதம் எழுதியிருப்போர் ஊகிப்பதைப் போல அம்பு களினலோ, வேறு விதமாகவோ அவை காயப்படுத்தப்படவு மில்லை என்பதை முதலில் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஆனல், அவைகளை விரட்டுவதற்கு முயற்சிகள் செய்யப்பட்டன. தீமை விளைவிக்காத அம்புகள் இதற்குப் பயன்படுத்தப்பட்டன என்பதில் சந்தேகம் இல்லை.

தவிர்க்க முடியாததாகிவிடின் அந்தக் குரங்குகளைக் கொன்று விடலாமா என்றுகூடத் தீவிரமாகச் சிந்தித்து வருகிறேனெனி னும், அவைகளை விரட்டிவிடுவதற்குக் காயப்படுத்துவது என்பது எனக்குச் சகிக்காததெனத் தோன்றுகிறது. ஆனல், இப்பிரச்னை முந்தியதைப் போல அவ்வளவு எளிதானதோ அல்லது சுலப மானதோ அன்று. குரங்குகளை விரட்டிவிடுவதிலும் அகிம்சைப் பிறழ்வு தெளிவாக இருப்பதைக் காண்கிறேன். அவைகளைக் கொல்ல வேண்டியிருக்குமானல் அகிம்சைப் பிறழ்வு இன்னும் அதிகமாகும். சுயநலத்திற்காக விளைவிக்கப்படும் துன்பம் எதுவாயினும், அது கொல்லுவதில் முடிந்தாலும் முடியாது போயினும், அச்செய்கை இம்சையே என்பதில் சந்தேகம் இல்லை.

ஊன் உடலைக் கொண்ட எல்லா உயிரும் ஏதாவது ஒரு வகையில் இம்சையினலேயே நிலைக்கிறது. ஆகவே, உயர்ந்த தருமம், எதிர்மறையான அகிம்சை (இம்சையின்மை) என்ற சொல்லால் விளக்கப்படுகிறது. உலகம் தொடர்பான அழிவுச் சுழலில் பிணைக்கப்பட்டிருக்கிறது. அதாவது, உடலில் உயிர்

இருப்பதற்கு இம்சை அவசியமாக வேண்டியிருக்கிறது. இதனாலேயே அகிம்சைவாதி, ஊனின் தளையிலிருந்து முடிவான விடுதலை வேண்டும் என்று எப்போதும் பிரார்த்திக்கிறார்.

இவ்விதம் உயிரோடிருக்கும் [வரையில் யாரும்' இம்சை புரியாமல் இருக்கவே முடியாது. ஏனெனில், உயிர் வைத்துக் கொள்ளும் உறுதியை யாரும் துறந்துவிடுவதில்லை. உணர்ச்சி ஒத்துழைக்க மறுக்கும்போது உடலை மாத்திரம் கட்டாயப் படுத்துவதில் என்ன பயன்? சாகும்வரையில் பட்டினி இருப்ப தென்று நீங்கள் பட்டினி கிடக்கலாம். ஆனால், அதே சமயத் தில் மனம் மாத்திரம் உணர்ச்சிக்கானவைகளையே நாடிக்கொண் டிருக்குமாயின், உங்கள் விரதம் வீணானதாகவும் வெறும் மாயையாகவும் ஆகிறது. அப்படியானால், உறுதிக்கு அடிமை யாகிவிட்டவர், பாவம், உயிரோடிருந்து என்ன செய்யப் போகி றார்? தாம் செய்யக்கூடிய இம்சையின் சரியான தன்மையையும் அளவையும் அவர் எவ்விதம் நிர்ணயித்துக்கொள்ளுவது? சமூகம் இதற்கு ஒரு தகுதியை விதித்து, அந்த அளவுக்குத் தனிப்பட்டவர்கள் தங்களை வருத்திக்கொள்வதிலிருந்து மன்னித்து இருக்கிறது என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால், சத்தியத்தை நாடுகிறவர் ஒவ்வொருவரும் தமக்கு வேண்டிய அளவு அந்தத் தகுதியை மாற்றி ஒழுங்குபடுத்திக்கொள்வதோடு இம்சையின் விரிவைக் குறைத்துக்கொள்வதற்கும் இடைவிடாது பாடுபட வேண்டும். உழவாளி தன்னுடைய நிச்சயமற்ற ஜீவனத்திற்கே பாடுபட வேண்டியிருக்கிறது. ஆகவே, இந்தப் பிரச்னைகளையெல்லாம் குறித்துத் தானே சிந்தித்துக்கொள் வதற்குப் போதிய நேரமோ அல்லது வலிவோ அவனுக்குக் கிடையாது. கற்றறிந்தவரோ, அவனுக்கு உதவி செய்வதற்குப் பதிலாக அவனை அலட்சியம் செய்துவிடுகின்றனர். இப்பொழுது நானும் ஓர் உழவாளி ஆகிவிட்டதால் நான் அனுசரிப்பதற் கான வழி தெளிவாக எதுவும் இல்லை. ஆகவே, எனக்கும் என்னுடன் இருக்கும் ஒரு வழியை நான் வகுக்க வேண்டும். குரங்குகள் தொல்லையைப் போன்று உழவாளிக்குத் திகைப்பை உண்டாக்கி வரும் சிக்கலான பிரச்னைகள் எத்தனையோ இருக் கின்றன. குறைந்தபட்ச இம்சையினால் உழவனின் பயிர்களைப் பாதுகாப்பதற்கான வழியை நான் கண்டுபிடித்தாக வேண்டும்.

குஜராத்திக் குடியானவர்கள் தனிக் காவற்காரர்களை அமர்த்துகிறார்கள் என்றும், அந்தக் காவற்காரர்களைக் கண்ட துமே குரங்குகள் பயந்து ஓடிவிடுவதால், அவற்றைக் கொல்ல வேண்டிய அவசியம் குடியானவர்களுக்கு ஏற்படுவதில்லை

என்றும் சொல்லுகிறார்கள். இருக்கலாம். இந்த முறையில் இருக்கும் பலன் எதுவாயிருப்பினும், ஏதாவது ஒரு சமயத்தில் சிறிதளவு நாசவேலை அதற்கு வேண்டியே இருக்கிறது என்பதை மறந்துவிடக் கூடாது. ஏனெனில், நமக்கு உறவாகவுள்ள இந்தக் குரங்குகள் தந்திர மிகுந்தவை; புத்திசாலிகளாகவும் இருக்கின்றன. துப்பாக்கி வேட்டுகளினால் தங்களுக்கு உண்மையில் அபாயம் எதுவுமில்லை எனக் கண்டவுடன் அவை அதற்கு அஞ்சுவதில்லை. வேட்டுக் கிளம்பும்போது அவை கொக்கரித்துக் கூச்சலே போடுகின்றன. இந்தத் தொல்லையைச் சமாளிப்பதற்காக ஆசிரமம் யோசனையும் பரீட்சையும் செய்யாத முயற்சிகளோ, முறைகளோ ஒன்று பாக்கி இல்லை. ஆனால், இதுவரையில் எனக்குத் தெரிந்த முறை எதிலும் இம்சை இல்லாமல் இல்லை. ஆகையால், 'நவஜீவன்' வாசகர்கள் இதற்குக் காரியசாத்தியமான யோசனை எதையாவது கூறுவார்களாயின் அவற்றை வரவேற்கிறேன். ஆலோசனை கூற விரும்புகிறவர்கள், நான் மேலே சொன்னதை மனத்தில் வைத்து, தாங்கள் அனுசரித்து வெற்றி கண்டிருக்கும் குறைந்த அளவு துன்பத்தை அளிக்கும் முறைகளை மட்டும் அனுப்புமாறும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

– 'எங் இந்தியா'—22—11—1928

## 4

# அகிம்சையின் சிக்கல்

'அக்கினி பரீட்சை' என்ற தலைப்பில் நான் எழுதிய கட்டுரை, குற்றஞ்சாட்டும், ஆத்திரமடைந்த பலருக்கு என்மீது பெருங்கோபத்தை உண்டாக்கியிருக்கிறது. அவர்களில் சிலர் அகிம்சையில் தங்களுக்குள்ள அக்கறையைக் காட்ட என்னைக் கடுமையான நிந்தனைக்கு உட்படுத்தியுள்ளனரெனத் தோன்றுகிறது. மற்றவர்களோ, அகிம்சைக்கு எனக்குள்ள சக்தியைச் சோதிப்பது போல் கண்ணியம், மரியாதை ஆகியவைகளையெல்லாம் காற்றுவாக்கில் விட்டுவிட்டு, அளவின்றித் தங்களுடைய நாராசமான கண்டனத்தை என்மீது ஏவியிருக்கின்றனர். வேறு சிலரோ, ஏதோ எனக்கு வருந்தத்தக்கதான மாறுாட்டம் ஏற்பட்டிருப்பதாகக் கருதி, இதற்காக உண்மையாகவே வருத்தத்தைத் தெரிவித்துக்கொண்டு, தங்கள் பளுவைக் குறைத்துக்கொள்வதற்காக எனக்குக் கடிதம் எழுதியிருக்கிறார்கள். எனக்கு வந்திருக்கும் எல்லாக் கடிதங்களுக்கும் பதில் எழுத எனக்கு நேரம் இல்லை; அப்படி எழுதுவது

அவசியம் என்றும் நான் கருதவில்லை. கடுமையான வசவுகள் நிறைந்த கடிதங்களைப் பொறுத்தவரையில் அவை செய்யக் கூடிய ஒரே காரியம், சகிப்புத் தன்மையிலும், அகிம்சையிலும் எனக்கு மேலும் கொஞ்சம் பயிற்சி அளிப்பதே யாகும். ஆகையால், அக்கடிதங்களை விட்டுவிட்டு மற்றவை களில் நான் காணக்கூடிய விவாதங்களுக்கு - நிதானத்துடன் எழுதப்பட்டிருக்கும் கடிதங்களுக்கு - இங்கே பதில் சொல்ல முயற்சி செய்கிறேன்.

சுருக்கமாகவும், விஷயத்தைக் குறிப்பாகக் கூறுவனவாகவும் நன்ருக விளங்கும்படி மையினுல் தெளிவாக எழுதப்படும் கடிதங்களில் கவனம் செலுத்த நான் எப்பொழுதும் தயார். ஏனெனில், பணிவுடன் சத்தியத்தை நாடுகிறவன் நான் என்று கூறிக்கொள்கிறேன். 'நவஜீவன்' பத்திரிகையை நான் நடத்தி வருவது போதிப்பதற்கு மட்டுமன்று; கற்றுக்கொள்வதற்குந்தான்.

இப்பொழுது விஷயத்திற்கு வருவோம். கடிதம் எழுதி யிருப்பவர்கள் எனக்குக் கூறியிருக்கும் ஆட்சேபங்களையும் யோசனைகளையும் வருமாறு சுருக்கலாம்:

1. நீங்கள் இப்பொழுது 'அகிம்சைத் துறையிலிருந்து விலகிவிடவேண்டும்.

2. அகிம்சையைப்பற்றிய உங்கள் கருத்து மேற்கத்திய நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டது என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ள வேண்டும்.

3. உங்கள் கருத்தைத் தவருக உபயோகித்துவிடக்கூடிய சாத்தியம் இருக்குமானுல் உங்கள் கருத்துச் சரியானதாயிருந் தாலும் அவற்றை நீங்கள் கூறக்கூடாது.

4. *கர்மாவைப்பற்றிய உண்மையை நீங்கள் நம்புவதா யிருந்தால், நீங்கள் கன்றைக் கொன்றது அந்தக் கர்மா நடை பெறுவதில் நீங்கள் வீணுகக் குறுக்கிட்டதாகும்.

---

*கர்மம்-தத்துவப் பொருள் கொண்ட சொல். உயிரினங்கள் ஒன்றுக்கொன்று மாறுபட்டிருப்பதைக் காண்கிருேம். உடல் அமைப்பு, பண்பு, இன்ப துன்ப நுகர்ச்சி இவை போன்ற விஷயங்களில் மனிதருள்ளும், ஒரே தாய் வயிற்றில் பிறந்தவர்களிடை யேயும் வித்தியாசம் தென்படுகிறது. இந்த வேற்றுமை தோன்றுவதற்கு உபநிடதம், வேதாந்தம் ஆகிய தத்துவ நூல்கள் கூறும் காரணம், இது முற்பிறவியில் செய்த வினைப் பயனேயாம் என்பது. முற்பிறப்பில் செய்த புண்ணியச் செயல்களுக்காக இம்மையில் ஒருவன் இன்பத்தையும், அதே போல் தீமை புரிந்தவன் துன்பத்தையும் அடைகிருன். இவ்விரு வினைப்பயனையும் 'கர்மம்' என்று பொதுவாகக் கூறுவர்.

கர்மம் என்பதை ஜைனர்கள் 'புத்கலம்' என்றும், பௌத்தர்கள் 'வாஸனு' என்றும், மீமாம்சகர்கள் 'அதிர்ஷ்டம்' என்றும் சொல்லுகின்றனர். மறு பிறப்பில் நம்பிக்கையுள்ள இந்திய சமயங்கள் அனைத்தும் இந்தக் 'கர்மா'வை ஒப்புக்கொள் கின்றன.

5. கன்று குணம் அடைந்துவிடாது என்று நீங்கள் எண்ணு வதற்கு உங்களுக்கு என்ன ஆதாரம் இருந்தது? வைத்தியர் கள் கைவிட்டுப் போனபிறகும் பிழைத்தவர்கள் உண்டு என் பதை நீங்கள் கேள்விப்பட்டதில்லையா?

அகிம்சைத் துறையிலிருந்து அல்லது வேறு துறையிலிருந்து நான் விலகிப்போய்விட வேண்டுமா, இல்லையா என்பதை முடிவு செய்துகொள்ளவேண்டியவன் நானேதான். ஓர் உரிமையை ஒரு வன் விட்டுக் கொடுத்துவிடலாம். ஆனால், கடமையிலிருந்து தவறி விடும் பெருங்குற்றத்தைச் செய்திருந்தாலன்றி அவன் தன் கட மையை விட்டுவிட முடியாது. உண்மையைப் பேசி அதன்படி நடக்க முற்படுபவரின் விதி எப்பொழுதுமே பொதுஜனத்திடம் மதிப்பை இழப்பதும் அவர்களது கண்டனத்துக்கு ஆளாவதுந் தான். தனக்குச் சரி என்றும், மக்களுக்கு நல்லது என்றும் தோன்றும் கருத்தை பொதுஜன வெறுப்புக்குப் பாத்திரமாகி, அதையும்விட மோசமானது நேர்ந்தாலும், அதை பொருட் படுத்தாமல் பகிரங்கமாகவும், தாராளமாகவும் கூறியாகவேண் டியது ஒரு சத்தியாக்கிரகியின் தவிர்க்கமுடியாத கடமை என்று நான் கொள்ளுகிறேன். அகிம்சையைப்பற்றிய என் னுடைய கருத்துச் சரியானதே என்று நான் நம்பும் வரையில் அதை வெளியிடாமல் இருப்பது நான் கடமையிலிருந்து தவறி விடும் பாபமாகும்.

அகிம்சையைப்பற்றிய என்னுடைய கருத்து நான் பெற்ற மேனாட்டு எண்ணங்களின் பலனாகவே இருப்பினும் அதற்காக நான் வெட்கப்படவில்லை. மேற்கிலிருந்து வருபவை யாவும் தீமையென நான் ஒரே அடியாகச் சபிக்கவும் தயாராயில்லை. மேற்கத்திய நாடுகளிலிருந்து நான் எவ்வளவோ அறிந்து கொண்டிருக்கிறேன். அகிம்சையைப்பற்றியுங்கூடக் கொஞ்சம் மேற்கத்திய நாடுகளிலிருந்து நான் தெரிந்துகொண்டிருப் பதைக் குறித்து ஆச்சரியப்பட வேண்டியதில்லை. வெளிநாட்டுடன் கொண்ட தொடர்பின் விளைவால் நான் கொண்ட கருத்துக்கள் யாவை என்பதைப்பற்றி நான் அக்கறைபடவில்லை. அகிம்சையைப் பற்றியதான என் கருத்து எனது வாழ்க்கையின் ஒரு பகுதியாகிவிட்டது என் பதை அறிவதே எனக்குப் போதுமானது.

*கன்றைப்பற்றிய என் கருத்துக்களைக் குறித்துப் பகிரங்க மாக விவாதித்தேன். அவை சரியானவை என்று நான் நம்பு

* திரு. மீரா பகினுக்கு (மிஸ் ஸ்லேட்) காந்தியடிகள் எழுதியிருக்கும் ஒரு கடி தத்தில், "கன்றைப் பற்றிய சம்பவம் என் கவனத்தை முற்றிலும் இழுத்துக்கொண்டது.

கிறேன் என்பது அன்று அதற்குக் காரணம். ஆனால், நான் அறிந்தவரையில் என் கருத்துக்கள் பரிசுத்தமான அகிம்சையை அடிப்படையாகக் கொண்டவை. ஆகவே, அகிம்சையைப் பற்றிய சிக்கலான பிரச்னையைக் குறித்துத் தெளிவு ஏற்படலாம் என்பதற்காகவே பகிரங்கமாக விவாதித்தேன்.

குரங்குகளின் பிரச்னையைப் பொறுத்தவரையில் இவ்விஷயத்தில் என் கடமை என்ன என்பது எனக்கே தெரியாததினாலும், இதில் தெளிவைப் பெற வேண்டும் என்று நான் ஆர்வத்துடன் இருப்பதாலும், அதைக் குறித்துப் பகிரங்கமாக விவாதித்தேன். என் முயற்சி இதில் வீணாகிவிடவில்லை என்பதை வாசகர்களுக்கு நான் உறுதியுடன் கூறுகிறேன். எனக்குக் கடிதம் எழுதியிருப்பவர்களிடமிருந்து உபயோகமுள்ள யோசனைகள் ஏற்கனவே பல எனக்குக் கிடைத்திருக்கின்றன. அவர்களுக்கு மேலும் உறுதி கூறுகிறேன். குரங்கைக் கொல்லவேண்டியது தவிர்க்க முடியாததாகிவிட்டாலன்றி அதைக் கொல்லும் அளவுக்கு நான் போய்விடமாட்டேன். இந்த நிர்ப்பந்தம் எனக்கு நேராமல் இருக்க வேண்டும் என்ற கவலையிலேயே, விடாப்பிடியாக வந்துகொண்டிருக்கும் இந்த வேண்டா விருந்தினரைச் சமாளிப்பதற்கு என்ன செய்யலாம் என்று எல்லோரையும் யோசனை கேட்டிருந்தேன்.

---

பொதுஜனம் அதைப்பற்றிச் சிந்திக்கத் தூண்டியதால் எவ்வளவோ நன்மையாகிவிட்டது'' என்று குறிப்பிடுகிறார் மகாத்மாஜி. அச்சம்பவத்தை நேரில் கண்ட மீரா பகின் கூறுவதாவது:

''ஓர் இளஞ் சேய்கன்று, சபர்மதி ஆசிரமத்துப் பால் பண்ணையில் நோயில் விழுந்துவிட்டது. அந்த நோய் தீர்க்க முடியாதது. அது ஒரு பக்கமே படுத்துப் பல நாள் துன்புற்றது. அந்த வாதையிலிருந்து அதன் பிராணனுக்கு விடுதலை அளிப்பதே பரம காருண்யமான வேலை என்று பாபுவுக்குத் தோன்றியது. ஆசிரமவாசிகளின் அங்கீகாரமில்லாமல் இதை நடத்த அவர் துளியேனும் முற்படவில்லை. இரண்டு மூன்று தினங்கள் தீவிரமான விவாதம் நடந்தது இதைப்பற்றி. சேய்கன்றின் உயிரைப்போக்கும் யோசனை பாவுக்கும் காசிபகினுக்கும் தாளவில்லை. பாபு, 'சரி! நீங்கள் இருவரும் போய்க் கொட்டிலில் உள்ள அந்தக் கன்றை உங்கள் குழந்தையாகவே நினைத்து சுசுருஷை செய்து அதன் நோயைத் தீர்த்துவிடுங்கள்' என்றார். அவர்களும் அவ்வாறே சென்று மணிக்கணக்காகக் கன்றின் பக்கவிலேயே இருந்தனர். அது படும் வாதையும், அதற்குத் தங்களால் எந்த உதவியும் செய்ய முடியவில்லையே என்ற வேதனையும் பாபு சொன்னதில் உண்மை இருப்பதை உணர்த்தின. மற்றவர்களுடன் அவர்களும் தம் எதிர்ப்பை வாபஸ் வாங்கிக்கொண்டனர். பிறகு சேட் அம்பாலால் ஸாராபாயை அழைத்து, சுகமாகவே கன்றின் உயிர் நீங்குவதற்கு வழி செய்தார். அதன்படி அவர் தம் குடும்ப டாக்டரை அழைத்து வந்தார். பாபுவும் பண்ணைக்காரனும் நானுமாக அவர்களுடன் சென்றோம். கன்று கிடக்கும் தொழுவத்திற்கு வந்து பாபு குனிந்து, கன்றின் முன் கால்களை மெதுவாகச் சிறிது நேரமே பிடித்துக்கொண்டார். டாக்டர் இஞ்செக்ஷன் (ஊசி) தந்தார். எல்லாம் முடிந்துவிட்டது. பாபு ஒரு துணியைப் பிரித்து நிச்சப்தமாகக் கன்றின் முகத்தை மூடிவிட்டார். நாங்கள் மௌனமாக வெளியே சென்றோம். இதற்குப் பின் பல வாரங்கள் வரை இச்சம்பவத்தைக் குறித்துப் பாபுவுக்குச் சரமாரியாய்க் கடிதங்கள் வந்து குவியலாயின'—'மீரா பகினுக்குக் கடிதங்கள்' என்ற புத்தகத்தில் (5-ஆம் கடிதம் பார்க்க).

கர்மம் என்பதில் எனக்குத் திடமான நம்பிக்கை இருக்கிறது. ஆனால், மனிதனின் முயற்சியிலுங்கூட எனக்கு நம்பிக்கையுண்டு. பற்றற்றிருப்பதன் மூலம் கர்மாவின் பலன்களை நிர்மூலமாக்கி முக்தியை அடைவதே வாழ்க்கையின் மகத்தான நலன் என்று நான் கொள்கிறேன். நோயினால் துன்பப்படும் ஒரு மிருகத்தைக் கொன்று, அதனுடைய வாதையிலிருந்து அதை மீட்பது கர்மாவின் தத்துவத்திற்கு விரோதம் என்றால், வைத்தியம் பார்த்தோ அல்லது சிகிச்சை செய்தோ அதை உயிருடன் இருக்கச் செய்வதும் அதேமாதிரி கர்மம் என்பதற்கு விரோதமானதே. என்றாலும், கர்மத்தை அனுபவிக்கிறான் என்ற காரணத்திற்காக ஒரு நோயாளிக்கு மருந்து கொடுக்கவோ அல்லது சிகிச்சை செய்யவோ ஒருவர் மறுத்துவிடுவாரானால், அவர் இரக்கமற்றவர், இம்சை புரிபவர் என்று நாம் குற்றம் கூறுவோம். ஆகையால், முன்வினை பற்றியும், இச்சா சக்திபற்றியும் சிக்கலான விவாதத்தில் இறங்காமல் ஒன்று மாத்திரம் நான் இங்கே கூறுவேன். தன்னால் இயன்ற சிறு சேவையைப் புரிவதே மனிதனுக்குரிய முக்கியமான கடமை என்பதே அது.

கன்று பிழைக்க முடியாது என்பதற்கு எந்தவித உத்தரவாதமும் கிடையாது என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். நம்பிக்கைக்கு இடமில்லை என்று டாக்டர்கள் கைவிட்டுப் போன பிறகு சிலர் பிழைத்தும் இருக்கிறார்கள் என்பதையும் அறிவேன். அப்படி இருந்தாலும், மனிதனுக்குள்ள பகுத்தறிவு குறுகிய எல்லைக்குள் சுழல்வதும், குறைவுள்ளதுமாக இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. ஆயினும், அவன் தன்னுடைய பகுத்தறிவை முற்றிலும் பயன்படுத்தி, அதன் ஒளியைக் கொண்டு அறியாமையாகிய இருளில் ஊடுருவிப் பார்க்க முயன்று, அதன்படி நடப்பதே அவன் கடமை எனக் கொள்கிறேன். நமது அன்றாட வாழ்க்கையில் எண்ணற்ற காரியங்களில் நாம் இப்படித்தான் செய்துகொண்டும் வருகிறோம். யாக்கை நிலையற்றது, ஆத்மா அழிவற்றது என்ற தத்துவத்தைத் தொட்டில் குழந்தையாக இருக்கும் காலத்திலிருந்தே ஹிந்துக்களாகிய நாம் உட்கொண்டு வந்திருக்கிறோம். ஆகையால், சாவு என்ற எண்ணம் நமக்குப் பயத்தை உண்டாக்கக் காரணமே இல்லை. ஆயினும், சாவு என்பதைப் பற்றி நாம் நினைத்த மாத்திரத்திலேயே அதிகம் கலங்கிவிடுவதோடு பகுத்தறிய நமக்கிருக்கும் ஆற்றலையும் அது தம்பிக்கச் செய்துவிடுகிறது. சாவு விசித்திரப் புதிர்போல இருப்பினும்

அது உண்மை என்பதில் சந்தேகமே இல்லை. கன்றுக்கு விஷம் கொடுத்துவிடுவதென நான் செய்த முடிவு தவறான தாக இருந்தாலும், அதனுடைய ஆத்மாவுக்கு அதனால் எந்தத் தீங்கும் விளைந்திருக்காது. நான் தவறு செய்திருந்தால் அதன் விளைவுகளை அனுபவிக்கத் தயாராயிருக்கிறேன். ஆனால், செத்துக்கொண்டிருந்த கன்றின் வேதனை மிக்க ஆயுள் என்னுடைய செய்கையினால் இரண்டு மணி நேரத்திற்கு முன்னால் தீர்ந்துவிட்டதே என்பதற்காக வெறிபிடித்துக் கூவ நான் தயாராக இல்லை. கன்றுக்கு நான் உபயோகித்த விதியை என் அன்பிற்குரியவரிடமும் உபயோகிக்கத் தயாராயிருக்கிறேன். நாம் அதிகச் சலுகை கொடுத்து வளர்ப்பதாலும், அளவு கடந்து அன்பு செலுத்துவதாலும், நோய் இன்னதென்பதைச் சரியாகத் தெரிந்துகொள்ளாததாலும், தவறான வைத்தியத்தினா லும் நமக்குப் பிரியமானவர்களில் எத்தனை பேரை அவர்கள் ஆயுள் முடிவதற்கு முன்னாலேயே கொன்றுவிடுகிறோம் என்பதை யார் அறிவார்? இது போன்ற விஷயங்களில் நமக்கு ஏற்படும் பரபரப்பில் அன்பின் சாதாரணக் கடமையைக்கூட நாம் மறந்து விடுவோம்; உண்மையான அன்பின் வழியிலிருந்தும் தவறிவிடுவ தோடு நமது அகிம்சையையும் அவமதித்துவிடுகிறோம். என் னுடைய இந்தத் திடமான கருத்தை எனக்கு வந்திருக்கும் கடிதங் கள் மேலும் உறுதிப்படுத்துகின்றன. சாவைப்பற்றிய பயம், அகிம்சையின் உண்மையான தன்மையை நாம் அறிவதற்குப் பெரிய இடையூறாக இருக்கிறது.

('நவஜீவ'னிலிருந்து மொழிபெயர்ப்பு) —'எங் இந்தியா' – 18—10—1928.

# 5

# ஒரு புதிர்

அகிம்சையைப் பாதுகாக்கக் கிளம்பியிருக்கும் சில ஆவே சக்காரர்கள், தபால் இலாகாவின் செல்வ நிலையை அபி விருத்தி செய்யத் துணிந்துவிட்டார்கள் என்று தோன்றுகிறது. வசைகள் நிறைந்த கடிதங்களால் என்னை மூழ்கடித்துக் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் அகிம்சையின் பெயரால் இம்சையைக் கையாண்டு வருகின்றனர். முடிந்தால் கன்று பற்றிய விவாதத்தை முடிவின்றி நடத்திக்கொண்டே போவார் கள். நான் அறுபதாவது வயதை எட்டியதால் என் மூளை கெட்டுவிட்டது என்று சிலர் அன்போடு கூறுகின்றனர். மற் றும் சிலர், வேறொரு வருத்தத்தைத் தெரிவிக்கிறார்கள். என்னை

ஸஸ்ஸூன் ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோனபோது* நான் பிழைக்கமாட்டேன் என்று டாக்டர்கள் சொல்லி, என் உடம்பில் விஷத்தை ஏற்றி, என்னுடைய பாபம் நிரம்பிய வாழ்க்கையை அப்பொழுதே முடித்திருந்தால், ஆசிரமக் கன்று விஷமருந்தினால் செத்துப் போக நேர்ந்திருக்காது, அழிக்கப்பட்டுவிடும் அபாயத்திலிருந்து குரங்கு இனமும் தப்பியிருக்குமே என்பது அவர்களுடைய கவலை. எனக்கு அன்றாடம் வந்துகொண்டிருக்கும் ஏராளமான 'காதல் கடிதங்'களில், மேற்சொன்னவை சில விசேடமான மாதிரிகள். இத்தகைய கடிதங்கள் எனக்கு அதிகமாக வர வர, 'நவஜீவன்' பத்திரிகையில் இந்தச் சங்கடமான பிரச்னையை வெளிப்படுத்த நான் முடிவு செய்தது சரி என்பதில் எனக்கு உறுதி அதிகமாகிக்கொண்டு வருகிறது. தங்களுடைய ஆத்திரத்தை இவ்விதம் ஆபாசமான முறையில் காட்டிக்கொள்ளுவதால் அகிம்சைவாதிகளாகவோ அல்லது அதைப் பரப்புபவர்களாகவோ இருக்க அவர்கள்

---

* 1922-இல் அகமதாபாது ஜில்லா நீதிபதி மகாத்மா காந்திக்கு ஆறு ஆண்டு சிறைத் தண்டனை விதித்தார். அவரை எரவாடா சிறையில் வைத்திருந்தனர். 1924 ஜனவரியில் மகாத்மா திடீரென்று நோயுற்றார். அவரை உடனே புனா ஸஸ்ஸூன் ஆஸ்பத்திரிக்கு மாற்றினர். அவருக்குக் குடல் அனுபந்த நோய் இருப்பதை அங்குக் கண்டுபிடித்த கர்னல் மாடாக் என்ற வைத்தியர் அவருக்கு ஆபரேஷன் செய்தார். 1924 ஜனவரி 12 இரவு 10 மணிக்கு ஆபரேஷன் நடந்தது. திடீரென மின்சார விளக்கு நின்றுவிட்டது. ஒரு பாட்டரி விளக்கின் உதவிகொண்டு வைத்தியர் ஆபரேஷனை நடத்தினார். அந்த விளக்கும் ஆபரேஷன் நடுவே கெட்டுவிட்டது. ஆபத்தான நிலைமையையும் சமாளித்து வைத்தியர் ஒரு மணி நேரத்தில் ஆபரேஷனை முடித்தார்.

கன்றைக் கொன்றுவிட்டதாக ஆத்திரமடைந்தவர், இந்த ஸஸ்ஸூன் ஆஸ்பத்தி ஆபரேஷன் சம்பவத்தைக் குறிப்பிட்டே அப்பொழுது டாக்டர் விஷம் கொடுத்துக் காந்திஜியைக் கொன்றிருக்க வேண்டும் என்கிறார். ஆனால், காந்திஜி வைத்தியசாலையிலிருந்தபோது தேசம் வேறுவிதமாக எண்ணியது. மக்கள் கவலை கொண்டனர். அவர் பிழைத்து வர வேண்டுமென நாடு பிரார்த்தித்தது. கவலை மிகுந்த அந்த நாட்களைக் குறித்து ஸ்ரீ மகாதேவ தேசாய் 1924 ஜனவரி 29-ஆம் தேதி 'எங் இந்தியா'வில் எழுதுகையில் நாடெங்கும் மக்கள் கொண்டிருந்த கவலையைக்குறித்து இவ்வாறு குறிப்பிடுகிறார் : "இந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும் எழுந்த அன்பு புனலில் பொழிந்ததைக் குறித்துச் சொல்ல வேண்டியதில்லை......தந்திகள், கடிதங்களோடு அன்பு தீர்ந்துவிடவில்லை. வெகு தொலைவிலிருக்கும் தஞ்சாவூர்க்காரர்கள் ஒரு கோயிலில் அர்ச்சனைகளும் அபிஷேகங்களும் செய்ததாக எழுவதுடன் மகாத்மாவுக்குக் குங்குமமும் விபூதியும் அனுப்பியிருக்கின்றனர். காசியிலிருந்து வந்துள்ள ஒரு கடிதம், சாவை வென்றவரான மிருத்யுஞ்சய மகாதேவரின் கோயிலில் விசேட வழிபாடுகள் நடந்தனவாகக் கூறுகிறது. மகாத்மா குணமடையும் வரையில் நூறு பிராமணர்கள் தொடர்ந்து அனுஷ்டானங்களைச் செய்து வருவார்களாம். கங்கை நீரையும் விபூதியையும் அனுப்பியிருக்கிறார்கள். சீர்காழி, திண்டுக்கல் ஹிந்துக்களுடன் நாகூர் முஸ்லிம் சகோதரர்களும் பாதியா ஓதிப் பிரசாதம் அனுப்பியிருக்கின்றனர். மகாத்மாஜிக்கு ரத்தம் கொடுக்க வேண்டும் என்று டாக்டர்கள் கருதினால் தம் ரத்தத்தைக் கொடுக்கத் தயார் என்று ஒரு பார்ஸி சகோதரி எழுதுகிறார்."

மகாத்மா சீக்கிரத்தில் குணமடைய வேண்டும் என்று பிப்ரவரி 10-ஆம் தேதி நாடெங்குமுள்ள கோயில்கள், மசூதிகள், கிறிஸ்தவாலயங்கள் ஆகியவைகளில் பிரார்த்தனைகள் நடந்தன.

கொஞ்சமும் தகுதியற்றவர்கள், அகிம்சையின் வேருக்கே உலே வைக்கின்றனர் என்பது இந்த நல்லவர்களுக்கு விளங்குவதாகவே காணவில்லை. இந்த வசவுக் கடிதங்களை விட்டுவிட்டு எனக்குக் கிடைத்திருக்கும் வேறு வகையான கடிதங்களை எடுத்துக்கொள்கிறேன். கீழே தருவது இவைகளில் ஒன்று :

"நீங்கள், 'கன்று விஷயம்'பற்றி நீதி முறையை விளக்கியிருப்பது எனக்கிருந்த சந்தேகங்களில் பலவற்றைப் போக்கியிருப்பதுடன் அகிம்சைத் தத்துவத்தைப்பற்றிய பல உண்மைகளையும் வெளிப்படுத்தியிருக்கிறது. ஆனால், துரதிர்ஷ்டவசமாக அது புதியதோர் சங்கடத்தையும் எழுப்புகிறது. உதாரணமாக, மக்கள் எல்லோரையும் ஒருவன் வருத்தி வருகிறான் என்று வைத்துக்கொள்ளுவோம். அவனுடைய கொடுமைகளை நிறுத்துவதற்குக் கன்று விஷயத்தில் செய்ததைப் போலச் செய்யாவிட்டால் வேறு வழியே கிடையாது என்றால், அவனைக் கொன்று சமூகத்தின் துன்பத்தைப் போக்குவது அகிம்சையான காரியமாகாதா? இத்தகைய செய்கை தவிர்க்க முடியாததொன்று; ஆகவே, இது அகிம்சையே என்று நீங்கள் கருதமாட்டீர்களா? கன்றைக் கொல்லுவதைப்பற்றிய உங்கள் விவாதத்தில் மனம் கொள்ளும் நோக்கே அகிம்சைக்கு முக்கியமான அளவுகோல் என்று கூறியிருக்கிறீர்கள். இந்தத் தத்துவத்தின்படி கொடியவரென நிரூபிக்கப்பட்டவர்களை அழிப்பதான இச் செயலைத் தூண்டுவது உயர்ந்த நோக்கமேயாகையால் இது அகிம்சையாகாதா? குடியானவனின் பயிர்களை நாசப்படுத்தும் மிருகங்களைக் கொல்லுவது இம்சையல்ல என்கிறீர்கள். அப்படியானால், சமூகத்திற்கு நாசத்தையும் இன்னும் அதிக மோசமானதையும் செய்யும் மனிதரைக் கொல்லுவதும் ஏன் அகிம்சையாக இருக்கக்கூடாது?"

என்னுடைய விவாதத்தில் அடங்கிய முக்கியமான விஷயத்தை அறிந்துகொள்ள இக்கடிதத்தை எழுதியவர் தவறி விட்டார் என்பதை, விஷயத்தைச் சீர்தூக்கிப் பார்த்து அறியும் வாசகர்கள் இதற்குள் தெரிந்துகொண்டிருப்பார்கள். அகிம்சை என்பதற்கு நான் கூறியிருக்கும் விளக்கத்திற்கு இக்கடிதம் எழுதியிருப்பவர் நினைப்பது போல ஆளைக் கொல்லும் அளவுக்குப் பொருளை விரித்துக்கொள்ள முடியாது. தன்னுடைய தொழில் கெடாமல் இருப்பதற்காக ஒரு குடியானவன் தவிர்க்க முடியாமல் போய் உயிர்வதை செய்வது அகிம்சை என்று நான் எங்குமே விவரித்ததில்லை. அவ்விதம் கொல்லுவது தவிர்க்க முடியாதது என்று ஒருவர் கருதி, அது குற்றமன்றெனச் சமாதானம் சொல்லிக் கொள்ளலாம். ஆனால், அது இம்சையே தவிர வேறு ஒன்றாக அதனைச் சொல்லுவதற்கில்லை. இப்படிக் கொல்லும் குடியானவன் செய்கையில் அடங்கிய நோக்கம் தன்னுடைய நலத்தையோ அல்லது சமூகத்தின் நலத்தையோ பாதுகாத்துக்கொள்ளுவதேயாகும். அத்தகைய நலத்திற்காகக் கொல்லப்படுவதை அகிம்சை அங்கீகரிக்கவில்லை. ஆனால், கன்றைக் கொன்றதோ அக்

கன்றின் நலனுக்காகச் செய்யப்பட்டது. எப்படியானுலும், இங்கே அதன் நன்மையைக் கோருவதே ஒரே நோக்கமாகும்.

இக்கடிதத்தை எழுதியவர் குறிப்பிட்டிருக்கும் பிரச்னே, நிச்சயமாகக் குரங்குத் தொல்லேயுடன் ஒப்பிடக்கூடியது. ஆனுல், குரங்குத் தொல்லேக்கும் மனிதனின் தொல்லேக்கும் அடிப்படையான வித்தியாசம் இருக்கிறது. குரங்கினிடம் மன மாற்றத்தை உண்டாக்குவதற்கான முறை எதையும் சமூகம் இன்னும் அறியவில்லே. ஆகையால், குரங்குகளேக் கொன்றுவிடு வது மன்னிக்கக்கூடியதாகலாம். ஆனுல், திருந்தவே முடியா தவன் என்ற தீயனே அல்லது கொடியனே யாருமில்லே. இதனுலே சுயநலத்திற்காக ஒரு மனிதனேக் கொல்லுவது என் பதற்கு அகிம்சை முறையில் என்றுமே இடமில்லே.

நோக்கத்தைப்பற்றிய விஷயத்திற்கு இனி வருவோம். மனத்தின் நோக்கு ஒன்றுதான் அகிம்சையைச் சோதிக்கும் வழி என்பதல்லவாயினும், அது ஒரு முக்கியமான சோதனேக் கூறு என்பது உண்மை. நோக்கம் எவ்வளவுதான் சிறந்ததாக இருந்தாலும் சரி, ஒருவரின் அல்லது ஒன்றின் நன்மைக்காக ஓர் உயிரைக் கொல்லுவது இம்சையே. இன்னெருவர் மீது கெட்ட எண்ணம் வைத்திருப்பவரும் இம்சைக் குற்றத்தைச் செய்பவரே யாவார். ஏனெனில், சமூகத்திற்குப் பயந்து கொண்டோ அல்லது தக்க வாய்ப்பு இராததனுலோதான் அவர் தம்முடைய கெட்ட எண்ணத்தைச் செய்கையில் காட் டாமல் இருக்கிருர். ஒரு குறிப்பிட்ட செய்கையோ அல்லது ஒன்றைச் செய்யாமல் இருப்பதோ அகிம்சையாகுமா என்ப தைப் பற்றி முடிவான தீர்வுக்கு வர நோக்கம், செயல் ஆகிய இரண்டையும் கவனிப்பது அவசியம். ஒன்ருேடொன்று இணேப்பான பல செயல்களேக் கொண்டே நோக்கத்தை ஊகித்தறிய வேண்டியிருக்கிறது.

('நவஜீவ'னிலிருந்து மொழிபெயர்ப்பு) —'எங் இந்தியா' - 18—10—1928.

# 6

# மேலும் அகிம்சையைக் குறித்து

## 1

ஒருவர் வருமாறு எழுதுகிருர் :

'அக்கினி பரீட்சை' என்ற தலேப்பில் நீங்கள் எழுதியிருக்கும் கட்டு ரையைத் திரும்பத் திரும்பப் படித்தேன். ஆனுல், அது எனக்குத் திருப்தியளிப் பதாக இல்லே. குரங்குகளேக் கொல்லுவதைக் குறித்து நீங்கள் கூறியிருக்கும் யோசனே என்னேத் திடுக்குறச் செய்துவிட்டது. அகிம்சையில் ஊறிப் போயி ருக்கும் உங்களேப் போன்ற ஒருவர், வானமே இடிந்து விழுந்தாலும் நேரான

வழியை விட்டுச் சிறிதும் பிசகிச்செல்லமாட்டீர்கள் என்று நம்பியிருந்தேன். ஆனால், இப்பொழுது நீங்களோ, உங்கள் ஆசிரமத்தைக் குரங்குகளின் தொல்லையிலிருந்து பாதுகாப்பதற்காக அவற்றைக் கொன்றுவிடலாம் என்றும் சொல்லுகிறீர்கள். உங்களைக் குறித்து நான் முதலில் கொண்டிருந்த கருத்துத் தவறானதாக இருக்கலாம். ஆனால், குரங்குகளைக் கொல்லுவதைக் குறித்து நீங்கள் கூறிய யோசனை எனக்கு எவ்வளவு அதிர்ச்சியை உண்டாக்கிவிட்டது என்பதைப்பற்றி உங்களுக்கு என்னால் விவரிக்க முடியாது. எனினும், உங்கள் மீது எனக்கு எவ்வளவு கோபத்தை அது மூட்டிவிட்டது என்பதை நான் தெரிவித்துக்கொள்ளலாமா? எனக்கு ஏற்பட்டிருக்கும் திகைப்பிலிருந்து விடுபடத் தயைசெய்து உதவி செய்வீர்களா?"

இதே தோரணையில் இன்னும் பல கடிதங்களும் எனக்கு வந்திருக்கின்றன. என்னைப்பற்றி மக்கள் முற்றிலும் மிகையான மதிப்பு வைத்துள்ளனரென்றே அஞ்சுகிறேன். அகிம்சை லட்சியத்தை ஆராய்ந்து விளக்க நான் முயற்சி செய்துவருவதால் அந்த லட்சியத்தை நான் முற்றிலும் அடைந்துவிட்டதாக நல்லவர்களான இவர்கள் எண்ணுகிறார்கள் எனத் தோன்றுகிறது. கன்றைக் குறித்தும், குரங்குகளைப்பற்றியும் நான் தெரிவித்த கருத்துக்கள், அவர்களுடைய இந்த மயக்கை நல்ல காலமாகச் சிதற அடித்துவிட்டதாகத் தெரிகிறது. 'மகாத்மா' பட்டத்தைவிட எனக்கு அதிக விருப்பமானது சத்தியமே; அப் பட்டம் வெறும் சுமையே தவிர வேறு ஒன்றுமில்லை. என்னுடைய குறைபாடுகளையும், நான் எம்மாத்திரம் என்பதையும் நான் உணர்ந்திருப்பதே, 'மகாத்மா' பட்டத்தின் பளுவிலிருந்து என்னை இதுவரை காத்துவந்திருக்கிறது. இந்த உடலில் உயிரை வைத்துக்கொண்டிருக்க வேண்டுமென்பதில் எனக்குள்ள ஆர்வம், இடைவிடாது என்னை இம்சையில் ஈடுபடுத்துகிறது; இதை அறிந்து நான் வேதனைக் குள்ளாகியிருக்கிறேன். இதனாலேயே என்னுடைய உடலைப்பற்றி எனக்கு அசிரத்தை அதிகமாகிக் கொண்டு வருகிறது. உதாரணமாக, காற்றில் மிதக்கும் கண்ணுக்குப் புலனாகாத எத்தனையோ நுண்ணிய கிருமிகளை, நான் மூச்சு விடுவதால் நாசப்படுத்திக்கொண்டு வருகிறேன் என்பதை அறிவேன். ஆனால், மூச்சு விடுவதை நான் நிறுத்திவிடுவதில்லை. காய்கறிகளைச் சாப்பிடுவதிலும் இம்சை இருக்கிறது. ஆனால் அவற்றைச் சாப்பிடாதிருக்க என்னால் இயலவில்லை. கிருமி கொல்லி மருந்துகளை உபயோகிப்பதும் இம்சையே. கொசு முதலியவைகளின் தொந்தரவிலிருந்து விடுபடுவதற்கு மண்ணெண்ணெய் போன்றவைகளை உபயோகித்துக்கொள்வதை நான் விட முடியவில்லை. பாம்புகளைப் பிடித்து அவைகளால் கெடுதி ஏற்படாதபடி தூரத்தில் கொண்டுபோய் விட முடியாமல் இருக்கும் போது ஆசிரமத்தில் பாம்புகளைக் கொல்லுவதை நான் சகித்

துக்கொண்டிருக்கிறேன். ஆசிரமத்தில் எருதுகளை ஓட்டுவதற்குக் குச்சிகளை வைத்துக்கொள்வதையும் சகிக்கிறேன். இவ்விதம் நேரடியாகவும் மறைமுகமாகவும் நான் செய்துவரும் இம்சைக்கு முடிவே இல்லை. இப்பொழுது குரங்குப் பிரச்னையும் எனக்கு எதிர்ப்படுவதைக் காண்கிறேன். அவைகளைக் கொன்றுவிடும் கடைசி முறையைக் கையாள வேண்டிய அவசரம் எனக்கு இப்பொழுது இல்லை என்று வாசகருக்கு உறுதி கூறுகிறேன். உண்மையில் அவைகளைக் கொன்றுவிடுவதென்று தீர்மானமான ஒரு முடிவுக்கு வருவதற்கும் என்னால் ஆகுமென்பதற்கான நிச்சயம் எனக்கில்லை. பயனுள்ள யோசனைகளைக் கூறி நண்பர்கள் உதவி செய்து வருகிறார்கள். அவற்றுள் சிலவற்றை அனுசரிப்பதனால், குரங்குகளைக் கொல்லாமல் தாற்காலிகமாகவாவது அச்சங்கடத்தைத் தவிர்த்துக்கொள்ள முடியலாம். ஆனால், ஆசிரமத்தில் இருக்கும் எல்லாப் பயிர்களையும் குரங்குகள் அழிக்குமேயானால் அவற்றை ஒருபோதும் கொல்லமாட்டேன் என்று இன்று நான் உறுதி கூறமுடியாது. இவ்விதம் பணிவுடன் நான் தெரிவித்துக்கொள்வதனால் நண்பர்கள் என்னைக் கைவிட்டுவிடுவார்களானால் நான் அதற்கு வருத்தமடைவேன். எனினும், அகிம்சையை அனுசரிப்பதில் எனக்குள்ள குறைபாடுகளை மறைத்துக்கொள்ளும்படி என்னைத் தூண்ட எதனாலும் முடியாது. என்னைப்பற்றி நான் சொல்லிக்கொள்வதெல்லாம் அகிம்சை போன்ற உயர்ந்த லட்சியங்களின் தன்மைகளைப் புரிந்துகொள்ள நான் இடைவிடாது பாடுபட்டுவருவதோடு சிந்தனையிலும், சொல்லிலும், செயலிலும் நான் நினைக்கிறபடி ஓர் அளவு வெற்றியோடேயே அனுசரிக்கவும் முயன்று வருகிறேன் என்பதுதான். ஆனால், இப்பாதையில் நான் இன்னும் வெகுதூரம் போகவேண்டியிருக்கிறது என்பதையும் அறிவேன். ஆகையால், இக்கடிதத்தை எழுதியிருப்பவர், எனக்குள்ள குறைபாடுகளுடன் என்னைச் சகித்துக்கொள்ள உடன்பட்டாலன்றி அவருக்கு என்னால் மனத்திருப்தியை அளித்துவிட முடியாது என்பதற்காக வருந்துகிறேன்.

—'எங் இந்தியா'-1—11—1928

## 2

மற்றும் ஒருவர் வருமாறு எழுதுகிறார் :

"என்னுடைய தமையனார் பயங்கர நோயினால் வாதைப்படுகிறார் என வைத்துக்கொள்ளுவோம். அவர் பிழைக்கமாட்டார் என்று டாக்டர்களும் கூறுகின்றனர். எனக்கும் அவ்வாறே தோன்றுகிறது. அந்த நிலைமையில் அவரைக் கொன்றுவிடலாமா?"

கூடாது என்பதே என் பதில். எனக்குக் கடிதம் எழுது கிறவர்களில் சிலர், என்னுடைய கட்டுரையைப் புரிந்துகொள் ளும் சிரமத்தைக்கூட எடுத்துக்கொள்ளவில்லை என்றே அஞ்சு கிறேன். நோயுற்றிருக்கும் ஒரு மனிதனை நோயுற்றிருக்கும் ஒரு கன்றுடன் ஒப்பிட்டு, இதே நிலைமையில் அம்மனிதனைக் கொன்று விடலாம் என்று நான் சிபாரிசு செய்திருந்தபோதிலும் நடை முறையில் இரண்டுக்கும் சம்பந்தம் எதுவும் காணப்படுவதே யில்லை. புதிர்போல இக்கடிதம் எழுதுவோர் தங்கள் குழப் பத்தை வெளிப்படுத்துவதில் இதை மறந்துவிடுகிறார்கள். முதலாவதாக, மனிதனின் உடல் தூக்கவும் பிடிக்கவும் சமா ளிக்கக்கூடிய பளு உள்ளது. சிகிச்சை செய்யவும் எளிதான தாக இருக்கிறது. இரண்டாவதாக, மனிதனுக்குப் பேசும் சக்தி இருக்கிறது; எப்பொழுதும் தன்னுடைய விருப்பத்தைத் தெரிவிக்கும் நிலையில் இருக்கிறான். ஆகையால், அவனுடைய விருப்பத்தை அறியாமல் அவனுடைய உயிரைப் போக்கி விடுவது என்பதற்கு எதுவும் இடம் தராது. அகிம்சா தருமத்திற்கு விரோதமில்லாமல் ஒருவனுடைய உயிரை அவனுடைய விருப்பத்திற்கு மாறாகப் போக்கிவிடலாம் என்று நான் சொன்னதே கிடையாது. மேலும், ஒருவன் பிரக்ஞையை இழந்த நிலையை அடைந்துவிட்டாலும், அவன் பிழைப்பான் என்ற நம்பிக்கையெல்லாம் போய்விட்டாலும், அப்பொழுதும் அவனுக்கு உதவி செய்வதை நாம் கைவிட்டுவிடுவதில்லை. ஒரு மனிதப் பிணியாளிக்குக் கடைசிவரையில் சேவை செய்வதென் பது எப்பொழுதுமே முடியும், செய்யவேண்டுவதுமாகும். ஆகை யால், கன்று விஷயத்தில் கூறப்பட்ட கொள்கை மனிதன், பறவை, மிருகம் ஆகியவற்றுக்கும் ஒரேவிதமாகப் பொருந்தும் என்று நான் இன்னும் கூறிவந்தாலும், மனிதனுக்கும் மிருகத் திற்கும் இடையேயுள்ள தெளிவான மாறுபாட்டைப் புத்தியுள்ள எவருமே அறிந்துகொள்வாரென எதிர்பார்க்கிறேன். அகிம் சையை அனுசரித்து உயிரைப் போக்குவதற்கான ஓர் அதிகாரம் கீழ்க்கண்ட நிபந்தனைகள் எல்லாம் நிறைவேறிய பிறகே ஏற்படும் என்பதைத் திரும்பவும் நினைவுபடுத்துகிறேன் :

1. நோயாளி அனுபவித்து வரும் நோய் குணமாக்க முடியாத நோயாக இருக்கவேண்டும்.

2. நோயாளியின் உயிரைக் காப்பாற்ற இனி எதுவுமே முடியாது என்று அவரைச் சேர்ந்தவர்கள் எல்லோரும் கைவிட் டிருக்கவேண்டும்.

3. நிலைமை, எந்த உதவிக்கும் சேவைக்கும் மீறிப் போயிருக்கவேண்டும்.

4. சம்பந்தப்பட்ட நோயாளி, தன்னுடைய விருப்பத்தைத் தெரிவிக்கச் சாத்தியமில்லை என்றும் இருக்கவேண்டும்.

இந்த நிபந்தனைகளில் ஒன்று நிறைவேற்றப்படாமல் இருந்தாலும் உயிரைப் போக்குவது அகிம்சையைப் பொறுத்தவரையில் நியாயமானதாகாது.

### 3

மூன்றாவதாக ஒருவர் வருமாறு எழுதுகிறார் :

"அந்த அளவில் கன்றைக் கொன்றுவிடுவது சரிதான். ஆனல், உங்கள் உதாரணம் மிருக பலியில் ஈடுபட்டிருப்பவர்களுக்குத் தக்க ஆதாரமாகி, அதனல் அந்தப் பழக்கம் வளர்ந்துவிடக்கூடும் என்பதை யோசித்தீர்களா? பலியிடப்படும் மிருகங்கள் அடுத்த பிறப்பில் உயர்வை அடைகின்றன என்று மிருக பலியிடுவோர் விவாதித்து வருகிறார்கள் என்பது உங்களுக்குத் தெரியுமா?"

இந்த உலகத்தில் நயவஞ்சகமும் அறியாமையும் இருந்துகொண்டிருக்கும் வரையில், என்னுடைய செய்கை தவறான வழியில் பயன்படுத்திக்கொள்ளப்படுவது முற்றிலும் சாத்தியமும் தவிர்க்க முடியாததுமாகும். மதத்தின் புனிதப் பெயரை வைத்துக்கொண்டு இந்த உலகத்தில் என்ன கொடுமைகள் தாம் செய்யப்படுகின்றன ! ஆகையால், ஒருவருடைய நடத்தை தவருகக் கருதப்பட்டுவிடலாம் அல்லது மற்றவர்கள் தப்பான பொருள் கற்பித்துவிடுவார்கள் என்பதற்காக தமக்குச் சரியெனப் பட்டதை ஒருவர் செய்யாமல் இருக்கக்கூடாது. மிருக பலியிடும் பழக்கமுள்ளவர்கள், தாங்கள் செய்வதற்குச் சாத்திர ஆதாரங்களே இருக்கின்றன என்று கூறி வருவதால், தாங்கள் செய்வது சரியெனக் காட்டுவதற்கு அவர்களுக்கு என்னுடைய உதாரணத்தின் ஆதாரமே தேவையில்லை. என்றாலும், எனக்கு ஒரு பயம் மாத்திரம் இருக்கிறது. என்னுடைய உதாரணத்தை வைத்துக்கொண்டு சிலர், தங்கள் விரோதிகள் என நினைத்துக் கொண்டு வேறு சிலரை உடனேயே கொன்றுவிடத் துணியலாம் ; அப்படிக் கொல்லுவதைச் சமூகத்துக்கும் அந்த 'விரோதி' ஆகிய இருவருக்குமே நல்லது என்றும் அவர்கள் எண்ணிவிடக்கூடும் என்பதே அது. உண்மையில் இந்த வாதம் எழுப்பப்படுவதையும் அடிக்கடி நான் கேட்டு வருகிறேன். ஆனல், அகிம்சையைப்பற்றி நான் கூறும் விவாதத்தில் அத்தகைய வாதத்திற்கு எந்தவிதமான ஆதாரமும் கிடையாது என்பது ஒன்றே எனக்குப் போதுமானது. ஏனெனில், அவர்கள் கூறும் உதாரணத்தில், கொல்லப் படுகிறவரின் விருப்பத்தை எதிர்பார்ப்பது அல்லது அதற்கு இணங்கச் சேவை செய்வது

என்பதே இல்லை. முடிவாக, சம்பந்தப்பட்ட ஒரு மிருகம் அல்லது 'விரோதி'யை உடனே கொன்றுவிடுவது என்பது அந்த மிருகம் அல்லது 'விரோதி'யின் நன்மைக்கேயென்ரு லும், அச்செய்கை முற்றிலும் சுயநலமற்று இராதாகையால், அதை இம்சை என்றே சொல்லவேண்டும். இதிலுள்ள குற்றம் மிகத் துலக்கமானது. ஆனல், கண்டும் காணுமல் இருப்பவர் அல்லது தம்மையே தாம் ஏமாற்றிக்கொள்வதென்று உறுதிகொண்டுவிட்டவர்கள் ஆகிய இவர்களை யார்தாம் காக்க முடியும் ?

(' நவஜீவ'னிலிருந்து மொழி பெயர்ப்பு) —' எங் இந்தியா '—1—11—1928

# 7

# மேலும் சில கேள்விகள்

கன்று சம்பவத்தைக் குறித்து இன்னும் கடிதங்கள் வந்து குவிந்துகொண்டிருக்கின்றன. ஆனல், சொல்லவேண்டியதை யெல்லாம் சொல்லிவிட்டேன் ; பதில் சொல்லவேண்டியவை களுக்குப் பதிலும் கூறிவிட்டேன். எனினும், கடிதம் எழுதி யிருப்பவர்களில் சிலர் கேட்டிருப்பவைகளைக் கவனிக்கவேண் டியது என் கடமை என எண்ணுகிறேன். அப்படிக் கவனிக்கா மல் நான் இருப்பின் எனது செய்கைக்குப் பொருத்தமில்லாத சில விளைவுகளை அது உண்டாக்கிவிடக்கூடும்.

## 1

ஒருவர் வருமாறு எழுதுகிருர்:

"என் குழந்தை பிறந்து நான்கு மாதங்களாகின்றன. பிறந்த இரு வாரங்களுக்கெல்லாம் அதற்கு நோய் ஏற்பட்டது. அந்நோய் தீரும் என்ப தாகவே இல்லை. பல வைத்தியர்களும் டாக்டர்களும் என்ன செய்து பார்த்தும் ஒன்றும் பயனில்லை. இவர்களில் சிலர் குழந்தைக்கு மேற்கொண்டு மருந்து கொடுக்கவும் மறுத்துவிட்டனர். குழந்தை இனிப் பிழைக்காது என்றே இவர்கள் எண்ணுகிருர்கள்; நானும் நினைக்கிறேன். என் குடும்பம் பெரிது. அதைக் காப்பாற்ற வேண்டியிருக்கிறது. கடனே ஏராளமாகிவிட்டதால் சமாளிக்க முடியாத நிலைமை ஏற்பட்டுவிட்டதாக நான் எண்ணுகிறேன். குழந்தை அனுபவிக்கும் பெருத்த வேதனையும் பார்த்துச் சகிக்கக்கூடியதாக இல்லை. இந்த நிலைமையில் நான் செய்ய வேண்டியது என்ன என்பதைத் தயை செய்து எனக்குக் கூறுவீர்களா ?"

இந்த நண்பர் 'நவஜீவன்' பத்திரிகையைக் கவனமாகப் படித்து வரவில்லை என்பது தெளிவாகிறது. படித்திருந்தால் இந்தக் கேள்வியைக் கேட்டிருக்கமாட்டார். குழந்தை பிழைக் காது என்று உலகத்திலுள்ள டாக்டர்கள் எல்லோரும் ஒருமித் துக் கூறிக் கைவிட்டுவிட்டாலும் அக்குழந்தையின் உயிரைப் போக்கிவிட வேண்டும் என்பதற்கு எந்த அவசியமும் இல்லை.

ஏனெனில், அக்குழந்தைக்குச் சுசுருஷை செய்வது அதன் தந்தையால் எப்பொழுதும் முடியும். கன்றுபோல் பளுவாக இராமல் சமாளிப்பதற்கு முடியுமான அளவுடையது குழந்தை; ஆகையால் அதைப் பல வழிகளில் சாந்தப்படுத்துவதும் சுலபம். எவ்வளவு சிறியதாயினும் சரி, சேவைக்கான சாத்தியங்கள் எல்லாம் அடைபட்டுப் போனால்தான், நோயாளி பிழைக்கக்கூடும் என்பதற்கான கடைசிக் கொஞ்ச நம்பிக்கையும் போய்விட்டால் மாத்திரமே, நோயாளியை அந்தத் துன்பத்திலிருந்து விடுவிக்கக் கொன்றுவிடுவது நியாயமாகும். அதுவும் அந்நோயாளியின் உயிரைப் போக்குகிறவருக்குத் துளியும் சுயநல எண்ணம் இருக்கக் கூடாது. ஆனால், இந்த விஷயத்திலோ நோயுற்றிருக்கும் குழந்தைக்குச் சுசுருஷை செய்வது சாத்தியமாயிருக்கிறது. குழந்தையின் தந்தையோ, அவர் ஒப்புக்கொள்ளுகிறபடி, முக்கியமாகக் கவனிப்பதெல்லாம் அக்குழந்தைக்குச் சுசுருஷை செய்வதில் தமக்கு இருக்கும் சொந்த அசௌகரியங்களைக் குறித்தே. குடும்பம் பெரிதென்பதற்கோ அல்லது ஒருவருக்குப் பணக்கஷ்டம் என்பதற்கோ நோயாளியைக் கொல்லுவது நியாயமான காரணமாகவே இருக்கமுடியாது. இந்த விஷயத்தில் தம்முடைய முழு அன்பையும் கவனத்தையும் நோயுற்ற குழந்தையிடம் காட்டவேண்டியது தந்தையின் கட்டாயக் கடமை என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகம் இல்லை. என்றாலும், அவர் செய்யக்கூடியது இன்னும் ஒன்றும் உண்டு. நிலைமையை அறிந்துகொள்ளும் உணர்வு மாத்திரம் அவருக்கு இருக்குமானால் அவர் ஒன்று செய்ய வேண்டும். இந்தக் குழந்தை பிழைத்தாலும், பிழைக்காது போனாலும், புலனடக்கத்தோடு கூடிய வாழ்க்கை நடத்த முடிவு செய்துகொண்டு மேலும் பிள்ளை பெறுவதை நிறுத்திவிடவேண்டும்.

## 2

வேறொரு நண்பர் ஹிந்தியில் எழுதியிருக்கும் கடிதத்தில் வருமாறு கூறுகிறார் :

"நான்......கோசாலையின் நிர்வாகி. என் நிர்வாகத்தில் 500 கால் நடைகள் இருக்கின்றன. இவைகள் எல்லாம் வீணுக்குத் தின்று அழித்துக் கொண்டு இருக்கின்றனவேயன்றி இவற்றால் ஒரு பயனுமே இல்லை. இவற்றில் சராசரி 350 முதல் 400 கால்நடைகள் சாகும் நிலையிலேயே இருக்கின்றன. வருடந்தோறும் ஆண்டு முடிவுக்குள் ஒவ்வொன்றாகச் செத்துக் கொண்டும் இருக்கின்றன. இதில் நான் செய்யவேண்டியது என்ன என்பதைக் கூறுங்கள்"

நான் முன்னாலேயே எடுத்துக்காட்டி யிருப்பதைப் போன்று பணச்செலவைச் சுட்டுவது அகிம்சைக்கு ஒருபோதும்

பொருத்தமானதாகாது. கோசாலையில் ஒவ்வொரு நாளும் ஏதாவது ஒரு மாடு, ஆசிரமத்தின் கன்றைப்போலத் துன்பப் பட்டுச் செத்துக்கொண்டே இருக்கிறது என்பது உண்மை யாக இருக்குமானால், அந்தக் கோசாலையை உடனே மூடிவிட வேண்டியது அவசியம் என்றாகிறது. ஏனெனில், அதன் நிர் வாகம் பயங்கரமான வகையில் மோசமாக இருக்கிறது என்பது அதிலிருந்து வெளிப்படுகிறது. ஆசிரமத்துக் கன்று, ஒரு விபத்தின் காரணமாகவே அந்த மோசமான கதிக்கு வந்தது. ஆனால், நன்றாக நிர்வகிக்கப்படும் ஒரு ஸ்தாபனத் தில் இத்தகைய சம்பவம் அன்றாடம் நடந்துகொண்டிருக் கிறது என்பதற்குச் சாத்தியமே இல்லை. நிர்வாகத்தின் பொறுப்பு இந்த விஷயத்தில் இவ்விதம் மிகத் தெளிவான தாகிறது. நோயுற்றிருக்கும், கஷ்டப்படும் கால்நடைகளுக்குச் சரியான வகையில் சிகிச்சை செய்து பராமரித்து வருவது இது போன்ற ஸ்தாபனங்களின் முக்கியமான பொறுப்பாகும். நல்ல வகையில் சிறந்ததான ஒரு பிஞ்சராபோலை எப்படி நடத்துவது என்பதைக் குறித்தும், அதை எப்படி நிர்வகிக்க வேண்டும் என்பதைப்பற்றியும் நான் அடிக்கடி இப்பத்திரிகை யில் எழுதி வந்திருப்பதைப் பரிசீலனை செய்து கவனிக்கும் படியும் அந்த ஸ்தாபனங்களுக்குச் சிபாரிசு செய்கிறேன்.

கானபி நண்பர் வருமாறு எழுதுகிறார் :

"எங்கள் கிராமத்திற்கு அருகில் கால்நடைகளுக்கு ஒரு மேய்ச்சல் திடல் இருக்கிறது. ஐந்நூறு முதல் எழுநூறு எண்ணிக்கை மான்களின் கூட்டம் ஒன்று அத்திடலை ஆக்கிரமித்துக்கொண்டிருக்கிறது. மான்கள் எங்கள் பருத் திப் பயிரையும் நாசப்படுத்திக் கொண்டிருக்கின்றன. என்ன செய்வதென்று தெரியவில்லை எங்களுக்கு. காவலையே தொழிலாகக்கொண்டவர்களை நியமிப் பதன் மூலம் இந்தத் தொல்லையை நாங்கள் எளிதில் போக்கிக்கொள்ள முடியும். அவைகளைக் கொல்லுவதால் மாமிசம் கிடைக்குமாகையால் காவல்காரர்கள் அவைகளைக் கொன்றுவிடுவார்கள். இந்நிலையில் இருக்கும் எங்களுக்கு உங்கள் ஆலோசனை என்ன ? மேலும், எங்கள் பயிர்களைப் பூச்சிகள் கூட்டம் அழிக்கும் போது அவைகளைச் சமாளிப்பதற்கு இருக்கும் ஒரே வழி, வைக்கோலைப் போட்டுக் கொளுத்தி அப்பூச்சிகள் அப்படியே அழியும்படி செய்வதுதான். இந்த நிலைமையில் நீங்கள் எங்களுக்குக் கூறும் யோசனைகள் யாவை ?"

இந்தக் கேள்வி, மற்ற இரு கேள்விகளுக்கும் மாறுபட்டது; குரங்குத் தொல்லை ரகத்தைச் சேர்ந்ததே இக்கேள்வி ; கன்று விஷயத்தின்பால் படாது. இம்சை வழியில் யாருக்கும் வழிகாட்டியாக இருக்க என்னால் ஆகாது. இம்சையை இன்ன அளவுக்குச் செய்யலாம் என்று ஒருவர் இன்னொரு வரை உண்மையில் கட்டுப்படுத்த முடியாது. மேலும், ஒவ்

வொருவரும் அகிம்சைக்குத் தங்களுக்குள்ள சக்தியை அனுசரித்து முடிவு செய்துகொள்ள வேண்டிய விஷயம் இது. குரங்குகளின் உதாரணத்தை மான்களைக் கொல்லுவதற்கு நியாயமாகக் காட்டுவதென்பது சோம்பல் மிகுந்த எண்ணத்தையும் பகுத்தறிவின்மையையுமே வெளிப்படுத்துகிறது என்று எவ்விதத் தயக்கமுமின்றி நான் கூறமுடியும். இந்த இரண்டு விஷயங்களுக்கும் அதிக வித்தியாசம் உண்டு. மேலும், குரங்குகளைக் கொன்றுவிடுவதென்று நான் இன்னும் முடிவு செய்யவில்லை ; இப்பொழுது முடிவு செய்து விடுவேன் என்பதற்குமில்லை. இதற்கு மாருக அப்படிக் கொல்லுவது அவசியமாகும்போது அந்த வேதனையிலிருந்து மீளவேண்டுமே என்றுதான் கவலைப்பட்டு வருகிறேன். அதோடு வயல்களுக்கு வராமல் மான்களைத் தடுப்பதற்கான வழிகள் எத்தனையோ இருக்கின்றன. ஆனால், விசித்திரப் பிராணியாகிய குரங்கினிடம் அதெல்லாம் பலிக்காது. குடியானவன் ஒவ்வொருவனும் தன்னுடைய அன்ருட அனுபவத்திலிருந்து அறிந்திருப்பதே உண்மையானது என்பதை மீண்டும் கூறுகிறேன். அதாவது, பயிர்த்தொழிலில் சிறு பூச்சிகளையும் புழுக்களையும் நாசப்படுத்துவது தவிர்க்க முடியாதது. இதில் மேற்கொண்டு எதையும் செய்ய என்னல் முடியாது. ஆனல், ஒவ்வொருவரும் தங்களுடைய சக்திக்கு ஏற்ற வகையில் இம்சையைத் தவிர்த்துக்கொள்ள வேண்டும் என்று பொதுப்படையாகக் கூறுவதுடன் நான் திருப்தி அடைய வேண்டியதே.

## 4

இன்னும் ஒரு நண்பர் வருமாறு எழுதுகிருர் :

"உடலில் உயிர் இருக்கும் வரையில் அகிம்சையை முற்றிலும் அனுசரித்துவிடுவது என்பது முடியாத காரியம் என்கிறீர்கள். உடலோடு வாழ்வது என்பதில் ஒவ்வொரு வகையிலும் இம்சையே இருப்பதால் மனிதன் சடலத்தோடு இருந்துகொண்டிருக்கும் வரையில் இம்சையைச் செய்யாமல் தப்ப முடியாது என்கிறீர்கள். அப்படியானல், அகிம்சை உயர்ந்த தருமமாகவும், தலையாய கடமையாகவும் எவ்விதம் இருக்க முடியும்? மனிதன் முற்றிலும் நிறைவேற்ற முடியாததான ஓர் ஒழுக்கக் கோட்பாட்டை உயர்ந்த மத தருமமாக நீங்கள் கூறுவீர்கள் என்ருல், அத்தகைய தருமத்திற்கு நடைமுறையில் என்ன பலன் உண்டு?"

ஒரு விஷயத்தைப் பணிவாகத் தெரிவித்துக்கொள்ளுகிறேன் : இக்கடிதத்தை எழுதியிருப்பவர் கூறுவதற்கு மாருக ஒரு தருமத்தின் குறிக்கோளுக்கு இருக்கும் பெருமையெல்லாம், இச்சடலத்தோடு அதை முற்றிலும் அடைந்துவிட முடியாது என்பதிலேயே இருக்கிறது. ஏனெனில், ஒரு தருமம் அதனிடம்

கொள்ளும் நம்பிக்கையினால் நிரூபிக்கப்பட வேண்டும். 'அழியும் உடலால்' சூழப்பட்டிருக்கும்போதே ஆத்மா பூரணத்துவத்தை அடைந்துவிட முடியுமாயின், இந்த நம்பிக்கையைச் செயலில் காட்டுவதற்கு இடந்தான் எங்கே இருக்கிறது? அதனுடைய சார மான தன்மை விரிவடைதற்கு எங்கே வழியிருக்கிறது? இச்சடலத் துடன் இருக்கும்போதே மானிடர் பூரணத்துவ நிலையை அடைந்து விட முடியுமாயின், ஆத்மிக முன்னேற்றத்துக்கு அடிப்படை யாகவுள்ள இடைவிடா முயற்சிக்கும் ஆர்வத்துக்குந்தான் இடம் ஏது? சடலத்துடன் பூரணத்துவத்தை அடைவது என்பது அவ்வளவு எளிதானதாக இருந்தால், நாம் வெறும் வறட்டு உதாரணத்தைப் பின்பற்றவேண்டியதாகவே இருக்கும். இதே போல இவைகளுக்கெல்லாம் ஒரு சரியான ஒழுக்கக் கோட் பாடு சாத்தியமாயிருந்தால் பலவித மதங்களும் தர்மங்களும் இருப்பதற்கில்லை; அப்போது, எல்லோரும் பின்பற்றியாக வேண்டியதான ஒரே ஒரு மதம் மாத்திரமே இருக்கும்.

ஒரு தருமத்தின் பெருமை யாவும், எல்லையற்ற அதன் தன்மை யிலேயே இருக்கின்றன. ஆனால், மத லட்சியங்கள் அவற்றிற் குரிய இயல்பினாலேயே குறைபாடுகள் உள்ள மனிதரால் பூரணமாக அடைய முடியாதனவாக இருந்தபோதிலும், அத்தரு மங்களுக்குரிய விரிவான தன்மையினால் அவை நாம் அணுக அணுக விலகிப் போய்கொண்டிருப்பதாகவே தோன்றினாலும், நம் கைகளையும் கால்களையும்விட நமக்கு அணித்தாகவே இருக் கின்றன. ஏனெனில், நமது சடலத்தைவிட அவற்றின் உண்மையிலும் சத்தியத்திலும் நமக்கு அதிக நிச்சயம் ஏற்படு கிறது. தருமத்தில் கொள்ளும் இந்த நம்பிக்கை ஒன்றே ஒரு வருக்கு உண்மையான வாழ்வாக அமைகிறது. உண்மையில் மனிதனுக்கு இதுவே எல்லாமும்.

தன்னைச் சுற்றிலும் சீறி எரியும் இம்சைத் தீயின் நடுவே அகிம்சைத் தருமத்தைக் காண்கிறவனே பாக்கியசாலி யாவான். அத்தகையவரின் முன்பு பக்தியுடன் நாம் வணங்குகிறோம்; அவ ருடைய உதாரணத்திற்காக உலகமே அவருக்குக் கடமைப் பட்டிருக்கிறது. அவரைச் சுற்றிச் சந்தர்ப்பங்கள் எவ்வளவுக் கெவ்வளவு எதிரிடையாக இருக்கின்றனவோ அவ்வளவுக்கவ் வளவு இம்சையை ஏந்தும் இத்தசை உடலின் பந்தங்களி லிருந்து விடுதலை பெற அவருக்குள்ள ஆர்வம் வளர்ந்துகொண்டு போகிறது; பாக்கியமான நிலையில் அவரை வைக்கிறது. 'இவ்வற்புதத்தைக் கண்ட மகான்கள் விண்டிலர்' என்று கவிஞர் கூறுவதுபோல் அந்த உத்தம நிலைக்கு அவரைக்

கொண்டுவைக்கும். அகிம்சா தருமத்தை அடைவதில் இருக்கும் தீவிர ஆர்வத்தினால், உயிர் வாழும் நினைப்பையும் முற்றிலும் மீறிச் சென்றுவிடுவதான நிலை அது. உடற் பற்றெல்லாம் அற்றுப் போனதால் மீண்டும் உடலெடுக்கும் தொல்லையிலிருந்து மனிதன் விடுதலை பெற்றுவிடுகிறான். ஆனால் அப்படிப்பட்ட ஒரு நிலையை மனிதன் அடைந்துவிடும் வரையில் இம்சையான செயல்களை அவன் புரிந்துகொண்டுவர வேண்டியவனே. ஏனெனில், உடல் வாழ்விலிருந்து பிரிதற்கரியது இம்சை. அதற்குரியதை அது அடைந்தே தீரும்.

—'எங் இந்தியா' - 22—11—1928.

('நவஜீவ'னிலிருந்து மொழிபெயர்ப்பு)

## 5

## மீண்டும் குரங்குத் தொல்லை

[தொல்லை கொடுக்கும் குரங்குகளைக் கொல்லுவதா என்ற பிரச்னை மீண்டும் 1946-ஆம் ஆண்டில் எழுந்தது. அதைக் குறித்து அப்பொழுது மகாத்மா 'ஹரிஜன் சேவக்'கில் எழுதிய கட்டுரைகள் கீழே கொடுக்கப் பட்டிருக்கின்றன.]

குரங்குகள் தங்களுக்கு இழைத்து வரும் தொல்லைகளைக் குறித்து மக்கள் சோர்வடைகின்றனர். அவை செத்தொழிய வேண்டுமென மனமார விரும்புகிறார்கள். யாராவது அவற்றைக் கொன்றுவிட்டால் உள்ளுக்குள் திருப்தியடைகிறார்கள். அதே சமயத்தில் அவை கொல்லப்படுவதையும் எதிர்ப்பார்கள். சாத்திரங்களை நன்றாக அறிந்த நண்பர் ஒருவர், 'குரங்குகள் பயிர்களை நாசப்படுத்துகின்றன; குழந்தைகளைக்கூடத் தூக்கிக்கொண்டு போய்விடுகின்றன. சாமான்களை எடுத்துச் சென்றுவிடுகின்றன. பழங்கள் முதலியவைகளைப் பாழாக்குகின்றன' என்று எழுதுகிறார். குரங்குகளின் தொகை தினந்தோறும் அதிகரித்துக்கொண்டிருக்கிறது. இவ்விஷயத்தில் அகிம்சை கூறுவது என்ன என்று என்னைக் கேட்கிறார்கள்.

என் அகிம்சை எனக்கே உரியது. மிருகங்களைக் கொல்லவே கூடாது என்ற கொள்கையை நான் அப்படியே முற்றிலும் ஏற்றுக்கொண்டுவிட முடியாது. பாழ்படுத்தும் அல்லது மனிதனுக்குத் துன்பம் விளைவிக்கும் இந்த மிருகங்களின் உயிரைக் காப்பாற்ற வேண்டும் என்ற உணர்ச்சி என்னிடம் இல்லை. இந்த மிருகங்களின் சந்ததி விருத்தியாவதற்கு உதவுவது தவறு என்று எண்ணுகிறேன். ஆகவே, எறும்புகள், குரங்குகள் அல்லது நாய்கள் இவைகளுக்கு உணவளித்து நான் வளர்க்கமாட்டேன். இவைகளைக் காப்பதற்காக ஒரு மனிதனின் உயிரைத் தியாகம் செய்யமாட்டேன்.

இந்த வகையில் சிந்திக்கையில் குரங்குகள் மனிதரின் நன்மைக்கு ஆபத்தாகிவிடும்போது அவைகளை அழித்துவிடுவது மன்னிக்கக்கூடிய விஷயம் என்ற முடிவுக்கே வருகிறேன். இதே விதியை மனிதர் விஷயத்திலும் ஏன் உபயோகிக்கக் கூடாது என்று கேட்கலாம். அப்படிச் செய்ய முடியாது. ஏனெனில், எவ்வளவு கெட்டவர்களாயினும் நம்மைப்போல அவர்கள் இருக்கிறார்கள். மிருகங்களைப்போல் அல்லாமல் மனிதனுக்குக் கடவுள் பகுத்தறிவையும் அளித்திருக்கிறார்.

('ஹரிஜன சேவக்'கிலிருந்து') —'ஹரிஜன்'—5—5—1946.
புது டில்லி, 25—4—'46.

# 8
# முற்றிலும் தவிர்க்க முடியாது

ஒருவர் வருமாறு எழுதுகிறார் :

"மனிதருக்கு ஆபத்தை விளைவிக்கும் மிருகங்களான சிறுத்தைகள், ஓநாய்கள், பாம்புகள், தேள்கள் போன்றவைகளை அழித்துவிட வேண்டும் என்றே உங்களுடைய அகிம்சை விரும்புவதாக மே 5-ஆம் தேதி 'ஹரிஜன பந்து'வில் நீங்கள் எழுதியிருக்கிறீர்கள். நாய் முதலியவைகளுக்கு உணவளித்து வளர்ப்பதிலும் உங்களுக்கு நம்பிக்கையில்லை. குஜராத்திகள் தவிர மற்றும் பலர் நாய்களுக்கு உணவளிப்பது புண்ணியமான காரியம் என்று கருதுகிறார்கள். இப்பொழுது ஏற்பட்டிருப்பதைப் போன்ற உணவுப் பற்றாக்குறைக் காலத்தில் இத்தகைய நம்பிக்கை நியாயமல்லாததாக இருக்கலாம். ஆனால், இந்த மிருகங்கள் மனிதனுக்கு அதிக உபயோகமாக இருக்கும் என்பதையும் நீங்கள் கவனிக்க வேண்டும். இவற்றிற்கு உணவு அளித்து இவைகளிடம் வேலை வாங்கிக்கொள்ளலாம்.

"டர்பனிலிருந்து ஸ்ரீ ராய்சந்திர பாய்க்கு நீங்கள் 27 கேள்விகளை அனுப்பினீர்கள். அதில் ஒரு கேள்வி இது: 'ஒரு பாம்பு கடிக்க வரும்போது கடவுளைத் தேடும் ஞானி செய்ய வேண்டுவது என்ன?' இதற்கு அவர் தந்த மறுமொழி: 'அவர் பாம்பைக் கொல்லக்கூடாது; அது கடித்தால் அப்படிக் கடிக்க அனுமதிக்க வேண்டும்.' நீங்கள் இப்பொழுது வேறு விதமாகக் கூறுகிறீர்களே; அது எப்படி?"

இதுபற்றி முன்னால் ஏராளமாக எழுதியிருக்கிறேன். அச்சமயத்திலிருந்த விஷயம், பைத்தியம் பிடித்த நாய்களைக் கொல்லுவதை குறித்ததாகும். இதைப்பற்றி எவ்வளவோ விவாதம் நடந்ததென்றாலும் அவை யாவும் மறந்து போய்விட்டன என்று தோன்றுகிறது.

எல்லா ஜீவராசிகளிடத்திலும் அன்போடு இருக்க வேண்டும் என்பது மாத்திரம் அன்று என் அகிம்சை. தாழ்ந்த ஜீவன்களில் தெய்விகத்தன்மை இருப்பதை ஜைன சமயம் வற்புறுத்திக் கூறுவது தெரிந்ததேயாம். ஆனால், மனிதனுடைய உயிரைவிட இந்த உயிர்களிடம் அன்பாக இருக்க வேண்டும் என்று அதற்குப்

பொருளாகிவிடாது. அத்தகைய உயிர்களின் தெய்விகத் தன்மையைப்பற்றி எழுதுகையில் மனித உயிரின் தெய்விகத் தன்மை சொல்லாமலேயே ஒப்புக்கொள்ளப்பட்டதென நான் கொள்ளுகிறேன். முந்தியது அதிகப்படியாக வற்புறுத் தப்பட்டிருக்கிறது. இக்கருத்தை நடைமுறையில் கொண்டு வரும்போது இக்கருத்தின் உருவம் மாறுபட்டுப் போயிருக் கிறது. உதாரணமாக, எறும்புகளுக்குத் தீனி போடுவதைக் கொண்டே பலர் திருப்தி அடைந்துவிடுகிறார்கள். இத்தத்து வம் சாரமற்ற கொள்கை ஆகிவிட்டதாகவே தோன்றுகிறது. மதத்தின் பெயரால் நயவஞ்சகமும் திரித்துக் கூறுவதும் நடந்து வருகின்றன.

அகிம்சை உயர்வான லட்சியம். அது வீரருக்கு உரியது; கோழைகளுக்கு அன்று. மற்றவர்கள் கொல்லுவதனால் ஆய பயனை அனுபவித்துக்கொண்டிருக்க தாம் தார்மிகத்துடனும் அகிம்சை யுடனும் நடந்துகொண்டு வருவதாக ஒருவர் நம்பிக்கொண்டிருப் பது, தம்மைத் தாமே ஏமாற்றிக்கொள்ளுவதாகும்.

தினந்தோறும் சிறுத்தை புகுந்துகொண்டிருக்கும் ஒரு கிரா மத்தில் அகிம்சைவாதி என்று சொல்லிப் பெருமை கொள்ளுபவர் தங்குவதில்லை. கிராமத்தைவிட்டு ஓடிவிடுவார். ஆனால், வேறு ஒருவர் அச்சிறுத்தையைக் கொன்றுவிட்ட பிறகு தமது வீடு வாசல்களைக் கவனித்துக்கொள்ள அவர் கிராமத்துக்குத் திரும்பிவிடுவார்! இது அகிம்சை ஆகாது. இது ஒரு கோழை யின் இம்சை. சிறுத்தையைக் கொன்றவனாவது தன்னுடைய வீரத்தைக் காட்டியிருக்கிறான். இப்படி இன்னொருவன் கொன் றதைத் தனக்கு அனுகூலமாகக் கொள்ளுபவன் கோழை; உண்மை யான அகிம்சையை அவன் அறிந்துகொள்ளுவான் என்று எதிர் பார்க்கவே முடியாது.

வாழ்க்கையில் இம்சையை அடியோடு அகற்றிக்கொண்டு விடுவது என்பது முடியாத காரியம். தன் வரையறை எது என்ற கேள்வி பிறக்கிறது. அது யாவருக்கும் ஒன்றாக இருந்துவிட முடியாது. முக்கியமாகக் கொள்கை ஒன்றே என்றாலும், ஒவ்வொருவரும் அவரவர் வழியில் அதை உப யோகித்துக்கொள்கின்றனர். ஒருவருக்கு உணவாக இருப்பது மற்றவருக்கு விஷமாகிவிடலாம். புலால் உண்பது என்மட்டில் பாபமானதாகிறது. ஆனால், எப்பொழுதும் மாமிசத்தையே தின்று வந்திருப்பவரான இன்னொருவருக்கு அதில் எந்தத் தவறுமே இருப்பதாகத் தோன்றவில்லை. என்னைப்போல்

இருக்கப் பார்ப்பதற்காக மாத்திரம் மாமிசம் சாப்பிடுவதை அவர் விட்டுவிடுவது பாபமாகும்.

விவசாயியாக இருக்க விரும்பி நான் காட்டில் வசிப்பேனுயின், என்னுடைய வயல்களைப் பாதுகாப்பதற்குத் தவிர்க்க முடியாத குறைந்தபட்ச இம்சையை நான் உபயோகிக்க வேண்டியிருக்கும். என் பயிர்களைத் தின்றுவிடும் குரங்குகள், குருவிகள், பூச்சிகளை நான் கொல்ல வேண்டிவரும். அவ்விதம் நானே கொல்ல விரும்பவில்லையாயின் எனக்காக இந்த வேலையைச் செய்ய இன்னொருவரை நான் அமர்த்தவேண்டும். இந்த இரண்டுக்கும் அதிக பேதமில்லை. நாட்டில் பஞ்சம் இருக்கும் போது பயிர்களை மிருகங்கள் தின்று அழித்துவிடப் பார்த்துக் கொண்டிருப்பது நிச்சயமாகப் பாபச் செயல். நன்மை, தீமை என்ற சொற்கள் சந்தர்ப்பத்தைப் பொறுத்த கருத்துடையவை. குறிப்பிட்ட நிலைமைகளில் நல்லது என்று இருப்பது, வேறு சில சந்தர்ப்பங்களில் தீமை அல்லது பாபமாகவும் ஆகும்.

சாத்திரங்களாகிய கிணற்றில் மனிதன் தன்னையே மூழ்க்கிக் கொண்டு கிடக்கவேண்டியதில்லை. விசாலமான சமுத்திரத்தில் முக்குளித்து முத்துக்களை வெளியே கொண்டு வரவேண்டும். எது அகிம்சை, எது இம்சை என்பதில் ஒவ்வொரு கட்டத்திலும் அவன் தன்னுடைய பகுத்தறிவைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். இதில் வெட்கத்திற்கோ அல்லது கோழைத்தனத் திற்கோ இடமில்லை. 'கடவுளை அடையும் பாதை, வீரர்களுக்கே யன்றிக் கோழைகளுக்கு இல்லை' என்று கவியும் கூறியிருக்கிறார்.

முடிவாக, ராஜசந்திரபாய் எனக்குக் கூறிய புத்திமதியாவது: எனக்குத் தைரியம் இருந்தால் கடவுளை நேருக்கு நேராகக் காண நான் விரும்பினல், பாம்பைக் கொல்லுவதற்குப் பதிலாக அது என்னைக் கடிக்க விட்டுவிட வேண்டும் என்றே அவர் கூறினர். அக்கடிதம் கிடைப்பதற்கு முன்னுலோ அல்லது அதற்குப் பிறகோ நான் ஒரு பாம்பையும் கொன்றதேயில்லை ; இது எனக்குப் பெருமையும் அன்று. பாம்புகளுடனும் தேளுடனும் பயமின்றி விளையாடவேண்டும் என்பதே என்னுடைய லட்சியம். ஆனல், விருப்பம் என்ற அளவில்தான் அது இதுவரை இருந்துகொண்டிருக்கிறது. அந்த லட்சியத்தை அடைவேனு, எப்பொழுது அடைவேன் என்பது எனக்கே தெரியாது. எங்குமே இவ்விரண்டையும் கொல்ல என்னுடன் இருப்பவர்களை அனுமதித்திருக்கிறேன். நான் விரும்பியிருந்தால் அவர்களைத் தடுத்திருக்க முடியும். ஆனல், ஏன் தடுக்கவேண்டும்? பாம்பையும் தேளையும் என் கையில் தைரியமாக எடுத்துக்கொண்டு, அச்ச

மின்மைபற்றி என் சகாக்களுக்கு ஒரு போதனையைச் செய்யும் துணிச்சல் எனக்கு இல்லை. அவ்விதம் நான் செய்ய முடியாமல் இருப்பதற்காக வெட்கப்படுகிறேன். ஆனால், என்னுடைய இந்த வெட்கத்தினால் அவைகளுக்கோ, எனக்கோ நன்மையில்லை.

ராமநாமம் எனக்கு அருள் புரிவதாயின், ஒரு நாளைக்கு அந்தத் தைரியத்தை நான் அடைவேன். இதற்கு இடையில் நான் மேற்சொன்னவாறு நடப்பதே என் கடமை என்று கருதுகிறேன். அதன்படி வாழவேண்டும் என்பதற்கு இருப்பது தருமம். குதர்க்கம் மாத்திரம் அன்று அது.

—'ஹரிஜன்' – 9—6—1946

('ஹரிஜன பந்து'விலிருந்து)
முஸோரி – 29—5—'46

# 9

# கொல்லுவானேன்?

ஆலிகாரிலிருந்து கீழ்க்கண்ட யோசனை வந்திருக்கிறது :

"நீங்கள் எழுதுகிறீர்கள் : 'பயிர்களை நாசப்படுத்தும் குரங்குகள், பறவைகள், மிருகங்கள் ஆகியவைகளை நாம் கொல்ல வேண்டும் அல்லது நமக்காக அவைகளைக் கொல்லுகிறவர்களையாவது வைத்துக்கொள்ளவேண்டும்' என்று. பயிர்களை அவை அழித்துவிடாமல் தடுப்பதற்கு நாம் வேறு வழிகளைக் கண்டுபிடித்துவிட்டால் அவைகளைக் கொல்ல வேண்டி இருக்காது என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இரவில் ஒளிமிக்க மின்சார விளக்குகளை வைப்பதன் மூலம் குரங்குகள் வராதபடி என் மாமா செய்திருக்கிறார். இம்முறையை மற்றவர்களும் ஏன் அனுசரித்துப் பார்க்கக்கூடாது?"

இந்த யோசனை கவர்ச்சியைத் தருவதாக எடுத்த எடுப்பில் தோன்றுகிறது. ஆனால், ஆழ்ந்து யோசித்தால், இது சரிவர வேலை செய்யாது என்பது விளங்கும். என் சொந்த வயல்களை இந்த வகையில் பாதுகாப்பது என்னால் முடியலாம். ஆனால், சுற்றிலும் இருக்கும் மற்றவர்கள் நிலைமை என்ன? மற்றவர்கள் சிரமப்பட என்னுடைய பயிர்களைச் சுயநலமாக நான் பார்த்துக்கொள்ளுவது நியாயமாகாது. அது, அகிம்சையின் பெயரால் செய்யும் இம்சையாகும். உதாரணமாக, நமது கொல்லையிலிருந்து ஒரு பாம்பையோ அல்லது குப்பைகளையோ பக்கத்து வீட்டுக்காரரின் கொல்லையில் துளியேனும் கவலை இராமல் போட்டுவிடுகிறோம். குரங்குகள், இவை போன்ற உபத்திரவங்களிலிருந்து சமூகத்தையும் நம்மையும் பாதுகாத்துக்கொள்ள வேண்டுமாயின் அவைகளைக் கொன்றாகவேண்டும் என்று உண்மையான அகிம்சையின்படி ஏற்படுகிறது. சாத்தியமானவரை இம்சையைத் தவிர்க்கவேண்டும் என்பது பொது விதி. சமூகத்திற்கு வேண்டியதான அகிம்சை, தனிப்பட்டவருக்கான அகிம்

சையிலிருந்து கட்டாயம் மாறுபட்டுத்தான் இருக்கும். சமூகத்திலிருந்து ஒதுங்கியிருந்து வாழ்பவர் எல்லா முன்னெச்சரிக்கைகளையும் மீறிவிடலாம். சமூகமோ அப்படிச் செய்துவிட முடியாது.

('ஹரிஜன சேவக்'கிலிருந்து) —'ஹரிஜன்' - 7—7—1946
புனா, 30—6—'46

# 10

# பிராணிகளுக்குத் துன்பம்

## காளைகளுக்குச் சித்திரவதை

ஓர் ஆங்கிலப் பெண்மணி எழுதுகிறார் :

"இத்தேசத்தவர்கள், முக்கியமாகப் பசுக்களைப் பாதுகாப்பவர்கள் என்று தங்களைக் கூறிக்கொள்ளும் ஹிந்துக்கள், காளை மாடுகளைச் சித்திரவதை செய்யும் வழக்கத்தைக் கண்டு நான் துக்கமடைந்ததோடு திகைப்புற்றும் போனேன். வெளியிலிருந்து இந்நாட்டுக்கு வரும் ஒருவர், ரஸ்தாக்கள் நெடுகவும் அளவுக்கு மீறிய பளுவை இழுத்துச் செல்லும் இந்தக் காளைகளின் வால்களின் கணுக்கள் சிதைந்திருக்கும் காட்சியை என்றும் மறக்கவே முடியாது. வண்டிக்காரர்கள், கொடுமையின் கறைபடிந்த தங்கள் கைகளினால், அக்காளைகளின் வால்களைப் பிடித்து முறுக்கிக் கோணலாக்கும் கோரமோ நம்மைக் குன்றிவிடச் செய்யும் காட்சி. ஹிந்து மதத்திற்கே மானக்கேடான விஷயமாகும் இந்த ஜீவன்களின் சார்பாகவும், தலைகீழே தொங்கக் கால்களைப் பிடித்துப் பல மைல்கள் தூரம் கொல்லப்படுவதற்கென தூக்கிச்செல்லப்படும் கோழிகள் சார்பாகவும் உங்களுடைய பத்திரிகையான 'எங் இந்தியா' மூலம் நீங்கள் எதுவும் செய்ய முடியாதா? ஆங்கில எருது வேலை செய்துகொண்டிருக்கும் படம் ஒன்றை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். இந்தியன், மோட்டாரை உபயோகித்துக்கொள்ளும் இந்தியன், காளை மாடுகளுக்கு, குதிரைகளுக்கு இடுவது போன்ற பூட்டுக்களை ஏன் உபயோகிக்கக்கூடாது?"

இந்தியாவுக்கு வந்திருக்கும் இப்பெண்மணி, இந்தியாவில் இருப்பவர்கள் வழக்கமாகவே காளைமாடுகளைச் சித்திரவதை செய்துவருகிறார்கள் என்ற முடிவுக்குச் சற்று அவசரப்பட்டே வந்துள்ளார் என்பது உண்மையெனினும் - ஒவ்வொரு இந்தியரும், பத்தில் ஒருவர்கூடக் காளைகளைக் கொடுமையாக நடத்தவில்லை - இக்கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் குற்றத்தை நகரங்களில் சில வண்டிக்காரர்கள் செய்துவருகிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. இதைப் பார்க்கிறவர்களும் இந்தச் சித்திரவதையைக் கவனிக்காமல் சும்மா போய்விடுகின்றனர் என்பதிலும் சந்தேகம் கிடையாது. கோழிகளைத் தூக்கிக்கொண்டு போவதிலிருக்கும் ஜீவகாருண்யமற்ற செய்கையைப்பற்றிக் கூறப்பட்டிருப்பதில் உண்மை உண்டு. அகிம்சையைப்பற்றிப் பேசுகிறவர்களாகிய நாம், ஈயை விழுங்க முடியாமல் விக்கும் போது ஓர் ஒட்டகத்தை மாத்திரம் எளிதில் விழுங்கிவிடுகிறோம்

என்று சொல்லுவதும் சாத்தியமே. பைத்தியம் பிடித்த நாய் ஒன்று சுட்டுக் கொல்லப்படுகிறதென்ருல் உடனே பரபரப்படைகிறோம். ஆனல், நான் இங்கே குறிப்பிட்டிருக்கும் கடிதத்தில் காணப்படும் கொடுமைகளை நாம் விரும்பாவிட்டாலும், பார்த்துக்கொண்டு அசிரத்தையோடு இருந்துவிடுகிறோம். நாம் கொல்லாமல் இருக்கும் வரையில் அகிம்சா தருமத்தை நாம் முற்றிலும் நிறைவேற்றிக்கொண்டிருப்பதாக எண்ணி வருவதாகவே தோன்றுகிறது. இது அகிம்சைக்கு விரோதமானது என்பதே என் கருத்து. உயிருள்ள ஜீவனுக்குத் துன்பத்தை விளைவிக்கும் ஒவ்வொரு செயலும், சாத்தியமானபோதெல்லாம் அச்செயலை அகிம்சை முறையில் தடுப்பதற்கான முயற்சி எதுவும் எடுத்துக்கொள்ளாதிருப்பதும் அகிம்சையை மீறும் செயல்களேயாகும். மத ஸ்தாபனங்களுக்கு இதில் செய்யக்கூடிய வேலை இருக்கிறது. தங்களுடைய கொள்கைகளில் அவைகளுக்கு உள்ளன்பு இருக்குமானல், நகரங்களில் தாழ்ந்த மிருகங்களுக்குச் செய்யப்படும் கொடுமைகளைப் போக்க அவை பாடுபடலாம். நுகத்தடிக்குப் பதிலாகச் சேணம் பூட்டுவது விரும்பத்தக்கதே என்பதில் சந்தேகமில்லை.

—'எங் இந்தியா' – 30--8--1928

## 11

# மாடுகளை உபயோகிப்பது சரியா ?

**கேள்வி :** *14-4,'46*-ஆந் தேதி ' ஹரிஜன் ' *91*-ஆம் பக்கத்தில் காளை மாடு உயிருள்ள யந்திரம் என்றும், தீமையில்லாத அத்தகைய மிருகங்களுடன் தொடர்பு மனித நாகரிகத்தின் முன்னேற்றத்தின் வலுமிக்க அம்சம் என்றும் விவாதிக்கப்பட்டிருக்கிறது.* என்ருலும், மிருகங்களை ' வீரியம் இல்லாதவையாக'ச்

---

* இதில் குறிப்பிடப்பட்டிருக்கும் கட்டுரை மகாத்மா எழுதியது அன்று. 14-4-'46 ' ஹரிஜன் ' இதழில் ' வி. ஜி. டி.' என்ற பெயரில் ' காளை மாட்டின் கட்சி ' என்ற தலைப்பில் எழுதப்பட்டிருக்கும் கடிதத்தைப்பற்றியே மகாத்மாவை ஒருவர் கேள்வி கேட்டிருக்கிருர். இக்கேள்விக்கு மகாத்மா அளித்துள்ள பதிலை நன்கு விளக்கிக்கொள்ளுவதற்கு இக்கட்டுரையின் போக்கு வாசகர்களுக்குத் தெரிந்திருப்பது அவசியமாகையால் இக்கட்டுரையில் சம்பந்தப்பட்ட பகுதி கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது. அது வருமாறு :

" திட்டம் வகுப்பது என்று சொல்லப்படுவதன் ஒரு பகுதியாக நமது விவசாயத்தையும் போக்குவரத்தையும் ஆக்கிரமித்துக்கொள்ள யந்திரங்கள் வருகின்றன. இது நிறைவேறிவிடுமாயின் காளை மாடுகளை அழித்துவிடவே நேரும். ஆகவே, காளை மாட்டின் கட்சியைச் சுருக்கமாகக் குறிப்பிடுவது அவசியமாகிறது.

" நமக்குப் பால் வேண்டும், நிறையப் பால் வேண்டும்; இன்னும் மிகுதியாகப் பால் தேவை. ஆகவே, நமக்குப் பசுக்கள் வேண்டும். நம்மிடம் பசுக்கள் இருந்தால் நம்மிடம் எப்பொழுதும் காளைகளும் இருக்கும். அவைகளுக்கு வேலை கொடுக்க

செய்து, 'தீமையற்றனவாக' ஆக்குகிறார்கள். இது நாகரிக முன்னேற்றத்தின் நேரான முறையா? நம்மிடம் பசுக்கள் இருக்கவேண்டுமானால் காளைகளையும் வைத்துக்கொள்ளத்தான் வேண்டும். மனிதனின் சுயநலத்திற்கும் அவன் செய்யும் கொடுமைக்கும் பாத்திரமாவன இக்காளைகள். அறிவுள்ள மனிதரிடம் இல்லாதிருந்தாலும் கீழ்இனத்து மிருகங்களிடமெல்லாம் அவற்றின் இயற்கையான வேகம் முழுவதும் இனப்பெருக்க ஆர்வத்திலேயே மும்முரமாக வெளிக் கிளம்புகின்றது. ஆகையால், 'மகாதேவரின் ஊர்தி'யான இப்பெருமை வாய்ந்த காளையைச் சுமை இழுக்கும் மிருகமாக்கிவிடுவது வருந்தத்தக்கது.

**பதில்:** இக்கடிதம் எழுதியவர் தருக்கரீதியாக விவாதிக்கிறார். ஆனால், இந்தத் தருக்கம், பசுவை வீட்டு மிருகமாக்கிக் கொள்ளுவதையும் தடுக்கும். ஏனெனில், ஒரு காளையை விதையடிப்பதில் உள்ளதைவிடப் பசுவைப் பயன்படுத்திக்கொள்ளுவதிலிருக்கும் கொடுமை அதிகமாயிருக்கக்கூடும். வித்தியாசமெல்லாம் கொடுமையின் அளவில்தான். மிருகங்களின் பேரில் மேலும் மேலும் அதிகமாக ஆதிக்கமும், இதோடு அவைகளைப் பயன்படுத்திக்கொள்ளுவதில் ஜீவகாருண்யமுள்ள முறைகளுமே நாகரிக முன்னேற்றத்தின் விளைவு என்று தோன்றுகிறது.

ஜீவகாருண்யம் உள்ளவர்கள் மூன்று வகையான கருத்துள்ளவர்களாக இருக்கிறார்கள். ஒரு வகையினர், மிருகங்களுக்குப் பதிலாக மற்ற வகையான சக்திகளைப் பயன்படுத்திக் கொள்வதில் நம்பிக்கை உடையவர்கள். மற்றொரு வகையினரோ, மிருகங்களை உடன் வாழ்பவைகளாகப் பாவித்து, சகோதர உணர்ச்சி எவ்வளவு தூரம் அனுமதிக்குமோ அந்த அளவுக்கு அவைகளைப் பயன்படுத்திக்கொள்ளலாம் என்கிறார்கள். மூன்றாமவரோ, தாழ்வான மிருகங்களை மனிதனின் சுயநலக் காரியங்

---

வேண்டும். ஏரிலும், வண்டியிலும், செக்கிலும் அவற்றைப் பூட்டினால்தான் அவற்றிற்கு முழு வேலையும் கொடுக்க முடியும். இதைச் செய்ய நாம் தவறிவிட்டால் மேற்கத்திய நாடுகளில் பொலி காளைகளுக்கு வளர்ப்பதற்காகச் சிலவற்றை மாத்திரம் விட்டுவிட்டுக் காளைக் கன்றுகளையெல்லாம் அவர்கள் கொன்றுவிடுவதைப் போன்ற கதியே நமக்கும் நேரும்.

"டிராக்டர் ஒரு இயந்திரம். டிராக்டரைப்போல அவ்வளவு அதிக சக்தியுள்ளதல்லவெனினும் காளை மாடும் ஒரு இயந்திரமே. ஆனால், காளை மாடு உயிருள்ள இயந்திரம். தீமையில்லாத அத்தகைய மிருகங்களுடன் தொடர்பு மனித நாகரிக முன்னேற்றத்தின் முக்கியமான தன்மையாக இருக்கிறது. மிருக சக்தியின் உபயோகத்தைப் போக்கிவிட்டு மேற்கத்திய நாடுகள் உயிரில்லாத இயந்திரங்களைப் புகுத்தியிருப்பது, கொடிய யுத்தங்கள் அங்கு அடிக்கடி மூள்வதற்கும் மேற்கத்திய நாடுகளுக்கே உரிய மற்ற தீமைகளுக்கும் காரணமாகுமா என்பது எனக்குச் சரியாகத் தெரியாது......"

களுக்கு உபயோகித்துக் கொள்ளமாட்டார்கள். ஆனல், இதற்குப் பதிலாகத் தம்முடைய சொந்த சக்தியையும், மற்றவர்கள் புத்திசாலித்தனமாக விரும்பி அளிக்கும் உதவியையும் உபயோகித்துக்கொள்ளலாம் என்கிறார்கள். இந்த மூன்றாவது நோக்கத்தைக் கொண்டவன் நான். மனித உழைப்பை நியாய முறையிலும் ஜீவகாருண்யத்தோடும் உபயோகித்தே பழங்கள் பயிரிடுவதைப் பெருமளவுக்குச் செய்துவிட முடியும் ; தான்ய உற்பத்தியும் இவ்வாறே இயலும். சாத்துவிக எதிர்ப்பாளர்களான நாங்கள், டிரான்ஸ்வாலில் கைதிகளாயிருந்தபோது ஒரு முனிசிபல் தோட்டம் அமைப்பதற்காகக் கல் தரையைத் தோண்டியிருக்கிறோம்.* அக்காரியத்திற்கு உழுவது பயன்பட்டிருக்காது. அத்தரை கடப்பாரை ஒன்றுக்கே மசிவதாக இருந்தது.

மேலே கண்டவற்றுள் முதல் கருத்துப் பயனில்லாதது, முடிவில் மனித வர்க்கத்திற்கே தீமையானது என்று கருதுகிறேன். பிந்திய இரு கருத்துக்களும் நியாயமுறையில் இணைவதே லட்சியமாக அமையும் என்று எனக்குத் தோன்றுகிறது. விதையடிப்பதிலிருந்து தப்பவும் வழி தென்படவில்லை. படிப்படியாக ஜீவகாருண்யத்தோடு கூடிய முறை ஒன்றை அனுசரிப்பதே அதற்கான வழியாகும்.

இது சம்பந்தமாக ஒருவர், மாடுகளுக்குச் சூடு போடும் வழக்கத்தைப்பற்றியும் எழுதியிருக்கிறார். சூடு போடுவதால் மாடுகளின் சொந்தக்காரர்களுக்கோ அந்த மாடுகளுக்கோ நன்மை ஏற்படுகிறதா? சூடு போடுவது அம்மிருகங்கள் அனுபவிக்கும் துன்பத்திற்கு ஈடு செய்கிறதா? சூடு போடுவதால் அம்மிருகங்களுக்கு எந்தவித நன்மையும் இல்லையென்றால் சூடு போடுவது செய்யக்கூடாத விஷயமாகும்.

## 12

# வாயில்லாப் பிராணிகளுக்குக் கொடுமை

மைசூர்க்காரர் ஒருவர் கீழ்வருவனவற்றை எனக்கு அறிவிக்கிறார் :

"விஷயம் சிறிதே. என்றாலும், பங்களூர் நகரின் பட்டிகளில் அடைக்கப்படும் துர்ப்பாக்கிய நாய்கள், கால்நடைகள் இவற்றின் வாழ்வு, சாவுபற்றிய முக்கியமான விஷயம் இது அந்தப் பட்டிகளின் நிலைமை மிகவும் மோசமாக இருக்கிறது. அவைகளில் சிறை வைக்கப்படும் மிருகங்கள், அவை செய்த

* இச்சம்பவத்தைக் குறித்து மகாத்மா, தென்னாப்பிரிக்காவில் தம் சிறை அனுபவங்களைப்பற்றி எழுதியிருக்கும் கட்டுரைகளில் விரிவாகச் சொல்லியிருக்கிறார். 'மகாத்மா காந்தி நூல்கள்-முதல் தொகுப்பு' 543-ஆம் பக்கத்தில் உள்ளத்தை உருக்கும் இந்த விவரங்களைக் காணலாம்.

தவறுதலால் அவ்விதம் அடைக்கப்படவில்லை. அவைகளுக்குச் சரியான தீனி இல்லை; குடிக்கத் தண்ணீரும் கொடுக்கப்படுவதில்லை. நாய்களை நோவாமல் கொல்லுவதற்கென்று வைத்திருக்கும் கருவி கொஞ்சகாலமாகப் பழுதாகி யிருக்கிறது. அதை ஒழுங்கு செய்வதற்கான முயற்சி எதுவும் இருப்பதாகக் காணப்படவில்லை. அவைகளுக்குக் கொடிய, முரட்டுத்தனமான வழிகளில் விஷம் கொடுத்துக்கொல்லும் முறை அனுசரிக்கப்படுகிறது.''

தெருவில் திரியும் நாய்களைக் கொன்றுவிடும்படி யோசனைகூற வேண்டிய துர்ப்பாக்கியம் எனக்கு இருந்திருக்கிறது. கருணை என்ற தவறான கருத்தினால் தெரு நாய்களுக்கு உணவளித்து, அவை வளரும்படி விட்டு, அக்கம்பக்கத்து மக்களுக்கு அவைகளால் ஆபத்து ஏற்படும்படி செய்துவிடும் அளவுக்கு மனிதர் கொடூரமாகிவிட்டால் தெருச் சுற்றும் நாய்களைக் கொல்லவேண்டியே நேரும். ஆனால், மேற்கண்ட கடிதத்தை எழுதியிருப்பவர் குறிப்பிட்டிருப்பதைப் போன்று பட்டியில் அடைத்து அவைகளைச் சித்திரவதை செய்வதென்பதும் நான் கூறிய யோசனைக் குட்பட்டதன்று. அத்தகைய மிருகங்களை உடனே நோவில்லாமல் கொல்லவேண்டியதென ஜீவகாருண்ய உணர்ச்சி வற்புறுத்துகிறது. கடிதம் எழுதியிருப்பவர் கூறியிருப்பது மிகைப்படுத்திக் கூறியதாக இருக்கவேண்டும் என்று நம்புகிறேன். என்றாலும், அம்மிருகங்களைக் கொல்லுவதற்கு அனுசரிக்கப்படும் முறை, ஜீவகாருண்யம் விரும்பும் பரீட்சைக்குத் திருப்தியளிப்பதாக இல்லாதிருந்தால் சம்பந்தப்பட்ட முனிசிபாலிடியும் அதைப்போன்ற எல்லா ஸ்தாபனங்களும் தங்கள் முறையை மாற்றிக்கொள்ளவேண்டும்.

[கல்கத்தாவுக்கு ரெயிலில் சென்றுகொண்டிருக்கையில் 29—10—'46 எழுதியது.]

—'ஹரிஜன்' 10—11—'46.

## 13

# பலி நின்றாக வேண்டும்

காளி கோயிலைக் குறித்து காளி சரண் பானர்ஜி என்னிடம் கூறியிருக்கிறார். அதைப்பற்றி நானும் புத்தகங்களில் படித்திருப்பதால் பார்க்க ஆர்வத்துடன் இருந்தேன். எனவே, ஒரு நாள் அங்கே போனேன். நீதிபதி மித்தரின் வீடும் அப் பகுதியில்தான் இருந்தது. ஆகையால், அவரைப் போய்ப் பார்த்த அன்றே கோயிலுக்கும் சென்றேன். காளிக்குப் பலியிடுவதற்காக ஒரு மந்தை ஆடுகள் போய்க்கொண்டிருந்ததை வழியில் பார்த்தேன். கோவிலுக்குப் போகும் சந்து நெடுகப் பிச்சைக்காரர்கள் வரிசையாக இருந்தனர்; சந்நியாசிகளும் இருந்தார்கள். உடல் வலிவோடிருப்பவனுக்குப் பிச்சை போடு

வதை அந்த நாளிலேயே நான் பலமாக எதிர்த்து வந்திருக்கிறேன். பிச்சைக்காரக் கூட்டத்தார் என்னைத் துரத்திக் கொண்டும் வந்தனர். அப்படிப்பட்டவர்களில் ஒருவர் ஒரு தாழ்வாரத்தில் உட்கார்ந்திருந்தார். அவர் என்னை நிறுத்தி, "எங்கே போகிறாய், தம்பீ ?" என்றார்.

என்னையும் என்னுடன் வந்தவரையும் உட்காரச் சொன்னார். அப்படியே உட்கார்ந்தோம். "இந்தப் பலிகளைத் தருமம் என்று கருதுகிறீர்களா ?" என்று கேட்டேன்.

"மிருகங்களைக் கொல்லுவதைத் தருமம் என்று யார் கருதுவார்கள் ?" என்றார்.

"அப்படியானால் இதை எதிர்த்து நீங்கள் ஏன் உபதேசம் செய்யக்கூடாது ?"

"அது என் வேலை அல்ல. கடவுளை வழிபடுவதே எங்கள் வேலை."

"கடவுளை வழிபடுவதற்கு இதைத் தவிர உங்களுக்கு வேறு இடம் கிடைக்கவில்லையா ?"

"எல்லா இடங்களுமே எங்களுக்கு ஒன்றுதான். மக்கள் ஆட்டு மந்தையைப்போல் இருக்கிறார்கள். தலைவர்கள் போகிற வழியில் போய்க்கொண்டிருக்கின்றனர். சாதுக்களாகிய எங்களுடைய வேலையல்ல அது."

அவருடன் நாங்கள் விவாதம் செய்துகொண்டிருக்கவில்லை. கோயிலுக்குப் போனோம். ரத்த ஆறுகளே அங்கு எங்களை வரவேற்றன. அதைச் சகித்துக்கொண்டு அங்கு நிற்க என்னால் முடியவில்லை. எனக்குப் பதைபதைப்பு மூண்டது; அமைதியற்றவனானேன். அந்தக் காட்சியை என்னால் மறக்கவே முடியவில்லை.

அன்று மாலையே வங்காளி நண்பர்கள் சிலர் விருந்துக்கு என்னை அழைத்திருந்தார்கள். இந்தக் கொடூரமான வழிபாட்டு முறையைப்பற்றி அங்கு ஒரு நண்பரிடம் கூறினேன். "ஆட்டுக்கு எந்த உணர்ச்சியுமே இருப்பதில்லை. அங்கு முழங்கப்படும் தப்பட்டைச் சத்தம் நோவு உணர்ச்சிகளையெல்லாம் மரத்துப் போகும்படி செய்துவிடுகிறது" என்றார் அவர்.

இதை ஒப்புக்கொண்டுவிட என்னால் ஆகவில்லை. "ஆட்டுக்கு வாயிருந்தால், அது வேறுவிதமாகச் சொல்லும்" என்று சொன்னேன். அக்கொடூரமான பழக்கம் நிறுத்தப்படவேண்டும் என்று உணர்ந்தேன். புத்தரின் வரலாற்றைப்பற்றியும் எண்ணினேன். ஆனால், இவ்வேலை என் சக்திக்கு மிஞ்சியது என்பதையும் கண்டேன்.

எனக்கு அன்று இருந்த கருத்தே இன்றும் இருக்கிறது. மனிதனின் உயிரைவிட ஓர் ஆட்டுக்குட்டியின் உயிர் எந்தவிதத்திலும் குறைவானது என்று நான் நினைக்கவில்லை. மனித உடலின் நன்மைக்காக ஓர் ஆட்டுக்குட்டியைக் கொல்லுவதற்கு நாம் சம்மதிக்கக்கூடாது. ஒரு ஜீவன் எவ்வளவுக்கெவ்வளவு திக்கற்றதாயிருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு மனிதனின் கொடுமையிலிருந்து மனிதனால் காப்பாற்றப்படுவதற்கு அது உரிமை பெற்றிருக்கிறது என்றே கருதுகிறேன். ஆனால், அத்தகைய சேவைக்குத் தன்னைத் தகுதியாக்கிக்கொள்ளாதவன், அதற்கு எந்தப் பாதுகாப்பையும் அளிக்க முடியாது. தெய்வத்திற்கு அடுக்காத இந்தப் பலியிலிருந்து ஆட்டுக்குட்டிகளை நான் காப்பதற்கு என்னை நானே மேலும் அதிகப் பரிசுத்தம் செய்துகொள்வதோடு தியாகமும் செய்யவேண்டும். இந்தச் சுயத்தூய்மையையும் தியாகத்தையும் அடைய வேண்டும் என்பதற்காக இன்று நான் வேதனையினால் சாகவேண்டும் என்று எண்ணுகிறேன். இத்தகைய கோரமான பாபத்திலிருந்து நம்மை விடுவித்து, கோயிலையும் புனிதப்படுத்துவதற்குத் தெய்விகக் கருணையுடன் ஒரு பெரிய ஆத்மா, ஆணோ அல்லது பெண்ணோ இப்புவியில் பிறக்கவேண்டும் என்பதே என்னுடைய இடைவிடாத பிரார்த்தனை. எவ்வளவோ அறிவும், விவேகமும், தியாகமும், உணர்ச்சி வேகமும் கொண்ட வங்காளம் இப்படு கொலையை எப்படிச் சகித்துக்கொண்டிருக்கிறது?

[மகாத்மாவின் சுயசரிதை 18-ஆம் அத்தியாயத்திலிருந்து எடுக்கப்பட்டது.]

## 14

# முக்கியப் பொறுப்பு

ஒருவர் வருமாறு எழுதுகிறார்:

“மைசூர் ஹரிஜனங்கள் இங்குள்ள கோயில்களில் வழக்கமாக மிருக பலியிட்டு வருகிறார்கள். கிருஷ்ணராஜ நகர் தாலூகாவில் மிருக பலிக்காகக் குறிப்பிட்ட இடங்களுககு ஆண்டுதோறும் யாத்திரிகர் வருகின்றனர். யாத்திரிகர் வரும் அத்தகைய பலி விழா இவ்வாண்டு ஜனவரி 3-ஆம் தேதி முதல் 25-ஆம் தேதிவரை நடந்தது. தினந்தோறும் மூன்று அல்லது நான்கு ஆடுகள் பலியிடப்பட்டன.

“சிராவண மாதம்* ஒவ்வொரு சனிக்கிழமையும் இன்னும் ஒரு மிருக பலியும் நடக்கிறது. ஹரிஜனங்கள் மாத்திரமேயன்றி ஹிந்து மதத்தைப் பாதுகாப்பவர்கள் தாங்களே என்று கூறிக்கொள்ளும் பூசாரிகளும் இதில் பங்கெடுத்துக்கொள்ளுகின்றனர். இதில் ஈடுபடுகிறவர்கள் இச்சமயங்களில் மதுபானமும் அருந்துகின்றனர்.

---

* சிராவண நட்சத்திரத்தில் (அவிட்டம்) பௌர்ணமி வருவதால் அம்மாதம் சிராவண மாதம் எனப்படுகிறது. ஆடி பிற்பகுதியும் ஆவணி முற்பகுதியும் சேர்ந்ததே இந்தச் சிராவண மாதமாகும்.

"இதில் வேதனை தரும் விஷயம், மாட்டிறைச்சி சாப்பிடுவதே யாகும். ஆண்டவன் உறைவிடமான கோயிலுக்கு முன்னல் மிருகங்கள் கொல்லப்பட்டு வருவது ஒவ்வோர் ஹிந்துவும் மிகவும் வெட்கப்பட வேண்டிய விஷயமாகும்."

இக்கடிதத்தை எழுதியிருப்பவர் கூறுவது உண்மையானுல், ஒரு விதத்தில் ஒவ்வோர் ஹிந்துவும் வெட்கப்படவேண்டியதே இது. ஆனுல், வாயால் கண்டிப்பதனுல் மட்டும் எந்தப் பாபத்தையும் கழுவிவிட முடியாது. எல்லோரும் குற்றஞ் செய்கிருர்கள் என்பதனுல் தனிப்பட்டவருக்கு இதில் கடமை எதுவுமில்லை என்றும் ஆகிவிடாது. ஆகையால், சீர்திருத்தத்திற்கு வேலை செய்யவேண்டிய பொறுப்பு முதலில் இக்கடிதம் எழுதியவருடையதாகும் என்பது என் கருத்து. இரண்டாவதாக, மிருக பலி எங்கு நடக்கிறதோ அங்குள்ள மக்களுக்கும் பொறுப்பு ஏற்படுகிறது. அதன் பிறகு சமஸ்தானத்தை ஆளுவோருக்கும் அவருடைய மக்களுக்கும்; அதன் பின்னர் வரிசையாகக் கர்னடகம், சென்னை மாகாணம், அகில இந்தியா ஆகியவைகளுக்கும் இதில் பொறுப்பு ஏற்படவேண்டும். எல்லோரும் அவரவர் இடத்தில் ஒழுங்கான வகையில் வேலை செய்ய முற்படுவார்களானுல், தொன்றுதொட்டு இருந்துவரும் இத்தீமையை அடியோடு போக்கிவிட முடியும். ஒழுங்கான வகையில் செய்யும் வேலை அகிம்சை அடிப்படையில் நடந்தால்தான் வெற்றி பெற முடியும்.

ஆகவே, இதில் வேலையை முதலில் ஆரம்பிக்க வேண்டியவர் கடிதம் எழுதியிருப்பவரே. சீர்திருத்த வேலைகளை எப்படிச் செய்யவேண்டும் என்பதைக் குறித்துப் போதிய அளவு நான் முன்பே எழுதியிருக்கிறேன்.

—'ஹரிஜன்' - 23—6—1946

('ஹரிஜன சேவக்' கிலிருந்து)
புது டில்லி, 15-6-'46

# 15

## பசுப் பாதுகாப்பு

ஒத்துழையாமைக்கு உகந்த இடமாயிருப்பது பிகார். ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமைக்குப் பழமொழியாக இருந்து வருவதும் அதுவே. எனவே, தாங்கவொண்ணுததாக ஆகிவிடும் அளவுக்கு அந்த ஒற்றுமைக்குச் சங்கடங்கள் ஏற்பட்டு வருவதைக்கண்டு மனவேதனை அடைந்தேன். ஹிந்து-முஸ்லிம் கலவரம் ஏற்பட்டுவிடாதபடி தடுப்பதற்குத் தங்களுடைய சக்திகளையெல்லாம் உபயோகித்தாக வேண்டிய சிரமம் ஏற்பட்டிருக்கிறது என்று பொறுப்பு வாய்ந்த ஹிந்து-முஸ்லிம் தலைவர்கள்

எல்லோரும்-திகில் அடைந்துவிடாத இவர்கள்-என்னிடம் கூறுகிறார்கள். உதாரணமாக, கங்காராம் சர்மா, பூதநாத், வித்தியானந்தர் ஆகிய சில ஹிந்துக்கள், ஹிந்துக்களையோ அல்லது முஸ்லிம்களையோ மாமிசம் உட்கொள்ளக்கூடாதெனத் தடுத்திருப்பதாகவும், சைவ உணவில் தீவிரப் பற்றுடையோர் மாமிசத்தையும் மீனையும் அவற்றைப் புசிப்பவரிடமிருந்து பலவந்தமாகப் பறித்துக்கொண்டு போய் விடுகிறார்களென மக்களிடம் கூறுவதாகவும் இத்தலைவர்கள் எனக்குத் தெரிவித்தனர். என் பெயர் பல இடங்களில் நியாய விரோதமாகப் பயன்படுத்தப்பட்டு வருகிறது என்பதை அறிவேன்; அதைத் தவறான வழிகளில் உபயோகிப்பதில் கையாளப்படும் நவீனமான முறை இது. நான் தீவிரமான சைவ உணவுவாதி, உணவுச் சீர்திருத்தக்காரன் என்பது பொதுவாக எல்லோருக்கும் தெரிந்ததுதான். ஆனால், என் அகிம்சை மனிதவர்க்கத்திற்குப் பரவுவதுபோன்றே கீழ்த்தர மிருகங்களுக்கும் பரவுகிறது என்பதும், மாமிசம் சாப்பிடுகிறவர்களுடனும் நான் தாராளமாகப் பழகி வருகிறேன் என்பதும் அவ்வளவாக எல்லோருக்கும் தெரியாது.

எவ்வளவுதான் அருமையானதாயினும், ஒரு மனிதனின் உயிரைக் காப்பதற்காக ஒரு பசுவை நான் கொல்லமாட்டேன். அதைப் போலவே பசுவைக் காப்பதற்கென்று மனிதனையும் கொல்லமாட்டேன். ஒத்துழையாமையின் ஒரு பகுதியாகச் சைவ உணவுப் பிரசாரத்தைச் செய்யும்படி யாருக்கும் நான் அதிகாரம் கொடுக்கவுமில்லை. மேலே கூறப்பட்ட ஆட்களையும் நான் அறியேன். எந்தவிதப் பிரசாரத்தையாவது பலாத்காரம் தொடருவதாயிருப்பின் நமது காரியம் கெட்டுப் போகும் என்பது நிச்சயம். மாமிசத்தை அல்லது மாட்டிறைச்சியைக்கூட தின்னக்கூடாதென்று முஸ்லிம்களை ,ஹிந்துக்கள் கட்டாயப் படுத்த வேண்டியதில்லை. புலால் உண்ணுகிற ஹிந்துக்கள், மீன், மாமிசம், கோழி முதலியன சாப்பிடும் ஹிந்துக்களைச் சாப்பிட வேண்டாமென்று கட்டாயப்படுத்த வேண்டியதில்லை. வாள் முனையைக்காட்டி இந்தியாவுக்கு நான் அறிவு புகட்டிவிட முடியாது. பலாத்காரத்தைப்போல இந்நாட்டின் ஒழுக்க நிலையைக் கெடுத்தது வேறு எதுவுமே இல்லை. நம் தேச மக்களின் குணத்தில் பயமும் ஒரு பகுதியாகிவிட்டது. தங்கள் கொள்கைக்கு மக்களைப் பலாத்காரத்தால் திருப்ப முற்படுவார்களாயின் ஒத்துழையாமையாளர்கள் பெருந்தவறு இழைத்தவர்களாவார்கள். தங்களுடைய பிரசாரத்தில் மிகச் சிறிய அளவு பல

வந்தத்தைப் புகுத்துவார்களாயினும் அரசாங்கம் விரும்புவதைச் செய்து அகப்பட்டுக்கொண்டவர்களாவார்கள்.

பசுப் பாதுகாப்புப் பெரிய பிரச்னை; ஹிந்துக்களுக்கு அது மிகப் பெரிய விஷயம். பசுவிடம் வைத்திருக்கும் மதிப்பில் நான் யாருக்கும் சளைத்தவன் அன்று. பசுவைப் காப்பதற்கு வேண்டிய ஆற்றல் ஹிந்துக்களுக்கு இல்லாதிருக்கும் வரையில் தங்களுக்குள்ள கடமையை அவர்கள் நிறைவேற்றிக்கொண்டவர்களாகமாட்டார்கள். அந்த ஆற்றல் உடல் பலத்தைக் கொண்டோ அல்லது ஆத்ம பலத்தைக்கொண்டோ ஏற்பட வேண்டும். பலாத்காரத்தைக் கொண்டு பசுவைக் காப்பாற்ற முற்படுவது ஹிந்து தருமத்தைச் சைத்தான் தருமமாக்கிவிடுவதாவதோடு பசுப் பாதுகாப்பின் உயர்ந்த தத்துவத்தை மட்டமான முடிவுக்கு இழிவுபடுத்திவிட்டதுமாகும். ஒரு முஸ்லிம் நண்பர் எழுதுவதைப் போல, மாட்டு மாமிசத்தை உண்பது அனுமதிக்கப்படுகிறது என்ற அளவிலேயே அது இஸ்லாமில் இருக்கிறது; அதைத் தடுக்க ஹிந்துக்கள் கட்டாயத்தை உபயோகிப்பவர்களாயின் அதைத் தின்பது என்பது முஸ்லிம்களின் கடமையாகிவிடும். சாவதற்கும், துன்பங்களை அனுபவிப்பதற்கும் ஆற்றலை வளர்த்துக்கொள்வதன் மூலமே ஹிந்துக்கள் பசுக்களைக் காக்க முடியும். கசாப்புக்காரனின் கத்திக்குப் பலியாகவிடாமல் பசுவை இந்தியாவில் பாதுகாப்பதற்கு இருக்கும் ஒரே வழி, இஸ்லாமுக்கு ஏற்பட்டிருக்கும் அபாயத்திலிருந்து அதைக் காக்க முயற்சி செய்வதே. இதோடு, தங்கள் நாட்டினரான முஸ்லிம்கள், இதற்குப் பதிலாகப் பெருந்தன்மையுடன் நடப்பார்கள், அதாவது தங்கள் நாட்டினரான ஹிந்துக்களிடம் வைக்கும் மதிப்பினால் பசுவைக் காக்க வலிய முன் வருவார்கள் என நம்பவும் வேண்டும். முஸ்லிம்களுக்கு எதிராக எந்தவித பலாத்காரத்தையும் உபயோகிப்பதில்லை என்பதில் ஹிந்துக்கள் கண்டிப்பாக இருக்க வேண்டும். துன்பத்தைச் சகிப்பதும் பிறரிடம் நம்பிக்கை வைப்பதும் ஆத்ம சக்தியின் தன்மைகள். பெரிய சந்தைகளில் ஒரு முஸ்லிமிடம் பசுக்களோ, ஆடுகளோ இருப்பதைக் கண்டால், அவற்றைப் பலாத்காரமாக அப்புறப்படுத்திவிடுகிறார்கள் என்று கேள்விப்பட்டேன். ஹிந்துக்கள் என்போர் இவ்விதம் பலாத்காரத்தில் ஈடுபடுவார்களானால், அவர்கள் பசுக்களுக்கும் ஹிந்து தருமத்திற்கும் விரோதிகளாவர்.

– 'யங் இந்தியா' — 18—5—1921.

# 16

# உன் கடமையை முதலில் செய்

[1925 ஜனவரியில் பெல்காமில் நடந்த பசுவளர்ப்புப் மகாநாட்டிற்கு மகாத்மா காந்தி தலைமை வகித்தார். அப்பொழுது அவர் பசுப் பாதுகாப்பைப்பற்றிக் கூறிய விவரம் கீழே கொடுக்கப்படுகிறது ]

மற்ற மாகாணங்களில் இருக்கும் நிலைமை ஒருபுறம் இருக்கட்டும். குஜராத்தில் இருக்கும் ஹிந்துக்கள் பசுக்களைக் கொன்று வருகிறார்கள் என்று நான் சொன்னால் நீங்கள் நம்புவீர்களா? இதைக் கேட்டு நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். ஆனால், குஜராத்தில் வண்டிகளை இழுக்க உபயோகிக்கும் மாடுகளை, தோல் உரிய அவற்றின் முதுகில் ரத்தம் கிளம்பும் வரையில் கூரான கம்பிகளால் குத்துகின்றனர் என்பதை உங்களுக்குச் சொல்லுகிறேன். இது காளை மாட்டைக் கொல்லுவதேயல்லாமல் பசுவதை அன்றெனெ நீங்கள் கூறலாம். பசுவையோ அல்லது அதன் ஆண் இனத்தையோ கொல்வது என்ற இந்த இரண்டிற்கும் எந்தவித மாறுபாடும் இருப்பதாக நான் கருதவில்லை. இந்தப் பழக்கம் வெறுக்கத் தக்கது, கண்டிக்க வேண்டியதுதான். என்றாலும், இது கொலை செய்வதாகாதே என்று நீங்கள் கூறக்கூடும். ஆனால், இதிலும் உங்கள் கருத்தினின்று மாறுபடுகிறேன். சம்பந்தப்பட்ட காளை மாட்டுக்குப் பேச வாய் இருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். ‘கசாப்புக்காரனின் கத்திக்குப் பலியாகி, உடனே செத்துவிட விரும்புகிறாயா அல்லது இப்பொழுது அனுபவித்து வரும் நீண்ட நாளைய வேதனையை விரும்புகிறாயா?’ என்று அதைக் கேட்டால், முன்சொன்ன வழியில் சாவதையே அது விரும்பும். கல்கத்தாவில் ஒரு சிந்தி கனவான் என்னை அடிக்கடி சந்திப்பதுண்டு. கல்கத்தாவில் இருக்கும் பால்காரர்கள் பசுக்களுக்குச் செய்து வரும் கொடுமைகளைக் குறித்து அவர் கதையாக என்னிடம் கூறுவார். பால் பண்ணைகளில் பசுக்களை எப்படிக் கறக்கிறார்கள் என்பதை நானே நேரில் பார்க்கும்படியும் கேட்டுக்கொண்டார். ஊதிக் கறப்பதென்பது வெறுக்கத் தக்க பழக்கம்.* இதைச் செய்கிறவர்கள்

* ஊதிக் கறக்கும் இம்முறை வங்காளத்தில் ‘பூக்கா’ முறை எனப்படுகிறது. ‘பூ’ என்றால் வங்காளியில் ‘ஊதுதல்’ எனப் பொருள். இம்முறை என்ன என்பதைக் குறித்துக் காந்திஜி 19—6—1937-இல் ‘ஹரிஜனி’ல் எழுதியிருக்கும் விவரம் வருமாறு:

“பூக்கா என்பது இன்னதென்பது பலருக்குத் தெரியாது. கல்கத்தாவில் பூக்கா எதிர்ப்புச் சங்கமென ஒன்று உள்ளதென்பதை அறிந்தவர்களோ மிகச் சிலர். மகாராஜாதிராஜ ஸர் விஜயசந்திர மஹதாப் பகதூர், நீதிபதி ஸர். எல். டபிள்யூ. ஜே. காஸ்டல்லோ ஆகியோர் அச்சங்கத்தின் போஷகர்கள். ஸ்ரீ ராமகுமார் பாங்கர் அதன் தலைவர். அதன் அலுவலகம் 65, பாதுரியா காட் தெருவில் இருக்கிறது. பூக்கா முறை குறித்து அதன் காரியதரிசி வருமாறு எழுதுகிறார்:

ஹிந்துக்களே. மேலும், இந்தியாவைப் போல உலகத்தில் வேறு எங்கும் கால்நடைகளின் நிலைமை இவ்வளவு மோசமாக இல்லை. பசுக்களைப் போற்றும் நம் இந்தியாவில் பசுக்களும் காளை மாடுகளும் எலும்பும் தோலுமாக இருப்பதை நாம் பார்ப்பதைப் போன்று உலகில் வேறு எங்குமே காண முடியாது. காளை மாடுகள், வேறு எங்குமே இவ்விதம் தம் சக்திக்கு மிஞ்சி வேலை வாங்கப்படுவதும் இல்லை. நிலைமை இவ்விதம் இருந்துகொண்டிருக்கும் வரையில், பசுக்களைக் கொல்லுவதை நிறுத்தும்படி கேட்க நமக்கு எந்தவிதமான உரிமையும் கிடையாது. பாகவதத்தில், ஓர் இடத்தில் அதன் சிறந்த ஆசிரியர், இந்தியா தாழ்வை அடைந்துவிட்டதற்கான பல காரணங்களை விவரிக்கிறார். அவர் சொல்லும் காரணங்களில் ஒன்று, பசுக்களைப் பாதுகாப்பதை நாம் கைவிட்டுவிட்டோம் என்பது. இந்தியா இன்று இருந்துவரும் படுமோசமான ஏழைமை நிலைமைக்கும், பசுக்களைப் பாதுகாக்க நாம் தவறிவிட்டதற்குமுள்ள நெருங்கிய சம்பந்தத்தைக் குறித்து, முடிந்தால் உங்களுக்கு இன்று எடுத்துக்காட்ட விரும்புகிறேன். நம் ஏழை மக்கள் அனுபவித்துக்கொண்டிருக்கும் ஏழைமை எவ்வளவு கடுமையானது என்பது நகரங்களில் இருப்பவர்களாகிய நமக்கு ஒருவேளை தெரியாமல் இருக்கலாம். கோடிக் கணக்கான மக்களுக்குத் தினமும் இரண்டு வேளை நல்ல சாப்பாட்டுக்கே வழி கிடையாது. சிலர் மிக மட்டரகமான அரிசியை மாத்திரமே தின்று உயிர் வாழ்கின்றனர். மற்றும்

---

* கறவை மாடுகளிடம் தினமும் இரண்டு தடவை பூக்கா அட்டூழியம் செய்து வருகிறார்கள் என்பதைத் தங்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன். அதோடு இருவர். மாட்டை அதன் உடம்பு சற்றும் அசையாதபடி கெட்டியாகப் பிடித்துக்கொள்கிறார்கள். 22 அங்குல நீளமும் 8 அங்குல சுற்றளவுமுள்ள மூங்கில் குழாய் அல்லது இரும்புக் குழாயை மாட்டின் மர்ம ஸ்தானத்தின் வழியாக உள்ளே செலுத்திவிடுகின்றனர். பிறகு ஒருவர் அக்குழாய் வழியாக உள்ளே காற்றை ஊதவே உட்புறம் வீங்கிவிடுகிறது. இந்த வீக்கம் மாட்டின் தசைகளில் அதிக அழுத்தத்தை உண்டாக்குவதால், பால்காரன் கடைசிச் சொட்டுப் பாலையும் கறந்துவிட முடிகிறது. பால் கறப்பதையும் மிகக் கொடுமையாகக் கறக்கிறார்கள். அதற்கு மிக வேதனை ஏற்படுவதோடு மடியில் ரத்தம் வரும் வரையில் கறந்துகொண்டே இருக்கின்றனர். சில சமயங்களில் சில ரத்தச் சொட்டுக்களும் பாலில் கலந்துவிடுவதுண்டு. மாடு, அசையவும் முடியாத நிலையில் இருப்பதால் இக்கொடூரமான சித்திரவதையைச் சகித்துக்கொண்டிருக்கிறது. உடலிலும் கன்னங்களிலும் வழியும் வியர்வையும் கண்ணீருமே அது அனுபவிக்கும் வேதனையை வெளிப்படுத்துகின்றன. இந்த அட்டூழியம் தினமும் இரு முறை செய்யப்படுகிறது. ஒவ்வொரு தடவையும் இந்தக் கொடூரத்துக்குப் பின் வேதனையால் பசு சோர்ந்து விழுந்துவிடுகிறது,

காரியதரிசி விவரிக்கும் இந்த முறையைவிட வெறுக்கத்தக்கதும் சித்திரவதையுமான வேறு எதையும் எண்ணவும் இயலாது. இந்தச் சித்திரவதைக்கு ஆளாகும் பசுக்களும் எருமைகளும் பிறகு ஈனும் சக்தியை இழப்பதே இம்முறையின் பலன் என்று சங்கக் கூட்ட நடவடிக்கைகளிலிருந்து தெரிகிறது. பூக்கா செய்தும் பால் கொடுக்காமல் போனால் அவற்றைக் கசாப்புக்கு அனுப்பிவிடுகின்றனர்........."

பலருக்கு உணவில் உப்பும் மிளகாயுமே கிடைத்தற்கரிய பொருளாக இருக்கின்றன. இவையாவும் நம் மதத்தை நாம் சரிவர அனுசரிக்காமல் போனதனுல் மூண்ட விளைப்பயன் ஆகுமல்லவா?

மேலும், இந்தியாவில் பிஞ்சராபோல்களை நடத்தும் முறையும் இருக்கிறது. இவற்றுள் பெரும்பான்மையானவை சரிவர நடத்தப்படவில்லை. அகிம்சையை முழுவதும் நம்புகிறவர்களான ஜைனர்களே பெரும்பாலும் இவைகளுக்குப் பொறுப்பானவர்களாக இருக்கிறுர்கள் என்பதைக் கண்டு வருந்துகிறேன். ஒழுங்காக நடத்தப்பட்டு வந்தால், இந்தப் பிஞ்சராபோல்கள் சுபிட்சமான பால் பண்ணைகளாக இருந்து ஏழைகளுக்குக் குறைந்த விலையில் நல்ல பாலைக் கொடுப்பனவாக இருக்க வேண்டும். ஆனுல், செல்வமிகுந்த நகரமான அகமதாபாது போன்ற இடங்களில்கூடத் தொழிலாளரின் மனைவிமார் தங்கள் குழந்தைகளுக்கு நீரில் மாவைக் கலந்து பாலுக்குப் பதிலாக ஊட்டி வருகின்றனர் எனக் கேள்விப்படுகிறேன். பிஞ்சராபோல்களை இவ்வளவு விரிவாக நடத்தும் முறை இருக்கும் ஒரு நாட்டில் ஏழைகளுக்குச் சுத்தமான நல்ல பால் அருமையாகிவிட்ட பஞ்சம் இருக்கிறதென்றுல், பசுக்கள் எவ்வளவு அழகாகப் பராமரிக்கப்படுகின்றன என்பதற்கு இதைவிட வருத்தம் தரும் விளக்கம் வேறில்லை. ஒரு பக்கம் பசுக்களைப் பாதுகாக்க நாம் தவறியிருப்பதால் மற்றொரு பக்கத்தில் எலும்பும் தோலுமாகி நாம் பட்டினி கிடக்க நேருகிறது என்பதையே இது உங்களுக்கு விளக்கும் என நம்புகிறேன்.

ஆகையால், பசுவைப் பாதுகாக்கும்படி என்னை அழைத்தால், நான் சொல்லும் முதல் புத்திமதி இதுவேயாகும்: "உங்கள் நினைப்பிலிருந்து முஸ்லிம்களையும் கிறிஸ்தவர்களையும் அடியோடு மறந்துவிட்டு உங்கள் கடமையைக் கவனியுங்கள்."

நம் ரிஷிகள் திகைக்கவைக்கும் ஒரு விஷயத்தைக் கண்டுபிடித்தார்கள். (நாளுக்கு நாள் அதன் உண்மையில் எனக்கு உறுதிப்பாடு அதிகமாகிக்கொண்டு வருகிறது.) அகிம்சையிலும் சத்தியத்திலும் ஒருவர் முன்னேற்றம் அடைய அடையப் புனித நூல்களிலும் அருள் பெற்ற வாக்குகளிலும் அடங்கியிருக்கும் உண்மைகள் விளங்கும் என்பதே அவர்கள் கண்டுபிடித்தது. சத்தியத்தையும் அகிம்சையையும் எவ்வளவுக்கெவ்வளவு அறிந்துகொள்கிறுர்களோ அவ்வளவுக்கவ்வளவு பிரகாசமும் ஏற்படும். பசுப் பாதுகாப்பு ஒவ்வோர் ஹிந்துவின் தலையாய கடமை என்றும், அதுவே ஒருவருக்கு மோட்சத்தை அளிக்கும் என்றும் இதே ரிஷிகள் கூறியிருக்கின்றனர்.

மிருகமான பசுவைப் பாதுகாத்துவிட்டதனாலேயே ஒருவர் மோட்சத்தை அடைந்துவிட முடியும் என்பதை நான் நம்பத் தயாராயில்லை. மோட்சத்தை அடைவதற்குப் பாசம், துவேஷம், கோபம், பொறாமை முதலிய கீழ்த்தர உணர்வுகளை ஒருவர் அடியோடு துறக்கவேண்டும். ஆகையால், பசுவைப் பாதுகாத்தால் மோட்சம் கிட்டும் என்பதற்குச் சாதாரணமாகக் கருதப்படுவதை விட இன்னும் விரிவான பொருள் இருந்தாக வேண்டும் என்று ஏற்படுகிறது. மோட்சத்தை அளிப்பதான பசுப் பாதுகாப்பில், அதன் தன்மையை முன்னிட்டு, உணர்வுள்ளவை எல்லாவற்றையுமே பாதுகாப்பது என்பதும் அடங்கியிருக்க வேண்டும். ஆகையால், ஆண், பெண் அல்லது குழந்தை உட்பட யாருக்கும் கடுஞ்சொல்லால் துன்பம் விளைவிப்பது, பலவீனமானதும் மிக அற்பமானதுமான ஜீவனுக்குத் துன்பம் விளைவிப்பது போன்ற அகிம்சைக் கொள்கையை மீறிய எந்தச் சிறு காரியமும் பசுப் பாதுகாப்புத் தருமத்தை மீறியதேயாகும் என்பது என் கருத்து. இத்தகைய காரியங்களைச் செய்வது, தன்மையில் மாறுபட்டதான மாட்டிறைச்சியைத் தின்பதையொத்த பாபச்செயலே யாகும். அப்படியிருக்கும்போது—நம் பகை, ஆத்திரம் யாவும் கட்டவிழ்த்துவிடப்பட்டிருக்கும் இந்நிலையில்—நாம் பசுப் பாதுகாப்புத் தருமத்தை அனுசரித்துக்கொண்டு வருகிறோம் என்று சொல்லிக்கொள்ள முடியாது.

லாகூரில், லாலா தன்பத் ராயைச் சந்தித்தேன். அவர், என்னைப் போன்று ஒரு வகைப் பிடிவாதக்காரர். பசுவைக் காப்பாற்ற நான் விரும்பினால், ஹிந்துக்களிடம் இருந்து வரும் தவறான எண்ணங்களை நான் முதலில் போக்க வேண்டும் என்று அவர் கூறினார். முஸ்லிம் கசாப்புக்காரர்களுக்குப் பசுக்களை விற்போர் ஹிந்துக்களே என்றும், ஹிந்துக்கள் விற்காமலிருந்தால் கொல்லுவதற்கு அவர்களுக்குப் பசுக்களே இரா என்றும் அவர் சொன்னார். பொருளாதார நிலையே இதற்குக் காரணம் என்றார். மேய்ச்சல் இடமாக இருந்த புறம்போக்கு நிலங்களை அரசாங்கம் அடைத்துவிட்டது. இதனால், பசுக்களை வைத்துக் கொண்டிருக்க மக்களால் முடியவில்லை. இந்தச் சங்கடம் தீர அவர் ஒரு பரிகாரத்தையும் சொன்னார். பால் மறத்துவிடும் பசுக்களை விற்றுவிட வேண்டிய அவசியமே எழவில்லை என்றார். அத்தகைய பசுக்களை அவரே விலைக்கு வாங்கிப் பரீட்சை செய்தாராம். அப்பசுக்களை ஏரில் பூட்டி உழுதாராம். அதற்குப் பிறகு அப்பசுக்களை நன்றாகக் கவனித்து வந்தால், அவற்றின் உடல் வலுவேறி மீண்டும் சினைப்படத் தகுதியை அடை

கின்றனவாம். அவர் கூறுவது எவ்வளவு தூரம் உண்மை என்பதை நான் சொல்லமுடியாது. ஆனல், லாலா தன்பத் ராய் கூறுவது உண்மையாக இருப்பின், இந்த வழக்கத்தைப் பொது வாக எல்லோரும் ஏன் அனுசரிக்கக்கூடாது? கறவை இல்லா திருக்கும்போது பசுக்களே உழவுபோன்ற வேலைகளுக்கு உப யோகிக்கூடாது என்று நம் சாத்திரங்களில் எங்கும் கூறப் பட்டிருக்கவில்லை. பசுவுக்குச் சரிவரத் தீனி கொடுத்து, நன்ருக வளர்த்து, அதன் சக்திக்கு மீறி அதை வேலை வாங்கிவிடக் கூடாது என்பதில் சிரத்தை செலுத்தினல், அதை வண்டி இழுக்க வும், ஏரில் பூட்டி உழுவதற்கும் உபயோகிப்பதில் தவறு எதுவு மில்லை. இது செய்யக்கூடியதாக இருப்பின் இம்முறையை ஆலோசித்து அனுசரிக்குமாறு சிபாரிசு செய்கிறேன். இந்த வகையில் பசுவைப் பாதுகாக்க முயல்பவரை நாம் கேவலமாக கருதக்கூடாது.

—'எங் இந்தியா' - 29--1--1925

## 17

# அகிம்சையாலேயே ஆகும்

ஒரு நிருபர் எழுதுகிருர் :

"ஹிந்து மதத்தைப் பின்பற்றுகிறவர்களுக்குப் பசுப் பாதுகாப்பு ஒரு கடமை என்று ஹிந்து சாத்திரங்கள் மாத்திரமே விதிக்கின்றன என்று தெரி கிறது. இதிலுள்ள தத்துவத்தைப் புரிந்துகொள்ள நான் முயற்சி செய்து வருகிறேன். மனித வர்க்கம் இயல்பாகவே சுயநலம் கொண்டது. ஆகையால் பசு அது பிறந்ததிலிருந்து இறக்கும்வரை மனிதனுக்குத் தொடர்ந்து பயனுள் ளதாக இருக்கிறது என்பதற்காகச் சுயநலம் காரணமாக மாத்திரம் அதைப் பாதுகாக்க வேண்டும் என்ருல், அக்கடமை எல்லோருக்கும் பொதுவானதாக இருக்க வேண்டுமேயன்றி ஹிந்துக்களுக்கு மாத்திரம் கடமையாக இருப் பானேன்? அப்படியின்றி அதனுடைய அடக்கம், தீமையற்ற சுபாவம் காரணமாக அதைப் பாதுகாக்க வேண்டும் என்ருல், ஆடு, மான் போன்ற மற்ற மிருகங்கள் இருக்கின்றனவே. அவைகளுக்கும் மனிதரின் பாதுகாப்பு அவசியமே. மற்ற வீட்டு மிருகங்களைவிட ஹிந்துக்களுக்குப் பசுவினிடம் தெரிந்த அல்லது பயனுள்ள தனிப்பட்ட தன்மைதான் என்ன? சைவ உணவுக் காரர்களும் ஆசார சீலர்களும் உள்பட ஹிந்துக்கள், உணவுக்காகவோ பலிக் காகவோ கொல்ல உரிமை பெற்றிருக்கும்போது, உணவுக்காக முஸ்லிம்கள் பசுவைக் கொல்லுவதை வெறுக்க என்ன உரிமை இருக்கிறது? ஹிந்துக்களாகிய நாம் உணவுக்கும் பலிக்காகவும் மிருகங்களைக் கொல்லுவதை முதலில் நிறுத்திய பிறகு பசுக்களைப் பாதுகாக்கும்படி முஸ்லிம்களைக் கேட்டுக்கொள்ளுவது நியாயமாகவும் பலனுள்ளதாகவும் இருக்கும் அல்லவா?"

இதை எழுதியவரின் வாதத்திற்கு ஆதாரமாகச் சொல்லக் கூடியன எவ்வளவோ உண்டு. ஆனல், மனிதன் வாதத்தின லேயே தன்னை நிர்ணயித்துக்கொண்டு விடுவதில்லை. மனிதன்

சிக்கலான பிரகிருதி. ஆகவே, எத்தனையோ காரணங்கள் அவன்மீது பிரதிபலித்து ஒன்றைச் செய்யவும், ஒன்றைச் செய் யாமலிருக்கவும் தூண்டுகின்றன. ஆகையால், தருக்கரீதியாகப் பார்த்தால், பசுவைப் பாதுகாக்கும் ஹிந்து எல்லா மிருகங்களை யும் பாதுகாக்க வேண்டியதே. ஆனால், எல்லாவற்றையும் கொண்டு கவனித்தால், மற்ற மிருகங்களைப் பாதுகாக்க அவன் தவறிவிட்டான் என்பதற்காக அவன் பசுவைப் பாதுகாப்பதைக் குறித்து நாம் குற்றஞ் சொல்லிவிடக்கூடாது. ஆகையால், இதில் கவனிக்கவேண்டிய ஒரே விஷயம், அவன் பசுவைப் பாது காப்பது சரியா என்பதே. அகிம்சையில் நம்பிக்கையுள்ள வனுக்குப் பொதுவாக மிருகங்களைக் கொல்லாமை கடமையென இருந்தால் அவன் பசுவைப் பாதுகாப்பதில் தவறொன்றுமில்லை. ஒவ்வொரு ஹிந்துவும் - ஏன், எந்த மதத்தைச் சார்ந்தவரும் - அவ்விதமே செய்கின்றார். பொதுவாக மிருகங்களைக் கொல்லா திருப்பது கடமையாகிறது. ஆகையால், அவைகளைப் பாது காப்பதையும் ஆட்சேபிக்க முடியாத உண்மையாக ஒப்புக் கொள்ளவேண்டும். அப்படியாயின், பசுப் பாதுகாப்பைக் கடமை யாகக் கொண்டிருப்பது ஹிந்து மதத்திற்கு எவ்வளவோ பெருமையாகிறது. மற்ற மிருகங்களையும் பாதுகாக்க உதவி செய்யமுடியும் என்று இருக்கும்போது பசுப் பாதுகாப்போடு நின்றுவிடுகிறவர் ஹிந்து தருமத்திற்குச் சரியான உதாரணமாகி விடமாட்டார் பசு, ஒரு சின்னமாக மாத்திரமே இருக்கிறது. பசுவைப் பாதுகாக்க ஏற்பது என்பது அவரிடம் சிறிதும் எதிர் பார்க்கமுடியாததாகும். ஆனால், நான் முன்பு எழுதியிருப்பவை களில் எடுத்துக் காட்டியிருப்பதைப் போன்ற இந்த ஆரம்பக் கடமையில்கூட மனிதன் தவறிவிடுகிறான்.

பசுப் பாதுகாப்பில் சுயநல எண்ணமும் உட்புகுந்திருக் கிறது என்பதில் சந்தேகமில்லை. ஆனால், பசுப் பாதுகாப்பின் நோக்கம் சுயநலம் மாத்திரமே கொண்டதன்று. முற்றிலும் சுயநலமானதாகவே இருக்குமாயின், மற்ற நாடுகளில் செய் வதைப் போலப் பசு முழுப் பயனையும் அளிப்பது நின்றதும் கொல்லப்பட்டுவிடும். பசு தனக்குப் பெரும் பளுவானாலும் ஹிந்து பசுவைக் கொல்லமாட்டான். வலிவிழந்த, பயனற்ற பசுக்களைப் பராமரிப்பதற்கென்று தரும சிந்தனையுள்ளவர்கள் பலர் பசு மடங்களை அமைத்திருப்பது ஒன்றே இவ்வழியில் செய்யப்படும் முயற்சிக்குச் சரியான எடுத்துக்காட்டாகும். நோக்கம் நிறைவேறுவதற்கு வழியின்றி அவை இன்று மோச மான ஸ்தாபனங்களாக இருந்தபோதிலும், இச்செய்கையின்

பின்னுள்ள நல்ல நோக்கம் அவற்றிற்குரிய உண்மை மதிப்பைக் குறைத்துவிடாது.

ஆகவே, பசுப் பாதுகாப்பில் அடங்கிய தத்துவம் உன்னதக் கருத்துக்கொண்டது என்பது என் கருத்து. வாழ்வதற்கான உரிமையைப் பொறுத்தவரையில் இது உடனே மிருகப் பிறப்பை மனிதனுக்குச் சமமான நிலையில் வைக்கிறது. ஆனால், பசுப் பாதுகாப்பில் நம்பிக்கையில்லாதவர்கள் பசுவைக் கொல்லுவதைப் பலாத்காரத்தினால் தடுக்கவேண்டும் என்று ஹிந்து தருமம் கூறவில்லை. ஹிந்துக்கள் அகிம்சா தருமத்தை, மனித சாத்தியத்தில் முடிந்த அளவுக்குத் தங்கள் வாழ்க்கையில் அனுசரிப்பதன் மூலமே முஸ்லிம்களையும் உலகத்திலுள்ள மற்றவர்களையும் தங்கள் வழிக்குக் கொண்டுவர முடியும். தங்களுடைய சொந்த வாழ்க்கையில் இந்த உயர்ந்த தருமம் வேலை செய்வதையும், வெளி உலகமும் இதையே சரியென உணரும்படி செய்வதையுமே அவர்கள் நம்பியிருக்கவேண்டும். வெளி உலகத்தை ஆயுத பலங்கொண்டு மாற்றிவிட முடியாது. அகிம்சையின் சக்தியினால் இதை நிச்சயம் செய்யமுடியும். அகிம்சை, முற்றிலும் இயங்கத் தொடங்கி விடும்போது அதற்குள்ள இணையற்ற வன்மையைக் குறித்து நாம் அவ்வளவாக அறிந்துகொள்ளாமல் இருக்கிறோம்.

— ‘ எங் இந்தியா ’— 11—11—1926

## 18

## பசுவைக் காப்பது எப்படி ?

ஹிந்து தருமத்திலும் இந்தியப் பொருளாதார வாழ்க்கையிலும் பசுவுக்குரிய இடத்தைக் குறித்து அறியாமை மிகவும் மோசமாக இருந்து வருகிறது. இதே சமயத்தில் அன்னிய ஆட்சியிலிருந்து இந்தியா சுதந்திரம் அடைந்திருக்கிறது. பொதுச் சம்மதத்தின்பேரில் நாடு இரண்டாகவும் துண்டிக்கப்பட்டிருக்கிறது. ஒரு பகுதியை ஹிந்து இந்தியா என்றும், மற்றொரு பகுதியை முஸ்லிம் இந்தியா என்றும் நிரூபிப்பதற்கு ஒவ்வாததோர் நிலை ஏற்பட்டிருக்கிறது. மற்ற மூடநம்பிக்கைகளைப் போலவே ஹிந்து, முஸ்லிம் இந்தியா என்பதும் எளிதில் மறையக்கூடியதன்று. உண்மை என்னவெனில், அவர்களுடைய மதமும் இனமும் எதுவானாலும் இம்மண்ணில் பிறந்தவர்கள் எல்லோருக்குமே இந்திய யூனியனும் பாகிஸ்தானும் பொதுவாகச் சொந்தமானவையே.

என்றாலும், பேசவல்ல ஹிந்துக்களில் பெரும்பாலோர் இந்திய யூனியன் ஹிந்துக்களைச் சேர்ந்தவர் என்ற மூடநம்பிக்கையை கொள்ள ஆரம்பித்திருப்பதோடு தாங்கள் நம்புவதை ஹிந்துக்கள் அல்லாதாரிடமும் சட்டத்தின் மூலம் அமலுக்குக் கொண்டுவர வேண்டும் என்கின்றனர். ஆகவே, யூனியனில் பசுக் கொலையைத் தடுக்கச் சட்டம் கொணர ஓர் உணர்ச்சி வேகம் நாட்டில் பரவியிருக்கிறது.

அறியாமையாலேயே ஏற்பட்டதாகும் இந்நிலை என்று கருதுகிறேன். ஆகவே, பசுவினிடம் எனக்குள்ள அன்பிலோ பக்தியிலோ இந்தியாவில் வேறு யாருக்கும் சளைத்தவனல்ல என்ற முறையில் இவ்வறியாமையைப் போக்குவதற்கு என்னால் இயன்ற முயற்சியைச் செய்யவேண்டியது அவசியமாகிறது.

மத அடிப்படையில் பசுவைப் பூசிப்பது குஜராத், மார்வாட், ஐக்கிய மாகாணங்கள், பிகார் இந்த இடங்களில்தான் இருந்துவருகிறது என்பதை நாம் முதலில் அறியவேண்டும். மார்வாடிகளும் குஜராத்திகளும் மிகத் துணிவுள்ள வர்த்தகர்கள்; ஆகவே, இந்தியாவின் கால்நடைச் செல்வத்தை வளர்ப்பதைப்பற்றிய கஷ்டமான பிரச்னை விஷயத்தில் பரிகாரம் காணத் தங்களுடைய வர்த்தகத் திறமையை உபயோகிக்காமலேயே அதிகப்படியான கூச்சலைக் கிளப்புவதில் வெற்றி பெற்றிருக்கிறார்கள்.

ஒரு மதத்தின் நோக்கத்தை ஒப்புக்கொள்ளாதவர்கள் மீது இன்னொருவரின் மதப் பழக்கங்களைத் திணிப்பது சட்டப்படி தவறானது என்பதில் சந்தேகமில்லை. பசுப் பாதுகாப்பிலுள்ள பொருளாதார அவசியத்தை மாத்திரம் பொறுத்தவரையில், அந்த அளவோடு மாத்திரம் இவ்விஷயம் கவனிக்கப்படுமானால், அதை எளிதில் அடைந்துவிட முடியும். அப்பொழுது எல்லா வறட்டு மாடுகளும், தீனிச் செலவைவிடக் குறைவாகப் பால் கொடுக்கும் பசுக்களும், பயனில்லாத கிழட்டுக் கால்நடைகளும், எந்தவித யோசனையுமின்றிக் கொல்லப்பட வேண்டும். எத்தனையோ விசித்திர முரண்பாடுகள் அடங்கிய இந்நாட்டில் இருப்பவர்கள், இரக்கமற்ற காரியங்கள் எத்தனையோ செய்துவந்தாலும், இரக்கமில்லாத பொருளாதாரத்திற்கு இந்தியாவில் இடமில்லை.

அப்படியானால், பசு லாபகரமாகப் பால் கொடுக்காதபோது, மற்ற வகைகளில் அது பொருளாதாரச் சுமையாகவே

ஆகிவிடும்போது அதைக் கொன்றுவிடாமல் அதைக் காப்பாற்று வதுதான் எப்படி ? இக்கேள்விக்குப் பதிலைப் பின் வருமாறு சுருக்கிக் கூறலாம் :

1. பசுவிடமும் அதன் சந்ததியிடமும் தங்களுக்கிருக்கும் கடமையை ஹிந்துக்கள் நிறைவேற்றி வரவேண்டும். அவர்கள் அவ்விதம் செய்வார்களாயின் நம் கால்நடை, இந்தியாவும் உலகமும் பெருமை கொள்ளக்கூடியதாகும். ஆனல் இன்றோ இதற்கு நேர்மாறான நிலையே இருந்து வருகிறது.

2. கால்நடை வளர்ப்பு விஞ்ஞானத்தைக் கற்றுக்கொள்ள வேண்டும். இன்றோ இவ்வேலையில் முற்றிலும் குழப்ப நிலையே இருந்துவருகிறது.

3. விதை அடிப்பதற்கு இன்று அனுசரிக்கப்படும் கொடூர மான முறைக்குப் பதிலாக மேற்கத்திய நாடுகள் அனுசரித்து வரும் ஜீவகாருண்யத்தோடு கூடிய முறைகளை அனுசரிக்க வேண்டும்.

4. இன்று இந்தியாவில் இருந்து வரும் பிஞ்சராபோல்கள் பொதுவாக விஷயம் புரிந்துகொள்ளாமல் நிர்வகிக்கப்படுவ தோடு, தம் வேலையைப்பற்றி ஒன்றுமே அறியாதவர்களால் எவ்விதத் திட்டமுமின்றி நடத்தப்படுகின்றன. அவைகளை முற்றி லும் சீர்திருத்தியாக வேண்டும்.

5. இந்த ஆரம்பக் காரியங்களையெல்லாம் முதலில் செய்தாக வேண்டும். அப்பொழுது முஸ்லிம்கள் தங்களுடைய ஹிந்து சகோதரர்களுக்காக மாத்திரமே,மாட்டிறைச்சிக்காகவோ, மற்றவைகளுக்காகவோ கால்நடைகளைக் கொல்லாமல் இருக்க வேண்டிய அவசியத்தைத் தாமே ஒப்புக்கொள்ளுவார்கள்.

அவசியமாகச் செய்ய வேண்டுவன என்று முன்னல் கூறப்பட்டிருப்பவைகளில் முக்கியமாக ஒன்று அடங்கியிருப் பதை வாசகர் காணலாம். அதுதான் எல்லாவற்றினிடமும் ஜீவகாருண்யம் கொள்ளுவது என்று சொல்லப்படும் அகிம்சை. அந்த முக்கியமானதை அடைந்துவிட்டால், பிறகு எல்லாமே எளிமையாகிவிடும். எங்கு அகிம்சை இருக்கிறதோ அங்கு நிச்சயமான பொறுமை, உள்ளமைதி, உறுதி, தன்னலத் தியாகம், உண்மை ஞானம் இவையெல்லாம் இருக்கும். பசுப் பாதுகாப்பு எளிதான காரியமன்று. அதன் பெயரால் ஏராளமான பணம் வீணக்கப்படுகிறது. என்றாலும், அகிம்சை இல்லாததனல் ஹிந்துக்கள் பசுவைப் பாதுகாப்பவர்க ளாவதற்குப் பதிலாக நாசம் செய்பவர்களாகிறார்கள். இந்தியாவி

விருந்து அன்னிய ஆட்சியை நீக்குவதைவிட இது இன்னும் மிகக் கடுமையானது.

—கல்கத்தா, 22–8–'47

குறிப்பு :—இந்தியாவில் ஒரு பசு சராசரி *2* ராத்தல் பால் கொடுக்கிறது என்று கூறப்படுகிறது. ஆனால், நியூஜீலாந்தில் ஒரு பசு *14* ராத்தல் பாலும், இங்கிலாந்தில் *15* ராத்தலும், ஹாலந்தில் *20* ராத்தலும் ஒரு பசு பால் தருகிறது. கொடுக்கும் பாலின் அளவு அதிகமாக ஆகப் பசுக்களின் ஆரோக்கிய நிலையும் உயருகிறது.

—மோ. க. கா.

ஹரிஜன்—31—8—1947

# 19

# அகிம்சை-புலால் மறுப்பு

சரியோ அல்லது தப்போ மாமிசம், முட்டை போன்றவைகளை மனிதன் சாப்பிடக்கூடாது என்பது என்னுடைய மத நம்பிக்கையின் ஒரு பகுதியாகி விட்டது. நாம் உயிர் வைத்துக்கொள்ளுவதற்கான உபாயங்களுக்கும் ஓர் எல்லை இருக்கவேண்டும். உயிர் வைத்திருப்பதற்கு என்றாலும் சிலவற்றை நாம் செய்யாமலும் இருக்கவே வேண்டும். மதத்தைப் பற்றி நான் அறிந்தவரையில், இது போன்ற சமயங்களில்கூட, நானோ அல்லது என்னைச் சேர்ந்தவர்களோ மாமிசம் அல்லது முட்டையை உபயோகிக்க அது அனுமதிக்கவில்லை. ஆகையால், அதை உபயோகிக்காததனால் ஏற்பட்டுவிடும் என்று நீங்கள் கூறும் ஆபத்திற்கு நான் தயாராக இருக்க வேண்டியதே.*

—மகாத்மாவின் 'சுயசரிதை' யிலிருந்து

---

* மேலே கொடுக்கப்பட்டிருக்கும் பகுதி மகாத்மா காந்தி எழுதியிருக்கும் 'சுய சரிதை'யில் மூன்றும் பகுதி, 22-ஆம் அத்தியாயத்தில் இருக்கிறது. 1901-ஆம் ஆண்டு இறுதியில் தென்னாப்பிரிக்காவிலிருந்து இந்தியாவுக்குத் திரும்பிய மகாத்மா பம்பாயில் வக்கீல் தொழிலை நடத்துவது என்று முடிவு செய்து 1920 மே மாதம் அங்கே தமது அலுவலகத்தை ஆரம்பித்தார். கிர்காம் பகுதியில் ஒரு வீட்டை அமர்த்திக்கொண்டு, அதில் குடி போனதும் அவருடைய இரண்டாவது குமாரரான மணிலாலுக்கு (வயது 10) டைபாயிடு ஜுரம் கண்டு கபஜுர அறிகுறியும் இரவில் சன்னியும் இருந்தது. ஒரு டாக்டரை அழைத்து வந்தார். முட்டையும் கோழிக் குஞ்சு 'ஸூப்'பும் கொடுத்தாலன்றி மருந்து கொடுத்துப் பயனில்லை என்று டாக்டர் கூறிவிட்டார். எல்லோரும் மாமிசம் சாப்பிடாதவர்களாதலால் வேறு ஏதாவது யோசனை கூறும்படி மகாத்மா டாக்டரைக் கேட்டார். 'உம் மகனின் உயிர் அபாயத்தில் இருக்கிறது. வேறு எது கொடுத்தும் பயனில்லை' என்றார் டாக்டர். இதற்கு மகாத்மா, 'நீங்கள் சொல்லுவது சரி. டாக்டர் என்ற வகையில் நீங்கள் வேறு எதுவும் செய்வதற்கில்லை. ஆனால், இதில் எனக்கு இருக்கும் பொறுப்போ அதிகம். பையன் பெரியவனாயிருந்தால் அவன் விருப்பத்தை அறிந்து அதன்படியே செய்துவிடுவேன். ஆனால், இதிலோ அவனுக்காக நான் முடிவு செய்ய வேண்டியிருக்கிறது' என்று புலால் உண்ணாமையில் தமக்குள்ள திடமான உறுதியைக் கூறுகிறார்.

# 20

# சைவ உணவின் சிறப்பு

ஒருவர் எனக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். அவர் புலால் உண்ணும் குடும்பத்தில் பிறந்தவர். திரும்பவும் புலால் உண்ணும்படி அவருடைய பெற்றோர் எவ்வளவோ வற்புறுத்தியும் அவர் உண்ணவில்லை. அவர் கூறுகிறார் :

"ஆனால், இப்போது படித்துக்கொண்டிருக்கும் ஒரு நூலில் இதைப் பற்றிச் சுவாமி விவேகானந்தர் கூறியிருக்கும் கருத்தைக் கவனித்தேன். என்னுடைய நம்பிக்கை இதனால் வெகுவாய் அதிர்ச்சி அடைந்துவிட்டதாகவே உணருகிறேன். இந்தியருக்கு இப்பொழுதுள்ள நிலைமையில் புலால் உணவு மிக அவசியம் என்று சுவாமி அபிப்பிராயப்படுவதோடு தாராளமாக மாமிசம் உண்ணுமாறு தம் நண்பர்களுக்கும் யோசனை கூறுகிறார். 'இதனால் உங்களுக்கு ஏதாவது பாபம் உண்டானால் அதை என்மீது போட்டுவிடுங்கள். நான் அதைச் சுமந்துக் கொள்ளுகிறேன்' என்று சொல்லும் அளவுக்கும் அவர் போயிருக்கிறார். மாமிசம் சாப்பிடுவதா, கூடாதா என்பது தெரியாமல் நான் தத்தளித்துக் கொண்டிருக்கிறேன்."

கண்மூடித்தனமாக ஒருவர் போதனையைப் போற்றுவது பல வீனமான புத்தியின் அறிகுறி. மாமிசம் சாப்பிடுவது சரியல்ல என்ற திடமான நம்பிக்கை இவருக்கு இருக்குமானால், உலகம் முழுவதுமே இதற்கு மாறுபட்டதான அபிப்பிராயம் சொன்னாலும், அதை இவர் பொருட்படுத்துவானேன்? அவசரப் படாமல் மெதுவாகவே ஒரு திடமான நம்பிக்கைக்கு வர வேண்டும். ஆனால், ஒரு நம்பிக்கையில் உறுதிகொண்ட பிறகு எவ்வளவு கடினமான எதிர்ப்புக்கள் வந்தாலும் அதினின்று காத்துக்கொள்ள வேண்டும்.

சுவாமிகள் பெரியவர்; அவருடைய கருத்தைப் பொறுத்த வரையில் எழுத்தில் நான் அதைப் படித்ததில்லை. கடிதம் எழுதியிருப்பவர், அவர் சொல்லியிருப்பதைச் சரியானபடி குறிப்பிட்டார் என்றே நம்புகிறேன். என்னுடைய கொள் கையோ சாதாரணமாக எல்லோரும் நன்கு அறிந்ததே. எந்தக் கட்டத்திலும் சாதாரணமாக, எந்தத் தட்ப வெப்ப நிலையிலும் மனிதர் வசிப்பது சாத்தியமாகும். மாமிச உணவு நமக்கு அவசியம் என்று நான் கருதவே இல்லை. மாமிச உணவு நமது இனத்திற்கே ஒவ்வாதது என்றும் கருது கிறேன். தாழ்ந்த மிருகங்களைவிட நாம் உயர்ந்தவர்க ளென்றால், அம்மிருகங்களைப் போல நடக்க நாம் முயன்று வரும் தவறே செய்கிறோம். உணர்ச்சிகளை அடக்கவேண்டி யிருப்போருக்கு மிருக உணவு பொருந்தாது என்பதை அனுபவம் காட்டுகிறது.

ஆனல், குணத்தை உருவாக்கவோ, அல்லது உடல் நசையை அடக்குவதற்கோ, உணவுக்கு முக்கியத்துவம் உண்டென்பதை அதிகப்படியாக மதித்துவிடுவது தவறு. அலட்சியம் செய்யக் கூடிய அம்சமன்று உணவு. இந்தியாவில் பெரும்பாலும் செய்யப்படுவதைப் போல எல்லா மதத்தையும் உணவின் அடிப்படையில் அடக்கிவிடலாம். உணவுபற்றிய கட்டுத்திட்டங்களை அலட்சியம் செய்துவிடுவதும், பசியைத் தணித்துக்கொள்ள நிரம்ப உணவுக்கு இடம் அளித்துவிடுவதும் எவ்விதம் தவறே அதே போன்றுதான் இதுவும் தவருகும். ஹிந்து தருமம் அளித்திருக்கும் விலைமதிக்கவொண்ணுத பரிசே இச் சைவ உணவு. அலட்சியமாக இதைக் கைவிட்டுவிடக் கூடாது. சைவ உணவு நம்மைப் புத்தியிலும் உடலிலும் பல வீனர்களாகவும் அல்லது செயலில் சாத்துவிகமாகவும் சக்தியற்றவர்களாகவும் ஆக்கிவிட்டதென்ற தவருன எண்ணத்தைத் திருத்திக்கொள்ள வேண்டும். மிகப் பெரிய ஹிந்து சீர்திருத்தக்காரர்கள், அவர்கள் தலைமுறையில் காரியத்தில் கருத்துடையவர்களாகவே இருந்திருக்கிருர்கள். அவர்கள் பெரும்பாலும் சைவ உணவு கொள்பராகவே இருந்தனர். சங்கராசாரியரும் தயானந்தரும் அவர்களுடைய காலத்தில் செய்ததை விட அதிகம் செய்யக்கூடியவர்களை யாராவது காட்ட முடியுமா?

ஆனல், எனக்குக் கடிதம் எழுதியிருக்கும் இவர், என்னையே தம் ஆதாரமாக ஏற்றுக்கொண்டுவிடக் கூடாது. தாம் எதை உண்பது என்பதில் முடிவுக்கு வருவது நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்ட விஷயமன்று. ஒவ்வொருவரும் தமக்குத் தாமே சீர்தூக்கிப் பார்த்து முடிவுக்கு வர வேண்டிய விஷயம் இது. முக்கியமாக மேற்கத்திய நாடுகளில் சைவ உணவைப்பற்றிய நூல்கள் பெருகியிருக்கின்றன. உண்மையை நாடுவோர் அவற்றைப் படித்துப் பயன் பெறலாம். அந்த நூல்களில் பல பிரபல வைத்திய நிபுணர்கள் எழுதியிருக்கிருர்கள். இங்கு இந்தியாவிலோ சைவ உணவு சம்பந்தமாக நமக்குப் பிறர் உற்சாகப்படுத்த வேண்டிய தேவையே இல்லை. ஏனெனில், இவ்வுணவு மிகவும் விரும்பத் தக்கது, மேன்மையானது என்று இதுவரை ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. என்ருலும், இக்கடிதத்தை எழுதியிருப்பவரைப் போன்று யாருக்காவது குழப்பம் ஏற்பட்டிருக்குமானல், சைவ உணவுக்கு ஆதரவாக மேற்கத்திய நாடுகளில் வளர்ந்து வரும் இயக்கங்களைக் குறித்துப் பரிசீலனை செய்யலாம்.

— 'எங் இந்தியா' — 7—10—1926.

# 21
# புலால் உண்பவராயினும்

காமம், குரோதம், பேராசை, பொறாமை, அகந்தை, பொய்மை ஆகிய ஆறு அபாயகரமான எதிரிகள் நம்முள் இருக்கின்றன. வெறும் ஜீவதயை (மிருகங்களிடம் அன்போடிருப்பது) மாத்திரம் அப் பயங்கர எதிரிகளை வென்றுவிடச் செய்வதில்லை என்பது நினைவிருக்க வேண்டும். தான் என்ற அகந்தையை முற்றிலும் வென்று எல்லாவற்றினிடமும் முழு நல்லெண்ணத்தோடும் அன்போடும் இருக்கும் ஒருவரை எனக்குக் காட்டுங்கள். அவர் செய்யும் காரியங்கள் எல்லாம் அன்புத் தருமத்தை அனுசரித்தவையாகவும் இருக்குமாயின், அப்படிப்பட்டவர் புலால் உண்பவராயிருந்தாலும், அவரை நான் மரியாதையுடன் வணங்கிப் போற்றுவேன். இதற்கு நேர்மாறாக, காமமும் குரோதமும் நிறைந்திருக்கும் ஒருவர், தினந்தோறும் எறும்புகளுக்கும் மற்றப் பூச்சிகளுக்கும் உணவளித்து, கொல்லாமையை அனுசரித்து வந்தாலும், அவருடைய ஜீவ தயையில் போற்றக்கூடியது எதுவுமில்லை. ஆத்மிகத்தன்மை எதுவுமில்லாமல் இயந்திரம்போல் செய்யப்படும் காரியமே அது. அதையும்விட இன்னும் அதிக மோசமானதாகவும் அது இருக்கக்கூடும். அதாவது, உள்ளுக்குள்ளிருக்கும் ஊழல்களையெல்லாம் மறைத்துக்கொள்ள அது ஒரு கபடமிக்க திரைபோலும்?

—'ஹரிஜன்' 15—9—'40.

# 22
# மீன் தின்னுவது அகிம்சையா?

**கேள்வி :** மீன் சாப்பிடுகிறவர்களுக்கு மீன் கிடைக்கச் செய்ய வேண்டும் என்று நீங்கள் கூறுகிறீர்கள். அதைச் சாப்பிடுகிறவனும், சாப்பிடுகிறவனுக்கு மீன் கிடைக்கும்படி செய்கிறவனும் இம்சை செய்வதாகவில்லையா?

**பதில் :** இருவரும் இம்சையையே செய்கிறார்கள். காய் வகைகளைச் சாப்பிடுகிறவர்களும் அவ்விதமே இம்சையைத்தான் செய்கின்றனர். உடலோடு கூடிய வாழ்க்கை எல்லாவற்றிலும் இத்தகைய இம்சை இருக்கவே செய்கிறது. மனிதனும் அவ்வாறே. நிலைமை இவ்விதம் இருந்து வந்தாலும், அகிம்சையை நாம் ஒரு கடமையாக அனுசரிக்க வேண்டியிருக்கிறது. மீன் சாப்பிடுகிறவரைவிட மீன் சாப்பிடக்கூடாது என்று இன்னொருவரைப் பலவந்தமாகக் கட்டாயப்படுத்துகிறவர் அதிக இம்சையைச் செய்பவராகிறார். மீன் பிடிப்போர், மீன் விற்போர், மீனைச் சாப்பிடுவோர் ஆகியோர் தாங்கள்

செய்வதில் இம்சை இருக்கிறது என்பதை ஒரு வேளை அறியாமலேயே இருக்கலாம். இம்சை இருக்கிறது என்பது அவர்களுக்குத் தெரிந்திருந்தாலும் அது தவிர்க்க முடியாதது என்று அவர்கள் கருதலாம். ஆனால், இதில் கட்டாயத்தை உபயோகிப்பவரோ, வேண்டும் என்றே இம்சையைச் செய்த குற்றவாளியாவார். பலவந்தம் செய்வது மனிதத் தன்மையன்று. தங்களுக்குள் சச்சரவிட்டுக் கொள்ளுகிறவர்கள், செல்வத்தைக் குவிப்பதற்காக எக்காரியத்தையும் செய்யத் துணிகிறவர்கள், ஏய்த்து மனிதரின் உழைப்பைப் பெற்று லாபமடைகிறவர்கள், கட்டாயப்படுத்தி வேலைவாங்குகிறவர்கள், அறிந்தே இத்தகைய இம்சைகளைச் செய்து வருகிறார்கள்; அவைகளைச் சுலபத்தில் அவர்கள் நிறுத்திவிடவும் முடியும். மீன் சாப்பிடுகிறவர் மீனைச் சாப்பிட அனுமதிப்பதில் இம்சை இருக்கிறது என்று நான் கருதவில்லை. அதைச் சகித்துக் கொள்ளுவது என் கடமை. அகிம்சை, உன்னதமானதோர் கடமை. அதை முற்றிலுமாக நாம் அனுசரிக்க முடியாது போயினும், அதன் தன்மையை அறிந்துகொள்ள நாம் முயற்சி செய்வதோடு மனிதப் பிரயத்தனத்தில் முடிந்த அளவுக்கு இம்சை செய்யாமல் இருக்க வேண்டும்.

'ஹரிஜன பந்து'விலிருந்து —'ஹரிஜன்'—24—3—1946
பம்பாய், 11—3—1946.

# 23

# பால் உண்பது சரியா?

"நீங்கள் பால் சாப்பிட்டாலன்றி உங்கள் உடம்பைத் திரும்ப வளர்க்க என்னால் ஆகாது. அதோடு இரும்பு, ஆர்ஸனிக் இன்ஜக்ஷன்களையும் நீங்கள் எடுத்துக்கொண்டால் உங்கள் உடம்பு பழையபடி வலுப் பெற்றுவிடும் என்று நான் உத்தரவாதம் கூற முடியும்." என்றார் டாக்டர்.

இதற்கு நான், "இன்ஜக்ஷனை நீங்கள் எனக்குக் கொடுங்கள். ஆனால், பால் சாப்பிடுவது வேறு விஷயம். அதைச் சாப்பிடுவதில்லை என விரதம் கொண்டிருக்கிறேன்" என்று பதில் சொன்னேன்.

"உங்கள் விரதத்தின் தன்மைதான் என்ன?" என்று டாக்டர் கேட்டார்.

விரதத்தின் சரித்திரத்தையும் காரணங்களையும் அவருக்குச் சொன்னேன். பசுவையும் எருமையையும் கறப்பதற்கு 'பூக்கா

முறை' அனுசரிக்கப்படுகிறது என்பதை அறிந்ததும் பால்மீது எனக்குப் பலமான வெறுப்பு உண்டாகிவிட்டது. மேலும், மனிதனுக்குப் பால் இயற்கையான ஆகாரமல்ல என்றும் நான் எப்பொழுதும் கருதி வந்திருக்கிறேன். ஆகவே, அதை உபயோகிப்பதை அடியோடு விட்டுவிட்டேன். கஸ்தூரி பா என் படுக்கைக்கு அருகில் நின்றுகொண்டு இந்தப் பேச்சு முழுவதையும் கேட்டுக்கொண்டிருந்தாள்.

"ஆனால், ஆட்டுப் பால் சாப்பிடுவதில் உங்களுக்கு எந்த வித ஆட்சேபமும் நிச்சயமாக இருப்பதற்கில்லை" என்றாள் கஸ்தூரி பா.

டாக்டரும் அதைப் பிடித்துக்கொண்டார். "நீங்கள் ஆட்டுப்பால் சாப்பிட்டால் அதுவே எனக்குப் போதும்" என்றார் அவர்.

நானும் இணங்கிவிட்டேன். சத்தியாக்கிரகப் போராட்டத்தை நடத்த வேண்டும் என்ற பலமான ஆர்வம் என்னுள் இருந்தது. உயிரோடிருக்க வேண்டும் என்ற பலமான ஆசையை இது உண்டாக்கியது. ஆகவே, என் விரதத்தின் வாசகத்தை மட்டும் அனுசரிப்பதில் திருப்தி கொண்டு அதன் தன்மையைத் தியாகம் செய்துவிட்டேன். நான் விரதம் செய்துகொண்ட போது என் மனத்தில் இருந்ததெல்லாம் பசுவின் பாலும் எருமைப் பாலுமே. என்றாலும், இயற்கையாகவே எல்லா மிருகங்களின் பாலையுமே இது குறிப்பதாகிறது. மேலும், மனிதனுக்குப் பால் இயற்கையான உணவல்ல என்ற கருத்து எனக்கு இருக்கும் போது நான் பாலைச் சாப்பிடுவது என்பதே சரியன்று. என்றாலும், இவைகளையெல்லாம் அறிந்திருந்தும் ஆட்டுப்பால் சாப்பிடச் சம்மதித்தேன். சத்தியத்தினிடம் வைக்கும் பக்தியை விட, உயிரோடிருக்க வேண்டும் என்ற உறுதி பலமானதாகி விட்டது! சத்தியாக்கிரகப் போராட்டத்தை மேற்கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தினால், சத்தியத்தைக் கடைப்பிடிப்பவன் தன்னுடைய புனித லட்சியத்தை ஒரு தடவை விட்டுக் கொடுக்க வேண்டியதாயிற்று. இச்செய்கையின் நினைவு இன்னும் என் உள்ளத்தில் உறுத்திக்கொண்டிருப்பதோடு அத் தவறுக்காக வேதனைப்பட்டும் வருகிறேன். ஆட்டுப்பால் குடிப்பதையும் எப்படி விடுவது என்பதைக் குறித்து எப்போதும் நினைத்துக்கொண்டிருக்கிறேன். ஆனால், சேவை செய்ய வேண்டும் என்ற ஆர்வம் இன்னும் என்னைப் பற்றிக்கொண்டிருக்கிறது. ஆகவே, உள்ளுக்குள் இருந்துவரும் அந்த ஆசையிலிருந்து நான் இன்னும் விடுபட முடியவில்லை.

அகிம்சையைப்பற்றிய என் ஆராய்ச்சிகளின் ஒரு பகுதியாக எனக்கு மிகவும் பிடித்து இருப்பவை உணவு பற்றிய என் சோதனைகளாகும். அவை எனக்குப் பொழுதுபோக்காகவும் ஆனந்தமளிப்பவையாகவும் இருக்கின்றன. ஆனால், ஆட்டுப்பாலை நான் உபயோகித்துக்கொண்டு வருவது, உணவு பற்றிய அகிம்சை நோக்கிலிருந்து பார்க்கையில் எனக்கு மன வேதனை தரவில்லை. ஆனால், சத்தியத்தின் நோக்கிலிருந்து பார்த்தால் நான் வாக்குறுதியிலிருந்து மீறியதான வேதனையையே தருகிறது. அகிம்சையின் லட்சியத்தைவிடச் சத்தியத்தின் லட்சியத்தையே நான் நன்றாக அறிவதாக எனக்குத் தோன்றுகிறது. இந்தச் சத்தியத்தில் எனக்குள்ள பற்றுதலை விடுவேனாயின், அகிம்சையின் புதிருக்கு என்னால் விடை காணவே முடியாது; என் அனுபவம் இதைச் சொல்லுகிறது. மேற்கொண்ட விரதத்தை அதன் சொல்லிலேயன்றி அதன் தன்மையிலும் நிறைவேற்றியாக வேண்டியது சத்தியத்தின் லட்சியத்திற்கு அவசியமாகிறது. இந்த விஷயத்திலோ, வெளி உருவை மாத்திரம் பின்பற்றிவிட்டு அதன் உயிரை - என்னுடைய விரதத்தின் ஆத்மாவை - நான் கொன்றுவிட்டேன். என் மனத்தை உறுத்திக்கொண்டு இருப்பதெல்லாம் இதுவே. ஆனால், இவ்விதம் தெளிவாக அறிந்திருந்தபோதிலும், என் முன்னால் இருக்கும் நேரான வழியைப் பின்பற்றும் துணிவு ஒருவேளை எனக்கு இல்லாமல் இருக்கலாம். அடிப்படையில் இரண்டுக்கும் பொருள் ஒன்றே. ஏனெனில், நம்பிக்கை இல்லாமை அல்லது நம்பிக்கை பலவீனமானதாக இருப்பதன் பலனாகவே பொதுவாகச் சந்தேகம் உண்டாகிறது. 'ஆண்டவனே! எனக்கு நம்பிக்கையை அளி' என்பதே இரவு பகல் என் பிரார்த்தனை.

— மகாத்மா எழுதிய சுயசரிதையிலிருந்து
(5-ஆம் பகுதி 29-ஆம் அத்தியாயம்.

## 24

# உயிருள்ளவற்றைத் துண்டித்துச் சோதனை

உயிருள்ளவைகளை அறுத்துச் சோதனை செய்வது என்பதை எனது முழு மனத்துடன் நான் வெறுக்கிறேன். விஞ்ஞானம், ஜீவகாருண்யம் என்று சொல்லப்படுவதன் பெயரால் ஒரு பாபமும் அறியாத உயிர்கள் மன்னிக்க முடியாத வகையில் படுகொலை செய்யப்படுவதை வெறுக்கிறேன். ஒரு பாபமும் அறி

யாதவைகளின் ரத்தத்தைச் சிந்தி விஞ்ஞானத்தில் கண்டுபிடிக்கப்பட்டிருப்பவை யாவும் ஒன்றுக்கும் ஆகாதவை என்றே நான் கருதுகிறேன். உயிருள்ளவைகளைத் துண்டித்துப் பார்க்காமல் ரத்த ஓட்டத் தத்துவத்தைக் கண்டு பிடித்திருக்க முடியாதென்றால், மனித வர்க்கம் அது இல்லாமலேயே நன்றாகத்தான் இருந்திருக்கும். மேற்கத்திய நாடுகளின் நேர்மையான விஞ்ஞானி அறிவைத் தேடும் இன்றைய முறைகளுக்குக் கட்டுத் திட்டங்களை உண்டாக்கும் நாள் வந்துகொண்டிருக்கிறது என்பதைத் தெளிவாகக் காண்கிறேன். வருங்காலத்தில் இது போன்ற சோதனை அளவைகள், மனித குடும்பத்தை மாத்திரமேயன்றி உயிர் வாழும் எல்லாவற்றையுமே கவனித்துக்கொள்ளும். தங்களில் ஐந்தில் ஒரு பகுதியினர் மிக இழிந்த நிலையில் இருந்து வரும்போது ஹிந்துக்கள் சுகப்பட முடியும் என்று எண்ணுவது தவறு என்பதை மெதுவாகவேயாயினும், நிச்சயமாக நாம் கண்டுப்பிடித்து வருகிறோம். கிழக்கத்திய, ஆப்பிரிக்க நாட்டு மக்களை வஞ்சிப்பதனாலும், அவர்களை இழிவான நிலையில் வைத்திருப்பதனாலும் மேற்கத்திய நாட்டு மக்கள் உயர முடியும், வாழ முடியும் என்று எண்ணுவது தவறு என்பதையும் கண்டு வருகிறோம். அதே போலக் காலம் போகப் போக, படைப்பில் தாழ்ந்த நிலையில் இருக்கும் உயிர்களின்மீது நமக்குள்ள ஆதிக்கம் நமக்குச் சமமாக அவையும் நன்மை அடையவேண்டும் என்பதைக் கருதியே தோன்றியது, அவைகளைப் படுகொலை செய்வதற்கல்ல என்பதையும் நாம் உணர்ந்து கொள்வோம். ஏனெனில், எனக்கு ஆத்மா இருப்பதைப் போன்றே அவைகளுக்கும் ஆத்மா உண்டு என்பது நிச்சயம்.

—'எங் இந்தியா' - 17—12—1925.

# 1

# யுத்தத்தில் என் பங்கு

தேக நிலையை முன்னிட்டுப் பாரிஸுக்குச் சென்ற கோகலே அங்கிருந்து திரும்பி வர முடியாத நிலைமையில் இருக்கிறார் என்பதை நான் இங்கிலாந்துக்கு வந்ததுமே அறிந்தேன். பாரிஸுக்கும் லண்டனுக்குமிடையே போக்குவரத்துத் துண்டிக்கப்பட்டுவிட்டதால் அவர் எப்பொழுது திரும்புவார் என்பதே தெரியவில்லை. அவரைப் பார்க்காமல் தாய்நாடு திரும்ப நான் விரும்பவில்லை. ஆனால், அவர் எப்பொழுது வருவார் என்று யாராலும் சொல்ல முடியாது.

இதற்கு மத்தியில் நான் என்ன செய்வது? யுத்த சம்பந்தமாக என் கடமை என்ன? என் சிறைத் தோழரும் சத்தியாக்கிரகியுமாகிய சோராப்ஜி அடஜானியா லண்டனில் வக்கீல் தொழிலுக்குப் படித்துக்கொண்டிருந்தார். இவர் சிறந்த சத்தியாக்கிரகியாகையால், தென்னாப்பிரிக்காவுக்குத் திரும்பியதும் என் ஸ்தானத்தை இவர் வகிக்க வேண்டுமென்பதற்காகப் பாரிஸ்டராகி வரட்டும் என்பதற்கு இவரை இங்கிலாந்திற்கு அனுப்பியிருந்தார்கள். இவருடைய செலவுக்கு டாக்டர் பிராண்ஜீவன்தாஸ் மேத்தா பணம் கொடுத்தார். இவருடனும், இவர் மூலமும் இங்கிலாந்தில் படித்துக்கொண்டிருந்த டாக்டர் ஜீவராஜ் மேத்தா முதலியவர்களுடன் கலந்து ஆலோசித்தேன். இவர்களுடைய ஆலோசனையின் பேரில் பிரிட்டனிலும் அயர்லாந்திலும் இருந்த இந்தியரின் கூட்டம் ஒன்று கூட்டப்பட்டது. அக்கூட்டத்தில் என் கருத்துக்களை எடுத்துக் கூறினேன்.

இங்கிலாந்தில் வசிக்கும் இந்தியர், யுத்தத்தில் தங்களுக்குள்ள பொறுப்பைச் செய்ய வேண்டும் என்று எண்ணினேன். ராணுவத்தில் சேர ஆங்கிலேய மாணவர்கள் தாமே வலிய முன் வந்திருக்கிறார்கள். இந்தியரும் அப்படிச் செய்யலாம். இத்தகைய வாதத்திற்குப் பலவகையான ஆட்சேபங்கள் கூறப்பட்டன. இந்தியருக்கும் ஆங்கிலேயருக்கும் எவ்வளவோ வித்தியாசங்கள் இருக்கின்றன என்றார்கள். அவர்கள் யஜமானர்கள்; நாமோ அடிமைகள். யஜமானருக்கு அவசியம் ஏற்பட்டிருக்கும் சமயத்தில் யஜமானருடன் அடிமைகள் எப்படி ஒத்துழைக்க முடியும்? சுதந்திரம் அடைந்துவிடவேண்டும் என்று முயற்சி செய்துவரும் அடிமை, யஜமானருக்கு ஏற்பட்டிருக்கும் கஷ்ட நிலைமையைத் தனக்குச் சாதகமானதோர் சந்தர்ப்பமாக உபயோகித்துக்கொள்ள வேண்டாமா? இந்த வாதம்

அப்பொழுது எனக்குத் திருப்தி அளிக்கவில்லை. இந்தியருக்கும் ஆங்கிலேயருக்கும் அந்தஸ்தில் இருக்கும் பாகுபாட்டை நான் அறிவேன். ஆனால், அடிமைகள் என்ற நிலைக்கு நாம் தாழ்த்தப்பட்டுவிட்டோம் என்று நான் நம்பவில்லை. தவறெல்லாம் சில தனிப்பட்ட பிரிட்டிஷ் அதிகாரிகளைச் சார்ந்தனவேயன்றிப் பிரிட்டிஷ் முறையில் இல்லை என்றும், அவர்களையும் அன்பினால் மாற்றிவிடலாம் என்றும் எண்ணினேன். பிரிட்டிஷாருக்குச் செய்யும் உதவி, அவர்களுடன் ஒத்துழைப்பது ஆகியவைகளினால் நமது அந்தஸ்தை உயர்த்திக்கொள்வதாயின், அவர்களுக்கு இடுக்கண் நேரிட்டபோது அவர்களுடன் இருப்பதன் மூலம் அவர்களுடைய உதவியைப் பெற வேண்டும் என்றும் எண்ணினேன். ஆட்சி முறையில் குற்றங்கள் இருந்தாலும், இன்று காண்பது போலச் சகிக்க முடியாதது என அன்று தோன்றவில்லை எனக்கு. அந்த ஆட்சி முறையில் நம்பிக்கையை இழந்து, பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் ஒத்துழைக்க நான் இன்று மறுக்கிறேன் என்றால், ஆட்சி முறையிலேயன்றி அதிகாரிகள் விஷயத்திலும் நம்பிக்கையை இழந்துவிட்ட அந்த நண்பர்கள் மாத்திரம் அப்பொழுது எப்படி ஒத்துழைக்க முன்வர முடியும்?

இந்தியரின் கோரிக்கைகளைத் தைரியமாக எடுத்துச் சொல்லி, இந்தியரின் அந்தஸ்தை உயர்த்திக்கொள்வதற்கு அதுதான் தக்க சமயம் என்று, எதிர்த்த அந்த நண்பர்கள் கூறினார்கள்.

இங்கிலாந்தின் கஷ்டங்களை நமக்கு ஒரு சந்தர்ப்பமாக்கிக் கொள்ளக்கூடாது, யுத்தம் நடந்துகொண்டிருக்கும் வரையில் நம் கோரிக்கைகளை வற்புறுத்தாமல் இருப்பதுதான் கௌரவமானது, புத்திசாலித்தனமானது என்றும் எண்ணினேன். எனவே, என் யோசனையை நான் பின்பற்றினேன். ராணுவத்தில் தாமே வலிய சேர்ந்துகொள்ள விரும்புகிறவர்களைப் பதிவு செய்துகொள்ளும்படியும் கேட்டுக்கொண்டேன். பலர் முன் வந்தார்கள். பல மாகாணங்களையும் எல்லா மதங்களையும் சேர்ந்தவர்களும் இதில் இருந்தார்கள்.

லார்டு கிரீவேக்குக் கடிதம் எழுதி இந்த விவரங்களையெல்லாம் அவருக்கு அறிவித்தேன். வைத்தியப்படை வேலைக்குப் பயிற்சி பெற நாங்கள் தயாராயிருப்பதாகவும், எங்கள் பணியை ஏற்றுக்கொள்வதற்கு முன்னால் இதை ஒரு நிபந்தனையாகக் கொள்ளவேண்டும் என்றும் அறிவித்தேன்.

சிறிது தயக்கத்திற்குப் பிறகு லார்டு கிரீவே எங்களுடைய விருப்பத்தை ஏற்றுக்கொண்டார். சாம்ராஜ்யத்திற்கு நெருக்கடியான நேரத்தில் எங்கள் சேவையை அளிக்க முன் வந்ததற்கு நன்றியும் தெரிவித்திருந்தார்.

இத்தொண்டர்கள், பிரபலமான டாக்டர் காண்ட்லீ என்பவரிடம் காயமடைந்தோருக்கு முதல் சிகிச்சை செய்வதில் ஆரம்பப் பயிற்சியைப் பெற்றனர். இது ஆறு வாரங்களுக்கேயான குறுகிய காலப் பயிற்சி. ஆனால், முதல் வைத்திய உதவியின் எல்லா முறைகளும் இதில் அடங்கியிருந்தன.

எங்கள் பயிற்சி வகுப்பு சுமார் 80 பேரைக் கொண்டது. ஆறு வாரங்களில் எங்களுக்குப் பரீட்சை நடந்தது. ஒருவரைத் தவிர மற்றவர்கள் யாவரும் தேறிவிட்டனர். இவர்களுக்கு அரசாங்கம் ராணுவ கவாத்தும் மற்றப் பயிற்சிகளும் அளித்தது. கர்னல் பேக்கரிடம் இவ்வேலை ஒப்படைக்கப்பட்டிருந்தது.

இந்தக் காலத்தில் லண்டன் காட்சி பார்க்கத் தகுந்ததொன்றாகும். மக்களிடையே திகில் இல்லை. தங்கள் சக்திக்கு ஏற்ற வகையில் உதவி செய்வதற்காக எல்லோருமே துடிப்புடன் இருந்தார்கள். வயது வந்தோரில் திடகாத்திரத்துடன் இருந்தவர்கள், போருக்குச் சிப்பாய்களாகப் பயிற்சி பெற்றுவந்தனர். ஆனால், வயதானவர்களும், நோயாளிகளும், பெண்களும் என்ன செய்ய முடியும்? அவர்களும் வேலை செய்ய விரும்பினால், அவர்களுக்கும் ஏற்ற வேலைகள் இருந்தன. ஆகவே, ஆடைகள் தயாரிப்பது, காயம் பட்டோருக்குக் கட்டுக் கட்டுவது போன்ற வேலைகளை இவர்கள் செய்துவந்தார்கள்.

லைஷியம் என்ற பெண்கள் மன்றம், சிப்பாய்களுக்குத் தன்னால் முடிந்த அளவுக்கு ஆடைகள் தைத்துக் கொடுப்பது என்று முன் வந்தது. இந்த மன்றத்தில் ஸ்ரீமதி சரோஜினி நாயுடுவும் ஓர் உறுப்பினர். இவர் இப்பணியில் தீவிரமாக ஈடுபட்டிருந்தார். எனக்கு இவருடன் முதலில் அப்பொழுதுதான் பரிசயம் ஏற்பட்டது. ஒரே மாதிரியாகக் கத்தரிக்கப்பட்டிருந்த துணிக் குவியல் ஒன்றை அவர் என் முன்பு போட்டு, அவற்றையெல்லாம் தைத்துத் தம்மிடம் அனுப்பும்படி கேட்டுக்கொண்டார். அவர் கோரிக்கையை வரவேற்றேன். வைத்திய முதலுதவிக்கு நான் பயிற்சி பெற்று வந்தபோது, என் நண்பர்களின் உதவியைக் கொண்டு என்னால் முடிந்த அளவு ஆடைகளைத் தயாரித்தேன்.

(சுயசரிதை- 4-ஆம் பகுதி அத். 38.)

## 2

# யுத்தத்தில் நான் உதவியது ஏன்?

கீழ்வரும் காரசாரமான முறையில் ஒரு நிருபர் சில பொருத்தமான கேள்விகளைக் கேட்டிருக்கிறார்:

"தங்களுடைய உரிமைகளைப் பறித்துக்கொண்டுவிட்ட பிரிட்டிஷாருக்கு எதிராக ஜுலுக்கள் போருக்குக் கிளம்பியபோது, கலவரம் என்று கூறப்பட்டுவிட்ட அதை அடக்குவதற்கு நீங்கள் பிரிட்டிஷாருக்கு உதவி செய்தீர்கள். அன்னிய அடிமைத் தளையை அறுத்தெறியப் பார்ப்பது புரட்சிக் கலவரமா? ஜீன் ட ஆர்க் (ஜோன் அப் ஆர்க்), ஜார்ஜ் வாஷிங்டன் இவர்கள் கலகக்காரரா? டிவேலராவும் அப்படித்தானா? ஜுலுக்கள் பலாத்காரத்தில் இறங்கினார்கள் என்று நீங்கள் கூறலாம். அப்படியானால்,முடிவு கெட்டதா அல்லது முறைதான் கெட்டதா என்று உங்களைக் கேட்கிறேன். முறை தவறானதாக இருக்கலாம். ஆனால், முடிவு நிச்சயமாகத் தவறானது அல்ல. ஆகையால், தயை செய்து இந்தப் புதிரைக் கொஞ்சம் விளக்குங்கள். போன யுத்தத்தில் வீர ஜெர்மானியரும் ஆஸ்திரியரும் ஓர் உலகக்கூட்டை எதிர்த்துப் போராடிக்கொண்டிருந்தபோது, இந்தியாவுக்கு ஒரு தீங்கையுமே செய்யாத அந்நாடுகளுக்கு எதிராகப் போராடப் பிரிட்டிஷாருக்கு நீங்கள் படைக்கு ஆள் திரட்டினீர்கள். இரண்டு நாட்டினர் யுத்தம் செய்துகொண்டிருக்கும்போது, இதில் ஒருவருக்குச் சாதகமாகவோ அல்லது பாதகமாகவோ இறங்குவதற்கு முன்னால், இரு தரப்பாருடைய நியாயத்தையும் கேட்டுத் தெரிந்துகொண்டிருக்க வேண்டும். போன யுத்தத்தில் ஒருதலைப் பட்சமான நியாயம் மட்டுமே நம்மால் தெரிந்துகொள்ள முடிந்தது; அதுவும் உண்மை பேசுவதிலோ அல்லது யோக்கியப் பொறுப்பிலோ பெயர் வாங்காத ஒரு நாடு கூறியதைக் கொண்டு இதை நாம் அறிந்தோம். நீங்கள் சாத்துவிக எதிர்ப்பையும், அகிம்சையையும் நெடுநாளாகவே வற்புறுத்தி வந்திருக்கிறீர்கள். அப்படியிருக்க, யுத்தத்தின் நியாய அநியாயங்களை அறியாமல் ஒரு போரில், ஏகாதிபத்தியச் சகதியில் புரண்டுகொண்டிருக்கும் ஓர் இனத்தாரைப் பங்கெடுத்துக்கொள்ளும்படி நீங்கள் ஏன் தூண்டினீர்கள்? பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தினிடம் நம்பிக்கை இருக்கிறது என்று நீங்கள் சொல்லலாம். செய்கைகள் யாவும் அவர்கள் அளித்த வாக்குறுதிகளுக்கு நேர்மாறாகப் போயிருக்கின்றன என்பது பகிரங்கமாகியிருக்கும்போது அந்த அன்னியர்களிடம் யாராவது நம்பிக்கை வைப்பது என்பதுதான் சாத்தியமா? உங்களைப் போன்ற உயர்ந்த கல்வி கேள்வியுடையவர் அப்படி நம்பிக்கை வைக்கவே மாட்டார். ஆகையால், இந்த இரண்டாவது புதிருக்கும் தயை செய்து பதில் கூறுங்கள்.

"நான் குறிப்பிட வேண்டிய மற்றொரு விஷயமும் உண்டு: அகிம்சையின் சிறப்பை நீங்கள் வற்புறுத்தி வருகிறீர்கள். இப்பொழுதுள்ள நிலைமையில் நாம் கண்டிப்பாக அகிம்சையைக் கடைப்பிடிக்க வேண்டும். ஆனால், இந்தியா சுதந்திரம் அடைந்துவிட்ட பிறகு ஓர் அன்னிய நாடு நம்மீது படையெடுக்குமானால், அப்பொழுதும் நாம் ஆயுதங்களை உபயோகிக்காமல் இருக்க வேண்டுமா? ரெயில்வேக்கள், தந்திகள் ஆகியவை நம் விளைபொருள்கள் வெளிநாடுகளுக்குப் போய்விடுவதற்குச் சாதனங்களாக இன்று இருக்கும் நிலை ஒழிந்த பிறகும் அவற்றை நீங்கள் பகிஷ்கரிப்பீர்களா?"

என்னிடம் முன்னுக்குப் பின் முரணானவை இருக்கின்றன என்ற பல குற்றச்சாட்டுகளைக் கேட்கிறேன்; படிக்கிறேன்.

இவை என்னைத் தவிர வேறு யாரையும் பாதிக்காததனால் இவற்றிற்கு நான் பதில் சொல்லுவதில்லை. ஆனால், இந்நிருபர் கேட்டிருப்பவை பொதுவாக முக்கியமானவைகளாகையால் கவனிக்க வேண்டியவைகளாகும். இவை எனக்குப் புதிய வையே அல்ல. ஆனால், இவற்றிற்கு நான் 'எங் இந்தியா' வில் பதில் கூறியிருப்பதாக எனக்கு நினைவில்லை. ஜுலுக்கள் கலவர சமயத்திலும், அதற்கும் முன்னால் போயர் யுத்த காலத்திலும் என் சேவைகளை அளித்தேன் என்பது மாத்திர மல்ல, 1914-இல் லண்டனில் வைத்திய உதவிப்படை ஒன்றை யும் திரட்டினேன். இதனால், நான் பாபமே செய்திருக்கிறேன் என்றால், நிறையப் பாபத்தையே செய்திருக்கிறேன். எல்லாக் காலங்களிலுமே அரசாங்கத்திற்குச் சேவை செய்ய எந்தச் சந்தர்ப்பத்திலும் நான் தவறியதே கிடையாது. அந்த நெருக் கடியான காலங்களிலெல்லாம் இரண்டு விஷயங்களே எனக் குத் தென்பட்டன. அப்பொழுதெல்லாம் சாம்ராஜ்யத்தின் ஒரு பிரஜை நான் என்று நம்பி வந்தேன். ஆகையால், அத் தகைய பிரஜை என்ற முறையில் என்னுடைய கடமை என்ன என்பதும், அகிம்சா தருமத்தில் முற்றிலும் நம்பிக்கை கொண்ட வன் என்ற முறையில் என் பொறுப்பு என்ன என்பதுமே என் மனத்தில் இருந்தன.

சாம்ராஜ்யத்தின் பிரஜை நான் என்று அப்பொழுது எண்ணிக்கொண்டிருந்தது தவறு என்பதை இப்பொழுது அறிவேன். என் நாட்டுக்கு அப்பொழுது எத்தனையோ கஷ்டங்கள் இருந்தபோதிலும், சுதந்திரத்தை நோக்கி அது முன் னேறிக்கொண்டிருக்கிறது என்று எண்ணினேன். பொதுவாக, மக்களின் நிலையைக் கொண்டு கவனித்தால் அரசாங்கம் அடி யோடு மோசமானதல்ல என்றும் நினைத்தேன். பிரிட்டிஷ் நிர்வாகிகள், குறுகிய புத்தியினராகவும் மந்த உணர்வுள்ளவ ராகவும் இருந்தபோதிலும் நேர்மையானவர்கள் என்றும் கருதி னேன். இத்தகைய கருத்து எனக்கு இருந்ததால், அந்நிலை யில் ஓர் ஆங்கிலேயர் என்ன செய்திருப்பாரோ அதையே நானும் செய்ய முற்பட்டேன். சுயேச்சையாக நான் ஒரு காரியத்தைச் செய்வதற்கு, நான் ஒரு புத்திசாலியோ அல்லது முக்கியமானவனோ அல்ல. மந்திரிகள் செய்யும் முடிவுகளை ஒரு நீதி சபை பரிசீலனை செய்வதைப்போல அலசிப் பார்ப் பதோ அல்லது சரியா, தவறா என்று முடிவு கட்டுவதோ என் வேலையுமன்று. போயர் யுத்த காலத்திலோ, ஜுலுக்கள் கலவரங்களின்போதோ அல்லது பின்பு யுத்த சமயத்திலோ

மந்திரிகளுக்குக் கெட்ட எண்ணம் இருந்ததாக நான் கருதவுமில்லை. மற்றவர்களைவிட ஆங்கிலேயர்கள் கெட்டவர்கள், அதிக மோசமானவர்கள் என்று நான் அப்பொழுது எண்ணியதுமில்லை; இப்பொழுது எண்ணவுமில்லை. மற்றவர்களைப் போலவே அவர்களும் உயர்ந்த நோக்கம் கொள்ளவும், சிறந்த காரியங்களைச் செய்யவும் கூடியவர்கள்; இதே சமயம் அவர்கள் தவறு செய்யவும் கூடுமென்றுதான் நினைத்தேன். இப்பொழுதும் இதேதான் என் கருத்து. ஆகையால், உள்ளேயோ அல்லது பொதுவாகவோ சாம்ராஜ்யத்திற்கு நெருக்கடியான நிலைமை ஏற்பட்ட சமயங்களில் என்னுடைய எளிய சேவைகளை அதற்கு அளித்ததன் மூலம் ஒரு மனிதன், ஒரு பிரஜை என்ற முறையில் என் கடமையைப் போதிய அளவு நிறைவேற்றியிருப்பதாகவே எனக்குத் தோன்றியது. சுயராஜ்யத்தின் கீழ் ஒவ்வோர் இந்தியனும் தனது நாட்டிற்கு இப்படித்தான் செய்ய வேண்டும் என நான் எதிர்பார்ப்பேன். ஒவ்வொரு முக்கியமான சமயத்திலும், நமது எதிர்காலத் தேசிய அசெம்பிளி செய்யும் ஒவ்வொரு முடிவையும், நம்மில் ஒவ்வொருவரும் தங்கத் தராசிலிட்டு, எடை போட்டுப் பரிசீலனை செய்யக் கிளம்புவார்களாயின், அதைக் கண்டு என் மனம் பெரிதும் வருந்தும். நம் தேசீயப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதில் அதிக ஜாக்கிரதையாயிருப்பேன். ஆனால், அவர்களைத் தேர்ந்தெடுத்துவிட்ட பிறகு அவர்கள் செய்யும் முடிவுகளுக்கு உடன்பட்டுவிடுவேன். இப்படி நடந்துகொண்டாலன்றி ஒரு ஜனநாயகமோ ஜனநாயக அரசாங்கமோ ஒரு நாளைக்குமேல் நிலைபெற்றிருக்க முடியாது.

என்னைப் பொறுத்தவரை அந்த நிலைமைகளெல்லாம் இப்போது அடியோடு மாறிவிட்டன. என் கண்கள் இப்போது திறந்துவிட்டன என எண்ணுகிறேன். அனுபவம் எனக்கு அறிவைப் புகட்டியிருக்கிறது. இப்பொழுது இருந்துவரும் அரசாங்க முறை முற்றிலும் மோசமானது. இதை ஒழிக்கவோ அன்றி ஒழுங்காக்கவோ விசேஷ தேசீய முயற்சி தேவை எனக் கருதுகிறேன். தன்னைத் தானே சீர்திருத்திக்கொண்டுவிடக் கூடிய அம்சம் எதுவும் அதனிடமில்லை. பல ஆங்கிலேய நிர்வாகிகள் யோக்கியர்கள் என்றே நான் இப்பொழுதும் நம்புகிறேன். நான் முன்னால் இருந்ததைப்போல அவர்களும் கண்மூடித்தனமாகவும், தவறான எண்ணத்திலும் இருப்பதனாலேயே அவர்கள் எனக்கு உதவி செய்யவில்லை என்றும் நினைக்கிறேன். ஆகையால், இது என் சாம்ராஜ்யம் என்று சொல்லிக்கொள்

வதிலோ, நான் அதன் பிரஜை என்று சொல்லிக்கொள்வதிலோ இப்பொழுது பெருமைப் படவில்லை. இதற்கு நேர்மாருக, சாம்ராஜ்யத்தின் பறையன், தீண்டாதவன் நான் என்பதை முற்றிலும் உணர்கிறேன். ஆகவே, ஹிந்து மதமோ அல்லது ஹிந்து சமூகமோ தீவிரமான மாறுதலை அடைய வேண்டும் அல்லது அடியோடு அழிந்து போக வேண்டுமென்று ஓர் ஹிந்துப் பறையர் பிரார்த்தனை செய்வது எப்படி முற்றிலும் நியாயமோ அதே போல் நானும் இந்தச் சாம்ராஜ்யம் தீவிர மாறுதலை அடைய வேண்டும், இல்லாவிடில் நாசமாகிவிட வேண்டும் என்று இடைவிடாது பிரார்த்தனை செய்து வருகிறேன்.

அகிம்சையைப்பற்றிய அடுத்த விஷயமோ புரிந்துகொள்வதற்கு இன்னும் அதிகக் கஷ்டமானது. அகிம்சையைப் பற்றி நான் கொண்டிருக்கும் கருத்து, நான் ஈடுபட்டிருக்கும் ஒவ்வொரு காரியத்திலிருந்துமே நான் எப்பொழுதும் விலகியிருக்கும்படி என்னைத் தூண்டுகிறது. ஒரு தனிப்பட்ட தவறு அல்லது ஒரு தனிப்பட்ட துயர் இவற்றை நான் கண்டுவரும் வரை என் ஆத்மா திருப்தி யடைந்துவிட மறுக்கிறது. ஆனல், ஒவ்வொரு பிழையையும் திருத்திவிடுவதென்பதோ அல்லது காணும் தவறுகளின் பழியிலிருந்து என்னை விடுவித்துக்கொண்டுவிடுவதென்பதோ பலவீனமான, குறைகள் மலிந்த துர்ப்பாக்கியவானகிய என்னல் ஆகாது. என்னுள் இருக்கும் ஆத்மா ஒரு பக்கமும், என்னுள் இருக்கும் ஊனின் உணர்வு வேறு ஒரு பக்கமும் என்னை இழுக்கின்றன. இந்த இரு சக்திகளிடமிருந்து விடுபட முடியும். ஆனல், அதை மெதுவாக, கஷ்டமான கட்டங்களாகவே, அடைய முடியும். இயந்திரம் போல் அதற்கு உட்பட்டு நடப்பதில்லை என மறுத்துவிடுவதால் மாத்திரம் அந்தச் சுதந்திரத்தை நான் அடைந்துவிட இயலாது. பற்றற்ற வகையில் அறிவுடன் நடப்பதனலேயே அது கைகூடும். இந்தப் போராட்டம் ஆத்மா முற்றிலும் சுதந்திரம் அடைவதற்கே. இது இச்சடலத்தை இடைவிடாத துன்பத்திற்கு உட்படுத்துகிறது.

மேலும், நானும் மற்றவர்களைப் போல ஒரு சாதாரணப் பிரஜையே தவிர மேதையல்ல. அகிம்சையில் எனக்கு இருக்கும் நம்பிக்கையால் நான் உதவி செய்ய மறுக்கிறேன். அவர்களுக்கோ அகிம்சையில் கொஞ்சங்கூட நம்பிக்கை இல்லாவிட்டாலும், அவர்களுக்கு இருக்கும் கோபத்தினலும் துவேஷத்தினலும் அரசாங்கத்திற்கு உதவி செய்ய மறுக்கின்றனர்.

அவர்கள், தங்களுடைய அறியாமையினாலும் பலவீனத்தினாலுமே மறுக்கிறார்கள். அவர்களுடன் உழைப்பவன் என்ற முறையில் அவர்களுக்குச் சரியான வழியைக் காட்டுவது என் கடமையாகிறது. எனவே, அவர்களுடைய தெளிவான கடமை என்ன என்பதை அவர்களுக்கு எடுத்துச் சொன்னேன். அகிம்சைத் தத்துவத்தை அவர்களுக்கு விளக்கினேன். தங்களுக்கு இஷ்டமானதைச் செய்யவும் விட்டுவிட்டேன். அப்படியே அவர்களும் செய்தனர். அகிம்சை முறையில் நான் செய்த காரியங்களுக்காக நான் இப்பொழுது வருந்தவில்லை. ஏனெனில், சுயராஜ்யம் வந்தால்கூட, ஆயுதந் தாங்கி நாட்டிற்காகப் போராடக்கூடியவர்களுக்கு அப்படியே செய்யுமாறு யோசனை கூறவும் நான் தயங்க மாட்டேன்.

எனவே, நான் இரண்டாவது கேள்விக்கு வருகிறேன். நான் எந்தவிதச் சுயராஜ்யத்தைப்பற்றிக் கனவு கண்டு கொண்டிருக்கிறேனோ அதில் ஆயுதங்களுக்கு எந்தவித அவசியமுமே கிடையாது. இப்பொழுது செய்யப்பட்டு வரும் முயற்சியினால் என்னுடைய அந்தக் கனவு முழுவதுமே நிறைவேறி விடும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. இதற்கு முதலாவது காரணம், அதை உடனடி லட்சியமாகக் கொண்டு அதற்கான முயற்சி எடுத்துக்கொள்ளாதது. இரண்டாவதாக, இதற்குத் தயாராக எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்பதைக் குறித்து விவரமான வழிகளைத் தேசத்திற்கு எடுத்துக் கூறும் அளவுக்கு நான் பக்குவம் அடைந்துவிட்டதாக எண்ணவில்லை. இன்னும் ஆசாபாசங்கள் அதிகம் உள்ளவனாகவே நான் இருக்கிறேன். மனித இயற்கையில் இருக்கும் குறைபாடுகளெல்லாம் என்னிடமும் இருக்கின்றன. ஆகையால், வேண்டிய தகுதியை நான் இன்னும் பெற்றுவிடவில்லை. என்னிடம் இருக்கும் குறைபாடுகளையெல்லாம் போக்கிக்கொண்டுவிட இடைவிடாது முயற்சி செய்து வருகிறேன் என்று மாத்திரமே நான் சொல்லிக் கொள்ள முடியும். என் இச்சைகளை அடக்கி ஒடுக்கி விடுவதில் நான் அதிகத் திறமையை அடைந்திருக்கிறேன் என்று நம்புகிறேன். ஆனால், பாபமே புரியாத, அதாவது ஐம்புலனுக்கு வசமாகாத நிலைக்கு வந்துவிடவில்லை நான். அந்த அற்புதமான, வருணிக்கவொண்ணாத, பாபமற்றதோர் நிலையில், மற்றவையெல்லாம் நீங்கித் தன்னுடன் கடவுளே இருப்பதை ஒருவர் உணரமுடியும் என்பது எனது நம்பிக்கை. ஆனால், இது தொலைவான காட்சியாகவே இன்னும் இருக்கிறது என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். ஆகையால், செயல்முறையில் பூரண அகிம்

சைக்கானதோர் வழியை தேசத்திற்குக் காட்டுவது என்னல் சாத்தியமானதன்று.

--'எங் இந்தியா' - 17--11--1921

## 3

# நம்பிக்கை தகர்ந்து போன விதம்*

சங்கடமான சூழ்நிலையில் 1893-இல் என் பொதுஜன சேவை வாழ்க்கை தென்னப்பிரிக்காவில் தொடங்கிற்று. அத் தேசத்தில் பிரிட்டிஷ் ஆசியுடன் எனக்கு ஏற்பட்ட முதல் தொடர்பு இனிமை தரும் பகுதியல்ல. ஒரு மனிதன், ஓர் இந்தியன் என்ற முறையில் எனக்கு எந்தவிதமான உரிமையும் கிடையாது என்பதைக் கண்டுகொண்டேன். சரியாகச் சொல்லப் போனல் நான் இந்தியன் என்பதனலேயே மனிதன் என்ற முறையில் எனக்கு இருந்தாகவேண்டிய உரிமைகள் எனக்குக் கிடைக்கவில்லை என்பதையும் தெரிந்துகொண்டேன்.

ஆனல், நான் மனம் இடிந்துவிடவில்லை. இந்தியர் இவ்விதம் நடத்தப்படும் விதம் உண்மையில் நல்லதான ஏற்பாட்டில் தோன்றிய தீய புல்லுருவி என்றே எண்ணினேன். அரசாங்கத்திற்கு நானே எனது மனமார்ந்த ஒத்துழைப்பையும் அளித்தேன். அது தவறு செய்கிறது என்று எனக்குத் தோன்றிய காலங்களில் அரசாங்கத்தை முற்றிலும் கண்டித்தும் வந்தேன். ஆனல், அதன் அழிவை மாத்திரம் நான் விரும்பியதே இல்லை.

பிறகு போயர்களின் சவாலினல் 1890-இல், சாம்ராஜ்யம் நிலவுவதென்பதற்கே அபாயம் தோன்றியபோது, என் சேவையை அதற்கு அளித்தேன். தொண்டர்களைக் கொண்ட வைத்திய உதவிப்படை ஒன்றைத் திரட்டினேன். லேடிஸ்மித்தை மீட்பதற்காக நடந்த பல போர்களிலும் சேவை செய்தேன். பின்னர் 1906-இல் ஜுலுக்களின் புரட்சி ஏற்பட்ட சமயத்திலும், காயம் பட்டவர்களைத் தூக்கிச் செல்லும் கோஷ்டி ஒன்றைச் சேர்த்துக்கொண்டு, அக்கலவரம் முடியும்வரையில் சேவை செய்தேன். இவ்விரு சந்தர்ப்பங்களிலும் எனக்குப் பதக்கங்கள் அணிவித்தார்கள். சர்க்கார் அறிக்கைகளிலும் என் சேவைகளை மெச்சியிருந்தார்கள். நான் தென்னப்பிரிக்காவில் செய்த சேவைக்காக, லார்டு ஹார்டிஞ்சு, எனக்குக் 'கெய்ஸர்-இ-ஹிந்த்' தங்கப் பதக்கத்தை அளித்தார். 1914-இல் இங்கி

* காந்திஜிமீது தொடரப்பட்ட வழக்கு விசாரணையின்போது 18—3—1922 இல் கோர்ட்டில் கொடுத்த வாக்குமூலத்திலிருந்து.

லாந்திற்கும் ஜெர்மனிக்கும் போர் மூண்டபோது அப்பொழுது லண்டனிலிருந்த இந்தியரையும், முக்கியமாக மாணவர்களையும் கொண்ட வைத்திய உதவிப் படை ஒன்றை லண்டனில் திரட்டினேன். இது மெச்சத்தக்க சேவை என்று அதிகாரிகளும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். கடைசியாக, இந்தியாவில் 1917-இல் டில்லியில் நடந்த யுத்த மகாநாட்டில் படைக்கு ஆள் திரட்டவேண்டும் என்று லார்டு செம்ஸ்போர்டு வேண்டுகோள் விடுத்தபோது, என் உடல் நிலை சரியாக இல்லை என்பதையும் பொருட்படுத்தாமல், கேடாவில் படைக்கு ஆள் சேர்க்கப் புறப்பட்டேன். இதில் சேரப் பலர் முன் வந்துகொண்டிருந்த சமயத்தில் யுத்தம் நின்றுவிட்டது. மேற்கொண்டும் படைக்கு ஆள் தேவையில்லை என்ற அறிவிப்பும் வந்துவிட்டது. இவ்விதம் சேவை செய்வதற்கெல்லாம் நான் முயற்சி செய்ததற்குக் காரணம், எனக்கு இருந்த ஒரு நம்பிக்கையேயாகும். இத்தகைய சேவைகளின் மூலம் சாம்ராஜ்யத்தில் என் தேச மக்களுக்குச் சமத்துவமான அந்தஸ்து கிடைக்கும் என்பதே எனது அந்த நம்பிக்கை.

ஆனால், ரௌலட் சட்டத்தின் மூலம் எனக்கு முதல் அதிர்ச்சி ஏற்பட்டது. உண்மையான சுதந்திரத்தையெல்லாம் மக்களிடமிருந்து பறித்துவிடும் எண்ணத்திலிருந்து எழுந்ததே அந்தச் சட்டம். அதை எதிர்த்துப் பலமானதோர் கிளர்ச்சியை நடத்துவது என் கடமை என்று உணர்ந்தேன். பின்னர்த் தொடர்ந்து பாஞ்சாலக் கொடுமைகள் வந்தன. ஜல்லியன் வாலாபாக் படுகொலை, தரையில் உடல் படிந்து ஊர்ந்து செல்ல வேண்டும் என்று விதிக்கப்பட்ட உத்தரவுகள், மக்களை அவமானப்படுத்தும் காரியங்கள் யாவும் நடந்தன. துருக்கியைப் பற்றியும், முஸ்லிம்களின் புண்ணிய ஸ்தலங்களைப்பற்றியும் இந்திய முஸ்லிம்களுக்குப் பிரதம மந்திரி அளித்த வாக்குறுதியும் நிறைவேற்றப்படப் போவதில்லை என்பதையும் கண்டுகொண்டேன். நண்பர்கள் வற்புறுத்தியும், எவ்வளவோ எச்சரிக்கை செய்திருந்தும், மான்டேகு - செம்ஸ்போர்டு சீர்திருத்தங்களுக்கு ஒத்துழைப்பளித்து வேலை செய்யவேண்டும் என்று 1919-இல் அமிர்தசரஸ் காங்கிரஸில் போராடினேன். இந்திய முஸ்லிம்களுக்குப் பிரதம மந்திரி அளித்த வாக்குறுதிகள் நிறைவேற்றப்படும், பாஞ்சால சம்பவங்களினால் மக்கள் மனத்துள் பதிந்துவிட்ட புண் ஆற்றப்படும், அரசியல் சீர்திருத்தம் போதுமானதல்லாததாகவும், திருப்தியற்றதாகவும் இருந்தபோதிலும் இந்தியாவின் வாழ்க்கையில் நம்பிக்கை தரும் புதிய சகாப்தம் ஆரம்பமாகும் என்ற நம்பிக்கையிலேயே அவ்விதம் செய்தேன்.

ஆனல், அந்த நம்பிக்கைகள் எல்லாம் தகர்ந்து போய் விட்டன. கிலாபத்துக்குத் தந்த உறுதி நிறைவேற்றப்பட வில்லை. பாஞ்சாலத்தில் நடந்த கொடுமைகளைக் குறித்துப் பூசி மெழுகிவிட்டார்கள். குற்றம் செய்தவர்கள் தண்டிக்கப் படாமல் இருந்ததுடன் உத்தியோகங்களிலும் தொடர்ந்து வந்தனர். மற்றும் சிலர் இந்தியாவின் வரிப் பணத்திலிருந்து பென்ஷனும் வாங்கிக்கொண்டிருந்தனர். சிலர் சம்மானங்களை யும் பெற்றனர். சீர்திருத்தங்கள் மனமாற்றத்தை உண்டாக் காததோடு, இந்தியாவின் செல்வத்தை மேலும் சுரண்டிக் கொண்டு போவதற்கும், இந்தியரின் அடிமை வாழ்வு நீடித்துக் கொண்டு போவதற்கும் ஒரு முறையாக அவை கொண்டு வரப் பட்டிருக்கின்றன என்பதைக் கண்டேன்.

—'எங் இந்தியா' - 23-3 1922.

# 4
# ஒரு கேள்வி

**கேள்வி:** *ஆப்பிரிக்காவிலும் இங்கும் ராணுவ சேவைக்கு நீங்கள் ஆட்களைத் திரட்டியிருக்கிறீர்கள். அப்படிச் செய்ததால் நீங்கள் யுத்தத்திற்கு உதவி செய்தவர்களாகிறீர்கள் அல்லவா? உங்களுடைய அகிம்சா தருமத்திற்கு இது எந்த விதத்தில் பொருத்தமானதாகிறது?*

**பதில்:** தென்னப்பிரிக்காவிலும் இங்கிலாந்திலும் வைத்தியப் படைக்கு ஆள் திரட்டினேன். இந்தியாவில் ராணுவ சேவைக்கு ஆள் சேர்த்தேன். அவ்விதம் செய்ததில் நான் யுத்த லட்சி யத்திற்கு உதவி செய்யவில்லை. பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் என்ற ஸ்தாபனத்தினல் முடிவான நன்மை ஏற்படும் என்று அப்போது நான் நம்பியதால் அதற்கு உதவி செய்தேன். யுத்தத்தின்மீது இன்று இருப்பது போன்றே அன்றும் எனக்கு வெறுப்புப் பலமாக இருந்தது. துப்பாக்கியை அன்று நான் தூக்கிக்கொண்டு போயிருக்க முடியாது; போயிருக்கவும் மாட்டேன். ஆனல், ஒருவரின் வாழ்க்கை நேரான கோடுபோல் அமைந்துவிடுவதில்லை. ஒன்றுக்கொன்று மாறுபட்டதான பல கடமைகளைக் கொண்டதே வாழ்க்கை. எது கடமை என்பதை ஒருவர் நிர்ணயித்துக் கொள்ளவேண்டிய அவசியம் அடிக்கடி தொடர்ந்து வருகிறது. யுத்தத்தில் நம்பிக்கை கொண்டு, கோழைத்தனத்தாலோ, பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மீது கொண்ட கோபத்தினலோ, கேவலமான நோக்கத்தி னலோ படையில் போய்ச் சேராமல் இருந்தவர்களுக்குப்

புத்திமதி கூறி அவர்களை நான் நடத்திச் செல்ல வேண்டி யிருந்தது. இதை நான் இன்றோ அல்லது அன்றோ பிரஜை என்ற முறையில் செய்யவில்லை. ஆனால், யுத்தம் என்றதற்கே எதிரான கிளர்ச்சியை நடத்தும் ஒரு சீர்திருத்தக்காரன் என்ற முறையிலேயே இதைச் செய்தேன். யுத்தத்தில் நம்பிக்கையும், பிரிட்டிஷ் அரசியலுக்கு விசுவாசமும் உள்ள வரையிலும், படையில் சேர்ந்து, அதற்கு உதவி செய்ய அவர்கள் கட மைப்பட்டுள்ளனர் என்று கூற நான் தயங்கியதில்லை. ஆயு தங்களை உபயோகிப்பது என்பதில் எனக்கு நம்பிக்கை கிடை யாது; நான் அனுசரித்துவரும் அகிம்சா தருமத்திற்கும் அது விரோதமானது. என்றாலும், இந்தியாவுக்கு எதிராகப் பிரிட்டிஷ் அரசாங்கம் செய்திருக்கும் அநீதங்களில் மகா மோசமானது ஆயுதச் சட்டம் என்று நான் கருதியதால் அந்த அவமானகர மான சட்டத்தை ரத்து செய்ய வேண்டும் என்ற கிளர்ச்சியில் கலந்துகொள்ள நான் தயங்கக்கூடாது. பதிலுக்குப் பதில் செய்துவிடுவது என்பதில் எனக்கு நம்பிக்கை இல்லை. ஆனால், நான்கு ஆண்டுகளுக்கு முன்னால் பெட்டியாவுக்கு அருகில் இருக்கும் கிராமவாசிகளுக்குத் தங்களுடைய பெண்டிரையும் உடைமைகளையும் ஆயுத பலங்கொண்டு காத்துக்கொள்ளும் படி கூற நான் தயங்கவில்லை. அவர்களுக்கு அகிம்சையைப் பற்றி எதுவுமே தெரியாததனால், தம் பெண்டிரையும் சொத் துக்களையும் ஆயுத பலங்கொண்டு காத்துக்கொள்ளத் தவறி விடுவார்களானால் கோழைகளாயிருந்த குற்றத்தைச் செய்தவர் கள் ஆவார்கள் என அவர்களுக்குக் கூறினேன். கடிதம் எழுதி யிருப்பவர், ஹிந்துக்களுக்கு நான் அண்மையில் சொன்ன இன்னும் ஒன்றையும் தெரிந்துகொள்ள வேண்டும். ஹிந்துக் களுக்கு அகிம்சையில் பூரணமான நம்பிக்கை இல்லை என்றால், அதை அனுசரித்து நடக்க அவர்களால் முடியவில்லையாயின், தங்களுடைய பெண்களைத் தூக்கிக்கொண்டு போய்விட முற்படு பவர்களை ஆயுத பலங்கொண்டு எதிர்த்து, அப்பெண்களின் மானத்தைக் காக்க வேண்டும் என்றேன். அப்படிச் செய்ய அவர்கள் தவறிவிடுவார்களாயின், தங்கள் மதத்திற்கும் மனி தத்தன்மைக்கும் எதிராகக் குற்றஞ் செய்தவர்களாவார்கள் என்று சொல்ல நான் தயங்கவும் இல்லை. நான் கூறிய இந் தப் புத்திமதிகளும், நான் இதற்கு முன்னால் செய்து வந்திருப் பவைகளும், நான் அனுசரித்துவரும் அகிம்சா தருமத்திற்கு முற்றிலும் பொருத்தமானவை என்பதுடன் அதன் நேரடியான பலனே இவை என்றும் கொள்கிறேன். அந்த மகத்தான தருமத்தைப்பற்றிச் சொல்லுவது எளிது. ஆனால், சச்சரவு

களும் குழப்பங்களும் துவேஷங்களும் மலிந்த ஓர் உலகத்திடை அதை அறிவதும், அனுசரிப்பதும் மிகக் கடினமானவை. நாளுக்கு நாள் இதை நான் மேன்மேலும் உணர்ந்து வருகிறேன். என்ருலும், இது இல்லாமல் வாழ்வது என்பது பயனற்றது என்ற உறுதிப்பாடும் நாளுக்கு நாள் பலமாக வளர்ந்து வருகிறது.

— 'எங் இந்தியா',-5—11—1925.

## 5

# யுத்தத்திற்கு எதிராக யுத்தம்

ஒருவர் எழுதுகிருர் :

"சத்தியத்தையும் அகிம்சையையும் பின்பற்றுகிறவர்கள் என்ற முறையில் யுத்தத்தைப்பற்றிய உங்கள் போக்கைக்குறித்து நீங்கள் உங்கள் சுயசரிதையின் ஓர் அத்தியாயத்தில் எழுதியிருப்பது பலருடைய எண்ணங்களைக் கிளறிவிட்டிருக்கக்கூடும். அதனுலேயே இதை நான் உங்களுக்கு எழுதுவதுபற்றி மன்னிக்க வேண்டும். திறமை வாய்ந்தவர்கள், அதைப்பற்றி உங்களுக்கு எழுதிக்கொண்டிருப்பார்கள். ஆனல், என் மனத்தில்பட்ட சிலவற்றைக் குறிப்பிட விரும்புகிறேன். கெட்ட காரியங்களை ஒருவரால் எதிர்க்க முடியாவிட்டாலும் அவைகளுடன் ஈடுபாடு எதுவுமே கூடாது என்பது சத்தியம், அகிம்சை இவற்றைப்பின் பற்றும் ஒருவருக்கு அடிப்படைத் தத்துவம் அல்லவா? சிலர் கூறுவது போல, யுத்தம் அவசியமானதோர் தீமை. ஆனல், போர் தொடுப்பதிலுள்ள அக்கிரமத்தை, யுத்தத்திற்குப் பிறகு உலகம் என்ருவது ஒரு நாள் உணர்ந்து கொள்ளும் என்ற நம்பிக்கையில் அதை ஆதரிப்பது என்பது மன்னிக்க முடியாததாகும். அம்மாதிரி நடக்கப் போவதே இல்லை. இதற்கு நேர்மாருக மனிதனின் அக்கிரமச் செயல்கள் மேலும் தீவிரமாக அதிகரித்து, வாழ்க்கையின் தெய்விகத் தன்மையிலுள்ள உணர்ச்சியே அழிந்து போகக்கூடும். நீங்கள் விவாதிப்பதைப் போன்றே அராஜகவாதியும் விவாதித்து, வருமாறு சொல்லக்கூடும் : "ஐரோப்பிய ஆக்கிரமிப்பையும் பயங்கர ஆட்சியையும் நாம் நிறுத்த முடியாது. பயங்கர ஆட்சியை, மக்கள் பலத்தைக் கொண்டு நாடு எதிர்க்க இயலாது. ஆனல், இத்தகைய முறைகளிலுள்ள அக்கிரமத்தை, இந்த முறைகளைக் கொண்டே, அவர்களுக்கு எதிராக உபயோகிப்பதன் மூலம் நாம் எடுத்துக் காட்டமுடிந்தால், தங்கள்போக்கிலிருக்கும் பிழையை அவர்கள் கண்டு கொள்வார்கள்; நாம் சுதந்திரம் அடைந்துவிடலாம்; பயங்கர ஆட்சியிலிருந்து உலகத்தையும் நாம் காப்பாற்றிவிடலாம். நம்மை ஆளுவோர் இம்சையைக் கையாண்டுவரும் வரையில், பயங்கர ஆட்சியை நாம் வெறுத்துக்கொண்டிருக்கும்போது, இந்த ஆயுதங்கள் நமக்கு வெறியை உண்டாக்காதிருக்குமாயின், அவர்கள்மீது இவற்றை உபயோகிப்பதில் தவறு என்ன? எந்த நாட்டுக்காவது, முக்கியமாக வெற்றி கண்டவர்களுக்கு இந்த மகா யுத்தம் உண்மையில் ஏதாவது நன்மையைச் செய்திருக்கிறதா? செல்வத்திலும், ஒழுக்கத்திலும், சமூகத்துறையிலும் இந்த வெற்றியின் பயனுக அவர்கள் எவ்வளவோ நஷ்டம் அடைந்திருக்கிருர்கள். அவர்களுடைய ஒழுக்கத் தரம் எல்லாம் தலை கீழாகிவிட்டன. சர்வதேச விவகாரங்களில் உண்மையையும் நேர்மையையும் மதிப்பதில்லை என்பது ஒவ்வொரு நாளும் மேன்மேலும் வெளிப்பட்டு வருகிறது. எவ்வளவுதான் 'நியாயமானதாக' இருந்தாலும், யுத்தத்தினுல்

ஏதாவது நன்மை ஏற்பட முடியுமா? சாத்துவிகமாகவோ அல்லது தீவிரமாகவோ எந்த வகையிலும் அதற்கு உடன்பட்டிருப்பதைவிடத் துன்பத்தை ஏற்றுக்கொண்டாயினும் அதை எதிர்க்கவே நாம் கடமைப்பட்டிருக்கிறோம் அல்லவா? யுத்தத்தில் தீவிரமாக ஈடுபட்டவர்களைவிட யுத்தத்தை வெறுப்போர் இந்த லட்சியத்திற்குச் சிறந்த சேவை செய்தவர்களாகிறார்கள் என்பதை நீங்கள் நம்பவில்லையா? பிரிட்டிஷ் மனப்போக்கில் நீதி உணர்வு இருப்பதாக நீங்கள் அப்பொழுது எண்ணினீர்கள். ஆகையால், நீங்கள் கூறுவது 1914-இல் உங்களுக்கு இருந்த மன நிலையைக் காட்டுவதாக இருக்கலாம். அது சரி என்று நீங்கள் இப்பொழுது கருதுகிறீர்களா? நாளைக்கு இன்னும் ஒரு யுத்தம் பிரகடனம் செய்யப்படுமானல், யுத்தத்திற்குப் பிறகு எல்லாவற்றையும் நன்றாகச் செய்துவிடலாம் என்ற நம்பிக்கையில் உங்கள் உதவியை இங்கிலாந்துக்கு அளிக்க வலிய முன் வருவீர்களா? என் கட்சியைச் சிறந்த முறையில் நான் எடுத்துக் கூறிவிடவில்லை என்பதை அறிவேன். ஆனல், நான் உங்களுக்குக் கூற விரும்புவது இன்னது என்பதை நீங்கள் தெரிந்துகொள்ள முடியும். உங்கள் பதில் கிடைத்தால் மகிழ்ச்சியடைவேன்."

இக்கடிதத்தை எழுதியிருப்பவர், தமது கட்சியைச் 'சிறந்த முறையில்' எடுத்துக் கூறிவிடவில்லை என்று சொல்லுவதை நானும் ஒப்புக்கொள்ளுகிறேன். முக்கியமாகக் கவனத்தில் கொள்வதற்கென எழுதப்பட்டிருப்பவை வாரப் பத்திரிகையில் வருகிற விஷயந்தானே என்ற காரணத்தினல், கவனம் செலுத்தாத வாசகர்கள் இருக்கிறார்கள். அத்தகைய வாசகர்களைச் சேர்ந்தவராக இருக்கிறார், இக்கடிதம் வரைந்தவர். சம்பந்தப்பட்ட அத்தியாயத்தை இவரைப் போன்ற வாசகர்கள் திரும்பப் படித்துப் பார்ப்பார்களாயின், அதிலிருந்து கீழ்க்கண்டவற்றை அவர்கள் தெரிந்துகொள்ளக் கூடும்:

1. யுத்தத்தில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது என்பதற்காக என் சேவையை அளிக்க நான் முன் வரவில்லை. ஒதுங்கி நின்றாலும் அதில் ஈடுபடாமல் இருக்க முடியாததனலேயே எனது சேவையை அளிக்க முன் வந்தேன்.

2. யுத்தத்தில் ஈடுபடுவதைத் தடுக்க எனக்கு அந்தஸ்து கிடையாது.

3. யுத்தத்தில் ஈடுபடுவதன் மூலம் யுத்தத்தைத் தவிர்க்க முடியும் என்று நான் நம்பவில்லை. தீமையில் ஈடுபடுவதனல் தீமையைத் தவிர்த்து விட முடியும் என்று நான் எவ்வாறு நம்பவில்லையோ அதே போலத்தான் இதுவும். தீமையானவை அல்லது விரும்பத் தகாதவை என்று நாம் கருதும் பல காரியங்களில் உண்மையிலேயே வேறு விதி இல்லாததனல் ஈடுபட்டிருக்கிறோம். ஆனல், இதற்கும், முன்னல் சொன்னதற்குமுள்ள பேதத்தை அறிவது அவசியம்.

4. அராஜகவாதி, நன்கு யோசித்தே வலியப் போய் முன்கூட்டிய முடிவின் பேரில் பயங்கரச் செயல்களில் ஈடுபடுகிறுன். ஆகையால், அராஜகவாதியின் வாதம் பொருத்தமற்றது.

5. வெற்றி பெற்ரேர் என்று சொல்லப்படுகிறவர்களுக்குங் கூட யுத்தம் நன்மையைச் செய்வதில்லை.

6. போர் வேண்டாதார் எதிர்த்துச் சிறை வாசத்தை அனுபவித்தது, நிச்சயமாகச் சமாதான லட்சியத்திற்குச் செய்த சேவையே யாகும்.

7. நாளைக்கு இன்னுமொரு யுத்தம் பிரகடனம் செய்யப் படுமானுல், இப்பொழுதுள்ள அரசாங்கத்தைப்பற்றி எனக்கு இன்று இருக்கும் கருத்தை முன்னிட்டு, எந்த வகையிலும் அல்லது முறையிலும் அதற்கு உதவி செய்யவே மாட்டேன். ஆனல், அதற்கு நேர்மாருக, மற்றவர்களும் உதவியை நிறுத்திக்கொள்ளும்படி செய்வதற்கு, அது தோல்வியுற அகிம்சைக்கு ஒத்த வகையில் சாத்தியமானது எல்லாவற்றையும் செய்யவே நான் முயலுவேன்.

—'எங் இந்தியா' - 8—3—1928

## 6

# மீண்டும் அதைக் குறித்து

சென்ற யுத்தத்தில் நான் பங்குகொண்டதைப்பற்றி என் சுயசரிதையின் ஓர் அத்தியாயத்தில் கூறப்பட்டிருந்தது, நண்பர்களுக்கும், குறை கூறுவோருக்கும் தொடர்ந்து குழப்பத்தை உண்டாக்கி வருகிறது. இதுபற்றி வந்துள்ள இன்னும் ஒரு கடிதம் :

" உங்களுடைய சுயசரிதம் நான்காவது பகுதி 38-ஆம் அத்தியாயத்தில் 1914-1918-ஆம் ஆண்டுகளில் நடந்த யுத்தத்தில் நீங்கள் கொண்ட பங்கைக் குறித்து முதல் தடவையாகக் கூறியிருக்கிறீர்கள். சில விஷயங்கள் எனக்கு மனக்கஷ்டத்தை உண்டாக்கின. ஆனல், உங்களுக்குப் பிறர் இதைக் குறித்துக் கடிதம் எழுதுவதன் மூலமாகவாவது அடுத்த அத்தியாயத்தில் இது பற்றி முழுவதும் விவரிக்கப்படும் என்று ஆவலுடன் காத்திருந்தேன். ஓர் அளவுக்கு இது நடந்திருக்கிறது. ஆனல், நான் எதிர்பார்த்த அளவுக்கு விளக்கம் கூறப்படாத இரு விஷயங்கள் இன்னும் இருக்கின்றன.

" நீங்கள் தவறு செய்துவிட்டீர்கள் என்ற கருத்தில் நான் எழுதவில்லை. நீங்கள் கூறுவதிலுள்ள முழுப் பொருளையும் தெரிந்துகொள்ள முடியவில்லை என்ற முடிவின் பேரிலேயே உங்களுக்கு எழுதுகிறேன். நான் இருக்கும் நிலையிலேயே மற்றும் பலரும் இருக்கக்கூடும். ஆகையால், நான் அறிய ஆவல் கொண்டிருக்கும் விளக்கத்தை உங்களிடம் கேட்பது என்று துணிவு கொண்டேன்.

"முதல் விஷயம்: யுத்தத்தில் ஈடுபடும்படி உண்மையில் உங்களைத் தூண்டியது எது? "எனக்கு இருந்த மூன்று வழிகளில் ஒன்று, யுத்தத்திற்கு எதிராக என்னுடைய பகிரங்கமான எதிர்ப்பைத் தெரிவித்து, சத்தியாக்கிரக தருமத்தின்படி சாம்ராஜ்யம் அதனுடைய ராணுவக் கொள்கையை மாற்றிக்கொள்ளும் வரையில் அதைப் பகிஷ்கரித்திருக்கலாம். அல்லது மீறக்கூடிய அதனுடைய சட்டங்களைச் சாத்துவிக வழியில் மீறிச் சிறைப்பட நான் முற்பட்டிருக்கலாம்; இல்லையானால், சாம்ராஜ்யத்தின் சார்பில் போரில் ஈடுபட்டு, யுத்தத்தின் இம்சையைத் தடுப்பதற்கு வேண்டிய தகுதியையும் சக்தியையும் நான் பெற்றிருக்கலாம். இந்தச் சக்தியும் தகுதியும் எனக்கு இல்லை. ஆகவே, யுத்தத்தில் சேவை செய்வதைத்தவிர நான் செய்யக்கூடியது வேறு எதுவும் இல்லை என்று எண்ணினேன்' என்கிறீர்கள்.

"இந்த யுத்தத்தில் ஈடுபடுவதன் மூலம் யுத்தத்தின் இம்சையைத் தடுப்பதற்கு நீங்கள் எதிர்பார்த்த சக்தியும் திறமையும் யாவை?

"உங்கள் விஷயம் தனிப்பட்டது, யுத்தத்தில் ஈடுபட்டிருந்த பல நாட்டினரின் நிலைமைக்கு மாறுபட்டது என்பதை நான் காணமுடிகிறது. அவர்களைப் போல ராணுவ சேவைக்குத் திரட்டப்பட வேண்டியவர்களல்ல நீங்கள். ஆகவே, நீங்கள் சாத்துவிக எதிர்ப்புச் செய்வதற்கில்லை. உங்களுக்குப் பக்கபலமாக இருப்பதற்கு வேண்டிய அந்தஸ்து எதுவும் உங்களுக்கு இல்லாதபோது யுத்தத்திற்கு எதிராகப் பகிரங்க ஆட்சேபணை செய்வது என்பது வீணே. ஆனால், அவசியத்திற்குமேல் இவ்வாறு ஈடுபடுவதை ஒரு சிறிதாயினும் ஏன் மேற்கொண்டீர்கள்?

"மேலே காட்டியுள்ள மேற்கோளிலிருந்து யுத்தத்தின் இம்சையைத் தடுப்பதற்கு வேண்டிய சக்தியைப் பெறுவதற்காகவே நீங்கள் போரில் ஈடுபட்டதாக தெரிகிறது. ஆனால், உங்கள் செய்கையின் மூலம் உங்களுக்கும் உங்கள் நாட்டிற்கும் ஒருவித அந்தஸ்தைப் பெறலாம் என்று நீங்கள் நம்பியிருந்ததை மற்ற இடங்களில் நீங்கள் தெளிவாகக் கூறுகிறீர்கள். யுத்தத்தைத் தடுப்பதற்கு மாத்திரமல்ல இது என்ற முடிவுக்கு வர வேண்டியதாகிறது.

"இதிலிருந்து இரண்டாவது கேள்வி பிறக்கிறது: ஏதாவது ஒரு பலனை அடைவது என்பதற்காகப் போரில் கலந்துகொள்ளுவது சரியா?

"கீதையின் போதனைக்கு இது எவ்விதம் ஏற்றதாகும் என்பது எனக்குத் தெரியவில்லை. எந்தப் பலனையும் கருதி நாம் எதையுமே செய்யக்கூடாது என்று கீதை கூறுகிறது.

"பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்கு உதவுவது அல்லது உதவாமல் இருப்பது என்ற வாதத்தையே அந்த அத்தியாயம் முழுவதிலும் உபயோகித்திருக்கிறீர்கள். சாதாரணமாக அது கிளப்பப்பட்டிருப்பதால் அது தனிப்பட்ட விஷயம் என்பதை உணருகிறேன். ஆனால், அது தவிர்க்க முடியாத ஒரு கேள்விக்கு எங்களைக் கொண்டு போகிறது. யுத்தம் செய்வதற்கே யுத்தத்தில் நாங்கள் ஈடுபடுவதா, கூடாதா என்பதே அக்கேள்வி."

கலப்பான நோக்கமே போரில் ஈடுபடும்படி என்னைத் தூண்டியது என்பதில் சந்தேகம் இல்லை. இரு விஷயங்களை நான் நினைவுபடுத்திக்கொள்ள முடியும். தனிப்பட்ட முறையில் யுத்தத்தை எதிர்ப்பவனாக நான் இருந்தபோதிலும் அகிம்சையோடு கூடிய எதிர்ப்பைச் சரியானபடி செய்வதற்கான அந்

தஸ்து எனக்கு இல்லை. அகிம்சையோடு கூடிய எதிர்ப்புக்குப் பிறகு சிறிது உண்மையான பலனைப் பாராத சேவையையும் வெளிக் காட்டும் உள்ளத்து ஆர்வத்தையும் அனுசரித்தே அகிம் சையோடு கூடிய எதிர்ப்பு நிற்கும். உதாரணமாக, ஒரு காட்டு மிராண்டி மிருகபலியிடுகிறான். அன்போடு கூடிய என்னுடைய சில செய்கைகளினாலோ அல்லது மற்ற முறைகளினாலோ நான் அவனுக்கு நண்பன் என்பதை அவன் உணரும்படி செய்யாது போனால், அவன் செய்யும் மிருகபலியை எதிர்ப்பதற்கான தகுதி எனக்குக் கிடையாது. உலகத்தில் காணப்படும் பல அநீதிச் செயல்களுக்கு நான் தீர்ப்புச் சொல்லிக்கொண்டிருக்க வில்லை. நானே குறைகள் பல உள்ளவன்; சகிப்புத் தன்மை யும் தயாளமும் எனக்கே தேவைப்படுகின்றன. ஆகவே, பய னுள்ள வகையில் உலகிற்கு அறிவுறுத்துவதற்கு ஒரு சந்தர்ப் பத்தைக் கண்டுபிடிக்கும் அல்லது உண்டாக்கும் வரையில் உலகத்தின் குறைபாடுகளை நான் சகித்துக்கொள்ளுகிறேன். சாம்ராஜ்யத்தின் யுத்தங்களையும், யுத்தத்திற்கான அதன் தயாரிப்புகளையும் எதிர்ப்பதற்கு வேண்டிய சக்தியையும் நம்பிக் கையையும் போதுமான சேவையின் மூலம் நான் அடைய முடிந்தால், அகிம்சையை என் சொந்த வாழ்க்கையில் அனு சரிக்க முற்பட்டிருக்கும் எனக்கு, பொதுமக்களிடையே அது எந்த அளவுக்குச் சாத்தியம் என்பதைச் சோதிக்க முடியும் என்று கருதினேன்.

மற்றொரு நோக்கம், சாம்ராஜ்யத்து ராஜதந்திரிகளின் நல்லெண்ணத்தின் மூலம் சுயராஜ்யத்திற்குத் தகுதியாக்கிக் கொள்ளுவது என்பது. சாம்ராஜ்யத்திற்குச் சாவா, வாழ்வா என்ற வகையில் ஏற்பட்டிருக்கும் போராட்டத்தில் சேவை செய்வதனாலன்றி இவ்விதம் என்னைத் தகுதியாக்கிக்கொள்ள முடியாது. சாம்ராஜ்யத்தினிடமும், அது இந்தியாவுக்குச் சுதந் திரப் போராட்டத்தில் விருப்பத்தோடு உதவி செய்யும் என்றும் 1914-இல் நான் நம்பிக்கை வைத்திருந்த அந்த மனோபாவத்தைப்பற்றியே நான் எழுதுகிறேன் என்பதைக் கவனிக்க வேண்டும். இன்று இருப்பதைப் போல அகிம்சை யோடு கூடிய புரட்சியாளனாக அன்று இருந்திருப்பேனாயின், நான் நிச்சயமாக உதவி செய்திருக்கவே மாட்டேன். அதோடு அகிம்சையினால் சாத்தியமான எல்லா முயற்சிகளினாலும் அதனுடைய நோக்கம் ஈடேறாமல் செய்ய முற்பட்டிருப்பேன்.

யுத்தத்தினிடம் எனக்கு இருக்கும் எதிர்ப்பும் நம்பிக்கை யின்மையும் இன்று இருந்ததைப் போன்றே அன்றும் எனக்குப்

பலமாகத்தான் இருந்தன. நாம் செய்யலாகாது என்று நினைக்கும் பல காரியங்களை இந்த உலகத்தில் நாம் செய்து விடுகிறோம் என்பதையும் நாம் ஒப்புக்கொள்ள வேண்டும். யுத்தத்தை நான் எவ்விதம் ஆட்சேபிக்கிறேனோ அது போலவே படைப்பில் தாழ்ந்தவைகளாயிருக்கும் உயிர்களைக் கொல்லுவதையும் எதிர்க்கிறேன். என்றாலும், இத்தகைய சகோதரர் போன்ற மக்களை வதை செய்யாதிருக்கும் ஆற்றலை என்றாவது ஒரு நாளைக்கு நான் அடைவேன் என்ற நம்பிக்கையில் அத்தகைய உயிர்களைத் தொடர்ந்து கொன்று தான் வருகிறேன். அப்படியிருந்தும் அகிம்சையைப் பின்பற்று கிறவன் என்ற பட்டத்திற்கு நான் உரியவனாக இருக்க வேண்டுமாயின், என்னுடைய முயற்சி யோக்கியமானதாகவும், விடாமுயற்சியுடையதாகவும், இடைவிடாததாகவும் இருக்க வேண்டும். மோட்சம், அதாவது, உடலோடு மீண்டும் பிறவி எடுக்காத நிலை, பூரணத்துவம் அடைந்த ஆணும் பெண்ணும் முற்றிலும் அகிம்சையோடு இருக்கவேண்டும் என்பதை அடிப் படையாகக் கொண்டது. மற்ற உடைமைகளைப் போலவே உடலுடைமையும் என்னதான் சிறியதாயிருப்பினும், ஏதாவது இம்சை நேருவதற்கு வாய்ப்பை உண்டாக்கிவிடுகிறது. ஒன்றுக் கொன்று முரணாகத் தோன்றுபவைகளில் சரியானது இன்ன தென்பதைப் பகுத்துணர்ந்து செய்யும் கடமையின் வழி எளிதன்று என்பதே உண்மை.

கடைசியாக, கீதையிலிருந்து எடுக்கப்பட்டிருக்கும் செய்யுள் இருவித அர்த்தங்களையுடையது. *அதில் ஒன்று, நம் செய்கைகளுக்குச் சுயநல நோக்கம் இருக்கக்கூடாது என்பது. சுயராஜ்யத்தை அடைய வேண்டும் என்பது சுயநலக் காரியம் அன்று. இரண்டாவதாக, செயலினால் ஏற்படும் பலன் களில் பற்றுதல் கொள்ளாமல் இருப்பது அவற்றைப்பற்றி எதுவும் தெரியாமல் இருப்பதோ, அவற்றைக் கவனிக்காமல் இருப்பதோ அல்லது அவற்றை ஏற்காமல் விடுவதோ அல்ல. பற்றின்மை என்பது, நினைத்த பலன் ஏற்படாது என்ற காரணத்தினால் காரியத்தையே கைவிட்டுவிடுவது ஆகாது. அதற்கு மாறாக, எண்ணிய பலனை நிச்சயம் எய்துவோம் என்ற அசைக்க முடியாத நம்பிக்கைக்கு ருசுவே அது.

—'எங் இந்தியா'—15-3-1928.

---

* பகவத் கீதை, அத்தியாயம் 2, செய்யுள் 47 பார்க்க.

# 7

# மீண்டும் ஒரு விளக்கம்

பூஜ்ய பி. டே. லிக்ட் என்பவர் 'எவலூஷன்' என்ற ஒரு பிரெஞ்சுப் பத்திரிகையில் எனக்கு ஒரு நீண்ட பகிரங்கக் கடிதத்தை எழுதியிருக்கிருர். அதன் மொழிபெயர்ப்புப் பிரதி ஒன்றையும் எனக்கு அனுப்பியிருக்கிருர். போயர் யுத்தத்திலும், பிறகு 1914-இல் மகாயுத்தத்திலும் நான் பங்கு கொண்டதை அதில் அவர் பலமாகக் கண்டித்திருக்கின்ருர். அகிம்சையைப் பொறுத்து என் நடத்தைக்குச் சமாதானம் கூறுமாறும் கேட்கிருர். மற்ற நண்பர்களும் அதே கேள்வியையே என்னைக் கேட்கின்றனர். இதே பத்திரிகையில் பல சமயங்களில் என்னுடைய விளக்கத்தைக் கூற முயன்றிருக்கிறேன்.

அகிம்சைத் தராசு ஒன்றிலேயே வைத்து நிறுத்துப் பார்ப்பதாயிருந்தால் என் நடத்தைக்கான சமாதானம் எதுவுமே இல்லை. அழிக்கும் ஆயுதங்களை உபயோகிக்கிறவர்களுக்கும், செஞ்சிலுவை வேலை செய்கிறவர்களுக்கும் எந்த வித்தியாசமும் இருப்பதாக நான் எண்ணவில்லை. இருவரும் யுத்தத்தில் ஈடுபட்டு, அதன் லட்சியத்தையே வளர்க்கின்றனர். ஆகவே, இருவரும் யுத்தக்கொடுமை என்ற குற்றத்தைச் செய்தவர்களே யாவர். இடையில் இத்தனை வருடங்களாக நானே மனத்துள் சோதனை செய்து வந்திருக்கிறேன். ஆனல், நான் அப்பொழுது இருந்த சந்தர்ப்பத்தில் போயர் போரிலும், ஐரோப்பிய மகா யுத்தத்திலும், 1906-இல் நேட்டாலில் நடந்ததான ஜூலு 'கலகம்' என்று சொல்லப்பட்ட கிளர்ச்சியிலுங்கூட நான் அம்முறையை மேற்கொள்ள வேண்டியது கடமையாயிற்று என்றே உணருகிறேன்.

எண்ணற்ற சக்திகள் வாழ்க்கையை ஆட்டிவைக்கின்றன. பொதுவான ஒரு கொள்கையை அனுசரிப்பதற்குக் குறிப்பிட்ட ஒரு சமயத்தில் சிந்தித்தாக வேண்டிய அவசியம் இருந்தாலும், தம்முடைய செய்கையைப் பொதுவானதொரு கொள்கையைக் கொண்டே ஒருவர் நிர்ணயித்துக்கொள்ளுவதாக இருப்பின், வாழ்க்கை எவ்வளவோ அமைதியாக ஊர்ந்து செல்லும். ஆனல், அப்படி எளிதாக நிர்ணயித்துக்கொண்டு விடக்கூடிய செய்கை ஒன்றுகூட இருப்பதாக எனக்கு நினைவில்லை.

யுத்தத்தைத் திடமாக வெறுப்பவன் நான். ஆகையால், நாசம் செய்யும் ஆயுதங்களில் பயிற்சி பெறுவதற்குச் சந்தர்ப்பம் இருந்தும் அத்தகைய பயிற்சிக்கு நான் என்னை என்றும் ஆளாக்கிக்கொண்டதில்லை. மனித உயிரை நேரிடையாக அழிப்பதிலிருந்து நான் தப்பித்துக்கொண்டது இவ்விதந்தான். பலாத்காரத்தை அடிப்படையாகக் கொண்ட ஓர் ஆட்சி முறையின்கீழ் நாம் வாழ்ந்து வருகிறோம். எனக்காக அது உண்டாக்கியிருக்கும் பல வசதிகள், சலுகைகளில் நான் வலியப் பங்கு கொள்ளுகிறேன். இவ்விதம் ஒரு நிலை ஏற்பட்டிருப்பதால், அந்த அரசாங்கத்துடன் நான் ஒத்துழையாமை செய்து, அந்த ஆட்சி அளிக்கும் சலுகைகளை என் சக்திக்கு எட்டிய வரையில் நான் துறந்துவிட்டாலொழிய, அந்த அரசாங்கம் போரில் ஈடுபட்டிருக்கும்போது என்னால் ஆன வரையில் அதற்கு உதவி செய்வதே எனது கடமையாகிறது.

ஓர் உதாரணத்தை எடுத்துக்கொள்ளுவோம். நான் ஒரு ஸ்தாபனத்தின் உறுப்பினன். அதற்குச் சில ஏக்கர் நிலமும் இருக்கிறது. அந்த நிலத்திலுள்ள பயிர்கள் குரங்குகளினால் அழிக்கப்பட்டுவிடும் தறுவாயில் இருக்கின்றன. நானோ எல்லா உயிர்களுமே தெய்விகமானவை என்று நம்புகிறவன். ஆகவே, குரங்குகளுக்கு எவ்விதமான துன்பத்தை உண்டாக்குவதும் அகிம்சா தருமத்திற்கு விரோதமான காரியம் என்று கருதுகிறேன். ஆனால், பயிர்களைப் பாதுகாப்பதற்காக அக் குரங்குகளைத் தாக்கும்படி தூண்டுவதற்கும் உத்தரவிடுவதற்கும் நான் தயங்கவில்லை. இத்தீமையைச் செய்யாமலிருக்கவே நான் விரும்புவேன். அந்த ஸ்தாபனத்தைக் கலைப்பதனாலோ அல்லது அதிலிருந்து வெளியேறிவிடுவதனாலோதான் நான் அத்தீமையைத் தவிர்த்துக்கொள்ள முடியும். நான் அப்படிச் செய்யவில்லை. ஏனெனில், விவசாயமே இல்லாத, அதன்மூலம் சில உயிர்களுக்குச் சேதம் இராத ஒரு சமூகத்தைக் காண முடியும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. ஆகையால், பயந்து கொண்டும் நடுங்கிக்கொண்டும், அடக்கத்துடனும், பிராயச்சித்தம் செய்துகொள்ளும் எண்ணத்துடனும், இதைத் தவிர்ப்பதற்கு என்றாவது ஒரு நாளைக்கு வழி ஏற்படும் என்ற நம்பிக்கையுடனும் குரங்குகளுக்கு இழைக்கப்படும் துன்பத்தில் நானும் சம்பந்தப்படுகிறேன்.

அது போலவே மூன்று யுத்தச் செய்கைகளில் நான் ஈடுபட்டேன். நான் எந்தச் சமூகத்தைச் சேர்ந்தவனோ அதிலிருந்து என்னுடைய தொடர்பை நான் அறுத்துக்கொண்டு

விட முடியாது. அது என்மட்டில் பைத்தியக்காரத்தன மாகும். அந்த மூன்று சமயங்களிலும் பிரிட்டிஷ் அரசாங்கத் துடன் ஒத்துழைப்பதில்லை என்ற எண்ணமே நான் கொண் டிருக்கவில்லை. அந்த அரசாங்கம் சம்பந்தமாக என்னுடைய இன்றைய நிலைமை முற்றிலும் மாறுபட்டது. ஆகவே, அத னுடைய யுத்தங்களில் இனி நான் வலியச் சென்று ஈடுபட மாட்டேன். அதோடு நான் ஆயுதம் ஏந்தும்படி கட்டாயப் படுத்தப்படுவேனுயின் அல்லது அதனுடைய ராணுவ நடவடிக் கைகளில் பங்குகொள்ளும்படி வற்புறுத்தப்பட்டால், அதைச் செய்ய மறுத்துச் சிறைப்படுவதோடு தூக்குமேடை ஏறும் அபாயத்தை வரவேற்கவும் தயாராயிருப்பேன்.

ஆனல், அதுவும் இந்தப் புதிரைத் தீர்த்துவிடுவதாயில்லை. தேசீய சர்க்கார், ஆட்சியில் இருக்கிறது என்று வைத்துக் கொள்ளுவோம். எந்த யுத்தத்திலும் நான் நேரடியான பங்கு கொள்ளாவிட்டாலும், ராணுவப் பயிற்சியை மேற்கொள்ள விரும்புகிறவர்களுக்கு ராணுவப் பயிற்சி அளிப்பதை ஆதரித்து நான் வோட்டுப் போட வேண்டிய கடமை தோன்றும் சந்தர்ப் பங்கள் வரக்கூடும் என்பதை நான் ஊகிக்க முடிகிறது. ஏனெனில், தேசீய சர்க்காரைச் சேர்ந்தவர்கள் எல்லோருமே என்னைப் போல அகிம்சையில் நம்பிக்கை கொண்டுவிடவில்லை என்பதை நான் அறிவேன். ஒருவரையோ அல்லது ஒரு சமூகத் தையோ வற்புறுத்தி அகிம்சையை அனுசரிப்பவர்களாக்கி விடுவது சாத்தியம் அன்று.

அகிம்சை, மிகவும் மர்மமான முறையில் வேலை செய்கிறது. ஒருவருடைய செய்கையை அகிம்சை வகையில் எப்பொ முதுமே அலசிப் பார்ப்பதற்கு முடியாது. ஒருவருடைய செய்கை, உயர்ந்த கருத்தில் அகிம்சையை முற்றிலும் அனுசரித்ததாக இருக்கலாம். ஆனல், அவருடைய செய்கை இம்சையுடைய தாகத் தோற்றம் அளிக்கவும் கூடும். ஆனல், அச்செய்கை முற்றி லும் அகிம்சையானது என்பது பின்னல் தெரிந்துபோகும். இதில் என் நடத்தையைப்பற்றி நான் சொல்லிக்கொள்ளக் கூடியதெல்லாம் ஒன்றுதான். கூறப்பட்டிருக்கும் அச்சம்பவங் களில் நான் செய்ததெல்லாம் அகிம்சையின் நன்மையை முன் னிட்டுத் தூண்டப்பட்டதே யாகும். இதில் தேசீய அல்லது இழிவான நோக்கம் எதுவுமே இல்லை. வேறு சில நன்மை களைத் தியாகம் செய்துவிட்டுத் தேசீய அல்லது மற்ற நன்மை களை அடைவது என்பதில் எனக்கு நம்பிக்கையே கிடையாது.

இதற்கும் மேற்கொண்டு என்னால் விவாதத்தைத் தொடங்குவதற்கில்லை. மொழி எவ்வளவுதான் சிறந்ததாயினும், ஒருவருடைய எண்ணத்தை முழுவதுமே எடுத்துக் காட்டுவதற்கு அது மிக எளிய சாதனமாகும். அகிம்சை என்மட்டில் வெறும் தத்துவக் கோட்பாடு மாத்திரம் அன்று. அது என் வாழ்க்கையின் முறையும் மூச்சுமாகும். சில சமயங்களில் அறிந்தும், அடிக்கடி அறியாமலும் நான் தவறிவிடுகிறேன் என்பதை நான் அறிவேன். இது உள்ளத்தைப் பொறுத்த விஷயமேயல்லாமல் அறிவைப் பொறுத்தது அல்ல. இடையருது கடவுளுக்கு ஏங்கி இருப்பதாலும், முழு அடக்கம், நல்ல துறவு, தன்னையே தியாகம் செய்துவிடத் தயாராக இருப்பது இவற்றினாலுமே உண்மையான வழி புலனாகிறது. இதைப் பழக்கம் செய்துகொள்ளுவதற்கு உயர்வான அஞ்சாமையும் தீரமும் தேவை. எனக்குக் குறைபாடுகள் உண்டென்பதை உணர்ந்து வருந்துகிறேன்.

ஆனால், என்னுள் இருக்கும் ஒளி தெளிவாகவும் அசையாமலும் இருந்து வருகிறது. சத்தியத்தினாலும் அகிம்சையினாலுமன்றி நாம் உய்வதற்கு வேறு மார்க்கமே இல்லை. யுத்தம் தவறானது, அது தீராததோர் தீமை என்பதை அறிவேன். அது ஒழிந்தே யாகவேண்டும் என்பதும் எனக்குத் தெரியும். ரத்தத்தைச் சிந்தியோ அல்லது மோசடியாகவோ பெற்ற சுதந்திரம் சுதந்திரமே அன்று என நான் உறுதியாக நம்புகிறேன். நான் செய்ததாக என்மீது சாட்டப்படும் எல்லாக் காரியங்களுக்கும் முற்றிலும் சமாதானம் கூறமுடியாமற் போகாதென்பதல்ல. என்னுடைய செய்கையினால் அகிம்சையை நான் காட்டிக் கொடுத்துவிட்டேன் என்றோ அல்லது வேறு எந்த வகையிலோ, முறையிலோ பலாத்காரத்திற்கு ஆதரவாக நான் இருந்தேன் என்றோ சொல்லிவிட முடியாது. பலாத்காரமன்று, பொய்மையன்று நமது வாழ்வின் தருமம்; அது அகிம்சையும் சத்தியமுமேயாகும்.

—'எங் இந்தியா' - 13—9—1928.

# 8

# டால்ஸ்டாயின் நண்பருக்குப் பதில்

'யுத்தத்தில் என்னுடைய போக்கு' என்ற தலைப்பில் 1928 செப்டம்பர் 13-ஆம் தேதி 'எங் இந்தியா'வில் நான் எழுதிய கட்டுரை அதிகமான கடிதப் பரிவர்த்தனைக்கு ஏதுவாகிவிட்டது. 'யுத்தத்தை எதிர்க்கும் யுத்த'த்தில் அக்கறையுள்ள ஐரோப்பியப் பத்திரிகைகளிலும் அதைக் குறித்து

எழுதப்பட்டிருக்கிறது. என் பெயருக்கு வந்திருக்கும் கடிதங்களில் டால்ஸ்டாயின் நண்பரும் அவரைப் பின்பற்றுபவருமான வி. ஷெர்காப் எழுதியிருப்பதும் ஒன்று. சமாதானத்தை நேசிப்பவர்களின் மதிப்பிற்குரியவரான ஒருவரிடமிருந்து அது வந்திருப்பதால் வாசகர்களும் அதைத் தெரிந்துகொள்ள விரும்புவார்கள். அக்கடிதம் இதுதான்:

"கடவுளுக்காகவும் மனிதருக்காகவும் பக்தியோடு தாங்கள் செய்துவரும் சேவைகள் மேற்கொண்டும் வெற்றி அடையவேண்டும் என்று தம் நல்லாசியையும் வாழ்த்துக்களையும் உங்களுடைய ருஷிய நண்பர்கள் தெரிவித்துக் கொள்ளுகிறார்கள். உங்களுடைய வாழ்க்கை, உங்களுடைய மனத்தின் போக்கு, உங்களுடைய காரியங்கள் ஆகியவைகளை உற்சாகம் கூடிய அக்கறையுடன் நாங்கள் கவனித்துக்கொண்டு வருகிறோம். நீங்கள் அடையும் ஒவ்வொரு வெற்றியையும் கண்டு ஆனந்தமடைகிறோம். உங்கள் நாட்டில் நீங்கள் அடையும் வெற்றிகளெல்லாம் நாங்கள் அடையும் வெற்றியென்றே உணர்கிறோம். ஏனெனில், வேறு வகையான சந்தர்ப்பத்திலேயாயினும் நாம் அதே லட்சியத்திற்காகவே பாடுபட்டு வருகிறோம். நீங்களாகவும், உதாரணத்தின் மூலமாகவும், பலனுள்ள சமூக சேவைகளினாலும் எங்களுக்கு அளித்திருப்பவை, அளித்து வருபவை இவற்றிற்காக நாங்கள் மிகவும் நன்றியறிதலுள்ளவர்களாகிறோம். உங்களுடன் மிகுந்த ஆனந்தம் தரும் ஆழ்ந்த ஆத்மிக ஐக்கியம் கொண்டிருப்பதாகவும் நாங்கள் உணர்கிறோம்.

"ஆனால், இந்த ஐக்கியம் எவ்வளவுக்கு உண்மையானதாகவும் ஆழ்ந்ததாகவும் இருக்கிறதோ அவ்வளவுக்குச் சிறு மாறுதலும், நமக்கிடையே அபிப்பிராயபேதமும் ஏற்படுவதால் மிகக் கவலைப்பட வேண்டி நேருகிறது. நம்மிடையே ஏற்பட்டிருக்கும் அத்தகைய அபிப்பிராய பேதம் ஒன்றினாலேயே உங்களுக்கு இக்கடிதத்தை எழுத வேண்டியதாயிற்று.

"இவ்வாண்டு செப்டம்பர் 13-ஆம் தேதி 'எங் இந்தியா'வில், 'யுத்தத்தில் என்னுடைய போக்கு' என்ற தலைப்பில் நீங்கள் வெளியிட்டிருக்கும் கட்டுரை, உங்களைப் போற்றுவோரும் நண்பர்களுமான பலருக்கு மனவருத்தத்தை உண்டாக்கியிருக்கிறது. இந்த விஷயத்தில் நான் நினைப்பது இன்னதென்பதைத் தெரிவிக்க வேண்டியது அவசியம் எனக் கருதுகிறேன். என்னுடைய சொற்கள் எந்த நல்லெண்ணத்தின் பேரில் என்னிடமிருந்து வெளிவருகின்றனவோ அதே நல்லெண்ண உணர்ச்சியின் பேரிலேயே நீங்கள் அவற்றை ஏற்றுக்கொள்வீர்கள் என நம்புகிறேன்.

"பிரிட்டிஷ் அரசாங்கம் தொடுத்த மூன்று போர்களில் நீங்கள் ஈடுபட்டதன் நியாயத்தை எடுத்துக் கூறியிருக்கிறீர்கள். என்னுடைய ஞாபகம் சரியே என்றால், சில ஆண்டுகளுக்கு முன்பு இந்த விஷயத்தைப் பற்றி நீங்கள் கூறுகையில் வேறுவிதமாகச் சொல்லியிருக்கிறீர்கள். நீங்கள் செய்தது நியாயம் என்று நீங்கள் அப்பொழுது கூறவில்லை. முந்திய செய்கை பொருத்தமற்றதாக இருந்ததை ஒப்புக்கொண்டிருக்கிறீர்கள். செய்துவிட்ட பழைய தவறுகளைத் தயங்காமல் நீங்கள் ஒப்புக்கொண்டது என் மனத்தையும் இங்குள்ள உங்களுடைய மற்ற நண்பர்களின் மனத்தையும் கவர்ந்ததுடன் எனக்கும் ஆறுதல் தந்தது என்பது என் ஞாபகம். ஆனால், இப்பொழுதோ அதற்கு நேர் மாறாகச் செய்தது சரியே என்கிறீர்கள். போருக்கு ஆதரவாகச் சாதாரணமாகச்

சொல்லப்படும் அதே வாதங்களையும் கூறுகிறீர்கள். 'எத்தனையோ எண்ணற்ற சக்திகள் வாழ்க்கையை ஆட்டி வைக்கின்றன. பொதுவானதான ஒரு கொள்கையை அனுசரிப்பதற்குக் குறிப்பிட்ட ஒரு சமயத்தில் சிந்தித்தாக வேண்டிய அவசியம் இருந்தாலும், தம்முடைய செய்கைகளைப் பொதுவானதான ஒரு கொள்கையைக் கொண்டே ஒருவர் நிர்ணயித்துக்கொள்ளுவதாக இருப்பின், வாழ்க்கை எவ்வளவோ அமைதியாக ஊர்ந்துவிடும்' என்கிறீர்கள். சந்தர்ப்பானுசாரமான விஷயங்களைப் பொறுத்த வரையில் நீங்கள் சொல்லுவது சரி. ஆனால் சில வகை காரியங்கள், அவற்றின் தன்மையினாலேயே இவ்விதம் நோக்குவதை அனுமதிக்கவில்லை. நீதிமுறையான அல்லது தெய்விகமான தருமத்தை மீறுவனவான சில செயல்கள் இருக்கின்றன. வேண்டுமென்றே மனிதனைக் கொல்லுவது இவ்வகைச் செய்கையாகும். இவ்விஷயத்தில் சந்தர்ப்பானுசாரமான எதுவும் இதில் குறுக்கிட அனுமதிக்கவும் கூடாது.

"ஒரு குறிப்பிட்ட அரசாங்கத்தினிடம் ஒருவருக்கு அனுதாபம் இருக்கிறதா, இல்லையா என்பதைக் கொண்டு இப்பிரச்னையை யாரும் தீர்க்கவும் கூடாது. ஆனால், 'தேசிய சர்க்கார் ஆட்சியில் இருக்கிறது என்று வைத்துக் கொள்ளுவோம். எந்த யுத்தத்திலும் நான் நேரடியான பங்கு கொள்ளாவிட்டாலும், ராணுவப் பயிற்சி அளிப்பதை ஆதரித்து நான் வோட்டுப் போட வேண்டியது என் கடமையாகும். அத்தகைய சந்தர்ப்பங்கள் ஏற்படக்கூடும் என்பதை நான் ஊகிக்க முடிகிறது' என்று நீங்கள் கூறுவதன் மூலம் இப்பிரச்னையைத் தீர்க்கிறீர்கள். இந்த வகையில் நீங்கள், மற்றவர்கள் இன்னுமோர் அரசாங்கத்தினிடம் அனுதாபம் காட்டுகிறார்கள் என்பதனால் யுத்த முஸ்தீப்பை ஆதரித்து அவர்கள் வோட்டுப் போடுவதும் நியாயம் என்கிறீர்கள். ஒருவர் ராணுவத்தில் சேவை செய்ய மறுத்துவிடுகிறார். ஆனால், அதே சமயத்தில் ராணுவப் பயிற்சியை ஆதரித்து வோட்டுப் போடுகிறார். இப்படிச் செய்கிறவர் மக்களை ஒரு பொறியில் அல்லவோ சிக்க வைத்துவிடுகிறார்!

"மேற்கொண்டு நீங்கள் கூறுகிறீர்கள்: 'அதன் (அரசாங்கத்தின்) உறுப்பினர்கள் எல்லாரும் அகிம்சையில் நம்பிக்கையுள்ளவர்கள் அல்ல. ஒருவரையோ அல்லது ஒரு சமூகத்தையோ வற்புறுத்தலினால் அகிம்சையைப் பின்பற்றும்படி செய்வது சாத்தியமல்ல.' ஜேப்படிக்காரர்களுக்குப் பயிற்சி அளிப்பது என்பதை எதிர்த்து நான் வோட்டுப் போடுவது ஜேப்படிக்காரர்களுக்கு நான் அகிம்சை செய்வதாகாது. அது போலவே, ராணுவப் பயிற்சி அளிப்பதை ஆதரித்து நான் வோட்டுப் போடாமல் இருந்துவிடுவதால் எதையும் செய்யும்படி நான் யாரையும் பலவந்தப்படுத்துவதாகாது.

"விளைச்சலைக் குரங்குகள் தின்றுவிடுவதைப்பற்றிய ஓர் உதாரணத்தை நீங்கள் கூறுகிறீர்கள். ஆனால், விஷயத்தை மனிதனிலிருந்து குரங்குக்கு மாற்றுவதன் மூலம் நீங்கள் அதைத் தெளிவற்றதாக்கிவிடுகிறீர்கள். உங்கள் விளைச்சலை மிருகங்களுக்குப் பதிலாக மனிதர்கள் அழிக்கிறார்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது, மனிதர்களை அழிப்பதைவிட விளைச்சலைத் தியாகம் செய்துவிடுவதே கடமை என்று கொள்ளமாட்டீர்களா?

"நீங்கள் எந்தச் சமூகத்தில் இருக்கிறீர்களோ அதிலிருந்து உங்கள் தொடர்பைத் துண்டித்துக்கொள்ளுவது பைத்தியக்காரத்தனமாகும் என்கிறீர்கள். பலாத்காரத்தை அடிப்படையாகக் கொண்ட ஓர் ஆட்சி முறையின்கீழ் இருந்துகொண்டு வரும்போது, உங்களுக்காக அது செய்திருக்கும் பல வசதி

களிலும் சலுகைகளிலும் வலியப் பங்கு கொண்டிருக்கும்போது, அந்த அரசாங்கம் போரில் ஈடுபட்டிருக்கும்போது. உங்களுடைய சக்திக்கு இயன்றவரை அதற்கு உதவி செய்யக் கடமைப்பட்டிருக்கிறீர்கள் என்றும் நீங்கள் கூறுகிறீர்கள்.

"முதலாவதாக, என்னைச் சுற்றிலும் மனிதர்கள் செய்துவரும் தீய காரியங்களை அங்கீகரிக்காமல் நான் விலகி இருந்துவிடுவது, நான் எந்தச் சமூகத்தில் இருக்கிறேனே அதன் தொடர்பை நான் துண்டித்துக்கொள்ளுவதாகாது. ஆனல், அதற்கு நேர்மாறானதைச் செய்வதேயாகும். இந்தத் தொடர்பை, சாத்தியமான சிறந்த வகையில் சமூகத்திற்குச் சேவை செய்வதற்கு உபயோகித்துக்கொள்ளுபவனுவேன்.

"இரண்டாவதாக, நான் வாழ்ந்து வருகிறபடி வாழ்ந்து அரசாங்கம் போருக்குப் போவதற்கு உதவி செய்ய வேண்டியது என் கடமையாகிறது என்றல், என்னவானாலும் சரி என்று நான் இப்பொழுது வாழ்கிறபடி வாழ்வதை நிறுத்திவிட வேண்டும். இப்படிச் செய்வதனல் என் உயிரையே தியாகம் செய்துவிட நேர்ந்தாலும், தங்கள் சகோதரர்களைப் படுகொலை செய்கிறவர்களுக்கு உதவி செய்ய மாத்திரம் கூடாது. மேலும், ஓர் அரசாங்கம் அளிக்கும் சில வசதிகளை—அகிம்சையில்லாமல் கிடைக்கக்கூடியவைகளை—நாம் பயன்படுத்திக்கொள்ளுவது சாத்தியமே. அதே சமயத்தில் அந்த அரசாங்கம் செய்யும் தீய காரியங்களை ஆதரிக்காமல் இருப்பதும் சாத்தியம்.

"இம்சைக்கும் கொல்லுவதற்கும் இடையே உள்ள பேதத்தை நீங்கள் போதிய அளவு கண்டிப்பாக வகுத்துக்கொள்ளாததனலேயே இந்தத் தவருன அபிப்பிராயம் ஏற்படுகிறது. கட்டாயம் இம்சைதான் செய்யப்படுகிறதா என்பதை ஆழ்ந்து கவனித்தாலன்றி, தெளிவுபடுத்திக்கொள்ள முடியாத சில விஷயங்கள் எழுகின்றன. ஆனல், யுத்தத்தைப் பொறுத்தவரையில், மனிதக் கொலையே அது என்பதில் எந்த விதமான சந்தேகமும் இருப்பதற்கில்லை. இதில் நம் இருவர் கருத்தும் ஒருமித்துப் போகின்றன.

"அன்பும், மிக்க மதிப்புள்ள நண்பரவர்களே! நான் தெரிவித்திருக்கும் கருத்துக்களின் நியாயத்தை ஒப்புக்கொள்ளுவீர்கள் என்றே நம்புகிறோம். எங்களுடைய சந்தேகங்களைப் போக்க விளக்கம் தருவீர்கள் என்றும் எதிர்பார்க்கிறோம். உங்கள் கட்டுரையில் கண்ட சில பகுதிகள், உங்களுடைய உண்மையான சிறந்த நண்பர்களுக்குச் சந்தேகங்களை உண்டாக்கியதால் இதை எழுதவேண்டியதாயிற்று. இன்றேல் எழுதியிருக்க மாட்டேன் என்பதை நீங்கள் நம்புங்கள்.

"முடிவாக, உங்களிடம் எனக்கு இருக்கும் ஆழ்ந்த மதிப்பை மீண்டும் தெரிவித்துக்கொள்ளுவதுடன், உங்களுக்கும் உங்களுடைய வேலைகளுக்கும் என் அன்பு நிறைந்த வாழ்த்துக்களையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்."

எம். ஷெர்காபின் கடிதத்தை நான் வெறுக்கவில்லை என்பது மாத்திரமல்ல, அதில் அடங்கியிருக்கும் சிறந்த அன்பிற்காகவும் அதன் பளிங்குபோன்ற உண்மைக்காகவும் நான் அதை வரவேற்கிறேன். இதுபற்றி நான் உறுதி கூறத் தேவையில்லை.

கடிதத்தில் எழுதப்பட்டிருக்கும் விஷயங்களுக்கு விவரமான பதில் அளிப்பதற்கான உத்தேசம் எனக்கு இல்லை.

என் மட்டில் இவ்விஷயம் ஓர் அளவுக்கு மேல் தருக்கரீதியில் ஆராய்வதற்கான வழி இல்லை. யுத்தம் கலப்பில்லாத தீமையே என்ற திடமான உறுதியைப் பற்றியது அது. போரை வெறுப்பதில் யாருக்கும் சளைத்தவனல்ல நான். ஆனல், உறுதிப்பாடு என்பது வேறு; சரியானபடி அனுசரிப்பது என்பது வேறு. யுத்தத்தை எதிர்ப்பவர் ஒருவர் தம்முடைய லட்சியத்திற்காகச் செய்யும் ஒரு காரியம், அதற்கு நேர்மாறானதைச் செய்யும் மற்றொரு யுத்த எதிர்ப்பாளரை மறுப்பதாக இருக்கலாம். என்றாலும், யுத்தத்தைக் குறித்து இருவருடைய கருத்தும் ஒன்றாகவே இருக்கக்கூடும். மனித இயல்பில் தோன்றும், நம்மைத் திகைப்புறச் செய்யும், சிக்கலான போக்குகளாலேயே இந்த மாறுபாடு உண்டாகிறது. ஆகையால், ஒரே லட்சியத்தைப் பின்பற்றுபவர்களிடையே பரஸ்பரமான சகிப்புத் தன்மை வேண்டும் என்று மாத்திரமே நான் கேட்டுக்கொள்ள முடியும்.

இப்பொழுது கடிதத்தில் காணும் சிலவற்றைக் கவனிப்போம்: பிரிட்டனின் யுத்தங்களில் கலந்துகொண்டதற்காக என் பிழையைக் குறித்து வருந்தி எழுதியதாகவோ அல்லது பேசியதாகவோ எனக்கு நினைவில்லை. பிரிட்டனின் கொள்கை இந்தியாவுக்குத் தீமையையும் மனித வர்க்கத்திற்கு ஆபத்தையும் உண்டாக்கக்கூடியது என்பதைப் பின்னல் நான் தெரிந்துகொண்டபோதிலும், பிரிட்டனுக்கு உதவி செய்ததற்காக நான் வருத்தப்படவில்லை என்றுதான் நான் சொல்லியிருக்கக் கூடும். போர்கள் என்ற வகையில் மூன்று போர்களில் பங்கெடுத்துக்கொண்டதற்காக நான் வருத்தப்பட்டிருந்தால் அது என் நினைவில் இருக்கும். நான் ஈடுபட்டதைக் குறித்து என் கருத்தை நான் மாற்றிக்கொள்ளாதிருப்பின் அதைத் திரும்பச் சொல்லியும் இருப்பேன்.

நான் செய்தது எதுவாயினும், அனுகூலம் என்ற சொல்லுக்குப் பொருள் கொள்ளும் வகையில் அனுகூலத்தைக் கருதிச் செய்யப்படவில்லை. நான் செய்ததாக விவரித்திருக்கும் ஒவ்வொரு காரியத்தையும், சமாதான லட்சியத்தை வலுப்படுத்துவதற்கு என்றே செய்தேன் என்று கொள்ளுகிறேன். அக்காரியங்கள் உண்மையில் சமாதான லட்சியத்தைப் பலப்படுத்தின என்பது அர்த்தமல்ல. சமாதானமே என் நோக்கம் என்ற உண்மையை மாத்திரமே சொல்லுகிறேன்.

என்றாலும், ஒன்று சாத்தியமாக இருக்கலாம். தனக்கு அக்கம்பக்கத்தில் இருக்கிறவர்கள் எதைப் பார்க்க முடிகிறதோ

அதையே கண்ணிழந்த ஒருவரால் காண இயலாது. அதே போல, என் பிழையை நான் கண்டுகொள்ள முடியாதபடி அன்று பலவீனனுக இருந்திருக்கலாம். இன்னும் பல வீனனுகவே இருக்கலாம். நம்மை நாமே ஏமாற்றிக்கொள்ளுவ தைத்தான் நாம் தெரிந்துகொண்டு இருக்கிறோம் என்பதை ஒவ் வொரு நாளும் நான் கவனித்து வருகிறேன்.

ஆயினும், என்னை நானே ஏமாற்றிக்கொள்ளுகிறேன் என் பதை இப்போதைக்கு நான் அறியவில்லை. என்னுடைய ஐரோப் பிய நண்பர்களுக்குப் புதியதான ஒரு வழியைக்கொண்டு சமா தானத்தை நான் ஆராய்ந்து வருகிறேன் என்பதை உணரு கிறேன். பலவந்தமாக ஆயுதங்கள் பறிக்கப்பட்டிருக்கும் ஒரு நாட்டைச் சேர்ந்தவன் நான். இந்நாடு பல நூற்றாண்டுகளாக அடி மைப்படுத்தியும் வைக்கப்பட்டிருக்கிறது. சமாதானத்தை நான் நோக்குவதற்கும் அவர்கள் கவனிப்பதற்கும் அவசியமாகப் பேதம் இருந்தே தீரும்.

ஓர் உதாரணத்தை எடுத்துக்கொள்வோம். எலியும் பூனை யும் உண்மையாகவே சமாதானத்தை விரும்புவதாக வைத்துக் கொள்ளுவோம். இப்பொழுது எலிகளுக்கு எதிரான யுத்தத் தைப் பூனைகள் கைவிட்டாகவேண்டும். ஆனல், எலிகள் எப் படிச் சமாதானத்தை உண்டாக்க முடியும்? எதை அவை கை விடுவது? அவைகளுடைய வோட்டாவது அவசியமாகிறதா? பூனைகளின் சபையில் ஏற்பட்ட ஒப்பந்தத்தை அனுசரித்து நடக்க மறுத்து எலிகளைத் தொடர்ந்து பூனைகள் வேட்டையாடிக் கொண்டிருக்கின்றன என்றும் வைத்துக்கொள்வோம். எலிகள் என்ன செய்யும்? அவைகளில் புத்திசாலிகளானவையும் சில இருக்கலாம். 'பூனைகள் அளவுக்குமேல் திருப்தியடைந்து வேட்டையாடுவதில் இன்பத்தைக் காணுதுபோகும் வரை நாமே விரும்பி நம்மைத் தியாகம் செய்துகொள்ளலாம்' என்று அவை சொல்லக்கூடும். தங்கள் கோட்பாட்டைப் பிரசாரம் செய் வதற்கு இவை சரியானவையாக இருக்கும். இந்த எலிகள் சமாதானத்தை விரும்புபவையே. ஆனலும், மற்ற எலிகளோ தங்களுடைய எதிரிகளிடமிருந்து ஓடி ஒளிந்துவிடாமல், ஆயுத பாணிகளாகி, எதிரியுடன் போராடுவது என்று முடிவு செய்கின் றன. இப்படிச் செய்யும் எலிகள் விஷயத்தில் சமாதானத்தை விரும்பும் எலிகள் என்ன செய்வது? புத்திசாலி எலிகள் முயற்சி வீண் என்றே இருக்கலாம். என்றாலும் நான் ஊகித்த புத்திசாலி எலிகள், தங்களுடைய சமாதானப் போக்கைக் கைவிடா மலேயே தீரத்தையும் பலத்தையும் அடைய விரும்பும் மற்ற

எலிகளுக்கு உதவி செய்யவே கடமைப்பட்டு இருக்கின்றன என்று எண்ணுகிறேன். அவை அப்படிச் செய்வது கொள்கைக் காக அன்று, உயர்ந்த நோக்கத்தின் பேரிலேயேயாகும். அதுவே எனது மனப்பாங்குமாகும். நாம் பலவீனர்களாக இருப்பதால், அறிவதற்கோ அல்லது அனுசரிப்பதற்கோ எளி தான காரியமல்ல அகிம்சை. ஒவ்வொரு நாளும் கடவுள் காட் டும் வெளிச்சத்தில் நடக்க வேண்டியவர்களாக இருக்கிறோம் நாம். ஆகையால், பிரார்த்தனை நிரம்பிய உள்ளத்துடன், பணி வுடன், இடைவிடாமல் நம் கண்ணைத் திறந்திடுமாறு கடவுளை இறைஞ்சி நாம் எல்லோரும் செயல் புரியவேண்டும். நான் சமாதானத்தை விரும்புகிறவன்; அதற்காகப் பாடுபடுகிறவன். ஆகையால், இன்று என்னுடைய வேலை, எங்கள் சுதந்திரத் தைத் திரும்பப் பெறுவதற்காகப் போராட்டத்தை நடத்தும் போது அகிம்சையில் தளராத பற்றுக் கொள்வதே. சுதந்திரத் தைத் திரும்ப அடைந்துவிடுவதில் இந்தியா வெற்றி பெற்றுவிடு மாயின் அதுவே உலக சமாதானத்திற்காகச் செய்த மிகப் பெரிய காரியமாகும். ஆகையால், ஐரோப்பியாவில் இருக்கும் யுத்த வெறுப்பாளர்கள், பிரிட்டன் தன்னுடைய போக்கில் பின் வாங்கி, இந்தியாவை நாசப்படுத்துவதை நிறுத்தும்படி கட் டாயப்படுத்தும் வகையில் ஐரோப்பாவில் பொதுஜன அபிப் பிராயத்தை வளர்ப்பதே சிறந்ததாகும்.

—'எங் இந்தியா' – 7—2—1929.

# 9

# கையாளுவதன் கஷ்டம்

பூஜ்ய பி. டே. லிக்ட் ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். அகிம்சையை என்னுடன் சேர்ந்து நாடுகிறவரின் கடிதம் என்ற வகையில் அதை வரவேற்கிறேன். கௌரவத்துடன் கவனிப்பதற் குரியது அது. நட்போடு கூடிய இத்தகைய விவாதங்கள், அகிம்சையின் சாத்தியங்களையும் குறைபாடுகளையும் தெளிவாக உணரச் செய்கின்றன.

பற்றற்றிருக்க எவ்வளவுதான் முயன்றாலும், சூழ்நிலை அல்லது வளர்ப்பினால் ஏற்படும் பலன்களை யாரும் அடியோடு போக்கிக் கொண்டுவிட முடியாது. மாறுபட்ட நிலைமைகளில் இருக்கும் இருவருடைய அகிம்சை, வெளிக்கு ஒரேவிதமான தோற்றத்தை அளிக்காது. இவ்விதம் ஒரு குழந்தை அதன் தந்தையிடம் காட்டும் அகிம்சை, தந்தை கோபம் கொள்ளும்போது, அதை உணர்ந்து விருப்பத்துடனேயே தந்தையின் இம்சைக்கு உடன்

படும் உருவில் வருகிறது. குழந்தை கோபம் கொண்டுவிடும் போது, குழந்தையின் இம்சைக்குத் தந்தை உடன்படுவது அர்த்தமில்லாதது. குழந்தையைத் தந்தை எடுத்து மார்போடு அணைத்துக்கொண்டு குழந்தையின் இம்சையை உடனேயே போக்கிவிடுவார். ஒவ்வொன்றிலும் உள்ளிருக்கும் நோக்கமே காரியமாக வெளிப்படுகிறது என்று கருதப்படுகிறது. பதிலுக்குப் பதில் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தை ஒருவர் மனத்தில் வைத்துக்கொண்டு கொள்கைக்காக இம்சைக்கு உடன்படுகிறார் என்றால், அவர் தமது எண்ணத்தை மறைப்பாராயின், அவர் நயவஞ்சகராகவும் இருக்கலாம். ஒன்றை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். இம்சையுடன் தொடர்பு கொள்ளும்போதுதான் அகிம்சை செயலாகிறது. இம்சையைச் செய்வதற்கான சந்தர்ப்பம் எதுவும் இல்லாதபோது ஒருவர் இம்சை செய்யாதிருக்கிறாரெனின், அவர் இம்சை செய்யாதிருக்கிறார் என்றுதான் ஆகுமேயல்லாது அவர் செயலற்றிருப்பதில் பெருமை எதுவுமில்லை.

குடியேற்ற நாட்டு அந்தஸ்து என்பது நடக்காததாக இருக்கும்போது கற்பனை செய்துகொள்ளும் ஒரு சம்பவத்திலிருந்து எழுப்பப்படும் விஷயங்களை விவாதிக்க வேண்டியது இல்லை. ஒன்று சொன்னால் மாத்திரமே போதும். குடியேற்ற நாட்டு அந்தஸ்தை இந்தியா அனுபவிக்கிறது என்றால் அது சமமான பங்காளியாகிவிட்டதாகிறது. இந்தியா, பிரிட்டனால் ஆளப்படுவதற்குப் பதிலாக அதனுடைய வெளிநாட்டுக் கொள்கையில் ஆதிக்கம் செலுத்துவதாகிறது.

*நேரு அறிக்கையை பொதுவாகவும் மனமாரவும் நான் ஆதரிக்கிறேன் என்பதனால், அதில் அடங்கிய ஒவ்வொரு

---

* நேரு அறிக்கை—இந்தியாவுக்கு எந்தவிதமான அரசியல் சீர்திருத்தத்தை அளிப்பது என்பதைக் குறித்து விசாரிக்க வெள்ளையரையே உறுப்பினராகக் கொண்ட சைமன் கமிஷனை பிரிட்டிஷ் சர்க்கார் 1928-இல் நியமித்தது. இக்கமிஷன் நியமனத்தை அறிவித்துப் பேசியவரும் அப்பொழுது இந்தியா மந்திரியாக இருந்தவருமான லார்டு பர்க்கென்ஹெட், தங்களுக்கு வேண்டிய அரசியலைத் தாங்களே ஒன்றுபட்டு அமைத்துக் கொள்ளும் ஆற்றல் இந்தியருக்குக் கிடையாது என்று பொருள்படும்படி அகம்பாவமாகச் சொன்னார். தாம் இந்தியா மந்திரியாக இருந்த மூன்று ஆண்டுகளில், ஓர் அரசியலுக்குத் தங்கள் யோசனையைக் கூறுமாறு இந்தியரைத் தாம் இரு முறை கேட்டுவிட்டதாகவும், பதில் ஒன்றும் வரவில்லை என்றும் சொன்னார். இந்தியர் யாவரும் ஏற்றுக் கொள்ளும் ஓர் அரசியலை இந்தியரால் தயாரிக்க முடியாதென்று பிரிட்டிஷ் சர்க்கார் விட்ட சவாலே பர்க்கென்ஹெட்டின் பேச்சு என இந்தியத் தலைவர்கள் கருதினார்கள். மற்றக் கட்சியினருடன் கலந்தாலோசித்து ஒரு சுயராஜ்ய அரசியலைத் தயாரிக்கும் அதிகாரத்தை சென்னைக் காங்கிரஸ் காரியக் கமிட்டிக்கு அளித்தது. இதற்கென 1928 மே 19-இல் பம்பாயில் நடந்த சர்வ கட்சி மகாநாடு பண்டித மோதிலால் நேருவின் தலைமையில் அரசியலைத் தயாரிக்க ஒரு கமிட்டியை நியமித்தது. இக்கமிட்டி தயாரித்த அறிக்

சொல்லேயும் நான் ஏற்றுக்கொள்ளுகிறேன் என்ருகாது. சுதந்திர இந்தியாவின் எதிர்கால ஆட்சிக்காக ஆக்க வேலைத் திட்டத்தை என்னுடைய அங்கீகாரம் ஏற்றுக்கொள்ளச் செய்யும் என்பதும் இல்லை. இந்தியா சுதந்திரம் அடைந்த பிறகு என் நாட்டு மக்களுடன் பல பிரச்னைகளைக் குறித்து நான் போராடுவதை என் அகிம்சை தடுத்துவிடாது. வெறும் பள்ளிக்கூடத் தருக்க வாதம் அகிம்சையின் இப்போதைய அபிவிருத்தியையே தடைப்படுத்தும். சுதந்திரப் போராட்டம் முடிந்த பிறகும் நான் உயிரோடு இருப்பேனுயின், என்னுடைய சொந்த நாட்டினருடனேயே நான் அகிம்சைப் போராட்டத்தை நடத்தவேண்டியிருக்கும் என்பதை நான் அறிவேன். அப்போராட்டம், இப்போது நான் நடத்தி வருவதைப் போன்றே உறுதியானதாகவும் இருக்கக்கூடும். ஆனல், பெரிய இந்தியத் தலைவர்கள் இப்பொழுது சிந்தித்து வரும் ராணுவத் திட்டங்கள் முற்றிலும்

கையே நேரு அறிக்கை என்று கூறப்பட்டு வந்தது. நாட்டின் பல கட்சிகளின் ஆதரவும் இருக்கவேண்டும் என்பதற்காக இந்த அறிக்கை, டொமினியன் அந்தஸ்தை அரசியலின் அடிப்படையாகச் சிபாரிசு செய்தது. "டொமினியன் அந்தஸ்தை அடைவது உடனடியான அடுத்த முறையேயன்றி வெகு தொலைவிலுள்ள ஒரு கட்டமாகக் கருதப்படவில்லை" என்றும் அறிக்கை கூறியது.

அவ்வாண்டு ஆகஸ்டில் லட்சுமணபுரியில் நடந்த சர்வ கட்சி மகாநாடு, நேரு அறிக்கையின் கொள்கைகளை ஒப்புக்கொண்டது. அம்மகாநாட்டிற்கு மகாத்மா வரவில்லை. ஆயினும், அந்த அறிக்கையை உற்சாகமாக வரவேற்ருர். அவர் எழுதியாவது :

"………பண்டித மோதிலால்ஜி இன்று இந்தியாவிலேயே அதிகப் பெருமைப்பட வேண்டியவராவார். அப்படிப் பெருமைப்பட எல்லாக் காரணங்களும் உண்டு. ஆனுல் லட்சுமணபுரி மகாநாட்டை வெற்றிகரமானதாக்க ஒவ்வொருவரும் எண்ணியிராமற் போயிருந்தால்,அவராலும் எதுவும்செய்திருக்க முடியாது, ஹிந்துக்கள் அல்லது முஸ்லிம்கள் வழியை அடைத்திருப்பது எளிது; சீக்கியரும் அவ்விதம் செய்திருக்கலாம். ஆனுல் நேரு கமிட்டி பொறுமையுடன் செய்திருக்கும் உழைப்பை நாசமாக்கிவிடும் எண்ணம் யாருக்கும் இல்லை………

"குடியேற்ற நாட்டு அந்தஸ்தாக இருந்தாலும், பூரண சுயேச்சையாக இருந்தாலும் தேசீய கோரிக்கை நிறைவேற்றப்படுவதாக இருந்தால் சரியான நடவடிக்கை வேண்டும் என்று ஜவாஹர்லால் நேரு சரியாகவே கூறியிருக்கிருர். நடவடிக்கை அகிம்சையோடு கூடியதாயிருப்பதெனின் பர்டோலி வழியைக் காட்டியிருக்கிறது……நடவடிக்கையில் நாம் நிச்சயமாக இருப்பின், சுயராஜ்யம் டொமினியன் அந்தஸ்து அல்லது பூரண சுயேச்சை என்று உச்சரிக்கப்படுவதைக் குறித்து நாம் கவலைப்பட வேண்டியதில்லை………"

நேரு அறிக்கை, அந்த ஆண்டு டிசம்பர் 26–ஆம் தேதி நடந்த அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி முன்பு விவாதத்திற்கு வந்தது. அறிக்கையில் கண்ட டொமினியன் அந்தஸ்து என்பதைப் பலர் எதிர்த்தனர். 1939 டிசம்பர் 31–ஆம் தேதிக்கு முன்பு அந்த அறிக்கையைப் பிரிட்டிஷ் சர்க்கார் ஏற்றுக்கொள்ளாது போனுல் காங்கிரஸ் போராட்டத்தை ஆரம்பிப்பது என்ற சமரச முடிவை மகாத்மா கொண்டு வந்தார். பிறகு, நடந்த கல்கத்தா காங்கிரஸும் நேரு அறிக்கையை ஏற்றுக்கொண்டது. லார்டு பர்க்கென்ஹெட்டின் சவாலுக்குப் பதிலாக வந்த நேரு அறிக்கை அரசியலை, காங்கிரஸ் குறிப்பிட்ட கெடுவுக்குள் பிரிட்டிஷ் அரசாங்கம் ஏற்றுக்கொள்ளாததால் அடுத்த ஆண்டு நடந்த லாகூர் காங்கிரஸ் பூரண சுதந்திரமே இந்தியாவின் லட்சியம் என்று தீர்மானம் செய்துவிட்டது.

அனுவசியமானவை என்று அவர்களுக்கே தோன்றக்கூடும். ஏனெனில், அகிம்சை முறையை விரும்பி மேற்கொண்டும் உபயோகித்தும் சுதந்திரம் அடைந்து காட்டிவிட்டோம் என்பதை அவர்களே அறிந்துகொள்ளுவார்கள்.

என் நாட்டு மக்களுடன் இன்று எனக்கு இருக்கும் உடன்பாடெல்லாம் அடிமைத் தளையைத் தகர்ப்பதில்தான். அந்தத் தளையை உடைத்தெறிந்த பிறகு எங்கள் உணர்ச்சி எப்படி இருக்கும், அப்பொழுது நாங்கள் என்ன செய்வோம் என்பது அவர்களுக்கும் தெரியாது; எனக்கும் தெரியாது.

என் இடத்தில் டால்ஸ்டாய் இருந்தால், நான் செய்வதற்கு மாறானதைச் செய்திருப்பாரா என்பதைப்பற்றி ஊகித்துக் கொண்டிருப்பது பலனற்றது. ஐரோப்பாவில் இருக்கும் என் நண்பர்களுக்கு ஒரு வாக்குறுதியை நான் அளிப்பதே போதும். நான் செய்த எந்த ஒரு காரியத்திலேனும் பலாத்காரத்தை அங்கீகரித்த அல்லது என்னுடைய தருமத்தை விட்டுக்கொடுத்த குற்றத்தை மனமார நான் செய்ததில்லை என்பதே அது. போயர் யுத்தத்திலும் ஜுலுக்கள் கலகத்திலும் பிரிட்டன் பக்கத்தில் நான் பங்கெடுத்துக்கொண்டதன் மூலம் பலாத்காரத்தை நான் ஆதரித்ததாகத் தோன்றுவதிலுங்கூட, தவிர்க்க முடியாத ஒரு நிலையில் அகிம்சையின் நன்மைக்காகவே அப்படிச் செய்தேன். நான் அவற்றில் ஈடுபட்டது, என்னுடைய பலவீனத்தினாலோ அல்லது சர்வ வியாபகமான அகிம்சா தருமம் எவ்வாறு இயங்குகிறது என்பதுபற்றி நான் அறியாமல் இருந்ததாலோ இருக்கலாம். இது சாத்தியமே. அத்தகைய பலவீனம் அல்லது அறியாமையைப்பற்றிய எண்ணம் எனக்கு அன்றும் இருந்ததில்லை; இன்றுமில்லை.

பலாத்காரத்தை அடிப்படையாகக் கொண்ட ஒரு முறையில், தாம் தேர்ந்துகொள்ளுவதற்கு வகை எதுவும் இல்லாமல் அதைச் சார்ந்திருக்க நேரிடும்போது அகிம்சை வழியில் செல்லும் ஒருவர், மறைமுகமாக ஈடுபடுவதைவிட நேரடியாக ஈடுபடுவதையே உணர்ச்சி காரணமாக விரும்புவார். அகிம்சையை அடிப்படையாகக் கொண்ட உலகின் ஒரு பகுதியில் நான் இருக்கிறேன். என் அண்டை நாட்டினரைக் கொல்லுவதற்குச் சிப்பாய்கள் அடங்கிய பட்டாளத்திற்குப் பணம் கொடுப்பதா அல்லது நானே சிப்பாயாக இருப்பதா என்ற இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளும் உரிமை எனக்கு இருந்தால், என்னுடைய தருமத்தை அனுசரித்து ஒன்றுதான் நான் செய்

வேன். இம்சைச் சக்திகளைக் கட்டுப்படுத்த முடியும், என் தோழர்களையே மாற்றிவிட முடியும் என்ற நம்பிக்கையில் நான் சிப்பாயாகச் சேர்ந்துவிடுவேன்.

தேசீய சுதந்திரம் கட்டுக்கதை அன்று. தனிப்பட்டவரின் சுயேச்சையைப் போல அவ்வளவு அவசியமானது அது. ஆனால், அது அகிம்சையை அடிப்படையாகக் கொண்டதாக இருப்பின், தேசத்தின் அல்லது தனிப்பட்டவரின் சமத்துவமான சுயேச்சைக்கு இதில் ஆபத்தானது எதுவுமே என்றும் இராது. தனிப்பட்டவரின் தேசீய சுதந்திரத்தைப் போன்றுதான் சர்வ தேச சுதந்திரமும். சட்டக் கோட்பாடு சமமான ஒழுக்கமே. அண்டமெல்லாம் அணுவில் அடங்கியிருக்கிறது என்று சரியாகவே சொல்லப்பட்டிருக்கிறது. அணுவுக்கு ஒரு தருமம், அண்டத்திற்கு வேறொரு தருமம் என்பது கிடையாது.

—'எங் இந்தியா' – 30-1-1930

# 10

# சிக்கலான பிரச்னை

யுத்த சம்பந்தமாக நான் கொண்ட போக்கைக் குறித்துப் பூஜ்ய பி. டி. விக்ட் எனக்கு ஒரு பகிரங்கக் கடிதம் எழுதியிருக்கிறார். அதில் கிளப்பப்பட்டிருக்கும் பிரச்னை குறித்துச் கூச்சத்துடனேயே நான் கவனிக்க முற்படுகிறேன். நான் சங்கடமான நிலைமையில் இருக்கிறேன். அதிலிருந்து மீளுவதற்குச் சுலபமான வழி, தவறான அபிப்பிராயம் ஏற்பட்டுவிடக்கூடிய ஆபத்து நேருவதாயினும் சரி, என்று சும்மா இருந்துவிடுவதே. கூறப்படும் சந்தர்ப்பங்களில் நான் யுத்தத்தில் கலந்துகொண்டது தவறு என்று சொல்லிவிடுவது இன்னும் எளிதானது. ஆனால், மிக்க நட்பான வகையில் கேட்கப்படும் கேள்விகளுக்குப் பதில் சொல்லாமல் இருப்பது நட்புடைமை யாகாது. செய்தது தவறு என்ற எண்ணம் எனக்கு இல்லாதபோது வருத்தப்படுவதாக நான் பாசாங்கு செய்வதற்கும் இல்லை. இவ்விஷயத்தில் விவாதத்தைத் தவிர்க்கவேண்டும் என்று நான் ஆவலுடன் இருப்பது, எனக்கு உறுதியான கருத்து இல்லாதிருக்கிறது என்பதனால் அல்ல. ஆனால், நான் கூறுவதன் பொருளை நான் தெளிவாகக் கூறுமற் போய்விடக்கூடுமோ, அதனால் யுத்த சம்பந்தமாக நான் கொண்ட போக்கைக் குறித்து நான் விரும்பாத ஒரு கருத்து ஏற்பட்டுவிடுமோ என்பதற்காகவே. என்னுடைய அடிப்படையான உணர்ச்சிகளை எடுத்துக் கூறுவதற்கு மொ ` போதுமானதாக இல்லை என்பதை நான் அடிக்கடி

காண்கிறேன். ஆகவே, ஸ்ரீ பி. டி. லிக்கையும், யுத்த வெறுப்பாளர்களான மற்றவர்களையும் ஒன்று கேட்டுக்கொள்ளு கிறேன். குறைபாடுள்ள அல்லது அரைகுறையான என்னுடைய வாதங்களைப் பொருட்படுத்த வேண்டாம். யுத்தத்தைப்பற்றி நான் கூறிவருபவைகளைக் கொண்டு நான் யுத்தத்தில் ஈடுபட் டதைப்பற்றி அவர்கள் சமாதானப்படுத்திக்கொள்ள முடிய வில்லை என்றால் அதையும் பொருட்படுத்தவேண்டாம். எல்லா யுத்தங்களையுமே அடியோடு எதிர்ப்பவன் நான் என்று என்னை அவர்கள் புரிந்துகொள்ளட்டும். என் வாதத்தை அவர்களால் ஒப்புக்கொள்ள முடியவில்லையாயின், எனக்கே தெரியாத பல வீனத்தினால் நான் போரில் ஈடுபட்டுவிட்டேன் என்று அவர்கள் சொல்லிக்கொள்ளட்டும். ஏனெனில், யுத்தம் சில நிலைகளில் நியாயமானது என்று காட்டுவதற்கு என்னுடைய செய்கையை யாராவது உபயோகித்ததாகக் கண்டால் நான் மிகுந்த வருத் தத்தை அடைவேன்.

............... எனக்கும் ஐரோப்பிய யுத்த வெறுப்பாள ருக்குமுள்ள ஓர் அடிப்படையான வித்தியாசத்தை அவர்கள் அறியவேண்டும். சுரண்டப்படும் நாடுகளைச் சேர்ந்தவர்களல்ல அவர்கள். நானோ, உலகில் மிகவும் சுரண்டலுக்குள்ளான ஒரு நாட்டைச் சேர்ந்தவன். முகஸ்துதி இராமல் ஓர் உதாரணத் தைக் கூறுவதாயின், அவர்கள் பூனையாகவும் நான் எலியாக வும் இருக்கிறோம். எலிக்கு அகிம்சை உணர்ச்சியாவது உண்டா? யுத்தத் துறையில் அகிம்சா தருமத்தின் நேர்மையையும், பெரு மையையும், உயர்வையும் உணரும்படி எதிரிக்குச் சொல்லிக் கொடுப்பதற்கு முன்னால் வெற்றிகரமான பலாத்காரத்தைக் கையாள்வதற்கு எலியினிடம் ஓர் அடிப்படையான குறை தென் படுகிறதல்லவா? எலி வமிசப் பிரதிநிதி என்ற முறையில் நான், நாசம் செய்யாமல் இருப்பதிலுள்ள உயர்வை என் எஜமான னுக்குப் போதிப்பதை முன்னிட்டாவது நாசம் செய்யும் அவன் ஆசையில் பங்கு கொள்ளுவது அவசியமாகாதா?

பூனை, எலி ஒப்புமை இங்கு முடிகிறது. தன்னுடைய சுபாவத்தை மாற்றிக்கொள்ளும் சக்தி எலிக்கு இல்லை. ஆனால், ஒரு மனிதனுக்கோ, எவ்வளவுதான் அவன் இழிவாகவும் கீழ்த் தரமாகவும் போனாலும், அவனுடைய இனமும் நிறமும் எதுவா யினும், என்றுமே இராத அளவுக்கு உயர்வை அடைவதற்கான சக்தி இருக்கிறது. ஆகையால், யுத்தத்திற்குத் தயார் செய்துகொள்ளுவதில் என் தேச மக்களின் தேவைகளைத் திருப்திப்படுத்துவதற்காக நான் எவ்வளவுதான் அவர்கள் வழி

யில் சென்ருலும், ஒரு முழு நம்பிக்கையின் பேரில் அப்படிச் செய்கிறேன். யுத்தத்திலிருந்து அவர்களே மாற்றலாம் ; யுத்தத்திஞல் ஒரு பலனுமில்லே என்பதை அவர்கள் ஒரு நாள் கண்டு கொள்ளுவார்கள் என்பதே அந்த நம்பிக்கை. நான் யுத்தத்திற்கு ஆதரவளிப்பதாகத் தோன்றியபோதிலும், மக்கள் பெருவாரியாக அகிம்சையை அனுஷ்டிக்கச் சரித்திரம் கண்டறியாத ஒரு பெரிய சோதனேயில் நான் ஈடுபட்டிருக்கிறேன் என்பது நினேவிருக்கட்டும். போதிய திறமை இல்லாததால் இச்சோதனே தவறிவிடக்கூடும். ஆனல், யுத்தத்திற்குத் தயாராகியவர்களுடன் சேர்ந்திருக்கும் ஓர் ஆள், அதே சமயத்தில் இந்தியாவில் அகிம்சையில் செய்துவரும் தீரமான சோதனேயை நடத்தும் கண்கூடான பெரிய அற்புதத்தை அறிந்துகொள்வதற்கும் உணர்வதற்கும் ஐரோப்பிய யுத்த எதிர்ப்பாளர் முயல வேண்டும்.

என் தேச மக்களே அகிம்சை வழிக்குக் கொண்டுவர நான் எதிர்பார்ப்பதாஞல், அம்மக்களின் உணர்ச்சிகளிலும் நான் பங்கு கொள்ளவேண்டும். அகிம்சைத் திட்டத்தின் ஒரு பகுதி இது. முக்கியமான உண்மை என்னவெனில், பல நூற்ருண்டுகளாக இருந்துவரும் அடிமைத்தனத்திலிருந்து மக்களே அகிம்சை ஒன்றே மீட்க முடியும் என்ற நம்பிக்கை, படித்த ராஜீயவாதியுள்பட இந்தியர் பலருக்கு எந்தவிதமாகவோ ஏற்பட்டிருக்கிறது. அகிம்சையிஞல் நியாயமாகத் தோன்றக்கூடிய விளேவுகளே எல்லோருமே சரியானபடி கண்டுகொள்ளவில்லே என்பது உண்மையே. யாரால்தான் முடியும் ? அகிம்சையின் உண்மை எனக்குத் தெரியும், அதை அனுசரிக்க என்னுலான வரையில் முயற்சி செய்துவருகிறேன் என்று நான் பெருமையாகச் சொல்லிக்கொண்டாலும், அந்தத் தருமத்தின் முழு விளேவுகளேயும் காண்பதற்கு நான் தவறிவிடுகிறேன். மனித உள்ளத்தில் இயற்கையின் போக்குச் செய்துவருவது மர்மமாக இருப்பதோடு விளக்க இயலாதபடி திகைப்பையும் தருகிறது.

ஒன்றை நான் அறிவேன். அகிம்சை முறையைக் கொண்டே இந்தியா சுதந்திரம் அடைந்துவிடுமாஞல், தனக்குப் பெரிய சேனேயை வைத்துக்கொள்ளவோ, அதேபோன்ற கடற்படை, பெரிதான விமானப்படை ஆகியவைகளே வைத்துக்கொள்ளவோ இந்தியா விரும்பவே விரும்பாது. தன்னுடைய சுதந்திரப் போரில் அகிம்சையோடு கூடிய வெற்றியைத் தனக்கு அளிப்பதற்கு அவசியமான உயர்வுக்கு இந்தியாவின் சுய உணர்

வளர்ந்துவிடுமாயின், உலகத்தில் மதிப்பின் தன்மையே மாறி விடும். யுத்த கோலத்திற்கு அவசியமானவை பல பயனற்றவை களாகிவிடும். அத்தகைய இந்தியா தோன்றும் என்பது வெறும் பகற்கனவாக இருக்கலாம். அல்லது ஒரு குழந்தைக்குரிய அசட்டு யோசனையாக இருக்கலாம். ஆனால், அகிம்சையின் மூலம் இந்தியா சுதந்திரம் அடையக்கூடிய வழி இதுவேயாம் என் பது என் கருத்து.

அந்தச் சுதந்திரம் வரும்போது, அப்படி அது வருமாயின், பிரிட்டனுடன் கண்ணியமான வகையில் சமரசத்திற்கு வரு வதன் மூலமே அது ஏற்படும். ஆனால், அப்பொழுது பிரிட்டன், உலகத்தில் தானே மேலோங்கி இருப்பதற்குத் தந்திரங்களைக் கையாளும் அகம்பாவம் பிடித்த பிரிட்டனாக இராது. மனித வர்க்கத்தின் பொதுவான நன்மைக்காகச் சேவை செய் யும் அடக்கமுள்ள பிரிட்டனாக அது இருக்கும். அப்பொழுது இந்தியா, சுரண்டுவதற்காகப் பிரிட்டன் நடத்தும் யுத்தங் களில் விதியில்லாமல் ஈடுபட வேண்டிய நாடாக இராது. உலகத்தின் பலாத்கார சக்திகளையெல்லாம் அடக்கிவைக்கும் செல்வாக்குள்ள பலமான நாடாக இந்தியா இருக்கும்.

இந்தக் கற்பனைக் கருத்துக்கள் எல்லாம் என்றாவது நிறை வேறினாலும் சரி, நிறைவேறாது போனாலும் சரி, என்னுடைய வாழ்க்கை வழி என்னவோ உறுதி யாகிவிட்டது. இனி எப் பொழுதும், எண்ணிப் பார்க்கக்கூடிய எந்தச் சந்தர்ப்பத் திலும், பிரிட்டனின் யுத்தங்களில் நான் கலந்துகொள்ள மாட் டேன். இப்பத்திரிகையில் நான் முன்பே கூறியிருப்பது போல, பலாத்கார வழியில் இந்தியா சுதந்திரத்தை அடையுமானால் (என்னைப் பொறுத்த வரையில் அது சுதந்திரம் ஆகாது), இந்நாடு நான் பெருமை கொள்ளும் நாடாக இராது. அந்தச் சமயமே, உலகத்தவர் சம்பந்தப்பட்டவரை, நான் இறந்தொழி வேன். ஆகையால், அதன் பிறகு சுரண்டுவதற்காக இந்தியா தொடுக்கும் எந்த யுத்தத்திலும், நேரடியாகவோ அன்றி மறைமுக மாகவோ நான் பங்கு எடுத்துக்கொள்ளுவது என்பதற்கே இடமில்லை.

மேற்கத்திய நாடுகளில் இருக்கும் என் தோழர்களான யுத்த எதிர்ப்பாளர்கள், யுத்தத்திற்கான முஸ்தீப்புகளுக்குப் பணம் கொடுத்து உதவுகிறார்கள். அந்தத் துறையிலேயே பலம் திரட்டும் அரசாங்கங்கள் நிலைத்திருக்கச் செய்கிறார்கள். ஆகவே, அந்த யுத்த வெறுப்பாளர்கள் யுத்தத்தில் பங்குகொள்ளுகிறவர்களா

கிருர்கள் என்பதை இப்பத்திரிகையில் முன்பே எடுத்துக் காட்டியிருக்கிறேன். யுத்தங்களுக்குக் காரணங்கள் யாவை என் பதை அறிந்துகொண்டு அவைகளுக்குச் சரியான பரிகாரங்களைத் தேடினலன்றி, யுத்தத்தை நிறுத்துவதற்கென்று செய்யும் காரி யங்கள் எல்லாம் பலனில்லாமலே போகும். உலகத்தில் இருக்கும் பலவீனமான இனத்தினர் எனச் சொல்லப்படுவோரைச் சூறையாடுவதற்கு நடக்கும் மனிதத்தன்மை இல்லாத போட்டியே இக்கால யுத்தங்களுக்கு முக்கியமான காரணம் அல்லவா?

– 'எங் இந்தியா'— 9—5—1929

# 11

# நமது வாழ்வின் தருமம்

கானன் ஷெப்பர்டின் 'யுத்தத்திற்கு எதிரான யுத்த'த்திற் குப் பதிலளிக்க நான் கூறியிருந்த வாதங்களைக் குறித்து 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகை நியாய ரீதியான வாதத்தோடு கூடிய ஒரு கட்டுரையைப் பிரசுரித்திருக்கிறது. நான் மேற் கொண்டுள்ள நிலை முழுவதையுமே ஆட்சேபித்துவிட அக்கட்டு ரையில் சாமர்த்தியமான முயற்சி செய்யப்பட்டிருக்கிறது.

இக்கட்டுரையை எழுதியிருப்பவர், பகவத் கீதை தமக்கு உதவியாக இருந்தாலும் பயங்கரவாதிகளுக்கு அது உதவியாக இல்லை என்கிருர். விரணசிகிச்சை வைத்தியர் தம் நோயாளி யிடம் இம்சையையே உபயோகிக்கிருர். அதேபோல, இம்சை யார்மீது உபயோகிக்கப்படுகிறதோ அவருடைய நன்மைக்கு அல்லது காரியங்களுக்குப் பலத்தை உபயோகிப்பது நியாய மான முறை என்று நீங்கள் ஒப்புக்கொண்டுவிட்டால், இரண் டிற்கும் உள்ள வித்தியாசத்தைக் காட்டும் ஒரு வரையறையை உங்களால் செய்ய முடியாது. மகாபாரதத்தில் கீதை ஒரு சிறு அத்தியாயமே. ஓர் இரவில் நிரபராதிகள் கொன்று குவிக்கப்பட்ட பயங்கரமான விவரங்களை மகாபாரதம் விவரிக் கிறது. நம் நாகரிகம் யுத்தங்களைப்பற்றிய சமீப அனுபவம் நமக்கு இல்லாதிருந்தால், அனுபவத்தில் அவை நம்பமுடியா தனவாகக் கருதப்படும். பயங்கரவாதிகளில் சிலருக்குக் கீதை மனப்பாடமாகத் தெரியும். தங்களுடைய தத்துவமும் கொள் கையும் சரியானவையே என்று காட்டுவதற்கு அவர்கள் கீதையை நேர்மையாகவும், உண்மையாகவும், உறுதியுடனும் உபயோகித்துக்கொண்டு வருகிருர்கள் என்பது ஒரு கோர மான உண்மை. கீதையைக் குறித்து என் விளக்கத்திற்கு

அவர்கள் தரும் பதில் ஏதும் இல்லை. நான் கூறுவது தவறு, தாங்கள் கூறுவது சரி என்று மாத்திரமே சொல்லுகிறார்கள். யார் சொல்லுவது சரி என்பதைக் காலம் ஒன்றே காட்டும். கீதை வெறும் தத்துவ நூலன்று ; அது உணர்ச்சியூட்டும் மௌனமான வழிகாட்டி. பொறுமையுடன் பாடுபடுவதனாலேயே அது காட்டும் வழியைப் புரிந்துகொள்ள முடியும்.

அடுத்ததாக 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகையில் எழுதியிருப்பவர், கானன் ஷெப்பர்டின் நிலையை அர்ச்சுனனின் நிலையோடு ஒப்பிடுகிறார். நிச்சயமாக இது அவசரப்பட்டுக் காட்டிய தவறான உவமை. அர்ச்சுனன் பாண்டவர்கள் படையின் தளபதி. தன் முன்னால் இருக்கும் பயங்கர நிலையைச் சிந்தித்ததும் திடீரென்று செயலற்றவன் ஆகிவிடுகிறான். தளபதி என்ற வகையில் தான் செய்ய வேண்டியது இன்னதுதான் என்பது அவனுக்குத் தெரியும். தனது ஒன்றுவிட்ட சகோதரர்களுடன் தான் போர் செய்தாக வேண்டும் என்பதை அறிவான். அவன் செயலற்றுப் போனது தாற்காலிகமாக ஏற்பட்ட பலவீனத்தினால்தான். பெருங்குழப்பத்தையும் சீர்குலைவையும் உண்டாக்காமல், தனக்கும் தன்னுடைய எண்ணற்ற நண்பர்களுக்கும் தன்னுடன் இருப்போருக்கும் அவமானத்தைத் தேடிக்கொள்ளாமல், தன் முன் இருக்கும் வேலையை அவன் கைவிட்டுவிட முடியாது. தன்னையும் தன்னுடன் இருப்போரையும் பயங்கரமான படுகொலையில் ஈடுபடுத்திக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறான். இதற்காகத் தனக்கும் தன்னுடன் இருப்போருக்கும் பயிற்சியும் அளித்திருக்கிறான். அவனுடைய சிந்தனையையும், சொல்லையும், செயலையும் திடீரென்று உண்மையாகவே அகிம்சை ஆட்கொண்டிருந்திருக்குமானால் என்ன நேர்ந்திருக்கும் என்பதைப்பற்றி ஊகிப்பதில் பயனில்லை.

அந்த உயர்ந்த உடைமை டிக் ஷெப்பர்டுக்கும் அவருடைய தோழர்களுக்கும் வந்திருக்கிறது என்று நம்புவோம். எப்படியும் நான் அறிந்தவரையில் அர்ச்சுனனின் நிலைக்கு இவர் நிலை முற்றிலும் மாறுபட்டது. போர்க்களத்தில் அணிவகுத்து நிற்கும் எந்த ராணுவத்தின் தளபதியுமல்ல இவர். உறவினர்களுக்கும் மற்றவர்களுக்கும் இவர் எந்தவிதமான பாகுபாட்டையும் கருதவுமில்லை. ஒருவன் எங்கே பிறந்தவன், அவனுடைய உடல் நிறம் என்ன அல்லது தன்னைப்பற்றி என்ன சொல்லிக்கொள்ளுகிறான் என்பதைப்பற்றிக் கவலையில்லை ; இவர் மனிதனை மனிதனாக மட்டுமே கருதுகிறார். தமக்கு வாழ்க்கை நூலாகிய ஒரு நூல் முழுவதையும் பிரார்த்தனை உள்ளத்தோடு

ஆய்ந்த பிறகு, தம்முடைய அல்லது தம் நாட்டின் லாபத் திற்காக உடனுள்ள மனிதருக்குத் துன்பம் விளைவிக்கக் கூடாது, ஆகையால், நேரடியாகவோ அல்லது மறைமுகமா கவோ யுத்தத்தில் கலந்துகொள்ளாமல் தாம் இருந்துவிட வேண்டும் என்ற முடிவுக்கு இவர் வந்திருக்கிறார். இயல்பா கவே இவர் அடுத்த காரியமாகத் தமக்கு அக்கம் பக்கத்தில் இருப்போருக்குச் சமாதானம் அல்லது அன்பின் தருமத்தை யும், விலக்கின்றி எல்லா மனிதரிடத்திலும் நல்லெண்ணத் தோடு இருக்க வேண்டும் என்பதையும் உபதேசம் செய்கி றார். அர்ச்சுனன் என்றுமே மேற்கொள்ளாத ஒரு நிலைமை இது.

ஆனால், 'ஸ்டேட்ஸ்மன்'பத்திரிகையில் எழுதியிருப்பவரின் வில்லுக்கு நாண்கள் பல. இதில் பலமானது, மனித இனத்திற்கு அகிம்சை அல்லது அன்பே தருமம் என்பதை அவர் மறுப்ப தாகும். அன்பு அல்லது அகிம்சை நமது வாழ்வின் தருமமாக இருக்க வேண்டியதில்லை என்றால், என்னுடைய வாதங்கள் எல்லாமே விழுந்து சுக்கலாகிவிடும். அடுத்தடுத்துப் போர்கள் மூண்டு, ஒன்றை ஒன்று மிஞ்சாமல் இருக்கும் நிலையிலிருந்து தப்பவே வழியில்லை. வாழ்க்கைக்கு மூலமும் முடிவுமாக இருப்பது அன்பே. இதை, அன்றாட வேலைகளுக்கிடையே கிடைக்கும் ஓய்வு நேரத்தில் ஒரு பத்திரிகைக்கு எழுதும் கட்டுரையைக் கொண்டு நிரூபிக்க என்னால் ஆகாது. ஆனால், அந்தத் தருமத்தை எளிதாகப் புரிந்துகொள்ளுவதற்குப் பொருத்தமான சில யோசனைகளைக் கூற முயல்வேன். இது வரையில் தோன்றியிருக்கும் போதகர் எல்லோருமே ஓரள வுக்குத் தீவிரமாகவே அந்தத் தருமத்தை உபதேசித்திருக்கி றார்கள். அன்பே வாழ்க்கையின் தருமமாக இல்லாதிருந்திருக்கு மாயின் சாவின் நடுவே வாழ்வும் நீடித்து இருந்திராது. மரணத்தை மீறும் நிரந்தரமானதோர் வெற்றியே வாழ்வு. மனிதனுக்கும் மிருகத்திற்கும் ஓர் அடிப்படையான மாறுபாடு இருக்கிறதென்றால், இந்தத் தருமத்தை மேலும் மேலும் மனிதன் அறிந்து, அதை நடைமுறையில் தன்னுடைய வாழ்க்கையில், அனுபவத்தில் உபயோகித்திருக்கிறான் என்பதே அம்மாறுபாடு. உலகத்தின் ஞானிகள்-பழைய காலத்தில் இருந்தவர்களும், இக் காலத்தில் இருந்தோரும்-யாருமே, தம் அறிவுக்கும் சக்திக்கும் ஏற்றவகையில் உயர்ந்ததான இந்த வாழ்க்கையின் தருமத்திற்கு அழியா எடுத்துக்காட்டாகவே இருந்திருக்கிறார்கள். நம்முள் இருக்கும் மிருக சுபாவம், எளிதாகவே வெற்றிகொண்டு எழு

கிறது என்பது உண்மை. ஆனால், அது இத்தருமமே இல்லை என்று நிரூபித்துவிடுவதாகாது. அனுசரிப்பதிலுள்ள கஷ்டத்தையே அது காட்டுகிறது. சத்தியத்தைப் போன்று உயர்ந்த ஒரு தருமம் வேறு எவ்விதம் இருக்க முடியும்? இந்தத் தருமத்தை எல்லோருமே அனுசரிக்க முற்படும்போது சுவர்க்கத்தில் இருப்பதைப் போன்றே இந்த உலகத்திலும் கடவுளின் ஆட்சி நிலவும். வானும் வையகமும் நம்முள்ளேதான் இருக்கின்றன என்பதை எனக்கு நினைவூட்ட வேண்டியதில்லை. பூமியை நாம் அறிவோம். ஆனால், நம்முள் இருக்கும் சுவர்க்கம் நமக்குப் புரியாத விஷயம். அன்பை அனுசரிப்பது சிலருக்குச் சாத்தியம் என்பதை ஒப்புக்கொண்டால், மற்றவர்களும் அதை அனுசரிப்பது சாத்தியமே என்பதை ஒப்புக்கொள்ள மறுப்பது அகம்பாவமே யாகும். மனிதனை மனிதன் தின்பது போன்ற அருவருக்கத் தக்க காரியங்களைத் தொன்மையில் நம் மூதாதைகள் நடத்தவில்லையா? அந்தக் காலத்திலுங்கூட டிக் ஷெப்பர்டுகள் இருந்திருக்கிறார்கள். உடனுள்ள மனிதரை அடித்துத் தின்ன மறுக்கும் ஒரு விசித்திரமான தருமத்தை அவர்கள் போதித்து இருந்தால், அவர்களை ஏளனம் செய்து கட்டிவைத்து அடித்தும் இருப்பார்கள். அசாத்தியமெனக் கருதப்பட்டவை எல்லாம் வெகு சீக்கிரத்திலேயே சாத்தியமாகக்கூடும் என்பதற்கு இக்கால விஞ்ஞானத்தில் ஏராளமான உதாரணங்கள் கிடைக்கின்றன. ஆனால், வாழ்வின் விஞ்ஞானத்துடன் ஒப்பிட்டுப் பார்த்தால் பௌதிக விஞ்ஞான வெற்றிகள் ஒன்றுமே இல்லை. இந்த விஞ்ஞானம், நமது வாழ்வின் தருமமான அன்பில் அடங்கியிருக்கிறது. இதை வாதத்தினால் நிரூபிக்க முடியாது என்பதை நான் அறிவேன். தங்களுக்கு எது நேர்ந்தாலும் சரி என்று அதையெல்லாம் பொருட்படுத்தாமல் தங்கள் வாழ்க்கையில் அதன்படி வாழ்ந்து வருகிறவர்களினாலேயே இதை நிரூபிக்க முடியும். தியாகமின்றி உண்மையான பலன் எதுவும் இல்லை. அன்புத் தருமத்தைச் செய்கையால் காட்டுவதே மிக உண்மையான பலனாக இருப்பதைப் போன்றே தியாகமுங்கூட மிகவும் அவசியமானதாகும்.

தருமம் ஒப்புக்கொள்ளப்படுமாயின், என் வாதங்களை மறுப்பதற்காக 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகையில் எழுதியிருப்பவர் கூறியிருக்கும் மற்ற வாதங்களுக்குப் பதில் தேவையில்லை. தருமம் மறுக்கப்பட்டாலோ அல்லது சந்தேகிக்கப்பட்டாலோதான் அவருடைய வாதங்கள் செல்லுபடியானவையாகும்.

போகிற போக்கில் ஒரு விஷயத்தை மாத்திரம் கவனிக்கலாம். தனிப்பட்டும், தேசீய பலனுலும் கௌரவத்தை அடைவது என்ற கருத்தை அவர் ஏளனம் செய்கிருர் எனத் தோன்றுகிறது. "தன்னையே வலிய அழித்துக்கொண்ட ஒரு நாட்டுக்கு மிஞ்சப் போகும் கௌரவம் என்ன?" என்கிருர். வேண்டுமென்ருே, வேறு வகையிலோ தானே அழித்துக்கொள்வது என்பதே இதில் இல்லை. படையெடுத்து வருபவனின் விருப்பத்திற்குச் சரணுகதி அடைந்துவிடுவதில்லை என்ற உறுதியின் பேரில், அவனுக்கு எதிராக ஒரு விரலைக்கூட அசைக்காமல், கடைசி இந்தியன் வரையில் இறந்துவிடுகிருன் என்று வைத்துக்கொள்ளுவோம். அதே போலத் தன்னுடைய கௌரவத்தைக் காத்துக் கொள்ளுவதற்காக அழிக்கப்படுவதற்குத் தன்னையே அனுமதித்துக்கொள்ளும் நாட்டுக்கும் கௌரவம் இருக்கிறது. தான் இறக்கும் வரையில் ஓர் அயோக்கியனின் இஷ்டத்திற்கு உடன்பட ஒரு பெண் அகிம்சையோடு மறுத்துத் தன்னுடைய மானத்தையும் பெண் இனத்தின் மானத்தையும் காக்கிருள். இளம் பிரகலாதன் தன்னுடைய கௌரவத்தைக் காக்க அகிம்சையோடு உயிரை இழந்துவிடவும் துணிந்தான். கடவுளிடம் அவனுக்குள்ள உறுதியான நம்பிக்கையைத் தெரிவித்தது இது. தமது தருமத்தை மறுப்பதைவிடப் பாதகன் கையில் மடிவதே மேலெனக்கொண்டு ஏசு தமது கௌரவத்தைக் காத்தார்.

– 'ஹரிஜன்', –26-9-1936.

## 12

# அகிம்சைப் புதிர்கள்

ஒரு கல்லூரியின் பேராசிரியரும் ஒரு வகுப்பின் ஐம்பது மாணவர்களின் இரு பிரதிநிதிகளும் வருமாறு எழுதுகிருர்கள்:

"இவ்வாண்டு இந்தியாவில் பெரும்பான்மையான கல்லூரிகளில் இண்டர் மீடியட் வகுப்புகளில் பாட புத்தகமாகப் பீயர்ஸ்–ஆர்யதுைவின் 'வசனநடையின் மாதிரிகள்' உபயோகத்தில் இருக்கிறது. அதில் ஐந்து பக்கங்கள் உங்களுடைய 'சத்திய சோதனை' யிலிருந்து எடுத்துப் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும். இப்பகுதிக்கு 'அகிம்சை' என்று தலைப்புக் கொடுத்திருக்கிருர்கள். அதிக முக்கியமான தான இக்கொள்கையைக் குறித்தும், எங்கள் வாழ்க்கையில் அதை உபயோகிப்பதுபற்றியும் நீங்கள் விவாதிப்பதைக் கொண்டதே அது.

"உரைநடை வகுப்பில் ஐம்பது மாணவர்களும் உபாத்தியாயரான நானும் அக்கட்டுரையைப் பலமுறை ஆராய்ந்து விவாதித்தோம். இந்திய மாணவர்கள் தங்கள் நாட்டின் நன்மையிலும் எதிர்கால அபிவிருத்தியிலும்

சிரத்தை கொண்டவர்களாகையால் முக்கியமாக அவர்களுக்குப் பயனுள்ள தாகவும் ஊக்கமளிப்பதாகவும் அக்கட்டுரை இயல்பாகவே அமைந் திருக்கிறது. அகிம்சையைக் குறித்து நீங்கள் கூறியிருப்பதை நாங்கள் மொத் தத்தில் மனமார ஆதரிக்கிறோம். இந்தக் கடினமான, ஆனால் அற்புதமான தருமத்தை எங்கள் வாழ்க்கையில் அனுசரிப்பது கடமையெனக் கருதுகிறோம்.

"ஆனால், ஓர் இடத்தில் மாத்திரம், மாணவர்களும் அவர்களுடைய ஆசிரி யரான நானும், உங்களுடைய நேரான கருத்துத்தான் என்ன என்பதைத் தெளி வாகப் புரிந்துகொள்ள முடியவில்லை. யுத்தம் ஏற்பட்டால் ஓர் அகிம்சைவாதி எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்பதைப்பற்றி நீங்கள் கூறியிருப்பதை, முக்கியமாகக் கீழ்வரும் விஷயத்தையே நான் குறிப்பிடுகிறேன்: 'இரு நாடுகள் போரில் ஈடுபட்டிருக்கும்போது போரை நிறுத்தவேண்டியது ஓர் அகிம்சை வாதியின் கடமை. அக்கடமையை நிறைவேற்ற முடியாதவர், போரை எதிர்ப்ப தற்குச் சக்தி இல்லாதவர், போரை எதிர்ப்பதற்கு வேண்டிய தகுதியைப் பெற் றிராதவர், யுத்தத்தில் பங்கு கொள்ளலாம். என்றாலும், தம்மையும் தம் நாட்டையும் உலகத்தையும் போரிலிருந்து விடுவிக்க முழு மனத்துடனும் முயற்சி செய்துவர வேண்டும்.' மேலும், ஐரோப்பிய யுத்த சம்பந்தமாக உங்களுக் குள்ள மூன்று வழிகளைப்பற்றி விவாதிக்கையில் வருமாறு கூறுகிறீர்கள்: '...அல்லது சாம்ராஜ்யத்தின் பக்கத்தில் நான் போரில் ஈடுபட்டு, யுத்தத்தின் இம்சையை எதிர்ப்பதற்கான சக்தியையும் தகுதியையும் பெறலாம். இந்தச் சக்தியும் தகுதியும் எனக்கு இல்லை. எனவே, யுத்தத்தில், சேவை செய்வதை விட நான் செய்யக்கூடியது எதுவுமில்லை எனக் கருதுகிறேன்.'

"என் வகுப்பு மாணவர்கள், வந்து கொண்டிருக்கும் போரைக் குறித்துத் தம் மனப்பாங்கை எவ்வகையில் அமைத்துக்கொள்வது என்பதைப்பற்றிச் சீக் கிரத்தில் முடிவுக்கு வரவேண்டியதை உணர்கின்றனர். அகிம்சையை மேற் கொண்டு, அதற்கு முரணின்றி – காரணங்கள் எவையாக இருப்பினும் – யுத்தத் தில் ஈடுபட முடியுமா என்பதையே அறிய விரும்புகிறார்கள். ஆகையால், இது சம்பந்தமாக விவரித்து விளக்குவதுடன் நீங்கள் கொண்டுள்ள முந்திய, இப் போதைய கருத்துக்களையும் கூறினால் நாங்கள் மிகவும் நன்றியுள்ளவர் களாவோம்.

"பதிலளித்து, ஆவலுள்ள ஐம்பது மாணவர்கள், அதே போலவே அக்கறையுள்ளவரான அவர்களுடைய ஆசிரியர் ஆகியோரின் உள்ளங்கள் அமைதி பெறச் செய்ய உங்களுக்கு வசதி இருக்கும் என்று நம்புகிறேன்."

அந்தக் கல்லூரியின் பெயரையும் அக்கடிதத்தில் கை யெழுத்திட்டிருப்போரின் பெயர்களையும் நான் மறைத்துவிட வேண்டுமா என்பது தெரியவில்லை. அறிஞரான ஆசிரியர் பதி லுக்காகத் தபால் முத்திரை வைத்த ஓர் உறையையும் அனுப்பி யிருக்கிறார். தமக்கு நேராகப் பதில் போட வேண்டுமென விரும்பு கிறார் என்று தெரிகிறது. முக்கியமாக இரண்டு அருமையான நோயாளிகளுக்குப் பணிவிடை செய்துகொண்டிருக்கும் இச் சமயத்தில் எனக்கு இருக்கும் அவகாசம் மிகக் குறைவு. 'ஹரி ஜன்' வாசகர்களுடன் வாரந்தோறும் நான் பேசுவதை இழக்க முடியாது. ஆகவே, நேரத்தை மிச்சப்படுத்திக்கொள்ள இவ்

விரு காரியங்களையும் நான் ஒன்ருக்கிவிட்டதற்காக அக் கடிதத்தை எழுதியிருப்போர் மன்னிப்பார்களாக.

கடிதத்தில் கண்ட விஷயம் மிக முக்கியமானது. இது எப்பொழுதுமே எனக்கு அதிகக் கஷ்டத்தையும் உண்டாக்கி வருகிறது. ஒரு குறிப்பிட்ட சமயத்தில் என்ன செய்ய வேண்டும் என்று முடிவு செய்வதில் அவ்வளவு கஷ்டம் இல்லை. அகிம்சையைப் பொறுத்து நான் நடந்தது நியாயம் என்று எடுத்துக் கூறுவதில்தான் கஷ்டம் இருக்கிறது. ஏனெனில், அதே காரியத்தை அகிம்சையில் நம்பிக்கையுள்ளவரும் நம்பிக்கையில்லாதவரும் வெளிப்படையாகச் செய்யலாம். அந்தச் சமயங்களில் நோக்கம் ஒன்றே அதன் தன்மையை நிர்ணயிருக்கிறது.

இதை நான் எழுதும்போது அப்பாடப் புத்தகம் என்னிடம் இல்லை. இம்மொழிபெயர்ப்பின் குஜராத்தி மூலமும் என்னிடம் இல்லை. ஆனால், நான் எழுதியது இன்னது என்பதைப் பற்றிய ஞாபகம் மாத்திரம் எனக்கு இருக்கிறது. மேலும், எனக்குத் தெரிந்தவரையில் அகிம்சையைப்பற்றி நான் அப்பொழுது கொண்டிருந்த கருத்தே எனக்கு இன்றும் இருந்து வருகிறது.

நான் எழுதியதிலிருந்து மேற்கோளாகக் காட்டப்பட்டிருப்பதில் நான் செய்துள்ள பொதுவான பிரஸ்தாபம், ஐரோப்பிய யுத்தத்தின்போது நான் நடந்துகொண்டதிலிருந்து ஏற்பட்டது. என் உயிருக்கு ஏற்படக்கூடிய ஆபத்தையும் பொருட்படுத்தாமல் அதில் நான் முழு மனத்துடன் ஈடுபட்டேன். அச் சமயம் சேவை செய்வதால் விளையும் ஆபத்துக்கள் அல்ல அவை. கவாத்து முகாம் ஆகியவைகளுக்கு நான் போய்க்கொண்டிருந்தபோது சுவாசப்பை சம்பந்தமான (ப்ளூரஸி) நோயால் பாதிக்கப்பட்டிருந்ததோடு பலவீனமும் அதிகமாக இருந்தது. யுத்தத்திற்கு இரண்டு அல்லது மூன்று மாதங்களுக்கு முன்பு நான் மேற்கொண்ட பதினைந்து நாள் உண்ணாவிரதத்தின் களைப்பினால் இழந்துவிட்ட பலத்தை அப்பொழுது நான் திரும்ப அடைந்துவிடவுமில்லை. பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் மொத்தத்தில் மனிதவர்க்கத்திற்கு நன்மையானதோர் முறை என்று நான் அப்பொழுது நம்பினேன். வேறு விதமான வழியேயானாலும், அது உலகில் நிலைத்திருப்பதை முன்னிட்டுங்கூட, யுத்த முறைக்குப் பதிலாகச் சமாதான முறையை அது அனுசரிக்கும்படி திருப்பிவிட வேண்டுமென்று ஒருநாள் நான் கனவு கண்டதுண்டு. ஆனால், எனக்கிருந்த குறைபாடுகளை நான் முற்றிலும் அறி

வேன். அதனுடைய பொதுவான கொள்கையை எதிர்ப்பதற்கு எனக்குச் சக்தி இல்லை. நான் அதற்கு ஓர் அணு மாத்திரம். நான் யுத்தத்தில் கலந்துகொண்டாலும், கொள்ளாதிருந்தாலும், பிரிட்டிஷ் கடற்படை காத்த உணவை நான் உண்டு வந்தவரையில், ஒன்றும் செய்ய முடியாத நிலையில் நானும் அதனுடன் சம்பந்தப்பட்டவனாகவே இருந்தேன். அதன் பாதுகாப்பில் என் சொந்த சுதந்திரத்தை அனுபவித்துக்கொண்டும் இருந்தேன். ஆகையால், எப்படியோ ஒரு வகையில் நான் யுத்தத்திற்கு உதவி செய்து வந்தேனென்றால், அது அகிம்சைவாதி என்ற வகையில், யுத்தத்தைச் சீக்கிரத்தில் முடிப்பதற்கு அதில் நேரடியான பங்குகொள்வது நல்லது என்று நான் கருதியதாலே யாகும். இவையெல்லாம் பலவீனமானவனின் வாதங்களாக இருக்கலாம். போர் தீமையானது என்று கருதியிருந்தால், பட்டினி கிடக்க நேர்ந்திருந்தாலும், அதை எதிர்த்துப் புரட்சி செய்கிறவனுக்கு நேரும் மரணமே வந்திருந்தாலும், போரிலிருந்து நான் விலகியிருக்க வேண்டும் என்று சொல்லலாம். ஆனாலும், நான் அன்றும் அப்படி எண்ணவில்லை; இன்றும் எண்ணவில்லை.

சாம்ராஜ்யம் மொத்தத்தில் நன்மையானதான ஒரு சக்தி என்ற நம்பிக்கை இப்பொழுது கிடையாது. இதைப் பார்த்து என் போக்கு இப்பொழுது எப்படி இருக்கும் என்ற விஷயம் வாதத்திற்கு முக்கியம் அன்று.

என் பதிலை விளக்க என் சொந்த வாழ்க்கையிலிருந்தே இன்னும் ஒரு வாதத்தை எடுத்துக்கொள்ளுகிறேன். சிறு பையனாக இருக்கும்போதே என் உள்ளமும் அறிவும் தீண்டாமைக்கு எதிராகப் புரட்சி செய்தன. ஆனால், குடும்பத்தில் முக்கியமில்லாதவனாக நான் அப்பொழுது இருந்ததனால் ஹரிஜனங்கள் சம்பந்தமாகக் குடும்பத்தினர் நடந்துகொண்டதைச் சகித்துக்கொண்டிருந்தேன். அப்படி இன்று செய்யமாட்டேன். அப்பொழுது நான் செய்ததைப் பற்றி விவாதிப்பதற்கில்லை என்பதைச் சொல்லத் தேவையில்லை. நான் குடும்பத்தில் வாழ்ந்து வருவதற்கு எனது சொந்தக் கருத்துப் பொருத்தமற்றது என்று எனக்குத் தோன்றவில்லை.

இவ்விதம் விட்டுக் கொடுப்பவைகளைக் கொண்டதே வாழ்க்கை. மிகத் தூயதும், தன்னலமற்ற அன்பாகவுமே அகிம்சை இருப்பதால் அப்படி விட்டுக் கொடுக்க வேண்டியது அடிக்கடி அவசியமாகிறது. ஒருவரின் செய்கையில் தன்னல

மின்மை, பயமின்மை, பொய்மையின்மை இருக்க வேண்டும். அகிம்சையின் லட்சியத்தை அது வளர்ப்பதாகவும் இருக்க வேண்டும். விட்டுக்கொடுப்பது ஒருவருக்கு இயற்கையாக ஏற்படுவதாக இருக்க வேண்டுமேயன்றி வெளியிலிருந்து கட்டாயப் படுத்தப்பட்டதாக இருக்கக்கூடாது.

என்னுடைய பதில் ஆசிரியருக்கும் மாணவர்களுக்கும் திருப்தியை அளிக்கவில்லையென்ருல் ஆச்சரியப்படமாட்டேன். நான் செய்தவைகளைப்பற்றி அடிக்கடி குறிப்பிடுவதற்காக மன்னிக்க வேண்டும். காரணம் தெளிவானது. படித்தவனென்பதற்கு நான் அப்படிப் பெரிய படிப்பாளியன்று. அகிம்சையைப் பற்றி எனக்குத் தெரிந்தவை எல்லாம், சத்தியமாகிய கடவுளுக்குப் பயந்து, அடக்கம் மிகுந்த ஆராய்ச்சி முறையில் நான் நடத்திய சோதனைகளையும் அனுபவங்களையும் கொண்டு அறிந்தவைகளேயாகும்.

—'ஹரிஜன்' - 17—10—1936

# 13

# அகிம்சையோடு இருப்பது எப்படி?

[ஒருவர் எப்படிப் பயனுறுவகையில் அகிம்சையோடு இருக்க முடியும்? ஆயுதம் ஏந்திப் போரில் இறங்க மறுத்துவிடுவதன் மூலமா? போரில் பங்கெடுத்துக்கொள்ள வேண்டாம் என்று ஐன்ஸ்டீன் மக்களைக் கேட்டுக்கொண்டிருக்கிருர்; அது போதுமா? பல கூட்டங்களிலும் இதே கேள்விகள் திரும்பத் திரும்பக் கேட்கப்பட்டன. *கூட்டத்தில் இருந்தவர்களாலும் சந்தர்ப்பத்தாலும் பெற்ற உணர்ச்சியின் மொழியில் காந்திஜி இக்கேள்விகளுக்குப் பதில் சொல்லிக் கொண்டிருந்தார். ஐன்ஸ்டீன்2 கோரிக்கை குறித்துக் காந்திஜி தமாஷாகவே பதில் கூறினர். அதை யாரும் தவருக எண்ணிக் கொண்டிருக்கமாட்டார்கள்.]

---

* 1931–ஆம் ஆண்டு பிரிட்டிஷ் அரசாங்கம் லண்டனில் கூட்டிய வட்ட மேஜை மகாநாட்டிற்குச் சென்றிருந்த மகாத்மா, 1931 டிசம்பர் 5–ஆம் தேதி லண்டனிலிருந்து புறப்பட்ட பிறகு வழியில் பிரான்சுக்குச் சென்று வில்லனேவே என்ற இடத்தில் அறிஞர் ரோமென் ரோலாந்தைச் சந்தித்தார். அவ்வூரில் இருந்து கொண்டு லாஸேன், ஜெனீவா ஆகிய இடங்களுக்கும் சென்றதோடு சில கிராமங்களுக்கும் போனுர். லாஸேனில் இவரை வரவேற்க கிறிஸ்தவ ஆலயத்தில் ஒரு பொதுக் கூட்டம் நடந்தது. அதில் காந்திஜி சுருக்கமாகவே பேசினுர். பிறகு மனச்சாட்சிப்படி யுத்தத்தை எதிர்ப்போரின் கூட்டத்தில் பேசுகையில், "சத்தியமே கடவுள் என்று நீங்கள் கருதுவது ஏன்?" என்ற கேள்விக்குப் பதில் அளித்தார். இத்தகைய கூட்டம் ஒன்றில் மகாத்மாவைச் சந்தித்தவர்களில் ஒருவர் பியரி ஸிரிஸோல். இந்தப் பிரயாண விவரங்களையும் இங்கு அவர் கேட்ட கேள்விக்குக் காந்திஜி அளித்த பதிலையும் ஸ்ரீ மகாதேவ தேசாய் விவரமாக 'எங் இந்தியா'வில் எழுதினுர். இந்த விவரம் அக்கட்டுரையிலிருந்து எடுக்கப்பட்டதாகும்.

2. ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் உலகில் தோன்றிய விஞ்ஞானிகளில் மிகப் பெரியவர் எனக் கருதப்படுகிறவர். மகாத்மா காந்தி 1931-இல் லண்டனிலிருந்தபோது ஐன்ஸ்டீன் சுவிட்ஸர்லாந்திலேயே இருந்தார். காந்திஜி இந்தியாவுக்குத் திரும்பும் போது அவரைச் சந்திக்க வேண்டும் என்ற ஆர்வத்துடன் இருந்தார். ஆனல்.

காந்திஜி கூறியதாவது: "ஒன்றே ஒன்றுதான் என் பதிலாக இருக்க முடியும். ஐரோப்பா, இம்முறையை உற்சாகமாக மேற்கொள்ளுமானல், இதைவிடச் சிறந்தது எதுவும் இல்லை என்பதே என் பதில். ஒரு பெரிய மனிதரைக் குறித்து நான் அப்படிச் சொல்லுவது தவறல்ல என்ருல், அம்முறையை ஐன்ஸ்டீன் என்னிடமிருந்து திருடிக்கொண்டிருக்கிருர் என்றே சொல்லுவேன். ஆனல் அதைப்பற்றி விளக்கமாக நான் கூற வேண்டும் என்று நீங்கள் விரும்பினல், ராணுவத்தில் சேவை செய்ய மறுத்துவிடுவது மாத்திரம் போதாது என்பேன். ஒரு குறிப்பிட்ட சமயம் வந்துவிட்ட பிறகு ராணுவ சேவை செய்ய முடியாது என்று மறுப்பது, தீமையை ஒழிப்பதற்கான சமயம் போய்விட்ட பிறகு காரியத்தைச் செய்வதைப் போன்றதாகும். நோய் உள்ளுக்குள் பலமாக இருக்கிறது. ராணுவ சேவை அதன் ஓர் அடையாளம் மாத்திரமே. ராணுவ சேவையில் ஈடுபடுகிறவர்களின் பட்டியலில் இல்லாதவர்களும், அரசாங்கத்திற்கு மற்ற வகைகளில் ஆதரவு அளித்து வருவதன் மூலம் குற்றத்தில் சமமாகப் பங்கு கொண்டவர்களாகிருர்கள் என்பதை உங்களுக்குக் கூற விரும்புகிறேன். ராணுவ வழியில் அமைந்துள்ள ஓர் அரசாங்கத்திற்கு நேராகவோ அல்லது மறைமுகமாகவோ உதவி செய்துவரும் ஆடவராயினும் பெண்டிராயினும் அப்பாவத்தில் பங்கு கொள்பவராவர். கிழவனுயினும் குமரனுயினும், வரி செலுத்துவதன் மூலம் அந்த அரசாங்கம் நடப்பதற்கு உதவுகிறவர்கள் பாபத்தில் பங்கு கொள்ளுகின்றனர். இதனுலேயே யுத்த காலத்தில் என்னுள் ஒன்று கூறிக்கொண்டேன்: 'ராணுவத்தினல் பாதுகாக்கப்படும் கோதுமையை நான் தின்றுகொண்டு, சிப்பாயாக இராமல் மற்ற எல்லா உதவியையும் நான் செய்துவருவதால், இதைவிட ஒரு

---

ஐன்ஸ்டீன் அமெரிக்காவுக்குப் போக வேண்டியதாகிவிட்டதால் மகாத்மாவை அவர் சந்திக்க முடியவில்லை. ஐன்ஸ்டீன் கண்டுபிடித்துக் கூறிய பல புதுமையான விஷயங்கள், அணுக்குண்டு முதலிய பல கொடிய யுத்த ஆயுதங்கள் தயாரிப்பதற்குப் பயன்பட்டுவிட்டனவெனினும் ஐன்ஸ்டீன் தீவிரமான யுத்த எதிர்ப்பாளர். இதனுலேயே சுவிட்ஸர்லாந்தில் பல கூட்டங்களில், மக்கள், தாங்கள் செய்ய வேண்டிய ராணுவ சேவையைச் செய்வதைவிடச் சிறைக்குப் போகும்படி ஐன்ஸ்டீன் கூறியிருக்கிருர். "இதைப்பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?" என்று சிலர் காந்திஜியை கேட்டார்கள். அதற்கு மகாத்மா அளித்த பதிலே மேலே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் (1879 – 1955) உல்ம் என்ற இடத்தில் யூதர் குலத்தில் பிறந்தவர். பல ஆண்டுகள் சுவிட்ஸர்லாந்தில் வசித்து வந்தார். 1922-இல் நோபெல் பரிசும் பெற்ருர். பிறகு ஜெர்மனியில் இருந்துவந்த இவரை நாஜிகள் விரட்டிவிட்டனர். இவர் அமெரிக்காவில் புகலிடம் பெற வேண்டியதாயிற்று. அங்கு 1933 முதல் 1945 வரை பிரின்ஸ்டனிலுள்ள விஞ்ஞான உயர்தர படிப்புக் கலாசாலையில் பேராசிரியராயிருந்தார். பின்னர் 1955-இல் அமெரிக்காவில் காலமானுர்.

சிப்பாயாகச் சேர்ந்து சுட்டு வீழ்த்தப்படுவதே மேல் ; இன்றேல் எல்லாவற்றையும் விட்டுவிட்டு மலைகளுக்குப் போய், அங்கு இயற்கையாக வளர்ந்து வருபவைகளைப் புசித்துக் கொண்டிருக்க வேண்டும்' என்று கூறி வந்தேன். ராணுவ சேவையை நிறுத்தவேண்டும் என்று விரும்புவோர் யாவரும் எல்லா ஒத்துழைப்பையும் நிறுத்திவிடுவதன் மூலமே அவ்விதம் செய்ய முடியும். அரசாங்கத்தை ஆதரிக்கும் எல்லா முறைகளுடனும் ஒத்துழைக்காமல் இருப்பதைவிட ராணுவ சேவை செய்ய மறுப்பது வெறும் போலித்தனமாகும். ஆனால், அப்பொழுது ஒருவருடைய எதிர்ப்பு அதிக வேகமானதாகவும் பலனளிக்கக்கூடியதாகவும் ஆகிறது. இதனால், சிறையில் அடைக்கப்படும் ஆபத்து நேருவதோடு தெருவில் நின்று தவிக்கவேண்டியும் வரலாம்.''

''அப்படியானால், அரசாங்கத்தின் ராணுவமல்லாத மற்ற உத்தியோகங்களையும் ஏற்றுக்கொள்ளக்கூடாதா?''

நிலைமையைப்பற்றி அறிவிக்கப்பட்டது[1] பியரி ஸிரிஸோலின் உள்ளத்தை அதிகமாகக் கவர்ந்துவிட்டது. அவர் இக்கேள்வியை உருக்கத்தோடு கேட்டார்: ''எங்களுக்குப் பட்ட உண்மையை நாங்கள் கூறுகிறோம். நீங்களோ, உண்மையையே கூறுகிறீர்கள். இந்த வாதம் இங்கு அடிக்கடி கூறப்படுகிறது. இதில் தங்களிடமிருந்து தெளிவு பெற விரும்புகிறோம்'' என்றார்.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: ''மனித சுபாவத்தில் உள்ள மிக நுட்பமான இடத்தை நீங்கள் இப்பொழுது தொட்டிருக்கிறீர்கள். ஒத்துழையாமை இயக்கத்தின் கர்த்தா என்ற முறையில் இதே கேள்வியை நான் சமாளிக்க வேண்டி வந்தது. என்னுள் சொல்லிக்கொண்டேன். நீரோ[2] வினால் அல்லது [3]முஸ்ஸோலினியினால் நடத்தப்பெற்ற ஆட்சியாக இருந்தா

1 பியரி ஸிரிஸோல் தீவிரமான யுத்த எதிர்ப்பாளர். உலக சமாதானம் நிலவவேண்டும் என்பதில் அதிக அக்கறை கொண்டிருந்தார். உலக சமாதானத்திற்காகப் பாடுபடும் சர்வதேசத் தொண்டர் படை என்பதை முதன்முதல் ஆரம்பித்தவரும் இவரே. ஆகையால், இவருக்கு மகாத்மாவின் அகிம்சா தரும தத்துவங்களை அறிந்துகொள்ள ஆர்வம் அதிகம் இருந்தது. ஆகையால், காந்திஜி அங்கு இருந்த போது ஸிரிஸோல் அவரிடம் பல கேள்விகளைக் கேட்டு விளக்கம் பெற்றார்.

2. நீரோ – கிளாடியஸ் ஸீஸர் (கி. பி. 37-58) கொடுமையான செயல்களுக்கும், சிற்றின்ப விளையாடல்களுக்கும் பெயர் போனவன் ; ரோம் நாட்டில் பதினான்கு ஆண்டுகள் ஆட்சி செலுத்திய மன்னன். கிறிஸ்தவக் கொள்கையைப் பரப்பிய பால் முனிவரைக் கொன்றவனும் இவனே.

3. முஸ்ஸோலினி–பெனிட்டோ முஸ்ஸோலினி, இத்தாலியின் சர்வாதிகாரியாக இருந்தவரும் பாசிஸத்தின் ஸ்தாபகருமாவார். இவர் 1883–இல் ஒரு கொல்லரின்

லும் அதிலும் சில நல்ல அம்சங்களும் இல்லாமல் போகவில்லை. ஆனால், அம்முறையுடன் ஒத்துழையாமை செய்வது என்ற முடிவுக்கு நாம் வந்துவிட்டதும் அதை முற்றிலுமாகவே நாம் நிராகரித்துவிடவேண்டும். 'எங்கள் நாட்டில் சிறந்த சாலைகளும் விசாலமான கல்வி ஸ்தாபனங்களும் இருக்கின்றன. ஆனால், நாட்டை நசுக்கிக்கொண்டு வரும் ஒரு முறையின் பகுதிகளே அவை. அவைகளுடன் நான் எந்தத் தொடர்பும் வைத்துக் கொள்ளக்கூடாது. தலையில் மாணிக்கத்துடன் இருப்பதாகக் கதைகளில் கூறப்படும் பாம்பைப் போன்றது அது. அதன் பல் முற்றிலும் விஷமுடையது' என்று எனக்குள் சொல்லிக்கொண்டேன். ஆகையால், இந்தியாவில் இருக்கும் பிரிட்டிஷ் ஆட்சி, நாட்டு மக்களின் உணர்ச்சியை நசுக்கிவிட்டது, வளர்ச்சியைக் கெடுத்துவிட்டது என்ற முடிவுக்கு வந்தேன். எனவே, உத்தியோகம், கோர்ட்டுகள், பட்டங்கள் போன்ற சலுகைகளை நான் அடைவதில்லை என்று முடிவு செய்தேன். நாட்டுக்கு நாடு கொள்கையில் மாறுதல் இருக்கலாம். ஆனால், தியாகமும் தன்னல மறுப்பும் முக்கியமான விஷயங்கள். ஐன்ஸ்டீன் கூறியிருப்பது, ஆண்டுக்கு ஒரு முறை சிலருக்கு மட்டுமே ஏற்படக் கூடியது. ஆனால், நானோ, அரசாங்கத்துடன் ஒத்துழையாமை செய்யவேண்டியது உங்கள் முதற் கடமை என்கிறேன்.''

''ஆனால், ஒரு சுயேச்சையான நாட்டுக்கும், அடிமைப்பட்டிருக்கும் நாட்டுக்கும் வித்தியாசம் அதிகம் இருக்கிறது அல்லவா?

---

மகனாகப் பிறந்தவர். சோஷியலிஸ்டாகி 1902-இல் நாடு கடத்தப்பட்டார். பிறகு இத்தாலிக்குத் திரும்பி வந்து சோஷியலிஸ்டு கட்சியை நடத்தி வந்தார். 1914-இல் தேசீயவாதியாக மாறி யுத்தத்தில் ஈடுபட வேண்டும் என்றார், 1919 மார்ச்சில் மிலானில் 40 பேருடன் பாசிஸ்டு கட்சியை ஆரம்பித்தார். பாசிஸம் என்ற பெயருடன் அந்த இயக்கம் வெகு விரைவில் வளர்ந்தது. 1922 அக்டோபரில் 40,000 பாசிஸ்டுகள் ரோமுக்குள் புகுந்து ஆட்சி அதிகாரத்தைக் கேட்டனர். மன்னர் பணிந்து முஸ்ஸோலினியை முதன் மந்திரியாக்கினார். எதிர்க்கட்சிகளையெல்லாம் முஸ்ஸோலினி அழித்தார்; சர்வாதிகாரியானார். ஜெர்மனியில் ஹிட்லர் அதிகாரத்திற்கு வந்தபோது முஸ்ஸோலினி அவரை எதிர்த்தார். 1934-இல் நாஜிகள் ஆஸ்டிரியாவைப் பிடித்துக்கொள்ள முயன்றபோது ஹிட்லருக்கு எதிராக முஸ்ஸோலினி படை திரட்டினார். 1935-இல் அபிஸீனியா மீது முஸ்ஸோலினி படையெடுத்தார். சர்வ தேச சங்கம் அவரை எதிர்க்கவே, அவர் ஹிட்லருடன் சேர்ந்துகொண்டார். ஹிட்லர் ஆஸ்டிரியாவையும், ஜெக்கஸ்லோவாகியாவையும் பிடித்துக்கொண்டபோது முஸ்ஸோலினி அவருக்கு ஆதரவளித்தார். 1939-இல் முஸ்ஸோலினி அல்பேனியாவைப் பிடித்துக்கொண்டதோடு ஜெர்மனியுடன் ராணுவ ஒப்பந்தமும் செய்துகொண்டார். பிறகு இரண்டாவது உலக யுத்தம் வந்து, பிரான்சு தோல்வியுறும் தறுவாயிலிருந்தபோது ஜெர்மனிக்கு உதவியாக முஸ்ஸோலினி 1940 ஜூன் 10-ஆம் தேதி போரில் இறங்கினார். வடக்கு ஆப்பிரிக்காவில் இத்தாலியப் படைகள் அடைந்த தோல்வியாலும் ஸிஸிலி படையெடுப்பாலும் முஸ்ஸோலினியின் சர்க்கார் கவிழ்ந்து, அவர் சிறைப்பட்டார். ஜெர்மன் பாரசூட் படையினர் அவரை சிறையிலிருந்து மீட்டனர். ஆனால், 1945-இல் அவரை மக்கள் பிடித்துக் கொன்றுவிட்டனர்.

இந்தியாவுக்கு அன்னிய அரசாங்கத்துடன் அடிப்படையான சச்சரவு இருக்கலாம். ஆனால், சுவிஸ் மக்கள் தங்கள் அரசாங்கத்துடன் எவ்விதம் சச்சரவிட்டுக்கொள்ள முடியும் ?''

இதற்குக் காந்திஜி கூறிய பதிலாவது : ''வித்தியாசம் இருக்கிறது என்பதில் சந்தேகம் இல்லை. அடிமைப்பட்ட நாட்டைச் சேர்ந்தவன் என்ற வகையில், என்னுடைய அடிமைத் தனத்தை ஒழிப்பதற்கே என்னால் முடிந்ததை நான் பார்ப்பேன். ஆனால், இங்கோ ராணுவ மனப்பான்மையிலிருந்து விடுபடுவதற்குச் சரியான வழி எது என்று என்னைக் கேட்கிறீர்கள். அரசாங்கத்திற்கு ராணுவ சேவையை அளிப்பது என்ற நிபந்தனையின் பேரில் அது அளிக்கும் வசதிகளை அனுபவித்துக்கொண்டிருக்கிறீர்கள். இங்கு ராணுவப் மனப்பான்மையை அரசாங்கம் விட்டொழிக்கும்படி நீங்கள் வகை செய்யவேண்டியிருக்கிறது.''

ஆனால், பியரி ஸிரிஸோலின் சந்தேகம் நீங்கியபாடில்லை. வாதமோ, அவருடைய உள்ளத்தைக் கவர்வதாக இருந்தது. ஆனால், இம்முறையை அதனால் விளையும் தருக்க ரீதியான முழு முடிவுவரை, அனுசரிப்பதாயின் தமது குறிப்பிட்ட சொந்த கொள்கையுடன் இதை எப்படிப் பொருத்துவது? ஜெனீவாவில் நடந்த ஒரு பெரிய கூட்டத்தில் சுவிட்சர்லாந்து நடத்திவரும் சர்வ தேசச் செஞ்சிலுவைச் சங்கத்தைப்பற்றிக் காந்திஜியின் கருத்து என்ன என்று கேட்டார்கள். ஆயிரக்கணக்கான யுத்தக் கைதிகள் உயிர்களை அது காப்பாற்றியிருக்கிறது என்றனர். இதற்குக் காந்திஜி சொன்ன பதிலில் பியரி ஸிரிஸோலுக்கு ஏற்பட்ட எல்லாச் சிக்கலான பிரச்னைக்கும் தீர்வு அடங்கியிருந்தது. அவர் ஏற்பாடு செய்திருந்த சர்வதேச சேவைக்கு உற்சாகமூட்டும் செய்தியும் அதில் இருந்தது. காந்திஜி கூறியதாவது : '' இந்த அற்புதமான, சிறந்த ஸ்தாபனத்தின் வரலாறு எனக்குத் தெரியாது என்பதை ஒப்புக்கொள்ள நான் வெட்கப்படுகிறேன். ஆயிரக்கணக்கான யுத்தக் கைதிகளை அது காப்பாற்றியிருக்கிறதென்றால், அதன் முன்பு நான் தலை வணங்குகிறேன். ஆனால், இந்தப் பாராட்டுதலைத் தெரிவித்த பிறகு நான் மற்றொன்றும் கூறுவேன். யுத்தம் இல்லாதபடி செய்து கஷ்ட நிவாரணம் அளிக்க இந்த ஸ்தாபனம் சிந்திக்கவேண்டுமேயன்றி யுத்தத்திற்குப் பிறகு கஷ்ட நிவாரணம் அளிப்பது என்பதைப்பற்றிச் சிந்திப்பதை விட்டுவிடவேண்டும். யுத்தத்தில் நல்லது என்பது எதுவுமே இல்லையென்றால், அதில் தீரமோ அல்லது வீரமோ எதுவும் இல்லையெனின், அது வெறுக்கத் தக்கதாகவே இருக்க வேண்டும். அதை அழிக்கப் பிரசங்கங்கள் தேவையில்லை.

ஆனால், நான் உங்களுக்கு யோசனை கூற விரும்புவது, செஞ் சிலுவை ஸ்தாபனம் உள்பட யுத்தத்தின் எல்லாக் கிளைகளிலும் இருப்பதைவிட நிச்சயமாகச் சிறந்ததான ஒரு காரியமே. நான் சொல்லுவதை நம்புங்கள். இன்னும் எத்தனையோ லட்சக் கணக்கான கைதிகள் இருக்கிறார்கள். இவர்கள் தங்கள் உணர்ச் சிக்கும் வாழ்க்கை நிலைமைக்கும் அடிமைகளாகிவிட்டவர்கள். தங்கள் சொந்தத் தவறுகளினாலேயே நொந்தவர்களும் லட்சக் கணக்கில் இருக்கிறார்கள். இந்த உலகத்தில் சிதைவுற்றுப் போன குடும்பங்களும் லட்சக்கணக்கில் இருக்கின்றன என் பதையும் நம்புங்கள். சமாதான சங்கங்கள், சர்வதேச சேவையை மேற்கொள்ளும்போது, அவை செய்வதற்கு எவ்வளவோ வேலை கள் இருக்கின்றன. இப்பெரிய காரியத்தில் உலகிற்குச் சுவிட் சர்லாந்து வழிகாட்டுவதாக இருக்கட்டும்.''

மற்றொரு கூட்டத்தில் எழுந்த இதேபோன்ற கேள்விக்குக் காந்திஜி கூறியதாவது: "ராணுவ சேவையில் ஒத்துழையாமை, ராணுவமல்லாத காரியங்களில் சேவை ஆகிய இரண்டும் ஒன் றுக்கொன்று பொருந்தாதவை. ராணுவ சேவை என்பது கட் டாயமாகச் சரியான சொல் அன்று. ராணுவ சேவையை அடிப் படையாகக் கொண்ட ஓர் அரசாங்கத்திற்கு நீங்கள் ஆதர வளித்து வருவதனால், உங்களுக்குப் பதிலாக மற்றவர்களைக் கொண்டு ராணுவ சேவையை நீங்கள் அளித்துக்கொண்டுதான் இருக்கிறீர்கள். டிரான்ஸ்வாலிலும் மற்றும் சில நாடுகளிலும், ராணுவ சேவைக்குக் கூடாது என்று சிலர் தடுக்கப்பட்டிருக் கின்றனர். ஆனால், அரசாங்கத்திற்கு அவர்கள் பணம் மாத்தி ரம் கொடுக்கவேண்டியிருக்கிறது. உங்கள் ஒத்துழையாமையை நீங்கள் தரும் வரிகள் வரைக்கும்-வரிகள் விஷயத்திலும் நீட்டித் தல் வேண்டும். நமது அரசாங்கம் கோலியுள்ள எல்லையைத் தாண்டி, நமக்கு அண்டையில் இருப்பவர்களுக்கும் நமது சேவையை விரிவாக்கிக்கொண்டு போவதற்கு ஓர் அளவே கிடை யாது. இந்த எல்லைகளைக் கடவுள் என்றுமே செய்ததில்லை.''

**கேள்வி** : யுத்த தளவாடக் குறைப்பு, பெரிய வல்லரசு களையே பொறுத்தது ; அப்படி இருக்க சிறியதும், நடுநிலைமை வகிக்கும் நாடுமான சுவிட்சர்லாந்தும் தன்னுடைய யுத்த தளவாடங்களைக் குறைத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்கப் படுவானேன் ?

**பதில் :** உங்கள் நாட்டில் நிலவும் நடுநிலையைக் கொண்டு சுவிட்சர்லாந்துக்கேயன்றி எல்லா நாடுகளுக்கும் நான் சொல்லு கிறேன். ஐரோப்பாவின் மற்றப் பகுதிகளுக்கு இச்செய்தியை நீங்

கள் பரப்பவில்லையெனின், எல்லா குற்றச்சாட்டிலிருந்தும் நான் விடுபட்டவனுவேன். சுவிட்சர்லாந்து ஒரு நடுநிலைமைப் பகுதி ; அது போருக்குப் போகாத ஒரு நாடு. சுவிட்சர்லாந்துக்கு ராணுவமே தேவையில்லை என்பதற்கு இது ஒன்றே காரணமாகிறது. இரண்டாவதாக, விருந்தினரை ஏற்கும் உங்கள் குணத்திலும், வசதியான நிலையில் நீங்கள் இருப்பதன் காரணமாகவும், எல்லா நாட்டினரும் உங்களிடம் வந்துகொண்டிருக்கிருர்கள். ராணுவம் இல்லாமலேயே இருப்பதற்கு வேண்டிய தைரியம் உங்களுக்கு இருக்கிறது என்பதைக் காட்ட உலகிற்கு ஒரு பாட போதனை அளிப்பது உங்களுக்குச் சாத்தியமாக இருக்கவேண்டும்.

**கேள்வி :** ராணுவமில்லாத நடுநிலைமை நாடு, மற்ற நாடுகள் நாசமடைய எவ்விதம் அனுமதிக்க முடியும்? சென்ற யுத்தத்தின்போது எங்களுடைய ராணுவம் எல்லையில் தயாராக இல்லாதிருந்தால் நாங்களும் நாசமாகியிருப்போம்.

**பதில் :** நான் வீண் பகற்கனவு காண்பவன் அல்லது பைத்தியக்காரன் என்று கருதப்பட்டுவிடும் அபாயத்தையும் பொருட்படுத்தாமல் இக் கேள்விக்கு நான் அறிந்த ஒரே வகையில்தான் பதில் சொல்ல வேண்டும். அண்டைநாடு ஒன்றை இன்னெரு நாட்டின் ராணுவம் நாசமாக்க ஒரு நடுநிலைமை நாடு அனுமதிப்பது கோழைத்தனமாகும். ஆனுல், யுத்தச் சிப்பாய்களுக்கும் அகிம்சை சிப்பாய்களுக்கும் பொதுவான காரியங்கள் இரண்டு உண்டு. நான் சுவிட்சர்லாந்தின் குடியாகவும், அதன் ஐக்கிய அரசாங்கத்தின் ஜனுதிபதியாகவும் இருந்திருந்தால், நான் என்ன செய்திருப்பேன் ? படையெடுத்து வரும் ராணுவத்திற்கு எந்தவிதப் பொருள்களையும் கொடுக்க மறுத்து, புக வழிவிடவும் மறுத்திருப்பேன். இரண்டாவதாக, சுவிட்சர்லாந்திலேயே ஒரு *தெர்மோபைலேயே திரும்பி நடத்திக் காட்டியிருக்க வேண்டும். ஆண்கள், பெண்கள், குழந்தைகள் ஆகியோரைக்கொண்ட உயிருள்ள மதில் ஒன்றை எழுப்பி, உள்ளே வருவதாயின் எங்கள் சவங்களின் மீது நடந்து போங்கள் என்று படையெடுத்துவருவோரை நீங்கள் அழைத்திருக்க வேண்டும். இந்த

---

*க்ஸெர்க்ஸஸ் என்ற பாரசீக மன்னன் கி. மு. 480-இல் பெரும்படையுடன் கிரேக்க நாட்டைக் கைப்பற்ற வந்தபோது, ஸ்பார்ட்டாவின் அரசன் லியோனிடாஸ், தன் நாட்டைக் காப்பாற்ற தேர்ந்தெடுத்த,300வீரர்களுடன் குறுகிய மலைக்கணவாயான தெர்மோபைலே என்ற இடத்தில் நின்று போரிட்டு வீரசொர்க்கம் புகுந்தான். இச்சிறு படையினர் காட்டிய தீரமிக்க செயல்களினுல் பாரசீகர் சிதறி ஓடினர். கட்டுப்பாடான ஒரு சிறுபான்மையினர் எடுத்துக்கொள்ளும் முயற்சி வெற்றியைத் தருவதற்கு இந்தத் தெர்மோபைலே போரை உபமானமாகக் கூறுவர்.

கைய காரியம் மனித அனுபவத்திற்கும் சகிப்புக்கும் மிஞ்சியது என்று நீங்கள் சொல்லலாம். அப்படி அல்ல என்றே நான் கூறுவேன். அது முற்றிலும் சாத்தியமானதே. சென்ற ஆண்டு குஜராத்தில் பெண்கள் சற்றும் பின்வாங்காமல் தடியடியின் முன்பு நின்றனர். பிஷாவரிலோ ஆயிரக்கணக்கானவர்கள் பலாத்காரத்தில் இறங்காமல் தங்கள்மீது பொழிந்த துப்பாக்கித் தோட்டாக்களை ஏற்று நின்றனர். இன்னுமொரு நாட்டுக்குள் கஷ்டமின்றிப் போக வழி வேண்டுமெனக் கேட்கும் ஒரு ராணுவத்தின் முன்பு இந்த ஆண்களும் பெண்களும் நிற்கிறார்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். அவர்களையெல்லாம் கொன்றுவிட்டு அவர்கள் மீதேறிப் போய்விடக்கூடிய மிருகத்தனமான ராணுவம் அது என்று நீங்கள் கூறலாம். அவ்விதமாயினும், அடியோடு அழிக்கப்படுவதற்கு உங்களை நீங்களே அனுமதித்துக்கொண்டதன் மூலம் அப்பொழுதும் நீங்கள் உங்கள் கடமையை நிறைவேற்றியவர்களாவீர்கள் என்றே கூறுவேன். ஒரு பாவமும் அறியாத ஆண்கள், பெண்களைக் கொன்றுவிட்டு அவர்களின் சவத்தின்மீது நடந்துசெல்லத் துணியும் ஒரு ராணுவம், அதே காரியத்தைத் திரும்பவும் செய்ய முடியாது. ஆண்களும், பெண்களும் அடங்கிய பொதுமக்களுக்கு அப்படிப்பட்ட தைரியம் இருக்குமா என்பதை நீங்கள் வேண்டுமானால் நம்ப மறுக்கலாம். அப்படியாயின், அகிம்சை உறுதிமிக்கது என்பதை நீங்கள் ஒப்புக்கொண்டாக வேண்டும். திடவுள்ளம் படைத்தவர்களின் ஆயுதமாக அது கருதப்படுகிறதேயன்றிப் பலவீனமானவர்களின் ஆயுதமாக அது இல்லவே இல்லை.

**கேள்வி** : அகிம்சையில் நம்பிக்கையுள்ள ஒரு சிப்பாய் ஆகாயத்தை நோக்கிச் சுட்டு இம்சையைத் தவிர்க்கலாமா?

**பதில்** : ஒரு சிப்பாய் தானே ராணுவத்தில் சேர்ந்துவிட்ட பிறகு, இம்சையைத் தவிர்ப்பதற்காக ஆகாசத்தை நோக்கிச் சுட்டதாகத் தன்னைத் தானே புகழ்ந்துகொண்டால், அப்படிப்பட்டவன் தன்னுடைய தைரியத்திற்கோ அல்லது தன்னுடைய அகிம்சா தருமத்திற்கோ மதிப்பைத் தேடியவனாக மாட்டான். என்னுடைய கொள்கை முறைப்படி, பொய்மை, கோழைத்தனம் ஆகிய இரண்டு குற்றங்களையும் செய்தவனாகவே அவன் கருதப்படுவான். தண்டனையிலிருந்து தப்புவதற்காக ராணுவத்தில் சேர்ந்துகொண்டது கோழைத்தனக் குற்றம். சிப்பாயாகச் சேவை செய்வதாகப் படையில் சேர்த்துவிட்டு எதிர்பார்க்கிறபடி சுடாதிருந்துவிடுவது பொய்மைக் குற்றம். இத்தகைய காரியம், யுத்தத்தை எதிர்த்துப் போராடும் லட்சியத்திற்கு

அவமதிப்பை உண்டாக்கும். யுத்த எதிர்ப்பாளர்கள், ஸீஸரின் மனைவியைப் போலச் சந்தேகத்திற்கு இடமளிக்காதவர்களாக இருக்க வேண்டும். அவர்களுடைய பலமெல்லாம் பிரச்னையின் ஒழுக்கத்தை முற்றிலும் அனுசரித்து நடப்பதிலேயே இருக்கிறது.

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது.] —'எங் இந்தியா' – 31—12—1931

## 14

# சமாதானத்தின் வல் விதி

*[1936-இல் அபிஸீனியா மீது இத்தாலியின் படையெடுப்பு ஆரம்பமானபோது மகாத்மா காந்தி, நியூயார்க் நகரில் பிரசுரமாகும் 'காஸ்மாபாலிடன்' என்ற பத்திரிகையின் ஆசிரியருக்குத் தந்தி மூலம் ஒரு செய்தி அனுப்பினர். அச்செய்தியே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]*

நிரந்தரமான சமாதானம் ஏற்படும் என்பதை நம்பாதிருப்பது மனித சுபாவத்தில் தெய்வத் தன்மை உண்டு என்பதில் நம்பிக்கை இல்லாததாகும். இதுவரையில் அனுசரித்த முறைகள் தோல்வி அடைந்திருக்கின்றனவென்ருல், இதற்காக முயற்சி எடுத்துக்கொண்டவர்களிடம் அதில் ஆழ்ந்த பற்றின்மையே அதற்குக் காரணம். இக்குறையை அவர்கள் உணர்ந்து கொண்டுவிட்டனர் என்பதல்ல. ரசாயனப் பொருள்களை ஒன்று கூட்டுவதனல் அடைய வேண்டிய பலனை, அதற்கான முறைகளை முற்றிலும் நிறைவேற்றினலன்றி அக்கூட்டு எவ்விதம் அசாத்தியமோ அது போலவே, செய்ய வேண்டியவைகளை அரைகுறையாக நிறைவேற்றிவிடுவதனலும் சமாதானத்தை அடைந்துவிட முடியாது. நாசப்படுத்தும் இயந்திரங்களின்மீது ஆதிக்கம் வகித்துவரும் மனித வர்க்கத்தின் தலைவர்களெனக் கருதப்படுவோர், அந்த இயந்திரங்களின் உபயோகத்தை அதனல் ஏற்படும் விளைவுகளுடன் கைவிட முன் வந்தால், நிரந்தரமான சமாதானம் நிலவ முடியும். இவ்வுலகத்தில் இருக்கும் பெரிய வல்லரசுகள், தங்களுடைய ஏகாதிபத்திய எண்ணங்களைக் கைவிட்டாலன்றி, இது நிச்சயமாகக் கைகூடாது. இந்தப் பெரிய நாடுகள், ஆத்மாவை அழிக்கும் போட்டியில் நம்பிக்கையையும், தேவைகளைப் பெருக்கி அதனல் சொத்துடைமைகளை அதிகரித்துக்கொள்ளும் ஆசையையும் விட்டொழித்தாலன்றி இது மேலும் சாத்தியமானதன்றெனத் தோன்றுகிறது. இந்தத் தீமைக்கு மூல காரணம், உண்மையான கடவுளிடம் உறுதியான நம்பிக்கை ஏற்படாததுதான்

என்பது எனது கருத்து. ஏசுவின் உபதேசத்தை நம்புவதாகக் கூறும் இவ்வுலகத்து மக்கள், அவரைச் சமாதான மன்னர் என்று வருணிக்கிறவர்கள், அந்த நம்பிக்கையை நடைமுறையில் ஒரு சிறிதேனும் காட்டாமல் இருப்பது மனித வர்க்கத்தில் தென்படும் மிகத் துன்பமான விஷயமாகும். உள்ளன்போடு கிறிஸ்துவை வழிபடுகிறவர்கள், அவருடைய உபதேசங்களை ஒரு சில காரியங்களுக்கென ஒதுக்கி வைப்பதைக் காணும்போது வேதனையாக இருக்கிறது. மனித வர்க்கத்தின் முக்கியமான நற்பண்புகளை, மனித இனத்திலுள்ள மிக மோசமானவர்கள்கூட வளர்த்துக்கொண்டுவிட முடியும். குழந்தைப் பருவத்திலிருந்தே இதை எனக்குப் போதித்திருக்கிறுர்கள்; இந்த உண்மையை அனுபவத்தின் மூலமும் சோதித்திருக்கிறேன். சந்தேகமின்றி எல்லோருக்கும் சாத்தியமானதாகவுள்ள இதுவே மனிதனை ஆண்டவனின் மற்றப் படைப்புக்களிலிருந்து வேறுபடுத்துகிறது. துறக்கும் இம்மகத்தான செயலை நிபந்தனையின்றி ஒரு பெரிய நாடு செய்யுமாயின், இந்த உலகில் கண்கூடான சமாதானம் ஏற்படுவதை நம்மில் பலர் நம் வாழ்நாளிலேயே காணலாம்.

—'எங் இந்தியா' 31—12—1931

# 15

# ஐரோப்பிய நாகரிகம்

'காட்ஸ் டான்ஸ்கே மகஸீன்' என்ற பத்திரிகையில் வெளியான ஒரு கட்டுரையின் சாரத்திற்கு மொழிபெயர்ப்பை ஒரு டேனிஷ் நண்பர் எனக்கு அனுப்பியிருக்கிறுர். இதற்கு 'ஐரோப்பிய நாகரிகமும் காந்தியும்' என்று தலைப்புக் கொடுத்திருக்கிறுர். அவருடைய தலைப்பையே 'எங் இந்தியா'விலும் பிரசுரிப்பதில் என் பெயரை நீக்கியிருப்பதோடு அனுப்பியிருக்கும் கட்டுரையில் என் கருத்தைப்பற்றிக் கூறியிருக்கும் பகுதிகளையும் நீக்கியிருக்கிறேன். 'எங் இந்தியா' வாசகர்களுக்கு என் கருத்துக்கள் புதியனவல்ல. கிடைத்திருக்கும் மொழிபெயர்ப்பு இது:

"தன்னுடைய நாகரித்தைப்பற்றியும் தன்னுடைய கிறிஸ்தவ நாகரிகத்தைக் குறித்தும் ஐரோப்பா பெருமைப்பட்டுக்கொள்ளுகிறது.

"உலகம் முழுவதிலும் வெள்ளை இனத்தவரின் வெற்றி மிகுந்த வாழ்க்கை இக்காலத்தில் எங்கும் வழங்கும் குழூக்குறியாக இருக்கிறது.

"அந்த இனத்தின் வாழ்க்கை வெற்றி மிகுந்தது என்பது உண்மையே. ஆனல், நாகரிகம், மனிதத்தன்மை, கிறிஸ்தவ தருமம் ஆகியவைகளின் கதி

என்ன ? நீதி, தன்னுடைய முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டு கண்ணீர் விடுகிறது. இனத்துவேஷத்திற்கும் இரக்கமற்ற செய்கைகளுக்கும் பெயர் போன இடத்தைக் காண வேண்டுமா? அப்படியானல், ஐரோப்பாவுக்குப் போங்கள்.

"சீனவில் இருக்கும் கிறிஸ்தவ வல்லரசுகளின் கூட்டான கொள்கையைப் பாருங்கள். முதல் காட்சி: லாபம் அடிக்கும் ஐரோப்பியர்கள் பல தலை முறைகளாக நடத்திவரும் வெட்கக்கேடான பறிமுதல். இரண்டாவது காட்சி: ஆத்திரம் அடைந்த சுதேசிகள் ஒரு ஜெர்மன் ஸ்தானிகரைக் கொன்று பதிலுக்கு வஞ்சம் தீர்த்துக்கொள்வது. மூன்ருவது காட்சி: ஜெர்மன் தலைமையில் ஐரோப்பா ஜெர்மன் 'இனவெறிப்போரை'த் தொடுக்கிறது. இதைக் குறித்துக் கிண்டலாக எழுதும் 'ஸிம்பிளிஸிஸிமஸ்' என்ற பத்திரிகை, 'கிறிஸ்தவ வேதத்தின் மும்முரமான பிரசாரத்திற்கும் சீன நாய்களைக் காலின்கீழ் அடக்கியதற்கும் வாழ்த்து' என்று ஒரு ஜெர்மன் அதிகாரி சொன்னதாகக் கற்பனை செய்து எழுதியிருக்கிறது.

"'சிவப்பு மயிர்க் காட்டுமிராண்டிகள்' என்றும், 'சிவப்பு மயிர்ப் பேய்கள்' என்றும் சீனர்கள் நம்மைப் பற்றிக் கூறுவதும் நியாயமே.

"இப்பொழுது ஐரோப்பாவில் இருக்கும் சில மனித இனங்களைச் சற்றுப் பார்ப்போம். இதில் இத்தாலியர் கௌரவமாகக் குறிப்பிடப்பட வேண்டியவர்கள். ஏனெனில், காட்டுமிருகங்கள், மனிதரைக் கடித்துத் தின்பதை வேடிக்கை பார்க்கும் கொடுமைக் குணத்தை கி.பி.400-இல் அவர்கள் கைவிடும்படி கிறிஸ்தவம் செய்தது. இந்தக் காட்சியை எவ்வளவு வேண்டா வெறுப்புடன் ரோம் நகரத்தவர் கைவிட்டனர் என்பதற்கு ஒரு விசித்திரமான கதையும் கூறப்படுகிறது. சமயம் தழுவியவர்களைச் சர்க்கசுக்குப் போகாமல் தடுப்பதில் கஷ்டம் இருப்பதை ஒரு பாதிரி கண்டார். அவர்களை நோக்கி அப்பாதிரியார், 'அருமைக் கிறிஸ்தவர்களே! மிருகத்தனமான, நீச மதத்திற்குரிய இவ்விளையாட்டுக்களை நீங்கள் விட்டுவிட வேண்டும். இதற்குப் பரிசாகச் சொர்க்கத்தில் உங்களுக்கு ஒன்று கிடைக்கும். அதிலிருந்து நோக்குவதற்கு ஒரு துளை வழி உண்டு. பாபிகள் நரகத்தில் எப்படி வதைக்கப்பட்டு வருகிருர்கள் என்பதை அதன் வழியாகப் பார்க்க நீங்கள் அனுமதிக்கப்படுவீர்கள்!' என்ருர். என்னே அருமையான, சிறந்த 'கிறிஸ்வத'க் கருத்து.

"கிறிஸ்தவத்தை மிகுதியாக அனுசரிக்கும் நாட்டினரான ஸ்பானியர்களின் பண்பின் அளவைக் காட்டுவதற்கு ஓர் உண்மை மாத்திரம் போதும். அந்நாட்டு மக்களுக்கு இன்றளவும் மிகப் பிரியமான விளையாட்டாக இருந்து வருவது காளையுடன் சண்டையிடுவது. மிருகங்களைச் சித்திரவதை செய்பவரே அவர்களுடைய நாட்டின் சிறந்த வீரரெனக் கருதப்படுவார்.

"பிரான்ஸ் வேட்டையை முக்கியப் பொழுதுபோக்காகக் கொண்டிருக்கிறது.

"இங்கிலாந்தோ இந்தக் கண்ணியமான விளையாட்டையே அனுசரித்துக் கொண்டு வருகிறது. சமாதானத்திற்கும் தியானத்திற்கும் முக்கியமான கிறிஸ்தவ விழாவாகிய கிறிஸ்துமசுக்காகப் பிரசுரிக்கப்படும் படங்களோடுகூடிய பத்திரிகைகளைப் பாருங்கள்! டென்மார்க்கில் நடந்த ஒரு விருந்தில், பக்கத்தில் இருந்த ஓர் ஆங்கிலப் பெண்மணியிடம் தாம் ஒரு குள்ளநரியைச் சுட்டதாக ஒரு டேனிஷ் கனவான் கூறினர். 'அப்படியா? அதைச் சொல்லாதீர்கள்! நரியைச் சுட்டீர்களா?' என்று அவர் கையைப் பிடித்துக்கொண்டு அம்மாது உரத்துச் சொன்னள். பிறகு வெறுப்போடு தன் முகத்தை அவரிடமிருந்து திருப்பிக்கொண்டு

விட்டாள். ஏனெனில், அப்பரிதாபகரமான மிருகத்தைத் துன்புறுத்திச் சாக அடிக்காதது ஒரு கனவானுக்கு அழகல்ல! ஒரு டேனிஷ் பாதிரி செங்கடல் வழியாகக் கப்பலில் பிரயாணம் செய்துகொண்டிருந்தார். பிரயாணிகள் கடலில் வீசி எறியும் நாணயங்களைச் சுதேசிகள் கப்பலிலிருந்து கடலில் குதித்து எடுத்துக்கொண்டிருந்தார்கள். இவர்கள் கப்பல் தளத்திலிருந்து கடலில் குதிப்பது அக்கப்பலில் இருந்த ஆங்கில மாதர்களுக்குத் திருப்தி அளிக்கவில்லை. அதிகப் பரபரப்பை உண்டாக்குவதாக இருப்பதற்காகக் கொடிமரத்திலிருந்து குதிக்குமாறு அந்தச் சுதேசிகளுக்கு அவர்கள் உத்தரவிட்டனர். அபினி யுத்தமும், முன் பல நூற்றாண்டுகளாக அயர்லாந்து நடத்தப்பட்ட விதமும் ஆங்கில ஒழுக்கத்திற்கு மற்ற எடுத்துக்காட்டுக்கள். கட்டாயப்படை திரட்டப் படுவதற்கு ஆங்கில மக்கள் எதிர்த்ததன் காரணமாக அதிருஷ்டவசமாகப் பலவந்தமாகப் பீரங்கிக்கு இரையாவதை இங்கிலாந்து தவிர்த்துக்கொண்டது. மகாயுத்தத்தில் வலியச் சேர்ந்த இந்தியருக்கு அளிப்பதாகச் சொன்ன வெகுமதி என்ன? அமிர்தசரஸ் ஒன்றைச் சொன்னாலே போதும்.

"போல்ஷிவிஸத்திற்கு முன்னால் ஜெர்மனி மிகவும் கொடுமையான 'எஜமான் ஒழுக்கத்'தைச் சிருஷ்டித்துக்கொண்டிருக்கிறது. மதிப்பில் குறைந்துள்ள நாடுகள் முறைப்படி அடக்கப்பட்டு வருகின்றன. 1895-ஆம் ஆண்டு அகில ஜெர்மானிய திட்டம், 'முழு ஜெர்மானி'யருக்கு வோட்டுப் போடவும், பார்லிமெண்டுகளுக்கும் உத்தியோகங்களுக்கும் தேர்ந்தெடுக்கப்படவும், நிலச் சொத்துக்களை வாங்குவதற்கும் சலுகைகளை அளிக்கிறது. உடலுழைக்கும் கீழ்த் தரத்தவர்களாக வெளியார், தம் நாட்டில் இருப்பதைக் சகித்துக் கொள்கின்றனர் ஜெர்மானியர். ஒரு டேனிஷ் டாக்டர். ஒரு ஜெர்மன் ஆஸ்பத்திரிக்குப் பார்வையாளர் என்ற முறையில், ஓர் உடலிலிருந்து இன்னுமோர் உடலுக்கு உயிர்த் தசைகள் மாற்றி வைக்கப்படுவதை ஒரு தடவை பார்த்தார். போதுமான அளவுக்கு எப்படித் தசைகள் கிடைக்க முடியும் என்று அந்த டாக்டர் ஆச்சரியப்பட்டார். அதற்கு அந்த ஜெர்மன் டாக்டர், 'எங்களிடம் போதுமான போலந்துக்காரர்கள் இருக்கிறார்கள்' என்றாராம். 1912-ஆம் வருடத்தில் டெல்பிரக் சட்டம், ஜெர்மனியிலிருந்து குடியேறப் போகிறவர்கள் ஜெர்மன் சாம்ராஜ்யப் பிரஜைகளாக ரகசியமாக இருந்து வர உதவியது. சந்தேகப்படாத வெளிநாடுகளில் அவர்கள் பிரஜா உரிமைகளைப் பெற்ற பிறகு விசால ஜெர்மானியத்திற்கு ஆயிரக்கணக்கான உளவாளிகளை உண்டாக்கிக்கொள்ளுவதற்குச் சிறந்த, கண்ணியமான முறை இது. கட்டாய ராணுவ சேவைச் சட்டம், தங்கள் யுத்தங்களில் பீரங்கிகளுக்குப் பலியாவதற்கு மதிப்பில் குறைந்துள்ள நாட்டின் மக்கள் ஏராளமாக ஜெர்மனிக்குக் கிடைக்கும்படி செய்தது. இப்படிச் சிக்கிக்கொண்டவர்களின் உறவினர்கள், தம் இடங்களில் மிகவும் மிருகத்தனமான முறையில் நடத்தப்பட்டார்கள். வெளிநாட்டின் வெறுக்கத் தக்க லட்சியத்திற்காக வடக்கு ஷெல்ஸ்விக்கிலிருந்த 6,000 டேனிஷ்காரர்கள் இவ்விதம் படுகொலை செய்யப்பட்டனர். 'ஸிவில் படை திரட்ட'லின் மூலம் ஆயிரக்கணக்கான பெல்ஜியம் காரர்களை அடிமைகளாகக்கொண்டு போய்விட்டனர். இத்திக்கற்றவர்கள் சில சமயங்களில் போர் முனைக்கு அருகில் வேலை செய்யும்படி கட்டாயப்படுத்தப் பட்டனர்.

"போல்ஷிவிஸம், தன்னுடைய அதிருஷ்டவசமான ஆட்சிக்குப் பெரிய ஜெர்மன் அதிகாரிகளுக்குக் கடமைப்பட்டிருக்கிறது. அகண்ட ஜெர்மனியின் மிருகத்தனமான முறைகளும் பொய்களும் துரதிருஷ்டவசமாக அனுசரிக்கப்படுவதுடன் அவற்றில் மிஞ்சியும் இருக்கிறார்கள் போல்ஷிவிக்குகள். இதில் பூதவெறி

யின் தன்மையையும் காண்கிறோம். வெறும் பைத்தியக்காரத்தனத்திலேயே அது போய் முடிகிறது. ஒரு போல்ஷிவிக் கவிதையில் அடங்கியிருப்பதை இங்கே குறிப்பிடலாம். ஏ.சப்ருத்னி 1922–இல் அதைப் பிரசுரித்திருக்கிறார். அந்தப் பாட்டாவது: "காதலைப்பற்றிப் பாட நீ விரும்புகிறாய். ரத்தம், தூக்கிலிடுவது, சாவு ஆகியவைகளைப்பற்றிய மற்றப் பாடல்களை உனக்கு நான் சொல்லிக் கொடுக்கிறேன். லைலாக் மலரின் மெல்லிய மணத்தை அனுபவிப்பது போதும்! கொலையாகிய மலர்களையே நான் விரும்புகிறேன். தன்னண்டையில் இருப்போரைநேசிப்பவனை வதை செய்து கொல்லுவதிலுள்ள இன்பமே மிகப் பெரிய இன்பம். ஒருவனைத் துண்டுதுண்டாக வெட்டுவதில் எவ்வளவு வேடிக்கை உள்ளது! தூக்கிலிடுவோன், அவன் கழுத்தை மெல்ல நெரிக்கும்போது பயத்தினால் அவன் எப்படி நடுங்குகிறான்! அவன் துடிப்பதைப் பார். பிறருக்குக் காயங்களை உண்டாக்குவது எவ்வளவு இன்பமானது! ஒரு கயிறு அல்லது ஒரு துப்பாக்கி வேட்டு. நாங்கள் தரும் இம் மரண தீர்ப்பைக் காதால் கேளுங்கள்! – சுவரில் நிறுத்து, சுட்டு வீழ்த்து, மண்ணுக்குள் மறைவதே உங்கள் விதி.'

"எஜமான்களின் ஒழுக்கம், பொய்யின் கொள்கை, கொலைக் கொள்கை ஆகிய ஐரோப்பிய ஒழுக்கத்தின் மூன்று அம்சங்கள் வற்புறுத்தப்படுகின்றன. ஐரோப்பியத் தரத்தை எடுத்துக் காட்டுவதற்காக 1915–இல் கீலில் பாம்கார்டன் என்ற இடத்தில் பேராசிரியர் தியோல் செய்த ஒரு பிரசங்கத்தைக் குறிப்பிடுகிறேன் :

"ஏசுவின் மலைப் பிரசங்கம் சாதாரணமாக யுத்தத்தை விலக்கிவிடுகிறது என்று பக்தியுள்ள அப்பேராசிரியர் கூறுகிறார். ஆனால், இந்த விதி தனிப்பட்டவர்களுக்கே கூறப்படுகிறது. 'நமது தேசீயத்தரத்தை விட நமது ஒழுக்க வாழ்வின் மற்றொரு பகுதியையே மலைப் பிரசங்கத்தில் காணும் நீதிமுறைமை கூறுகிறது. தனிப்பட்ட ஆத்மாவுக்குள்ள விதிகள் அதில் மீறப்படவில்லை. ஏனெனில், நமது தேசீய, சமூக வாழ்வுக்கும் அதுவே சட்டமாக இல்லை என்பதை உணருகிறோம்' என்கிறார். 'ஆட்சியைக் கடவுள் படைத்திருக்கிறார். முழுச்சக்தியுடன் அதைப் பாதுகாத்தாக வேண்டும்' என்கிறார். பேராசிரியர் பி, 'தன்னுடைய பெரிய லட்சியங்களை நிறைவேற்றிக்கொள்ளுவதற்காக எல்லா விதமான கடுமையான முறைகளையும் உபயோகிப்பதும், ஆக்கிரமிப்புப் போரில் இறங்குவதுங்கூட, பெரிய நாடுகளின் தன்மை' என்கிறார். 'யுத்தத்தை ஒப்புக்கொள்வதோடு அதை முற்றிலும் கண் மண் தெரியாத நிலைக்குக் கொண்டு போகவும் கடமைப்பட்டிருப்பதாக ஜெர்மானியராகிய நாங்கள் கருதுகிறோம். லூஸிடானியாவின் அழிவுக்காகக் குதூகலப்படாதவனோ, அசைக்க முடியாத ஜெர்மன் படையின் வன்மையைக் குறித்து மகிழ்ச்சி அடையாதவனோ சரியான ஜெர்மானியனல்ல' என்றார்."

மேலே கண்ட விஷயங்கள் கோரமான சித்திரத்தையே காட்டுகின்றன. இது, ஒருவேளை மொத்தத்தில் உண்மையாகவும் இருக்கக்கூடும். ஐரோப்பிய நாடுகளின் நடவடிக்கைகளின் சாராம்சம், ஏசுநாதரின் மலைப் பிரசங்கத்தை மறுப்பதாகவே இருக்கிறது என்று கூறலாம் எனக் கருதுகிறேன். ஐரோப்பியப் படைப் பலத்தைப் பார்த்து மலைத்துப் போய் நாம் வழி தவறிவிடக்கூடாது என்று எச்சரிப்பதற்காகவே மேலே கண்ட கட்டுரையை இங்கே கொடுத்திருக்கிறேன். அதில் கொடுக்கப்

பட்டிருக்கும் காட்சி ஐரோப்பாவெங்கும் இருக்குமாயின், ஐரோப்பாவுக்கும் உலகிற்கும் அது துயர் மிக்கதாகும். யுத்த வெறியையும் பொருட்செல்வத்தில் நசையுடன் அலைந்துகொண்டிருப்பதையும் எதிர்த்துப் போராடுவதில் தம் முழுச் சக்தியையும் செலுத்தும் ஐரோப்பிய ஆண்களும் பெண்களும் ஏராளமான பேர் அதிருஷ்டவசமாக இருந்தும் வருகின்றனர். இத்தகையோர் நாளுக்கு நாள் தொகையிலும் செல்வாக்கிலும் பெருகி வருகின்றனர் என்று நம்புவதற்குக் காரணங்கள் இருக்கின்றன. ஐரோப்பாவின் மிதமிஞ்சிய காரியங்களை, ஐரோப்பாவின் சிறந்த அறிஞர்கள் கடுமையாகக் கண்டித்து வருகிருர்கள். சரியானபடி கட்டுத்திட்டத்திற்குள் அடக்கி வைக்கவும், தீரத்தோடு போராடிக்கொண்டு வருகிருர்கள். ஐரோப்பாவில் காணும் மிதமிஞ்சிய செயல்களுக்கு உடன்பட்டுவிடாமல், புதிதாகத் தோன்றும் விழிப்பில் பங்கு கொண்டு, அதைத் தடுப்பதற்குப் பதிலாக அது அதிக முன்னேற்றம் அடையும்படி செய்வது இந்தியாவின் பாக்கியமாகட்டும்.

—'எங் இந்தியா' – 15—10—1925.

## 16

# மாறுதலை அடையட்டும்

[மேலே கண்ட கட்டுரையில் கொடுக்கப்பட்டிருக்கும் டேனிஷ் பத்திரிகை கூறிய விவரம் தவருனது என்று ஒரு ஜெர்மன் நண்பர் மகாத்மாவுக்கு ஒரு நீண்ட கடிதம் எழுதினர். அந்த மறுப்பைக் காந்திஜி பிரசுரித்து 'எங் இந்தியா'வில் எழுதியது கீழே கொடுக்கப்படுகிறது.]

ஜெர்மனியைப் பற்றியோ, ஜெர்மானியரைப்பற்றியோ இழிவுபடுத்தும் எண்ணம் எனக்கு இல்லை என்று இக்கடிதத்தை எழுதியவர் உறுதியாக நினைப்பது சரியே. யார் அவ்வாறு கொள்ளத் துணிவர்? ஜெர்மானியர் வீரம் மிகுந்த மக்கள். அவர்களுடைய உழைப்பும், அறிவு ஆற்றலும், அவர்களுடைய வீரமும் உலகத்தையே திகைப்புறச் செய்கின்றன. சமாதான இயக்கத்திற்கு அவர்கள் தலைமை வகித்து நடத்த வேண்டும் என்பதே எவரும் விரும்புவது. போன யுத்தத்தில் அவர்கள் தோல்வியுற்றனர்; அழிந்துவிடவில்லை. உலகம் முழுவதையும் எதிர்த்துத் தான் உயர்வதற்குப் பதிலாக, பொதுவாக உலகத்தின் முன்னேற்றத்துக்காக ஜெர்மனி தன்னுடைய அபாரமான சக்தியை உபயோகிக்கும் ஒரு மாறுதலே இப்போது வேண்டியிருப்பது. உலகத்தின் மற்ற நாட்டு மக்களிடம் காண்

பது போன்று அவர்களிடத்திலும் விரும்பத்தக்க மாறுதல்கள் தோன்றி வருகின்றன என்பதற்கான அறிகுறிகள் தென்படு கின்றன.

—'எங் இந்தியா', 25—2—1926

# 17

# அகிம்சையின் உறுதியான நிலை

நியூயார்க் 'நேஷன்' பத்திரிகையிலிருந்து ஒரு நண்பர் கீழ்க்கண்ட விஷயத்தைக் கத்தரித்து அனுப்பியிருக்கிறார் :

"சிறிது காலத்திற்கு முன்பு (1924 பிற்பகுதியிலோ அல்லது 1925 தொடக்கத்திலோ) சீனவில் இருக்கும் அமெரிக்கப் பாதிரிகளில் இருபத் தைந்து பேர், பீக்கிங்கில் இருக்கும் அமெரிக்க அரசாங்கத்தின் பிரதிநிதிக்குக் கீழ்க்கண்ட கோரிக்கையை அனுப்பினர்கள்.

'கீழ்க் கையொப்பமிட்டிருக்கும் அமெரிக்கப் பாதிரிகளாகிய நாங்கள், கிறிஸ்தவ வேதத்தின் சகோதரத்துவ, சமாதானச்செய்தியைப் பரப்புவதற்காக சீனவில் இருந்து வருகிறோம். சகோதரத்துவத்தை வளர்த்து, போர்ச் சந்தர்ப்பம் எல்லாவற்றையுமே போக்கிவிடுவதாகக் கிறிஸ்துவின் புதிய மார்க்கத்தில் ஆண் களையும் பெண்களையும் நடத்திச் செல்லுவதே எங்கள் பணி. ஆகையால், எங் களையோ அல்லது எங்களுடைய சொத்துக்களையோ பாதுகாப்பதற்கு எந்த விதமான ராணுவ நிர்ப்பந்தத்தையோ, முக்கியமாக அன்னியப்படைப் பலத் தையோ உபயோகிக்க வேண்டாம் என்பதே எங்களுடைய மனமுவந்த கோரிக்கை. சட்டத்திற்கு அடங்காதவர்கள் எங்களைப் பிடித்துக்கொண் டாலோ அல்லது அவர்களால் நாங்கள் சாக நேரும்போல் இருந்தாலோ, எங்கள் தலைக்காகப் பணம் எதுவும் கொடுக்க வேண்டாம்; அவர்களை அடக்கி ஒடுக்கு வதற்கென்று படையை அனுப்பவும் வேண்டாம்; வற்புறுத்தி வாக்குறுதிகளைப் பெறவும் வேண்டாம். நியாயத்தையும் சமாதானத்தையும் உண்டாக்குவதற்கு வழி, தவறுகளைச் சகித்துக்கொண்டு பதிலுக்குப் பதில் செய்யாமல், எல்லோரி டத்திலும் எல்லாச் சமயங்களிலும் தனக்கு நல்லெண்ண உணர்ச்சி இருக்கும் படி பார்ப்பதேயாகும். இதில் நம்பிக்கை வைத்தே இக்கோரிக்கையை அனுப்புகிறோம்.

"ஆனல், அமெரிக்க ஸ்தானீகராலயமோ, சீனவில் இருக்கும் அமெரிக் கரைப் பாதுகாக்கத் தங்களுக்கு இருக்கும் அவசியத்திற்கு அம்மனு பொருத்தமானதாக இல்லை என்று பதில் அளித்துவிட்டது. மனுவில் கையெழுத் திட்டிருப்போர் சம்பந்தமாக அவசர நிலைமை ஏற்பட்டால் அனுசரிக்க வேண்டிய முறைகளில் இவர்களுக்கு விதி விலக்குக் கிடையாது என்றும் சொல்லிவிட்டது."

ஒன்றுக்கொன்று மாறுபட்ட இரு நிலைமைகள், ஒரே சம யத்தில் சரியானவையாக இருந்துவிடும் சந்தர்ப்பங்களில் ஒன்று இது. வீரமுள்ள பாதிரிமார்களைப் பொறுத்த வரையில் அவர் கள் அனுசரிக்கக்கூடியது இதைத் தவிர வேறு எதுவும் இல்லை. ஆனல், இக்காலத்திலோ இவ்விதம் செய்கிறவர்கள்

மிகச் சிலரே. இதே சீனவைப்பற்றிச் சுமார் முப்பது ஆண்டு களுக்கு முன்னல் பாதிரிகளின் தூதுக் கோஷ்டி ஒன்று காலஞ் சென்ற லார்டு சாலிஸ்பரியைச் சந்தித்து, தங்களுடைய உப தேசங்களைக் கேட்க விரும்பாத சீனர்களிடம் தங்கள் மதப் பிரசா ரத்தைச் செய்வதற்குப் பிரிட்டிஷ் பீரங்கிக் கப்பல்களின் பாது காப்பு வேண்டும் என்று கேட்கவில்லையா? அப்பொழுது அந் தத் திறமைசாலியான லார்டு, பிரிட்டிஷ்ப் படைகளின் பாது காப்பை அவர்கள் கோரினல் சர்வதேசக் கடமைகளுக்கு அவர் கள் உடன்படுவதுடன் தங்கள் மதப்பிரசார ஆர்வத்தைக் குறைத்துக்கொள்ள வேண்டும் என்ருர். அவர்களுக்கு இன்னு மொன்றையும் நினைவுபடுத்தினர்: 'பழங்காலத்தில் கிறிஸ்தவர் கள் உலகத்தின் மூலை முடுக்குகளுக்கெல்லாம் சென்று மதத் தைப் பரப்பினர்களென்ருல், ஆண்டவனைத் தவிர அவர்கள் தங் களுக்கு வேறு எந்தப் பாதுகாப்பையும் எதிர்பார்க்கவில்லை. தங் கள் உயிரையும் எப்போதும் ஆபத்தான நிலையிலேயே வைத் திருந்தார்கள்' என்ருர். நியூயார்க் 'நேஷன்' பத்திரிகை குறிப் பிட்டிருக்கும் சம்பவத்தில் அப்பாதிரிகள் இப் புராதனப் பழக் கத்திற்கே போயிருக்கிருர்கள் என்று கூறப்படுகிறது.

அமெரிக்க அரசாங்கம், இப்பொழுது அது கொண்டிருக் கும் தன்மையை விடாமல் வைத்திருக்கும்வரையில், அது இப் பொழுது அளித்திருப்பதாகக் கூறப்படும் பதிலைத்தான் அத ஞல் அளிக்க முடியும். இக்காலத்து முறையிலுள்ள தீமையை அந்தப் பதில் வெளிப்படுத்துகிறது என்பது வேறு விஷயம். அமெரிக்கக் கௌரவம் அதன் படைப் பலத்தில்தான் இருக் கிறதேயன்றி ஒழுக்க முறைமையில் இல்லை. அதன் கௌரவம் அல்லது பெயர் என்று சொல்லப்படுவதைக் காட்டிக்கொள்ளு வதற்காக அமெரிக்காவின் முழுப் படைப்பலமும் திரட்டப்படுவா னேன்? தங்களுடைய மத போதனையைச் செய்வதற்காக இருபத்தைந்து அமெரிக்கப் பாதிரிகள், யாரும் அழைக்காமல் தாங்களே சீனவுக்குச் சென்று, அப்படிப் பிரசாரம் செய்யும்போது கொல்லப்பட்டுவிட்டால், அமெரிக்காவின் கௌரவத்திற்கு என்ன தீங்கு ஏற்பட்டுவிடும்? அப்படி அவர் கள் கொல்லப்பட்டுவிடுவது அவர்கள் மேற்கொண்டுள்ள காரி யத்திற்கு மிகவும் நல்லதாகவும் இருக்கலாம். அமெரிக்க அர சாங்கம் தன்னுடைய தலையீட்டினல் துன்பத்தை ஏற்றுக்கொள் ளுவதென்ற தருமத்தில் குறிக்கிடுவதாகும். ஆனல், அமெரிக்கா தன்னையே அடக்கிக்கொள்ளுமானல், நோக்கத்திலேயே முழு மாறுதல் ஏற்பட்டதாக இருக்கும். இன்று பிரஜா உரிமைப்

பாதுகாப்பு என்பது தேசத்தின் வர்த்தகப் பாதுகாப்பு. அதாவது, பிறரைச் சுரண்டுவதற்குப் பாதுகாப்பு. இந்தச் சுரண்டலை விரும்பாத மக்கள்மீது தங்கள் வர்த்தகத்தைப் புகுத்தப் படைப் பலம் உபயோகம் வேண்டியதாகிறது. ஆகையால், மனித வர்க்கத்தின் பொதுவான நலனுக்கு ஆண்களும் பெண்களும் அமைதியுடன் ஒன்றுபட்டிருப்பதே நாடு என்பதற்கு மாருக ஒரு வகையில் கொள்ளைக் கூட்டமாகவே அது ஆகிவிட்டது. மனித வருக்கத்தின் பொதுவான நன்மைக்கென்று நாடுகள் இருக்குமாயின், அந்நாட்டினரின் பலம், உயர்ந்த ஒழுக்கமுடைமையில் இருக்கவேண்டுமேயன்றித் துப்பாக்கி மருந்தை உபயோகிப்பதிலுள்ள ஆற்றலைப் பொறுத்து இராது. இருபத்தைந்து பாதிரிகளின் செய்கை, புனரமைப்புப் பெற்ற சமூகம் அல்லது புனரமைப்புப் பெற்ற நாட்டின் மங்கலான நிழல். வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் தங்களுடைய இக்கொள்கையை அவர்கள் நிறைவேற்றி வந்தார்களா என்பது எனக்குத் தெரியாது. வேண்டாம் என்று அவர்கள் கூறியும் அமெரிக்க அரசாங்கம் பாதுகாப்பளிப்பதாக மிரட்டியிருந்தாலும், பதிலுக்கு வஞ்சம் தீர்த்துக்கொள்வதன் மூலம் தடுத்தோ, சமனப்படுத்தியோ இருக்கலாம் என்பதை நான் சொல்லத் தேவையில்லை. ஆனல், அப்படிச் செய்வதாயின் தங்களையே அடியோடு அழித்துக்கொள்ள வேண்டியிருக்கும். பலாத்காரத்தின் வழிபாட்டை எதிர்க்க வேண்டுமானுல், மிருக பலத்தையே வணங்கிக்கொண்டிருப்போர் கையாளும் முறைக்கு முற்றிலும் மாறுபட்டதான ஒன்றினுலேயே எதிர்க்க வேண்டும்.

இக்காலத்தில் மிருகபலத்தை வழிபடுவதற்கு ஒரு தத்துவமும், அதற்கு ஆதரவாக ஒரு சரித்திரமும் உண்டு என்பதை மறந்துவிடக்கூடாது. போரை வேண்டாத சிறுபான்மையினரின் தொகை மிகச் சொற்பம். ஆனல், இவர்களுக்கு அசையாத நம்பிக்கையும் இருந்துவருமாயின், மிருகபலத்தினிடம் பயப்பட வேண்டியதில்லை. ஆனல், மிருகபலமின்றியே சமூகம் ஒன்றுபட்டிருக்கும்படி செய்வது சாத்தியம் என்ற நம்பிக்கை எப்படியோ குறைவாக இருக்கிறது. என்ருலும், ஒருவர் மட்டுமே உலகம் முழுவதையும் எதிர்த்து நிற்க முடியும் என்ருல், இரண்டு பேர் அல்லது அதிகமான பேர் சேர்ந்து ஏன் அப்படிச் செய்ய முடியாது? இதற்குச் சொல்லப்படும் விடையையும் நான் அறிவேன். நம்மீது சந்தடியின்றிப் படர்ந்துகொண்டு வரும் புரட்சியின் சாத்தியங்களைக் காலம் ஒன்றே காட்ட முடியும். காரியம் இப்பொழுதே நடக்கத் தொடங்கிவிட்ட

போது, நடக்குமா நடக்காதா என்று ஆராய்ச்சி செய்வது வீணே. நம்பிக்கையுள்ளவர்கள், தெளிவான பலனைக் காட்ட முடியாத ஆரம்ப முயற்சியில் சேர்ந்துகொள்வார்கள்.

–'எங் இந்தியா', 21-10-1926

# 18

# வாளுக்கு எதிராக ஆத்மா

'மை மாகஜின்' பழைய பிரதியிலிருந்து கீழ்க்கண்ட சுவையுள்ள பகுதியை ஒரு நண்பர் அனுப்பியிருக்கிறார்:

"பிரான்ஸின் சக்கரவர்த்தி நெப்போலியனைவிட வேறு எந்தப் போர் வீரனும் யுத்தங்களினால் அதிகப் பலனைக் கண்டதில்லை. ஆரம்பத்தில் ஏழைக் கார்ஸிகானிய லெப்டினெண்டாக இருந்த நெப்போலியன், சில காலம் ஐரோப்பா எங்கும் ஆதிக்கம் செலுத்தி வந்தார். பல நாடுகளின் எல்லைகளையெல்லாம் மாற்றிவிட்டார்; சிம்மாசனங்களையெல்லாம் கவிழ்த்துவிட்டார். என்றாலும், பலாத்காரத்தை நம்பியிருப்பது தவறு என்று நெப்போலியனுக்குத் தெரியும். அவர் தோற்கடிக்கப்பட்டு நாடு கடத்தப்பட்ட பிறகு அல்ல, அவர் வெற்றியின் உச்சத்தில் இருந்த காலத்திலேயே இவ்வாறு சொன்னார்: 'உலகத்தில் இரு சக்திகள் உள்ளன: ஆத்ம சக்தியும் வாளின் சக்தியுமே அவை. நாளடைவில் ஆத்மா வாளை வென்றே தீரும்.'

"ஆனால், யுத்தம் வீணானது என்பதை நெப்போலியன் அவ்வளவு தெளிவாக அறிந்திருந்தால் அவர் ஏன் தொடர்ந்து போரை நடத்தினார் என்று நாம் கேட்கலாம். வாட்டர்லூவில் அவருடைய வாள் பறிக்கப்படும் வரையில் ஏன் போரை நடத்தினார்? உபதேசம் செய்கிறபடி நம்மில் பலர் நடக்காமல் இருப்பதைப் போல நெப்போலியனும் இருந்திருக்கிறார் என்பதும் இதற்கு ஓர் அளவு காரணமாக இருக்கலாம். மற்ற அரசர்களும் சக்கரவர்த்திகளும் அவரைச் சும்மா இருக்க விட்டு வைக்கவில்லை என்பதும் மற்றோர் அளவுக்குக் காரணமாயிருக்கக்கூடும். அவரைப் போல அவர்கள் அவ்வளவு புத்திசாலிகள் அல்ல. அவர் சமாதானக் கோரிக்கையை வெளியிட்டபோது உண்மையிலேயே அவ்வாறு கூறுகிறார் என்று அவர்கள் நம்பவில்லை. கடுமையான போருக்குப் பிறகு ஆஸ்திரியச் சக்கரவர்த்திக்கு நெப்போலியன் தாம் சொந்தமாக இந்தக் கோரிக்கையை அனுப்பினார்:

"'ஆயிரக்கணக்கான பிரெஞ்சுக்காரர்களும் ஆஸ்திரியாக்காரர்களும் கொல்லப்பட்டிருக்கின்றனர். இக்கோரங்கள் தொடர்ந்துவரும் என்பது எனக்கு அதிக மனவேதனையை உண்டாக்கியிருக்கிறது. ஆகவே, உங்களுக்கு எனது சொந்த வேண்டுகோளை அனுப்புகிறேன். துக்கத்திற்கும், 15,000 சவங்களுக்கும் இடையிலிருந்து உங்களைக் கேட்டுக்கொள்கிறேன். உங்களுக்கு ஓர் அவசரமான எச்சரிக்கையை விடுக்க நான் கடமைப்பட்டிருப்பதாக உணருகிறேன். ரணகளத்திற்கு வெகு தூரத்தில் நீங்கள் இருந்துகொண்டிருக்கிறீர்கள். இங்கே இருக்கும் என் மனம் இரக்கத்தால் கலங்குவதைப் போன்று உங்கள் மனம் இரங்காது.

'நமது சந்ததிக்கு அமைதியையும் சுபிட்சத்தையும் நாம் அளிப்போமாக. பிந்திய நாட்களின் மனிதர்கள் ஒருவரையொருவர் அடித்துக்கொள்ளும் வகையில்

அறிவிலிகளாக இருந்தால் சில ஆண்டுகள் போராடிய பிறகு அவர்களுக்குப் புத்தி வந்து ஒருவரோடொருவர் சமாதானமாக வாழ்வார்கள்.''

காங்கிரஸின் மூலம் இந்தியா, அகிம்சைக் கொள்கையை ஏற்றுக்கொண்டிருக்கிறது. உலகமோ வாளின் சாபத்தினுல் துன்பப்பட்டு அலறிக்கொண்டிருக்கிறது. ஆத்மா, அதன் தனிப்பட்ட செயல்களில் தனது வெற்றியை நிரூபித்ததுபோன்று தேசீய காரியங்களிலும் வாளினை ஆத்மா வென்றே தீரும் என்பதை, இந்தியா அகிம்சையை அனுசரிப்பதன் மூலம் உலகிற்கு எடுத்துக்காட்டட்டும்.

—'எங் இந்தியா'—14—2—1929

# 19

# ஆங்கில யுத்த வெறுப்பாளர் போக்கு

இப்பொழுதெல்லாம் காந்திஜி தருக்க வாதங்களில் இறங்குவதில்லை. இதற்கு முக்கியமான காரணம் அவருக்கு இதற்கெல்லாம் நேரம் இல்லாததுதான். ஆனால், பிஷாவரில் அவர் பல புது முகங்களைக் காண நேரிட்டது. சிறிது காலத்திற்கு முன் இருந்த உடல்நலம் அவருக்கு இப்பொழுது இல்லையெனினும் ஏறக்குறைய வாதத்தைப் போன்ற கேள்விகளுக்கு அவர் விடை அளித்தார். ஒரு பேராசிரியர் வருமாறு கேட்டார்: ''இங்கிலாந்தில் இருக்கும் யுத்த வெறுப்பாளர்கள் பலர் பாதுகாப்பைக் குறித்தும், பாதுகாப்புக்கான விரிவான திட்டங்களைக் குறித்தும் பேசிக்கொண்டிருக்கிறார்களே, அது எப்படி? இது யுத்த வெறுப்பை வெகு தூரத்திற்குக் கொண்டு போய் விடுவதாகாதா? அபிஸீனியா, படையெடுப்பை எதிர்த்துப் போர் இடாமல் இத்தாலியிடம், 'உங்களால் எவ்வளவு மோசமாக நடந்துகொள்ள முடியுமோ அவ்வளவையும் செய்யுங்கள்' என்று மாத்திரம் சொல்லியிருந்தால் இத்தாலி வெட்கம் அடைந்து தனது திட்டத்தைக் கைவிட்டிருக்காதா? அவர்கள் அப்படிச் செய்திருப்பார்கள் என்று லான்ஸ்பரி கூறுகிறார்.''

இதற்குக் காந்திஜி கூறியதாவது: ''அபிஸீனியா பிரச்னையை முதலில் எடுத்துக் கொள்ளுகிறேன். தீவிரமான அகிம்சையோடு கூடிய எதிர்ப்பு என்ற வகையில் மாத்திரமே நான் இதற்குப் பதில் சொல்ல முடியும். இப்பொழுது இவ்வுலகிலுள்ள சக்திகளில் அகிம்சையே செயல் மிக்க சக்தி. அது தோல்வியடைவதே இல்லை என்பது என்னுடைய திடமான நம்பிக்கை. ஆனால், அபிஸீனியர்கள், வல்லமையுள்ளவர்களின் அகிம்சையை, அதாவது சுக்கலாகச் சிதைந்தாலும் வளைந்து

மாத்திரம் கொடுக்காத அகிம்சைப் போக்கை மேற்கொண்டிருந்திருப்பார்களாயின், அபிஸீனியா விஷயத்தில் முஸ்ஸோலினிக்குச் சிரத்தையே இருந்திருக்காது. "தூசாகவோ அல்லது சாம்பலாகவோ எங்களைச் செய்துவிடத் தாராளமாக வாருங்கள். ஆனால், உங்களுடன் ஒத்துழைக்க ஓர் அபிஸீனியரைக்கூட நீங்கள் இங்கே காண முடியாது" என்று மாத்திரம் அவர்கள் சொல்லியிருந்தால், முஸ்ஸோலினி என்ன செய்யமுடியும்? வெறும் பாலைவனத்தைக் கொள்வது அவர் விருப்பம் அன்று. முஸ்ஸோலினி விரும்பியதெல்லாம் பணிந்து போவதையேயன்றி எதிர்ப்பையன்று. நான் விவரித்த அமைதியான, கண்ணியமான அகிம்சையோடு கூடிய எதிர்ப்பு அவருக்கு இருந்திருக்குமானால் அவர் நிச்சயமாகத் திரும்பிப் போய்விடவே நேர்ந்திருக்கும். அந்த உயர்ந்த பண்பிற்கு மனித இயல்பு வருமென்று தெரியவில்லை என யாராவது கூறக்கூடும். உடலைப் பற்றிய விஞ்ஞானத்தில் எதிர்பாராத அபிவிருத்தியை நாம் செய்திருக்கிறோமென்றால் ஆத்மாவைப்பற்றிய விஞ்ஞான முன்னேற்றத்தில் நாம் ஏன் குறைவாக நிற்க வேண்டும்?

" இப்பொழுது ஆங்கில யுத்த வெறுப்பாளர்களைக் கவனிப்போம். இவர்களில் உண்மையோடு கூடிய சில பெரிய மனிதர்களும் இருக்கிறார்கள் என்பதை நான் அறிவேன். ஆனால், கலப்பற்றதான - அகிம்சைக்கு மாறுபட்ட - யுத்த எதிர்ப்பு வகையில் அவர்கள் சிந்தனை செய்கின்றனர். நான் முக்கியமாக அகிம்சையாளன். பலாத்காரத்தின் சுவடே இராத போரில்தான் எனக்கு நம்பிக்கை. அகிம்சையையே முக்கியமாகக் கொண்டவர் விளைவுகளைக் குறித்துக் கணக்குப் போட்டுப் பார்ப்பதில்லை. கணக்குப் போடுகிறார்கள் என நீங்கள் கூறும் ஆங்கில யுத்த வெறுப்பாளர்கள், யுத்தம் கூடாது என்று சொல்லும்போது மனத்தில் வேறொன்றை வைத்துக்கொண்டு கூறுகின்றனர். யுத்த எதிர்ப்புப் பலன் தராதுபோனால் ஆயுதங்களை உபயோகப்படுத்தலாம் என்பதே அவர்கள் மனத்துள் இருப்பது. *உட்ரோ வில்ஸனின் பதி

---

* தாமஸ் உட்ரோ வில்ஸன் (1856 - 1924) - அமெரிக்காவின் ஜனாதிபதியாக 1913 முதல் 1924 வரை இருந்தார். முதல் உலக யுத்தம் நடந்துகொண்டிருந்தபோது 1916-இல், கொடூரமான நீர்மூழ்கிக் கப்பல் போரைக் கைவிடுவது என்ற வாக்குறுதியை உட்ரோ வில்ஸன் ஜெர்மன் மன்னர் கெய்ஸரிடமிருந்து பெற்றிருந்தார். ஆனால் ஜெர்மனி திரும்பவும் அக்கோரப் போரை ஆரம்பித்துவிடவே, வில்ஸன் ஜெர்மனியுடன் ராஜீய உறவை ரத்துச் செய்துகொண்டு அமெரிக்காவில் யுத்தநிலைப் பிரகடனத்தைச் செய்தார். பின்னர் யுத்தத்தில் தீவிரமாக இறங்கி அமெரிக்காவின் ராணுவ பலத்தையும் எல்லா வசதிகளையும் ஜெர்மனிக்கு எதிராக உபயோகித்தார். நேச நாடுகளின் வெற்

ஞன்கு குறிப்புக்களில் கண்டதுபோல தீர்மான முடிவு ஆயுத மேயன்றி அகிம்சை அல்ல. இது கூடாது; என்ன நேர்ந்தாலும் சரி, இங்கிலாந்து ஆயுதபலத்தை உபயோகிக்கக்கூடாது என்று சொல்லும் ஒருவர் இங்கிலாந்தில் கிளம்ப வேண்டும். அவர்கள் நிறைந்த ஆயுதபலத்துடன் இருக்கும் ஒரு நாட்டினர். அப்படிப்பட்ட பலம் இருந்தும், வேண்டுமென்றே ஆயுதங்களை உபயோகிக்க அவர்கள் மறுப்பார்களானல், பெருவாரியான அளவில் தீவிரமாகக் கிறிஸ்தவ தருமத்தை நடத்திக் காட்டியதற்கு அவர்களுடைய உதாரணமே முதன்மையாக இருக்கும். உண்மையில் இதுவே ஓர் அற்புதமுமாகும்.''

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது.] —'ஹரிஜன்'—14-5-1938.

# 20

# கேள்விகளுக்கெல்லாம் மேலான கேள்வி

டாக்டர் காளிதாஸ் நாக், கலாசாரத் தூதுகளில் அடிக்கடி வெளிநாடுகளில் அழைக்கப்படுகிறுர். சமீபத்தில் ஆஸ்திரேலியாவுக்குப் போக இருக்கிறுர். கல்கத்தாவிற்குப் போகும் வழியில் இங்கு வந்தார். ''நான் எங்கே போனலும் - 'அமைதியான' (பாஸிபிக்) என்று தவருகச் சொல்லப்படும் பஸிபிக் பிராந்தியத்தில்கூட-அகிம்சையே கேள்விகளிலெல்லாம் பெரிய கேள்வியாக இருந்துவருகிறது. இதுவரையில் பலாத்கார ஆயுதங்களை எவ்வளவோ அதிகமாகச் சேகரித்து வைத்திருக்கிறுர்கள். இதுவே தங்களுக்கு விமோசனமாக இல்லாது போய்விடுமோ என்ற சந்தேகம் அவர்களுக்கு. பலவீனம் பரவி விட்டதற்குப் புத்த தருமமே பொறுப்பு அல்லவா என்று.

---

றிக்கு இதுவே காரணமாயிற்று. பிறகு உலக சமாதானத்திற்கு, பிரசித்தமான தமது 14 குறிப்புக்கள் அடங்கிய திட்டம் ஒன்றையும் உட்ரோ வில்ஸன் வெளியிட்டார்.

அந்தத் திட்டத்தின் அடிப்படையிலேயே 1923-இல் ஜெனீவாவில் சர்வதேச சங்கம் அமைக்கப்பட்டது. ஆனல் வார்சேல்ஸ் ஒப்பந்தத்தை அமெரிக்கக் காங்கிரஸ் அங்கீகரிக்காததனல் சர்வதேச சங்கத்தில் அமெரிக்கா சேரவே இல்லை, இதுவே அச்சங்கத்தின் பலவீனத்திற்கு ஒரு காரணமும் ஆயிற்று.

அச்சங்கத்தில் அங்கம் வகிக்கும் ஒரு நாடு, மற்ருெருநாட்டின் சுதந்திரத்தையும் எல்லையையும் ஆக்கிரமிக்கக்கூடாது, தகராறுகளைத் தீர்த்துக்கொள்ளப் பலாத்காரத்தில் இறங்கக்கூடாது, சங்கத்தின்மூலம் மத்தியஸ்தமாகத் தீர்த்துக்கொள்ளவேண்டும் என்றும், மீறி நடக்கும் நாட்டின்மீது சங்க நாடுகள் பொருளாதார நடவடிக்கை எடுக்கவேண்டும் என்றும் அதன் விதிகள் கூறியபோதிலும், காந்திஜி சுட்டிக் காட்டுவது போன்று அதன் தீர்மான முடிவு ஆயுதமேயன்றி அகிம்சை அன்று. அச்சங்கம் இருந்தும், அதைத் துச்சமாக மதித்து முஸ்ஸோலினி அபிஸீனியாமீது படையெடுத்தார் என்பதும் இச்சந்தர்ப்பத்தில் குறிப்பிடத்தக்கதாகும்.

கேட்கிறார்கள். அகிம்சையின் சக்தி எதுவாக இருப்பினும், அது தற்காப்பு ஆயுதத்திற்குச் சாத்தியம் இல்லாதது அல்லவா?" என்றார் அவர்.

இதற்குக் காந்திஜி, "இக்கேள்விகளுக்கு நான் பதில் சொல்ல வேண்டும் என்று விரும்புகிறீர்களா அல்லது நீங்களே பதில் சொல்லிவிட்டீர்களா?" என்று கேட்டார்.

இதற்கு டாக்டர் நாக் கூறியதாவது: "எனக்கே சொந்தமான சரித்திர முறையில் நான் அவர்களுக்குப் பதில் சொல்லிக்கொண்டிருக்கிறேன். ஆனால், உங்கள் பதில்களே ஆதார முள்ளவைகளாக இருக்குமாகையால், நீங்கள் பதில் சொல்ல வேண்டும் என்று கேட்கிறேன். வெளிப்பார்வைக்கு யுத்தங்கள், மதப்போர்கள் முதலியன இருந்திருந்தாலும், சரித்திரம் முழுவதிலும் அகிம்சைச் சக்தியின் பெருக்கு உள்ளுக்குள் ஓடிக் கொண்டிருக்கிறது என்பதை அவர்களுக்கு எடுத்துக் காட்ட நான் முயன்று வந்திருக்கிறேன். ஆனால், திரும்பவும் அங்கு நான் போகும்போது உங்கள் பதிலை அவர்களுக்குச் சொல்ல முடியும்."

**காந்திஜி:** செயலில் காட்டுவதன் மூலம் இந்தியாவில் இதற்கு விடை தரப்பட்டு வருகிறது. சீனா, ஜப்பான் உதாரணங்களைச் சொல்லிப் பயனில்லை. இதற்கு உரிய விடை வருவதாயிருந்தால் அது கிடைக்கக்கூடிய இடம் இந்தியா ஒன்றே. அனுபவமும் இங்கு உற்சாகம் அளிப்பதாக இருக்கிறது. அறிவைப் பொறுத்தவரையில், மேற்கு நாடுகளில் இருக்கும் பலர் பலாத்காரத்தினால் பயனில்லை என்பதை உணர ஆரம்பித்திருக்கிறார்கள். அகிம்சையைப் பரீட்சித்துப் பார்ப்பது நல்லதல்லவா என்றும் கேட்கிறார்கள். 'சீன சங்கடத்திற்குக் காந்தீய பரிகாரம்' என்ற தலைப்பில் தாம் சமீபத்தில் எழுதிய ஒரு கட்டுரையை டாக்டர் ஸ்டான்லி ஜோன்ஸ் எனக்கு அனுப்பியிருக்கிறார். வெற்றியுடன் அனுசரிக்கக்கூடிய பலவித ஒத்துழையாமை முறைகளைக் குறித்து அதில் அவர் விவாதித்திருக்கிறார். ஒத்துழையாமையில் டாக்டர் ஜோன்ஸுக்கு அவ்வளவாக நம்பிக்கையில்லாத காலமும் இருந்தது. ஆனால், இப்பொழுதோ அகிம்சை ரீதியான பரிகாரமாக அவர் அதைக்குறித்து யோசனை கூறுவதோடு சமாதான உபதேசம் செய்ய நான் ஐரோப்பாவுக்கு வர வேண்டும் என்றும் வற்புறுத்துகிறார். ஆனால், இந்தியாவில் என்னுடைய வேலை இன்னும் நிறைவேறாமல் இருக்கும்போது மேற்கத்திய நாடுகளுக்கு நான் சமாதானத் தூது போவது என்பது வீண் முயற்சி. இந்தியாவில் அகிம்சை

அதிக தூரம் முன்னேறியிருக்கிறது என்பது உண்மையெனினும், வெளியாருக்கு, அதுவும் குறை கூறுவோருக்கு, இதனல் அதிகப் பலன் இல்லை.

**டாக்டர் நாக்:** விடை தரப்பட்டு வருகிறது. நம் நாட்டின் அளவுக்கு ஏற்றதான அளவில் உண்மையாகவே இந்த விடை கொடுக்கப்படுமானல், அது மிகவும் பலன் அளிப்பதாகும் என்று நீங்கள் சொல்லுவது, மகாத்மாஜி, மிகவும் சரி. ஏனெனில், அகிம்சையையும் ஒத்துழையாமையையும் அறிவளவில் அவர்கள் ஒப்புக்கொள்ளுவதுகூடத் தயாள உணர்ச்சியில்தான்.

**காந்திஜி:** முக்கியமாக ஆத்மாவையே பற்றியதான ஒரு காரியத்தை அறிவின் மூலம் புகுத்திவிடலாம் என்பதெல்லாம் நடக்காத விஷயம். அறிவின் மூலம் கடவுளிடம் நம்பிக்கையை உண்டாக்க முயலுவதைப் போன்றதே இது. முக்கியமாக உள்ளத்தைப் பற்றியதே இதுவாகையால் அது முடியாது; நம்பிக்கை அனுபவத்தின் பேரில் ஞானமாக மாறலாம். அது உள்ளத்தின் வழியாகவே சாத்தியமேயன்றி அறிவினல் அன்று. அறிவு ஏதாவது செய்யக்கூடியதாயிருந்தால், நம்பிக்கையைப் பொறுத்த விஷயங்களுக்கு முட்டுக்கட்டையாகவே இருக்கிறது.

[ ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது. ] 'ஹரிஜன்'- 18-6-1938.

# 21

# சீனுவுக்குச் செய்தி

பேராசிரியர் தலை, சீன மக்களுக்குக் காந்திஜியிடமிருந்து ஒரு செய்தியைப் பெருமல் போவதாக இல்லை. சீனர்கள் அகிம்சைக்கு விரோதமானவர்கள் அல்ல என்பதால் அகிம்சையைப்பற்றிய செய்தியாக இருந்தாலும் ஏற்கத் தக்கதே என்றுர். தற்பாதுகாப்புப் போரில் அவர்கள் ஈடுபட்டிருந்தார்கள். மற்றபடி அகிம்சையை அனுசரிப்பவர்களே. இவ்விதம் அவர்கள் போரில் ஈடுபடாதவர்களைத் தொடமாட்டார்கள். ஜப்பானிய மக்களிடம் அவர்களுக்கு விரோதம் இல்லை. மே 20-ஆம் தேதி சீன விமானங்கள் ஜப்பானியப் பட்டணங்கள் மீது பறந்தன. சீனத் துறைமுகங்கள் பலவற்றின் மீது ஜப்பான் குண்டு வீசியதற்கு வஞ்சம் தீர்த்துக்கொள்ள விரும்பியிருந்தால், சீன விமானங்கள் ஜப்பானியருக்குச் சாவையும் நாசத்தையும் எளிதாக உண்டாக்கியிருக்கலாம்.

ஆனல், குண்டுகளைப் பொழிவதற்கு மாருகப் போர் தவருனது என்பதை எடுத்துக் காட்டும் துண்டுப் பிரசுரங்களையே சீன விமானங்கள் பொழிந்தன. இது எங்கும் கண்டறியாத புதுமை. ஏனெனில், டாக்டர் குங், 'ஜீவகாருண்யத்திற்காகவே நாங்கள் அவர்கள் செய்ததற்குப் பதில் செய்யாதிருந்தோம். எங்கள் எதிரிகள் ஜப்பானிய மக்கள் அல்ல, ஜப்பானிய ராணுவத் தலைவர்களே' என்ருர். இதில் தாங்கள் அகிம்சா தருமத்தையே பின்பற்றி வருவதாகவும் டாக்டர் தலை கூறினர்.

காந்திஜி அவருக்குக் கூறிய பதிலாவது: "ஆனல், உண்மையான நிர்ப்பந்தம் வரும்போது தாமாக மேற்கொண்டிருக்கும் கட்டுத் திட்டம் நிலைக்காது. ஆசை அடக்க முடியாததாகிவிடும். அதைக் கண்டு நான் ஆச்சரியப் படமாட்டேன். அது தவிர்க்க முடியாதது. போரில் அன்புக்கு இடமில்லை. பூரணமான அகிம்சையாவது இருக்க வேண்டும்; இன்றேல் கலப்பற்ற பலாத்காரமாவது இருக்கவேண்டும். இதில் நாம் ஒரு முடிவுக்கு வந்தாக வேண்டும். இந்தச் செய்தியே போதும் அல்லவா?"

என்ருவது ஒரு நாள் காந்திஜி தங்கள் மத்தியில் இருக்க வேண்டும் என்று சீன மக்கள் எதிர்பார்க்கலாமா என்ருர் பேராசிரியர் தலை.

காந்திஜி: உங்கள் நாட்டிற்கு நான் ஏறக்குறையப் புறப்பட்டுவிட்டேன். ஆனல், என்னை அங்கே அழைத்தவர்கள், அங்கே நடந்து வந்த கலவரங்களுக்காக என்னை நிறுத்திவிட வேண்டியதாயிற்று. என்னுடைய வாழ்நாளிலேயே உங்கள் நாட்டில் அமைதி நிலவுவதைக் காண நான் விரும்புகிறேன். என்ருவது ஒரு நாள் உங்கள் நாட்டுக்கு வருவது எனக்கு ஆனந்தத்தையே அளிக்கும்.

[ ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது.] 'ஹரிஜன்'–27-8-1938.

# 22

# ஏற்படக் கூடிய விளைவு

யுத்த அபாயம் தாற்காலிகமாகத் தவிர்க்கப்பட்டிருப்பதற்காக எவரும் மகிழ்ச்சிகொள்ள வேண்டும். இதற்காகக் கொடுக்க வேண்டிய விலை மிக அதிகமாக இருக்கக்கூடுமா? கௌரவம் விற்கப்பட்டிருக்குமா? இது கூட்டாக நடத்தும் பலாத்காரத்தின் வெற்றியா? ரத்தத்தைச் சிந்தாமலேயே தாம் விரும்பியதை

அடைந்துவிடக் கூடிய புதிய தந்திரத்தை ஹிட்லர் கண்டு பிடித்திருக்கிறாரா? ஐரோப்பிய ராஜீயத்தைப்பற்றி எனக்கு நன்றாகத் தெரியும் என்று நான் கூறிக்கொள்ளவில்லை. ஆனால், ஐரோப்பியாவில் சிறிய நாடுகள் தலை நிமிர்ந்து வாழ முடியாது என்றே எனக்குத் தோன்றுகிறது. பக்கத்தில் இருக்கும் பெரிய நாடுகள் அவற்றை விழுங்கக்கூடும். அவை அடிமை நாடுகளாக இருக்க நேரிடும்.

சிறிது கால வாழ்வை நம்பி ஐரோப்பா தன்னுடைய ஆத்மாவை விற்றுவிட்டது. மூனிக்கில் ஐரோப்பா செய்து கொண்ட சமாதானம்* பலாத்காரத்தின் வெற்றி; அதுவே அதன் தோல்வியுமாகும். தங்களுக்கு வெற்றி திண்ணம் என்று இங்கிலாந்தும் பிரான்சும் நினைத்திருந்தால், ஜெக்கோஸ்லோவாகியாவைக் காப்பாற்றுவதில் தங்களுக்குள்ள கடமையை நிறைவேற்றியிருக்கும் அல்லது அதனுடன் மடிந்தாவது இருக்கும். ஜெர்மனி, இத்தாலி ஆகிய இரு நாடுகளின் ஒன்றுபட்ட பலாத்காரத்தின் முன்பு இங்கிலாந்தும்

---

* மூனிக் ஒப்பந்தம்: ஜெர்மனி, பிரிட்டன், பிரான்ஸ், இத்தாலி ஆகிய நாடுகளுக்கிடையே மூனிக்கில் 1938 செப்டம்பர் 29-ஆம் தேதி ஏற்பட்ட ஒப்பந்தம் இது. ஜெக்கோஸ்லோவாகியாவின் சூடேட்டன் – ஜெர்மானியர் வசித்த பகுதிகளைப் பறித்து ஜெர்மனிக்குக் கொடுத்துவிடுவதற்கு ஏற்பட்டதே இந்த ஒப்பந்தம். இப்பகுதி ஜெர்மனியுடன் சேர்ந்தாகவேண்டும் என்று அந்த ஆண்டு ஆகஸ்டில் ஹிட்லர் முழக்கத்தை ஆரம்பித்தார். இதற்காக ஜெக்கோஸ்லோவாகியாமீது படையெடுக்க ஹிட்லர் படைகளையும் திரட்டிவிட்டார். அவர் யுத்தத்தில் இறங்காமலிருக்குமாறு கேட்டுக்கொள்ளுவதற்காக அப்பொழுது பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்த சேம்பர்லேன் பர்ச்டஸ்கேடனுக்குப் போய் ஹிட்லரைப் பார்த்தார். இதன் பலனாகப் பிரிட்டனும் பிரான்ஸும் ஜெக்கிற்கு ஒரு சிபாரிசு செய்தன. 50 சத விகிதம் ஜெர்மானியரைக் கொண்டதான ஜெக் ஜில்லாக்களை ஜெர்மனிக்குக் கொடுத்துவிடவேண்டும் என்பதே அந்தச் சிபாரிசு. சேம்பர்லேன் மற்றொரு முறையும் ஹிட்லரைப் போய்ப் பார்த்தார். அப்பொழுது ஹிட்லர் தமது கோரிக்கையை அதிகமாக்கிக்கொண்டு ஜெக் நாட்டில் இன்னும் அதிகப் பகுதி தமக்கு வேண்டும் என்றார். சேம்பர்லேன் திரும்பிவிட்டார். ராணுவத் தயாருடன் இருக்குமாறு மேற்கத்திய நாடுகள் ஜெக்குக்கு அறிவித்தன. பிரான்ஸும் பிரிட்டனும் கூட தயாராகிவிட்டன. யுத்தம் மூண்டுவிடும் என்று அப்பொழுது தோன்றியது. அச்சமயம் இத்தாலிய சர்வாதிகாரியான முஸ்ஸோலினியின் யோசனையின்பேரில் மூனிக்கில் மற்றொரு முறை கூடிப் பேசுவது என்ற யோசனையை ஹிட்லர் கூறினார். சேம்பர்லேன், பிரெஞ்சு பிரதமர் டலாடியர், முஸ்ஸோலினி, ஹிட்லர் ஆகியோர் செப்டம்பர் 29-ஆம் தேதி மூனிக்கில் கூடினர். ஹிட்லர் கேட்டதை இத்தடவை மேற்கத்திய நாடுகள் ஏற்றுக்கொண்டுவிட்டன. ஹிட்லர் கேட்ட பகுதிகளெல்லாம் பொதுஜன வாக்கெடுக்காமலேயே ஜெர்மனிக்குப் போய்விட்டன. அக்டோபர் 1-ஆம் தேதி ஜெர்மன் படைகள் ஜெக் நாட்டிற்குள் புகுந்துவிட்டன. இந்த மூனிக் ஒப்பந்தம் 'நம் வாழ்நாளுக்குச் சமாதானம்' என்று சேம்பர்லேன் போன்றவர்கள் சொல்லிக்கொண்டாலும், அது ஹிட்லருக்குச் சரணாகதி என்று எங்கும் கண்டனங்கள் எழுந்தன.

ஆனால் ஹிட்லர் மூனிக் ஒப்பந்தத்தை மீறி 1939 மார்ச்சில் ஜெக் நாடு முழுவதையும் பிடித்துக்கொண்டார். இதன் பிறகே ஜெர்மனி சம்பந்தமாகப் பிரிட்டனும் பிரான்ஸும் தங்கள் போக்கை மாற்றிக்கொண்டன.

பிரான்சும் நடுநடுங்கிப் போயிருக்கின்றன. ஜெர்மனியும் இத்தாலியும் அடைந்த லாபம் என்ன? மனித வர்க்கத்தின் நீதி முறைமைக்கு அவை என்ன செய்திருக்கின்றன?

இதை எழுதுவதில் என் கவலை பெரிய வல்லரசுகளைப் பற்றியதல்ல. அவற்றின் உயர்வு என் தலையை கிறுகிறுக்கச் செய்கிறது. நானும் இந்தியாவில் உள்ளவர்களும் ஜெக்கோஸ்லோவாகியாவிடமிருந்து ஒரு பாடம் கற்கவேண்டியிருக்கிறது. வன்மையான இரு பெரும் நண்பர்கள் தன்னைக் கைவிட்டுவிட்ட பிறகு ஜெக்கோஸ்லோவாகியா வேறு எதுவும் செய்திருக்க முடியாது. ஆனாலும் தேசீய கௌரவத்தைப் பாதுகாத்துக் கொள்ளுவதற்கு அகிம்சையை ஆயுதமாக அது உபயோகித்துக்கொண்டிருக்குமானால், இத்தாலியின் பலத்துடன் சேர்ந்த ஜெர்மனியின் முழுப் பலத்தையும் அது எதிர்த்திருக்கலாம். இதைச் சொல்லும் துணிவு எனக்கு இருக்கிறது. அப்படி ஜெக்கோஸ்லோவாகியா செய்திருந்தால், சமாதானமே அல்லாத ஒரு சமாதான உடன்படிக்கை செய்துகொள்ளும் அவமானத்திலிருந்து பிரிட்டனையும் பிரான்ஸையும் தவிர்த்திருக்கலாம். கொள்ளைக்காரனின் ரத்தத்தைச் சிந்தாமல் தங்களுடைய மானத்தைக் காத்துக்கொள்ளக் கடைசி மனிதன் வரையில் ஜெக்கோஸ்லோவாகியா மக்கள் உயிரைத் தியாகம் செய்திருப்பார்கள். அத்தகைய வீரம் அல்லது வைராக்கியம் மனித இயல்பிற்குப் புறம்பானது என்று நினைக்க நான் மறுக்கிறேன். மனிதத்தன்மையைப் பெற, மிருகத்திற்கு உரிய கொடிய தன்மையை விட்டொழித்தாலே முடியும் என்பதை முற்றிலும் உணரும்போதுதான் மனித சுபாவம் தன்னைத்தான் அறியும் நிலைக்கு வரும். அகிம்சையாகிய நற்பண்பை அடையாமல் மனித உருவை நாம் பெற்றிருந்தபோதிலும், நமது தொன்மையான மூதாதையாகிய மனிதக் குரங்கின் தன்மையைத்தான் நாம் கொண்டு வருகிறோம்.

நான் எழுதுபவை பயனற்ற சொற்கள் அல்ல. அவர்களுடைய விதி முடிவு கட்டப்பட்டபோது (காங்கிரஸ்) காரியக் கமிட்டி மனவேதனைப்பட்டதை ஜெக் மக்கள் அறிவார்களாக. ஒரு வகையில் இந்த மனவேதனை தன்னலமுள்ளது. ஆனல், அந்த வகையில் அது மிகவும் உண்மையானது. ஏனெனில், தொகையில் நாங்கள் பெரிய நாட்டினராக இருந்தபோதிலும், ஐரோப்பாவுடன் ஒப்பிடும்போது, அதாவது, முறையாக அமைக்கப்பட்டிருக்கும் பலாத்கார விஞ்ஞானத்

தைக்கொண்டு பார்க்கும்போது, ஜெக்கோஸ்லோவாகியாவைவிட நாங்கள் சிறியவர்கள். எங்கள் சுதந்திரம் ஆபத்துக்குள்ளாக்கப்பட்டிருப்பதோடு அதைத் திரும்பிப் பெறவே போராடிக் கொண்டிருக்கிறோம். ஜெக் மக்கள் பூரண ஆயுதபாணிகளானவர்கள். நாங்களோ முற்றிலும் நிராயுதபாணிகள். ஆகவே, ஜெக் மக்கள் விஷயத்தில் தம் கடமை என்ன, யுத்தத்தின் கடும் புயல் நம்மீது வீச ஆரம்பித்துவிட்டால் காங்கிரஸ் செய்ய வேண்டியது என்ன என்பதைப்பற்றிக் காரியக் கமிட்டி சிந்தித்தது. எங்களுடைய சுதந்திரத்திற்காக இங்கிலாந்துடன் பேரம் பேசி, ஜெக்கோஸ்லோவாகியாவுடன் சிநேகமாக இருப்பதுபோல் காட்டிக்கொள்ளுவதா ? அல்லது அகிம்சா தருமத்தின்படி நாங்கள் நடந்து துன்பப்பட்டு வரும் மனித வர்க்கத்திற்கு நெருக்கடி ஏற்படும் காலத்தில், ஜெக்கோஸ்லோவாகியா குற்றம் எதுவும் செய்யாதிருந்தும் - அது தனித்திருந்து தன்னைப் பாதுகாத்துக்கொள்ள முடியாத சிறிய நாடாக இருந்தும், அது நிலைத்திருப்பதற்கே ஆபத்து மூண்டிருக்கையில் அதைக் காப்பதற்கென யுத்தம் தொடுக்கப்பட்டிருந்தாலும் - எங்களுடைய கொள்கையை முன்னிட்டு அப்போருடன் 'நாங்கள் கலந்துகொள்ளமாட்டோம்' என்பதைச் சொல்லிவிடுவதா ? இதில் காரியக் கமிட்டி ஒரு முடிவுக்கு வந்திருக்கிறது. இங்கிலாந்துடன் பேரம் பேசுவது என்ற வாய்ப்பை உபயோகித்துக்கொள்ளாது என்பது அம்முடிவு. ஆனால், உலக சமாதானத்திற்கும், ஜெக்கோஸ்லோவாகியாவின் பாதுகாப்புக்கும், இந்தியாவின் சுதந்திரத்திற்கும் கௌரவத்தோடு கூடிய சமாதான வழி, நிரபராதியானவர்கள் தம்மைத்தாம் கொன்று கொள்ளுவதல்ல ; சாகும் வரையில் முறைப்படி அகிம்சையை அனுசரிப்பதே அதற்கான வழி என்று தன்னுடைய செயலின் மூலம் உலகிற்குக் கூறிவிடுவது என்பதே காரியக் கமிட்டி செய்துள்ள முடிவு.

தன்னுடைய கொள்கை சம்பந்தமாக உண்மையோடு இருப்பதாக நிரூபித்துக்கொள்ள வேண்டுமாயின் காரியக் கமிட்டி செய்திருக்கக்கூடிய நியாயமான, இயற்கையான முடிவு இதுவேயாகும். அகிம்சையினால் இந்தியா தன்னுடைய சுதந்திரத்தை அடைந்துவிட முடியும் என்றால், அது சாத்தியமே என்று காங்கிரஸ்காரர்கள் நம்ப வேண்டியிருப்பதால், அந்த முறையைக்கொண்டு தன்னுடைய சுதந்திரத்தையும் அதனால் காத்துக்கொள்ள முடியவேண்டும். எனவே, சிறிய நாடான ஜெக்கோஸ்லோவாகியாவினாலும் அப்படிச் செய்யமுடியும்.

யுத்தமே ஏற்பட்டிருக்குமானல் காரியக் கமிட்டி என்ன செய்திருக்கும் என்பது எனக்குத் தெரியாது. ஆனல், போர் ஒதுங்கிப் போய்க்கொண்டே இருக்கிறது. சற்று மூச்சு விடும் இந்த நேரத்தில் அகிம்சை முறையை ஏற்றுக்கொள்ளும்படி ஜெக்கோஸ்லோவாகியாவுக்குக் கூறுகிறேன்; தங்களுக்கு நேரப்போவது இன்னதென்பது இன்னும் அதன் மக்களுக்குத் தெரியாது. அகிம்சை முறையைப் பரீட்சித்துப் பார்ப்பதால் அவர்களுக்கு நஷ்டம் எதுவும் இல்லை. குடியரசான ஸ்பெயி னின் கதி அந்தரத்தில் ஊசலாடிக்கொண்டிருக்கிறது.* சீனவின் நிலைமையும் அதுவே. முடிவில் அவையெல்லாம் தோற்றுப் போகுமாயின், இது அவர்களுடைய கட்சி நியாயமற்றது என்பதனல் அன்று. அழிவுக்கு வகை செய்யும் விஞ்ஞானத் தில் இந்நாடுகளுக்கு ஆற்றல் குறைவாக இருக்கிறது அல்லது ஆள் பலம் குறைவாய் இருக்கிறது என்பதனலேயே அத்தோல்வி நேரிடும். பிரான்சுக்கு இருக்கும் வசதிகள் தனக்கும் இருப்பதனல் ஸ்பெயின் குடியரசு அடைந்துவிடப் போகும் லாபம் என்ன? போரில் ஜப்பானுக்கு இருக்கும் போர்த்திறமை தனக்கு இருந்தால்தான் சீன என்ன பயனை அடைந்துவிடப்போகிறது? ஹெர் ஹிட்லரின் ஆற்றல் தங் களுக்கு இருந்தால்மட்டும் ஜெக் மக்கள் அடைந்துவிடப் போகும் லாபம் என்ன? என்ன கஷ்டம் வந்தாலும் எதிர்த்து நின்று கடைசி ஆள் வரை மடிந்துவிடுவது என்பது வீரந் தான். அது வீரமேயெனின், போராட மறுத்து அதே சம

---

* மகாத்மா இங்கே குறிப்பிடுவது 1936-இலிருந்து 1939 வரை ஸ்பெயினில் நடந்துவந்த உள்நாட்டுப் போரையே யாகும். அங்கு ஆட்சியிலிருந்த குடியரசு அர சாங்கத்தை எதிர்த்து 1936 ஜூலை 18-ஆம் தேதி ஸ்பானிஷ் மொராக்கோவில் ஜென ரல் பிராங்கோ போரைத் துவக்கினர். மறுநாளே அநேகமாக ஸ்பெயினின் படைகள் யாவுமே கலகக்காரருடன் சேர்ந்துவிட்டன. மக்கள் அரசாங்கம் கலகத்தை அடக்க உடனே நடவடிக்கை எடுத்துக்கொண்டது. ஆனல் ஸ்பெயினின் தெற்கு, வடமேற் குப் பகுதியில் கலகக்காரர்களின் கை ஓங்கியது. ஜெனரல் பிராங்கோவுக்கு ஜெர்மனி யும் இத்தாலியும் உதவி செய்தன. ஆனல் பிரான்சும் ருஷியாவும், அப்போரில் தலை யிடப் போவதில்லை என்ற வேஷத்துடன் ஸ்பெயின் அரசாங்கத்திற்கு ரகசியமாக உதவி செய்தன. இதில் ருஷியாவின் உதவி மிகச் சொற்பம். ஸ்பெயினின் தலைநக ரான மாட்ரிடை ஜெனரல் பிராங்கோ இரண்டரை ஆண்டுகள் முற்றுகையிட்டார். 1937-இல் ஒரு லட்சம் இத்தாலிய ராணுவத்தினர் ஸ்பெயினுக்குள் வரவே போர் பல மாயிற்று. இந்தச் சிப்பாய்களுக்கு வேண்டிய யுத்தத் தளவாடங்களெல்லாம் ஜெர்மனியி லிருந்து வந்தன. பிராங்கோவின் படைகள் முன்னேறிக்கொண்டே வந்தன. 1938 டிசம்பரில் காடலோனியா மீதும் கலகக்காரர்கள் பலமான தாக்குதலை நடத்தினர். பார்ஸிலோன அவர்களிடம் பிடிபட்டுவிட்டது. மக்கள் அரசாங்கம் 1939 ஏப்ரல் 4-ஆம் தேதி ஆயுதங்களைக் கீழே போட்டுவிட்டது. இதற்கு முன்னல் 1938-இல் ஸ்பெயின் இருந்த நிலைமையையே காந்திஜி மேலே குறிப்பிடுகிருர். மூன்று ஆண்டுகள் நடந்த உள்நாட்டுப் போரில் 5 லட்சம் பேர் பலியாயினர் என்று மதிப்பிடப்பட்டது.

யத்தில் ஆக்கிரமிக்க வருபவனுக்கு விட்டுக்கொடுக்காமல் இருப்பது இன்னும் மேலான வீரமென நான் கூறுகிறேன். இந்த இரண்டு வகையிலும் மரணம் நிச்சயமே என்ருல், எதிரிமீது எந்தத் துவேஷமுமின்றி மார்பைக் காட்டி உயிர் இழப்பது பெருமையானதல்லவா ?

—'ஹரிஜன்' - 8—10—1938

# 23

# நான் ஜெக் நாட்டினனுக இருந்தால் ?

ஹெர் ஹிட்லருடன் செய்து கொள்ளப்பட்டிருக்கும் ஏற்பாடு 'கௌரவமில்லாத சமாதானம்' என்று நான் சொன்னது, பிரிட்டிஷ் அல்லது பிரெஞ்சு ராஜதந்திரிகள் மீது குறை கூறுவதற்காகச் சொன்னது அன்று. இதைவிடச் சிறந்தது ஒன்றை ஸ்ரீ சேம்பர்லேனுல் யோசித்து இருக்க முடியாது என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை. அவருடைய நாட்டின் குறைபாடுகள் அவருக்குத் தெரியும். எப்படியாவது யுத்தத்தைத் தவிர்க்க முடியுமானுல் அதைத் தவிர்த்தாக வேண்டும் என்று அவர் விரும்பினர். யுத்தத்திற்குப் போகாமலேயே ஜெக்குகளின் சார்பில் தமது முழு செல்வாக்கையும் உபயோகித்தார். இதனுல், அதன் மானத்தைக் காக்க முடியாமல் போனது அவர் குற்றம் ஆகாது. ஹெர் ஹிட்லர் அல்லது ஸீனர் முஸ்ஸோலினியோடு போராட்டம் இருக்கும் ஒவ்வொரு சமயத்திலும் இது இப்படித்தான் இருக்கும்.

இது வேறுவிதமாக இருக்க முடியாது. ரத்தத்தைச் சிந்த ஜனநாயகம் நடுங்குகிறது. எந்தத் தத்துவத்திற்காக அவ்விரு சர்வாதிகாரிகளும் இருக்கிருர்களோ அது, பெரும் படுகொலை செய்யத் தயங்குவதைக் கோழைத்தனம் என்கிறது. முறையாக நடக்கும் கொலையைப் புகழ்மிக்க காரியமெனப் போற்றுவது கற்பனை மிகுந்த கவித் திறமையையும் மிஞ்சிவிடுகிறது. அவர்களுடைய சொல்லிலோ, செயலிலோ 'ஹம்பக்' (பித்தலாட்டம்) எதுவும் கிடையாது. போருக்கு அவர்கள் எப்பொழுதும் தயாராக இருக்கிருர்கள். அவர்களுக்குக் குறுக்காகப் பேச ஜெர்மனியிலோ அல்லது இத்தாலியிலோ யாருமே இல்லை. அவர்கள் வைத்ததே சட்டம் அங்கு.

ஸ்ரீ சேம்பர்லேன் அல்லது ஸ்ரீ டலாடியர் விஷயமோ வேருனது. அவர்கள் பார்லிமெண்டையும் சேம்பர்களையும்

திருப்தி செய்ய வேண்டும். கலந்தாலோசித்தாக வேண்டிய கட்சிகளும் இருக்கின்றன. இவர்கள் பேசும் விதத்தில் ஜன நாயகம் தொனிக்கவேண்டுமானால், நிரந்தரமான யுத்த நிலை யில் இவர்கள் தங்களை வைத்துக்கொள்ள முடியாது.

போர்பற்றிய விஞ்ஞானம் ஒருவரை அப்பட்டமான சர்வாதி காரியாக்கிவிடுகிறது. அகிம்சைபற்றிய விஞ்ஞானம் ஒன்றே ஒருவரைச் சுத்தமான ஜனநாயகத்திற்குக் கொண்டு போகக் கூடியது. இதில் எதை மேற்கொள்ளுவது என்பதை இங்கிலாந்து, பிரான்ஸ், அமெரிக்கா ஆகிய நாடுகள் முடிவு செய்துகொள்ள வேண்டியிருக்கின்றது. இதுவே இரு சர்வாதி காரிகள் விடும் சவால்.

இச்சமயத்தில் ருஷியா இதில் இல்லை. ருஷியாவில் ஒரு சர்வாதிகாரி இருக்கிறார். அவர் சமாதானக் கனவு காண் கிறார். ரத்தக் கடலில் நீந்தி அதைத் தாம் அடைந்துவிட முடியும் என்று அவர் எண்ணுகிறார். ருஷிய சர்வாதிகாரம் உலகிற்கு என்ன செய்ய விரும்புகிறது என்பதை யாராலும் சொல்ல முடியாது.

ஜெக் மக்களுக்கும், அவர்கள் மூலம் 'சிறிய' 'பலவீன மான' தேசங்களின் மக்களுக்கும் நான் சொல்ல விரும்புவதற்கு இந்த முன்னுரை அவசியமாகிறது. ஜெக் மக்களின் துன்ப நிலை மெய்யாலும் மனத்தாலும் வேதனைப்படும் அளவுக்கு என்னை அசைத்துவிட்டது. என்னுள் கிளர்ந்தெழும் எண்ணங் களை அவர்களுடன் பகிர்ந்துகொள்ளாது போனால் நான் கோழையாக இருந்துவிட்டதாகும் என்று உணருகிறேன். ஆகையால், ஜெக் மக்களுடன் பேச விரும்புகிறேன். சிறிய நாடுகள், சர்வாதிகாரிகளின் பாதுகாப்பின் கீழ் வந்துவிடவா வது வேண்டும் அல்லது வரத் தயாராகவாவது இருக்கவேண் டும். இல்லையானால், ஐரோப்பாவின் அமைதிக்கு இடைவிடாத ஆபத்தாக இருக்கவேண்டும் என்பது தெளிவு. உலகத்தின் நல்லெண்ணம் முழுதும் இருந்தும் இங்கிலாந்தோ, பிரான்ஸோ அதைக் காப்பாற்ற முடியாது. இவை குறுக்கிட்டால், இதற்கு முன்னால் என்றுமே கண்டறியாத வகையில் ரத்த ஆறும், நாசமுமே விளையும். ஆகையால், நான் ஜெக் நாட்டின னாக இருந்தால், என் நாட்டைப் பாதுகாக்கும் பொறுப்பி லிருந்து அவ்விரு நாடுகளையும் முதலில் விடுவிப்பேன். என்றா லும், நானும் உயிர் வைத்திருக்கவேண்டும். எந்த நாட்டுக்கோ அல்லது எந்த ஆட்சி முறைக்கோ நான் அடிமையாக இருக்க முடியாது. எனக்குப் பூரணமான சுதந்திரமாவது இருக்க

வேண்டும், இல்லையேல் நான் அழிந்தாவது போகவேண்டும். ஆயுதச் சச்சரவில் வெற்றி பார்ப்பதாயினும் வீரூப்புத்தான். என் சுதந்திரத்தை என்னிடமிருந்து பறித்துவிடக்கூடிய ஒருவரின் பலத்தை எதிர்த்து, அவருடைய இஷ்டத்திற்கும் பணிய மறுத்து, அம்முயற்சியில் நிராயுதபாணியாக அழிந்து போவது இவ்வாருகாது. இப்படிச் செய்வதில் என் உடலை இழந்தாலும், என்னுடைய ஆத்மாவை அதாவது மானத்தை நான் காத்துக்கொள்ளுகிறேன்.

இந்த அவகேடான சமாதானமே என்னுடைய சந்தர்ப்பமாக இருக்கவேண்டும். இந்த அவமானத்தை எதிர்த்து நின்று உண்மையான சுதந்திரத்தை நான் பெறவேண்டும்.

ஆறுதல் கூறும் ஒருவர், " இரக்கம் என்பதை ஹிட்லர் அறியார், உங்களுடைய ஆத்மிக முயற்சிகள் எல்லாம் அவரிடம் பலிக்கமாட்டா " என்கிருர்.

இதற்கு என் பதில் இதுதான் : " நீங்கள் சொல்வது சரியாக இருக்கலாம். அகிம்சையான எதிர்ப்பை ஒரு நாடு கையாண்டதற்குச் சரித்திர ஆதாரம் எதுவும் இல்லை. நான் துன்பங்களை அனுபவிப்பது ஹிட்லருக்கு இரக்கத்தை உண்டாக்கவில்லையென்ருல், அதனுல் ஒன்றும் முழுகிப் போகவில்லை. ஏனெனில், அதனுல் நான் இழந்துவிடுவது எதுவும் கிடையாது. பாதுகாக்கவேண்டிய சிறந்த விஷயம் என் மானந்தான். ஹிட்லரின் இரக்கத்தினின்றும் சுயேச்சையானது அது. ஆனுல் அகிம்சையில் நம்பிக்கை கொண்டவன் என்ற வகையில் அதன் சாத்தியங்களை நான் கட்டுப்படுத்திவிடக்கூடாது. இதுகாறும் அவரும் அவரைப் போன்ருரும், மனிதர் பலாத்காரத்திற்கு எதிரே அடங்கிவிடுகிருர்கள் எனத் தங்களுடைய பல அனுபவங்களிலிருந்து தெரிந்துகொண்டிருக்கின்றனர். நிராயுதபாணிகளான ஆண்கள், பெண்கள், குழந்தைகள், தங்களிடம் எத்தகைய துவேஷமுமின்றி அகிம்சையின் மூலம் எதிர்ப்பது என்பது அவர்களுக்கு ஒரு புதிய அனுபவமாக இருக்கும். உயர்ந்த, சிறந்த சக்திகளுக்கு உடன்பட்டுவிடுவது அவர்களுடைய சுபாவத்தில் இல்லை என்று யார் துணிந்து சொல்ல முடியும்? என்னிடம் இருக்கும் ஆத்மாவே அவர்களிடமும் இருக்கிறது."

ஆறுதல் கூறும் மற்ருெருவர் வருமாறு கூறுகிருர் : " நீங்கள் கூறுவது உங்களைப் பொறுத்தவரை சரி. ஆனுல், இப்புதுமையான அழைப்பை உங்கள் மக்கள் ஏற்றுக்கொண்டு செய்ய முன் வருவார்கள் என்று நீங்கள் எப்படி எதிர்பார்க்கிறீர்கள் ? அவர்கள் போராடப் பழகியவர்கள். தங்கள் சொந்த

வீரத்தில் உலகத்தில் யாருக்கும் அவர்கள் சளைத்தவர்கள் அல்ல. அவர்களுடைய ஆயுதங்களைத் தூக்கி எறிந்துவிட்டு அகிம்சை எதிர்ப்புக்குப் பழகிக்கொள்ளும்படி இப்பொழுது நீங்கள் அவர்களுக்குச் சொல்லுவது வீண் முயற்சி என்றே எனக்குத் தோன்றுகிறது.''

'' நீங்கள் சொல்லுவது சரியாக இருக்கலாம். ஆனால், என் மனத்துள் தோன்றும் ஓர் ஆக்ஞையின்படி நான் நடந்தாகவேண்டும்; என்னிடம் இருக்கும் செய்தியை என் மக்களுக்கு நான் கூறியாகவேண்டும். இந்த அவமானம் என் உள்ளத்தில் அதிக தூரம் பதிந்துவிட்டது. அதை வெளிப்படுத்தாமல் நான் இருக்கமுடியாது. எனக்கு ஏற்பட்டிருக்கும் வெளிச்சத்தை அனுசரித்தாவது நான் நடந்தாகவேண்டும்.''

நான் ஜெக் நாட்டினனாக இருந்தால் இவ்விதமே நான் நடப்பேன் என்று நம்புகிறேன். நான் முதன் முதலில் சத்தியாக்கிரகத்தை ஆரம்பித்தபோது எனக்குத் துணைவரே இல்லை. ஆண்கள், பெண்கள், குழந்தைகள் உள்பட நாங்கள் பதின் மூன்றுயிரம் பேர். ஒரு நாடே எங்களை எதிர்த்து நின்றது. நாங்கள் வாழ்வதையே அடியோடு நசுக்கிவிடும் சக்தி வாய்ந்தது அது. நான் கூறுவதை யார் கேட்பார்கள் என்பதுபற்றிக் கூட எனக்குத் தெரியாது. எல்லாம் ஒரு மின்னல் போல் வந்தது. அந்த 13,000 பேரும் போராடவில்லை. பலர் பின்னடைந்தனர். ஆனால், நாட்டின் மானம் காக்கப்பட்டது. தென்னுப்பிரிக்க சத்தியாக்கிரகத்தினுல் புதிய சரித்திரமே எழுதப்பட்டது.

மிகப் பொருத்தமான உதாரணம் கான் சாகிப் அப்துல் கபார் கானைப் பற்றியது.* ஆண்டவனின் ஊழியன் என்று அவர்

---

* கான் அப்துல் கபார் கானை 'எல்லைப்புற காந்தி' என்று கூறுவதுண்டு. இவர் 1891-இல் பெஷாவரில் உத்ன்ஸாய் என்ற கிராமத்தில் பிறந்தவர். 1909-இல் பிரிட்டிஷ் இந்திய ராணுவத்தில் கமிஷன் பதவி தருவதாகக் கூறினர். அதை ஏற்றுக்கொள்ள இவர் மறுத்துவிட்டார். 1912 முதலே பொதுஜன சேவையில் ஈடுபட்டுவிட்டார். தமது கிராமத்தில் 1916-இல் ஒரு தேசீயப் பாடசாலையை ஆரம்பித்தார். ஆனால் அது நடக்கமுடியாதபடி அரசாங்கம் செய்துவிட்டது. பிறகு ரௌலட் சட்ட எதிர்ப்புக் கிளர்ச்சியில் தீவிரமாக ஈடுபட்டார். ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்து 1922-இல் 3 வருடக் கடுங்காவல் தண்டனை அடைந்தார். மகாத்மா காந்தியுடன் இவருக்கு நேர்முகமான பழக்கம் 1928-இல் லட்சுமணபுரியில் ஒரு 'ஜிர்கா'வைக் கூட்டி குதா-இ-கித்மத்கார் என்று கூறப்படும் செஞ்சட்டைப் படையினரைத் திரட்டினுர். தேசீயப் போராட்டத்தில் பன்முறை சிறை சென்ருர். பாகிஸ்தான் ஏற்பட்ட பிறகும் பல ஆண்டுகள் அந்த அரசாங்கம் அவரை விசாரணையின்றியே சிறையில் அடைத்து வைத்திருந்தது.

'கான் சாகிபின்' அகிம்சை என்ற தலைப்பில் மகாத்மா காந்தி எழுதிய கட்டுரை 21-7-1940 'ஹரிஜ'னில் வெளியாயிற்று. 'எல்லைக் காந்தி'யின் பெருமையைக் குறித்துக் கூறும் அக்கட்டுரையும் இந்நூலில் பின்னுல் பிரசுரமாகியிருக்கிறது.



காந்தியடிகளும் 'எல்லைப்புற காந்தி' அப்துல் கபார்கானும்



வடமேற்கு எல்லைப்புறத்தில் குதா-இ-கித்மத்காரர்களுடன் மகாத்மா (1938)

தம்மைச் சொல்லிக் கொள்ளுகிறார். 'ஆப்கானியரின் பெருமை' என்று பட்டாணியர் மகிழ்ச்சியுடன் அவரை அழைக்கின்றனர். இதை நான் எழுதிக்கொண்டிருக்கையில் அவர் என் முன்னால் அமர்ந்திருக்கிறார். தம்முடைய பல்லாயிரக்கணக்கான மக்கள், தங்களிடமிருந்த ஆயுதங்களை எறிந்துவிடும்படி அவர் செய்திருக்கிறார். அகிம்சையின் பாடத்தைத் தாம் கற்றுக்கொண்டிருப்பதாகக் கூறுகிறார். தம் மக்களைப்பற்றி அவருக்கு நிச்சயம் இல்லை. அவருடைய மனிதர்கள் இங்கு என்ன செய்கிறார்கள் என்பதை நேரில் பார்ப்பதற்காக எல்லைப்புற மாகாணத்திற்கு நான் வந்திருக்கிறேன். இல்லை, அவர் என்னை அழைத்து வந்திருக்கிறார் என்றே சொல்ல வேண்டும். அகிம்சையைப்பற்றி இவர்களுக்கு ஒன்றுமே தெரியாதென நான் முன்கூட்டியே, உடனேயே சொல்லிவிடலாம். இவ்வுலகத்தில் இவர்களுக்குள்ள ஐசுவரியம் எல்லாம், தங்கள் தலைவரிடம் இவர்கள் வைத்திருக்கும் நம்பிக்கைதான். இந்தச் சமாதானச் சிப்பாய்களைப் பூர்த்தியான உதாரணங்களாக நான் குறிப்பிடவில்லை. ஒரு சிப்பாய், தன்னுடைய கூட்டாளியான சிப்பாய்களைச் சமாதான வழிகளுக்குத் திருப்புவதற்கு நேர்மையான முயற்சி செய்து வருகிறார் என்பதற்கு இதைக் குறிப்பிடுகிறேன். முடிவில் இது வெற்றி பெற்றாலும், தோற்றாலும், இது நேர்மையான முயற்சி என்று நான் நிச்சயமாகக் கூறுவேன். எதிர்காலத்தில் சத்தியாக்கிரகிகளுக்கு இது ஒரு படிப்பினையாக இருக்கும். இவர்களுடைய உள்ளங்களை நான் அணுகவேண்டும். ஆயுதங்களை வைத்திருப்பதையும் அவற்றை உபயோகிக்கும் ஆற்றலையும் விடத் தாம் வீரம் செறிந்தவர்களாக உணரும்படி அவர்களுடைய அகிம்சை செய்யவில்லையானால், கோழைத்தனத்திற்கு மற்றொரு பெயரான தங்களுடைய அகிம்சையை அவர்கள் விட்டு ஆயுதங்களைத் திரும்ப எடுத்துக்கொள்ள வேண்டும். அவற்றைத் திரும்ப அவர்கள் எடுத்துக்கொள்ளுவதை அவர்களுடைய உறுதியைத் தவிர வேறு எதுவும் தடுக்க முடியாது. இதில் நான் வெற்றி பெற்றால் என் காரியம் நிறைவேறிவிட்டதாகும்.

பலவீனர்களின் ஆயுதத்தையல்ல; வீரர்களின் ஆயுதத்தையே டாக்டர் பேனஸுக்கு* நான் அளிக்கிறேன். எவ்வளவுதான் பெரிதாக இருந்தாலும் சரி, உலக சக்தி ஒன்றுக்கு அடி பணிய உறுதியுடன் மறுத்துவிடுவதைவிட உயர்ந்த

---

* டாக்டர் பேனஸ் அப்பொழுது ஜெக்கோஸ்லோவாகியாவின் ஜனாதிபதியாக இருந்தவர், தாமஸ் மஸாரிக்குடன் சேர்ந்து அந்நாட்டில் குடியாட்சியை உருவாக்கியவர்.

வீரம் எதுவுமே இல்லை. அதுவும் உள்ளத்தில் துவேஷம் எதுவுமே இல்லாமல், ஆத்மா ஒன்றே வாழ்கிறது, வேறில்லை என்ற முழு நம்பிக்கையின் பேரில் அந்த வீர உணர்வு நிற்க வேண்டும்.

பிஷாவர், — 6—10—1938 - 'ஹரிஜன்' - 15—10—1938

## 24

# வல்லரசுகளுக்குக் கூறுதது ஏன்?

ஜெக்கோஸ்லோவாகியாவுக்கு உள்ள இடுக்கணைக் குறித்துச் சமீபத்தில் நான் எழுதியிருந்ததன் பேரில் எழுந்துள்ள மறுப்பில் காணப்படும் ஒன்றுக்குப் பதில் சொல்லவேண்டியது அவசியமாகிறது.

சிலர் ஒரு வாதத்தைக் கூறுகின்றனர். ஜெக்குகளுக்கு நான் கூறியிருக்கும் அகிம்சைப் பரிகாரம், அவர்களைப்போன்ற சிறு நாடுகள் மற்ற நாடுகளுடன் ஒப்பிடும்போது பலவீனமாக இருக்கின்றன என்பதனால் என்றால், இங்கிலாந்து, பிரான்ஸ், அமெரிக்கா போன்ற பெரிய வல்லரசுகளுக்கு அல்ல எனின் நான் கூறும் அப்பரிகாரம் அப்படி ஏதாவது பலனைத் தருவதாயிருந்தாலும் அது மதிப்பிடக்கூடிய வகையில் இராது என்பது அந்த வாதம்.

இவ்விதம் குறை கூறுவோர் என்னுடைய கட்டுரையை மீண்டும் படித்துப் பார்ப்பார்களானால், இந்தப் பரிகாரத்தை நான் இந்தப் பெரிய வல்லரசுகளுக்கு யோசனையாகக் கூறவில்லை என்பதைக் கண்டுகொள்ளுவார்கள். அவை பெரிய நாடுகள் என்பதனால் அல்ல, எனக்குத் தைரியம் இல்லாததனால் நான் கூறவில்லை என்பதையும் காண்பார்கள். அவர்களை நான் கேட்டுக்கொள்ளாததற்கு இதைவிட இன்னும் உறுதியான காரணமும் உண்டு. இந்நாடுகள் கஷ்டப்படும் நிலையில் இல்லை; ஆகையால் இவைகளுக்குப் பரிகாரமும் தேவையில்லை. வைத்திய ரீதியாகச் சொல்லப் போனால், ஜெக்கோஸ்லோவாகியாவைப் போன்று இவை நோயுற்று வருந்தவில்லை. ஜெக்கோஸ்லோவாகியாவைப்போல் இவை ஆட்டம் கொடுத்துவிடவில்லை. ஆகவே, பெரிய வல்லரசுகளுக்கு என்னுடைய கோரிக்கை வீணான, விரும்பாத உபதேசமாகவே ஆகியிருக்கும்.

நற்குணத்திற்கென்றே யாரும் நற்குணமுள்ளவர்களாகி விடுவதில்லை. அனுபவத்தினால் இதையும் நான் அறிந்திருக்கிறேன். அவசியத்தை முன்னிட்டு நற்குணமுள்ளவர்களா

கிருர்கள். நிலைமையின் வற்புறுத்தலின் காரணமாக ஒருவர் நல்லவராகிவிட்டார் என்ருல் அதில் தவறு எதுவும் இல்லை. நல்லதற்காகவே ஒருவர் நல்லவராவது விரும்பத் தக்கதுதான் என்பதில் சந்தேகம் இல்லை.

ஜெக்குகள் இப்பொழுது செய்யக்கூடியதெல்லாம், ஒன்று, ஜெர்மனியின் வலிமைக்கு அமைதியாக அடங்கிவிடவேண்டும் ; அல்லது, தனியாக நின்று போராடி, நிச்சயமாக ஏற்படக்கூடிய நாசத்திற்குத் தயாராக இருக்கவேண்டும். இந்தச் சமயத்தில் என்னைப் போன்ற ஒருவர், இவற்றிற்கு வேறு வழியான ஒரு யோசனையை ஜெக்குகளுக்குச் சொல்லவேண்டியது அவசிய மாயிற்று. நான் கூறும் முறை, ஏறக்குறைய இதேபோன்ற சந்தர்ப்பங்களில் பயன் தந்திருப்பது நிரூபிக்கப்பட்டிருக்கிறது. ஜெக்குகளுக்கு நான் விடுத்த கோரிக்கை பொருத்தமானதே ; பெரிய வல்லரசுகளுக்கு இதையே நான் கூறியிருந்தால் பொருத்த மற்றதாக இருந்திருக்கும் என்பது என் கருத்து.

எனக்கு மறுப்புக் கூறுகிறவர்கள், இன்னுமொன்று என்னைக் கேட்டிருந்தால் நன்ருக இருந்திருக்கும். அகிம்சை இந்திய மண்ணில் நூற்றுக்கு நூறு வீதம் வெற்றி அடைந்திருக்கிறது என்று காட்ட என்ஞல் ஆகவில்லை ; அகிம்சைக் கொள்கை அல்லது லட்சியத்தின்படி காங்கிரஸ்காரர்கள் உண்மையிலேயே நடந்துகொண்டு வருகிருர்களா என்பதில் எனக்கு, முக்கியமாக இச்சமயத்தில், சந்தேகம் தோன்ற ஆரம்பித்திருக்கிறது. ஆகவே, இப்பொழுது என்னுடைய சொந்த இடத்தை விட்டு விட்டு மேற்கத்திய நாடுகளுக்குப் போதிக்க நான் புறப்படு வானேன் என்று என்னை அவர்கள் கேட்கலாம். குறைபாடு களைப்பற்றிய எண்ணம் என் மனத்தில் இருக்கிறது. காங்கிரஸின் நிலைமை இப்பொழுது நிச்சயம் இல்லாததாக இருக் கிறது என்பதையும் அறிவேன். ஆனல், அகிம்சைப் பரிகாரத்தில் இருக்கும் எனது நம்பிக்கை, நான் அக்கட்டுரை எழுதும் போதும் தெளிவானதாகவே இருந்தது. நெருக்கடியான சோதனை ஏற்பட்டிருக்கும் சமயத்தில், அகிம்சைப் பரிகாரத்தை ஏற்றுக்கொள்ளும்படி ஜெக்குகளுக்கு நான் கூருவிட்டால், நான் கோழைத்தனமாக இருந்துவிட்டதாகும் என்று கருதினேன். கட்டுப்பாடு இன்னதென்பதை அறியாத, பொதுப்படையாக எல்லோரும் சேர்ந்து அனுபவிக்கும் துன்பங்களில் சமீப காலம் வரையில் பழக்கமில்லாத கோடிக்கணக்கான மக்கள் அதை ஏற்றுக்கொள்ள முடியாதிருக்கலாம். ஆனல், ஒருசிறிய நாடு— அமைந்த ஒழுங்குக் கட்டுப்பாடுடையதாய்ச் சேர்ந்தாற்போல்

அனுபவிக்கும் துன்பங்களை அறிந்த ஒரு நாடு—அதை ஏற்றுக் கொள்ளுவது சாத்தியமாக இருக்கலாம். இந்தியா ஒன்றுதான் அகிம்சை நடவடிக்கைக்குத் தகுதியானதேயன்றி வேறு எந்த நாடுமல்ல என்று அகந்தை கொள்ளுவதற்கு எனக்கு உரிமை கிடையாது. தன்னுடைய சுதந்திரத்தை மீண்டும் அடைவதற்கு அகிம்சை நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவதற்கு மிகவும் தகுதி வாய்ந்த நாடு இது என்று நான் நம்பினேன்; இப்பொழுதும் நம்புகிறேன் என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். இதற்கு மாறான அறிகுறிகள் தோன்றினும், காங்கிரஸில் இருப்பவர்களை விட அதிகப் பேரான பொதுமக்களும், அகிம்சை நடவடிக்கை ஒன்றுக்கே உடன்படுவார்கள் என்பது என் நம்பிக்கை. உலகத்தில் இருக்கும் எல்லா நாட்டு மக்களையும்விட இந்நடவடிக்கைக்கு மிகவும் ஆயத்தமாக இருப்பவர்களும் இவர்களே. ஆனால், உடனடியாக இப்பரிகாரத்தை உபயோகிப்பதற்கான விஷயம் ஒன்று என் முன்பு வரும்போது இதை ஏற்றுக்கொள்ளும்படி ஜெக் மக்களுக்கு யோசனை கூறாமல் நான் இருக்க முடியாது.

என்றாலும், பெரிய வல்லரசுகள் எந்த நாளும் அதைத் தாராளமாக மேற்கொள்ளலாம்; இதனால் தாங்களும் கீர்த்தியை அடைவதோடு எதிர்காலமும் நிரந்தரமாக அவர்களுக்கு நன்றி செலுத்தி வரும். அவர்களோ அல்லது அவர்களில் யாராவதோ, அழிவு வருமோ என்ற பயத்தை விட்டுவிடுவார்களாயின், நிராயுதபாணிகளானால், மற்றவர்கள் தாமாகவே நல்ல புத்திக்கு வர உதவி செய்தவர்களாவார்கள். ஆனால், இப்பெரிய வல்லரசுகள் ஒன்று செய்ய வேண்டும். தங்களுடைய ஏகாதிபத்திய ஆசையையும், உலகத்தில் நாகரிகம் இல்லாத அல்லது அரைகுறை நாகரிகம் உள்ள மக்களை ஏமாற்றிச் சுரண்டுவதையும் விட்டு விட வேண்டும். அதோடு தங்களுடைய வாழ்க்கை முறையையும் மாற்றிக்கொள்ள வேண்டும். முழுப் புரட்சியே இதன் பொருள். பெரிய நாடுகள், மதிப்பைப்பற்றி அவர்கள் நினைத்துள்ள மதிப்பின் நோக்கின்படி, வெற்றிக்குமேல் வெற்றி என்பதை அனுசரித்து வந்திருக்கின்றன. ஆகையால், இப்பெரிய நாடுகள், இந்த மாறுபட்ட வழியில் தாமே திரும்பும் என்று சாதாரணமாக எதிர்பார்க்க முடியாது. ஆனால், அற்புதங்கள் முன்னாலும் நடந்திருக்கின்றன. இந்த வறட்டு யுகத்தில்கூட அத்தகையது நிகழலாம். தவறுகளையும் திருத்தி விடுவதற்குக் கடவுளுக்கு இருக்கும் வல்லமையைக் கட்டுப்படுத்த யாரால் ஆகும்? ஒன்றுமட்டும் நிச்சயம்: வெறிபிடித்த ஆயுத பலப் போட்டி தொடர்ந்து நடந்துகொண்டிருந்தால், சரித்திரத்தி

லேயே கண்டிராத வகையில் பெருங்கொலை ஏற்பட்டே தீரும். வெற்றி பெற்ற நாடு ஒன்று மிகுந்து இருக்குமானால், வெற்றி யடைந்த அந்நாட்டிற்கு உயிர் இருந்தும் அதுவே சாவாக இருக்கும். அகிம்சை முறையை, அதன் சீரிய விளைவுகளுடன் திடமாக, நிபந்தனையின்றி ஏற்றுக்கொண்டுவிட்டாலன்றி வரப்போகும் கேட்டிலிருந்து தப்புவதற்கு வழியே இல்லை. ஜனநாயகமும் பலாத்காரமும் சேர்ந்து இருக்கவே முடியாது. இன்று பெயரளவில் ஜனநாயகமாக இருக்கும் நாடுகள், வெளிப்படையாகச் சர்வாதிகார நாடுகள் ஆகிவிடவேண்டும். அப்படி இராமல் அவை உண்மையாகவே ஜனநாயக நாடுகளாக இருக்க வேண்டுமானால், தைரியமாக அகிம்சையைப் பின்பற்றும் நாடுகளாக வேண்டும். அகிம்சையைத் தனிப்பட்டவர்களே அனுசரிக்க முடியும், தனிப்பட்டவர்களைச் சேர்க்கையாகக் கொண்டதான நாடுகளினால் அதை அனுசரிக்க முடியாது என்று சொல்லுவது கடவுளைப் பழிப்பதாகும்.

பெஷாவர், 5-11-1938. — 'ஹரிஜன்' - 12-11-1938.

# 25

# அகிம்சையும் உலக நெருக்கடியும்

சென்னைக்கு அருகிலுள்ள தாம்பரத்தில் சர்வதேசக் கிறிஸ்தவப் பிரசாரகர்கள் மகாநாடு நடந்தது. அதில் கலந்துகொண்ட உறுப்பினருள் முக்கியமானவர்கள் வந்து எங்களுடனும் இருந்தனர். இவர்களில் பலர் முன்னேற்பாட்டின்படி காந்திஜியைச் சேவாகிராமத்திலுள்ள அவரது குடிசையில் சந்தித்துப் பேசினர். மகாநாடு நிகழ்வதன் முன்னர் அபிப்பிராயங்களைப் பரிமாறிக் கொள்ளவே வந்தார்கள். இவர்களில் ஒருவர் சர்வதேச மிஷனரி கவுன்ஸிலின் செயலாளரான பூஜ்ய வில்லியம் பேடன். மற்றொருவர் வட அமெரிக்கப் பிரசாரக சங்கங்களின் மகாநாட்டுக் காரியதரிசியான பூஜ்ய லெஸ்லி பி. மாஸ். இவர் செல்வாக்குள்ள கிறிஸ்தவத் தலைவர். லண்டனில் இருக்கும் பிரிட்டிஷ், வெளிநாட்டுப் பைபிள் சங்கத்தைச் சேர்ந்த டாக்டர் இ. ஸ்மித்தும் வந்திருந்தார். இவர் பழங் குடிகளைப்பற்றிய ஆராய்ச்சி நிபுணருமாவர். மற்றொருவர் டாக்டர் ஜான் மாட். பூஜ்ய ஜே. எஸ். ஹாட்ஜ் இவரைப்பற்றிக் கூறுகையில், "எல்லாரையும்விடப் பெருமை மிக்கவர்" என்றார்.

"துவேஷம், இம்சை ஆகிய கோரத்தில் மனிதவர்க்கத்தை ஆழ்த்தி அழித்துவிட மிரட்டும் சர்வதேச நெருக்கடியி

லிருந்து அதைக் காப்பது எப்படி?"—அவர்கள் எல்லோருக்கும் இருந்த முக்கியமான கவலை இதுதான். டாக்டர் மாட் சொன்னது போல, இதற்கு முன்பு எப்பொழுதுமே 'நாகரிகம்' இவ்வளவு மோசமான மிருக பலத்தின் சவாலை ஏற்கும் நிலை வந்ததில்லை. இன்று இருப்பதைப் போன்று 'பேடிமையின் அவமானம்' இருந்ததே கிடையாது. காட்டுமிராண்டித்தனம் மீண்டும் தலைதூக்கும் நிலைமையை மனிதவர்க்கம் இதற்கு முன்னால் அறிந்ததில்லை என்பது அன்று. தைமூர் லேன்[1] அல்லது அட்டில்லாவும்[2] அவனுடைய ஹூணர்களும் இருந்த காலத்தில் இவ்வுலகில் தாண்டவமாடிய பலாத்காரத்தைப் போன்றதே இன்று இவ்வுலகைக் கலங்கச் செய்யும் இந்நெருக்கடி. ஆனால், மேற்கத்திய நாட்டினருக்கு 'ஆத்மாவின் அஸ்திரம்' அப்பொழுது தெரிந்திருக்கவில்லை. பின்னரே பெருங் கேட்டைச் சமாளிக்க அது கண்டுபிடிக்கப்பட்டது. இதில் துயர் தரும் விஷயம் என்னவெனில், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் இந்த நாடுகள் ஏசுவின் உபதேசங்களைப் பெற்றபோதிலும், அதை எங்கும் வியாபிக்கும் அளவில் எதன் மீதும் அவர்கள் உபயோகிக்காது போனதே யாகும். இதனால் இன்று வரவிருக்கும் அழிவின் முன்னால் தாங்கள் கதியற்றவராக நிற்பதைக் காண்கிறார்கள். ஆகவே, அறிவொளியுள்ளவர்களும், மனிதவர்க்கத்தின் தலையாயவர்களும், இன்றுள்ள பிரச்னைகளுக்கு ஏற்ற வகையில் அந்தப் போதனைக்குப் புதிய விளக்கத்தைப் பெற வேண்டியதன் அவசியத்தை உணர்கின்றனர். இந்தப் பிரச்னைகளுக்கு அதைச் சரியானபடி உபயோகிப்பது எப்படி என்பதைத் தெரிந்துகொள்ளவும் விரும்புகின்றனர்.

அவர்கள் காணும் முறைகளுக்கு நேர்மாறான இந்தியாவின் அகிம்சை இயக்கமோ உலக முக்கியத்துவத்தை அடைந்து

1. தைமூர் லேன் (1335–1405) ஜெங்கிஸ்கானைப் பின்பற்றியவர்களில் ஒருவரின் சந்ததியில் வந்தவர். இந்தியாவில் மொகல் வமிசத்தை ஆரம்பித்தவர் இவரே. 1361–இல் பெர்லாஸ் துருக்கியருக்குத் தலைவராகித் துருக்கிஸ்தான், பாரசீகம், ஸிரியா ஆகிய நாடுகளைப் பிடித்துக்கொண்டார். இவர் சிறந்த போர் வீரர். அதே சமயத்தில் படுகொலைகள் செய்வதிலும் மிகவும் கொடூரமானவர். பின்னர் இந்தியாவின்மீது படையெடுத்து வந்து அங்கிருந்து சீனாமீது படையெடுக்க ஏற்பாடு செய்து கொண்டிருந்தபோது மாண்டார். திமூர் லங்கி அதாவது 'நொண்டித் திமூர்' என்ற சொல் மருவி வந்து தைமூர் லேன் என்றாகி இவருக்குப் பழக்கமான பெயராகிவிட்டது.

2. அட்டில்லா (406–453) — ஹூணர்களின் மன்னனான இவன் பெரும் போர்த் தலைவன். ரோமன் படையினரை இவன் பன்முறை முறியடித்து, சொல்லொணா அட்டூழியங்களைச் செய்து அந்நாட்டின் பெரும் பகுதியைப் படு நாசமாக்கிவிட்டான். ஜெர்மனிமீது படையெடுத்துச் சென்றான். இத்தாலிமீது மற்றொரு படையெடுப்புக்கு ஏற்பாடு செய்துகொண்டிருக்கும்போது மாண்டான்.

வருகிறது. ஆகையால், காந்திஜியைப் பார்க்க வந்த நண்பர்கள், அவருடைய அகிம்சையின் உட்கருத்துக்களைப்பற்றித் தெரிந்துகொள்ளவும் இயற்கையாகவே ஆவல் கொண்டனர். அவருடைய தருமத்தின் தன்மையைப்பற்றியும் அதன் பொருளைக் குறித்தும், பிரார்த்தனை, உண்ணாவிரதம், மௌன விரதம் ஆகியவைகளைக் குறித்தும் பல நுண்ணிய கேள்விகளைக் கேட்டார்கள். சர்வதேச அராஜகத்திற்கும் நாடுகளிடையே இருந்துவரும் அட்டூழியங்களுக்கும் அவர் கூறிவரும் அகிம்சை எதிர்ப்பைக் குறித்தும் கேட்டார்கள். பொதுவான லட்சியத்தை அடைவதற்குத் தாங்கள் பிரதிநிதிகளாயிருக்கும் அப் பிரசார முயற்சி இந்தியாவின் அகிம்சை இயக்கத்துடன் எப்படி ஒத்து வேலை செய்வது என்பதற்கும் காந்திஜியின் யோசனையை நாடினர்.

வந்திருந்தவர்கள் விவாதித்தபோது கேட்ட கேள்விகளுக்குக் காந்திஜி அளித்த விடைகளை இங்கே சுருக்கிக் கூற முயலுகிறேன். அவர் கருத்தை மேற்கொண்டும் தெளிவாக்குவதற்காக அவர் கூறியிருப்பவைகளைக் கொண்டே விளக்குகிறேன்.

## வாழ்க்கையின் நோக்கம்

கேள்விகளைக் கேட்டவர்களில் ஒருவர், விஷய ஆராய்வின் ஆழத்திற்குப் போய், வாழ்க்கையில் அடிகளின் நோக்கந்தான் என்ன என்று கேட்டார். "நாம் செய்வதைச் 'செய்யத்தூண்டுவது' மத நோக்கமா அல்லது சமூக, ராஜீய நோக்கமா?" என்று கேட்டார்.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: "முற்றிலும் மத நோக்கமே. முற்றிலும் ராஜீய நோக்கமே கொண்ட ஒரு தூதுக் கோஷ்டியுடன் நான் சென்றபோது காலஞ்சென்ற ஸ்ரீ மாண்டேகு இதே கேள்வியையே என்னைக் கேட்டார். 'சமூகச் சீர்திருத்தக்காரராகிய நீங்கள் இந்தக் கும்பலில் எப்படி வந்து சேர்ந்தீர்கள்?' என்றார். என்னுடைய சமூக நடவடிக்கை விரிவாக்கப்பட்டிருக்கிறது என்று அவருக்குப் பதில் சொன்னேன். முழு மனிதவர்க்கத்துடன் என்னைச் சம்பந்தப்படுத்திக் கொண்டிருக்க மத வாழ்க்கையை நான் நடத்திக்கொண்டிருக்க முடியாது. ராஜீய விஷயங்களில் கலந்துகொள்ளாமல் நான் அதைச் செய்ய இயலாது. இன்று மனிதனுடைய நடவடிக்கையின் சந்தமே பிரிக்க முடியாதபடி ஒன்றாக அது அமைந்திருக்கிறது. ஒன்றுக்கொன்று கொஞ்சமும் தொடர்பே இல்லாத

வகையில் சமூக, பொருளாதார, ராஜீயம், முற்றிலும் மதம் பற்றிய நடவடிக்கைகள் த்னித் தனியென நீங்கள் பிரித்துவிட முடியாது. மனித நடவடிக்கைக்குப் புறம்பானதாக எம்மதமும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. மற்ற நடவடிக்கைகளுக்கெல்லாம் மதம் நீதியின் அடிப்படையை அளிக்கிறது. அப்படி இல்லாது போனால், எதையுமே குறிக்காத வெறுங் கூச்சலும் குழப்பமுமாகவே வாழ்க்கை ஆகிவிடும்.''

''மக்களிடையே உங்களுக்கு அதிகச் செல்வாக்கு இருந்து வருவதைக் காண்கிறோம். உங்களைச் செலுத்திக்கொண்டிருப்பது லட்சியத்தில் இருக்கும் அன்பா அல்லது மக்களிடத்தில் இருக்கும் அன்பா ?''

''மக்களின் அன்பே'' என்று காந்திஜி தயக்கமின்றிப் பதில் சொன்னார். ''மக்கள் இல்லாத லட்சியம் செத்துப் போன ஒரு விஷயமாகும். மக்கள்மீதுள்ள அன்பே என் வாழ்வின் ஆரம்பத்தில் தீண்டாமைப் பிரச்னையைக் கொண்டு வந்தது. 'இவன் தீண்டாதவன், இவனை நீ தொடக்கூடாது' என்று என் தாயார் கூறினார். 'ஏன் தொடக்கூடாது?' என்று நான் திருப்பிக் கேட்டேன். அன்றுதொட்டே அதை எதிர்த்து என் கிளர்ச்சி ஆரம்பமாகிவிட்டது.''

## ராஜீயத்தை ஒதுக்குவதற்கில்லை

''கிறிஸ்தவர்களாகிய நாங்கள் உங்கள் உதாரணத்தைப் பின்பற்ற வேண்டும் என்று நீங்கள் எதிர்பார்ப்பீர்கள். எங்களுடைய மத நோக்கம் ராஜீயத்தில் புகுந்துவிட நாங்கள் அனுமதிக்க வேண்டுமா ?''

இதற்குக் காந்திஜி கூறியதாவது : ''உலகத்தின் பல பகுதிகளிலிருந்து இந்நாட்டுக்குள் வருகிறவர்கள், 'நாட்டின் ராஜீயத்துடன் எங்களுக்கு எந்தவிதத் தொடர்பும் இல்லை' என்று சொல்லிவிட முடியாது. மக்களுடன் தங்களுக்கு இருக்கும் தோழமை உணர்ச்சியை மிஞ்சிவிடுவதற்காக அவர்கள் அரசாங்கத்துடன் பேரம் பேசுவார்களாயின் அவர்கள் தங்களுடைய மதக் கொள்கைக்கு உண்மையாக நடப்பவர்களாக மாட்டார்கள். இந்நாட்டு மக்களுக்கு அரசாங்கம் மோசமானதோர் தவறு செய்கிறது ; அதைத் தடுக்கப் பாதிரிகள் ஒன்றுமே செய்யக்கூடாது என்று சொல்லப்படுகின்றனர் என்று வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது மதப்பிரசாரகர்கள் குறைந்தபட்சம் செய்யக்கூடியது, அரசாங்கம் செய்யும் தவறுதலைத் தாங்கள் வெறுப்பதைக் காட்ட நாட்டை விட்டா

வது போய்விடலாம். ஒரு மதப்பிரசாரகர் சேவைக்கென்றே தம்மை அர்ப்பணம் செய்துகொண்டு விடுவாரானல், அதற்கு வேண்டிய சந்தர்ப்பங்கள் ஏற்படும். இன்று இத்தகைய சந்தர்ப்பம் பொருளாதாரத்துறையில் இருக்கலாம். நாளைக்குச் சமூகத்துறையிலும், பிறகு ராஜீயத்துறையிலும் இருக்கலாம். அப்பொழுது நீங்கள், 'இத்துடன் நின்றுவிடுவேன். அந்த வேலையை மாத்திரமே செய்வேன். வேறு எதையும் செய்ய மாட்டேன்' என்று சொல்ல முடியாது. நான் தென்னுப்பிரிக்காவுக்குச் சென்றபோது அந்தத் தேசத்தைப்பற்றி எனக்கு எதுவுமே தெரியாது. என் கட்சிக்காரருக்கு மாத்திரமே வேலை செய்யக் கடமைப்பட்டிருந்தேன். என்ருலும், நான் அங்கே போன ஏழு நாட்களுக்கெல்லாம் சொல்லால் கூறி முடியாததான ஒரு பயங்கரமான நிலைமையை நான் சமாளித்தாக வேண்டும் என்பதைக் கண்டுகொண்டேன்."

## அகிம்சையே மிக மேலான தருமம்

பிறகு அவர்கள், "மேற்கத்திய நாட்டினராகிய நாங்கள் வெற்றி எதையும் காணமுடியாமல் அனுசரிக்க முயன்று வரும் யுத்த வெறுப்புப் போக்குக்கும் உங்களுடைய அகிம்சைக்கும் இடையே உள்ள நிலைமை என்ன?" என்று காந்திஜியைக் கேட்டனர்.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: "எந்த உருவிலும் அல்லது முறையிலும் செயலின்மையையுடையது அல்ல அகிம்சை என்பதே என் கருத்து. அகிம்சையைப்பற்றி நான் அறிந்திருக்கும் வகையில் கூறுவதாயின், உலகில் மிகச் செயல் புரியக்கூடிய சக்தி அது. ஆகையால், லோகாயதமாயிருந்தாலும், வேறு எதுவாக இருந்தாலும், அதற்குச் சரியான மாற்ருக அகிம்சை இல்லாதிருக்குமாயின், அது நான் எண்ணுவதுபோன்ற தீவிர சக்தி ஆகாது. இன்னும் தெளிவாகக் கூறுவதாயின், நீங்கள் என்னிடம் கொண்டுவரும் புதிர்போன்ற கேள்விகளுக்கு என்னல் பதில் சொல்ல முடியவில்லையென்ருல், என்னுடைய அகிம்சை இன்னும் குறைபாடுடையதாகவே இருக்கிறது என்றே சொல்லுவேன். அகிம்சையே மிக உயர்ந்த தருமம். என்னுடைய அரை நூற்ருண்டு அனுபவத்தில், 'நான் எதுவும் செய்ய முடியாதவனுக இருந்தேன். அகிம்சை வழியில் என்னிடம் பரிகாரமே இல்லை' என்று நான் சொல்ல வேண்டியிருந்த ஒரு நிலைமையேனும் வந்ததில்லை.

"யூதர்கள் விஷயத்தை எடுத்துக்கொள்ளுவோம். இதைப் பற்றி நான் எழுதியிருக்கிறேன். எந்த யூதரும், அகிம்சை வழியை மேற்கொள்ளுவாரானல், திக்கற்றிருப்பதாக உணர வேண்டிய அவசியமே இல்லை. யூதர்கள் பலாத்காரமாக இருந்திருக்கிருர்கள் என்று நினைத்து நான் அக்கட்டுரையில் எழுதியதை ஆட்சேபித்து ஒரு நண்பர் எனக்கு எழுதியிருக்கிருர். அவர்கள் சம்பந்தப்பட்ட வரையில் யூதர்கள் தீவிரமாகப் பலாத்காரத்தில் ஈடுபடவில்லை என்பது உண்மை. ஆனல், ஜெர்மானியரை மனிதவர்க்கத்தின் சாபக்கேடு என்றனர்; அமெரிக்காவும் இங்கிலாந்தும் தங்களுக்காக ஜெர்மானியருடன் போராட வேண்டும் என்று அழைத்தார்கள். என்னுடைய எதிராளியை நான் அடித்தால் அதுவும் இம்சையே. ஆனல், உண்மையாகவே நான் அகிம்சையோடு இருப்பதாயின், எதிராளி என்னை அடிக்கும்போதுகூட அவனிடம் நான் அன்பு செலுத்துவதுடன் அவனுக்காக நான் பிரார்த்திக்கவும் வேண்டும். யூதர்கள் அகிம்சையில் தீவிரம் கொள்ளவில்லை. அப்படியிருந்தால், சர்வாதிகாரிகள் அக்கிரமங்களைச் செய்தாலும் யூதர்கள், 'அவர்கள் கையில் நாம் துன்பங்களை அனுபவிப்போம். இதைத் தவிரச் சிறந்தது அவர்களுக்குத் தெரியாது. ஆனல், எந்த வகையில் நாங்கள் துன்பத்தை அனுபவிக்க வேண்டும் என்று அவர்கள் விரும்புகிருர்களோ அந்த வகையில் நாங்கள் துன்பத்தை அனுபவிக்கமாட்டோம்' என்று சொல்லியிருப்பார்கள். ஒரு யூதர் இவ்விதம் நடந்துகொண்டிருந்தாலும், அவர் தம்முடைய சுயமரியாதையைக் காப்பாற்றிக்கொண்டிருப்பதோடு ஓர் உதாரணமாகவும் இருந்திருப்பார். அந்த உதாரணம் எல்லோரிடமும் பரவி, யூத சமூகம் முழுவதுமே அதை அடைந்திருப்பதோடு மனிதவர்க்கத்திற்கே மதிப்புக்குள் அடங்காத கருவூலத்தை விட்டுச் சென்றவர்களாயிருப்பர் யூதர்.

## சீனவின் துன்பம்

"சீனவின் சங்கதி என்ன என்று நீங்கள் கேட்கலாம். மற்ற மக்கள் சம்பந்தமாகச் சீனரிடம் விரோதமான எண்ணங்கள் எவையுமில்லை. நாடு பிடிக்கும் ஆசையும் அவர்களுக்கு இல்லை. அத்தகைய ஆக்கிரமிப்புக்குச் சீன தயாராகிவிடவில்லை என்பது ஒரு வேளை உண்மையாக இருக்கலாம். போரை அது விரும்பவில்லை என்று தோன்றுவதெல்லாம் சோம்பலையே காட்டுவதாக இருக்கலாம். எப்படியானலும், சீன தீவிரமான அகிம்சையில் ஈடுபடவில்லை. ஜப்பானுக்கு எதிராக அது வீரத்துடன் போராடி வருவதிலிருந்து அதன் நோக்கத்தில்

அகிம்சை இல்லை என்பதை அது தெளிவாகக் காட்டுகிறது. அது தற்காப்புப் போரில் ஈடுபடுகிறது என்று கூறுவது அகிம்சை வழியான பதிலாகாது. ஆகையால், அதனுடைய தீவிர அகிம்சையைச் சோதிக்கும் சமயம் வந்தபோது அந்தச் சோதனையில் அது தவறிவிட்டது. இப்படிக் கூறுவது சீனவைக் குறை கூறுவதாகாது. சீனர் வெற்றியடைய வேண்டும் என்று விரும்பு கிறேன். சரி என ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கும் தகுதிகளின் படி பார்த்தால் அது நடந்துகொண்டது முற்றிலும் சரியே. ஆனல், அகிம்சை முறையில் நிலைமையை ஆராய்ந்தால், ஜப்பானைப் போன்ற கலாசாரமேயுள்ள ஒரு தேசம், ஜப்பானின் ஆக்கிரமிப்பை முறியடிப்பதற்கு ஜப்பானின் முறைகளையே மேற்கொண்டிருப்பது, நாற்பது கோடி மக்களைக் கொண்ட ஒரு நாட்டுக்குக் கௌரவமானதல்ல. நான் கருதுகிறது இதுதான்: அகிம்சை சீனர்களிடம் இருந்திருந்தால், ஜப்பான் வைத்திருக்கும் இக்காலத்திற்கு ஏற்றதான அழிக்கும் இயந்திரங்கள் பயனற்றுப் போயிருக்கும். சீன, ஜப்பானிடம் 'உன் இயந்திரங்கள் அனைத்தையும் கொண்டுவா. எங்களுடைய ஜனத்தொகையில் பாதியை உனக்குப் பலி கொடுக்கிறோம். ஆனல் மீதம் இருக்கும் இருபது கோடி மக்கள் உனக்கு மண்டியிடமாட்டார்கள்' என்று கூறியிருக்கவேண்டும். சீன இதைச் செய்திருந்தால், ஜப்பான் சீனவின் அடிமையாகியிருக்கும்.'' இந்த வாதத்திற்கு ஆதாரமாக காந்திஜி, ஷெல்லி எழுதிய 'அராஜகத்தின் முகமூடி' என்ற பெயர்போன கவிதையின் சில அடிகளை எடுத்துக் காட்டினர்.*

---

* 'அமைதியும், உறுதியும் கொண்டு நிற்பீரே, அடர்ந்த காடு ஒலி அடங்கியதென. தோல்வி காணுச் சமரின் படைக்கலங்களான கைகளைக் கூப்பி, கண்களைத் தாழ்த்தி நிற்பீரே. திடமிருப்பின் கொடியவர் உங்கள்மீது ஏறிச் செல்லட்டும்; உங்களை வெட்டி வீழ்த்தட்டும்; அவர்கள் விரும்பியதைச் செய்யட்டும். கைகூப்பியே, கண் கலங்காது, அச்சமும் வியப்புமின்றி அவர்களையே நோக்குவீர். அவர்களது வெகுளி கணத்தில் பறந்தோடும்; வெட்கித் திரும்புவர் தம் இடத்திற்கே. இக்குருதி வெள்ளத்தைக் கண்டு நாணிக் கூசுவர். தோல்வியுரு வீரராய் இப்பெருந் துயிலை நீத்து மூரி எழுவீர் மடங்கல்போல், உறங்குகையில் உங்களைப் பிணித்த இருப்புத் தளையை மென் பனித்துளியென உதறித் தள்ளுவீர். எண்ணிறந்தவர் நீங்கள்; அவர்களோ சிலரே!'

இதை எழுதிய ஆங்கிலக் கவி பெர்ஸி பிஷ்ஷி ஷெல்லி கி. பி. 1792 - 1822 - இல் வாழ்ந்தவர். இளமையிலேயே புரட்சிகரமான கவிதைகளைப் புனைந்தார். இவரது நாஸ்திகக் கொள்கையை ஆங்கிலேயர் வெறுத்து இவரை இகழவே, தம் தாய்நாட்டை விட்டு ஐரோப்பாவுக்கு வந்தார். ஸ்விட்ஜர்லாந்தில் சில காலம் தங்கியிருந்தபோது பிரபல கவியான லார்டு பைரன் இவருடைய ஆப்த நண்பரானர். கடலில், உல்லாசத் தோணியில் சென்றபோது, கலம் கவிழ்ந்து இவர் மாண்டார்.

## இயந்திரப் போரும் அகிம்சையும்

காந்திஜி மேலும் கூறியதாவது : "யூதர்கள் விஷயத்தில் தனிப்பட்டவர்களுக்கும் அவர்களைத் துன்புறுத்துகிறவர்களுக்கும் தொடர்பு இருக்கிறது. ஆகையால், யூதர்களைப் பொறுத்த வரையில் அகிம்சை சரி. ஆனால், சீனாவிலோ ஜப்பான், வெகு தூரத்திற்குச் சுடும் தன்னுடைய பீரங்கிகளையும் விமானங்களையும் கொண்டுவருகிறது.வானிலிருந்து மரணத்தைப் பொழிந்துகொண்டிருப்பவருக்கு எத்தனை பேர் மடிந்தனர் என்பதை அறியக்கூடச் சந்தர்ப்பமில்லை. ஒருவருக்கொருவர் தொடர்பே கிடையாது என்பதைப் பார்த்த பிறகும் விமானப் போரை அகிம்சை எப்படி எதிர்க்க முடியும் என்று கூறிச் சிலர் ஆட்சேபிக்கிறார்கள். கொல்லும் குண்டின்பின் அதனை ஏவும் மனிதக் கையும் இருக்கிறது. அதற்குப் பின்னாலோ, அந்தக் கையை வேலை செய்யச் சொல்லும் மனித உள்ளமும் இருக்கிறது. பயங்கரச் செய்கைகளை ஓர் அளவு செய்தால், விரும்பிய பலனை அது அளிக்கும். அதாவது, கொடுமை செய்கிறவனின் விருப்பத்திற்கு எதிராளியை அது பணிய வைத்துவிடும் என்ற எண்ணத்திலேயே பயங்கரச் செய்கைக் கொள்கை ஏற்படுகிறது. ஆனால், ஒரு தேசத்தின் மக்கள், கொடியோனின் விருப்பத்தைத் தாங்கள் செய்வதில்லை, கொடியோனின் முறை கொண்டு அவனை எதிர்ப்பதுமில்லை என்று திடங்கொண்டு விடுவார்களாயின், கொடுமைகளைத் தான் செய்துகொண்டே போவதில் ஒரு பயனுமில்லை என்பதை அக்கொடியோனும் தெரிந்துகொள்ளுவான். கொடியவனுக்குப் போதுமான உணவு கொடுத்துக் கொண்டே வந்தால் அவனுக்குத் தின்று தின்று அலுத்து விடும் சமயமும் வரும். உலகத்தில் இருக்கும் எலிகள் எல்லாம் ஒன்று சேர்ந்து ஒரு மகாநாடு கூட்டி, 'இனி, பூனைகளைக் கண்டு பயப்படுவதில்லை, அவற்றின் வாய்க்குள்ளே போய்விடுவது' என்று முடிவு செய்துவிட்டால், எலிகள் உயிரோடு வாழும். ஒரு பூனை எலியோடு விளையாடிக்கொண்டிருந்ததை நானே பார்த்திருக்கிறேன். எடுத்ததும் பூனை அதைக் கொன்றுவிடவில்லை. ஆனால், வாயில் அதைக் கவ்வியது. பிறகு விட்டு விட்டது. எலி தப்பி ஓடிவிட முயற்சி செய்யவே பூனை அதன் மீது பாய்ந்து பிடித்துக்கொண்டது. முடிவில் எலி தன் பயத்தினாலேயே செத்துவிட்டது. எலி ஓட முயற்சி செய்யாமல் இருந்தால், பூனை அதை வேட்டையாடியிராது. என் இஷ்டத்திற்கு என் மனைவியைப் பணிய வைக்க வேண்டும் என்று நான் முயற்சி செய்தபோது அவளிடமிருந்தே அகிம்

சைப் பாடத்தை நான் கற்றுக்கொண்டேன். ஒரு பக்கம் என் விருப்பத்திற்கு உடன்படாமல் இருக்கும் அவளுடைய உறுதியும், மற்ருெரு பக்கம் என்னுடைய முட்டாள்தனத்தி ஞல் ஏற்பட்ட துன்பங்களைப் பேசாமல் சகித்துக்கொண்டதும், முடிவில் என்னைக் குறித்து நானே வெட்கப்படும்படி செய்து விட்டன. அவள்மீது அதிகாரம் செலுத்தவே நான் பிறந் திருக்கிறேன் என்று எனக்கிருந்த முட்டாள்தனத்தையும் அவை போக்கின. முடிவில் அகிம்சையில் எனக்கு அவள் ஆசிரியரு மாளுள். நான் தென்னுப்பிரிக்காவில் செய்ததெல்லாம், தன் னளவில் விரும்பாமலேயே அவள் அனுசரித்த சத்தியாக்கிரக விதிகளை நான் விரிவாக்கியதே அல்லாமல் வேறு அல்ல.''

## சர்வாதிகாரங்களைப்பற்றி என்ன ?

வந்திருந்தவர்களில் ஒருவர், ''ஹிட்லரையும்* முஸ்ஸோலினி யையும் உங்களுக்குத் தெரியாது. தரும நீதிக்குச் சற்றும் கட்டுப்படாதவர்கள். அவர்களுக்கு மனச்சாட்சி என்பதே கிடையாது. உலக அபிப்பிராயத்தைச் சற்றும் பொருட்படுத் தாதவர்கள். உதாரணமாக, ஜெக் மக்கள் உங்கள் ஆலோச னையைக் கேட்டுச் சர்வாதிகாரிகளை அகிம்சை முறையில் எதிர்ப் பதாயின், அவர்களிடம் வலியப் போய்ச் சிக்கிக்கொண்டவர் கள் ஆகமாட்டார்களா? சர்வாதிகாரங்களே தருமத்திற்கு விரோ தமானவை என்பதைப் பார்த்த பிறகும், தருமத்தைக் கொண்டு அவர்களை மாற்றுவதென்பது, அவர்கள் விஷயத்தில் சாத்திய மாகுமா ?'' என்று கேட்டார்.

---

* அடால்ப் ஹிட்லர் (1889-1945), ஜெர்மனியின் சர்வாதிகாரியாக 1933 முதல் 1945 வரையில் இருந்தார். இவர் ஆஸ்திரியாவில் ஒரு சுங்க அதிகாரியின் மகனுகப் பிறந்தவர். சிறு வயதில் வியன்னுவில் தச்சு வேலை செய்து கொண்டிருந்தார். அப் பொழுதே யூதருக்கும் மார்க்ஸிஸத்துக்கும் விரோதமான கருத்துக் கொண்டிருந்தார். 1912-இல் மூனிக்குக்கு வந்தார். முதல் உலக யுத்தத்தில் பவேரிய ராணுவத்தில் சேர்ந்து கொண்டார். யுத்த முடிவில் ஏற்பட்ட வார்சேல்ஸ் ஒப்பந்தத்தினுல் ஜெர்மன் மக்களிடையே ஏற்பட்டிருந்த கொதிப்பால் பாசிஸ்டு இயக்கம் வளரும் சூழ்நிலை அங்கு ஏற்பட்டது. அதை ஹிட்லர் பயன்படுத்திக் கொண்டு நாஜி ஆட்சியை ஆரம்பித்தார். இக்கட்சி பலம் பெற்று 1933-இல் ஹிட்லர் ஜெர்மன் பிரதம மந்திரியாக நியமிக்கப் பெற்ருர். 1935-இல் ஜெர்மன் ஜனுதிபதி ஹிண்டன்பர்க் இறந்ததும் இவர் சர்வாதி காரியாகிவிட்டார். இவருடைய ஆட்சியின்கீழ்த் தொழிலாளர் இயக்கங்களெல்லாம் அடியோடு நசுக்கப்பட்டு விட்டன. எதிர்த்த கம்யூனிஸ்டுகள், சோஷியலிஸ்டுகள், யூதர்கள் யாவரும் ஒடுக்கப்பட்டுக் கொல்லப்பட்டனர். படைப் பலத்தைப் பெருக்கினுர். 1936-இல் ரைன்லாந்தைப் பிடித்துக்கொண்டார். 1938, 1939-ஆம் ஆண்டுகளில் முறையே ஆஸ்திரியாவையும் ஜெக்கோஸ்லோவாகியாவையும் பிடித்துக்கொண்டார். 1939-இல் போலந்து மீது படையெடுத்தார். அதிலிருந்து இரண்டாவது உலக யுத்தம் மூண்டது. அப்போரின் இறுதிக் கட்டத்தில் 1945 – இல் ருஷியப் படைகள் பெர்லினை நெருங்கிக்கொண்டிருந்தபோது ஹிட்லர் தற்கொலை செய்துகொண்டு மாண்டதாகக் கருதப்படுகிறது.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: "ஹிட்லரோ அல்லது முஸ்ஸோலினியோ என்றுமே திருந்த முடியாதவர்கள் என முன் கூட்டியே ஊகித்துக்கொண்டு விடுகிறது, உங்கள் வாதம். பொதுவாக, மனிதர் எவருக்கும் சுபாவம் ஒன்றே, அன்புக்கு நிச்சயமாக அது பிரதிபலிக்கிறது என்ற அடிப்படையில் இருக்கிறது அகிம்சையிலுள்ள நம்பிக்கை. தாங்கள் உபயோகிக்கும் பலாத்காரத்திற்கு உடனே பணிந்துவிடுகிறார்கள் என்பதையே இதுவரையில் சர்வாதிகாரிகள் கண்டு வந்திருக்கிறார்கள் என்பதை நினைவில் வைக்க வேண்டும். முறையான அகிம்சை எதிர்ப்பைப் பெரிய அளவில் அவர்கள் தம் அனுபவத்தில் கண்டதும் கிடையாது. ஆகையால், தங்களால் செய்ய முடிந்ததான இம்சைச் செய்கைகளைவிட அகிம்சை எதிர்ப்பு உயர்வானது என்பதை அவர்கள் உணர்வது முற்றிலும் சாத்தியம். அது தவிர்க்க முடியாததுமாகும் என்றும் கருதுகிறேன். மேலும், ஜெக் மக்களுக்கு நான் கூறியிருக்கும் அகிம்சை முறை வெற்றியடைவது, சர்வாதிகாரிகளின் நல்லெண்ணத்தை நம்பி அல்ல. ஏனெனில், அகிம்சையைக் கொண்டு எதிர்ப்பவர் நம்பியிருக்க வேண்டியதெல்லாம் கடவுளின் உறுதுணையையே யாகும். சமாளிக்க முடியாத எந்த மாதிரியான கஷ்டங்களிலும் அவரைத் தாங்கிக்கொள்வதும், சமாளித்துக் கொள்வதும் கடவுளின் உதவியேயாகும். இந்த நம்பிக்கை அகிம்சைவாதிகளை எதற்கும் சளைக்காதவராக்குகிறது."

"சர்வாதிகாரிகள் புத்திசாலித்தனமாகப் பலாத்காரத்தை உபயோகிக்காமல் இருந்துவிடுகின்றனர். ஆனால், தங்களுக்கு வேண்டியதை எடுத்துக்கொண்டு விடுகிறார்கள். இந்த நிலைமையில் அகிம்சையால் எதிர்த்து நிற்பவர் என்ன செய்ய முடியும்?" என்று வந்திருந்தவர் எதிர்க் கேள்வி தொடுத்தார். இதற்குக் காந்திஜி கூறியதாவது: "அவர்கள், சுரங்கங்கள், தொழிற்சாலைகள், ஜெக் மக்களின் இயற்கை வளங்கள் எல்லாவற்றையுமே கைப்பற்றிக்கொண்டு விடுகிறார்கள் என்று வைத்துக் கொள்ளுவோம். அப்பொழுது கீழ்க்கண்ட பலன்களே ஏற்படும்: (1) உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிய மறுப்பதற்காக ஜெக்குகள் அழிக்கப்பட்டுவிடலாம். அதுவே ஜெக்குகளுக்குக் கீர்த்தி வாய்ந்த வெற்றியாவதுடன் ஜெர்மனியின் வீழ்ச்சிக்கு ஆரம்பமும் ஆகும். (2) மிதமிஞ்சிய பலத்தின் முன்பு ஜெக்குகள் தம் நெறி கெட்டு விடுவார்கள். அப்படிப்பட்ட ஒழுக்கக் கேடான நிலைமை ஏற்படுமாயின், அது அகிம்சையை அனுசரிக்காததனாலோ அல்லது போதுமான அளவு அதன் பிரயோகம்

இல்லாததனாலோ ஏற்பட்டதாகும், அகிம்சையினால் ஏற்பட்டது அல்ல. (3) ஏற்படக்கூடிய மூன்றாவது நிலைமை, தன்னிடம் அதிகப்படியாக இருக்கும் ஜனத்தொகை குடியேறுவதற்குத் தான் புதிதாகப் பிடித்துக்கொண்ட நாட்டை ஜெர்மனி பயன்படுத்திக்கொள்ளும் என்பது. இதையும் பலாத்கார எதிர்ப்பினால் தவிர்த்துவிட முடியாது. ஏனெனில், பலாத்கார எதிர்ப்புக்கு இடமே இல்லை என்ற முடிவுக்கே நாம் வந்திருக்கிறோம். இவ்விதம் எண்ணிப் பார்க்கக்கூடிய எல்லா நிலைமைகளுக்கும் அகிம்சை ஒன்றே சரியான முறை.

"ஹிட்லரும் முஸ்ஸோலினியும் உலக அபிப்பிராயத்தின் வேண்டுகோளை அவ்வளவு தூரம் அலட்சியம் செய்துவிடுவார்களென நான் நினைக்கவில்லை. ஆனால், உலக அபிப்பிராயத்தை மீறி நடப்பதில் இந்தச் சர்வாதிகாரிகள் இன்று திருப்தி அடைகின்றனர். ஏனெனில், தான் பெரிய வல்லரசு என்று சொல்லிக்கொள்ளும் நாடு எதுவும் மாசற்ற மனத்துடன் இவர்களை அணுகுவதாக இல்லை. முன்னர்ப் பெரிய வல்லரசுகள் தம்கீழ் வாழும் மக்களுக்குச் செய்துள்ள அநீதிகள்பற்றிய பொறுமல் அவர்களுக்கு இருந்துகொண்டிருக்கிறது. சில தினங்களுக்கு முன்புதான் ஒரு முக்கியமான ஆங்கில நண்பர், இங்கிலாந்து செய்த பாபமே நாஜி ஜெர்மனி என்றும், ஹிட்லரை உண்டாக்கியது வார்சேல்ஸ் ஒப்பந்தமே என்றும் என்னிடம் ஒப்புக்கொண்டார்."

**வந்திருந்தவர்கள் :** சர்வதேச சமாதானத்திற்கு உதவுவதில் கிறிஸ்தவன் என்ற முறையில் நாங்கள் என்ன செய்யக்கூடும்? சமாதானம் நிலவும்படி செய்வதற்குச் சர்வதேச அராஜகத்தை எப்படித் தகர்த்தெறிவது? அகிம்சையைச் சரியானபடி கையாள்வது எப்படி? அடிமைப்பட்ட நாடுகள் ஒரு புறம் இருக்க, உயர்வான நாடுகள் தங்கள் ஆயுத பலத்தைக் குறைத்துக்கொள்ளும்படி எப்படிச் செய்வது?

**காந்திஜி :** உங்கள் அனைத்தையும் தியாகம் செய்துவிட நேருவதானாலும் கிறிஸ்தவர் என்ற முறையில் நீங்கள் அகிம்சை நடவடிக்கையின் மூலம் சரியான உதவியைச் செய்ய முடியும். பெரிய வல்லரசுகள் தைரியமாக ஆயுதங்களைக் குறைத்துக்கொள்ள முன் வந்தாலன்றிச் சமாதானம் ஏற்படவே ஏற்படாது. அண்மையில் நடந்த சம்பவங்கள் பெரிய வல்லரசுகளுக்கு இந்த நம்பிக்கையைக் கட்டாயம் உண்டாக்கும் என்றே எண்ணுகிறேன். எனக்கு அசைக்க முடியாத ஒரு நம்பிக்கை இருக்கிறது. முன்னால் இருந்ததைவிட அந்த

நம்பிக்கை இன்று அதிகப் பிரகாசமாகவும் இருக்கிறது. அரை நூற்ருண்டு விடாமல் அகிம்சையை அனுசரித்து வந்திருக்கிறதால் உண்டான அனுபவத்தின் பலன் இது. அகிம்சை ஒன்றிளுலேயே மனித வர்க்கத்தைப் பாதுகாக்க முடியும் என்பதே அந்த நம்பிக்கை. பைபிளை நான் அறிந்திருக்கும் வகையில் இதுவே அதன் நாயகமான போதனையும் ஆகும்.''

—'ஹரிஜன்',- 24—12—1938

# 26

# ஜப்பானிலிருந்து வந்தவர்

சர்வாதிகார நாடுகளிலிருந்து வெகுவாக யாருமே எங்களிடம் வருவதில்லை. இரண்டு ஆண்டுகளுக்கு முன்னுல் கடைசியாகச் சேவாகிராமத்திற்கு வந்த நாஜி, காப்டன் ஸ்டிரன்க். (இவர் பிறகு இன்னெருவருடன் மூண்ட சண்டையில் கொல்லப் பட்டார்.) உயிரோடு ஒரு பாசிஸ்டோ, ராணுவ ஜப்பானின் பிரதிநிதி ஒருவரோ எங்களிடம் வந்ததில்லை. ஜப்பானியப் பார்லிமெண்டின் உறுப்பினரான ஸ்ரீ தகஓகா சில தினங்களுக்கு முன்பு இங்கு வந்திருந்தார். ராணுவ ஜப்பானின் பிரதிநிதியாக அவர் வந்ததாகத் தோன்றவில்லை. சீன-ஜப்பானியப் போர் நடந்துகொண்டிருக்கும்போது ஒரு ஜப்பானியரின் வருகை வரவேற்கத் தகுந்ததல்ல என்று அவர் அஞ்சியதாகத் தெரிகிறது. ''போர் எப்பொழுதுமே நடந்து கொண்டிருக்கப் போவதில்லை. ஜப்பான், இந்தியா, சீனுவுக்குமிடையே நட்பை உண்டாக்குவது எப்படி என்பதைக் கண்டு பிடிப்பது எங்கள் கடமை'' என்ருர் அவர். ஆக்கிரமிப்புப் போர் நியாயமே என்று அவர் சமாதானம் கூறுகிறவராகத் தெரியவில்லை. இந்தியாவும் ஜப்பானும் ஒற்றுமையாக இருப்பதைப் பற்றி மாத்திரமே அவர் பேசினுர். அது எப்படிச் சாத்தியம்?

அவருக்குப் பதிலளிக்கையில் காந்திஜி கூறியதாவது: ''ஜப்பான் பேராசைக் கண்ணுேடு இந்தியாவைப் பார்ப்பதை விட்டுவிட்டால்தான் இது சாத்தியமாகும். உங்கள் படையை நீங்கள் இந்தியாவுக்குக் கொண்டு வரவில்லை என்பது உண்மையே. ஆனுல், உங்களுடைய இணையற்ற ஆற்றல், உண்மையை மறைத்துவிடுவதில் உங்களுக்கு இருக்கும் திறமை, இந்தியரின் பலவீனத்தைப்பற்றி உங்களுக்குத் தெரிந்திருப்பது ஆகியவைகளை, பெரும்பாலும் மிக மோசமானதாக இருக்கும் உங்களுடைய சரக்குகளைக் கொண்டு வந்து இந்நாட்டில்

திணிப்பதற்காக உபயோகப்படுத்துகிறீர்கள். சுரண்டுவதற்கு இந்தியாவில் ஆளுவோர் கையாண்ட முறைகளை நீங்களும் பின் பற்றுவதோடு இன்னும் அதிகமாகவும் போயிருக்கிறீர்கள். ஜப்பானின் நிலைமையைப் பொறுத்தவரையில், இந்தியாவி லிருந்து உங்களுக்குக் கிடைக்கும் கோடிக்கணக்கான ரூபாயை இழந்துவிட நீங்கள் இப்பொழுது சம்மதிக்க முடியாது. இவை வலிய உங்களுக்குக் கிடைக்காது போனால், ஆயுத பலத் தைக்கொண்டு இவை உங்களுக்குக் கிடைக்கும்படி செய்யக் கூடியவர்கள் நீங்கள். ஆனால் இந்தியாவும் ஜப்பானும் நட் போடு இருக்கும்படி செய்வதற்கு இதுவல்ல வழி. பரஸ்பர நட்பின் அடிப்படையில் ஏற்படக்கூடிய ஒழுக்கப்பிணைப்பே இவைகளை ஒன்றாக்க முடியும்.

"ஆனால், அத்தகைய நட்பிற்கு இன்று ஏதுவே இல்லை. உங்கள் சித்திரக் கலையை எடுத்துக்கொள்ளுங்கள். நான் அதை விரும்புகிறேன். ஜப்பானையும் ஜப்பானியரின் வாழ்க் கையையும் குறித்து எட்வின் ஆர்னால்டு* எழுதியிருக்கும் மனத்தை அள்ளும் விவரங்களைப் பல ஆண்டுகளுக்கு முன்னால் படித்திருக்கிறேன். அந்தச் சித்திரம் என் மனத்துள் பதிந்திருக் கிறது. உங்களிடமிருக்கும் நல்ல விஷயங்களை எடுத்துக்கொள்ள விரும்புகிறேன். ஆனால், துரதிருஷ்டவசமாக, ஜப்பானிடத்தி லுள்ள நல்ல விஷயங்களை எங்களுக்குத் தர இங்கு யாரும் வருவதில்லை. எங்கள்மீது உங்கள் சரக்குகளைத் திணிப்பதில் தான் உங்களுடைய நம்பிக்கையெல்லாம். ஜப்பானியத் துணி எவ்வளவுதான் மலிவாகவும் நேர்த்தியாகவும் இருந்தாலும், அதில் ஒரு கஜத்தையாவது எப்படி வாங்கிக்கொள்ள முடியும்? அது எங்களுக்கு விஷம் போன்றது. ஏனெனில், இந்தியா வின் ஏழை மக்களுக்குப் பட்டினி என்பதே அதன் பொருள். ராஜதந்திரம், திறமை, மலிவாக உற்பத்தி செய்வது, ஆயுதப் போர் முறை, சுரண்டுவது ஆகியவைகளில் மேற்கத்திய நாடு களை நீங்கள் எவ்வளவோ தூரம் மிஞ்சிவிட்டீர்கள். உங்கள் நன்மைக்காகப் பிறரைச் சுரண்டுவதில் தவறு எதுவுமில்லை என்று நீங்கள் இருக்கும் வரையில், உங்களுக்கும் எங்களுக் கும் நட்பு எப்படி இருக்க முடியும்?"

ஆசியா, ஆசியாக்காரர்களுக்கே என்பதை வற்புறுத்த ஜப்பானில் புதிதாகத் தோன்றியிருக்கும் கட்சிக்கு ஒரு

---

* புத்தபிரானின் சரிதையான 'ஆசிய ஜோதி' என்ற காவியத்தை எழுதியவர். கிழக்கு நாடுகளின் பண்பாட்டில் விருப்பம் கொண்டவர்.

செய்தியையாவது காந்திஜி கொடுப்பாரா என்று ஸ்ரீ தகஓகா அறிய விரும்பினர். இதற்குக் காந்திஜி கூறியதாவது:

"ஆசியா, ஆசியாக்காரர்களுக்கே என்பதற்கு ஐரோப்பாவுக்கு எதிரான கட்சி இது என்பதே பொருளென்ருல், அந்தக் கொள்கையை நான் ஆதரிக்க முடியாது. ஆசியா, கிணற்றுத் தவளையாக இருந்துவிடுவதில் நாங்கள் திருப்தியடைந்தாலன்றி ஆசியா ஆசியாக்காரர்களுக்கே என்று நாங்கள் எப்படி இருக்க முடியும்? ஆசியா, கிணற்றுத் தவளையாகவே இருந்துவிட முடியாது. தன் தருமப்படி அது வாழ்வதாயிருந்தால் உலகத்திற்கே அது போதிக்க வேண்டிய தருமம் அதனிடம் இருக்கிறது. இந்தியா, சீன, ஜப்பான், பர்மா, இலங்கை, மலேயா ஆகிய நாடுகள் அடங்கிய ஆசியாவில் புத்த தருமத்தின் கொள்கை ஊன்றி இருக்கிறது. பர்மியரையும், இலங்கையில் உள்ளவர்களையும் பார்த்து அவர்கள் பெயரயளவிலேயே பௌத்தர்களாய் இருக்கிருர்கள், இந்தியா உண்மையில் பௌத்த தருமத்தைக் கொண்டதாக இருக்கிறது என்று நான் சொன்னேன். அதையே சீனவுக்கும் ஜப்பானுக்கும் கூறுவேன். ஆனல், ஆசியாவுக்கென்றே ஆசியா இல்லாமல் அது உலகத்திற்கென்று இருக்க வேண்டுமானல், புத்தரின் உபதேசங்களை அது திரும்பக் கற்றுக்கொண்டு அவற்றை உலகத்திற்கு அளிக்க வேண்டும். இன்று அவை எங்குமே மறுக்கப்படுகிறது. பர்மாவில் ஒவ்வொரு பௌத்த சன்னியாசியையும் கண்டு முஸ்லிம்கள் நடுங்குகின்றனர். உண்மையான பௌத்தரான ஒருவரைப் பார்த்து மற்ருெருவர் நடுங்குவானேன்?

"நீங்கள் உங்களுடைய பழமையான சொத்து விஷயத்தில் உண்மையுடன் இருக்க வேண்டும். இதைத் தவிர உங்களுக்கு நான் கொடுக்கக்கூடிய செய்தி வேறு எதுவுமில்லை என்பதை நீங்கள் அறியலாம். 2500 ஆண்டுகள் தொன்மையான செய்தி இது. அதன்படி யாரும் சரியாக ஒழுகவில்லை. 2500 ஆண்டுகள் ஒரு பெரிய எண்ணிக்கையே அல்ல; காலச் சுழலில் அது ஒரு சிறு துளியே. வாடி வருவதாகத் தோன்றும் அகிம்சை மலர், அதன் முழு மலர்ச்சியை இன்னும் அடைய வேண்டியிருக்கிறது."

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது.]

—சேவா கிராமம்—12-12-1938 —'ஹரிஜன்'—24-12-1938.

## 27

# சீனாவும் ஜப்பானும்

'ஆசியா ஆசியாக்காரர்களுக்கே' என்ற வாதம் காந்திஜிக்கு உற்சாகமளிக்கவில்லை. *டாக்டர் ககாவா என்பவரிடமிருந்து நேரில் தெரிந்துகொள்வதற்குக் காந்திஜி தாம் விரும்பிய விஷயத்தைப்பற்றிய கேள்வியிலேயே நேராக இறங்கிவிட்டார். "போரைக் குறித்து ஜப்பானிய மக்களின் உணர்ச்சி என்ன?" என்று கேட்டார்.

இதற்கு டாக்டர் ககாவா, "ஜப்பானில் அநேகருக்கு என் கொள்கை பிடிக்காது. என்னுடைய கருத்துக்களைத் தெரிவிப்பதற்குப் பதிலாக, நீங்கள் என் நிலைமையில் இருந்தால் என்ன செய்வீர்கள் என்பதைக் குறித்து உங்களிடமிருந்து தெரிந்துகொள்ளவே நான் விரும்புகிறேன்" என்றார்.

**காந்திஜி :** என்னுடைய கருத்துக்களைக் கூறுவது, என்னை நான் அதிகப்படியாக நினைத்துக்கொள்ளுவதாகும்.

---

* டோயோஹிகோ ககாவா, ஜப்பானில் கோபே நகரில் 1888 ஜூலை 10-இல் பிறந்தார். 'அவா' மாகாணத்தில் 19 கிராமங்களுக்கு அதிகாரி இவர் தந்தை. அவருடைய 'கீஷா' (வைப்பு) வுக்குப் பிறந்த நாலாவது குழந்தை ககாவா. தந்தை இறந்த பின்னர், அவர் மனைவியிடம் ஒப்படைக்கப்பட்ட ககாவாவின் வாழ்க்கை துயர் மிகுந்ததாகும்.

கிராமப் பள்ளிப் படிப்புக்குப்பின் டோகுஷிமா என்ற ஊரில் பள்ளிக்கூடத்தில் சேர்ந்தார். பிள்ளைகள் விடுதியில் ஒழுக்கக் குறைவு கண்டு இவர் திடுக்கிட்டார். சில காலங் கழித்து, கிறிஸ்தவப் பாதிரிகள் கைதூக்கி விடவே இவருக்கு உற்சாகம் மூண்டது. 21 வயதுக்கு முன்பே ஏழைகளுக்காக உழைக்கும் விரதம் மேற்கொண்டார்.

டோகியோ சேரிகளில் வாழும் மக்கள்-சிறுவர், வயது வந்தவர், உலகம் அறியாதவர், துன்மார்க்கர்கள்-ஜன்னல் இல்லாத குச்சுப் போன்ற குடிசைகளில் நாற்பது பேர் நாய் பன்றிகளைவிடக் கேடாக வாழ்வதைக் கண்டார். 1909 கிறிஸ்துமஸில் இந்த விடுதியில் இவர் குடியேறினார், இவர் அங்கு வந்ததும் மேக நோய்க்காரன் ஒருவன் 'நானும் உம் குடிசையில் இருக்கிறேன்' என்று சொல்லவே, அவனை ஏற்றுச் சிகிச்சை புரிந்தார். அதேபோல் ஒரு கொலைகாரனுக்கும் இடந் தந்தார். பலர் செய்யும் இம்சைகளை இவர் பொறுத்து இன் முகத்துடன் தம் பணியைச் செய்து வந்தார். இவ்வாறு ஆத்ம பரிசோதனையில் ஈடுபட்டார்.

பிறகு பல நவீனம், நூல்களை வெளியிட்டார். 'ககாவாவின் சிந்தனைகள்' ஒப்பற்ற அனுபவங்களைக் கூறும் இலக்கியக் கருவூலம். சொற்பொழிவுகள் செய்து பழக்க வழக்கங்களைச் சீர்திருத்த முயன்றார். 'ஏழை பங்காளன்' என்ற பெயர் எடுத்தார். 1921-இல் ஏற்பட்ட வேலை நிறுத்தத்தின்போது 30,000 தொழிலாளர் இவரையே தம் தலைவராகக் கொண்டனர் ; நற்பயன் அடைந்தனர்.

டால்ஸ்டாய் அனுஷ்டித்த கிறிஸ்தவ தருமத்தில் பற்றுள்ளவர். இவருடைய தொண்டைப் பாராட்டி ஜப்பான் அரசாங்கம் 6 பெரிய நகரச் சேரிகளைச் சீராக்கியது. 6 வருடத் திட்டத்தின் மூலம் 3 கோடி ரூபாய் இதற்கென செலவு செய்தனர். ஜப்பானில் கூட்டுறவு இயக்கம் வளரப் பாடுபட்டவர். இவருக்கு 'ஜப்பான் காந்தி' என்ற பெயரும் வழங்கி வந்தது.

**டாக்டர் ககாவா :** இல்லை. நீங்கள் என்ன செய்வீர்கள் என்பதை அறியவே நான் அதிகமாக விரும்புகிறேன்.

**காந்திஜி :** மாறுபட்டவையான என் கருத்துக்களை எடுத்துக் கூறுவேன். அதற்காக நான் சுட்டுக் கொல்லப்படுவேன். உங்களுடைய கூட்டுறவுகளையும் மற்ற வேலைகளையும் தராசின் ஒரு தட்டில் வைப்பேன். மற்றொரு தட்டில் உங்கள் நாட்டு மக்களின் மானத்தை வைப்பேன். மானம் விற்கப்படுகிறது என்று நீங்கள் கண்டால், ஜப்பானுக்கு எதிராக உங்களுடைய கருத்துக்களை வெளியிடும்படி உங்களுக்குச் சொல்லுவேன். அப்படிச் செய்வதனால், உங்கள் மரணத்தின்மூலம் ஜப்பான் வாழ வழி செய்வேன். ஆனால், இதற்கு, உள்ளத்தில் உறுதி அவசியம். நாங்கள் உங்கள் நிலைமையில் இருந்தால், நான் உங்களுக்குக் கூறியதையெல்லாம் என்னால் செய்ய முடியுமா என்பது எனக்குத் தெரியாது. ஆனால், நீங்கள் கேட்பதால் என் கருத்தை நான் உங்களுக்குக் கூற வேண்டும்.

**டாக்டர் ககாவா :** உறுதி இருக்கிறது. ஆனால், தவிர்க்குமாறு நண்பர்கள் என்னிடம் கூறுகின்றனர்.

**காந்திஜி :** சரி. உங்கள் உள்ளத்துள் இருக்கும் **நண்பன்,** 'இதைச் செய்' என்று சொல்லும்போது மற்ற நண்பர்கள் கூறுவதற்குச் செவி சாய்க்காதீர். நண்பர்கள் எவ்வளவுதான் நல்லவர்களாக இருந்தாலும், சில சமயங்களில் அவர்கள் நம்மை ஏமாற்றிவிடவும் கூடும். வேறுவிதமாக அவர்களால் விவாதிக்க முடியாது. உயிர் வாழ்ந்து உங்களுடைய வேலையைச் செய்யுங்கள் என்பார்கள். சிறைக்குச் செல்லுவதென்று நான் முடிவு செய்தபோதும் இதே கோரிக்கையைத்தான் என்னிடமும் சொன்னார்கள். ஆனால், நண்பர்கள் சொன்னதை நான் கேட்கவில்லை. இதன் பலனை, சிறையின் கெட்டியான நான்கு சுவர்களுக்குள்ளே நான் அடைபட்டுவிட்டபோது சுதந்திரத்தின் ஒளியைக் கண்டேன். நான் இருளடர்ந்த சிறைக் குச்சுக்குள் கிடந்தேன். ஆனால், அச்சுவருக்குள் இருந்தபடியே நான் எல்லாவற்றையும் காண முடியும், வெளியிலிருந்து எதையுமே காண முடியாது என்பதை உணர்ந்தேன்.

இந்த விவாதத்தைத் தொடர்ந்து நடத்த டாக்டர் ககாவா தயங்கியதாகத் தெரிந்தது. உண்மையில் இதற்கு இடமே இல்லை. உறுதி என்னவோ இருந்தது. ஆனால், அதற்குரிய வேளையில்தான் அது நிறைவேறும். ஆகவே, பேச்சை அவருடைய கூட்டுறவுபற்றிய விஷயத்திற்குத் திருப்பினர். "பாசனங்

களுக்கான கூட்டுறவு ஏதாவது இந்தியாவில் இருக்கிறதா?" என்று கேட்டார். ஆனல், காந்திஜிக்கு மற்றச் சிந்தனைகள் நிரம்ப இருந்தன.

காந்திஜி பதில் கூறியதாவது :

"அப்படி இருப்பதாக நான் நினைக்கவில்லை. இவை எல்லாம் உங்களிடம் இருக்கின்றன என்பது உண்மையே. அற்புதமான காரியங்களை நீங்கள் செய்திருக்கிறீர்கள். உங்களிடமிருந்து நாங்கள் தெரிந்துகொள்ள வேண்டியவை பல இருக்கின்றன. 'யுத்தம் என்றால் என்ன?' என்ற புத்தகத்தைப் பண்டித ஜவாஹர்லால் எனக்குக் கொடுத்திருக்கிறார். உயிரோடு சீனவை விழுங்குவது, விஷத்தை அதற்கு ஏற்றுவது போன்ற நடுங்கச் செய்யும் பல விஷயங்களை அப்புத்தகத்தில் நான் படித்தேன். இவைகளை யெல்லாம் நாங்கள் எப்படிப் புரிந்துகொள்ளுவது? இந்த அட்டூழியங்களை யெல்லாம் நீங்கள் எப்படிச் செய்திருக்கக் கூடும்? உங்களுடைய மகாகவியோ, இது மனிதத்தன்மையான போர் என்றும், சீனவுக்கு அது நல்லது என்றும் கூறுகிறார்!"

[ ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது. ] —'ஹரிஜன்',—21—1—1939.

# 28

# துன்பத்தில் துடிக்கும் உலகு : சீனு படும் பாடு

## 1

கழியும் ஆண்டின் கடைசி நாளிலும் புத்தாண்டின் முதல் நாளன்றும் பல நாடுகளின் பிரதிநிதிகளும் அடங்கிய தனிப் பெருமைவாய்ந்த ஒரு கூட்டத்தினர் சேவா கிராமத்திற்கு வந்திருந்தார்கள். இவர்கள் எல்லோரும் தாம்பரம் மகாநாட்டுக்காக வந்திருந்தவர்கள். 'சிறிய அளவிலான உலகு' என்று காந்திஜி வருணித்தப்படி அதில் மூன்று கண்டங்களின் பிரதிநிதிகளும் இருந்தார்கள். ஜொஹன்னஸ்பர்க்கின் டி. ஆர். மிஷனின் பூஜ்ய எஸ். எஸ். தேமா, தெற்கு ரொடீஷியாவின் குவேண்டே மிஷனின் பூஜ்ய தாமஸ் டி. சங்காங்கே, பிரதிநிதி என்ற முறையில் இந்தியாவுக்கு வந்த முதல் நீக்ரோ பெண்ணை கன்னி மீனு ஸோகா ஆகியோர் அதில் இருந்தனர். டோக்கியோவிலிருந்து வந்த ஜப்பானியப் பிரதிநிதியான எம்.எஸ். முராவோவும் இருந்தார். சீனவிலிருந்து சீனத் தேசீய சர்க்காரின் யுவான்

சட்டசபை மெம்பரான பூஜ்ய டிமுதி டிங்க்பாங் லியூ வந்திருந்தார். ஷாங்காய் தேசீய ஒய். எம். ஸி. ஏ.யின் அசோஸியேஷன் பிரஸின் தலைமை ஆசிரியரும், முன்பு சீனாவில் சமரச சகோதரத்துவ சங்கத்தின் தலைவராக இருந்தவருமான ஒய். டி. வூவும் வந்தார். தத்துவஞானியும், கன்பூஷியஸ்பற்றியும் கிராமப் புனருத்தாரணம்பற்றியும் பல நூல்களை எழுதியவருமான பி. ஸி. ஹ்ஸு வந்திருந்தவர்களில் ஒருவராவர். இவர் ஹாங்காங் பல்கலைக்கழகத்தின் பேராசிரியராக இருந்து, சீனாவில் பல இடங்களிலும் குருகுலங்களை ஏற்படுத்த உதவி செய்து வருகிறார். அங்கே படிப்பாளிகள், 'அமைதியிலிருந்து பிரிவுபடாத உழைப்பை'த் தங்கள் லட்சியமாக மேற்கொண்டிருக்கின்றனர். அங்கே சுத்தம் செய்வது, பெருக்குவது உள்பட எல்லாச் சிறு வேலைகளையும் அவர்கள் தாமே செய்துகொள்ளுகின்றனர்.

இவர்களில் பெரும்பாலோர் பக்தியுள்ள கிறிஸ்தவர்கள். யுத்தமின்மைக்குப் பலமாக ஆதரவளிப்பவர்கள். சீனா, நீக்ரோ இனத்தினரின் பிரதிநிதிகளான இவர்கள், ஜப்பானிய ராணுவப் போக்கின் அடக்குமுறை அநியாயங்களை அறிந்தவர்கள்; வெள்ளை இனத்தினரின் ராணுவ அடக்குமுறைகளின்கீழ் நசுங்கி அனுபவம் பெற்றவர்கள். ராணுவ ரீதியான ஆக்கிரமிப்பை எதிர்ப்பதற்கு ஆயுதமாக அகிம்சை முறையை உபயோகிப்பதுபற்றி அறிந்துகொள்ள இவர்கள் அக்கறை கொண்டிருந்தனர். சீனப் பிரதிநிதி நேராகப் போர் அரங்கிலிருந்து வந்தவர். இக்காலத்துப் போர் முறையின் கொடூரங்களை நேரில் பார்த்தவர் அவர். ஒரு தரும சங்கடமான நிலையில் தாம் இருப்பதை அவர்கள் உணர்ந்தனர்.

தேசாபிமானத்தோடு கூடிய ஒரு போரின் கொடூரத்திற்கும், தங்கள் சுதந்திரத்திற்கு ஊறு செய்யும் அவசியமான அப்படையெடுப்புமீது நியாயமாக அவர்களுக்குள்ள வெறுப்புக்குமிடையே அல்லலுறும் அவர்கள், தங்களுடைய ஆத்மிகமான துயரைக் காந்திஜியின் முன் எடுத்துச் சொன்னார்கள். அகிம்சையைச் சரியானபடி பயன்படுத்திக்கொள்ளுவது எப்படி என்று அகிம்சையின் தூதரான காந்திஜியை அவர்கள் கேட்டார்கள்.

பூஜ்ய லியூ முதல் நாள் காந்திஜியைத் தனியாகச் சந்தித்தார். சீனருக்கு உதவி செய்ய வைத்தியக் கோஷ்டியை அனுப்பியதற்கு நன்றி கூறிவிட்டு அவர் சொன்னார்: "சீனாவிடம் இந்தியாவுக்குள்ள அனுதாபத்திற்கும் நல்லெண்ணத்திற்கும் அறிகுறியாக அதை நாங்கள் பாராட்டுகிறோம். சீனாவின்

போராட்டம்* ஆசியா முழுவதற்குமேயன்றிச் சீனுவுக்காக மட்டுமல்ல. *1885*-இல் எங்களை ஜப்பானியர் தோற்கடித்ததால் யாராலும் தங்களை வெல்ல முடியாதென அவர்கள் நினைக்கின்றனர். ஆனுல், இந்த ஆக்கிரமிப்புப் போருக்காக கடுமையான வரிகளைச் செலுத்துவதன் மூலம் ஜப்பானிய மக்கள் தாங்க முடியாத தொல்லைக்கு உள்ளாகின்றனர் என்பதை அறிவோம்.

"சொத்துக்கள் நாசமாவதைக் கண்டு – அது மனவேதனையையே தருவதாயிருப்பினும் – நாங்கள் அஞ்சவில்லை. ஆனுல், கலாசாரம் நாசமடைவதைக் குறித்துத்தான் நாங்கள் பயப்படுகிரேம். ஷாங்காயில் முதல் குண்டு ஒரு புத்தகசாலைமீது விழுந்தது. கல்லூரிகள் எல்லாம் நாசமாகிவிட்டன. பேராசிரியர்கள் கொல்லப்பட்டனர். புதிய கல்வி என்பது நிலைகுலைந்து போய் உள்நாட்டிற்குள் அடைக்கலம் தேட வேண்டியதாயிற்று. தார்மிக ஒழுக்கத்திற்கு அவர்கள் செய்திருக்கும் தீமையே எல்லாவற்றையும்விட மோசமானது."

அபின் தின்னும் பழக்கத்தைப் போக்கச் சென்ற இருபது ஆண்டுகளாகச் சீனு மிகப் பாடுபட்டுவரும் சமயத்தில் அப்பழக்

---

* சீனு அச்சமயம் பட்டுவந்த துயரை அறிவதற்கு அப்பொழுது சீனு இருந்த நிலைமையைத் தெரிந்துகொள்ள வேண்டியது முக்கியமாகும். 1911-இல் ஏற்பட்ட புரட்சியினுல் ஏகாதிபத்திய மஞ்சு வமிச ஆட்சி ஒழிந்தது; சீனு குடியரசு ஆயிற்று. ஆனுல் நாட்டில் எங்கும் குழப்ப நிலையும் உண்டாயிற்று. வடக்கில் மார்ஷல் யுவான் ஷிகாய் என்பவர் ஆண்டு வந்தார்; பிறகு தாமே மன்னர் என்றும் பிரகடனஞ் செய்துவிட்டார். தெற்கில் புரட்சித் தலைவரான ஸன்-யாட்-ஸன், நான்கிங்கைத் தலைநகராகக் கொண்டு குடியரசு ஆட்சியை ஆரம்பித்தார். பிறகு தெற்கிற்கும் வடக்கிற்கும் இடைவிடாது போர் நடந்து ராணுவ தளபதிகள் பிரபலமாயினர். 1924-இல் ஜெனரல் சியாங் கை ஷேக் தலைவராக முன் வந்து இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு தாமே அரசாங்கத் தலைவர் எனப் பிரகடனஞ் செய்துவிட்டார். கம்யூனிஸ்டுகளுக்கும் அவருக்கும் பகைமை மூண்டது. உள் நாட்டுக் குழப்பங்கள் உண்டாயின. சியாங்கின் எதிர்ப்பாளருக்கு ருஷியா உதவியது. 1928-இல் நான்கிங்கில் ஒரு தேசீய மகா நாடு நடந்தது. அது சியாங்கை ஆதரித்தது. இவருடைய உறவினர்கள் சீனுவில் பெரும் பதவிகளை வகித்தனர். 1936–இல் மே மாதம் சீனுவுக்கு என்று ஓர் அரசியல் பிரசுரமாகியும் அது அமலுக்குக் கொண்டுவரப்படவில்லை. 1931–இல் சீனுவின் பகுதியான மஞ்சூரியாவை ஜப்பான் பிடித்துக்கொண்டு மஞ்சூக்கோ என்ற பொம்மை ராஜ்யத்தை அங்கு அமைத்துக் கொண்டது.

1937 ஜுலை 7-ஆம் தேதி பீகிங்குக்கு அருகில் மார்க்கோ போலோ பாலத்தில் ஜப்பானியப் படைகளுக்கும் சீனப் படைகளுக்கும் போர் மூண்டது. 'சீனச் சம்பவம்' என்று ஜப்பான் கூறிவந்த இந்தப் போர் வரவரக் கொடூரமாயிற்று. மஞ்சூக்கோவிலிருந்து ஜப்பான் ஏராளமான படைகளை அனுப்பியது. வடக்கில் டீன்ஸ்டீன் பிடிபட்டது. டிசம்பர் 13-ஆம் தேதி நான்கிங்கும் வீழ்ந்தது. அடுத்த ஆண்டு காண்டன் நகரும் ஜப்பானியர் வசமாயிற்று. 1939-இல் இச்சாங்கையும் பிடித்துக்கொண்டு விட்டனர், அது பெரிய விமானத் தளம். ஜப்பான் தன்னுடைய விமானப்படைப் பலத்தை உபயோகித்துக்கொடூரமான போரை நடத்திக்கொண்டிருந்த சமயத்திலேயே சீனுவின் பிரதிநிதிகள் காந்திஜியுடன் விவாதித்தனர்.

கத்தை மீண்டும் புகுத்திவிட எவ்விதம் கட்டுப்பாடாக முயற்சிகள் செய்யப்பட்டு வருகின்றன என்பதைப்பற்றி எடுத்துக் கூறினர். அவர் மேலும் கூறியதாவது : "பீக்கிங்கை அவர்கள் ஆக்கிரமித்துக்கொண்டதும் புதிதாக ஐம்பது விபசார விடுதிகளை உண்டாக்கி, அவைகளில் கொரியாப் பெண்களை நிரப்பினர். ஆக்கிரமித்திருக்கும் படையினர் கண்டவிடமெல்லாம் பெண்களைக் கற்பழிக்கின்றனர். கிடைத்திருக்கும் பல தகவல்களின்படி பீக்கிங்கில் மாத்திரம் இத்தகைய சம்பவங்கள் 8,000 முதல் 20,000 வரை நடந்திருக்கின்றன. ஷாங்காயில் ஜப்பானிய அதிகாரத்தின்கீழ்த் திறக்கப்பட்டிருக்கும் சூதாடு கழகங்களிலும், அபின் கடைகளிலும் ஒரு மாதத்திற்கு மட்டும் 250 ஆயிரம் டாலர் வருமானம் வந்திருக்கிறது. நாட்டு மக்களின் ஒழுக்க நெறியே குன்றிப் போய்விட்டது. தேசம் முழுவதும் அபினி தின்னும் பழக்கம் வந்துவிட்ட பிறகு இனி நம்பிக்கைக்கே இடமில்லை. பத்து அல்லது பதினைந்து ஆண்டுகளில் யுத்தத்தில் நாங்கள் வெற்றி பெற்றுவிடுகிறோமெனின், அழிந்துபோன சொத்து உடைமைகளை மீண்டும் பழைய நிலைக்குக் கொண்டுவந்துவிட முடியும். ஆனால், எங்கள் இளஞ் சந்ததியாரை மீட்பது எப்படி? உங்கள் போதனை எங்களுக்கு வேண்டும். உங்கள் சுயசரிதையைச் சீனத்தில் மொழி பெயர்த்திருக்கிறோம். ஆத்மிகத் துறையில் நீங்கள் எங்களுக்கு வழிகாட்டவேண்டும் என்று எதிர்பார்க்கிறோம்".

இதற்கு மகாத்மா காந்தி கூறியதாவது : "சாந்திநிகேதனத்திலிருந்து ஒரு சீன நண்பர், சீனுவுக்கு என்னுடைய செய்தி ஒன்று வேண்டும் என்று ஒரு சமயம் என்னைக் கேட்டார். அனுப்பாததற்கு மன்னிக்கும்படி அவருக்குப் பதில் தெரிவித்துவிட்டேன். இதற்குக் காரணத்தையும் அவருக்குக் கூறினேன். சீன மக்களுக்கு என் அனுதாபம் என்று மாத்திரம் நான் சொல்லிவிட்டால், என்னிடமிருந்து வந்தது என்ற வகையில் அதனுல் அதிகப் பயன் இராது. சீன மக்களுக்கு விமோசனம் அகிம்சை முறையில்தான் இருக்கிறது என்று திட்டமாகச் சீன மக்களுக்குச் சொல்லுவதற்கு அவர்களிடம் எனக்கு அன்பு இருக்க வேண்டும். மேலும் போராட்டத்திற்கு வெளியில் இருக்கும் என்னைப் போன்ற ஒருவர், சாவா, வாழ்வா என்ற பெரும் போராட்டத்தில் ஈடுபட்டிருக்கும் ஒரு நாட்டு மக்களிடம், 'இப்படியல்ல அப்படி' என்று சொல்ல முடியாது. புதிய முறையை மேற்கொள்ள அவர்கள் தயாராக இருக்கமாட்டார்கள் ; பழைய முறையிலும் பிடித்தம் இருக்காது. என்னுடைய தலையீடு அவர்

களை அசைத்து, அவர்களுடைய மனத்தில் குழப்பத்தையே உண்டாக்கும்.

"போரில் ஈடுபட்டிருக்கும் சீன மக்களுக்கு நான் அனுப்பக்கூடிய 'செய்தி' எதுவுமில்லையென்ருலும், என்னுடைய கருத்துக்களை உங்களிடம் தயக்கமின்றிக் கூறிவிடுகிறேன். கலாசாரம் நாசமாகி வருவதாகச் சொன்னீர்களே, நீங்கள் சொன்ன அதன் பொருள் என்ன என்று கேட்க இருந்தேன். சீனக் கலாசாரம் கல்லிலும் சுண்ணும்பிலும், பூச்சி அரிக்கும் பெரிய கிரந்தங்களிலும் இருந்து வந்தது என்பதைக் கேட்க வருந்துகிறேன். ஒரு நாட்டின் கலாசாரம், அந்நாட்டு மக்களின் உள்ளங்களிலும் ஆத்மாவிலுமே இருப்பவை. சீனக் கலாசாரம், சீனரின் வாழ்க்கையோடு ஒன்றி இருக்கும் வரையில்தான் அது சீனக் கலாசாரமாக இருக்கும். உங்கள் கலாசாரமும் உங்கள் ஒழுக்கமும் அழிவதற்கான அபாயம் நேரிட்டிருக்கிறது என்று நீங்கள் கூறுகிறீர்கள். இதைக்கொண்டு பார்த்தால், உங்கள் நாட்டில் தோன்றிய சீர்திருத்த இயக்கம் ஆழமற்றது, மேல்வாரிதான் என்ருகிறது. சூதாடுவதில் உள்ள நசை மக்களின் உள்ளத்திலிருந்து மறைந்துவிடவில்லை. அது ஒடுங்கி இருந்தது என்ருல், சட்டம் விதிக்கும் தண்டனைகளிலுலேயன்றிச் சமூகத்தில் தோன்றிய உணர்ச்சியிஞலன்று. உள்ளம் தொடர்ந்து சூதாட்டத்தில் ஈடுபட்டே வந்திருக்கிறது. ஜப்பான் செய்ததற்காகவும், செய்து வருவதற்காகவும் ஜப்பானைக் குறைகூற வேண்டும்; குறை கூறியாக வேண்டும். ஆனல், ஜப்பாஞே, ஆட்டு மந்தையைச் சீக்கிரத்தில் தின்று முடித்துவிடவேண்டும் என்பதிலேயே அக்கறை கொண்ட ஓநாயைப் போன்றது. ஓநாய்மீது குற்றம் சொல்லிக்கொண்டிருப்பதால் ஆட்டுக்கு லாபமில்லை. ஓநாயின் பிடிக்குள் விழாமல் இருப்பதற்குத்தான் ஆடு கற்றுக் கொள்ளவேண்டும்.

"உங்களில் ஒரு சிலராவது அகிம்சையை அனுசரிப்பார்களாயின், சீனக் கலாசாரத்திற்கும் ஒழுக்கத்திற்கும் அவர்கள் அழியா நினைவுச் சின்னங்களாக இருந்து வருவார்கள். பிறகு, போர்க்களத்தில் சீஞ முறியடிக்கப்பட்டு விடுவதாயிருந்தாலும் முடிவில் அதுவும் சீஞவுக்கு நல்லதாகவே முடியும். ஏனெனில், நம்பிக்கையும் விமோசனமும் நிச்சயம் என்பதைக் கொண்ட ஒரு போதனையையும் அதே சமயத்தில் சீஞ அடையும். விரும்பாதவர்களுக்கு அபினை, ஜப்பான் துப்பாக்கி முனை காட்டி, மிரட்டித் திணித்துவிட முடியாது. அதைத் தின்னும் ஆசையைத் தூண்ட மாத்திரமே அதனல் முடியும். ஜப்பானுடைய

பலாத்காரத்திற்குப் பலாத்காரத்தினலேயே பதில் தருவதன் மூலம் இந்த ஆசைகளிலிருந்து மீண்டுவிட மக்களுக்கு நீங்கள் உபதேசித்துவிட முடியாது. வேறு எந்தச் சக்தியினுல் முடிந் தாலும், முடியாது போனுலும், சீன ஒழுக்கத்தையும் சீனுவின் கலாசாரத்தையும் அதனுல் பாதுகாக்கவே முடியாது.

"நான் கூறுவதன் உண்மையை நீங்கள் உணர்ந்தால், நீங்களே சீனுவுக்கு உயிருள்ள செய்தி ஆவீர்கள். அதன் பிறகு நீங்கள் சீன மக்களிடம்; 'ஜப்பான் நம் சொத்துக் களுக்கு என்னதான் நாசத்தை விளைவித்தாலும் சரி, சீனுவின் கலாசாரத்தை நாசம் செய்துவிட அதனுல் முடியாது. நம் மக்கள் போதுமான கல்வி அறிவைப் பெற்றிருப்பதோடு ஜப் பான் தந்திரமாக உபயோகிக்கும் ஆசைகளை எதிர்த்து நிற்ப திலும் எச்சரிக்கையாக இருக்கவேண்டும். நினைவுச் சின்னங் களும் நகரங்களும் தரைமட்டம் ஆக்கப்படலாம். அவை எல்லாம் என்ருே மறைந்துவிடப் போகின்றவை. காலம் அவற்றைத் தன் னுள் கரந்துகொள்ளும். அவற்றை ஜப்பானியர் அழித்துவிட்டால், அது காலத்தின் வாயிலிலிருந்து எடுத்த சிறு கவளமாகவே இருக்கும். ஜப்பானியர் நம்முடைய ஆத்மாவைக் கெடுத்துவிட முடியாது. சீனுவின் ஆத்மாவுக்கு ஏற்படும் புண் ஜப்பானுல் ஏற்பட்டதாக இருக்காது' என்று கூறவேண்டும்."

## ஜப்பானைப் பகிஷ்கரித்தல்

ஜப்பானின் பொருளாதாரச் சிதைவே சீனுவைக் காக்க முடியும் என்று சீன நண்பர் கூறினுர். இந்தியா, ஜப்பானியச் சரக்குகளைப் பகிஷ்கரிக்கும் நிலை ஏற்படுமா என்பதையும் அறிய விரும்பினுர். இதற்குக் காந்திஜி கூறியதாவது :

"அதிக நம்பிக்கை இருக்கிறது என்று கூறவேண்டும் என்றே விரும்புகிறேன். எங்களுடைய அனுதாபம் எல்லாம் உங்கள் பக்கம் இருக்கிறது. ஆனுல், அவை ஆழமாகப் பதிந்து எங் களைக் கிளறி விடவில்லை. அப்படிச் செய்திருந்தால், எல்லா ஜப்பானியச் சரக்குகளையும், முக்கியமாக-ஜப்பானியத் துணிகளை- நாங்கள் பகிஷ்கரித்திருப்போம். ஜப்பான், உங்களை மாத்திரம் வென்றுகொண்டிருக்கவில்லை. மலிவான, இயந்திரத்தில் செய்த போலிச் சாமான்களைக் கொண்டு எங்களையும் வென்றுவிட முயன்று வருகிறது. உங்களிடம் நட்பும் நல்லெண்ணமும் எங் களுக்கு ஏராளமாக உண்டு. அதற்கு நல்ல அறிகுறியாக வைத்

தியக் கோஷ்டியை இந்தியா அனுப்பியது. இதைவிட நாங்கள் இன்னும் அதிகமாகச் செய்ய முடியும் என்பதை நான் அறிவதால், இந்த உதவி எனக்கு அதிகத் திருப்தியை அளிக்கவில்லை. உங்களைப் போலவே நாங்களும் பெரிய நாட்டினர். ஜப்பானியரிடம் நாங்கள், "உங்கள் காலிகோவில் ஒரு கஜத்தைக்கூட நாங்கள் இறக்குமதி செய்யப் போவதில்லை, உங்களுக்கு எங்கள் பஞ்சையும் ஏற்றுமதி செய்யப் போவதில்லை' என்று சொன்னால், ஜப்பான் தன்னுடைய ஆக்கிரமிப்பை நடத்துமுன்பு நன்ருகச் சிந்தித்தே தீரும்."

## அகிம்சை முறை

இந்தப் பேச்சு, வந்திருந்த எல்லோருடனும் விவாதமாகப் பின்னர் மாறியது. துருவிப் பார்க்கும் வகையில் சீனப் பிரதிநிதிகள் கேள்வி கேட்டார்கள். அகிம்சையை 'உள்ளும் புறமும்' நுணுக்கமாக ஆராயும் ஆர்வம் இருந்தது. அதில் ஒருவர் கூறியதாவது: "தனிப்பட்டவர்கள், மற்றத் தனிப்பட்டவர்களுடன் தங்களுக்கு இருக்கும் சம்பந்தத்தில், தங்களிடமே முதலில் அகிம்சையை அனுசரிக்க வேண்டியது அவசியம் அல்லவா?" இதை விளக்குவதற்காக அவர், அகிம்சையே வாழ்க்கையின் தருமம் என்ற நம்பிக்கை தமக்கு ஏற்பட்ட பிறகுங்கூட, இரண்டு ஆண்டுகள் வரையில் வெளிக் காரியங்களில் மற்றவர்களுக்குத் தாம் அதை உபதேசிக்கவில்லை என்ருர். "முதலில் அதன்படி வாழ நான் முயன்று, அதை அனுசரிப்பதில் என்னைச் சரி யாக்கிக்கொள்ளுகிறேன். என்மீது எழும் கண்டனங்களை மறுப்பதில்லை, திருப்பிப் பதில் சொல்லுவதில்லை என்று முடிவு செய்துகொண்டதுடன் ஆரம்பித்தேன். ஏழு ஆண்டுகளுக்குப் பிறகு, என்னுடைய அனுபவத்தைக் குறித்து என் மாணவர்களுக்குத் தெரிவித்தேன். என் முறையை அனுசரித்ததில் எப்போழுதும் பலன் கிடைத்தது என்று சொல்வதற்கில்லை. ஆகவே, எனக்குள் 'பொறுத்திருந்து மீண்டும் நான் முயற்சி செய்யவேண்டும்' என்று சொல்லிக்கொள்ளுகிறேன்" என்ருர்.

காந்திஜி கூறிய பதிலாவது: "வேறு விதமாக நினைப்பது ஒரு மருளுக்கு உட்படுவதாகும். தமக்கு மற்றவர்களுடன் இருக்கும் உறவுகளில் ஒருவர் தாமே அகிம்சையை அனுசரிக்காமல் பெரிய காரியங்களில் அதை உபயோகிக்கலாம் என்று நினைப்பது தவருகும். தருமம் செய்வதைப்போல அகிம்சையும்

முதலில் தன்னிடமிருந்து ஆரம்பமாகவேண்டும். ஆனால், தனிப் பட்டவர் அகிம்சையில் பயிற்சி பெறவேண்டியது அவசியமென் ருல், அதேபோலத் தேச மக்களும் பயிற்சி பெற்ருகவேண்டியது பின்னும் முக்கியமாகிறது. தன் வட்டத்திற்குள் மாத்திரம் ஒரு வர் அகிம்சையோடு இருந்துகொண்டு அதற்கு வெளியில் வேறு விதமாக இருக்கமுடியாது. இல்லையானால், தம் சொந்த வட் டாரத்திலும் அகிம்சையில் அவர் அகிம்சையோடு இல்லை என்று ஆகும்; அகிம்சை வெறும் தோற்றத்தில்தான் இருக்கிறது என்றும் ஆகும். எதிர்ப்பு நேரிடும்போதுதான்-உதாரணமாக, ஒரு திருடனே அல்லது கொலைகாரனே தோன்றும்போதுதான்-உங்கள் அகிம்சைக்குச் சோதனை ஏற்படுகிறது. நீங்கள் திருடனை எதிர்க்க, ஒன்று அவனுடைய, ஆயுதத்தைக்கொண்டே முயல வேண்டும்; முயன்று பார்க்க வேண்டும். இல்லையேல், அன்பினால் அவனை நிராயுதபாணியாக்க நீங்கள் முயற்சி செய்ய வேண்டும். நல்லவர்களிடையே வாழ்ந்து வருவதால், உங்களுடைய நடத்தை அகிம்சையானது என்று விவரிக்கப்படாமல் இருக்கும். பரஸ்பரம் சகித்துக்கொண்டு போவது, அகிம்சை ஆகாது. ஆகையால், அகிம்சையே வாழ்க்கையின் தருமம் என்ற உறுதியான நம்பிக்கை உங்களுக்கு ஏற்பட்டதுமே உங்க ளிடத்தில் பலாத்காரமாக நடக்கிறவர்களிடத்தில் அதை நீங்கள் அனுசரிக்க வேண்டும். தருமம், தனிப்பட்டவர்களைப் போன்றே நாட்டு மக்கள் எல்லோருக்கும் பொருந்த வேண்டும். பயிற்சி அவசியம் என்பதில் சந்தேகம் இல்லை. ஆரம்பம் எப்பொழுதும் சிறிதாகவே இருக்கும். ஆனால், உறுதியான நம்பிக்கை மாத் திரம் இருந்துவிட்டால் மற்ற எல்லாம் தாமே தொடர்ந்து வரும்.''

மற்ருெரு கேள்வியாவது: "அகிம்சையை அனுசரிப்பதில், தருமத்திற்காக 'உயிரைத் தியாகம் செய்யும்' ஒரு மனப்போக்கு அல்லது அகந்தை தோன்றுவதான ஆபத்து ஏற்படாதா?''

**காந்திஜி**: ஒருவருக்கு அத்தகைய செருக்கோ அல்லது அகங்காரமோ இருந்தால் அங்கு அகிம்சை இல்லை. அடக்கம் இராதுபோனால் அகிம்சை சாத்தியமே இல்லை. அகிம்சையாக நான் காரியம் செய்தபோதெல்லாம், கண்ணுக்குத் தெரியாத ஒரு சக்தியின் உயர்ந்த தூண்டுதலிலேயே நான் ஈடுபடலா னேன்; அதில் நிலைத்தும் இருந்தேன். இது என் சொந்த அனு பவம். எனது சொந்த இச்சையின் பேரில் இம்முயற்சி இருந்திருக்குமாயின் நான் முற்றிலும் தவறிப் போயிருப்பேன். நான் முதல் தடவையாகச் சிறை சென்றபோது, அதனல்

ஏற்படக்கூடியதைக் குறித்துப் பின்னடைந்தேன். சிறை வாழ்க்கையைப்பற்றிய பயங்கரங்களையெல்லாம் கேள்விப்பட்டிருந்தேன். ஆனால், கடவுள் காப்பார் என்பதில் எனக்கு நம்பிக்கை இருந்தது. பிரார்த்தனை உணர்ச்சியோடு சிறைக்குச் சென்றவர்கள் எல்லாம் வெற்றியோடு வெளிவந்தார்கள். தங்கள் சொந்த பலத்தை நம்பிப் போனவர்கள் தோல்வியுற்றனர் என்பது எங்கள் அனுபவம். பலத்தைக் கடவுள் அளிக்கிறார் என்று நீங்கள் சொல்லும்போது தன்னைப்பற்றித் தான் நொந்துகொள்ளுவதற்கு இடமே இல்லை. தம்மைப்பற்றிப் பிறர் பெருமையாகச் சொல்ல வேண்டும் என்று ஒரு காரியத்தைச் செய்யும்போதுதான் ஒருவர் தமக்குத் தாமே நொந்து கொள்ளுவதென்பது வருகிறது. ஆனால் இங்கோ பிறர் அங்கீகரிக்க வேண்டும் என்பதற்கு எதுவும் இல்லை.''

தமக்கு இருக்கும் குழப்பத்தை இன்னும் ஒரு நண்பர் வருமாறு கூறினார்: ''நான் அகிம்சையில் திடமான நம்பிக்கையுள்ளவன். எட்டு ஆண்டுகளுக்கு முன்னால் உங்களுடைய 'சத்திய சோதனை'யைப் படித்தேன். அதில் நீங்கள் எடுத்துக் கூறியிருக்கும் வாழ்க்கை முறையைத் தழுவினேன். பிறகு அந்நூலைச் சீன மொழியிலும் பெயர்த்தேன். அதன் பின்னர் ஜப்பானியப் படையெடுப்பு வந்தது. அகிம்சையில் எனக்கு இருந்த நம்பிக்கை கடுமையான சோதனைக்கு ஆளாகிவிட்டது. குழப்பத்திலும் சிக்கிக்கொண்டேன். எப்பொழுதும் ராணுவப் போக்குடன் இருந்தவர்களல்லவென்றாலும், பலாத்காரமான எதிர்ப்பு ஒன்றே இப்பொழுது இருக்கும் வழி என்று நம்பும் என் நாட்டு மக்களுக்கு நான் அகிம்சையை உபதேசிக்க முடியாது என்று ஒரு பக்கம் உணர்ந்தேன். 'ஆண்மையை என் மக்கள் இழக்க விடுவதைவிடப் பலாத்காரத்தை உபயோகிக்கும் ஆபத்தை ஆயிரம் தடவையானாலும் நான் வரவேற்பேன்' என்பதை உங்களுடன் நானும் நம்புகிறேன்; இதுவே சிறந்தது என்பதை அவர்களும் அறிவார்கள். ஆனால், மற்றொரு பக்கத்திலோ அனுதாப நோக்குடன் அந்நிலைமையில் ஏதாவது செய்ய நான் முயலும்போது, மிக உயர்ந்தது என நான் போற்றும் ஒரு கொள்கைக்கு எதிரான ஒன்றுக்கு நேரடியாகவும் மறைமுகமாகவும் தருமநிதியிலும் பொருள்வகையிலும் உதவி செய்கிறேன் என்பதைக் காண்கிறேன். இக்குழப்பத்திலிருந்து விடுபட வழி இருப்பதாகத் தெரியவில்லை. ஏனெனில், வெறும் சூனியத்தில் நான் உயிர் வாழ முடியாது. ஏதாவது, ஒரு வழியில் நான் வேலை செய்

தாக வேண்டும். ஏற்ற தகுதி இராது போனலும், சொந்த உறவுகளைப்பற்றிய வரையில் தடையின்றி அகிம்சையை நான் நம்ப முடியும். ஆனல், தேசத்தின் ஒரு நிலைமையில், அதன் மிகப் பெரும்பான்மையான மக்கள் அகிம்சை வழியைப்பற்றிக் கேள்விப் பட்டிராதபோது, அதே மாதிரி நான் உணர முடியவில்லை."

இதற்குக் காந்திஜி கூறிய பதிலாவது: "உங்களுடைய நிலை மிகக் கஷ்டமானதே. எனக்கும் இதே சங்கடங்கள் பல முறைகள் ஏற்பட்டிருக்கின்றன. போயர் யுத்தத்தில் ஒரு மருத்துவப் படையை அமைத்துக்கொண்டு பிரிட்டிஷ் பக்கத்தில் பங்கெடுத்துக்கொண்டேன். ஜூலு புரட்சி என்று கூறப் பட்ட சம்பவம் நடந்த சமயத்திலும் நான் அதே போலச் செய்தேன். மூன்ருவது சமயம் மகாயுத்தத்தின்போது. அப்பொழுது அகிம்சையில் எனக்கு நம்பிக்கை இருந்தது. முற்றிலும் அகிம்சையானதே என் நோக்கம். முரண்பட்ட தாகத் தோன்றிய என் நடத்தை எனக்குப் பலத்தை அளித்தது. என்னுடைய உதாரணத்தை மற்றவர்கள் பின் பற்றுவதற்கு ஆதாரமாக உபயோகிக்கக்கூடாது. இந்த மூன்று சம்பவங்களிலும் நான் நடந்துகொண்டதைக் குறித்து இப் பொழுது மீண்டும் யோசித்துப் பார்க்கும்போது, நான் வருந் துவதற்கு ஒன்றுமில்லை. அந்த அனுபவங்களினல் எனது அகிம்சையின் பலம் குறைந்து விடவில்லை என்பதையும் நான் அறிவேன். நான் செய்வதற்கென விதித்த வேலை, முக்கிய மாக ஜூலுக்கள் புரட்சியின்போது, முற்றிலும் ஜீவகாருண்யப் பணியே. காயமடைந்த ஜூலுக்களுக்குச் சிகிச்சை செய்து, அவர்கள் திரும்ப உயிர் பெறும்படி செய்த பாக்கியம் எனக்கும் என்னுடைய தோழர்களுக்கும் கிடைத்தது. எங்க ளுடைய சேவை இல்லாதிருந்தால் அவர்களில் சிலர் செத்திருப் பார்கள் என்றும் குறிப்பிடுவது நியாயமானதே. எவ்வளவு தான் மறைமுகமானதாக இருந்தாலும், அதில் நான் ஈடுபட் டது நியாயம் என்று காட்டுவதற்காக இந்த அனுபவத்தை நான் கூறவில்லை. அந்த அனுபவத்தினல் எனக்கு அகிம்சை யில் அதிகப்பற்றும் ஜூலு இனத்தினரிடம் அதிகமான அன்பும் தோன்றின என்பதைக் காட்டுவதற்காகவே அதைக் குறிப்பிடு கிறேன். வேற்று நிறத்தினர்மீது வெள்ளையர் நடத்தும் போரின் உட்கருத்து என்ன என்பதையும் நான் தெரிந்து கொண்டேன்.

"அதைக் கொண்டு நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டிய பாடம் ஒன்று உண்டு: மிகச் சிறுபான்மையோர் என்ற மோச

மான நிலைமையில் நீங்கள் இருப்பதால், உங்கள் மக்களின் மனம் மாறினலன்றி, ஆயுதங்களைப் போட்டுவிடுவதனல் தாங்கள் அதிக வீரத்தோடும் ஆண்மையோடும் இருப்பதாக அவர்கள் உணர்ந்தாலொழிய, ஆயுதங்களைப் போட்டுவிடும்படி நீங்கள் அவர்களுக்குச் சொல்ல முடியாது. ஆனல், யுத்தத்திலிருந்து மக்களை விலக்க நீங்கள் முயற்சி செய்யாவிட்டாலும், அகிம்சையை, நிறைவாக உங்கள் சொந்த விஷயத்தில் அனுசரித்து வாழ முற்பட்டுப் போருடன் எந்தத் தொடர்பும் வைத்துக் கொள்ள நீங்கள் மறுத்துவிட வேண்டும். உங்களுடைய உள்ளங்களில் ஜப்பானியர்மீது அன்பை வளர்க்க வேண்டும். நீங்கள் உண்மையாகவே அவர்களிடம் அன்பு கொள்ள முடியுமா, அவர்கள் செய்து வரும் தீமைகளுக்காக அவர்கள்மீது உங்களுக்குக் கெட்ட எண்ணம் இல்லாமல் இருக்கிறதா என்று உங்களை நீங்களே சோதித்துக்கொள்ள வேண்டும். அவர்களிடம் இருக்கும் நற்குணங்களை நினைவுபடுத்திக்கொண்டு அன்புகொள்வது மாத்திரம் போதாது. அவர்கள் தீய காரியங்களைச் செய்தாலும் அவர்கள்மீது அன்பு கொள்ள வேண்டும். ஜப்பானியர்மீது உங்களுடைய உள்ளங்களில் அந்த அன்பு இருக்குமாயின், வீரத்தின் உயர்ந்த உருவே உண்மையான அகிம்சையின் தத்துவம் என்பதை உங்கள் நடத்தையின் மூலம் காட்ட நீங்கள் முற்படலாம். அப்பொழுது அவ்வகையில் கண்டுகொண்டு ஒப்புக்கொள்ள உங்கள் சீன நண்பர்கள் தவற மாட்டார்கள். நீங்கள் ஜப்பானியரிடம் 'அன்பு' கொள்ளுகிறீர்கள் என்பதால் ஜப்பானிய ராணுவ பலம் வெற்றி பெற நீங்கள் விரும்ப வேண்டும் என்று ஆகாது. அதே சமயத்தில் சீன ராணுவ பலம் வெற்றி பெற வேண்டும் என்றும் நீங்கள் பிரார்த்திக்க மாட்டீர்கள். இரு தரப்பினரும் பலாத்கார ஆயுதங்களை உபயோகிக்கும்போது, எந்தத் தரப்பு வெற்றி பெறுவதற்கு 'உரியது' என்று தீர்ப்புச் சொல்லுவது மிகக் கடினம். ஆகையால், நியாயம் நிலைபெற வேண்டும் என்றுதான் நீங்கள் பிரார்த்திக்க முடியும். எல்லாப் பலாத்காரத்திலுமிருந்தும் நீங்கள் ஒதுங்கியிருக்கும்போது அபாயத்திற்குப் பின்வாங்கக் கூடாது. உங்கள் உயிருக்கு நேரக்கூடிய ஆபத்தையும் பொருட்படுத்தாமல், நண்பர்களுக்கும் பகைவருக்கும் ஒரே மாதிரியாகச் சேவை செய்ய வேண்டும். தொற்று நோயோ அல்லது தீ விபத்தோ ஏற்பட்டால், அதைச் சமாளிக்க உடனே ஓடிச் சேவை செய்ய வேண்டும். உங்களுடைய ஒப்பற்ற வீரத்தையும், அகிம்சா தீரத்தையும் கொண்டு மற்றவர்களுக்கு நீங்கள் மாறுனவர்கள் என்பதைக் காட்ட வேண்டும்.

ஆனல், ஜப்பானியர் அழியவேண்டுமென ஆண்டவனின் சாபத்தைக் கோர மறுத்துவிட வேண்டும். சில ஜப்பானியச் சிப்பாய்களோ அல்லது விமானிகளோசீனர் கையில் சிக்கிக்கொள்ள, ஆத்திரம் அடைந்த சீன மக்கள் கூட்டத்தினர் அவர்களை உயிருடன் சுட்டழித்துவிடும் அல்லது அவமானப்படுத்தும் ஆபத்து அவர்களுக்கு ஏற்பட்டால், உங்களவர்களிடம் வேண்டியோ, அவசியமானல் உங்கள் உயிரையோ கொடுத்தாவது அவர்களைக் காப்பாற்ற வேண்டும். *எமிலி ஹாப்ஹவுஸின் கதை உங்களுக்குத் தெரியும். அவள் ஆங்கிலப் பெண். என்றாலும், தீரத்தோடு போயர்களைச் சிறை வைத்திருக்கும் முகாம்களுக்குச் சென்றாள். எப்பொழுதும் மனத்தைத் தளர விடக்கூடாதென அவர்களைக் கேட்டுக்கொண்டாள். போயர்ப் பெண்களின் உள்ளங்களை இம்மாது மாத்திரம் இரும்பாக்கியிராதிருந்தால் அந்தப் போரே வேறுவிதமாக மாறியிருக்கும் என்று சொல்லப்படுகிறது. தன் சொந்த மக்கள்மீது இவள் முற்றிலும் கோபம் அடைந்திருந்தாள். அவர்களைப்பற்றி ஒரு நல்ல வார்த்தைகூட இவள் பேசவில்லை. இவளுடைய அகிம்சையை ஒரு வகையில் கெடுத்துவிட்ட அளவுமீறி இவள் கொண்டிருந்த ஆத்திரத்தை நீங்கள் பின்பற்றக்கூடாது. ஆனல், இவளுக்குப் 'பகைவர்' இடத்தில் அன்பு இருந்தது. அதுவே, தன் நாட்டு மக்கள் செய்த தீய காரியங்களை இவள் வெறுக்கச் செய்தது. அந்த அன்பை நீங்கள் அனுசரிக்க வேண்டும். உங்கள் உதாரணம் சீனரை மாற்றும். சில ஜப்பானியராவது வெட்கப்படும்படியும் செய்யக்கூடும். அப்படிப்பட்ட ஜப்பானியர் உங்கள் செய்தியை ஜப்பானியரிடையே பரப்புவார்கள்.

"இது மிகவும் மெதுவான முறை என்று ஒரு வேளை நீங்கள் கூறலாம். ஆம்; இப்பொழுது இருக்கும் எதிரான நிலையில் இது அப்படி மெதுவானதாக இருக்கக்கூடும். ஆனல், மேற்கொண்டு போகப் போகக் கணக்கிடமுடியாத வகையில் சக்தியையும் வேகத்தையும் அது பெற்றுவிடும். அடக்க முடியாத நம்பிக்கையில் உறுதி உள்ளவன் நான். அகிம்சையை விருத்தி செய்துகொள்ளுவதில் தனிப்பட்டவருக்கு எண்ணற்ற வாய்ப்புக்கள் இருக்கின்றன என்பதை அடிப்படையாகக் கொண்டது என் நம்பிக்கை. உங்கள் இடத்திலேயே அதை எவ்வளவுக்கெவ்வளவு வளர்த்துக்கொள்ளுகிறீர்களோ அவ்வள

---

* எமிலி ஹாப்ஹவுஸைக் குறித்து காந்திஜி தாம் எழுதிய 'தென்னப்பிரிக்க சத்தியாக்கிரகம்' என்ற நூலில் குறிப்பிட்டிருக்கிருர். மகாத்மா காந்தி நூல்கள் – முதல் தொகுப்பு 238, 239–ஆம் பக்கங்களில் காணலாம்.

வுக்கவ்வளவு அது பிறரிடமும் பரவி உங்களுடைய சுற்றுப்புறங்களையும் அது கவர்ந்துகொண்டுவிடும். உலகம் முழுவதுமே பரவி நிற்கும்.''

''அகிம்சையை நம்பும் நான், கலப்பான நோக்கங்களினால் அடிக்கடி தூண்டப்படுபவனாகிறேன் என்பதையும் காண்கிறேன். இதே போல ஒரு போர்த் தளபதிக்கும் கலப்பான நோக்கங்கள் இருக்கின்றன. உள்ளத்தின் அன்புடன் ஒரு பகைவனுடன் போராடுவது சாத்தியம் அல்லவா? அன்பின் காரணமாக நாம் சுடக்கூடாதா?'' என்று ஒருவர் கேட்டார்.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: ''நமக்கு அடிக்கடி கலப்பான நோக்கங்கள் ஏற்படுகின்றன. ஆனால், அது அகிம்சை ஆகாது. பலாத்காரத்தில் தரங்கள் இருக்க முடியும். ஆனால், அகிம்சையில் அப்படி இல்லை. எதிரி என்று சொல்லப்படுகிறவரிடத்தில் இருக்கும் துவேஷத்தைத் தன்னிடமிருந்து போக்கிக்கொள்ள வேண்டியதே அகிம்சையைக் கடைபிடிப்பவரின் இடைவிடாத முயற்சி. நீங்கள் கூறுகிற வழியில், அன்பினால் ஒருவரைச் சுடுவது என்பதே இருக்க முடியாது.''

ஸ்ரீ பி. ஸி. ஹுஸு கடைசியாகத் தம் பிரச்னைகளைக் காந்திஜியிடம் கூறினர். காந்திஜியைச் சந்திக்க வேண்டும் என்று 1930-இலிருந்து இவர் எழுதிக்கொண்டிருந்தார். சீனவுக்கு ஜப்பான் எந்த ஆண்டில் தன்னுடைய இருபத்தொன்று கோரிக்கையை வெளியிட்டதோ, அதே ஆண்டில்தான் இவரும் படித்துப் பட்டம் பெற்று வெளி வந்தார். அச்சமயம் இவர் கடுமையான தேசீயவாதியாக இருந்தார். மாணவர்களிடையே நடந்து வந்த சமரச சகோதரத்துவ இயக்க வேலையுடன் மூன்று ஆண்டுகள் தொடர்பு கொண்ட பிறகு, ஜப்பானிய ராணுவ இயந்திரம் வேறு, ஜப்பானிய மக்கள் வேறு என்ற பாகுபாட்டை உணர ஆரம்பித்தார். தாராள நோக்கமுள்ளவர்கள் சர்வதேசீய வழியில் ஒன்றுபட வேண்டும் என்று நம்புபவரானர். இவர் காந்திஜியிடம் கூறியதாவது:

''ஜப்பானிய மக்களிடம் எனக்கு எந்தவிதத் துவேஷ உணர்ச்சியும் கிடையாது என்று நான் ஒளிக்காமல் கூற முடியும். ஆனால், அவர்களுடைய ராணுவ முறை ஒரு தீமை என்று எண்ணுகிறேன். அதை ஒழிப்பதற்குச் செய்யவேண்டியதெல்லாம் சத்தியத்தில் பயிற்சி பெறுவதே என்று நினைத்து வந்தேன். பரஸ்பர நல்லெண்ணமும், சமாதான அடிப்படையில் இரு நாடுகளுக்குமிடையே ஒரு சர்வதேச இணைப்பு தாம்பரத்திலாவது

உருவாகும் என்று நம்பினேன். ஆனால், ஏமாற்றம் அடைந்தேன். உடனடியாக அடையக்கூடியது எதுவுமில்லை என்பதைக் கண்டேன்.''

சமாதான வேலைகளை நடத்திக்கொண்டு போவதற்கு ஒரு சாதனமாகச் சமாதான கோஷ்டிகளை உண்டாக்கலாம் என இவர் முயற்சியும் செய்தார். ஆனால், நெருக்கடி ஏற்பட்டிருப்பதால், எதுவும் செய்ய முடியாதவர்களாகியிருக்கிறார்கள். அதைத் தடுக்க எந்த முயற்சியாலும் ஆகாது என்பதைக் கண்டார். "உள்ளூற, அகிம்சையில் நம்பிக்கை கொண்டிருக்கிறோம். அது சரியான பலனை அளிக்கும்படி செய்வதற்கு ஒரு வழியும் எங்களுக்குத் தெரியவில்லை. இதுதான் எங்களுக்கு இருக்கும் சங்கடம்'' என்றார் இவர்.

"இது ஒரு சங்கடமாகுமா?'' என்று காந்திஜி கூறிவிட்டு, மேலும் சொன்னதாவது: "தம் காலத்தில் ஒரு குறிப்பிட்ட தீமை இருக்கிறது என்று ஒருவர் கண்டு, அது தம்மை அடக்குகிறது என்பதை அறிந்தால், உணர்வு கொண்டு எழுவதற்கு அவர் தம் உள்ளத்தையே துழாவிப் பார்க்கிறார். அதைப் பெற்றதும் மற்றவர்களுக்கும் அதை அளிக்கிறார். கூட்டம், குழு, ஸ்தாபனம் என்பவை எல்லாம் சரியே. ஓரளவுக்கு அவை உதவியாக இருக்கக்கூடும். ஆனால், அவ்வுதவி மிகக் குறைவானதே. கொற்றன் கட்டும் சாரங்களைப் போன்று அவை தாற்காலிகமான—வேண்டும்போது மாற்றிக்கொள்ளக்கூடிய—சாதனம். இதில் முக்கியமாக வேண்டியதெல்லாம் அடக்குதற்குரிய உறுதிப்பாடுதான்.

"நம்பிக்கையை விருத்தி செய்துகொள்ள முடியும். அது விருத்தி செய்யக்கூடிய முறையிலும் அது வேலை செய்யும் விதத்திலும் மாத்திரமே பலாத்காரத்திற்கும் அதற்கும் மாறுபாடு இருக்கிறது. பிரார்த்தனையின் மூலம் நீங்கள் பலாத்காரத்தை வளர்த்துவிட முடியாது. ஆனால், நம்பிக்கையையோ பிரார்த்தனையினாலன்றி வேறு எவ்வகையிலும் வளர்த்துவிட முடியாது.

"கடவுளிடம் நிச்சயமான நம்பிக்கை நமக்கு இருந்தால் தான் அகிம்சை வெற்றி பெறுகிறது. புத்தர், ஏசு, முகம்மது ஆகியோர் அவரவர்கள் வழியில் சமாதானப் போர்வீரர்களே. இந்த உலக போதகர்கள் விட்டுச் சென்ற இவ்வரிய சொத்தை விருத்தியடையும்படி நாம் செய்யவேண்டும். அற்புதமான திட்டங்களை நிறைவேற்றுவதற்கும், அதற்கான உபாயங்களைத் தேர்ந்தெடுப்பதற்கும் கடவுள் தமக்குரிய அதிசய வழிகளை வகுக்

கிறார். நபிகள் நாயகமும் அபு பக்கரும் ஒரு குகைக்குள் அடைக்கப்பட்டு விட்டனர். அந்தக் குகையின் வாயிலில் வலை பின்னிய ஒரு சிலந்தியினால் இவர்கள் எதிரிகளிடமிருந்து காக்கப்பட்டனர். எல்லா உலக போதகர்களும் பூஜ்யத்திலிருந்தே ஆரம்பித்தார்கள் என்பதை நீங்கள் அறிய வேண்டும்!''

காந்திஜியுடன் பேசிக்கொண்டிருந்தவர் திருப்தியடைந்ததாகவே தோன்றியது. ஆனால், அவருக்கு மற்றொரு சந்தேகம் இருந்தது. ''ஏசுவின் எண்ணம் படைத்த தனிப்பட்டவர்கள் ஒன்றுபடாததனாலும், தங்களுக்குள் கட்டுப்பாட்டை அடையாததனாலும், எங்கோ தனித்தனியாக இருப்பதனாலும், அவர்கள் கூறுவதைக் கேட்பார் இல்லை. அன்பை ஒழுங்கு முறைக்கு உட்படுத்த முடியுமா? அப்படியானால் அது எப்படி என்ற கேள்வி என் மனத்தில் எழுகிறது'' என்று அவர் காந்திஜியிடம் கூறினார்.

**காந்திஜி:** ஒழுங்குபடுத்துவது என்பதற்குச் சம்பிரதாய முறையில் உள்ள பொருளின்படி அது சாத்தியமாக இருக்காது. ஆனால், ஒன்றுபட்ட அகிம்சை நடவடிக்கைக்குத் தடை எதுவும் இல்லை. அது சாத்தியமே என்பதைப் பல சோதனைகளின் மூலம் காட்ட முயற்சி செய்து வருகிறேன். அதற்கு முறையும் தனியாக இருக்கிறது.

''போரில் சீனா வெற்றி பெறுமாயின், அந்த வெற்றியினால் அது மோசமாக இருக்குமா அல்லது நன்றாக இருக்குமா?'' என்று அந்நண்பர் கடைசியாகக் கேட்டார். இதற்குக் காந்திஜி கூறியதாவது: ''சீனா வெற்றியடைந்து, ஜப்பானிய முறைகளை அது கைக்கொள்ளுமானால், ஜப்பானின் முறையைக் கொண்டே அதைச் சீனா தோற்கடித்துவிட்டது என்று ஆகும். ஆனால், சீனாவின் வெற்றியால் உலகிற்குப் புதிய நம்பிக்கை ஏற்பட்டுவிடாது. ஏனெனில், சீனா, ஜப்பானின் விரிவான ஓர் உருவமாகவே இருக்கும். சீனா வென்றாலும் தோற்றாலும் நீங்கள் செய்யவேண்டியது என்ன என்பது தெளிவாக இருக்கிறது. போர்க்களத்தில் சீனா தோற்கடிக்கப்பட்டு விடுமாயின் உங்களுடைய அகிம்சைக்கு ஒருவித அதிர்ச்சியும் ஏற்படாது, அது அதனுடைய வேலையைச் செய்திருக்கும். சீனா வெற்றியடைந்தால், ஜப்பானின் வழிகளைப் பின்பற்றுவதிலிருந்து சீனாவைத் தடுக்கும் முயற்சியால் நீங்கள் தூக்குமேடைக்குப் போய் விடுவீர்கள்.''

[ஸ்ரீ. பியாரிலால் எழுதியது]

பர்டோலி, 18—1—1939. —'ஹரிஜன்' —28—1—1939

# துன்பத்தில் துடிக்கும் உலகு

## 2

## ஆப்பிரிக்காவுக்கு ஒரு வேலைத்திட்டம்

தென்னாப்பிரிக்க யூனியனில் இருக்கும் நீக்ரோ இனத்தின் முன்னேற்றத்திற்கான எதிர்கால வேலைத் திட்டத்தைக் குறித்தே ஜொஹன்னஸ்பர்க் டி. ஆர். மிஷனின் பூஜ்ய எஸ். எஸ். தேமா வர்தாவில் மகாத்மா காந்தியுடன் முக்கியமாக விவாதித்தார். இவர் தம்முடைய மக்களிடையே சமூக வேலை களில் ஈடுபட்டிருக்கிறார். தென்னாப்பிரிக்காவில் நீக்ரோக்கள் ஒரு கோடி பேர் இருக்கிறார்கள். அங்குள்ள வெள்ளையர் தொகை 20 லட்சம்; இந்தியர் 75,000 பேர். உலகத்தில் ஒடுக்கப் பட்டிருக்கும் வெள்ளையரல்லாத மற்ற இனத்தினரைப் போலவே தென்னாப்பிரிக்கா நீக்ரோக்களும் இன உணர்ச் சியை அடைந்து வருகின்றனர். அபிஸீனியாவை இத்தாலி ஆக்கிரமித்துக்கொண்டதால் இந்த உணர்ச்சி பலமாகிவிட்டது. வெள்ளை நாகரிகத்துடன் தொடர்பு ஏற்பட்டதால் நீக்ரோக் களுக்கு எந்த நன்மையும் ஏற்படவில்லை. கிறிஸ்தவப் பாதிரி கள் பைபிளுடன் நீக்ரோவிடம் சென்றனர். ஆனால், வெள்ளை யரின் நடத்தை, அவர்களிடம் சம்பந்தப்பட்டவரையில், ஏசுவின் மலைப் பிரசங்கம் ஒன்றுக்கும் பயன்படவில்லை. ஆனால், வெள்ளையரைத் தொடர்ந்து வந்த குடிப்பழக்கமும் நோயும் காட்டுத்தீ போலச் சுதேசிகளிடையே பரவி அவர்களுக்குத் தீமையை உண்டாக்கிவிட்டது. மோசமான அனுபவத்திற்குப் பிறகு ஆயுத எதிர்ப்பினால் ஒரு பயனுமில்லை என்பதை அவர் களும் அறிந்துகொண்டார்கள். ஆகவே, அவர்கள் தம்மை உணர்ந்துகொண்டுவிட்டனர். இதனால் அவர்களுடைய மனச் சோர்வுதான் அதிகமாயிற்று. “எங்களுக்கு முன்பு ஒரு கற் சுவர் இருப்பதாகவே தோன்றுகிறது. இரக்கமற்ற விதியைப் போலக் கடுமையில் சிறிதும் குறையாத ஒரு சக்தியினால் நாங்கள் நசுக்கி ஒடுக்கப்பட்டிருக்கிறோம். எங்களைக் காப்பாற்று வது எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. நாசமாகிவிட் டோம் என்றே தோன்றுகிறது.” என்று பத்து ஆண்டுகளுக்கு முன்னால் சபர்மதிக்கு வந்து காந்திஜியைப் பார்த்த ஒரு நீக்ரோ நண்பர், அவரிடம் தமது வேதனையைக் கூறினார். அதன் பிறகு காங்கிரஸின் அகிம்சை வேலைத்திட்டம் அடைந் திருக்கும் வெற்றி, அவர்களுடைய தலைவர்களில் சிலருக்குச்

சற்று நம்பிக்கை ஏற்படும்படி செய்திருக்கிறது. அந்த வெற்றியின் ரகசியத்தை அறிய பூஜ்ய தேமா ஆவல் கொண்டிருந்தார். "இந்திய தேசீயக் காங்கிரஸைப் போல, தம் காங்கிரஸ் வெற்றி அடைவதற்கு என் மக்கள் என்ன செய்ய வேண்டும்?" என்று அவர் காந்திஜியைக் கேட்டார்.

இதற்குக் காந்திஜி கூறிய பதிலாவது: "காங்கிரஸின் வெற்றிக்கு முக்கியமான காரணம், அக்காலத்திலிருந்த, தன்னலமே இராத பண்பாடுடையவர்களால் அது ஆரம்பிக்கப்பட்டதேயாகும். அவர்கள் தங்களையே மக்களின் பிரதிநிதிகளாக்கிக் கொண்டனர். சேவையினாலும் தியாகத்தினாலும் மக்களின் அன்பையும் பெற்றார்கள். அவர்கள் மக்களுக்காக மக்களிடமிருந்து தோன்றியவர்கள்." ஜனநாயக ஸ்தாபனம் என்ற முறையில் காங்கிரஸ் செய்திருக்கும் சேவைகளையும் அதன் வளர்ச்சியையும்பற்றிக் காந்திஜி விவரமாகக் கூறிவிட்டு மேலும் சொன்னதாவது: "வறுமையில் இருந்துகொண்டு சேவை செய்வதில் திருப்திகொள்ளும் ஆப்பிரிக்கரின் கோஷ்டி ஒன்று, நான் அறிந்த வரையில், உங்களிடம் இருப்பதாகத் தெரியவில்லை. உங்களில் படித்தவர்களிடம் முற்றிலும் தன்னலமற்ற தன்மையும் இல்லை. மேலும், உங்களுடைய தலைவர்களில் பெரும்பாலானவர் கிறிஸ்தவர்கள். உங்களில் பெரும்பகுதியினரான பண்டுக்களும் ஜூலுக்களும் கிறிஸ்தவர்கள் அல்ல. நீங்கள் ஐரோப்பிய உடை அணிந்து, ஐரோப்பியருடைய பழக்க வழக்கங்களை அனுசரித்து வருகிறீர்கள். இதனால் உங்களுடைய மக்களிடையே நீங்கள் அன்னியர் போன்று இருக்கிறீர்கள். ராஜீய வழியில் கவனித்தால் இது ஓர் இடைஞ்சல். பொது மக்களின் உள்ளங்களை அடைய இதனாலேயே உங்களால் முடியவில்லை. 'பண்டு' ஆகிவிடுவதற்கு நீங்கள் பயப்படக் கூடாது. அவர்கள் வைத்திருப்பதைப் போன்று அஸ்ஸகாயை (மர ஈட்டிகளை)க் கையில் ஏந்தி அரையில் ஒரு சிறு கந்தையுடன் வெளியில் போவதற்கு நீங்கள் வெட்கப்படக் கூடாது. ஜூலுவோ அல்லது பண்டுவோ திடமான உடல் படைத்தவரே. ஆகையால், தம் உடலை வெளியில் காட்ட அவர் வெட்கப்பட வேண்டியதில்லை. உங்களைப் போல அவர் உடை உடுத்த வேண்டியதுமில்லை. நீங்கள் திரும்பவும் ஆப்பிரிக்கர்கள் ஆகிவிட வேண்டும்."

## வெள்ளையரல்லாதாரின் ஐக்கிய முன்னணி

தென்னாப்பிரிக்காவில் இந்தியரும் ஆப்பிரிக்கரும் அடங்கிய வெள்ளையரல்லாத ஐக்கிய முன்னணியை அமைப்பது என்

பதைப்பற்றிய பேச்சு, சில காலமாக இருந்து வருகிறது. " இதைப்பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் ?" என்று பூஜ்ய தேமா கேட்டார். இதற்குக் காந்திஜி கூறியதாவது: "அது தவருனதாகும். பலத்திற்குப் பதிலாகப் பலவீனத்தையே நீங்கள் ஒன்று திரட்டியவர்களாவீர்கள். அவரவர்கள் அவரவர் களின் காலிலேயே நிற்பது என்பதனுல் நீங்கள் ஒருவருக் கொருவர் சிறந்த உதவியைச் செய்துகொண்டவர்களாவீர்கள். உங்கள் இருவருடைய நிலைகளும் வெவ்வேறு. இந்தியர் மிக மிகக் குறைந்த சிறுபான்மையினர். வெள்ளைக்காரர்களுக்கு அவர்கள் என்றும் 'ஆபத்தாக' இருக்கவே முடியாது. நீங் களோ அந்நாட்டினர். உங்களுடைய உரிமைகள் அபகரிக்கப் பட்டிருக்கின்றன. அதை எதிர்க்க நீங்கள் கடமைப்பட்டிருக் கிறீர்கள். மிகப் பெரிய பிரச்னை உங்களுடையது. அதை இந்தியர் பிரச்னையோடு கலந்துவிடக்கூடாது. இவ்விரு இனத் தினருக்கும் இடையே மிகுந்த நட்புறவு வேண்டாம் என்ப தாகாது இது. பலதரப்பட்ட வழிகளில் இந்தியர் உங்களுடன் ஒத்துழைக்கலாம். உங்களிடத்தில் எப்பொழுதும் நியாயமாக நடந்துகொள்ளுவதன் மூலம் உங்களுக்கு உதவி செய்யலாம். உங்களைப் பயன்படுத்திக்கொண்டு தாங்கள் சில சலுகைகளைப் பெறுவதற்காக உங்களுடைய நியாயமான கோரிக்கைகளுக்கு அவர்கள் குறுக்கே நிற்காமல் இருக்கவேண்டும்; தங்களைப் 'பண்புள்ளவர்கள்' என்று பெருமையடித்துக்கொண்டு உங் களைக் 'காட்டுமிராண்டிகள்' என்று இழிவாகப் பேசித் தாழ்வுபடுத்தாமல் இருக்கவேண்டும்."

**பூஜ்ய தேமா :** இந்த இரு இனத்தாரிடையே எத்தகைய உறவு நிலவுவதை நீங்கள் விரும்புவீர்கள் ?

**காந்திஜி :** சாத்தியமானவரையில் நெருங்கிய உறவு. ஓர் ஆப்பிரிக்கருக்கும் இந்தியருக்குமிடையே ஏற்பட்ட எல்லாவித மான பாகுபாடுகளையும் அறவே ஒழிக்கிறேன் என்ருல், இவர் களுக்கிடையே இருக்கும் பேதங்களை நான் உணரவில்லை என்பது அல்ல. மனிதவர்க்கத்தில் ஒவ்வோர் இனமும் ஒரு மரத்தின் பல கிளைகளைப் போன்றவை. நாம் எல்லோரும் பொதுவான ஒன்றிலிருந்து பிறந்திருக்கிருேம் என்பதை நாம் அறிந்து கொண்டு விட்டோமாஞல், மனித குடும்பத்திற்குள்ள அடிப் படையான ஐக்கியத்தை நாம் உணர முடியும். பிறகு விரோதத் திற்கோ, மோசமான போட்டிக்கோ இடம் இராது.

**பூஜ்ய தேமா :** எங்களுடைய விமோசனத்திற்கு உபாய மாக நாங்கள் அகிம்சையை மேற்கொள்வதா அல்லது பலாத் காரத்தை மேற்கொள்வதா ?

**காந்திஜி :** எல்லாச் சந்தர்ப்பங்களிலும் அகிம்சையையே மேற்கொள்ளவேண்டும் என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால், அதில் உங்களுக்கு உறுதியான நம்பிக்கை இருக்க வேண்டும். உங்களைச் சுற்றிலும் கடுமையான இருள் கவிந்திருக்கும் சமயத்தில்கூட நம்பிக்கையை மாத்திரம் நீங்கள் இழக்கக் கூடாது. அகிம்சையில் நம்பிக்கை கொண்டிருக்கும் ஒருவர் உண்மைக் கடவுளிடம் நம்பிக்கை கொள்ளுபவராகிறார். அவர் தோல்வியை ஒப்புக்கொள்ளவே முடியாது. ஆகையால், எல்லாச் சமயங்களிலும் அகிம்சை என்பதே நான் கூறும் யோசனை. ஆனால், நான் கூறும் அகிம்சை, தீரமுள்ளவர்களின் அகிம்சையே யன்றிக் கோழைகளின் அகிம்சை அன்று.

**பூஜ்ய தேமா** : உங்கள் உதாரணம் எங்களிடையே அதிக மனமாற்றத்தை உண்டாக்கியிருக்கிறது. தலைவர்களாவார்கள் என்று எங்களுக்கு இருக்கும் ஒருவர் அல்லது இரண்டு இளைஞரைப் பயிற்சிக்கு உங்களிடம் அனுப்பலாமா என்பதைக் குறித்து நாங்கள் சிந்தித்துக்கொண்டிருக்கிறோம்.

"அது நல்ல சிறந்த யோசனை" என்றார் காந்திஜி.

**பூஜ்ய தேமா** : ஆப்பிரிக்காவுக்குக் கிறிஸ்தவ மதம் விமோசனத்தை உண்டாக்க முடியும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா ?

**காந்திஜி** : கிறிஸ்தவ மதம் என்று இன்று அனுசரிக்கும் ஒரு கொள்கை உங்கள் மக்களுக்கு விமோசனத்தை உண்டாக்க முடியாது. தங்களைக் கிறிஸ்தவர்கள் என்று இன்று கூறிக் கொள்ளுகிறவர்களுக்கு ஏசுவின் உண்மையான போதனை இன்னதென்பதே தெரியாது என்பது என் கருத்து. ஜூலு புரட்சியின்போது ஜூலுக்களுக்குச் செய்யப்பட்ட சில பயங்கரக் கொடுமைகளை என் கண்ணால் பார்த்திருக்கிறேன். அவர்களுடைய தலைவரான பம்பாட்டா வரியைச் செலுத்த மறுத்து விட்டார் என்பதற்காக அந்த இனத்தினர் எல்லோரையும் துன்புறுத்தினார்கள். ஒரு மருத்துவப் படைக்கு நான் தலைவனாயிருந்தேன். சவுக்கடி பட்டு முதுகெல்லாம் புண்ணாயிருந்த ஜூலுக்களுக்கு வெள்ளைக்கார நர்ஸுகள் பணிவிடை செய்யத் தயாராயில்லாததனால் சிகிச்சைக்காக எங்களிடம் கொண்டு வரப்பட்டதை நான் என்றுமே மறந்துவிட முடியாது. என்றாலும், இந்தவிதமான அட்டூழியங்களைச் செய்தவர்களும் தங்களைக் கிறிஸ்தவர்கள் என்றே கூறிக்கொண்டார்கள். ஜூலுக்களைவிட அவர்கள் படித்தவர்கள்; நன்றாக உடை அணிந்தவர்கள். ஆனால், தரும நெறியில் அவர்களைவிட உயர்ந்தவர்கள் அல்ல.

பூஜ்ய தேமா, இன்னும் ஒரு கேள்வியையும் கேட்டார். "எங்களிடையே ஒரு தலைவர் தோன்றியதும் சிறிது காலத்திற்கெல்லாம் கவிழ்ந்துவிடுகிருர். அவருக்கு, ஒன்று, பணம் சேர்க்க வேண்டும் என்ற ஆசை வந்துவிடுகிறது ; இல்லாவிட்டால் குடிப்பழக்கம் முதலிய தீய ஒழுக்கத்திற்குப் பலியாகி, எங்களுக்கு உதவாமல் போய்விடுகிருர். இதற்கு நாங்கள் பரிகாரம் செய்துகொள்ளுவது எப்படி ?" என்று கேட்டார்.

**காந்திஜி :** இது உங்களுக்கு மாத்திரம் இருக்கும் பிரச்னை அல்ல. உங்களுடைய தலைவர்கள் சாதாரண மக்களிடமிருந்து எழாததனுல் பயனற்றவராகப் போய்விடுகின்றனர். பொதுமக்களைப் போலவே வாழ்ந்து, அவர்களைப் போன்றே எண்ணி, அம்மக்களைச் சேர்ந்தவர்களாகவே நீங்கள் இருந்திருந்தால், அவர்கள் உங்களுடன் ஒன்றுபட்டு நிற்பார்கள். உங்கள் இடத்தில் நான் இருந்திருந்தால், ஓர் ஆப்பிரிக்கரையேனும் தமது உடையை மாற்றிக்கொள்ளும்படி சொல்லித் தம்மை விசித்திரமானவராக்கிக்கொள்ளச் செய்திருக்க மாட்டேன். உடை மாற்றம் அவருடைய ஒழுக்க நிலையை ஓர் அங்குலமேனும் உயர்த்திக் காட்டாது.

## காந்திஜியின் கனவு

தென்னுப்பிரிக்கா இந்தியருக்குத் தம் வாயிலாக காந்திஜி ஏதாவது செய்தி விடுக்கிருரா என்று பூஜ்ய தேமா கேட்டார். அச்சமயம் அனுப்பக் காந்திஜிக்கு எவ்விதச் செய்தியும் இல்லை. ஆனுல், சில தினங்களுக்குப் பிறகு தென்னுப்பிரிக்காவில் பிறந்த இந்திய இளைஞர் குழுவினர் பர்டோலிக்கு வந்து காந்திஜியைச் சந்தித்தனர். அச்சமயம் ஒரு சந்தர்ப்பம் ஏற்பட்டது. இவர்கள் வைத்தியப் படிப்புப் பெறுவதற்காக இந்தியாவுக்கு வந்திருந்தார்கள். ஏதாவது தக்க வைத்தியக் கல்லூரிகளில் தங்களைச் சேர்த்துக்கொள்ள உதவுமாறும் காந்திஜியைக் கேட்டுக்கொண்டனர். இவர்களுடைய பெற்ரோர்கள், போஷகர்கள் சிலரைத் தம்முடைய பழைய கட்சிக்காரர்கள் என்ற முறையில் காந்திஜிக்குத் தெரியும். தென்னுப்பிரிக்காவில் வெள்ளையரல்லாத ஐக்கிய முன்னணி ஒன்றை அமைப்பதைக் குறித்தும் அந்த இளைஞர்கள் காந்திஜியுடன் விவாதித்தார்கள்.

பிறகு அவர்கள் காந்திஜியிடம், "தென்னுப்பிரிக்காவில் பிறந்தவர்களான நாங்கள், குடியேறியிருக்கும் நாட்டில் எங்கள் இந்தியக் கலாசாரம் அப்படியே இருந்துவரும்படி செய்வதற்கு நாங்கள் செய்ய வேண்டுவது என்ன ? ஆங்கிலத்தைத் தவிர

வேறு எந்த மொழியை நாங்கள் கற்கவேண்டும் என்று சொல்லு கிறீர்கள்?'' என்று கேட்டனர்.

காந்திஜி பதிலளிக்கையில், ஆங்கிலத்திற்கு அவர்கள் முதலிடம் அளித்ததைக் குறித்துக் கண்டித்தார். இதற்குப் பதிலாகச் சாதாரண மக்கள் உபயோகிக்கும் சம்ஸ்கிருத, பாரசீக அல்லது அரபு வார்த்தைகளைக் கொண்ட ஹிந்துஸ்தானியைக் கற்றுக்கொள்ளவேண்டும் என்றார். ''ஹிந்துக்கள் சம்ஸ்கிருதத்தையும், முஸ்லிம்கள் அரபுவையும் எப்படிப் படிக்காதிருப்பது? தங்களுடைய சாத்திரங்களை மூல மொழியிலேயே படித்துப் புரிந்துகொள்ள இது உதவியாக இருப்பது மாத்திரமன்றி உலகத்திலேயே சிறந்த கவிதைகள் இவ்விரு மொழிகளிலும் உள்ளன'' என்றார். ''இவற்றையெல்லாம்விட, இந்தியக் கலாசாரத்தின் சாராம்சமான எளிமையையும் ஆத்மிகத்தையும் அக்கறையோடு நீங்கள் காத்துக்கொள்ளவேண்டும்'' என்றார்.

இவர்கள் கேட்ட மற்றொரு கேள்வி, தென்னுப்பிரிக்காவில் தங்களுடைய உரிமைகளுக்காகத் தாங்கள் சத்தியாக்கிரகத்தின் மூலம் போராடுவதா அல்லது சட்ட ரீதியான முறையில் கிளர்ச்சி செய்வதா என்பதே.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: ''தென்னுப்பிரிக்க இந்திய சமூகத்தாருக்குத் தம்மிடம் தைரியமிருந்தால் சத்தியாக்கிரகத்தின் மூலம் அவர்கள் போராடவேண்டும் என்றே கூறுவேன். அப்படிச் செய்தால் நிச்சயம் வெற்றி பெறுவார்கள். ஒரு நாளைக்குத் தென்னுப்பிரிக்காவில் பிறந்த இந்திய இளைஞரிடையே, அங்குக் குடியேறியிருக்கும் தம் நாட்டினரின் உரிமைகளுக்காக நின்று, அந்த உரிமைகளை நிலைநிறுத்துவதே தமது வாழ்க்கையின் லட்சியமாகக் கொள்ளும் ஒருவர் தோன்றுவார் என்று நான் நம்பியிருக்கிறேன். எல்லா எதிர்ப்பையும் பலிக்க முடியாதபடி செய்துவிடும் அளவுக்கு அவர் அவ்வளவு புனிதமாகவும், பண்புடனும், உண்மையோடும், கண்ணியமாகவும் விளங்குவார் என நம்புகிறேன். அப்பொழுது வெள்ளைக்காரர்கள், 'எல்லா இந்தியரும் அவரைப் போன்று இருப்பார்களாயின், எங்களுடன் அவர்களுக்குச் சம அந்தஸ்தை அளிப்பதற்கு எங்களுக்கு எந்தவிதமான ஆட்சேபமும் இல்லை' என்பார்கள். அப்போது அவர், 'உங்களுடன் சமத்துவமாக ஒப்புக்கொள்ளும் இந்தியரின் பிரதிநிதி ஒருவர் மாத்திரம் இருந்தால் போதாது. நீங்கள் அவர்களை வெறுப்புடன் தூஷித்து, அவர்களுக்கு எல்லாவித இடையூறுகளையும் செய்வதற்குப் பதிலாக அவர்களுக்கு இன்று மறுக்கப்பட்டு வரும் கல்வி முதலிய எல்லா வசதிகளையும் தாராளமாக அளித்து

விடுவீர்களாயின், நான் எப்படி இருக்கிறேனே அப்படியே மற்ற இந்தியரும் இருப்பார்கள்' என்று சொல்லுவார். இப்படிப் பட்ட ஒருவர் தோன்றும்போது அவருக்கு நான் எதையும் சொல்லிக்கொடுக்க வேண்டிய அவசியம் இல்லை. தமது மேதையின் மூலம் தாமே காரியங்களைச் செய்து வருவார்."

[ஸ்ரீ பியாரிலால் எழுதியது.]
பர்டோலி, 6—2—1939. —'ஹரிஜன்' - 18—2—1939

# 29

# அகிம்சையின் பணி

"சமீபத்திய 'ஹரிஜன்' இதழ்களையும், ஐரோப்பிய நெருக்கடியைக் குறித்தும் வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தைக் குறித்தும் நீங்கள் கூறி வருவதையும் சிரத்தையுடன் படித்து வருகிறேன். அகிம்சையைப் பற்றிய ஒரு விஷயத்தைக் குறித்து நீங்கள் குறிப்பிடுவதே இல்லை. அவகாசம் இருந்திருந்தால் இதைப்பற்றி உங்களுடன் சேவா கிராமத்தில் நான் விவாதித்திருப்பேன். நீங்கள் வளர்த்திருக்கிற வகையில், அகிம்சை ஒத்துழையாமையே, இன்று உலகம் முழுவதையுமே அழித்துவிட மிரட்டிவரும் பலாத்காரத்திற்குச் சரியான பதில் என்கிறீர்கள். அத்தகைய உணர்ச்சியும் செயலும் மகத்தான பலனை உண்டாக்கும் என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால், தாராளமான, ஜனநாயகமுள்ள அரசியல் முறை அரசாங்கத்தில் வெற்றி பெற வேண்டுமாயின், எதிரிகளையும் நண்பர்களையும் ஒன்றாகப் பாவித்து எல்லோரிடமும் தன்னலமற்ற அன்பு காட்டும் அகிம்சை உணர்ச்சி தானே வெளிப்பட வேண்டாமா? சட்டமும் அரசாங்கமும் இல்லாமல் சமூகம் இருக்க முடியாது. தங்களுக்குள் ஐக்கியத்தையும் சட்டத்தையும் அளித்துத் தங்களுக்குள் இருக்கும் அராஜகத்தையும் போக்கும் அரசியல் ஆட்சி முறையை நாடுகள் ஏற்றுக்கொண்டாலன்றிச் சர்வ தேசங்களிடையே சமாதானம் நிலவ முடியாது. என்றாவது ஒரு நாள் சந்தேகமின்றி மாந்தர் உள்ளத்திலும் மனத்திலும் கடவுளின் தருமம் பதிந்துவிடும். அதனால் ஒவ்வொருவரும் கடவுளின் தருமத்தை வெளிப்படுத்துபவராவார். மனிதர் செய்யும் சட்டங்களுக்கும் அரசாங்கங்களுக்கும் அப்போது தேவை இருக்காது. ஆனால், அது இறுதியான விஷயம். அந்தத் தெய்விக லட்சியத்தை நோக்கி முன்னேறுவதற்குத் தொடக்கமாகச் சில காரியங்கள் அவசியமாகின்றன. முதலில் ஒரே அரசியலின் கீழ் ஒன்றுபட்டிருக்க எல்லா இனத்தினரும், மதத்தினரும், நாட்டினரும் ஒப்புக்கொள்ள வேண்டும். அதன்மூலம் ஐக்கியமும் ஒருவருக்கொருவர் அங்கம் பெறுவதும் நிலைபெற வேண்டும். இவர்களுக்கான சட்டங்கள், பொதுவான விவாதத்தின் பிறகும், ஒருவகையாகப் பெரும்பான்மைத் தீர்மானத்தின் பேரிலும் செய்யப்படவேண்டும். இச்சட்டங்கள் அமலாக்கப்பட வேண்டும். இவற்றிற்குத் தாமே பணிந்து நடக்காதபோது, நயமாக எடுத்துரைப்பதும் நல்ல உதாரணங்களைக் காட்டுவதும் பயனற்றுப் போனால், யுத்த முறையைக் கையாளாமல் ஒரு போலீஸ் படையைக்கொண்டு பணியும்படி செய்ய வேண்டும். சுதந்திரமுள்ள நாடுகளிடையே ஆக்க முறையில் அகிம்சை உணர்ச்சி செயலாவது ஒருவகையான கூட்டு ஆட்சியில் போய் முடியும். அப்படி ஏற்பட்டாலன்றி அது வெற்றி பெற முடியாது. அது சரியானபடி இருந்து வருகிறது என்பதற்கு ருசு, கூட்டுமுறை தோன்றுவதேயாகும். இவ்விதம் ஐரோப்பியப்

பிரச்னைக்குள்ள சரியான பரிகாரம், அதன் 25 இனத்தினரும் நாடுகளும் ஒரே ஜனநாயக அரசியலின்கீழ்க் கூட்டாவதில்தான் இருக்கிறது. அந்த அரசியல் ஓர் ஆட்சியை அமைக்க வேண்டும். அது ஐரோப்பியப் பிரச்னைகளை, ஒன்றுக் கொன்று போட்டியும் தகராறுமுள்ள நாடுகளின் பிரச்னை போல் கருதாமல், ஒரு நாட்டின் சுயாட்சியுள்ள தனித்தனி அங்கத்தினரின் ஒரே பிரச்னைகளாகக் கவனித்துச் சட்டங்களை இயற்றும். அதே போல இந்தியப் பிரச்னைக்குள்ள ஒரே பரிகாரம், பிரிட்டனின் அதிகாரத்திற்குப் பதிலாக ஜனநாயக அரசியல் ஏற்படும்படி செய்வதே. ஐரோப்பாவுக்கும் இந்தியாவுக்கும் எது உண்மையோ அதுவே உலகம் முழுமைக்குமே உண்மையானதாகும். யுத்தமே இல்லாத படி செய்வதற்கு அது ஒன்றே முடிவான வழியுமாகும்.

"கூட்டு ஜனநாயக அரசியலை எல்லா நாடுகளும் ஒப்புக்கொள்ளும்படி செய்வது சாத்தியமாவதற்கான மனமாற்றத்தை உண்டாக்க அகிம்சை யோடு கூடிய ஒத்துழையாமையே சிறந்ததாக இருக்கலாம்; அது ஒன்றே வழி என்றும் இருக்கக்கூடும். ஆனால், ஜனநாயகக் கூட்டு அரசாங்கம் முக்கிய மாக அமைந்தாக வேண்டியதே. அப்படி ஏற்படுவதென்பது நிச்சயமாக இருந் தாலன்றி இதில் வெற்றி ஏற்படாது. ஆனால், நீங்களோ, அகிம்சையோடு கூடிய ஒத்துழையாமையே அதனளவில் போதுமானது என்று கருதுகிறீர்கள். மக்க ளையும் இனங்களையும் மதங்களையும் நாடுகளையும் ஒன்றுபடுத்தும் ஜனநாயக ஆட்சி முறை ஏற்படுவது ஆத்மிக மனமாற்றத்தினால் சாத்தியமேயன்றிப் பலாத்காரத்தினாலோ அல்லது பித்தலாட்டத்தினாலோ முடியாது என்றாலும், இதைப்பற்றி நீங்கள் சொல்லுவதே இல்லை.

"இக்கடிதத்தில் இந்திய அரசியல் பிரச்னையைப்பற்றியும் குறித்திருந்த போதிலும் அந்த அரசியலுக்கு மறைமுகமான ஒரு வாதமாக நான் இக் கடிதத்தை எழுதவில்லை. இந்திய சர்க்காரின் அரசியல் சட்டம் ஜனநாயகக் கூட் டாட்சிக் கொள்கையின் குறைபாடுடைய பிரயோகமே ஆகும். அது சரி வர வேலை செய்ய வேண்டுமானால் துரிதமாக அதை மாற்றவேண்டும். இப்பொழு துள்ள நிலைமையில் மாகாணங்கள், சமஸ்தானங்கள், இந்து-முஸ்லிம் பிரச்னை ஆகியவைகளை ஒன்றுபடுத்தி வேலை செய்யும்படி செய்வதற்கான அரசியல் சமரசமே இது. பொதுவாக ஒப்புக்கொண்டிருப்பதைவிட வளர்ச்சிக்கான வித்துக்கள் இதில் நிறைய அடங்கியிருக்கின்றன. இந்த முக்கியமான வாதத் தையே நான் அடிக்கடி வற்புறுத்தி வந்திருக்கிறேன். உங்களுடைய ஆத்மிக போதனை மக்களுக்கு அறிவிக்குமானால் துரிதமாகவும் எளிதாகவும் அது விருத்தி யடையும். அரசியல் பிரச்னைகளைக் குறித்து உங்களிடமிருந்து கருத்தறிய வேண்டும் என்பதன்று என் நோக்கம். இக்கடிதத்தின் முற்பகுதியில் காணும் பெரிய பிரச்னையைக் குறித்துப் பதில் பெறவே விரும்புகிறேன்."

மேற்கண்டவாறு லார்டு லோதியன் எழுதியிருக்கிறார். இக் கடிதம் ஜனவரி ஆரம்பத்தில் வந்தது. ஆனால், அவசர வேலை கள் இருந்ததால் இக்கடிதத்தில் கிளப்பப்பட்டிருக்கும் முக்கிய மான பிரச்னையைக் கவனிக்க முடியாது போயிற்று.

அகிம்சையின் பேரில் விரும்பி அமையும் ஒரு சமூகத்திற்கு வேண்டிய அரசாங்கத்தின் தன்மையைப்பற்றி நான் காரணத் தோடேயே எதுவும் கூறாதிருக்கிறேன். ஆகர்ஷண சக்தியினால்

உலகத்தின் பகுதிகள் எவ்வாறு கட்டுண்டிருக்கின்றனவோ அதே போல அகிம்சையினால் எல்லாச் சமூகங்களும் பிணைவுண்டிருக் கின்றன. ஆனால், பூமிக்கு ஆகர்ஷண சக்தி இருக்கிறது என் பது கண்டுபிடிக்கப்பட்டபோது நம் மூதாதைகளுக்குத் தெரி யாமலிருந்த பலன்கள் ஏற்பட்டன. அது போலவே அகிம்சா தருமத்தை அனுசரித்துச் சமூகம் அமைக்கப்படும்போது, அது முக்கியமான விஷயங்களில் இன்று இருப்பதைவிட மாறுபட்டு இருக்கும். ஆனால், அகிம்சையையே முற்றிலும் கொண்டதான அரசாங்கம் அப்படிப்பட்டதாக இருக்கும் என்று நான் முன் கூட்டியே கூறிவிட முடியாது.

அகிம்சா தருமத்தை மதிக்காமல், பலாத்காரமே நிரந்தர மான தருமம் என்பதுபோல, அதை அரியாசனத்தில் நிறுத்த இன்று காரியங்கள் நடக்கின்றன. இங்கிலாந்து, அமெரிக்கா, பிரான்சு முதலிய நாடுகளில் இப்பொழுது நடந்து வருவதாக நாம் காணும் ஜனநாயகங்கள் பெயரளவில்தான் ஜனநாயக அமைப்புக்கள். ஏனெனில், நாஜி ஜெர்மனி, பாஸிஸ்டு இத்தாலி, சோவியத் ருஷியா ஆகியவைகளுக்கு எந்த விதத் திலும் குறையாத பலாத்கார அடிப்படையையே அந்நாடுகளும் கொண்டிருக்கின்றன. இதில் ஒரு வித்தியாசமே உண்டு. மூன்று ஜனநாயக வல்லரசுகளைவிடக் கடைசியாகக் காட்டப்பட் டுள்ள மூன்று நாடுகளிலும் பலாத்காரம் முறையாக அமைக்கப் பட்டிருக்கிறது. என்றாலும், படைப்பலத்தைப் பெருக்கிக்கொள் ளுவதில் ஒருவருக்கொருவர் போட்டி, வெறி பிடிக்கும் அளவில் இருந்து வருவதை இன்று காண்கிறோம். இதனால் ஒரு நாளைக்குச் சச்சரவு ஏற்பட்டே தீரும். அப்படி யுத்தம் மூண்டு ஜனநாயக நாடுகள் வெற்றியடைந்தால், தங்கள் ஆட்சியில் தங்களுக்கும் பங்கு இருக்கிறது என்று எண்ணிக்கொண்டிருக்கும் அந்நாட்டு மக்களின் ஆதரவினாலேயே அந்த வெற்றி ஏற்படுவதாகும். மற்ற மூன்று நாடுகளின் விஷயத்திலோ, தங்கள் சொந்தச் சர்வாதி காரங்களுக்கு எதிராக மக்கள் புரட்சி செய்வார்கள்.

தேசீய அளவில் அகிம்சையை ஒப்புக்கொள்ளாவிட்டால், அரசியலின்படி அமைந்தது அல்லது ஜனநாயக அரசாங்கம் என்ற ஒன்று இல்லை என்பது என் கருத்து. இந்தக் கருத்துடன் நான் இருப்பதனால், அகிம்சையைத் தனிப்பட்ட சமூக, ராஜீய, தேசீய, சர்வதேச வாழ்க்கைத் தருமமாகப் பிரசாரம் செய்வதில் எனது சக்தியை ஈடுபடுத்தி வருகிறேன். மங்கலாகவேயெனி னும் ஒளியை நான் கண்டுவிட்டதாக எண்ணிக்கொள்ளுகிறேன். இத் தருமத்தைப்பற்றிய எல்லாமே எனக்குத் தெரியும் என்று

நான் சொல்லவில்லை. ஆகையால், ஜாக்கிரதையாகவே எழுது கிறேன். என்னுடைய சோதனைகளின் வெற்றியை எப்படி நான் அறிவேனே அதே போல என்னுடைய தோல்விகளும் எனக் குத் தெரியும். ஆனால், அழியாத நம்பிக்கையை எனக்குத் தரும் வெற்றிகளே போதுமானவை.

முறையைப் பொறுத்தவரையில் ஒருவர் ஜாக்கிரதையாக இருந்தால் முடிவு தன்னைத் தானே கவனித்துக்கொள்ளும் என்று நான் அடிக்கடி கூறி வந்திருக்கிறேன். முறை அகிம்சை; ஒவ் வொரு நாடும் அடையவேண்டிய முடிவு பூரண சுதந்திரம். பெரி யதும், சிறியதும் ஆன எல்லா நாடுகளும் முற்றிலும் சுதந்திர மானவைகளாக இருந்தால்தான் சர்வதேச சங்கம் இருக்க முடியும். அந்தச் சுதந்திரத்தின் தன்மை, சம்பந்தப்பட்ட நாடு கள் அடைந்திருக்கும் அகிம்சையின் அளவைப் பொறுத்திருக் கும். ஒன்று மாத்திரம் நிச்சயம். அகிம்சை அடிப்படையில் அமைந்த ஒரு சமூகத்தில், உயர்ந்த நாட்டைப் போன்றே தானும் உயர்ந்தது என்று மிகச் சிறிய நாடும் உணரும். உயர்வு, தாழ்வு எண்ணமே அடியோடு இல்லாது போய்விடும்.

இந்திய அரசாங்கச் சட்டம் தாற்காலிகமானதே, நாட்டு மக்களே தயாரித்துக்கொள்ளும் அரசியல் சட்டத்துக்கு அது இடந் தந்து விட வேண்டியதே என்பது இதிலிருந்து ஏற்படு கிறது. மாகாணச் சுயாட்சியைப் பொறுத்தவரையில், ஓரளவுக்கு அதை நடத்துவது சாத்தியம் என்று காணப்படுகிறது. அது வேலை செய்வதைக் குறித்து எனக்குள்ள அனுபவம் அவ்வளவு சந்தோஷம் தருவதாக இல்லை. காங்கிரஸ் அரசாங்கங்களுக்கு, மக்கள்மீது எந்தவிதமான அகிம்சைப்பற்று இருக்கும் என்று நான் எதிர்பார்த்தேனே அது இல்லை.

ஆனால், கூட்டாட்சி முறையைப் பற்றி என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை; ஏனெனில், அதில் சேருகிற பகுதிகள் ஒரே மாதிரியானவையாக இல்லாதிருந்தும் பிடிப்பில்லாத ஒரு கூட்டாக இருக்கப் பார்ப்பதினாலேயே. ராஜ்யங்கள், எவ்விதம் ஒரே மாதிரியானவைகளாக இல்லை என்பது, நான் எதிர்பாராத வகையில் மிகக் கோரமாகக் காட்டப்பட்டு வருகிறது. ஆகையால், இந்திய சர்க்கார் அரசியல் சட்டத்தில் காணும் வகையில் கூட்டாட்சி முறை அமைவது என்பது முற்றிலும் அசாத்தியம் என்றே கருதுகிறேன். அகிம்சையை வெறும் கொள்கையாக மாத்திரமின்றி உண்மையான சக்தியாகவும், மீற முடியாத லட்சிய மாகவும் ஒப்புக்கொள்ளாத வரையில், அரசியல் அல்லது

ஜனநாயக ஆட்சி என்பது அகிம்சையுடன் பிணைந்துள்ள என்னைப் போன்ற ஒருவருக்கு, என்றோ ஒருநாள் நிறைவேறும் என்று கனவு காணும் முடிவுக்கே வர வேண்டியதாகிறது. உலகத்திற்கே அகிம்சை என்று நான் சொல்லி வந்தபோதிலும் என்னுடைய சோதனையெல்லாம் இந்தியாவோடு நிற்கிறது. இதில் வெற்றி பெற்றால் உலகம் சிரமமின்றி ஏற்றுக்கொள்ளும். என்றாலும், 'ஆனால்' என்பது பெரிதாக இருக்கிறது. தாமதமாவதால் நான் சஞ்சலம் அடையவில்லை. ஊடுருவ முடியாத இருளின் நடுவே என்னுடைய நம்பிக்கை ஒளியுடனேயே இருக்கிறது.

சேவா கிராமம், 6-2-1939

—'ஹரிஜன்'—11-2-1939.

# 30

# செய்ய வேண்டியது என்ன ?

ஒரு கல்லூரியின் தலைவர் எழுதிய கடிதம் இது. அவர் தாம் இன்னார் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்பவில்லை. அக்கடிதமாவது :

"கீழ்க்கண்ட முக்கியமான பிரச்னையைத் தீர்த்துக்கொள்ளுவதற்கு, மற்றவர்களின் நியாயமான கருத்துக்களைக் குழப்பமடைந்த மனச்சாட்சி நாடுகிறது. சமாதானப் பிரதிக்ஞைச் சங்கத்தின் (எந்த நிலைமை ஏற்பட்டாலும் பலாத்காரத்தில் இறங்க மறுத்துவிடுவது என்பதற்காகக் காலஞ்சென்ற டிக் ஷெப்பர்டு ஆரம்பித்த இயக்கம்) பிரதிக்ஞைகளை நிறைவேற்றுவது இப்பொழுதுள்ள உலக நிலைமையில் நியாயமும் சாத்தியமானதுமான நடவடிக்கையாகுமா ?

'ஆம்' என்பதற்குள்ள வாதங்கள் வருமாறு :

1. உலகத்தின் பெரிய ஆத்மிக போதகர்கள் எல்லோரும் ஒன்றை உபதேசித்துத் தங்கள் வாழ்க்கையில் நடத்தியும் காட்டியிருக்கின்றனர். நல்ல முறையினாலேயே தீமையை அழிக்க முடியுமேயன்றித் தீய முறையினாலன்று ; எந்த வகையான பலாத்காரமும் (தற்காப்புக்கு என்று சொல்லப்படுவதற்குக் கூட, முக்கியமாக யுத்தம்)-இதன் நோக்கம் எதுவாக இருப்பினும்-தீய முறை என்பதே அவர்களுடைய போதனை. ஆகையால், பலாத்காரம் எப்பொழுதுமே தவறானது.

2. இப்பொழுதுள்ள பலாத்காரத்திற்கும் துன்பத்திற்குமுள்ள உண்மையான காரணங்களை யுத்தத்தினால் நீக்கிவிட முடியாது. 'யுத்தத்தை ஒழிக்க யுத்தம்' என்ற சென்ற போரின் மூலம் இது முற்றிலும் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. அதுவே என்றும் உண்மையாக இருக்கவும் முடியும். ஆகையால், பலாத்காரம் உபயோககரமானதன்று.

3. சுதந்திரத்தையும் ஜனநாயகத்தையும் பாதுகாப்பதற்காகப் போராடியாக வேண்டும் என்று நினைக்கிறவர்கள் (இதைவிடக் குறைவான எந்த லட்சியத்திற்காகவும் போராட மாட்டார்கள் என்றாலும்) மருளுக்கு உள்ளாகின்றனர். இக்கால நிலைமையில் யுத்தம் வெற்றியில் முடிவதாக இருந்தாலும்,

படையெடுத்து வருகிறவர்கள் பிடித்துக்கொண்டு விடுவதால் அழிவதைவிட நம் சுதந்திரம் நிச்சயமாக அதிக நாசத்தையே அடையும். ஏனெனில், எல்லா மக்களையும் கடுமையான கட்டுத்திட்டங்களுக்கு உட்படுத்தாமல் இக்கால யுத்தம் எதையும் வெற்றிகரமாக நடத்திவிட முடியாது. இன்னுமொரு யுத்தத்தில் வெற்றி பெறப் போவது யாராக இருந்தாலும், அந்த யுத்தத்தினால் கட்டுத் திட்டங்களுக்கெல்லாம் உட்படுத்தப்பட்டுவிடும் ஒரு சமூகத்தில் அடகுப் பொருளாக இருந்து வாழ்வதைவிட அடக்குமுறையை மனச்சாட்சியோடு அகிம்சையினால் எதிர்த்து இறந்துபோவதே மேல்.

'இல்லை' என்னும் தரப்பில் கீழ்க்கண்ட வாதங்கள் கூறப்படுகின்றன :

1. ஒழுக்கம், ஜீவகாருண்யம் காரணமாக மனம் இரங்கக்கூடியவர்களிடம் மாத்திரமே அகிம்சையோடு கூடிய எதிர்ப்புப் பலன் அளிக்கும். ஆனால், அத்தகைய மன இரக்கம் பாசிஸத்திற்கு இல்லை என்பது மாத்திரம் அல்ல; இதுபோன்ற கருத்தைப் பலவீனத்தின் அறிகுறி என்றும் அது ஏளனம் செய்து வருகிறது. எல்லா எதிர்ப்புக்களையும் ஒழிப்பது என்பதிலோ, அப்படிச் செய்ய எந்த வகையான மிருகத்தனத்தையும் உபயோகிப்பதிலோ அது சிறிதும் கவலைப்படுவதாக இல்லை. ஆகையால், பாசிஸத்திற்கு எதிராக வெற்றி பெற அகிம்சை எதிர்ப்பு முற்றிலும் பயனற்றதாகிறது.

2. ஜனநாயக சுதந்திரத்தைப் பாதுகாக்கப் பலாத்காரத்தோடு கூடிய எதிர்ப்பில் ஒத்துழைக்க மறுப்பது, (அதாவது யுத்தம் அல்லது கட்டாய ராணுவ சேவையில் சிப்பாயாகச் சேர மறுப்பது), அந்தச் சுதந்திரத்தை அழிக்கிறவர்களுக்கு உதவுவதாகவே ஆகும். பாதுகாப்புக்காகப் போராட விரும்பாத சிலர் ஜனநாயகங்களில் இருக்கிறார்கள். யுத்தம் மூண்டால் அல்லது ஏதாவது ஒரு வகையான கட்டாய ராணுவ சேவை அமலுக்கு வந்தால் அவர்கள் எதிர்ப்பார்கள் (இவ்விதம் தடை செய்வது) என்பதை அறிந்திருப்பதனாலேயே பாசிஸ்டு ஆக்கிரமிப்புகள் சந்தேகத்திற்கு இடமின்றி உற்சாகம் அடைகின்றன. இவ்விதம் இருக்கும்போது, பலாத்காரத்தைக் கொண்டு பாதுகாத்துக்கொள்ளுவது என்பதை மனச்சாட்சிப்படி ஆட்சேபிப்பவர்கள், சமாதானத்தை உண்டாக்க முடியாதவர்களாக இருப்பதோடு அதைக் குலைப்பவர்களுக்குத் தீவிரமாக உதவி செய்பவர்களும் ஆகிறார்கள்.

3. போர், சுதந்திரத்தை நாசப்படுத்திவிடலாம். ஆனால், ஜனநாயகங்கள் தப்பிப் பிழைத்தால் இதில் சிறிதாவது திரும்ப அடைவதற்கு வாய்ப்பு உண்டு. பாசிஸ்டுகள் உலகை ஆளப் புகுந்துவிட்டாலோ அந்தச் சிறிய வாய்ப்பும் இராமல் போய்விடும். மனச்சாட்சிப்படிப் போரை ஆட்சேபிப்போர், ஜனநாயக சக்திகளைப் பலவீனப்படுத்துவதன் மூலம் அடக்கியாள்வோருக்கு உதவி செய்து தங்களுடைய நோக்கத்தையும் தோற்கடித்துக்கொள்ளுகின்றனர்.

கட்டாய ராணுவ சேவை அமலிலுள்ள ஒரு நாட்டில் இருக்கும் ஓர் இளைஞருக்கோ அல்லது ஆபத்தில் இருந்து வரும் பிரிட்டனில் இருப்பவருக்கோ இப்பிரச்னைக்குப் பரிகாரம் மிகவும் அவசரமானதாகிறது. தென்னாப்பிரிக்கா, எகிப்து, ஆஸ்திரேலியா ஆகிய மற்ற நாடுகளும் படையெடுப்பு அபாயத்தைச் சமாளித்துக்கொள்ள வேண்டி வரலாம். இந்தியா, 'பூரண சுதந்திர'த்தை அடைந்துவிடுமானால், ஜப்பானியப் படையெடுப்பையோ அல்லது ஐக்கிய இஸ்லாமிய நாடுகளின் கூட்டுப் படையெடுப்பையோ சமாளிக்க நேரலாம். ஆகையால், இந்த நாடுகளுக்கும் அப்பரிகாரம் அவசரமானதல்லவா ?

அத்தகைய நிலைமை ஏற்படும்போது (ஒரு வேளை நேரலாம் என்று வைத்துக்கொள்ளுவோம்) சரியானது எது, சாத்தியமான நடவடிக்கை என்ன என்பதைக் கூர்மையுள்ள மனச்சாட்சி ஒவ்வொன்றும் (இளைஞரிடத்திலும் சரி, முதியவரிடத்திலும் சரி) நிச்சயமாகத் தெரிந்துகொண்டிருக்க வேண்டாமா? ஏதோ ஒரு வகையில் (எல்லா நாளும் இல்லாவிடினும்) ஒரு நாளைக்கு நம்மில் ஒவ்வொருவரும் தாமே சமாளிக்க வேண்டிய பிரச்னை இது. விஷயங்களைத் தெளிவாக்க உங்கள் வாசகர்கள் உதவுவார்களா? இதற்குப் பதிலைச் சரியான படி அறியாதவர்கள், இதைப்பற்றிச் சிந்தித்துப் பதில் கிடைக்கும்போது கூற வேண்டும். தங்கள் பதிலைப்பற்றி நிச்சயமாக இருப்பவர்கள், அதேபோல மற்றவர்களும் நிச்சயம் அடைய உதவலாம்.''

சமாதானப் பிரதிக்ஞைச் சங்கத்தின் யுத்த எதிர்ப்புக்கு ஆதரவான வாதங்களைக் குறித்துச் சொல்ல வேண்டியது எதுவுமில்லை. எதிர்ப்புக்கு எதிரானதாகக் கூறப்படும் வாதங்களைக் கவனமாக ஆராய வேண்டியது அவசியம். பாசிஸ்டுகளையும் நாஜிகளையும் மாற்றுவது முடியும் என்ற எண்ணத்தை அடிப்படையாகக் கொண்டதே முதல் வாதமாகையால், அது சரிதான் என்றால், அது யுத்த எதிர்ப்பு இயக்கத்தின் வேரையே துண்டித்துவிடுவதாகிறது. ஜனநாயகங்கள் என்று சொல்லப்படுகின்றவைகளும், இன்னும் சொன்னால் யுத்த எதிர்ப்பாளர்களும் எந்த இனத்தினரோ அந்த இனத்தைச் சேர்ந்தவர்களே பாசிஸ்டுகளும் நாஜிகளும். தங்கள் குடும்ப வட்டாரத்தினருக்கு வெளியிலும் யுத்த எதிர்ப்பாளர்கள் எந்த அன்பையும், ஆசையையும், பரிவையும், தாராளத்தையும் காட்டக்கூடுமோ அதே அன்பையும், ஆசையையும் பரிவையும் தாராளத்தையும் பாசிஸ்டுகளும் நாஜிகளும் தங்கள் குடும்ப வட்டாரத்தில் காட்டிக் கொண்டுதான் இருக்கிறார்கள். இதில் வித்தியாசம் எல்லாம் அளவில்தான் இருக்கிறது. ஜனநாயகங்கள் என்று சொல்லப்படுபவைகளின் கெட்ட செய்கைகளுக்குச் சவாலாகத் தோன்றியவர்களே நாஜிகளும் பாசிஸ்டுகளும் என்பது அல்லவென்றால், ஜனநாயகங்களின் புதிய உருவங்களே அவர்கள். சென்ற யுத்தத்தின் கொடுமைகளைக் குறித்துக் கிர்பி பேஜ் எழுதியிருக்கும் பிரசுரத்தில் போரில் ஈடுபட்ட இரு தரப்பினரும் பொய்கள், மிகைப்படுத்திக் கூறல், கொடுமைகள் ஆகிய குற்றங்களைச் செய்திருக்கின்றனர் என்பதை எடுத்துக் காட்டியிருக்கிறார். வெற்றி பெற்றவர்கள் ஜெர்மனிமீது வஞ்சம் தீர்த்துக்கொள்ளும் ஒப்பந்தமே வார்சேல்ஸ் ஒப்பந்தம்.* ஜன

* 1914 – 18-இல் நடந்த முதல் உலக யுத்தத்தின் முடிவில் ஏற்பட்ட சமாதான ஒப்பந்தமே வார்சேல்ஸ் ஒப்பந்தம். அதன் முதல் பகுதி சர்வதேச சங்கத்தின் அமைப்பைப் பற்றியது. அந்த ஒப்பந்தப்படி ஜெர்மனியின் பிரதேசங்களைப் பற்றிய மாறுதல்களும் ஏராளமாகச் செய்யப்பட்டன. ஜெர்மனியைச் சேர்ந்ததாக இருந்த

நாயகங்கள் என்று கூறப்படுபவை, இதற்கு முன்னுலேயே மற்ற நாட்டு மக்களின் இடங்களைத் தவருக ஆக்கிரமிப்புச் செய்திருப்பதோடு கொடுமையான அடக்கு முறையிலும் இறங்கியிருக்கின்றன. பிற்பட்ட இனத்தினர் என்று கூறப்படும் மக்களைத் தங்களுடைய சொந்த நலனுக்காக வஞ்சித்துச் சுரண்டுவதற்கு, தங்களுக்கு முன்னுல் விஞ்ஞான அறிவிராதவர்கள் செய்த பலாத்காரத்தை, ஹிட்லர் கம்பெனியார் இப்பொழுது விஞ்ஞான ரீதியாகச் செய்வதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? ஜனநாயகங்கள் எனப்படுபவை, ஓரளவு அகிம்சைக்கு மனம் இளகிவிடுகின்றன என்றுல், இன்னும் அதிகக் கடுமையான உள்ளம் படைத்தவர்களான பாசிஸ்டுகள், நாஜிகளின் மனம் இளகும்படி செய்வதற்கு எந்த அளவு அகிம்சை வேண்டும் என்பதைக் கண்டுபிடிக்க வேண்டியதே விஷயம். ஆகையால், முதல் வாதத்தில் ஏதாவது இருக்கிறது என்று நிரூபிக்கப்பட்டாலே ஆபத்தாகையால் ஆலோசிப்பதிலிருந்து அதை நாம் நீக்கிவிட வேண்டும்.

மற்ற இரு வாதங்களும் காரிய சாத்தியமானவை. தங்கள் சொந்த அரசாங்கங்கள் கட்டாயம் தோல்வியை அடைந்துவிடும் விதத்தில் அவற்றை பலவீனப்படுத்திவிட யுத்த எதிர்ப்பாளர்கள் எதையும் செய்யாமல் இருக்கலாம். ஆனுல், அப்படி ஏதாவது செய்துவிடுவோமோ என்று பயந்துகொண்டு, எல்லா யுத்தங்களும் வீண் என்பதில் தங்களுக்குள்ள திடமான நம்பிக்கையை வெளிப்படுத்துவதற்கு இருக்கும் ஒரே சரியான சந்தர்ப்பத்தை அவர்கள் இழந்துவிடக் கூடாது. அவர்களுடைய அரசாங்கங்கள் வெறிபிடித்து, யுத்த எதிர்ப்பாளரைத் துன்புறுத்திஞல், தாங்களே உண்டாக்கிக்கொள்ளும் விளைவுகளை அவை (அரசாங்

---

அல்ஸேஸ்-லோரேன் பகுதி பிரான்ஸுக்குக் கொடுக்கப்பட்டது. போஸனும் காரிடாரும் போலந்துக்குக் கொடுக்கப்பட்டன. வார்சேல்ஸ் ஒப்பந்தத்தின்படி ஜெர்மனி ஆயுதப் பரிகரணத்தை ஒப்புக்கொள்ளுமாறு செய்தனர். எல்லோரும் ராணுவ சேவை செய்ய வேண்டும் என்று இருந்ததை ரத்து செய்து லட்சம் பேரை மாத்திரமே கொண்ட சிறு ராணுவத்தையும் சிறு கடற்படையையும் மாத்திரமே வைத்துக்கொள்ளும்படி அந்த ஒப்பந்தப்படி ஜெர்மனி கட்டாயப்படுத்தப்பட்டது. ஜெர்மனியின் குடியேற்ற நாடுகளைச் சர்வ தேச சங்க ஆக்ஞைப்படி வெற்றி பெற்ற நாடுகள் தங்களுக்குள் பகிர்ந்துகொண்டன. ஜெர்மனி யுத்த நஷ்ட ஈடு கொடுக்க வேண்டும் என்றும் அந்த ஒப்பந்தம் விதித்தது. ஆனுல், இந்த நஷ்ட ஈட்டுத் தொகை நாளடைவில் குறைக்கப்பட்டு 1932-இல் அடியோடு ரத்து செய்யப்பட்டது. இந்த ஒப்பந்தத்திஞல் ஜெர்மன் மக்களிடையே ஏற்பட்டிருந்த வெறுப்பையும் ஆத்திரத்தையும் பயன்படுத்திக்கொண்டே ஹிட்லர் ஜெர்மன் சர்வாதிகாரியாஞர். வார்சேல்ஸ் ஒப்பந்தத்தை மீறி ஜெர்மன் ராணுவ பலத்தை அதிகப்படுத்திஞர். ஆஸ்திரியாவைப் பிடித்துக்கொண்டார். கிழக்கு எல்லையையும் மாற்றிவிட ஹிட்லர் முயன்றதன் விளைவாகவே இரண்டாவது உலக யுத்தம் மூண்டது.

கங்கள்) அனுபவித்துத்தான் ஆக வேண்டும். தங்களுக்கு எவ்வளவுதான் அசௌகரியமாக இருப்பினும், தனிப்பட்ட அகிம்சை மனச்சாட்சியின் சுதந்திரத்தை ஜனநாயகங்கள் மதித்தாக வேண்டும். அப்படி மதிப்பதிலிருந்து உலகிற்கு நம்பிக்கை பிறக்கும். அப்பொழுது, தேசத்தின் நன்மை என்று சொல்லப்படுவதற்கு மேலாக தங்கள் மனச்சாட்சியையும் சத்தியத்தையும் எண்ணுகிறூர்கள் என்று ஆகும். ஏனெனில், ஒருவருடைய மனச்சாட்சிக்கு மதிப்புத் தந்தால், உண்மையிலேயே அப்படி இருக்குமாயின், அது எந்த நியாயமான லட்சியத்தையோ அல்லது நலனையோ என்றுமே இதுவரை பாதித்ததே கிடையாது. ஜனநாயகம் என்று சொல்லப்படுபவை வாழ்ந்தாலும் சரி வீழ்ந்தாலும் சரி, இழுத்துப் பறிக்கும் நிலை ஒரு நாளும் யுத்தத்தை ஒழித்துவிடாது. நெருக்கடியானதோர் கட்டத்தில் யுத்த எதிர்ப்பாளர்களின் ஒரு கூட்டத்தினர், எது வந்தாலும் சரி அவசியமானல் தூக்குத்தண்டனையை அடைந்து துன்பப்படவும் துணிந்து, தங்களுடைய வாழ்வின் லட்சியத்தைச் சோதிக்க முற்பட்டால்தான் யுத்தம் தொலையமுடியும் என்று யுத்த எதிர்ப்பாளர்கள் பலமாக நம்புவதாயின், யுத்தத்தை அவர்கள் எதிர்த்தே ஆக வேண்டும். இதுதான் நிலைமை. நாம் கவனிக்க வேண்டியது, தூக்குத் தண்டனையைத் தவிர்ப்பது எப்படி என்பது அன்று, கருத்தில் இருக்கும் நோக்கம் நிறைவேறப் பார்ப்பது எப்படி என்பதே. கலக்கமான, ஆனல் நம்பிக்கையைப்பற்றிய முக்கியமான விஷயம் ஒருவருடைய நடத்தையின் ஒரு பகுதியாக இருக்கும்போது, மனிதர் போடும் கணக்கெல்லாம் வீணே. உண்மையான யுத்த எதிர்ப்பாளர் உண்மையான சத்தியாக்கிரகி. சத்தியாக்கிரகி, நம்பிக்கையின் பேரில் செயலில் ஈடுபடுகிறூர். ஆகையால், பலனைப் பற்றி அவருக்குக் கவலை இல்லை. ஏனெனில், செயல் உண்மையானதாக இருந்தால் பலன் நிச்சயம் என்பது அவருக்குத் தெரியும்.

ஜனநாயகங்கள் வெற்றி அடைகின்றன என்றே வைத்துக் கொள்ளுவோம். அதனல் லாபம் என்ன? நிச்சயமாக யுத்தமே இல்லாது போய்விடப் போவதில்லை. கட்டாய ராணுவ சேவை உத்தரவு உட்படக் கட்டாயப் படுத்தவும் பணியும்படி செய்யவும் பாசிஸ்டுகளும் நாஜிகளும் உபயோகித்த எல்லாத் தந்திரங்களையும் ஜனநாயகங்களும் உபயோகித்திருக்கும். வெற்றியின் முடிவில் ஏற்படக்கூடிய லாபம் எல்லாம், தனிப்பட்டவர்களின் சுதந்திரம் சற்று அதிகமாகப் பாதுகாக்கப்படக் கூடும் என்பதே. ஆனல், அந்தப் பாதுகாப்பு வெளி உதவியை

எதிர்பார்த்திருப்பது அல்ல. உலகம் முழுவதையும் எதிர்த்தும் பாதுகாத்துக்கொள்ளுவது என்ற உள் உறுதியிலிருந்து ஏற்படுவதே அது. இன்னும் சொல்லுவதானால், யாரொருவர் முற்றிலும் அகிம்சையின் மூலமே தம்முடைய சுதந்திரத்தைக் காத்துக்கொண்டு அதனால் தமது தேசத்தின் சுதந்திரத்தையும்—முடிவாக மனிதவர்க்கத்தின் சுதந்திரத்தையே—காத்தவராகிறாரோ அவரே உண்மையான ஜனநாயகவாதி. பாதுகாப்புக்காக இருந்தாலும், தாக்குவதற்காக இருந்தாலும், எந்த யுத்தத்துடனும் எந்த வித சம்பந்தமும் வைத்துக்கொள்ளுவதில்லை என்று திடமாக மறுப்பதன் மூலம் வரப்போகும் சோதனையில் யுத்த எதிர்ப்பாளர்கள் தங்களுடைய உறுதியை நிரூபிக்க வேண்டும். ஆனால், எதிர்ப்பது என்ற கடமை, ஒரு லட்சியம் என்ற முறையில் அகிம்சையில் நம்பிக்கை கொள்ளுவோருக்கு ஏற்படுகிறதேயன்றி, ஒவ்வொரு போரின் தன்மையையும் சீர்தூக்கிப் பார்த்து ஒரு குறிப்பிட்ட போரை அங்கீகரிப்பதா அல்லது எதிர்ப்பதா என்று கணக்குப் போட்டு முடிவுக்கு வருகிறவர்களுக்கு அல்ல. இன்னும் ஒன்றும் இருக்கிறது. அத்தகைய எதிர்ப்பு, ஒவ்வொருவரும் தமக்குத் தாமே முடிவு செய்துகொள்ள வேண்டிய விஷயம். 'உள்ளத்தில் ஒரு குரல்' உண்டென்பதை அவர் ஒப்புக்கொள்ளுவதானால் அது காட்டும் வழியில் அவர் தமக்குத் தாமே தீர்வு காண வேண்டும்.

ராஜகோட், 9-4-1939. —'ஹரிஜன்',-15—4—1939.

# 32

# ஆக்ஸ்போர்டு குழுவும், ஒழுக்கப் புனர்ப்பலமும்

ஆக்ஸ்போர்டு குழு இயக்க சம்பந்தமாகவும் அதன் வேலைகளைக் குறித்தும் சமீப ஆண்டுகளில் ஏராளமான வெளியீடுகள் எங்களுக்கு அனுப்பப்பட்டிருக்கின்றன; அக்குழுவினரில் பலரைச் சந்தித்தும் இருக்கிறோம். இங்கிலாந்தில் 'வீட்டு விருந்துகள்' என்று அவர்கள் கூறிக்கொள்ளும் பலவற்றிற்கு அழைக்கப்படும் வாய்ப்பும் எனக்கு ஏற்பட்டது. அபோட்டாபாதில் சிலரைச் சந்திக்கும் வாய்ப்பும் எனக்கு இருந்தது.

மனம் விட்டு உள்ளதை அவர்கள் பேசியதைக் கண்டோம். அபோட்டாபாதில் காந்திஜியைச் சந்தித்த நண்பர், சில விஷயங்களை ஒப்புக்கொண்டும் விட்டார். அது அவருக்குப்

பெருமையே. அடிப்படையான சில கொள்கைகளில் அவர்கள் எங்களோடு ஒத்திருப்பதைக் கண்டோம்.

ஆக்ஸ்போர்டு இயக்கம், ஒழுக்கப் புனர்ப்பல வேலைத் திட்டத்துடன் சம்பந்தப்பட்டிருப்பதை நினைக்கும்போதுதான் கஷ்டம் அதிகமானதாகிறது. அந்த இயக்கத்தின் கர்த்தாவான டாக்டர் பிராங்க் புச்மன்[1] இந்த ஒழுக்கப் புனர்ப்பல இயக்கத்தை ஆரம்பித்தார். அமெரிக்காவில் கான்ஸ்டிடியூஷன் மண்டபத்தில் கூடியிருந்த நாலாயிரம் மக்களின் முன்னிலையில் பேசிய ஜனாதிபதி ரூஸ்வெல்ட்,[2] உலக சமாதானம் நிலவும்படி செய்வதற்கு ஒழுக்கப் புனர்ப்பலம் வேண்டும் என்றார். "ஒழுக்கப் புனர்ப்பல வேலைத் திட்டம் உலகத்திற்கு ஆயுதப்போர் அபாயத்தைக் குறைக்கத் தவறிவிடாது. அத்தகைய ஒழுக்கப் புனர்ப்பலம் உலகம் முழுவதன் ஆதரவையும் பெற வேண்டும்" என்றார். "நம்பிக்கையுடனும் அன்போடும் மனிதரும் நாடுகளும் ஆத்மிகத்தைப் பெற்றிருக்க வேண்டும்" என்று கூறும் கோரிக்கையை லார்டுகள் சபை உறுப்பினர் இருபத்துமூவர் ஆதரித்தார்கள் என்றும் அறிகிறோம்.

இப்பொழுது இந்த இயக்க சம்பந்தமாக ஒருவர் செய்ய வேண்டியது என்ன? ஜனாதிபதி ரூஸ்வெல்டின் கோரிக்கைக்கு 'உடன்பட்டு' அதில் கையெழுத்திடுமாறு காந்திஜியைக் கேட்டனர். அதில் இருந்த இரு பகுதிகள் வருமாறு:

"ஒழுக்கப் புனர்ப்பலம் என்பது முதலில் மனமாற்றமடைவது. நடந்து போனதற்கு நமது பொறுப்பை ஒப்புக்கொண்டு நாடுகளும் தனிப்பட்டவர்களும் யோக்கியப் பொறுப்பு, தூய்மை, தன்னலமின்மை, அன்பு ஆகியவற்றின் தரங்களை ஏற்றுக்கொண்டு நாள்தோறும் கடவுளின் ஆக்ஞையைக் கேட்டு, நாள்தோறும் அதற்குப் பணிவது என்பதே அதன் பொருள்.

---

1. டாக்டர் பூஜ்ய பிராங்க் நாதன் டேவிட் புச்மன் (1878-இல் பிறந்தவர்) - ஓர் அமெரிக்க எவான்ஜலிஸ்டு பாதிரி. 'ஒழுக்கப் புனர்ப்பல இயக்கம்' என்று கூறப்படுவதன் தலைவர். ஆக்ஸ்போர்டு குழாம் இயக்கம் என்று சொல்லப்பட்ட மத சகோதரத்துவ கோஷ்டியை 1921-இல் ஆரம்பித்தார்.

2. ஜனாதிபதி பிராங்க்ளின் டெலானோ ரூஸ்வெல்ட் (1882-1945) - 1933-ஆம் ஆண்டிலிருந்து 1945-இல் இறக்கும் வரையில் அமெரிக்காவின் ஜனாதிபதியாக இருந்தார். சேர்ந்தாற்போல இரு தடவைகளுக்கு மேல் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப் பெற்ற முதல் அமெரிக்கர் இவரே. இவர் சிறந்த அமெரிக்க ராஜதந்திரி. ஜனாதிபதி வில்ஸனின்கீழ்க் கடற்படை உதவிக் காரியதரிசியாக இருந்தார். ஐரோப்பாவில் இரண்டாவது உலக யுத்தம் மூளுவதற்கு முன்னால் நாஜி, பாசிஸ்டு சர்வாதிகாரிகள் ஆக்கிரமிப்புக்களை நிறுத்தும்படி செய்ய முயன்றார். யுத்தம் மூண்டதும் பிரிட்டன் போன்ற நாடுகளுக்கு உதவ 'இரவல்—குத்தகை' முறையைக் கொண்டு வந்தார். ஜப்பான் பெர்ல் ஹார்பரைத் தாக்கியதால் அமெரிக்காவும் அப்போரில் இறங்கியதிலிருந்து யுத்தத்தை வெற்றிகரமாக நடத்த வேண்டும் என்பதில் தீவிரமான பங்கு கொண்டார். ஆனால், வெற்றி கிட்டத்தில் இருந்த நேரத்தில் காலமானார்.

"நம் நாட்டு மக்களின் ஒழுக்க, ஆத்மிகப் புனர்ப்பலத்திற்கும் – நாளைய உலகத்தை – புதிய மனிதரின் உலகத்தைக் கடவுளின் தலைமையில் எல்லா மனித வர்க்கத்தின் வழிவழி வந்த செல்வத்தைப் பெறுவதற்கும், மனித அறிவின் வசதிகள் எல்லாம் சுதந்திரம் பெற்றதாயிருக்கும் புதிய நாடுகளை அமைக்க உள்ளம், மனம், உறுதியான சேவையின் மூலம் 'நம் கடைசி முழுப் பக்தியையும் அளிக்கவும் இந்த நெருக்கடியான நேரத்தில் நாம் பிரதிக்ஞை செய்துகொள்ளுவோம்.'

இந்தியாவில், இந்த 'உடன்பாட்டி'ல் கையெழுத்திட்டிருப்போருக்கு மரியாதை செலுத்தினாலும் தாம் மாத்திரம் தம் மனச்சாட்சிப்படி இதில் கையெழுத்திட முடியாது என்று காந்திஜி மறுத்துவிட்டார். காந்திஜி கூறியதாவது :

"பொய்மையை நான் அங்கீகரிக்க முடியாது. முன்னால் நடந்ததற்கெல்லாம் பொறுப்பை இந்தியா எப்படி ஏற்றுக்கொள்ள முடியும்? இவையெல்லாம் என்னைப்பற்றியவையே அல்ல. மேலே கண்ட வாக்கியங்கள் முழுதும் பிற நாடுகளைச் சுரண்டும் நாடுகளுக்குப் பொருந்துவது. இந்தியாவோ சுரண்டப்படும் நாடு. இரண்டாவது பகுதியும் மேற்கத்திய நாடுகளுக்குப் பொருந்தக் கூடியதேயன்றி நமக்கு அல்ல. கோரிக்கை முழுதுமே உண்மையற்றதாக இருக்கிறது. ஒழுக்கப் புனர்ப்பலம் பெறுவதைப்பற்றி நான் சிந்திக்க முடியுமெனினும், அது வேறான முறையில்தான் முடியும். சுரண்டப்பட்ட ஒரு நாட்டினனாகிய எனக்கு மாறுபட்டதான ஒழுக்கப் புனர்ப்பலத் திட்டமே இருக்கிறது. இதற்கு நான் சீனாவை அழைக்க முடியும். ஆனால், மேற்கத்திய நாடுகளையோ அல்லது ஜப்பானையோ நான் எப்படி அழைக்க முடியும்? இதில் சேர்ந்து கொள்ளும்படி நான் மேற்கத்திய நாடுகளை அழைப்பது எவ்விதம் உண்மையற்றதாகுமோ அது போலவே மேற்கத்திய நாடுகள் இந்தியாவை அழைப்பதும் உண்மையற்றதாகும். பிற நாடுகளைச் சுரண்டும் கொள்கையையும் ஒழுக்கக் கேடான வகையில் லாபம் அடைவதையும் முதலில் அந்நாட்டினர் கைவிடட்டும்."

காஷ்மீரில் நடந்த ஒழுக்கப் புனர்ப்பல முகாமுக்குக் காந்திஜியை அழைத்திருந்தார்கள். அந்த அழைப்பில் ஓர் ஐ. ஸி. எஸ். அதிகாரியும், ஒரு ராணுவ தளபதியும், ஒரு நீதிபதியும் கையெழுத்திட்டிருந்தார்கள். இங்கே காந்திஜி கூறியிருக்கும் விஷயத்தைக் குறித்து இவர்கள் சிந்திப்பார்களா என்று ஆச்சரியப்படுகிறேன். சாம்ராஜ்யத்திலிருந்தும், அது எதற்காக இருக்கிறதோ அவைகளிலிருந்தும் தாம் விலகிக் கொள்ளாமல் இருக்கும்போது சமாதானத்திற்காக ஒருவர் எப்படிப் பாடுபட முடியும்? ஸ்ரீ சார்லஸ் ரோடன் பக்ஸ்டன்

வருமாறு கூறியிருக்கிறார் : "பிரிட்டிஷ் சாம்ராஜ்யம், இப்பொழுது இருக்கும் அதனுடைய தனியான முறையினாலும், தனது சாம்ராஜ்யச் சலுகை முறையினாலும் உலகம் முழுவதிலுமே பொறாமை, சந்தேகம், புகார்கள் ஆகியவை உண்டாவதற்குக் காரணமாக இருக்கிறது. ஆகவே, பிரிட்டிஷ் சாம்ராஜ்யமே உலக சமாதானத்திற்கு இருந்துவரும் மிகப் பெரிய முட்டுக்கட்டை."

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது.]

சேவா கிராமம், 7—8—1939. – 'ஹரிஜன்' – 12—8—1939

# 33

# வரப்போகும் நெருக்கடி

"தயை கூர்ந்து ஏதாவது செய்யுங்கள். நீங்கள் வழி காட்டுவீர்கள் என்று உலகம் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறது" என்று ஒரு சகோதரி லண்டனிலிருந்து 24-ஆம் தேதி தந்தியடித்திருக்கிறார். லண்டனிலிருந்து மற்றொரு சகோதரியிடமிருந்து இன்று வந்திருக்கும் தந்தி கூறுவதாவது : "பலாத்காரத்தினால் பயனில்லை என்ற நியாயத்தில் உங்களுக்கு இருக்கும் அசைக்க முடியாத நம்பிக்கையை ஆளுவோருக்கும் எல்லா நாட்டு மக்களுக்கும் உடனே எடுத்துக் கூறுமாறு உங்களை வற்புறுத்துகிறேன்.'' ஏற்படப்போகும் உலக நெருக்கடி, சில நாடுகளை மாத்திரமேயன்றி மனித வர்க்கம் முழுவதன் சுகத்தையும் பாதிக்கிறது. ஆனால், இதைப்பற்றி நான் எதுவும் கூறாமல் தயங்கி வந்தேன். யுத்தம் ஏற்படுவதா அல்லது சமாதானம் இருப்பதா என்பதை முடிவு செய்ய வேண்டியவர்களாக இருப்பவர்களிடம் என் வார்த்தையால் எந்தப் பயனும் இராது என்பதை உணர்ந்தேன். என் வார்த்தைக்கு மதிப்பு இருக்கும் என்று மேற்கத்திய நாடுகளிலிருக்கும் பலர் நம்புகிறார்கள் என்பதையும் அறிவேன். அதே நம்பிக்கை எனக்கும் இருக்க வேண்டும் என்றே நானும் விரும்புகிறேன். ஆனால், அந்த நம்பிக்கை எனக்கு இல்லாததனால் யுத்த ஆபத்திலிருந்து நம்மைக் காக்க வேண்டுமென அந்தரங்கத்தில் கடவுளைப் பிரார்த்தித்துக்கொண்டிருக்கிறேன். எனினும், அகிம்சைக்கு மற்றொரு சொல்லான நியாயத்தில் எனக்கு இருக்கும் நம்பிக்கையை மீண்டும் எடுத்துக் கூறுவதில் எனக்கு எந்த விதமான தயக்கமும் கிடையாது. தகராறுகளைத் தீர்த்துக் கொள்ளுவதற்கோ அல்லது தவறுகளுக்குப் பரிகாரம் தேடிக்

கொள்ளுவதற்கோ யுத்தத்தை மேற்கொள்ளுவதைவிட நியாயமே மேல். பலாத்காரத்தைக் கொண்டு என் சொந்த நாட்டின் சுதந்திரத்தைப் பெற்றுவிடலாம் என்பது சாத்தியமாகவே இருந்தாலும் அப்படிச் சுதந்திரத்தை விலைக்கு வாங்க மாட்டேன். இதைச் சொல்லுவதைவிட என் நம்பிக்கையை நான் இன்னும் அதிக பலமாக வற்புறுத்திவிட முடியாது. வாளால் பெற்றது வாளாலேயே அழிந்துவிடும் என்ற அறிவு செறிந்த முதுரையில் எனக்கு இருக்கும் நம்பிக்கை அழியாதது. ஹிட்லர் கோருபவை சமரச மத்தியஸ்தர்களினால் ஆராயப்படும். இந்த மத்தியஸ்தர்களைத் தேர்ந்தெடுப்பதில் மற்றவர்களுக்கு எவ்வளவு உண்டோ அவ்வளவு ஹிட்லருக்கும் உரிமை இருக்கும் என்று அமெரிக்க ஜனாதிபதி விடுத்திருக்கும் கோரிக்கையை ஹிட்லர் அங்கீகரிப்பார் என்றே ஆவலுடன் இருக்கிறேன்.

சேவா கிராமம், 28—8—1939 'ஹரிஜன்' – 2—3—1939

# 34

# வீரப் போலந்தினருக்கு

மார்கஸ் (சுவிட்ஜர்லாந்து) லிலிருந்து வயதானவரும், போலந்துக் குடியரசின் முன்னாள் தலைவரும், சிறந்த பியானோ வித்துவானுமாகிய பெதரவிஸ்கியிடமிருந்து காந்திஜிக்குக் கீழ்வரும் தந்தி வந்தது :

" சுதந்திரமாக இருக்க வேண்டும் என்ற தெய்விக உரிமையைப் பாதுகாப்பதற்காக, இன்னதெனப் புரியாத கொடுமையுடன் இன்று போராடிக்கொண்டிருக்கும் ஒரு நாட்டு மக்களின் சார்பாக உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.* உலகி

* 1939 செப்டம்பர் 1-ஆம் தேதி ஜெர்மன் படைகள் போலந்திற்குள் புகுந்தன. போலந்து மக்கள் இரண்டு வாரங்கள் வீரமாகப் போராடினர்; ஆனால் செப்டம்பர் 17-ஆம் தேதி போலந்தின் எதிர்ப்புச் சிதைந்துவிட்டது. வீரப் போலந்தினர் நடத்திய அப்போரே இக்கடிதத்தில் குறிப்பிடப்படுவதாகும். போலந்து மக்கள் நீண்டகாலமாகவே துன்பம் அனுபவித்து வந்திருக்கின்றனர். ருஷியா, பிரஷ்யா, ஆஸ்திரியா ஆகிய நாடுகளுக்கிடையே முறையே 1772, 1793, 1795 ஆகிய ஆண்டுகளில் போலந்து மும்முறை பங்கு போடப்பட்டது. முதல் உலக யுத்தம் காரணமாக அந்தப் போர் முடிவில் 1918-இல் போலந்து குடியரசு நாடாயிற்று. ருஷியா, ஆஸ்திரியா, ஜெர்மனி ஆகிய நாடுகளில் போலிஷ் மொழி பேசும் மக்கள் வாழ்ந்த பகுதிகளையும், இச்சிறுபான்மையினர் வாழ்ந்த பகுதிகளையும் கொண்டதாகவே போலந்துக் குடியரசு அமைக்கப்பட்டது. பிறகு அதை ஜெர்மனி ஆட்சேபித்து, போஸ்னன் மாகாணமும் அதை அடுத்த சில பகுதிகளும் தனக்கு வேண்டும் என்றது. தனது நாட்டின் உக்ரேனில் சில பகுதிகளைப் போலந்தில் சேர்த்துவிட்டார்கள் என்று ருஷியாவுக்கு ஆத்திரம். என்றாலும், போலந்துக் குடியரசு, பிரான்சுடன் தனக்கிருந்த உறவின் பலத்தை நம்பி

லேயே மிகப் பெரிய ஒழுக்க வல்லவர்களில் நீங்களும் ஒருவர். போலந்துக்கு உங்கள் நாட்டினரின் அனுதாபமும் நட்பும் கிடைப்பதற்கு உங்களுடைய உயர்வான செல்வாக்கை உபயோகிக்க வேண்டும் என்று கோருகிறேன். போலந்தின் இரண்டாயிரம் ஆண்டு வரலாற்றைப் பார்த்தால் உயர்ந்த மனிதத்தன்மைக்காகவும், தருமத்திற்காகவும், நீதிக்காகவும், சமாதானத்திற்காகவும் அது பாடுபட்டு வந்திருக்கிறது என்பது தெரியும். ஒரு பாவமும் அறியாத எண்ணற்ற பெண்களும் குழந்தைகளும் தினந்தோறும் படுகொலை செய்யப்பட்டு வரும் இந்தப் பயங்கரமான நேரத்தில், உங்கள் சொந்த நாட்டினருக்குப் பெரிய போதகரான உங்களிடம் இருந்து வரும் அனுதாபத்தோடு கூடிய, உற்சாகமளிக்கும் ஒரு சொல், போலந்து மக்கள் ஒவ்வொருவருடைய உள்ளத்தையும் கவரும்.''

இதற்குக் காந்திஜி அனுப்பிய பதிலாவது :

" தங்களுடைய சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்காகச் சமபலமில்லாததான இப்போரில் ஈடுபட்டிருக்கும் போலந்து மக்களிடமே என் முழு உள்ளமும் இருந்து வருகிறது. ஆனல் என் சொல்லுக்கு எந்தச் சக்தியும் இல்லை என்பதை வருத்தத்துடன் நான் உணர்ந்தே இருக்கிறேன். ஐரோப்பாவில் நடக்கும் இப்பைத்தியக்காரத்தனமான அழிவை நிறுத்தும் சக்தி எனக்கு இருந்தால் நல்லது என்றே நான் விரும்புகிறேன். தன் சுதந்திரத்தை இழந்து, உலகில் மிகப் பெரியதான ஓர் ஏகாதிபத்திய வல்லரசின் தளையிலிருந்து விடுபடப் போராடிக்கொண்டிருக்கும் ஒரு நாட்டைச் சேர்ந்தவன் நான்.

---

இருந்தது. 1934-இல் ஜெர்மனியும் போலந்தும் 10 ஆண்டுகளுக்கு ஒன்றை ஒன்று ஆக்கிரமிப்பதில்லை என்று ஒப்பந்தம் செய்துகொண்டன. 1938 அக்டோபரில் ஜெக்கோஸ்லோவாகியாவின் சில பகுதிகளை ஜெர்மனி அபகரித்துக்கொண்டதும் இக் கொள்ளையில் பங்கு கொள்ள ஹிட்லர் போலந்தையும் அனுமதித்தார். இப்படி அனுமதித்ததற்குப் பதிலாகப் போலந்து தனக்கு டான்சிக்கையும் இடைவெளிப் பகுதியையும் கொடுக்கவேண்டும் என ஹிட்லர் 1939 மத்தியில் கேட்டார். பிரிட்டனும் பிரான்சும் போலந்துக்கு உத்தரவாதம் கொடுக்க முன்வந்தன. போலந்தும் அதை ஏற்றுக்கொண்டது. இந்நிலையிலேயே செப்டம்பர் 1-ஆம் தேதி நாஜிப் படைகள் போலந்திற்குள் புகுந்தன. இரண்டு நாட்கள் கழித்து பிரிட்டனும் பிரான்சும், ஜெர்மனி மீது யுத்தப் பிரகடனம் செய்தன. ஆனல் இந்நாடுகளால் போலந்துக்கு நேரடியான உதவி அளிக்க முடியவில்லை. இரு வாரங்களில் போலந்து தோல்வியடைந்தது. ஆனல் வீரப் போலிஷ் மக்கள் சுதந்திர ஆவேசத்துடன் நாஜிப் படைகளை எதிர்த்துக் கடைசி வரை போராடினர். நாஜிப் படைகள் அங்கே செய்த அட்டூழியங்கள் சொல்லி முடியாதவை. போலிஷ் தலைநகரான வார்ஸா ஒரு மாத காலம் போராடி அக்டோபர் 1-ஆம் தேதியே நாஜிகளிடம் பிடிபட்டது. ஜெர்மன் – போலிஷ் யுத்தம் நடந்துகொண்டிருந்த போது ருஷியப் படையினரும் போலந்திற்குள் புகுந்து அந்நாட்டில் தங்கள் பகுதியெனத் தாம் கூறி வந்த இடங்களைப் பிடித்துக்கொண்டனர்.

இழந்துவிட்ட தனது சுதந்திரத்தைத் திரும்ப அடைவதற்காக அகிம்சை என்ற தனிச்சிறப்புடைய ஒரு முறையை அது அனுசரித்து வருகிறது. இம்முறை அதன் தகுதியை ஓரளவுக்கு நிரூபித்திருந்தாலும் லட்சியத்தை அடைவது இன்னும் தூரத்தில் இருப்பதாகவே தோன்றுகிறது. ஆகையால், வீரம் மிகுந்த போலந்து மக்களுக்கு நான் அனுப்பக்கூடியதெல்லாம், அவர்களுக்கு ஏற்பட்டிருக்கும் பயங்கரமான சோதனை சீக்கிரத்தில் முடிவடைய வேண்டும் என்றும், அவர்களுக்கு ஏற்பட்டிருக்கும் துன்பத்தை நினைத்தாலே நடுக்கமுற வேண்டியதாகிறதெனினும் அதைச் சகித்துக்கொள்ளுவதற்கான பலத்தை அவர்களுக்கு அளிக்க வேண்டும் என்றும் மனமார நான் செய்து கொள்ளும் பிரார்த்தனையேயாகும். அவர்கள் லட்சியம் நியாயமானது; அவர்களுடைய வெற்றி நிச்சயமானது. ஏனெனில், என்றுமே நீதியை வழங்குபவர் கடவுளே.''

சேவா கிராமம், 8—9—1939 —'ஹரிஜன்'—16—9—1939

# 35

# ஒரு போலந்து சகோதரியின் வேதனை

'' என்னவானாலும்சரி போலந்துக்குள் போய்விட நான் முயற்சி செய்யப் போகிறேன். இன்றிரவு ஈராக்கிலுள்ள பஸ்ராவுக்குக் கப்பலேறிப் போகிறேன். பிறகு துருக்கி, ருமேனியா வழியாகப் போவேன். என் உள்ளக் கூப்பாட்டைப் புறக்கணிக்க முடியாது. சாதாரண மனித எண்ணத்தோடு பார்த்தால் இது பைத்தியக்காரத்தனம் என்றே தோன்றும். என்னுடைய தாயாருக்காக நான் போகவில்லை. என்னுடைய அருமையான நண்பர்கள் இப்பொழுது போர்க்களத்தில் எந்த நேரத்திலும் சாவதற்குத் தயாராக இருந்து வருகின்றனர். இது போலந்துக்காகவே. இவர்களுக்காகவும் நான் போகவில்லை. நாடுகளுக்கும் ஆத்மாக்கள் உண்டு என்று நான் நம்புகிறேன். நாடுகளுக்கு ஆத்மா உண்டு என்பது என்வரைக்கும் உண்மையானதேயன்றி ஒரு தத்துவம் அல்ல. போலந்து மண்ணில் கால்வைத்து, நான் நேசிப்பவர்களை நான் காணாதுபோயினும், எனக்குத் திருப்தியே ஏற்படும். நாட்டின் ஆத்மாவே (அதன் உடலும்) பெருந் தியாகத்துக்காக மடியும் ஒரு நெருக்கடியில் இப்பொழுது இருக்கிறது. போலந்து, தன்னுடைய உரிமைகளுக்காக மாத்திரமன்றி, இந்தியா உள்பட எல்லா நாடுகளின் உரிமை, நியாயம், உண்மை, சுதந்திரத்திற்காகவுமே ரத்தத்தைச் சிந்துகிறது; போராடுகிறது. என் உள்ளத்தின் ஆழத்தில் நான் ஹிந்துவாக உணருகிறேன். போலந்தும் சரி, இந்தியாவும் சரி இரு தாய்நாடுகளும் என் வாழ்வின் இறுதிநாள் வரை என் ஆத்மாவில் இருந்து வரும். இப்பொழுது ரத்தம் சிந்தும் வேதனையில் துடிக்கும் தாயின் பாதங்களை அடைவதற்கு மனித யத்தனத்தில் சாத்தியமானதையெல்லாம் நான் செய்யவில்லையாயின், நான் உயிர் வைத்திருக்க முடியாது. வழியிலிருந்து எழுதுகிறேன். போர் நடக்கும் பகுதியை அடைந்த பிறகு எழுத முடியாது. உங்களைப்

பற்றி அடிக்கடி எண்ணி, என்னால் முடிந்தவரையில் எண்ணத்தின் மூலம் உங்களுக்குச் செய்தி அனுப்பிக்கொண்டிருக்கவே முடியும். பாபுஜி! போலந்தில் தாங்கொணாத வேதனையையும் துன்பத்தையும் அனுபவித்துக்கொண்டு வரும் ஒரு பாவமும் அறியாத ஆயிரக்கணக்கான மக்களுக்காக அன்பு நிறைந்த உங்கள் உள்ளத்தின் முழுத் தீவிரத்துடன் பிரார்த்தியுங்கள். மிகுந்த அனுதாபமும், ஆசீர்வாதமும், அன்போடு கூடிய எண்ணமும் இவர்களுக்கே மிகவும் தேவையாகும்."

இது ஒரு போலந்து சகோதரியின் கடிதம். இதைப் பம்பாய்த் துறைமுகத்திலிருந்து எழுதியிருக்கிறார். பல ஆண்டுகளாக நான் அவரை அறிவேன். அவர் எவ்வளவு போலந்துக்காரரோ அவ்வளவு இந்தியரும் ஆகிவிட்டார். மகன்வாடியில் மகன் காட்சிச்சாலையில் வேலை செய்வதென முடிவு செய்திருந்தார். ஆனால், போரைப் பற்றிய வதந்திகள் அவரைக் கலக்கி விட்டன. அவருடைய வயதான தாய் போலந்தில் இருக்கிறார். பாஸ்போர்ட் கஷ்டங்களினால் அவரை அழைத்துக்கொண்டு வர முடியவில்லை. யுத்தமே ஆரம்பமாகிவிட்ட பிறகு அவருடைய தாயாரைப் பொறுத்தவரையில் அவர் அமைதியாகிவிட்டார். ஆனால், தீவிரமான உணர்ச்சியுடையது அவருடைய சுபாவம். தமக்கு நெருங்கியவர்களும் அன்பானவர்களும், அவர்கள் செய்த குற்றம் எதுவுமே இல்லாதிருக்கும்போது உயிருக்கே அபாயமான நிலையில் இருப்பதைப் பார்த்து அவரால் சும்மா இருக்க முடியவில்லை. அவர் அகிம்சையில் முற்றும் நம்பிக்கையுள்ளவர். அவருடைய அகிம்சையே அவரை அமைதியற்றவராக்குகிறது. தம்முடைய தாய்நாட்டுக்குத் தீங்கு செய்யப்படுகிறது என்று எண்ணுகிறார். இதனால், அந்தத் தவறுதலை எதிர்த்து அவருடைய முழு ஆத்மாவும் கிளர்ந்தெழுகிறது. ஆகையால், தமது கற்பனையிலுள்ள போலந்து, தம்முடைய சுதந்திரத்தைப் பாதுகாத்துக்கொள்ளுவதற்கேயன்றிச் சுதந்திரத்தை இழந்துவிட்ட நாடுகளின் விடுதலைக்காகவும், கடைசி வரை போராடுவதைக் காண இவர் அங்கே போயிருக்கிறார். இதில் அவர் இயற்கையாகவே தாம் இரண்டாவதாக நேசிக்கும் இந்தியாவையும் சேர்க்கிறார். அவருடைய கனவு உண்மையானதாக மாறட்டும். போலந்துக்கு அத்தகைய முழுவதுமான வீரமும், அதே போன்ற அளவு தன்னலமின்மையும் இருக்குமாயின், அந்நாடு தன்னைப் பலாத்காரத்தினால் பாதுகாத்துக்கொண்டது என்பதைச் சரித்திரம் மறந்துவிடும். அந்நாட்டின் பலாத்காரம் பெரும்பாலும் அகிம்சையாகவே கருதப்படும்.

சேவா கிராமம், 18-9-1939 —'ஹரிஜன்' - 23—9—1939.

# அன்னியர் படையெடுப்பு வந்தால்?

[இந்தியாமீது அன்னியர் படையெடுப்பு வந்தால் அப்பொழுது இந்தியா என்ன செய்யும்? பிரிட்டிஷார் இந்தியாவை விட்டுப் போய்விட்டால் போதிய ராணுவ பலமில்லாதிருக்கும் இந்தியா அன்னியர் படை யெடுப்புக்கு ஆளாகிவிடாதா? ஆரம்ப முதலே மகாத்மா காந்தியைப் பலர் இக்கேள்விகளைக் கேட்டு வந்திருக்கிறார்கள். அவற்றிற் கெல்லாம் அப்போதைக்கப்போது மகாத்மா கூறிவந்திருக்கும் பதில்கள் இந்தப் பகுதியில் சேர்த்துக் கொடுக்கப்பட்டிருக் கின்றன. இந்த இடத்தில் இப்பகுதி சேர்க்கப்பட்டிருப்ப தற்கு ஒரு முக்கியமான காரணம் உண்டு. இரண்டாவது உலக யுத்தம் ஆரம்பமான பிறகு யுத்த சம்பந்தமாகத் தான் அனுசரிக்க வேண்டிய கொள்கை இன்னது என்பதைக் காங்கிரஸ் சிந்திக்க வேண்டியதாயிற்று. இந்தியாமீதும் படை யெடுப்பு நடந்தால் அப்பொழுது என்ன செய்வது என்பதில் காந்திஜிக்கும் காங்கிரஸ் காரியக் கமிட்டிக்கும் அபிப்பிராய பேதம் உண்டாயிற்று. அப்பொழுதும் அகிம்சையையே அனுசரிக்க வேண்டும் என்பதில் மகாத்மா உறுதியுடன் இருந்தார். காரியக் கமிட்டி வேறுவிதமாக அபிப்பிராயப் பட்டது. அந்த மாறுபட்ட கருத்துக்களைக் குறித்து மகாத்மா எழுதியவை இதற்கு அடுத்தாற்போல் வரும் பகுதியில் கொடுக் கப்பட்டிருக்கின்றன. அன்னியர் படையெடுப்பு விஷயத்தில் அதற்கு முன்னும் மகாத்மா என்ன கருத்துக் கொண்டிருந் தார் என்பதை அப்பகுதியைப் படிக்கும் முன்பு வாசகர்கள் அறிவதற்கு வசதியாக இருக்கும் பொருட்டு இடையில் இப்பகுதி சேர்க்கப்பட்டிருக்கிறது.]

# 1

# சமாளித்துக்கொள்ள முடியும்

ஸ்ரீ ஸ்டோக்ஸ் கிறிஸ்தவர்; கடவுள் தமக்குக் காட்டும் ஒளியில் செல்ல விரும்புகிருர். இந்தியாவையே அவர் தமது தாயகமாகக் கொண்டுவிட்டார். அவர், இந்தியாவின் சம வெளிப் பகுதியிலிருந்து ஒதுங்கிக் கோத்தகிரி மலையில் இருந்து கொண்டு அங்குள்ள மலைச் சாதியினருக்குச் சேவை செய்து வருகிருர். அதோடு ஒத்துழையாமை இயக்கம் எப்படி நடக்கிறது என்பதையும் கவனிக்கிருர். கல்கத்தா 'செர்வென்ட்' பத்திரிகைக்கும் மற்றப் பத்திரிகைகளுக்கும் ஒத்துழையாமை இயக்கத்தைப்பற்றி மூன்று கட்டுரைகளை எழுதியிருக்கிருர். நான் வங்காளத்தில் சுற்றுப்பிரயாணம் செய்தபோது அந்தக் கட்டுரைகளைப் படிக்கும் ஆனந்தம் எனக்கு வாய்த்தது. ஒத்துழையாமையை ஸ்ரீ ஸ்டோக்ஸ் ஏற்றுக்கொள்கிருர். இதனால் முழு வெற்றி ஏற்பட்ட பிறகு, அதாவது பிரிட்டிஷார் இந்தியாவை விட்டு வெளியேறிவிட்டதும் உண்டாகக்கூடிய விளைவுகளைக் குறித்தே அவர் அஞ்சுகிருர். அப்பொழுது வடமேற்கிலிருந்து ஆப்கானியர் இந்தியாமீது படையெடுப்பார்கள், மலைகளிலிருந்து கூர்க்காக்கள் இறங்கி வந்து கொள்ளையடிப்பார்கள் என்று தமது மனத்தில் இத்தகையதோர் காட்சியை எழுப்பிக்கொள்கிருர். கார்டினல் நியூமன் கூறியிருப்பதையே நானும் சொல்லுகிறேன்: "பின்னல் வெகு காலத்திற்குப் பிறகு நடப்பதைப் பார்க்கவேண்டும் என்பது என் விருப்பமல்ல. ஓர் அடி முன்னல் எடுத்து வைத்தாலே எனக்குப் போதும்!" இயக்கம் முற்றிலும் தருமத்தின்மீது நிற்பது; அதன் விளைவு என்ன என்பதைப்பற்றியே சிறிதும் சிந்திக்காமல் தீமையிலிருந்து ஒதுங்கிவிட வேண்டியது, கடவுளுக்கு அஞ்சும் ஒவ்வொருவருடைய கடமையும் ஆகும். நல்ல காரியத்தைச் செய்வதனல் நன்மையே விளையும் என்பதிலும் நம்பிக்கை இருக்க வேண்டும். 'பயனைப்பற்றிக் கருதாமல் உன் காரியத்தைச் செய்' என்ற கீதையின் தத்துவமே அதுதான். எதிர்காலத்தை எட்டிப் பார்த்துவிடக் கடவுள் யாரையும் அனுமதிக்கவில்லை. சத்திய வழியில் நடப்பதால் தன் உயிருக்கே ஆபத்து நேருவதாக இருந்தாலும் சத்திய வழியையே பின்பற்ற வேண்டும். சைத்தான் வகுத்த வழியில் உயிர் வாழ்வதைவிடக் கடவுள் வழியில் சாவதே மேல் என்பதும் அப்படிப்பட்டவர்களுக்குத் தெரியும். ஆகையால், இந்தச் சர்க்கார் சைத்தானின்

வேலையையே செய்து வருகிறது என்பதைச் சந்தேகமறத் தெரிந்துகொண்டவர் ஒவ்வொருவருக்கும் இந்தச் சர்க்காரிட மிருந்து ஒதுங்கிவிடுவதைத் தவிர வேறு மார்க்கம் இல்லை.

பிரிட்டிஷார் திடீரென்று இந்தியாவிலிருந்து வெளியேறி விடுவதனல் இந்தியாவுக்கு என்ன மோசமான நிலைமைதான் உண்டாகிவிடக்கூடும் என்பதையும் யோசித்துப் பார்ப்போம். கூர்க்காக்களும் பட்டாணியர்களும் தாக்குவார்கள் என்ருல் அதனல் வந்துவிடும் மோசந்தான் என்ன? இப்பொழுதுள்ள சர்க்கார், உடல்மீதும் ஒழுக்கத்தின்மீதும் தொடர்ந்து செய்துவரும் பலாத்காரக் கொடுமையைச் சமாளிப்பதற்கு நமக்குள்ள திறமையைவிட அப்பொழுது நமக்கு அதிகத் திறமை நிச்சயம் இருக்கும். உடல் பலத்தை உபயோகிப் பதையே ஸ்ரீ ஸ்டோக்ஸ் வெறுப்பதாகத் தெரியவில்லை. ஆகவே, எப்பக்கத்திலிருந்தோ அல்லது எல்லாத் திக்குகளிலுமிருந்தோ வரும் கொள்ளைக்காரர்களைச் சமாளித்துவிட ஒன்றுபட்ட இந்தியாவின் ராஜபுத்திர, சீக்கிய, முஸல்மான் யுத்த வீரர் களின் கூட்டு உழைப்பினல் நிச்சயமாக முடியும். இன்னும் அதிக மோசமான காரியங்களே நிகழ்ந்துவிடுவதாக வைத்துக் கொள்வோம்: வங்காள விரிகுடாவிலிருந்து ஜப்பானியர் நம் மைத் தாக்குகின்றனர்; மலைகளிலிருந்து கூர்க்காக்களும், வட மேற்கிலிருந்து பட்டாணியரும் படையெடுக்கின்றனர். அவர் களை வெளியில் விரட்டியடித்து விடுவதில் நாம் வெற்றி பெருது போனல் அவர்களுடன் அப்பொழுது சமரசம் செய்துகொண்டு பிறகு முதல் சந்தர்ப்பம் கிடைத்ததுமே விரட்டிவிடுவோம். முற்றிலும் தவருனதான ஓர் ஆட்சிக்குத் தாழ்ந்து பணிந்து கிடப்பதைவிட இதுவே அதிக ஆண்மையுள்ள காரியம்.

ஆனல், அப்படிப்பட்ட பயங்கரச் சூழ்நிலை வரும் என்பதை எண்ணவும் நான் மறுக்கிறேன். அகிம்சையோடு கூடிய ஒத்துழை யாமை இயக்கம் வெற்றி பெறும் என்ற கருத்திலேயே ஸ்ரீ ஸ்டோக்ஸ் ஆரம்பிக்கிருர். அப்படி அந்த இயக்கம் வெற்றி பெறுமானல், ஆங்கிலேயர் இங்கு இருந்தாலும் அல்லது வெளி யேறினலும், நண்பர்கள் என்ற முறையில் இரு பங்காளிகளுக்கும் ஏற்படக்கூடிய ஒரு நியாயமான ஒப்பந்தத்தின் பேரிலேயே அவ்விதம் செய்வார்கள். ஆங்கிலேயராயினும் சரி, வேறு யாரா யிருப்பினும் சரி, மனித சுபாவத்தில் நல்லதும் இருக்கிறது என்பு தில் இன்னும் எனக்கு நம்பிக்கை உண்டு. ஆகையால், பிரிட் டிஷார் 'ஒரே இரவில்' விட்டுவிட்டுப் போய்விடுவார்கள் என்று நான் நம்பவில்லை.

கூர்க்காக்களும் ஆப்கானியரும் திருந்தவேமுடியாத திருடர்களும் கொள்ளைக்காரர்களும் என்றோ, புனிதமாக்கும் சக்தி அவர்களிடம் பலிக்காது என்றோ நான் எண்ணுகிறேனா? இல்லவே இல்லை. இந்தியா தனது ஆத்ம உணர்வைப் பெற்றுவிடுமானால் அது பக்கத்தில் இருக்கும் மலை சாதியினரிடமும் பிரதிபலிக்கும். பலவான்களான, ஆனால் ஏழைகளான அம்மக்களின் நலன்களில் இந்தியா அக்கறை கொள்ளும். அவசியமானால் அவர்களை இந்தியா ஆதரிக்கவும் செய்யும். இது பயத்தினால் அல்ல; அக்கம் பக்கத்தில் இருப்போர் விஷயத்தில் தனக்குள்ள கடமையை முன்னிட்டே. பிரிட்டிஷாரையும் ஜப்பானியரையும் ஏக காலத்தில் இந்தியா சமாளித்துக்கொண்டுவிடும். தன் எல்லைக்குள் உற்பத்தி செய்துகொண்டுவிடக்கூடிய எந்த ஒரு சாமானுக்கும் பதிலாக ஓர் அன்னிய நாட்டுச் சாமானை உபயோகிப்பது பாபமான செய்கை என்று கருத இந்தியா கற்றுக்கொண்டுவிடுமானால், அதன் பிறகு இந்தியாமீது படையெடுக்க ஜப்பான் விரும்பாது. நமது சாப்பாட்டுக்குப் போதுமானவற்றை நாம் உற்பத்தி செய்துகொள்வோம். மானத்தை மறைத்துக்துக் கொள்வதற்கும், குளிர் முதலியறவற்றினின்று உடலைப் பாதுகாத் கொள்வதற்கும் போதுமான துணியை ஆண்களும் பெண்களும் அதிகக் கஷ்டமின்றியே தயாரித்துக்கொண்டு விடலாம். அன்னியரை எதிர்பார்த்து வாழ்கிறோம் என்ற ஓர் உணர்ச்சியுடன் அவர்களுடன் தொடர்புகொள்வதனால் அன்னிய நாட்டினருக்குப் பேராசையைக் கிளப்பிவிட்டு விடுவோமானால் நாம் படையெடுப்புக்கு இலக்காகவே நேரும். எந்த வெளிநாட்டையும் எதிர்பாராமல் சுயேச்சையாக வாழ நாம் தெரிந்துகொள்ள வேண்டும்.

ஆகையால், பலாத்காரத்தினாலோ அல்லது அகிம்சையினாலோ நாம் முடிவாக வெற்றி பெற்றுவிடுவதாயின், ஸ்ரீ ஸ்டோக்ஸ் ஊகித்துக்கொள்வதைப் போல, நிலைமை மோசமானதாக ஆகிவிடாது என்பதே என் அபிப்பிராயம். அப்பொழுது ஏற்படக்கூடிய நிலைமை எதுவானாலும், இப்பொழுது இருப்பதைப் போல அவ்வளவு ஆண்மையற்றதாகவும் கதியற்றதாகவும் இருக்காது என்பதும் என் கருத்து. எனவே, நமக்கென்று நாம் வகுத்துக்கொண்டிருக்கும் அகிம்சையும் தியாகமும் கொண்ட பகிரங்கமான, கண்ணியமான வேலைத் திட்டத்தை அச்சமின்றி நம்பிக்கையுடன் பின்பற்றுவதே சிறந்த காரியம்.

— 'எங் இந்தியா' - 20—12—1920.

# 2

# ஆப்கானியப் பூச்சாண்டி

ஒரு நிருபர் வரிசையாகப் பல கேள்விகளைக் கேட்டிருக்கிறார். இதில் முக்கியமானது ஆப்கானியப் படையெடுப்புப் பயத்தைக் குறித்து மௌலானா முகம்மது அலி பேசியிருப்பதைப் பற்றியது. நிருபர் குறிப்பிட்டிருக்கும் மௌலானா முகம்மது அலியின் பிரசங்கத்தை நான் படிக்கவில்லை. அவர் செய்கிறாரோ, செய்யவில்லையோ, என்னைப் பொறுத்தவரையில் ஆப்கானிஸ்தான அமீர் பிரிட்டிஷ் அரசாங்கத்தின்மீது போர் தொடுத்தால் நான் கட்டாயம் அவருக்கு உதவி செய்வேன். அதாவது, இந்நாட்டு மக்களின் நம்பிக்கையை இழந்துவிட்ட ஓர் அரசாங்கம் அதிகாரத்தில் இருந்து வர உதவி செய்வது ஒரு பெரிய குற்றமாகும் என்று இரு தேச மக்களுக்கும் பகிரங்கமாகக் கூறுவேன். அதே சமயத்தில், அமீருக்காகப் படை திரட்டி உதவும்படியும் இந்தியரைச் சொல்லமாட்டேன். ஏனெனில், கிலாபத், பாஞ்சாலம், சுயராஜ்யம் ஆகியவைகளுக்காக ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஏற்றுக்கொண்டிருக்கும் அகிம்சா தருமத்திற்கு அது விரோதமானதாகும். நான் கூறியிருப்பதற்கு அதிகமாகப் பொருட்படும் வகையில் மௌலானா முகம்மது அலி தமது பிரசங்கத்தில் எதுவும் கூறியிருக்க முடியாது என்றே நினைக்கிறேன். ஹிந்து-முஸ்லிம் இணக்கம் நிலைத்திருக்கும் வரையில் இதற்கு அதிகமாக அவர் எதுவும் செய்வதற்கும் இல்லை. இந்த இணக்கத்தை ரத்து செய்துகொண்டுவிட முஸ்லிம்களுக்கு உரிமை உண்டு. ஆனால், விஷயத்தைப் பரிசீலனை செய்தால் இணக்கம் கலைக்க முடியாதது என்பதைக் காணலாம். இந்த இணக்கம் சிதைந்துவிடுகின்றதென்றால், இந்தியாவின் காரியங்களே சிதைந்துவிடுகின்றன என்றே ஆகும். ஹிந்துக்களும் முஸ்லிம்களும் கூட்டாகச் சேர்ந்து ஆயுதப் புரட்சியில் இறங்குவது என்பது சமீப காலத்தில் சாத்தியம் என்று நான் கருதவில்லை. எந்தவித ஆயுதப் புரட்சியின் மூலமும் முஸ்லிம்களும் வெற்றியடைந்துவிடுவரென எதிர்பார்க்கவும் முடியாது.

என்றாலும், ஆப்கானியர் படையெடுப்பு வரும் என்ற பூச்சாண்டியை நம்பவேண்டாம் என்று வாசகருக்கு எச்சரிக்கை செய்கிறேன். பிரிட்டிஷ் ராணுவ எழுத்தாளர்கள் ரகசியத்தை நமக்கு முன்னடியே சொல்லியிருக்கிறார்கள். தண்டிப்பதற்கென்று நடத்தப்பட்ட பல படையெடுப்புகள் எல்லாம்

தங்களுடைய சிப்பாய்களுக்குப் பயிற்சி அளிக்கவும், சும்மா இருக்கும் சிப்பாய்களுக்கு ஏதாவது வேலை கொடுப்பதற்காக வுமே என்று கூறியிருக்கின்றனர். இந்தியா பலவீனமாக, நிரா யுதபாணியாக, கதியற்று, எதையுமே எளிதில் நம்பிவிடும் நிலையில் இருக்கிறது. ஆகையால், இந்த அரசாங்கம் எப்படித் தன்னை வசியம் செய்து வைத்திருக்கிறது என்பதை இந்தியா அறியாது. ராணுவச் செலவு அதிகரித்துக்கொண்டே வருவதற்குக் காரணம், வெளிநாட்டுப் படையெடுப்பிலிருந்து இந்தியாவைப் பாதுகாப்பதற்கே என்று, நம்மில் சிறந்தவர் களாய் இருப்பவர்கள்கூட, இன்று உண்மையில் நம்பிக்கொண் டிருக்கிறார்கள். சீக்கியர், கூர்க்காக்கள், பட்டாணியர், ராஜபுத் திரர்கள் ஆகியவர்களை நம்பாததனாலும், அதாவது, நம்மிடத்தில் நம்பிக்கை இல்லாததனாலும், பலவந்தமாக நம்மை அடிமைப் படுத்தி வைத்திருப்பதற்காகவுமே ராணுவச் செலவு அதிகரித்து வருகிறது என்று நான் கூறுகிறேன். அமீருடன் ஒரு சமரசத் திற்கு வந்துவிடப் பிரிட்டிஷ் அரசாங்கம் ஆவலுடன் இருப் பதற்குக் காரணம், இந்திய ராணுவத்தினரின் நம்பிக்கையை இழந்துவிட நேரும் என்ற பீதியேயன்றி ருஷியப் படையெடுப்பு வந்துவிடக்கூடும் என்ற அச்சத்தினால் அல்ல என்றே நான் நம்புகிறேன். (தவறாயின் திருத்திக்கொள்ளத் தயார்.) ருஷியப் படையெடுப்புப் பயம் இன்று நிச்சயமாக இல்லை. போல் ஷிவிக் அபாயம் என்பதை நான் என்றுமே நம்பியது கிடையாது. சமீபத்தில் வங்கத்தின் நாயகமணியாக விளங்கி யவர் உபயோகித்த வார்த்தைகளின்படி 'மக்களின் அன்பை அதிக அளவு அடிப்படையாகக்கொண்ட' ஓர் இந்திய அரசாங் கம், ருஷிய, போல்ஷிவிக் அல்லது வேறுவித அபாயங்களுக் காக அஞ்சுவானேன்? திருப்திகொண்ட, பலம் பொருந்திய இந்தியா, பிரிட்டனுடனும் சேர்ந்திருப்பதால், தன்மீது வரும் எந்தப் படையெடுப்பையுமே எளிதில் சமாளித்துக்கொண்டுவிட முடியும். ஆனால், இந்த அரசாங்கமோ வேண்டுமென்றே நம்மைப் பலவீனர்களாக்கியிருக்கிறது. பக்கத்து நாட்டாரிடமும் உலகத் திடமும் நாம் நிரந்தரமான பீதியடைய நம்மை வைத்திருக்கிறது. இந்தியாவின் அற்புதமான செல்வங்களையெல்லாம் உறிஞ்சி விட்டது. இதனால் தன்னைத் தானே பாதுகாத்துக்கொள்ளுவ திலோ அல்லது அதிகரித்துக்கொண்டே போகும் சாதாரண மான வறுமைப் பிரச்னையைச் சமாளிப்பதிலோ தன்னம்பிக் கையை இந்தியா இழந்துவிட்டது. ஆகையால், இந்த அரசாங் கத்துடன் அமீர் எந்தவிதச் சமரச உடன்பாட்டுக்கும் வரமாட் டார் என்றே நான் நிச்சயமாக நம்புகிறேன். அப்படி ஏதாவது

உடன்பாடு ஏற்படுவதாயிருந்தால், அது இஸ்லாத்திற்கும் இந்தியாவுக்கும் எதிராகச் செய்துகொண்ட, ஆண்டவனுக்கு அடுக்காத பேரமே ஆகும். 'அவசர' நடவடிக்கையாகக்கூட *ஓட்வயரிஸத்தைக் கைவிடத் தயாராயில்லாத இந்த அரசாங்கம், முஸ்லிம்களிடம் நம்பிக்கை வைக்காத இந்த ஆட்சி (இந்திய அரசாங்கத்தைப் பிரிட்டிஷ் சர்க்காரிலிருந்து வேருகப் பாவிக்க நான் மறுத்தே ஆகவேண்டும்), இந்தியா தன்னுடைய முழு உயர்வையும் அடைய அனுமதிக்க மறுத்துவரும் இந்த அரசாங்கம், இந்தியாவுக்கு எதிராக ஆப்கானிஸ்தானத்துடன் ராணுவ ஒப்பந்தம் செய்துகொள்ள விரும்புகிறது. ஒத்துழையாதாரைப் பொறுத்தவரையில் இதில் ஒரே ஓர் அபிப்பிரா

---

* 1919-இல் பஞ்சாபில் லெப்டினண்டு கவர்னர் ஸர் மைக்கேல் ஓட்வயர் ஆட்சியில் நடந்த ஜல்லியன்வாலா பாக் அட்டூழியம் போன்றவைகளையே காந்திஜி இங்கு 'ஓட்வயரிஸம்' எனக் குறிப்பிடுகிருர். பிரிட்டிஷ் அரசாங்கம் தமக்கு அளித்திருந்த 'கெய்ஸர்-இ-ஹிந்த்' பதக்கம் போன்ற விருதுகளை மகாத்மா காந்தி திருப்பி அனுப்பி வைஸ்ராய் லார்டு செம்ஸ்போர்டுக்கு 1920 ஆகஸ்டு 1–ஆம் தேதி எழுதிய கடிதத்தில் தாம் ஒத்துழையாமை இயக்கத்தை ஆரம்பிக்கப் போவதற்கான சமிக்ஞையைக் காட்டியதோடு ஸர் மைக்கேல் ஓட்வயர் ஆட்சியின் மீது தமக்கு இருந்த வெறுப்பையும் காட்டினுர். இதைப்பற்றிக் காந்திஜி தமது கடிதத்தில் கூறியதாவது :

"பஞ்சாப் பிரச்னை சம்பந்தமாக உங்கள் அரசாங்கமும் பிரிட்டிஷ் அரசாங்கமும் கொண்ட போக்கு எனது பெரும் அதிருப்திக்கு மேலும் காரணமாயிற்று. 1919 ஏப்ரலில் பஞ்சாபில் நடந்த கலவரங்களின் காரணங்களை விசாரிக்க நியமிக்கப்பட்ட காங்கிரஸ் கமிட்டியினர்களில் நானும் ஒருவன் என்பதை நீங்கள் அறிவீர்கள். பஞ்சாப் லெப்டினண்டு கவர்னர் பதவியை வகிக்க ஸர் மைக்கேல் ஓட்வயர் கொஞ்சமும் தகுதியற்றவர். அமிர்தசரஸில் பொது மக்கள் ஆத்திரமடைந்ததற்கு மூல காரணம் அவருடைய கொள்கையே என்பது என் கருத்து. பொது ஜனக் கூட்டம் அத்துமீறிச் செய்துவிட்டது மன்னிக்க முடியாதது என்பதில் சந்தேகமில்லை. தீயிட்டது, ஒரு பாவமும் அறியாத ஐந்து ஆங்கிலேயரைக் கொன்றது, கன்னி ஷெர்வுட்டைக் கோழைத்தனமாகத் தாக்கியது ஆகியவை வருந்தத் தக்கவை. ஆனுல், ஜெனரல் டயர், கர்னல் பிராங்க் ஜான்சன், கர்னல் ஒபிரயன், பாஸ்வொர்த் ஸ்மித், ராய் ஸ்ரீ ராம் ஸூத், ஸ்ரீ மாலிக் கான் ஆகியோரும் மற்ற அதிகாரிகளும் மேற்கொண்ட தண்டனை முறை, மக்கள் செய்த தவறுக்குப் பெரும் அளவு மிஞ்சியதாவதோடு இக்காலத்தில் கண்டே அறியாத, வேண்டுமென்றே செய்த கொடூரமும் மிருகத்தனமுமாகும். அதிகாரிகளின் தவறு விஷயத்தில் நீங்கள் அலட்சியமாக இருந்துவிட்டது, ஸர் மைக்கேல் ஓட்வயர் தவறு செய்யவில்லை என நீங்கள் கூறியது, மிஸ்டர் மாண்டேகுவின் அறிக்கை, எல்லாவற்றிற்கும் மேலாகப் பஞ்சாப் சம்பவங்களைப்பற்றிய வெட்கக்கேடான அறியாமையையும், இந்தியர் உணர்ச்சியை மதிக்காத மோசமான போக்கையும் லார்டுகள் சபை காட்டிக் கொண்டது ஆகியவை, சாம்ராஜ்யத்தின் எதிர்காலத்தைப்பற்றி எனக்குப் பயங்கரமான சந்தேகங்களை உண்டாக்கிவிட்டன; இப்பொழுதுள்ள ஆட்சியிடமிருந்தும் என்னை விரோதப்படுத்திவிட்டன. நான் இதுவரையில் முழுமனத்துடன் புரிந்து வந்த ஒத்துழைப்பை இனி அளிக்க முடியாதபடியும் செய்துவிட்டன........."

பிரிட்டிஷ் அரசாங்கத்தினிடம் தாம் கொண்டிருந்த நம்பிக்கை சிதைந்தவிதம் பற்றி காந்திஜி கோர்ட்டில் கொடுத்த வாக்குமூலத்தின் விவரமும் இச்சந்தர்ப்பத்தில் கவனிக்க வேண்டியதாகும்.

[இந்நூலில் அந்த வாக்குமூலத்தை 236–ஆம் பக்கத்தில் காண்க.]

யமே உண்டு என்று நான் நம்புகிறேன். நாமே ஒத்துழைக்க விரும்பாதபோது அரசாங்கத்துடன் மற்றவர்கள் ஒத்துழைக்க வேண்டும் என்று நாம் விரும்ப முடியாது.

—'எங் இந்தியா', — 4—5—1921.

# 3

# நம் அண்டையிலுள்ளவர்கள்

'ஆப்கானியப் பூச்சாண்டி' என்ற என் கட்டுரை, இந்தியாவின்மீது படையெடுக்கும்படி ஆப்கானியரை அழைப்பதாகாதா? இதன்மூலம் பலாத்காரத்திற்கு நானே உடந்தையாகி விடுகிறேன் அல்லவா? - ஸ்ரீ ஆண்ட்ரூஸ் இவ்விதம் கூறுகிறார். என்னுடைய கட்டுரை இந்தியருக்காகவும், அரசாங்கத்திற்காகவும் எழுதப்பட்டது. என் கட்டுரையை ஆதாரமாக வைத்துக்கொண்டு இந்தியாமீது படையெடுத்துவிடும் அளவுக்கு ஆப்கானியர் முட்டாள்களாக இருப்பார்கள் என நான் நம்பவில்லை. எனினும், ஸ்ரீ ஆண்ட்ரூஸ் கூறுவதைப் போன்ற வியாக்கியானம் செய்துகொள்வதற்கும் இடந் தருவதாக அக்கட்டுரை இருக்கிறது என்பதைக் காண்கிறேன். ஆகையால், சம்பந்தப்பட்ட எல்லோருக்குமே உடனே ஒன்றைத் தெரிவித்துக் கொண்டு விடுகிறேன். ஆப்கானியரையோ அல்லது வேறு யாரையுமோ நம் உதவிக்கு அழைக்க நான் விரும்பாததோடு, நம் உதவிக்கு அவர்கள் வந்துவிடக்கூடாது என்றும் அவர்களுக்காகக் கவலைப்படுகிறேன். வெளியாரின் உதவி இல்லாமலேயே அரசாங்கத்துடன் காரியங்களைத் தீர்த்துக்கொள்ளக் கூடிய ஆற்றல் இந்தியாவுக்கு உண்டு என்பதில் எனக்கு அதிக நம்பிக்கை உண்டு. மேலும், நமது லட்சியத்தை அகிம்சை முறை ஒன்றைக்கொண்டே அடைந்துவிடுவது முற்றிலும் சாத்தியம் என்பதை நிரூபிக்க வேண்டும் என்பதில் நான் அதிக சிரத்தையுடன் இருக்கிறேன். ஆகவே, இந்திய எல்லைக்குள் ஆப்கானியர் நுழையாதபடி பார்க்க என்னால் இயன்றனவெல்லாம் செய்வேன். ஆனால், ஆப்கானியர் நம் எல்லைக்குள் நுழைந்துவிடாதபடி தடுப்பதில் நான் காட்டும் அக்கறை, ஆள் மூலமும் பணம் மூலமும் அரசாங்கத்திற்கு உதவும் அளவுக்குப் போய்விடாது.

என் நிலைமையை முடிந்த வரையில் தெளிவுபடுத்தி என் கட்டுரையில் எழுதியிருக்கிறேன். இப்பொழுதுள்ள அரசாங்கத்தை நான் சகித்துக்கொண்டிருக்கவே முடியாது. இந்தியா

வின் மனிதத்தன்மைக்கே இந்த அரசாங்கம் பெரிய ஆபத்து. எந்த விதத்திலாவது அது மாற்றியமைக்கப்படுவதை நான் வரவேற்பேன். இது கடவுளற்ற அரசாங்கம் என்பது என்னுடைய திடமான முடிவு. நல்ல ஆங்கிலேயரும், நல்ல இந்தியருங்கூட அதில் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள் என்பதே, இந்த அரசாங்கத்தை இந்தியாவுக்கு இன்னும் அதிக ஆபத்தானதாக்குகிறது. அதனிடம் இருக்கும் தீமை, மக்களின் கண்ணுக்குப் புலனாகாதபடி இது செய்துவிடுகிறது. தனிப்பட்டவர்களை நான் எதிர்க்கவில்லை. முறையையும், அம்முறையைக் கொண்ட அரசாங்கத்தையுமே நான் கண்டிக்கிறேன். இந்த முறையிலுள்ள விஷத்தைப் போக்க வைசிராய்களில் சிறந்து விளங்கியவர்களாலும் முடியாமல் போயிருக்கிறது. இதன் அடிப்படையே விஷந்தான். ஆகையால், இப்பொழுதுள்ள ஆட்சி முறைக்குப் பதிலாக இந்தியாவுக்கு என்னதான் மோசமான நிலைமை நேர்ந்தாலும் அதையும் சகித்துக்கொள்வேன்.

என்றாலும், நான் என்ன செய்வேன் என்பது வேறு, என்னால் என்ன செய்ய முடியும் என்பதும் வேறு. சமயம் வரும்போது அரசாங்கத்திற்கு உதவியை மறுத்துவிடும் துணிச்சலைச் சிப்பாய்களுக்கு உண்டாக்கும் வகையில் அவர்கள்மீது பிடிப்பை இயக்கம் இன்னும் பெறவில்லை என்பதை ஒப்புக்கொள்ள வேண்டியிருப்பதற்காக வருந்துகிறேன். அவர்கள் வாழ்வு நாட்டிற்காகவே என்பதையும், இன்னொருவர் உத்தர விடுகிறார் என்பதற்காகக் கொல்லுவது என்பது போர்வீரர்களின் தருமத்திற்கே விரோதமானது என்பதையும் சிப்பாய் வர்க்கத்தினர் என்று உணர்ந்துகொண்டு விடுகின்றனரோ அப்பொழுதே இந்தியாவின் சுதந்திரப் போர் உலகத்தில் வெற்றி பெறும். இப்பொழுதோ சாதாரண மக்கள் எப்படிப் பயந்துகொண்டிருக்கிறார்களோ அப்படியேதான் இந்தியச் சிப்பாய்களும் பயந்துகொண்டிருக்கின்றனர். பிழைப்புக்கு வேறு வழியில்லை என்று எண்ணுவதால் படையில் சேருகிறார்கள். விசேஷச் சம்மானங்களை அளிக்கும் ஒரு முறையின் மூலம் கொல்லும் வேலையை அரசாங்கம் கவர்ச்சிகரமானதாகச் செய்திருக்கிறது; சாமர்த்தியமாக வகுத்திருக்கும் தண்டனைகளின் மூலம், ஒருமுறை ராணுவத்திற்குள் போய்விட்ட எந்தச் சிப்பாயும் கஷ்டமின்றி வெளியேற முடியாதபடி கடினமாக்கியிருக்கிறது. இந்த நிலைமையில், உடனடியாக ஆப்கன் படையெடுப்பு நேர்ந்தால் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு இந்திய உதவியே இருக்காது என்று கருதி

என்னை நானே ஏமாற்றிக்கொள்ள நான் விரும்பவில்லை. ஆனால், முக்கியமாகச் சவால் வரும்போது, ஒத்துழையாமையினால் ஏற்படும் நிலைமை இன்னது என்பதைத் தேசத்திற்கு எடுத்துக்கூற வேண்டியது என் கடமையாக இருந்தது. ஆப்கானியப் பூச்சாண்டி காட்டப்படுவதைக் கண்டு அஞ்சிவிட வேண்டாம் என்று தேச மக்களுக்கு எச்சரிக்கை செய்யவேண்டியது அவசியமாயிற்று.

கேள்வியின் இரண்டாவது பகுதி, அகிம்சையைப்பற்றிய ஒரு தவறான கருத்தைக் கொண்டது என்பதே என் அபிப்பிராயம். அரசாங்கத்தின்மீது மற்றவர்கள் போர் தொடுக்கும் போது அந்த அரசாங்கத்திற்கு உதவி செய்யவேண்டும் என்பதும் சாத்துவிக ஒத்துழையாதாரின் கடமைகளில் ஒன்றாகாது. சாத்துவிக ஒத்துழையாதார், பகிரங்கமாகவோ அல்லது ரகசியமாகவோ அத்தகையதோர் போரை உற்சாகப்படுத்தாமலோ அல்லது அதற்கு உதவி செய்யாமலோ இருக்கலாம். நேர்முகமாகவோ அல்லது மறைமுகமாகவோ அப்போரில் தாம் சம்பந்தப்படாமலும் இருக்கலாம். ஆனால், யுத்தத்தை முடிக்க அரசாங்கத்திற்கு அவர் உதவி செய்யவேண்டும் என்பதும் அவர் கடமையாக மாட்டாது. இதற்கு நேர்மாறாக, எந்த ஆட்சியைத் தாம் நாசமாக்கவேண்டும் என்று முற்பட்டிருக்கிறாரோ அந்த ஆட்சி தோல்வியடையவேண்டும் என்பதே அவருடைய பிரார்த்தனையாக இருக்கும்; அப்படித்தான் இருக்கவும் வேண்டும். ஆகையால், என்னுடைய அகிம்சா தருமத்தைப்பற்றிய வரையில் ஆப்கன் படையெடுப்பைக் குறித்தும், அதே மாதிரி இந்தியாவின் பாதுகாப்பைக் குறித்தும் சஞ்சலமற்றவனாகவே இருப்பேன். ஆப்கானியருக்கு இந்தியாவுடன் எந்த விதத் தகராறும் கிடையாது. அவர்கள் கடவுளுக்குப் பயந்து நடப்பவர்கள். பம்பாயிலும் கல்கத்தாவிலும் பார்க்கும் ஒரு சில காட்டுமிராண்டிகளை மாதிரியாக வைத்துக்கொண்டு எல்லா ஆப்கானியரும் அப்படித்தான் இருப்பார்கள் என மதிப்பிட்டு விடவேண்டாம் என்று ஒத்துழையாதாரை எச்சரிக்கை செய்கிறேன். எல்லைப்புறத்தில் இருக்கும் பிரிட்டிஷ் காவற்படையை எடுத்துவிட்டால் அவர்கள் இந்தியாவையே பிடித்துக்கொண்டு விடுவார்கள் என நினைப்பது ஒரு மூடநம்பிக்கை. அவர்கள் விரும்பினால், இந்தியாமீது அவர்கள் படையெடுத்து வருவதைத் தடுக்கக்கூடியது இன்று எதுவுமே கிடையாது என்பது நம் நினைவில் இருக்கவேண்டும். நம் நாட்டின்மீது நமக்கு எவ்வளவு பக்தி உண்டு என்று நாம் கூறிக்கொள்ளுகிறோமோ அவ்வளவு

பக்தி அவர்களுக்கும் தங்கள் நாட்டின்மீது உண்டு. எல்லைப் புறத்திற்கு அருகில் இருப்பவர்களின் கடினமான பிரச்னையைக் குறித்துப் பரிசீலனை செய்ய நான் ஒரு தனிக் கட்டுரையே எழுத வேண்டும்.

—' எங் இந்தியா ' - 18-5-1921.

# 4

# எல்லைப்புற நண்பர்கள்

எல்லைப்புறத்தில் வசிக்கும் பஞ்சாபிகளுக்கு முழு இந்தியாவின் அனுதாபமும் உரியது. பக்கத்தில் இருக்கும் மலைச்சாதியினர் தாக்கும் அபாயம் அவர்களுக்கு இருக்கிறது; தற்பாது காப்பு அவர்களுக்கு எதுவும் இல்லை. எனக்குக் கிடைத்திருக்கும் எல்லாத் தகவல்களிலுமிருந்து, அரசாங்கம் எந்தப் பாதுகாப்பையும் அவர்களுக்கு அளிக்கவில்லை என்றே தெரிகிறது. யாராவது ஒருவர் அதிகாரிகளிடம் புகார் சொன்னால், அலி சகோதரர்களிடமும் என்னிடமும் போய் முறையிட்டுக்கொள்ளுமாறு பதில் கூறிவிடுவதே இப்பொழுது அதிகாரிகளுக்குப் பழக்கமாயிருக்கிறதாம். எல்லைப்புற நிர்வாகம் எங்கள் பொறுப்பில் இருந்தால் நாங்கள் என்ன செய்திருப்போம் என்பது எனக்குத் தெரியும். அந்த ஜில்லாக்களின் நிராயுதபாணிகளான மக்களைப் பாதுகாப்பதற்காகச் செய்யும் முயற்சியில் நிச்சயமாக உயிரையும் கொடுத்திருப்போம். அவசியமானால், தற்காப்புக்காக அந்த மக்களை ஆயுதபாணிகளாக்கியும் இருப்போம். அது மாத்திரம் அல்ல; மலைச்சாதியினரின் மனத்தைக் கவர்ந்து, கொள்ளைக்கூட்டமாக இருக்கும் அவர்களை நம்பத் தகுந்த அண்டை நாட்டாராக ஆக்கியிருப்போம். ஆனால், இருக்கிற நிலைமையை அப்படியே வைத்துத்தான் நாம் கவனிக்க வேண்டும். ஹிந்துக்களும் முஸ்லிம்களும் நட்புடன் இருக்கிறார்கள் என்றும், எந்த முஸல்மானும் தன் ஹிந்து சகோதரனுக்கு விரோதமாக மலைச்சாதியினருக்கு உதவி செய்து, துரோகம் செய்யவில்லை என்றுமே நான் எண்ணுகிறேன். எல்லைப் புறத்தின் இந்தப் பகுதியிலுள்ள முஸ்லிம் ஜனத்தொகை உதவி அளிப்பதற்கு வேண்டிய பலத்துடனேயே இருக்கிறது.

மலைச்சாதியினருக்காக நாம் மனச்சோர்வை அடைந்துவிடக் கூடாது. அவர்கள் மோசமானவர்கள் என்று நாம் அடிக்கடி எண்ணி வந்திருக்கிறோம். அவர்கள் நியாயத்திற்குக் கட்டுப் படக்கூடியவர்கள் என்பதே என் கருத்து. அவர்கள் கடவுளுக்குப் பயப்படுகிறவர்கள். வெறும் வேடிக்கைக்காக அவர்கள்

கொள்ளையடிப்பதில்லை. தம்மைத்தாமே தூய்மையாக்கிக் கொள்ள வேண்டும் என்று எழுந்துள்ள ஒரு சக்தியின் அலை அவர்களிடமும் பரவி வருகிறதென்றே நான் நம்புகிறேன்.

மலைச்சாதியினரைச் சீர்திருத்தும் வேலை மெதுவாகவே செய்யக்கூடியது, கஷ்டமானது என்பதையும் நான் அறிவேன். தங்கள் உடைமைகளையும் தங்களுக்கு அதிக அன்பானவர்களை யும் பறிகொடுத்துவிட்டவர்களுக்கு இவை எல்லாம் ஆறுதல் அளித்துவிடா.

இந்தக் கஷ்டங்களுக்கெல்லாம் மூலம் அதே காரணத்தில் தான் இருக்கிறது. நாம் ஆங்கிலேயருக்கு அஞ்சுகிறோம்; அவர்களுக்கு அடிமைகளாகிவிட்டோம். மலைச் சாதியினருக்கும் பயப்படுகிறோம். அடிமைத்தனத்தில் திருப்தி கொண்டுவிட்டோம். மலைச்சாதியாரிடமிருந்து ஆங்கிலேயரால் பாதுகாக்கப்படுகி றோம் என்பதற்கு நன்றி உடையவர்களாகவுமிருக்கிறோம். நம்மை வஞ்சித்து வருத்தி வருகிறார்கள் என்று யாரை நினைக்கி றோமோ; அவர்களை நம்மையும் நம் குடும்பத்தையும் பாதுகாப் பதற்கு நம்பிக்கொண்டிருப்பதைவிட வெட்கக் கேடான காரி யம் தன்மானமுள்ள ஒருவருக்கு வேறு இருக்க முடியும் என்று நான் நினைக்கவில்லை. மானத்தை விற்றுவிட்டுப் பாதுகாப்பை வாங்குவதைவிட நானும் என்னுடையவை யாவுமே நாசமாகி ஒழிவதையே நான் விரும்புவேன். நம் சாதாரணக் காரியங் களிலும் கடவுளை நாம் மறந்ததாலேயே இந்தத் திக்கற்ற நிலை யில் உள்ளதான ஒரு நினைப்பு உண்டாகியிருக்கிறது. நடைமுறை யில் நாம் நாஸ்திகர்களாகியிருக்கிறோம். இதனால், போகப் போக, நமது பாதுகாப்புக்கு உடல் வலிவையே நம்பியிருக்க வேண் டும் என்று எண்ணுகிறோம். உடலுக்கு அபாயம் வரும்போது நமது தத்துவஞானத்தையெல்லாம் காற்று வாக்கில் விட்டு விடுகிறோம். நமது அன்றாட வாழ்க்கையே கடவுளை மறுப்ப தாகிறது. நமக்குக் கடவுள் நம்பிக்கையும் சிறிது இருக்குமானால் மலைச்சாதியினருடன் நமக்கு எந்தக் கஷ்டமுமே வராது. அந்த நிலைமையில் நம் மானத்தைவிட நம் உடைமைகளை யும் சில சமயங்களில் நமது உயிரையும் ஒப்படைத்துவிட நேரும். மனிதரிடமிருக்கும் உயரிய தன்மைக்கு உடன்பட்டு விடாத அளவுக்கு மலைச்சாதியினர் காட்டுமிராண்டிகள் என்று நம்ப நாம் மறுத்துவிட வேண்டும்.

தன்மானத்திற்கு மாறுபடாத வகையில் நாம் நடப்பதா யிருந்தால் நமக்குள்ள வழிகள் இரண்டே. எவ்வளவுதான்

பலக்குறைவாக இருந்தாலும் சரி, நம்மைப் பாதுகாத்துக் கொள்ள நாம் விரும்பும் வரை கொள்ளையையும் வழிப்பறியை யும் எதிர்க்க நாம் தயாராக வேண்டும். இல்லையானால் மனித னிடமிருக்கும் உயரிய குணங்களுக்கு உடன்படும் தகுதி மலைச் சாதியினருக்கும் இருக்கிறது என்று நம்பி அவர்களைச் சீர் திருத்த முற்பட வேண்டும். இந்த இரண்டு காரியங்களும் சேர்ந்தே இருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால், தீமையிலிருந்து நம்மைக் காக்கப் பிரிட்டிஷ் தோட் டாவை நம்பியிருப்பதென்ற மூன்றாவது வழியை மாத்திரம் நாம் எந்த வகையிலும் தவிர்த்தே ஆக வேண்டும். இது நாட்டின் தற்கொலைக்கே சரியான வழி.

நான் எழுதுவது மலைச்சாதியாரையும் கிட்டுவதாயிருந் தால், தங்களுடைய கொள்ளையடிக்கும் பழக்கங்களைக் கைவிட்டு விடும்படி நான் நிச்சயம் அவர்களைக் கேட்டுக்கொள்ளுவேன். மற்றெல்லாவற்றையும்விட அல்லாவின் நாமத்தையே அவர்கள் பூஜிக்கிறார்கள். காருண்யமும், நீதியும் நிறைந்த கடவுளின் தூதுவ ராகவும் அவரை எண்ணுகிறார்கள். ஆனால், ஒரு தனி ஆளையோ அல்லது பெண்ணையோ அவர்கள் கொள்ளையடித்தால் அவர்கள் அல்லாவின் உபதேசங்களைப் பொய்யாக்கிவிட்டவராவார்கள். கபடமறியாத இந்த எளியவர்களிடம் செல்வாக்குள்ள ஒவ் வோர் உலேமாவும் முஸல்மானும் அவர்களுக்கு ஒரு விஷ யத்தை எடுத்துச் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறார்கள். நெருங்கி வரும் அபாயத்திலிருந்து இஸ்லாமைப் பாதுகாப்பதில் அவர் களும் தங்கள் பங்கைச் செய்வதாயிருந்தால், தங்களுக்கு ஒரு தீமையையும் செய்யாதவரை, அவர்கள் ஹிந்துக்களாயினும் முஸ்லிம்களாயினும் இஸ்லாமின் கௌரவத்தைப் பாதுகாக்கத் தங்களால் ஆனதையெல்லாம் செய்துகொண்டிருக்கும் தங்கள் அண்டையிலுள்ளவர்களை, துன்பப்படுத்தாமல் இருந்தாலே போதும் என்று அம்மலைச்சாதியினருக்கு எடுத்துக் கூற வேண்டும்.

—'எங் இந்தியா' - 25—5—1921.

# 5

# ஆப்கானிய பீதி

சுயநல வட்டாரங்களில் ஆப்கானிஸ்தானத்தைப்பற்றிக் கிளப்பப்படும் புரளிகளைக் கேட்டு ஸ்ரீ விபின் சந்திர பால் பீதி அடைவது எனக்கு ஆச்சரியமாக இருப்பதைப் போலவே மற் றும் பலருக்கும் ஆச்சரியமாகவே இருக்கும். பூரண சுயராஜ்

யத்தில் அவர் நம்பிக்கையுள்ளவர். உதவியே அற்றிருக்கிறோம் என்ற எண்ணத்தை நாம் போக்கிக் கொண்டாலொழிய இந்தியாவில் சுயராஜ்யத்தை நிலைநாட்ட நம்மால் முடியாது என்பதை அவருக்குத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஆப்கானியரையேயன்றி நாட்டிற்கு ஏற்படக்கூடிய ஒவ்வோர் அபாயத்தையும் சமாளிக்க நாம் சித்தமாயிருக்கிறோம் என்பதுதான் சுயராஜ்யம் என்பதற்குப் பொருள். மற்ற மக்களை நம்புவது, அவர்கள் நம்பக்கூடாதவர்களாக இருந்தால் நமது தியாகத்தின் மூலம் அவர்களுடைய ஏமாற்றுதல்களைச் சமாளிக்க நாம் தயாராயிருப்பது என்பதை அடிப்படையாகக்கொண்டதே ஒத்துழையாமைத் திட்டம் முழுதும். அலாகாபாத்தில் நடந்த ஹிந்து-முஸ்லிம் மகாநாட்டில் பேசுகையில் ஸ்ரீ பால், இன்று இருக்கும் அடிமைத்தனத்தை ஒழிக்கப் போகும் அதே ஒற்றுமையின் சக்தியும் சாமர்த்தியமும் தியாகமுமே இதே போன்ற மற்றெல்லாப் பிரச்னைகளையும் சமாளித்துக்கொள்ளும் ஆற்றலை நமக்கு அளித்துவிடும் என்றார். அங்கு அவர் உண்மையில் என்ன சொன்னாரோ அதையே இப்பொழுது ஸ்ரீ பாலுக்கு நினைவூட்டுகிறேன்.

இஸ்லாமிய நாடுகள் எல்லாம் ஒன்று திரண்டுவிடுவதைக் குறித்து ஸ்ரீ பால் பயப்படுகிறார். எல்லா முஸ்லிம் நாடுகளும் ஐக்கியப்பட வேண்டும் என்று ஒரு முஸல்மான் நினைப்பதைப் பொறுத்தவரை அது அற்புதமான லட்சியம். உலகத்தைச் சுரண்டுவதற்கும் பலாத்காரத்தின் மூலம் எல்லோரையும் இஸ்லாமுக்கு மதம் மாற்றுவதற்கும் இஸ்லாமிய நாடுகள் எல்லாம் ஐக்கியப்படுவது என்றால்தான் அது ஆபத்தான லட்சியமாகும். நான் அறிந்த முஸ்லிம் யாருக்கும் பின்னர்க் கூறிய இந்த எண்ணம் இருப்பதாகத் தெரியவில்லை. மிருகபல ஆதிக்கத்தின்மீது உலகத்திற்கே வெறுப்பு அதிகரித்து வருகிறது.

எனக்குப் பிடித்த கொள்கையை விடாப்பிடியாக வைத்துக் கொள்வதில் எனக்கு நம்பிக்கை இல்லை என்பதை ஸ்ரீ பாலுக்கு உறுதி கூறுகிறேன். கெடுதலானவற்றைத் தள்ளிவிடுகிறேன். நல்லவைகளை உறுதியாகப் பற்றிக்கொள்கிறேன். நிதான புத்தியுள்ள முஸ்லிம், ஆப்கன் ஆட்சியை வரவேற்க மாட்டார். நிதான புத்தியுள்ள ஹிந்துக்கள் மாத்திரம் அந்த ஆட்சியை வரவேற்றுவிடுவார்கள் என்றும் நான் நம்பவில்லை. ஆப்கானியரைப் பற்றி மிரளும்படி காட்டப்படுவதைக் குறித்து நான் கட்

டுரை எழுதியபோது ஒரு தோழரின் சரியான நிலையை எடுத்துக் காட்டவும், சுயநலமிகளின் கூக்குரலைக் கண்டு பயந்து விட வேண்டாம் என்று இந்தியாவை எச்சரிக்கை செய்ய வேண்டும் என்றுமே என் நினைவுக்கு வந்தது.

ஆப்கானியர் படையெடுப்பு ஏற்படும்போதோ அல்லது அப்படிப்பட்ட படையெடுப்பு ஏற்படும் என்ற வெறும் வதந்தியினாலோ நம் முஸ்லிம் மக்கள் பகிரங்கப் புரட்சியில் இறங்கி விடாவிட்டாலும் கலவரம் இழைக்கும் ஆவேசத்தையாவது அடைந்து விடுவார்கள் என்ற ஸ்ரீ பாலின் கருத்தை நான் முற்றிலும் மறுக்கிறேன்; ஆனால், இதற்கு நேர்மாறான கருத்தை நான் உறுதியாகக் கொண்டிருக்கிறேன். இன்று முஸ்லிம்களுக்கு அதிக அபாயங்கள் இருப்பதால் - தங்கள் மதத்தின் கௌரவமே ஆபத்தில் இருப்பதால் - அத்தகைய முட்டாள் தனமான காரியங்களைச் செய்துவிட மாட்டார்கள். மௌலானா ஷவுகத் அலி அடிக்கடி கூறுவதைப் போல, அகிம்சையுடன் பலாத்காரத்தைச் சேர்த்துவிடக்கூடியது என்பதில் முஸ்லிம்கள் அதிக ஜாக்கிரதையுடன் இருக்கின்றனர். "ஹிந்துக்களில் பெரும் பகுதியினருக்கு, முஸ்லிம்களுக்கும் தங்களுக்கும் இடையே உள்ள சிக்கலைத் தீர்த்துக்கொள்ள வேண்டும் என்ற விருப்பம் இருக்கிறது" என்று ஸ்ரீ பால் கூறுகிறார். இவ்விதம் சொல்லுவதன் மூலம் ஹிந்துக்களுக்கு அவர் பெரிய அநீதியைச் செய்பவராகிறார். ஹிந்துக்களின் மனத்தை அவர் தவறாகப் புரிந்துகொண்டிருக்கிறார். அவருக்கு உறுதியாகச் சொல்லுவேன் : கிலாபத் விஷயத்தில் முஸ்லிம்கள் எப்படிச் சிரத்தையுடன் இருக்கிறார்களோ அதேபோல ஹிந்துக்களும் பசுக்கள் விஷயத்தில் சிரத்தையுடன் இருக்கின்றனர். பசுக்களைப் பாதுகாக்க வேண்டும் என்பது ஒவ்வோர் ஹிந்துவின் உள்ளத்திலும் இருக்கிறது. ஆனால், முஸ்லிம்களின் நல்லெண்ணம் இருந்தாலன்றிப் பசுக்களைப் பாதுகாப்பது முடியாது என்பது ஹிந்துக்களுக்கு நன்றாகத் தெரியும். தாங்கள் வலியச் செய்யும் உதவியின் மூலம் இஸ்லாத்தின் கௌரவத்தை ஹிந்துக்கள் மீட்டார்கள் என்பதை முஸ்லிம்கள் கண்டால், ஒவ்வொரு முஸ்லிமும் எந்நாளும் ஹிந்துக்களுக்கு நன்றியறிதலுடன் இருப்பார்கள் என்பதை அறிவேன். பசுவைக் காப்பதற்கு முஸ்லிம்கள், ஹிந்துக்களுக்கு உதவி செய்வார்களானால், ஒவ்வொரு முஸ்லிமும் முன்னால் செய்துவிட்ட எல்லாத் தவறுகளையுமே ஹிந்துக்கள் மறந்துவிடுவார்கள் என்று நான் உறுதி கூறுகிறேன்.

ஆப்கானியப் படையெடுப்பை முஸ்லிம்களும் ஹிந்துக் களும் வரவேற்பார்கள் என்று ஸ்ரீ பால் கூறுவதை நான் அடியோடு மறுக்கிறேன். மௌலானா முகம்மது அலியின் நோக்கம் என்று கருதப்பட்டுவிட்ட ஒன்றின்மீது எழுந்துள்ள ஆட் சேபங்களே, ஆப்கானியப் படையெடுப்பை இந்தியா சகித்துக் கொண்டிருக்காது என்பதை உறுதிப்படுத்தப் போதுமானது.

அமீர் படையெடுத்து, அரசாங்கத்திற்கு நாம் உதவியும் செய்யாதுபோனால், புரட்சிதான் ஏற்படும் என்று ஸ்ரீ பால் கூறுகிறார். இதற்கு மாறாக நான் இன்னும் ஒன்றைத் துணிந்து கூறுகிறேன் : ஒத்துழையாமையைக் கடைப்பிடிக்கும் இந்தியா, அரசாங்கத்துக்கு உதவியளிக்க மறுத்துவிட்டால், அரசாங்கம் மக்களுடன் ஒரு சமரச உடன்பாட்டுக்கு வரும். இந்திய மக்க ளுடன் ஒரு சமரச உடன்பாட்டுக்கு வந்து கிலாபத், பஞ்சாப் அநீதிகளால் மக்கள் மனத்தில் ஏற்பட்டிருக்கும் புண்ணை ஆற்று வதைவிட இந்தியாவை விட்டுப் போய்விடுவதே சரி என்று நினைத்துவிடக்கூடிய அளவுக்குப் பிரிட்டிஷ் அரசாங்கம் பகுத்தறி வற்றோ, சாமர்த்தியமற்றோ போய்விடும் என்று நான் நினைக்க வில்லை. தன் விருப்பத்தைக் கவனித்தே தீரும்படி செய்யக் கூடிய சக்தியை இந்தியா இன்னும் அடைந்துவிடவில்லை என்பதை நான் நன்றாக அறிவேன். இப்படிப்பட்டதோர் நிலைமையும் ஏற்படலாம் என்பதைக் காட்ட மாத்திரமே இதைச் சொன்னேன்.

சிம்லாவில் நான் சொன்னதற்கும் லாலாஜி கூறியிருப்ப தற்கும், முன்னால் நாங்கள் கூறியிருப்பதற்கும் ஸ்ரீ பால் மாறு பாட்டைக் காண்கிறார். ஆனால், எனக்கு அப்படி எதுவும் தோன்றவில்லை. நானோ, லாலாஜியோ, ஆப்கானியப் படை யெடுப்பை வரவேற்கவுமில்லை. ஆயினும், என் நிலையில் சந்தே கத்திற்கு இடமில்லாத வகையில் கீழ் வருமாறு தாராளமாகக் கூறுகிறேன் :

1. ஆப்கானிஸ்தானம், இந்தியாமீது படையெடுக்க விரும்புகிறது என்று நான் நம்பவில்லை.

2. ஆப்கன் படையெடுப்பைச் சமாளிப்பதற்கு முழுவதும் தயாராகவே அரசாங்கம் இருக்கிறது.

3. ஆப்கன் படையெடுப்பு வந்தால் ஒவ்வொரு ராஜாவும் மகாராஜாவும் எந்தவித நிபந்தனையுமின்றியே அரசாங்கத்திற்கு உதவி செய்வார் என்பதை வருத்தத்துடன் ஒப்புக்கொள் ளுகிறேன்.

4. ஒரு தேசத்தின் மக்கள் என்ற முறையில் நாம் மிகவும் ஒழுக்கங் கெட்டு, தன்னம்பிக்கையற்றுப் போய்விட்டோம். ஆப்கானியரைப்பற்றி நம்பிக்கையின்மையும், ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் ஒருவர்மீது மற்றொருவருக்குச் சந்தேகமும் இருக்கின்றன. இந்தப் பீதியினாலேயே அரசாங்கத்திற்கு உதவி செய்ய ஓடி, இந்தியாவை இன்று பிணைத்திருக்கும் அடிமைத் தளையை இன்னும் பலப்படுத்திவிடுவார்கள் என்றும் நான் நம்புகிறேன்.

5. இந்தியாவின்மீது படையெடுப்பது என்பதற்கும், கிலாபத்திற்காகப் பிரிட்டிஷ் சர்க்கார்மீது படையெடுப்பது என்பதற்கும் கொள்கையளவில் வித்தியாசம் உண்டு எனச் சொல்லலாம். ஆனால், நடைமுறையில் அப்படி இல்லை. பிரிட்டிஷ் அரசாங்கத்திற்குச் சங்கடத்தை உண்டாக்க வேண்டும் என்று இந்தியாமீது படையெடுக்கும் ஆப்கானிஸ்தானம், அப்படை யெடுப்பு வெற்றிகரமானதாகிவிடுமானால், தன் ஆட்சியை இந்தியாவில் கொண்டு வர ஆசைப்படாமல் இருந்துவிடும் என்று நான் நம்பவில்லை.

6. இதுவே என் நம்பிக்கையென்றாலும், இந்த ஆட்சியையே திருத்த வேண்டும், இல்லையானால் ஒழித்துவிட வேண்டும் என்று இருக்கும் ஓர் ஒத்துழையாமைக்காரர், அரசாங்கத்திற்கு நிபந்தனையின்றி உதவி செய்வது என்பது அவருடைய தருமத்திற்கே விரோதமானதாகும்.

7. யுத்தம் கூடாது என்று மனமார வெறுப்பவர்களாகச் சிலர் இருப்பது, அப்பொழுது நடக்கும் சம்பவங்களால் அவ்வளவு முக்கியம் வாய்ந்ததாகத் தோன்றாமல் இருக்கலாம். என்றாலும், ஆண்மையுள்ள இந்தியாவை உண்டாக்க அவர்களே விதை விதைத்தவர்களாவர்.

8. மானத்தை விற்றுவிட்டு ஆப்கன் படையெடுப்பி லிருந்து சுதந்திரத்தை விலைக்கு வாங்குவதைவிட ஆப்கானியர் கையில் இந்தியா அழிவதையே நான் விரும்புவேன். கிலாபத், பஞ்சாப் அநீதங்களினால் உண்டான புண் ஆறாமல் இன்னும் ரத்தம் கசிந்துகொண்டிருக்க, தான் செய்த குற்றத்திற்காக வருந்தாமல் இருக்கும் ஓர் அரசாங்கத்தினால் இந்தியா பாதுகாக் கப்படுவது என்பது, இந்தியா தன்னுடைய மானத்தை விற்று விடுவதேயாகும்.

9. காரியத்தில் நாம் போதிய பலத்தைக் காட்டிவிடுவோ மானால், போதுமான தன்னலத் தியாகத்திற்கும் உடன்பட்டு

விடுவோமாயின், பிரிட்டிஷார் முற்றிலும் வழிக்கு வந்துவிடு வார்கள். இதுவே பிரிட்டிஷ் மக்களிடம் எனக்கு இருக்கும் நம்பிக்கை. வெறும் நியாயத்திற்கு அவர்கள் சும்மா விட்டுக் கொடுத்துவிடுவதில்லை என்பதையே நான் சரித்திரத்தில் காண் கிறேன். அப்படிச் செய்வதென்பது அவர்களுடைய 'பகுத் தறிவு'க்கு எட்டாத சங்கதி. நியாயத்துடன் பலமும் இருக்கிறது என்பதைக் கண்டால் உடன்பட்டுவிடும் புத்திசாலித்தனம் அவர்களுக்கு அதிகம் உண்டு. அந்தப் பலம் மிருகபலமா அல்லது ஆத்மபலமா என்பதைப்பற்றி அவர்களுக்குக் கவலை இல்லை.

*10.* கீழ்க்கண்டவைகளை ஆப்கானியர் அறியும்படி செய்வது ஒவ்வோர் ஒத்துழையாமைக்காரரின் கடமையும் ஆகும். கிலா பத்தை, யுத்தத்திற்கு முந்திய கால அந்தஸ்திற்குக் கொண்டு வந்துவிடக்கூடிய சக்தி ஒத்துழையாமைக்கு இருக்கிறது என்று நம்புகிறோம்; ஆப்கானியரின் ராணுவத் தலையீட்டை இந்தியா விரும்பவில்லை; இந்தியாவை அடிமையாக வைத்துக்கொண் டிருக்கப் பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் எந்த உடன்பாட்டிற்கும் வளையாதிருந்தால் ஆப்கன் சர்க்காரை ஒத்துழையாதார் பாராட் டுவார்கள்; அண்டை நாட்டாரிடத்தில் நட்பைத் தவிர இந்தி யாவுக்கு எந்த விரோதமும் இல்லை. இவற்றையே ஆப்கானியர் அறியும்படி செய்ய வேண்டும்.

—'எங் இந்தியா' – 1—6—1921

# 6

# வெளிநாட்டுக் கொள்கை

காரியக்கமிட்டி அங்கீகரித்து வெளியிட்டிருக்கும் வெளி நாட்டுக் கொள்கையைப்பற்றிய தீர்மானம் இலேசாகப் பரபரப்பை உண்டாக்கியிருக்கிறது. இதைக் குறித்துக் காரியக் கமிட்டி தீவிரமாக விவாதிப்பதைக் கண்டு சிலர் ஆச்சரியப்படு வதிலிருந்து இந்தியா சுயராஜ்யம் அடைவதற்கு வேண்டிய பக்குவத்தை இன்னும் அடைந்துவிடவில்லை என்பதே அவர் களுடைய அபிப்பிராயம் எனத் தோன்றுகிறது. எந்த நாடும் சுதந்திரத்திற்கு எப்பொழுதும் பக்குவத்துடனேயே இருக்கிறது. இன்னும் சொல்லுவதானால், இதற்காக எந்தத் தேசமும் பிறரிடம் பாடம் சொல்லிக்கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. இதை எடுத்துக்காட்ட இதற்கு முன்னாலும் நான் முயன்றிருக்கிறேன். சுயராஜ்யத்தை அமைத்துக்கொள்வதற்

கான திட்டங்களை நாம் வகுத்துக் கொண்டிருக்கிறோமாகையால் நமது வெளிநாட்டுக் கொள்கையைப்பற்றியும் சிந்தித்து, அது என்ன என்பதையும் விளக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். உலகத்துடன் என்ன விதமான உறவை வளர்த்துக்கொள்ள நாம் விரும்புகிறோம் என்பதை அதிகார பூர்வமாகச் சொல்லவும் கடமைப்பட்டிருக்கிறோம். நம் அண்டை நாடுகளைக் கண்டு நாம் அஞ்சவில்லையென்றால், சில நாடுகளைக் குறித்துக் கடுமையான அபிப்பிராயம் நமக்கிருந்தாலும் அவற்றின்மீது விரோத நடவடிக்கை எண்ணம் நமக்கு இல்லையென்றால், அதைச் சொல்லவும் நாம் கடமைப்பட்டிருக்கிறோம். பிரான்ஸ் அல்லது மெஸபடோமியா போர்க்களங்களுக்கு நம் சிப்பாய்களை அனுப்ப நாம் விரும்புகிறோமா என்பதை உலகிற்குச் சொல்வதும் நம் கடமை. நம் நாட்டைப் பொறுத்த எல்லாவற்றிலுமே நமது கருத்து இன்னதென்பதைப் பகிரங்கமாகச் சொல்ல நாம் பயப்படவே கூடாது.

லூதியானாவிலிருந்து ஒரு நிருபர் கோவையாகப் பல கேள்விகளை எனக்கு அனுப்பியிருக்கிறார். பொது மக்களின் மனத்தில் எவ்விதம் பரபரப்பு ஏற்பட்டிருக்கிறது என்பதை அவை காட்டுகின்றன. அக்கேள்விகளையும் அவற்றிற்கு என் பதிலையும் கீழே தருகிறேன்.

1. இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கை அதன் மக்களின் நன்மையைக் கருதியதாக இருக்க வேண்டுமா அல்லது வேறு எந்த நோக்கத்தையாவது கொண்டதாக இருப்பதா?

மற்றெல்லாவற்றையும்விட இந்தியாவின் நன்மையே முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டும்.

2. இங்கிலாந்து முதலிய நாடுகளின் யுத்தங்களை நடத்துவதற்கு இந்தியாவின் ஆட்களும் பணமும் உபயோகிக்கப்பட வேண்டுமா?

மற்ற நாடுகளின் பேரில் சண்டையிடுவது என்று இந்தியா ஒப்பந்தம் செய்துகொண்டு அந்தக் கடமையும் இருந்தால் அப்படிச் செய்ய வேண்டியதே.

3. நாட்டின் சட்டம் எந்த ஒரு சாதி, கோஷ்டி அல்லது சமூகத்தின் விசேஷ உரிமைகளுக்கு உடன்பட்டதாக இருக்க வேண்டுமா?

ஒருகாலும் இல்லை. இன்று நாம் சுதந்திரத்துடன் இருந்தால் துருக்கிக்கு நம்மால் முடிந்த அளவுக்கு ஆட்களையு

பணத்தையும் கொடுத்து உதவியிருப்போம். ஆகவே, சிநேக நாடுகளுக்கு உதவியை அளிக்கக்கூடிய வகையில் சட்டம் இருக்கலாம்.

4. ஒரு மதம், இனம் அல்லது சாதியைப் பாதுகாப்ப தற்கு கருவியாக எந்தச் சர்க்காராவது அமைக்கப்பட வேண்டுமா ?

சுயராஜ்ய அரசாங்கம் சரியான சுயராஜ்ய அரசாங்கமாக இருக்குமானல், இந்தியாவில் இருக்கும் எல்லா மதங்களையும் குடியிருக்கும் எல்லா இனத்தினரையும் அது நிச்சயம் பாது காக்கும்.

5. சாத்திரங்களோ அல்லது ஷாரியத்தோ ஒருவிதமாகக் கூற, தேசத்தின் அவசியம் வேறுவிதமாக இருந்தால் இதில் முடிவு செய்வது எப்படி ?

உண்மையில் இக்கேள்வி பொருத்தம் இல்லாதது. ஓர் இனத்தினரின் தேவையோ அல்லது அவர்கள் பின்பற்றும் மதத்தி னுடைய தேவையோ தேசத்தின் தேவையாகவே இருக்க வேண்டும்.

6. ஜமீன்தார்களுக்கும் குடியானவர்களுக்கும் இருக்க வேண்டிய உறவு, கலவரத்தை அடிப்படையாகக் கொண்ட தாக இருக்க வேண்டுமா ?

சுயராஜ்யத்தில் அத்தகைய அடிப்படை இருக்காது என்று நம்புகிறேன். அப்பொழுது அவர்கள் சந்தோஷமாகவும் ஒரு வருக்கொருவர் நன்மை புரிபவர்களாகவும் இருப்பார்கள்.

7. ஒருவர் தமது தாய் நாட்டின்மீது கொள்ளும் பக்தி நிபந்தனைக்குட்பட்டிருக்க வேண்டுமா ? அப்படியானல் எப்படி ?

எப்பொழுதுமே கடவுள் பக்திக்கு உட்பட்டதே தேச பக்தி.

—'எங் இந்தியா,' — 20—10—1921.

# 7

# ஆப்கானிஸ்தானத்திலுள்ள ஹிந்துக்கள்

'எங் இந்தியா' ஆசிரியருக்கு,

ஐயா,

பிரபலமல்லாத சாதாரணமான ஓர் இந்தியனுக்கு ஒத்துழையாமையினல் சுயராஜ்யத்தை அடைந்துவிட முடியும் என்பதில் நம்பிக்கை இல்லை. அதோடு இப்பொழுது இருக்கும் 'சைத்தான்' அரசாங்கத்தைவிட இன்னும் அதிக

மோசமான, யதேச்சாதிகாரமுள்ள முஸ்லிம் ஆட்சியைத் திரும்பவும் கொண்டு வந்துவிட வேண்டுமென்று உள்ளுக்குள் எண்ணம் வைத்து யார் அதற்கு வேண்டிய தயாரிப்புக்களையும் செய்துகொண்டு வருகிறார்களோ அவர்களைக் கிலாபத் இயக்கம் பலப்படுத்துகிறது என்றும் ஓர் இந்தியன் நினைக்கிறான். தன் வழியில் நாட்டை நேசித்து வரும் அத்தகையதோர் இந்தியன் கூறுவதைக் கவனிப்பதாயிருந்தால் கீழ்வரும் தகவலைப்பற்றி நான் கேட்கலாமா?

ஹிந்த்கிஸ், அதாவது, ஆப்கானிஸ்தானத்திலுள்ள ஹிந்துக்கள், பல அவமதிப்புகளுக்கும் கஷ்டங்களுக்கும் உள்ளாக்கப்பட்டிருக்கின்றனர் என்று பெல்லோவின் 'ஆப்கானிஸ்தானத்திற்கு ராஜீய தூதுபற்றிய குறிப்பு '(Journal of a Political Mission to Afghanistan)', என்ற புத்தகத்தில் படித்தேன். உதாரணமாக, அவர்கள் 'ஜஸியா' செலுத்தவேண்டும்; தங்களைத் தனியாகக் காட்டும் வகையில் குறிப்பிட்ட ஆடைகளை அவர்கள் அணியவேண்டும்; சேணம் வைத்த குதிரைகள்மீது அவர்கள் சவாரி செய்யக்கூடாது முதலியன. ஆப்கானிஸ்தானத்திலுள்ள முஸ்லிம் சர்க்கார் இத்தகைய காரியங்கள் நடக்க அனுமதித்திருக்கிறது. அதற்கப்புறம் நல்ல மாறுதல் எதுவும் ஏற்பட்டிருப்பதாக எனக்குத் தெரியவில்லை. ஆப்கானிஸ்தானம் இந்தியாவின்மீது படையெடுக்க வேண்டும் என்று பகிரங்கமாகக் கூறிய கிலாபத்வாலாக்களான பலர் உங்களுக்கு நண்பர்களாக இருக்கிறார்கள். ஆப்கானிஸ்தானத்திலுள்ள ஹிந்துக்களுக்கு இருக்கும் சட்ட ரீதியான இந்தச் சங்கடங்களெல்லாம் நீங்கியிருந்தால் அதை ஹிந்துக்களுக்கு நீங்கள் கூறுவீர்களா? அப்படி நீங்கவில்லையானால், 'சைத்தான்' அரசாங்கத்தால் 'அடிமையைப் போல்' நடத்தப்படுவது நீங்கவேண்டும் என்று நீங்கள் எவ்வளவு வற்புறுத்திக்கூறுகிறீர்களோ அவ்வளவு வற்புறுத்தி ஆப்கானிஸ்தான ஹிந்துக்களின் கஷ்டங்கள் நீங்க வேண்டும் என்று கேட்பீர்களா? இந்தச் 'சைத்தான்' அரசாங்கம் எந்த இனத்தைச் சேர்ந்ததோ அந்த இனம், ஆப்கன் மன்னர்கள் ஹிந்துக்களை நடத்திவருவதைப் போல அவ்வளவு மோசமாக இந்தியரை என்றும் நடத்தவில்லை.

கிலாபத்தை நீங்கள் ஆதரிப்பதைவிடத் தீண்டாமையைக் குறித்து நீங்கள் மேற்கொண்டிருக்கும் கடுமையான போக்கினால் நீங்கள் அதிக நன்மையைச் செய்து வருகிறீர்கள். தீண்டாமையை ஒழித்து, ஹிந்துக்களிடையே இருந்து வரும் மாகாண வெறியையும் போக்கிவிடுவீர்களானால் மனித வர்க்கத்திற்கே பெரிய நன்மையைச் செய்தவர்களாவீர்கள். தங்களைத் தாங்களே கவனித்துக் கொள்வதற்குப் போதுமான பலத்துடனேயே முஸ்லிம்கள் இருக்கிறார்கள்.

ரதன்கஞ்ச், உங்கள்,
24—10—1921. ஆர். ஸி. பானர்ஜி.

ஆப்கானிஸ்தானத்தில் ஹிந்துக்கள் எவ்விதம் நடத்தப்படுகின்றனர் என்பதைப்பற்றி எனக்கு எதுவுமே தெரியாது. என்றாலும், நிருபர் தமது கடிதத்தில் கூறியிருப்பதெல்லாம் உண்மையே என்று தற்சமயத்திற்கு வைத்துக்கொள்ள நான் தயாராயிருக்கிறேன். ஆப்கன் ஆட்சியை இந்தியாவில் கொண்டு வர நாம் முயற்சி செய்துகொண்டிருப்பதாயின் இவை பொருத்தமானவைகளாக இருக்கும். என் கவலையெல்லாம், இந்தியாவில் இப்பொழுது இருக்கும் தவறான ஆட்சியைப்

பற்றியே. நான் குதிரை சவாரி செய்ய இந்த ஆட்சி அனுமதிக்கிறதென்றாலும் என் நாட்டிலேயே என்னை அடிமையாக்கியிருக்கிறது. ஆப்கனோ அல்லது வேறு ஒரு முஸ்லிம் ஆட்சியோ உள்ளே புகுந்துவிடுமே என்ற பயத்தினால் இந்த மோசமான ஆட்சியை நான் ஒழித்துவிடாமல் இருக்க முடியாது. நாம் சுயராஜ்யத்தை அடைந்துவிட்டால் வேறு எந்த மோசமான ஆட்சியையும் எதிர்க்கும் ஆற்றலையும் நாம் அடைந்துவிட்டவர்களாவோம் என்பதை அவர் காண்பார். *சாண்டர்ஸ்ட்டுக்குப் போய்ப் பயிற்சி பெற வேண்டிய அவசியமில்லாமலே நாட்டிற்காகவும் மதத்திற்காகவும் உயிர் துறக்கும் கலையை நாம் கற்றவராவோம்.

—மோ. க. கா.

— 'எங் இந்தியா' - 3—11—1921.

# 8

# என் வழி

இச்சமயம் ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் நான் கவனிக்கப்பட்டு வருவது என் அதிருஷ்டமும் துரதிருஷ்டமுமே யாகும். என் அறிவிப்புக்கள், மேற்கு நாடுகளிலும் படிக்கப்பட்டு, அறியப்பட்டு வருவது என் அதிருஷ்டம்; அறியாமலேயே அவை மிகைப்படுத்தப்பட்டு வருவதும், வேண்டுமென்றே தவறாக எடுத்துக் காட்டப்படுவதும் என் துரதிருஷ்டம். ஒவ்வோர் உண்மைக்கும் தனக்குத்தானே இயங்கும் சக்தி உண்டு; ஆகையால் அதற்குரியதான பலமும் அதற்கு உண்டு. எனவே, நான் சொல்லுவது தவறாக எடுத்துக் கூறப்படுகிறது என்பதை அறியும்போதும் நான் கவலைப்படாமல் இருக்கிறேன். அன்புள்ள ஐரோப்பிய நண்பர் ஒருவர் எனக்கு ஓர் எச்சரிக்கையை அனுப்பியிருக்கிறார். அவருக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் தகவல்கள் உண்மையாயிருந்தால் ருஷியாவில் வேண்டுமென்றோ அல்லது தற்செயலாகவோ என்னைப் பற்றிய தவறான கருத்து இருந்து வருகிறது என்பதை அந்த எச்சரிக்கை காட்டுகிறது. அச்செய்தி இதுதான்:

" காந்திக்கு உத்தியோக முறையில் ஒரு வரவேற்பு அளிக்கவும், அவரைப் பின்பற்றுகிறவர்களிடையே போல்ஷிவிக் பிரசார நடவடிக்கைகளை மேற்கொள்ளச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொள்ளவும், பெர்லினில் இருக்கும் ருஷியப் பிரதிநிதியான ஸ்ரீ கிரஸ்டின்ஸ்கியை வெளிநாட்டு விவகார மந்திரி கேட்டுக்கொள்ளுவார். இதல்லாமல் காந்தியை ருஷியாவுக்கு அழைக்கும் வேலை கிரஸ்டின்ஸ்கிக்கு அளிக்கப்படும். ஒடுக்கப்பட்டிருக்கும் ஆசிய மக்க

* இங்கிலாந்தில் ராணுவப் பயிற்சி அளிக்கும் கல்லூரி இருக்கும் இடம்.

ளிடையே பிரசாரப் பிரசுரங்களை வெளியிடப் பணவுதவி செய்வதற்கும் அதிகாரம் அவருக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. கீழை நாட்டுச் சங்கம், காரியாலயம் ஆகியவைகளுக்குக் காந்தியின் பெயரால் அவர் கருத்துக்கொண்டுள்ள மாணவருக்கு (காந்தி கருத்துக் கொண்டுள்ளவர்களா அல்லது மாஸ்கோவில் இருப்போர் கருத்தைக் கொண்டுள்ளவர்களா ?) ஒரு பணமுடிப்புக்கும் அவர் ஏற்பாடு செய்வார். முடிவாக இந்த வேலையில் மூன்று ஹிந்துக்கள் அமர்த்தப் படுவார்கள். இவையெல்லாம் அக். 18–ஆந் தேதிய 'ரூல்' போன்ற பத்திரிகைகளில் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன."

ஜெர்மனிக்கும் ருஷியாவுக்கும் வருமாறு நான் அழைக்கப் படுவேன் என்று வெளியாகி வரும் செய்திகளுக்கு ஆதாரம் என்ன என்பதை மேற்கொண்ட செய்தி வெளிப்படுத்துகிறது. அத்தகைய அழைப்புக்கள் எவையும் எனக்கு வரவுமில்லை, அந்தப் பெரிய நாடுகளுக்குப் போகும் ஆசையும் எனக்குக் கொஞ்சமும் கிடையாது என்று நான் சொல்லத் தேவையில்லை. நான் எந்தச் சத்தியத்தை வற்புறுத்தி வருகிறேனே அதை இந்தியா இன்னும் முற்றிலும் ஏற்றுக்கொண்டு விடவில்லை என்பது எனக்கு நன்ருகத் தெரியும். அதுவே சரியானது என்பதும் இன்னும் முற்றிலும் நிரூபிக்கப்படவில்லை. இந்தியாவில் என் வேலை இன்னும் பரீட்சார்த்த கட்டத்திலேயே இருக்கிறது. இந்நிலைமையில் வெளிநாடுகளில் நான் எந்த முயற்சிகளிலும் ஈடுபடுவதென்பது ஒவ்வாத காரியம். செய்துவரும் பரீட்சை இந்தியாவில் சரிவர நடத்தப்பட்டிருக்கிறது என்று முதலில் நான் திருப்தி அடைய வேண்டும்.

என்னுடைய வழி மிகத் தெளிவானது. பலாத்கார காரியங்களுக்கு என்னை உபயோகித்துக்கொள்வதற்கான எந்த முயற்சியும் தோல்வியையே அடையும். சத்தியத்தைத் தவிர வேறு எந்தவிதமான ராஜதந்திரமும் எனக்குத் தெரியாது. என்னிடம் அகிம்சையைத் தவிர வேறு ஆயுதமுமில்லை. என்னையும் அறியாமலேயே சிலவேளை நான் வேறு வழியில் போகக் கூடுமேயன்றி எப்பொழுதுமே அப்படி நடந்து விடாது. ஆகவே, எனக்குள்ள வரம்பு மிகவும் திட்டமானது. அதற்குள்ளேதான் என்னை உபயோகித்துக்கொள்ள முடியும். சட்ட விரோதமாக என்னை உபயோகித்துக்கொண்டுவிடப் பல தடவைகளில் இதற்கு முன்னுலும் முயற்சிகள் நடந்திருக்கின்றன. ஆனல், நான் அறிந்தவரையில் அந்த முயற்சிகளெல்லாம் ஒவ்வொரு தடவையும் தோல்வியுற்றுப் போயிருக்கின்றன.

போல்ஷிவிஸம் என்பது என்ன என்பதைப்பற்றி எனக்கு இன்னும் தெளிவாகத் தெரியவில்லை. அதைப் பற்றிப் படிக்கவும் இயலவில்லை. போகப் போக அது ருஷியாவுக்கு நன்மை பயக்குமா

என்பதையும் அறியேன். ஆனால், பலாத்காரத்தையும் கடவுள் மறுப்பையும் அது அடிப்படையாகக் கொண்டிருப்பதால் அது எனக்கு வெறுப்பை உண்டாக்குகிறது என்பதை மாத்திரம் அறிவேன். வெற்றிக்குப் பலாத்காரக் குறுக்கு வழியை நான் நம்புவதில்லை. என்மீது கவனஞ்செலுத்திவரும் போல்ஷிவிக் நண்பர்கள் ஒன்றை உணர வேண்டும்: சிறந்த நோக்கங்களை நான் போற்றுவதாயினும், அவற்றினிடம் எவ்வளவு அனுதாபம் கொள்வதாயினும், சிறந்த லட்சியங்களை அடையக்கூடப் பலாத்காரத்தை உபயோகிப்பது என்பதற்கு நான் சற்றும் இடம் தராத எதிரி என்பதை அவர்கள் உணர வேண்டும். ஆகையால், பலாத்கார எண்ணம் இருப்பவர்களும் நானும் ஒத்துப்போவது என்பதற்கே இடமில்லை. ஆனால், என்னுடைய அகிம்சா தருமம் என்னைத் தனியாக ஒதுக்கிவிடுவதில்லை. அராஜகத்தில் ஈடுபடுவோர், பலாத்காரத்தையே நம்புகிறவர்கள் ஆகியவர்களுடனுங்கூடப் பழகும்படி அது என்னைக் கட்டாயப்படுத்துகிறது. ஆனால், அப்படிப் பழகுவது, அவர்களிடம் இருக்கும் தவறு என்று எதை நான் எண்ணுகிறேனே அதிலிருந்து அவர்களை வெளிப்படுத்துவதற்கேயாகும். ஏனெனில், பொய்யினாலும் பலாத்காரத்தினாலும் நிரந்தரமான நன்மையை அடைந்துவிட முடியாது என்று அனுபவம் எனக்கு அறிவுறுத்துகிறது. என்னுடைய நம்பிக்கை ஆசையை மூட்டும் ஒரு மயக்காக இருந்தாலும், அது கவர்ச்சி மிகுந்தது என்பதை ஒப்புக்கொண்டே ஆகவேண்டும்.

—'எங் இந்தியா', – 11—12—1924.

## 9

# சுயராஜ்யத்தின் கீழ்

"உங்கள் சுயராஜ்யத்தில் சிப்பாய்களுக்கு ஏதாவது இடமுண்டா? உங்கள் சுயராஜ்ய சர்க்கார் ராணுவத்தை வைத்திருக்குமா? வைத்திருப்பதாயிருந்தால் அவசியம் வரும்போது அவர்கள் யுத்தம் செய்வார்களா? அதாவது உடல் பலத்தை உபயோகிப்பார்களா என்றே கேட்கிறேன். அல்லது எதிரிகளுக்கு விரோதமாகச் சத்தியாக்கிரகம் செய்வார்களா?"

அந்தோ! என்னுடைய சுயராஜ்யத்தில் இன்று சிப்பாய்களுக்கும் இடம் இருக்கிறது. மக்கள் எல்லோரையும் நிராயுதபாணிகளாக்கி அதன் காரணமாக அவர்களை வலுவற்றவர்களாகச் செய்திருப்பது பிரிட்டிஷார் இழைத்திருக்கும் படுமோசமான பாதகம் என்று நான் வருணித்து வருகிறேன் என்பதைப்

புரட்சி நண்பர் அறியட்டும். எல்லாவற்றிற்குமே அகிம்சையைக் கடைபிடிக்க வேண்டும் என்று நாட்டிற்குப் பிரசாரம் செய்யும் ஆற்றல் எனக்கு இல்லை. ஆகையால், நமது சுதந்திரத்தை அடைவதற்குக் கண்டிப்பாக அகிம்சையையே அனுசரிக்க வேண்டும் என்று நான் பிரசாரம் செய்துவருவதோடு, அதை முன்னிட்டே அகிம்சை முறைகளாலேயே சர்வதேச உறவை ஒழுங்குபடுத்திக்கொள்ள வேண்டும் என்றும் சொல்லி வருகிறேன். ஆனால், என்னுடைய ஆற்றலின்மையை அகிம்சா தருமத்தின் ஆற்றலின்மை என்று தவறாக எண்ணிவிடக்கூடாது. அதன் முழுப் பிரகாசத்தையும் என் அறிவினால் காண்கிறேன். என் இதயம் அதைக் கிரகித்துக்கொள்கிறது. ஆனால், எல்லாவற்றிற்கும் அகிம்சையையே உபயோகிக்க வேண்டுமென்று சரியானபடி உபதேசிக்கும் பக்குவத்தை நான் அடையவில்லை. பெரிய காரியங்களுக்கு வேண்டிய அபிவிருத்தியை நான் இன்னும் பெறவில்லை. எனக்குள் இன்னும் கோபம் இருந்துகொண்டுதான் இருக்கிறது. துவைத பாவம் (நன்மை, தீமை) ஆகிய இரண்டு அம்சங்களும் இன்னும் என்னிடம் இருக்கின்றன. என் காமக்குரோதம் போன்ற உணர்ச்சிகளை ஒழுங்குபடுத்தியிருக்கிறேன். அவற்றை அடக்கியும் வைத்திருக்கிறேன். ஆனால், அகண்டமான அகிம்சையைப் பலன் தரும் வகையில் உபதேசிக்க ஆரம்பிக்கும் முன்பு காமக் குரோதாதி உணர்ச்சிகளையெல்லாம் அடக்கி ஒழித்துவிட்டவனாக நான் ஆக வேண்டும்; முற்றிலும் பாவத்தையே செய்ய முடியாதவனாகவும் நான் இருக்க வேண்டும். அவ்விதமே நான் சீக்கிரத்தில் ஆக வேண்டும் என்று புரட்சிக்காரர் என்னுடன் சேர்ந்தும், எனக்காகவும் பிரார்த்திப்பாராக. ஆனால், இதற்கிடையில் பட்டப் பகல் போல நான் தெளிவாகக் காணுவதில், அதாவது சுயராஜ்யத்தை அடைவதற்கு அகிம்சையையே கண்டிப்பாக மேற்கொள்ளுவது என்பதில், அதை நோக்கி அவரும் என்னுடன் ஓர் அடி எடுத்துவைக்கட்டும். அப்பொழுது சுயராஜ்யத்தின் கீழ் நீங்களும் நானும், புத்திசாலித்தனமுள்ள படித்த போலீசை வைத்துக்கொள்பவர்களாவோம். அந்தச் சமயத்திற்குள் நானோ அல்லது வேறு யாரோ உள்நாட்டு அமைதியைக் காக்கவும், வெளியார் படையெடுப்பை எதிர்க்கவும் வேறு நல்ல வழியைக் காட்டாது போனால், அந்தப் போலீஸ், உள்நாட்டில் அமைதியை நிலைநாட்டுவதுடன் வெளியிலிருந்து வந்து தாக்குகிறவர்களையும் எதிர்த்துப் போராடும்.

—' எங் இந்தியா '— 7—5—1925.

# 10

# கட்டாய ராணுவப் பயிற்சி

அலாகாபாத் பட்டதாரி ஒருவர் வருமாறு எழுதுகிறார்:

"நான் அலாகாபாத் சர்வகலாசாலையின் பதிவான பட்டதாரி. அலாகாபாத் சர்வகலாசாலைச் சபைத் தேர்தலுக்கு நிற்போருக்கு வாக்களிக்கும் அதிகாரம் பெற்றிருக்கிறேன்.

"சர்வகலாசாலைகளில் ராணுவப்பயிற்சியைக் கட்டாயமாக்குவதை நான் எதிர்ப்பதை ஆட்சேபிக்கின்றனர். இவ்விஷயத்தில் 'எங் இந்தியா' மூலம் உங்கள் கருத்தை நாடுகிறேன். சுருக்கமாக என் கருத்து இதுதான்:

"ஒரு சுயராஜ்ய அரசாங்கத்தின்கீழ் நம் இளைஞர்கள் ராணுவத்தில் இருப்பதை ஓர் உத்தியோகமாக ஏற்றுக்கொள்ள முன்வர வேண்டியிருக்கும்; அந்த உணர்ச்சியை நாம் ஊக்குவிக்க வேண்டும் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால், ஓர் அன்னிய ஆட்சியின்கீழ் இதற்கு முன்னால் இந்திய ராணுவம் இந்தியருக்கு எதிராகவே உபயோகிக்கப்பட்டிருப்பதைப் போலச் சர்வகலாசாலைப் படையும் உபயோகிக்கப்பட்டுவிடாது என்பதற்கு எந்தவிதமான உத்தரவாதமும் இல்லை. மேலும், நம் இளைஞர்களை ராணுவப் பயிற்சி பெற வேண்டும் என்று கட்டாயப்படுத்தினால் ஒழுக்க அடிமைத் தளையில் மற்றுமோர் கரணையையும் சேர்த்துவிட்டதாகாதா? வளர்ச்சிக்குச் சுயேச்சையான சூழ்நிலையை சர்வகலாசாலைகளிலாவது நாம் எதிர்பார்க்கலாம். அப்படியிருக்க, இது சர்வகலாசாலையின் கொள்கைக்கே விரோதமானதல்லவா? நம் லட்சியங்களுக்கு ராணுவ வார்ப்படம் கொடுத்துவிட்டதாகாதா? வெளிநாட்டுச் சர்வகலாசாலைகளைப்பற்றி எனக்கு அவ்வளவாகத் தெரியாது. ஆனால், நான் அறிந்தவரையில் சுதந்திர நாடுகளான இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற நாடுகளில்கூடச் சர்வகலாசாலைகளில் கட்டாயம் இருப்பதாகத் தெரியவில்லை. ராஜீய நோக்கங்களை அலட்சியம் செய்துவிடுவதாக இருந்தாலும், தனிப்பட்டவர்களுக்கு மனச்சாட்சி சுதந்திரத்தையாவது அளிக்க வேண்டாமா? இந்தச் சுதந்திரத்தைக் காப்பதற்காகச் சென்ற யுத்த சமயத்தில் இங்கிலாந்தில் ஏராளமானவர்கள் சிறை சென்றிருக்கிறார்கள். அவர்கள் எல்லோரும் சாவதற்கு அஞ்சவில்லை.

"இந்த விஷயங்களை முற்றிலும் கவனித்தாக வேண்டியிருக்கிறது. இதற்கு மாறாக உடற் பயிற்சியில் கட்டாயம் இருப்பதை நான் மகிழ்வுடன் ஆதரிப்பேன்; உண்மையில் அது வேண்டும் என்றும் கூறி வருகிறேன். அது கட்டாயமாக்கப் படுமானால் ஒரு சர்வகலாசாலை செய்ய வேண்டியதை யெல்லாம் நிறைவேற்றியதுமாகும் என்று கருதுகிறேன்.

"வாழ்க்கையைப்பற்றியோ அல்லது ராஜீயத்தைப்பற்றியோ மாறுபட்ட கருத்துடையவர்களுக்குச் சர்வகலாசாலையின் கதவை அடைத்துவிடக்கூடாது. இப்பொழுதே அந்த ஸ்தாபனங்களில் அதிக இட நெருக்கடி இருந்து வருகிறது."

நான் யுத்த எதிர்ப்பையே மதமாகக் கொண்டவன். அந்த வகையில் சர்வகலாசாலையில் கட்டாய ராணுவ சேவை அளிப்பதைக் குறித்து மேற்கண்ட கடிதத்தை எழுதியிருப்பவர் கூறும் கருத்துக்களை நான் முற்றிலும் அங்கீகரிக்கிறேன். பிரயோசனம், தேசீய நோக்கு ஆகியவைகளைக் கொண்டு கவ

னித்தாலும் அந்த வாதம் சரியானது என்றே தோன்றுகிறது. தேசீய உரிமைகளுக்கு விரோதமான காரியங்களுக்குச் சர்வ கலாசாலைப் படைகள் உபயோகிக்கப்பட்டுவிடாது என்பதற் கான பாதுகாப்பு எதுவும் இருக்க முடியாது என்பது மாத்திர மல்ல; தேசீயத்திற்கு எதிர்ப்பான போக்கை அரசாங்கம் விடாமல் வைத்துக்கொண்டிருக்கும் வரையில், தக்க சமயத்தில் நாட்டு மக்களுக்கு விரோதமாக இப்படைகள் உபயோகிக்கப் பட்டுவிடக்கூடும். இன்னுமொரு ஜாலியன்வாலாபாக்கை நடத்த எதிர்காலத்தில் வரும் டயர் ஒருவர் இந்தப் படை களை உபயோகித்துவிடுவதை எது தடுக்க முடியும்? ஏகாதி பத்திய வர்க்கத்தின் நன்மைக்கு அவசியம் என்று உணர்ந்தால், ஒரு பாவமும் அறியாத சீனர்மீதோ அல்லது அவர்களைப்போலவே நிரபராதிகளான திபேத்தியர்மீதோ நடக்கும் படையெடுப்பில் இளைஞர் தாங்களே படைகளில் சேருவதாக முன் வந்துவிட மாட்டார்களா? யுத்தத்தின்போது அதில் தாங்களாகவே சேர்ந்து சேவை செய்த இளைஞர்களில் சிலர், அதன் மூலம் தாங்கள் யுத்தக்கலையில் அனுபவம் பெற்றதாகத் தங்கள் நடத் தைக்குச் சமாதானம் கூறிக்கொண்டனர். அறிந்தோ, அறியாம லேயோ இதே காரணந்தான் சில எல்லைப்புறப் படையெடுப்பு களைத் தூண்டியது. ஏகாதிபத்தியங்களை வெற்றிகரமாக நடத் திக்கொண்டிருப்பவர்களுக்கு மனித சுபாவத்தைப்பற்றிய அறிவு நன்ருக இருந்து வருகிறது. அந்த அளவில் அது கெட்டதோ, கொடுமையானதோ அன்று. உயர்ந்த உணர்ச்சி இருக்கும்போது அது அற்புதமாகச் செயல் புரிகிறது. ஆயிரக் கணக்கான இளைஞர்கள், எந்தப் படையிலும் சேரும் முன்பு விசுவாசப் பிரமாணம் எடுத்துக்கொள்ள வேண்டும். பல சமயங்களில் அவர்கள் பிரிட்டிஷ் கொடிக்கும் வணங்க வேண்டும். ஆகவே, ராஜவிசுவாசத்திற்கு ஏற்பத் தாங்கள் சரியாக நடந்துகொள்ள வேண்டும் என்று இயற்கையாகவே அவர்கள் எண்ணுவார்கள். சுடும்படி தங்கள் மேலதிகாரி களிடமிருந்து உத்தரவு பிறந்ததும் தங்களுடைய சகோதரர் களையேகூட விரும்பிச் சுடுவார்கள். ஆகையால், குறிப்பிட்ட சமயங்களில் ஆயுதங்களை உபயோகிப்பது அவசியம் என்று நம்பு கிறவர்களுக்கு ராணுவப் பயிற்சி வேண்டும் என்பதை, அகிம் சையிலேயே முற்றிலும் நம்பிக்கை கொண்டிருக்கும் நான் அறி கிறேன்; மெச்சுகிறேன். என்ருலும், மக்களின் தேவையில் முற்றிலும் பொறுப்பற்றதாக இருக்கும் ஓர் அரசாங்கத்தின் கீழ் இந்நாட்டின் இளைஞர்கள் ராணுவப் பயிற்சி பெறுவது என் பதை நான் ஆதரிக்க முடியாது. ஒவ்வொரு விஷயத்திலும்,

ஒரு தேசீய அரசாங்கத்தின் கீழேகூட, கட்டாய ராணுவ சேவைக்கு நான் எதிராகவே இருக்க வேண்டும். ராணுவ சேவை பெற விரும்பாதவர்கள், பொதுச் சர்வகலாசாலையில் சேருவதைத் தடுக்கக்கூடாது. உடற்பயிற்சி முற்றிலும் வேறு அடிப்படையைக் கொண்டது. மற்ற பாடங்களைப் போலவே இதுவும் சிறந்த கல்வியின் திட்டத்தில் ஒரு பகுதியாக இருக்கலாம்; இருக்க வேண்டும்.

–' எங் இந்தியா '- 24—9—1925.

# 11

# மனச்சாட்சிக்காக

'பாக்ஸ் இன்டர்நாஷனல்' என்பது ஜெனிவாவில் வெளியாகும் மாதப் பத்திரிகை. சமாதானம், சுதந்திரம் இவற்றில் ஆர்வமுள்ள சர்வதேசப் பெண்கள் சங்கத்தின் சார்பில் அது வெளியிடப்படுகிறது. அந்த மாதப் பத்திரிகையின் நவம்பர் இதழ் என் முன்பு இருக்கிறது. அதில் கீழ்வருமாறு காணப்படுகிறது:

"யூகோஸ்லாவியாவில் நாஜரீன் என்ற மதஸ்தபானத்தைச் சேர்ந்த 72 பேர், ஆயுதம் தாங்க மறுத்தார்கள் என்ற குற்றத்திற்காக ஸாவா ஜில்லா ராணுவக் கோர்ட்டினால் 10 வருடச் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டிருக்கின்றனர். இத்தண்டனை அடைந்தவர்கள் எல்லோரும் இதற்கு முன்னால் 5 ஆண்டுகள் தண்டனையை அனுபவித்திருக்கிறார்கள். உலகம் முழுவதிலுமுள்ள சமாதான நண்பர்கள் எல்லோரும் மனிதத் தன்மையற்ற இந்தத் தண்டனையைக் கண்டிப்பதோடு அதை மாற்ற வேண்டும் என்றும் கேட்க வேண்டும்."

இந்தச் சமாதான இயக்கம் மேற்கத்திய உலகில் தோன்றியிருக்கும் அற்புதமான விழிப்பு. துவேஷ தருமத்திற்குப் பதிலாக அன்பின் தருமத்தைப் பின்பற்றும் கௌரவமான 72 பேருக்கு, அவர்கள் ஆயுதம் தாங்க மறுத்தார்கள் என்பதற்காக, ஓர் ஆட்சி முறையின்கீழ் 10 வருடச் சிறைத் தண்டனை விதிக்கப்படுகிறது என்றால், இதுவே அதன் காட்டுமிராண்டித்தனத்திற்கு ருசு. இந்த மிருகத்தனமான தண்டனையை உலகத்தின் மனச்சாட்சி வெறுத்தாலும் வெறுக்காது போயினும், அத்தகைய வெறுப்பு யூகோஸ்லாவிய அரசாங்கத்தினிடம் பலனை உண்டாக்கினாலும் உண்டாக்காது போயினும், ஒன்று மட்டும் நிச்சயம்; அந்த ஆட்சி முறை தன் கடைசி மூச்சுப் போகும் தறுவாயில் இருக்க வேண்டும். ஒரு பாவமுமறியாத கௌரவமான மக்களுக்குக் காட்டுமிராண்டித்தனமான தண்டனையை விதிப்பதிலிருந்து அவ்வாட்சி தன் கடைசி மூச்சுக்காகத் திணறுகிறதெனத் தெரிகிறது. இந்த வீரமுள்ள

நாஜரீன்களுக்கு மரியாதையோடு கூடிய என்னுடைய பாராட்டு களைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். நீண்ட பத்து ஆண்டுகள் இவர்கள் சிறையில் புதைந்து கிடக்க யூகோஸ்லாவியாவின் மனச்சாட்சியே அனுமதிக்காது என்று நம்புகிறேன்.

— 'எங் இந்தியா' — 14—2—1929.

# 12

# பெண்களும் யுத்தமும்

யுத்தத்திற்கு எதிரான இயக்கம் ஒன்று மேற்கத்திய நாடு களில் நிதானமாக வளர்ந்துகொண்டு வருகிறது. இந்த இயக் கத்தை மேற்கத்தியப் பெண்களே முன்னின்று நடத்தவில்லை யெனினும், அதில் முக்கியமான பங்கு வகிக்கிருர்கள். பெண் களின் சமாதான, சுதந்திர சர்வதேச சங்கம், பிராங்க்போர்ட் - ஆன் – மெயினில் ஜனவரி 4-ஆம் தேதி நடத்திய மகா நாட்டில் கீழ்க்கண்ட சிறந்த கோரிக்கையை வெளியிட்டிருக் கிறது :

"முன்பெல்லாம் யுத்தம் குறிப்பிட்ட பகுதியில்தான் நடந்து வந்தது; தீமை அந்த இடத்தோடு இருந்தது.

இன்ரூே யுத்தம் தொடங்கிவிட்டால் எல்லா இடங்களுக்குமே பரவிவிடு கிறது. இதற்கு முன்னுல் பயமும் ஆபத்தும் ஒரு பகுதியில் இருந்தன. இன்ரூே உலகம் முழுவதுமே இருக்கின்றன. உலகத்தின் எல்லாப் பகுதிகளிலும் ஏககாலத்தில் இந்தத் தீ எரிய ஆரம்பித்திருக்கிறது. இவ்வளவு பயங்கரமான வகையில் யுத்தம் உலகத்தைத் திடுக்குறச் செய்ததில்லை. இக்கால யுத்த முறைகளைப்போல் முன்னர் எந்த யுத்தமும் எண்ணற்ற ஜனத்தொகையினரை மிரட்டியதில்லை. வயிற்றுப் பிழைப்புக்காகச் சேர்ந்தவர்களிடையே நடக்கும் யுத்தமாக அது இப்பொழுது இல்லை. திரண்டெழுந்த இளைஞர்கள் தொடுத்த யுத்தமாகவும் அது இப்பொழுது இல்லை.

எல்லா மக்களுமே ஆபத்துக்குள்ளாக்கப்படுகின்றனர்!

தினந்தோறும் விஞ்ஞானம் உண்டாக்கும் புதுப்புது முறைகளைக்கொண்ட தாகவே இப்போதைய யுத்தம் இருக்கும் என்பதை அவர்கள் அறிவார்களா?

விமானங்கள், செலுத்துவோர் இராமலேயே ரேடியோவினுல் இயக்கப்படு கின்றன; விஷப்புகை, குண்டுகள், தீக்குண்டுகள் ஆகியவைகளைக்கொண்டு சில நிமிட நேரத்திற்குள் லண்டன், பாரீஸ், பெர்லின் போன்ற பெரிய நகரங்களை ஒரே சமயத்தில் நாசப்படுத்திவிட முடியும்; இவற்றையெல்லாம் அவர்கள் அறிவார்களா?

விஷப்புகை, சில சமயங்கள் இடி பாய்வதுபோலச் சேதம் விளைக்கின்றது; சில சமயங்களில் நீடித்த துன்பத்திற்கு மனித வர்க்கத்தை ஆளாக்கி அழிப்ப தோடு மாத்திரமல்லாமல் பூமிக்குள் ஆழமாகவும் போய் அங்குள்ள நீரையும் மற்றப் பொருள்களையும் விஷமாக்கிவிடுகிறது என்பது அவர்களுக்குத் தெரியுமா?

விஷப்புகையால் அழியாது தப்பியவைகளையெல்லாம் ரசாயனச் சேர்க்கையால் 1,000 டிகிரி உஷ்ணத்தை உண்டாக்கும் தீக்குண்டுகள் அழித்துவிடும் என்பது அவர்களுக்குத் தெரியுமா?

இவ்விதம் புதிய யுத்தம் ஏககாலத்தில் எல்லா நாட்டு மக்களையுமே நிர்மூலமாக்கி நாகரிகத்திற்கே ஆபத்தை விளைவிப்பது என்பது அவர்களுக்குத் தெரியுமா?

இப்பொழுது எல்லா நாடுகளையும் நாசத்திற்கு இழுத்துச் செல்லும் ஆயுதப் போட்டி தொடர்ந்துகொண்டிருக்குமாயின் ஒரு புதிய யுத்தம் மூள்வதை எதனாலும் தடுத்துவிட முடியாது.

எவ்வளவு பெரிய ஆபத்துத் தங்களை நோக்கி வருகிறது என்பதைப் பொதுமக்கள் அறியும்படி செய்வது கடமை.

யுத்தத்தில் உபயோகிப்பதற்காக விஞ்ஞானம் கண்டுபிடித்து வரும் ரசாயன முறையானதும், விஷக்கிருமிகள் பரப்புவதுமான யுத்த முறையிலிருந்து பாதுகாத்துக்கொள்வதற்கு எந்த முயற்சியும் வீண் என்பதை அவர்களுக்குக் காட்டவேண்டியது கடமை.

சோஷலிஸ்ட் ருஷியா, 1927–இலிருந்து படைபலக்குறைப்புக்கு யோசனைகளைக் கூறி வருகிறது. 'யுத்தத்தைத் துறக்கும்' ஒப்பந்தங்களைப் பல நாடுகள் செய்துகொண்டிருக்கின்றன. இத்துறப்பின் நியாயமான முடிவு, படைப் பலக் குறைப்பாகவே இருக்கவேண்டும். புதிய யுத்தங்களைத் தவிர்ப்பதற்கு அது ஒன்றே வழி.

இதை நீங்கள் எங்களுடன் ஒப்புக்கொள்வதாயிருந்தால், நாங்கள் மேற்கொண்டிருக்கும் இயக்கத்திற்கு மேலும் தீவிரமான வழியில் நீங்கள் உதவி அளிக்க முடியவில்லையென்றால், உங்கள் பெயரைக் கொண்டு உங்கள் ஆத்மிக ஆதரவை அளித்து வெற்றி அடையச் செய்யுங்கள். உங்கள் சக்திக்கு ஏற்றபடி மற்ற உதவிகளையும் செய்யுங்கள்.''

எந்தப் பொருள் உதவியையும் செய்ய முடியாத அளவுக்கு நாங்கள் மிகவும் ஏழைகள். மேலும், எந்த யுத்தத்திலும் சம்பந்தப்படும் நாட்டினரல்ல நாங்கள். நாங்கள் சுதந்திரமானவர்களாகும் வரையில் உலகத்தில் ஏற்படும் யுத்தங்களுக்குப் பலியாக வேண்டியவர்களாக இருக்கிறோம். ஆனால், சுதந்திரத்தை யுத்தம் போன்ற முறைகளினாலல்லாமல் அகிம்சை முறையில் அடைவதன் மூலம் உங்கள் இயக்கத்திற்குத் தார்மிக வழியிலும் பொருள் வழியிலும் அதிகமாகவே நாங்கள் உதவி செய்ய முடியும். காங்கிரஸ், தன் நாட்டின் சுதந்திரத்தை, அதாவது சுயராஜ்யத்தை அகிம்சை, சத்திய முறை கொண்டு அடைவதென்று பிரகடனம் செய்ததன் மூலம் * சமாதானத்தை

---

* சுயராஜ்யத்திற்கு காங்கிரஸ் மேற்கொண்ட போர் முறையையே காந்திஜி இங்கு குறிப்பிடுகிறார், 1920-இல் நாகபுரியில் நடந்த காங்கிரஸில் காந்திஜி கொண்டு வந்த திருத்தத்துடன் காங்கிரஸின் நோக்கத்தைக் குறித்து வருமாறு தீர்மானம் நிறைவேறியது: ''இந்திய மக்களால், எல்லா நியாயமான, அமைதியான முறைகளையும் கொண்டு சுயராஜ்யத்தை அடைவதே காங்கிரஸின் நோக்கம்.'' இதுவே பிறகு காங்கிரஸின் தருமமும் ஆனதோடு 'எல்லா நியாயமான, அமைதியான முறைகள்' என்பது 'சத்தியத்தோடும் அகிம்சையோடும் கூடிய முறைகள்' என்றுமாயிற்று.

நோக்கி அற்புதமான காரியத்தைச் செய்திருக்கிறது என்பதை உலக சமாதான நண்பர்களுக்குக் கூறுகிறேன். எங்கள் லட்சியத்தை அடைவதற்காக இந்த முறையைத் தவருமல் நாங்கள் அனுசரிப்போமாயின் நாங்கள் உலக சமாதானத்திற்கு மிகப் பெரிய உதவியைச் செய்தவர்களாவோம் என்று நிச்சயமாகக் கூறுவேன்.

— 'எங் இந்தியா' — 21—3—1929.

# 13

# நமது விருப்பம்

'தி ஒர்ல்டு டுமாரோ' என்ற பத்திரிகையின் பழைய (ஆகஸ்டு) 1928 பிரதியிலிருந்து செய்தி ஒன்றை ஓர் அமெரிக்க நிருபர் கத்தரித்து எனக்கு அனுப்பியிருக்கிருர். 'யுத்த எதிர்ப்பையும் தேசீயப் பாதுகாப்பையும்' பற்றி ஜான் நெவின் ஸாய்ரே எழுதிய அற்புதமான கட்டுரை அது. அதை ஒவ்வொரு தோசாபிமானியும் படிக்கவேண்டும். அக்கட்டுரையின் ஆரம்பப் பகுதி கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது. அதை எழுதியவர் நம்மை எங்கே கொண்டு போகிருர் என்பதை அது காட்டுகிறது:

"இருபதாம் நூற்ருண்டின் விஞ்ஞானக் கருவிகளை உபயோகித்துக் கொள்ளும் நாகரிகம் இது. இதில் தேசீய யுத்தத் தளவாடங்கள் இந்நாகரிகத்தின் பாதுகாப்புக்கு ஏற்றவையாகுமா? இதைப்பற்றிச் சிந்திக்குமாறே மக்களை யுத்த எதிர்ப்புக் கொள்கை முதலாவதாகக் கேட்டுக்கொள்ளுகிறது. முன்பெல்லாம் பாதுகாப்புக்கு யுத்தத் தளவாடங்கள் உபயோகிக்கப்பட்டதைக் குறித்துக் கூறப்பட்டு வந்தது எதுவானுலும் சரி, அந்த வழியைக்கொண்டு இப்பொழுது பாதுகாப்பை அடைய முயல்வது முற்றிலும் வீணனது, மிகவும் ஆபத்தானது என்று நாங்கள் நம்புகிறோம். நாம் வாழும் இந்த உலகத்தில், உடனடியாக வரப்போகும் சில பத்து ஆண்டுகளில், இரண்டுவிதக் காரணங்களினல் இவ்வழிப் பாதுகாப்பு ஆட்சேபத்திற்கு உரியதாகிறது: (1) பெருகிக் கொண்டே போகும் செலவு. (2) குறைந்துகொண்டே போகும் பாதுகாப்பின் சக்தி.

"நாற்பது ஆண்டுகளுக்கு மத்தியில், அதாவது என் வாசகர்கள் பலரின் வாழ்நாளில், அமெரிக்கா தன்னுடைய கடற்படையின் வருடச் செலவை 150 லட்சம் டாலரிலிருந்து 3,180 லட்சம் டாலருக்கு அதிகரித்துக்கொண்டிருக்கிறது. அமெரிக்கக் காங்கிரஸின் சென்ற கூட்டத்தில் அங்கீகரித்திருக்கும் செலவின்படி ஒவ்வோர் இருபத்து நான்கு மணி நேரத்திற்கும் அமெரிக்கா தன்னுடைய ராணுவத்திற்கும் கடற்படைக்கும் 20 லட்சம் டாலர் செலவிடுகிறது என்ருகிறது. 1927 மார்ச்சில் 'நியூ யார்க் டைம்ஸ்' பிரசுரித்த ஒரு தலையங்கத்திற்கு 'யுத்தம்-மனிதனின் மிகப்பெரும் தொழில்' என்று தலைப்புக் கொடுத்திருந்தது. 'யுத்தத்திற்குத் தயாராக இருப்பதற்குச் செய்துகொள்ளும் ஏற்பாடு உண்மையில் உலகத்தில் மிகப் பெரிய தொழிலாகிறது' என்று அதை எழுதியவர் கூறியிருக்கிருர்.

"டாலர் அளவில் கணக்கிட முடியாததான மனிதர் நஷ்டம் வேறு இதில் அதிகரித்து வருகிறது. யுத்த யந்திரங்களைத் தயாரிக்க வேண்டியவர்கள் மனிதர். வெடிமருந்து, குண்டுகள் முதலியவைகளையும் மனிதரே தயாரிக்க வேண்டியிருக்கிறது. இவ்விதம் தொழில்களையும் மக்களையுமே யுத்தசேவைக்கு ஈடுபடுத்திக்கொள்ளும் வகையில் மேலும் மேலும் காரியங்கள் செய்யப்படுகின்றன. ஒரு காலத்தில் யுத்தங்களில் அதற்கென்றே பழக்கப்பட்ட ராணுவத்தினர் போராடி வந்தனர். ஆனல், அவர்கள் எந்த நாட்டிலும் மக்களில் ஒரு சிறு பகுதியினர். இன்றோ, ராணுவ நிபுணர்கள் ஆள் பலம் முழுவதன் நடவடிக்கைகளையும் கட்டாயமாக ராணுவ சேவையில் ஈடுபடுத்தும் வகையில் திட்டமிட்டு வருகிறார்கள். பிரான்ஸில் வரவிருக்கும் ஒரு சட்டம், கட்டாய ராணுவ சேவைக்குப் பெண்களையும் திரட்ட அரசாங்கத்திற்கு அதிகாரம் அளிக்கிறது; சமாதான காலத்தில் கட்டாய ராணுவப் பயிற்சி அளிக்கப்படுகிறது. யுத்த இலாகாவினல் நடத்தப்படும் ராணுவ இலாகா, பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் படையெடுத்திருக்கிறது. இவை இளைஞருக்குப் படிக்க இருக்கும் நேரத்தைத் தனக்கு எடுத்துக்கொண்டு விடுவதுடன் இளைஞர்களின் சிந்தனையையும் ராணுவக் கட்டுதிட்டங்களுக்கு உட்படுத்துகின்றன. தபாலாபீஸ், பத்திரிகைகள், ரேடியோ, சினிமாப்படங்கள், சித்திரக்காரர்கள், விஞ்ஞானிகள் ஆகியோர் எல்லோரும் யுத்தத்திற்குத் தயாராக இருக்கும் யந்திரத்தை அமைப்பதற்கு உதவி செய்யும்படி கட்டாயப்படுத்தப்படும் அபாயத்தில் இருக்கின்றனர். இவைகளினலெல்லாம் மனித உரிமையும், சிந்தனை, விவாதம்பற்றிய சுதந்திரமும் மேலும் இல்லாது போவதோடு சமூக முன்னேற்ற வாய்ப்பும் இல்லாததாகிறது. 'போதிய' பாதுகாப்புத் திட்டத்தை அமைப்பதற்கென்று ஆகும் செலவைக் கணக்கிடுவதில் இவைகளையெல்லாம் முற்றிலும் கவனிக்க வேண்டும். ராணுவ ஆயத்தத்துடன் இருப்பதென்பது இன்று ஏராளச் செலவாவதாக இருக்கிறது. வருங்காலத்திலோ இன்னும் இது அதிகரித்துக் கொண்டு போகும்.

"இதில், இன்னும் மோசமானது என்னவென்றால், இன்றைய உலகத்தில் யுத்த தளவாடங்களுக்கான செலவை ஏற்றிக்கொண்டு போவது அதிகப் பாதுகாப்பை விலைக்கு வாங்கிவிட முடியாமல் இருப்பதுதான். இது ஒருவேளை சில ஆண்டுகளுக்குச் சாத்தியமானதாகலாம். ஆனல், இக்கொள்கையினல் வரவரப் பலன் குறைந்துகொண்டே போய் நாசத்தை உண்டாக்கும் நெருக்கடியிலேயே போய் முடியும். 'தயாராக இருப்பது என்பது என்ன?' என்பதைப்பற்றிச் செனேட்டார் போரா விவாதிக்கையில், அரசாங்கங்கள் பட்டிருக்கும் கடன் தொகைகள் ஏராளமாகியிருப்பதையும், உலகம் முழுவதும் மக்கள்மீது அரசாங்கங்கள் வரிச்சுமையை அதிகரித்துக்கொண்டே போவதையும் குறிப்பிட்டார். 'வரும் காலத்தில் அரசாங்கங்கள் கண்டு திருப்திப்பட வேண்டியதெல்லாம் பொருளாதாரச் சங்கடங்களையும் தங்கள் சொந்த மக்களின் ராஜீயக் கொந்தளிப்பையுமேயாகும்' என்றார் அவர். மக்களுக்கும் அவர்கள் அரசாங்கத்திற்குமிடையே இருக்கும் பிளவை இது இன்னும் அதிகமாக்கும். ஏற்கனவே இருக்கும் சுமையை மக்களால் தாங்கமுடியவில்லை; இதுவும் சேர்ந்தால் அவர்கள் உற்சாகமில்லாதபடி செய்து கொதிப்படையவே ஏதுவாகும் பொருளாதாரச் சங்கடங்களை அதிகரிப்பது தயாரின்மையையே காட்டும். ஆகவே, இது 'தயாராக இருப்பது' ஆகாது."

அமெரிக்காவும் பிரிட்டனும் என்ன செய்கின்றனவோ அவையெல்லாம் நமக்கும் நன்மையானதே என்று நினைப்பது இக்

காலத்தில் ஒரு வழக்கமாகிவிட்டது. ஆனால், இக்கட்டுரையை எழுதியிருப்பவர், அமெரிக்கா தன்னுடைய யுத்தத் தளவாடங்களுக்குச் செலவிடும் தொகையைப் பற்றிக் கூறும் விவரம் நினைத்துப் பார்க்கவும் பயங்கரமாக இருக்கிறது. யுத்தம் என்பது பணத்தையும், அழிவுக்கு உதவும் ஆயுதங்களைப் புதிதாகக் கண்டுபிடிக்க உள்ள வசதியையும் பொறுத்ததாகிவிட்டது. சொந்த வீரத்தையோ அல்லது சகிப்புத் தன்மையையோ கொண்டதாக இப்பொழுது யுத்தம் இல்லை. ஆண், பெண், குழந்தைகளை அழித்துவிடுவதற்கு நான் ஒரு பித்தானை அழுத்தி ஒரே விநாடியில் அவர்கள்மீது விஷத்தைப் போட்டாலே போதும்.

நம்மைப் பாதுகாத்துக்கொள்ளுவதற்கு இந்த முறையையே நாமும் அனுசரிக்க வேண்டும் என்று நாம் விரும்புகிறோமா? நாம் அப்படி விரும்பினாலும் அதற்கு வேண்டிய பண வசதி நமக்கு இருக்கிறதா? ராணுவச் செலவு அதிகரித்துக்கொண்டே போவதைக் குறித்துக் குறை கூறி வருகிறோம். ஆனால் அமெரிக்காவையும் இங்கிலாந்தையும் பின்பற்றுவதாயிருந்தால் பலவைப் பன்மடங்கு அதிகரித்துக்கொள்ள நேரும்.

'செய்யத் தகுந்த காரியமே அது என்றால் ஏன் செய்யக் கூடாது?' என்று ஒருவர் கிளறிக் கேட்கிறார். அப்படியானால், 'செய்யத் தகுந்த காரியமா அது?' என்ற கேள்வி எழுகிறது. ஸ்ரீ ஸேய்ரே இதற்குத் திட்டமாகப் பதில் சொல்லுகிறார்: "எந்த நாடும் செய்யத் தகுந்த காரியமன்று அது.' அரசாங்கத்தினால் எதிர்க்கப்பட்டு வரும்போது, நம் கடற்படை அல்லது ராணுவத் திட்டம் என்று சொல்லப்படுவதைக் குறித்து நான் எதுவும் சொல்லவில்லை. பலாத்காரத்தைக் கொண்டு அகிம்சை வழியில் நாட்டை வைத்திருக்க முடியாது. அவ்வாறு இருக்க விரும்பினால் அது உள்ளுக்குள்ளிருந்து வளர்ந்து வரவேண்டும். ஆகையால், நாம் யோசிக்கவேண்டிய விஷயம், 'உடனடியாக நாம் அடைய விரும்புவது என்ன?' என்பதே. முதலில் மேற்கத்திய நாடுகளைப் பின்பற்றி நடந்து, எப்பொழுதோ வெகு காலம் கழித்து, துன்பங்களையெல்லாம் அனுபவித்துவிட்ட பிறகு, நாம் சரியான வழிக்குத் திரும்பிப் போக விரும்புகிறோமா? அல்லது நமக்கே உரித்தான புதியதோர் வழியை வகுத்துக்கொண்டு அல்லது நமக்கு சொந்தமான சமாதான வழியைக் கடைப்பிடித்து அதன்மூலம் வெற்றி கண்டு நம் சுதந்திரத்தை உறுதிப்படுத்த விரும்புகிறோமா?

கோழைத்தனத்துடன் சமரசத்திற்கு வருவது என்பதற்கு இங்கு இடமே கிடையாது. தற்காப்புக்காக என்றாலும் அழிப்பதற்கே நான் பயிற்சி பெற்று ஆயுதங்களை எடுக்கவேண்டும். அவ்வழியில் துன்பத்தை அனுபவிப்பதற்கும் பழகிக்கொள்ள வேண்டும். இல்லையானால், நாட்டைப் பாதுகாப்பதற்கும் பிறர் ஆதிக்கத்திலிருந்து அதை விடுவிப்பதற்கும் துன்பங்களை அனுபவிப்பதற்கு மட்டும் நாம் பழகிக்கொள்ளவேண்டும். இந்த இரண்டுக்கும் வீரம் இன்றியமையாதது. இரண்டாவது காரியத்திற்கு வேண்டியதைப் போல முதலில் கூறியதற்குத் தனிப்பட்ட வீரம் அவ்வளவு முக்கியமானதன்று. இரண்டாவது விஷயத்தில்கூட முற்றிலும் பலாத்காரம் இல்லாமலே நாம் என்றுமே செய்ய முடியாமல் இருக்கவும் கூடும். ஆனால், அப்பொழுது பலாத்காரம் அகிம்சைக்கு அடங்கியதாக இருக்கவேண்டும். மேலும், அது தேசீய வாழ்வில் குறைந்துகொண்டு போகக்கூடியதாகவும் இருக்க வேண்டும்.

இப்பொழுது தேசீயக் கொள்கை அகிம்சையாக இருந்த போதிலும் சிந்தனையிலும் சொல்லிலும் நாம் பலாத்காரத்தை நோக்கிப் போய்க்கொண்டிருப்பதாகவே தோன்றுகிறது. பொறுமையின்மை எங்கும் நிலவுகிறது. நமது பலவீனம் காரணமாகப் பலாத்காரத்தினின்றும் ஒதுங்கியிருக்கிறோம். வேண்டியதெல்லாம் என்ன? பலத்தில் இருந்தபடியே பலாத்காரத்தில் ஈடுபடாமல் இருப்பதே. இதைச் செய்ய முடிவதற்குச் சிந்தனையும் உலகப் போக்கைப்பற்றிய ஆழ்ந்த ஆராய்ச்சியும் வேண்டும். மேலெழுந்தவாரியான மேற்கத்தியப் பகட்டு நம்மை இன்று மயக்குகிறது. நாள்தோறும் நம் கண் முன் நடக்கும் இந்த மாய நடனத்தை அபிவிருத்தி என்று நாம் தவறாக எண்ணிக்கொள்ளுகிறோம். அது நம்மை அழிவுக்குக் கொண்டு போவதை நாம் உணர்ந்துகொள்ள மறுக்கிறோம். மேற்கத்திய நாடுகளுடன் அவற்றின் வழியில் போட்டி போடுவது என்பது தற்கொலை செய்துகொள்ளுவதேயாகும் என்பதை எல்லாவற்றையும்விட முக்கியமாக நாம் தெரிந்துகொள்ள வேண்டும். பலாத்காரம் உயர்ந்தது என்று தோற்றத்தில் தெரிந்தாலும் பிரபஞ்சத்தை நன்னெறியே ஆண்டு வருகிறது என்பதை நாம் அறிய வேண்டும். அப்படி அறிந்துகொண்டு விடுவோமாயின், அகிம்சையின் எல்லையில்லாத சாத்தியங்களில் நம்பிக்கை கொண்டு அதில் நாம் பயிற்சி பெறுவோம். 1922-இல் அகிம்சைச் சூழ்நிலையை உண்டாக்கியிருப்போமாயின் நமது லட்சியத்தை முழுதும் அடைந்திருக்க முடியும் என்று எல்லோரும் ஒப்புக்

கொள்ளுகிருர்கள்.* இருந்தாலுங்கூட, அவ்வளவு சிறந்ததாக இல்லாது போயினும், அகிம்சையின் சாத்தியத்தை அப்பொழுதும் ஓரளவுக்குக் காட்டியே இருக்கிரேம். அப்பொழுது அடைந்த சுயராஜ்யத்தின் சாரத்தை என்றும் நாம் இழந்துவிடவுமில்லை. சத்தியாக்கிரகத்தை மேற்கொள்ளுவதற்கு முன்னல், நாட்டை அலைத்துவந்த பயம் ஒரேயடியாக ஒழிந்துவிட்டது. ஆகையால், பொறுமையுடன் பயிற்சி பெறுவதைப் பொறுத்திருக்கிறது அகிம்சை என்பது என் கருத்து. நாம் காக்கப்பட்டு, உலகத்தின் முன்னேற்றத்திற்குக் கணிசமான உதவியையும் நாம் செய்யவேண்டுமாயின், நம் வழி சமாதான முறையிலேயே உறுதியுடனும், முக்கியமாகவும் இருத்தல் வேண்டும்.

—'எங் இந்தியா' - 22—7—1929.

# 14

# ராணுவத் திட்டம்

என்னுடைய அருமையான தோழர்களில் ஒருவர் ஜார்ஜ் ஜோசப். எரவாடாவில் நான் ஓய்வு பெற்று வந்தபோது அவர் 'எங் இந்தியா'வுக்கு ஆசிரியராக இருந்தார். அதற்கு முன்னல், இப்பொழுது நிறுத்தப்பட்டுவிட்ட 'இண்டிபெண்டண்ட்' பத்திரிகைக்கு என் விருப்பத்திற்கு இணங்க அவர் ஆசிரியராகவும் இருந்தார். அதிக வருமானம் வந்துகொண்டிருந்த தமது வக்கீல் தொழிலை நாட்டிற்காகத் தியாகம் செய்தார். இதே லட்சியத்திற்காகச் சிறைக்கும் சென்ருர். உள்ளன்போடு கூடிய யோக்கியமான ஊழியர் அவர். ஆகையால், அவர் கூறுவதை மரியாதை கொடுத்துக் கவனிக்க வேண்டியது அவசியமாகிறது. அப்படிப்பட்ட ஒருவர் நம்மிடமிருந்து மாறுபடும்போது, பழைய கொள்கையை விட்டுப் புதிதாக ஒரு மதத்தைத் தழுவுபவரின் தீவிரத்துடன் ஒரு புதிய கொள்கையை அனுசரிக்க வேண்டும் என்று அவர் சிபாரிசு செய்யும்போது, இன்னும் முக்கியமாக அவர் கூறுவதைக் கவனிக்கவேண்டும். ஜார்ஜ் ஜோசப் அப்படிச் செய்திருக்கிருர். தமது புதிய கொள்கையை ஜோசப் விளக்கியிருக்கும் கட்டுரையடங்கிய ஒரு பத்திரிகையை நறுக்கி

---

* 1922-இல் நாடெங்கும் பொதுஜன சட்டமறுப்பை ஆரம்பிப்பதற்கான ஏற்பாடுகள் நடந்துவந்தன. பர்டோலியில் சட்டமறுப்பை தாமே முன்னின்று நடத்துவதற்கு காந்திஜியும் அங்கு சென்று விட்டார். அந்நிலையில் சௌரி சௌராவில் நடந்து விட்ட பலாத்காரச்செயல்களினுல் சட்டமறுப்புப் போராட்டத்தை காந்திஜி கைவிட வேண்டியதாயிற்று. அகிம்சைச் சூழ்நிலை அன்று இல்லாது போனதைக் குறித்தே காந்திஜி இதில் குறிப்பிடுகிருர்.

அவருடைய பழைய நண்பர் ஒருவர் எனக்கு அனுப்பியிருக்கிருர். ‘இது ஜோசபின் தருமம்’ என்றும் இவர் குறிப்பிட்டிருக்கிருர். ஜார்ஜ் ஜோசப்பைப் போற்றும் ஆள் தெரியாத இன்னொருவரோ, கதர் வேலைத் திட்டத்தைக் குறித்து அவர் குறை கூறியிருப்பதையெல்லாம் அக்கட்டுரையிலிருந்து எடுத்து, எழுதி அனுப்பிருக்கிருர். நிதானமில்லாத போக்கில் அவர் எழுதி, கதரைப்பற்றிக் கூறியிருப்பதை நான் கவனிக்க வேண்டும் என்கிருர்.

நிதானம் இழந்துவிடுவதற்கோ, துக்கப்படுவதற்கோ அல்லது திகிலடைவதற்கோ காரணம் எதுவுமே இல்லை. ஒரு பெரிய தேசீயப் போராட்டத்தில் பழைய கருத்துக்களை நேர்மையாக புறக்கணித்துப் புதிய கருத்துக்களைக் கொள்ளுகிறவர்களை நாம் காணவில்லையென்ருல் அதுதான் ஆச்சரியமாகும். மாறுதல் அபிவிருத்திக்கு அவசியமானது. எல்லாம் தவறு என்று மனம் புரட்சி செய்யும்போது நேர்மையான ஒருவர் யந்திரம் போல ஒரேவிதமாக இருந்துவிட முடியாது. ஆகையால், ஜார்ஜ் ஜோசப் என்னதான் கூறுகிருர் என்பதை அறிந்துகொள்ளப் பொறுமையுடன் நாம் முயற்சி செய்யவேண்டும். அவர் கூறுபவை நம் அறிவுக்கு நியாயமானவை என்று பட்டால், நாம் போற்றி அனுசரித்து வந்திருக்கும் சில கொள்கைகளைத் தியாகம் செய்ய நேர்ந்தாலும் அவற்றை ஏற்றுக்கொள்ள நாம் தயங்கக்கூடாது.

ஜோசப்பின் பேச்சை இந்த மனப்போக்கின் பேரிலேயே பரிசீலனை செய்ய நான் முயன்றிருக்கிறேன் என நம்புகிறேன். கதரை அவர் கண்டிக்கிருர். “தீண்டாமையை ஒழிப்பது கொஞ்சமேனும் ராஜதந்திரத்திற்குரிய பிரச்னையே அல்ல” என்பதில் தாம் முற்றிலும் திருப்தியடைந்திருப்பதாகக் கூறுகிருர். அவருடைய வேலைத் திட்டத்தை ஒரு சிறு வாக்கியத்தில் அடக்குவதானல், ‘இந்தியாவை ராணுவ மயமாக்கு’ என்பது தான். அவருடைய பிரசங்கத்திலிருந்து ஒரு பகுதி இது :

“நாம் எல்லோரும் சிப்பாய்கள் ஆகிவிட முடியாது. நம் எல்லோருக்கும் அதில் போதிய இடமும் இல்லை. ஆனல், இம்மாகாணத்தில் ஆண்டுதோறும் பட்டணவாச கோஷ்டிகளில் சுமார் 5,000 பேருக்குப் பயிற்சியளிக்கும் கருத்தைச் செயல் முறையாக்குவது நமக்குச் சாத்தியமாக இருக்கவேண்டும். வாரத்திற்கு இரண்டு அல்லது மூன்று தடவை அவர்கள் கவாத்துக்குப் போவார்கள். வருடத்தில் மூன்று வாரங்கள் முகாமுக்குச் செல்லுவர். கல்லூரியிலிருக்கும் மாணவருக்கேயன்றிப் போதிய சமூக, கல்வி அந்தஸ்து உள்ளவர்களுக்கும் இந்தப் பயிற்சி கிடைக்கும்படி செய்யவேண்டும். பள்ளியை விட்டு வெளியேறும் கடைசி வகுப்பில் படித்திருந்தால் போதும் என்பதே அக்கல்வியின்

தகுதியாக இருக்க வேண்டும். ஒவ்வொரு தெருவிலும் இப்படிப்பட்டவர்கள் காக்கி உடைகளில் போவதை நீங்கள் பார்த்தால் நம் வாழ்க்கையில் புதிய அம்சம் உண்டாகும். இத்தகைய பயிற்சி மக்களை நேர் வழியில் நின்று நேராகச் சிந்திக்கவும், நேராகப் பேசவும் செய்யும். நம் வாழ்க்கையை இது மிகவும் வளப்படுத்தியதாகவும் ஆகும்.''

என்னுடைய அனுபவம் எனக்கு வேறுவிதமாகப் போதிக்கிறது. காக்கி உடை தரித்தவர்கள் நேரான வழியில் நிற்பதற்குப் பதிலாகச் சாக்கடையில் கிடந்து புரளுவதையும் நான் பார்த்திருக்கிறேன். ஒரு டயர், கோணல் புத்தியுடன் நேர்மையாகப் பேசாமல் அர்த்தம் இல்லாததைப் பேசியதையும் பார்த்திருக்கிறேன். நேராக எண்ணுவதில்லை என்பது போகட்டும்; எதையும் சிந்திக்காமலே காரியம் செய்த ஒரு ஹுராவத் தளபதியையும் நான் அறிவேன். ராணுவப் பயிற்சியைப் பெருமையாக நினைக்கிறவர்கள், அதைப் பெறட்டும். ஆனால், அதைப் 'புதிய ஆக்க வேலைத் திட்டம்' என்று யோசனை கூறுவது பொறுமையின்மையையும் அவசரப் புத்தியையுமே வெளிப்படுத்துகிறது. 'புதிய வேலைத் திட்டம்' இந்திய மண்ணில் வேர் இறங்கிவிடும் அபாயம் எதுவும் அவ்வளவாக இல்லை. மேலும் மேற்கத்திய நாடுகளில்கூட ஏற்பட்டுவரும் புதிய நிலைமைக்கே இது முற்றிலும் விரோதமானதாகும். ஏனெனில், மேற்கத்திய நாடுகளில் யுத்த தெய்வத்திடம் வெறுப்பு ஏற்பட்டுக்கொண்டு வருகிறது. மேற்கத்திய நாடுகளிடம் இருக்கும் ராணுவ உணர்ச்சி, மனிதனிடம் இருக்கும் காருண்ய உணர்ச்சியையே கொன்று அவனை மிருகத்தினும் மட்டமான நிலைக்குக் கொண்டுபோய் விடுவதாயிருக்கிறது. இதற்கு முன்பு என்றுமே, கடவுள் புண்ணியத்தில் இந்தியாவுக்கு வேண்டியதும், இந்தியா அறிந்துகொண்டிருப்பதும், இதற்கு முன் கனவிலும் எதிர்பாராத அளவினதான படைப்பலமிராத எதிர்ப்பு உணர்ச்சியேயாகும். இதற்கு முன்னால் துப்பாக்கியும் துப்பாக்கி மருந்தும் பயனற்றவையாகும். ஆயுதம் உடைய ஓர் அரசாங்கம், தன் ஆயுதங்களைக் காட்டி ஒரு சிறுபான்மையினரைப் பணியவைப்பதான ஓர் காட்சியை ஜோசப் நம் முன்னால் நிறுத்துவது, ஜனநாயக உணர்ச்சியையும் முன்னேற்றத்தையும் மறுப்பதாகும். புதிய வேலைத் திட்டம் செய்யப் போவதெல்லாம் அவ்வளவுதான் என்றால், இப்பொழுதுங்கூட ஆயுதங்களினால் அடக்கிப் பணியவைப்பது இருந்துதான் வருகிறது. இது ஒரு சிறுபான்மையினரைப் பணியவைப்பதன்று, மிகப் பெரும்பான்மையினரைப் பணியவைத்து வருகிறது. நாம் விரும்புவதெல்லாம், சிறுபான்மையோரையும் அடக்கிப் பணியவைப்பதை அடிப்படையாகக் கொண்ட அரசாங்கத்தையன்று,

அவர்களை மாற்றும் அரசாங்கத்தையே என்று நம்புகிறேன். வெள்ளையர் ராணுவ ஆட்சிக்குப் பதிலாகப் மாநிறத்தவர் ராணுவ ஆட்சியையே நாம் விரும்புகிறோமென்றால், இதற்காக நாம் இவ்வளவு பிரமாதப்படுத்த வேண்டியதில்லை. எப்படியும் அப்பொழுது பொதுமக்கள் முக்கியமல்ல என்றாகிறது. இன்னும் மோசமாக இல்லாதுபோனாலும், இப்பொழுது இருப்பதுபோலவே இதே நாசத்திற்கு உட்பட்டவர்களாகவே அவர்கள் இருப்பார்கள். ஜோசப் தமது பொறுமையின்மையை விட்டுவிடுவாரானால், அவர் தமது வழியை மாற்றிக்கொள்ளாமல் நேர்மையாக இருப்பார்; அவர் எப்படிப்பட்டவர் என்பதை 1919-இல் சென்னைக் கடற்கரையில் அவரை சந்தித்தபோது நான் கண்டுபிடித்த மாதிரியே சிறந்த ஜனநாயகவாதியாகவே அவர் இருப்பார் என்பதை நான் அறிவேன்.

- எங் இந்தியா - 19—12—1929

# 15

# மூடநம்பிக்கை எளிதில் மறைவதில்லை

கலிபோர்னியாவிலிருந்து ஸ்ரீ ஹென்ரி ஈடன் வருமாறு எழுதுகிறார் :

"நான் பிரிட்டிஷ் அனுதாபி அல்ல. பிரிட்டிஷாரிடமிருந்து விடுதலை பெறுவதற்காக என்னுடைய மூதாதைகள் 1776-இல் போராடினர்கள். ஆனால், நான் பத்திரிகைகளில் படிப்பதைக்கொண்டு பார்த்தால், இந்தியாவை விட்டுப் பிரிட்டிஷார் போய்விடுவதாக இருந்தால் நன்மையைவிடத் தீமையே அதிகமாகும் என்று எனக்குப் படுகிறது. இந்தியா தானே ஆட்சியை நடத்த முடியாது என்று நான் கருதவில்லை. என்றாலும், அத்தகைய முயற்சி இச்சமயத்தில் அதிகக் கஷ்டமானதாகவே இருக்கும் என்றுதான் நான் எண்ணுகிறேன். ஆனால், பிரிட்டிஷார் இந்தியாவைவிட்டுப் போய்விட்டால் ருஷியாவோ அல்லது இன்னுமொரு நாடோ உள்ளே புகுந்துவிடாதபடி தடுக்கப் போவது யார்? இந்தியாவைப்பற்றி நான் அறிந்தவரையில் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளுவதற்குப் போதுமான ராணுவம் அதனிடமில்லை என்பது நிச்சயம்.

"ஆனால், ஒரு வேளை நீங்கள் பிரிட்டிஷ் எஜமானரைவிட ருஷிய எஜமானரே மேல் என்று கருதலாம். கைபர் கணவாயில் ருஷியா காத்துக்கொண்டிருக்கிறது. கிழக்கத்திய நாடுகளை ருஷியா புரிந்துகொண்டிருக்கிறது. அதன் மக்களிடம் கிழக்கத்தியப் பண்பும் மேற்கத்தியப் பண்பும் கலந்து இருக்கின்றன. ஆனால், அதன் கலாசாரம் மேற்கத்தியக் கலாசாரமே. அதனுடன் இந்தியாவுக்கு வைத்துக்கொள்ளக்கூடிய உறவு அதற்கு அடங்கியிருப்பதுதான். என்னைப் பொறுத்தவரையில் ருஷியாவிடம் நான் விரோதபாவம் கொண்டிருக்கவில்லை. முதலாளித்துவத்தின்பேரில் அது நடத்திவரும் போர் மேற்கத்திய நாகரிகம் அளிக்கும் பெரிய நம்பிக்கையாகும். இங்கு அமெரிக்காவில் மிகப் பெரிய முதலாளியான ஹென்றி போர்டு, செல்வம் சமமாகப் பங்கிடப்படுவது தவிர்க்க முடியாதது என்பதை ஒப்புக்கொள்ளுகிறார். ஆனால்,

இந்தியாவின் எஜமானனுகை ருஷியா இருப்பது என்பதுதான் முக்கியமாக எனக்குப் பிடிக்கவில்லை. ருஷியாவை இந்தியா எஜமானனுகக் கொண்டால், அதன் பண்பாட்டிலுள்ள தனித்தன்மை போய்விடும். இங்கிலாந்தின் கீழ் இருக்கையில் இந்தியா எப்பொழுதும் அந்தத் தனித்தன்மையை இழக்காமல் வைத்திருக்கிறது.

"ருஷிய அபாயத்தைக் குறித்து மேற்கத்திய நாட்டினராகிய நாங்கள் பயப்படுவதைப்போல நீங்கள் ஒரு வேளை பயப்படாமல் இருக்கலாம். இந்தியாவை விட்டுப் பிரிட்டன் போய்விட்டவுடனே ருஷியா உள்ளே புகுந்துவிடும் என்று அமெரிக்காவில் எங்களில் பலர் நிச்சயமாக நம்புகிருர்கள். இப்பொழுதுள்ள இந்தியா–சாதி முறை, பழமையான கைத்தொழில் விவசாய முறை ஆகியவைகளுடன் இருக்கும் இந்தியா–மேற்கத்திய நாட்டுப் படையெடுப்பைத் தானே எதிர்த்துப் பாதுகாத்துக்கொண்டுவிட முடியும் என்று எங்களால் எண்ணிப் பார்க்கவும் இயலவில்லை. தன்னைக் காத்துக்கொள்வதற்கு ஒழுங்கான ஒரு தேசீய அமைப்பு உங்களுக்கு இல்லை. இந்தியாவில் ஒற்றுமையே கிடையாது. மேற்கத்தியக் கலாசாரம், நாகரிகம் இவை உயர்வதற்கு ஒற்றுமை மிக முக்கியமாக இருந்தது. முன்னேற்றம் என்பதைச் குறித்து மேற்கத்திய நாட்டினராகிய நாங்கள் என்ன நினைக்கிரேமோ அந்த முன்னேற்றம் இந்தியாவில் கிடையாது. புராதன கால நெசவு முறைக்குத் திரும்பிப் போகுமாறு நீங்களே கூறி வருகிறீர்கள். சிறந்த அறிவு படைத்த நீங்கள், மாறுதலும் முன்னுக்குப் போவதும் தவிர்க்க முடியாதவை என்பதை உணரவில்லையா ?

"முதுமையிலிருந்து இளமைப் பருவத்திற்கு நீங்கள் திரும்ப முடியாது. அப்படியிருக்கும்போது நாகரிகமான நெசவு முறையிலிருந்து நாகரிகமற்றதான முறைக்குத் திரும்பி எப்படிப் போய், எந்தப் பலனையும் அடைந்துவிட முடியும் என்று நம்ப முடியும்? கஷ்டமான பழைய முறையில் நீங்கள் வேலை செய்யும்போது எளிதான புதிய முறை ஒன்று இருக்கிறது என்பதை உணருகிறீர்கள். ஆகவே, கஷ்டமான பழைய முறையால் நீங்கள் திருப்தி அடைந்துவிட முடியாது. புதிய வழியை மேற்கொண்டதனல் ஜப்பான் எவ்விதம் பலம் பெற்று வளர்ந்திருக்கிறது, சீனவும் எவ்விதம் விழிப்படைந்திருக்கிறது என்பதை நீங்கள் காண்கிறீர்கள். உலகின் புதிய வழிகளின் அவசியத்தை இந்தியா ஒன்றே உணரவில்லை என்று தோன்றுகிறது. பெரிய தலைவரான நீங்கள், மக்களுக்கு முன்னேற்றத்தைக் குறித்து உபதேசிக்காமல் இருக்கிறீர்களே; இது ஏன் ?

"இந்த இரு கேள்விகள் எனக்குக் கலக்கத்தை உண்டாக்கி வருகின்றன: இங்கிலாந்தினிடமிருந்து சுதந்திரம் அடைந்துவிட்டால் ருஷியாவினல் தனக்கு ஏற்படக்கூடிய அபாயத்தை இந்தியா ஏன் உணரவில்லை? இயந்திரத்தின் உதவியைக்கொண்ட புதிய தொழில் முறையை முதலில் அனுசரிப்பதிலேயே தங்கள் சுதந்திரம் இருக்கிறது என்பதைத் தம் மக்கள் உணரும்படி செய்யாமல் ஏன் இருக்கிருர் மகாத்மா காந்தி? இக்கேள்விகளுக்கு விடை தரக்கூடியவர் நீங்களே. ஆகவே, என்னைத் தெளிவிக்குமாறு நான் மிகவும் விரும்புகிறேன்.

"பிறப்பினுலும் பிதுரார்ஜித உரிமையாலும் நான் அமெரிக்காவின் பிரஜை. ஆனல், உலக விஷயங்களில் நான் சொந்தத்தில் அதிக அக்கறை எடுத்துக் கொள்ளுகிறேன், என்னுடைய சிறு வழியில் என்னை உலகத்தின் பிரஜை என்று எண்ணிக்கொள்ளவே விரும்புகிறேன். நான் கலிபோர்னியா சர்வகலா சாலையில் இருக்கிறேன். அங்கு இந்தியாவைப்பற்றிய பேச்சு அடிக்கடி

வருகிறது. பொதுவாக அனுதாபமெல்லாம் பிரிட்டிஷாருக்கு எதிராக உங்கள் பக்கம் இருந்து வருகிறது. என்றாலும், இந்தியாவில் இப்பொழுது இருந்து வரும் நிலைமையைக் குறித்து நான் அறிந்துள்ளவரையில், இரு தீமைகளில் பிரிட்டிஷ் அதிகாரத்தின் கீழ் இந்தியா இருப்பதே குறைவான தீமை என்று எனக்குத் தோன்றுகிறது. நான் முன்பே விளக்க முயன்றிருப்பதைப் போன்று மற்றொரு தீமை, ருஷிய ஆதிக்கம். இதைப்பற்றி நீங்கள் என்ன எண்ணு கிறீர்கள் என்பதை நாங்கள் எல்லோரும் அறிய விரும்புகிறோம்.''

இரு மூடநம்பிக்கைகளை இக்கடிதம் வெளிப்படுத்துகிறது. இந்தியா தன்னைத் தானே பாதுகாத்துக்கொள்ள முடியாததனாலும், உள்நாட்டில் தகராறுகள் இருப்பதனாலும், தானே ஆட்சி நடத்திக்கொள்ள இந்தியாவுக்குத் தகுதியில்லை என்பது ஒரு மூட நம்பிக்கை. பிரிட்டன் போய்விட்டால் இந்தியாமீது பாய்ந்துவிட ருஷியா தயாராக இருக்கிறது என்பது இக்கடிதத்தை எழுதி யிருப்பவர் தாமே எடுத்துப் போட்டுக்கொள்ளும் ஒரு விஷயம். இது ருஷியாவுக்கு ஓர் அவமதிப்பு. பிரிட்டனால் ஆளப்படாத மக்களைத் தான் ஆளவேண்டும் என்பதுதான் ருஷியாவுக்கு இருக்கும் ஒரு வேலையா? இந்தியா சம்பந்தமாக ருஷியாவுக்கு அத்தகைய கெட்ட நோக்கமுடைய திட்டம் இருக்குமானால், ஆதிக்கத்திலிருந்து பிரிட்டிஷாரை எந்தச் சக்தி விரட்டுகிறதோ அதே சக்தி மற்றுமோர் ஆதிக்கத்தையும் தடுக்கக் கடமைப் பட்டிருக்கிறது. இக்கடிதத்தை எழுதியிருப்பவர் இதை ஏன் அறியவில்லை? ஒப்பந்தத்தின் மூலம் நிர்வாகம் இந்தியப் பிரதி நிதிகளிடம் மாற்றப்படுமாயின், தன்னைத்தானே இந்தியா பாது காத்துக்கொள்ளும் தகுதியை அடையமுடியாதபடி அறிந்தோ, அறியாமலோ இத்தனை ஆண்டுகள் அலட்சியமாக இருந்து விட்ட தவறுக்குப் பிராயச்சித்தமாக, வெளிநாட்டுப் படை யெடுப்பிலிருந்து இந்தியாவைப் பாதுகாப்பது என்ற உத்தர வாதத்திற்கு ஏதாவது நிபந்தனையும் இருக்கவேண்டும்.

ஒப்பந்தம் ஏற்பட்டால்கூட என்னைப் பொறுத்தவரையில் சாத்துவிக எதிர்ப்பின் மூலம் ஆக்கிரமிப்பைச் சமாளிப்பதற்கு நாட்டு மக்களுக்குள்ள சக்தியையே நான் நம்பியிருக்கவேண்டும். ஆக்கிரமித்துக்கொண்டிருக்கும் பிரிட்டிஷார் விஷயத்தில் சென்ற ஆண்டு மக்கள் எதிர்த்து ஓரளவுக்கு வெற்றியும் ஏற்பட்டிருக் கிறது. இதில் முழு வெற்றியையும் அடைவது நாட்டு மக்கள் சிந்தனையிலும் சொல்லிலும் செயலிலும் அகிம்சையைப் பூரண மாகத் தழுவுவதைப் பொறுத்திருக்கிறது. இதை உலகம் முழு வதும் ஏற்றுக்கொண்டு, யுத்தத் தளவாடங்களினால் எந்தவிதப் பயனுமே இல்லை என்பதை இயற்கையாகவே உணர்ந்துகொள்ள வேண்டுமாயின், நாடு முழுவதிலுமான சத்தியாக்கிரகத்தின்

வெற்றி கண்கூடாகத் தெரிய வேண்டும். பலாத்காரத்தைக் காட்டும் சின்னம் யுத்தத் தளவாடம். இதற்குள்ள ஒரே மாற்று, அகிம்சையைக் காட்டும் சின்னமான சத்தியாக்கிரகம். ஆனல், கடிதம் எழுதியிருப்பவர், நமக்குள்ளிருக்கும் வேற்றுமைப் பூசல்களைக் குறித்துப் பயந்து சோர்வடைகிருர். முதலாவதாக, மேற்கத்திய நாடுகளுக்கு இதைப்பற்றி எட்டவிடும்போது மிகைப்படுத்தியே கூறுகின்றனர். இரண்டாவதாக, அன்னியர் ஆதிக்கத்திலேயே இத்தகராறுகள் வலுவாகிவிட்டன. ஏகாதிபத்திய ஆட்சி என்ருலே **பிரித்து ஆளுவதுதான்.** அன்னிய ஆட்சியின் இறுக்கம் போய்ச் சுதந்திரத்தின் காற்று வீசியதுமே தகராறுகளெல்லாம் மறைந்தே போய்விடும்.

கடைசியாக, பழையனவெல்லாம் நல்லவையல்ல என்று சொல்லுவதை நான் ஒப்புக்கொள்ள முடியாது. உண்மை பழமையானது; கடினமானது. பொய்மையில் கவர்ச்சிகள் பல உண்டு. ஆனல், பழமையான, சத்தியம் நிலவிய அப்பொன் யுகத்திற்கே ஆனந்தமாக நான் திரும்பிப் போவேன். சுத்தப்படுத்துவதற்கென்று அனுசரிக்கப்படும் பலவித முறைகளினல் சத்துப் பொருளையெல்லாம் இழந்துவிட்ட பிசுபிசுத்த வெள்ளை ரொட்டியைவிட நல்ல பழைய பழுப்பு ரொட்டி என்றுமே உயர்ந்ததுதான். பழையன பழமையானவையாயினும் நல்லவையான பொருள்களின் பட்டியலை முடிவின்றிப் பெருக்கிக் கொண்டே போகலாம். இந்தியாவைப் பொறுத்தவரையில் நூற்கும் ராட்டை அவற்றில் ஒன்று.

தனக்கு வேண்டியதைத் தானே தயாரித்துக்கொள்ளுவதாகவும், பிறர் ஆசைக்கும் சுரண்டலுக்கும் இடமில்லாததாகவும் இந்தியா ஆகிவிடும்போது, எந்தக் கிழக்கு அல்லது மேற்கு வல்லரசு எதுவும் பேராசையால் கவர விரும்பும் பொருளாக இந்தியா இல்லாது போய்விடும். பிறகு யுத்தத் தளவாடச் செலவுச் சுமையைத் தாங்காமலேயே தான் பத்திரமாக இருப்பதாகவும் இந்தியா உணரும். அதனுடைய உள்நாட்டுப் பொருளாதாரமே ஆக்கிரமிப்புக்கு எதிரான சிறந்த பலமாகவும் இருக்கும்.

—'எங் இந்தியா' - 2—7—1931.

# 16

# பிரிட்டிஷார் விலகிவிடும்போது

**கேள்வி :** *பிரிட்டிஷ் ஆதிக்கம் உடனே போய்விடவேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்களா ?*

**பதில் :** ஆம். படிப்படியாக அவ்வாறு நடப்பது என்று நான் நினைத்ததே கிடையாது. ஆனால், பிரிட்டனிடமிருந்து அறவே ஒதுங்கி இருந்துவிடுவது என்பது அதன் பொருளல்ல. பிரிட்டன் முழுப் பங்காளியாக இருப்பதாயின் அதை ஏற்றுக் கொள்ளுவேன். ஆனால், அந்தக் கூட்டுறவு உண்மையாக இருக்கவேண்டும். ஆளவேண்டுமென்பதோ அல்லது போஷகராக இருக்கவேண்டுமென்பதோ மறைமுகமாகக்கூட இருக்கக் கூடாது. பிரிட்டிஷார் இந்தியாவைவிட்டு அகன்றுவிட்டதுமே நாட்டில் அராஜகம் ஏற்பட்டு ரத்தக்களறியாகிவிடும் என்று உங்களில் சிலர் உள்ளூற அஞ்சுவதை நான் அறிவேன். இத்தகைய நிலைமையை உண்டாக்க உதவியவர்கள் பிரிட்டிஷார் தான். ஆகையால், போய்விடப் பிரிட்டிஷார் முடிவு செய்தால் அத்தகைய குழப்பத்திலிருந்து வெளியேற நமக்கு உதவி செய்வது அவர்கள் கடமை. பலதரப்பட்ட சமூகங்களுக்குமிடையே இருந்துவரும் தகராறுகளுக்கு அவர்கள்தான் பொறுப்பு. மக்கள் எல்லோருமே வலிமை குன்றிப் போனதற்கும் அவர்களே பொறுப்பாளிகள். நீங்கள் உடனே போய்விட்டால் தாற்காலிகமாகக் கஷ்டங்களை நாங்கள் அனுபவிக்க நேரலாம் என்பதை நான் ஒப்புக்கொள்ளலாம். ஆனால், எங்கள் நிர்வாகத்தின்கீழ் இருக்க நீங்கள் சம்மதிப்பதாக இருந்தால் எங்களுக்குச் சற்று உதவியையும் நீங்கள் செய்யலாம். எனினும், மன்னிக்க முடியாததான உங்கள் இன அகம்பாவத்தை எதுதான் வெல்ல முடியும்? எங்கள் தேசீய அரசாங்கத்தின்கீழ்ப் பிரிட்டிஷ் சிப்பாய்களையும் பிரிட்டிஷ் அதிகாரிகளையும் விருப்பத்துடன் நாங்கள் வைத்துக்கொள்ளுவோம். அவர்களுடைய ஆலோசனைகளையும் கேட்டுக்கொள்ளுவோம். ஆனால், முடிவாகக் கொள்கையை வகுப்பது மாத்திரம் எங்களிடந்தான் இருக்க வேண்டும். நீங்கள் போய்விட்டாலும், கட்டுப்பாடான உதவி எங்களுக்கு எதுவுமே இல்லாது போயினும், எங்களுடைய அகிம்சையில் எங்களுக்குப் போதுமான நம்பிக்கை இருக்கிறது. இன்று எங்கள்மீது சுமத்தப் பட்டிருக்கும் பிரிட்டிஷ் உதவி, பிரிட்டிஷ் பலம் ஆகிய இரண்டும் போய்விட்டால் நாங்கள் வாழ முடியாது போய்விடும்

என்று நான் எண்ணவில்லை. இவை எங்கள்மீது திணிக்கப் பட்டிருக்கையில் சுதந்திரத்தின் ஒளியை நான் அனுபவிக்க முடியாது. சாகும்வரையில் சுதந்திரத்திற்காகப் போராடுவது ஒன்றுதான் உங்கள் கண்ணைத் திறக்குமாயின், அதற்கான வாய்ப்பு எனக்கு ஏற்பட வேண்டும் என்றே நான் விரும்புகிறேன். ஆப்கானியர் விஷயத்தில் மாத்திரம் அவர்களுக்குள்ள தகுதியைக் குறித்து ஏன் நீங்கள் எதுவும் கேட்கவில்லை? அவர்களுக்கு இருப்பதைவிட எங்கள் கலாசாரம் எந்த விதத்திலும் குறைந்ததன்று. ஒருவருடைய தன்மையில் மிருகத்தனம் என்பது எதுவுமே இல்லாமல் சுதந்திரத்தை அடைவதோ, அதை அனுபவிப்பதோ கஷ்டம் என்று எண்ணுகிறீர்களா? சரி, எங்கள் நாட்டு மக்கள் எல்லோரும் கோழைகள் என்றால், எங்கள் கதியை நாங்கள் அனுபவிக்கட்டும் என்று எங்களை விட்டுவிட்டு நீங்கள் எவ்வளவு சீக்கிரமாகப் போய்விடுகிறீர்களோ அவ்வளவும் எங்களுக்கு நல்லது. இவ்வுலகத்திலிருந்து கோழைகள் சுமை நீங்குவதே நல்லது. ஆனால் கோழைகள் என்றுமே கோழைகளாக இருந்துவிட முடியாது. சிறுவனாக இருந்தபோது நான் எவ்வளவு கோழையாக இருந்தேன் என்பது உங்களுக்குத் தெரியாது. இன்று நான் அப்படிக் கோழையாக இல்லை என்பதை நீங்களே ஒப்புக்கொள்ளுவீர்கள். என்னுடைய உதாரணத்தையே பெருக்கிப் பாருங்கள். நாட்டு மக்கள் முழுவதுமே கோழைத்தனத்தை உதறித் தள்ளிவிடுவார்கள் என்பதை நீங்கள் காண்பீர்கள்.

—'எங் இந்தியா' — 15—10—1931.

# 17

# பெண்களின் விசேட லட்சியம்

'ஹரிஜன்' ஆசிரியருக்கு,

ஐயா, சமீபத்தில் ஏற்பட்டிருக்கும் ஐரோப்பிய நெருக்கடியைக் குறித்து நீங்கள் எழுதியிருக்கும் கட்டுரைகளை மகிழ்ச்சியுடன் படித்தேன். இப்பொழுது நீங்கள் ஐரோப்பாவுக்குச் செல்ல வேண்டும் என்பது இயற்கையானதே. மனிதத்தன்மை அழிவுறும் நெருக்கடியில் இருக்கும்போது நீங்கள் உங்களையே கட்டுப்படுத்திக்கொண்டு எப்படிச் சும்மா இருக்க முடியும்? இதை உலகம் கேட்குமா? அதுதான் பிரச்னை.

இங்கிலாந்தில் இருக்கும் நண்பர்களிடமிருந்து வரும் கடிதங்களைக் கொண்டு பார்த்தால் இந்தப் பயங்கரமான வாரத்தில் அங்குள்ள மக்கள் முழு மன வேதனையை அனுபவித்திருக்கிறார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. இது உலகம் முழுமைக்குமே பொருந்தும் என்பது நிச்சயம். யுத்தம் – நவீனப் போர் முறை, அதனுடைய பேய்த்தனமான தந்திரங்கள், அதனால் விளையும் இரக்க

மற்ற படுகொலைகள், மிருகத்தனங்கள் ஆகியவை நிறைந்த போர்—இதற்கு முன்பு என்றுமே சிந்திக்காத வகையில் மக்களைச் சிந்திக்க வைத்திருக்கிறது. "யுத்தம் தவிர்க்கப்பட்டுவிட்டது என்ற செய்தியைக் கேட்டதுமே ஒவ்வோர் உள்ளமும் அடைந்த மன ஆறுதலையும், கடவுளுக்கு நன்றி தெரிவித்ததையும் நான் உயிருள்ள அளவும் மறக்க முடியாது" என்று ஓர் ஆங்கில நண்பர் எழுதுகிறார். என்றாலும் சொல்லொணாத் துன்பங்களைப்பற்றிய பயமும், நெருங்கியவர்களையும் அன்பிற்குரியவர்களையும் இழக்க நேரும் என்ற திகிலும், நாடு அவமதிப்புக்குட் படுவதைக் காணும் வேதனையுமே யுத்தத்தை ஒருவர் வெறுக்கும்படி செய்கின் றனவா? இன்னுமொரு நாட்டை அவமானப்படுத்தியாவது யுத்தத்தைத் தவிர்த்துவிட்டதற்காக ஆனந்தப்படுகிறோமா? மானத்தைத் தியாகம் செய்ய வேண்டுமென்று நாம் கேட்கப்பட்டிருந்தால் கஷ்டத்தை உணர்ந்திருப்போமா? தகராறுகளைத் தீர்த்துக்கொள்ளுவதற்குத் தவறான வழி யுத்தம் என்பதை நாம் அறிந்துகொண்டுவிட்டதால் யுத்தத்தை எதிர்க்கிறோமா அல்லது அதன்மீது நமக்கிருக்கும் வெறுப்பு நமக்குள்ள பயத்தினாலா? யுத்தம் உண்மையிலேயே இந்த உலகத்திலிருந்தே மறைந்துவிட வேண்டுமாயின் இந்தக் கேள்விகளுக்குச் சரியான வழியில் பதில் சொல்லியாக வேண்டும்.

நெருக்கடி தீர்ந்தது. என்றாலும், என்ன காண்கிறோம்? முன்பிருந்ததை விட யுத்தத் தளவாடப் பெருக்கப் போட்டி இருக்கிறது. யுத்தம் ஏற்பட்டால் அதில் உபயோகித்துக்கொள்ளுவதற்காக ஆண்கள், பெண்கள், பணம், திறமை, ஆற்றல் ஆகிய கிடைக்கக்கூடிய வசதிகளையெல்லாம் திரட்டிக்கொள்ள முன்பிருந்ததைவிட விரிவாயும் தீவிரமாயும் வேலை செய்யும் ஸ்தாபனங்களும் உண்டாக்கப்படுகின்றன. 'யுத்தம் ஏற்படாது' என்ற நிச்சயமான பிரகடனம் எங்கிருந்தும் வருவதாக இல்லை. யுத்தம் இன்று தவிர்க்கப்பட்டிருந்தாலும் தலைக்குமேல் தொங்கிக்கொண்டிருக்கும் டமொகிள்ஸின் வாள் போல யுத்தபீதி இருந்துகொண்டுதான் இருக்கிறது என்பதை ஒப்புக்கொள்ள வேண்டியதாகிற தல்லவா?

உலக சமாதானத்திற்கு என் இனத்தவர் தம் உணர்வாலும் உரிமை யாலும் ஆற்ற வேண்டிய அளவு உதவியைச் செய்யாமல் இருப்பதை அறிந்து பெண்ணாகிய எனக்கு வேதனையாக இருக்கிறது. பெண்கள் உதவிப் படை திரட்டப்படுகிறது. அவர்கள் போர்க்களங்களிலேயேயன்றிப் போர் அணிக்குப் பின்னாலிருந்தும் முழுப் பங்கில் சேவை புரியத் தூண்டப்பட்டு வருகின்றனர் என்பதைப் படித்து வேதனை அடைகிறேன். என்றாலும், யுத்தம் வந்துவிட்டால் துன்பத்தில் துடிக்கப்போவது பெண்களின் உள்ளமே. அவர்களுடைய ஆத்மாக்களே முற்றிலும் சீர்படாத முறையில் இதனால் வடுப்பட்டுப் போய் விடும். இவை விளக்கிக் கூற முடியாதவை. எல்லாக் காலங்களிலுமே சிறந்ததான பங்கை நாம் தேர்ந்தெடுத்துக்கொள்ளாதது ஏன்? மோசமான, ஆத்மிகமே அழிந்துபோன மிருக பலத்திற்கு வாய் பேசாமல் நாம் தாழ்ந்து பணிந்து போயிருப்பது ஏன்? நமது ஆத்மிக அபிவிருத்தியைப்பற்றிய வரையில் இது விசனிக்கத்தக்க விளக்கமேயாகும். நமது உயர்ந்த கடமையை அறிந்து கொள்ளத் தவறியிருக்கிறோம். பெண்கள் மாத்திரம் அகிம்சையின் கீர்த்தியை யும் சக்தியையும் உளமார அறிந்திருப்பார்களாயின், இந்த உலகில் எல்லாமே சரியாக இருந்திருக்கும்.

இந்திய மாதர்களாகிய எங்களுக்கு ஊக்கமளித்து நீங்கள் ஏன் எங்களை ஒன்று திரட்டக்கூடாது? எங்களை உங்களுடைய 'வாளேந்து கரமாக' ஆக்கிக்

கொள்வதில் நீங்கள் ஏன் அதிக கவனம் செலுத்தக்கூடாது? இந்தக் காரியத்திற்காக நீங்கள் இந்தியா முழுதும் பிரயாணம் மேற்கொள்ள வேண்டுமென்று நான் எவ்வளவோ ஆர்வத்துடன் இருந்திருக்கிறேன். இந்தியப் பெண்களின் உள்ளம் சரியாக இருந்து வருகிறது. தியாகத்திலும், தங்களையே அர்ப்பணம் செய்துகொண்டுவிடுவதிலும் நமக்கு இருப்பதைப்போன்ற சிறந்த பிறப்புரிமை உலகத்தில் வேறு எவருக்குமே இல்லை எனலாம். ஆகையால், உங்களுக்கு அற்புதமான ஆதரவு இருக்கும் என்று நான் நம்புகிறேன். எங்களைப் பயன் படுத்திக் கொள்ளுவீர்களாயின், எவ்வளவு பணிவான வகையிலேயேயாயினும், துயர்பட்டுத் துடிக்கும் உலகிற்குச் சமாதான வழியைக் காட்டுவது எங்களால் முடிவதாக இருக்கலாம். யார் கண்டார்கள்?

22—10—1938. — ஒரு பெண்.

இக்கடிதத்தைத் தயக்கத்துடனேயே நான் வெளியிடுகிறேன். பெண்களின் உள்ளங்களைக் கிளறிவிடுவதில் எனக்குள்ள திறமையில் இக்கடிதம் எழுதியவர் கொண்டிருக்கும் நம்பிக்கை என்னைத் தூக்கிவைப்பதாகும். ஆனல், என்னுடைய குறைபாடுகளை உணர்வதற்கான அடக்கம் எனக்கு உண்டு. என்னுடைய பிரயாண காலமெல்லாம் முடிந்துவிட்டது என்றே எனக்குத் தோன்றுகிறது. எழுதுவதன் மூலம் நான் செய்யக் கூடியதை நான் தொடர்ந்து செய்துவர வேண்டும். ஆனல், மௌனமாகப் பிரார்த்திப்பதன் நன்மையில் எனக்கு நம்பிக்கை வளர்ந்துகொண்டு வருகிறது. அது, அதனளவில் ஒரு கலை; மிகவும் பண்பட்ட அறிவைக் கொண்டதான ஓர் உயர்ந்த கலையே அது. அகிம்சையை, அதன் உயர்ந்த, சிறந்த வகையில் காட்டியாக வேண்டியது பெண்களின் லட்சியம் என்று நான் நம்புகிறேன். ஆனல், பெண்களின் உள்ளத்தை ஆண்கள் தாம் ஊக்குவதாக ஏன் இருக்க வேண்டும்? இந்தக் கோரிக்கை எனக்கு, மனிதன் என்ற வகையில் அல்லாமல் பொதுஜன அளவில் அனுசரிக்கப்பட வேண்டியதான அகிம்சையை நிறைவேற்றுவதில் சிறந்தவன் (அப்படியென்று எண்ணிக்கொள்வது) என்ற வகையில் அனுப்பப்பட்டிருந்தால், இந்தியாவிலிருக்கும் பெண்களுக்கு இந்தத் தருமத்தைப் பிரசாரம் செய்யச் சற்றும் ஊக்கம் எனக்கு இல்லை. இக்கடிதம் எழுதியிருப்பவருக்கு ஒன்று உறுதி கூறுவேன்: எனக்கு மனமில்லை என்பது அவருடைய கோரிக்கைக்கு நான் உடன்படாதபடி தடுக்கவில்லை. காங்கிரஸிலிருக்கும் ஆண்கள், அகிம்சையிலிருக்கும் நம்பிக்கையை விடாமல் வைத்திருந்து, அகிம்சை வேலைத் திட்டத்தை உள்ளன்போடு முற்றிலும் நிறைவேற்றி வருவார்களானல், பெண்களும் தாமே அதற்கு உட்பட்டவர்களாகி விடுவார்கள் என்பதே என்னுடைய எண்ணம். நான் செய்ய முடி

யும் என்று என்றுவது நம்பக்கூடியதைவிட அதிகமாகவே செய்யக்கூடிய ஒருவர் அவர்களிடையே தோன்றவும் கூடும். ஏனெனில், அகிம்சையில் ஆராய்ச்சிகளைச் செய்யவும் தீரமான நடவடிக்கை எடுத்துக்கொள்ளவும் ஆணைவிடப் பெண்ணே அதிகத் தகுதி வாய்ந்தவர். மிருக வீரத்தில் பெண்ணைவிட ஆண் மேலானவன் என்று நான் நம்புவதைப் போன்றே தன்னலத் தியாக தீரத்தில் ஆண்களைவிடப் பெண்கள் என்றுமே உயர் வானவர்கள்.

பன்னு, 25—10—1938. —' ஹரிஜன்' - 5—11—1938.

# 18

# இந்தியா ராணுவ நாடா?

இந்தியாவில் இருக்கும் பாதுகாப்புப் படைகளின் பிரதம சேனதிபதி சென்ற 5-ஆம் தேதி ரேடியோவில் நிகழ்த்திய சுவை மிகுந்த பேச்சில் கீழ்க்காணும் விவரம் அடங்கியிருக்கிறது :

" இந்தியா ராணுவ நாடு. நான் ஒரு சிப்பாய். ஆகையால், ராணுவத்தை நவீனமாக்குவதால்இந்தியாவின் எதிர்கால ராணுவத்தில் இருப்பவர்களிடையே அது எத்தகைய மாறுதலை உண்டாக்கும் என்பதைக் குறித்து என் சொந்தக் கருத்துக்கள் சிலவற்றை இங்கு நான் கூறுவது பொருத்தமற்றதாகாது. இவையெல்லாம் ஊகித்துச் சொல்பவையல்ல; இதுவரை செய்திருப்பவைகளை அடிப்படையாகக் கொண்டு கூறுபவை. புதிய விஞ்ஞான ஆயுதங்களினுலும் இக்காலத்து ஊர்திகளினுலும் புதிய கருத்துக்களும் புதிய மனேபாவங்களும் ஏற்பட்டே தீரும். நவீனமாக்குவதனுல் இந்திய ராணுவத்தில் இப்பொழுதே உயர்வானதாக இருந்துவரும் கல்விக்கு இன்னும் அதிக ஆக்கமே ஏற்படும். அநேகமாக ஒவ்வொரு சிப்பாயும் ராணுவத்திலிருந்து விடுவிக்கப்பட்டு வீடு திரும்பும்போது – மோட்டார் வண்டிகள், இயந்திரங்கள் ஆகியவைகளைப்பற்றிய அறிவுடன் வரும்போது – பழைய காலத்திய விவசாய முறையிலும் வாழ்க்கை முறையிலும் அதனுல் தெளிவான பலன்களே ஏற்படும். ஆகையால், ராணுவத்தில் செய்யப்படும் நவீன மாறுதல்கள், இந்திய வாழ்க்கையில் மறைமுகமான பலன்கள் பலவற்றை உண்டாக்கும். நான் பேசுவதைக் கேட்கும் பலர், குதிரைகள் போய்விட்டனவே என்று வருந்துவார்கள். மற்றவர்களைவிட நான் அதற்காக அதிகமாக வருந்துகிறேன். ஆனல், இக்காலப் போர் முறையில் குதிரைக்கு ஏற்படக்கூடிய கதியைக் குறித்து ஒரு சிப்பாய் என்ற வகையில் நான் அறிவேன். மனிதனின் மிகப் பெரிய, சிறந்த நண்பனை குதிரை, யுத்தத்தின் கோரத்திலிருந்து தவிர்க்கப்பட்டிருப்பதற்காக நான் மகிழ்ச்சியடைகிறேன்."

இந்தியா ஒரு ராணுவ நாடு என்பதை, மரியாதையுடனேயே என்றுலும், நான் முற்றிலும் மறுத்தாக வேண்டும். அப்படி இந்நாடு இல்லாதிருப்பதற்காகக் கடவுளுக்கு நன்றி செலுத்து

கிறேன். இவ்விதம் அவர் கூறுவதற்கு ஏதாவது விசேடமான பொருள் இருக்கலாம்; அது எனக்குத் தெரியாது. அல்லது அவர் கூறும் இந்தியா, அவர் தலைமையில் இருக்கும் பாதுகாப்புப் படைகளை மாத்திரம் கொண்டதா? என் வரைக்கும் சொல்லுவதானால், நாட்டின் அமைப்பில் பாதுகாப்புப் படைகள் எந்தவிதத்திலும் முக்கியமே இல்லாதவை. இப்படைகள் திருப்பி அழைத்துக் கொண்டுவிடப்படுமானால் வாழ்க்கை எப்பொழுதுமே ஆபத்தில் தான் இருக்கும் என்று எனக்கு நினைவுபடுத்த வேண்டிய அவசியமில்லை. படைகள் இருந்தும் வாழ்க்கை ஆபத்தில்லாததாக இருந்துவிடவில்லை. கொலைகள் நடக்கின்றன; கலகங்கள் இருக்கின்றன; கொள்ளைகளும் தாக்குதல்களும் நடந்து கொண்டுதான் இருக்கின்றன. இத்தகைய ஆபத்துக்களுக் கெல்லாம் ராணுவப்படைகள் சிறிதும் உபயோகமாவதில்லை. விஷமம் நடந்துவிட்ட பிறகுதான் பொதுவாக அவர்கள் செயலில் இறங்குகிறார்கள். ஆனால், வீரரான பிரதம சேனாதிபதி ஒரு சிப்பாய் என்ற வகையிலேயே எதையும் பார்க்கிறார். நானும் என்னுடன் கோடிக்கணக்கானவர்களும் ராணுவ உணர்ச்சியினால் கொஞ்சமும் தீண்டப்படாதவர்கள். வெகு காலத்திற்கு முன்னாலிருந்தே ராணுவ சாதி ஒன்று இந்தியாவில் இருந்து வந்திருக்கிறது. அதில் இருந்தவர்கள் தொகை மிகச் சொற்பம். கோடிக்கணக்கான மக்களுக்கும் அந்தச் சாதிக்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லை. என்றாலும், இந்தியாவை உருவாக்குவதற்கு அது செய்திருக்கும் உதவியைக் குறித்து ஆராய்ந்துகொண்டிருப்பதற்கு இது சமயமல்ல. என்னுடைய முழுச் சக்தியையும் கொண்டு நான் சொல்ல விரும்புவதெல்லாம் இந்தியாவை ராணுவ நாடு என்று விவரிப்பது தவறு என்பதே. உலகத்திலுள்ள நாடுகளெல்லாவற்றையும்விட மிகக் குறைந்த அளவில்தான் இந்தியா ராணுவமயமானது. இந்த முக்கிய சமயத்தில் மனிதவர்க்கத்தை அழிவிலிருந்து காப்பதற்குள்ள ஒரே சிறந்த பரிகாரம் அகிம்சையே என்பதில் உறுதியான நம்பிக்கையைக் காங்கிரஸ் காரியக் கமிட்டி பிரகடனம் செய்யும்படி நான் எடுத்துக்கொண்ட முயற்சியில் தோல்வியடைந்தேன். என்றாலும், பலி கொள்ளும் யுத்த தேவதைக்குப் பணியப் பொது மக்கள் மறுத்துவிடுவார்கள். நாட்டின் மானத்தைக் காப்பதற்கு - துன்பத்தை அனுபவிப்பதற்கு - அவர்கள் தங்களுக்குள்ள சக்தியை நம்பியிருப்பார்கள் என்பதில் நான் நம்பிக்கையை இழந்துவிடவில்லை. போலந்துக்கு ராணுவ வீரம் அதிகமுண்டு என்பதில் சந்தேகம் இல்லை. ஜெர்மனி, ருஷியா இவற்றின் பெருவாரியான பலத்திற்கு முன்னால் அந்த வீரம் என்னவாயிற்று?

போலந்து நிராயுதபாணியாக இருந்து, பதிலுக்குத் தாக்காமல் சாகத் தயாராயிருப்பதென்ற உறுதியுடன், இணைந்த இப்படைப் பலத்தின் சவாலை ஏற்றிருந்தால் அது இன்னும் மோசமான நிலையை அடைந்திருக்குமா? படை யெடுத்து வந்த ராணுவம், நிச்சயமாக அதிக வீரமுள்ளதான போலந்திடமிருந்து அதிக பலியைக் கொண்டிருக்குமா? ஒரு பாபமும் அறியாதவர்களை அடியோடு படுகொலை செய்வதை அவர்களுக்குள்ள உண்மையான இயல்பு தடுத்திருக்கக்கூடும் என்பதும் சாத்தியமானதே.

உண்மையான வாழ்வுக்குள்ள நல்ல வழியை – அந்த ஒரே வழியை – உலகிற்குக் காட்டுவதற்கு உலகத்தின் எல்லா ஸ்தா பனங்களையும்விட மிகவும் ஏற்புடையது காங்கிரஸே. இப் பொழுது இருக்கும் பயத்திலிருந்து இந்தியா விழித்தெழும் போது, ரத்த வெள்ளத்தில் முழுகுவதிலிருந்து விமோசனம் அடைவதற்கான வழியை உலகிற்கு இந்தியா காட்டவில்லை யென்றால், அகிம்சையில் அது செய்த பரீட்சைகள் யாவும் வீணே யாகும். மனித கௌரவம் சிறப்புடன் காக்கப்படுவது நாசத் தைச் சமாளிப்பதற்கு வேண்டிய தகுதியை விருத்தி செய்து கொள்வதனால் ஆகாது. திருப்பித் தாக்காமல் இருப்பதிலேயே இது இருக்கிறது. இதைக் காட்டுவதில் தனக்குள்ள இயற்கை யான பங்கை இந்தியா வகிக்கவில்லை யென்றால், இப்பொழுது நடந்துவரும் கொடூரமான உயிர்ச் சேதமும், பண நஷ்டமும் கடைசியானவை ஆகா. மிருகத்தின் தருமமேயான இந்தத் தீய பலாத்காரக் கலையில் கோடிக்கணக்கானவர்களுக்குப் பயிற்சி யளிப்பது சாத்தியம் என்றால், புத்துயிர் பெற்றிருக்கும் மனிதரின் தருமமான அகிம்சையென்னும் புனிதக் கலையில் அவர்களுக்குப் பயிற்சி யளிப்பது பின்னும் சாத்தியமானதே. இதில் எனக்கு எந்தவிதமான சந்தேகமும் கிடையாது. எப்படியும் பிரதம சேனாபதி ராணுவப் படைகளுக்கு அப்பால் நோக்குவாரானால், உண்மையான இந்தியா சமாதானத்தை விரும்பும் இந்தியாவே யன்றி ராணுவப் போக்கானதல்ல என்பதைக் கண்டுகொள்வார்.

' நவீன வழிகளில் பயிற்சி யளிக்கப்படும் இந்தியச் சிப்பாய் கள், மோட்டார்களை இயக்கும் உணர்ச்சியுடன் வீடுகளுக்குத் திரும்ப நேருவதைக் குறித்து நான் கவலையுடனேயே நோக்கு கிறேன். வாழ்க்கையின் கடைசி லட்சியம் வேகமன்று; நடந்து போயே தனது கடமையைச் செய்வதில்தான் மனிதன் உண் மையைக் காண்கிறான்; உண்மையாகவும் வாழ்கிறான்.

[25—9—1939-இல் சிம்லாவுக்கு ரெயிலில் போகும்போது எழுதியது.]

—' ஹரிஜன் ' - 30—9—1939.

# 19

# அமெரிக்காவிலிருந்து இரு கேள்விகள்

அமெரிக்காவிலிருந்து எழுதும் ஒரு நண்பர், ஆராய்வதற்குக் கீழ்க்கண்ட இரு கேள்விகளை அனுப்பியிருக்கிறார்:

1. இந்தியாவின் சுதந்திரத்தை அடைந்துவிடச் சத்தியாக்கிரகத்தினால் முடியும் என்றே வைத்துக்கொண்டாலும் சுதந்திர இந்தியாவில் அது அரசாங்கக் கொள்கையாக ஏற்றுக்கொள்ளப்படும் என்பதற்கு என்ன உத்தரவாதம் இருக்கிறது? இன்னும் சொல்லுவதாயின், பலமான சுதந்திர இந்தியா தன்னுடைய பாதுகாப்புக்குச் சத்தியாக்கிரகம் ஒரு முறை என்று நம்பியிருக்குமா? அல்லது அதை விட்டுவிட்டு, பழைய முறையான போர்த் தன்மையில், தற்காப்புக்கானதே யென்றாலும் அதனிடம் புகலிடம் கொண்டுவிடுமா? முற்றிலும் தருக்க ரீதியான அடிப்படையில் இக்கேள்வியைத் திருப்பிச் சொன்னால் அது இதுதான்: அதிலுள்ள துன்பத்தை அனுபவிக்கும் தியாகத்தினால் ஏற்படும் அற்புதம் முற்றிலும் பயனளிப்பதாக இருக்கும்போது கஷ்டமானதாக இருக்கும் போரில் மாத்திரமே சத்தியாக்கிரகம் ஏற்றுக்கொள்ளப்படுமா? அல்லது தியாகக் கொள்கையின் அவசியமோ, வாய்ப்போ இல்லாத ஓர் ஆதிபத்திய ஆட்சிக்கு அது ஓர் ஆயுதமாகவும் இருக்குமா?

2. சுதந்திர இந்தியா, சத்தியாக்கிரகத்தை அரசாங்கக் கொள்கையின் ஓர் உபகரணமாக ஏற்கிறது என்று வைத்துக்கொள்ளுவோம். இன்னுமொரு ஆதிபத்திய நாடு ஆக்கிரமித்தால் அப்பொழுது அது தன்னை எப்படிப் பாதுகாத்துக்கொள்ளும்? தருக்க ரீதியான பிரச்னை அடிப்படையில் இக்கேள்வியைத் திருப்பிச் சொன்னால் அது இதுவே: எல்லைப்புறத்தில் படையெடுத்து வரும் ராணுவத்தைச் சமாளிக்கச் சத்தியாக்கிரக நடவடிக்கை முறை என்ன? இந்தியாவில் இந்திய தேசீயவாதிகளுக்கும் பிரிட்டிஷ் அரசாங்கத்தாருக்கு மிடையே இப்பொழுது ஏற்பட்டிருப்பதைப் போன்ற நிலை இருக்கும்போது பொதுவான நடவடிக்கை முறை ஏற்படுவதற்கு முன்னால் எதிரிக்கு எந்த வகையான எதிர்ப்பு அளிக்கப்படும்? அல்லது எதிரி தேசத்தைப் பிடித்துக் கொண்டுவிடும் வரையில் சத்தியாக்கிரகிகள் தங்கள் நடவடிக்கைகளை நிறுத்தி வைத்துக் கொள்ளுவார்களா?

இக்கேள்விகள் நிச்சயமாகத் தருக்க ரீதியானவையே; அவை பக்குவமற்றவையுமாகும். ஏனெனில், அகிம்சை முறை முழுவதிலும் நான் வல்லவனாகிவிடவில்லை. இதில் சோதனை இன்னும் நடந்து கொண்டு வருகிறது. அதிக தூரம் முன்னுக்குப் போய்விட்ட கட்டத்திற்கும் இன்னும் வந்துவிடவில்லை. படிப்படியாகச் செல்வதில் திருப்தி அடைய வேண்டியது இச்சோதனையின் தன்மைக்கு அவசியமானதாகிறது. தூரத்தில் இருப்பதைப் பார்க்க வேண்டிய அவசியமில்லை. ஆகையால், என் விடைகள் ஊகத்தின் பேரில் சொல்லுவனவாகவே இருக்க முடியும்.

நான் முன்பே சொல்லியிருப்பது போலச் சுதந்திரத்தை அடைவதற்கான போராட்டத்தில் கூடக் கலப்பற்றதான அகிம்சை எங்களிடமில்லை என்பதே உண்மை.

முதல் கேள்வியைப் பார்ப்போம்: இப்பொழுது நான் பார்க்கும் வரையில், அகிம்சை ஓர் அரசாங்கக் கொள்கையாக ஏற்றுக்கொள்ளப்படும் என்பதற்கான வாய்ப்பு மிக மிகக் குறைவாகும். இந்தியா, சுதந்திரமடைந்த பிறகு அகிம்சையைத் தனது கொள்கையாக ஏற்றுக்கொள்ளவில்லையென்றால் இரண்டாவது கேள்விக்கு இடமே இல்லாது போகிறது.

ஆனால், அகிம்சையின் சக்தியைக் குறித்து என் தனிப்பட்ட அபிப்பிராயங்களை நான் கூற முடியும். நாட்டில் பெரும்பான்மையான மக்கள் அகிம்சையை அனுசரிப்பவர்களாக இருப்பராயின், அகிம்சை அடிப்படையில் ஓர் அரசாங்கத்தை நிர்வகிக்க முடியும் என்று நான் நம்புகிறேன். நான் அறிந்த வரையில் அத்தகைய அரசாங்கம் இருப்பதற்குச் சாத்தியம் இருக்கும் நாடு இந்தியா ஒன்றே. அந்த நம்பிக்கையிலேயே என்னுடைய சோதனைகளை நான் நடத்திக்கொண்டு போகிறேன். ஆகையால், பரிசுத்தமான அகிம்சையைக் கொண்டு இந்தியா சுதந்திரம் அடைகிறது என்று வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது, பெற்ற சுதந்திரத்தை அதே முறையைக் கொண்டு இந்தியா காத்துக்கொள்ளவும் முடியும். அகிம்சையோடு இருக்கும் ஒருவரோ அல்லது ஒரு சமூகமோ வெளியிலிருந்து தன்மீது தாக்குதல் வரும் என்று எதிர்பார்ப்பதோ அல்லது எதிர்பார்த்து அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துகொள்ளுவதோ கிடையாது. இதற்கு மாறாக, தங்களை யாரும் தொந்தரவு செய்யப் போவதில்லை என்றே அத்தகையவரோ அல்லது சமூகமோ திடமாக நம்புகிறது. ஆபத்து நேர்ந்துவிட்டால் அப்பொழுது அகிம்சைக்கு இரு வழிகள் இருக்கின்றன. முதல் வழி: உடைமைகளைக் கொடுப்பது; ஆனால், ஆக்கிரமித்தவருடன் ஒத்துழையாமல் இருப்பது. இக்காலத்து நீரோ ஒருவர் இந்தியாமீது படையெடுத்து வருகிறார் என்று வைத்துக்கொள்ளுவோம். அரசாங்கத்தின் பிரதிநிதிகள் அவரை உள்ளே வர விட்டுவிடுகிறார்கள். ஆனால், மக்கள் உதவி எதுவுமே அவருக்குக் கிடைக்காது என்பதையும் சொல்லிவிடுவார்கள். பணிந்துவிடுவதைவிடச் செத்துவிடுவதே மேல் என்று அவர்கள் இருக்கிறார்கள். இரண்டாவது வழியாவது: அகிம்சை வழியில் பயில்விக்கப்பட்டிருக்கும் மக்கள் சாத்துவிகமான எதிர்ப்பை அளிப்பதே. ஆக்கிரமிப்புக்காரரின் பீரங்கிகளுக்குத் தங்களையே இரையாக அளித்துவிட முன் வருவார்கள். இந்த இரண்டிலுமே உள்ளிருக்கும் நம்பிக்கை என்னவெனில், அந்த நீரோவுக்கு மனம் என்பது ஒன்று இல்லாது

போகாது என்பதே. ஆக்கிரமிப்புக்காரரின் விருப்பத்திற்குப் பணிவதற்கு மாருக எண்ணற்ற வகையில் வரிசை வரிசையாக ஆண்களும் பெண்களும் வந்து மடிவது முடிவில் அவர் மனத்தையும் அவருடைய சிப்பாய்களின் மனத்தையும் உருக்கியே தீரும். நடைமுறையைக் கொண்டு கவனித்தாலும், பலாத்கார எதிர்ப்புச் செய்வதால் ஏற்படும் ஆள் சேதத்தைவிட இதில் ஆள் சேதமும் அநேகமாகக் குறைவாகவே இருக்கும். அதோடு யுத்தத் தளவாடங்கள், பாதுகாப்பு ஏற்பாடுகள் ஆகியவற்றிற்காகும் செலவுகளும் இருக்கமாட்டா. மக்கள் அடையும் அகிம்சைப் பயிற்சியும் அவர்களுடைய ஒழுக்க உயர்வில் அளவிட முடியாத பெருமையை உண்டாக்கும். இத்தகைய ஆண்களும் பெண்களும், ஆயுதப்போரில் காட்டுவதைவிட உயர்வான வகையில் தம் சொந்தப் பலத்தைக் காட்டியவர்களுமாவர். இந்த இரு காரியங்களிலுமே இறப்பதில்தான் வீரம் இருக்கிறதேயன்றிக் கொல்லுவதில் அல்ல. கடைசியாக, அகிம்சையோடு கூடிய எதிர்ப்பில் தோல்வி என்பது எதுவுமே கிடையாது. இத்தகைய காரியம் இதற்கு முன்னல் நடந்தது கிடையாது என்பது, என்னுடைய ஊகத்திற்குப் பதில் சொல்லுவதாகிவிடாது. அசாத்தியமானதோர் சித்திரத்தை நான் வரையவில்லை. நான் கூறியிருப்பதைப் போன்ற வகையான அகிம்சையைத் தனிப்பட்டவர்கள் கையாண்டிருக்கிருர்கள் என்பதற்குச் சரித்திரத்தில் எத்தனையோ ஆதாரங்கள் இருக்கின்றன. ஆண்களும் பெண்களும் அடங்கிய ஒரு குழுவினர் போதிய பயிற்சி பெற்றிருந்தால் ஒரு குழுவாகவோ அல்லது நாட்டு மக்களாகவோ அகிம்சையோடு செயலில் இறங்க முடியாது என்று கூறுவதற்கோ அல்லது நினைப்பதற்கோ இடமில்லை. மனிதர் எப்படியோ வாழ்ந்துகொண்டுதான் இருக்கிருர்கள் என்பதே மொத்தத்தில் மனித வர்க்கத்தின் அனுபவமாகிறது. இந்த உண்மையிலிருந்து அன்பின் தருமமே மனித வர்க்கத்தை ஆட்கொண்டிருக்கிறது என்ற முடிவுக்கு நான் வருகிறேன். பலாத்காரம், அதாவது, துவேஷமே நம்மை ஆட்கொண்டு வந்திருக்குமாயின், நாம் வெகு காலத்திற்கு முன்பே மறைந்து போயிருப்போம். என்றாலும், இதிலிருக்கும் துக்ககரமான நிலைமை என்னவெனில், சமூகத்தின் அடிப்படையே பலாத்காரந்தான் என்ற வகையில், நாகரிகம் படைத்தவர்களாகச் சொல்லப்படும் மனிதரும் நாடுகளும் நடந்துகொண்டு போவதுதான். அன்பு ஒன்றே வாழ்க்கையில் எல்லாவற்றிற்கும் மேலான ஒரே தருமம் என்பதை நிரூபிக்கும் சோதனைகளை நடத்திக்கொண்டு போவது எனக்குச்

சொல்லொணாத இன்பத்தை அளித்து வருகிறது. இதற்கு மாறான ஆதாரங்கள் எவ்வளவு இருப்பினும் அவை என் நம்பிக்கையை அசைத்துவிட முடியாது. இந்தியாவின் கலப்பான அகிம்சையுங்கூட இதை ஆதரிக்கிறது. ஆனால், நம்பாதவருக்குத் திருப்தியளித்து விடுவதற்கு இது போதுமானதாக இல்லாது போயினும், நட்புடன் குறை கூறுகிறவர் ஆதரவோடு இதைக் கவனிக்கும்படி செய்வதற்கு இதுவே போதுமானது.

சேவா கிராமம், 8—4—1940 —'ஹரிஜன்' - 13—4—1940.

# போரும் காங்கிரஸின் அகிம்சையும்

[அகிம்சை சம்பந்தமாகக் காங்கிரஸுக்கும் மகாத்மா காந்திக்கும் தோன்றிய கருத்து வேறுபாட்டை இப்பகுதியில் கொடுக்கப்பட்டிருக்கும் மகாத்மாவின் கட்டுரைகள் தெளிவாக்கும். 1939 ஆகஸ்டு 9-ஆம் தேதி காங்கிரஸ் காரியக் கமிட்டி வர்தாவில் நடந்தது. சர்வதேச நிலைமையில் ஏற்பட்டு வந்த நெருக்கடியைக் குறித்தும் மூன்று நாட்கள் விவாதித்த காரியக் கமிட்டி, அதைப்பற்றி ஒரு தீர்மானம் செய்தது. எந்த ஏகாதிபத்திய யுத்தத்திற்கும் தனது எதிர்ப்பைத் தெரிவித்துக்கொண்ட காங்கிரஸ் காரியக் கமிட்டி, இந்தியாமீதும் யுத்தத்தைத் திணித்துவிடச் செய்யப்படும் எல்லா முயற்சிகளையும் காங்கிரஸ் எதிர்க்கும் என்றது. எகிப்துக்கும் சிங்கப்பூருக்கும் இந்தியப் படைகள் அனுப்பப்பட்டு வருவதையும் கண்டித்தது. இந்தத் தீர்மானத்திலிருந்தே காங்கிரஸுக்கும் மகாத்மாவுக்கும் அகிம்சை சம்பந்தமான கருத்து மாறுபாடு உண்டாயிற்று. 'போர் பற்றிய தீர்மானம்' என்ற தலைப்பில் இப்பகுதியில் வெளியாகியிருக்கும் முதல் கட்டுரையில் தமக்கும் காங்கிரஸுக்குமுள்ள மாறுபட்ட கருத்துக்களை அவர் வெளியிட்டிருக்கிறார்.

காங்கிரஸுக்கும் மகாத்மாவுக்கும் அகிம்சை சம்பந்தமாக ஏற்பட்ட கருத்து வேற்றுமை, அகிம்சையை எந்த அளவுக்கு மேற்கொள்ளுவது என்பதிலேயே. அகிம்சை முறையில் போராடியே சுதந்திரம் அடைவது என்பதில் மகாத்மாவின் கருத்தே காங்கிரஸின் கருத்தும் கொள்கையும். போர் விஷயத்திலும், நாட்டின் தற்காப்புக்கும் பூரண அகிம்சை முறையையே அனுசரிக்க வேண்டும் என்பது மகாத்மாவின் உறுதி. காரியக் கமிட்டி அந்த அளவுக்குப் போகத் தயாராயில்லை. ஆனால், மகாத்மா இதில் திடத்துடன் இருந்தார். இதே கருத்துடனேயே, ஹிட்லரின் ஆக்கிரமிப்புக்கு ஆளான ஜெக் மக்களும் அகிம்சையுடனேயே ஆக்கிரமிப்பாளரை எதிர்த்திருக்க வேண்டும் என்று அவர் யோசனை கூறினார். இரண்டாவது உலக யுத்தம் மூண்ட பிறகு நேச தேசத்தினருக்கும் இதையே சொன்னார். இந்தியாவுக்கு ஆக்கிரமிப்பு அபாயம் நேரலாம் என்றிருந்த நிலையிலும் மகாத்மா இந்த யோசனையையே கூறினார். ஆக்கிரமிப்புக்கு ஆளான சீனா போன்ற நாடுகளுக்கும் காந்திஜி இந்த ஒரு யோசனையையே விடாமல் கூறி வந்திருக்கிறார் என்பது முந்திய பகுதியில் வெளிவந்திருக்கும் கட்டுரைகளிலிருந்து விளங்கும்.]

## 1

# போர்பற்றிய தீர்மானம்

போர்பற்றிய தீர்மானத்தில்* நான் முடிவான தோல்வியை அடைந்திருக்கிறேன். ஒரு தீர்மானத்திற்கு நகல் தயாரிக்கும் படி அழைக்கப் பெற்றேன். அப்படியே பண்டித ஜவாஹர்லால் நேருவையும் கேட்டார்கள். நான் தயாரித்த நகலுக்காகப் பெருமைப்பட்டேன். ஆனால், நான் பெருமைப்பட்டுக்கொண்டது அழிந்துவிட்டது. நான் வாதம் செய்து வற்புறுத்தினலன்றி என் தீர்மானத்தை நிறைவேற்ற முடியாது என்பதைக் கண்டேன். ஆனால், அந்த விருப்பம் எனக்கு இல்லை. பிறகு ஜவாஹர்லாலின் தீர்மானத்தைப் படிக்கக் கேட்டோம். என் தீர்மானத்தைவிட அதுவே தேசத்தின் கருத்தையும், பொதுவாகக் காரியக் கமிட்டியின் கருத்தையுங்கூட, உண்மையிலேயே எடுத்துக்காட்டுவதாக இருக்கிறது என்பதை உடனே ஒப்புக்கொண்டு விட்டேன். என் தீர்மானம் முற்றிலும் அகிம்சையை அடிப்படையாகக் கொண்டது. ஒரு கொள்கை என்ற மாத்திரத்திலாவது நிறைவான அகிம்சையில் காங்கிரஸுக்கு மனமார்ந்த நம்பிக்கை இருக்குமாயின், அதன் சோதனைக்காலமே இது. ஆனால், தனிப்பட்ட சிலரைத் தவிரக் காங்கிரஸ்காரர்களுக்கு அத்தகைய அகிம்சையில் நம்பிக்கை இல்லை. அப்படி நம்புகிறவர்கள்கூட, அதிகாரத்தைப் பறிக்க அரசாங்கத்துடன் போராடுவதற்கு மாத்திரம் அது சரியானதேயன்றி உலகிற்குக் கூறக் காங்கிரஸிடம் அகிம்சைச் செய்தி எதுவுமில்லை என்றே நம்புகின்றனர். காங்கிரஸ் அத்தகைய செய்தியைக் கூறவேண்டுமென்பதே நான் நம்புவது. இரண்டு தீர்மானங்களுக்கும் முடிவு முற்றிலும் மாறுபட்டதாக இருக்க வேண்டியதில்லை. ஆனால், நோக்கத்தின் தன்மை மாறுபட்டதாக இருப்பதால், இதே தீர்மானம் மாறுபட்ட நிலைமையில் வேறுவிதமான பொருளையே அளிக்கும். இந்தியாவில் பலாத்காரச் செயல்கள் நடந்து கொண்டே வருகின்றன; காங்கிரஸ் அரசாங்கங்களும் திரும்ப ராணுவ, போலீஸ் உதவியையே நாட வேண்டியவைகளாகியிருக்கின்றன. இந்த நிலையில் உலகத்திற்கு அகிம்சையைப்

---

* 1939 ஆகஸ்டு 9-ஆந் தேதி வர்தாவில் காங்கிரஸ் காரியக் கமிட்டி செய்த சர்வதேச நெருக்கடிபற்றிய தீர்மானத்தையே காந்திஜி இதில் குறிப்பிடுகிறார். அக்கூட்டத்தை அடுத்து மகாத்மா, 'இரு தீர்மானங்கள்' என்ற தலைப்பில் 'ஹரிஜன்' பத்திரிகையில் எழுதினார். அக்கட்டுரையில் யுத்த சம்பந்தமான தீர்மானத்தைப்பற்றிய பகுதியே இங்கே கொடுக்கப்பட்டிருக்கிறது.

பிரகடனம் செய்வது கேலியாகவே தோன்றியிருக்கும். இந்தியாவிலோ அல்லது உலகத்திலோ அதற்கு மதிப்பே ஏற்பட்டிருக்காது. என்றாலும், எனக்கு நான் உண்மையாக இருக்க வேண்டுமாயின், நான் தயாரித்ததைத் தவிர வேறுவிதமான தீர்மானத்தைத் தயாரித்திருக்க முடியாது.

என் தீர்மானம் அடைந்த கதிக்கு நானும் பொறுப்பாளியாவேன். காங்கிரஸுடன் உத்தியோகத் தொடர்பு இல்லாமல் நான் விலகிக்கொண்டது எவ்வளவு புத்திசாலித்தனமானது என்பதை அது நிரூபித்துவிட்டது. காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டங்களுக்கு நான் போவது, அதன் தீர்மானங்களிலோ அல்லது அதன் பொதுக் கொள்கைகளிலோ கலந்துகொள்வதற்காக அல்ல. என்னுடைய லட்சியமான அகிம்சையை நோக்கியே நான் போகிறேன். நான் வர வேண்டும் என்று அவர்கள் விரும்பும்போது அவர்களுடைய செய்கைகளிலும், அவர்கள் மூலம் காங்கிரஸ்காரர்களின் நடவடிக்கைகளிலும் அகிம்சையை வற்புறுத்துவதற்காகவே நான் போகிறேன். ஒரே லட்சியத்தை நோக்கியே நாங்கள் செல்கிறோம். முடிந்தால், அவர்கள் எல்லோருமே என்னுடன் நெடுக வருவார்கள். ஆனால், எனக்கு நான் உண்மையோடு இருக்க வேண்டும் என்று எப்படி விரும்புகிறேனோ அது போலவே அவர்களும் தங்களுக்கும் இப்பொழுது தாங்கள் பிரதிநிதிகளாக இருக்கும் நாட்டுக்கும் உண்மையோடு நடந்துகொள்ள வேண்டும் என எண்ணுகின்றனர். அகிம்சையின் முன்னேற்றம் மிகவும் மெதுவாகவே செல்கிறது என்பதை நான் அறிவேன். ஆனால், பொதுவான லட்சியத்தை அடைவதற்கு அதுவே நிச்சயமான வழி என்பதை அனுபவம் எனக்குப் போதிக்கிறது. ஆயுதப் போரின் மூலம் இந்தியாவுக்கோ அல்லது உலகிற்கோ விமோசனமே கிடையாது. நீதியை நிலைநிறுத்துவதற்குக்கூட இம்சை முறை பலனற்றதாகிவிட்டது. முற்றிலும் அகிம்சையை நம்புவதில் என்னுடன் பங்குகொள்ள யாருமே எனக்கு இல்லை என்பதே என் கதி என்றால், அந்த நம்பிக்கையுடனேயே நான் மாத்திரம் தனியாக என் வழியில் போய்க்கொண்டிருப்பதில் எனக்குத் திருப்திதான்.

சேவா கிராமம், 23—8—1939. —'ஹரிஜன்' - 26—8—1939.

## 2

# சிம்லா விஜயம்

கால்காவுக்குப் போக டில்லியில் நான் ரெயிலேறியபோது ஒரு பெருங்கூட்டத்தினர் விளையாட்டு உணர்ச்சியின் பேரிலேயே

'மகாத்மா காந்திக்கு ஜே' என்று, சப்பிட்டுப் போன பல்லவி யுடன், 'நாங்கள் எந்த சமரசத்தையும் விரும்பவில்லை' என்ற அடியையும் பாடினர். அப்பொழுது நான் வாரந்தோறும் அனுஷ்டிக்கும் மௌன விரதத்தில் இருந்தேன். ஆகையால் நானே சிரித்துக்கொண்டேன். ரெயில் வண்டியின் படிக் கட்டுகளில் நின்றவர்கள், என் முறுவலைப் பார்த்துத் தாமும் முறுவல் செய்தனர். வைசிராயுடன் நான் எந்தவிதமான சம ரச முடிவுக்கும் வந்துவிடக்கூடாது என்றும் அவர்கள் என்னை நோக்கிச் சொல்லிக்கொண்டிருந்தார்கள். ஒரு காங்கிரஸ் கமிட்டியிடமிருந்தும் எனக்குக் கடிதம் வந்திருந்தது. அதுவும் அதே போன்ற எச்சரிக்கையை எனக்குச் செய்திருந்தது. இவ்விதம் எனக்கு ஆலோசனை கூறிய இவர்களில் யாருக்கும் என்னைத் தெரியாது. எனக்குள்ள குறைபாடுகளை நான் அறி வதற்கு எனக்கு எந்தவித எச்சரிக்கையும் தேவையில்லை. டில்லி ஆரவாரங்களும், ஒரு காங்கிரஸ் கமிட்டியின் எச்சரிக் கையும் ஒரு புறமிருக்க, வைசிராயை நான் சந்தித்துப் பேசிய போது என்ன நடந்தது என்பதைப் பொது மக்களுக்குச் சொல்ல வேண்டியது என் கடமையாகிறது.*

எனக்காக அன்றி வேறு யாருக்காகவும் பேசும் அதிகாரம் எனக்குக் கிடையாது என்பதை நான் அறிவேன். இவ்விஷ யத்தில் நான் இன்னது செய்ய வேண்டும் என்று காரியக் கமிட்டியிடமிருந்து எனக்கு அறிவிப்பு எதுவும் இல்லை. தந்தி மூலம் எனக்கு அழைப்பு வந்தது; கிடைத்த முதல் ரெயிலி லேயே புறப்பட்டுவிட்டேன். இன்னும் என்னவென்றால், என் னுடைய அடக்க முடியாத, முழுவதுமான அகிம்சையுடன் நாட்டின் மனப்போக்கை நான் எடுத்துரைக்க முடியாது. அப்படிச் செய்ய நான் முயன்றாலும் அதைச் சரியாகச் செய்ய முடியா

* போலந்து மீது ஜெர்மனி படையெடுத்துவிடவே 1939 செப்டம்பர் 3-ஆம் தேதி ஜெர்மனிமீது பிரிட்டன் யுத்தப் பிரகடனம் செய்தது. அன்றே இந்தியாவில் வைசிராய், இந்தியத் தலைவர்களையோ அல்லது சட்டசபைகளையோ முன்கூட்டிக் கலந் தாலோசிக்காமல், இந்தியாவும் போரில் இறங்கிவிட்டதாக யுத்தப் பிரகடனம் செய்து விட்டார். "யுத்தத்தினால் இந்தியாவின் பாதுகாப்புக்கு ஆபத்து உண்டாகும் அவசர நிலைமை ஏற்பட்டிருக்கிறது" என்று கூறிப் பல அவசரச் சட்டங்களும் பிறப்பிக்கப்பட் டன. வைசிராய் ரேடியோ மூலம் செய்த பிரசங்கத்தில், "உலகத்தின் பெரிய நாடு களிடையே இந்தியா வகிக்கும் ஸ்தானத்திற்குரிய பங்கை நிறைவேற்ற முன் வருமாறு இந்தியா அழைக்கப்படுகிறது" என்றார். பிறகு வைசிராய், மகாத்மா காந்தியையும் மற்றத் தலைவர்களையும் கலந்தாலோசிப்பதற்காகச் சிம்லாவுக்கு அழைத்திருந்தார். அதற்காகத் தாம் சிம்லாவுக்குச் சென்றதைக் குறித்தும் வைசிராயுடன் தாம் பேசிய தைக்குறித்துமே 1939 செப்டம்பர் 5-ஆம் தேதி மகாத்மா இக்கட்டுரையில் எழுதுகிறார்.

மல் எல்லோர் நகைப்புக்கும் ஆளாவேன். இதை வைசிரா யிடம் சொன்னேன். ஆகையால், என்னுடன் ஓர் ஏற்பாட் டிற்கோ அல்லது பேச்சு வார்த்தைக்கோ வருவது என்பதற்கே இடமில்லை. சமரசப் பேச்சை நடத்துவதற்காக என்னை அவர் அழைத்திருந்தார் என்பதையும் காணவில்லை. வைசிராய் மாளி கையிலிருந்து வெறுங்கையுடன், பகிரங்கமாகவோ அல்லது ரகசியமாகவோ எந்த ஏற்பாடும் செய்துகொள்ளாமல் நான் திரும்பியிருக்கிறேன். அப்படி ஏதாவது இருப்பதாயின் அது காங்கிரஸுக்கும் அரசாங்கத்திற்குமே இருக்க வேண்டும்.

ஆகையால், எனக்கும் காங்கிரஸுக்கும் இடையே உள்ள நிலைமையைத் தெளிவாக்கிவிட்டு, முற்றிலும் ஜீவகாருண்யத்தை அனுசரித்து என்னுடைய சொந்த அனுதாபங்களெல்லாம் பிரிட்டன், பிரான்ஸ் பக்கமே இருக்கின்றன என்றும் வைசிரா யிடம் கூறினேன். யாராலும் தாக்கவே முடியாதது என்று இதுவரையில் கருதப்பட்டு வந்த லண்டன் நாசத்தை அடை வது என்பதை எண்ணும்போதே நான் பெருந் துயருக்கு ஆளானதையும் அவரிடம் சொன்னேன். பார்லிமெண்டு கட்டி டங்கள், வெஸ்ட்மின்ஸ்டர் அபே இவை அழிவுக்கு உள்ளாகுமோ என்று அவர் முன் ஒரு சித்திரத்தை நிறுத்திய போது எனக்குத் துக்கம் மேலிட்டது. ஆறுதல் அடைய முடியவே இல்லை. இத்தகைய காரியங்கள் நடந்து கொண்டு போகக் கடவுள் அனுமதிக்கக் கூடாது என்று என் உள்ளத்தில் அவருடன் இடைவிடாது மன்றாடிக்கொண் டிருக்கிறேன். என்னுடைய அகிம்சை முற்றிலும் வலுவிழந்து விட்டதாகவே தோன்றுகிறது. ஆனால், தினமும் நடக்கும் இச்சச்சரவின் முடிவில் கடவுளோ அல்லது அகிம்சையோ வலுவிழந்ததாகக் கொள்ளலாகாது என்று விடை வந்துகொண் டிருக்கிறது. வலிவின்மை மனிதரிடமே இருக்கிறது; என் முயற்சியில் நான் முறிவுற்றாலும் சரி, நம்பிக்கையை இழக்காமல் நான் தொடர்ந்து முயற்சி செய்துகொண்டே இருக்க வேண்டும்.

ஆகையால், எனக்கு வரக் காத்திருக்கும் வேதனையை எதிர்பார்ப்பதைப் போலவே ஜூலை 23-ஆம் தேதி அபோட் டாபாதிலிருந்து ஹெர் ஹிட்லருக்குக் கீழ்வரும் கடிதத்தை எழுதினேன்:

"ஜீவகாருண்யத்தை முன்னிட்டு நான் உங்களுக்கு எழுத வேண்டும் என்று நண்பர்கள் என்னை வற்புறுத்திக்கொண்டிருந்தார்கள். ஆனால், நான் கடிதம் எழுதுவது துடுக்குத்தனமானதாக இருக்கக்கூடும் என்ற உணர்ச்சி

யுடன் நண்பர்களின் வற்புறுத்தலுக்கு உடன்படாமல் இருந்து வந்தேன். இதையெல்லாம் நான் கவனித்துக் கொண்டிருக்கக்கூடாது, இதன் பலன் எதுவாயிருந்தாலும் என் கோரிக்கையை நான் அனுப்பிவிட வேண்டும் என்று ஏதோ ஒன்று எனக்குக் கூறுகிறது.

"மனித வர்க்கத்தை மிருக நிலைக்குக் கொண்டு போய்விடக்கூடிய போரைத் தடுக்கக்கூடிய ஒரே மனிதர் உலகத்தில் நீங்கள் தான் என்பது தெளிவானது. ஒரு காரியத்திற்கு, அது அதிக மதிப்புள்ளது என்று நீங்கள் என்ன தான் கருதிய போதிலும், அதை இந்த விலையைத் தந்தா நீங்கள் வாங்க வேண்டும்? தீரச் சிந்தித்தே யுத்த முறையை ஓரளவு எதிர்த்து வெற்றி கண்ட ஒருவரின் கோரிக்கைக்கு நீங்கள் செவி சாய்ப்பீர்களா?

"தங்களுக்கு எழுதியதில் நான் தவறு செய்திருந்தால் அதைப் பொறுப்பீர் என நான் எதிர்பார்க்கிறேன்."

இப்பொழுதாகிலும் நியாயத்திற்கும், ஜெர்மன் மக்கள் உள்படச் சிந்தனையுள்ள மனிதவர்க்கத்தின் வேண்டுதலுக்கும் அவர் செவி சாய்க்க வேண்டுமென விரும்புகிறேன். மனிதனின் காருண்யமற்ற ஆற்றலினால் நாசம் விளையுமோ என்ற பயத்தால் லண்டன் போன்ற பெரிய நகரங்களிலிருந்து மக்கள் வெளியேறுவதை ஜெர்மானியரும் சலனமற்றுப் பார்ப்பார்கள் என்பதை நம்ப மறுக்கிறேன் நான். தங்களுக்கும் தங்களுடைய நினைவுச் சின்னங்களுக்கும் ஏற்படும் இத்தகைய நாசங்களைக் குறித்து அவர்கள் நிச்சிந்தையாக இருந்துவிட முடியாது. ஆகவே, இந்தியாவின் விமோசனத்தைக் குறித்து நான் இச்சமயம் யோசித்துக்கொண்டிருக்கவில்லை. அது வரும்; ஆனால், இங்கிலாந்தும் பிரான்ஸும் தோல்வி யடைந்துவிட்டாலோ அல்லது ஜெர்மனி நாசமாக்கப்பட்டு, அவமானப்படுத்தப்பட்டு நேசநாடுகள் வெற்றி பெற்றாலோ அப்பொழுது இந்தியாவின் விமோசனத்திற்கு என்ன மதிப்பு இருக்கும்?

என்றாலும், ஹெர் ஹிட்லருக்கு மிருகபலத்தைத் தவிரக் கடவுள் இருக்கிறார் என்பதே தெரியாது என்றே தோன்றுகிறது. மிருகபலத்தைத் தவிர வேறு எதற்கும் அவர் காது கொடுக்கமாட்டார் என்று ஸ்ரீ சேம்பர்லேனும் கூறுகிறார். இணையே இல்லாததான இத்தகைய நாசத்திற்கு இடையே காங்கிரஸ்காரர்களும் பொறுப்பு வாய்ந்த மற்ற எல்லா இந்தியரும், தனிப்பட்ட முறையிலும் சேர்ந்தும், இந்தப் பயங்கரமான நாடகத்தில் இந்தியா என்ன பங்கை வகிப்பது என்பதை முடிவு செய்ய வேண்டும்.

சிம்லா, 5—9—1939.

—'ஹரிஜன்' - 9—9—1939.



மகாத்மா ராஜகோட் உண்ணாவிரதம் முடித்தபோது (1939)



பிர்லா மாளிகையிலிருந்து வைசிராயைச் சந்திக்கச் செல்லும் மகாத்மா (1939)

# 3

# என் அனுதாபத்திற்குக் காரணம்

வைசிராயைச் சந்தித்துப் பேசியதுமே நான் வெளியிட்ட அறிக்கை கலப்பான வரவேற்பைப் பெற்றிருக்கிறது. அதை ஒருவர், அர்த்தமில்லாத உணர்ச்சிக் கூற்று என்று விவரிக்கிறார். இன்னும் ஒருவரோ, ராஜதந்திரத்தோடு கூடிய அறிவிப்பு என்கிறார். இறுதியான இந்த இரண்டு கருத்துக்களுக்குமிடையே பேதங்கள் அதிகம் உண்டு. குறை கூறுகிறவர்கள் ஒவ்வொருவரும் தத்தம் நோக்கின்படி கூறுவது சரியே. உண்மை நோக்கின்படி – இவ்விஷயத்தில் அந்த அறிக்கையை வெளியிட்டவரின் நோக்கின் படி – எல்லோரும் தவறே செய்திருக்கின்றனர். அவர், தம்முடைய திருப்திக்காகவே யல்லாமல் வேறு யார் திருப்தி அடைவதற்கும் அதை எழுதவில்லை. அதில் கூறியிருக்கும் ஒவ்வொரு சொல்லுக்கும் நான் உடன்படுகிறேன். காருண்யமுள்ள ஒவ்வொருவரும் கொள்ளும் கருத்தைத் தவிர அதில் எந்தவிதமான ராஜீய முக்கியத்துவமும் இல்லை. கருத்துக்கள் ஒன்றுக்கொன்று இணைவதைத் தடுத்துவிட முடியாது.

ஒருவர் ஆவேசத்துடன் எதிர்த்துக் கடிதம் எழுதியிருக்கிறார். பதில் வேண்டும் என்றும் அக்கடிதம் கேட்கிறது. கடிதத்தின் சில பகுதிகள் எனக்கே புரியவில்லையாகையால் அக்கடிதம் முழுவதையும் நான் இங்கே கொடுக்கவில்லை. ஆனால், அதன் போக்கைப் புரிந்துகொள்ளுவதில் கஷ்டமில்லை. முக்கியமான வாதம் இதுதான் :

இங்கிலாந்தின் பார்லிமெண்டுக் கட்டிடங்களும் வெஸ்ட்மின்ஸ்டர் அபேயும் நாசமாகிவிடக்கூடுமே என்று நீங்கள் கண்ணீர் வடிப்பதாயிருந்தால் ஜெர்மனியின் நினைவுச் சின்னங்கள் நாசமாகிவிடக்கூடியதைக் குறித்து உங்களுக்குக் கண்ணீர் வரவில்லையா? ஜெர்மனியிடம் அனுதாபம் காட்டாமல் இங்கிலாந்து, பிரான்ஸுக்காக ஏன் அனுதாபப்படுகிறீர்கள்? சென்ற யுத்தத்தில் நேசதேச வல்லரசுகளினால் ஜெர்மனிக்கு இழைக்கப்பட்ட அட்டூழியங்களுக்கு ஒரு சவால் அல்லவா ஹிட்லர்? நீங்கள் ஒரு ஜெர்மானியராக இருந்து, ஹிட்லருக்கு இருக்கும் சாதனங்களும் உங்களுக்கு இருந்தால், உலகம் முழுவதுமே இருப்பதைப்போல நீங்களும் பதிலுக்குப் பதில் செய்வதென்பதில் நம்பிக்கையுள்ளவராகவும் இருந்தால், ஹிட்லர் என்ன செய்கிறாரோ அதையே நீங்களும் செய்திருப்பீர்கள். நாஜீயம் கெடுதலானதாக இருக்கலாம். உண்மையில் அது எப்படிப்பட்டது என்பது நமக்குத் தெரியாது. அதைப் பற்றிக் கிடைக்கும் பிரசுரங்களெல்லாம் ஒருதலைப்பட்சமானவை. ஆனால், சேம்பர்லேனுக்கும் ஹிட்லருக்கும் வித்தியாசமே கிடையாது என்று நான் உங்களுக்குக் கூறுகிறேன். ஹிட்லர் இடத்தில் சேம்பர்லேன் இருந்தால் அவர் வேறுவிதமாக நடந்துகொண்டிருக்கமாட்டார். ஹிட்லருக்குச் சாதகமில்லாத

வகையில் நீங்கள் சேம்பர்லேனையும் ஹிட்லரையும் ஒப்பிட்டுக் கூறியிருப்பதன் மூலம் ஹிட்லருக்கு அநீதியைச் செய்துவிட்டீர்கள். அதே போன்ற சந்தர்ப்பங்களில் உலகின் ஒரு பகுதி விஷயத்தில் ஹிட்லர் நடந்துகொண்டிருப்பதைவிட இந்தியாவில் இங்கிலாந்து நடந்துகொண்டு வந்திருப்பது எந்தவிதத்தில் மேலானது? பழைய ஏகாதிபத்திய இங்கிலாந்து, பிரான்ஸ் இவற்றிடம் பாடம் கற்ற குழந்தை மாணவரே ஹிட்லர். வைசிராய் மாளிகையில் உங்களுக்கு ஏற்பட்ட உணர்ச்சி வேகம் நியாயமான முடிவுக்கு வராமல் உங்களைத் தடுத்திருக்க வேண்டுமென நினைக்கிறேன்."

ஆங்கிலேயரின் தகாத செயல்களை, உண்மைக்கு உட்பட்டு, என்னைவிட வேறு யாரும் அவ்வளவு பலமாக விவரித்திருக்க முடியாது. என்னைப் போல இங்கிலாந்தை அவ்வளவு பலமாக எதிர்த்தவர்களும் இல்லை. என்னுடைய எதிர்ப்பும் ஆர்வமும், சக்தியும் தணியாமல் இன்னும் இருந்துகொண்டுதான் வருகின்றன. மௌனத்திற்கும், செயலற்று இருப்பதற்கும் எப்படி ஏற்ற காலங்கள் உண்டோ அதே போலப் பேசுவதற்கும் செய்வதற்கும் ஏற்ற சந்தர்ப்பங்கள் இருக்கின்றன.

சத்தியாக்கிரக அகராதியில் எதிரி என்ற சொல்லுக்கே இடமில்லை. சத்தியாக்கிரகிகளுக்காகப் புது அகராதியைத் தயாரிக்கும் விருப்பம் எனக்கு இல்லாததனால், பழைய சொற்களுக்குப் புதிய பொருளைக் கொடுத்து நான் உபயோகிக்கிறேன். ஒரு சத்தியாக்கிரகி தன் நண்பனை நேசிப்பதைப் போன்றே எதிரி எனச் சொல்லப்படுபவரையும் நேசிக்கிறான். யாரையும் எதிரியாகவும் கொள்வதில்லை. ஒரு சத்தியாக்கிரகி, அதாவது அகிம்சையை மேற்கொள்ளுபவன் என்ற வகையில், இங்கிலாந்து நன்றாக இருக்கவேண்டும் என்றுதான் நான் விரும்ப வேண்டும். ஜெர்மனியைப்பற்றி நான் விரும்புவதெல்லாம், இச்சமயத்திற்குப் பொருத்தமில்லாதவையாகவே இருந்தன; இப்பொழுதும் இருக்கின்றன. ஆனால், என்னுடைய நாட்டின் சுதந்திரத்தை, அழிவுற்று எஞ்சி நிற்கும் ஜெர்மனியின் புழுதிமீது எழுப்ப நான் தயாராயில்லை என்று என்னுடைய அறிக்கையில் இரண்டொரு சொற்களில் கூறியிருக்கிறேன். ஜெர்மனியின் நினைவுச் சின்னங்களெல்லாம் அழியும் என்ற நினைவினால் நான் துக்கமடைந்தே இருக்க வேண்டும். என்னுடைய அனுதாபம் ஹெர் ஹிட்லருக்குத் தேவையில்லை. இப்பொழுது உள்ளவற்றை மதிப்பிடுவதில் இங்கிலாந்து முன்னர்ச் செய்த தீவினையையோ, முன்னர்ச் செய்த நற்செய்கைகளையோ ஆராய்வதில் அர்த்தமில்லை. இதே சந்தர்ப்பங்களில் முன்னால் மற்ற வல்லரசுகள் செய்தது எதுவாக இருந்தாலும் சரி, போருக்குப் பொறுப்பாளி ஹெர் ஹிட்லரே என்ற முடிவுக்

குச் சரியாகவோ, தவருகவோ நான் வந்துவிட்டேன். அவர் கோருவது சரியா, தப்பா என்பதை நான் கூறவில்லை. டான்ஜிக்கிலிருக்கும் ஜெர்மானியர் தங்களுடைய சுதந்திர அந்தஸ்தை விட்டுவிட விரும்புவார்களாயின் டான்ஜிக்கை ஜெர்மனியுடன் சேர்த்துக்கொள்ள ஹிட்லருக்குள்ள உரிமை ஆட்சேபிக்க முடியாததாக இருக்கலாம். போலந்தின் இடை வழியை எடுத்துக்கொண்டுவிட வேண்டும் என்று அவர் கேட்பதும் நியாயமான கோரிக்கையாகவே இருக்கலாம். அவருடைய கோரிக்கையை ஒரு சுயேச்சையான மத்தியஸ்தத்தினர் பரிசீலனை செய்ய அவர் விடவில்லை என்பதுதான் என்னுடைய புகாரெல்லாம். மத்தியஸ்தத்திற்கு இவ்விஷயத்தை விடுவது ஏன்ற கோரிக்கை சுயநலமுள்ள வட்டாரங்களிலிருந்து வந்தது என்பது அதை நிராகரித்துவிட்டதற்குப் பதிலாகிவிடாது. ஒரு திருடன்கூட, தன்னுடைய கூட்டாளிகளுக்கு நியாயமான கோரிக்கையை அறிவிக்கக்கூடும். தாம் கோருபவைகளைப் பாரபட்சமில்லாத ஒரு மத்தியஸ்தரின் பரிசீலனைக்குவிட ஹிட்லர் சம்மதிக்க வேண்டும் என்பதில் உலகம் முழுவதுமே ஆர்வத்துடன் இருந்தது என்று நான் கூறுவது சரி என்றே எண்ணுகிறேன். அவர் முற்பட்டிருக்கும் காரியத்தில் வெற்றி பெறுவாரானல், அந்த வெற்றி, அவர் கேட்டதெல்லாம் நியாயம் என்பதை நிரூபித்துவிடாது. மனித வர்க்கத்தின் காரியங்களில் காட்டுத்தருமமே இப்பொழுதும் அதிக சக்தி வாய்ந்ததாக இருக்கிறது என்பதற்கே அது ருசுவாகும். அது, மனிதர்களாகிய நாம் உருவத்தை மாற்றிக் கொண்டிருந்தாலும் மிருக குணத்தை மாத்திரம் மாற்றிக் கொள்ளவில்லை என்பதற்கு மேலும் ருசுவாகும்.

இங்கிலாந்தினிடமும் பிரான்ஸினிடமும் நான் கொண்ட அனுதாபம் திடீரென ஏற்பட்ட உணர்ச்சி வேகத்தினலோ அல்லது இன்னும் நயக்குறைவான பாஷையில் சொல்லுவதானல், ஆவேசத்தினலோ ஏற்பட்டது அல்ல. இது, என்னைக் குறை கூறுவோருக்கு இப்பொழுது தெளிவாகியிருக்கும் என்று நம்புகிறேன். ஐம்பது ஆண்டுகளாக என் உள்ளத்தில் சுரந்து வந்திருக்கும் வற்ருத ஊற்ருன அகிம்சையினல் பிறந்ததே அந்த அனுதாபம்: நான் கொண்டுள்ள முடிவில் தவறே இருக்காது என்று நான் சொல்லவில்லை. இங்கிலாந்திடமும் பிரான்ஸினிடமும் நான் அனுதாபம் காட்டியது நியாயமானது என்றே சொல்லுகிறேன். என் அனுதாபம் எந்த அடிப்படையில் ஏற்பட்டதோ அதை ஒப்புக்கொள்ளுகிறவர்கள் என்னுடன் சேரு

மாறு அழைக்கிறேன். அனுதாபம் எந்த உருவில் அமைய வேண்டும் என்பது வேறு விஷயம். தன்னந்தனியே நான் பிரார்த்திக்கத்தான் முடியும். இதனாலேயே, நேரடியாக யுத்தத்தில் ஈடுபட்டிருப்பவர்களிடையே நிச்சயமான நாசம் ஏற்பட்டுக்கொண்டிருக்கும்போது என்னுடைய அனுதாபத்திற்கு உருப்படியான மதிப்பு இருப்பதற்கில்லை என்று வைசிராயிடம் சொன்னேன்.

சேவா கிராமம், 11--9--1939 --'ஹரிஜன்' - 16--9—1939

# 4

# காரியக் கமிட்டி அறிக்கை

உலக நெருக்கடியைக் குறித்துக் காங்கிரஸ் காரியக் கமிட்டி வெளியிட்டிருக்கும் அறிக்கை* முடிவான உருவம் அடைவதற்கு நான்கு நாட்களாயின. கமிட்டியின் அழைப்பின் பேரில் பண்டித ஜவாஹர்லால் நேரு அதன் நகலைத் தயாரித்தார். அதைப்பற்றி ஒவ்வோர் உறுப்பினரும் தங்கள் கருத்துக்களைத் தாராளமாக எடுத்துக் கூறினர். பிரிட்டிஷாருக்கு அளிக்கும் ஆதரவு எதுவானாலும் அதை எந்தவித நிபந்தனையும் இல்லாமல் அளிக்க வேண்டும் என்று நினைப்பதில் நான் ஒருவனே தனியாக இருந்தேன் என்பதைக் காண வருத்தப்பட்டேன். முற்றிலும் அகிம்சை அடிப்படையில் மாத்திரமே இதைச் செய்ய முடியும். ஆனால், கமிட்டிக்கு இருந்த பொறுப்போ மிகவும் பெரிதானது. முற்றிலும் அகிம்சையோடு கூடியதான போக்கை அனுசரிக்க அதனால் முடியவில்லை. எதிராளியின் கஷ்டத்தைத் தனக்குச் சாதகமாக்கிக்கொள்ளாமல் இருப்பதற்கு வேண்டிய பலம் பெறும் வகையில் அகிம்சை உணர்ச்சியை நாட்டு மக்கள் இன்னும் அடைந்துவிடவில்லை என்று காரியக் கமிட்டி கருதியது. ஆனால், கமிட்டி தான் செய்திருக்கும் முடிவுக்குக் காரணங்களைக் கூறுகையில் ஆங்கிலேயர்பால் தனக்குள்ள தாராளத்தைக் காட்ட விரும்பியது.

அறிக்கையின் கர்த்தா கலைஞர். ஏகாதிபத்தியத்தின் எந்த வகையான உருவுக்கும், முறைக்கும் அவர் கொண்டுள்ள அசைக்க

---

* இதில் காந்திஜி குறிப்பிடும் அறிக்கை மிக முக்கியமாகையாலும், அகிம்சையைக் குறித்து மகாத்மாவுக்கும் காரியக் கமிட்டிக்கும் இருந்த கருத்து வேற்றுமையைப் புரிந்து கொள்ளுவதற்கு அதைப் படிப்பது அவசியமாகையாலும், அந்த அறிக்கை இத்தொகுப்பின் 'பின்சேர்க்கைப் பகுதி'யில் தனியாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த அறிக்கையைக் காங்கிரஸ் காரியக் கமிட்டி 1939 செப்டம்பர் 14-ஆம் தேதி வெளியிட்டது.

முடியாத எதிர்ப்பில் 'அவரை யாரும் மிஞ்சிவிட முடியாது. என்ருலும், அவர் ஆங்கில மக்களின் நண்பர். எண்ணத்திலும் அமைப்பிலும் அவர் இந்தியர் என்பதைவிட அதிகமாக ஆங்கிலேயர் என்றே சொல்ல வேண்டும். தம் நாட்டினரைவிட ஆங்கிலேயருடன் அவர் சகஜமாகப் பழகுபவர். எந்தத் தவறு எங்குச் செய்யப்பட்டதாயினும் பரபரப்படைகிருர். இந்த வகையில் அவர் ஒரு ஜீவகாருண்யவாதி. ஆகையால், அவர் சிறந்த தேசீயவாதியாக இருந்தபோதிலும் அவருடைய தேசீயம் உயர்ந்த சர்வதேசத் தன்மையில் வளம் அடைந்திருக்கிறது. ஆகவே, அந்த அறிக்கை தம்முடைய தேச மக்களுக்கோ, பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கோ, பிரிட்டிஷ் மக்களுக்கோ விடுத்த கோரிக்கை மட்டுமன்று; இந்தியாவைப் போன்று சுரண்டப் பட்டிருக்கும் மற்ற உலக நாடுகளுக்கும் விடுத்த வேண்டுகோளாகும். இந்தியா, தன்னுடைய சுதந்திரத்தை மாத்திரமேயன்றி உலகத்தில் சுரண்டப்பட்ட மற்ற எல்லா நாடுகளின் சுதந்திரத்தைப்பற்றியும் சிந்திக்கும்படி காரியக் கமிட்டியின் மூலம் அவர் கட்டாயப்படுத்தியிருக்கிருர்.

கமிட்டி, இந்த அறிக்கையை நிறைவேற்றிய சமயத்திலேயே அவரைத் தலைவராகக் கொண்டு அவர் தேர்ந்தெடுத்தவர்களைக் கொண்ட ஒரு குழுவினரையும் நியமித்திருக்கிறது. அப்போதைக்கப்போது ஏற்படும் நிலைமைக்குத் தக்கவாறு காரியங்களைச் செய்வதற்கென்றே அமைத்ததாகும் அக்குழு.*

அந்த அறிக்கை காங்கிரஸிலிருக்கும் எல்லாக் கட்சியினரின் ஆதரவையும் பெறும் என்று நான் நம்புகிறேன். அக்கட்சிகளில் அதிக பலமாக இருப்பவையும் அதில் எந்தவிதமான பல குறைவையும் காண. நாட்டின் வரலாற்றிலேயே மிக முக்கியமான இத்தருணத்தில், காரியத்தில் இறங்க வேண்டியது அவசியமாக இருக்குமாயின் காரியத்தில் இறங்குவதில் எந்தவிதமான பலவீனமும் இராது என்று காங்கிரஸ் உணர வேண்டும். சில்லறைத் தகராறுகளிலும் கட்சிப் பூசல்களிலும் காங்கிரஸ்காரர்கள் ஈடுபட்டுவிடுவார்களானல் அது வருந்தத் தக்கதாகவே இருக்கும். கமிட்டியின் நடவடிக்கையினல் ஏதாவது பெரியதோ அல்லது பயனுள்ளதோ ஆன காரியம் ஏற்பட வேண்டுமானல்,

* யுத்த சம்பந்தமாக 1939 செப்டம்பர் 14–ஆம் தேதி காரியக் கமிட்டி ஓர் அறிக்கையை வெளியிட்ட பிறகு யுத்த நிலைமையில் அப்போதைக்கப்போது ஏற்படும் மாறுதல்களைக் கவனித்து, வேண்டுவன செய்வதற்கு என்று பண்டித நேரு, மௌலான ஆஜாத், சர்தார் பட்டேல் ஆகிய மூவரும் அடங்கிய ஒரு குழுவையும் காரியக் கமிட்டி நியமித்தது. இக்குழுவையே இங்கு மகாத்மா குறிப்பிடுகிருர்.

ஒவ்வொரு காங்கிரஸ்காரரிடமிருந்தும் பிரிவுகள் இல்லாத, ஆட்சேபமற்ற முழு விசுவாசமும் அதனிடம் இருக்க வேண்டியது முற்றிலும் அவசியம். பிரிட்டிஷ் அரசாங்கம் தன்னுடைய கொள்கையைத் தெளிவாகக் கூறவேண்டும் என்றும், அதற்கு ஏற்றாற் போல யுத்த நிலைமையின் நடுவே சாத்தியமான காரியத்தையும் அது செய்ய வேண்டும் என்றும் கமிட்டி கோரியிருக்கிறது. கமிட்டியின் இக்கோரிக்கையில் மற்ற எல்லா ராஜீயக் கட்சிகளும், எல்லாச் சமூகங்களும் சேர்ந்துகொள்ளும் என்றே நம்புகிறேன். இந்தியாவை மாத்திரமேயன்றிப் பிரிட்டனின் நேர் ஆட்சியின் கீழிருக்கும் நாடுகளையும் சுதந்திரமான, சுயேச்சையான நாடுகளாக ஒப்புக்கொள்ளுவது, ஜனநாயகத்தைக் குறித்துப் பிரிட்டிஷார் சொல்லி வருவதற்கு இயற்கையாகவே பொருந்துவதாக இருக்கிறது என்று எனக்குத் தோன்றுகிறது. இதற்குக் குறைவான ஒன்றே யுத்தத்தின் பொருள் என்றால், அடிமைப்பட்ட நாடுகளின் ஒத்துழைப்பு, அகிம்சையை அது அடிப்படையாகக் கொண்டதாக இல்லாதிருக்குமாயின், யோக்கியமாக விரும்பி அளித்த ஒத்துழைப்பாகவே இருக்க முடியாது.

இப்பொழுது வேண்டியதெல்லாம் பிரிட்டிஷ் ராஜதந்திரிகளின் மனத்தில் புரட்சியான மாறுதல் ஏற்பட வேண்டியதே. இன்னும் தெளிவாகச் சொல்லுவதாயின், யுத்த ஆரம்பத்தில் ஜனநாயகத்தில் இருக்கும் நம்பிக்கையைப்பற்றிப் பிரிட்டிஷார் என்ன கூறினரோ, இப்பொழுதும் பிரிட்டிஷ் மேடைகளிலிருந்து எது திரும்பத் திரும்பச் சொல்லப்பட்டு வருகிறதோ அதை யோக்கியமாக அவர்கள் காரியத்தில் நிறைவேற்ற வேண்டும் என்பதுதான் இப்பொழுது செய்யவேண்டியதெல்லாம். இந்தியாவுக்கு விருப்பம் இராதபோது அதை பிரிட்டன் யுத்தத்தில் இழுத்து வைத்துக்கொள்ளுமா? அல்லது உண்மையான ஜனநாயகத்தைப் பாதுகாக்கும் நிமித்தம் தன்னுடன் விரும்பி ஒத்துழைக்கும் சகாவாக இந்தியாவை வைக்குமா? இங்கிலாந்துக்கும் பிரான்ஸுக்கும் மிகப் பெரிய தார்மிக பலம் என்பதே காங்கிரஸ் தரும் ஆதரவுக்குப் பொருள். அகிம்சை எவ்வளவுதான் குறைபாடுகளை உடையதாயிருப்பினும், கரடுமுரடானதாக இருந்தாலும், அகிம்சை முறையைக் கொண்டுதான் காங்கிரஸ் போராடுகிறதேயன்றிப் பலாத்காரத்தினால் அல்ல.

சேவா கிராமம், 15--9--1939 —'ஹரிஜன்' - 23—9—1939.

# 5

# புதிர் போன்ற கேள்விகள்

1. அகிம்சைக்குப் பொருத்தமான வகையில் இந்த யுத்தம் பற்றி உங்களுடைய சொந்தப் போக்கு என்ன ?

2. போன யுத்தத்தின்போது நீங்கள் அனுசரித்த போக்கே இப்பொழுதும் உங்களுக்கு இருக்கிறதா? அல்லது வேறு வகையான போக்கு இருக்கிறதா ?

3. இப்பொழுதுள்ள நெருக்கடியில் காங்கிரஸின் கொள்கை பலாத்காரத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. அப்படி இருக்கும்போது உங்களுடைய அகிம்சைக் கொள்கையுடன் நீங்கள் எப்படிக் காங்கிரஸுடன் சேர்ந்திருக்கவோ, அதற்கு உதவி செய்யவோ முடியும்?

4. இந்த யுத்தத்தை எதிர்க்கவோ அல்லது தடுக்கவோ அகிம்சையை அடிப்படையாகக் கொண்ட உங்களுடைய உருப்படியான திட்டம் என்ன ?

இந்தக் கேள்விகளுடன், என்னிடம் இருப்பதாகத் தோன்றும் முரண்பாடுகளைக் குறித்தும், என்னைப் புரிந்துகொள்ள முடியாமல் இருப்பதுபற்றியும் நட்பு முறையில் புகாரும் செய்திருக்கிறார். இவ்விரண்டும் பழைய புகார்கள். புகார் சொல்லுவோரின் கருத்துப்படி முற்றிலும் நியாயமானவை; என் கருத்துப்படியோ அவை முற்றிலும் நியாயமற்றவை. ஆகையால், என்மீது புகார் சொல்லுகிறவர்களும் நானும் இவ்விதம் மாறுபட்ட கருத்துக் கொண்டிருக்கச் சம்மதிக்க வேண்டும். ஒன்று மாத்திரம் நான் சொல்லிவிடுகிறேன். நான் எழுதும்போது முன்னால் நான் சொன்னது என்ன என்பதைப்பற்றிச் சிந்திப்பதில்லை. ஒரு குறிப்பிட்ட விஷயத்தில் நான் முன்னால் சொன்னதற்கும் இப்பொழுது சொல்லுவதற்கும் முரண்பாடில்லாமல் இருக்க வேண்டும் என்பதல்ல என் லட்சியம். ஆனால், ஒரு குறிப்பிட்ட சமயத்தில் எனக்குத் தோன்றும் வகையில் சத்தியத்திற்கு முரண்பாடில்லாமல் இருக்க வேண்டும் என்பதே என் லட்சியம். ஒரு சத்தியத்திலிருந்து மறு சத்தியத்திற்கு நான் வளர்ந்திருக்கிறேன் என்பதே இதன் பலனாக இருந்திருக்கிறது. என் ஞாபக சக்திக்கும் அதிக வேலை கொடுக்காமல் காப்பாற்றியிருக்கிறேன். இன்னும் என்னவெனில், ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால் நான் எழுதியவைகளுடன் சமீபத்தில் நான் எழுதியதை ஒப்பிட்டுப் பார்க்க வேண்டி வந்தபோது அந்த இரண்டுக்கும் எவ்வித முரண்பாடுமே கிடையாது என்பதைக் கண்டிருக்கிறேன். ஆனால், முரண்பாடு இருப்பதாகக் காணும் நண்பர்கள் ஒன்று செய்யட்டும்: முன்னால் நான் சொன்னதை அவர்கள் ஏற்க விரும்பவில்லையென்றால் சமீபத்தில் நான் எழுதி

யுள்ளதில் கிடைக்கும் பொருளையே அவர்கள் எடுத்துக்கொள்ளலாம். ஆனால், இதில் அவர்கள் இஷ்டமானதைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளுவதற்கு முன்னால், முரண்பாடு உள்ளனவாகத் தோன்றும் இரண்டினுள்ளும் தென்படும் ஒரு முரண்பாட்டின்மையைக் காண அவர்கள் முயற்சி செய்ய வேண்டும்.

என்னைப் புரிந்துகொள்ள முடியவில்லை என்று சொல்லப்படுவது சம்பந்தமாக நான் அளிக்கும் உறுதி மொழியை நண்பர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும். என்னைப் பொறுத்தவரையில், பொருத்தமெனத் தோன்றியபோது என் எண்ணத்தை மறைத்து வைக்க நான் முயன்றதே இல்லை. சுருக்கமாகக் கூறிவிட வேண்டும் என்ற என் ஆவலினால் சில சமயங்களில் இவ்வாறு ஏற்படுகிறது. வேறு சில சமயங்களிலோ, என் அபிப்பிராயத்தைக் கூற வேண்டும் என்று கேட்கப்படும் விஷயத்தைப்பற்றி எனக்குள்ள அறியாமையின் காரணமாகவும் இது இருக்கக்கூடும்.

இதற்குச் சரியான ஓர் எடுத்துக்காட்டாக, ஒரு நண்பர் அவருக்கும், எனக்குமிடையே மனத்தில் மறைத்து வைப்பதென்பதே இருந்ததில்லை. கோபத்தைவிட மனவேதனையுடன் எழுதுவதாவது :

"இந்தியா போர் அரங்கமாக இருக்கப்போகிறது என்பது நடக்காத விஷயமே. அப்படி ஏற்பட்டால் எதிரியின் வாளுக்குத் தங்கள் மார்பைத் திறந்து காட்டும்படி தம் தேச மக்களுக்கு யோசனை கூறக் காந்திஜி தயாராக இருக்கிறாரா? அவர் அப்படியே செய்வார் என்று கொஞ்சம் முன்னால்வரை நான் சத்தியம் செய்திருப்பேன், ஆனால், இப்பொழுது அந்த நம்பிக்கை எனக்கு இல்லை."

அவருக்கு நான் ஒன்று உறுதி கூற முடியும் : சமீபத்தில் நான் எழுதியவை எப்படி இருந்தாலும், முன்னால் நான் என்ன ஆலோசனை கூறியிருப்பேன் என்று அவர் எதிர்பார்க்கிறாரோ அதே யோசனையில் அல்லது ஜெக் மக்களுக்கும் அபிஸீனியருக்கும் நான் கூறியதைப் போலவே கூறுவேன் என்பதில் அவர் நம்பிக்கை வைக்கலாம். என்னுடைய அகிம்சை உறுதித்தன்மை வாய்ந்தது. விஞ்ஞானிகள் அறிந்திருக்கும் உறுதியுள்ள உலோகத்தையெல்லாம்விட உறுதியானது அது. என்றாலும், அது தன்னுடைய இயல்பான உறுதியை இன்னும் அடைந்துவிடவில்லை என்பதை மன வருத்தத்துடன் உணர்ந்தே இருக்கிறேன். அது அந்த உறுதியை அடைந்திருக்குமாயின், நான் தினந்தோறும் பார்த்தும் ஒன்றும் செய்ய முடியாமலிருக்கும் பலாத்காரமான பல விஷயங்களைச் சமாளிக்கும்

வழியைக் கடவுள் எனக்குக் காட்டியிருப்பார். இவ்விதம் கூறுவது அகந்தையினால் அன்று; நிறைவான அகிம்சையின் சக்தியை நிச்சயமாக அறிந்திருப்பதனாலேயே கூறுகிறேன். என்னுடைய குறைபாடுகளையும் பலவீனங்களையும் மறைப்பதற்காக அகிம்சையின் சக்தியைக் குறைத்து மதிப்பிட்டுவிட மாட்டேன்.

மேலே கண்ட கேள்விகளுக்கு விடை தரச் சில வரிகள் கூறுகிறேன் :

*1.* முன்னால் இருந்ததையெல்லாம்விட அதிக பயங்கரம் என்பதே இந்த யுத்தத்தைப்பற்றிய என் கருத்து. நான் இன்று இருப்பது போல இதற்கு முன் அவ்வளவு துக்கப்படுபவனாக இல்லை. சென்ற யுத்தத்தின்போது என்னை நானே படைக்கு ஆள் திரட்டும் சார்ஜண்டாக நியமித்துக்கொண்டேன். ஆனால், இன்று தோன்றியுள்ள ஒரு பயங்கரம் இன்று நான் அப்படிச் செய்வதைத் தடுக்கும். ஆயினும், விசித்திரமாகத் தோன்றினும் என்னுடைய அனுதாபமெல்லாம் நேச தேசத்தினரின் பக்கமே இருக்கிறது. இந்த யுத்தம், யார் விரும்பினாலும் விரும்பாது போனாலும், மேற்கத்திய நாடுகள் உருவாக்கியிருக்கும் ஜனநாயகத்திற்கும் ஹெர் ஹிட்லரை உருவமாகக் கொண்டிருக்கும் சர்வாதிகாரத்திற்குமிடையே நடக்கும் போராகவே ஆகியிருக்கிறது. ருஷியா அதில் கொண்டிருக்கும் பங்கு* வருந்தத்தக்கதாயினும், இந்த விபரீதமான சேர்க்கை நாம் நினைக்க முடியாத சந்தோஷமான இணைப்பில் முடியும் என்று நம்புவோமாக. அது எந்த உருவை அடையும் என்று யாரும் முன்கூட்டியே சொல்லிவிட முடியாது. நேச தேசத்தினர் நன்னெறி கெட்டவராகிவிடுவார்கள் என்பதற்கு அறிகுறி சிறிதேனும் தென்படவில்லை. அப்படி அவர்கள் ஆகிவிடாமல் இருந்தால், இன்று நாம் காணும் கோரவகையான யுத்தங்களையே ஒழித்துவிடுவதற்கு இந்த யுத்தம் உபயோகமாக இருக்கலாம். இந்தியா, தன்னுடைய உள்நாட்டுச் சச்சரவுகளால் கலக்கமுற்று இருந்தாலும், விரும்பிய லட்சிய முடிவைக் காணுவதற்கும், இது வரையில் இருந்ததைவிடச் சுத்தமான ஜனநாயகம் பரவுவதற்கும், சரியான பங்கு கொள்ள முடியும் என்ற நம்பிக்கை எனக்கு

* 1939 செப்டம்பர் 1–ஆம் தேதி ஜெர்மன் படைகள் போலந்துக்குள் புகுந்து முன்னேறிக்கொண்டிருந்த சமயத்தில் ருஷியப் படைகளும் புகுந்து போலந்தில் அடங்கியதான வெள்ளை ருஷியா, உக்ரேன் பகுதிகளைப் பிடித்துக்கொண்டுவிட்டன. மேற்கண்ட கட்டுரையை மகாத்மா செப்டம்பர் 25-ஆம் தேதி எழுதினார். ஆகையால், ருஷியாவும் போலந்துமீது படையெடுத்த அந்தப் போக்கையே இங்கே குறிப்பிடுகிறார்.

இருக்கிறது. இப்பொழுது உலக அரங்கில் நடக்கும் உண்மையான துன்பியல் நாடகத்தில் காரியக் கமிட்டி முடிவாக எவ்விதம் நடந்துகொள்ளப் போகிறது என்பதையே இது பொறுத்திருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. இந்த நாடகத்தில் நடிப்பவர்களும், அதைப் பார்ப்பவர்களும் நாமே. நான் செய்ய வேண்டியது இன்னதென்பது நிர்ணயமாகிவிட்டது. காரியக் கமிட்டியின் பணிவான வழிகாட்டி என்ற முறையில் நான் நடந்தாலும், இதையே அரசாங்க விஷயத்திலும் கூறுவது குற்றமல்லவெனினும், அரசாங்கத்திற்கு வழிகாட்டி என்ற வகையில் நான் நடந்தாலும், என் வழி ஒன்றே ஒன்றுதான். இவற்றில் ஒன்றையோ அல்லது இரண்டையுமோ - அவ்வழி என்னதான் சரியாகப் புலப்படாது இருப்பினும் - அகிம்சை வழியில் அழைத்துச் செல்வதேயாகும். இதில் எந்த வழியிலும் துரித கதியில் செல்லக் கட்டாயப்படுத்த முடியாது என்பது தெளிவானது. அச்சமயம் என் மூளையிலோ அல்லது இதயத்திலோ ஆண்டவன் எந்தப் பலத்தை அளிக்கிறானோ அதையே நான் உபயோகிக்க முடியும்.

2. முதல் கேள்விக்குச் சொன்ன பதிலில் இரண்டாவது கேள்விக்கான விடையும் அடங்கியிருக்கும் என்று நம்புகிறேன்.

3. அகிம்சையைப் போலவே பலாத்காரத்திலும் படிகள் இருக்கின்றன. அகிம்சைக் கொள்கையிலிருந்து காரியக் கமிட்டி வேண்டுமென்றே விலகிப் போய்விடவில்லை. அகிம்சையின் உண்மையான கருத்துக்களை அது நேர்மையாக ஏற்றுக்கொண்டுவிட முடியாது. நாட்டிற்கு வெளியிலிருந்து ஆபத்து நேரிடும்போது, அகிம்சை முறையைக் கொண்டே பாதுகாத்துக்கொள்ள வேண்டுமென்பதை ஏராளமான காங்கிரஸ்காரர்கள் தெளிவாகப் புரிந்துகொள்ளவில்லை என்பதை அது கண்டது. உண்மையில் அவர்கள் அறிந்துகொண்டிருப்பதெல்லாம் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு எதிராக மொத்தத்தில் அகிம்சையோடு போராடி வெற்றி பெற முடியும் என்பதே. மற்றத் துறைகளில் அகிம்சையை உபயோகிப்பதில் காங்கிரஸ்காரர்களுக்குப் பயிற்சி கிடையாது. உதாரணமாக, வகுப்புக் கலகங்களையோ அல்லது காலிகள் செய்யும் அட்டூழியங்களையோ சமாளிக்க அகிம்சை முறையில் உறுதியான வழியை இன்னும் அவர்கள் கண்டுபிடித்துக் கொண்டுவிடவில்லை. இது உண்மையான அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டதாகையால் இந்த வாதம் முடிவானது. அகிம்சையின் உபயோகத்தை விரிவாக்கியதில், என் சிறந்த சக ஊழியர்களும் என்னைப் பின்பற்ற முடியவில்லை என்பதற்காக அவர்களைக்

கைவிட்டுப் போய்விடுவேனாயின் அகிம்சையின் லட்சியத்திற்கு நான் உதவியவன் ஆகமாட்டேன். ஆகையால், அகிம்சை முறையிலிருந்து அவர்கள் விலகியது மிகக் குறுகலான துறையைப் பற்றியதாகவே இருக்கும், தாற்காலிகமானதாகவும் இருக்கும் என்ற நம்பிக்கையில் நான் அவர்களுடன் இருந்து வருகிறேன்.

4. எந்த உருப்படியான திட்டமும் என்னிடம் தயாராக இல்லை. எனக்குங்கூட இத்துறை புதிதானது. முறையைப் பொறுத்தவரையில் வேறு ஒன்றைத் தேர்ந்தெடுத்துக்கொள்வது என்பது மாத்திரம் எனக்குக் கிடையாது. காங்கிரஸ் காரியக் கமிட்டி உறுப்பினருடனோ, வைசிராயுடனோ நான் அந்தரங்கமாகப் பேசினாலும், முற்றிலும் அகிம்சையான முறை பற்றியதே என் உறுதி. ஆகையால், நான் செய்துகொண்டிருப்பதும் ஓர் உருப்படியான திட்டத்தின் பகுதிதான். என் திட்டமெல்லாம், ஒவ்வொரு நாளும் எனக்கு வெளிப்பட்டு வருவது போல மேற்கொண்டும் எனக்குப் புலப்படும். பிரபலமான ஒத்துழையாமைத் தீர்மானம் 1920-இல் கல்கத்தாவில் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக்கூட்டத்தில் கொண்டுவரப்பட்டது. அக்கூட்டம் நடந்த 24 மணி நேரத்திற்குள்ளேதான் அத்தீர்மானம் எனக்கு வந்தது. [1] தண்டி யாத்திரையும் அதே போன்றது தான். [2]அப்பொழுது வழக்கில் சாத்துவிக எதிர்ப்பு என்று அழைக்கப்பட்ட முதல் சட்ட மறுப்பிற்கான அஸ்திவாரம், அக்காலத்து ஆசியாக்காரருக்கு விரோதமான நடவடிக்கைகளை எதிர்ப்பதற்கான முறைகளைக் காண 1906-இல் ஜொஹன்னஸ்பர்க்கில் கூட்டப்பட்ட இந்தியரின் கூட்டத்தில்தான் தற்செயலாகப் போடப்பட்டது. முன்கூட்டியே சிந்தனை செய்த தீர்மானத்துடனும் நான் அக்கூட்டத்திற்குப் போகவில்லை.

---

1. உப்புத் தயாரிப்பதில் அரசாங்கத்திற்கே ஏகபோக உரிமை என்றிருந்த உப்புச் சட்டத்தை எதிர்த்துப் பகிரங்கமாகக் கடல் நீரிலிருந்து உப்பைத் தயாரித்துச் சட்ட மறுப்புச் செய்ய 1930 ஏப்ரலில் மகாத்மா காந்தி சாபர்மதி ஆசிரமத்திலிருந்து தண்டிக் கடற்கரைக்குத் தொண்டர் குழாத்துடன் புறப்பட்டுக் கால்நடையாகவே சென்றார். இதுவே உலகப் பிரசித்தமான தண்டி யாத்திரை எனப்படுவது. அச்சமயம் உப்புச் சட்டத்தை மீறிய மகாத்மாவைப் பிரிட்டிஷ் அரசாங்கம் சிறைப்படுத்தியதென்றாலும் நாடெங்கும் எழுந்த சட்ட மறுப்புப் போரின் காரணமாக 1931-இல் அரசாங்கம் காந்திஜியை விடுதலை செய்ததோடு அவ்வாண்டு மார்ச் 31-ஆம் தேதி வைசிராய் லார்டு இர்வினுக்கும் மகாத்மாவுக்கும் ஒப்பந்தம் ஏற்பட்டது. அதுவே காந்தி - இர்வின் ஒப்பந்தம் எனப்படுவது.

2. தென்னாப்பிரிக்காவில் சத்தியாக்கிரக இயக்கம் பிறந்த வரலாற்றைக் குறித்து மகாத்மா தாம் எழுதிய 'தென்னாப்பிரிக்க சத்தியாக்கிரகம்' என்ற நூலில் விரிவாகக் குறிப்பிட்டிருக்கிறார். காந்திஜி இங்கே குறிப்பிடும் விவரத்தை 'மகாத்மா காந்தி நூல்கள்'- முதல் தொகுப்பு 135 - 146 பக்கங்களில் காண்க.

அக்கூட்டத்திலேயே அது உருவெடுத்தது. அதன் உருவம் இன்னும் விசாலமாகிக்கொண்டு போகிறது. ஆனால், கடவுள் எனக்கு முழுச் சக்தியையும் அளித்திருக்கிறார் என்று வைத்துக் கொண்டால் (அவர் அப்படி எப்பொழுதும் செய்வதே இல்லை), ஆயுதங்களைக் கீழே போட்டுவிடும்படியும், அடிமையாக வைத் திருப்பவர்களை உடனே விடுதலை செய்துவிடுமாறும் நான் உடனே ஆங்கிலேயரைக் கேட்பேன். 'சிறு இங்கிலாந்தினர் (சிறு தீவான தங்கள் நாட்டிற்குள்ளேயே இருப்பவர்) என்று சொல்லிக் கொள்வதில் பெருமைப்படுங்கள், உலகத்தில் சர்வாதிகாரிகள் என்ன அக்கிரமம் செய்தாலும் அக்கிரமங்களைப் பொருட்படுத்தா மல் இருங்கள்' என்றும் சொல்லுவேன். அப்பொழுது ஆங்கிலேயர் எதிர்த்துப் போராடாமலே மாண்டு அகிம்சா வீரர்கள் என்று சரித்திரப் புகழ் பெறுவார்கள். இந்தத் தெய்விகமான தியாகப் போரில் ஆங்கிலேயருடன் ஒத்துழைக்க வருமாறும் இந்தியரை அழைப்பேன். எதிரிகள் என்று சொல்லப்படுகிறவர் களிடையே ஏற்படும் கூட்டாளிகளின் ஒப்பந்தமாக அது இல்லாமல், சொந்த உடலின் ரத்தத்தைக் கொண்டு எழுதி ரத்து செய்ய முடியாத இரு கூட்டாளிகளின் உடன்பாடாக அது இருக்கும். ஆனால், அத்தகைய பொதுவான சக்தி எனக்கு இல்லை. அகிம்சை மெதுவாக வளரும் செடி. அந்த வளர்ச்சி கண்ணுக்குப் புலனாகாது. நிச்சயமாக வளர்ந்து வருகிறது. தவறாகக் கருதப்பட்டுவிடும் ஐயம் ஏற்பட்ட போதிலும் 'உள்ளத்தில் தொனிக்கும் இச்சிறு குரலுக்கு'ப் பணிந்தே நான் நடக்க வேண்டும்.

[ சிம்லாவுக்கு ரெயிலில் போகும்போது எழுதியது. ] —' ஹரிஜன் ' - 30--9--1939

26—9—1939

## 6

# இந்தியாவின் மனப்போக்கு

சென்ற ஆகஸ்டு 27-ஆம் தேதி, அதாவது மதி கெட்ட யுத்தம் ஆரம்பமாவதற்குக் கொஞ்சம் முன்னால், ஸ்ரீமதி கமலா தேவி சட்டோபாத்தியாயா கீழ்வருமாறு எனக்கு எழுதினார் :

' பம்பாய் கிரானிக்கிள் ' பத்திரிகையின் மூலம் தங்களுக்கு ஒரு கோரிக் கையை விடுத்திருந்தேன். இப்பொழுது இருக்கும் நிலைமையில் இந்தியாவின் போக்கையும், கிழக்கில் சுரண்டப்படும் நாடுகளின் போக்கையும் எடுத்துக் கூறு மாறு அதில் உங்களைக் கேட்டிருந்தேன். இந்த ஏகாதிபத்திய யுத்தத்துடன் நாம் எந்தவிதமான சம்பந்தமும் கொள்ளமுடியாது என்ற நம் பழைய நிலை யையே மீண்டும் கூறுவதாக இல்லாமல் அதற்கும் மேல் என்ன நிலை இருக்க

வேண்டுமென்று தெரிந்துகொள்ளவே நான் விரும்பினேன். குடியேற்ற நாடுகளுக்காக – இப்பொழுது கண்ணியமான சொல்மரபில் கூறப்படுவது போல குடியேற்ற நாடுகளுக்காகவோ அல்லது செல்வாக்கிற்கு உட்பட்ட பிரதேசத்திற்காகவோ – முடிந்தவரையில் போராடுவது என்பதில்தான் இந்தச் சச்சரவு முக்கியமாக அடங்கியிருக்கிறது. இப்பிரச்னையில் இரண்டே கருத்துக்கள்தாம் உண்டு என்று உலகம் கருதுகிறது. ஏனெனில், இரு அபிப்பிராயங்களே அதன் காதில் விழுகின்றன. அதில் ஒன்று, இப்பொழுது இருக்கும் நிலைமை இருந்தது போலவே இருக்கவேண்டும் என்பதை நம்புவது. மற்றொன்றோ, மாறுதலை விரும்புவது. ஆனால், அதே அடிப்படையில்தான் மாறுதலை விரும்புகிறது. அதாவது, கொள்ளையில் கிடைத்ததை விநியோகித்துக்கொள்வதையும், சுரண்டும் உரிமையையும் திரும்பப் பெறுவதென்பதே. இதன் அர்த்தமென்ன? யுத்தந்தான். ஓர் ஆயுதப் போரினாலன்றி இத்தகைய விநியோகம் முடியாதது என்பது இதன் தன்மையாலேயே தெளிவாகிறது. யாராவது அனுபவிப்பதற்கு ஏதாவது விட்டுவைக்கப்படுமா என்பது வேறு விஷயம். ஆனால், உலகம் முக்கியமாக இந்த இரண்டு கருத்துக்களினாலும் பிளவுண்டிருக்கிறது. ஒன்றின் தத்துவத்தை ஒப்புக்கொண்டால் மற்றொன்றின் தத்துவத்தையும் ஒப்புக்கொள்ள வேண்டியதே. ஏனெனில், பெரும் பகுதியை, பெரிய நாடுகளை ஆளுவதற்கு இங்கிலாந்திற்கும் பிரான்ஸுக்கும் உரிமை உண்டு என்றால், அப்பொழுது ஜெர்மனிக்கும் இத்தாலிக்கும் அதே போன்ற உரிமை இருக்கிறது. தான் கோருவதே சரியென ஹிட்லர் கூறுவது எப்படித் தரும நெறியில் நியாயமற்றதோ அதே போல ஹிட்லரைப் பிரிட்டனும் பிரான்ஸும் தடுத்து நிற்பதும் தரும வழியில் நியாயமாகாது.

உலகம் சிந்தித்தே பாராத மூன்றாவது கருத்தும் ஒன்று உண்டு. ஆனால், உலகின் காதில் அது விழுவதே கிடையாது. இந்த விஷயத்தில் பணயமாக வைத்திருக்கும் மக்களின் குரல் வெளிப்படவேண்டியது மிகவும் அவசியம். டான்ஜிக் அல்லது போலந்து இடைவழி பற்றியது அல்ல பிரச்னை. எளியாரை ஆளவும் சுரண்டவும் வலியாருக்கு உரிமை உண்டு என்பதை அடிப்படையாகக் கொண்டிருக்கும் இன்றைய மேற்கத்திய நாகரிகத்தின் கொள்கை பற்றியதே இப்பொழுதுள்ள பிரச்னை. ஆகையால், இது முழுக் காலனிகளின் பிரச்னையை மையமாகக் கொண்டிருக்கிறது. இதைப்பற்றி உலகிற்கு நினைவூட்ட ஹிட்லரும் முஸ்ஸோலினியும் சளைக்கவே இல்லை. சாம்ராஜ்யம் ஆபத்தில் இருக்கிறது என்ற கூக்குரலைப் பிரிட்டன் கிளப்பியிருப்பதற்கு உண்மையான காரணம் இதுதான். ஆகவே, இப்பிரச்னையை நாம் எல்லோரும் முக்கியமாகக் கவனிக்க வேண்டியதாகிறது.

இன்று இருக்கும் நிலை இப்படியே இருந்து வருவது என்பதை நாம் எதிர்க்கிறோம். இதில் மாறுதல் வேண்டும் என்பதற்காக அதை எதிர்த்துப் போராடி வருகிறோம். இது ஏற்படாவிடில் இதற்கு வழி யுத்தம் அல்ல. ஏனெனில், பிரச்னைக்கு உண்மையான தீர்வு காண்பது அதில் இல்லை என்பதை நாம் அறிவோம். இதற்கு வழி வேறொன்று இருக்கிறது. இந்தப் பயங்கரமான குழப்பத்திற்குப் பரிகாரமும், எதிர்கால உலக சமாதானத்திற்கான வழியும் அது ஒன்றே. அதையே உலகத்தின் முன்னால் வைக்கவேண்டும் என்று நான் விரும்புகிறேன். எங்கோ காட்டின் நடுவே எழுப்பும் குரல் போல அது இன்று தோன்றலாம். எனினும், முடிவில் நிலை பெறக்கூடியது அக்குரலே என்பதை நாம் அறிவோம். கவசமணிந்த கைகளின் முன்பு பலவீனமாகத் தோன்றும் கைகளே, சின்னபின்னமாக்கிவிட்ட மனிதவர்க்கத்தைக் கடைசியாக உருவாக்கும்.

இதை உலகிற்கு எடுத்துச் சொல்லும் தகுதி உள்ளவர் நீங்களே. உலகின் குடியேற்ற நாடுகளில் இந்தியா ஒரு விநோதமான இடத்தை வகிக்கிறது என்று நான் எண்ணுகிறேன். தார்மிக கௌரவமும், இயக்கச் சக்தியும் அதற்கு இருக்கின்றன. வெகு சில குடியேற்ற நாடுகளுக்கே இவை உண்டு. பல காரியங்களில் இந்தியா வழிகாட்டவேண்டும் என்று மற்றவை எதிர்பார்க்கின்றன. போராட்டத்தில் உயர்வானதோர் நுட்பத் திறமையை உலகிற்கு இந்தியா ஏற்கனவே காட்டியிருக்கிறது. அதன் தார்மிகப் பண்பை என்றாவது ஒரு நாள் உலகம் போற்றியே தீரும். அடிக்கடி ஏற்பட்டுவரும் நாசங்களிலிருந்து தன்னைக் காத்துக்கொள்ள வேண்டுமாயின், ரத்தத்தைச் சிந்திக்கொண்டிருக்கும் இவ்வுலகத்தில் சமாதானமும் சமரசமும் ஏற்படவேண்டுமாயின், மனிதவர்க்கம் கடைப்பிடிக்கவேண்டிய மற்றொரு பாதை இருப்பதை வெறிபிடித்த இவ்வுலகிற்கு இந்தியா கூறவேண்டும். இம்முறையினால் மிகத் துன்பம் அடைந்தவர்களும், இதை மாற்றுவதற்காக வீரத்தோடு போராடிக்கொண்டிருப்போருமே, தங்களுக்கு மாத்திரமேயன்றி உலகிலுள்ள சுரண்டப்பட்ட மக்கள் அனைவர்க்குமே, மன உறுதியுடனும் அவசியமுள்ள தார்மிக அடிப்படையிலும் இதை எடுத்துக் கூற முடியும்.''

'கிராணிக்கிள்' பத்திரிகைக்கு ஸ்ரீமதி கமலா தேவி எழுதிய கடிதத்தை நான் பாராததுபற்றி வருந்துகிறேன். போதியபடி செய்திப் பத்திரிகைகளைப் படிக்க என்னால் முடிவதில்லை; இனி முயன்று பார்க்கிறேன். இதைப்பற்றிக் கவனிக்க நேரம் இல்லாததனால் கடிதம் என் கட்டிலேயே இருந்தது. அவருடைய கடிதத்தில் கேட்டிருப்பது இந்தத் தாமதத்தினால் பாதிக்கப்படவில்லை என நினைக்கிறேன். இந்தியாவின் போக்கு என்ன, அது எப்படி இருக்கவேண்டும் என்பதைப்பற்றி நான் கூறுவதற்கு இதுவே ஒரு வேளை உற்ற தருணமாக இருக்கலாம். யுத்தத்தில் ஈடுபட்டிருக்கும் இரு தரப்பினரின் நோக்கத்தையும் குறித்துக் கமலா தேவி எடுத்துக்காட்டியிருப்பதை நானும் ஒப்புக்கொள்ளுகிறேன். தம் வாழ்விற்காகவும், தங்கள் கொள்கைகளை முன்னிட்டும், இரு தரப்பாரும் சண்டை போட்டுக்கொள்ளுகிறார்கள். ஆனால், இருவருக்குமிடையே இந்தப் பெரிய வித்தியாசம் இருக்கிறது. நேச நாட்டினர் கூறுவது என்னதான் அரைகுறையானதாகவும் தெளிவற்றதாகவும் இருந்தாலும், ஜனநாயகத்தைக் காப்பதற்காக அவர்கள் போராடுகிறார்கள் என்று உலகம் பொருள் செய்துகொண்டிருக்கிறது. ஹெர் ஹிட்லரோ, அவர் கேட்பது நியாயமா என்பதைப் பாரபட்சமற்ற நீதி சபையின் பரிசீலனைக்கு வைக்கும்படி கோரப்பட்டிருந்தும், ஜெர்மனியின் எல்லையை விரிவாக்கிக்கொள்ளுவதற்காகப் போரில் ஈடுபட்டிருக்கிறார். சமாதானம் அல்லது நயமாகக் கூறும் வழியை அலட்சியம் செய்துவிட்டு வாளின் துணையை அவர் மேற்கொண்டிருக்கிறார். எனவே, நேச தேசத்தினரின் சார்பில் என் அனுதாபம் செல்கிறது. நான் காட்டும் இந்த

அனுதாபம் நியாயமென நிரூபிக்கப்பட்ட உரிமைக்காக வாளின் தத்துவத்தை எந்த உருவிலும் முறையிலும் உபயோகித்துக் கொள்ளுவதை நான் அங்கீகரிப்பதாகப் பொருள் கொண்டு விடக்கூடாது. நிரூபிக்கப்பட்டுள்ள உரிமையும், முரட்டுத்தன மான, அதாவது ரத்தத்தைச் சிந்தும் முறையினல் அல்லாமல், நியாயமான முறையைக் கொண்டு காக்கப்பட வேண்டும். 'உரிமை' என்று தான் கருதுவதை நிலைநாட்டுவதற்கு மனிதன் தன் சொந்த ரத்தத்தைச் சிந்தலாம்; சிந்த வேண்டும்; தனது 'உரிமை'யை ஆட்சேபிக்கும் எதிராளியின் ரத்தத்தை அவன் சிந்தக்கூடாது. காங்கிரஸைத் தனக்குப் பிரதிநிதியாகக் கொண் டிருக்கும் இந்தியா, தனது 'உரிமை'யை நிரூபிப்பதற்காகப் போராடி வருகிறது; அகிம்சை முறையினலேயன்றி வாளினல் அல்ல. அது கனவு காணும் சுதந்திரம் இன்னும் தொலைவாக இருந்தபோதிலும் - அது நெடுந் தொலைவில் இல்லை என்று நம்பு வோம் - உலகில் தனக்கென்று ஒரு பிரத்தியேகமான இடத் தையும் கௌரவத்தையும் இந்தியா பெற்றிருக்கிறது. அத னுடைய புதிய முறை உலகின் மனத்தைக் கவர்ந்திருப்பதும் நன்ருகத் தெரிகிறது. இந்த யுத்தத்தை உலகின் எந்த மக்க ளும் விரும்பவில்லை. யுத்தத்தில் கொள்ளை கொண்டதை வெற்றி யடைந்தவர்கள் பங்கு போட்டுக்கொள்ளும் கேலிக் கூத்தாகவும், தோல்வியுற்றவரை அவமானப்படுத்துவதாகவும் இந்தத் தடவை செய்துகொள்ளும் சமாதானம் இருந்துவிடக்கூடாது. இப்படி வற்புறுத்துவதன் மூலம் இந்த யுத்தத்தில் முக்கியமான பணியை இந்தியா ஆற்றவேண்டும் என்று எதிர்பார்க்க உலகத் திற்கு உரிமை உண்டு. காங்கிரஸின் சார்பில் பேசுவதற்கு உரிமை பெற்ற பண்டித ஜவாஹர்லால் நேரு, உலகத்தின் ஏகாதிபத்திய வல்லரசுகள் அடிமைப்படுத்தி வைத்திருக்கும் மக்களின் விடுதலையாக இந்தச் சமாதானம் இருக்கவேண்டும் என்று கம்பீரமான மொழியில் கூறியிருக்கிருர். உரிமையைக் காப்பாற்றிக்கொள்ளுவதற்கும், சிறந்த வழியில் அறிவைக் காட்டு வதற்கும் அகிம்சை அளிக்கும் சக்தியோடு ஒப்பிட்டால், இதே காரியத்திற்காக ஆயுதங்கள் அளிக்கும் சக்தி ஒன்றுமே இல்லை. இதை உலகிற்கு எடுத்துக் காட்டுவதற்கும் காங்கிரஸினல் முடியும் என்றே நம்புகிறேன். ஆயுதங்களால் நியாய உணர் வைக் காட்ட முடியாது; அப்படிக் காட்டுவதாகப் பாசாங்கு தான் செய்யமுடியும்.

சேவா கிராமம், 9—10—1939 — 'ஹரிஜன்' - 14—10—1939

# 7

# சோதனையில்

காரியக் கமிட்டி உறுப்பினர்களுடன் பேசிக்கொண்டிருக்கையில் அவர்களுடைய அகிம்சை ஆயுதம் பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் போராடுவதற்கு மேல் போகவில்லை என்பதைக் கண்டுகொண்டேன்.* உலகத்திலேயே மிகப் பெரியதானதோர் ஏகாதிபத்திய வல்லரசுடன் சென்ற இருபது ஆண்டுகளாகப் போராடுவதற்கு அகிம்சையைக் கையாண்டு வந்திருப்பதனால் ஏற்பட்டிருக்கும் பலனைக் காங்கிரஸ்காரர்கள் உணர்ந்திருப்பார்கள் என்ற நம்பிக்கையை விடாமல் பற்றியிருந்தேன். ஆனால், அகிம்சையைப் போன்றதோர் பெரிய பரீட்சையில் உத்தேசத்தின்மீது எழுப்பும் கேள்விகளுக்கு இடமே கிடையாது. நம்மை அகிம்சையினால் பாதுகாத்துக்கொள்ள முடியுமா அல்லது முடியாதா என்பது சுதந்திரம் வந்துவிட்ட பிறகுதான் நமக்குத் தெரியும். இந்தக் கேள்விகளுக்கு நானே பதில் சொல்லி

---

* 1939 செப்டம்பர் 14-ஆம் தேதி காங்கிரஸ் காரியக் கமிட்டி வெளியிட்ட அறிக்கையை அக்டோபர் 9-ஆம் தேதி வர்தாவில் நடந்த அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி விவாதித்தது. யுத்த நெருக்கடியைக் குறித்துக் கீழ்க்கண்ட தீர்மானத்தை நிறைவேற்றியது:

"இந்திய மக்கள் சுதந்திரத்தை அடைய வேண்டும், எல்லாச் சிறுபான்மையோரின் உரிமைகளும் பத்திரப்படுத்திப் பாதுகாக்கப்படும் வகையில் சுதந்திர ஜனநாயக இந்தியா அமைய வேண்டும் என்ற நோக்கத்தைக் கொண்டே நெடுகக் காங்கிரஸ் காரியங்களைச் செய்து வந்திருக்கிறது. அது தன் நடவடிக்கைகளிலும் போராட்டங்களிலும் அனுசரித்து வந்திருக்கும் முறை அமைதியானதும் நியாயமானதுமாகவே இருந்து வந்திருப்பதுடன், யுத்தமும் பலாத்காரமும் பயங்கரமானவைகளென்றும், அபிவிருத்திக்கும் நாகரிகத்திற்கும் அவை எதிரானவை என்றும் கருதி வந்திருக்கிறது. முக்கியமாக, காங்கிரஸ் எல்லா ஏகாதிபத்திய யுத்தங்களையும், ஒரு நாடு மற்றொரு நாட்டின்மீது ஆதிக்கம் செலுத்துவதையும் எதிர்ப்பதாகவும் அறிவித்திருக்கிறது.

"யுத்தம் சம்பந்தமாகக் காங்கிரஸ் தனது கருத்தைத் திரும்பத் திரும்ப அறிவித்திருந்தும், பிரிட்டிஷ் அரசாங்கம், இந்திய மக்களின் சம்மதத்தைப் பெறாமலேயே இந்தியா யுத்தத்தில் ஈடுபட்டிருக்கும் நாடு என்று பிரகடனம் செய்திருக்கிறது. எனினும், பிரிட்டிஷ் அரசாங்கம், தனது யுத்த, சமாதான லட்சியத்தைக் குறித்து முக்கியமாக இந்தியா சம்பந்தமாகத் தனது நோக்கத்தை விளக்குவதற்குச் சந்தர்ப்பமளிக்காமல் அவசரப்பட்டு எந்த முடிவுக்கும் வந்துவிட அ. இ. கா. கமிட்டி விரும்பவில்லை......பாசிஸ, நாஜி ஆக்கிரமிப்பைக் கமிட்டி கண்டிக்கிறதெனினும், எல்லா காலனி நாடுகளுக்கும் ஜனநாயக முறையை விஸ்தரித்து அவைகளுக்கும் சுயநிர்ணயக் கொள்கையை அனுசரித்து ஏகாதிபத்திய ஆதிக்கத்தைப் போக்கினால்தான் அமைதியும் சுதந்திரமும் நிலைக்க முடியும் என்பதை நிச்சயமாகக் கருதுகிறது. முக்கியமாக, இந்தியாவைச் சுதந்திர நாடு என்று பிரகடனம் செய்து, இப்பொழுது இதற்குச் சாத்தியமான அளவு அந்த அந்தஸ்தை அளிக்கவும் வேண்டும்."

காங்கிரஸ் கமிட்டி இத்தீர்மானத்தை நிறைவேற்றிய மறுநாளே மகாத்மா 'சோதனையில்' என்ற தலைப்புடன் இக்கட்டுரையை எழுதியிருக்கிறார்.

வந்திருக்கிறேன். ஆனால், இன்றோ இப்பிரச்னை உத்தேசத்தைப் பொறுத்ததாக இல்லை. பிரிட்டிஷ் அரசாங்கத்தைப் பொறுத்தவரையில் சாதகமான அறிவிப்பை அது வெளியிட்டாலும் வெளியிடாது போனாலும், இந்தியாமீது படையெடுப்பு வந்தால் என்ன முறையை அனுசரிப்பது என்பதைக் காங்கிரஸ் முடிவு செய்துவிட வேண்டியிருக்கிறது. ஏனெனில், அரசாங்கத்துடன் ஒரு சமரச முடிவு ஏற்படாது போயினும், காங்கிரஸ் தன்னுடைய கொள்கையை வெளியிட்டு, படையெடுத்துவரும் எதிரியைப் பலாத்காரத்தைக் கொண்டு போராடுமா அல்லது அகிம்சையைக் கொண்டு போராடுமா என்பதைச் சொல்லிவிடவேண்டும்.

நீண்ட நேரம் நன்றாக விவாதித்துக் காரியக் கமிட்டியின் மனத்தை நான் தெரிந்துகொண்ட வரையில், ஆயுதங்களோடு கூடிய படையெடுப்பை எதிர்த்து அகிம்சை முறையில் போராடக் காங்கிரஸ்காரர்கள் தயாராகிவிடவில்லை என்றே காரியக் கமிட்டி உறுப்பினர்கள் நினைக்கிறார்கள்.

இது துயர் தரும் விஷயம். ஒருவருடைய வீட்டிலிருந்து எதிரியை விரட்டுவதற்கு உபயோகித்த முறை, எதிரி வீட்டிற்குள் நுழையாதபடி தடுப்பதற்குக் கையாளும் முறைக்கு ஏறக்குறையப் பொருத்தமானதாகவே இருக்கவேண்டும். எதுவானாலும் பின்னர்க் கூறிய முறை எளிதானதாகவும் இருக்கவேண்டும். எனினும், உண்மை என்னவெனில், நமது போராட்டம் பலமுள்ளவரின் அகிம்சைப் போராட்டமாக இருக்கவில்லை. பலவீனமானவர்களின் சாத்துவிக எதிர்ப்பாகவே இருக்கிறது. ஆகையால், முக்கியமாக இச்சமயத்தில் அகிம்சையின் ஆற்றலில் அழியாத நம்பிக்கை நம் உள்ளங்களில் தன்னிச்சையாகவே எதிரொலிக்கவில்லை. ஆகையால், காரியக் கமிட்டி, அதனால் விளையக்கூடியவற்றிற்குத் தான் தயாராயில்லை என்று புத்திசாலித்தனமாகக் கூறிவிட்டது. இந்தியாவுக்கு ஆயுதப் பாதுகாப்பு வேண்டும் என்று நம்புகிறவர்களுடனேயே காங்கிரஸும் சேர்ந்துவிடுவதாயின், ஆயுதங்களோடு கூடிய போர் முறையைக் கற்றுக்கொள்ள வேண்டியதான முதல் கடமையில் காங்கிரஸ்காரர்கள் சென்ற இருபது ஆண்டுகள் முற்றிலும் அசிரத்தையாக இருந்துவிட்டார்கள் என்றாகும். இந்தத் துன்ப நிலைக்குப் போரின் தளபதி என்ற முறையில் என்னையே பொறுப்பாளியாகச் சரித்திரம் கொள்ளும் என்று அஞ்சுகிறேன். நாட்டு மக்கள் பலமுள்ளவர்களின் அகிம்சையைக் கற்றுக்கொண்டிருக்கவில்லை, பலவீனமானவர்களின் சாத்துவிகத்தையே கற்று வந்திருக்

கிறுர்கள். ஆகையால், காங்கிரஸ்காரர்களுக்கு ராணுவப் பயிற்சி அளிக்க நான் ஏற்பாடு செய்திருக்கவேண்டும் என்று வருங் காலச் சரித்திரக்காரர் கூறுவார்.

எப்படியாயினும், இந்தியா உண்மையான அகிம்சையைக் கற்றுக்கொண்டுவிடும் என்ற எண்ணமே என்னிடம் குடிகொண் டிருந்ததால் ஆயுதப் பாதுகாப்பு முறைகளில் பழகிக்கொள்ளும் படி என்னுடன் இருந்த சகாக்களுக்குக் கூறவேண்டும் என்பது எனக்குத் தோன்ருமற் போயிற்று. இதற்கு மாருகக் கத்தி விளையாட்டு, சிலம்ப விளையாட்டுப் போன்றவைகளையும் ஆதரிக் காமல் இருந்து வந்திருக்கிறேன். நடந்து போனவைகளுக்காக இப்பொழுதுங்கூட நான் வருந்தவில்லை. உலகத்து நாடுகளி லெல்லாம், அகிம்சைக் கலையைக் கற்றுக்கொள்ளக்கூடிய ஒரே நாடு இந்தியா என்பதில் அடக்கமுடியாத நம்பிக்கை எனக்கு இருக்கிறது. இப்பொழுதுங்கூடப் பரீட்சை செய்து பார்த்தால், தங்களைக் கொடுமைப்படுத்துகிறவர்களிடம் எந்தவிதமான துவேஷமும் பாராட்டாமல் உயிரைத் தரக்கூடிய ஆயிரக்கணக் கான ஆண்களும் பெண்களும் இருப்பதைக் காணமுடியும். சுட்டுக் கொல்லப்படுவது உள்படப் பல துன்பங்களை அனுபவிக்க நேரலாம் என்று திரளான மக்கள் முன் ஆவேச மாகப் பேசி அவர்களுக்கு அடிக்கடி சொல்லிவந்திருக்கிறேன். சிப்பாய்களுக்கு நேரிடும் துன்பங்களுக்குச் சமமானவற்றை உப்புப் போராட்டத்தின்போது ஆயிரக்கணக்கான ஆண்களும் பெண்களும் வீரத்துடன் ஏற்றுக்கொள்ளவில்லையா? படை யெடுத்து வருபவருடன் இந்தியா போராட நேர்ந்தால் இது வரையில் காட்டியிருப்பதிலிருந்து வேறு வகையான ஆற்றல் தேவையில்லை. இன்னும் பெரிய அளவில் மாத்திரமே அது இருக்க வேண்டியதாகும்.

ஒரு விஷயத்தை மறந்துவிடவே கூடாது. நிராயுதபாணி யான இந்தியா, விஷப்புகையினுலோ அல்லது குண்டுகளி ஞலோ அழிக்கப்பட்டுவிடும் என்ற அவசியமில்லை. *மாகினுட்

* மாகினுட் அரண் - பிரான்ஸின் கிழக்கு எல்லை நெடுகவும் பலமாக அமைக்கப் பெற்ற பெரிய பாதுகாப்பு அரண். பிரெஞ்சு யுத்த மந்திரியாக இருந்த மாகினுட், 1927 - 1935-இல் இந்த அரணையைக் கட்டி முடித்ததால் இந்த அரணுக்கு மாகினுட் அரண் என்று பெயர் வந்தது. அதில் அநேகக் கோட்டைகளும் பூமிக்கு அடியில் பல அடுக்குக் கொத்தளங்களும் உண்டு. எல்லா வகையான ராணுவ சாதனங்களும் அவற்றில் வைக்கப்பட்டிருந்தன. ஜெர்மனி எவ்வளவு பலத்துடன் தாக்கினுலும் அந்த அரணைத் தாண்டிப் பிரான்ஸுக்குள் புக முடியாது என்று சொல்லப்பட்டு வந்தது. ஆனுல், ஜெர்மானியர் பெல்ஜியத்தையும் ஹாலந்தையும் தாக்கி, 1940 மே மாதம் மாகினுட் அரண் வழியில் போகாமலேயே பிரான்ஸுக்குள் புகுந்துவிட்டனர். ஜூனில் அதன் வழியாகவும் புகுந்தனர்.

அரணே, சீக்பிரீட் அரண் ஏற்பட ஏதுவாயிருந்தது. திருப்பிச் சொன்னாலும் அதுவேயாம். பிரிட்டனுடன் ஒட்டி இந்தியா இருப்பதனாலேயே இப்பொழுதுள்ள பாதுகாப்பு முறை அவசியமானதாயிற்று. சுதந்திர இந்தியாவுக்கு விரோதி இருப்பதற்கில்லை. ‘ இல்லை ’ என்று உறுதியோடு கூறிவிடும் கலையை இந்தியாவின் மக்கள் அறிந்துவிடுவார்களானால், அதன்படியும் நடந்துகொள்வார்களாயின், இந்தியாமீது படையெடுத்து வர யாருமே விரும்பமாட்டார்கள் என்று நான் தைரியமாகக் கூறுவேன். சுரண்டுபவருக்கு எந்த ஆசையையும் உண்டாக்க முடியாத வகையில் நம் பொருளாதாரம் அமைந்திருக்கும்.

சில காங்கிரஸ்காரர்கள் இப்படிச் சொல்லக்கூடும் : “ பிரிட்டிஷ் போர்வீரர்கள் ஒருபுறமிருக்க, இந்தியா தன்னுடைய எல்லைக்குள்ளேயே பல போர்வீர இனங்களைக் கொண்டிருக்கிறது. நமக்குச் சொந்தமாக இருப்பதுபோல் அவர்களுக்கும் சொந்தமான நாட்டிற்காக அவர்கள் போரில் இறங்க எண்ணக்கூடும்.” இது முற்றிலும் உண்மை. ஆகையால், இச்சமயத்தில் நான் காங்கிரஸ்காரர்களைப்பற்றி மாத்திரமே பேசுகிறேன். படையெடுப்பு வந்தால் அப்பொழுது அவர்கள் எப்படி நடந்துகொள்ளுவார்கள் ? நமது லட்சியத்திற்காக நாம் சாகத் தயாராயிருந்தாலன்றி நமது லட்சியத்திற்கு இந்தியா முழுவதையும் நாம் மாற்றிவிடவே முடியாது.

மாறுபட்டதான முறை சரி என்று எனக்குப் படுகிறது. இப்பொழுதே ராணுவத்தில் பெரும்பாலும் வடக்கேயுள்ள முஸ்லிம்களும், சீக்கியர்களும், கூர்க்காக்களுமே இருக்கின்றனர். தெற்கிலும் மத்திய இந்தியாவிலும் இருக்கும் ஜனங்கள் ராணுவமயமாகிவிட விரும்புவார்களானால், இவர்களுக்குப் பிரதிநிதியாக இருப்பதாகக் கருதப்படும் காங்கிரஸ், முன்னாலிருப்பவர்களுடன் போட்டிக்குப் போகுமா ? அப்பொழுது ஏராளமான ராணுவச் செலவிற்குக் காங்கிரஸ் உடந்தையாக இருந்ததாகும். காங்கிரஸின் சம்மதமில்லாமலேயே இவையெல்லாம் நடக்கலாம். இதிலெல்லாம் இருக்கும் முக்கியமான விஷயம், இவைகளுக்கெல்லாம் காங்கிரஸும் உடந்தையாக இருக்கிறதா, இல்லையா என்பதே. புதியதும் இணையில்லாததுமான ஒன்றைக் காண

---

இந்த அரணின் பாதுகாப்பில் அளவு கடந்த நம்பிக்கை வைத்துவிட்டதே பிரான்ஸ் வெகு சீக்கிரத்தில் தோல்வி அடைந்ததற்குக் காரணம்.

மாகினாட் அரணுக்கு எதிராக ஜெர்மன் எல்லையில் ஜெர்மானியர் அமைத்ததே சீக்பிரீட் அரண். 1938-இல் அமைக்கப்பெற்ற அதை 1939-இல் ஹிட்லர் மேலும் பலப்படுத்தினார்.

உலகம் இந்தியாவை எதிர்நோக்குகிறது. இன்று உலகம் ஏந்தியிருக்கும் பழைய உளுத்துப்போன அந்த ஆயுதத்தையே காங்கிரஸும் ஏந்துவதாயிருந்தால் அது இருக்குமிடம் தெரியாமல் மறைந்தே போகும். மிகச் சிறந்த வகையில் அகிம்சையை ராஜீய ஆயுதமாகக் காங்கிரஸ் கொண்டிருப்பதனாலேயே அதற்கு நற்பெயர் இருக்கிறது. அகிம்சையின் பிரதிநிதி என்ற வகையில் நேச நாட்டினரின் லட்சியத்திற்குக் கௌரவம் ஏற்படுவதோடு இந்த யுத்தத்தின் விதியை நிர்ணயிப்பதில் மதிக்கவொண்ணாத சக்தியும் உண்டாகும். ஆனால், காரியக் கமிட்டி உறுப்பினரோ யோக்கியமாகவும் தீரமாகவும் அத்தகைய அகிம்சையைத் தங்களுடைய கொள்கையாக ஏற்கவில்லை.

ஆகையால், எனது நிலை என் வரைக்கும் இருக்கவேண்டியதாகிறது. என்னுடைய தனி வழியில் உடன் வரக்கூடியவர்கள் யாராவது இருக்கிறார்களா என்று நான் பார்க்க வேண்டும். நான் ஒருவனே என்ற அளவுக்கு அவ்வளவு சிறுபான்மையாகிவிட்டாலும் மற்றவர்கள் மாறும்படி செய்ய நான் முயன்றாக வேண்டும். ஒருவனாக இருந்தாலும் சரி, பலராயினும் சரி, தம்முடைய எல்லையைப் பாதுகாத்துக் கொள்வதற்கானாலும், பலாத்காரத்தைக் கைவிடுவது இந்தியாவுக்கு நல்லது என்ற என் நம்பிக்கையை நான் கூறியே ஆக வேண்டும். ஏனெனில், இந்தியா ஆயுதப் போட்டியில் இறங்குவது தற்கொலை செய்துகொள்ளுவதாகும். அகிம்சையை இந்தியாவும் இழந்துவிடுமாயின், உலகம் வைத்திருந்த கடைசி நம்பிக்கையும் போயிற்று என்றாகிவிடும். சென்ற அரை நூற்றாண்டு காலமாக நான் எடுத்துக் கூறி வந்திருக்கும் தருமத்தின்படி நான் வாழ்ந்தாக வேண்டும். இந்தியா, அகிம்சையைத் தனது தருமமாகக் கொள்ளும், மனிதனுடைய கௌரவத்தை நிலைநாட்டி அவன் எந்தக் கீழ்நிலையிலிருந்து உயர்வுக்கு வந்திருக்கிறானோ அந்நிலைக்கே அவன் இறங்கி விடுவதையும் தடுக்கும் என்று என் கடைசி மூச்சு இருக்கும் வரையில் நம்பவும் வேண்டும்.

சேவா கிராமம், 10--10--1939. —'ஹரிஜன்' - 14—10—1939.

# 8

# சிக்கலான கேள்வி

ஒரு பிரிட்டிஷ்காரர், யுத்தத்தைக் குறித்து தம் சொந்தக் கருத்துக்களை விளக்கி தீனபந்து ஆண்ட்ரூஸுக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். அவர் திடமான யுத்த வெறுப்பாளர்

தீனபந்து அக்கடிதத்தை எனக்கு அனுப்பினர். அதில் கீழ்வரும் பகுதி காணப்படுகிறது :

"இந்தியாவுக்குங்கூட இது மிகவும் நெருக்கடியான சமயம். முழுக் குடியேற்ற நாட்டு அந்தஸ்தையோ அல்லது அதுபோன்ற ஒன்றையோ இந்தியாவுக்குப் பிரிட்டன் வாக்களித்துவிடக்கூடும். இதன் பலனுக இந்தியா ஒரு படையைத் திரட்டிக்கொண்டு ராணுவ மனப்பான்மையுள்ள இன்னுமொரு நாடாக ஆகிவிடக்கூடும் என்ற ஆபத்தையே நான் காண்கிறேன். அகிம்சை வழிக்கும் ஆத்ம சக்திக்கும் அது சாட்சியாக இருப்பதென்பது பிறகு பெரும்பாலும் இல்லாது போய்விடும்.

"அகிம்சையை நம்புபவரான காந்திஜி, யுத்தத்தின் இந்த வழியில் இந்தியாவின் ஆதரவு பிரிட்டனுக்குக் கிடைக்கும்படி செய்வதற்காக யுத்த நோக்கத்தைத் தெளிவுபடுத்தும்படி எப்படிக் கேட்க முடியும்? அவர் செய்யக்கூடியதும், நாம் எல்லோரும் செய்துகொண்டிருக்கவேண்டியதுமான ஒரே காரியம், அன்பு, தயை வழியில் தங்களைக் கட்டுப்படுத்திக்கொண்டவர்களும் பலாத்காரத்தை ஏற்றுக்கொள்ளுவதேயன்றி அதைத் திருப்பிச் செய்வதில்லை என்பதில் திடமுள்ளவரான ஆண்களும் பெண்களும் அடங்கிய ஒரு படையைத் திரட்டுவதேயாகும். இது நமது அன்றாட வாழ்க்கையிலும் எண்ணத்திலும் எவ்விதம் மாறுதலை உண்டாக்கும், மற்றச் சமூகங்கள், நாடுகள் விஷயத்தில் என்ன நிலையை உண்டாக்கும் என்பதைப் பார்க்க நாம் இதை நிறைவேற்ற வேண்டும். இதிலும் எல்லோரும் ஒன்றென ஒற்றுமையாக இருந்து வேலை செய்வதைக் கற்றுக்கொள்ளவும் நாம் கட்டுப்பாட்டை அடைந்தாகவேண்டும். இவ்வழியில் ஏராளமான சாத்தியங்கள் உண்டு எனக் காண்கிறேன்.

"யுத்தத்தில் பிரிட்டனுக்கு இந்தியா உதவி செய்தாலும் செய்யாது போனாலும், பிரிட்டன் இந்தியாவில் முழு ஜனநாயகத்தை ஒப்புக்கொண்டு அதை நடத்திக் காட்டுவதற்கு நம்மாலான முழுச் செல்வாக்கையும் நாம் உபயோகிக்க வேண்டும் என்பதில் சந்தேகமில்லை."

இக்கடிதத்தை எழுதியிருப்பவர் காணும் ஆபத்து உண்மையானதே. சென்ற வாரம் நான் அதைப்பற்றி எழுதினேன். நேச தேசத்தினரிடம் நான் கொள்ளும் அனுதாபத்தைக் குறித்து முக்கியமாக ஆட்சேபிக்கிருர். அகிம்சையில் முழு நம்பிக்கையுள்ளவன் என்ற வகையில் அந்த நம்பிக்கையின் காரணமாகவே நான் அனுதாபத்தைக் காட்டியிருக்கிறேன். எல்லாப் பலாத்காரமுமே கெட்டதுதான்; மொத்தத்தில் கண்டிக்க வேண்டியதுதான். எனினும், ஆக்கிரமித்துப் போர் செய்கிறவருக்கும் தம்மைப் பாதுகாத்துக்கொள்வதற்காகப் போர் செய்கிறவருக்கும் உள்ள பேதத்தை அகிம்சையில் நம்பிக்கையுள்ளவரும் அறியவேண்டியது கடமையாவதால் அனுதாபம் காட்டுவது அனுமதிக்கக்கூடியதாகிறது. அப்படிச் செய்வதானல் இவர், பாதுகாத்துக்கொள்ளப் போராடுகிறவருக்கு அகிம்சை வழியில் ஆதரவாக இருந்து, அதாவது, அவரைக் காக்கத் தம் உயிரைக் கொடுப்பார். இவர் குறுக்கிடுவது, யுத்தம் சீக்கிரத்தில் முடியும்

படி செய்வதாகவும் இருக்கக்கூடும் ; போராடுகிறவர்களுக் கிடையே சமாதானத்தை உண்டாக்குவதில் முடிவதாகவும் இருக்கக்கூடும். இந்த வாதத்தை இப்பொழுது நடக்கும் யுத்தத்திற்கு அனுசரிப்பதாக இருந்தால், நேச தேசத்தின ருக்குக் காங்கிரஸ் அகிம்சை வழியில் தீவிரமாக உதவி செய்வதாக இருந்தால், காங்கிரஸின் உதவி நேச தேசத்தி னரின் லட்சியத்தை உயர்வான தார்மிக வழியில் கொண்டு செல்லும். காங்கிரஸின் செல்வாக்குச் சமாதான லட்சியத் திற்குச் சரியானபடி உபயோகமாகும். மேலும் முடிவு வரையில் போர் நடப்பதாக இருந்தால், தோற்றவர்மீது எந்த அவமா னங்களும் சுமத்தப்படாமலிருக்கப் பார்க்க வேண்டியதும் காங்கி ரஸின் விசேட வேலையாக இருக்கும். காங்கிரஸ் மேற்கொள்ள வேண்டும் என்று நான் எண்ணும் வேலை இதுவே. சுதந்திரப் பிரகடனம் அவசியமானதாகிவிட்டது. இப்பேச்சு எழுந்துவிட் டதால், ஜனநாயகத்தைப் பாதுகாப்பதற்காகவே போர் என்று பிரிட்டன் உலகத்திற்குச் சொல்லி வரும்போது அது ஏகாதி பத்தியத்திற்காகவே ரகசியமாகப் போராடிக்கொண்டிருக்கு மாயின், பிரிட்டனுக்குக் காங்கிரஸ் உதவி செய்ய முடியாது. காங்கிரஸின் கொள்கை எதுவானாலும், பிரிட்டன் நியாயமாக நடக்கிறது என்பதற்குத் தன்னுடைய யுத்த நோக்கத்தை அது தெளிவாகக் கூறிவிட வேண்டியது அவசியமானதாகிறது.

சேவா கிராமம், 16—10—1939 —'ஹரிஜன்' - 21—10—1939

## 9

# நிபந்தனையில்லா ஆதரவு

பல பிரிட்டிஷ் நண்பர்களுக்குப் புதிராக இருக்கிறது. "பிரிட்டனுக்கு நிபந்தனை இல்லாமல் உதவியளிப்பதென நீங்கள் கூறியதாகச் சொல்லப்படுகிறது. உண்மையிலேயே அப்படிக் கூறினீர்களா ?" என்று அவர்கள் கேட்கிறார்கள். வைசிராயைச் சந்தித்துப் பேசியதுமே நான் வெளியிட்ட முதலாவது அறிக் கையைக்கொண்டே இச்செய்தி பிறந்திருக்கிறது. 'நிபந்தனை யில்லாத ஆதரவு' என்ற சொல்தொடர் அந்த அறிக்கையில் இல்லை. ஆனால், நான் மேற்கொண்ட நிலையைக் காங்கிரஸ் ஏற்றுக்கொண்டிருக்குமானால் காங்கிரஸ் உதவி நிபந்தனை இல் லாததாக இருந்திருக்கும். அதாவது, தன்னுடைய யுத்த நோக் கங்களை விளக்கிக் கூறுமாறு பிரிட்டனைக் காங்கிரஸ் கேட்டிராது. ஆனால், காங்கிரஸ் கமிட்டி யோக்கியமாக அந்த நிலையை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. ஆகையால், ஒரு தீர்மானத்தை

அது செய்துள்ளபடி நிறைவேற்றியது. அப்படி நிறைவேற்ற அதற்கு எல்லாவித உரிமையும் நியாயமும் உண்டு. காரியக் கமிட்டி செய்தது புத்திசாலித்தனமானதே என்பதைச் சம்பவங்கள் காட்டியிருக்கின்றன. ஆனால், யுத்த நோக்கத்தை விளக்க வேண்டும் என்று கேட்பதை அது விட்டிருக்குமாயின் ஆதரவு நிபந்தனை இல்லாததாகவே இருந்திருக்கும். காங்கிரஸ், அதன் அமைப்பு விதிகளின்படி, அகிம்சை ஸ்தாபனம் என்பதை நினைவில் வைக்கவேண்டும். ஆகையால், அதன் ஆதரவு முற்றிலும் தார்மிகமானதாகவே இருக்கும். உதவுவதற்கு அதனிடம் சிப்பாய்களில்லை ; கொடுப்பதற்கு அதனிடம் பணமும் இல்லை. ஆனால், அதனுடைய நல்ல எண்ணம் அதனிடம் இருக்கிறது. பல பட்டாளங்களைவிட மேலானது இந்த நல்லெண்ணம் என்பது என் கருத்து. காங்கிரஸ் ஆதரவு பிரிட்டிஷ் லட்சியத்தை அசைக்க முடியாத தார்மிக அடிப்படையில் வைத்திருக்கும்; அதிக அளவுக்குப் பிரிட்டிஷ் கட்சி நியாயம் என்றும் ஆக்கியிருக்கும் ; உலகத்திலுள்ள அடிமைப்பட்ட மக்கள் எல்லோருமே சுதந்திரத்தின் வருணிக்கவொண்ணுத பிரகாசத்தை உணர்ந்திருப்பார்கள். பிரிட்டிஷ் ஒழுக்கமும் மிக உச்ச நிலைக்கு வந்திருக்கும். காங்கிரஸின் நிபந்தனையற்ற ஆதரவென்பது இந்தப் பொருளில் கொண்டதுதான்.

ஆனால், கடவுள் சித்தம் வேறு வகையாக இருந்துவிட்டது. காங்கிரஸ் கூறிவரும் அகிம்சையில் பிரிட்டிஷ் ராஜதந்திரிகளுக்குப் போதுமான நம்பிக்கை இல்லை. நியாயமாகப் பரீட்சிப்பவரேயாயினும் கண்டிப்பாக இருப்பவர் நடத்தும் சோதனையில் காங்கிரஸ் தேறிவிட முடியாது என்பதை நான் ஒப்புக்கொண்டுதான் ஆகவேண்டும். என்றாலும், என் நிலைமையைப் புரிந்துகொள்ளுவதில் பிரிட்டிஷ் நண்பர்களுக்கு எந்தவிதமான கஷ்டமும் இராது. யுத்தத்தையே எதிர்ப்பவன் என்ற வகையில் தார்மிக ஆதரவைக்கூட நான் யுத்தத்திற்கு அளிக்க இயலாது என்று அவர் வாதிக்கலாம். அப்படிப்பட்ட கருத்து எனக்கு இல்லை என்பதை இப்பத்திரிகை வாயிலாக நான் இதற்கு முன்னாலேயே எடுத்துக் காட்டியிருக்கிறேன். போரில் ஈடுபட்டிருக்கும் இருவரில் யாரிடம் நியாயம் இருக்கிறது என்பதை ஒரு யுத்த எதிர்ப்பாளர்கூடச் சீர்தூக்கிப் பார்த்து, நியாயமிருக்கும் கட்சி வெற்றியடைய வேண்டும் என்று விரும்பலாம். சும்மா பார்த்துக்கொண்டிருப்பவராக இருப்பதைவிட இவ்விதம் சீர்தூக்கிப் பார்ப்பதால் இரு தரப்பாருக்குமே சமாதானத்தை உண்டாக்கவும் முடியலாம்.

சேவா கிராமம், 30—10—1939 —'ஹரிஜன்' - 4--11--1939.

# 10

# சோதனை நேரம்

"ஆயுத பலமே சிறந்தது என்ற கொள்கையை இந்தியா பின்பற்றுவ தாயின் அது தாற்காலிகமான வெற்றியைத்தான் காணும். அந்த இந்தியா, நான் உள்ளூறப் பெருமைப்படும் இந்தியாவாக இருக்காது. எல்லாவற்றிற்கும் நான் இந்தியாவுக்குக் கடமைப்பட்டிருப்பதே அதனுடன் என் பிணைப்புக்குக் காரணம். உலகிற்கு இந்தியா வழிகாட்ட வேண்டியிருக்கிறது என்று நான் முற்றிலும் நம்புகிறேன். கண்மூடித்தனமாக அது ஐரோப்பாவைப் பின்பற்றக் கூடாது. இந்தியா என்றைக்கு வாளின் தத்துவத்தை ஏற்றுக்கொண்டுவிடு கிறதோ அதுவே எனக்குச் சோதனைக் காலமாகிவிடும். இந்தக் காலம் வரும் போது நான் திறமையற்றவனாகிவிட மாட்டேன் என்றே நம்புகிறேன். என் தருமத்திற்கு எல்லைக்கோடு எதுவும் கிடையாது. அதில் எனக்கு உறுதியான பற்று இருக்குமானால் இந்தியாவின்மீது நான் கொண்டிருக்கும் அன்பையும் அது மீறிச் சென்றுவிடும். அகிம்சை, ஹிந்து மதத்தின் ஆணி வேர் என்று நான் நம்பு கிறேன். இந்த அகிம்சை மதத்தின் மூலம் இந்தியாவின் சேவைக்கு என் வாழ்க்கையை அர்ப்பணம் செய்துவிட்டேன்.

"அகிம்சா தருமம் ரிஷிகளுக்கும் துறவிகளுக்கும் மாத்திரம் ஏற்பட்ட தன்று; சாதாரண மக்களுக்காகவும் இருப்பதே அது."

இந்தச் சொற்களைக் காந்திஜி 1920 ஆகஸ்டில் எழுதிய ஒரு கட்டுரையிலிருந்து குறிப்பிடுகிறேன். இன்றைக்குச் சொன்ன தைப்போலவே அது இருக்கிறது. உலகிற்கு இந்தியா காட்ட வேண்டிய குறிப்பிட்ட வழி என்ற வகையில் அகிம்சையில் கொண்ட உறுதியான நம்பிக்கையுடன் எத்தனையோ இன்ப துன்பங்களுக்கிடையே நமது கப்பலை நேரான வழிக்குத் திருப்ப அவர் முயன்றிருக்கிறார். இருண்ட மேகங்கள் சூழ வந்த சமயங்கள் எத்தனையோ உண்டு. ஆனால், நமது குறிக் கோளான தாரகை நமக்குப் புலனாகாமல் இருந்தது கிடையாது. இப்பொழுது தோன்றியிருக்கும் புயலோ, அந்தக் குறிக்கோளை நம் கண்ணுக்குத் தோன்றாமற் செய்துவிடுமோ என்ற அபா யத்தை உண்டாக்கியிருக்கிறது. ஆனால், நமது கப்பலோட்டியோ, நமது யாத்திரையின் முடிவுக்கு நம்மைக் கொண்டு போய் சேர்க்க வழிகாட்டுவதாயிருக்கும் லட்சிய தாரகையைப் பார்க்காமல் இருந்துவிட வேண்டாம் என்று இடைவிடாது நமக்கு எச் சரிக்கை செய்வதையே தமது வேலையாகக் கொண்டிருக்கிறார்.

ஆகையால், காரியக் கமிட்டிக் கூட்டம் முடிந்ததுமே காந்திஜி, விஷயத்தைப்பற்றித் திரும்பவும் சிந்தித்துக் காங்கிரஸும் காங்கிரஸ்காரர்களும் என்ன செய்யப் போகிறார் கள் என்பதைக் குறித்து ஒரேயடியாக முடிவு செய்துவிடுமாறு கேட்டார். இப்பிரச்னை நமக்கும் அரசாங்கத்திற்குமுள்ள

உறவைப் பாதிப்பதாக இருப்பதோடல்லாமல், ஒரு சமூகத்திற்கும் மற்றொரு சமூகத்திற்குமுள்ள உறவையும் பாதிப்பதாக இருக்கிறது.

காந்திஜியின் யோசனையைக் குறித்துப் பல மணி நேரம் விவாதித்தார்கள். ஆனால், எந்த முடிவிற்கும் வர முடியவில்லை. காரியக் கமிட்டியின் அடுத்த கூட்டத்தில் திரும்ப விவாதிக்கப் பட்டுத் திட்டமான முடிவு ஏற்படும். இதற்கு மத்தியில் இதைப் பற்றிச் சிந்திக்க அதன் உறுப்பினர்களுக்குப் போதுமான அவகாசம் இருக்கும்.

இப்பிரச்னை முழு நேரமும் காந்திஜியின் சிந்தனையில் இருந்து வருகிறது. இதனால், முன் ஏற்பாட்டுடன் சந்திக்க வருபவர்களுடன் பேசும் நேரம் போக மிகுதி நேரத்திலெல்லாம் இதைப்பற்றியே சிந்தித்துக்கொண்டிருக்கிறார். அடிக்கடி அதிகாலையிலே எழுந்து இதைப்பற்றித்தான் சிந்திக்கிறார். 25-ஆம் தேதி இரவு ஒரு மணிக்கே எழுந்துவிட்டார். அன்று பிற்பகல் காந்தி சேவா சங்கத்தினரைச் சந்திக்க வேண்டியிருந்தது. ஆகவே, அவர்களிடம் தாம் என்ன சொல்ல வேண்டும் என்பதைக் குறித்துச் சிந்தித்துக்கொண்டிருந்தார். ஆகையால், அவர்களிடம் காந்திஜி கூறியதாவது:

"இப்பிரச்னை விடாமல் என்னை விரட்டிக்கொண்டே இருக்கிறது. அதனால், எனக்கு ஓய்வு என்பதே இல்லை. காரியக் கமிட்டியின் இளைய உறுப்பினரின் நிலைமையைப்பற்றி 'ஹரிஜன்' பத்திரிகையில் விவரித்திருக்கிறேன். அவர்கள் ஓர் இக்கட்டான நிலையில் இருக்கிறார்கள். ஒருபக்கம், கொள்கையிடம் விசுவாசம்; மற்றொரு பக்கம், தங்கள் சகாக்களிடம் விசுவாசம். இந்த இரண்டுக்கும் இடையே அவர்கள் திண்டாடிக்கொண்டிருக்கிறார்கள். தங்கள் நிலைமையை எனக்குத் தெளிவாக்கிவிட வேண்டும் என்பதில் அவர்கள் கொண்டிருக்கும் ஆர்வம் மிகவும் வரவேற்கத் தக்கது. நாமெல்லாம் சத்தியத்தைக் கடைப்பிடிப்பவர்கள் என்பதை இது காட்டுகிறது. நம் மனப் போராட்டங்களும் தகராறுகளுங்கூடச் சத்தியத்தினிடம் விசுவாசமாக இருக்க நாம் கொண்டிருக்கும் ஆர்வத்தினால் ஏற்படுபவையே. நேற்றுக் காரியக் கமிட்டிக் கூட்டத்தில் மிகச் சிறந்த விவாதம் நடத்தினோம். தனிப்பட்டவர்கள், காங்கிரஸின், மக்களின் பிரதிநிதிகள் என்ற வகையில் உறுப்பினர்களின் நிலைமையைக் குறித்து மிகவும் விவரமாக விவாதித்தோம். உங்களைப் பொறுத்த விஷயமோ வேறானது. ஏனெனில், நீங்கள் உங்கள் சொந்த முறையில் இங்கு இருக்கிறீர்கள். காங்கிரஸ்

அல்லது காங்கிரஸ்காரர்கள் நினைப்பது எதுவாக இருந்தாலும், நீங்கள் செய்ய வேண்டியது என்ன என்பதில் முடிவுக்கு வர வேண்டும். இவ்விதம் உங்களைப் பொறுத்தவரை பிரச்னை மிக எளிதானது. உங்களுக்கு அன்பானவர்களுக்கு மோசமான துன்பத்தை விளைவித்தவர்களிடம், சகோதரப்பான்மையை நீங்கள் அனுசரிப்பீர்களா? ராஜேந்திர பாபு தாக்கப்படுகிறார் என்று வைத்துக்கொள்வோம். அப்படித் தாக்குகிறவரைத் திருப்பித் தாக்குவீர்களா? அல்லது ராஜேந்திர பாபுவுக்கும் தாக்குபவருக்கும் இடையில் நின்றுகொண்டு அவருக்கென்று வரும் அடிகளையெல்லாம் இன்முகத்துடன் நீங்கள் தாங்கிக்கொள் வீர்களா? சாவு அச்சத்தையும், உடலுக்குக் காயமேற்படும் என்ற பயத்தையும், உங்களைப் பிணைத்திருக்கும் குடும்ப பந்தங்களைப் பற்றிய நினைப்பையும் நீங்கள் விட்டொழித்திருந்தால், ராஜேந்திர பாபுவுக்கும் அடிப்பவருக்கும் நடுவே நிற்பதையே நீங்கள் செய்வீர்கள். ஆனால், துன்புறுத்துவதற்கு உங்களைப் பயன் படுத்திக்கொள்ளுபவரிடம் சகோதர அன்பைத் தவிர வேறு எதுவும் உங்களிடம் இல்லாமலிருந்தாலன்றி, என்ன கஷ்டம் வந்தாலும் அகிம்சா தருமத்தில் உறுதியாக நிற்பதென்று நீங்கள் செய்துகொள்ளும் முடிவுக்குப் பொருள் இல்லை. வெறும் தீர்மானத்தை வைத்துக்கொள்ளுவதைவிடச் சங்கத்தைக் கலைத்துவிடுவது எவ்வளவோ மேலானது.

"ரிஷிகளுக்கும் மலைக்குகைவாசிகளுக்கும் மாத்திரமே என்று இருக்கும் குறுகியதான நற்பண்பு அன்று அகிம்சை. அதன் விளைவுகளைப்பற்றிய முழு ஞானமும் இருக்கிறது என் பதனால் அல்ல, நம் மனித இனத்தின் தருமம் என்பதனால் அது கோடிக்கணக்கான மக்களால் அனுசரிக்கத் தகுந்தது. அது மிருகத்திலிருந்து மனிதனை வேறுபடுத்துகிறது. ஆனால், மனிதன் தன்னிடம் இருக்கும் மிருகத்தனத்தை விட்டொழித்துவிடவில்லை. அதை விட்டொழிக்க அவன் பாடுபட வேண்டும். அகிம்சை யில் இருக்கும் நம்பிக்கை மட்டும் போதாது; அகிம்சையை அனுசரிக்கப் பாடுபடுவதாகவும் இருக்க வேண்டும். ஒரு கொள்கையை நம்புவதற்கு நான் பாடுபட முடியாது; அதை நான் நம்புவதாயிருக்க வேண்டும். அகிம்சை, வீரருக் குரிய லட்சணம். நீரும் நெருப்பும் எவ்விதம் ஒன்று சேர்ந்து இருக்க முடியாதோ அதே போல அகிம்சையும் கோழைத் தனமும் சேர்ந்திருக்க முடியாது. காந்தி சேவா சங்கத்தின் உறுப்பினர் ஒவ்வொருவரும் அந்த அகிம்சையையே தம்முள் வளர்த்துக்கொள்ள மனமாரப் பாடுபட வேண்டும்.

"இப்பிரச்னையைக் குறித்து நாம் அடிக்கடி சிந்தித்திருக்கிறோம். ஆனால், சுயராஜ்யப் போரட்டத்தையும், அதே போல ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையையும், அதே போன்று யுத்த சம்பந்தமாகவும் சோதனைக்குரிய நேரம் இப்பொழுது வந்திருக்கிறது. நூற்கும் ராட்டையில் உங்களுக்கு நம்பிக்கையிருந்தாலன்றி உங்கள் அகிம்சை சரியானபடி இயங்க முடியாது என்பதையும் நினைவில் கொள்ளுங்கள். என் நோக்கோடு 'ஹிந்த் ஸ்வராஜ்' என்ற நூலைப் படிக்கும்படி உங்களைக் கேட்டுகொள்ளுவேன். இந்தியாவை எப்படி அகிம்சை மயமாக்குவது என்பதுபற்றி அதில் வரும் அத்தியாயத்தைப் பார்க்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். *தொழிற்சாலை நாகரிகத்தின்மீது அகிம்சையை எழுப்ப முடியாது. ஆனால், சுயதேவையைப் பூர்த்தி செய்துகொள்ளும் கிராமங்களைக்கொண்டே அதை வளர்க்க இயலும். ஹிட்லர் நினைத்தாலும் அகிம்சையோடு கூடிய ஏழு லட்சம் கிராமங்களை அவரால் நிர்மூலம் ஆக்கிவிட முடியாது. அப்படிச் செய்ய அவர் துணிந்தால் அவரே அகிம்சைவாதியாகி விடுவார். நான் எண்ணுகிற வகையிலுள்ள கிராமப் பொருளாதாரம், சுரண்டலை அடியோடு ஒழித்துவிடுகிறது. சுரண்டலே பலாத்காரத்தின் சாரம். ஆகையால், அகிம்சையினராவதற்கு முன்னால் நீங்கள் கிராம மனப்பான்மை உடையவர்களாக வேண்டும். அப்படிக் கிராம மனோபாவத்தினராவதற்கு நூற்கும் ராட்டையில் உங்களுக்கு நம்பிக்கை இருக்க வேண்டும்."

இந்த விவாதத்தை எண்ணியவாறே உறுப்பினர்கள் அன்றிரவு தூங்கினர். மறுநாள் திரும்பவும் காந்திஜியைச் சந்தித்தார்கள். அகிம்சையைப் பின்பற்றுபவராயிருக்கும் ஒவ்வொருவரையும் கவலைக்குட்படுத்துவதைப் போன்று பல கேள்விகள் இவர்களையும் கவலைக்குட்படுத்தி வந்தன. ஆனால், காந்திஜியின் நேரத்தைக் கெடுக்கக் கூடாது என்பதற்காகச் சில கேள்விகளை மாத்திரமே கேட்டார்கள்.

"நீங்கள் கருதுகிறபடியுள்ள அகிம்சையை நம்புகிறவர் எப்படி மந்திரியாக இருக்க முடியும்?"

காந்திஜி கூறியதாவது: "இப்பொழுது இருக்கிற நிலையில் அவர் இருக்க முடியாது என்றே அஞ்சுகிறேன். சுயாட்சி பெறுவதற்கு முன்னால் பிரிட்டிஷ் அரசாங்கம் செய்ததைப் போலவே நம் மந்திரிகளும் பலாத்காரத்தைக் கொள்ள நேர்ந்திருக்கிறது என்பதை நாம் பார்த்தோம். ஒரு வேளை இது தவிர்க்க முடியாததாக இருக்கலாம். காங்கிரஸ்காரர்கள்

* மகாத்மா காந்தி நூல்கள் - முதற் தொகுதியில் 'ஹிந்த் ஸ்வராஜ்' என்ற பகுதியின் 17-ஆம் அத்தியாயம் காண்க.

உண்மையிலேயே அகிம்சையோடு இருப்பின் பலாத்காரத்தை மேற்கொள்ளுவதே இருந்திராது. ஆனால், காங்கிரஸ்காரர்களில் பெரும்பான்மையினரின் அகிம்சை கலப்பற்றதான அடிப்படையில் இல்லை. அகிம்சைக் கொள்கையைத் தாம் துளிக்கூடக் கைவிட்டு விடவில்லையென்றாலும் குறைந்த பட்சம் சுடுவதை மேற்கொள்ளாமல் இருக்க முடியவில்லை என்று ஒரு மந்திரி சில தினங்களுக்கு முன்னால் கூறினார். தவிர்க்க முடியாததாக இருந்த அளவுக்கு மாத்திரமே அதை அவர் மேற்கொண்டிருக்கிறார். அதை அவர் அப்பொழுது கூறியிருக்கலாம். என்னால் உதவி செய்ய முடியுமானால் திரும்பவும் அதையே அவர் சொல்லாமல் இருக்கலாம். ஏனெனில், அவர் மீண்டும் மந்திரி சபைக்குப் போவாரானால், அவர் தமது நிலைமையைத் தெளிவாக்கிவிடக்கூடும். மிக அதிகமாக அகிம்சையினரைக் கொண்ட ஒரு சபைக்குப் பிரதிநிதியாக அவர் அப்பொழுது இருப்பார். விளக்கமாகச் சொன்னால், அரசாங்கத்தை அகிம்சை அடிப்படையில் நடத்த மக்கள் தம்மை அனுமதிப்பார்கள் என்பதை நிச்சயமாகக்கொண்டே அவர் மந்திரிப் பதவியை ஏற்றுக் கொள்ளுவார்.''

''ஆனால், அகிம்சை மந்திரி குறைந்தபட்ச அளவுக்குப் பலாத்காரத்தை அடக்கி வைப்பார். அகிம்சையில் நம்பிக்கை இல்லாதவர் அத்தகைய தங்கு தடை எதையும் அனுசரிக்க மாட்டார் என்று ஏற்படாதா ?''

''அந்த நம்பிக்கை வெறும் மயக்கம். இன்று பலாத்காரத்தை உபயோகிக்கிறவர்கள் எல்லாரும் அப்படித்தான் சமாதானம் கூறிக்கொண்டு வருகிறார்கள். ஹிட்லரும் அப்படித்தான் கூறுவார். மக்கள் பலாத்காரம் பரவுவதை ஜெனரல் டயர் தடுக்க வேண்டியிருந்தது என்று சொல்லப்பட்டதால் அவரை லார்டுகள் சபை, 'தக்க சமயத்தில் சரியாக நடந்துகொண்ட வீரர்' என்று பாராட்டியது. பலாத்காரமற்ற ஓர் ஒழுங்கை ஏற்படுத்துவதற்கு இடைக்காலக் கட்டமாகவே தன்னுடைய பலாத்காரத்தை ருஷியா நம்புகிறது. நமது நம்பிக்கையும் நடவடிக்கையும் இப்பொழுது இருக்கும் நிலையில், சங்கத்தைக் கலைத்துவிட்டு ஒவ்வொருவரும் சுயேச்சையாக வளர விட்டுவிடுவதே நல்லதாக இருக்கலாம்.''

''ஆனால், ஆக்க வேலைகளில் ஈடுபட்டவர்களை மாத்திரமே கொண்டதாகச் சங்கத்தைச் செய்துவிடலாம் என்று யோசனை கூறப்படுகிறது'' என்றார் கிஷோர்லால் பாய்.

**காந்திஜி:** அந்த யோசனை நல்லதே. அத்தகைய ஸ்தாபன மாகச் சங்கத்தை மாற்றிவிட்டு அதன் பிறகு நாம் ஒவ்வொரு வரும் நம் சொந்தத் திறமையால் முடிந்தவரை நம்மையே தூய்மைப்படுத்திக்கொள்ள முயலலாம். ஏனெனில், சுயத் தூய்மையின்றி அகிம்சை சாத்தியமே இல்லை. ஆகையால், சுயத்தூய்மைச் சங்கத்தின் அங்கத்தினர்களாக இருந்து வருவோம். ஆனால், இக்காரியத்திற்குச் சங்கம் அவசியமில்லை. ஆகவே, நாம் ஒவ்வொருவரும், பிரச்னைகள் வர வர அவைகளைச் சமாளிப்பது எப்படி என்று அவரவர்கள் வழியில் முயற்சி செய்து, எவ்வளவு தூரம் போக முடியுமென்று பார்ப்போம். ஹூட்லியில் இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் தேர்தலின்போது சாத்தியமான வரையில் சிறந்தவர்களையே சட்டசபைக்கு அனுப்புவதிலும் உதவும்படி உங்களைக் கேட்டேன். அப்பொழுது இருந்த சூழ்நிலைக்கு ஏற்றபடி அப்பொழுது யோசனை கூறினேன். அந்த யோசனையை இன்று நான் உங்களுக்குக் கூற முடியாது. வீரர்களின் அகிம்சையில் நம்பிக்கை கொண்டிருக்கும் உங்களைப் போன்றவர்கள், 1934-இல் நான் செய்ததைப் போலக் காங்கிரஸி லிருந்து விலகிவிட வேண்டியது அவசியமாகும் சமயம் உண்மையில் வந்திருக்கக்கூடும்.

"கோபம், துவேஷம், கெட்ட எண்ணம் ஆகியவைகளால் தூண்டப்பட்டுவிடக் கூடியவர்களாகப் பொது மக்கள் இருக்கிறார்கள் என்பதை நாங்கள் அறிவோம். அப்படி இருக்க, அவர்கள் அகிம்சையை அனுசரிக்க முடியும் என்று எப்படி நினைக்கிறீர்கள்? அவர்கள் அற்ப விஷயங்களுக்கும் சண்டை யிட்டுக்கொள்ளுகின்றனர்."

"அப்படித்தான் இருக்கிறார்கள். என்றாலும், பொதுவான நன்மைக்காக அவர்கள் அகிம்சையை அனுசரிக்க முடியும் என்று இன்னும் நான் நினைக்கிறேன். சட்டவிரோதமாக உப்பு எடுத்த ஆயிரக்கணக்கான பெண்கள், யார் மீதாவது கெட்ட எண்ணம் கொண்டிருந்தார்கள் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? காங் கிரஸ் அல்லது காந்தி, சில விஷயங்களைச் செய்யும்படி தங்களுக்குக் கூறியிருப்பது அவர்களுக்குத் தெரியும். அக்காரியங்களை அவர்கள் விசுவாசத்துடனும் நம்பிக்கை யுடனும் செய்தார்கள். அகிம்சை மிகச் சிறந்த வகையில் காட்டப்பட்டது சம்பாரணில்தான் என்பது எனது கருத்து.*

* சம்பாரண் ஜில்லா, பிகாரின் வடமேற்குக் கோடியில் இருப்பது. இந்த ஜில்லா வின் மொத்த ஜனத்தொகையான 20 லட்சம் மக்களில் 98 சதவிகிதத்தினர் கிராமங்

விவசாயிகளுக்குச் செய்யப்பட்ட தீமைகளை எதிர்த்துப் புரட்சியில் எழுந்த ஆயிரக்கணக்கான விவசாயிகளுக்கு அரசாங்கத்தின் மீதோ அல்லது தோட்டக்காரர்களிடமோ கொஞ்சமாவது கெட்ட எண்ணம் இருந்ததா? பலருக்கு எப்படிப் பூமி உருண்டையாக இருக்கிறது என்ற நம்பிக்கை இன்னும் புரிந்துகொள்ள முடியாததாக இருக்கிறதோ அதே போன்று அகிம்சையில் அவர்களுக்குள்ள நம்பிக்கையும் சரியாக விளங்காமல் இருந்தது. ஆனால், தங்கள் தலைவர்களிடம் அவர்கள் கொண்டிருந்த நம்பிக்கை உண்மையானது ; அதுவே போதும். அந்த இயக்கத்தைத் தலைமை வகித்து நடத்தியவர்களுக்கு இருந்த நம்பிக்கை வேறு விஷயம். இவர்களுக்கிருந்த நம்பிக்கை இவர்களுக்குப் புரிவதாக இருக்க வேண்டும்; அந்த நம்பிக்கையின் விளைவுகளின்படி இவர்கள் வாழ்ந்தாக வேண்டும்."

"ஆனல், உலகம் பூராவுமே மக்கள் இப்படித்தான் இருக்கிறார்களல்லவா ?"

"அவர்கள் அப்படி இல்லை. ஏனெனில், மற்றவர்களுக்கு அந்த அகிம்சையின் அடிப்படை இல்லை."

"ஆனல், நம் மக்களிடம் அகிம்சை நிலவியிருந்திருக்குமானல், அவர்கள் இந்த அடிமை நிலைக்கு எப்படி வந்தார்கள் ?"

"பெருமைப்படுத்திக்கொள்ளவில்லை. அதைத்தான் நான் செய்வது என்றிருக்கிறேன். பலவீனர்களின் அகிம்சை வீரர்களின் அகிம்சையாக வேண்டும் என்று விரும்புகிறேன். இது கனவாகவே இருக்கலாம். என்றாலும், இதை அடைவதற்கு நான் பாடுபட்டு வர வேண்டும்."

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது.]

சேவா கிராமம், 29--10--1939 — 'ஹரிஜன்' - 4—11--1939.

---

களில் வசிப்பவர்கள். இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே அந்த ஜில்லாவில் அவுரி சாகுபடியாகி வருகிறது. 1793-ஆம் ஆண்டுக்கு முன்பிருந்து இந்தியர் குத்தகைக்கு நிலத்தை எடுத்து அவுரி சாகுபடி செய்து வந்தார்கள். பிறகு அவுரி, கரும்பு சாகுபடியை வெள்ளைக்காரர்கள் கைப்பற்றிக்கொண்டு சீக்கிரத்தில் ஜில்லா முழுதும் ஆதிக்கம் பெற்றுவிட்டனர். ஏழை விவசாயிகள் தங்கள் நிலங்களில் அவுரியே பயிரிடும்படி ஏமாற்றப்பட்டுக் கட்டாயப்படுத்தப்பட்டு வந்தனர். வெள்ளைக்காரத் தோட்ட முதலாளிகளிடமிருந்து விடுபட விவசாயிகள் என்ன முயன்றும் முடியாது தவித்து வந்தார்கள். 1917-இல் இந்த விவசாயிகளின் துயரத்தை அறிந்த மகாத்மா காந்தி அங்கே சென்று, இருந்து கொண்டு சத்தியாக்கிரகப் போராட்டத்தை நடத்தி வெற்றி பெற்று விவசாயிகளின் துயரத்தை நீக்கினர். இந்தியாவில் அகிம்சை முறையில் பொது ஜன அளவில் சத்தியாக்கிரகத்தின் மூலம் பெற்ற முதல் வெற்றி சம்பாரண் வெற்றியே.

# 11
# கடவுளின் நற்கரங்களில்

"அன்புள்ள நண்பரே,

என்னை நேரில் உங்களுக்குத் தெரியாது. ஆனால், 1931–இல் லங்காஷயரில் டார்வெனிலுள்ள கிரீன்பீல்டு ஆலைக்கு நீங்கள் வந்தபோது நானும் என் மனைவியும் உங்களை விருந்தினராக ஏற்கவேண்டுமென்றிருந்தது. அந்த ஆண்டு சங்கடமான சமயம்; லங்காஷயரில் வேலையில்லாத் திண்டாட்டம் மிகுந்திருந்தது. நீங்கள் இங்கிலாந்தில் இருக்கும்போது எங்கள் பருத்தி மில் தொழிலாளரை நேரில் சந்திக்க விரும்புவீர்கள் என்ற நம்பிக்கையை முதன்முதல் உங்களுக்குத் தெரிவித்தது நானே என்று நினைக்கிறேன். இதை என் நண்பர் ஸி. எப். ஆண்டரூஸ் மூலம் உங்களுக்குத் தெரிவித்தேன். எனினும், நீங்கள் அங்கு வரவிருந்த சமயத்தில், டார்வெனில் எங்கள் வீட்டையும், கிரீன்பீல்டு தொழிற்சாலையில் நலனபிவிருத்தி மேற்பார்வையாளராக நாங்கள் செய்து வந்த வேலையையும் விட்டுவிட்டு, பெர்லினுக்குப் போய்விட்டோம். அங்கிருந்த குவேக்கர் சர்வதேச முகாமின் பணியில் ஈடுபட்டு எங்கள் புது வாழ்வைத் தொடங்குவதற்காகவே சென்றோம். எங்களுக்குப் பின், நண்பரான சார்லஸ் ஹாரியட் ஹேவொர்த் உங்களை வரவேற்று உபசரித்தார்.

"ஐந்து இளங்குழந்தைகளைக் கொண்ட எங்கள் குடும்பத்துடன் ஐந்தரை ஆண்டுகள் ஜெர்மனியில் இருந்தோம். இக்காலத்தில் அந்நாட்டில் பலரைப் பற்றி அறிந்து அவர்களிடம் அன்பும் கொண்டோம். இச்சமயம் தார்மிக ராஜீய சம்பந்தமாக ஏற்பட்டிருக்கும் துன்பந் தரும் விஷயங்களையெல்லாம் நேரிலேயே கவனித்து அதில் பங்கும் கொண்டிருக்கிறேன். ஜெர்மனியைப் பற்றியும் அதன் மக்களைக் குறித்தும், சென்ற யுத்தத்திற்குப் பிறகு, பட்டினி கிடந்த குழந்தைகளின் பொருட்டுக் குவேக்கர் நிவாரண வேலையின் மூலம் நன்கு அறிந்திருக்கிறோம். அந்த வேலையில் ஈடுபடும் பாக்கியம் எங்களுக்கு இருந்தது.

"இந்த யுத்தத்தின் ஆரம்ப நாட்களில் 'ஹரிஜன்' பத்திரிகையில் நீங்கள் எழுதியிருந்தவற்றில் சிலவற்றை ஆழ்ந்த அக்கறையுடனும் உற்சாகத்துடனும் படித்தேன். இந்தச் சங்கடமான சமயத்தில் அவை எனக்கு அதிக உதவியாகவும் ஆறுதல் அளிப்பனவாகவும் இருந்தன. அது வருமாறு: 'அத்தகைய காரியம் சாத்தியமாக இருப்பினும், என் நாட்டுச் சுதந்திரத்தைப் பலாத்காரத்தைக் கொண்டு நான் பெறமாட்டேன்......, வாளினால் பெற்றது வாளினாலேயே போய் விடும் என்பதில் எனக்கு அழியாததோர் நம்பிக்கை இருந்து வருகிறது.' யுத்தத்தின் துன்பங்கள் மலிந்த இந்த வாரங்களில் என் மனத்தில் இருந்த வேதனையையெல்லாம் என் நண்பர் அகாதா ஹாரிஸனுக்குத் தெரிவித்த பிறகு உங்களுக்கு எழுதும்படி எனக்குத் துணிவு பிறந்தது. யுத்த நிலைமையைக் குறித்து நீங்கள் எழுதியிருந்த சிலவற்றையும் அவர் எனக்குக் காட்டினார். யுத்தம்பற்றிய உங்கள் போக்கை அறிந்துகொள்ளுவதற்கு அவை எனக்கு உதவியாக இருந்தன. ஆனால், இன்னும் எனக்கு ஓர் ஆழ்ந்த கவலை இருந்து வருகிறது. அதை உங்களிடம் தெரிவிக்க அனுமதி கோருகிறேன்.

"இப்பொழுதெல்லாம் சிறந்தவர்களும், சமாதானத்தில் திடநம்பிக்கையுள்ளவர்களுமான நண்பர்களை அடிக்கடி சந்திக்கிறேன். ஜெக்கொஸ்லோவாகியா, போலந்து போன்ற நாடுகளில், சுதந்திரம் மிருகத்தனமாக நசுக்கப்பட்

டிருப்பதை முன்னிட்டுத் தாங்கள் தார்மிக சம்பந்தமான சங்கடத்துக்குள்ளா யிருப்பதாக அவர்கள் கருதுகின்றனர். இத்தகைய காரியங்கள் நடக்கும்போது யுத்தம் தடுக்க முடியாதது என்றும், தனிப்பட்ட முறையில் தாங்கள் போரில் ஈடு படாமல் இருந்தாலும், இழந்த சுதந்திரம் அந்நாடுகளுக்கு ஏற்படத் தங்கள் நாடு முயல்வது நியாயமே என்றும் அவர்கள் கருதுகின்றனர். உங்களைப் போன்ற ஆத்மிக தீர்க்கதரிசியும் தலைவரும்,புத்தி கெட்ட சூதாட்டத்திற்கும் யுத்த நாசத் திற்கும் புறம்பான ஒரு வழியை உலகத்திற்குக் கோஷிக்க வேண்டிய சமய மல்லவா இது என்று ஆச்சரியப்படுகிறேன். காட்ட வேண்டிய மற்றொரு வழி, தகராறுகளில் சமரசமுண்டாகச் செய்வது மாத்திரமல்ல; அதையும்விட முக்கி யமானது, தீமையைத் தடுப்பதற்கும் ராஜீய நோக்கங்களை மேற்கொள்ளு வதற்கும் வழி காட்டுவதுமாகும்.

" 1914-1918-இல் நாம் அனுபவத்தில் கண்ட யுத்த முறைகள், தொடக் கத்தில் நல்லவையெனத் தோன்றினும், அவற்றின் நோக்கம் வரவரச் சீர்கெட்டுப் போவதைத் தவிர்க்கவே முடியவில்லை. ஆனால், அகிம்சையின் தார்மிக வழியும், உய்விக்கும் சக்திவாய்ந்த அன்பு வழியும், இம்மாதிரி நோக்கத்தைப் பலப் படுத்துவதுடன் புனிதமாக்கவும் செய்கின்றன. தருமம், நீதி இவற்றின்மீது அவை நிலைகொள்ளும்வரை, இது முடியும். நீங்கள் எங்களுக்குப் போதித்த உண்மையும் இதுவே. யுத்தத்தைவிடச் சிறப்புடையதான ஒரு வழியைக் கோல ஆத்மிகத் துறையில் பிரமாண புருஷராகத் திகழும் தங்கள் தலைமை, துன்புற் றோருக்கும் ஒடுக்கப்பட்டோருக்கும் – அவர் தனிப்பட்டவராயினும் சரி, ஒரு நாடாக இருந்தாலும் சரி – மிக அவசியம்.

" தருமத்திற்குச் சோதனை ஏற்பட்டிருக்கும் காலத்தில் துயரில் தவிப்ப வருக்கு நம்பிக்கையூட்டும் சக்தி உங்கள் தலைமைக்கு உண்டு. நாகரிகம் தக்கு வதற்கென மூண்ட இந்தப் புனிதப் போருக்குத் தவறான வழியில் பயன்படுத்தப் பட்டு, பெரியதொரு சங்கடத்தினால் குன்றிப்போய் உதவியற்று நிற்பவருக்கு உங்கள் தலைமை பயனையே தரும். ஹிட்லரிஸத்தை அழிப்பதற்கு, எதிர்மறை யானதும் தன் வழியிலேயே சிறந்ததுமான ஒரு போட்டி முறையாகும், தாங்கள் காட்டும் செந்நெறி.

" சீர்தூக்கிப் பார்த்து முடிவு கூறிவிடும் தார்மிக உரிமை எனக்குக் கிடையாது. வருந்தும் வகையில் மாறுபட்டதாகவே இருக்கிறது. ஆனால், மனத்தில் உள்ளதைக் கூறிவிடுவதை நீங்கள் போற்றுகிறீர்கள் என்பதை அறிவேன். ஆகவே, எனக்குத் தோன்றியுள்ள மனக்குழப்பத்தை உங்களிடம் விட்டுச் சொல்லுகிறேன். இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு நீங்கள் அற்புதமான முன்னோடியாக இருக்கும் சிறந்த வழியைக் கூறுவதற்குப் பதிலாக யுத்த நிலைமையைப் பயன்படுத்திக் கொண்டு இந்தியாவின் சுதந்திரத் திற்கு ராஜீய வழியில் என்ன சாதகத்தைப் பெறலாம் என்பதைக் குறித்துச் சிந்தித்து வருவதாகத் தோன்றுகிறது. (நான் எண்ணுவது தவறாகவும் இருக்கலாம்; இல்லை, தவறாகப் புரிந்துகொண்டதாகவும் இருக்கலாம்) யுத்தத் தினால் ஏற்படும் வாய்ப்பு வரவேற்கப்படுகிறது. யுத்தத்தின் மூலம் தங்கள் நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்ள முயலும் நேச நாட்டினருடன் ஒரு சமரச பேரம் நடக்குமானால், அவர்களுக்குச் சந்தோஷத்துடன் உதவி அளிக்கப்படும் என்றே தோன்றுகிறது.

" இந்தியாவின் நிலைமையைக் குறித்து விசேடமாக எனக்கு எதுவும் தெரியாது. இந்தியாவிலுள்ள சிறந்த கருத்துக் கொண்டவர்களுடன் நெருங்கிய

தொடர்புள்ள என் சிறந்த நண்பர்கள் வந்துள்ள முடிவிலிருந்து அவர்களுடைய நம்பிக்கையும் உங்கள் நம்பிக்கையும் நிறைவேற வேண்டுமென்பதே என் ஆவல். இது நிறைவேறுவது, மனமாற்றமடையாத ஏகாதிபத்திய பிரிட்டனிடமிருந்து, முக்கியமாக யுத்தத்தில் வெற்றி பெறவேண்டி இந்தியாவின் உதவியைப் பெறுவதற்காகப் பேரம் பேசியதன் மூலம் ஏற்படுவதாக இருக்கக் கூடாது. இதற்கு மாறாக, ஆக்கிரமிப்பும் ஏகாதிபத்திய ஆதிக்கமும் இராத, புதியதும் சிறப்புடையதுமான ஓர் உலகு தோன்ற வேண்டுமென்ற பரந்த மனப்பான்மையும் உறுதிப்பாடும் நம் சொந்த மக்களிடமும் அரசாங்கத்திடமும் ஏற்படுவதன் மூலம் இது நிறைவேற வேண்டுமென்பது எனது விருப்பம்.

"யுத்தத்தினால் ஏற்பட்டுள்ள துன்பத்தாலும், நிர்க்கதியான நிலைமையினாலும் என் உள்ளம் உங்களை வேண்டிக் கதறுகிறது. ஜெர்மன் மக்களிடம் எவ்வளவோ சிறந்த பண்புகளை நான் பார்த்திருக்கிறேன். தம்மையே ஒரு லட்சியத்திற்கு அர்ப்பணம் செய்துகொள்வது இவ்விளைஞரிடம் தென்படும் ஒரு விசித்திர குணம். இவர்கள்மீது எனக்கு அன்பு உண்டு. தீமையில் உழலும் இவர்கள் உய்வதற்காக உதவி செய்ய முற்பட்டதில் இவர்களிடமுள்ள தீயனவற்றை அறியலானேன். நாஜிச் சிறையில் நான் இருந்திருக்கிறேன். அங்கே துன்பங்களை அனுபவித்ததன் மூலம், அற்புதத்தன்மை மிகுந்த இந்த இளைஞர்களுக்குக் காட்டுவதற்காக ஓர் உயர்ந்த வழியைக் கண்டுகொண்டேன்; இத்தகையோர் லட்சக்கணக்கானவர் ஒருவரையொருவர் கொன்று குவித்துக்கொள்ளும் வழியை நாம் உபயோகிப்பதைவிடச் சிறந்தது அது. இன்னும் தீமையின் ஆழத்துள் இருக்கும் நாம், சமயம் மிஞ்சுவதற்கு முன் இத்தீமையிலிருந்து விடுபடும் வழியைக் காண வேண்டும். உலகில் இன்று பலர் இதற்காக ஏங்கி, எதிர்நோக்கி யிருக்கின்றனர் என நினைக்கிறேன். எங்களுக்கு வழிகாட்டி உதவி செய்யக்கூடியவர் நீங்கள் ஒருவரே. இது நீங்கள் ஆற்ற வேண்டிய அரிய தொரு பணி. இதைப்பற்றி நீங்கள் சிந்திக்க வேண்டுமெனக் கேட்டுக்கொண்டு வேதனையுடன் இதை எழுதுகிறேன்.

தங்களிடம் ஆழ்ந்த மதிப்பும் அன்பும் கொண்டுள்ள,

49, பார்லிமெண்ட் ஹால்,
லண்டன் வ. மே.-3.

தங்கள் உண்மையான நண்பன்,
கார்டர் காயூல்.

சிறந்த வழியைக் காட்டவேண்டுமென்று என்னை எதிர்நோக்கும் பல ஆங்கிலேயரின் போக்கையே இக்கடிதம் பிரதிபலிக்கிறது என்பதை நான் அறிவேன். எனக்கு 70-ஆம் ஆண்டு பூர்த்தியின்போது பலர் அனுப்பிய பாராட்டுகளையெல்லாம் திரட்டி ஸர் ராதாகிருஷ்ணன் புத்தகமாக வெளியிட்டார். அது, சமாதானத்தை விரும்புவோரில் ஆயிரக்கணக்கானவரின் நம்பிக்கையைப் பலமாக்கிவிட்டது. ஆனால், அந்த நம்பிக்கை நிறைவேறும்படி செய்வதற்கு நான் எவ்வளவு எளிய கருவி என்பதை அறிவேன். எனக்குத் தகுதியில்லாததான மதிப்பை, என்னைப் பாராட்டுவோர் எனக்கு அளித்திருக்கிறார்கள். ஆக்கிரமிப்பாளருக்கு எதிராக, ஆயுத எதிர்ப்புக்குப் பதிலாகப் பலமுள்ளவர்களின் அகிம்சையைச் சிறந்த உதாரணமாக இந்தியா உலகத்திற்கு அளிக்கிறது

என்பதை நிரூபித்துக் காட்ட முடியாதவனாக நான் இருக்கிறேன். சாத்துவிக அகிம்சையைப் பலவீனமானவர்களின் ஆயுதமாகக் கையாள முடியும் என்பதை இந்தியா காட்டியிருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. பயங்கரச் செயல்களுக்குப் பதில் இதன் உபயோகம் பலனுள்ளதாயிருக்கிறது என்றாலும், இதில் புதுமையானதோ உயர்வோ இருப்பதாக நான் கருதவில்லை. சமாதான இயக்கத்திற்கு இது உதவியும் ஆகாது.

காங்கிரஸின் கோரிக்கையுடன் நான் தொடர்பு கொண்டிருப்பது, மேற்கண்ட கடிதத்தை எழுதியிருப்பவர் நான் எழுதியிருப்பதாகக் குறிப்பிட்டிருப்பதற்கு முரணாகத் தோன்றுவதில் ஆச்சரியம் எதுவுமில்லை. என்றாலும், அதில் எந்தவிதமான முரண்பாடும் இல்லை. அப்பொழுதைப் போலவே இப்பொழுதும் அகிம்சையைத் தத்தம் செய்துவிட்டுச் சுதந்திரத்தை நான் பெறமாட்டேன். வேண்டியுள்ள பிரகடனத்தைப் பிரிட்டிஷ் அரசாங்கம் வெளியிட்டுவிடுமாயின், நான் நேச நாட்டினருக்கு உதவி செய்து, அதன் மூலம் பலாத்காரத்தில் பங்கெடுத்துக் கொள்வேன் என்று, குறை கூறுகிறவர், உடனே பதில் சொல்லக் கூடும். காங்கிரஸினிடமிருந்து பிரிட்டன் பெறும் அதிகப்படியான உதவி முற்றிலும் தார்மிக உதவியாகவே இருக்கும். அப்படி இல்லாதிருந்தால் பதில் சொல்லுவோரின் கூற்று நியாயமானதாக இருக்கும். ஆள் உதவியையோ பண உதவியையோ காங்கிரஸ் செய்யாது. அதன் தார்மிகச் செல்வாக்கு, சமாதானத்திற்காக உபயோகித்துக்கொள்ளப்படும். பாதுகாப்பு, தாக்குதல் என்ற வகையில் பலாத்காரத்தில் பல வகைகள் உள்ளன என்பதை என்னுடைய அகிம்சை அறிகிறது என்பதை இப்பத்திரிகையில் முன்பே கூறியிருக்கிறேன். நாளடைவில் இந்தப் பேதம் மறைந்துபோனாலும், அதற்குரிய குணம் மட்டும் நிற்கிறது. அகிம்சையோடு இருக்கும் ஒருவர், சமயம் வரும் போது எந்தப் பக்கத்தில் நியாயமிருக்கிறது என்பதைச் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறார். இவ்விதம் அவர்கள் அகிம்சையால் எதிர்ப்பை அளித்திருக்கலாம் என்றே நான் விரும்பிய போதிலும் அபிஸீனியர், ஸ்பானிஷ்காரர்கள், ஜெக் மக்கள், சீனர், போலந்தினர் ஆகியோர் வெற்றி பெற வேண்டும் என்றே நான் விரும்பினேன். இப்பொழுதுள்ள விஷயத்திலுங்கூட ஸ்ரீ சேம்பர்லேன் சொல்லும் உயர்ந்த நோக்கில் பிரிட்டிஷ் கட்சியின் நியாயத்தைக் காங்கிரஸ் காட்ட முடியுமானால், சுதந்திர நாடு என்று அறிவிக்கப்பட்ட இந்தியா, தன்னுடைய முழுத் தார்மிக பலத்தையும் சமாதானத்திற்காகவே அளிக்கும்.

இதில் நான் செய்துவருவது கண்டிப்பாக அகிம்சையே என்பது என் கருத்து. காங்கிரஸின் கோரிக்கை முற்றிலும் தார்மிகமானது; ஆகையால், அதில் பேரம் பேசும் எண்ணம் எதுவுமே இல்லை. அரசாங்கத்திற்குச் சங்கடத்தை உண்டாக்க வேண்டும் என்ற எண்ணமும் இல்லை. அவசரப்பட்டுச் செய்யும் சட்டமறுப்பு எதுவும் இதில் இராது. காங்கிரஸ் கோரிக்கைக்குக் கூறப்படும் ஒவ்வோர் ஆட்சேபத்திற்கும் பதில் சொல்லி, வேண்டிய பிரகடனத்தைச் செய்யப் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு இடையூறாக இருக்கும் ஒவ்வொரு கஷ்டத்தையும் நீக்குவதற்கு அக்கறை எடுத்துக்கொள்ளப்படுகிறது. அகிம்சையோடு கூடியதானாலும் ஒரு போராட்டத்துக்காகத் துடிக்கும் பொறுமையற்ற காங்கிரஸ்காரர்களுக்கு அதிக மனக்கஷ்டமும் அளிக்கப்பட்டிருக்கிறது. சமாதானத்தை இன்னும் நெருக்கத்தில் கொண்டு வருவதற்குப் பலன் தரும் வகையில் நான் செயலாற்ற வேண்டும் என்று என்னைப் பொறுத்த வரையில் நான் விரும்புகிறேன். யுத்தம் முடியும் வரையில் சட்ட ரீதியான வேலைகள் முடிவது தாமதமானாலும் சுதந்திரம் பெற்ற இந்தியா உண்மையில் பிரிட்டனின் துணையாக நின்றால்தான் இது என்னால் இயலும்.

ஆனால், நான் யார்? ஆண்டவன் அளிப்பதைத் தவிர எனக்கு வேறு பலம் கிடையாது. முற்றிலும் தார்மிகமானதைத் தவிர என் நாட்டு மக்கள்மீது எனக்கு எந்தவிதமான அதிகாரமும் இல்லை. உலகை இன்று ஆட்டிவரும் பயங்கரமான பலாத்காரத்திற்குப் பதிலாக அகிம்சை பரவுவதற்கு என்னை ஒரு கருவியாக இறைவன் கொண்டால், அதற்கான பலத்தை அவர் எனக்கு அளித்து வழியையும் காட்டுவார். என்னுடைய மிகப் பெரிய ஆயுதம் மௌனமாகப் பிரார்த்தனை செய்வதே. ஆகையால், சமாதானத்தின் வெற்றி கடவுளின் நற்கரங்களில் இருக்கிறது. நித்தியமான, மாறுதலற்ற, தருமத்தின் வடிவான அவர் அருளின்றி எதுவுமே ஆகாது. அவரையோ, அவருடைய தருமத்தையோ நாம் தெளிவாக உணரவே முடியாது. அந்தத் தருமத்தின் காட்சி எனக்குச் சிறிதளவு புலப்படுவதே ஆனந்தத்தையும் நம்பிக்கையையும், வருங்காலத்தில் உறுதியையும் அளிப்பதற்கு எனக்குப் போதுமானது.

**சேவா கிராமம், 5--12—1939.** **– ' ஹரிஜன் '—9--12—1939.**

# 12

# ஒரு போர் வெறுப்பாளரின் ஐயங்கள்

யுத்த வெறுப்பு எவ்விதம் வளர்ந்திருக்கிறது, என்ன மாறுதல்கள் அடைந்திருக்கிறது என்பதை வர்சகர்கள் கொஞ்சம் தெரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காகவே இந்த விவரங்களைக் கொடுக்கிறேன். இந்தியா மேற்கொண்டிருக்கும் நிலையை யுத்த வெறுப்பாளர்கள் பாராட்டுகிறார்கள். நேச தேசத்தினரின் லட்சியம் நியாயமானது என்று காந்திஜி ஒப்புக்கொண்டு, பிரிட்டனின் வெற்றிக்காகப் பிரார்த்திக்கிறார் என்றால், பிரிட்டனுடன் ஒத்துழைக்க வேண்டாம் என்று காங்கிரஸுக்கு அவர் யோசனை கூறியிருக்கிறாரே, இது எப்படி என்பது அவர்கள் புரிந்துகொள்ள முடியாதபடி கஷ்டம் தருகிறது.

கேள்வி கேட்டவருக்குத் தோன்றியுள்ள கஷ்டம் ஏற்பட்டது யுத்த வெறுப்பினாலா அல்லது யுத்த நோக்கத்தைத் தெளிவுபடுத்திக் கூற வேண்டும் என்று காங்கிரஸ் கேட்பதனாலா என்பது தெளிவாகவில்லை. ஆனால், காங்கிரஸின் ஒத்துழைப்போ அல்லது ஒத்துழையாமையோ தார்மிகமானதாகவே இருக்குமேயன்றிப் பொருள், ஆள் உதவியாக இருக்காது என்று காந்திஜி விளக்கியிருக்கிறார். காங்கிரஸ் எந்தவிதமான போக்கை மேற்கொள்ளுவதாயினும் பிரிட்டனின் நிலைமை பாதகமடையாது. ஏனெனில், அடிமை நாடு என்ற வகையில் இந்தியாவிடமிருந்து பறிக்கும் பண, ஆள் பல உதவி தொடர்ந்து இருந்துகொண்டுதான் இருக்கும். வெற்றி ஏற்பட வேண்டும் என அகிம்சை வழியில் செல்ல இந்தியா விரும்புமானால், அது, 'தவறோ தவறில்லையோ பிரிட்டன் வெற்றி பெறவேண்டும்' என்னாது. ஜெர்மனிக்கு எதிராகப் போரில் இறங்கும் பிரிட்டன், தவறு செய்வதில் குறைந்தும், நேர்மையில் மிகுந்தும் இருப்பதாலேயே அது வெற்றி பெற வேண்டும் என்கிறது. இந்தியா சம்பந்தமாகத் திருப்திகரமான வகையில் யுத்த நோக்கம் விளக்கப்படாமல் இருக்குமானால், பிரிட்டன் அடையக்கூடிய தார்மிக ஆதரவு அதற்குக் கிடைக்காது போகும். முறைகளைப் பற்றியவரையில் காங்கிரஸ் அசிரத்தையாக இருந்துவிடுமானால், பலன் முற்றிலும் மாறுபட்டதாக இருக்கும். அப்பொழுது, புரட்சியைத் தூண்டிப் பிரிட்டனுக்கு முட்டுக்கட்டையாக நிற்கும்.

"இப்பொழுது மனப் பலாத்காரமேயன்றி உடல் பலாத்காரம் அல்லவா இது?" என்று அந்த நண்பர் கேட்டார்.

இதற்குக் காந்திஜீ கூறியதாவது: "இருக்கலாம். ஒத்துழையாமை நடக்குமேயானல் அது அகிம்சையோடு கூடியதாகவே இருக்கும். மனப் பலாத்காரத்திற்கு வீரியம் எதுவும் கிடையாது. பலாத்காரமானவையாக எவருக்கு எண்ணங்கள் இருக்கின்றனவோ அவர்களை மாத்திரமே இது பாதிக்கிறது. மன அகிம்சை விஷயமோ வேறுவிதமாக இருக்கிறது. உலகம் இதுவரை அறியாத அபார வீரியம் அதற்கு இருக்கிறது. நான் விரும்புவதெல்லாம் எண்ணத்திலும் செயலிலும் அகிம்சையைத் தான்.

"யுத்த வெறுப்பாளரின் கருத்துப்படி அனுசரிக்கும் முறை பலாத்காரமானதால், அதனல் தீமையாக இருப்பினும், பிரிட்டனின் கட்சி நியாயமானது என்று செயல் மூலமாகக் காட்டப்படுமானல், அத்தகைய அகிம்சை ஆதரவு பிரிட்டனுக்கு மாத்திரமே கிடைக்கும். இந்தியா விஷயத்தில் பிரிட்டன் நியாயமாக நடந்துகொள்ளவில்லையானல், அதாவது, இந்தியாவில் இருக்கும் கட்சிகளின் சார்பின்றி அது தானே இந்தியாவில் நடத்தும் ஏகாதிபத்தியச் சுரண்டலைக் கைகழுவிவிடவில்லையாயின், அதன் கட்சி நியாயமானதாக இருக்கவே முடியாது. செயலில் இப்பொழுதே இந்தியா சுதந்திர நாடு என்றுகூறி, சீக்கிரமாகவே சட்டப்பூர்வமாகவும் சுதந்திர நாடாக்கி, இன்று போர் நடந்து கொண்டு இருக்கும்போதே அவ்வாறு செய்யவும் முன் வந்தால், பிரிட்டன் வெற்றியடைய வேண்டும் என்பதே அகிம்சையைப் பின்பற்றும் இந்தியாவின் பிரார்த்தனையாக இருக்கும். தன்னுடைய சொந்த ஆயுத பலத்தைவிட அகிம்சையான இந்தியாவின் தார்மிக ஆதரவின் சக்தியைப் பிரிட்டன் எப்பொழுது நம்ப ஆரம்பிக்கிறதோ அப்பொழுதுதான் இந்தியா இந்த உதவியை மனமாரச் செய்யும். இங்கிலாந்து இம்முறையை அனுசரிக்க முனைந்தால், ஆயுத பலத்தினல் இல்லாமல் தார்மிக பலத்தினல் யுத்தம் சமாதானத்தில் முடியும்."

[மகாதேவ தேசாய் எழுதியது]

சேவா கிராமம், 15—1—1940

—'ஹரிஜன்' - 20—1—1940

# 13

# பாதுகாப்புப் பிரச்னை

பாதுகாப்பைப் பொறுத்தவரையில் தன்னுடைய ஏற்பாடுகளைத் தானே செய்துகொள்ளுவது, நிச்சயமாகச் சுதந்திர இந்தியாவின் முக்கிய காரியமாக இருக்கும். இதற்காக இந்தியா விரிவான ஏற்பாடுகளைச் செய்துகொள்ள வேண்டியதாக இருக்

கலாம். அப்படிச் செய்துகொள்ளப் பிரிட்டன் உதவி அளிக்குமாயின் பிரிட்டிஷ் உதவியை இந்தியா விரும்பலாம். ஏகாதிபத்தியக் கொள்கையின் காரணமாக, நிராயுதபாணியான இந்தியா, பிரிட்டிஷ் துப்பாக்கி முனையையும் பிரிட்டிஷ் ஆட்சி உண்டாக்கியிருக்கும் இந்தியச் சிப்பாய்களேயும் தவிர வேறு எந்தப் பாதுகாப்புமின்றி இருக்கிறது. இந்தியா, பிரிட்டன் இரண்டுக்குமே இது அவமானம் தரும் விஷயம். என்னைப் பொறுத்தவரையில் இதைப் பற்றி எனக்குக் கவலே இல்லே. ஏனெனில், என் இஷ்டப்படி இந்தியா நடப்பதாக இருந்தால், கொள்ளேக்காரர் போன்றவர்களிடமிருந்து தப்புவதற்கு ஒரு போலீஸ் படைக்கு அதிகமாக எதையுமே நான் விரும்பமாட்டேன். ஆனல், பாதுகாப்பைப் பொறுத்தவரையில் நிராயுதபாணியான சமாதானத்தையே விரும்பும் இந்தியா, உலகத்தின் நல்லெண்ணத்தையே நம்பியிருக்க வேண்டும். இந்தச் சமயத்தில் இது வெறுங்கனவுதான் என்பதை அறிவேன்.*

—'ஹரிஜன்'-10—2—1940.

## 14

# பிரிட்டிஷார் விலகிவிடும்போது

" எல்லாக் கட்சிகளுமடங்கிய ஆட்சிமுறையை நீங்கள் அனுசரித்தாலன்றிப் பிரிட்டிஷ் பாதுகாப்பு விலகிக்கொண்டுவிட்ட பிறகு ஹிந்து – முஸ்லிம் சச்சரவுக்கு வழி செய்துகொண்டவர்களே ஆவீர்கள். காங்கிரஸை அதிகாரத்தில் வைத்திருந்தது, உங்களுடைய அற்புதமான காந்த சக்தியும் பிரிட்டிஷ் துப்பாக்கி முனேயுமே தவிர அகிம்சை அன்று. பின்னர்க் கூறியவை இரண்டுமே இன்றிச் சில மாதங்களுக்கு அகிம்சையைப் பரீட்சித்துப் பாருங்கள். மேலே சொன்னதன் உண்மையை அறிந்துகொள்ளுவீர்கள்."

மிக முக்கியமான ஒருவர் இவ்விதம் எழுதுகிருர். காங்கிரஸ் மந்திரிகளே அதிகாரத்தில் வைத்தது பிரிட்டிஷ் துப்பாக்கி முனேதான் என்று சொல்லப்படுவது சரி என்று ஒப்புக்கொள்ளுவதில் எனக்கு எந்தவிதமான கஷ்டமும் இல்லே. என்னுடைய 'காந்த சக்தி' தேர்தலில் வெற்றி கிடைப்பதற்கு உதவியாக இருந்திருக்கவும் கூடும். ஆனல், மந்திரிகளே அதிகாரத்தில் வைத்திருக்க அது முற்றிலும் பயனற்றதாகப் போய்விட்டது. தொடர்ந்து இருந்துவந்த சக்தி பிரிட்டிஷ் துப்பாக்கி முனேயே. பொதுவாக, மக்கள் அகிம்சையின் பாடத்தை இன்னும் அறிந்து கொள்ளவில்லே என்பதையே இது காட்டுகிறது.

---

* 6—2—1940-இல் டில்லியில் பத்திரிகை நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் காந்திஜி கூறியதிலிருந்து இது எடுக்கப்பட்டதாகும்.

இதற்குப் பரிகாரம், எல்லாக் கட்சிகளையும் கொண்டதான அரசாங்கம் அன்று. மக்களுக்கு மக்களினால் ஆன அரசாங்கமாக அது இராது. தங்கள் சொந்த நலனிலேயே கருத்துடைய தனிப்பட்டவர்களைக் கொண்ட ஒரு குழு நடத்தும் அரசாங்கமாகவே அது இருக்கும். காங்கிரஸ் மந்திரிகளுக்கு இருந்ததைவிட அக்குழு கஷ்டம் இல்லாமல் அரசாங்கத்தை நடத்திவிடவும் முடியாது. அதுவும் பிரிட்டிஷ் துப்பாக்கி முனையின் உதவியை நம்பித்தான் இருக்கவேண்டி வரும். பிரிட்டிஷ் துப்பாக்கி முனை விலகினாலன்றி நாட்டில் ஆண்மையோடு கூடிய சமாதானம் இருக்காது. கலக ஆபத்துக்களைச் சமாளித்தே ஆக வேண்டும். அகிம்சை தேசீய வாழ்வின் ஒரு பகுதியாக இருப்பதாயின், அத்தகைய கலக அபாயத்திலிருந்து அகிம்சை பிறக்கும். மக்களின் சுதந்திர உணர்ச்சியைப் பிரிட்டிஷ் துப்பாக்கி முனை நசுக்கிக்கொண்டிருக்கும் வரையில் உண்மையான ஒற்றுமை ஏற்பட முடியாது என்பது நாள்தோறும் மிகவும் தெளிவாகிக் கொண்டு வருகிறது. அது திணித்துவரும் சமாதானம் கல்லறையின் சமாதானம். சுதந்திரத்திற்கு நாம் கொடுத்தாகவேண்டிய விலை கலவரங்களே எனின், கலவரங்கள் வரவேற்கத்தக்க ஆறுதலாகும். ஏனெனில், அவைகளிலிருந்து சமாதானம் ஏற்படச் சாத்தியமுண்டு என எண்ணுகிறேன். உண்மையற்ற இன்றைய நிலையில் சமாதானம் ஏற்படாது. ஒரு பக்கம் கலவரங்களிலிருந்தும், மற்றொரு பக்கம் பிரிட்டிஷ் துப்பாக்கி முனையிலிருந்தும் தப்புவதற்கு வழி, மனம் விட்டு அகிம்சையை ஏற்றுக்கொள்ளுவதுதான். இதற்கென்றே என் வாழ்வு அர்ப்பணம் செய்யப்பட்டிருக்கிறது. என் உடல் அடியோடு மறைந்து போகும் வரையில், அகிம்சையின் சாத்தியத்திலும் அதன் தகுதியிலும் என் நம்பிக்கை இருந்துகொண்டே இருக்கும்.

[வர்தாவுக்கு 3—3—1940-இல் ரெயிலில் போகையில் எழுதியது.]

—'ஹரிஜன்' - 9—3—1940

# 15

# சில கேள்விகள்

"பிரியும் முன்பு இரண்டொரு முக்கியமான கேள்விகளைக் கேட்கலாமா?" என்றார் சீன நண்பர். "இந்தியா சுதந்திரமாக இருப்பதைக் காண நீங்கள் எதிர்பார்க்கிறீர்களா?" என்றார்.

இதற்குக் காந்திஜி உறுதியுடன் அளித்த பதிலாவது: "ஆம், நிச்சயமாக. என் வாழ்நாளிலேயே இந்தியா சுதந்திரத்துடன் இருப்பதைக் காண விரும்புகிறேன். ஆனால், என்

கனவு வாழ்க்கையில் நிறைவேறுவதைக் காண்பதற்குத் தகுதியுள்ளவன் நான் எனக் கடவுள் நினைக்காமல் இருக்கலாம். அப்படியானல், நான் சச்சரவிடுவேன்; அவருடன் அல்ல, என்னுடனேயே.''

"ராணுவம் இல்லாமல் எப்படி நீங்கள் வெற்றி பெற முடியும்?''

"சரி, இதுவரை அப்படித்தான் செய்து வந்திருக்கிறோம். ஒரு துப்பாக்கி வேட்டுக்கூடக் கிளப்பாமல் நாங்கள் எங்கள் லட்சியத்தை நெருங்கிக்கொண்டிருக்கிறோம். நாங்கள் வெற்றி பெற்றால் அது ஓர் அற்புதமாகவே இருக்கும். அகிம்சை ஆயுதத்தின் ஆற்றலைச் சந்தேகிக்கும்படி எதுவும் என்னைச் செய்துவிடவில்லை. என்றாலும், அது வேண்டிய அளவுக்கு எங்களுக்குள் இருக்கிறதா என்பது இன்னும் நிரூபிக்க வேண்டியதாக இருக்கிறது.''

"பிரிட்டிஷார்மீது துவேஷம் இருக்கிறதா?''

"ஆம். இது வருந்தத் தக்கதுதான். அகிம்சையோடேயே நாம் இருப்போமாயின், எதுவும் உபயோகிக்காமல் இருந்தால் ஒழிந்துபோவது போல் துவேஷமும் ஒழிந்துபோம்.''

"ஜப்பானுக்கு எதிரான துவேஷத்தை விட்டொழிப்பது எங்களுக்கு மிகவும் கஷ்டமானதாக இருக்கிறது.''

"ஆம். அவர்களுக்கு எதிராக நீங்கள் பலாத்காரத்தை உபயோகித்து வருவதால் அவ்வாறு துவேஷத்தை மறப்பதற்குப் பல தலைமுறைகள் ஆகும். பலாத்காரத்தைக் கொண்டு உங்களை நீங்கள் பாதுகாத்துக்கொண்டிருக்கக் கூடாது என்று நான் சொல்லவில்லை. ஆனால் அந்தச் சந்தர்ப்பத்தில் துவேஷம் போய்விடாது என்றே கூறுகிறேன்.''

"மற்ற நாட்டு மக்களைவிடப் பிரிட்டிஷாரைச் சமாளிப்பது எளிதானதா?''

"மற்றவர்களைப் போலவே இவர்கள் விஷயத்திலும் அகிம்சை முறையைக் கொண்டு சமாளிப்பது எளிதானதே. வேறு யாருடனும் சமாளித்ததில்லையாகையால் இதில் நடைமுறை அனுபவத்தைக் கொண்டு நான் கூறுவதற்கில்லை. முஸ்லிம்கள் உள்பட, இந்தியாவை வென்று ஆண்டவர்கள் எல்லோருமே, இந்தியப் பண்பாடு, இந்திய சுபாவம் இவற்றின் உயர்வான தன்மையால் மாறுதல் அடைந்தே இருக்கிறார்கள். ஜெர்மானியரும் அப்படியே ஆகியிருப்பார்கள் என

நான் நம்புகிறேன். ஆங்கிலேயர்கள் தீவு மனப்பான்மையால் எவருடனும் தொடர்பு கொள்ளாதவர்களாகவும் நிறத்துவேஷம் உள்ளவர்களாகவும் இருப்பதனல் அவர்கள் அடைந்ததைவிட மற்றவர்கள் அதிக மாறுதல் அடைந்திருக்கக்கூடும்.''

சேவா கிராமம், 7—4—1940 —'ஹரிஜன்' - 13—4—1940

# 16

# அகிம்சையால் என்ன பயன்?

ஓர் இந்தியர் வருமாறு எழுதுகிருர்:

"குண்டும் இயந்திர பீரங்கித் தோட்டாக்களும் மழையாகப் பொழிந்ததன் நடுவே நார்வே மக்கள் எவ்விதம் முற்றிலும் நிகிலடைந்து, நிலை தடுமாறி நகரங்களை விட்டு ஓடினர்கள் என்ற பரிதாபமான செய்தியை ராய்ட்டர் நேற்றுக் கூறியது. மன உறுதியோ அல்லது நாசவேலை புரியும் கலையை விருத்திசெய்து கொள்ளுவதற்கு வேண்டிய வசதியோ இராமையாலே அத்தகைய மக்கள் இப்படித் திடீரென்று திக்கற்ற கதிக்கு ஆளாகியிருப்பது திடுக்கிடச் செய்யும் விஷயமே. இம்சையினல் எப்பயனுமில்லை, தாற்காலிகமாகத்தான் எதனல் எது ஆகும் என்பது நிரூபிக்கப்பட்டு வருகிறது என நினைக்கிறேன். பலாத்காரத்தோடு கூடிய நார்வேயின் எதிர்ப்பு என்னவாயிற்று? என்ருலும், ஜெர்மனியின் பெரிய பலாத்காரம் தற்சமயம் வெற்றி பெற்றிருப்பதாகத் தோன்றுகிறது! நாளடைவில் பலாத்காரத்தின் பயனின்மையை ஒவ்வொரு வரும் அறிந்து புதிய யுகம் உதயமாகும் என்று நம்புவோமாக. ஆனல், உலகப் பிரச்னைகளுக்கு நாம் உண்மையிலேயே அகிம்சை வழியில் உதவியைச் செய்துகொண்டிருக்கிருேமா? நார்வே, டென்மார்க், ஸ்வீடன் விஷயத்தில் நமது அகிம்சையால் என்ன பயன் ஏற்பட்டது? ஜெர்மனிக்கு ஒரு விதத்தில் நாம் செய்வது அநுகூலமாகவே இருக்கிறதல்லவா? பிரிட்டனுக்குத் தொல்லையை உண்டாக்குவதைத் தவிர நாம் வேறு எதையும் செய்துவிடவில்லை என்பது உண்மை. அத்தகைய சங்கடம் தவிர்க்க முடியாதது என்றும், வேண்டுமென்று தொல்லை உண்டாக்கப்படவில்லை என்றும் நாம் கூறலாம். இங்கிலாந்து கஷ்டத்தில் இருந்து வருகிறது; இங்கிலாந்திற்கு மாத்திரமல்ல, ஆக்கிரமிப்புக்கு ஆளாகியிருக்கும் எல்லா நல்ல நாடுகளுக்குமே இப்பொழுது நாம் செய்வது தொல்லையைத் தந்து வருகிறது என்பது உண்மை. இங்கிலாந்தின் மனத்தை மாற்றுவதில் நாம் வெற்றி பெறுவோம் என்று தோன்றவில்லை. பாதிக்கப்பட்டிருக்கும் நார்வே முதலிய நாடுகள் நம் போக்கைப் பாராட்டவே முடியாது. ஆக்கிரமிப்புக்கு ஆளான சீன, ஸ்பெயின் போன்ற நாடுகளுக்கு நாம் முன்னல் செய்த உதவியைச் சர்வதேச உலகம், நமது இன்றைய போக்கைக்கொண்டு தவருகப் பொருள் செய்துகொள்ளுவதும் நியாயமே. இப்பொழுது பாதிக்கப்பட்டிருக்கும் நாடுகளைவிட அந்த நாடுகள் நம் உதவியைப் பெற அதிகத் தகுதியுடையனவா? இல்லையென்ருல், ஏன் இந்தப் பாரபட்சம்? ஓர் ஏகாதிபத்திய வல்லரசு, தன்னுடைய சொந்த நன்மைக்காகவே கண்ணியமானதும் தார்மிகமானதுமான காரியத்தைச் செய்வதற்காகவா? சென்ற யுத்தத்தின்போது ராணுவக் காரியத்திற்காக நீங்கள் தீவிரமாக ஆள் திரட்டினீர்கள். இப்படி நீங்கள் செய்ததற்காக வருந்தவே இல்லை. இந்தத்

தடவையோ, அப்பொழுது நீங்கள் கொண்ட போக்கும் இப்பொழுது கொண்டிருக்கும் போக்கும் நியாயமானவையே என்று நீங்கள் கூறினலும், உங்கள் போக்கு முரணுனதாகவே இருக்கிறது.''

பண்பாட்டில் சிறந்தவர்களும் பிறருக்குத் தீங்கு விளைவிக்காதவர்களுமான டேனிஷ், நார்வே மக்களுக்கு* ஏற்பட்டிருக்கும் கதியைக் குறித்துத் துக்கப்படுகிறவர், இக்கடிதத்தை எழுதியிருப்பவர் ஒருவர் மாத்திரமல்ல. பலாத்காரத்தின் பயனின்மையையே இப்போர் காட்டிவருகிறது. நேசதேசத்தினரை ஹிட்லர் வென்று விடுவதாகவே வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுதும் இங்கிலாந்தையும் பிரான்ஸையும் அவர் அடக்கி ஆண்டுவிட முடியாது. இன்னுமொரு போராகவே அது முடியும். நேச தேசத்தினர் வெற்றி பெற்றுவிடுகின்றனர் என்று வைத்துக் கொள்ளுவோம். அப்பொழுதும் உலகம் அதிக நன்மையை அடைந்துவிடப் போவதில்லை. போர்க் காலத்தில் அகிம்சையின் பாடத்தை அவர்கள் அறிந்துகொண்டாலொழிய, பலாத்காரத்தினல் அடைந்த லாபங்களை அவர்கள் விட்டுவிட்டாலன்றி, அவர்கள் மிக விநயத்துடன் இருப்பினும், கொடுமையில் குறைந்தவர்களாகவே இருக்க முடியாது. வாழ்க்கையின் எல்லாத் துறையிலும் நீதி என்பதே அகிம்சையின் முதல் நிபந்தனை. ஆனல், மனித சுபாவத்தில் அவ்வளவு எதிர்பார்க்க முடியாது

---

* 1940 ஏப்ரல் 8-ஆம் தேதி இரவு ஜெர்மன் ராணுவம் டென்மார்க்கின்மீது படையெடுத்துச் சென்று அதைப் பிடித்துக்கொண்டது. எல்லையில் டேனிஷ் படைகளின் எதிர்ப்புக் கொஞ்சம் இருந்தது. ஆனல், டேனிஷ் அரசாங்கம் ஆட்சேபத்துடன் ஹிட்லர் படைகளுக்குச் சரணுகதி அடைந்துவிட்டது. பிரிட்டிஷ் தாக்குதலிலிருந்து டென்மார்க்கைப் பாதுகாக்கவே தாம் புகுந்து அந்நாட்டைத் தமது பாதுகாப்பிற்குள் கொண்டு வந்துவிட்டதாக ஹிட்லர் அப்பொழுது வழக்கம்போல் கூறிக்கொண்டார். ஆனல், இப் படையெடுப்பின் உண்மையான நோக்கம், ஸ்காண்டினேவியா மீது நடவடிக்கைக்கு டென்மார்க்கை ஒரு தளமாக்கிக்கொள்வதும், டென்மார்க்கின் விவசாயப் பொருள் வளத்தைப் பயன்படுத்திக்கொள்ளுவதுமேயாகும்.

நார்வே, யுத்தத்தில் ஈடுபடாமல் நடுநிலைமை வகிக்கவே முயன்றது. ஆனல், 'ஆல்ட்மார்க் சம்பவம்' காரணமாக நார்வேயும் போருக்குள் இழுக்கப்பட்டுவிட்டது. பிரிட்டிஷ் யுத்தக் கைதிகளை ஏற்றிக்கொண்டு நார்வேக் கடல் எல்லையில் போய்க் கொண்டிருந்த 'ஆல்ட்மார்க்' என்ற ஜெர்மன் கப்பலைப் பிரிட்டிஷ் கடற்படை பிடித்துக் கொண்டுவிட்டது. 1940 ஏப்ரல் 8-ஆம் தேதி நார்வே கடல் பகுதியை ஜெர்மன் கப்பல்கள் உபயோகிக்காதபடி தடுக்க அப்பகுதியில் நேச நாட்டுக் கப்பல்கள் கடற் கண்ணிகளைப் போட்டன. மறுநாள் விடியற்காலை 5 மணிக்கு நார்வே தலைநகரான ஆஸ்லோவிலிருந்த ஜெர்மன் ஸ்தானிகர், நார்வே வெளிநாட்டு மந்திரியைப் பார்த்து ஓர் இறுதி எச்சரிக்கையை அவரிடம் கொடுத்தார். ஜெர்மன் படைகள் நார்வேயில் புகுவதையும் அப் படையின் பாதுகாப்பில் இருப்பதையும் உடனே நார்வே ஒப்புக் கொள்ளவேண்டும் என்பதே அந்த இறுதி எச்சரிக்கை. பொழுது விடிந்ததும் ஜெர்மன் விமானங்கள் ஆஸ்லோ விமான நிலையத்தைப் பிடித்துக்கொண்டன. ஜெர்மன் நடவடிக்கை வெகு துரிதமானதாக இருந்ததால் சில மணி நேரத்தில் நார்வே முழுதுமே ஜெர்மன் வசமாகிவிட்டது.

என்று இருக்கலாம். இருப்பினும், நான் அப்படி நினைக்கவில்லை. தாழ்ந்த நிலையை அடைவதற்கோ அல்லது உயர்ந்த நிலையை அடைவதற்கோ மனித சுபாவத்திற்குள்ள ஆற்றலைப்பற்றி யாரும் பிரமாதமாகப் பேசிவிடக்கூடாது.

இந்திய அகிம்சை, பண்பில் சிறந்த மேற்கத்திய நாடுகளுக்கு எந்தச் சௌகரியத்தையும் உண்டாக்கவில்லை. ஏனெனில், அது சிறந்ததாக இல்லாமலேயே இருந்து வருகிறது. அதன் பயனின்மையைப் பார்க்க அவ்வளவு தூரம் போவானேன்? அகிம்சையையே காங்கிரஸ் கொள்கையாகக் கொண்டிருந்தும் இந்தியாவில் நமக்குள்ளேயே சச்சரவுகள் அதிகம் இருந்து வருகின்றன. காங்கிரஸே சந்தேகிக்கப்பட்டு வருகிறது. காங்கிரஸோ, அது போன்ற ஒரு மக்கள் குழுவினரோ பலமுள்ளவர்களின் அகிம்சைக்குப் பிரதிநிதிகளாகும் வரையில் உலகிற்கு அது பரவாது.

ஸ்பெயினுக்கும் சீனவுக்கும் இந்தியா அளித்த உதவி வெறும் தார்மிகமானது. பொருள், ஆள் பல உதவியெல்லாம் இதன் சிறு அடையாளங்களே. திடீரென்று தம் சுதந்திரத்தை இழந்துவிட்ட நார்வே, டென்மார்க் விஷயத்தில் அதே விதமான அனுதாபத்தைக் கொள்ளாத இந்தியர் யாருமே இல்லை. ஸ்பெயின், சீன விஷயத்திற்கும் இந்நாடுகளின் விஷயத்திற்கும் வித்தியாசம் இருப்பினும், ஸ்பெயின், சீனவைவிட இவை முழுவதும் நாசமாகி உள்ளன. சீனவுக்கும் ஸ்பெயினுக்குமிடையே கூட அதிக வித்தியாசமுண்டு. ஆனல், அனுதாபத்தைப்பற்றிய வரையில் பாரபட்சமே கிடையாது. தன்னுடைய அகிம்சையைத் தவிர வேறு எதையும் ஓட்டாண்டியான இந்தியா இந்நாடுகளுக்கு அனுப்புவதற்கில்லை. ஆனல், நான் கூறியிருப்பதுபோல, இது அனுப்பக்கூடிய சரக்கு அன்று. இந்தியா தன்னுடைய சுதந்திரத்தை அகிம்சையினல் அடைந்துவிட்ட பிறகு அது அனுப்பக் கூடியதாக ஆகும்.

இனிப் பாக்கியாக இருப்பது பிரிட்டனின் விஷயம். காங்கிரஸ் எந்தவிதமான சங்கடத்தையும் உண்டாக்கவில்லை. பிரிட்டனுக்குச் சங்கடத்தை உண்டாக்கும் எதையும் நான் செய்யமாட்டேன் என்று முன்பே கூறியிருக்கிறேன். இந்தியாவில் அராஜக நிலைமை உண்டானல் பிரிட்டனுக்குச் சங்கடம் ஏற்படும். காங்கிரஸ், என்னுடைய கட்டுத்திட்டங்களுக்கு உட்பட்டு இருந்துவரும் வரையில், அந்த நிலையைக் காங்கிரஸ் ஆதரிக்காது.

பிரிட்டனுக்குத் தன்னுடைய தார்மிகச் செல்வாக்கை அளிப்பதென்பது காங்கிரஸினல் செய்ய முடியாதது. தார்மிகச்

செல்வாக்கு என்பது சுலபமாகக் கொடுத்துவிடக்கூடிய விஷய மன்று. அதைப் பெறுவது பிரிட்டனின் பொறுப்பு. கொடுக்கக் கூடியது காங்கிரஸிடம் எதுவுமில்லை என்று ஒரு வேளை பிரிட்டிஷ் ராஜதந்திரிகள் நினைப்பதாக இருக்கலாம். போரில் ஈடுபட்டிருக்கும் இவ்வுலகத்திற்குத் தேவைப்படுவனவெல்லாம் பணம் போன்ற உதவியே என அவர்கள் நினைப்பதாகவும் இருக்கலாம். அப்படி அவர்கள் நினைத்தால் அதில் அதிக அளவு தவறும் இல்லை. யுத்தத்தில் தருமநெறி விலக்கப்பட்ட பொருள். எனக்குக் கடிதம் எழுதியிருப்பவர், "பிரிட்டனின் மனத்தை மாற்றுவதில் நாம் வெற்றி பெற முடியாதவர்களாகவும் இருக்கக்கூடும்" என்று சொல்லுவதனால், பிரிட்டனுக்காக அவர் பரிந்து பேசும் கட்சியையே முற்றிலும் கைவிட்டுவிடுபவராகிறார். பிரிட்டனுக்குக் கெடுதலை நான் எண்ணவில்லை. பிரிட்டன் தாழ்வடைந்தால் நான் துக்கப்படுவேன். ஆனால், இந்தியா சம்பந்தமாகப் பிரிட்டன் யோக்கியமாக நடந்துகொள்ள முற்பட்டாலன்றிக் காங்கிரஸின் தார்மிகச் செல்வாக்கு, பிரிட்டனுக்குக் கிடைக்காது. அது, தன்னுடைய மாற்ற முடியாததான நிலையில் வேலை செய்துகொண்டிருக்கிறது.

கேடாவில் நான் படைக்கு ஆள் திரட்டியதற்கும்* நான் இப்பொழுது கொண்டிருக்கும் போக்கிற்குமுள்ள பேதத்தை

---

* முதல் உலக யுத்தத்தில் படைக்குத் தாம் ஆள் திரட்டியதையே காந்திஜி இங்கே குறிப்பிடுகிறார். வைசிராய் லார்டு செம்ஸ்போர்டு, 1918 ஏப்ரல் 27-இல் டில்லியில் நடந்த யுத்த மகாநாட்டுக்குக் காந்திஜியை அழைத்திருந்தார். அழைப்பிற்கிணங்கி மகாத்மா அங்கே சென்றபோதிலும் மகாநாட்டில் கலந்துகொள்ளுவதற்குச் சில ஆட்சேபங்களைக் கூறினார். திலகர், ஸ்ரீமதி அன்னி பெஸண்டு, அலி சகோதரர்கள் ஆகியோரை மகாநாட்டிற்கு அழைக்காதது காந்திஜியின் ஆட்சேபங்களில் முக்கியமானது. வைசிராய் இதைக் குறித்து விவாதிக்க காந்திஜியை அழைத்துப் பேசினார். மொத்தத்தில் சாம்ராஜ்யம் நல்லதற்கான ஒரு சக்தியே என்பதை அவர் ஒப்புக்கொள்ளுவதாயின் அந்த நெருக்கடியான சமயத்தில் பிரிட்டிஷாருக்கு அவர் உதவ வேண்டும் என்று வைசிராய் கேட்டுக்கொண்டார். "யுத்தம் முடிந்த பிறகு நீங்கள் விரும்புகிறபடியெல்லாம் தார்மிகப் பிரச்னைகளை எழுப்பி எங்களைச் சவாலுக்கு அழையுங்கள்; இப்பொழுது மாத்திரம் வேண்டாம்" என்று காந்திஜியிடம் கோரினார்.

மகாநாட்டில் படைக்கு ஆள் திரட்டும் தீர்மானத்தை ஆதரித்துப் பேசும்படி காந்திஜியை வைசிராய் கேட்டுக்கொண்டார். தாம் ஹிந்துஸ்தானியில் பேச அனுமதிக்க வேண்டும் என்று காந்திஜி கூறியதற்கும் வைசிராய் ஒப்புக்கொண்டார். "எனது முழுப் பொறுப்புணர்ச்சியுடன் இத்தீர்மானத்தை ஆமோதிக்கிறேன்" என்ற ஒரு வாக்கியமே காந்திஜி பேசியது. மகாநாடு முடிந்த பிறகு மக்கள் வைசிராயிடமிருந்து என்ன எதிர்பார்க்கிறார்கள் என்பதை விளக்கி லார்டு செம்ஸ்போர்டுக்கு ஒரு கடிதமும் அனுப்பினார். பின்னர் ஜூன் 23-ந் தேதி குஜராத்துக்கும் முக்கியமாக கேடாவுக்கும் வெளியிட்ட வேண்டுகோளில், "சுயராஜ்யத்தை அடைவதற்கு எளிதான, நேரான வழி, சாம்ராஜ்யத்தைப் பாதுகாப்பதில் கலந்துகொள்ளுவதே" என்று கூறிப் படையில் சேருமாறு அழைத்தார். ஆனால், எதிர்பார்த்தவாறு ஆட்கள் படையில் சேர முன் வரவில்லை. வாடகைக்கும் வண்டி கிடைப்பதில்லை. எனவே, கால்நடையாகவே சென்று

என் நண்பர் அறியவில்லை. சென்ற யுத்தத்தின்போது தார்மிகத்தைப்பற்றிய பிரச்னை கிளப்பப்படவில்லை. காங்கிரஸ் அகிம்சைப் பிரதிக்ஞை கொண்டிருக்கவுமில்லை. இப்பொழுது அதற்கு மக்களிடையே இருக்கும் தார்மிகச் செல்வாக்கு அப்பொழுது இல்லை. நான் செய்யும் ஒவ்வொரு காரியத்தையும் என் அளவிலேயே நான் செய்கிறேன். யுத்த மகாநாட்டிற்கும் போயிருந்தேன். உண்மையைச் சொல்லுவதென்றால், என் உடல்நிலை சீர் கெடுவதையும் பொருட்படுத்தாமல் படைக்கு ஆள் திரட்டினேன். மக்களுக்கு ஆயுதங்கள் வேண்டுமானால் அதைப் பெறுவதற்கு நிச்சயமான வழி யுத்த சேவையே என்று அவர்களுக்குக் கூறினேன். ஆனால், அவர்கள் என்னைப் போல அகிம்சையோடு இருப்பார்களாயின் என் வேண்டுகோள் அவர்கள் பொருட்டன்று. எனக்குத் தெரிந்தவரையில் அப்பொழுது நான் கூறியதைக் கேட்டுக்கொண்டிருந்தவர்களில் அகிம்சையோடிருந்தவர் ஒருவரேனும் இல்லை. பிரிட்டனிடம் கொண்டிருந்த கெட்ட எண்ணத்தினாலேயே அவர்கள் தயங்கினார்கள். அன்னிய அடிமைத்தளையை ஒழித்துவிட வேண்டும் என்ற அறிவோடு கூடிய உறுதி, அந்த எண்ணத்திற்குப் பதிலாக நாளடைவில் ஏற்பட்டது.

அப்பொழுது இருந்த நிலைமை முற்றுமே பிறகு மாறிவிட்டது. போன போரில் இந்தியாவினிடமிருந்து பிரிட்டனுக்கு ஏகோபித்த ஆதரவு கிடைத்திருந்தும், ரௌலட் சட்டங்களும் மற்றவைகளுமே பிரிட்டிஷ் மனப்போக்கைத் தெளிவாக்கின. பிரிட்டிஷ் அபாயத்தைச் சமாளிப்பதற்கு அகிம்சையோடு கூடிய ஒத்துழையாமையைக் காங்கிரஸ் ஏற்றுக்கொண்டது. ஜல்லியன் வாலாபாக், சைமன் கமிஷன்,* வட்டமேஜை மகாநாடுகள்,

---

படைக்கு ஆள் திரட்டும் வேலையில் ஈடுபடுவதெனக் காந்திஜியும் அவருடைய சகாக்களும் முடிவு செய்தனர். தினமும் 20 மைல் வீதம் நடந்தனர். தங்களுக்கு வேண்டிய உணவையும் தாங்களே உடனெடுத்துச் சென்றனர். ஒவ்வோர் ஊரிலும் கூட்டம் போட்டுப் பேசினார் காந்திஜி. அவரைப் பார்க்கவும் கேட்கவும் பலர் வந்தாலும், இரண்டொருவருக்கு மேல் படையில் சேருவதில்லை. இரவு பகல் இந்த வேலையில் கஷ்டப்பட்டு ஈடுபட்டதால் அவருடைய தேக நிலை அடியோடு குலைந்தது. அப்பொழுது அவர் சாப்பிட்டு வந்தவை நிலக்கடலையும், வெண்ணெயும், எலுமிச்சம் பழமுமே. அவருக்கு வயிற்றுக்கடுப்புக் கண்டுவிட்டது. நாதியாட்டில் அவருக்கு நோய் கடுமையாகி 24 மணி நேரத்தில் 40 தடவை வயிற்றுப் போக்கு இருந்தது. பிறகு அவரைச் சாபர்மதி ஆசிரமத்திற்குக் கொண்டுபோயினர். அச்சமயம் அவர் பிழைப்பது அரிது என்ற நிலையும் உண்டாகிப் பிறகு குணமடைந்தார்.

* 1919-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம் எவ்விதம் இந்தியாவில் வேலை செய்திருக்கிறது என்பதை விசாரித்தறிவதற்காக, அச்சட்டத்தில் கண்டபடி நியமிக்கப்பட்ட கமிஷனே சைமன் கமிஷன். அக் கமிஷனின் தலைவர் ஸர் ஜான் சைமன். எனவே, சைமன் கமிஷன் என அதற்குப் பெயராயிற்று. இதன் நியமனம் 1927

வங்காளத்தில் ஒரு சிலர் செய்த தகாத செய்கைகளுக்காக வங்காளத்தையே அடக்கி ஒடுக்கியது ஆகியவைகளைப்பற்றிய நினைவு இருந்து வருகிறது. காங்கிரஸ் அகிம்சையை ஏற்றுக் கொண்டிருப்பதால், படையில் சேர ஆள் திரட்டும்படிக் கேட்க நான் மக்களை அணுக வேண்டிய அவசியம் இல்லை. அவ்விதம் படையில் ஆட்கள் ஒரு சிலரைத் திரட்டிக் கொடுப்பதைவிட உண்மையிலேயே மேலானதொன்றைக் காங்கிரஸின் மூலம் நான் கொடுக்க முடியும். ஆனால், அது பிரிட்டனுக்குத் தேவையில்லை என்று நிச்சயமாகத் தெரிகிறது. எனக்கு விருப்பம் இருக்கிறது. ஆனால், உதவி செய்ய முடியாமல் இருக்கிறேன்.

சேவா கிராமம், 30—4—1940 —' ஹரிஜன் ' — 4—5—1940

# 17

# ஜனநாயகமும் அகிம்சையும்

**கேள்வி :** அகிம்சையைக்கொண்டு மாத்திரமே ஜனநாயகத்தைப் பாதுகாக்க முடியும் என்று ஏன் கூறுகிறீர்கள்? (இப்படிக் கேட்டவர் ஓர் அமெரிக்க நண்பர்.)

**பதில் :** ஏனெனில், ஜனநாயகம் பலாத்காரத்தினாலேயே நிலைத்திருப்பதாக இருந்துவரும் வரையில், பலவீனமானவர்களுக்காக அது இருக்க முடியாததோடு அவர்களை அதனால் பாதுகாக்கவும் முடியாது. ஜனநாயகத்தின் கீழ் அதிக பலமுள்ளவர்களுக்கு இருப்பதைப் போன்ற சமத்துவமான வாய்ப்பு அதிக பலவீனமானவர்களுக்கும் இருக்க வேண்டும் என்பதே ஜனநாயகத்தைப்பற்றிய என் கருத்து. அகிம்சையினாலன்றி இது சாத்தியமே அல்ல. உலகில் எந்த நாடுமே, பலவீனமானவர்களுக்கு மேல்வாரியான மதிப்புத் தருகிறதே தவிர, உண்மையான மதிப்பைத் தரவில்லை. பலவீனமானவர்கள்

---

நவம்பர் 8-ஆம் தேதி அறிவிக்கப்பட்டது. இதன் நியமனத்தைக் குறித்து அறிவிக்க வைசிராய் லார்டு இர்வின் காந்திஜியை முன்கூட்டி அழைத்திருந்தார். அச்சமயம் மங்களூரில் இருந்த காந்திஜி 1,200 மைல் தூரம் யாத்திரை செய்து டில்லியை அடைந்ததும் சைமன் கமிஷன் நியமன தஸ்தாவேஜு அவரிடம் கொடுக்கப்பட்டது. அக் கமிஷன் வெள்ளையரை மாத்திரமே கொண்டதாக நியமிக்கப்பட்டதால் இந்தியாவின் முக்கியமான ராஜீயக் கட்சிகள் எல்லாமே அதைப் பகிஷ்கரித்துவிட்டன. அதற்கு ஆதரவு இருப்பதாகக் காட்டப் பிரிட்டிஷ் அரசாங்கம் என்ன முயன்றும் இந்தியாவில் அக் கமிஷன் சென்ற இடங்களிலெல்லாம் மக்களின் பூரண பகிஷ்காரமே அதற்குக் கிடைத்தது. அக் கமிஷன் ஓர் அறிக்கையைச் சமர்ப்பித்தபோதிலும், பிரிட்டிஷ் அரசாங்கம் அது பலிக்காது எனக் கண்டு லண்டனில் வட்ட மேஜை மகாநாட்டைக் கூட்டியது. முதல் மகாநாட்டில் காங்கிரஸ் கலந்துகொள்ளவில்லை. 1931-இல் காந்தி-இர்வின் ஒப்பந்தம் ஏற்பட்ட பிறகு இரண்டாவது மகாநாட்டிற்குக் காந்திஜி காங்கிரஸின் ஏகப் பிரதிநிதியாகச் சென்றார்.

கடைசியில் நிர்க்கதியாகிவிட வேண்டியதுதான் என்று நீங்கள் சொல்லுகிறீர்கள். உங்கள் விஷயத்தையே எடுத்துக்கொள்ளு வோம். உங்கள் நிலமெல்லாம் முதலாளிகளாக இருக்கும் ஒரு சிலருக்கே சொந்தமாக இருக்கின்றன. தென் ஆப்பிரிக்கா விலும் உண்மை நிலை இதுதான். பகிரங்கமாக இல்லாவிடினும் மறைமுகமாகவாவது பலாத்காரத்தை உபயோகித்தாலன்றி இந்தப் பெரிய நில உரிமைகள் நீடித்திரா. இன்று இருந்து வரும் மேனாட்டு ஜனநாயகம் நாஜிஸமோ அல்லது பாசிஸமோ தான் – அப்பட்டமாக அதுவே இராது போனாலும். ஏகாதிபத்தி யத்திலுள்ள நாஜிஸ, பாசிஸப் போக்குகளை மறைப்பதற்கு ஒரு போர்வையாகவே ஜனநாயகம் இருந்துவருகிறது. கொள்ளையில் தங்களுக்கும் பங்கு வேண்டும் என்ற ஆசையைத் திருப்திப்படுத் திக் கொள்ளவேண்டும் என்பதைத் தவிர வேறு எதற்காக இன்று யுத்தம் நடக்கிறது? பிரிட்டன் இந்தியாவைக் கைப்பற்றிக் கொண்டது ஜனநாயக முறையினால் அன்று. தென்னாப்பிரிக்க ஜனநாயகம் என்பதற்கு என்ன பொருள்? அதன் அரசியலோ, இயற்கையாகவே அந்நாட்டினரான கறுப்பு மனிதருக்கு எதிராக வெள்ளைக்காரரைப் பாதுகாப்பதற்கென்றே செய்யப்பட்டிருக் கிறது. அடிமை முறையை ஒழிப்பதற்காக உங்கள் வடக்கு ராஜ் யங்கள் என்னதான் செய்திருந்தபோதிலும் உங்கள் சரித்திரத் தில் இன்னும் இருண்ட பகுதியே தென்படுகிறது. நீங்கள் நீக் ரோக்களை நடத்திய முறை ஒரு வெட்கக்கேடான வரலாறு. இத்தகைய ஜனநாயகங்களைப் பாதுகாப்பதற்காகவே யுத்தம் நடந்து வருகிறது. இதில் கரவு ஒன்று இருக்கிறது. நான் இப்பொழுது அகிம்சை வழியில் சிந்தனை செய்து வருகிறேன்; பலாத்காரத்தின் உண்மையான உருவத்தை அம்பலமாக்க முயன்று வருகிறேன்.

உண்மையான, அதாவது பலாத்காரமில்லாத ஜனநாய கத்தை உருவாக்க, இந்தியா முயன்று வருகிறது. ராட்டை, கிராமக் கைத்தொழில்கள், கைத்தொழில்களின் மூலம் ஆரம்பக் கல்வி, சமூக ஒற்றுமை, மது விலக்கு, ஆமதாபாதில் உள்ளது போன்ற அகிம்சையோடு கூடிய தொழிற்சங்கம் ஆகியவற்றின் மூலம் வெளிக்காட்டப்படும் சத்தியாக்கிரகமே எங்களுடைய ஆயுதமாகும். மக்களின் ஒன்றுபட்ட முயற்சி மக்களின் கல்வி என்பதே இவற்றின் பொருள். இக்காரியங்களையெல்லாம் நடத்த எங்களுக்குப் பெரிய ஸ்தாபனங்களும் இருக்கின்றன. விரும்பித் தாமே வந்து பணியாற்றுவோரைக் கொண்டவை அவை; மிகத் தாழ்ந்த நிலையில் இருப்போருக்குச் சேவை செய் வதற்கே அவை அதிகாரம் பெற்றவை.

அகிம்சை முயற்சியின் நிரந்தரமான பகுதி இது. இந்த முயற்சியிலிருந்து ஒத்துழையாமை, சட்டமறுப்பு என்பதான அகிம்சையோடு கூடிய எதிர்ப்பைத் தரும் சக்தி உண்டாக்கப்படுகிறது. பொதுமக்கள் கட்டுப்பாடாகச் செய்யும் வரி கொடா இயக்கமாகவும் இது முடியக்கூடும். ஒத்துழையாமையையும் சட்டமறுப்பையும் கூடியவரை பெரிய அளவிலேயே நாங்கள் நடத்தி, நல்ல வெற்றியும் கண்டிருக்கிறோம் என்பதை நீங்கள் அறிவீர்கள். எதிர்காலம் ஒளி மிகுந்ததாக இருக்குமென்பதற்கு நம்பிக்கை அந்தப் பரீட்சையில் இருந்தது. என்றாலும், எங்கள் எதிர்ப்பு பலவீனர்களின் எதிர்ப்பாகவே இன்னும் இருந்து வருகிறது. பலமுள்ளவர்களின் எதிர்ப்பாக அதை உருவாக்கவேண்டும் என்பதே எங்கள் நோக்கம். உங்கள் யுத்தங்கள் ஜனநாயகத்திற்கு என்றென்றும் பாதுகாப்பு அளிக்கா. மக்கள் இந்த லட்சியத்தை எட்டும் அளவுக்கு வருவார்களானால் - வேறு வகையில் சொல்லுவதானால், இந்தச் சோதனையைப் பயனுள்ளதாக்குவதற்கான அறிவையும் பலத்தையும் கடவுள் எனக்கு அளிப்பாராயின் - இந்தியா இந்தப் பரீட்சையை நடத்தியே காட்டும்.

சேவா கிராமம், 13—5—1940 —'ஹரிஜன்' - 17—5—1940.

# 18

# பீதி

பீதி ஏற்படுவதைக் குறித்து இப்பொழுதெல்லாம் எல்லோரும் பத்திரிகைகளில் படிக்கிறோம். படிப்பதைவிடக் கேள்விப்படுவதோ இன்னும் அதிகமாக இருக்கிறது. "ஏகாந்தமான சேவா கிராமத்தில் உட்கார்ந்துகொண்டிருக்கும் உங்களுக்கு, மக்கள் நடமாடும் நகரங்களில் என்ன பேசிக்கொள்கிறார்கள், என்ன விஷயங்கள் காற்றில் உலவுகின்றன என்பதைப்பற்றித் தெரிவதற்கில்லை. மக்கள் பீதியினால் பரபரப்படைந்திருக்கின்றனர்" என்று ஒரு நண்பர் எழுதுகிறார்.

பீதி தரும நெறியைக் கெடுத்துவிடக்கூடியதொரு நிலை. அந்த நிலையில் யாருமே இருக்கக்கூடாது. அவ்விதம் திகில் ஏற்படுவதற்கு எந்த விதமான காரணமும் இல்லை. என்ன நடந்தாலும் ஒவ்வொருவரும் மனத்திடத்துடன் இருக்கவேண்டும். யுத்தத்தினால் ஏற்படும் தீமை கொஞ்ச நஞ்சமல்ல. ஆனால், அது ஒரு நன்மையையும் செய்கிறது. அது பயத்தை விரட்டியடித்து வீரத்தை மேலுக்குக் கொண்டு வருகிறது. 'நேச தேசத்தினர் தரப்பிலும், ஜெர்மானியர் தரப்பிலும்,

இதற்குள்ளேயே பல லட்சக்கணக்கானவர்கள் மாண்டிருப்பார்கள். அவர்கள் ரத்தத்தை நீர்போலப் பாழாக்கி வருகின்றனர். வயதானவர்களும், வயதான பெண்களும், இளம் பெண்களும் குழந்தைகளும் எந்த நேரத்திலும் சாகக்கூடும் என்ற அபாயத்தின் நடுவே பிரிட்டனிலும் பிரான்ஸிலும் வாழ்க்கை நடத்துகின்றனர். ஆனால், அங்கே பீதி இல்லை. அவர்களுக்குப் பீதி ஏற்பட்டு விடுமானல் ஜெர்மன் தோட்டா, குண்டு, விஷப்புகை இவற்றையெல்லாம்விட அதுவே அவர்களுக்கு மிகவும் பயங்கரமான எதிரி. துன்பப்பட்டுக் கொண்டிருக்கும் மேற்கத்திய நாட்டு மக்களைப் பார்த்தாவது பீதியை நம்மிடத்திலிருந்து விரட்டவேண்டும். இந்தியாவில் பீதி ஏற்படுவதற்குக் காரணமே இல்லை. பிரிட்டன் கடைசி வரைக்கும் பார்த்துவிடும்; அப்படி மடிந்து போக நேர்ந்தாலும் வீரத்தோடுதான் மடியும். தோல்விகள் நேரிடலாம்; ஆனல், பிரிட்டாஷார் நெறி குலைந்து விட்டனர் என்று கேள்விப்படவே மாட்டோம். எது நேருவதாயினும் ஒழுங்கான முறையிலேயே நேரும்.

ஆகையால், எனக்குச் செவிசாய்ப்பவர்களுக்கு நான் கூறுவதாவது: ''வழக்கம்போல உங்களுடைய வேலைகளையோ, விவகாரங்களையோ செய்துகொண்டு போங்கள். பாங்கில் போட்டிருக்கும் பணத்தைத் திருப்பி எடுத்து விடாதீர்கள். உங்களிடம் இருக்கும் நோட்டுக்களை அவசரப்பட்டுப் பணமாக்கி விட வேண்டாம். அதிக உஷார் எடுத்துக்கொண்டால் புதிய ஆபத்துக்கள்தாம் உங்களுக்கு ஏற்படும். அராஜக நிலை நம்மிடையே தோன்றிவிடுமானல் உங்கள் பணம் பாங்கிகளிலும் நோட்டுக்களாகவும் இருப்பதைவிட உங்கள் நாணயங்களை மண்ணில் புதைத்து வைப்பதோ பணப்பெட்டிகளில் பூட்டி வைப்பதோ பத்திரம் என்று எண்ண வேண்டியதில்லை. இப்பொழுது எல்லாவற்றிலுமே அபாயம் இருக்கிறது. இத்தகைய நிலைமையில் நீங்கள் இருக்கிற மாதிரி இருந்து வருவதே சிறந்தது. நீங்கள் நிதானத்துடன் இருந்து அதை விருத்தி செய்துகொண்டால் மார்க்கெட்டும் (விலைவாசியும்) ஒரு நிதானத்துக்கு வந்துவிடும். இதுவே அராஜகம் ஏற்படுவதைத் தடுப்பதற்கான சிறந்த உபாயம். இதுபோன்ற சமயங்களில் காலித்தனம் தலைவிரித்தாடுமென்ற பயம் சந்தேகமின்றி ஏற்படுகிறது. இதைச் சமாளித்துக்கொள்ளுவதற்கு நீங்களே தயாராக வேண்டும். கோழை மக்களிடையேதான் காலிகள் அதிகரிக்கிருர்கள். பலாத்காரத்தினலோ அல்லது அகிம்சையினலோ தங்களைத் தாங்களே பாதுகாத்துக்கொள்வோ

ரிடம் அவர்களுக்கு வேலையே இல்லை. அகிம்சை எதிர்ப்பு என்றால், தம் உயிரையோ உடைமையையோபற்றியும் ஒருவர் சிறிதும் லட்சியம் செய்யமாட்டாரென்று ஆகிறது. இது தொடர்ந்து அனுசரிக்கப்படுமானால், முடிவில் இதுவே காலி களின் அட்டகாசத்தை ஒழிப்பதற்கு நிச்சயமான பரிகார மாகும். ஆனால், அகிம்சையை ஒரே நாளில் கற்றுக்கொண்டு விட முடியாது. அதற்குப் பழக்கம் வேண்டும். அதைக் கற்றுக்கொள்ள நீங்கள் இப்பொழுதே ஆரம்பிக்கலாம். உங்களுடைய உயிரையோ, சொத்தையோ, இரண்டையுமோ இழந்துவிடவும் நீங்கள் தயாராக இருக்கவேண்டும். அகிம்சைக் கலையில் இதுவும் அடங்கியிருக்கிறது. ஏதாவது ஒரு வகையில் உங்களை நீங்களே பாதுகாத்துக்கொள்ள உங்களுக்குத் தெரியவில்லையானால், அரசாங்கம் என்னதான் சிறந்த முயற்சி செய்தாலும் உங்களைக் காப்பாற்றவே முடியாது. ஓர் அரசாங்கம், என்னதான் பலமுடையதாக இருப்பினும், மக்களின் தீவிரமான ஒத்துழைப்பின்றி அதனால் ஒன்றும் ஆகாது. தங்களுக்குத் தாங்களே உதவி செய்துகொள்ளுகிறவர்களுக்கே கடவுளும் உதவி செய்கிறார் என்றால், அழியக்கூடியதான அரசாங்கம் எப்படி உதவி செய்துவிட முடியும்! நாளைக்கு அரசாங்கமே இராது, எங்கும் அராஜகமே நிலவும் என்று நினைத்துத் தைரியத்தை இழந்துவிட வேண்டாம். நீங்களே இப்பொழுது அரசாங்கமாக இருக்கலாம்; நீங்கள் நினைப்பதான எந்நிலையிலும் நீங்கள் நிச்சயமாக அப்படித்தான் இருப்பீர்கள். இல்லையானால், நீங்கள் அழிவீர்கள்.

சேவா கிராமம், 4—6—1940. —'ஹரிஜன்' - 8—6—1940.

# 19

# செய்ய வேண்டியது யாது?

**கேள்வி:** நாட்டில் நிலைமை நாளுக்கு நாள் அபாயம் நிரம்பியதாகிக்கொண்டிருக்கிறது. எங்குமே பீதியும் பரபரப்பும் அதிகரித்துக்கொண்டு போகின்றன. மத்திய ஆட்சி சிதைந்துவிட்டாலோ அல்லது பலவீனப்பட்டுவிட்டாலோ அதனால் ஏற்படக்கூடிய குழப்ப நிலையைப் பயன்படுத்திக் கொள்வதற்கு ஆயுதந் தாங்கிய கூட்டத்தினர் சில பகுதிகளில் இப்பொழுதே தயாராகிக்கொண்டு வருகின்றனர். ஆபத்து உடனேயே ஏற்படாமல் இருக்கலாம்; ஆனால், அப்படி ஏற்படலாம் என்பதைக் குறித்து அசட்டையாக இருந்துவிடுவது ஆபத்தாகும். சென்ற இருபது ஆண்டுகளாக நாடு

அகிம்சையின் போதனை பெற்று வந்திருந்தும், குழப்ப நிலைமையும் காலிகளின் அட்டகாசமும் ஏற்படும்போது சரியானபடி சமாளித்துக் கொள்வதற்கான அகிம்சையில் உறுதி விருத்தியாகவில்லை என்பதை நீங்களும் ஒப்புக்கொள்ளுவீர்கள். மக்கள் தற்காப்புக்குத் தகுதி அடைவதற்கான வழிகளைச் செய்ய அரசாங்கம் முனைந்து வருகிறது. நீங்கள் தலைமை வகித்து வழி காட்டவேண்டும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருப்பவர்களின் கடமை என்ன? அரசாங்கத்தின் இந்த நடவடிக்கைகளில் அவர்கள் பங்கெடுத்துக்கொள்வதா? அப்படிச் செய்யக்கூடாது என்றால், அவர்கள் செய்யவேண்டியதுதான் என்ன? கையைக் கட்டிக்கொண்டு ஒன்றுமே செய்யாமல் அவர்கள் நிச்சயமாகச் சும்மா இருக்க முடியாது.

**பதில் :** காங்கிரஸ் காரியக் கமிட்டி சமீபத்தில் வெளியிட்டிருக்கும் அறிக்கையை முன்னிட்டுக் காங்கிரஸ் என்னதான் செய்யப்போகிறது என்பதை நான் கூற முடியாது. குழப்ப நிலையையும் அதைப் போன்றவைகளையும் அகிம்சை முறையிலேயே சமாளிப்பது என்பதை நீங்கள் நம்புவதாக இருந்தால், உங்களையும், உங்களுக்கு அக்கம் பக்கத்திலுள்ளவர்களையும், உங்கள் வழியை அனுசரிப்பவர்களையும் அகிம்சைப் பாதுகாப்பு முறையைப் பற்றுவதற்கு தயாராக்குவதே இயல்பாக உங்கள் கடமையாகிறது. இக்காலத்தில் யாரும் சும்மா உட்கார்ந்துகொண்டு இருந்துவிட முடியாது என்று நீங்கள் கூறுவதை ஒப்புக்கொள்ளுகிறேன். பலாத்கார முறையான தயாரிப்புக்கு, நெடுநாள் முன்னதான பயிற்சி இருக்கவேண்டும். அகிம்சை முறையில் தயார் செய்துகொள்ளுவதென்றால் மனத்தைச் சரிப்படுத்திக்கொள்வதுதான். குழப்ப நிலைமை ஏற்படுவது சாத்தியம் என்பது நிச்சயமாக இருந்து வருகிறது. ஆனால், நீங்கள் அகிம்சையோடு இருப்பதென்றால், பயத்திற்கு நீங்கள் இடங் கொடுக்கக்கூடாது. இறப்பது நிச்சயமே என்றாலும் அதை நீங்கள் எப்படி எதிர்பார்த்துக் கொண்டே இருப்பதில்லையோ அதே போலக் குழப்ப நிலையையும் எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டாம். நீங்கள் அகிம்சையோடு இருந்தால் குழப்ப நிலைமை வந்துவிடாது என்று நீங்கள் நம்புவீர்கள். ஆனால், துரதிருஷ்டவசமாகக் குழப்ப நிலை வந்தாலும், அதைத் தடுப்பதற்காக நீங்களும் உங்கள் தோழர்களும் உங்களைப் பின்பற்றுவோரும் உயிரைக் கொடுக்க வேண்டும். திருடர்கள் என்றோ, விஷமக்காரர்கள் என்றோ தாங்கள் கருதுகிறவர்களைக் கொல்ல முயலுவதில்

தங்கள் உயிரைக் கொடுப்பவர்கள், சிறந்த காரியம் செய்து விடவில்லை. அவர்கள் செய்வது மிக மோசமாகவும் இருக்கக்கூடும். தங்கள் உயிருக்கு வரும் ஆபத்தையும் பொருட்படுத்தாமல் செய்கிறார்கள்; அவர்கள் போய்விட்ட பிறகு அங்கு இருளே இருக்கிறது. இன்னும் என்னவென்றால், பதிலுக்குப் பலாத்காரமே செய்வதால் இந்தத் தீயை வளர்த்து விட்டு நிலைமையை அவர்கள் பின்னும் மோசமாக்கி விடுவார்கள். எதிர்ப்புச் செய்யாமலேயே இறந்துவிடுபவர்கள், தங்கள் குற்றமற்ற தியாகத்தினால் பலாத்காரத்தின் ஆவேசத்தைத் தணித்தவர்களாகவும் கூடும். ஆனால், உண்மையிலேயே அகிம்சையோடு கூடியதான இந்த நடவடிக்கை, உள்ளத்தின் ஒரு நம்பிக்கையிலிருந்து எழுவதாக இருந்தாலன்றிச் சாத்தியமே அல்ல. யாருக்கு நீங்கள் அஞ்சுகிறீர்களோ, யாரைத் திருடன் என்றும், கொள்ளைக்காரன் என்றும், அதையும் விட மோசமானவன் என்றும் கருதுகிறீர்களோ அவனும் நீங்களும் ஒன்றே. ஆகையால், அறியாமையில் இருக்கும் உங்கள் சகோதரன், உங்கள் கையால் சாவதைவிட நீங்கள் அவன் கையால் சாவது மேல் என்ற நம்பிக்கையிலிருந்தே அந்த அகிம்சைச் செயல் பிறக்க வேண்டும்.

சேவா கிராமம், 24—6—1940 —'ஹரிஜன்' - 29—6—1940.

# 20

# ஒரு முக்கியமான பிரச்னை

உள் நாட்டுக் குழப்பத்தையும் வெளியிலிருந்து வரும் படையெடுப்பையும் சமாளிப்பதற்குச் செய்யவேண்டிய ஏற்பாடு அடுத்தபடியாகக் கவனிக்கவேண்டிய முக்கியமான பிரச்னை. தனிப்பட்ட ராணுவம் ஒன்றைத் திரட்டுவது பயனற்றது என்பதுடன் மோசமானதுமாகும். இது என்றும் அனுமதிக்கப்படவே மாட்டாது. வெளிநாட்டு ஆட்சியாயினும், சுதேசி ஆட்சியாகவே இருந்தாலும், தனிப்பட்டவர்கள் ராணுவம் இருப்பதென்பதை எந்த ஆட்சியும் சகிக்காது. ஆகையால், இந்தியாவுக்கு ராணுவப் படை இருக்கவேண்டியது அவசியம் என்று நம்புகிறவர்கள், இப்பொழுதில்லாவிட்டாலும் பிறகாவது, பிரிட்டிஷ் கொடியின்கீழ்த் தாமும் படையில் சேர்ந்துகொண்டு விடுவார்கள். நியாயப்படியே இப்படித்தான் ஆகும். இவ்விஷயத்தில் காரியக் கமிட்டி தன்னுடைய முடிவைத் தெரிவித்திருக்கிறது. அதன்படி அது நடப்பதாயிருந்தால், வழக்கமான வழியில் ராணுவத்தில் சேர்ந்துகொள்ளும்

படியே அது காங்கிரஸ்காரர்களுக்கு யோசனை கூறவேண்டும் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை.[1] அவ்வாறு ஏற்பட்டால் உடனே, சுதந்திரம் வேண்டும் என்ற கோஷமும் எழும்பும். அதோடு உண்மை வகை அகிம்சையும் தீர்ந்துவிட்டது என்றாகும். இந்தியாவுக்கு மாத்திரமல்ல, பிரிட்டனுக்காகவும் மனிதவர்க்கத்தின் நன்மைக்காகவும் அந்த இரண்டு காரியங்களில் எதற்குமே ஆயுதம் ஏந்துவதில்லை என்று காங்கிரஸ் திடமாகக் கூறிவிடவேண்டும். இந்த நம்பிக்கையுடனேயே நான் கடைசி வரையில் இருந்து வருவேன். மனித வர்க்கத்தின் எதிர்கால நன்மை காங்கிரஸின் கையில் இருக்கிறது என்று நான் பலமாக உணருகிறேன். சரியான பாதையில் போகும் ஞானத்தையும் தீரத்தையும் காங்கிரஸ்காரர்களுக்குக் கடவுள் அளிப்பாராக.[2]

புது டில்லி, 1—7—1940 —'ஹரிஜன்'-6—7—1940.

# 21

# ஹிட்லரிஸத்தைச் சமாளிப்பது எப்படி?

ஹிட்லர் எப்படிப்பட்டவர் என்பதைக் குறித்து முடிவாக நிரூபிக்கப்படுவது எதுவானாலும், ஹிட்லரிஸம் என்றால் என்ன பொருள்படும் என்பதை நாம் அறிவோம். அப்பட்டமான கொடூரமுள்ள படைப் பலம்; தவறற்ற விஞ்ஞான ரீதியில் உருவாக்கப்பட்டு அது விஞ்ஞான நுட்பத்துடன் உபயோகப் படுத்தப்பட்டு வருகிறது என்பதே அதன் பொருள். அதன் பலனை அது எதிர்க்க முடியாததாகியிருக்கிறது.

சத்தியாக்கிரகத்தின் ஆரம்ப காலத்தில், சாத்துவிக எதிர்ப்பு என்றே அது கூறப்பட்டு வந்த சமயத்தில், முற்றிலும் நிராயுதபாணிகளான, தாங்கள் விரும்பினால்கூடக் கட்டுப்பாடான

1. அகிம்சா தருமத்தை, நாட்டைப் பாதுகாத்துக்கொள்ளுவதற்குப் பயன்படுத்திக் கொள்ளத் தங்களால் இயலவில்லை என்று காங்கிரஸ் காரியக் கமிட்டியினர் 1940 ஜூன் 21-ஆம் தேதி அறிவித்தனர். அவர்கள் செய்த தீர்மானம், இதைப்பற்றிக் கூறுகையில், "ஒன்றன் பின் ஒன்றாகத் திடுக்கிடவைக்கும் வகையில் ஐரோப்பாவில் நிகழ்ந்துவரும் துயர்தரும் சம்பவங்கள், அதிலும் முக்கியமாகப் பிரெஞ்சு மக்களுக்கு நேர்ந்திருக்கும் துர்ப்பாக்கியம் காரியக் கமிட்டியை அதிக வேதனைக்குள்ளாக்கி யிருக்கிறது. தூரத்திலுள்ளவைகளாக இருந்த பிரச்னைகள் வெகு கிட்டத்தில் நெருங்கி வந்து இருக்கின்றன என்பதுடன் சீக்கிரத்திலேயே இதற்குப் பரிகாரம் தேடியாக வேண்டியதாகவும் ஆகலாம்'' என்றது. (இத்தீர்மானத்தின் முழு விவரத்தையும் இத்தொகுப்பின் கடைசியிலுள்ள 'பின் சேர்க்கைப் பகுதி'யில் பார்க்க.)

2. 'சில முக்கியமான பிரச்னைகள்' என்ற கட்டுரையிலிருந்து மேற்கண்ட பகுதி எடுக்கப்பட்டதாகும்.

பலாத்காரம் செய்ய முடியாதவர்களான ஒரு சில இந்தியர், மிகப் பெரிய ஆயுத பலங்கொண்ட அரசாங்கத்தை எதிர்ப்பதைக் கண்டு ஜொஹன்னஸ்பர்க் 'ஸ்டார்' பத்திரிகை பரபரப்புற்று அப்பொழுது ஒரு கேலிச் சித்திரத்தை வெளியிட்டது. அப்படத்தில் அரசாங்கம் எதிர்க்கமுடியாத சக்தி என்பதைக் குறிக்க ஒரு நீராவி ரோலர் வண்டி போடப்பட்டிருந்தது. சாத்துவிக எதிர்ப்பை, அந்த 'ரோலர்' (உருளை) முன்னால் அசையாமல் சுகமாக உட்கார்ந்துகொண் டிருக்கும் யானையாக வரையப்பட்டிருந்தது. அதன்மீது 'அசைக்க முடியாத சக்தி' என்றும் எழுதியிருந்தது. எதிர்க்க முடியாத சக்திக்கும் அசைக்க முடியாததான சக்திக்குமிடையே நடக்கும் போராட்டமாக அக்கேலிச் சித்திரத்தை எழுதியவர் தீர்க்கதரிசனத்தோடேயே வரைந்திருந்தார். அந்த எதிர்ப்பு அப்பொழுது ஒரு முடிவுக்கு வராத நிலையில் இருந்தது. அதன் விளைவை நாம் அறிவோம். எதிர்க்க முடியாதது என்று கூறப்பட்டதும், தோன்றியதுமான பலத்தைச் சத்தியாக்கிரகத்தின் அசைக்க முடியாத சக்தியினால்-பதிலுக்குத் தாக்காமல் துன்பப்படுவதெனவும் சொல்லலாம் - வெற்றிகரமாக எதிர்க்கப்பட்டது.

அன்று உண்மையென நிரூபிக்கப்பட்டது இன்றும் உண்மையாகக் கூடும். ஹிட்லரிஸத்தை ஒரு போட்டியான ஹிட்லரிஸத்தைக் கொண்டு முறியடித்துவிடவே முடியாது. அப்படிச் செய்வது இன்னும் பெரிய அளவு சக்தி வாய்ந்த ஹிட்லரிஸத்தையே உண்டாக்கும். நம் கண் முன்பு இப்பொழுது செய்து காட்டப்படுவதெல்லாம் பலாத்காரமும் ஹிட்லரிஸமும் வீணானவை என்பதே.

ஹிட்லரிஸத்தின் தோல்வி என்று நான் கூறுவது எதை என்பதை விளக்கிச் சொல்லுகிறேன். அது சிறிய நாடுகளின் சுதந்திரத்தைத் திருடிக்கொண்டு விட்டது. சமாதானம் பேச அது பிரான்ஸைப் பணியும்படி செய்துவிட்டது. அநேகமாக, இக்கட்டுரை அச்சாகி வெளிவரும்போது பிரிட்டன் தன் போக்கையும் முடிவு செய்துகொண்டு விடும். பிரான்ஸின் வீழ்ச்சியே என்னுடைய வாதத்திற்குப் போதுமானது. தவிர்க்க முடியாததான ஒரு பலத்தின் முன் பணிந்து அறிவற்று ஒருவரையொருவர் படுகொலை செய்துகொள்வதற்கு உடந்தையாக இருக்க மறுத்ததன் மூலம் பிரெஞ்சு ராஜதந்திரிகள் சிறந்ததான தீரத்தையே காட்டினர் என நான் நினைக்கிறேன். பிரான்ஸ், அதனுடைய முக்கிய லட்சியத்தை

இழந்து விடுவதாயின், போரில் அது வெற்றி பெற்றது என்ப தற்கு அர்த்தமே இல்லை. சுதந்திரத்தை அனுபவிக்க வேண்டியவர்கள் யாரோ அவர்களையெல்லாம் அடியோடு அழித்து விடுவதுதான் சுதந்திரத்திற்காகக் கொடுக்கும் விலை என்றால், சுதந்திர லட்சியம் என்பது கேலிக்கூத்தே ஆகிறது. அப்பொழுது அது ஆசையை விரிவான வகையில் நிறைவேற்றிக் கொண்டு திருப்தியடைவதே யாகும். பிரெஞ்சுச் சிப்பாய்களின் வீரம் உலகப் பிரசித்தமானது. ஆனால், சமாதானத்திற்குப் பணிந்ததில் பிரெஞ்சு ராஜதந்திரிகள் காட்டிய மேலான வீரத்தை உலகம் அறியட்டும். பிரெஞ்சு ராஜதந்திரிகள், இக் காரியத்தை உண்மையான சிப்பாய்களுக்கு உகந்த வழியில், சிறந்த, கௌரவமான முறையிலேயே செய்திருக்கிறார்கள் என்று கருதுகிறேன். ஹிட்லர், மானக்கேடான நிபந்தனைகளை அவர்களுக்கு விதிக்கமாட்டார்* என்றே நம்புவோமாக. இரக்கமின்றி அவர் போராடினாலும் சமாதான முடிவிலாவது இரக்கத்தோடு நடந்துகொள்ளுவார் என்றும் நம்புவோம்.

ஆனால், நமது வாதத்திற்கே திரும்பவும் வருவோம். தாம் அடையும் வெற்றியைக்கொண்டு ஹிட்லர் என்ன செய்வார்? அவ்வளவு பெரிய அதிகாரத்தை அவரால் ஜீரணிக்க முடியுமா?

---

* போரை நிறுத்துவிட்டுச் சமாதானத்திற்குத் தயாராக இருப்பதாகப் பிரான்ஸ் 1940 ஜூன் 17–ஆம் தேதி ஜெர்மனிக்கு அறிவித்தது. மறுநாள் மேலே கண்ட கட்டுரையை மகாத்மா எழுதினார். எந்த நிலைமையில் பிரான்ஸ் இவ்விதம் பணிந்தது என்பதை இச்சந்தர்ப்பத்தில் நினைவுபடுத்திக்கொள்ளுவது, மகாத்மாவின் இக்கட்டுரையின் கருத்தை நன்கு அறிவதற்கு முக்கியமாகும்.

1940 ஜூன் 5–ஆந் தேதி 20 டிவிஷன்களைக் கொண்ட ஜெர்மன் படை பிரான்ஸின்மீது தாக்க ஆரம்பித்தது. மேற்கிலிருந்து பாரிஸைச் சூழ்ந்துகொண்டுவிடுவது இத் தாக்குதலின் நோக்கம். 8–ஆம் தேதி மேற்கொண்டும் அதிகப் படைகள் தாக்க முற்பட்டன. மொத்தம் 80 டிவிஷன்கள் பாரிஸை நோக்கி முன்னேறின. 4,000 டாங்கிகளையும் குண்டு வீசும் விமானங்களையும் ஜெர்மானியர் இப்போரில் ஈடுபடுத்தினர். 10–ஆம் தேதி ஜெர்மன் படைகள் பாரிஸை நெருங்கிவிட்டன. பிரெஞ்சுத் தலைநகரம் பாதுகாப்பில்லாத நகரம் என்று பிரெஞ்சு அரசாங்கம் பிரகடனம் செய்தது. 14–ஆம் தேதி ஜெர்மானியர் பாரிஸில் புகுந்தனர். போரைத் தொடர்ந்து நடத்துவதாயின் தாங்கள் வடக்கு ஆப்பிரிக்காவுக்குப் போய்ப் போராட நேரும் என்பதை ஜூன் 16–ஆந் தேதி பிரெஞ்சு அரசாங்கம் அறிந்துகொண்டது. அவ்விதமே பிரான்ஸ் செய்யும்படி பார்க்கப் பிரிட்டன் தன்னாலான முயற்சிகளையெல்லாம் செய்தது. பிரிட்டிஷ்–பிரெஞ்சு ஒப்பந்தப்படி பிரான்சு தனியாக யுத்த நிறுத்த ஒப்பந்தம் செய்து கொள்ள முடியாது. இவ்விரு நாடுகளும் ஒன்றுகிவிடலாம் என்றும் பிரிட்டன் அறிவித்தது. இதற்குப் பிரான்சு சம்மதிக்கவில்லை. முடிவில் ஜூன் 16–ஆம் தேதி பிரெஞ்சு ஜனாதிபதி லெப்ரன், மார்ஷல் பெடேனின் தலைமையில் புதிய அரசாங்கத்தை அமைத்தார். பெடேன், அன்று மாலை யுத்த நிறுத்தத்தை ரேடியோ மூலம் அறிவித்தார். 22–ஆம் தேதி ஜெர்மனியுடன் பிரான்ஸு யுத்த நிறுத்த ஒப்பந்தம் செய்து கொண்டது.

அவருக்கு வெகு காலத்திற்கு முன்னுல் இருந்தவரான அலெக் ஸாண்டரைப் போலவே அவரும் வெறுங் கையோடுதான் போவார். ஜெர்மானியருக்கோ பெரிய சாம்ராஜ்யத்தைப் படைத் திருக்கும் இன்பத்தை அவர் அளித்துவிட்டுப் போகப் போவ தில்லை. ஆனால், நசுங்கிக்கொண்டிருக்கும் அதன் பளுவை நீடிக்கும் தொல்லையைத்தான் வைத்துவிட்டுப் போவார். ஏனெனில், பிடிபட்ட எல்லா நாடுகளையும் நிரந்தர அடிமையாக வைத்துக்கொண்டிருந்துவிட அவர்களால் ஆகாது. ஹிட்ல ரிஸமே பொறுப்பு என்று சொல்லப்படும் செயல்களுக்காக வருங்கால ஜெர்மன் சந்ததியார் கலப்பற்ற பெருமை கொள்ளு வார்களா என்பதும் சந்தேகமே. ஹிட்லர் ஒரு சிறந்த அறிவாளி, வீரர், காரியங்களைச் சாதிப்பதில் இணையில்லாதவர் என்றெல் லாம் அவர்கள் போற்றுவார்கள். ஆனால், தங்கள் வீரர்களைப்பற்றி வருங்கால ஜெர்மானியருக்குப் பகுத்தறியும் ஆற்றல் இருக்கும் என்றே நான் நம்பவேண்டும். எப்படியானாலும், ஹிட்லர் சிந்தி யிருக்கும் ரத்தமெல்லாம் உலகத்தின் தார்மிக நிலையை இம்மி அளவுகூட உயர்த்திவிடவில்லை.

இதுதான் நிலைமை. இதற்கு மாருக ஜெக் மக்களும் போலந்தினரும் நார்வீஜியர்களும் பிரெஞ்சுக்காரர்களும் ஆங்கி லேயர்களும் ஆகிய எல்லோருமே ஹிட்லரிடம், "அழிப்பதற்கு நீங்கள் விஞ்ஞான ரீதியான தயாரிப்புகளைச் செய்துகொள்ள வேண்டியதில்லை. உங்கள் பலாத்காரத்தை எங்கள் அகிம்சை யைக் கொண்டே எதிர்ப்போம். ஆகையால், எங்களுடைய அகிம்சைப் பட்டாளத்தை டாங்கிகள், போர்க் கப்பல்கள் விமானங்களில்லாமலேயே நீங்கள் அழிந்துவிடலாம்" என்று சொல்லியிருந்தால், ஐரோப்பாவின் இன்றைய நிலைமை எப்படி இருக்குமென்பதை ஊகித்துப் பாருங்கள். அப்படிச் செய்திருந் தால், பெரும் போருக்குப் பிறகு அடைந்ததை ஹிட்லர் போர் இல்லாமலேயே அடைந்திருப்பார் என்பதுதான் இதிலிருக்கும் வித்தியாசம் என்று உடனே பதில் சொல்லப்படலாம். அப்பொழுது ஐரோப்பாவின் சரித்திரம் வேறுவிதமாக எழுதப் படும். சொல்லொணுக் கொடுமைகளைச் செய்து ஆக்கிரமித்துக் கொண்டிருப்பதைப் போலவே அகிம்சை எதிர்ப்பு ஏற்பட்ட போதிலும் இந்த ஆக்கிரமிப்பே நடந்திருக்கக்கூடும். அகிம்சை வழியில் எவரையும் கொல்லாமல், யாரிடத்திலுமே கெட்ட எண்ணத்தைக் கொள்ளாமல் கொல்லப்படுவதற்குப் பயிற்சி பெற்றவர்கள் மாத்திரமே கொல்லப்படுவார்கள். அப்படிச் செய்திருந்தால் ஐரோப்பா தன்னுடைய தார்மிக நிலைமையில்

எவ்வளவோ உயர்ந்திருக்கும் என்று நான் துணிந்து கூறுவேன். முடிவில் தார்மிகத்துக்குரிய மதிப்பே முக்கியமானதாக இருக்கும் என்றும் நான் நினைக்கிறேன். மற்றவை வெறும் சக்கையே.

ஐரோப்பிய வல்லரசுக்காக இதை நான் எழுதியிருக்கிறேன். ஆனால், நமக்குந்தான் இவை. என்னுடைய வாதம் ஏற்றுக்கொள்ளப்படுவதாயின், பலமுள்ளவர்களின் அகிம்சையில் நமக்குள்ள மாறுதலில்லாத நம்பிக்கையை நாம் தெரிவித்து, நமது சுதந்திரத்தைக் காத்துக்கொள்ள ஆயுத பலத்தை உபயோகிக்க நாம் தயாராயில்லை என்றும், அகிம்சையின் சக்தியைக்கொண்டே அதைப் பாதுகாத்துக்கொள்ளுவோம் என்றும் சொல்லிவிட வேண்டிய சமயம் நமக்கு வந்துவிட்டதல்லவா?

சேவா கிராமம், 18-6-1940 —'ஹரிஜன்' - 22—6—1940

# 22

## சந்தோஷமானதும் துக்கமானதும்

* சென்ற 18-ஆம் தேதி 'ஹரிஜன்' பத்திரிகையில் நான் கீழ்க்கண்ட நம்பிக்கையை வெளியிட்டேன் :

---

* ஜெர்மன் படைப் பலத்தின் முன்பு பிரான்ஸ் வீழ்ந்துவிட்ட மறுநாள், அதாவது 1940 ஜூன் 17-ஆம் தேதி காங்கிரஸ் காரியக் கமிட்டியார் வர்தாவில் கூடித் தீவிரமாகச் சிந்தித்தனர். அகிம்சையையே கையாள வேண்டும் என்று காந்திஜி கூறிய கருத்தும் வாதமும் அசைக்க முடியாதனவாக இருந்தன. ஆனால், அதே கருத்துடன் மக்களை அணுக முடியுமா என்பதையே ஆழ்ந்து சிந்தித்தார்கள். வலியோரின் அகிம்சையினாலேயே சமாளித்துக்கொள்ளுவதற்கு வேண்டிய அளவு அகிம்சை உணர்ச்சி மக்களிடையே இல்லை எனக் கருதினர். அகிம்சையையே மேற்கொள்வது என்று ஒரு தீர்மானத்திற்கு நகலையும் காரியக் கமிட்டிக்காகக் காந்திஜி தயாரித்தார். ஆனால், காரியக் கமிட்டியினர் தங்களுக்கே பொய்யாகிவிட விரும்பவில்லை. காந்திஜியின் நகல் தீர்மானத்தை ஏற்றுக்கொள்ள அவர்கள் சம்மதிக்கவில்லை. அதன் பேரில் காந்திஜியிடம், "உங்களுடைய நிலையை நாங்கள் மனம், உள்ளம், ஆத்மபூர்வமாக ஏற்றுக்கொள்ள முடியாது என்று உணருகிறோம். உங்களை இதில் சிக்க வைக்கக்கூடாது என்றும் எண்ணுகிறோம். அப்படியானால், உங்கள் தொடர்பை நீடித்து வைத்திருக்க வேண்டும் என்பதற்காகப் பாதுகாக்க முடியாத ஒரு நிலையை நாங்கள் ஏன் ஏற்றுக்கொள்ள வேண்டும்? எங்களுக்கும் மற்றவர்களுக்கும் அது மோசஞ் செய்வதாகும்" என்று காரியக் கமிட்டியினர் கூறினர். அதற்குக் காந்திஜி அவர்களுக்குக் கூறியதாவது: "என் கருத்தை நான் சுயேச்சையாகக் கூறிக்கொண்டு வருவதற்கு என்னைச் சுதந்திரமாக விட்டுவிட வேண்டும். நான் நாடுவதைச் செய்துகொண்டிருக்க நான் சுயேச்சையாக இருக்க வேண்டும். காங்கிரஸுக்கும் உங்களுக்கும் நாட்டுக்கும் மேற்கொண்டும் சரியானபடி சேவை செய்வதற்காகவே நான் போகிறேன் என்று நான் கூறுவதை நீங்கள் நம்புவீர்கள் என்பதை அறிவேன். என்றாலும், நீங்கள் விரும்பும்போது என்னால் இயன்றதைச் செய்வேன். ஆனால், உங்கள் கொள்கையையும் வேலைத் திட்டத்தையும் வகுக்க வழி காட்டுவதில் நான் இனிப் பங்கு கொள்ள முடியாது. ஆகையால், நான் இல்லாமலேயே உங்களால்

"என்னுடைய வாதம் ஏற்றுக்கொள்ளப்படுவதாயின், பலமுள்ளவர்களின் அகிம்சையில் நமக்குள்ள மாறுதலில்லாத நம்பிக்கையை நாம் தெரிவித்து நமது சுதந்திரத்தைப் பாதுகாத்துக்கொள்ள ஆயுத பலத்தை உபயோகிக்க நாம் தயாராயில்லை என்றும், அகிம்சையின் சக்தியைக் கொண்டே அதைப் பாதுகாத்துக்கொள்ளுவோம் என்றும் நாம் சொல்லிவிடச் சமயம் நமக்கு வந்துவிடவில்லையா?"

இதற்கான சமயம் வந்தபோது அத்தகைய நம்பிக்கையை நடவடிக்கையில் கையாள முடியாமலிருக்கிறது என உணர்வதாக 21-ஆம் தேதி காரியக்கமிட்டி கருதியிருக்கிறது. அவர்களுடைய நம்பிக்கையைச் சோதிக்கக் கமிட்டிக்கு இது போன்ற சமயம் இதற்கு முன்னல் நேர்ந்ததே இல்லை. உள் நாட்டில் ஏற்படக்கூடிய ஆபத்தையும், வெளியிலிருந்து வரும் படையெடுப்பினுல் ஏற்படும் ஆபத்தையும் சமாளிக்க என்ன செய்வது என்பதில் காரியக் கமிட்டி அதன் போன கூட்டத்தில் முடிவு செய்ய வேண்டி வந்தது.

கமிட்டியிடம் வற்புறுத்திக் கேட்டுக்கொண்டதாவது: "பலமுள்ளவர்களின் அகிம்சையில் உங்களுக்கு நம்பிக்கை இருந்தால் அதன்படி நடந்துகொள்ளுவதற்கு இதுவே ஏற்ற சமயம். பலமுள்ளவர்களின் அகிம்சையில் பல கட்சியினருக்கு நம்பிக்கையில்லை என்பதைப்பற்றிக் கவலையில்லை. அவசர நிலைமையை அகிம்சையினுல் காங்கிரஸ்காரர்கள் சமாளிக்க வேண்டும் என்பதற்கு அதுவே மிக முக்கியமான காரணமாகவும் ஆகக்கூடும். ஏனெனில், எல்லோரும் அகிம்சையோடிருந்தால், அராஜகக் குழப்ப நிலைமையே இராது. வெளியிலிருந்துவரும் ஆக்கிரமிப்பைச் சமாளிப்பதற்கென்று யாரும் ஆயுதபாணிகளாக வேண்டியும் இராது. அகிம்சையை நம்பாத பல கட்சிகளுக்கிடையே அகிம்சைக்குப் பிரதிநிதித்துவம் வகிக்கும் கட்சியாகக் காங்கிரஸ்காரர்கள் இருப்பதால், தங்களுடைய தருமத்தின்படி தங்களால் நடக்க முடியும் என்பதைக் காட்டியாக வேண்டியது காங்கிரஸ்காரருக்கு அவசியமாகிறது.

ஆனல், அதற்கு ஏற்றபடி காங்கிரஸ்காரர்களால் நடந்துகொள்ள முடியாது என்று காரியக் கமிட்டி உறுப்பினர்கள் கருதினர்கள். அவர்களுக்கு அது புது அனுபவமாக இருக்கும். இத்தகைய நெருக்கடியைச் சமாளிக்க வேண்டிய அவசியம் இதற்கு முன்னல் அவர்களுக்கு ஏற்பட்டதில்லை.

---

முடிந்ததை நீங்களே செய்துகொள்ளுங்கள். வர்தாவுக்குப் பதில் வேறு எங்காவது உங்கள் கூட்டங்களை வைத்துக்கொள்ளுங்கள்."

இவ்விதம் காரியக் கமிட்டி மகாத்மாவின் அகிம்சை முறையை ஏற்றுக்கொள்ளாததனுல் ஏற்பட்ட பிரிவுக்குப் பிறகே 'சந்தோஷமானதும் துக்கமானதும்' என்ற தலைப்பில் மேலே கண்ட கட்டுரையைக் காந்திஜி எழுதினர்.

வகுப்புக் கலவரங்கள் போன்றவைகளைச் சமாளிப்பதற்குச் சமாதானப் படையை அமைப்பதற்கு நான் செய்த முயற்சி முற்றிலும் தோற்றுப் போயிற்று. ஆகையால், கருதப்பட்ட நடவடிக்கையில் அவர்களால் நம்பிக்கை கொள்ள முடியவில்லை.

என் நிலைமையோ வேறு. காங்கிரஸைப் பொறுத்த வரையில் அகிம்சை அதற்கு ஒரு கொள்கையே. அதில் தவறிவிட்டால் அதைக் காங்கிரஸ் நிராகரித்துவிடலாம். ராஜீய, பொருளாதார சுதந்திரத்தை அதனால் அடைந்துவிட முடியவில்லையாயின் அதனால் ஒரு பயனுமில்லை. எனக்கோ அகிம்சை ஒரு தருமம். *நான் தன்னந்தனியாக இருந்தாலும், எனக்குத் துணை இருந்தாலும் நான் அதன்படி நடந்தாக வேண்டும். அகிம்சைப் பிரசாரம் எனது வாழ்க்கையின் லட்சியமாகிவிட்டதால் எல்லா நிலைமைக்கும் அதை நான் கடைப்பிடித்தாக வேண்டும். என்னுடைய நம்பிக்கையைக் கடவுள் முன்பும் மனிதன் முன்பும் நிரூபிக்கும் சமயம் எனக்கு இப்பொழுது வந்துவிட்டது என உணர்ந்தேன். ஆகவே, கமிட்டியில் எந்தத் தொடர்புமில்லாதபடி என்னை விலக்கிவிடும்படி கேட்டேன். இதுவரையில் காங்கிரஸின் பொதுவான கொள்கையை வகுப்பதில் நானே பொறுப்பாளியாக இருந்தேன். அவர்களுக்கும் எனக்கும் அடிப்படையிலேயே கருத்து வேற்றுமை இருக்கிறது என்பது தெரிந்துவிட்ட பிறகும் நான் அப்படிச் செய்து கொண்டு வர முடியாது. என் மனப்போக்குச் சரியானது என்பதை அவர்களும் உடனே ஒப்புக்கொண்டார்கள். அதன் தொடர்பிலிருந்து விலகிக்கொள்ள என்னை அனுமதித்துவிட்டார்கள். தங்களிடம் வைக்கப்பட்டுள்ள நம்பிக்கை நியாயமானது என்பதை மற்றொரு முறையும் அவர்கள் காட்டிக்கொண்டிருக்கிறார்கள். தங்கள் மனச்சாட்சிப்படி அவர்கள் உண்மையுடன் நடந்துகொண்டிருக்கின்றனர். தாங்களோ அல்லது

---

* தனித்து நிற்பதற்கான பலம் தமக்கு அளிக்கப்பட்டிருக்கிறது என்று காந்திஜி கூறும் இச்சந்தர்ப்பத்தில், "சமயம் வந்தால் நான் ஒன்றியாகவே நின்றும் போராட வேண்டும்" என்று 1940 மார்ச் 5-ஆம் தேதி காந்திஜி கூறியதும் முக்கியமாகக் கவனிக்க வேண்டியதாகும். சேகானுக்குச் சேவாகிராமம் என்று தமது விலாசத்தை மாற்றி அறிவித்து, 'எப்பொழுது?' என்ற தலைப்புடன் காந்திஜி 'ஹரிஜன்' பத்திரிகையில் எழுதிய தலையங்கத்தில் வருமாறு எழுதினார்: "காங்கிரஸ்காரர்களும் காங்கிரஸ்காரர்களல்லாதவர்களும் இன்னும் ஒன்றை அறிய வேண்டும். நாடு முழுவதுமே எனக்கு எதிராகத் திரும்பினாலும், சமயம் வரும்போது, நான் ஒன்றியாகவே நின்று போராட வேண்டும். அகிம்சையைத் தவிர மற்றவர்களுக்கு வேறு ஆயுதங்களும் இருக்கின்றன; இருக்கலாம். எனக்கோ வேறு வழியில்லை. ராஜீயத்துறையில் அகிம்சை முறையை உபயோகிக்கவேண்டும் என்பதற்கு நான் கர்த்தாவானதால் உள்ளுக்குள்ளிருந்த ஆர்வத்தை நான் உணரும்போது அப்படிப் போராட நான் கடமைப்பட்டிருக்கிறேன்."

தாங்கள் யாருக்குப் பிரதிநிதிகளாக் இருக்கிறார்களோ அவர்களோ, தங்களுடைய நடவடிக்கைகளில் அவற்றிற்குத் தேவையான அளவு அகிம்சையைக் காட்ட முடியும் என்ற நம்பிக்கை அவர்களுக்கு இல்லை. ஆகவே, அவர்கள் யோக்கியமாக எதைத் தேர்ந்தெடுத்துக்கொள்ள முடியுமோ அதைச் செய்திருக்கின்றனர். அவர்கள் செய்திருப்பது மிகப் பெரிய தியாகம். கலப்பில்லாத அகிம்சைக்காக உலகத்தில் அவர்கள் பெற்றிருந்த கௌரவத்தை அவர்கள் தியாகம் செய்திருப்பதோடு எனக்கும் அவர்களுக்குமிடையே எழுத்து மூலமும் பேச்சினாலும் இல்லாத தான பந்தத்தையும் அறுத்துக்கொண்டிருக்கின்றனர். ஆனால், பொதுவான ஒரு லட்சியம் அல்லது கொள்கையைப் பொதுவாக அனுசரிப்பதில் ஒரு பிளவை இது தோற்றுவித்தாலும் இருபது ஆண்டுகளுக்கு மேலாக எங்களிடையே இருந்து வந்திருக்கும் நட்பில் தோன்றிய பிளவு ஆகாது இது.

அடைந்திருக்கும் பலன்பற்றி நான் சந்தோஷம், துக்கம் ஆகிய இரண்டையும் அடைகிறேன். இந்தப் பிளவினால் ஏற்பட்டிருக்கும் மனக்கஷ்டத்தைத் தாங்கிக்கொள்ள என்னால் முடிந்ததுபற்றியும், தனித்து நான் மட்டுமே நிற்பதற்கு வேண்டிய பலம் எனக்கு அளிக்கப்பட்டிருப்பது குறித்தும் சந்தோஷம் அடைகிறேன்; அதே சமயத்தில் துக்கமும் அடைகிறேன். நேற்றுத்தான் போலத் தோன்றுகிறது: பல ஆண்டுகளாக என்னுடனேயே அவர்களை நடத்திச் செல்லும் பெருமைக்குரிய பாக்கியத்தைப் பெற்றிருந்தேன். ஆனால், அவர்களை என்னுடன் நடத்திச் செல்ல வேண்டிய சக்தியை என் சொற்கள் இழந்துவிட்டன என்று இப்பொழுது தெரிகிறது. இதனாலேயே துக்கம் அடைகிறேன். ஆனால், ஒன்றை மாத்திரம் நான் அறிவேன்: பலமுள்ளவர்களின் அகிம்சையின் ஆற்றலைக் காட்டும் வழியை மாத்திரம் கடவுள் எனக்குக் காண்பிப்பாராயின், இந்தப் பிளவு தாற்காலிகமானதே என்று நிரூபிக்கப்பட்டுவிடும். அந்த வழியே இல்லையென்றால், என்னை என் வழியில் போகும்படி விட்டுவிட்டுப் பிரிந்தபோது அவர்கள் புத்திசாலிகள் என்பதையும், அவர்கள் செய்தது நியாயம் என்பதையுமே இது காட்டும். எனக்குச் சக்தி போதாமல் துயரமான ஒரு நிலை ஏற்பட்டாலும், இத்தனை ஆண்டுகளாக என்னை நிலைபெறச் செய்து வந்திருக்கும் அந்த நம்பிக்கையை விடாமல் இருப்பேன் என்று நம்புகிறேன். மேலும், இந்த அகிம்சைச் சுடரை ஏந்திச் செல்வதற்குத் தகுதி வாய்ந்த கருவியல்ல நான் என்பதை உணர்ந்துகொள்ளும் அடக்கமும் எனக்கு இருக்கும் என்றும் நம்புகிறேன்.

ஆனால், காரியக் கமிட்டி உறுப்பினர்கள், காங்கிரஸ்காரர்களில் மிகப் பெரும்பான்மையினரின் உணர்ச்சியைப் பிரதிபலிக்கிறார்கள் என்ற கருத்தின் அடிப்படையிலேயே, இந்த வாதமும் சந்தேகமும். காங்கிரஸ்காரர்களில் மிகப் பெரும் பகுதியினரிடம் பலமுள்ளவர்களுக்கான அகிம்சை இருக்க வேண்டும் என்றே இவர்கள் விரும்புவார்கள் என்று நான் நம்புகிறேன். காங்கிரஸ்காரர்களின் பலத்தைக் குறைத்து மதிப்பிட்டுவிட்டார்கள் என்பதை அவர்கள் கண்டுகொள்ளுவார்களாயின் மற்றவர்களையெல்லாம்விட அவர்கள் அதிக சந்தோஷமே அடைவார்கள். என்றாலும், ஏற்படக்கூடிய நிலைமை என்னவெனில், பலமுள்ளவர்களின் அகிம்சையைப் பிரதிபலிப்பவர்கள் பெரும்பகுதியினர் என்று இல்லாவிடினும் தகுந்த சிறுபான்மையோராவது இருப்பார்கள் என்பதேயாம். இது விவாதிக்கக்கூடிய விஷயமல்ல என்பதையும் நினைவில் வைக்க வேண்டும். காரியக் கமிட்டி உறுப்பினரின் முன்னால் எல்லா வாதங்களும் இருக்கின்றன. ஆனால், உள்ளத்தின் உயர்ந்த பண்பிலிருந்து வரும் அகிம்சை, புத்திக்கு வேண்டுகோள் விடுவதனால் ஏற்பட்டுவிடாது. ஆகையால், இப்பொழுது வேண்டியதெல்லாம் அகிம்சையின் பலத்தை அமைதியாக, ஆனால் உறுதியுடன் காட்டுவதேயாகும். இதற்கான வாய்ப்பு ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு நாளும் ஏற்பட்டுக்கொண்டுதான் வருகிறது. வகுப்புச் சச்சரவுகள் இருக்கின்றன; கொள்ளைகள் நடக்கின்றன ; வாய்ச் சண்டைகளும் இருந்துகொண்டுதான் வருகின்றன. உண்மையிலேயே அகிம்சையுடனிருப்போர் இவை போன்ற விஷயங்களில் அதைச் செய்து காட்டலாம். இது போதிய அளவுக்குச் செய்து காட்டப்படுமானால், சுற்றுப்புறங்களிலும் இவ்வுணர்வு பரவாமல் இருந்துவிடாது. வெறும் அடத்தினால் அகிம்சையின் ஆற்றலில் அவநம்பிக்கை கொள்ளும் காங்கிரஸ்காரர் ஒருவர்கூட இல்லை என்பது தெளிவானது. உள்நாட்டுக் குழப்பங்களிலோ அல்லது வெளிநாட்டினரின் படையெடுப்பிலோ காங்கிரஸ் அகிம்சையையே மேற்கொள்ள வேண்டும் என்று நம்பும் காங்கிரஸ்காரர்கள், தங்களுடைய அன்றாட நடத்தையில் அதைக் காட்டட்டும். பலமுள்ளவர்களுக்கான அகிம்சை வெறும் கொள்கையாக மாத்திரம் இருக்க முடியாது. அது ஒரு தருமமாக – 'தருமம்' என்பது ஆட்சேபிக்கப்படுமானால் – ஒரு வேட்கையாக இருக்க வேண்டும். இத்தகைய வேட்கை கொண்டிருப்போர் தம்முடைய ஒவ்வொரு சிறு செயலிலுங்கூட அதைக் காட்டுகிறார். ஆகையால், அகிம்சையால் ஆட்கொள்ளப்பட்டிருப்போர் தம்முடைய குடும்ப வட்

டாரத்திலும், அக்கம் பக்கத்தில் இருப்போருடன் நடந்து கொள்ளுவதிலும், தம் தொழிலிலும், காங்கிரஸ் கூட்டங்களிலும் பொதுக்கூட்டங்களிலும், எதிராளிகளுடன் நடந்துகொள்வதிலும் அதைச் செய்துகாட்டுவார்கள். காங்கிரஸ்காரர்களிடையே இவ்விதம் செய்து காட்டப்படாததனாலேயே உள் நாட்டுக் குழப்பங்களையும் வெளியார் படையெடுப்பையும் அகிம்சை முறையில் சமாளிப்பதற்குக் காங்கிரஸ்காரர்கள் தயாராயில்லை என்ற முடிவுக்கு நியாயமாகவே காரியக் கமிட்டி உறுப்பினர் கள் வந்திருக்கிறார்கள். அகிம்சை நடவடிக்கையினால் உண்டா கும் சங்கடம், பொதுஜன விருப்பத்திற்கு ஆட்சி அதிகாரம் பணியும்படி செய்யும். ஆனால், அத்தகைய நடவடிக்கை குழப் பங்கள் ஏற்படும்போது பொருந்தாது. கலகத்தை விளைவிப்ப வர்களைப் பதிலுக்குத் தாக்காமல், அவர்களிடம் துவேஷமோ அல்லது கோபமோ கொள்ளாமல் உயிரையும் விட நாம் தயா ராக இருக்க வேண்டும். இதற்கு வேண்டியதான அகிம்சை, இதுவரை காங்கிரஸ் அறிந்து வந்திருக்கும் அகிம்சைக்கு, முற்றிலும் வேறுபட்டதான வகை என்பதை எளிதில் அறிந்து கொள்ளலாம். ஆனால், உண்மையானதும், தன்னைத் தானே அழித்துக்கொண்டாலும் உலகத்தைக் காப்பதற்குத் தகுதியுடை யதுமான அகிம்சை இது ஒன்றேயாம். போர்களின் சாபக்கேட் டிலிருந்து காப்பாற்றப்பட வேண்டும் என்று உலகம் விரும்பு கிறது. இதிலிருந்து விமோசனமடையும் மார்க்கம் அதற்குத் தெரியவில்லை. இந்த உலகிற்கு உண்மையான அகிம்சையின் வழியைக் காட்ட இந்தியாவினால் முடியாது போனாலும், அகிம்சை ஒன்றே உலகத்தைக் காக்க வல்லது என்பது நிச் சயம். சீக்கிரமாகவோ, நாள் கழித்தோ சமயம் மிஞ்சுவதற் குள் நிச்சயமாக இது நடந்தேறும்.

சேவா கிராமம், 24—6—1940

**குறிப்பு** :— மேலே கண்டதை நான் எழுதி 'டைப்பும்' செய்யப்பட்ட பிறகு பண்டித ஜவாஹர்லாலின் அறிக்கையை நான் பார்த்தேன்.* என்னைப்பற்றி அவர் குறிப்பிட்டிருக்கும் ஒவ்வொரு வாக்கியத்திலும் என்மீது அவருக்குள்ள அன்பும் நம்பிக்கையும் வெளிப்படுகின்றன. மேலே கண்டதில் எந்த

---

* பண்டித ஜவாஹர்லால் நேரு அப்பொழுது வெளியிட்ட அறிக்கையில், "காந்திஜி அணுகும் முறைக்கும் காரியக் கமிட்டி அணுகும் முறைக்கும் உள்ள பேதத்தைப் புரிந்து கொள்ள வேண்டும். அவருக்கும் காங்கிரஸுக்கும் பிளவு ஏற்பட்டு விட்டது என்று மக்கள் எண்ணுவதாகிவிடக்கூடாது. சென்ற இருபது வருட காங்கிரஸ் அவருடைய சிருஷ்டியும் குழந்தையுமாகும். அந்த பந்தத்தை எதுவும் தகர்த்துவிட முடியாது" என்றார். இவ்விதம் நேருஜி கூறியதையே காந்திஜி இக்குறிப்பில் குறிப்பிடுகிறார்.

வித மாற்றமும் அவசியமில்லை. தனித்தனியான இரு கருத்துக்களையும் வாசகர் அறிவது நல்லது. இந்தப் பிரிவினால் நல்லது ஏற்பட்டே ஆக வேண்டும்.

— 'ஹரிஜன்' - 29—6—1940

# 23

# ஒவ்வொரு பிரிட்டானியருக்கும்

1896-இல் தென்னாப்பிரிக்காவிலிருந்த ஒவ்வொரு பிரிட்டானியருக்கும் ஒரு வேண்டுகோள் விடுத்தேன். அந்நாட்டிற்குத் தொழிலாளராகவோ அல்லது வர்த்தகர்களாகவோ, அவர்களுக்கு உதவியாளராகவோ சென்றிருந்த என் நாட்டினரின் சார்பாகவே அதை விடுத்தேன். அதனால் பலன் உண்டாயிற்று. என் கருத்துப்படி அது முக்கியமானதே. ஆனால், இந்த வேண்டுகோளை வெளியிட இப்பொழுது என்னைத் தூண்டியிருக்கும் லட்சியத்துடன் அப்பொழுது நான் வேண்டிக்கொண்டதை ஒப்பிட்டால் அது ஒன்றுமே இல்லை. நாடுகளுக்குள் உறவை ஒழுங்குபடுத்திக்கொள்ளுவதற்கும், மற்றக் காரியங்களுக்கும், யுத்த முறைக்குப் பதிலாக அகிம்சை முறையை மேற்கொள்ளுமாறு ஒவ்வொரு பிரிட்டானியரையும், அவர் இப்பொழுது எங்கு இருந்து வந்தாலும், கேட்டுக்கொள்ளுகிறேன். ஜனநாயகத்தின் சார்பாக நடக்கும் யுத்தம் இது என்று உங்கள் ராஜதந்திரிகள் கூறியிருக்கிறார்கள். இந்தப் போர் நியாயம் என்று காட்ட மற்றும் பல காரணங்களும் கூறப்படுகின்றன. இவைகளையெல்லாம் மனப்பாடமாக நீங்கள் அறிவீர்கள். யுத்தத்தின் முடிவில் - அது எந்த வழியில் முடிவதாக இருந்தாலும் - ஜனநாயகத்திற்குப் பிரதிநிதித்துவம் வகிக்க ஜனநாயகம் என்பதே இராது என்று நான் கூறுகிறேன். இந்த யுத்தம் மனிதவர்க்கத்திற்கு ஒரு சாபத்தீடாகவும், எச்சரிக்கையாகவும் சம்பவித்திருக்கிறது. இதுவரை என்றுமே கண்டறியாத வகையில் மனிதனை மிருகத்தனமாக்கிக்கொண்டு வருவதால் இப்போர் சாபத்தீடு ஆகிறது. போரில் ஈடுபட்டிருப்போருக்கும் போரில் ஈடுபடாத பொது மக்களுக்குமிடையே இருந்த பேதங்களெல்லாம் நீக்கப்பட்டுவிட்டன. யாரையும், எதையுமே விட்டுவைக்கப் போவதில்லை. பொய் கூறுவதே ஒரு சிறந்த கலையாக்கப்பட்டுவிட்டது. சிறிய நாடுகளைப் பிரிட்டன் பாதுகாக்க வேண்டியதாயிற்று. தற்போது அந்நாடுகள் ஒவ்வொன்றாக மறைந்துவிட்டன. அது ஓர் எச்சரிக்கையுமாகும். மிருகத்தின் நிலைக்கு மனிதன் கொண்டு போகப்பட்டுவிடுவான்;

தன்னுடைய நடத்தையால் மிருகங்களும் வெட்கப்படும்படி மனிதன் செய்து வருகிறுன். இந்தக் கதியே ஏற்படப் போகிறது என்பதை ஒவ்வொருவரும் அறியலாம். ஆகவே, இது ஓர் எச்சரிக்கை. போர் மூண்டதுமே இதுதான் கதி என் பதைக் கண்டேன். ஆனுல், அதைச் சொல்லும் துணிவு எனக்கு இல்லே. இன்னும் காலங் கடந்துவிடுவதற்கு முன்னுல் அதைச் சொல்லும் துணிவைக் கடவுள் எனக்கு அளித்திருக்கிருர்.

போரை நிறுத்திவிட வேண்டும் என்று நான் கேட்டுக் கொள்ளுகிறேன். இது, போராடுவதற்கு வேண்டிய சக்தி யில்லாமல் நீங்கள் களேத்துப் போயிருக்கிறீர்கள் என்பதற்காக அல்ல. யுத்தம் தீமையானது என்பதற்காகவே கேட்டுக்கொள் ளுகிறேன். நாஜிஸத்தைக் கொன்றுவிட நீங்கள் விரும்புகி றீர்கள். அசிரத்தையுடன் அதையே மேற்கொள்ளுவதால் நீங்கள் அதைக் கொன்றுவிடவே முடியாது. ஜெர்மானியர் செய்து வரும் பல நாச வேலேயைத்தான் உங்கள் சிப்பாய்களும் செய்து வருகி ருர்கள். ஜெர்மானியரைப்போல அவ்வளவு திறமை வாய்ந்த நாசவேலேயாக உங்களுடையது இல்லே என்பது ஒன்றே இதிலுள்ள பேதமாக இருக்கக்கூடும். அதுதான் என்ருல், மிகவும் அதிகமாக இல்லாவிட்டாலும், உங்கள் நாசவேலே அதே திறமையைச் சீக்கிரத்தில் அடைந்துவிடும். வேறு எந்த நிலேயிலும் இப்போரில் நீங்கள் வெற்றி காண முடியாது. தெளிவாகச் சொல்லுவதாயின், நாஜிகளேவிட நீங்கள் அதிகக் கொடூரமானவர்களாக வேண்டும். லட்சியம் எவ்வளவுதான் நியா யமானதாக இருப்பினும், பாகுபாடே இன்றி ஒவ்வொரு நிமிடமும் செய்யப்பட்டு வரும் படுகொலே அதற்கு அவசி யம் ஆகாது. இன்று செய்யப்பட்டு வரும் மனிதத் தன்மையற்ற காரியங்களே அவசியமாக்கிவரும் ஒரு லட்சியத்தை நியாயமான தென்றே கூற முடியாது என்று நான் சொல்லுகிறேன்.

பிரிட்டன் தோல்வி அடைந்துவிட வேண்டும் என்று நான் விரும்பவில்லே; உடலினுலோ அல்லது மூளேயினுலோ வெளிப் படுத்தப்படுவதாயுள்ள மிருக பல பரீட்சையில் பிரிட்டன் வெற்றி பெறவேண்டும் என்றும் நான் விரும்பவில்லே. உங்கள் உடல் வன்மையிலுள்ள வீரம் ஊர்ஜிதமாகிவிட்ட உண்மை. உங்கள் உடல் பலத்தைப் போலவே அழிக்கும் சக்தியில் உங்கள் மூளேயும் இணேயில்லாதது என்பதை நீங்கள் காட்டிக்கொள்ள வேண்டுமா? நாஜிகளுடன் இத்தகைய கண்ணியக் குறைவான போட்டியில் இறங்க நீங்கள் விரும்பமாட்டீர்கள் என்று நம்பு கிறேன். மிகவும் வீரம் மிகுந்த சிப்பாய்க்கு உகந்ததான,

இன்னும் அதிக கண்ணியமான, தீரமான வழியை உங்களுக்குக் கூற முற்படுகிறேன். ஆயுதங்கள் இல்லாமல், அல்லது ராணுவச் சொற்களையே நான் உபயோகிக்க வேண்டுமானால், அகிம்சை ஆயுதங்களைக் கொண்டு நாஜிஸத்துடன் நீங்கள் போராட வேண்டும் என்று நான் விரும்புகிறேன். உங்களையோ, மனித வர்க்கத்தையோ காப்பதற்குப் பயனற்றவை என்று ஆயுதங்களை நீங்கள் எறிந்துவிட வேண்டும் என்று விரும்புகிறேன். ஹிட்லரையும் முஸ்ஸோலினியையும் அழைத்து, உங்களுடைய உடைமையாக இருப்பவை என்று நீங்கள் கூறிக்கொள்ளும் நாடுகளில் அவர்கள் விரும்புவதை எடுத்துக்கொள்ளச் சொல்லுங்கள். உங்களுடைய அழகிய தீவை, அதிலிருக்கும் அழகான உங்கள் கட்டிடங்களுடன் அவர்கள் எடுத்துக்கொள்ளட்டும். இவ்வகைளையெல்லாம் நீங்கள் கொடுத்துவிட்டாலும் உங்கள் உள்ளங்களையும் ஆத்மாக்களையும் மாத்திரம் கொடுத்துவிட மாட்டீர்கள். உங்கள் வீடுகளில் குடி புகுந்துவிட இந்தக் கனவான்கள் விரும்பினால், அவற்றை நீங்கள் காலி செய்து கொடுத்துவிடுவீர்கள். வெளியே தாராளமாகப் போய்விட அவர்கள் உங்களை அனுமதிக்கவில்லையானால், நீங்கள் ஆண், பெண், குழந்தைகள் உள்படப் படுகொலை செய்யப்பட்டுவிட அனுமதிப்பீர்களேயன்றி அவர்களுக்கு விசுவாசம் தெரிவிக்க மாத்திரம் மறுத்துவிடுவீர்கள்.

அகிம்சையோடு கூடிய ஒத்துழையாமை என்று நான் கூறும் இந்த வழி அல்லது முறையை இந்தியாவில் அனுசரித்ததில் அதிக அளவு வெற்றியைக் காணாது போகவில்லை. நான் கூறுவதை இந்தியாவில் இருக்கும் உங்கள் பிரதிநிதிகள் மறுக்கக்கூடும். அப்படி மறுப்பார்களாயின் அவர்களுக்காக நான் வருந்தவே செய்வேன். எங்களுடைய ஒத்துழையாமை முற்றிலும் அகிம்சையோடு கூடியதன்று என்றும், துவேஷத்தினால் பிறந்ததே அது என்றும் அவர்கள் உங்களுக்குச் சொல்லலாம். அந்த ருசுவை அவர்கள் கொடுப்பதாயின் அதை நான் மறுக்க மாட்டேன். அது முற்றிலும் அகிம்சையையே கொண்டதாக இருந்திருப்பின், எல்லா ஒத்துழையாதாரும் உங்களிடம் நல்லெண்ணம் நிறைந்தவர்களாக இருந்திருந்தால், இந்தியாவின் எஜமானர்களாக இருக்கும் நீங்கள் எங்களிடம் பாடங் கற்றுக்கொள்ளுபவராக இருந்திருப்பீர்கள்; எங்களுக்கு இருப்பதைவிட இன்னும் அதிகத் திறமையுடன் இணையற்றதான இந்த ஆயுதத்தை இன்னும் அதிகச் சிறப்புடையதாக்கி, ஜெர்மன், இத்தாலிய நண்பர்களின் அபாயத்தையும் அதைக்கொண்டே எதிர்த்திருக்கலாம். இதைத் தைரியத்துடன் கூறுவேன். சென்ற சில மாத ஐரோப்பாவின்

சரித்திரம் வேறு வகையில் எழுதப்பட்டும் இருக்கும். ஒரு பாவமும் அறியாதவர்கள் சிந்திய ரத்தக்கடலும், சிறிய நாடுகள் பலாத்காரத்துக்கு ஆளாக்கப்பட்டிருப்பதும், துவேஷத்தின் வெறியாட்டமும் இன்றி ஐரோப்பா தவிர்க்கப்பட்டும் இருக்கும்.

தம் காரியத்தை அறியாதவர் விடுக்கும் வேண்டுகோள் அல்ல இது. ஐம்பது ஆண்டுகளாக இடைவிடாது நான் அகிம்சையையும் அதன் சாத்தியங்களையும் விஞ்ஞான நுட்பத்துடன் அனுசரித்து வந்திருக்கிறேன். வீட்டுக் காரியம், ஸ்தாபன சம்பந்தமான காரியம், பொருளாதாரம், ராஜீயம் ஆகிய வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் அதை அனுசரித்திருக்கிறேன். அது தவறிப் போனதாக நான் அறியேன். அது தவறிவிட்டதாகத் தோன்றிய சமயங்களில்கூட, அதற்குக் காரணம் என்னிடமிருந்த குறைபாடு என்றே கொண்டிருக்கிறேன். முழுதும் குற்றமற்றவன் என்று நான் கூறிக்கொள்ளவில்லை. என்றாலும், கடவுளின் மற்றொரு பெயரேயான சத்தியத்தை வேட்கையுடன் நாடுகிறவன் நான் என்று சொல்லிக் கொள்ளுவேன். அந்தப் பணியை நிறைவேற்றிக்கொண்டு போவதைத் தவிர வாழ்வில் எனக்கு வேறு எந்தவிதமான சிரத்தையும் கிடையாது.

பிரிட்டிஷ் மக்களுக்கு முற்றிலும் தன்னல மற்ற நண்பனாக ஆயுளெல்லாம் இருந்து வந்திருக்கிறேன் என்றும் கூறுவேன். உங்கள் சாம்ராஜ்யத்தை நேசிப்பவனாகவும் ஒரு சமயம் இருந்திருக்கிறேன். அது இந்தியாவுக்கு நல்லது செய்கிறது என்று எண்ணினேன். அதன் தன்மையில் அது நல்லதையே செய்ய முடியாது என்று கண்டுகொண்டதும், ஏகாதிபத்தியத்துடன் போராட அகிம்சை முறையை உபயோகித்தேன்; இன்னும் உபயோகித்தும் வருகிறேன். என் நாட்டின் கதி எதுவாக இருப்பினும், என் அன்பு உங்களுக்கு இருந்து வருகிறது; குறையாமல் இருந்து வரும். என் அகிம்சை பிரபஞ்சம் முழுவதினிடமும் அன்போடிருக்கும்படி செய்கிறது; நீங்கள் அதன் அற்பசொற்பமான சிறுபகுதி அல்ல. அந்த அன்பே இந்தக் கோரிக்கையை உங்களுக்கு வெளியிடும்படி என்னைத் தூண்டியிருக்கிறது.

என் சொற்கள் ஒவ்வொன்றுக்கும் சக்தியைக் கடவுள் உங்களுக்கு அளிப்பாராக. அவருடைய பெயரால் இதை நான் எழுத ஆரம்பித்தேன்; அவர் பெயராலேயே இதை முடிக்கிறேன். என் கோரிக்கையை ஏற்கும் தீரமும் உங்கள் ராஜதந்திரிகளுக்கு இருப்பதாக. என்னுடைய கோரிக்கையின்

நோக்கத்தை மேற்கொண்டும் நிறைவேற்றுவதற்கு என்னுடைய சேவை அனுபவப் பயனுள்ளது என்று பிரிட்டிஷ் அரசாங்கம் கருதினால், அதை அளிக்க நான் தயாராயிருக்கிறேன் என்று வைசிராய்க்குக் கூறுகிறேன்.[1]

புது டில்லி, 6—7—1940 —'ஹரிஜன்'— 6—7—1940

## 24

# டில்லித் தீர்மானம்

காரியக் கமிட்டியின் துர்ப்பாக்கியமான தீர்மானம், பத்திரிகைகளுக்கு வெளியிடப்பட்டிருக்கிறது என்ற செய்தியை இப்பொழுதுதான் பார்த்தேன்.[2] என் முன்னிலையில்தான் அது

---

1. வைசிராய் திரும்பவும் மகாத்மாவைச் சிம்லாவுக்கு அழைத்து 1940 ஜுன் 29-ஆம் தேதி நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்தார். பிறகு ஜுலை 1-ஆம் தேதி மகாத்மா டில்லியிலிருந்து 'சில முக்கியமான பிரச்னைகள்' என்ற தலைப்பில் எச்சரிக்கும் கட்டுரை ஒன்றை எழுதினார். (அக்கட்டுரையின் பகுதியே இத்தொகுப்பில் 470-ஆம் பக்கத்தில் பிரசுரமாகியிருக்கிறது) இங்கிலாந்தின் மீதும் ஜெர்மன் படையெடுப்பு ஆரம்பமாகிவிடக்கூடும் என்ற நெருக்கடி நிலைமை அப்பொழுது இருந்து வந்தது. அச்சமயத்திலேயே மகாத்மா, "ஒவ்வொரு பிரிட்டானியருக்கும்" என்ற கட்டுரையை எழுதினார். பிரிட்டனின் லட்சியத்தில் தாம் சொந்தத்தில் செய்யும் பணிவான இவ்வுதவியைப் பிரிட்டிஷ் சர்க்காருக்கு அறிவிக்குமாறு வைசிராயை மகாத்மா கேட்டுக் கொண்டார். இதன்பேரில் வைசிராய் காந்திஜியின் கோரிக்கையைப் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு அனுப்பி, இதற்கு அது அளித்த பதிலையும் மகாத்மாவுக்குத் தெரிவித்தார். "உங்கள் நோக்கத்தைப் பிரிட்டிஷ் அரசாங்கம் பாராட்டுகிறது. ஆனால் இந்தப் போரை வெற்றிகரமான முடிவுக்குக் கொண்டு போயே தீருவது என்று, முழுச் சாம்ராஜ்யத்துடனும் ஒத்து அவர்கள் திடமான உறுதி கொண்டிருப்பதால், நீங்கள் எடுத்துக்காட்டும் கொள்கை அவர்கள் ஆலோசிக்கக் கூடியது என்று அவர்கள் கருதவில்லை" என்பது வைசிராய் மூலம் பிரிட்டிஷ் அரசாங்கத்தினிடமிருந்து வந்த பதில். மிகச் சிறு பகுதியையே அல்லாமல் மகாத்மாவின் வேண்டுகோள் முழுவதையும் எந்த பிரிட்டிஷ் பத்திரிகையும் பிரசுரிக்கவுமில்லை.

"ஒவ்வொரு பிரிட்டானியருக்கும்" என்ற தலைப்பில் 11—5—1942-லும் மகாத்மா எழுதினார். 17—5—1942-இல் 'ஹரிஜனி'ல் பிரசுரமான இக்கட்டுரை இப்பகுதியில் பின்னால் கொடுக்கப்பட்டிருக்கிறது.

2. காங்கிரஸ் காரியக் கமிட்டியின் அவசரக் கூட்டம் 1940 ஜுலை 3-ஆம் தேதி டில்லியில் நடந்தது. அதில் நிறைவேறிய தீர்மானத்தையே மகாத்மா குறிப்பிடுகிறார். இந்தியாவுக்குப் பூரண சுதந்திரத்தைப் பிரிட்டிஷ் அரசாங்கம் உடனே பிரகடனம் செய்ய வேண்டும் என்று காரியக் கமிட்டி மீண்டும் வற்புறுத்தியது. அத்தீர்மானம் புதிய யோசனை ஒன்றையும் கூறியது. அதாவது: "அதை நிறைவேற்றுவதற்கு உடனடி நடவடிக்கையாகத் தலைமையில் ஒரு தாற்காலிகத் தேசீய சர்க்காரை அமைக்கவேண்டும். இடைக்கால ஏற்பாடாகவே அது அமைக்கப்பட்டபோதிலும், மத்திய சட்டசபையில் தேர்தல் மூலம் வந்தவர்களாகவுள்ள எல்லாத் தரத்தினரின் நம்பிக்கையையும் பெறக்கூடியதாகவும், மாகாணங்களிலிருக்கும் மக்களுக்குப் பொறுப்புள்ளவைகளான அரசாங்கங்களின் முழு ஒத்துழைப்பையும் பெறக்கூடியதாகவும் அது இருக்கவேண்டும். மேலே சொன்ன பிரகடனம் செய்யப்படாது போனால்—அதன்படி தலைமையில் தாமதமின்றித் தேசீய சர்க்காரை அமைக்காதுபோனால்—பாதுகாப்புக்காக நாட்டிலே தார்மிகமாகவும்,

நிறைவேறியது. ஆனால், இப்படி அது பிரசுரமாவதற்கு முன்னால் அதைப் பற்றி எதுவும் கூற நான் விரும்பவில்லை; அதன் உறுப்பினர்கள் ஐந்து நாட்கள் முழுதும் தங்களுக்குள் சச்சரவிட்டிருக்கின்றனர் என்று நினைப்பது பெருந் தவறாகும். அவர்கள் பெரும் பொறுப்பை நிறைவேற்றியாக வேண்டி யிருந்தது. ராம்கர் தீர்மானத்திற்குத்* தருக்க ரீதியில் இத் தீர்மானம் மாறுபட்டதல்லவெனினும், அதன் உணர்ச்சியிலிருந்து இது மாறுபட்டதேயாகும் என்பதில் சந்தேகமில்லை. எழுத்து எப்பொழுதும் அப்படியே இருக்கிறது; உணர்ச்சி மாத்திரம்

மற்றும் பலவகையிலும் உதவி திரட்டச் செய்யப்படும், எந்த முயற்சியும் வலியச் செய்யப் படுவதாகவோ ஒரு சுதந்திர நாட்டிடமிருந்து வருவதாகவோ ஆகாதாகையால் அது பலனுள்ளதாக இராது என்பது காரியக் கமிட்டியின் கருத்து. இக் காரியங்கள் நிறை வேற்றப்படுமானால், நாட்டின் பாதுகாப்புக்குச் சரியானபடி ஏற்பாடு செய்வதற்குக் காங்கிரஸ் தனது முழுப் பலத்தையும் உபயோகிப்பது சாத்தியமாகும் என்று காரியக் கமிட்டி தெரிவித்துக்கொள்ளுகிறது.''

இத்தீர்மானத்தில் காணும் 'பாதுகாப்பு' என்பதைப்பற்றிய விளக்கத்தில் சிறிது சந்தேகம் இருந்தது. மௌலானா ஆஜாதும் ஸ்ரீ ராஜகோபாலாசாரியாரும், ''நிபந்தனை களைப் பிரிட்டிஷ் அரசாங்கம் ஒப்புக்கொண்டு நிறைவேற்றினால் யுத்தத்தில் காங்கிரஸ் முழு பங்கும் வகிக்கும் என்பதே அதன் பொருள்'' என்றனர். நேருஜி இதைப்பற்றிக் கூறுகையில், ''பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் யுத்த முயற்சிக்கு நாம் உதவவோ அல்லது படைக்கு ஆள் திரட்டும் சார்ஜெண்டுகளாக இருக்கவோ முடியாது என்பதை முன்பே தெளிவாகக் கூறியிருக்கிறோம். அந்த நிலைமையே இப்பொழுதும் மாறாமல் இருந்து வருகிறது. ஆனால், நமது சுதந்திரம் நிலைக்கச் செய்யவும், நமது பாதுகாப்புக்கும், நமது சுதந்திரத்தின் பாதுகாப்புக்கும் நமது ஆக்ஞையின்படி நம்மால் ஆனதைச் செய்ய நாம் தயாராக இருக்கிறோம்'' என்றார்.

அகிம்சையைத் தாம் கண்டிப்பாக அனுசரிப்பவர் எனக் கூறி 'எல்லைக் காந்தி' கான் அப்துல் கபார்கான் உடனே காரியக் கமிட்டியிலிருந்து விலகிக் கொண்டுவிட்டார்.

* இங்கே குறிப்பிடுவது, 1940 மார்ச்சில் ராம்கரில் நடந்த காங்கிரஸில் நிறைவேற்றிய தீர்மானத்தைப் பற்றியே யாகும். ''பூரண சுதந்திரத்திற்குக் குறைந்த தான எதையும் இந்திய மக்கள் ஏற்றுக்கொள்ள முடியாது; அரசியல் நிர்ணய சபை மூலமன்றி நிரந்தரமான பரிகாரம் சாத்தியமே இல்லை'' என்பதே அந்தத் தீர்மானம். ''இப்பொழுதுள்ள நிலைமையில், யுத்தத்தை நடத்துவதற்கு ஆள், பணம், சாமான்கள் உதவியைக் காங்கிரஸோ காங்கிரஸின் செல்வாக்கிற்கு உட்பட்டவர்களோ செய்ய முடியாது'' என்றும் அத் தீர்மானம் கூறியது.

ராம்கர் காங்கிரஸின் விஷயாலோசனைக் கூட்டத்தில் பாபு ராஜேந்திரப் பிரசாத் இத்தீர்மானத்தைக் கொண்டுவந்தார். இதை 2500 பேர் ஆதரித்தனர்; எதிர்த்தோர் 15 பேரே. 1934-இல் பம்பாயில் காங்கிரஸிலிருந்து காந்திஜி விலகியபோது, அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டங்களிலும் மகாநாட்டு விஷயாலோசனைக் கமிட்டிகளி லும் தம்மைப் பேசும்படிக் கூறக்கூடாது என்று காரியக்கமிட்டியிடம் சொல்லியிருந்தார். அதன்படி அக் கூட்டங்களில் மகாத்மா பேசுவதில்லை. ஆனால் ராம்கர் காங்கிரஸ் விஷயாலோசனைக் கமிட்டிக் கூட்டத்தில் பேச விரும்பிப் பேசினார். ''அநேகமாக ஏகமனதாகவே நீங்கள் தீர்மானத்தை நிறைவேற்றியிருக்கிறீர்கள். விவாதத்தை நான் கவனித்து வந்திருப்பதால் இது என் பொறுப்பை இன்னும் அதிகமாக்குகிறது. நான் விரும்பியிருந்தால், தீர்மானத்தின்மீது நீங்கள் உங்கள் வாக்குகளை அளிப்பதற்கு முன்னால் உங்களை எச்சரிக்கை செய்திருப்பேன். ஆனால் தீர்மானம் நிறைவேறு வதற்கு முன்னால் நான் இச் சபையில் பேசக்கூடாது என்று காரியக்கமிட்டி கூறிய யோசனையை நான் ஏற்றுக்கொண்டேன்'' என்றார் காந்திஜி.

மாறுகிறது. இதுவரையில், ஏதாவது ஒரு காரணத்தை முன் னிட்டுக் காங்கிரஸின் கொள்கை வருமாறு இருந்து வந்தது : பிரிட்டனின் சுயேச்சையான விருப்பத்தின் பேரில் முக்கியமான கோரிக்கை நிறைவேற்றி வைக்கப்படுமானல், காங்கிரஸினல் முடியக்கூடியதான தார்மிகச் செல்வாக்கைத் தவிரப் போரில் பங்கெடுத்துக் கொள்ளுவதற்கில்லை. காரியக் கமிட்டி உறுப் பினர்கள் எல்லோருடைய நிலையும் அதுவாகவே இருந்தது. பிறகு நெருக்கடியான சமயத்தில், மற்றவர்கள் கருத்து எது வானலும், உறுப்பினர் ஒவ்வொருவரும் சுயேச்சையாகத் தாம் ஒரு முடிவுக்கு வர வேண்டியவர்களாயினர். அந்த ஐந்து நாட்களிலும் மனத்தை ஆராய்ந்து கொள்ளும் மகத்தான காரியம் நடந்தது. நான் ஒரு நகல் தீர்மானத்தைத் தயாரித்தேன். முழுவதும் அகிம்சையில் நம்பிக்கை கொண்டிருக்கத் தங்களால் முடிந்தாலோ அல்லது தாங்கள் யாருடைய பிரதிநிதிகளோ அவர்களின் நம்பிக்கையும் அதுதான் என்று உண்மையாகத் தாங்கள் கூற முடிந்தாலோ என் நகல் தீர்மானம் மிகச் சிறந் ததுதான் என்று வெகுவாய் எல்லோருமே நினைத்தனர். சிலருக்கு இரண்டும் இல்லை ; சிலருக்குச் சொந்தத்தில் தேவையான நம்பிக்கை இருந்தது. தமது சொந்த நம்பிக்கையையும், தமது அன்பு வாய்ந்த குதா - இ - கித்மத்கார்களின் நம்பிக்கையையும் பொறுத்தவரையில் கான் சாகிப் மிகத் தெளிவாக இருந்தார். ஆகவே, சென்ற வர்தாத் தீர்மானத்திற்குப் பிறகே தமக்குக் காங் கிரஸில் இடமில்லை என்ற முடிவுக்கு அவர் வந்துவிட்டார். ஒரு விசேடக் கடமையும், தம்மைப் பின்பற்றுவோர் சம்பந்தமாக ஒரு விசேடமான பொறுப்பும் அவருக்கு உண்டு. ஆகவே, காங்கிர ஸிலிருந்து விலகிக்கொண்டுவிட ஆனந்தமாகவே அவரைக் காரியக் கமிட்டி அனுமதித்துவிட்டது. அப்படி விலகிக்கொண் டதன் மூலம், நான் செய்ய விரும்புவதைவிட அவர் அதிக மாகவே காங்கிரஸுக்குச் சேவை செய்கிருர். விலகும் நாங்கள், தற்சமயம் இழந்திருக்கிருர்கள் என்று தோன்றும் நம்பிக்கையை எங்கள் தோழர்களுக்கு அளிக்க முடியாதவர்களாகி விடுவோமோ என்னவோ யார் அறிவார்கள் ?

தீர்மானத்தைத் தயாரித்தவர் ராஜாஜி. என் நிலைமையைக் குறித்து நான் எவ்வளவு நிச்சயமாக இருக்கிறேனே அதே போல அவர் தமது நிலைமையைக் குறித்தும் நிச்சயமாக இருந் தார். பிடிப்பை விடாமல் அவர் இருந்து வந்தது, அவர் தைரியம், அவருடைய மிகுந்த அடக்கம் ஆகியவை அவர் பக்கத்திற்குச் சிலரைத் திருப்பின. அவர் பெற்ற பெரிய வெகு

மதி சர்தார் பட்டேல். அவரைத் தடுத்துவிடுவது என்று நான் முற்பட்டிருந்தால், இத்தீர்மானத்தைக் கொண்டு வருவதைக் குறித்து அவர் நினைத்தே இருக்கமாட்டார். அக்கறையும் தன்னம்பிக்கையும் எனக்கு இருப்பதாக நான் கூறிக் கொள்ளுவது போலவே என் தோழர்களுக்கும் அவை உண்டு என்று மதிக்கிறேன். எதிர்நோக்கி நிற்கும் ராஜீயப் பிரச்னைகள் சம்பந்தமான எங்களுடைய எண்ணத்தில் நாங்கள் ஒருவருக் கொருவர் தொலைவாக விலகிக்கொண்டிருக்கிறோம் என்பதை வெகு காலமாகவே நான் அறிவேன். அவருடைய எண்ணம் அகிம்சையிலிருந்து விலகியதாகும் என்று சொல்ல அவர் என்னை அனுமதிக்கமாட்டார். தம்முடைய அகிம்சையே தமது தீர்மானத்தில் உருவாகும் கட்டத்திற்குத் தம்மைக் கொண்டு போயிருக்கிறது என்கிறார். அகிம்சையைக் குறித்தே அதிகப்படியாக நினைத்துக்கொண்டிருப்பதால் அதுவே எனக்கு வியாதியாகிவிட்டது என்று அவர் எண்ணுகிறார்; என்னுடைய முன்னறிவு மங்கிப் போய்விட்டது என்றுகூட நினைக்கிறார். கொஞ்சம் தமாஷுடனே நான் செய்தாலும், இந்தத் துதிகளை நான் திருப்பிச் சொல்லி லாபமில்லை. அவருடைய போட்டி நம்பிக்கையை ஆட்சேபிக்க, என்னுடைய நம்பிக்கையைத் தவிர என்னிடம் வேறு ருசு கிடையாது. அது நகைக்கத் தக்கது என்பது தெரிந்தது. வர்தாவில் கமிட்டி என்னுடன் வரும்படி செய்ய என்னால் ஆகவில்லை. எனவே, என் விடுதலையைப் பெற்றுக் கொண்டேன். உடனே, வெட்ட வெளிச்சமாக ஒன்றைத் தெரிந்துகொண்டேன். என் நிலை ஏற்றுக்கொள்ளப்படவில்லையானால், அடுத்தபடியாக உண்மையாகவே இருப்பது ராஜாஜியின் நிலைதான் என்பதே அது. இதன் நடுவே அவரை, வேறு வழியில்லாமல், தவறிலேயே இருக்க வைத்திருந்தேனாயினும், தம் முயற்சியை விடாமல் செய்து வருமாறும் அவரை உற்சாகப் படுத்தினேன். தமக்குள்ள அதிசயிக்கத் தக்க பொறுமை, திறமை, எதிராளியின் கருத்தையும் கவனிக்கும் தன்மை ஆகியவைகளினால், நல்ல பெரும்பான்மைப் பலத்தை அவர் பெற்றுவிட்டார். ஐவர் நடுநிலைமை வகித்தனர். அச்சமயம் எனக்குப் பயமாகவே இருந்தது. பொதுவாக இதுபோன்ற தீர்மானம் பெரும்பான்மை வோட்டுகளால் நிறைவேற்றப்படுவதில்லை. ஆனால், இச்சமயத்தில் எல்லோரும் ஒத்துப் போவது என்பது எதிர்பார்க்க முடியாதது. ராஜாஜியின் தீர்மானத்தை அமலுக்குக் கொண்டுவர வேண்டும் என்று நான் யோசனை கூறினேன். ஆகவே, அத்தீர்மானத்தை நாடு அறியும்படி செய்வதென்று கடைசி நேரத்தில் கமிட்டி முடிவு செய்தது.

நன்மைக்கோ, தீமைக்கோ, காங்கிரஸ் மேற்கொண்டிருக்கும் மகத்தான காரியத்தை அறிவதற்குப் பொதுமக்களுக்கு இந்த நிலைக்களன் அவசியம். பலமுள்ளவர்களின் அகிம்சையில் உறுதியான நம்பிக்கை கொண்டிருக்கும் காங்கிரஸ் காரர்கள் இயற்கையாகவே ஒதுங்கிவிடுவார்கள். என்றாலும், அவர்கள் என்ன செய்ய முடியும் என்பது இச்சமயத் திற்கு முற்றிலும் பொருத்தமற்றது. ராஜாஜியின் தீர்மானம் காங்கிரஸ் ஆலோசித்து முடிவுக்கு வந்த கொள்கையாகிறது. என்னுடைய தரும மனப்பான்மையின் குறுக்கீடு இல்லாமல், முற்றிலும் ராஜீயப் போக்கையே அனுசரிப்பதில் காங்கிரஸ் சுயேச்சையாக இருக்க வேண்டும் என்பதில் ஆர்வத்துடனிருந்த காங்கிரஸ்காரர்களல்லாதவர்கள், அத்தீர்மானத்தை வரவேற்ப தோடு முழு மனத்துடனே ஆதரிக்கவேண்டும். முஸ்லிம் லீகும், சமஸ்தானத்தினரும், தங்களைப்பற்றி நினைக்காமல் இந்தியாவைப் பற்றியே அதிகமாக எண்ணிவரும் சுதேச மன்னர்களும் அவ் விதமே ஆதரிக்கவேண்டும்.

இதில் எதை ஏற்பது என்பதில் பிரிட்டிஷ் அரசாங்கம் முடிவுக்கு வரவேண்டும். என் முன்னறிவு எந்த அளவுக்கு மங்கிப் போயிருக்கிறது என்று ராஜாஜி கூறுகிறாரோ, அந்த அளவுக்குப் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கும் முன்னறிவு மங்கிப் போயிருந்தாலன்றி, அவர்கள் சுதந்திரத்தைக் கொடுக்காமல் இருக்கமுடியாது. சுதந்திரம் ஒப்புக்கொள்ளப்பட்டுவிடுமாயின், தீர்மானத்தின் மற்றப் பகுதிகளை ஏற்றுக்கொண்ட மாதிரிதான். கேள்வி என்னவெனில், இந்தியாவை ஆளுவோர் என்பதனால் இந்தியாவின் உதவியை அடைய விரும்புகிறார்களா அல்லது சுதந்திரமான, சுயேச்சை இந்தியா அளிக்கக்கூடிய உதவியை அடைய விரும்புகிறார்களா? தனிப்பட்ட முறையில் என் யோசனையை முன்பே கூறியிருக்கிறேன். என் உதவி எப்பொழு தும் இருக்கிறதென்பது உறுதியான விஷயம். அந்த யோசனையை ஏற்றுக்கொள்வது அவர்களுடைய வீரத்தை உயர்த்தாமலிருக்க முடியாது. ஆனால், அவர்களால் அதை ஏற்றுக்கொள்ள முடிய வில்லையானால், காங்கிரஸ் நட்போடு அளிக்க முன் வந்திருக்கும் கையை நிராகரித்துவிட்டது என்று இதில் சிரத்தையில்லாத, ஆனால், தீவிரமான நண்பன் என்ற முறையில் நான் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு யோசனை கூறுகிறேன்.

சேவா கிராமம், 6—7—1940. – 'ஹரிஜன்', – 13-7-1940.

# 25

# வருத்தப்படவில்லை

'ஒவ்வொரு பிரிட்டானியருக்கும் வேண்டுகோள்' என்பதை எழுதியதன் மூலம் அதிகப்படியான வேலைப் பளுவை என் தலை மீது போட்டுக்கொண்டு விட்டேன். கடவுளின் உதவியாலன்றி இப்பளுவைத் தாங்க என்னால் ஆகாது. நான் சுமந்துதான் ஆக வேண்டுமென்பதே அவர் விருப்பமாயின் அதைத் தாங்கிக் கொள்ளுவதற்கு வேண்டிய பலத்தையும் அவர் எனக்கு அளிப்பார்.

பெரும்பாலும் குஜராத்தி அல்லது ஹிந்துஸ்தானியிலேயே எழுதுவது என்று நான் முடிவு செய்துகொண்டபோது* இந்த வேண்டுகோளை நான் எழுதவேண்டியிருக்கும் என்ற எண்ணமே எனக்குக் கிடையாது. அது எனக்குத் திடீரெனத் தோன்றியது. அதோடு அதை எழுதும் துணிவும் எனக்கு வந்தது. வழி காட்டவேண்டும் என்று ஆங்கில, அமெரிக்க நண்பர்கள் வற்புறுத்தி வந்ததற்குப் பதில் கூறுமல் என்னை அடக்கிக் கொண்டுதான் வந்தேன். ஆனால், எனக்கு வழி தென்படவில்லை. இப்பொழுது வேண்டுகோளை வெளியிட்டுவிட்டதால் அதனால் ஏற்பட்டிருக்கும் அபிப்பிராயங்களையும் நான் தொடர்ந்து கவனித்துத்தான் ஆக வேண்டும். எனக்கு ஏராளமான கடிதங்கள் வந்துகொண்டே இருக்கின்றன. கோபத்துடன் எனக்கு ஒருவர் கொடுத்த தந்தியைத் தவிர ஆங்கிலேயரிடமிருந்து சிநேக முறையில் குறை கூறும் கடிதங்களே வந்து கொண்டிருக்கின்றன. சிலர் பாராட்டியும் எழுதியிருக்கிருர்கள்.

நான் அறிவித்ததைப் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு அனுப்பியதற்காக வைசிராய்க்குக் கடமைப்பட்டிருக்கிறேன். இது சம்பந்தமாக நடந்த கடிதப் போக்குவரத்துக்களை வாசகர்கள் முன்பே பார்த்திருப்பார்கள்; அல்லது இந்த இதழில் காண்பார்கள். இதைவிட நல்ல உடன்பாட்டை இந்தக் கோரிக்கைக்கு எதிர்பார்ப்பதற்கில்லை. என்றாலும், யுத்தத்தை வெற்றிகரமான முடிவுக்குக் கொண்டு போயே தீருவது என்ற உறுதி இருக்கிறது என்பதை நான் அறிந்திருந்ததே, அக்கோரிக்கையை வெளியிட என்னைத் தூண்டியது என்பதை நான்

* 1940 ஜூலை 7-ஆம் தேதி 'வனாந்தரத்தில் ஓலம்' என்ற தலைப்பின் கீழ் மகாத்மா ஒரு கட்டுரையை எழுதினர். அதுமுதல் இனித் தாம் குஜராத்தியிலேயே எழுதப் போவதாகவும், அதன் அங்கீகாரம் பெற்ற மொழிபெயர்ப்புக்கள் ஆங்கிலத்திலும் ஹிந்தியிலும் வெளியிடப்படும் என்றும் அறிவித்தார். இம்முடிவையே மகாத்மா இங்கே குறிப்பிடுகிருர்.

சொல்லாமலிருப்பதற்கில்லை. அந்த உறுதி இயற்கையான தாவதோடு சிறந்த பிரிட்டிஷ் பண்புக்கும் பொருத்தமானது என்பதில் சந்தேகமில்லை. என்றாலும், அந்த உறுதியினால் ஏற் படக்கூடிய பயங்கரமான படுகொலை, லட்சியத்தை அடை வதற்கு அதைவிடச் சிறந்த, வீரமான வழியைத் தேடும்படி தூண்டவேண்டும். ஏனெனில், யுத்தத்தின் வெற்றிகளைவிடச் சிறந்த வெற்றிகள் சமாதானத்திலும் உண்டு. சரணாகதி அடைந்துவிடுவது என்பதன்று அகிம்சை முறை. நவீன யுத்த தந்திரங்களையெல்லாம் அது தாறுமாறாக்கி அவைகளையெல்லாம் பயனற்றவையாகவும் செய்திருக்கும். எல்லோரும் கனவு கண்டு வரும் புது உலக ஒழுங்கும் நிச்சயமாக உண்டாகும். முடிவு வரையில் யுத்தம் நடத்தப்பட்டாலோ அல்லது பரஸ்பரம் இரு தரப்பும் களைத்துப் போய் ஒருவிதச் சமாதானம் ஏற்பட்டாலோ புதிய ஒழுங்கு ஏற்படுவது என்பதே சாத்தியமில்லை என்று நான் கருதுகிறேன்.

ஆகையால், ஒரு நண்பரிடமிருந்து வந்திருக்கும் கடிதத்தில் காணும் வாதத்தை இனி ஆராய்வோம். அந்த வாதமாவது :

" ஒவ்வொரு பிரிட்டானியருக்கும் நீங்கள் விடுத்திருக்கும் கோரிக்கை இப்போதைக்குப் பயன் தராது என்று உங்களைப் போன்றே இரு ஆங்கில நண்பர்கள் கூறுகிறார்கள். நீங்கள் கூறுவது போல, அகிம்சையில் மனமார்ந்த நம்பிக்கை இல்லாமல் நீங்கள் சொல்லுகிறபடி செய்வது என்பதைப் புரிந்து கொள்ள முடியாது. அப்படித் தெரிந்துகொள்ளாமல் சாதாரணமானவர்கள் முற்றிலும் தலை கீழாக மாறிவிடுவார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. உங்கள் வழியில் புதிய உலகத்தை உருவாக்குவதற்கு ஏற்ற சமயம் யுத்தத் திற்குப் பிறகுதான். உங்கள் மார்க்கமே சரியானது என்பதை அவர்கள் அறி கிறார்கள். ஆனால் இதற்கு முடிவற்ற தயாரிப்பு, போதனை, பெரிய தலைமை இவை வேண்டும் என்றும், இவற்றில் எதுவுமே தங்களுக்கு இல்லை என்றும் கூறுகின்றனர். இந்தியா சம்பந்தமாக இப்பொழுதிருக்கும் ஆட்சியின் போக்கு வருந்தத் தக்கது என்கின்றனர். வெகு காலத்திற்கு முன்பே இந்தியா வுக்குக் கானடாவைப் போலச் சுதந்திரமளித்துத் தங்கள் சொந்த அரசியலை அமைத்துக்கொள்ள இந்திய மக்கள் அனுமதிக்கப்பட்டிருக்க வேண்டும். ஆனால், அவர்களை இப்பொழுது பெரிதும் திகைக்க வைப்பதெல்லாம், பூரண சுதந்திரம் வேண்டும் என்று நீங்கள் விரும்புவது, நீங்கள் எடுத்துக்கொள்ளும் அடுத்த நடவடிக்கை, 'யுத்தத்தை நடத்துவதற்குப் பிரிட்டனுக்கு மேற்கொண் டும் எந்த உதவியும் கிடையாது; ஜெர்மனிக்குச் சரணாகதி அடைவது, அகிம்சை முறைகொண்டு அதை எதிர்ப்பது 'என்பனவே. இந்தத் தவறான அபிப்பிராயத்தை நீக்குவதை முன்னிட்டு உங்கள் கருத்து இன்னதென்பதை இன்னும் தெளிவாக நீங்கள் விளக்கவேண்டும். இது நேர்மையான கருத்து."

இப்பொழுதே பலன் உண்டாக வேண்டும் என்ற நோக் கத்திலே எழுந்தது அந்த வேண்டுகோள். கணித முறையைக் கொண்டு பார்ப்பதனால் அது வரக்கூடியது அன்று. மனத்தில்

உறுதி பிறந்துவிட்டால் செயல் பிறகு சுலபமானது. மக்கள் மனம் வற்புறுத்தலுக்கு உடன்படுகிறது. விரும்பிய பலனை அந்த வேண்டுகோள் உண்டாக்கிவிடவில்லை என்பதிலிருந்து, என் சொல்லுக்குச் சக்தியில்லை என்பதோ அல்லது கடவுளுக்கு ஒரு நோக்கம் இருக்கிறது, அது நமக்குத் தெரியவில்லை என்பதோ தெளிவாகிறது. வேதனைப்படும் உள்ளத்திலிருந்து வந்தது அந்த வேண்டுகோள். அதை அடக்கிவைக்க என்னால் முடியவில்லை. அந்தச் சமயத்திற்கு ஏற்ப எழுதப்பட்டதன்று அது. நிரந்தரமான மதிப்புள்ளதான சத்தியத்தை அது உச்சரிக்கிறது என்பது நிச்சயம்.

இப்போதிலிருந்தே தயார் செய்துகொள்ளவில்லையென்றால், யுத்தத்தின் பயங்கரமான முடிவிற்குப் பிறகு புதிய ஒழுங்கை உருவாக்குவதற்கு நேரமே இல்லாமல் போகலாம். அந்த ஒழுங்கு எதுவாயினும், அறிந்தோ, அறியாமலோ இப்போதிலிருந்தே செய்யும் முயற்சியின் பலனாகவே அது இருக்கும். உண்மையில் என்னுடைய வேண்டுகோளுக்கு முன்னாலேயே முயற்சி ஆரம்பமாகிவிட்டது. அதை இது ஊக்கியிருக்கிறது, அதற்குத் திட்டமான வழியைக் காட்டியிருக்கிறது என்று நம்புகிறேன். உத்தியோகப் பதவிகளில் இல்லாதவர்களும், பிரிட்டிஷ் பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்குகிறவர்களுமான தலைவர்கள், என்னுடைய நிலைமையின் உண்மையை உணர்ந்து கொண்டிருப்பார்களாயின், அதை அனுசரிப்பதற்கு வேலை செய்யும்படி யோசனை கூறுகிறேன். என்னுடைய வேண்டுகோளில் கிளப்பப்பட்டிருக்கும் பெரிய பிரச்னையுடன் ஒப்பிட்டால், இந்தியாவின் சுதந்திர விஷயம் அவ்வளவு முக்கியம் இல்லாததாக ஆகிறது. இரண்டு ஆங்கிலேயர்கள் கூறுவதுபோலப் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் போக்கு வருந்தத் தக்கது என்றே கருதுகிறேன். இந்தியாவின் சுதந்திரம் ஒப்புக்கொள்ளப்படுவதிலிருந்து இந்த இரண்டு நண்பர்கள் ஊகித்துக்கொண்டிருப்பது முற்றிலும் தவறானதாகும். நான் அதிலேயே இல்லை என்பதை அவர்கள் மறந்துவிட்டார்கள். காரியக் கமிட்டி கடைசியாகச் செய்திருக்கும் தீர்மானத்திற்குப் பொறுப்பானவர்கள், பிரிட்டனுக்குச் சுதந்திர இந்தியாவின் ஒத்துழைப்பு உண்டு என்றே கருதியிருக்கின்றனர். ஜெர்மனியிடம் அடிபணிவது அல்லது அகிம்சையான எதிர்ப்பு என்பது அவர்களிடம் இல்லை.

ஆனால், இந்தியாவின் சுதந்திரம், அதன் விளைவுகள் ஆகியவை எனக்குக் கவர்ச்சியளிக்கும் விஷயங்களேயானாலும் அவற்றிற்காக நான் இங்கே தாமதிப்பதற்கில்லை.

இந்தியாவின் ராணுவப் பாதுகாப்புக்குத் தயார் செய்து கொள்ள வேண்டாம் என்று நான் கூறிய யோசனையைக் காங்கிரஸ் நிராகரித்துவிட்டது; பிரிட்டனுக்கு வேண்டுகோள் விடுக்கவோ அல்லது அதனிடமிருந்து சாதகமான ஆதரவை எதிர்பார்க்கவோ எனக்கு வாய்ப்பில்லை என்பதை என் முன்னுலிருக்கும் பத்திரிகைகளின் துண்டுகளும் கடிதங்களும் கூறுகின்றன. இந்த வாதம் நியாயமானதாகத் தோன்றுகிறது. ஆனல், அது வெறும் தோற்றமே. நான் சொல்வதை என் மக்கள் கேட்கும்படி செய்ய நான் தவறிப் போயிருக்கும் போது, சாவா, வாழ்வா என்ற ஒரு போரின் நடுவில் இருந்து வரும் பிரிட்டன் நான் சொல்வதைக் கேட்கவேண்டுமென்று எதிர்பார்க்க எனக்கு உரிமை கிடையாது என்று என்னைக் குறை கூறுவோர் சொல்லுகிறார்கள். ஒரு லட்சியத்தைக் கொண்டவன் நான். பிரிட்டிஷ் மக்களைப் போல இந்தியாவின் கோடிக்கணக்கானவர்கள் யுத்தத்தின் கசப்பான அனுபவத்தைப் பார்த்தவர்கள் அல்ல. பிரிட்டன், தான் கூறியிருக்கும் காரியத்தை நிறைவேற்றிக்கொள்ள வேண்டுமாயின், தன்னுடைய கொள்கையில் தீவிரமான மாறுதலைச் செய்துகொள்ள வேண்டும். தேவைப்படும் மாறுதலை நான் அறிவதாகவே உணருகிறேன். என் கருத்தைக் காரியக் கமிட்டி ஏற்றுக்கொள்ளும்படி செய்ய என்னல் முடியாததற்கும் இப்பொழுது விவாதிக்கும் வஷயத்திற்கும் ஒரு சம்பந்தமுமில்லை. இந்தியாவின் விஷயத்திற்கும் பிரிட்டனின் விஷயத்திற்கும் பொருத்தமும் கிடையாது. ஆகையால், வேண்டுகோள் விடுத்ததற்காக நான் கொஞ்சமும் வருந்தவில்லை. அந்த வேண்டுகோளை விடுத்ததனல் என் ஆயுட்காலம்வரை நண்பன் என்ற முறையிலேயே நடந்திருக்கிறேன் என்பேன்.

"உங்கள் வேண்டுகோளை ஹிட்லருக்கு எழுதுங்கள்" என்று ஒருவர் கோபத்துடன் எழுதுகிறார். முதலாவதாக, ஹெர் ஹிட்லருக்கும் நான் எழுதினேன். நான் எழுதிய சிறிது காலத்திற்கெல்லாம் அது பத்திரிகைகளிலும் பிரசுரமாயிற்று. இரண்டாவதாக, அகிம்சையை மேற்கொள்ளுமாறு ஹெர் ஹிட்லருக்கு நான் வேண்டுகோள் விடுப்பது என்பதில் அர்த்தமும் இல்லை. வெற்றிக்கு மேல் வெற்றி அவருக்குக் கிடைத்துக்கொண்டிருக்கிறது. அதைத் தவிர்க்குமாறே நான் அவரைக் கேட்டுக்கொள்ளலாம். அதை நான் செய்துவிட்டேன். ஆனல், பிரிட்டனே இப்பொழுதுதான் பாதுகாத்துக்கொள்ளும் போர் நிலையில் இருக்கிறது. ஆகையால், உண்மையிலேயே சரியானதான

அகிம்சையோடு கூடிய ஒத்துழையாமை ஆயுதத்தை நான் அதற்கு அளிக்கமுடியும். தகுதியைப் பார்த்து என் முறை நிராகரிக்கப்படட்டும். ஆனால், தவறான உதாரணங்களையும் பொருந்தாத வாதங்களையும் கொண்டு அதை நிராகரிக்க வேண்டாம். நான் எழுப்பியிருக்கும் பிரச்னை பிரபஞ்ச முக்கியத்துவமுடையது என்று எண்ண நான் முற்படுகிறேன். குறை கூறும் எல்லோருமே அகிம்சை முறை பயனுள்ளது என்பதை ஏற்கின்றனர் எனத் தோன்றுகிறது. மனித சுபாவம் இப்பொழுது இருக்கும் வகையில், அகிம்சைத் தயாரிப்பினால் ஏற்படும் கஷ்டங்களுக்கு உடன்படுவது அசாத்தியம் என்று காரணமில்லாமலேயே அவர்கள் ஊகித்துக்கொள்ளுகிறனர். ஆனால், அது விஷயத்தைத் தெரிந்துகொள்ளாததாகும். "நீங்கள் எந்த அளவுக்கும் இம்முறையைப் பரீட்சித்ததில்லை. அது பரீட்சிக்கப்பட்ட வரையில் நல்ல பலனையே கொடுக்கிறது" என்று நான் சொல்லுகிறேன்.

சேவா கிராமம், 17—7—1940 — 'ஹரிஜன்' - 21—9—1940

# 26

# அவ்வளவு மோசமானதல்ல

ஓர் ஆங்கிலேய நண்பரிடமிருந்து வந்த கடிதத்திலிருந்து கீழ்க்கண்ட பகுதியை ஒரு நண்பர் குறிப்பிடுகிறார்:

"மகாத்மாவின் வேண்டுகோள் ஒரு பிரிட்டானியரின் எண்ணத்திலோ அல்லது உள்ளத்திலோ சரியான மாற்றத்தை உண்டாக்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? அந்த வேண்டுகோள் மற்றவற்றையெல்லாம்விட வெகுவாய் மனக் கசப்பையே சமீபத்தில் உண்டாக்கக்கூடும். திகைக்க வைக்கும் நெருக்கடியான காலத்தில் வாழ்ந்து வருகிறோம். என்ன செய்ய வேண்டும் என்பதில் முடிவுக்கு வருவது பயங்கரமான வகையில் கஷ்டமானதாக இருக்கிறது. என்றாலும், தெளிவாகத் தெரியும் ஆபத்துக்களைத் தவிர்த்துக்கொள்ளவே நாம் முயற்சி செய்ய வேண்டும். நான் பார்க்குமளவில் மகாத்மாவின் கலப்பற்ற கொள்கை, தவிர்க்க முடியாத வகையில், இந்தியாவை நாசத்திற்கே கொண்டு போய் விட்டுவிடும். அதை அவரே எவ்வளவு தூரம் பின்பற்ற விரும்புகிறார் என்பதை அறியேன். ஏனெனில், தம் சரக்குக்கு ஏற்றப்படி தம்மை ஈடுபடுத்திக்கொள்ளுவதில் அவர் வழி விசித்திரமானது."

சரி; என்னுடைய 'ஒவ்வொரு பிரிட்டானியருக்கும் வேண்டுகோள்' ஒரு தனிப்பட்டவர் உள்ளத்தை மாத்திரமன்று, மற்றும் பலருடைய உள்ளங்களைத் தொட்டிருக்கிறது என்பதை நான் அறிய நேர்ந்திருக்கிறது. அத்தகைய நடவடிக்கை எதையாவது நான் மேற்கொள்ள வேண்டும் என்றும் பல ஆங்கில நண்பர்

கள் ஆவலுடன் இருந்தார்கள் என்பதை அறிவேன். ஆங்கில நண்பர்களின் பாராட்டு, அதனளவில் இன்பமானதாக இருந்தாலும், அதோடு ஆறுதலடைந்து இருந்துவிட நான் விரும்பவில்லை. ஓர் ஆங்கிலேயராவது, மேலே கண்ட குறிப்பில் கூறப்பட்டிருப்பது போல எண்ணுகிறார் என்பதை அறிவது ஒன்றே எனக்கு முக்கியம். அவ்விதம் அறிந்திருப்பது நான் எச்சரிக்கையாக இருக்கும்படி செய்யும். சாத்தியமாயின், என் கருத்தை வெளியிடுவதற்கு உபயோகிக்கும் சொற்களைத் தேர்ந்தெடுப்பதில் அதிக எச்சரிக்கையுடன் இருக்கும்படி என்னை அது செய்யும். ஆனால், என் அன்புக்குரிய நண்பர்களின் வெறுப்புக்கூட என் முன் இருக்கும் கடமையை நான் செய்வதைத் தடுத்துவிடாது. வேண்டுகோளை விடுவதில் உள்ள இந்தக் கடமை மிக முக்கியமானதாகையால், அதை நான் செய்யாதிருக்க முடியாது. இதை நான் எழுதுவது எவ்வளவு நிச்சயமானதோ அவ்வளவு நிச்சயமானது, பிரிட்டனை நான் எந்த நிலைக்கு வர அழைத்தேனோ அந்த நிலைக்கு உலகம் வந்தாகவே வேண்டும் என்பது. ஆனந்தம் தரும், வெகு தொலைவிலில்லாத, அச்சம்பவத்தைக் காணப் போகிறவர்கள், என்னுடைய வேண்டுகோளைக் களிப்புடன் நினைவுபடுத்திக்கொள்வர். அதன் எதிர்பாராத வாய்ப்பை அந்த வேண்டுகோள் துரிதப்படுத்திவிட்டது என்பதை அறிவேன்.

இருப்பதைவிட இன்னும் அதிக வீரத்துடன் இருக்குமாறும், ஒவ்வொரு வகையிலும் இப்பொழுது இருப்பதைவிட மேலும் நன்றாக இருக்கும்படியும் தமக்கு விடுக்கப்படும் வேண்டுகோளைக் கண்டு ஒரு பிரிட்டானியராவது ஏன் வெறுக்க வேண்டும்? தம்மால் அது ஆகாது என்று அவர் சொல்லலாம். ஆனால், தம்முடைய உயர்ந்த சுபாவத்திற்கு விடுக்கப்படும் கோரிக்கையைக் கண்டு அவர் வெறுப்படைவதற்கில்லை.

அந்த வேண்டுகோள் கெட்ட எண்ணத்தை உண்டாக்குவானேன்? கோரிக்கையில் கண்ட விஷயத்திலோ அல்லது அதன் முறையிலோ அதற்கான காரணம் எதுவுமே இல்லை. போரை நிறுத்திவிடும்படி நான் யோசனை கூறவில்லை. மனித சுபாவத்திற்கு உகந்ததான, கடவுளுடன் மனிதன் பங்குகொள்ளுவதான, தெய்விகத் தன்மைக்கு அதை உயர்த்தும்படியே நான் யோசனை கூறினேன். வேண்டுகோளை வெளியிட்டதனால், நாஜிகளின் கையை நான் பலப்படுத்திவிட்டேன் என்பதே குறை சொல்லுவதின் மறை பொருளாயின், அது பரீசீலனைக்கு உகந்தது அல்ல. நவீனமான போர் முறையைப் பிரிட்டன் மேற்

கொள்ளுவதால், ஹெர் ஹிட்லர் கலக்கமடைந்து போகவே முடியும். தம்முடைய பிரமாதமான ஆயுதபலமெல்லாம் ஒரே அடியில் பயனற்றதாகி விடுவதை அவர் காண்பார். தாக்குதல் போராயினும், பாதுகாப்புக்கான போராஞலும், ஒரு யுத்த வீரனுக்குப் போரே வாழ்வு. தன்னுடைய போர்த்திறனுக்கு மதிப்பிராததைக் கண்டதும் அவன் கலங்கி விழுந்துவிடுகிருன்.

வீரத்தை விட்டுவிடுங்கள் என்று வீரமக்களுக்கு ஒரு கோழையினிடமிருந்து வருவதன்று என் வேண்டுகோள். துன்பத்திலிருப்பவருக்குச் சுகத்தில் இருக்கும் ஒரு நண்பரிடமிருந்து வரும் ஏளனமும் அன்று அது. நான் கூறியிருக்கும் விளக்கத்தைக் கொண்டு என்னுடைய வேண்டுகோளை மறுபடியும் படித்துப் பார்க்கும்படி கடிதம் எழுதியிருப்பவருக்கு யோசனை கூறுகிறேன்.

குறை கூறும் ஒவ்வொருவரும் சொல்லக்கூடியது போலவே, ஹெர் ஹிட்லருடைய விஷயமே அலாதி. நான் உலகத்தைப்பற்றியும், மனித சுபாவத்தைப்பற்றியும் ஒன்றுமே அறியாத முட்டாள் என்று சொல்லக்கூடும் என்பது ஒன்று. பாதகம் விளைவிக்காத ஒரு நற்சாட்சிப் பத்திரமாக இருக்கும் அது. துவேஷத்தையோ அல்லது கோபத்தையோ அது உண்டாக்க வேண்டிய அவசியமில்லை. இதற்கு முன்னலேயே இத்தகைய நற்சாட்சிப் பத்திரங்களை நான் பெற்றிருக்கிறேனுகையால், இது தீமையை விளைக்காது. எனக்குக் கிடைத்துள்ள இதுபோன்ற நற்சாட்சியில் இது அண்மையில் வந்தது என்ருலும், கடைசியானதாக இராது என்றே நம்புகிறேன். ஏனெனில், என்னுடைய பைத்தியக்காரத்தனமான சோதனைகள் இன்னும் முடிந்து விடவில்லை.

இந்தியாவைப் பொறுத்தவரையில், என்னுடைய கலப்பில்லாத கொள்கையை அது மேற்கொள்ளுமாயின், அதற்கு இது தீமையையே உண்டாக்காது. இந்தியா முழுவதுமே அதை நிராகரித்துவிட்டால், அதைத் தொடர்ந்து முட்டாள்தனமாகப் பின்பற்றி வருகிறவர்களைத் தவிர, மற்றேருக்குப் பாதகமே இருப்பதற்கில்லை. "தம்முடைய சரக்குக்கு ஏற்ற வகையில் தாம் அனுசரித்துக்கொண்டு போவதில் மகாத்மாவின் வழி விசித்திரமானது" என்று கடிதம் எழுதியிருப்பவர் கூறும்போது என்னுடைய பலமான ஆதாரத்தை அவர் கண்டு கொண்டிருக்கிருர். என் சரக்கைப்பற்றி எனக்கு இருக்கும் இயற்கையான அறிவு, அசைக்க முடியாததான ஒரு நம்பிக்கையை எனக்கு அளிக்கிறது.

சரக்குத் தயாராக இருக்கிறது என்று என்னுள் நான் உணரு கிறேன். என் இயற்கை உணர்வு என்னை ஒரு சமயங்கூட ஏமாற்றியதில்லை. ஆனால், முன்னால் ஏற்பட்ட அனுபவத்தைக் கொண்டு அதிகமாக நான் கோட்டை கட்டிவிடக் கூடாது. "ஓர் அடி முன்னுக்கு எடுத்து வைத்தாலும், அதுவே எனக்குப் போதும்."

சேவா கிராமம், 24—7—1940. —'ஹரிஜன்' - 28—7—1940.

# 27

# அகிம்சை அசாத்தியமா ?

"அகிம்சை சற்றும் பிசகாத ஓர் ஆயுதம், அகிம்சையைப் பூரண மாக அடைந்துவிட்ட ஒருவருக்கு இந்த உலகத்திலுள்ள வேறு எந்தச் சக்தியும் இணையாக இருக்க முடியாது என்பதைக் கொள்கை அளவில் ஒப்புக்கொள்ளலாம். ஆனால், இது சாத்தியமா ? சிங்கங்கள், புலிகள் போன்ற பயங்கரமான மிருகங்களைப் பழக்கி, ஆட்டுக்குட்டி யைப் போல அவைகளைச் சாதுவாக்கிவிடுவது யாராவது ஒரு யோகி யால் முடியலாம். ஆனால், அத்தகைய மிருகங்களிடமிருந்து தன்னைப் பாதுகாத்துக்கொள்வதற்குச் சாதாரணமான ஒருவர் துப்பாக்கியையோ அது போன்ற ஆயுதத்தையோ நம்பவேண்டியிருக்கிறது. நீங்கள் உங் களுக்கு இருக்கும் அற்புதச் சக்தியைக் கொண்டு மற்றவர்களைச் சித்த சக்தியாலேயே மாற்றிவிட முடியும். ஆனால், சாதாரணமானவர்கள், நீதி மன்றங்கள், வக்கீல்கள் போன்ற உலகில் காணும் பரிகாரங்களையே தேடவேண்டியிருக்கிறது. வெகு காலத்திற்கு முன்னர் - மங்கலான அந்த ஆதி யுகத்தில்கூட - அன்றாட வாழ்க்கையில் அகிம்சையை உபயோகித் தவர்களைக் குறித்து நாம் அவ்வளவாகக் கேள்விப்பட்டதும் கிடையாது. பகவான் புத்தர், மக்களை அகிம்சை வழியில் செலுத்தச் சிறிது காலம் முயற்சி செய்தார். ஆனால், அவருக்குப் பின்னால் நடந்தது என்ன ? புத்தரின் உபதேசங்களையும் மறந்துவிட்டுச் சமூகம் தன் பழைய வழியில் தான் செல்லத் தலைப்பட்டது. சமூகம் முன்னைவிட இனி அகிம்சை வழி யில் செல்லும் என்பதற்கான நம்பிக்கையை வருங்காலத்துக்குப் பழைய காலம் அளிக்கவுமில்லை. ஆகையால், நம் முனிவர்கள் புத்திசாலித்தன மாக உலகத்தைத் துறந்துவிட்டு, சத்தியத்தையும் அகிம்சையையும் அனு சரித்து நடப்பதற்காகக் காட்டுக்குச் சென்றிருக்கக்கூடும். அகிம்சை யைப் பின்பற்றும்படி ஒரு சிலருக்கு நீங்கள் உற்சாகம் ஊட்டக்கூடும். ஆனால், சமூகம் முழுமையுமே அதைக் கைக்கொள்ளும் என்பதற்கில்லை. ஒரு தேசீய சமுதாயம் என்ற வகையில் இந்தியாவுக்கு இந்த வாதம் பொருந்தும். தன்னுடைய சுதந்திரத்தை அடைவதற்கு அகிம்சையல்லாத வேறு முறைகளை மேற்கொள்ள வேண்டியதே இந்தியாவுக்கு அவசிய மாகிறது. அரிச்சுவடி படிக்கும் குழந்தை, திலகரின் கீதை போன்ற ஒரு நூலைப் படித்துப் புரிந்துகொள்ளும் என்று எதிர்பார்க்க முடியாது.

32

உலக இன்பங்களில் திளைத்துக்கிடக்கும் மக்கள் அகிம்சையின் உயர்வை அறிந்துகொண்டு விடுவார்கள் என்று எதிர்பார்ப்பதும் இதேபோலத் தான். மேலும், அகிம்சை இறுதியானதோர் லட்சியம். வைத்தியம் அல்லது என்சினீயரிங் பட்டம் பெறுவதற்கு வேண்டிய பயிற்சியைவிட இதற்கு இன்னும் அதிகப் பயிற்சி அவசியம். சத்தியம், அகிம்சை இவற்றைச் சாத்திரமாகவும் கலையாகவும் போதிப்பதற்கு ஏராளமான கல்லூரிகளும் பல்கலைக் கழகங்களும் தேவை. இன்று சமூகம் புதிய தேவைகளையெல்லாம் உண்டாக்கிக்கொண்டு அவற்றில் திருப்தி அடைவதற்கே தன்னுடைய சக்திகளையெல்லாம் செலவிட்டு வருகிறது. இந்தச் சமூகம் தன்னுடைய சக்திகளை அகிம்சை ஆராய்ச்சித் துறையில் திருப்பிவிடும் என்று எப்படி நீங்கள் எதிர்பார்க்கமுடியும்?''

இக்கடிதத்தை எழுதியிருப்பவருக்குத் தோன்றியுள்ள சந்தேகங்களும் சங்கடங்களுமே மற்றும் பலருக்கும் உண்டாகின்றன. இவற்றைத் தீர்க்கப் பல்வேறு சமயங்களில் நான் முயன்றும் இருக்கிறேன். ஆனால், அகிம்சையை ஒரு முக்கியமான பிரச்னையாக்குவதற்குக் காங்கிரஸ் காரியக் கமிட்டி காரணமாக இருந்திருப்பதால் இந்தவிதமான சந்தேகங்களையும் சங்கடங்களையும் சற்று விரிவாகக் கவனிக்க வேண்டியது அவசியமாகிறது.

சாராம்சமாக, எல்லாவற்றிற்கும் அகிம்சை பயன்படுமா என்பதை இக்கடிதம் எழுதியிருப்பவர் சந்தேகிக்கிறார். அதை நோக்கிச் சமூகம் எந்தவித முன்னேற்றத்தையும் அடையவில்லை என்று உறுதியாகச் சொல்லுகிறார். புத்தரைப் போன்ற மகான்கள் தோன்றிச் சிறிதளவு முயன்று, தம் வாழ்நாளில் ஒரு வேளை ஓர் அளவுக்கு வெற்றியை அடைந்திருக்கக்கூடும். என்றாலும், சமூகம் மாத்திரம் முன்னால் இருந்தபடியே இருந்து வருகிறது. 'ஒரு தனிப்பட்டவரின் கடமையாக இருப்பதற்கு அகிம்சை ஏற்றதாகலாம்; சமூகத்திற்கு இதனால் ஒரு பயனுமில்லை; தன்னுடைய சுதந்திரத்திற்காக இந்தியாவும் பலாத்காரத்தைக் கைக்கொள்ள வேண்டியதே' என்கிறார் இக்கடிதத்தை எழுதியிருப்பவர்.

இந்த வாதம் அடிப்படையிலேயே தவறானது என்று நான் கருதுகிறேன். சுயராஜ்யத்தை அடைவதற்கு அகிம்சையையே முறையாகக் காங்கிரஸ் மேற்கொண்டிருப்பதால் கடைசியாகக் கூறப்பட்டிருப்பது தவறானது. அது இன்னும் ஒருபடியும் அதிகமாகப் போயிருக்கிறது. உள்நாட்டுக் கலவரங்களிலெல்லாம் அகிம்சையே ஆயுதமாகத் தொடர்ந்து இருக்கப் போகிறதா என்ற கேள்வி எழுந்தபோது, ஆம்

என்று அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி தெளிவாகப் பதில் சொல்லியிருக்கிறது. வெளி ஆக்கிரமிப்புக்கு எதிரான பாது காப்பைப் பொறுத்தவரையில்மட்டும் ராணுவத்தை வைத் திருக்க வேண்டியது அவசியம் என்று காங்கிரஸ் கூறியிருக் கிறது. இந்த விஷயத்தில்கூட, அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி உறுப்பினர்களில் பலர் தீர்மானத்திற்கு எதிராக வாக்களித்திருக்கிறார்கள். வாக்கெடுக்கப்பட்டிருக்கும் விஷயம் கொள்கையைப் பற்றியதாக இருக்கும்போது இந்த எதிர்ப்பை யும் கவனத்தில் வைக்க வேண்டியதாகிறது. காங்கிரஸின் நடைமுறையை, எப்பொழுதும் பெரும்பான்மை வாக்குகளைக் கொண்டு முடிவு செய்ய வேண்டியதாகிறது. ஆனால், அது சிறுபான்மையினரின் வாக்குகளை ரத்து செய்துவிடுவதில்லை. அது என்றும் நிலவுகிறது. கொள்கை எதுவும் சம்பந்தப் படாதபோது, ஒரு வேலைத் திட்டத்தை நிறைவேற்ற வேண்டியிருக்கும் விஷயத்தில், பெரும்பான்மையினரைச் சிறு பான்மையினர் பின்பற்ற வேண்டியிருக்கிறது. ஆனால், கொள்கை சம்பந்தப்பட்டதாக இருக்கும்போது எதிர்ப்பு அப்படியே இருந்து வருவதுடன் சமயம் ஏற்படும்போது செயல் முறையில் அது வெளிப்பட்டே தீரும். எவ்வளவுதான் சிறியதாயினும் எல்லாச் சந்தர்ப்பங்களுக்கும் எல்லாக் காரியங்களுக்கும் அகிம் சையைச் சமூகம் அங்கீகரித்திருக்கிறது என்பதும், சமூகத்தின் உபயோகத்திற்கு ஒரு பரிகாரமாக அகிம்சை சுமாரான அளவு அபிவிருத்தியும் அடைந்திருக்கிறது எனபதும் அதன் பொருள். மேற்கொண்டும் அபிவிருத்தி அடையுமா, அடையாதா என்பது வேறு விஷயம். ஆகையால், காரியக் கமிட்டியின் தீர்மானம், இக்கடிதத்தை எழுதியிருப்பவரின் சந்தேகங்களுக்கு எந்த விதமான ஆதரவையும் அளித்துவிடவில்லை. இதற்கு மாறாக அத்தீர்மானம் ஓர் அளவுக்குச் சந்தேகங்களைப் போக்கவே வேண்டும்.

'நான் அரிதானதோர் தனி மனிதன் என்ற முறையில் விசேடமானவன். அகிம்சை சம்பந்தமாகச் சமூகம் ஏதாவது செய்திருப்பதும் என்னுடைய செல்வாக்கினாலேயே. அது என்னோடு மறைந்து போவது நிச்சயம்' என்ற வாதத்தையும் கவனிப்போம். இது சரியானதே அல்ல. தனித்துச் சிந்தனை செய்யக்கூடிய தலைவர்கள் காங்கிரஸில் பலர் இருக்கின்றனர். சிறந்த அறிவாளியான மௌலானா பெரிய சிந்தனையாளர் அதிகம் படித்திருக்கிறார் ; அரபு, பார்ஸி புலமையில் அவருக்கு மிஞ்சியவர்கள் யாரும் இல்லை. அகிம்சை ஒன்றே இந்தியாவை

விடுவிக்க முடியும் என்பது அனுபவத்தின் மூலம் அவர் கண்டதாகும். உள்நாட்டுக் கலவரங்களுக்கு எதிராக அகிம்சையையே ஆயுதமாக ஒப்புக்கொள்ள வேண்டும் என்ற தீர்மானத்தை வற்புறுத்தியவரும் அவரே. பண்டித ஜவாஹர்லால், யாருக்கும் பயந்து பணிந்துவிடுபவரல்ல. சரித்திர ஆராய்ச்சியிலும், தம் வாழ்நாளில் நிகழ்ந்திருக்கும் சம்பவங்களைப் பற்றிய ஞானத்திலும் அவரை மிஞ்சியவர்கள் யாருமில்லை. தீரச் சிந்தித்தே சுயராஜ்யத்தை அடைவதற்கு அகிம்சையை உபாயமாக அவர் ஏற்றுக்கொண்டிருக்கிறார். அகிம்சையால் முடியாது போய், பலாத்காரத்தினாலேயே சுயராஜ்யம் கிடைப்பதாயின், அந்தச் சுயராஜ்யத்தை ஏற்றுக்கொள்ளத் தாம் தயங்கப் போவதில்லை என்று அவர் சொன்னார் என்பது உண்மை. ஆனால், இந்த விஷயத்திற்கு அது பொருத்தமானதல்ல. சுயராஜ்யத்தை அடைவதற்காவது அகிம்சை ஒன்றே ஆயுதம் என்று நம்பும் மற்றும் பல பெரிய தலைவர்களும் காங்கிரஸில் இருக்கிறார்கள். நான் மறைந்தவுடனே அவர்கள் எல்லோரும் அகிம்சை வழியைக் கைவிட்டுவிடுவார்கள் என நினைப்பது, அவர்களை அவமதிப்போடு மனிதத் தன்மையையே அவமதிப்பதாகும். தனக்குத்தான் ஒவ்வொருவரும் சிந்தித்துக்கொள்ள முடியும் என்பதை நாம் நம்ப வேண்டும். அந்த அளவுக்குப் பரஸ்பரமான மரியாதை அபிவிருத்திக்கு மிகவும் முக்கியம். சுயேச்சையாகச் சிந்தித்து முடிவுக்கு வர நம்முடன் இருப்பவர்களால் முடியும் என்பதை ஏற்பதால் அவர்களை நாம் பலப்படுத்துவதோடு அவர்கள் அப்படிப் பலவீனர்களாக இருப்பதாக நிரூபிக்கப்பட்டிருந்தாலும், சுயேச்சையான கருத்துக் கொள்பவராக இருப்பதற்கும் அவர்களுக்கு எளிதாகும்.

காங்கிரஸோ அல்லது பல காங்கிரஸ் தலைவர்களோ அகிம்சைக்குக் கும்பிடு போட்டுவிட்டு அனுப்பிவிட்டார்கள் என்று இக்கடிதத்தை எழுதியவரோ அல்லது மற்றவர்களோ நம்பவில்லை என்றே நான் கருதுகிறேன். நான் குறிப்பிட்டிருக்கிற ஓர் அளவுக்குத் தனக்கு அகிம்சையிலுள்ள நம்பிக்கையைத் திரும்பவும் காங்கிரஸ் வற்புறுத்திக் கூறி, சந்தேகத்திற்கு இடமில்லாதபடி செய்திருக்கிறது. காங்கிரஸ் விதித்திருக்கும் அகிம்சையின் உபயோக எல்லையை அதிக அளவு குறுக்கியிருப்பதோடு அதனுடைய பெருமையும் மங்கும்படி செய்திருக்கிறது என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால், காங்கிரஸின் ஓர் எல்லைக்குட்பட்ட அகிம்சை நமது இப்

போதைய வாதத்திற்குப் போதுமானது. ஏனெனில், அகிம்சையின் உபயோக எல்லை விசாலமாகிக்கொண்டு வருகிறது என்பதையும், குறிப்பிட்ட அளவுக்கு அகிம்சையைக் காங்கிரஸ் ஏற்றுக்கொண்டிருப்பது போதுமான அளவுக்கு என் நிலைமையை ஆதரிப்பதாகிறது என்பதையும் காட்ட நான் முயன்று வருகிறேன்.

சரித்திர வரலாறு கிடைக்கும் தொன்மைக் காலத்திலிருந்து நம் காலம் வரையில் நடந்திருப்பவற்றைக் கவனித்தால், மனிதன் அகிம்சையை நோக்கி முன்னேறி வந்திருக்கிறான் என்பதைக் காணலாம். பழங்காலத்தில் நம் மூதாதையர் மனிதரை மனிதரே தின்னும் நிலையில் இருந்தார்கள். பிறகு மனிதனை மனிதன் அடித்துத் தின்பதில் வெறுப்பு ஏற்பட்டு வேட்டையாடிப் புசித்து வாழும் காலம் தொடங்கியது. வேட்டைமேல் அலையும் வாழ்க்கையை மனிதன் வெறுத்த கட்டம் பின்னால் வந்தது. எனவே, மனிதன் வேளாண்மை செய்ய முற்பட்டான். தன்னுடைய உணவுக்கு நிலத்தாயை நம்பியிருப்பவனானான். இவ்விதம் நாடோடியாக இருந்த மனிதன், நாகரிகமான நிலைப்பட்ட வாழ்க்கையில் இறங்கி, கிராமங்களையும் பட்டணங்களையும் அமைத்துக்கொண்டு, ஒரு குடும்பத்தினன் என்பதிலிருந்து ஒரு சமூகத்தினன், தேசத்தினன் என்பவன் ஆனான். இவை யெல்லாம் அகிம்சை வளர்ந்து, இம்சை குறைந்து வந்திருப்பதன் சின்னங்களே. இது வேறுவிதமாக இருந்திருக்குமானால் பிராணிகளில் கீழ் இனங்கள் பல அடியோடு மறைந்து போயிருப்பதைப் போல மனித இனமும் இதற்குள் மறைந்து போயிருக்கும்.

தீர்க்கதரிசிகளும் அவதார புருஷர்களும் ஏறக்குறைய அகிம்சைப் போதனையையே செய்திருக்கிறார்கள். அவர்களில் ஒருவர்கூட இம்சையைப் போதிக்க முற்பட்டதில்லை. வேறு விதமாக எவ்வாறு இருக்க முடியும்? ஹிம்சைக்குப் போதனை அவசியமே இல்லை. பிராணி என்ற வகையில் பலாத்காரமுள்ளவனே மனிதன். ஆனால், ஆத்மா அகிம்சையோடு கூடியது. உள்ளிருக்கும் ஆத்மாவுக்கு விழிப்பு ஏற்பட்ட பிறகு அவன் பலாத்காரமுள்ளவனாக இருக்க முடியாது. ஒன்று, அகிம்சையை நோக்கி அவன் முன்னேறவாவது வேண்டும்; இன்றேல், வேகமாக அழிவு நோக்கிச் செல்லவாவது வேண்டும். இதனாலேயே தீர்க்கதரிசிகளும் அவதார புருஷர்களும் அகிம்சையின் அம்சங்களான சத்தியம், ஒற்றுமை, சகோதரத்துவம், நீதி முதலியவைகளை உபதேசித்தார்கள்.

என்றாலும், இக்கடிதத்தை எழுதியிருப்பவரைப் போன்றவர்கள், பலாத்காரமே இறுதியான ஆயுதம் என்று நினைக்கும் அளவுக்கு அது இன்னும் இருந்துகொண்டுதான் வருகிறது. ஆனால், நான் எடுத்துக் காட்டியுள்ளதுபோல் சரித்திரமும் அனுபவமும் அவருக்கு எதிரிடையாக இருக்கின்றன.

அகிம்சையை நோக்கி மனித வர்க்கம் மெதுவாக முன்னேறியிருக்கிறது என்பதை நாம் நம்புவதாயின், மேற்கொண்டும் அதை நோக்கி முன்னேற வேண்டியிருக்கிறது என்றாகிறது. இந்த உலகில் எதுவும் நிலையானதல்ல; எல்லாம் மாறிக்கொண்டு இருப்பவை. அபிவிருத்தியே இல்லையென்றால், தவிர்க்க முடியாத பிற்போக்கே ஏற்படும். கடவுள் ஒருவரைத் தவிர மற்ற யாருமே இந்த நிரந்தரச் சுழலுக்கு வெளியே சுழலாமல் இருக்க இயலாது.

இப்பொழுது நடந்து வரும் யுத்தம், பலாத்காரத்தின் உச்ச நிலையை எட்டிவிட்டது. இதுவே அதற்கு அழிவு என்றும் என் புத்தியில் படுகிறது. இன்று இருப்பதைப் போல இதற்கு முன்பு என்றுமே அகிம்சை இவ்வளவு போற்றப்பட்டதில்லை என்ற உண்மைக்குத் தினமும் ஆதாரங்களைக் காண்கிறேன். மேற்கு நாடுகளிலிருந்து எனக்குத் தொடர்ந்து வந்துகொண்டிருக்கும் ஆதாரங்களெல்லாம் அதையே குறிப்பிடுகின்றன. குறிப்பிட்ட அளவுக்காயினும் காங்கிரஸ் அகிம்சைப் பிரதிக்ஞை கொண்டிருக்கிறது. கடிதம் எழுதியிருப்பவரும் அதைப் போலவே சந்தேகங் கொள்ளுகிறவர்களும் தங்களுடைய சந்தேகங்களை யெல்லாம் விட்டுவிட்டு அகிம்சையாகிய வேள்வித் தீயில் நம்பிக்கையுடன் குதிக்கும்படி அழைக்கிறேன். அதன் பிறகு காங்கிரஸ் பின் வாங்காது என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை. அது என்றும் தயாராயிருக்கிறது. நம் கவி பிரீதம் அழகாகப் பாடியிருக்கிறார்:

"தீயில் குதிப்போரே இன்பம் காண்பார்; இது திண்ணம். விலகி நிற்பவர் எவரும் வெஞ்சுடரில் வதங்குவர் காண்"

சேவா கிராமம், 5—8—1940. —'ஹரிஜன்' - 11—8—1940.

# 28

# ஒரு பிரிட்டானியர் செய்ய வேண்டியதும் வேண்டாததும் என்ன ?

**கேள்வி :** 'ஒவ்வொரு பிரிட்டானியருக்கும்' என்ற உங்கள் வேண்டுகோளில் நீங்கள் இவ்வாறு கூறுகிறீர்கள் : 'அவர்கள் விரும்பியதை எடுத்துக்கொள்ளுமாறு ஹெர் ஹிட்லரையும், ஸினர் முஸ்ஸோலினியையும் நீங்கள் அழைப்பீர்கள்.........உங்கள் உடைமைகளையெல்லாம் கொடுத்துவிடுவீர்கள். ஆனால், உங்கள் ஆத்மாவையோ மனத்தையோ மாத்திரம் கொடுத்துவிடமாட்டீர்கள்.........அவர்களுக்கு அடிமைப்பட்டிருக்க மாத்திரம் நீங்கள் மறுத்துவிடுவீர்கள்.' ஒரு பிரிட்டானியர் என்ன செய்ய வேண்டும், என்ன செய்யக்கூடாது என்பதைத் தயை செய்து விளக்குங்கள். ஒவ்வொரு சத்தியாக்கிரகியின் கடமைக்கும் சம்பந்தமுள்ளதாக உங்கள் பதில் இருக்கும் என்பதற்காகவே இக் கேள்வியைக் கேட்கிறேன்.

**பதில் :** உங்கள்மீது வெற்றி கொள்வோருக்கு ஆத்மாவை விட்டுக் கொடுத்துவிடக் கூடாது என்றால், உங்கள் மனச்சாட்சி தடுக்கும் காரியத்தைச் செய்ய நீங்கள் மறுத்துவிட வேண்டும் என்பது பொருள். உங்கள் மூக்கைத் தரையில் தேய்த்துக் கொள்ள வேண்டும் அல்லது காதைப் பிடித்து இழுத்துக் கொள்ள வேண்டும் அல்லது அப்படிப்பட்ட மானக்கேடான காரியங்களைச் செய்தாக வேண்டும் என்று 'எதிரி' உங்களிடம் கூறுகிறார் என்று வைத்துக்கொள்ளுவோம். இத்தகைய அவமானங்கள் எதற்கும் நீங்கள் உடன்பட மாட்டீர்கள். ஆனால், உங்கள் உடைமைகளைத் திருடுகிறான் என்றால், அவற்றை நீங்கள் விட்டுக் கொடுத்துவிடுவீர்கள். ஏனெனில், அகிம்சையைக் கடைப்பிடிக்கிறவர்கள் என்ற வகையில், சொத்துடைமைகளுக்கும் உங்கள் ஆத்மாவுக்கும் சம்பந்தமே இல்லை என்ற முடிவுக்கு ஆரம்பம் முதலே வந்திருக்கிறீர்கள். உங்களுக்குச் சொந்தமானவை என்று நீங்கள் கருதும் உடைமைகளை நீங்கள் சொந்தமாகக் கொள்ள உலகம் அனுமதிக்கும் வரையில்தான் அப்படி வைத்துக்கொள்ள முடியும்.

மனத்தைப் பறிகொடுத்துவிடக் கூடாது என்றால், மயக்கும் எந்தவிதமான ஆசைக்கும் இடங் கொடுத்துவிட மாட்டீர்கள்

என்பதாகும். மனிதன் எப்பொழுதுமே திட புத்தியில்லாதவன்; பேராசை, இனிக்கும் சொல் இவற்றின் வலையில் சிக்கிவிடக் கூடியவன். நமது சமூக வாழ்வில் இது தினமும் நடந்து வருவதைக் காண்கிறோம். திட புத்தியில்லாதவர், சத்தியாக்கிரகியாக என்றுமே இருக்க முடியாது. சத்தியாக்கிரகி, 'முடியாது' என்றால், அது என்றுமே 'முடியாது' தான்; 'சரி' என்றால் அது என்றும் 'சரி' தான். அப்படிப்பட்டவருக்கே சத்தியம்,அகிம்சை இவற்றின் பக்தராக இருப்பதற்கு வேண்டிய உறுதி உண்டு. ஆனால், வழாமல் இருப்பது என்பதற்கும், பிடிவாதம் என்பதற்கும் உள்ள பேதத்தை இங்கு அறிந்துகொள்ள வேண்டும். 'சரி' என்றோ, 'முடியாது' என்றோ சொல்லிவிட்ட பிறகு அந்த முடிவு தவறானது என்று ஒருவர் கண்டுகொண்டால், அப்படித் தெரிந்துகொண்ட பிறகும் அதிலேயே அவர் விடாப்பிடியாக இருப்பாராயின், அது தான் பிடிவாதமும் தவறுமாகும். ஒரு முடிவுக்கு வருவதற்கு முன்னால் காரியங்களை உன்னிப்பாகவும் நன்றாகவும் சிந்தித்தாக வேண்டியது அவசியம்.

அடிமைப்பட்டிருக்க மறுத்துவிடுவது என்பதன் பொருள் தெளிவானது. வெற்றி கொண்டவனின் சர்வ வல்லமைக்கு நீங்கள் பணியமாட்டீர்கள்; அவன் தன் நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்ளுவதற்கு உதவ மாட்டீர்கள். பிரிட்டன் தன்னுடையதாக இருக்க வேண்டும் என்று ஹெர் ஹிட்லர் என்றும் கனவு கண்டதில்லை. பிரிட்டன் தன் தோல்வியை ஒப்புக்கொள்ள வேண்டும் என்பதையே அவர் விரும்புகிறார். அப்பொழுது, தோல்வியுற்றவரிடம் எதை வேண்டுமானாலும் வெற்றி பெற்றவர் கேட்கலாம்; தோற்றவரும் பணிய வேண்டியதுதானே. தோல்வியை ஒப்புக்கொள்ளாதபட்சத்தில் தன் விரோதியைக் கொல்லும் வரை எதிரி போராடுவான். ஆனால் ஒரு சத்தியாக்கிரகி, எதிரி தம்மைக் கொல்ல முயலுவதற்கு முன்பே உடல் வரைக்கும் இறந்தவராகிறார். அதாவது, தம் உடலைப்பற்றிய பற்றைத் துறந்துவிட்டுச் சுயேச்சையாகத் தமது ஆத்மாவின் வெற்றியில் மாத்திரமே வாழ்கிறார். இவ்விதம் அவர் முன்பே இறக்கும்போது ஒருவரைக் கொல்ல அவர் ஏன் ஆவல் கொள்ளப் போகிறார்? கொல்லப்பட்டு மடிவது சாராம்சத்தில் தோல்வியுற்று மடிவதேயாகும். ஏனெனில், நீங்கள் உயிரோடிருக்கும்போது தான் பெற விரும்புவதை எதிரி அடைய முடியவில்லையாயின், உங்களைக் கொன்றுவிட்ட பிறகு அதைப் பெற முற்படுகிறான். இதற்கு மாறாக, உங்களுடைய உயிரின் பொருட்டாயினும், அவனுக்கு எதிராக உங்களுடைய கையைக்கூடத்

தூக்கும் எண்ணமே உங்களுக்கு ஒரு சிறிதும் கிடையாது என்பதை அவன் அறிந்துகொள்ளுவானாயின், உங்களைக் கொல்ல அவனுக்கு உற்சாகமே இல்லாது போகும். வேட்டையாடுகிறவர்கள் ஒவ்வொருவருக்கும் இந்த அனுபவம் உண்டு. பசுவை ஒருவர் வேட்டையாடியதாக யாருமே கேள்விப்பட்டதில்லை.

உங்கள் மனத்திலிருந்த கேள்விக்கு நான் பதிலளிக்கவில்லை என்று நீங்கள் காணக்கூடும். எல்லோருக்கும் தெரிந்ததான சில உதாரணங்களைக் கூறி உங்கள் பொதுவான கேள்விக்குப் பதில் தரப் பணிவுடன் முயன்று வந்திருக்கிறேன். பதில் கூறுமல் விடப்பட்டிருக்கும் கேள்விகளுக்கு விடையை இவற்றிலிருந்து கிரகித்துக்கொள்ள உங்களால் முடியும் என்று நம்புகிறேன்.

ஆத்ம கௌரவமும் சுயமதிப்பும் பலதரப்பட்டவர்களால், பலவகையாக விளக்கம் செய்யப்படுகின்றன. சுயமதிப்பு என்பதற்கு அடிக்கடி தவருன பொருள் கூறப்படுவதையும் அறிவேன். அதிகப்படியாக உணர்ச்சி வயப்பட்டிருப்பவர், அநேகமாக எதிலுமே அவமதிப்பும், மனப்புண்ணும் ஏற்படுவதாகக் காண்பார். சுயமதிப்பு இன்னதென்பதை உண்மையில் அப்படிப்பட்டவர் அறிந்துகொள்ளவில்லை. பல விஷயங்களில் இதுவே என் அனுபவம். ஆனல், அகிம்சையோடு இருப்பவர் சுயமதிப்பு என்பதைக் குறித்துத் தவருன கருத்துக் கொள்ள நேரிடினும், அதனல் தீமை ஏற்படுவதில்லை. தம்முடைய கௌரவம், தம்முடைய சுயமதிப்பு என்று அவர் எதை நம்புகிருரோ அதற்காக அவர் சந்தோஷமாகவே உயிர் விடலாம். தவறு செய்பவர் என்று அவர் நினைக்கும் ஆளைத் துன்புறுத்தவோ அல்லது கொல்லவோ அவருக்கு உரிமை மாத்திரம் கிடையாது.

சேவா கிராமம், 13—8—1940 —'ஹரிஜன்'- 18—8—1940

# 29

# 'செவிடன் காதில் ஊதிய சங்கு'

'பொருளையும் இன்பத்தையும் தருமத்தின் மூலம் பெறலாம். ஏன் இத்தகைய தருமத்தை எவரும் பின்பற்றுவதில்லை என்று நான் கைதூக்கிக் கதறிச் சொன்னலும், இதற்குச் செவி சாய்ப்போரும் இல்லையே!'

பாபுஜி ஆனே,* சிம்லாவுக்குப் போகும் வழியில் சென்ற சனிக்கிழமை அன்று டில்லிக்கு வந்து என்னைப் பார்த்துவிட்டுப் போனார். நாங்கள் சேர்ந்து வேலை செய்தாலும் அல்லது மாறுபட்ட வழிகளில் வேலை செய்துகொண்டு இருப்பதாகத் தோன்றினாலும், என்மீது அவருக்குள்ள அன்பு மாறாது இருந்துகொண்டிருக்கிறது. ஆகையால், நான் எங்கு இருந்தாலும் என்னைப் பார்க்க இருக்கும் சந்தர்ப்பத்தைத் தவற விடுவதில்லை. என்னிடம் தம்முடைய கருத்துக்களைத் தாராளமாகத் தெரிவிப்பார். தம்மிடம் வற்றாது இருந்துவரும் இருப்பிலிருந்த இரண்டொரு பாடல்களை எனக்குக் கூறுவார். அவர் டில்லி வந்திருந்தபோது காங்கிரஸிலிருந்து என்னுடைய தொடர்பை நான் ரத்து செய்துகொள்ள நேர்ந்ததைக் குறித்துத் தமது வருத்தத்தைத் தெரிவித்துக்கொண்டார். ஆனால், உண்மையில் என்னைப் பாராட்டினார். 'அவர்கள் உங்களை அமைதியாக இருக்கும்படி விட்டுவிடவேண்டும். உங்கள் வழியிலேயே நீங்கள் போக விடவேண்டும். பிரிட்டனுக்கு நீங்கள் விடுத்திருந்த வேண்டுகோளைப் படித்தேன். அது செவிடன் காதில் ஊதிய சங்கு போலவே ஆகும். ஆனால், அதைப்பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை. அவர்களுடைய தருமம் (கடமை) என்று நீங்கள் கருதுவதை நீங்கள் எடுத்துக் கூறாமல் இருக்க முடியாது. இந்த நெருக்கடியான சமயத்தில் நீங்கள் சொல்லுவதைக் காங்கிரஸே கேட்காமல் இருந்ததைக் காணும்போது அவர்கள் கேட்கவில்லையே என்பதில் ஆச்சரியமில்லை. வியாச முனிவர் சொன்னதை மற்றவர்கள் கேட்காமல் இருக்கையில் பிறர் சொல்வதை எங்கே மதிக்கப் போகிறார்கள்? தாம் எழுதிய மகாகாவியமான மகாபாரதத்தைப் பூர்த்தி செய்கையில் அவர் எழுதிய ஒரு செய்யுள் அவருடைய உள்ளத்தின் ஓலத்தை வெளிப்படுத்துகிறது' என்றார் பாபூஜி ஆனே. அதோடு நான் இக்கட்டுரையின் ஆரம்பத்தில் குறிப்பிட்டிருக்கும் செய்யுளையும் சொன்னார். அதன் மூலம் எனது நம்பிக்கையைப் பலப்படுத்தினார். நான் மேற்கொண்டிருக்கும் வழி எவ்வளவு கஷ்டமானது என்பதையும் காட்டினார்.

---

*பாபுஜி ஆனே என்று இங்கே காந்திஜி குறிப்பிடுவது ஸ்ரீ எம்.எஸ். ஆனேயை. இவர் அக்கால மத்திய சட்டசடையில் மும்முறை அங்கம் வகித்தார். 1930-இல் சட்ட மறுப்பு இயக்கத்தில் ஈடுபட்டுச் சிறைத் தண்டனை அனுபவித்தார். 1924-25லும் 1931-34லும் காங்கிரஸ் காரியக் கமிட்டி உறுப்பினராக இருந்தார். காங்கிரஸ் தேசீயக் கட்சியில் முக்கியமானவர். அகில இந்திய ஹிந்து லீகை ஆரம்பித்தவர் இவரே. காந்திஜி இக்கட்டுரையை எழுதியபோது ஸ்ரீ ஆனே வைஸ்ராய் நிர்வாக சபை மெம்பராக இருந்தார்.

என்றாலும், கருதப்படுவது போல அவ்வளவு கஷ்டமானதாக அது எனக்குத் தோன்றவில்லை. சர்தாரின் வழியும் என் வழியும் வேறுபட்டிருப்பதாக இன்று தோன்றினாலும், எங்கள் உள்ளங்கள் வேறாக விலகிப் போய்விடவில்லை. என்னிடமிருந்து அவர் விலகிப் போய்விடுவதை நிறுத்த எனக்குச் சக்தி இருந்தது. ஆனால், அப்படிச் செய்வது சரியாகத் தோன்றவில்லை. தம்முடைய தெளிவான கடமை என்று ராஜாஜி எதைத் திடமாக நம்புகிறாரோ அதிலிருந்து ராஜாஜியை மாற்ற முயல்வது ஒழுங்காக இராது. ஆகையால், அப்படிச் செய்யவேண்டாம் என்று ராஜாஜியைக் கூறுவதற்குப் பதிலாகத் தம் வழியில் போகும்படி அவரை உற்சாகப்படுத்தினேன். அதுவே நான் செய்தாகவேண்டிய தெளிவான கடமை. என்னுடைய நம்பிக்கை உறுதியோடு இருக்குமானால், புதிதேயான துறையில் என்னுடைய அகிம்சையின் சோதனையை வெற்றியுடன் நடத்துவதற்கு வேண்டிய சக்தி எனக்கு இருக்குமானால், பொதுமக்கள் அடிப்படையிலேயே அகிம்சையோடு தான் இருக்கிறார்கள் என்று நான் நினைப்பது சரியாகவே இருந்தால், ராஜாஜியும் சர்தாரும் முன் போலவே மீண்டும் என்னுடன் இருப்பார்கள். அகிம்சையைக் கையாளுவதற்குப் புதிய துறைகள் என்று தோன்றுபவைதாம் யாவை? காரியக் கமிட்டித் தீர்மானங்களையும், 'ஹரிஜன்' பத்திரிகையில் நான் எழுதி வந்திருப்பவைகளையும் கவனித்து வருபவர்களுக்கு அவை நன்றாகத் தெரியும். ஆட்சியில் இருக்கும் அதிகாரத்தின்மீது அகிம்சையின் மூலம் நடவடிக்கை எடுப்பது என்பது ஒரு துறை. இதுவரை அதை அனுசரித்து ஒரு நல்ல அளவிற்கு வெற்றியும் கண்டிருக்கிறோம். இது பலமில்லாதவர்களின் அகிம்சை என்று நான் எப்பொழுதும் விவரித்து வந்திருக்கிறேன். இத்தகைய அகிம்சை காங்கிரஸ்காரர்களிடம் நிரந்தரமாகிவிட்டது என்றும் சொல்லலாம்.

மற்றொரு துறை, ஹிந்து - முஸ்லிம் கலவரம் போன்ற உள்நாட்டுக் குழப்பங்களில் அகிம்சையை அனுசரிப்பது என்பது. இத்துறையில் அகிம்சையை அனுசரிப்பதில் தெளிவாகப் புலனாகும் வகையில் வெற்றியைக் காட்ட நம்மால் முடியவில்லை. அப்படியானால், உள்நாட்டுக் குழப்பம் ஏற்பட்டுவிடும் என்று இருக்கும் இச்சமயத்தில் காங்கிரஸ்காரர்கள் என்ன செய்வது? அவர்கள் அடிக்குப் பதில் அடிப்பதா அல்லது பலாத்காரமான அடிகளை வாங்கிக்கொள்ளச் சந்தோஷத்தோடு தங்கள் தலைகளை வணங்கிக்கொடுப்பதா? இதற்குப் பதில், நாம் எண்ணுவது போல, அவ்வளவு எளிதானதல்ல. இதில்

இருக்கும் நுட்பங்களுக்கெல்லாம் போகாமல் நான் ஒன்று சொல்லுவேன் : யாரையும் கொல்லாமல் தங்கள் உயிரைக் கொடுப்பதன் மூலம் நிலைமையைச் சமாளிக்க முயல வேண்டும் என்பதே அது. ஓர் அடிகூட அடிக்காமல் யார் மரணத்தை ஏற்கின்றனரோ அவர் தம் கடமையை நூற்றுக்கு நூறு நிறைவேற்றியவராவார் ; பலன் கடவுள் கையில் இருக்கிறது.

ஆனால், இந்த அகிம்சை பலவீனர்களின் அகிம்சை அல்ல என்பது தெளிவானது. சிறைப்படுவதில் இருக்கும் இன்பத்தை இது அளிக்கவில்லை. அந்த இன்பத்தை ஒருவர் அடைவதோடு அரசாங்கத்திற்கு எதிராகத் தம் உள்ளத்தில் வைத்திருக்கும் கெட்ட எண்ணத்தையும் அதன் மூலம் மறைக்கலாம். ஒருவர் சர்க்காருடனும் ஒத்துழையாமை செய்யலாம். ஆனால், கத்திகள், தடிகள், கற்கள் எல்லாம் தாராளமாக உபயோகிக்கப்படும் இடத்தில் தன்னந்தனியாக இருப்பவர் என்ன செய்வது ? தம் உள்ளத்தில் கெட்ட எண்ணத்தை வைத்துக்கொண்டே கொல்ல வரும் தாக்குதல்களையெல்லாம் அவர் வாங்கிக்கொள்ளுவது சாத்தியமா ? அவர் தருமமே நிறைந்தவராக இருந்தாலன்றி இப்படிச் செய்வது சாத்தியமில்லை என்பது தெளிவானது. எதிராளியும் தானும் ஒன்றே என்று உணருபவர் மாத்திரமே எதிராளியின் அடிகளைத் தம்மீது விழும் மலர்களாக ஏற்க முடியும். அப்படிப்பட்டவர் ஒருவரே என்றாலும், கடவுள் அருள் அவருக்கு இருந்தால், ஆயிரம் பேர் செய்யும் வேலையை அவர் ஒருவரே செய்ய முடியும். இதற்கு உயர்வகையான ஆத்ம சக்தி, தார்மிக தீரம் வேண்டும்.

தீரமிக்கவர்களுக்கான இந்த அகிம்சையைக் காட்டவல்ல ஓர் ஆணோ, பெண்ணோ வெளியார் படையெடுப்பை எளிதாக எதிர்த்து நிற்க முடியும். இதுதான் அகிம்சையை அனுசரிப்பதற்கான மூன்றாவது துறை. உள்நாட்டுக் கலவரங்கள் சம்பந்தமாக அகிம்சையை நாம் அனுசரிப்பது சாத்தியமே என்றாலும் வெளிநாட்டுப் படையெடுப்புக்கு எதிராக அகிம்சையை உபயோகிப்பதற்கு வேண்டிய பலம் இந்தியாவுக்கு இல்லை என்று காங்கிரஸ் காரியக் கமிட்டி கருதுகிறது. அவர்களுக்குப் போதிய நம்பிக்கை இல்லாதது எனக்கு மனவேதனையைத் தருகிறது. நிராயுதபாணிகளான இந்தியாவின் கோடிக்கணக்கான மக்கள், இந்த விரிவான துறையில் அகிம்சையை அனுசரிக்க முடியாது என்பதை நான் நம்பவில்லை. பலமுள்ளவர்களின் அகிம்சையில் சர்தாருக்கு இருந்த நம்பிக்கை இப்பொழுது

சிதைந்திருக்கிறது. மேலே சொன்ன துறைகளில்தான் அகிம்சை இந்தியாவுக்குப் பொருந்தும் என்று அவர் எண்ணுகிருர். அவருக்கு உறுதி அளிக்க வேண்டியவர்கள் காங்கிரஸ்காரர்களே. 'ஆனல், இந்தியாவில் இருக்கும் போர்வீர மரபினரின் விஷயம் என்ன ?' என்று யாரும் கேட்டுவிட வேண்டாம். அந்தக் காரணத்தினுலேயே அகிம்சை ராணுவத்தைக் கொண்டு இந்தியாவைப் பாதுகாக்கக் காங்கிரஸ்காரர்கள் தங்களைப் பழக்கிக்கொள்ள வேண்டும். இது முற்றிலும் புதியதான பரீட்சை. இதை மற்றத் துறைகளில் வெற்றியுடன் பரீட்சித்துப் பார்த்திருக்கும் காங்கிரஸைத் தவிர வேறு யார் இதில் முயற்சி செய்ய முடியும்? நம்மிடம் அகிம்சைச் சிப்பாய்கள் போதிய அளவு இருப்பார்களானல், வீணுக விரயமாகும் கோடிக்கணக்கான ரூபாய்களையும் மிச்சப்படுத்துவதோடு இந்தப் புதிய துறையிலும் நாம் வெற்றி பெறுவோம் என்பது என்னுடைய அசைக்க முடியாத நம்பிக்கை.

ஆகையால், குஜராத்திலுள்ள எல்லாக் காங்கிரஸ்காரர்களும், ஆண்களும் பெண்களும், அகிம்சையில் தங்களுக்குள்ள உறுதியை அறிவித்துத் தாங்கள் பலாத்காரத்தில் ஈடுபடுவதில்லை என்று சர்தாருக்கு மீண்டும் உறுதி கூறுவார்கள் என நம்புகிறேன். பலாத்காரத்தை அனுசரிப்பதில் வெற்றி நிச்சயம் என்ற நம்பிக்கை இருந்தாலும், அகிம்சையை உபயோகிப்பதற்கு மாருக அதை அவர்கள் விரும்பக்கூடாது. நம் தவறுகளால் நிச்சயம் நாம் கற்றுக்கொள்ளுவோம். எழுவதற்கே வீழ்ச்சி அடைகிரேம்; நன்ருகப் போராடுவதற்கே திகைப்புறுகிரேம்; விழிப்புறுவதற்கே தூங்குகிரேம்.

[வர்தாவுக்குப் போகும் வழியில்
ரெயிலில் 7—7—1940-இல் எழுதியது.]

—'ஹரிஜன்' — 13—7—1940

## 30

# காந்தி சேவா சங்கத்தின் முன்பு

காங்கிரஸைச் சேர்ந்தவர்கள் அகிம்சையில் நம்பிக்கையை இழந்துவிட்டார்கள், நெருக்கடிக் காலத்தில் முன் நிற்க அவர்கள் வரமாட்டார்கள் என்று காரியக் கமிட்டி நினைத்தது தவறு என்ருல், எல்லோருமாகச் சேர்ந்து காரியக் கமிட்டிக்கு மீண்டும்

உறுதி கூறவேண்டும். இதற்கு முன்னால் காந்திஜி எழுதிய கட்டுரையில் குஜராத்திகளைப்பற்றிக் குறிப்பிடும்போது அவர் இதையே கூறினார். காரியக் கமிட்டிக்கூட்டம் வர்தாவில் நடந்தபிறகு காந்தி சேவா சங்கம், சர்க்கா சங்கம் ஆகியவை களின் இணைப்புக் கூட்டத்தில் காந்திஜி பேசுகையில் இதையே மேலும் தெளிவாக விளக்கிக் கூறினார். அவர் சொன்ன தாவது:

"உங்களுக்குச் சோதனைக் காலம் வந்திருக்கிறது. காரியக் கமிட்டியைச் சீர்தூக்கிப் பார்க்கும்போது குறைபாடு உடைய தாகவே காணப்படுகிறது என்று வைத்துக்கொள்ளுவோம். அவர்கள் தவறியதை ஒழுங்குபடுத்தக் காந்தி சேவா சங்கம் ஏதாவது செய்ய முடியுமா? அகிம்சையில் தங்கள் நம்பிக்கையை அறிவிக்குமாறு பொதுமக்களை நீங்கள் கேட்டுக்கொள்ளக் கூடாது என்பதன்று, காரியக் கமிட்டியின் தீர்மானம். நீங்கள் கேட்டுக்கொள்ளலாம். பிறகு காரியக்கமிட்டி உறுப்பினரிடம் 'எங்கள் நம்பிக்கையை நீங்கள் குறைத்து மதித்துவிட்டீர்கள், எங்கள் தருமத்தின் வழியில் நிற்கப் போகிறோம்' என்று நீங்கள் சொல்லிவிடலாம். இதைக் கேட்டுக் காரியக் கமிட்டி உறுப் பினர்கள் தடுக்கவே மாட்டார்கள் என்பது மாத்திரமல்ல, மகிழ்ச்சி பொங்கிக் கூத்தே ஆடுவார்கள் என்பதை உங்களுக் குச் சொல்லுகிறேன். உங்களில் சிலர் காங்கிரஸின் உறுப் பினர்கள். அப்படி உறுப்பினர்களாக இருப்பவர்கள், அகிம் சையில் நம்பிக்கையை வைத்திருப்பவர்கள், காரியக் கமிட்டி. உறுப்பினர்களுக்கு மீண்டும் உறுதி கூறி, அகில இந்தியக் காங் கிரஸ் கமிட்டிக் கூட்டத்திலும், சமயம் வரும்பொழுது காங்கிரஸ் மகாநாட்டிலுங்கூட உறுதியை எடுத்துக் காட்ட வேண்டியது உங்களுடைய கடமையாகும். காங்கிரஸ்காரர்கள் என்ற வகை யில் உங்களுடைய தருமம், சாதாரண மனிதன் என்ற வகையில் தருமம், காங்கிரஸ் காரியங்களில் உங்கள் நடத்தை ஆகியவை களை வெவ்வேறாக நீங்கள் பிரிக்கக்கூடாது. உங்களுடைய அகிம்சை உண்மையானதாக இருந்தால் அது உங்களுடைய சாதாரண வாழ்க்கையின் ஒரு பகுதியாக இருக்க வேண்டும். உங்கள் சிந்தனை, உங்கள் செயல் ஆகியவைகளிலெல்லாம் அது இருப்பதோடு உங்களுடைய எல்லா நடத்தையிலுமே அது பிரதிபலிக்க வேண்டும். அப்பொழுதுதான், நான் குறிப்பிட் டிருப்பது போல் காரியக் கமிட்டியினருக்கு நீங்கள் உறுதி அளித்து, அவர்கள் தீர்மானத்தை மாற்றிக்கொள்ளும்படி நீங்கள் கட்டாயப்படுத்த முடியும்.

"ஆனால், உங்களுக்கு மேற்கொண்டும் அதை விளக்கு கிறேன். உங்கள் செயல் ஒவ்வொன்றையும் உங்கள் தருமத் தின் நோக்கத்தோடு நீங்கள் பரிசீலனை செய்ய வேண்டும். அதையே மன நோயாகக்கொண்டோ அல்லது ஒட்டாரமாகவோ கொண்டிருக்க வேண்டும் என்பதல்ல பொருள். உங்கள் நடத்தை இயற்கையை ஒட்டியதாக இருக்கவேண்டும். நான் மௌனத்தை அனுசரிக்க ஆரம்பித்தபோது என்னளவில் அது ஒரு முயற்சி யாக இருந்தது. இப்பொழுது அது என் இயற்கையின் ஓர் அம்சமாகிவிட்டது. என் மௌனத்தை விடுவதென்பது இனி ஒரு பெரு முயற்சியாகவே இருக்கும். அதே போல அகிம்சையோடு காரியத்தைச் செய்வது உங்களுடைய சுபாவத்தின் ஒரு கூறாக இருக்கவேண்டும். ஒவ்வொன்றையும் அகிம்சையுடன் நீங்கள் பொருந்தச் செய்வது தருக்க ரீதியில் தவறானதாக இருக்கலாம். ஆனால், அது உங்களுக்குத் தவறல்ல. 'நான் நூற்கும் ஒவ்வொரு நூலிலும் சுயராஜ்யத்தை நான் கிட்டத்திற்குக் கொண்டுவரு கிறேன்' என்ற என் நம்பிக்கை தவறானது என்று மற்றவர் களுக்குத் தோன்றலாம். ஆனால், நான் இருப்பது எவ்வளவு உண்மையோ அவ்வளவு உண்மையாயிருக்கிறது அந்த உறுதி யும். என் நிதானம் கெட்டுப் போகாமல் இருக்கும்படியும் அது என்னைக் காப்பாற்றுகிறது. நூற்கும் ராட்டை என் வரைக்கும் அகிம்சையின் சின்னமாகவே திகழ்கிறது. ராட்டையோ உயி ருள்ள பொருளன்று. ஆனால், நான் அதை ஒரு சின்னமாகக் கொள்ளும்போது அது எனக்கு உயிருள்ளதாகிறது. அதன் தொனி, இன்னிசைபோல் இருந்தால் அது அகிம்சையுடன் சுருதி சேர்ந்ததென்றாகிறது. அப்படிச் சுருதியுடன் இல்லை யென்றால், அது என்னுடைய சிரத்தையின்மையையே காட்டும். இரும்புக் கதிரை உயிரைக் கொல்வதற்கு ஆயுதமாகவும் உப யோகிக்கலாம். ஆனால், மிகச் சிறந்த உபயோகத்திற்கு அதைப் பயன்படுத்துகிறோம். ஆகையால், ராட்டையின் ஒவ்வொரு பகுதியைக் குறித்தும் நாம் மிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டியிருக்கிறது. அப்பொழுதுதான் அது சிறந்த இசையை எழுப்பி, நூற்பதும் உண்மையான ஒரு வேள்வி ஆகும்.

"ஆனால், இந்த வகையான சாதனை கைகூடுவதற்கு ஆயிரக் கணக்கான ஆண்டுகளாகும் என்று நீங்கள் சொல்லலாம். சிலருக்கு ஆயிரம் வருடம் ஆகலாம். மற்றும் சிலருக்கோ ஒரே ஆண்டில் அது ஆகக்கூடும். ஐம்பது ஆண்டுகளாக அதை நான் அனுசரித்தும், நான் இன்னும் குறைபாடு உள்ளவனாக இருக் கிறேன் என்பதைக் கொண்டு உங்களுக்குப் பல ஆண்டுகள்

பிடிக்கும் என்று நினைத்துவிட வேண்டாம். அப்படிப்பட்ட கணக்கு விதி எதுவும் இதில் இல்லை. என்னைவிட நீங்கள் இன்னும் விரைவில் பெற்றுவிடக்கூடும். இதனாலேயே பிருதிவி சிங்குக்கு இவ்வாறு சொன்னேன் : 'எப்படியும் உங்களிடத்தில் வீரருக்கான பலாத்காரம் இருக்கிறது. என்னிடம் அப்படிப் பட்டது எதுவுமில்லை. வீரருக்கான அகிம்சையை வளர்த்துக் கொள்வதில் உங்களுக்கு நம்பிக்கை இருந்தால், என்னைவிட வெகு சீக்கிரத்தில் உங்களால் அது செய்ய முடிவதோடு, எனக்கு மேலே போய்விடவும் கூடும்.' இது உங்களில் ஒவ்வொருவருக்கும் பொருந்தும். தென்னாப்பிரிக்காவில் செருப்புத் தைக்க நானே முதன்முதலில் கற்றுக்கொண்டேன்.* ஆகையால், அதை மற்றவர்களுக்கு நான் சொல்லிக் கொடுத்தேன். ஆனால், மற்றவர்களோ அந்த வேலையில் என்னை மிஞ்சிவிட்டார்கள். நான் உண்மையான போதகனாக இருந்ததே அதற்குக் காரணம். இப்பொழுது நான் உண்மையான அகிம்சைப் போதகனாக இருந்தால் உங்கள் போதகனையே நீங்கள் மிஞ்சிவிடுவீர்கள். அப்படி நடக்கவில்லையென்றால், நான் தகுதியில்லாத போதகன் என்பதே அதன் பொருளாகும். ஆனால், என்னுடைய போதனை வெற்றி பெறுவதால் ஒவ்வொரு வீட்டிலுமே அகிம்சைப் போதகர்கள் இருப்பார்கள்.

"உங்களில் எத்தனை பேர் என் பக்கம் இருக்கிறீர்கள் என்பதை அறிய விரும்புகிறேன். என்னுடன் யாருமே வரவில்லையென்றால், தன்னந்தனியாக என் வழியில் போக நான் தயாராக இருக்கிறேன். ஏனெனில், கடவுள் என்னுடன் இருப்பதால் நான் என்றும் தமியனாக மாட்டேன் என்பதை அறிவேன். நீங்கள் எல்லோரும் என்னுடைய சாதகத் தோழர்கள். நான் வயதானவன். நீங்களோ பல ஆண்டுகள் வாழ இருப்பவர்கள். ஆனால், வயதாகிவிட்டது என்ற உணர்ச்சி எனக்கு இல்லை என்பதை உங்களுக்குச் சொல்லிக்கொள்ளுகிறேன். வளர்வதற்கான சக்தியோ அல்லது ஆராய்வதற்கான தகுதியோ எனக்குத் தீர்ந்துவிட்டது என்று நான் நினைக்கவில்லை.

"எனவே, காங்கிரஸ்காரர்களிடையே அகிம்சையை நம்புகிறவர்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள் என்பதை நீங்கள் போய்க் கண்டுபிடிக்க வேண்டும். காரியக் கமிட்டி உறுப்பினர்கள் உங்களுடைய பிரதிநிதிகள். அவர்களைத் தேர்ந்தெடுத்தவர்களின் நம்பிக்கையைக் கணக்கெடுப்பதில் அவர்கள் தவறியிருந்தால்,

* மகாத்மா காந்தி நூல்கள்—முதல் தொகுப்பு 317-ஆம் பக்கம் பார்க்க.

அவர்களுடைய முடிவை நீங்கள் திருத்த வேண்டும். அவர்களுடைய நிலையிலிருந்து என் நிலை வேறானது. அகிம்சையின் உறுதியான பிரதிநிதி நான் என்று என்னைக் கருதிக்கொள்ளுகிறேன். ஆகவே, *1934*-இல் காங்கிரஸிலிருந்து விலகிக்கொண்டேன். அப்படிச் செய்யாமல் நான் இருக்க முடியாது. நான் அப்படிச் செய்யவில்லையென்றால், என் தருமத்திற்கு நான் பொய்யனாவேன்.

"என்னுடைய குறைபாடுகளைக் குறித்து மற்றவர்களைவிட எனக்கு நன்றாகத் தெரியும். ஆனால், எனக்கு ஏதாவது சக்தி இருக்கிறதென்றால், அது என்னுடைய அகிம்சையினால் ஏற்பட்டதாகும். பயமின்றி நம்பிக்கையுடன் ஆயிரக்கணக்கான பெண்களை என்பால் இழுப்பது அகிம்சையைத் தவிர வேறு என்ன? ஆனால், நீங்களோ அல்லது நானோ, இருப்பதைக் கொண்டே காலந் தள்ளிவிட முடியாது. நாம் மேலும் போய் நமது வாழ்வின் ஒவ்வொரு சமயத்தையும் பயன்படுத்தி, நமது சாதனத்தை மேற்கொண்டு போக வேண்டும். ஹிட்லர் இம்சையில் ஈடுபட்டு எதையும் செய்துகொண்டிருப்பது போல நாம் அகிம்சையில் வாழ்ந்துகொண்டும் ஈடுபட்டுக்கொண்டும் இருக்க வேண்டும். நம்பிக்கை, விடாமுயற்சி, ஒன்றின்மீதே நினைவு ஆகியவைகளைக் கொண்டு அழிவு செய்யும் ஆயுதங்களைச் சிறந்தனவாக ஆக்கியிருக்கிறார் அவர். அதற்காக நான் அவரைப் பாராட்ட வேண்டியதே. பயங்கர அரக்கன் போல் அவைகளை அவர் உபயோகிக்கிறார் என்பது நமக்கு அவசியமிராத விஷயம். நமது அகிம்சையை உருவாக்குவதில் நாம் அதே போன்று ஒன்றிலேயே நிலைக்கும் சிந்தனையும், விடாமுயற்சியும் கொள்ளவேண்டும். தம்முடைய சாதனத்தைக் குறைவின்றிச் செய்வதற்காக ஹிட்லர் இருபத்துநான்கு மணி நேரமும் தூங்காமல் இருக்கிறார். கஷ்டம் எடுத்துக்கொண்டதற்கு அவர் வெற்றியையே அடைகிறார். அவர் புதிதாகக் கண்டு பிடித்திருக்கும் ஆயுதங்கள் அவருடைய எதிரிகளைத் திகைக்க வைக்கின்றன. தம் காரியத்திற்காக அவர் ஒரே சிந்தனையாக இருப்பதை நாம் பாராட்டவேண்டும்; அதை நாம் கற்றுக் கொள்ள வேண்டும். விழித்திருக்கும் நேரத்திலெல்லாம் அவர் வேலை செய்துகொண்டிருக்கிறார் என்றாலும், அவர் புத்தி குழம்பிவிடுவதுமில்லை; தவறிவிடுவதுமில்லை. நம்முடைய அறிவு குழம்பிவிடாமலும் தவறிவிடாமலும் இருக்கின்றதா? அகிம்சையிலோ அல்லது ராட்டையிலோ நம்பிக்கை கொண்டிருப்பது என்பது மாத்திரம் போதாது. அறிவுள்ளதாகவும், படைக்கும்

ஆற்றல் உடையதாகவும் இருக்க வேண்டும். பலாத்காரத் துறையில் அறிவாற்றல் முக்கியமானதாக இருக்கிறதென்றால், அகிம்சைத் துறையிலும் அவ்வாறே இருக்கிறது என்றே நான் கருதுகிறேன்.''

இத்துடன் ரிச்சர்ட் கிரெக்* இது சம்பந்தமாகச் செய்து வரும் வேலையைக் காந்திஜி குறிப்பிட்டார். அகிம்சையின் ஒரு சின்னமாக நூல் நூற்றல் இந்தியாவுக்கு மாத்திரமன்றி உலகத்திற்கே நல்லது என்ற முடிவுக்கு அவர் எவ்விதம் வந்திருக்கிறார் என்பதையும் காந்திஜி குறிப்பிட்டார். மேற்கொண்டும் அவர் கூறியதாவது : ''காரியக் கமிட்டியின் தீர்மானம், அவர்கள் இருக்கும் சூழ்நிலையின் எதிரொலியே யாகும். என்னுடைய முடிவு அதன் எதிரொலியாக இருக்க முடியாது. ஏனெனில், அகிம்சை என்னுடைய விசேஷ சாதனை, காங்கிரஸிற்கு அப்படியல்ல. நமது தருமத்தில், என் தலைமையில் நம்பிக்கையை அவர்களுக்கு உண்டாக்க முடியாது போனதைக் குறித்து எனக்காக நான் வருத்தப்பட்டாலும் அவர்களுடைய நேர்மைக்காகவும் அவர்களுடைய தைரியத்திற்காகவும் நான் அவர்களைப் பாராட்டுகிறேன். வீரருக்கான அகிம்சையில் நமக்கு நம்பிக்கை இருக்கிறது என்பதை நாம் இப்பொழுது காட்டவேண்டும். சிறை புகுவதற்குள்ள சக்தியை வளர்த்துக்கொள்வது என்பது அல்ல, இதன் பொருள். சுயராஜ்யத்தைப் பெறுவதற்கு ஆக்க வேலைக்குள்ள வீரியத்தில் நம்பிக்கையையும் அகிம்சையின் வேலைத் திட்டத்தில் ஆக்க வேலை முக்கியப் பகுதியாக இருப்பதில் நம்பிக்கையையும் வளர்த்துக்கொள்ளுவது என்பதே அதன் பொருள்.''

தம்முடைய அகிம்சையைச் சரியானபடி ஆக்கிக்கொள்ளுவதில் காந்திஜியே தவறிவிட்டார் என்றால் தாங்களும் தவறிப் போவது நிச்சயம் என்று சொல்லிவந்தவர்களுக்குக் காந்திஜி முன்பே பதில் சொல்லிவிட்டார். ஆனால், தமது பிரசங்கத்தின் கடைசிப் பகுதியில் தமக்குள்ள குறைபாடுகளின் மற்றொரு விஷயத்தை அறிவித்தார். அவர் கூறியதாவது: ''ஆக்க வேலையைவிடச் சட்ட மறுப்புக்கு முக்கியத்துவம் கொடுத்ததால் நான் தவறு செய்துவிட்டேன். நான் செய்துவிட்ட 'இமாலயத் தவறு' காரண

---

* ரிச்சர்டு பி. கிரெக் : மகாத்மாவுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு, அவர் காட்டிய அகிம்சா தத்துவத்தைப்பற்றி இரண்டு ஒப்பற்ற நூல்களை எழுதியவர். அவை, 1. அகிம்சையின் வன்மை. 2. அகிம்சையின் கட்டுப்பாடு. இங்கே மகாத்மாஜி, ஸ்ரீ கிரெக் கதரைப்பற்றிச் செய்து வரும் வேலைகளையே குறிக்கிறார். 'கதரின் பொருளாதாரம்' என்ற நூலில் கிரெக் கூறும் கருத்துக்கள் கவனிப்பதற்குரியன.

மாக நான் பயனடைந்துவிடவில்லை. என் சக ஊழியர்களுக்கு மனவருத்தம் ஏற்படும் என்று பயந்தேன். அதனால், நிறைவற்ற தான அகிம்சையைக் கொண்டு நடத்தினேன். ஆனால், என் தவறுகளுக்காக நான் வருந்தவில்லை. என் வெற்றிகளும் என் திறமைகளும் எவ்விதம் கடவுளின் கிருபையினால் ஏற்பட்ட னவோ அதே போல என் குறைபாடுகளும் தோல்விகளும் அவர் கிருபையினாலேயே ஏற்பட்டன என்று கொள்ளுகிறேன்; அவற்றை யெல்லாமே அவர் திருவடிகளிலே சமர்ப்பிக்கிறேன். அத் தகைய பிரமாதமான ஒரு பரீட்சைக்குக் குறைபாடுகளுடைய சாதனமான என்னைக் கடவுள் ஏன் தேர்ந்தெடுக்க வேண்டும்? வேண்டுமென்றே அப்படிச் செய்கிறார் என நினைக்கிறேன். வாயில்லாப் பூச்சிகளான கோடிக்கணக்கான ஏழை மக்களுக்கு அத்தகையவர் சேவை செய்ய வேண்டும். குறைபாடில்லாத மனி தர் வரவில்லையே என்பது அவர்களுக்குள்ள மனவேதனையாக இருக்கலாம். தங்களைப் போலவே குறைகள் மலிந்த ஒருவர், அகிம்சையை நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறார் என்பதைக் கண்டால் தங்களுடைய ஆற்றலைக் குறித்து அவர்களுக்கு நம் பிக்கை வரும். குறையே இல்லாத ஒருவர், நமக்குத் தலைவ ராக வந்தால், நாம் அவரை ஏற்றுக்கொள்ளாமல் இருக்கக் கூடும். அவரை ஒரு மலைக்குகைக்கு நாம் விரட்டியிருக்கவும் கூடும். என்னைப் பின்பற்றுகிறவர், என்னைவிடக் குறையே அற்ற வராக இருக்கலாம். அவர் விடுக்கும் செய்திகளை நீங்கள் பெறு வதாகவும் ஆகக்கூடும். இனி வரவேண்டிய குறையே இராத போதகர், உங்களில் ஒருவராகவும் இருக்கவும் கூடும்.''

"ஆனால், நாம் குழப்பமான ஒரு தத்துவ நிலைக்குப் போவ தாகிறதல்லவா இது? இது கைகூடாத ஒரு லட்சியமாக இல்லையா?''-சில மாதங்களுக்கு முன்பு தத்துவம் வல்ல நண்பர் ஒருவர் காந்திஜியிடம் இக்கேள்விகளைக் கேட்டார். அப் பொழுது காந்திஜி தந்த பதில்கள் இன்றும் பயனுள்ளனவாக இருக்கும்.

"உண்மையான அகிம்சையை யாராவது அறிவார்களா?'' என்றார் அவர்.

அதற்கு உடனே காந்திஜி, "யாருக்குமே அது தெரியாது. ஏனெனில், குறையே இல்லாத அகிம்சையை யாரும் அனுசரிக்க முடியாது'' என்றார்.

"அப்படியானால், ராஜீயத்தில் அதை எப்படிப் பிரயோகிக்க முடியும்?''

"குடும்பத் துறையில் அதை எப்படிப் பிரயோகிக்க முடியுமோ அதேபோல் சரியான ராஜீயத்திலும் அதைச் செய்ய முடியும். அதைப் பிரயோகிப்பதில் குறைபாடுடையவராகிவிட நேரிடலாம். ஆனால், நாம் நிச்சயமாகப் பலாத்காரம் உபயோகிப்பதைக் கைவிடுகிறோம். தோல்வியிலிருந்து வெற்றிக்கு வளருகிறோம்."

"அகிம்சையோடு நீங்கள் ஆளுவீர்கள் அல்லவா? ஆனால், சட்டங்கள் அனைத்தும் பலாத்காரமாகுமே?"

"இல்லை, எல்லாச் சட்டங்களும் அப்படி இரா. மக்கள் தாமே ஏற்படுத்திக்கொள்ளும் சட்டங்கள் சமூகத்தில் சாத்தியமாக இருக்கும் அளவுக்கு அகிம்சையானவையே. பூரண அகிம்சையின் அடிப்படையில் ஒழுங்குபடுத்தி நடந்துவரும் ஒரு சமூகம் தூய அராஜகமாகவே இருக்கும்."

"இந்த லட்சியம் அடையக்கூடியதென்று நீங்கள் நினைக்கிறீர்களா?"

"ஆம். அகிம்சையை அடையக்கூடிய அளவுக்கு இதையும் அடைந்துவிட முடியும். எங்கு மக்கள்மீது ஆட்சி நடத்துவது குறைவாக இருக்கிறதோ அங்கு அரசாங்கம் குறையற்றதாயும், அகிம்சையோடுகூடியதாகவும் விளங்கும். அகிம்சையையே அடிப்படையாகக் கொண்ட ஒரு ஜனநாயகமே தூய அராஜகத்திற்கு நெருங்கிய வழியாகும். ஐரோப்பிய ஜனநாயகங்கள் ஜனநாயகமே அல்லவென்பது என் கருத்து."

"நீங்கள் நினைக்கும் ஒரு ஜனநாயகத்தின் அகிம்சை, பழங்காலத்தில் என்றாவது தோன்றியதுண்டா?"

"எனக்குத் தெரியாது. அப்படி இல்லை என்றால், நம்முள் இருக்கும் உயர்வான பண்பை அடைவதற்காக நாம் என்றுமே முயற்சி செய்ததில்லை என்றாகிறது. ஒரு கட்டத்தில் நாம் புத்திசாலிகளாக இருந்தோம். மனித இயல்பில் மறைந்துள்ள அழகுகளைக் காண்பதற்காக நாம் இன்று இருப்பதைவிட இன்னும் புத்திசாலிகளாக வளர வேண்டும் என்பதில் எனக்கு எந்தவிதமான சந்தேகமும் இல்லை. நாம் உடலோடு இருக்கும் வரையில் குறையற்றதான அகிம்சை அசாத்தியமானது. ஏனெனில், நாம் இருப்பதற்குச் சிறிதளவிலாவது இடம் வேண்டியிருக்கிறது. உடலில் இருந்துகொண்டிருக்கும்போதே குறையே இல்லாத அகிம்சையை அடைவது என்பது யூக்ளிட்டின் புள்ளி

அல்லது நேர்க்கோடு என்பதைப் போன்ற ஒரு தத்துவமே. ஆனால், நமது வாழ்வின் ஒவ்வொரு நிமிடமும் இதற்கு நாம் முயற்சி செய்ய வேண்டியதாகிறது.

[ ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது. ] —'ஹரிஜன்' - 21—7—1940.
சேவா கிராமம், 15—7—1940.

# 31

# கான் சாகேபின் அகிம்சை

காரியக் கமிட்டி உறுப்பினர்களில் பலரை உலுக்கிய ஒரு புயலில் கான்சாகேப் அப்துல் கபார்கான் பாறை போன்று உறுதியாக நின்றார். தம்முடைய நிலைமையைக் குறித்தோ, தம் அறிக்கையைக் குறித்தோ அவருக்கு என்றுமே சந்தேகம் இருந்த தில்லை. அதைக் கீழே கொடுக்கிறேன். நம் எல்லோருக்குமே அது வழிகாட்டும் ஒளியாக விளங்கும்:

"காங்கிரஸ் காரியக் கமிட்டி சமீபத்தில் செய்திருக்கும் சில தீர்மா மானங்கள், அகிம்சையை உபயோகிப்பது இப்பொழுது இருக்கும் ஆட்சிக்கு எதிராக இந்தியாவின் சுதந்திரத்திற்காகப் போராடுவதற்குத்தான் என்று கட்டுப்படுத்தியிருப்பதைக் காட்டுகின்றன. எந்த அளவிற்கு, எந்த வகையில் எதிர்காலத்தில் இது அனுசரிக்கப்படும் என்பதை என்னால் கூறமுடியாது. வருங் காலத்தில்தான் அது தெரியவேண்டும். இதற்கு மத்தியில் காங்கிரஸ் கமிட்டி யில் நான் தொடர்ந்து இருந்து வருவது எனக்குக் கஷ்டமானதாகிறது. அதி லிருந்து நான் விலகுகிறேன். நான் நம்பிய அகிம்சை, குதா-இ-கித்மத்காரைச் சேர்ந்த என் சகோதரர்களுக்கு நான் பிரசாரம் செய்த அகிம்சை, அதிக விசாலமானது என்பதைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன். அது எங்கள் வாழ்வு முழுவதும் பரவியதாகும். அது ஒன்றே நிரந்தரமான மதிப்புடையது. அகிம் சையில் இந்தப் பாடத்தை முற்றிலும் அறிந்துகொண்டால் ஒழிய, எல்லைப் புற மக்களின் சாபக்கேடாக இருந்துவரும் பயங்கரமான சச்சரவுகளை நாங்கள் ஒழிக்கவே முடியாது. நாங்கள் அகிம்சையை மேற்கொண்டதிலிருந்தும், குதா-இ-கித்மத்கார்கள் அந்தப் பிரதிக்ஞையைக் கொண்டதிலிருந்தும் அந்தச் சச்சரவு களை ஒழிப்பதில் நாங்கள் அதிகமாக வெற்றி பெற்றிருக்கிறோம். பட்டாணியர் களின் வீரத்தை அகிம்சை மிகவும் அதிகரித்திருக்கிறது. மற்றவர்களைவிட பலாத்காரத்தின் பழக்கம் அவர்களுக்கு அதிகமாக இருந்ததனால் அகிம்சை யினால் மற்றவர்களைவிட அதிகமாகப் பலனையே அடைந்திருக்கிறார்கள். அகிம் சையினாலன்றி எங்களை உண்மையாகவும், சரியானபடியும் நாங்கள் பாதுகாத் துக்கொள்ளவே முடியாது. குதா-இ-கித்மத்கார்கள், என்பது எதைக் குறிப்பிடுகிறதோ (கடவுளின், மனித வர்க்கத்தின் உண்மையான தொண் டர்கள்) அதுபோலவே எங்கள் சொந்த உயிர்களைக் கொடுக்கவேண்டுமே யன்றி நாங்கள் யாரையும் கொல்லக்கூடாது."

சென்ற இருபது ஆண்டுகளாகக் கான் சாகேப் உறுதி யோடு இருந்து வந்திருப்பதற்கு ஏற்றபடியே, இந்த அறிக்கை அமைந்துள்ளது. அவர் பாட்டாணியர். பட்டாணியர்

பிறக்கும்போதே கையில் துப்பாக்கி அல்லது வாளுடன் பிறக்கிருர் என்று சொல்லுவார்கள். ஆனுல், கான் சாகேபோ, தம் குதா - இ - கித்மத்கார்களை ரௌலட் சட்டத்திற்கு எதிராகச் சத்தியாக்கிரகத்தில் சேருமாறு கேட்டுக்கொண்டபோது அவர்களிடமிருந்த ஆயுதங்களையெல்லாம் போட்டுவிட வேண்டுமென்று சொன்னுர். வேண்டுமென்று ஆயுதங்களைத் துறப்பது ஒரு மந்திரம்போல் வேலை செய்ததை அவர் கண்டார். தொன்றுதொட்டு, தந்தையிலிருந்து தனயனுக்கு நீடித்துச் சாதாரண வாழ்க்கையில் தென்படும் ரத்தக்களறியான சச்சரவுகளுக்குச் சரியான பரிகாரம் இது ஒன்றே. சச்சரவுகள், பல குடும்பங்களை அழித்துவிட்டன. அகிம்சை, ஆவலுடன் காத்திருந்த ஒரு விமோசனமாகக் கான் சாகேபுக்குத் தோன்றியது. இல்லையானுல், ரத்தம் சிந்தும் சச்சரவுகளுக்கு முடிவே இருந்திராது. பட்டாணியர் அழிவில்தான் அது முடிந்திருக்கும் திரும்பித் தாக்காமல் இருக்கும்படி செய்வதில் தம் மக்களிடையே தாம் வெற்றி பெற்ருர். தற்கொலைக்குச் சமமான சச்சரவுகள் தீரும், பட்டாணியர் தங்களுடைய வீரத்தை நல்வழிக்குப் பயன்படுத்த முடியும் என்பதை அவர் தெள்ளத் தெளியக் கண்டார். அவருடைய உபதேசத்தை அம்மக்கள் ஏற்றனர் ; அதை அனுசரித்தும் நடந்தார்கள். அவர்களுக்கு அகிம்சை, வீரமுள்ளவர்களின் அகிம்சையாக ஆயிற்று.

தம்முடைய உறுதியிலும், குதா-இ-கித்மத்கார்களின் உறுதியிலும் அவர் இவ்வளவு தெளிவாக இருக்கும்போது, காங்கிரஸ் காரியக் கமிட்டி உறுப்பினர் பதவியை ராஜிநாமாச் செய்வதைத் தவிர அவருக்கு வேறு வழியில்லை. அவர் அதில் தொடர்ந்து இருந்து வருவது பொருத்தமற்றது. அவருடைய வாழ்நாளின் பணி வீணுகிவிட்டதாகும். ராணுவத்தில் சிப்பாய்களாகச் சேரும்படி தம் மக்களுக்குக் கூறிவிட்டு, அதே சமயம் மலை சாதிக்குரிய வஞ்சம் தீர்க்கும் தாக்குதலை விட்டுவிட வேண்டும் என்று அவர் கேட்டுக்கொள்ள முடியாது. இப்பொழுது நடக்கும் யுத்தம் வஞ்சம் தீர்த்துக்கொள்ளும் போர். இதற்கும், தங்களுடைய ரத்தம் சிந்தும் சச்சரவுகளுக்கும் எந்தப் பேதமுமே இல்லை என்று ஒரு சாதாரணப் பட்டாணியர் வாதிக்கலாம். அந்த வாதத்தை ஆட்சேபிக்கவும் முடியாது.

தம் மக்களிடையே தமது உபதேசத்தை நிறைவேற்றுவதில் கான் சாகேப் எவ்வளவு தூரம் வெற்றி பெற்றிருக்கிருர் என்பது எனக்குத் தெரியாது. ஆனுல், அவரைப் பொறுத்தவரையில் அகிம்சை, உணர்விலேயே பிறந்த உறுதியே, அறிவினுல் ஏற்பட்ட

கருத்து அல்ல என்பதை நான் அறிவேன். ஆகையால், அவரையும் எதுவும் அசைத்துவிட முடியாது. அவரைப் பின்பற்றுகிறவர்களைப் பொறுத்தவரையில் அவர்கள் எவ்வளவு தூரம் அதன்படி நடப்பார்கள் என்பதை அவர் சொல்ல முடியாது. ஆனால், அதைப்பற்றி அவருக்குக் கவலையே இல்லை. அவர்களுக்குச் செய்ய வேண்டிய தம் கடமையை அவர் நிறைவேற்றியாக வேண்டும். பலனைக் கடவுளுக்கு விட்டுவிடுகிறார். தெய்விகக் குரானிலிருந்து அவருக்கு அகிம்சை ஏற்டுபகிறது. அவர் ஒரு பக்தியுள்ள முஸல்மான். அவர் என்னுடன் ஒரு வருடத்திற்கு மேலாகத் தங்கியிருந்தபோது, அவர் நோயுற்றிருந்த சமயம் தவிர, நமாஸ் தொழுகை செய்யாமலோ, ரம்ஜான் விரதம் இருக்காமலோ இருந்து நான் பார்த்ததே கிடையாது. ஆனால், இஸ்லாமில் அவருக்கு இருக்கும் பற்று, மற்ற மதங்களை அவமதிப்பதாக இல்லை. அவர் கீதை படித்திருக்கிறார். அவர் படித்தது சிறிதானாலும், தேர்ந்ததை நன்கு படித்திருக்கிறார். தமக்குப் பிடித்தமாய் இருப்பவைகளை உடனே தமதாக்கிக் கொள்ளுகிறார். நீண்ட விவாதம் அவருக்குப் பிடிக்காது. ஒரு முடிவிற்கு வருவதற்கு அவருக்கு அதிக காலம் ஆவதும் இல்லை. அவருடைய வேலையில் அவர் வெற்றி பெறுவாரானால், மற்றப் பிரச்னைகளுக்கு அது பரிகாரமாகும். ஆனால், பலனைக் குறித்து யாரும் ஜோசியம் சொல்லிவிட முடியாது. 'எல்லாம் அவரிடம் ஒப்படைக்கப்படுகிறது. அவற்றை என்ன செய்வது என்பது ஆண்டவன் சித்தம்.'

சேவா கிராமம், 16—7—1940 —'ஹரிஜன்' - 21—7—1940

# 32

# 'பலமில்லா மெஜாரிட்டி'

பெஷாவர் இஸ்லாமியக் கல்லூரிப் பேராசிரியர் தைமூர் வருமாறு எழுதுகிறார் :

'' இந்தச் சங்கடமான சமயத்தில் அகிம்சையில் மறைந்து கிடக்கும் மதிப்பை நீங்கள் வெளிப்படுத்தி வருவதற்காக உங்களுக்கு உலகம் கடமைப்பட்டிருக்கிறது. வெளிநாட்டுப் படையெடுப்பை எதிர்த்து ஆயுதங்களை உபயோகிக்காமலேயே இந்தியா பாதுகாத்துக்கொள்ள வேண்டும் என்று நீங்கள் கூறும் பரீட்சை எந்தக் காலத்திலும் நடந்திராத தைரியமான தார்மிகப் பரீட்சையாகும். அத்தகைய முறையினால் ஏற்படக்கூடிய பலன்கள் இரண்டே : படையெடுப்புக்கு ஆளானவர்களின் அன்பைக் கண்டு படையெடுத்து வருவோரின் மனச்சாட்சி விழிப்படைந்து தங்களுடைய பாவத்திற்காக அவர்கள் வருந்தக்கூடும். அல்லது அகம்பாவம் கொண்ட படையெடுப்பாளர்கள், அகிம்சையைப் பலவீனத்திற்கும் தாழ்மைக்கும் அறிகுறியாக எண்ணிக்கொண்டு, அம்மக்களை அடிமைப்படுத்தி அவர்கள்மீது ஆட்சியை நடத்தி, பலவீனமான

மக்களைச் சுரண்டுவதே சரி என்றும் செயல்புரியக்கூடும். இதுதான் நீட்ஷேயின் தத்துவம்.* இதையே ஹிட்லரும் அனுபவத்தில் கையாண்டு வந்தார். பலத்தில் குறைந்தவர்களைப் பலத்தில் மிகுந்தவர்கள் வெற்றிகொள்ளுவதால் பெருநஷ்டம் உண்டாகிறது. தோற்றுப்போன நாட்டு மக்களில் திட உள்ளம் படைத்த சிலர் வெற்றியடைந்தவருக்குப் பணிய மறுக்கலாம். ஆனால், மிகப் பெரும்பான்மையானவர்கள் எப்பொழுதுமே பணிந்து போய், தாங்கள் வாழ்வதற்காக அடிமை முறைகளை மேற்கொள்ளுகின்றனர். அவர்களுள் பெரிய விஞ்ஞானிகள், தத்துவஞானிகள், கலைஞர்கள் ஆகியவர்கள் இருக்கக்கூடும். அறிவும், தார்மிக பலமும் ஒருவரிடமே எப்பொழுதும் சேர்ந்திருப்பதில்லை. தம்முடைய சுதந்திரத்தைப் பாதுகாத்துக்கொள்வதற்குப் பலமுள்ள ஒருவருக்கு ராணுவங்கள் தேவையில்லை, அவர் தம்முடைய ஆத்மாவைக் காத்துக்கொள்ளுவதற்காக தம் உடலையே தியாகம் செய்கிறார். ஆயினும், அப்படிப்பட்டவர்கள் மிகச் சிலரே. பலவீனமானவர்களான பெரும்பான்மையோருக்குத்தான் பாதுகாப்பு வேண்டியதாகிறது. அவர்களை அகிம்சை முறையினால் எப்படிப் பாதுகாப்பது என்பதே பிரச்னை. உண்மையான சங்கடமும் இதில்தான் இருக்கிறது. தன் நாட்டின் பாதுகாப்புக்கு அகிம்சையை அனுசரிப்பதைக் குறித்து எண்ணும் ஒவ்வொரு தேசாபிமானியும் இதைத்தான் உணருகிறார். தாங்கள் தயை செய்து சீக்கிரமாகவே 'ஹரிஜன்' பத்திரிகையில் இவ்விஷயத்தைக் குறித்து விளக்குவீர்கள் என்று நம்புகிறேன்.''

பலவீனமான மெஜாரிட்டிக்குப் பாதுகாப்பு வேண்டியிருக்கிறது என்பதில் சந்தேகம் இல்லை. அகிம்சையிலோ அல்லது இம்சையிலோ எல்லோரும் சிப்பாய்களாக இருந்துவிடுவார்களானால் இப்பத்திரிகையில் அதைப்பற்றி விவாதிக்க வேண்டிய அவசியமே எழாது. பலவீனமான மெஜாரிட்டி எப்பொழுதும் இருந்தே வரும்; மனிதனின் விஷமத்திலிருந்து பாதுகாக்கப்படவும் அது விரும்பும். இதற்குள்ள சம்பிரதாயமான முறையை நாம் அறிவோம். அதன் விளைவே நாஜிஸம். ஒரு முக்கியத் தேவைக்கென எழுந்த சவாலாகும் அது. வேண்டுமென்றே ஒரு நாட்டிற்கு இழைத்த ஒரு பயங்கரமான தவறுக்குப் பரிகாரம் தேடவே இது எழுந்தது. அதற்கு வஞ்சம் தீர்த்துக்கொள்ள ஹிட்லர் கிளம்பினார். இந்த யுத்தத்தின் எதிர்கால முடிவு எதுவாக இருந்தாலும், ஜெர்மனி திரும்பவும் அவமானத்துக்குள்ளாகாது; மீண்டும் அநீதம் நேருவதை மனித உலகம் சகிக்காது. தவற்றைப் பலாத்காரத்தின் தவறான முறையைக்கொண்டு - அம்முறையைப் பரிபக்குவமாய் ஆக்கிக்கொண்டு - வஞ்சம் தீர்ப்பதற்கு ஜெர்மானியர்களை மட்டுமல்ல, மனிதவர்க்கத்தின் பெரும்

---

* நீட்ஷே பிரெட்ரிக் வில்ஹெல்ம் (1844-1900): ஜெர்மானிய தத்துவஞானி. வாக்னர், ஷோபனேர் என்பவர்களின் தத்துவ வாதமே இளமையில் இவர் கொண்டிருந்த கருத்துக்களை உருவாக்கியது. 'உயர் மானிடன்' என்ற தாம் கண்ட புதுமையான தத்துவத்தைத் தாம் எழுதிய 'ஜாரதுஷ்ட்ரா இவ்வாறு கூறினார்', 'நன்மைக்கும் தீமைக்கும் அப்பால்,' 'வன்மைக்கான மன உறுதி' என்ற நூல்களில் வெளியாக்கினார்.

பகுதியையே ஹிட்லர் மிருகத்தனமாக ஆக்கியிருக்கிறார். அதன் முடிவை நாம் இன்னும் எட்டிவிடவில்லை. பிரிட்டனைப் பொறுத்த வரையில், பழைய சம்பிரதாய முறையையே அது மேற் கொண்டிருக்கும்வரை, வெற்றிகரமாக எதிர்க்க வேண்டுமானால் நாஜி முறையை அதுவும் அனுசரிக்க வேண்டியதே. இந்தப் பலாத்கார முறையின் விளைவு, ' பலவீனமான மெஜாரிட்டியினர் ' உள்பட மனிதரை மேலும் அதிக மிருகத்தனமாக்குகிறது. ஏனெனில், தம்மைப் பாதுகாத்துக்கொள்ளுபவருக்குத் தேவை யான அளவு ஒத்துழைப்பு அளிக்க வேண்டியிருக்கிறது.

அதே பெரும்பான்மையினர் அகிம்சை முறையை அனு சரித்துத் தங்களைப் பாதுகாத்துக்கொள்ளுகிறார்கள் என்பதைப்பற்றியும் சற்று நினைத்துப் பாருங்கள். கபடம், |மோசடி, துவேஷம் ஆகியவைகளை இவர்கள் ஏற்பதில்லையாகையால் பாதுகாப்பவரின் ஒழுக்கப் பலத்தை இவர்கள் அதிகரித்தாக வேண்டும். ஆகையால், அதற்கு ஏற்றாற்போல் பாதுகாக்கப் படவேண்டிய 'பலவீனமான மெஜாரிட்டி'யின் தார்மிகத்தன்மை அதிகரிக்கிறது. தரத்தில் வித்தியாசமிருக்கும் என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால், வகையில் பேதம் இருக்காது.

அகிம்சை முறையை அனுசரிப்பதற்கான நடைமுறைகளைக் கவனிக்கும்போது சில சங்கடங்கள் உண்டாகின்றன. பலாத் கார முறையை அனுசரிப்பதிலே ஆள் பலம் கிடைப்பதில் கஷ்டமே கிடையாது. ஆகவே, அம்முறை எளிதானதாகத் தோன்றுகிறது. அகிம்சையின் மூலம் பாதுகாப்போரைத் தேடு வதற்கு அங்குமிங்குமாக ஆட்களைப் பொறுக்கியெடுக்க வேண்டியிருக்கிறது. பணத்தைக் கொண்டு அவர்களை வாங்கிவிட முடியாது. சாதாரணமாக எல்லோரும் அறிந்திருக்கும் முறைக்கு முற்றிலும் வேறுபட்டது அகிம்சை. அதன் நடவடிக்கைகளுக் குச் சென்ற அரை நூற்றாண்டாக ஏற்பாடு செய்வதில் எனக்கு ஏற்பட்டிருக்கும் அனுபவம் எதிர்காலத்தைப்பற்றிய நம்பிக் கையை எனக்கு அளிக்கிறது. ' பலவீனமான பெரும்பான்மை யினரை 'ப் பாதுகாப்பதில் ஒரு சிறந்த அளவிற்கு அது வெற்றி பெற்றிருக்கிறது. இந்தச் சக்தியில் மறைந்து கிடக்கும் சாத் தியங்களைக் கண்டுபிடித்து இதைச் செயல்படுத்துவதற்கு அரை நூற்றாண்டு அதிகமான காலமாகாது. ஆகையால், அகிம்சை யில் கவர்ச்சி கொண்டிருக்கும் இக்கடிதத்தை எழுதியிருப்ப வரைப் போன்றவர்கள், தங்களுடைய சக்திக்கும் சந்தர்ப்பத் திற்கும் ஏற்ற வகையில் இப்பரீட்சையில் கலந்துகொள்ள வேண்டும். அது சுவை மிக்கதாயினும், சங்கடமான ஒரு

கட்டத்தை அடைந்திருக்கிறது. நானே கஷ்டமான வழியில் போய்க்கொண்டிருக்கிறேன். அப்போதைக்கப்போது உஷாராகக் கவனித்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. கஷ்டம், என்னைப் போராட்டத்திற்குத் தயாராக்குகிறது.

சேவா கிராமம், 6—8—1940 — 'ஹரிஜன்' – 11—8—1940

# 33

# முக்கியமான விஷயம்

அகிம்சையில் முழு நம்பிக்கையுள்ளவர்களான சில அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி உறுப்பினர்கள், சில தினங்களுக்கு முன்பு சேவா கிராமத்திற்கு வந்தார்கள். இவர்களில் சிலர் டில்லித் தீர்மான விஷயத்தில் நடுநிலைமை வகித்தவர்கள்; மற்றும் சிலர் அதை எதிர்த்தவர்கள். சரியான போக்கு எது, அடுத்தபடி அவர்கள் செய்வது என்ன, அவர்கள் முன்பு இருக்கும் வேலைத் திட்டம் என்ன, உடனேயே அவர்கள் விலகிவிட வேண்டாமா, இவையும் இன்னும் பல கேள்விகளும் அவர்களைத் தொல்லைப்படுத்தி வந்தன. என்ன செய்வது என்பது அவர்களுக்கு விளங்கவில்லை. அவர்கள் கேட்டுக் கொண்டதன் பேரில் காந்திஜி மனம் திறந்து சொன்னார்.

"பொறுங்கள்; கவனியுங்கள்; பிரார்த்தனை செய்யுங்கள்" என்று காந்திஜி சொல்லிவிட்டுச் சற்று நேரம் மௌனமாக இருந்தார். பிறகு அவர் சொன்னார்: "வாரந்தோறும் நான் எழுதிக்கொண்டு வருவதை நீங்கள் கவனமாகப் படித்து வர வேண்டும். அகிம்சையில் முழு நம்பிக்கையுள்ளவர்கள் என்பதில் உங்களுக்கே முழு நிச்சயம் இருக்க வேண்டும். உங்களுடைய அகிம்சை, சோதனைக்கு நிற்குமா? கலகம் நேரும்பொழுது நீங்கள் என்ன செய்ய வேண்டும் என்பதை நீங்களே யோசித்துப் பார்த்துக்கொள்ளுங்கள். நம்முடன் மாறுபாடு கொண்டவர்கள் கோழைகளல்ல. ராணுவமும் போலீசும் இல்லாமல் தங்களால் ஒன்றும் செய்ய முடியாது என்று அவர்கள் சொன்னால், அவர்கள் கூறுவதை மரியாதையுடன் நாம் கேட்கவேண்டும். இக்கட்டான நிலைமையில் நான் என்ன செய்ய வேண்டும் என்பது எனக்கே தெரியாது. போலீஸ் படையை வைத்துக் கொள்ளுவது சரியா என்ற விஷயத்தில் நானே பணிந்து போய் இருக்கிறேன் என்பதை நீங்கள் அறிவீர்கள். சமயம் நேர்ந்தால் அகிம்சையோடு நடந்துகொள்ள நாம் நம்ப வேண்டும் என்றுதான் நான் உங்களுக்குக் கூறுவேன். எனக்கு உரிய

காலத்தில் மரணம் வருவதற்கு முன்பு செத்துப்போக நான் விரும்பவில்லை. இன்றேபிடித்து இந்தியாவை ராணுவப் பாதுகாப்புக்குத் தயாரிக்க நான் விரும்பவில்லை. முழு இந்தியாவுக்கும் நாம் பிரதிநிதியல்ல என்பதை நாம் எப்பொழுதும் மறந்துவிடக்கூடாது. காங்கிரஸ், ஒரு பலமுள்ள ஸ்தாபனம் என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால், முழு இந்தியாவின் பிரதிநிதியல்ல காங்கிரஸ். காங்கிரஸினிடம் ராணுவம் இல்லாமல் இருக்கலாம். ஆனால், அகிம்சையில் நம்பிக்கையில்லாதவர்கள், ராணுவத்தை வைத்துக்கொள்ளுவார்கள். காங்கிரஸும் சரணகதி அடைந்துவிடுகிறது என்றால், ராணுவம் வேண்டாம் என்ற புத்திப் போக்குக்குப் பிரதிநிதியாக இருக்க யாருமே இல்லை. சுருக்கமாக என்னுடைய வாதம் இதுதான். ஆனால், அவர்கள் மனத்தில் படும்படி செய்ய நான் தவறி விட்டேன். ஆகையால், நான் என்னிடந்தான் குற்றம் காணவேண்டுமேயன்றி என்னுடைய தோழர்களிடமல்ல. என்னுடைய வாதத்தில் ஏதாவது பலவீனம் இருந்திருக்க வேண்டும். ஆகவே, என்னுடன் மாறுபட்ட கருத்துக் கொள்ளுகிறவர்களின் மனத்தைத் திருப்ப நான் என்னையே தயார் செய்துகொள்ள வேண்டும்.

"ஆனால், நான் விஷயத்தை விட்டு எங்கோ போய்விட்டேன். கலகங்கள் அல்லது அவைகளைப் போன்ற குழப்பங்கள் ஏற்படும்போது நமது அகிம்சையைக் காட்ட வேண்டுவதே நீங்களும் நானும் செய்ய வேண்டியதாகும். நம்மில் ஒவ்வொருவரும், அவர் எங்கிருந்தாலும், அப்படிச் செய்ய ஆரம்பித்துவிடுவோமானல், அகிம்சையோடு கூடிய ஒரு ராணுவமே ஆரம்பமாகிவிடும். எல்லோரும் அளித்துவரும் ஒரு குறிப்பிட்ட அளவு அகிம்சைகூட, அதன் வெற்றிகரமான நடவடிக்கையைப் பார்க்காது இருந்திருப்போமாயின், ஏற்பட்டே இருந்திருக்காது. சமயம் வரும்போது நாம் தவறிவிடுவதாகவே இருந்தாலும், நமது நம்பிக்கையை நாம் விடாமல் வைத்துக்கொண்டிருக்கவேண்டும். நம் தோழர்கள் நம்மிடமிருந்து தாற்காலிகமாகவே மாறுபட்டிருக்கிறார்கள் என்று நம்புகிறேன். அவர்களுடன் விவாதித்துப் பயனில்லை. நம்முள் இருக்கும் உண்மையைச் செய்கையின் மூலம் காட்ட வேண்டியதே இருக்கும் விஷயம். நமக்குத் துவேஷம் கிடையாது ; மனக்கசப்பு இல்லை; குற்றம் கண்டுபிடிக்கும் நோக்கம் கிடையாது என்பதை நாம் காட்டினலன்றி அவ்விதம் செய்தவர்கள் ஆகமாட்டோம். பயங்கரமான சோதனைகளுக்கு நாம் நம்மையே தயார் செய்துகொள்ள

வேண்டும். சோதனைக் காலம், நாம் நினைப்பவதைவிடச் சீக்கிர மாகவே ஏற்பட்டுவிடும். எங்கே போவது என்பது தெரியாமல் நான் போய்க்கொண்டிருக்கிறேன். நன்கு வகுத்துள்ள வேலைத் திட்டம் எதுவும் என்னிடம் கிடையாது. ஒவ்வொரு நிமிடமும் நான் சிந்தித்துக்கொண்டிருக்கிறேன். இதற்கு மத்தியில், நான் வாரந்தோறும் எழுதி வருவதைப் படித்துப் பின்பற்றுவதோடு ஆக்க வேலைத் திட்டத்தையும் நிறைவேற்றி வாருங்கள். விலகு வதற்கு இன்னும் சமயம் வந்துவிடவில்லை. நம்மை யாரும் தவருக எண்ணிக்கொண்டுவிடக் கூடாது.''

''ஆனல், உடனே விலகும்படி எங்களைக் கேட்டீர்களாயின் நாங்கள் எல்லோரும் தயாராக இருக்கிறோம்'' என்ருர் ஓர் ஊழியர்.

காந்திஜி, ''நீங்கள் தயாராயிருப்பது நல்லது. இச்சமயத் திற்கு அதுவே எனக்குப் போதும். நீங்கள் மனச்சாட்சி யோடு டில்லித் தீர்மானத்திற்கு எதிராக வோட்டுச் செய் திருப்பீர்களானல், நீங்கள் தவறு எதுவும் செய்துவிடவில்லை. நீங்கள் நடுநிலைமை வகித்திருந்தால் அப்பொழுதும் தவறு எதுவும் செய்துவிடவில்லை. அகிம்சையின் அடிப்படையிலன்றி வேறு எதற்காகவோ அத்தீர்மானத்தைத் தோற்கடித்துவிட வேண்டும் என்று முற்பட்டவர்களுடன் நீங்கள் சேர்ந்திருந் தால், அப்பொழுது நீங்கள் தவறு செய்தவர்களாவீர்கள். வர்தாத் தீர்மானத்தின்மீது நீங்கள் வோட்டளித்துத் தோற் றிருந்தால், டில்லித் தீர்மானத்திற்கு எதிராக நீங்கள் வோட் டளிக்க முடியாது'' என்ருர்.

''ஆனல், டில்லித் தீர்மானத்திற்கு எதிராக வோட்டுக் கொடுத்தவர்கள், அப்படிச் செய்தது தற்செயலாகத்தான்.''

''இல்லை. யோசனை பண்ணியே செய்திருக்கிருர்கள். உங்கள் அளவுக்கு அவர்கள் அகிம்சையில் நம்பிக்கை கொண் டவர்களல்ல. ஆனல், தங்கள் கொள்கைக்காக அத்தீர்மானத் தைத் தோற்கடிக்க விரும்பினர்கள்.''

''அப்படியானல், நாங்கள் எவ்வளவு காலத்திற்குக் காங் கிரஸில் இருப்பது?''

''இதற்குத் திட்டமான பதிலை நான் சொல்ல முடியாது. மௌலானவுடன் நான் கலந்து பேச வேண்டும். மௌலான வையும் காரியக் கமிட்டியையும் நாம் துரிதப்படுத்தக்கூடாது. முழுவதும் அகிம்சையோடு கூடியவர்கள், காங்கிரஸ் ஸ்தாப

னத்தின் நிரந்தரப் பகுதியினராக இருக்கிறார்கள் என்பதை அவர்கள் கண்டுகொண்டால், தங்களுடைய போக்கை மாற்றிக் கொள்ளுவார்கள்.''

"அப்படியானால், எவ்வளவு காலத்திற்கு நாங்கள் காத்திருப்பது ?''

''நான் உங்களுக்குச் சொல்லும் வரையில்.''

''ஆனால், வர்தாத் தீர்மானத்தையும் நான் வெறுத்தேன். உடனே ராஜிநாமாச் செய்ய விரும்பினேன்'' என்றார் அவர்களில் ஒருவர்.

''நீங்கள் அப்படிச் செய்திருக்கலாம். அப்பொழுது உங்கள் உரிமையைச் செலுத்தியவர்களாவீர்கள். ஆனால், இப்பொழுது அப்படிச் செய்வது பலாத்காரமாகவும் சுய நேர்மையைக் காட்டிக்கொள்ளுவதாகவும் தோன்றும். திட்டமான முடிவிற்கு வர ஓர் ஆண்டிற்குமேல் நான் காத்திருந்ததோடு காரியக் கமிட்டியில் இருக்கும் நண்பர்களின் முழுச் சம்மதத்தின் பேரிலேயே அந்த நடவடிக்கையை மேற்கொண்டேன் என்பதை நீங்கள் நினைவில் வைக்கவேண்டும்.''

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது.]
சேவா கிராமம், 7—8—1940 — 'ஹரிஜன்' - 11—8—1940

# 34

# தார்மிக ஆதரவு

ஒரு நண்பர் பின் வருமாறு எழுதுகிறார் :

''யுத்தப் பிரகடனமானதும் பிரிட்டனுக்குத் தார்மிக ஆதரவு காட்ட வேண்டுமென்று நீங்கள் யோசனை கூறினீர்கள். அத்தகைய ஆதரவின் தன்மை இன்னதென்பதை பலர் அறிந்துகொள்ளவே இல்லை. நான் அறிந்தவரையில் அவற்றைக் குறித்து நீங்கள் விளக்கம் தரவுமில்லை. 'ஹரிஜனபந்து' பத்திரிகையை நான் தொடர்ந்து படித்துக்கொண்டு வருகிறேன். அதில் தெளிவான விளக்கத்தை நான் பார்க்கவேயில்லை. அங்கே காணும் சொற்களுக்கு ஒவ்வொருவரும் அவரவர் வியாக்கியானத்தைச் செய்துகொள்ளுகிறார்கள். கடைசியாக நடந்த குஜராத் மாகாணக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் தலைவர்கள் இவ்வாறு சொன்னார்கள் : 'பிரிட்டனுக்குத் தார்மிக ஆதரவு அளிக்கப் பாபூ தயாராயிருந்தார். சமீபத்தில் நிறைவேற்றியிருக்கும் தீர்மானத்தில் காங்கிரஸ் வேறு என்ன செய்துவிட்டது ? உண்மையில் தான் கொடுப்பதாக அளித்திருக்கும் வாக்குறுதியைவிடக் காங்கிரஸ் அதிகமாகக் கேட்கிறது. எதையும் பெறாமலேயே எல்லாவற்றையும் கொடுத்துவிடப் பாபூ தயாராக இருந்தார்.' யுத்தமே தவறான காரியம் என்றால், தார்மிக ஆதரவுக்கோ அல்லது நல்லாசிக்கோ அது எவ்விதம் தகுதியுடையதாகும் ? மகாபாரதத்தில் அர்ச்சுனனுக்குக் கிருஷ்ண பகவான் தந்த உதவி தார்மிக உதவியா அல்லது யுத்தத்தின் பயங்கரமான ஆயுதங்களையெல்லாம் விட அது பெரிய நாசத்தை உண்டாக்கக்கூடியதா ?"

தார்மிக ஆதரவு என்பதைப்பற்றி நான் எண்ணுவது என்ன என்பதைக் குறித்து 'ஹரிஜன்' பத்திரிகையில் நான் விளக்கி யிருக்கிறேன். அந்த விளக்கம் 'ஹரிஜனபந்து'வில் வெளிவரா மல் இருந்திருக்கக்கூடும். ஆங்கிலத்தில் நான் எழுதும்போது, படிப்போர் புரிந்துகொள்ளட்டும் என்று விஷயங்களை விட்டு விடுவது உண்டு. ஆனால், அப்படி விடப்படுபவை மொழி பெயர்ப்பில் விளக்கப்படவே வேண்டும்.

பொதுவாகச் சொன்னால், பிரிட்டன், இந்தியா விஷயத்தில் நியாயமாக நடந்துகொண்டிருந்தால், அதற்குக் காங்கிரஸின் தார்மிக ஆதரவு கிடைத்தே இருக்கும். என்னுடைய யோசனையில் பேரம் பேசும் உணர்ச்சி எதுவும் இல்லை. ஏனெனில், இந்த உதவி வேறொன்றை எதிர்பார்த்துச் செய்வதாகாது.

என்னுடைய நண்பர் தவத்தின் மூலம் தார்மிக பலத்தைப் பெற்றிருக்கிறார் என்று வைத்துக்கொள்ளுவோம். அந்தப் பலம் எனக்குத் தேவைப்படுகிறது என்றும் வைத்துக்கொள்ளு வோம். நான் கேட்ட மாத்திரம் அந்தப் பலம் எனக்குக் கிடைத்துவிடாது. அதை எனக்குக் கொடுக்க அவர் எப்பொழு தும் தயாராகவும் இருக்கலாம். ஆனால், அதை அவரிடமிருந்து எடுத்துக்கொள்ளுவதற்கு வேண்டிய சக்தி என்னுள் இல்லை யானால், நான் அதை எப்படி அடைய முடியும்? கொடுப்பது என்ற அர்த்தத்தில் தார்மிக ஆதரவை உண்மையில் கொடுத்து விட முடியாது. அதை எடுத்துக்கொள்ளுவதற்குத் தகுதியைப் பெற்றிருப்போருக்கு அது தானே போய்ச் சேருகிறது. அப்படிப் பட்டவர் அதை ஏராளமாக எடுத்துக்கொள்ளலாம்.

காங்கிரஸினிடம் தார்மிகத் தேக்கம் இருக்கிறது. சத்தியம், அகிம்சை, இந்தத் தருமத்தை ஒப்புக்கொள்வதே அதன் தவ மாகும். தன்னுடைய லட்சியத்தை அடைவதற்குச் சத்தியத் தையும் அகிம்சையையும் அது மேற்கொண்டதால் உலகத்தின் மதிப்பை அது பெற்றிருக்கிறது. பிரிட்டனுக்குக் காங்கிரஸ் தனது நல்லாசியைக் கொடுத்திருந்தால், பிரிட்டனின் கட்சி நியாயமானது என்ற முடிவிற்கு உலகம் வந்திருக்கும். காங் கிரஸின் செல்வாக்கிற்குட்பட்ட திரளான மக்கள், பிரிட்டன் பக்கத்தில் நியாயமிருக்கிறது என்று ஒப்புக்கொண்டிருப்பார்கள். ஆனால், இதிலெல்லாம் பொருள் வகையில் காங்கிரஸ் கொடுக்க வேண்டியது எதுவுமே கிடையாது. பிரிட்டிஷ் அரசாங்கம், அதனுடைய சொந்தச் செய்கையினால், தார்மிக கௌரவத் தையும் பலத்தையும் அடைந்திருக்கும். உதவிக்கு ஓர்

ஆளேயோ அல்லது ஒரு பைசாவையோ காங்கிரஸ் கொடுத் திராவிட்டாலும், அதனுடைய தார்மிக ஆதரவும் நல்லாசியும் நிச்சயமாகப் பிரிட்டனின் சார்பாகப் பலத்தை அதிகரித்தே இருக்கும் ; இது என்னுடைய நம்பிக்கை. என் நம்பிக்கை ஆதாரமற்றதாக இருக்கலாம். காங்கிரஸுக்குத் தார்மிக கௌரவம் இருந்ததேயில்லை என்பதும் முற்றிலும் சாத்தியமே என்று மறுக்கலாம். இந்தப் பிரச்னையை உறுதிப்படுத்த வேண்டுவது என்னுடைய வாதத்திற்கு அவசியமானதல்ல.

ஆனால், தார்மிக ஆதரவு அளிப்பதற்கு இருந்த சந்தர்ப் பம் இப்பொழுது வெகுவாய்ப் போய்விட்டதாகத் தோன்று கிறது. என் முறையை அனுசரிக்க முடியாது என்று காங்கிரஸ் கருதியது. இயந்திரம் போல் அதை மேற்கொண்டுவிட முடி யாது. அதற்கு முன்கூட்டியே சத்தியத்திலும் அகிம்சையிலும் திடமான நம்பிக்கை வேண்டும். உண்மையில் தன்னிடம் இல்லா ததை இருப்பதாகக் காங்கிரஸ் கூறிக்கொண்டதே இல்லை என்பதே அதனிடம் இருக்கும் மிகச் சிறந்த தன்மை. ஆகை யால், அதன் தீர்மானங்கள் கண்ணியமானவையாக இருப்ப தோடு சக்தி வாய்ந்தனவாகவும் இருக்கின்றன.

இப்பொழுது கடைசியாகக் காங்கிரஸ் உறுதி செய்து கூறும் தீர்மானம், அது தரும் உதவி, பொருள் உதவியாக இருக்கும். அதுவும் ஒன்றை எதிர்பார்த்து அதற்குப் பதிலாகச் செய்வதாகும் என்பதைக் காட்டுகிறது. இது மிகவும் நியாய மானதே என்பதில் சந்தேகம் இல்லை. இந்த உதவி நிபந்தனை யற்றதன்று ; நிபந்தனையற்றதாகவும் இருக்க முடியாது. இந்த நிலைமை பொருத்தமற்றது அல்லது தருமமானதன்று என்று நான் கூறவில்லை. இத்தீர்மானத்தில் கண்ணியம் இருக்கிறது. ஏனெனில், பெரும்பான்மையினர் யோசித்துச் செய்த தீர்மானம் இது. ஆனால், இத்தீர்மானத்தைச் செய்ததன் மூலம் காங் கிரஸ், தனக்கிருந்த அல்லது இருந்ததாகக் கருதப்பட்ட கௌரவத்தை இழந்துவிட்டது என்பதே என் அபிப்பிராயம். சுயராஜ்யத்தை அகிம்சையின் மூலம் தாங்கள் அடைய முடியும் என்பதில் தங்களுக்குத் திடமான நம்பிக்கை இருந்தபோதிலும், அந்தச் சுதந்திரத்தை அகிம்சையின் மூலமே பாதுகாத்துக் கொள்ளுவோம் என்று தாங்கள் கருதியதே கிடையாது எனப் பல காங்கிரஸ்காரர்கள் கூறுகிறார்கள். என்றாலும், யுத்தத்தை ஒழிக்கும் பொன்னான வழியைக் காங்கிரஸ் காட்டிவருகிறது என வெளி உலகம் முழுதும் நம்பியது. பிரிட்டனைப் போன்ற அதிக சக்தி வாய்ந்த ஒரு வல்லரசிடமிருந்து முற்றிலும்

அகிம்சையைக் கொண்டே காங்கிரஸ் சுதந்திரத்தைப் பறித்துக்கொண்டுவிடுமானால், அந்தச் சுதந்திரத்தை அதே முறையைக் கொண்டே, காங்கிரஸினால் பாதுகாத்துக்கொள்ள முடியாது என்று இந்தியாவிற்கு வெளியில் யாரும் கனவுகூடக் கண்டது கிடையாது.

அர்ச்சுனனுக்குக் கிருஷ்ண பகவான் அளித்த உதவி, தார்மிகமானதாக இருக்கமுடியாது என்பதே என் கருத்து. ஏனெனில், கிருஷ்ண பகவானிடமே ராணுவம் இருந்தது; அவரும் போர்க்கலையில் நிபுணர். துரியோதனன், கிருஷ்ண பகவானுடைய ராணுவத்தைக் கேட்டது புத்திசாலித்தனமே அல்ல. அர்ச்சுனனோ, அவருடைய படையைவிடப் போர் முறையில் தேர்ந்தவரான அவரையே விரும்பி அடைந்தான்; ஆகையால், மகாபாரதத்திற்கு அப்படியே பொருள் கொள்வதாயின், கிருஷ்ண பகவானின் பலம், அவருடைய ராணுவத்தின் பலத்தைவிட நிச்சயமாக அதிக நாசத்தை உண்டாக்க வல்லது. ஏனெனில் கிருஷ்ணர், தம்முடைய போர் ஆற்றலினால் ஏழு படைகள் வைத்துக்கொண்டு துரியோதனனின் பதினொரு படைகளை அழித்தார். ஆனால், மகாபாரதத்தை உலகில் நடந்த ஒரு யுத்தமாக நான் கருதியதே இல்லை என்பது எல்லோருக்கும் தெரிந்தது. காவிய உருவில் கவி, உண்மைக்கும் பொய்மைக்கும், இம்சைக்கும் அகிம்சைக்கும் நன்மைக்கும் தீமைக்குமிடையே - தனிப்பட்ட மனிதனுக்கும் சமூகத்திற்கும் இடையே - நிரந்தரமாக நடந்துவரும் போராட்டத்தையே விவரித்திருக்கிறார். இக்காவியத்தை மேலெழுந்தவாரியாகப் பார்த்தால்கூட, இந்த யுத்தத்தில் தோல்வியுற்றவர்களைவிட வெற்றி பெற்றவர்கள் வாழ்ந்துவிடவில்லை என்பதை வியாச முனிவர் காட்டியிருப்பதைக் காணலாம். அத்தனை போர்வீரர்களிடையே மிஞ்சியவர் ஏழு பேரே. அந்த ஏழு பேரும் எவ்வளவு மனவேதனையுடன் தவித்தனர் என்பதை உண்மைச் சித்திரமாகக் கவி தீட்டியிருக்கிறார். அதோடு, ஆயுதம் தாங்கிய போரில் ஈடுபடும் இரு தரப்பாரும், அற்பத்தனங்களிலும் வஞ்சகத் தந்திரங்களிலும் இறங்க நேருவது நிச்சயம் என்பதையும் கவி தெளிவாகக் காட்டியிருக்கிறார். சமயம் வந்துவிட்டபோது, மிகப் பெரியவரான யுதிஷ்டிரர் (தர்மராஜா)கூடப் போரில் வெற்றி பெறுவதற்காகப் பொய்யைக் கையாள நேர்ந்தது.

எழுதியிருப்பவரின் இன்னும் ஒரு கேள்விக்குப் பதில் சொல்லவேண்டியிருக்கிறது. யுத்தமே தவறான செய்கையென்

ரூல் தார்மிக ஆதரவோ அல்லது ஆசியோ அதற்கு எவ்விதம் பொருந்தும் என்பதே அந்தக் கேள்வி. யுத்தம் எல்லாமே முற்றிலும் தவறானவை என்று நான் நம்புகிறேன். ஆனல், போரில் ஈடுபடும் இரு தரப்பாரின் நோக்கங்களையும் பரிசீலனை செய்து பார்த்தால், ஒருவர் நியாயமாகவும் இன்னும் ஒருவர் தவறு செய்பவராகவும் இருப்பதை நாம் காணலாம். உதாரணமாக, 'அ' என்பவர் 'ஆ' என்பவரின் நாட்டை அபகரித்துக் கொள்ள விரும்புகிறார் என வைத்துக்கொள்ளுவோம். 'ஆ' என்பவருக்குத் தவறு செய்யப்படுகிறது என்றாகிறது. இருவருமே ஆயுதம் கொண்டுதான் போராடுகிறார்கள். பலாத்கார யுத்தத்தில் எனக்கு நம்பிக்கையில்லை. ஆனல், அதே சமயத்தில் தம் கட்சி நியாயமானதான 'ஆ' என்பவருக்கு என்னுடைய தார்மிக ஆதரவும் ஆசியும் உரியன.

சேவா கிராமம், – 12--8—1940 —'ஹரிஜன்' – 18—8—1940

# 35

# ஒரு ருசிகரமான உரையாடல்

"உங்கள் கேள்விகள் ஒவ்வொன்றுக்கும் சிறிதும் தயக்கமின்றி உடனே நான் பதில் சொல்லிவிடுகிறேன் என்பதை நீங்கள் பார்க்கிறீர்கள். இதற்குக் காரணம் என்னவென்றால், உங்கள் கேள்விகளுக்குள் இருக்கும் முக்கியமான விஷயம் என்னை ஆட்கொண்டு இருப்பதோடு, அகிம்சையை ஒட்டி ஏற்படும் நிலைமை ஒவ்வொன்றையும் எனக்கு நானே ஒத்திகை செய்து கொண்டிருப்பதே யாகும்." புனவிலிருந்து வந்த பல நண்பர்களுடன் நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டு முடிவில் காந்திஜி இவ்வாறு கூறினர். அகிம்சையைப்பற்றித் தங்களுக்கு இருந்த சந்தேகங்களைத் தெளிவுபடுத்திக்கொள்ளுவதற்காகவே அவர்கள் வந்திருந்தார்கள். அவர்கள் எல்லோருமே அகிம்சையில் முழு நம்பிக்கையுள்ளவர்கள். அப்படியில்லாமல் இருந்தால், தங்களுடைய சந்தேகங்கள் எல்லாம் தெளிவான பிறகு, தாங்கள் அப்படி இருக்க வேண்டும் என்பதற்காகப் புனவிலிருந்து இவ்வளவு தூரம் வந்தவர்கள். பம்பாய் முன்னள் பிரதம மந்திரி பாலா சாகிப் கேரும் அவர்களுடன் வந்திருந்தார். சந்தேகத்தை விட்டுவைக்கவே அவர்கள் விரும்பவில்லை. தங்களுடைய கேள்விகளில் சில சாரமற்று இருந்தாலும், அதையும் பொருட்படுத்தாமல், பல கேள்விகளைத் தயாரித்து வைத்திருந்தார்கள்.

முதல் கேள்வி அகிம்சையின் தன்மையையும், அதன் எல்லை யையும், அதை அனுசரிப்பதன் அளவையும் பற்றியது. மனித இனத்திற்கு அதை அனுசரிப்பதோடு ஒருவர் நின்றுவிடுவதா அல்லது எல்லாப் படைப்புக்குமே அதை அனுசரிப்பதா?

காந்திஜி கூறியதாவது: "இந்தக் கேள்விக்கு நான் தயா ராக வரவில்லை. ஏனெனில், காங்கிரஸின் அகிம்சை ராஜீயத் துறைக்கு மாத்திரம் பொருந்தும். ஆதலால், மனித இனத்திற்கு மாத்திரமே அது உபயோகமாகிறது. எனவே, நம் காரியத் திற்கு முழு அகிம்சை என்பது ராஜீயத் துறையில் பல வகையான அகிம்சையும் என்ருகிறது. திட்டமான முறையில் அது குடும்ப உறவுகள், அதிகாரத்தில் இருக்கும் ஆட்சியுடன் கொள்ளும் உறவு, உள்நாட்டுக் குழப்பங்கள், வெளிநாட்டுப் படையெடுப்பு ஆகியவைகளை உள்ளடக்கியதாகும்."

"அப்படியானல், புலால் உண்பது, முட்டை சாப்பிடுவது பற்றி என்ன? அகிம்சையில் அவை அடங்குகின்றனவா?"

"அடங்குகின்றன. அப்படி இல்லாவிட்டால், முஸ்லிம்களை யும், கிறிஸ்தவர்களையும், ஏராளமான ஹிந்துக்களையும் அகிம்சை யில் உடன் ஊழியர்களாக இருக்கும் சாத்தியத்திலிருந்து நாம் விலக்க வேண்டியிருக்கும். சைவ உணவு சாப்பிடுகிறவர்களைவிட மாமிசம் சாப்பிடுகிறவர்களில் பலர் அகிம்சை மிக்கவராக இருப் பதை நான் அறிவேன்."

"கொள்கைக்காக அவர்களை விட்டுவிட்டால் என்ன?"

"நமது கொள்கையை விட்டுக் கொடுப்பதாயின், நாம் அப்படியே செய்யலாம். நான் முன்னலேயே காட்டியிருப்பதைப் போல நமது கொள்கை விளக்கப்பட்டிருக்கிறது."

"ஜெர்மன் படையெடுப்புக்குப் போலந்தினரின் எதிர்ப்பு அநேகமாக அகிம்சையோடு கூடியதே என்று நீங்கள் கூறியிருக் கிறீர்கள். அதைக்கொண்டு உங்களை நீங்களே சமாதானப் படுத்திக்கொள்ளுவதாக இருந்தால், காரியக் கமிட்டியின் வர்தாத் தீர்மானத்தை நீங்கள் ஆட்சேபிப்பானேன்?"

"இந்த இரண்டு விஷயங்களுக்கும் ஒற்றுமையே கிடையாது என்பது நிச்சயம். முழுதும் ஆயுதபாணிகளாக இருக்கும் ஒரு கொள்ளைக் கூட்டத்தினரை எதிர்த்து, ஒருவர் தன்னந்தனியாகத் தம் வாளைக்கொண்டு போராடுகிருர் என்ருல், அநேகமாக அவர் அகிம்சையைக் கொண்டு போராடுகிருர் என்றுதான் நான்

சொல்லவேண்டும். நம் பெண்கள் தங்கள் மானத்தைக் காத்துக்கொள்வதற்காகத் தங்கள் நகங்கள், பற்கள், குத்து வாளைக்கூட உபயோகிப்பார்களானால், அவர்கள் செய்கை அகிம்சையானதே என்று நாம் கருத வேண்டுமென நான் கூறியிருக்கவில்லையா? இம்சைக்கும் அகிம்சைக்கும் உள்ள பேதத்தை அவர்கள் அறியமாட்டார்கள். அச்சமயம் தோன்றியதை அவர்கள் செய்கிறார்கள். ஒரு சுண்டெலி, புலியுடன் போராடிக்கொண்டிருக்கும்பொழுது தன் கூரிய பற்களை உபயோகிக்கிறது என வைத்துக் கொள்ளுவோம். அப்பொழுது சுண்டெலி இம்சையைக் கையாளுகிறது என்று நீங்கள் சொல்லுவீர்களா? அதேபோல எண்ணிக்கையிலும் ராணுவத் தளவாடங்களின் பலத்திலும் தங்களைவிட ஏராளமான பலத்தோடு கூடிய ஜெர்மன் படையினருக்கு எதிராகப் போலந்தினர் நின்று போராடும்போது, போலந்தினர் அநேகமாக அகிம்சையோடு இருப்பவர்களே யாவார்கள். நான் கூறியதைத் திரும்பத் திரும்பக் கூறத் தயாராக இருக்கிறேன். 'அநேகமாக' என்ற சொல்லுக்குரிய முழுப் பொருளையும் நீங்கள் கவனிக்கவேண்டும். ஆனால், இங்கு நாம் நாற்பது கோடி மக்கள் இருக்கிறோம். வெளிநாட்டு ஆக்கிரமிப்பை எதிர்த்துப் போராடுவதற்கு ஒரு பெரிய ராணுவத்தைத் திரட்டி, நாம் நம்மைத் தயார் செய்துகொள்ளுவதாயின், அகிம்சையோடு என்பது கிடக்கட்டும், அ நே க மா க அகிம்சையோடு இருக்கிறோம் என்றாவது நாம் நம்மை எப்படி, எவ்விதம் சொல்லிக்கொள்ள முடியும்? எதிரி தங்கள்மீது பாய்ந்தபோது அதற்குத் தயாரில்லாதவர்களாகவே போலந்தினர் இருந்தனர். ராணுவத் தயாரிப்பு என்று நாம் சொல்லும்போது, மேலானதான நமது பலாத்காரத்தைக் கொண்டு, பலாத்கார முறையில் கூடும் எதையும் எதிர்த்துச் சமாளிக்கத் தயாராவது என்பதைத்தான் நினைக்கிறோம். அந்த வழியில் இந்தியா தன்னைத் தயார் செய்து கொண்டு இருந்துவிடுமானால், அது உலக சமாதானத்திற்குப் பெரிய ஆபத்தாக அமையும். ஏனெனில், அந்த வழியை நாம் மேற்கொள்ளுவோமாயின், ஐரோப்பிய நாடுகளைப் போலப் பிறரைச் சுரண்டும் வழிக்கு நாம் போகவேண்டி யிருக்கும். இதனாலேயே, சர்தாரையும் ராஜாஜியையும் திருப்திப்படுத்த என் சொற்களுக்குச் சக்தியில்லாமற் போன சமயத்தை எண்ணி நான் இப்பொழுதும் வருந்துகிறேன். நாம் இத்தனை ஆண்டுகளாக அனுசரித்து வந்திருக்கும் அகிம்சை, அகிம்சையின் ஒரு முறையேயன்றி உண்மையில் அகிம்சையல்ல என்பதை அத் தீர்மானத்தை நிறைவேற்றியதன் மூலம் நாம் உலகத்திற்குப் பிரகடனம் செய்திருக்கிறோம்.''

**கேள்வி :** உங்கள் நிர்வாகத்தை அகிம்சையோடு நீங்கள் எப்படி நடத்துவீர்கள் ?

**பதில் :** அகிம்சை முறையினல் சுதந்திரத்தை நாம் வென்று விடுவோம் என்று நீங்கள் கருதினல், நாட்டின் பெரும் பகுதி அகிம்சை ரீதியில் ஒழுங்குபடுத்தப்பட்டிருப்பது என்பதையே அது உணர்த்தும்.மக்களில் மிகப் பெரும்பாலானவர்கள்,அகிம்சையாள ராக இராதுபோனல் அகிம்சையான சுயராஜ்யத்தை அடைந் திருக்க முடியாது. ஆகையால், சுயராஜ்யத்தை முற்றிலும் அகிம்சை முறையினலேயே நாம் அடைந்தால், ராணுவம் இல்லாமலேயே நிர்வாகத்தை நடத்திக்கொண்டு போவது கஷ்டமானதாயிருக்காது. அப்பொழுது காலிகள்கூட நமது ஆதிக்கத்தின்கீழ் வந்திருப்பார்கள். உதாரணமாக, சேவா கிராமத்தில் எழுநூறு பேரைக் கொண்ட ஜனத்தொகையில் ஐந்து அல்லது ஏழு பேர் காலிகளாக இருக்கிருர்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். இந்த ஐந்து அல்லது ஏழு பேர், ஒன்று, மற்றவர்களின் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டு வாழவாவது வேண்டும் அல்லது கிராமத்தை விட்டுப் போய்விடவாவது வேண்டும்.

"ஆனல், கேள்விக்கு மிகுந்த ஜாக்கிரதையுடனேயே நான் பதில் சொல்லி வருகிறேன் என்பதை நீங்கள் காணலாம். ஒரு போலீஸ் படையை நாம் வைத்துக்கொள்ளவேண்டி வரலாம் என்பதை நான் ஒப்புக்கொள்ளும்படி என் சத்தியம் சொல்கிறது. ஆனல், போலீஸ் நம் ரகத்தினதாக இருக்குமேயன்றிப் பிரிட்டிஷ் ரகத்தினதாக இராது. வயது வந்தவர்களுக்கெல்லாம் வாக்குரிமை நமக்கு இருக்குமாகையால், நம்மில் இளைஞர்களாக இருப்பவர்களின் சொல்லுக்குக்கூட மதிப்பு இருக்கும். இதன லேயே, லட்சியத்தோடு இருக்கும் அகிம்சை ஆட்சி, ஓர் ஒழுங் கான அராஜகமாகவே இருக்குமென்று நான் கூறியிருக்கிறேன். அந்தக் குறைந்த அளவு ஆட்சிக்கு உட்பட்ட நாடு சிறந்த ஆட்சி யைக் கொண்டதாகவே இருக்கும். இதில் பரிதாபம் என்ன வென்றல், ஆட்சியின் லகானை என் கையில் கொடுக்க யாரும் நம்பாமல் இருப்பதுதான் ! இல்லாதிருந்தால், அகிம்சையோடு ஆளுவது எப்படி என்பதை நான் காட்டுவேன். நான் போலீஸ் படையை வைத்திருப்பேனென்றல், சீர்திருத்தம் செய்வோரைக் கொண்ட ஒரு ஸ்தாபனமாக அது இருக்கும்."

"ஆனல், உங்களுக்குக் காங்கிரஸில் செல்வாக்கு இருந் ததே ?" என்று உடனே ஒருவர் கேட்டார்.

காந்திஜி கூறியதாவது: "அது காகிதப்படகு. அதோடு காங்கிரஸ் மந்திரி சபைகளை நான் எப்பொழுதும் சும்மா விட்டதில்லை என்பதையும் நீங்கள் மறந்துவிடக் கூடாது. முன்ஷி, பந்த்ஜி ஆகியோர் என்னிடம் ஏராளமான கண்டனங்களை வாங்கியிருக்கிறார்கள். நான் இன்னும் ஒரு சந்தர்ப்பத்தில் கூறியிருப்பதைப் போலச் சாக்கடையில் இருக்கும் அழுக்கு நீரும் கங்கையின் நீரோடு கலந்துவிடும்போது, கங்கை நீரைப் போலவே சுத்தமானதாகிறது. அது போலவே காலிகளும் காங்கிரஸின் கட்டுப்பாட்டின் கீழ் வேலை செய்து வருவார்களென்று எதிர்பார்த்தேன். ஆனால், பரிசுத்தமாக்குவதற்குத் தெய்விகக் கங்கைக்கு இருக்கும் சக்தியை நம் மந்திரிகள் அடைந்துவிடவில்லை எனத் தெரிகிறது."

இந்தக் கட்டத்தில் ஸ்ரீ கேர் குறுக்கிட்டுச் சொன்னதாவது: "காங்கிரஸ் மந்திரிகள், அகிம்சையின் சக்தியைத் தங்களிடம் வைத்துக்கொண்டிருக்கவில்லை. ஐந்நூறு காலிகள் அட்டகாசம் செய்யக் கிளம்பி, தடுப்பார் இன்றி அவர்கள் இஷ்டப்படி போக விட்டுவிட்டால், சொல்லொணாத அக்கிரமங்களைச் செய்துவிடுவார்கள். உங்களால் கூட அவர்களை எப்படிச் சமாளிக்க முடியுமென்பது எனக்குத் தெரியவில்லை."

காந்திஜி கூறியதாவது: "அத்தகைய நிலைமைகளுக்கும் நான் என்னை நிச்சயமாகத் தயார் செய்துகொண்டு வைத்திருக்கிறேன். அத்தகைய சமயங்களில் மந்திரிகள் வெளியே போய், காலிகளால் தாங்கள் கொல்லப்படுவதற்கு இடம் தந்திருக்க வேண்டும். ஆனால், அதற்கு வேண்டியதான அகிம்சை நம்மிடம் இல்லையென்பதை நாம் கவனிக்க வேண்டும். நம்மிடமிருந்த அரைவேக்காடான அகிம்சையோடேயே உள்ளே போனோம். அதைப்பற்றி நான் கவலைப்படவில்லை. அதிகாரத்தைக் கைவிட்டுவிட வேண்டும் என்று நாம் உணர்ந்தவுடனேயே அதைக் கைவிட்டுவிட்டோம். இந்த இரண்டு அல்லது மூன்று வருடங்களில் கண்டிப்பான அகிம்சையை நாம் அனுசரித்து வந்திருப்போமானால், அகிம்சை வழியிலும், சுதந்திரத்தின் வகையிலும் மகத்தான முன்னேற்றத்தை நாம் அடைந்திருப்போம்."

"ஆனால், நான்கு அல்லது ஐந்து ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு கலவரம் இருந்தபோது அங்கே போய் அப்பெருந்தீயில் தங்களையே அர்ப்பணம் செய்துகொள்ளும்படி தலைவர்களை நான் வேண்டிக்கொண்டேன். யாரும் அதற்குத் தயாராக இல்லை" என்றார் பாலா சாகிப்.

"ஆகவே, என்னுடைய வாதத்தை நீங்கள் ஆதரிக்கிறீர்கள். அகிம்சையிடம் நாம் கொண்ட விசுவாசம் பேச்சில் விசுவாசமேயன்றி உள்ளத்தின் விசுவாசமல்ல என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளுகிறீர்கள். இந்த அரைகுறையான அகிம்சையே நம்மை வெகு தூரம் கொண்டு போயிருக்கிறது. நமது லட்சியத்திற்கு அது நம்மை இன்னும் கொண்டு வந்துவிடவில்லையென்றாலும், பரிபக்குவமான அகிம்சை நம்மை இன்னும் வெகு தூரத்திற்குக் கொண்டு போயிருக்கும் என்று ஏற்படுகிறதல்லவா ?"

"வெளிநாட்டுப் படையெடுப்பு ஒன்றை எதிர்த்து அகிம்சையோடு நீங்கள் நிற்பீர்கள் என்பதை எங்களால் எண்ணிப் பார்க்க முடியவில்லை."

"அப்போது ஏற்படும் ஒரு நிலைமையின் முழுச் சித்திரத்தைக் காட்ட என்னால் ஆகாது. ஏனெனில், பழைய அனுபவம் எதுவும் இதில் நமக்கு இல்லை. அத்தகைய ஒரு நிலை உண்மையில் நமக்கு ஏற்படவில்லை. சீக்கியர், பட்டாணியர், கூர்க்கர் ஆகியோரைக் கொண்ட அரசாங்கத்தின் ராணுவம் நமக்கு இருக்கிறது. இதில் நான் எண்ணக்கூடியதெல்லாம் சுமார் இரண்டாயிரம் பேரைக்கொண்ட என்னுடைய அகிம்சை ராணுவத்துடன், போராடும் இரு ராணுவங்களுக்குமிடையே நான் நிற்க வேண்டும் என்பதுதான். படையெடுப்போரின் இம்சையைக் குறைந்த அளவுக்கு நிறுத்த நம்மால் முடியும் என்றே நான் சொல்லுவேன். பலாத்கார ராணுவத்தின் சேனாதிபதியைவிட அகிம்சை ராணுவத்தின் சேனாதிபதிக்குச் சமயோசித புத்தி அதிகமாக வேண்டும். சமயம் நேரும்போது அதைச் சமாளித்துக்கொள்ளுவதற்கு வேண்டிய தகுதியையும் கடவுள் அவருக்கு அளிப்பார்."

இப்பொழுது ஸ்ரீ கேர், தத்துவ ரீதியான ஒரு கேள்வியைக் கிளப்பினார். அவர் சொன்னதாவது: "ஒன்றுக்கொன்று எதிரிடையான கூறுகளைக் கொண்டது உலகம். எங்கே பயம் இருக்கிறதோ அங்கே தீரமும் இருக்கிறது. செங்குத்தான ஒரு மலையின் சரிவில் நடக்கும்போது நமக்குப் பயம் இருப்பதால் ஜாக்கிரதையாகவே இருக்கிறோம். பயம் அசட்டை செய்யக் கூடிய விஷயமன்று. உங்களுடைய அகிம்சை ராணுவம், ஒன்றுக்கொன்று எதிரிடையான இக்கூறுகளை மீறியதாக இருக்குமா ?"

"இல்லை" என்று பதில் கூறிய காந்திஜி அதே தத்துவ பரிபாஷையிலேயே பதில் சொன்னார்: "இம்சை, அகிம்சை

ஆகிய இரு கூறுகளில் அகிம்சையின் பிரதிநிதியாகவே என்னுடைய ராணுவம் இருக்கும். நானோ அல்லது என் ராணுவத்தாரோ முரண்பாடான இவ்விரு கூறுகளை மீறியே இருப்போம். கீதையின் மொழியில், இம்சைக்கும் அகிம்சைக்கும் மேலாகக் குறைந்த நிலை எழுகிறது. பயத்தினால் பலன் உண்டு. ஆனால், கோழைத்தனத்தினால் எதுவுமில்லை. பாம்பின் வாய்க்குள் நான் என் விரலை வைக்காமல் இருக்கலாம். ஆனால், பாம்பைக் கண்ட மாத்திரத்திலேயே நான் நடுங்கித் திகிலடைந்துவிட வேண்டியதில்லை. தொல்லை என்னவெனில், நமக்கு மரணம் சம்பவிக்கும் முன்பே நாம் எத்தனையோ தடவை நடுங்கிச் சாகிறோம்.

''என்னுடைய ராணுவம் எப்படிப்பட்டதாக இருக்கும் என்பதை உங்களுக்கு விளக்குகிறேன். ஒரு படைக்குரிய வசதிகளோ, படைத்தலைவனுக்குள்ள நுண்ணறிவோ இந்த ராணுவத்தினருக்கு இருக்கவேண்டிய அவசியமில்லை; இருக்கவும் இருக்காது. ஆனால், தலைவனின் கட்டளைகளை விசுவாசத்துடன் நிறைவேற்றும் சிறந்த கட்டுப்பாட்டுணர்ச்சி அவர்களிடம் இருக்கும். இத்தகைய ராணுவத்தில் எதிர்ப்பு இராத பணிவைப் பெறுவதற்கு வேண்டிய தகுதி சேனாதிபதிக்கு இருக்க வேண்டும். இந்தப் பணிவைத் தவிர அவர்களிடமிருந்து வேறு எதையும் அவர் எதிர்பார்க்கமாட்டார். தண்டி யாத்திரை* முழுவதும் என் சிந்தனையின் உருவாக்கம். பண்டித

---

* சபர்மதி ஆசிரமத் தொண்டர்களுடன் கடற்கரைச் சிற்றூரான தண்டிக்கு யாத்திரை சென்று அங்கு உப்புச் சட்டத்தை மீறி உப்பு எடுப்பது என்று 1930-இல் மகாத்மா காந்தி முடிவு செய்தார். இதுவே தண்டி யாத்திரை எனச் சரித்திரப் புகழ் பெற்றது. 1930 மார்ச் 12-ஆம் தேதி காலை 6-30 மணிக்கு 78 ஆசிரமத் தொண்டர்களுடன் காந்திஜி சபர்மதி ஆசிரமத்திலிருந்து தண்டிக்குப் புறப்பட்டார். உலகம் முழுவதுமே இந்த யாத்திரையைக் கவனித்து வந்தது என்று கூற வேண்டும். அப்பொழுது மகாத்மாவுக்கு வயது 61. தினத்திற்குப் பத்து மைல்களுக்குமேல் நடந்தார். அங்கங்கே பொதுக்கூட்டங்களிலும் பேசினார். இரவு 9 மணிவரை காண வருபவர்களிடம் பேசிவிட்டுத் தூங்குவார். விடியற்காலையில் தம் சகாக்கள் எழுவதற்கு முன்னாலேயே எழுந்து கடிதங்களுக்குப் பதில் எழுத ஆரம்பித்துவிடுவார். ஒரு நாள் காலை 4 மணிக்கு அவர் கடிதம் எழுதிக்கொண்டிருந்தபோது அங்கிருந்த சிறு விளக்கு எண்ணெய் இல்லாததனால் நின்றுவிட்டது. காந்திஜி இதற்காக வேறு யாரையும் எழுப்பாமல் நிலா வெளிச்சத்தில் கடிதத்தை எழுதிக்கொண்டிருந்தார். 6 மணிக்குக் காலைப் பிரார்த்தனை 6-30க்கெல்லாம் யாத்திரை தொடங்கிவிடுவார்.

காந்திஜி தம் தோழர்களுடன் ஏப்ரல் 5-ஆம் தேதி தண்டி சேர்ந்தார். சபர்மதி ஆசிரமத்திலிருந்து அது 241 மைல் தூரம் இருக்கிறது. புறப்பட்ட இருபத்து நான்காம் நாள் மகாத்மா தண்டி சேர்ந்துவிட்டார். மறுநாள் காலை கடலில் குளித்துவிட்டு 8-30 மணிக்குச் சட்டத்தை மீறித் தம் கையினாலேயே ஒரு பிடி உப்பு எடுத்தார். அச்சமயம் பக்கத்திலிருந்த சரோஜினி தேவி, ''நீங்கள் சட்டத்தை மீறிவிட்டவர்கள்'' என்றார். காந்திஜியை யாரும் கைது செய்யவில்லை. எங்கும் சட்டத்தை மீறி மக்கள் உப்புத்

மோதிலால்ஜி அதைக் குறித்து முதலில் ஏளனமாகச் சிரித்தார். அது ஒரு பைத்தியக்காரன் செய்யும் துணிச்சலான முயற்சி என்று எண்ணினர். அதற்குப் பதிலாக வைசிராய் மாளிகைக்கு யாத்திரை போகலாம் என்று ஜம்னுலால்ஜி யோசனை கூறினர். ஆனல், நம் நாட்டின் கோடிக்கணக்கான மக்களை வைத்தே நான் சிந்திக்க வேண்டியிருந்ததால் உப்பு யாத்திரையைத் தவிர வேறு எதைப்பற்றியும் நான் நினைப்பதற்கில்லை. இந்த யோசனையை என் மனத்துள் புகுத்தியவர் கடவுளே. பண்டித மோதிலால்ஜி சிறிது நேரம் விவாதித்தார். ஆனல், என்ன இருந்தாலும் நான் சேனதிபதியாகையால், என்னிடம் நம்பிக்கை கொள்ள வேண்டியதே என்று கூறித் தாம் விவாதிக்கக் கூடாது என்றார். பின்னர் என்னை அவர் ஜாம்பூஸாரில் பார்த்தபோது, முற்றிலும் இதைத் தழுவினர். ஏனெனில், பொது மக்களிடையே ஏற்பட்டிருந்த விழிப்பை அவர் தம் கண்ணலேயே கண்டார். மந்திர சக்தியினல் ஆனதைப் போன்ற ஒரு விழிப்பு அது. அதில் நம் பெண்கள் ஏராளமான பேர் காட்டிய அமைதியான வீரத்தைப் போன்று சரித்திரத்தில் வேறு எந்த உதாரணத்தைக் காண முடியும்?

"எனினும், அந்த இயக்கத்தில் ஈடுபட்ட ஆயிரக்கணக்கானவர்கள் யாவரும் சாதாரணமானவர்களே. தவறு, பாபம் இவற்றைச் செய்துவிடும் மனிதர்களே அவர்கள். தாம் எதிலும் ஒட்டாமல், மிகவும் அற்பமான ஆயுதங்களைப் பயன்படுத்துவதற்கான வழியைக் கடவுள் கையாள்கிறார். அவர் எந்தத் தன்மைக்கும் அப்பாற்பட்டவர்; குணதீதர்.

"வெற்றி பெறும் ராணுவந்தான் என்ன? ராமரிடம் தேர் இல்லை; யுத்தத் தளவாடங்கள் இல்லை; அவர் பாதங்களில் செருப்புக்கூட இல்லை. அப்படி இருக்கும்போது, ராவணனைப்போன்ற ஓர் எதிரியை அவரால் எப்படி வெல்ல முடியும் என்று விபீஷணன் ஆச்சரியத்துடன் கேட்டபோது ராமர் சொன்னதை நீங்கள் அறிவீர்கள். ராமர் சொன்னதாவது:

"என் அருமை விபீஷணா, ராமனுக்கு வெற்றியைத் தரும் ரதம் சாதாரணத் தேரைவிட வேறனது. ஆண்மையும் வீரமுமே அதன் சக்கரங்கள். அசைக்க

---

தயாரிக்க ஆரம்பித்தனர். அரசாங்கத்தின் அடக்குமுறை ஆவேசமும் மிகுந்தது. மே 4-ஆம் தேதி காராடி முகாமில் இரவு 12-45 மணிக்கு, சூரத் ஜில்லா மாஜிஸ்டிரேட் ஆயுதம் தாங்கிய போலீஸ் படையுடன் போய்க் காந்திஜியைக் கைது செய்து எரவாடா சிறைக்குக் கொண்டு போனர்.

அதன் பிறகு நாடெங்கும் சட்ட மறுப்பு இயக்கம் தீவிரமாகி அரசாங்கம் முடிவில் பணிந்து வந்து காந்தி-இர்வின் ஒப்பந்தத்தைச் செய்துகொண்டது என்பது உலகப் பிரசித்தமான தாகும்.

முடியாத சத்தியமும் ஒழுக்கமும் அதன் கொடியும் பதாகையும். பலம், பகுத்தறிவு, தன்னடக்கம், தயாளம் ஆகியவை அதன் குதிரைகள். மன்னிப்பு, கருணை, நிதானம் ஆகியவை அக்குதிரைகளின் லகான்கள். கடவுளைப் பிரார்த்திப்பதே அந்த வெற்றி வீரரின் தவறு செய்யாத பாகன். பட்சபாதமின்மையே அவர் கேடயம். திருப்தியே அவர் வாள்; தருமமே அவர் கோடரி. அறிவே அவர் வேல். பூரண சாத்திர ஞானமே அவர் வில். பரிசுத்தமான, சலனமற்ற அவருடைய மனம் அம்பறாத் தூணியாகிறது. அவரது மன அமைதியும் அவருடைய யமநியம அனுஷ்டானங்களுமே கணைத்தொகுதி. பிராம்மணருக்கும் குருவுக்கும் அவர் செலுத்தும் வணக்கம், எதுவும் ஊடுருவ முடியாத கவசமாகும். இவைகளுடன் ஒப்பிடக்கூடிய சாதனங்கள் வேறு எவையுமே வெற்றிக்கு இல்லை. என் அருமை நண்பா, அறமெனும் தேர்மீது நிற்கும் ஒருவரை வெல்லக்கூடியவர் யாருமே இல்லை. இதைப் போன்ற சக்திவாய்ந்த தேரினை உடைய ஒரு வீரன், வெல்லுதற்கரிய ஒரு பெரிய எதிரியை — ஏன் உலகத்தைக்கூட—வென்றுவிட முடியும். என் உரையைக் கேள்; அஞ்சாதே!'

"இத்தகைய தளவாடங்களே நமக்கு வெற்றியை அளிக்கும். நான் உலகத்தைத் துறந்துவிடவில்லை; அப்படித் துறக்க எண்ணவுமில்லை. நான் சந்நியாசி அல்ல. சேவா கிராமத்தில் என்னால் செய்ய முடிந்த சிறு வேலையைச் செய்துகொண்டு, என்னிடம் வருவோருக்கு என்னாலான வழியைக் காட்டிக் கொண்டு நான் திருப்தியோடு இருக்கிறேன். நமக்கு வேண்டியதெல்லாம் நம்பிக்கைதான். சரியான வழியில் பின்பற்றினால், அதில் நஷ்டம் என்ன இருக்கிறது? நமக்கு ஏற்படக்கூடிய மோசமான நிலை, நாம் நசுக்கப்பட்டு விடுவோம் என்பதுதானே? முறியடிக்கப்படுவதைவிட நசுக்கப்படுவதே மேல்.

"பலாத்காரத்திற்கு நம்மைத் தயாராக்கிக்கொள்ள வேண்டுமென்றால், அது என்னால் ஆகாது. அந்த வேலையைப்பற்றியோ, ஆயுதத் திட்டத்தைப் பற்றியோ என்னால் நினைக்கவும் முடியாது. இதற்கு நேர்மாறாக என்னுடைய அகிம்சைத் திட்டம் மிகமிக எளிது; சுலபமானது. கடவுளே நம் சேனாதிபதியாகவும், தவறாத வழிகாட்டியாகவும் இருக்கும்போது பயப்படுவதற்கு என்ன காரணம் இருக்கிறது?"

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது.]

சேவா கிராமம், 21—8—1940 —'ஹரிஜன்' — 25—8—1940

## 2

நடைமுறையில் ஏற்படக்கூடிய கஷ்டங்களைப்பற்றிய கேள்விகள் இப்போது எழுந்தன:

---

* துளசிதாசரின் ராமாயணத்திலிருக்கும் இந்தப் பாட்டுக்களையே காந்தியடிகள் குறிப்பிட்டார். 'ஹரிஜன்' வாசகர்களை உத்தேசித்து ஸ்ரீ மகாதேவ தேசாய் ராமாயணத்தில் வரும் அச்செய்யுட்களை முழுவதும் மொழிபெயர்த்துத் தந்தார்.

**கேள்வி :** அகிம்சைவாதி சொத்து வைத்துக்கொள்ளலாமா? வைத்துக்கொள்ளலாம் என்ருல், அகிம்சை ரீதியில் அவர் அதை எப்படி வைத்துக்கொள்ளுவது?

**பதில் :** லட்சக்கணக்கில் பணம் அவரிடம் இருந்தாலும், அவர் எதையும் வைத்துக்கொள்ள வேண்டியதில்லை. தர்மகர்த்தாவாக அவர் அதை ஏற்று இருக்கவேண்டும். கொள்ளைக்காரர்களுடனும் திருடர்களுடனும் அவர் வாழ்ந்தால், மிகச் சொற்பமே அவருக்கு இருக்கும். கோவணத்திற்குக் கொஞ்சம் அதிகமாக இருக்கும். அவர் இதைச் செய்வாராஞல் அவர்களை அவர் மாற்றிவிட முடியும். ஆனல், எல்லாவற்றிற்கும் இதையே நீங்கள் அனுசரித்துவிடக்கூடாது. அகிம்சை ஆட்சி இருக்கும் நாட்டில் கொள்ளைக்காரர்கள் மிகமிகக் குறைவாகவே இருப்பார்கள். தனிப்பட்டவருக்குச் சிறந்த வழி, அவரிடம் சொந்தமானதாக ஒன்றுமே இராது என்பது. குற்ற பரம்பரையினர் என்று கூறப்படுபவர்களுடன் குடியிருந்து அவர்களிடையே வேலை செய்து வருவது என்று நான் முடிவு செய்துவிட்டால், என்னுடையது என்று எதுவும் வைத்துக்கொள்ளாமல் அவர்களிடம் நான் போய் என்னுடைய உணவுக்கும் இருக்க இடத்திற்கும் அவர்களையே எதிர்பார்ப்பவனுக இருக்க வேண்டும். தங்களுக்குச் சேவை செய்வதற்காகவே நான் அவர்களுடன் இருக்கிறேன் என்பதை அவர்கள் உணர்ந்ததுமே அவர்கள் என் நண்பர்கள் ஆகிவிடுவார்கள். உண்மையான அகிம்சை அந்தப் போக்கில்தான் இருக்கிறது. ஆனல், இதைப்பற்றி விவரமாகச் சமீபத்தில் 'ஹரிஜன்' பத்திரிகையில் நான் விவாதித்திருக்கிறேன்.

பின்னர் விவாதம் கீதையின் தத்துவத்தை ஆட்சேபிக்கும் கேள்வியாகப் பலமாகத் திரும்பியது. "கீதையின் முக்கியமான போதனை தன்னலமற்ற செயலா அல்லது அகிம்சையா?" என்று ஒருவர் கேட்டார். இதற்குக் காந்திஜி கூறியதாவது: "அது அனுஸக்தி – பற்றற்ற செயல் – என்பதில் எனக்கு எந்தவிதமான சந்தேகமும் இல்லை. இதனுலே கீதையின் என்னுடைய சிறு மொழிபெயர்ப்புக்கு 'அனுஸக்தி யோகம்' என்று பெயர் கொடுத்தேன். அனுஸக்தி அகிம்சைக்கு மேம்பட்டதாகிறது. அனுஸக்தராக (பற்றற்றவராக) இருப்பவர், தன்னலமற்றதான நிலையை அடைவதற்கு அகிம்சையை அவசியம் அனுசரிக்க வேண்டியதாகிறது. ஆகையால், அகிம்சை அவசியமானதான ஆரம்பம்; அது அனுஸக்தியில் சேர்ந்திருக்கிறது; அதற்கு மேல் அது போய்விடவில்லை."

"அப்படியானால், கீதை இம்சை, அகிம்சை இரண்டையும் போதிக்கிறதா ?"

"கீதையைப் படிப்பதில் அந்தப் பொருள் எனக்கு ஏற்படவில்லை. கீதையை எழுதியவர் அகிம்சையைப் பரப்புவதற்காக அதை எழுதவில்லை என்று இருக்கலாம். ஆனால், அதற்கு விளக்கம் கூறுகிறவர் கவிதையின் மூலத்திற்கு அநேக விளக்கங்களை எடுத்துக் காட்டுவதைப் போன்று, அதன் முக்கியமான போதனை அனாஸக்தி, அது அகிம்சையையும் போதிக்கிறது என்று கீதைக்கு நான் விளக்கம் கூறுகிறேன். நாம் உடலோடு ஜீவித்திருந்து, உலகில் நடமாடிக்கொண்டிருக்கும்போது அகிம்சையை நாம் அனுசரிக்க வேண்டியிருக்கிறது. அதற்கு அப்பாலான வாழ்வில் இம்சையோ, அகிம்சையோ இல்லை."

பாலா சாகிப் கேர் கூறியதாவது : "ஆனால், உண்மையில் கிருஷ்ண பகவான் அகிம்சைத் தத்துவத்தை மறுக்கிறார். அர்ச்சுனன், தன்னுடைய போர் எதிர்ப்பு முடிவை வருமாறு கூறுகிறான் : 'என்னுடைய உற்றார் உறவினர் தாக்கினால், அவர்களை நானும் தாக்குவதற்குப் பதிலாக, நிராயுதபாணியாக அவர்கள் முன்பு நின்று, வாளுக்கும் ஈட்டிக்கும் என் மார்பைத் திறந்து காட்டுவதே சிறந்தது என்று நான் கருதுகிறேன்.' கிருஷ்ண பகவானே*, அடிக்குப் பதில் அடிக்கும்படி அர்ச்சுனனுக்குப் போதிக்கிறார்."

காந்திஜி கூறியதாவது : "இதில் உங்களுடன் நான் வாதுக்கு வருகிறேன். அர்ச்சுனனின் அந்தச் சொற்கள், வெறும் ஞானப் புரட்டு. அவனிடம் கிருஷ்ணர், 'தவறானது என்ற எண்ணம் கொஞ்சங்கூட இல்லாமல் நேற்று வரையில் நீ உன் உற்றார் உறவினர்களுடன் பயங்கரமான ஆயுதங்களைக் கொண்டு போராடி வந்திருக்கிறாய். இன்றுங்கூட, எதிரிகள் உன்னுடைய உற்றார் உறவினர்களாக இல்லாமல் வெளியாராக இருந்தால் நீ போராடுவாய் !' என்று அர்ச்சுனனைப் பார்த்துச் சொல்லுகிறார். அர்ச்சுனனுக்கு எழுந்த பிரச்னை அகிம்சையைப் பற்றியதன்று. தனக்கு நெருங்கிய உறவினர்களாக இருப்போரைத் தான் கொல்லுவதா என்பதேயாம்."

திரும்பவும் கேள்விகள் நம் உலக விஷயங்களுக்கு வந்துவிட்டன. காங்கிரஸ்காரரும், பூரண அகிம்சையில் நம்பிக்கை கொண்டவர்களும் செய்ய வேண்டுவன பற்றிக் கேட்டார்கள். தாம்

---

* பகவத்கீதை - முதல் அத்தியாயம், 46-ஆம் செய்யுள் பார்க்க.

வாய் திறக்கும் வரையில் அவர்கள் அடங்கியிருக்க வேண்டும் என்று காந்திஜி விளக்கினர். புனு தீர்மானத்தை நிறைவேற்றிய தலைவர்களிடம் இன்னும் பேசிப் பார்க்க அவர் விரும்பினர். புதிய கொள்கையை அவர்கள் பின்பற்றுவார்களாயின், காங்கிரஸ் தன்னுடைய கௌரவத்தையெல்லாம் இழந்துவிடும் என்று அவர்களுக்குக் காட்டலாம் என்று இருந்தார். ஆனல், பிரச்னையைப் பொறுமையுடன் சமாளிக்க வேண்டியிருந்தது. காங்கிரஸ் தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்படவில்லை, என்றாலும், அது அவ்வளவு முக்கியம் அல்ல. தீர்மானம் வேண்டுமென்றே நிறைவேற்றப்பட்டிருக்கும்போது அது அமலுக்குக் கொண்டு வரப்பட்டுவிட்டதாகவே ஆகிறது. அதற்குச் சர்க்கார் உடன்பட மறுத்துவிட்டதனல், அவர்களுடைய கடமை மாறி விடவில்லை. காந்திஜி கூறியதாவது : “ மேலும், புனு தீர்மானத்தில், அதனிடமே அடங்கியதான ஒரு பழுதும் இருக்கிறது. வெளிநாட்டின் படையெடுப்பைச் சமாளிப்பதற்கு ஆயுதங்களாலின்றி உங்களால் ஆகாது என்று நீங்கள் நினைப்பதாயிருந்தால், அன்றாடக் குழப்பங்களான சச்சரவுகள், கொள்ளைகள், கலவரங்கள் ஆகியவைகளைச் சமாளிப்பதற்கும் அவை தேவைப்படுவதற்கு வலுவான காரணங்கள் இருப்பது சாதாரண அறிவுள்ளவர்களுக்கும் விளங்க வேண்டும். இரவில் உங்கள் வீட்டிற்குள் புகுந்துவிடும் கொள்ளைக்காரனைச் சமாளிப்பதற்கு வேண்டுமென்றே அகிம்சையைக் கையாள்வதைவிட, ஒழுங்குடையதான படையெடுப்பை நிராயுதபாணியான எதிர்ப்பினல் சமாளிப்பதென்பது என்றுமே எளிதானது. இதற்கு உயர்ந்த வகை அகிம்சை வேண்டிதாகிறது.”

[ ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது.]
சேவா கிராமம், 26—8—1940

—'ஹரிஜன்' - 1—9—1940.

# 36

# வீரமுள்ளோரின் அகிம்சை

ஒருவர் கீழ் வருமாறு எழுதுகிறார்:

“ அகிம்சை வீரமுள்ளவருக்கேயன்றிக் கோழைகளுக்கு அல்ல என்று நீங்கள் சொல்லுகிறீர்கள். ஆனல், இந்தியாவில் வீரமுள்ளவர்கள் யாருமே இல்லை என்பதே என் கருத்து. இந்தியாவினிடம் ஆயுதங்களில்லை. ஆகவே, தன்னைப் பாதுகாத்துக்கொள்ள முடியாமல் அது இருக்கிறது என்பதை உலகம் அறிந்திருக்கும்போது, நாம் வீரமுள்ளவர்கள் என்று சொல்லிக் கொண்டாலும், இதை அது எப்படி நம்பும்? அவ்விதம் இருக்க, வீரர்களுக்கான அகிம்சையை வளர்த்துக்கொள்ள நாம் என்ன செய்யவேண்டும்?”

இக்கடிதத்தை எழுதியிருப்பவர், இந்தியாவில் வீரமுள்ள வர்கள் யாருமே இல்லை என்று நினைப்பது தவறு. அன்னியர், நமக்குக் கோழைகள் என்ற பட்டத்தைச் சூட்டிவிட்டார்கள் என்பதற்காக அப்பட்டத்தை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பது வெட்கப்பட வேண்டிய விஷயம். தன்னைப்பற்றி எப்படி மனிதன் நினைத்துக்கொள்கிறானோ அப்படியே ஆகி விடுகிறான். ஒரு குறிப்பிட்ட காரியத்தை நான் செய்யக்கூடாது என்று எனக்கு நானே சொல்லிக்கொண்டு வருவேனாயின், உண்மையில் அதைச் செய்யச் சக்தியற்றவனாக நான் ஆகி விடக்கூடும் என்பது சாத்தியம். இதற்கு மாறாக, என்னால் அதைச் செய்துவிட முடியும் என்று நான் நம்புவேனாயின், அதைச் செய்யும் ஆற்றல் ஆரம்பத்தில் எனக்கு இல்லாமற் போயினும், அந்த ஆற்றலை நான் நிச்சயமாகப் பெற்றே தீரு வேன். மேலும், நாம் கோழைகள் என்று உலகம் நம்புகிறது என்று சொல்லுவதும் தவறானது. சத்தியாக்கிரகப் போராட் டத்திற்குப் பிறகு அப்படி எண்ணுவதை உலகம் விட்டுவிட்டது. சென்ற இருபது ஆண்டுகளில் காங்கிரஸின் கௌரவம் மேற் கத்திய நாடுகளிடையே வெகுவாய் உயர்ந்திருக்கிறது. நமக்கு ஆயுதங்களே இல்லை என்றாலும் சுயராஜ்யம் பெற்றுவிடலாம் என்று நாம் நம்பிக்கொண்டிருக்கிறோம், அதற்குக் கிட்டத்திலும் வந்துவிட்டோம் என்ற உண்மையை உலகம் ஆச்சரியத்துடன் மட்டுமல்ல, அக்கறையுடனும் கவனித்துக்கொண்டு வருகிறது. மேலும், சமாதானம் நிலவுவதற்கு நம்பிக்கையின் ஒளியையும், போர் என்னும் நரகத்திலிருந்து விமோசனம் அடையும் வழியை யும், அகிம்சை இயக்கத்தில் உலகம் காண்கிறது. பழி வாங்கும் உணர்ச்சி என்றாவது மறையவேண்டுமானால், ரத்தம் சிந்தும் யுத்தங்களும் ஒழிய வேண்டுமானால், காங்கிரஸ் அனுசரித்து வரும் அகிம்சைக் கொள்கையின் மூலமே அந்த ஆனந்தகரமான சம்பவம் நடக்க முடியும் என்று மனித வர்க்கத்தின் பெரும் பகுதி நம்பிக்கை கொண்டிருக்கிறது. ஆகையால், இக் கடிதத்தை எழுதியிருப்பவரின் பயமும் சந்தேகமும் ஆதார மற்றவை.

இந்தியா நிராயுதபாணியாக இருக்கிறது என்பது அகிம் சையின் பாதையில் ஒரு தடையே அல்ல என்பதை இப்பொழுது காணலாம். பிரிட்டிஷ் அரசாங்கம் பலவந்தமாக இந்தியாவை நிராயுதபாணியாக்கியது பெருந் தவறு; கொடிய அக்கிரமம். ஆனால், கடவுள் நம் பக்கம் இருப்பாராயின், அப்படிச் செய் வதற்கு வேண்டிய ஆற்றலும் நமக்கு இருந்தால், அநீதியையும்

நமக்குச் சாதகமாக்கிக்கொண்டுவிட முடியும். அத்தகைய காரியமே இந்தியாவில் நடந்திருக்கிறது.

அகிம்சையில் பயிற்சி பெறுவதற்கு ஆயுதங்கள் நிச்சய மாகத் தேவையில்லாதவை. உண்மையில் ஆயுதம் ஏதாவது இருந்தாலும், எல்லேப்புற மாகாணத்தில் கான் சாகேப் செய்திருப்பதைப் போல, அவற்றை நாம் எறிந்துவிடவே வேண் டும். அகிம்சையை நாம் கற்றுக்கொள்ளுவதற்கு முன்னல் இம்சையை நாம் கற்றுக்கொள்ள வேண்டும் என்று கூறுவோர், ‘பாபிகளே முனிவர்களாக முடியும்’ என்பவர்களாவர்.

இம்சையில் பயிற்சி பெறுவதற்குக் கொல்லும் கலையை ஒருவர் எவ்விதம் கற்றுக்கொள்ள வேண்டுமோ அதே போல அகிம்சையில் பயிற்சி பெறுவதற்குச் சாகும் கலையை ஒருவர் கற்றுக்கொள்ள வேண்டும். இம்சை என்பதற்குப் பயத்தி லிருந்து விடுதலை பெறுவது என்பதல்ல பொருள். பயத்திற்குக் காரணமாக இருப்பதுடன் போராடுவதற்கான முறையைக் கண்டுபிடிப்பது என்பதே அதன் பொருள். இதற்கு மாருக, அகிம்சையில் பயத்திற்குக் காரணம் எதுவுமே இல்லை. பயம் என்பதே இல்லாமலிருப்பதை முன்னிட்டு அகிம்சையைப் பின் பற்றுகிறவர், உயர்ந்த வகையான தியாகத்திற்குத் தமக்குள்ள தகுதியை விருத்தி செய்துகொள்ள வேண்டும். தம்முடைய நிலத்தையோ, சொத்தையோ, தம் உயிரையோ இழக்க நேர்ந் தாலும் அவர் பொருட்படுத்துவதில்லை. பயங்களெல்லாவற்றை யுமே வென்றுவிட்டாலன்றி அகிம்சையைக் குறைவற்ற வகையில் அவர் அனுசரிக்க முடியாது. அகிம்சைவாதிக்கு ஒரே ஒரு பயந்தான் உண்டு; அது கடவுளிடத்தில் பயம். கடவுளிடம் அடைக்கலம் புக விழைபவர், உடலுக்கும் மேலானதான ஆத் மாவைக் கண்டிருக்க வேண்டும். அழிவற்றதான ஆத்மாவை அவர் கண்டுகொண்டதுமே அழியும் உடல்மீது வைத்திருக்கும் ஆசையை அவர் விட்டுவிடுகிருர். இவ்விதம் அகிம்சையில் பயிற்சி பெறுவது, இம்சையில் பயிற்சி பெறுவதற்கு முற்றிலும் நேர் மாருனதாக ஆகிறது. வெளியில் இருப்பவைகளான பொருள் களைப் பாதுகாப்பதற்கு இம்சை தேவைப்படுகிறது. ஆனல், ஆத்மாவைப் பாதுகாப்பதற்கும், ஒருவருடைய மானத்தைப் பாதுகாத்துக் கொள்ளுவதற்கும் அகிம்சை தேவையாகிறது.

இந்த அகிம்சையை வீட்டில் உட்கார்ந்துகொண்டு கற்றுக் கொண்டுவிட முடியாது. அதற்குத் துணிச்சலான முயற்சி வேண்டும். நம்மையே சோதித்துக்கொள்ளுவதற்காக ஆபத்

துக்கும் சாவுக்கும் துணிய வேண்டும்; உடலைத் துன்பத்திற்கு உட்படுத்தவும் நாம் கற்றுக்கொள்ளவேண்டும்; எல்லா விதமான கஷ்டங்களையும் சகித்துக்கொள்ளுவதற்கு வேண்டிய ஆற்றலை யும் நாம் அடையவேண்டும். இருவர் சண்டை போட்டுக்கொண் டிருப்பதைக் கண்டதுமே நடுநடுங்கிப் போகிறவனோ அல்லது ஓட்டம் பிடிப்பவனோ அகிம்சையோடு இருப்பவன் அல்ல; அவன் கோழை. அகிம்சையோடு இருக்கும் ஒருவர், அத்தகைய சண்டையைத் தடுப்பதற்குத் தம் உயிரையே கொடுப்பார். இம்சையில் ஈடுபடுகிறவருக்கு இருப்பதைவிட அகிம்சையோ டிருப்பவருக்குள்ள வீரம் மிகவும் உயர்வானது. ஈட்டி, வாள் அல்லது துப்பாக்கி ஆகிய ஆயுதங்கள் இம்சையோடிருப்பவரின் அடையாளங்கள். அகிம்சையோடு இருப்பவரின் கவசம், கடவுளே.

அகிம்சையைக் கற்றுக்கொள்ள விரும்புகிறவருக்குப் பயிற்சி முறை எதுவும் இல்லை. ஆனால், நான் குறிப்பிட்டிருக்கும் கொள் கைகளிலிருந்து ஒரு முறையை உருவாக்கிக்கொள்ளுவது எளிது.

இதுவரையில் சொல்லியதிலிருந்து, இந்த இரண்டுவிதமான வீரங்களுக்கும் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லை என்பது தெளி வாகும். ஒன்று, எல்லைக்குட்பட்டது; மற்றொன்று, எல்லை யற்றது. அகிம்சைக்கு மிஞ்சிய துணிச்சல், அகிம்சையை வென்றுவிடுவது என்பது எதுவுமே கிடையாது. அகிம்சை வெல்ல முடியாதது. இந்த அகிம்சையை அடைய முடியும் என்பதில் எந்தவிதமான சந்தேகமும் இருப்பதற்கில்லை. நம்மைக் கணக்கிட்டுப் பார்ப்பதற்குச் சென்ற இருபது ஆண்டு களின் சரித்திரமே நமக்குப் போதுமானதாக இருக்கவேண்டும்.

சேவா கிராமம், 27—8—1940. —'ஹரிஜன்', - 1—9—1940.

# 37

# எப்படித் தணிப்பது ?

'உண்மையை நாடுபவரின்' கடிதம் ஒன்றை* இப்பத்திரிகை யில் மற்றோரிடத்தில் வாசகர்கள் காணலாம். ஒவ்வொருவருக் கும் தோன்றக்கூடிய கேள்வியையே இவர் அதில் கேட்டிருக் கிறார். இக்கேள்வியை இவர் எவ்விதம் புகுத்தியிருக்கிறார் என்பதில்தான் விசேடம் இருக்கிறது. இம்சையிலுள்ள கோரம் நமக்கு அருவருப்புத் தரும் வகையில் இப்பொழுது மூண்டிருக்கும்

---

* காந்திஜி குறிப்பிடும் 'உண்மையை நாடுபவ'ரின் கடிதத்தைப் பின்புறம் பார்க்க.

பெருந் தீயைப்பற்றி வருணித்திருக்கிருர். ‘இத்தகைய இம்சை முறைகளைக் கொண்டு, உலகத்தையே ஆளும் அதிகாரத்தை வென்றுவிடுவது சாத்தியமே என்ருலும், அது எனக்கு வேண்டாம்’ என்று வாசகர் உள் உணர்விஞலேயே சொல்லி விடுவார் என்பது நிச்சயம்.

இப்படிச் சொல்லிவிடுவது மாத்திரம் இப்பெருந் தீயைத் தணிப்பதற்குப் போதுமானது அன்று. அது ஒரு நாளைக்குத் தானே தணிந்துவிடும் என்பதில் சந்தேகமில்லை. ஆனுல், அது முன்பு யாதவர்கள் தங்களைத் தாங்களே அழித்துக்கொண்டு பூபாரத்தை நீக்கியதுபோலவே ஆகும். நிரந்தரமான போர்த் தீ இருந்துகொண்டிருப்பதைவிட அத்தகைய முடிவு என்றுமே மேலானதுதான். ஆனுல், அது நேர வேண்டும் என்று யாரும் விரும்பார். இதில் ஒருவர் உள்ளூற விரும்பக்கூடியதெல்லாம், அடியோடு அழிந்து போவதற்கு முன்னுல், இப்பெருந் தீயைத் தடுப்பதற்கு தீரமிக்க காரியம் எதையாவது செய்ய வேண்டும் என்பதே. அது அகிம்சை முறையாகவே இருக்க முடியும்.

---

‘ஹரிஜன்’ ஆசிரியருக்கு,

ஐயா,

ஜெர்மனிக்கும் இங்கிலாந்துக்குமிடையே மூண்டிருக்கும் போர் எவ்விதம் நடந்து வருகிறது என்பதை நீங்கள் பத்திரிகைகளில் படித்திருப்பீர்கள். தீக்குண்டுகள் நிறைந்த விமானங்கள், சொல்லொணு அட்டூழியங்களைச் செய்து வருகின்றன. ஒரு தரப்பினர், மற்றெரு தரப்பினருக்கு எவ்வளவு துன்பத்தை உண்டாக்க முடிந்திருக்கிறது என்பதைப் பத்திரிகைகளும் வானெலிகளும் மகிழ்ச்சியுடன் விவரித்து வருகின்றன. தங்கள் நாட்டில் எதிரி செய்த நாசத்தைவிட எதிரியின் நாட்டில் தாங்கள் செய்திருக்கும் நாசம் மிக அதிகம் என்று கூறிப் பொதுமக்கள் ஆறுதலடையச் செய்கிருர்கள். தாக்குவோரின் ஒரே குறி ராணுவ இலக்குகளே என்று கூறப்படுகிறது. ஆனுல், அநேகமாக வெகு உயரத்தில் பறக்கும் விமானங்கள் புகைத் திரை மூலம் சரியாகக் குறி வைத்துத் தாக்கமுடியும் என்பது நம்பவே முடியாதது; ஆனுல் அவ்வாறு நடக்கின்றது. அதோடு ‘வெற்றிகரமான’ முற்றுகை போட்டுவிட்டதாக இரு தரப்பினருமே சொல்லிக் கொள்ளுகிருர்கள். பஞ்சத்தை அதிகமாக்குவதே இந்த முற்றுகையின் நோக்கம். வெடிகுண்டுகளைவிட அதிகமாகப் பஞ்சம் பொதுமக்களைப் பாதித்தே தீரும்.

யுத்தத்தில் ஈடுபட்டிருப்போர், மனித வர்க்கத்தின் நன்மையை எண்ணி இப்பெருங் கொலையை நிறுத்திவிடுவது அசாத்தியமானதா? யுத்தத்திஞல் எந்த நன்மையையும் எவ்விதம் உண்டாக்கிவிட முடியும்? ஆகையால், நாம் எந்த லட்சியத்தைக் கொண்டவர் பங்கிலுமே இல்லை. இந்த யுத்தத்திற்கு எதிராகவே இருக்கிரேம் என்பதைச் சந்தேகத்திற்கு இடமின்றி அறிவித்துவிட வேண்டாமா?

யுத்தத்தில் ஈடுபட்டிருக்கும் நாடுகளில் இந்த வகையில் எண்ணும் தெய்விகமான மக்களும் பலர் இருக்கலாம். ஆனுல், ஆட்சேபித்துச் சொல்லும் பலம் அவர்களுக்கு இல்லாதிருக்கக்கூடும். அப்படிச் செய்ய நாம் அவர்களுக்கு உதவுவதோடு அதே சமயத்தில் அறிவுள்ள மக்களின் மனச்சாட்சியைத் தட்டி எழுப்பவும் வேண்டாமா?

உங்கள்,
‘உண்மையை நாடுபவர்’

எப்படி, எப்பொழுது அக்காரியத்தைச் செய்ய முடியும் என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும். இது கண்டுபிடிக்கப்பட்டுவிட்டால், 'உண்மையை நாடுவோர்' திருப்தியடைவார். இது முன்னமே கண்டுபிடிக்கப்பட்டுவிட்டது என்பதே என் கருத்து. இந்தப் போர்த் தீ இருந்துகொண்டிருக்கும்பொழுதே அகிம்சையினுலேயே சுயராஜ்யத்தை வென்றுவிட இந்தியாவினுல் முடிந்தால், அந்த ஒரு சம்பவத்தினுலேயே அத்தீ அணைக்கப்பட்டுத் தீரும். இதுவே என் உறுதியான நம்பிக்கையாக இருப்பதால், வர்தாத் தீர்மானத்தை வலுவாக எதிர்த்து என்னுடைய சுதந்திரத்தை அடைந்தேன். நான் அப்படிச் செய்தது என் அகந்தையைத் திருப்திப்படுத்திக்கொள்வதற்காக அல்ல; பரீட்சையில் வெற்றி காண்பதற்கேயாம். இந்தச் சுதந்திரத்தை நான் இழந்துவிட நேர்ந்தால் - அது முற்றிலும் சாத்தியமே - அதுவும், அதே காரியத்திற்காகத்தான்.

பழங்காலத்திலெல்லாம் ஒரு துன்பத்திலிருந்து அல்லது ஒரு நாசத்திலிருந்து விடுபடுவதற்குச் சாதாரண முறைகளையெல்லாம் உபயோகித்து, ஒன்றும் முடியாது போகும்போது தவத்தை மேற்கொண்டார்கள். அதாவது, உண்மையில் தங்களையே சுட்டெரித்துக்கொண்டார்கள் என்று நம் மத நூல்களில் நாம் படிக்கிறோம். இந்தக் கதைகளெல்லாம் வெறுங் கட்டுக் கதைகள் என்று நான் கருதவில்லை. தவத்தில் பல வகை உண்டு. நாம் இப்பொழுது பார்ப்பதைப்போலத் தவருன வழியில் சென்றவர்களும் அதை மேற்கொள்ளலாம். அறிவாளிகளாயிருப்பவர்களும் அதைச் செய்யலாம். தவத்தின் தத்துவத்தை அறிந்துகொள்ள வேண்டியது அவசியமாகும். தவத்தின் சக்தியினுலேயே மேனுட்டு விஞ்ஞானிகள் பல புது விஷயங்களைக் கண்டுபிடித்திருக்கிருர்கள். ஒருவர் காட்டுக்குப் போய், அங்கு எரியும் தீயினுல் சூழப்பட்டு உட்கார்ந்துகொள்ள வேண்டும் என்பது மாத்திரம் அன்று, தவம். அத்தகைய தவம் தவற்றின் உச்சமாகவும் இருக்கக்கூடும். ஆகையால், சிறந்தது எது என்பதை நாம் ஆய்ந்தறியவேண்டும்.

'உண்மையை நாடுபவ'ரின் கேள்வி, வேறு வழியில்லை என்பதனுல் உண்டான மனச் சோர்வினின்று எழுந்தது அன்று. அகிம்சையில் நம்பிக்கை கொண்டிருப்போரின் மனச்சாட்சியைத் துரிதப்படுத்தும் நோக்கத்தில் வந்தது. வழியை நான் முன்பே காட்டியிருக்கிறேன். சமீபத்தில் எழுதிய கட்டுரையில் நான் விவரித்திருக்கும் பதின்மூன்று அம்சங்களைக் கொண்ட ஆக்க

வேலைத் திட்டத்தை நிறைவேற்றுவதே அது. நம்பிக்கையுடன் முற்றிலும் அறிந்து, ஆடம்பரம் கொஞ்சமும் இல்லாமல் அதை நிறைவேற்றி வைப்பவர்கள், இப்பெருந் தீயை அணைப்பதற்கான தவத்தில் தங்களுடைய பங்கைச் செய்தவர்களாவர். அவர்கள் ஒரே சமயத்தில், இருவிதப் பயன்களை எய்துவர். அப்படிப்பட்டவர்களின் எண்ணிக்கை, எந்தப் பலனையும் அளிக்காத வகையில் அவ்வளவு குறைவானதாக இருக்கக்கூடும். அநேகமாக முற்றிலும் அகிம்சையோடிருப்பவர் ஒருவர் மாத்திரமே இருந்தாலும், அவரால் அத்தீயை அணைத்துவிட முடியும் என்று நான் சொல்லி வந்திருக்கிறேன். ஆனால், சாதாரணமான தனிப்பட்டவர்கள் எளிதாகச் செய்யக்கூடிய ஒரு தவத்தையும் நான் கூறியிருக்கிறேன். விரும்பும் பலன் மக்களின் ஒன்றுபட்ட முயற்சியினால் அடைவதாக இருப்பது இந்த ஜனநாயக காலத்தில் அவசியமாகும். மிகவும் சக்தி வாய்ந்த ஒரு தனிப்பட்டவரால் ஒரு நோக்கம் கைகூடுவது நல்லதே என்பதில் சந்தேகமில்லை. ஆனால், ஒன்றுபட்ட பலத்தைச் சமூகம் உணர்ந்திருக்குமாறு செய்ய அதனால் ஒருபோதும் ஆகாது. தனிப்பட்ட ஒருவரின் வெற்றி, ஒரு லட்சாதிபதி, பட்டினி கிடக்கும் லட்சக்கணக்கானவர்களுக்கு இனமாகச் சோறு போடுவது போன்றே இருக்கும். ஆகையால், பதின்மூன்று அம்சங்களைக் கொண்ட ஆக்க வேலைத் திட்டத்தை நிறைவேற்றி வைப்பதில் நமது சக்தியையெல்லாம் நாம் ஈடுபடுத்த வேண்டும். அது சுயராஜ்யத்தைக் கொண்டு வரலாம், கொண்டு வராமலும் போகலாம். ஆனால், நம்மால் இயன்றதையெல்லாம் நாம் செய்தோம் என்ற திருப்தி நமக்கு நிச்சயம் இருக்கும்.

'உண்மையை நாடுபவ'ரின் கடிதத்தில் இருக்கும் ஓர் எச்சரிக்கையையும் வாசகர்களின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். பத்திரிகைகளும் வானொலிகளும், போரில் ஒருவர் மற்றொருவருக்கு எவ்வளவு துன்பம் இழைக்க முடிந்திருக்கிறது என்பதைக் குறித்துப் பேய்க் களிப்புடன் விவரிக்கின்றன என்கிறார். சமாதானத்தைப் பிரசாரம் செய்வதில் அவர்கள் பங்கு கொள்ள வேண்டுமாயின், அத்தகைய செய்திகள் மக்களுக்கு மகிழ்ச்சியைத் தருவதற்கு மாறாக மன வெறுப்பையே உண்டாக்குவனவாக இருக்க வேண்டும் என்றும் யோசனை கூறுகிறார். நானும் ஒப்புக்கொள்ளுகிறேன். இத்தகையவர்களுக்கு ஆக்க வேலைத் திட்டத்தில் நம்பிக்கையும் இருக்காதாகையால் இவர்களால் அத்திட்டத்தை நிறைவேற்றி வைக்கவும் முடியாது.

அது எப்படியானாலும் சரி, அகிம்சையின் மூலம் இப்பெருந் தீயை அணைத்துவிடுவதாயின், அது இந்தியா ஒன்றினால்தான் முடியும் என்பது பட்டப்பகல் போல் மிகவும் தெளிவானது.

சேவா கிராமம், 2—9—1940. — 'ஹரிஜன்' - 8—9—1940.

# 38

# காங்கிரஸின் அகிம்சை

சமீபத்தில் வர்தாவுக்கு வந்து என்னைப் பார்த்த புது காங்கிரஸ்காரர்களிடம் அகிம்சைக்கு நான் கொடுத்த விளக்கத்தின் மூலம் நான் அகிம்சைக்கான வாய்ப்பை மட்டுப்படுத்தி விட்டேன் என்று புகார் கூறி எனக்கு ஏராளமான கடிதங்கள் வந்துகொண்டிருக்கின்றன. நான் கூறியது காங்கிரஸின் அகிம்சையைப்பற்றியதே என்பதை இந்த நண்பர்கள் மறந்துவிடுகிறார்கள். என்னைப் பொறுத்தவரையில், பூச்சி, தேள் அல்லது பாம்பு எதையும் நான் கொல்லமாட்டேன். என்னதான் ஆனாலும் புலால் உண்ணவே மாட்டேன். ஆனால், இப்படிப்பட்ட அகிம்சா தருமத்தைக் காங்கிரஸுக்கு நான் விதிக்கமாட்டேன். காங்கிரஸ் ராஜீய ஸ்தாபனமே யன்றி மத ஸ்தாபனம் அல்ல. அதனுடைய அகிம்சை மனிதரை மாத்திரமே பொறுத்ததான எல்லையுடையது. அதை மேற்கொண்டும் விஸ்தரிப்பதாக இருந்தால், ஹிந்துக்கள் மாத்திரம் - அவர்களிலும் வைஷ்ணவர்களும் ஜைனர்களும் மட்டுமே - அதில் ஈடுபட மிஞ்சுவார்கள். மீனையும் மாமிசத்தையும் புசிக்கும் லட்சக்கணக்கான ஹிந்துக்கள் ஒதுக்கப்பட்டுவிடுவார்கள். என்னுடைய யோசனை அவ்வளவு எளிதானதும் நேரானதுமாகும் என்று நான் கருதியதால், அதை யாராவது ஆட்சேபிக்க முடியும் என்று நான் எண்ணியதே இல்லை.

குறிப்பிட்ட ஓர் எல்லைக்குட்பட்டதான காங்கிரஸின் இந்த அகிம்சையைக்கூடத் தருமமாக முஸ்லிம்களில் பலர் ஒப்புக் கொள்ளவில்லை.காங்கிரஸே, தன்னுடைய வர்தா, புனைத் தீர்மானங்களின் மூலம், அகிம்சையை அர்த்தமற்றதாக்கும் அளவுக்கு, அதன் தகுதியை முடமாக்கி யிருக்கிறது என்பதையும் என்னைக் குறை கூறுவோர் அறியவேண்டும். ஆகையால், மனிதருக்கும் தாழ்வான இனங்களையும் அகிம்சையின் வாய்ப்புக்கு உட்படுத்திவிடச் செய்யும் எந்த முயற்சியும் காரியத்தைக் கெடுத்துவிடும் என்றாகிறது. எல்லையில்லாத அகிம்சையை எல்லாவற்றிற்கும் கொண்டுவருவதற்கு அதிக காலம் ஆகும். சமூகத்

தில் இருக்கும் மிருகத்தனத்திற்குப் பதிலாக அன்புத் தருமத்தைக் கொண்டு வந்து, நம் எதிரிகள் என்று நாம் எண்ணுகிறவர்களைக் குறித்து நம் உள்ளங்களில் விரோதத்தையும் கெட்ட எண்ணத்தையும் வைத்திருப்பதற்குப் பதிலாக உண்மையான, சக்தியுள்ள நண்பர்களாக அவர்களை நேசிக்க நாம் கற்றுக் கொண்டுவிட்டால், அதுவே நம்மை நாம் பாராட்டிக்கொள்வதற்குப் போதுமானதாகும். வெறும் ஜீவதயை மாத்திரம், நம்முள் இருக்கும் ஆறு விரோதிகளான காமம், கோபம், பேராசை, மோகம், அகந்தை, பொய்மை ஆகியவைகளை நாம் வென்றுவிடச் செய்துவிடாது என்பதையும் நினைவில் வைக்கவேண்டும். தான் என்பதை முற்றிலும் வென்று, எல்லோரிடத்திலுமே நல்லெண்ணத்தோடும் அன்போடும் இருக்கும் ஒருவரை எனக்குக் காட்டுங்கள். அவர் மாமிசம் புசிப்பவராகவே இருந்தபோதிலும், அவருக்கு நான் எனது மரியாதையோடு கூடிய வணக்கத்தைத் தெரிவிப்பேன். இதற்கு மாறாக ஒருவர், கோபமும் காமமும் நிறைந்தவராக இருந்தும் தினமும் எறும்புகளுக்கும் பூச்சிகளுக்கும் உணவளித்து எதையும் கொல்லாதவராக இருந்தபோதிலும், அவருடைய ஜீவதயையில் போற்றுவதற்கு எதுவுமில்லை. ஆத்மிக மதிப்பு எதுவும் இல்லாமல் இயந்திரம்போல் செய்துவரும் காரியமே ஆகும் அது; இன்னும் மோசமானதாகவும் அது இருக்கக்கூடும். அதாவது, உள்ளிருக்கும் ஊழல்களை மறைப்பதற்கான கபடத்தின் திரையாகவே அது ஆகும்.

சேவா கிராமம், 9—9—1940. — 'ஹரிஜன்' - 15—9—1940.

# 39

# அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியில் பேச்சு

[ 1940 செப்டம்பர் 15-ஆம் தேதி மகாத்மா காந்தி பம்பாயில் நடந்த அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் ஆங்கிலத்தில் பேசினார். அந்தப் பிரசங்கமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்தப் பிரசங்கத்தை மகாத்மாவே பிறகு சரி பார்த்துக் கொடுத்தார். ஆகையால், ஆதார பூர்வமானது என்று ஸ்ரீ மகாதேவ தேசாய் 'ஹரிஜன்' பத்திரிகையில் எழுதியிருக்கிறார். ]

*மிகுந்த பொறுமையுடனேயே நான் கூறுவதை நீங்கள் கேட்டு வந்திருக்கிறீர்கள் என்பதை அறிவேன். நான் கூறிய

* காங்கிரஸின் டில்லித் தீர்மானத்தைப் பிரிட்டிஷ் அரசாங்கம் ஏற்றுக்கொள்ளுவதாக இல்லை. 1940 ஆகஸ்டு 8-ஆம் தேதி வைசிராய் தாம் வெளியிட்ட அறிக்கையில், வைசிராயின் நிர்வாக சபை விஸ்தரிக்கப்பட்டு யுத்த ஆலோசனைக் கவுன்ஸில் நியமிக்கப்

அநேக விஷயங்கள் உங்களுக்கு வெறுப்பை உண்டாக்கி யிருக்கும் என்ற ஒரு காரணத்தை முன்னிட்டே இன்று உங்களுக்கு முக்கியமாக நன்றியறிதல் உள்ளவனாவேன். நீங்களும் நானும் செய்யவேண்டிய பெரிய வேலைக்கு உங்களைத் தயாராக்க நான் விரும்பும்போது, உங்களுக்கு மன வருத்தத்தைத் தர வேண்டும் என்பது என்னுடைய நோக்கமே அன்று. இந்தச் சுமையை நான் தாங்கவேண்டியிருப்பதால் உங்களிடம் நான் விவரமாகப் பேசவேண்டியதாகிறது. பேசுவதற்குப் பிரசங்கத்தைத் தயார் செய்துகொண்டு நான் வரவில்லை. நான் பேசப் பேச எண்ணங்கள் வரும்.

என் உள்ளத்தில் நீண்ட காலமாக இருந்துவரும் ஓர் எண்ணத்தை முதலில் சொல்லுகிறேன். யுத்தம் மூண்டு, வைசிராயைப் பார்க்க நான் சிம்லாவுக்குச் சென்ற மறுநாள் ஓர் அறிக்கையை வெளியிட்டேன். பிரதிநிதி என்ற முறையில் அன்று; என் சொந்த முறையிலேயே அதை வெளியிட்டேன். காங்கிரஸை என்னுடன் கொண்டு செல்ல என்னால் முடியாவிட்டாலும், அந்த அறிக்கையின்படியே நான் உறுதியாக நின்றிருந்தால், அது எவ்வளவு நன்றாக இருந்திருக்கும் என்று ஒரு நண்பர் எனக்கு இப்பொழுது ஞாபகப்படுத்தியிருக்கிறார். இந்தப் பொறுப்பை நான் மேற்கொள்ளும் இச் சமயத்தில் அந்த ஆரம்ப நிலையை நான் அனுசரித்து விலகிக்கொள்ளவும், கடவுள் எனக்கு வழி காட்டவும் வேண்டும் என்று அவர் பிரார்த்திக்கிறார். அவரிடத்தில் எனக்கு மிகுந்த மதிப்பு உண்டு. அந்த அறிக்கையை நான் மறந்துவிடவில்லை; அதற்காக நான் வருத்தப்படவோ அல்லது மன்னிப்புக் கேட்கவோ இல்லை. சரித்திரம் திரும்பத் திரும்பப் பழையபடியே நிகழ்கிறது.

---

படும் என்று கூறினாரேயன்றிக் காங்கிரஸ் கூறியதை ஏற்றுக்கொள்ளவில்லை. 18-ஆம் தேதி இந்தியா மந்திரி ஸ்ரீ அமெரியும் அதே தொனியில் பேசிவிட்டார். காந்திஜியின் கருத்துக்கு மாறுபாடாகப் போயும் காங்கிரஸ் கைவிடப்பட்டு விட்டது. 18-ஆம் தேதி காங்கிரஸ் காரியக் கமிட்டி வர்தாவில் கூடி, "காங்கிரஸின் யோசனைகளை நிராகரித்து விட்டு, இந்தியாவை வாளினால் அடிமைப்படுத்தி வைத்திருப்பது என்ற திடத்தில் பிரிட்டிஷ் அரசாங்கம் இருக்கிறது என்பதை இது ருசுப்படுத்துகிறது" எனத் தீர்மானித்தது. செப்டம்பர் 15-ஆம் தேதி அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியைப் பம்பாயில் கூட்டுவது என்று அக்கூட்டத்தில் முடிவு செய்தனர். திரும்ப மகாத்மா காந்தியின் தலைமையை ஏற்பது என்ற முடிவுக்கு வந்தனர். அக்கூட்டத்தில் பேசிய மௌலானா ஆஸாத், "காங்கிரஸில் மீண்டும் தீவிரமாகத் தலைமை ஏற்றுக்கொள்ளும்படி மகாத்மாவை நாம் அணுகியதற்கு இச்சம்பவங்களே காரணமாகும். இப்பொழுது அவருக்கும் காரியக் கமிட்டிக்கும் எவ்விதக் கருத்து வேற்றுமையும் இராததால் மகாத்மாவும் இதற்கு இணங்கியிருப்பதை ஆனந்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன்" என்றார். பம்பாயில் நடந்த அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் இத்தகைய நிலைமையில் கூடியது. அதிலே கொண்டுவந்த தீர்மானத்தின்மீது மகாத்மா பேசிய விவரமே இது.

அத்தகைய நிலை ஒன்று ஏற்பட்டு, வேறு ஒரு வைசிராயிடம் நான் போக நேர்ந்தாலும், அந்த அறிக்கையையே நான் திரும்பவும் வெளியிடுவேன்.

எனக்காகவே நான் பேசுகிறேன் என்றாலும், என்னுள் இருக்கும் ஒரு காங்கிரஸ்காரனே இப்படிப் பேசுவது. நான் மோ. க. காந்தி என்பதற்காக வைசிராய் என்னை அழைக்கவில்லை. மோ. க. காந்திக்கு அவருடைய கணக்கில் கொஞ்சமும் இடமே இல்லை. செங்கோலை ஏந்தியவர் தனிப்பட்டவரைப் பெரிதாக நினைக்க முடியாது. காங்கிரஸின் கருத்தை நான் பிரதிபலிக்கக்கூடும், காங்கிரஸ் ஒரு கருத்தை ஏற்றுக்கொள்ளும் படி செய்ய என்னால் ஆகும் என்பதற்காகவே அவர் என்னை அழைத்தார்.

ஒரு தனிக் காங்கிரஸ்காரர்கூட என் கருத்தை ஏற்றுக் கொள்ளும்படி செய்வதில் நான் தவறிவிட்டதால், தனிப் பட்டவன் என்ற முறையில் அல்ல, ஒரு காங்கிரஸ்காரன் என்ற முறையில் அந்த நிலையிலிருந்து விலகிக்கொண்டுவிட்டேன். நல்ல காலமாக, சிறந்த யோக்கியப் பொறுப்புடன் உங்களுக்குக் காரியக் கமிட்டியினர் இருக்கிறார்கள். அது என்னுடைய அறிக்கையே என்றாலும், அதை ஒப்புக்கொள்ளத் தாங்கள் விரும்பவில்லை என்று எனக்குச் சொல்லிவிடும் தீரம் அவர்களுக்கு இருந்தது. கடுமையான அனுபவம் தங்களுக்கு இருந்து வருகிறது என்றும், ஆகையால், அந்த நிலையை மேற்கொள்ளத் தங்களால் ஆகாது என்றும் சொன்னார்கள். இவ்விதம் யுத்தம் ஆரம்பமானதுமே காங்கிரஸ் நிறைவேற்றிய தீர்மானம் உங்களிடம் இருந்தது. என் கருத்தைக் கமிட்டியார் ஒப்புக்கொள்ளும்படி செய்ய முடிந்தால், என்னுடைய அசல் நிலையே அனுசரிப்பதற்குச் சிறந்ததாகும் என்று அவர்களிடம் நான் சொன்னேன். என்றாலும், ஒரு பிரதிநிதி என்ற முறையில் அந்தத் தீர்மானத்திற்கு நான் ஒப்புக்கொண்டேன். என் நிலையை ஏற்றுக் கொள்ளும்படி காரியக் கமிட்டி உறுப்பினரை நான் வற்புறுத்தியிருந்தால், அவர்கள் அப்படியே செய்திருப்பார்கள். ஆனால், அது ஒரு இயந்திரம் செய்வதைப்போன்றே இருந்திருக்கும். வைசிராயையோ அல்லது உண்மையில் வேறு எந்த ஓர் ஆத்மாவையோ ஏமாற்றுவதற்காக நான் அந்த அறிக்கையை வெளியிடவில்லை. உள்ளத்திலிருந்து நேராக வந்தது அது; அது நாடக மேடையில் காட்டும் நடிப்பு அன்று. உலகத்தவர், வைசிராய், காங்கிரஸ் இவர்கள் முன்பு உள்ளத்திற்குள் பொதிந்திருக்கும் ரகசியத்தைத் திறந்து காட்டியதே ஆகும் அது.



பிரிட்டிஷ் மந்திரி சபை தூதுகோஷ்டியின் தலைவரான ஸ்ரீ பெதிக் லாரென்ஸுடன் மகாத்மா (1947)

என்னுடைய இந்தச் சொற்கள் அவர்களுடைய உள்ளங்களில் எதிரொலிக்கவில்லையாயின், வைசிராய்க்கோ, ஆங்கில நாட்டுப் பெருமக்களுக்கோ அல்லது இந்தியாவுக்கோ அதனால் ஒரு பயனுமே இல்லை. இன்னும் அதுவே என் உணர்ச்சியுமாகும். என் போக்கைக் குறித்துக் காங்கிரஸுக்குத் திருப்தியுண்டாக்க என்னால் முடியவில்லையென்றால், மேற்கொண்டு அது நம்மைக் கொண்டு போய்விடாது. மேற்கொள்ளுவதற்கு அது தவறான தாக இருந்திருக்கும். ஆகவே, அது மேற்கொள்ளப்படவில்லை. அந்த நிலைக்களனைக்கொண்டே இத் தீர்மானத்தை* நான் கவனிக்கிறேன்.

பிரிட்டிஷ் மக்களும், அரசாங்கமும் நிலைத்திருப்பதே அபாயத்தில் இருந்துவரும் இச்சமயத்தில் அவர்களுக்குச் சங்கடத்தை உண்டாக்கும் குற்றத்தைச் செய்தவனாக நான் ஆகமாட்டேன் என்று திரும்பத் திரும்ப நான் கூறி வந்திருக்கிறேன். நான் அப்படிச் செய்தேனாயின், என்னுடைய சத்தியாக்கிரகத்திற்கு உண்மையோடு இருப்பவன் ஆகமாட்டேன்; அகிம்சைக்கு உண்மையானவன் ஆகமாட்டேன்; மிக அருமையானது என நான் எண்ணும் சத்தியத்திற்கும் நான் பொய்யனாவேன். ஆகவே, நான் அப்படிச் செய்ய முடியாது. அதே மனிதன் சத்தியாக்கிரகத்தின் பளுவைச் சுமப்பதற்கு இப்பொழுது உங்கள் முன்பு நிற்கிறான். ஏன்? தீமையை நன்மையானது என்று ஒருவர் தமது பலவீனத்தினால் தவறாக நினைத்துக்

---

* மகாத்மா குறிப்பிடும் தீர்மானத்தை அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் பண்டித நேரு கொண்டு வந்தார்; சர்தார் பட்டேல் ஆமோதித்தார். அதைக் குறித்து மகாத்மாவை விளக்கிக் கூறுமாறு சொன்னார்களேயன்றி அவர்கள் இருவரும் அதன்மீது பேசவில்லை. இத்தீர்மானத்தை மகாத்மா காந்தியே தயாரித்தார். மீண்டும் அவரே தலைமையை ஏற்று நடத்த வேண்டும் எனக் கோரும் இத்தீர்மானத்தின் முற்பகுதி வருமாறு:

"இந்தியாவின் சுதந்திரத்திற்குள்ள இயற்கையான உரிமையை மறுப்பதாக இருக்கும் – பொதுமக்களின் கருத்தைத் தாராளமாக எடுத்துச் செல்லும் உரிமையை நசுக்கி, மக்களை அவமானப்படுத்துவதாகவும் தொடர்ந்து அவர்களை அடிமைப்படுத்தி வைப்பதாகவும் இருக்கும் – ஒரு கொள்கைக்கு அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி உடன்பட முடியாது. பிரிட்டிஷ் அரசாங்கம் இக்கொள்கையை அனுசரித்து வருவதால், கௌரவத்தையும் மக்களின் சாதாரண உரிமைகளையும் காப்பாற்றிக் கொள்ளுவதற்கு ஒரு போராட்டத்தை நடத்தும் அவசியத்தையும் இது காங்கிரஸுக்கு உண்டாக்கி வருகிறது. இந்தியாவின் சுதந்திரத்தைப் பெறுவதற்குக் காந்திஜியின் தலைமையில் காங்கிரஸ் அகிம்சைப் பிரதிக்ஞை கொண்டிருக்கிறது. ஆகையால், நமது தேசீய சுதந்திரத்திற்கான இயக்கத்தின் இந்தப் பயங்கரமான நெருக்கடி சமயத்தில் எடுத்துக்கொள்ளவேண்டிய நடவடிக்கை சம்பந்தமாகக் காங்கிரஸுக்கு வழிகாட்டுமாறு அவரையே கேட்டுக்கொள்ளுகிறது. அவர் அப்படிச் செய்வதைத் தடுத்த - புனாவில் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியால் ஊர்ஜிதம் செய்யப்பட்ட - டில்லித் தீர்மானம் இப்பொழுது பொருந்தாது. அது ரத்தாகிவிட்டது."

கொண்டுவிடும் சமயமும் வருவது உண்டு. நன்மையானதாக இருப்பதையே, அதனுடைய சந்தர்ப்பத்திலிருந்தும் அது எதற்காக அர்ப்பணம் செய்யப்பட்டிருக்கிறதோ அதன் காரியத்திலிருந்தும் பிரித்து விடும்போது, அதுவே தீமையாகிறது. பயந்து நடுங்கிக்கொண்டே என்றாலும், காங்கிரஸிற்கு உதவுவதற்கு நான் போய் அதன் சுக்கானைப் பிடிக்காவிட்டால், எனக்கே நான் பொய்யனாவேன் என்று உணர்ந்தேன்.

நாம் எடுத்துக்கொண்டிருக்கும் இக்காரியத்தைச் செய்ய நாம் முற்படுவதனால், காங்கிரஸுக்கு மாத்திரமல்ல, இந்தியா முழுமைக்குமே பெருந்தொண்டு செய்தவர்களாகிறோம் என்று உணருகிறேன். இந்தியாவுக்கு மாத்திரம் நாம் பெரிய சேவையைச் செய்யவில்லை. ஆங்கில நாட்டு மக்களுக்கே நாம் உதவி செய்தோம் என்பதைச் சரித்திரம் குறிக்கும்; நான் இவ்விதம் கூறுவதை ஆங்கிலேயரும் ஒரு நாளைக்கு உணர்ந்து கொள்வார்கள். 'நாம் யோக்கியமாக நடந்தோம். ஆங்கிலேயர், எந்த வீரத்தை, எந்த அஞ்சாமையைக் குறித்துப் பெருமைப் படுகின்றனரோ, எதற்கு அவர்கள் பெயர் பெற்றவர்களோ அந்த வீரமும் அஞ்சாமையும் நமக்கும் இருந்தன' என்பதையும் அவர்கள் காண்பார்கள். 'தன்னடக்கம் என்ற நற்குணம் இப்பொழுது தீய குணமாகிறது. ஏனெனில், அது காங்கிரஸ் ஸ்தாபனத்தைக் கொன்றுவிடும். இந்தத் தன்னடக்கத்தை எந்த உணர்ச்சி உண்டாக்குகிறதோ அந்த உணர்ச்சியையே அது கொன்றுவிடும்' என்ற எச்சரிக்கையை நான் வெளியிட்டாக வேண்டும். நான் அப்படிச் செய்யாது போவேனாயின், பிரிட்டிஷ் மக்களின் உறுதியான நண்பன் என்று கூறிக்கொள்ளும் நான், தவறான அடக்க உணர்ச்சியின் காரணமாகவோ அல்லது மக்கள் என்னை வேறுவிதமாக நினைத்துக்கொண்டு விடுவார்கள் என்பதற்காகவோ, ஆங்கிலேயர்கள் என்மீது ஆத்திரப்படுவார்கள் என்பதற்காகவோ, நட்பிராத வழியில் நடந்து கொண்டேன் என்ற குற்றத்துக்கு ஆளாவேன்.

இதை நான் சொல்லும்போது காங்கிரஸுக்காக மாத்திரம் பேசவில்லை. முஸ்லிம்கள், பார்ஸிகள், கிறிஸ்தவர்கள், இந்தியாவின் அபிலாஷைகளை, அதாவது, கலப்பற்ற சுதந்திரத்தைப் பிரதிபலிப்பவர்களாக இருக்கும்வரையில் காங்கிரஸுக்கு எதிராக இருப்பவர்களுக்கும், தேசீய சுதந்திரம் வேண்டும் என விரும்பும் எல்லோருக்குமாகவே நான் பேசுகிறேன். 'பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு எந்தச் சங்கடமும் கூடாது' என்று இச்சமயத்தில் நான் சொல்லுவேனாயின், அவர்கள் எல்லோருக்குமே

நான் உண்மையற்றவனாவேன். 'சங்கடம் கூடாது' என்று கிளிப்பிள்ளை போல நான் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருக்கக்கூடாது. கிளிப்பிள்ளை, கடவுளின் நாமத்தைத் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருப்பதனால், அதற்கு மோட்சம் கிடைத்துவிடாது. ஏனெனில், அதில் அறிவு என்பது எதுவுமே யின்றி, இயந்திரம்போல அது குரலின் பழக்கத்தினால் சொல்லி வருகிறது. அதே போலத்தான் 'சங்கடம் கூடாது' என்று நான் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருப்பதும், என் விமோசனத்திற்கோ அல்லது என் நற்குணத்தைப் பாதுகாத்துக்கொள்ளுவதற்கோ அது பயன்படாது. ஆகையால், நாட்டின் சரித்திரத்தில் இப்பொழுது ஏற்பட்டிருக்கும் இந்த நெருக்கடியான கட்டத்தில் நிறுத்திவைப்பது என்பதை நான் அனுசரிப்பது பயனற்றதாகும். சேவா கிராமத்திலேயே நான் ஒளிந்து கொண்டு, 'முடியாது, சங்கடம் விளைவிக்கக்கூடாது என்று முன்பே உங்களுக்குச் சொல்லியிருக்கிறேன்' எனக் கூறுவேனாயின், எனக்கே நான் முற்றிலும் பொய்யனாகிவிட்டவனாவேன்.

இந்தத் தீர்மானத்தின் பாஷை முக்கியமாக என்னுடையதே. பண்டித ஜவாஹர்லால் நேருவுக்கு இது பிடித்திருக்கிறது. காங்கிரஸ் தீர்மானங்களை எழுதுபவனாக நான் இருந்திருக்கிறேன். இப்பொழுது என் வேலையை அவர் எடுத்துக்கொண்டிருக்கிறார். நாம் போக விரும்பும் அளவுக்கு அகிம்சை எதிர்ப்புக்கு நாம் உண்மையோடு இருக்க வேண்டுமாயின், இது தவிர்க்க முடியாதது என அவர் கண்டார். அதன் விளைவுகளை நன்கு அறிந்தே காரியக் கமிட்டி இந்தச் சொல்லமைப்புக்கு வேண்டுமென்றுதான் ஒப்புக்கொண்டிருக்கிறது. பலன் இதுதான்: யுத்த எதிர்ப்புப் பிரசாரத்தைக் காங்கிரஸ் செய்துகொண்டு போகலாம், அரசாங்கத்தின் யுத்த முயற்சியில் அதனுடன் ஒத்துழைக்க வேண்டாம் என்று உபதேசம் செய்யலாம் என்று பிரிட்டிஷ் அரசாங்கத்தினிடமிருந்து நமக்கு அறிவிப்புக் கிடைத்தால், நாம் சட்ட மறுப்புச் செய்ய வேண்டி வராது.

இங்கிலாந்து தோற்கடிக்கப்பட்டுவிட வேண்டும் என்றோ அவமானப்படுத்தப்பட வேண்டும் என்றோ நான் விரும்பவில்லை. செயிண்ட் பால் கோயில் சேதம் அடைந்ததைக் காண வருந்துகிறேன். காசி விசுவநாதர் கோயிலோ அல்லது ஜுமா மசூதியோ சேதப்பட்டது என்று கேட்டால் என் மனம் எப்படி வருந்துமோ அப்படியே இதைக் கேட்டும் வருந்துகிறது. காசி விசுவநாதர் கோயில், ஜுமா மசூதி ஆகிய இரண்டையும், செயிண்ட் பால் கோயிலையுங்கூட, என் உயிரைக் கொடுத்தும்

பாதுகாக்க நான் விரும்புகிறேன். ஆனால், இவற்றைப் பாது காப்பதற்காக ஓர் உயிரையும் நான் போக்கமாட்டேன். பிரிட்டிஷ் மக்களுக்கும் எனக்குமுள்ள அடிப்படையான வித்தியாசம் இதுதான். என்றாலும், என் அனுதாபம் அவர்கள் பக்கம் இருக்கிறது. என் அனுதாபம் யார் பக்கத்தில் இருக்கிறது என்பதைக் குறித்து ஆங்கிலேயர்கள், காங்கிரஸ்காரர்கள் அல்லது என் சொல்லுக்குச் செவி கொடுக்கும் யாருமே தவறாக எண்ணிக்கொள்ள வேண்டாம். பிரிட்டிஷ் மக்களை நான் நேசிக்கிறேன். ஜெர்மானியரை நான் வெறுக்கிறேன் என்பதனால் அல்ல அது. ஆங்கிலேயர்கள் அல்லது இத்தாலியர்கள் மோசமாக இருப்பதைவிட ஜெர்மானியர் இன்னும் அதிக மோசமாக இருக்கிறார்கள் என்று நான் நினைக்கவில்லை. நாம் எல்லோரும் ஒரே மாதிரியானவர்களே ; பெரிய மனித குடும்பத்தில் நாம் எல்லோரும் உறுப்பினர்கள். இதில் எந்தவிதமான பாகுபாட்டையும் கொள்ள நான் மறுக்கிறேன். இவர்களுக்கெல்லாம் இந்தியர் மேம்பட்டவர்கள் என்று நான் சொல்ல முடியாது. அவர்களிடம் இருப்பது போன்றே நம்மிடமும் நற்குணங்களும் தீய குணங்களும் இருக்கின்றன. நாம் ஒருவர் மற்றவரிடம் போக முடியாதபடி மனித வர்க்கம் அதனதன் தனி எல்லைக்குள் அடைத்து வைக்கப்பட்டிருக்கவில்லை. அவர்கள் ஆயிரம் அறைகளில் குடியிருந்து வரலாம். ஆனால், மக்கள் எல்லோரும் ஒருவருக்கொருவர் உறவு கொண்டவர்கள். 'இந்தியாவே எல்லாமாக இருக்க வேண்டும், உலக முழுவதும் நாசமாகட்டும்' என்று நான் சொல்ல மாட்டேன். நான் உபதேசிக்க வேண்டியது அதுவன்று. உலகத்தின் மற்றெல்லா நாடுகளின் சுகத்திற்கும் பொருந்தும் வகையில் இந்தியாவே எல்லாமாக இருக்க வேண்டும். இந்தியா என்று சொல்லப்படும் உலகத்தின் இச்சிறு பகுதியில் இருக்கும் மனிதக் குடும்பம் மாத்திரமேயன்றி எல்லா மனித வர்க்கத்தினிடமும் எனக்கு நல்லெண்ணம் இருந்தால்தான் இந்தியாவை நான் பத்திரமாக வைத்துக்கொள்ளுவதோடு அதன் சுதந்திரத்தையுங்கூட நான் பத்திரமாக வைத்திருக்க முடியும். மற்றச் சிறு நாடுகளுடன் ஒப்பிட்டால் இந்தியா பெரிதுதான். ஆனால், இந்தப் பரந்த உலகிலோ அல்லது இப்பிரபஞ்சத்திலோ இந்தியா எம்மாத்திரம் ?

நான் என்ன சொல்ல விரும்புகிறேன் என்பதில் எந்தவிதத் தவறான அபிப்பிராயமும் வேண்டாம். என்னுடைய தனிப்பட்ட முறைக்குப் பாதகம் இல்லாதிருக்க வேண்டும் என்று

நான் விரும்புகிறேன். அதை நான் இழந்துவிடுவேனாயின், இந்தியாவுக்கோ, இன்னும் பிரிட்டிஷ் மக்களுக்கோ, முக்கியமாக மனித வர்க்கத்திற்கோ நான் பயனற்றவன் ஆவேன். என்னுடைய தனிப்பட்ட சுதந்திரம், தேசத்தின் சுதந்திரத்தைப் போன்றது; தேசீய சுதந்திரத்துடன் மாற்றிக்கொள்ளக்கூடியது. எனக்கு அதிகப்படியான சுதந்திரம் எதுவும் வேண்டும் என்று நான் கேட்கவில்லை. ஆகவே, உங்கள் எல்லோருடைய சுதந்திரத்திற்கும் ஒப்பானதே என் சுதந்திரமேயன்றி அதிகப்படியானது அன்று. என் சுதந்திரத்திற்கு ஆபத்து வந்தால், உங்கள் சுதந்திரத்திற்கும் ஆபத்து என உணர்கிறேன். இந்தப் போரில் எனக்கு எந்த விதமான சம்பந்தமும் இல்லை. ஏனெனில், இந்த யுத்தத்திலும், ஐரோப்பாவில் சகோதரர்கள் ஒருவரையொருவர் கொன்றுவருவதிலும் எனக்கு நம்பிக்கை இல்லை என்று பம்பாயின் தெருக்களூடே போய்ச் சொல்லும் சுதந்திரம் எனக்கு வேண்டும் என்கிறேன். வீரத்தை நான் மெச்சுகிறேன். ஆனால், இந்த வீரத்தினால் என்ன பயன்? முட்டாள்தனத்திற்காகவும் மோசமான அறியாமைக்காகவும் வருந்துகிறேன். எதற்காகப் போராடிக்கொண் டிருக்கிறார்கள் என்பதே இம்மக்களுக்குத் தெரியாது. கடலுக்கு அப்பால் நடந்து வரும் இப்போரை இந்த வகையில்தான் நான் பார்க்கிறேன். அதில் நான் பங்கு கொள்ளுவது என்பது சாத்தியமே அல்ல. காங்கிரஸ் பங்கு கொள்ளுவதையும் நான் விரும்பவில்லை.

இதில் நான் பங்குகொள்ள விரும்புவது, சமாதானம் செய்து வைப்பவர் என்ற வகையிலேயே. காங்கிரஸின் சுதந்திரத்தையல்ல, இந்தியா முழுவதன் சுதந்திரத்தையும் பிரிட்டிஷ் மக்கள் புத்திசாலித்தனமாக ஒப்புக்கொண்டிருந்தால், இந்தியாவிலிருக்கும் மற்றக் கட்சிகளும் நம்முடன் ஒத்துழைத்திருந்தால், இந்த நாடுகளிடையே சமாதானம் செய்துவைக்கும் கௌரவமான ஸ்தானத்தை நாம் வகித்திருப்போம். அதுதான் என் ஆசை. ஆனால், இன்றே அது பகற்கனவு என்பதை அறிவேன். ஆயினும், சில சமயங்களில் மனிதன் பகற்கனவு காணத்தான் செய்கிறான். என் பகற்கனவை நானுந்தான் காண்கிறேன்; உலகம், வாயளவில் நல்லவர்கள் மாத்திரமல்ல, உள்ளூறவே நல்லவர்கள் நிரம்பியது என்று சித்தரித்துப் பார்த்துக்கொள்ளுகிறேன். சோஷியலிஸ்டுகள் கூறுவதுபோல் புதிய சமூக அமைப்பும் புதிய ஒழுங்கு முறைகளும் கொண்டிருக்கும் எனது கற்பனை உலகம். உலகத்தைத் திகைக்க வைக்கும் ஒரு புதிய ஒழுங்கு முறையை அடைய நானும் ஆசைப்பட்டுக்கொண்டிருக்கிறேன். இந்தப்

பகற்கனவுகளைக் காண நீங்களும் முயற்சி செய்வீர்களாயின் என்னைப் போல நீங்களும் பெருமிதம் அடைவீர்கள்.

இப்பொழுது நமது 'தகர டப்பா' (பிரயோஜனமற்ற) காங்கிரஸுக்கு வருவோம். 'தகர டப்பா' என்பது மற்றவர்களின் மதிப்பீடேயன்றி என்னுடையதன்று. நாம் ஜாக்கிரதையாக இருந்தாலன்றிக் காங்கிரஸ் மறைந்துவிடும்; காங்கிரஸ் மறைந்துவிட்டால், தேசீய உணர்ச்சி மறைகிறது. ஒருவர் பின் மற்றொருவராகக் காங்கிரஸ்காரர்கள் பொறுக்கி எடுக்கப்பட்டுச் சிறையில் அடைக்கப்படுகின்றனர். இவர்கள் இப்படிக் கொண்டு போகப்பட்டு விடுவதைப் பார்த்துக்கொண்டிருப்பது சத்தியாக்கிரகமன்று. நாம் எல்லோருமே எதிராளியின் வாய்க்குள் போய்விடுவது எவ்வளவோ மேல். மௌலானா சாகிப் ஒரு சமயம் சொன்னதுபோல, 'இந்தியாவே ஒரு பெரிய சிறை. சிறைக் கம்பிகளைத் தகர்த்தெறிந்து இந்த அடிமைச் சிறையிலிருந்து நாம் வெளி வருவோமாக.' நான்கானா சாகேப்* துக்க சம்பவத்தின்போது சீக்கியர்களுக்கு அவர் இவ்வாறு கூறினார்: "ஒரு குருத்துவாரத்தை நீங்கள் பாதுகாக்கலாம். ஆனால், மிகப் பெரிய குருத்துவாரமான இந்தியாவின் சங்கதி என்ன? அடிமைத்தனத்திலிருந்து அதை நாம் விடுவிக்க வேண்டும்." அந்தச் சொற்களின் உண்மை என் செவிகளில் இன்னும் ஒலித்துக்கொண்டிருக்கிறது. நாட்டு மக்களின் இந்த விடுதலை அல்லது சுதந்திரத்திற்கான இயக்கம் நசுக்கப்பட்டுவிடுமாயின், இப்பொழுது தன்னடக்கத்தோடு இருப்பது என்ற நற்குணம் தீயகுணமாகி விடும் என்று நான் கூறுகிறேன். காங்கிரஸ்காரர்களிடமோ அல்லது காங்கிரஸ்காரர்கள் அல்லாதவர்களிடமோ தேசீய உணர்ச்சி எங்கு இருப்பதாயினும், அது அழிக்கப்பட்டு விடும் அளவுக்குத் தன்னடக்கமெனும் நற்குணத்தைச் செலுத்தி விட முடியாது.

அரசாங்கம் பல காரியங்களைச் செய்திருக்கிறது. வைசிராய் பேசியிருக்கிறார்; இந்தியா மந்திரியின் அறிக்கை வெளிவந்திருக்கிறது; அது முதல் அரசாங்கம் பல காரியங்களை, கொள்கைகளை மேற்கொண்டிருக்கிறது. இவற்றிற்கெல்லாம் நான் கொள்ளும் பொருளை, என் பொருளைத் தெளிவாக்காமல், சட்ட மறுப்பையோ அல்லது வேறு எதையோ அரசாங்கத்திற்கு எதிராகச் செய்ய நான் விரும்பவில்லை. மொத்தத்தில் இவற்றில் எங்கோ தவறு

* நான்கானா சாகேப் - பாகிஸ்தானில் சேர்ந்துவிட்ட மேற்குப் பஞ்சாபில் உள்ள புகழ் மிக்க சீக்கியர்களின் குருத்துவாரம் (புனிதத் தலம்). வகுப்புக் கலவரங்கள் மூண்ட சமயம், இந்தக் குருத்துவாரம் இரு முறை முஸ்லிம்களால் தாக்கப்பட்டது.

இருக்கிறது ; நாட்டு மக்கள் எல்லோருக்கும் எதிராக ஏதோ அநீதி செய்யப்படுகிறது. சுதந்திரத்தின் குரல் அடக்கப்படும் நிலையில் இருக்கிறது. இவை மனத்துள் அழியாததொரு கருத்தையே உண்டாக்கியிருக்கின்றன. நாம் இப்பொழுது உபயோகிக்கும் சொற்களில் காணவிடினும் இது தீர்மானத்தில் அடங்கியிருக்கிறது. ஆனால், அதன் பொருளை வெட்ட வெளிச்சமாக நீங்கள் காண்பீர்கள்.

நமது நிலையை முற்றிலும் தெளிவுபடுத்திவிடுவதை முன்னிட்டு, நான் வைசிராயைப் பார்க்கத் தயை செய்து அனுமதிக்குமாறு அவருக்கு ஒரு வேண்டுகோள் அனுப்புவது என்றிருக்கிறேன். அவர் அனுமதிப்பார் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. என் கஷ்டங்களை அவருக்கு எடுத்துக் கூறுவேன் ; காங்கிரஸின் கஷ்டங்களையும் எடுத்துச் சொல்லுவேன். உங்கள் சார்பிலேயே அவர்களிடம் போவேன். எங்களுக்கு ஏற்பட்டிருக்கும் நிலைமை இதுதான் என்று நான் அவரிடம் கூறுவேன்: " உங்களுக்குச் சங்கடத்தை உண்டாக்கவோ, யுத்த முயற்சியின் சம்பந்தமான உங்கள் காரியத்திலிருந்து உங்களைத் திருப்பிவிடவோ நாங்கள் விரும்பவில்லை. பொதுவான துறையாகிய அகிம்சையிலிருந்து பிறழாமல் நாங்கள் எங்கள் வழியே போவோம் ; நீங்கள் உங்கள் வழியே போவீர்கள். மக்கள் எங்களுடன் இருப்பராயின், அவர்களைப் பொறுத்தவரையில் யுத்த முயற்சியில் எந்த விதத்திலும் ஈடுபடார். இதற்கு மாறாக, நீங்கள் தார்மிகச் செல்வாக்கையன்றி மற்ற எதையும் உபயோகிக்காமல் இருந்து யுத்த முயற்சிக்கு மக்கள் உதவி செய்கிறார்கள் என்று கண்டால், நாங்கள் குறைபடுவதற்கு எந்தவிதமான காரணமும் இல்லை. சுதேச மன்னர்களிடமிருந்தும், ஜமீன்தார்களிடமிருந்தும், உயர்ந்தோர் அல்லது தாழ்ந்தோர் யாரிடமிருந்தும் உங்களுக்கு உதவி கிடைத்தால் அதை நீங்கள் பெற்றுக்கொள்ளலாம். ஆனால், எங்கள் குரலுக்கும் இடம் வேண்டும். என்னுடைய யோசனையை நீங்கள் ஏற்றுக்கொண்டால், அது சிறப்பான கௌரவம் தருவதுடன் நிச்சயமாக உங்களுக்குப் பெருங் கீர்த்தியும் ஆகும். சாவா, வாழ்வா என்பதான ஒரு போராட்டத்தில் நீங்கள் ஈடுபட்டிருக்கும்போது இந்தச் சுதந்திரத்தை நீங்கள் எங்களுக்கு அளித்திருக்கிறீர்கள் என்றால், இது உங்களுக்குப் பெரிய கௌரவம். எங்களுடைய குரலை அடக்கிவிட அளவற்ற சக்தி உங்களுக்கு இருக்கிறது. யுத்த முயற்சியில் சேர வேண்டாம் என்று இந்தியாவின் மக்களுக்குச் சொல்லவும், அகிம்சை வழியில் நாங்கள் அதைச் செய்வதற்கு அநுகூலமாக

வும் முழுச் சுதந்திரத்தையும் எங்களுக்கு நீங்கள் அளிப்பீர்களாயின், அதுவே உங்களுக்குப் பெருமை தரும்.''

யுத்த முயற்சிக்கு உதவ மறுப்பது என்பதற்குத் தாங்கள் விரும்பும் எந்த வாதத்தை வேண்டுமானாலும், மக்கள் கொள்ளட்டும். காங்கிரஸ்காரர்களின் வாயினின்று பொருத்தமாக வரக்கூடிய பொருள் ஒன்றே ஒன்றுதான். ஆனால், அந்தப் பொருளுக்கு எல்லோரும் தங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. எனக்கு இருப்பதைப் போன்று மனச்சாட்சிப்படி போருக்கு ஆட்சேபம் உடையவர்கள், என் வாதத்தையே கொள்ளுவார்கள். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைக் குறித்து அலுத்துப் போனவர்கள் இந்த வாதத்தை உபயோகிப்பர். மற்ற வாதங்களைக் கூறுவோரும் இருக்கக்கூடும். அவர்கள் எல்லோருமே அகிம்சையை ஒப்புக் கொள்ளுவதாயிருந்தால், அவர்கள் கூறுவதை ரகசியமாக இல்லாமல் பகிரங்கமாகச் சொல்லுவதாகவும் இருந்தால், அவர்கள் எல்லோருமே பேசும் சுதந்திரம் பெற்றவர்களாவர். எனது தலைமையினால் ஏற்படுவன இவை. இவைகளெல்லாம் உங்களுக்குப் பிடிக்கவில்லையென்றால், இத்தீர்மானத்தை உடனேயே நீங்கள் நிராகரித்துவிடவேண்டும். யுத்த முயற்சிக்கு ஆட்களாலும் பணத்தாலும் உடன்படாமல் ஒத்துழையாமை செய்ய வேண்டும் என்று நீங்கள் பிரசாரம் செய்யக்கூடிய வரையில், சட்டமறுப்பே கூடாது. ஆனால் அந்தச் சுதந்திரம் உங்களுக்கு இல்லையென்றால், அப்பொழுது நிரந்தரமான அடிமைத்தனமேயன்றி உங்களுக்குச் சுயராஜ்யம் இல்லை. இந்திய மக்களின் தலைவர்கள் தாம் விரும்புவதைத் தம் மக்களுக்குப் பிரசாரம் செய்யச் சுதந்திரத்தை அளித்திருப்பதாகப் பிரிட்டிஷ் மக்களும் வைசிராயும் உலகத்திற்குக் கூறவேண்டும் என நான் விரும்புவேன். அதற்கப்புறந்தான் உலகிற்கு, 'எங்கள் நடத்தையைக் கொண்டு எங்களை மதிப்பிடுங்கள். இங்கு இந்தியாவில் நாங்கள் நேரான வழியைச் செய்து காட்டி வருகிறோம்' என்று சொல்லலாம்.

டில்லித் தீர்மானத்திற்குப் பிரிட்டிஷார் உடன்படாததைக் குறித்து நான் கவலைப்படவில்லை. 'காரியங்களின் நிர்வாகம் இப்பொழுது இருக்கும் வகையில் இச்சமயம் நீங்கள் குறுக்கிட முடியாது. விடுதலை உங்களுக்கு உரிய தருணத்தில் வரும். இந்த நெருக்கடியான சமயத்தில் எங்களைத் தொந்தரவு செய்யாதீர்கள்' என்று அவர்கள் சொல்லக்கூடும். அந்த வாதத்தை நான் புரிந்துகொள்ள முடியம். அதற்காக அனுதாபமும்

கொள்கிறேன். அவர்கள் சொல்லுவதில் மோசடி அல்லது பொய் இல்லாதிருக்கும் வரையில் நான் சும்மாவும் இருப்பேன். நமக்குச் சுதந்திரம் அளிப்பதற்கு அவர்களால் முடியாது. சுதந்திரம் வர வேண்டுமானுல், அது நமக்குள்ள சொந்த உள் பலத்தாலும், நம்முள் வேற்றுமை மறைவதனுலும், எல்லாச் சமூகங்களுக்கிடையேயும் ஒற்றுமை ஏற்படுவதனுலுமே வர வேண்டும். அது சுவர்க்கத்திலிருந்து இறங்கிவிடாது; ஒரு நாடு மற்றுமொரு நாட்டுக்குத் தானமாக அதைக் கொடுத்துவிடவும் முடியாது. காரியக் கமிட்டி உறுப்பினர்களின் உணர்ச்சியைத்தான் நான் பிரதிபலிக்கிறேனு என்பது எனக்குத் தெரியாது. ஏனெனில், இவற்றைக் குறித்து நான் அவர்களுடன் விவாதிக்கவில்லை. என்னுடைய எல்லாக் குறைபாடுகளுடனும், என் புத்திவேலை செய்யும் விதம் ஆகியவைகளோடும் என்னை நீங்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும்.

'கற்பனைக் காட்சியைக் காண்பவர் நீர்' என்று வைசிராய் சொல்லலாம். என் முயற்சியில் நான் தவறிவிடக்கூடும். ஆனுல், நாங்கள் சச்சரவிட்டுக் கொள்ளமாட்டோம். நம்மால் எதுவும் செய்ய இயலாது என்ருல், நான் திக்கற்றவன் என்ற உணர்வு எனக்கு ஏற்படாது. என் நிலையை நான் சரிவர உபயோகித்துக்கொள்வேன். ராம மனேகர லோஹியாவையும் ஜயப்பிரகாஷ் நாராயணையும்விட வீரமிக்கவரையோ அல்லது நேர்மையானவரையோ நான் அறியேன். அவர்கள் சிறையில் இருப்பதைப் பார்க்கும்போது நான் சும்மா உட்கார்ந்திருக்க முடியாது. அவர்கள் பலாத்காரத்தைப் பிரசாரம் செய்யவில்லை. ராம்கர் தீர்மானம் கூறியதையே நிறைவேற்றினர்கள். அது, அவர்கள் கௌரவமெனக் கருதிய செயலாகும்.

என்னை அடக்கிக்கொண்டிருக்கிறேன்; அடக்கிக்கொண்டும் வருவேன். சிறை செல்ல முற்பட மாட்டேன். சட்டமறுப்புச் செய்ய நான் விரும்பவில்லை. ஆபத்திற்கு என்னை உட்படுத்திக் கொண்டுவிடேன். இந்தப் போராட்டத்தில் சிறைப்படுவதற்கு நான் வழி செய்துகொள்ள மாட்டேன். ஆனுல், அரசாங்கம் விரும்பினுல் என்னைக் கொண்டு போய்விடுவதில் கஷ்டம் எதுவும் இல்லை. என் வாயைக் கட்டி வைக்கவோ அல்லது என் பேனவைக் கட்டுப்படுத்தி வைக்கவோ என்னுல் ஆகாது. என்னைச் சிறைக்குள் வைத்திருப்பது அவர்களுக்குக் கஷ்டம். இந்தியா உடனே புரட்சியில் கிளம்பிவிடும் என்பதனுல் அல்ல, அப்படிச் செய்தால் இந்தியா தவறு செய்ததாகும். என்னைச் சிறையில் அவர்கள் வைத்திருக்க முடியாது என்றே எனக்குத் தோன்றுகிறது.

என்னுடைய வாதங்களை வைசிராயிடம் கூறுவேன். என்னுடைய முயற்சியில் நான் தோற்றுப் போகக்கூடும். ஆனால், நான் எக்காரியத்திலும் மனச்சோர்வுடன் இறங்கியதில்லை. நெடுஞ் சுவர் ஒன்று என் முன்பு நிற்கக்கூடும் என்பதை உணர்ந்தே நான் இறங்கியிருக்கக்கூடும். நெடுஞ் சுவரையும் நான் கடந்திருக்கிறேன். இந்தியாவில் 'யுத்தம் கூடாது' என்ற பிரசாரத்தை முழுச் சுதந்திரத்துடன் செய்வதற்காகக் காங்கிரஸ் விடுத்திருக்கும் வேண்டுகோளில் இருக்கும் நியாயத்தை வைசிராய் உணருவார் என்ற நம்பிக்கையுடனேயே அவரை அணுகுகிறேன். 'ஏகாதிபத்தியத்திற்கு நாங்கள் உதவ முடியாது. அழிக்கும் கொள்கைக்கு உடந்தையாக இருக்க முடியாது' என்று எழுத்திலும் வாயிலும் பிரசாரம் செய்வதற்கு ஒவ்வொருவருக்கும் பூரண சுதந்திரம் வேண்டும்.

சத்தியாக்கிரகத்தைத் தவிர்ப்பதற்காக உங்கள் பெயரால் என்னால் இயன்ற எல்லா முயற்சிகளையும் செய்வேன். அது வந்தால் அது என்ன உருவில் இருக்கும் என்பது எனக்குத் தெரியாது. ஆனால், பொதுமக்களின் சட்டமறுப்பு இராது என்பதை அறிவேன். ஏனெனில், பொதுஜனச் சட்டமறுப்பு இச்சமயத்திற்குத் தேவையில்லை. எதிர்காலத்தில் எடுத்துக்கொள்ளவேண்டிய நடவடிக்கை குறித்து ஊடுருவ இயலாத இருளே எனக்கு இருந்து வருகிறது. அற்புதங்கள் எவையும் என்னிடம் இல்லை. உங்களுக்கு நான் எப்படித் தலைமை வகித்து அழைத்துச் செல்லுவேன், எந்த நடவடிக்கையை எடுக்கும்படி உங்களுக்குக் கூறுவேன் என்பவற்றை நான் அறியேன். நாம் எடுத்துக்கொள்ளும் நடவடிக்கை எதுவாயினும் அது காங்கிரஸின் தன்மைக்கும் சந்தர்ப்பத்திற்கும் பொருந்துவதாக இருக்கும் என்று நம்புகிறேன்.

சேவாகிராமத்திலேயே அடைபட்டு இருந்துவிட்டேனையால், காங்கிரஸின் மனப்போக்கு என்ன என்பது எனக்குத் தெரியாதென நான் அடிக்கடி கூறியிருக்கிறேன். காங்கிரஸின் கஷ்டத்தை முன்னிட்டு என்னை நானே பம்பாய்க்கு இழுத்துக்கொண்டு வந்தேன். இக்கடமையிலிருந்து நான் விடுதலையானதும் என்னை நீங்கள் சேவாகிராமத்தில் பார்ப்பீர்கள். நான் சேவாகிராமத்தில் அடைபட்டுக் கிடந்தபோதிலும் இப்போரை முன்னின்று நடத்துவதற்கு வேண்டிய பலமும் வசதிகளும் எனக்கு உண்டு. சேவாகிராமத்தில் என் வளர்ச்சிக்கானதோர் சூழ்நிலையை நான் அமைத்துக்கொண்டிருப்பதால் மற்ற இடங்களைவிட அங்கு நான் சரியாகச் செய்ய முடிவதோடு

தெளிவாகச் சிந்திக்கவும் முடியும். காலம் போகப் போக என் உடல் கெட்டுக்கொண்டு வருமேயன்றி என் அறிவு கெடாது. வயது ஆக ஆக நான் விஷயங்களைத் தெளிவாகக் காண்கிறேன் என்று தெரிகிறது. இது என்னை நானே ஏமாற்றிக் கொள்ளுவதாக இருக்கலாம். ஆனால், இதில்கபடம் எதுவும் இல்லை. ஆனந்தத்துடன் இருப்பதற்கு உதவுவதோடு மனச்சோர் வடைந்து விடாதபடியும் செய்வதால் தன்னைத் தானே ஏமாற் றிக்கொள்ளுவது என்பதும் சில சமயங்களில் நல்லதே. ஆகை யால், நீங்கள் சேவாகிராமத்திலிருந்து என்னை இழுத்து வந்திருப்பது தவறு. உங்கள் காரியத்தை முன்னின்று செய் வதில் நான் சரியாகவே செய்வேன் என்பதை உங்களுக்கு உறுதி கூறுகிறேன்.

காங்கிரஸில் பல கட்சிகள் இருக்கின்றன. நாம் எல்லோ ரும் ஒரே கருத்துடன் இல்லை. கட்டுப்பாடின்மையும் காங்கிர ஸில் இருக்கிறது. நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டிருக்கும் பொதுஜன ஸ்தாபனம் ஒன்றில் இது தவிர்க்க முடியாதது என்பதை நான் அறிவேன். எல்லாம் கட்டுப்பாடின்மைதான், கட்டுப்பாடு என்பதே கிடையாது என்று இருக்குமாயின் ஸ்தாபனம் கீழ் நிலைக்கு வந்துவிட்டதென்றே அர்த்தம். அகிம் சையில் உங்களுக்கு நம்பிக்கை இல்லாவிட்டாலும் நீங்கள் காங்கிரஸுக்கு வருகிறீர்களே என்று உங்களைப்பற்றி யாரும் சொல்லக்கூடாது. உங்கள் நெஞ்சில் பலாத்கார எண்ணத்தை வைத்துக்கொண்டு நீங்கள் காங்கிரஸ் பிரதிக்ஞையில் கையெழுத்திடுவது எப்படிச் சாத்தியம்? அகிம்சைக் கொள் கைக்கு முற்றும் பணிவதையே நான் விரும்புகிறேன். கொள்கை இருந்துகொண்டிருக்கும் வரையில் அது தருமமே போன்றது தான். ஏனெனில், அதுவே ஏற்றதாக இருக்கும் வரையில் அது தருமம் போன்றதே. என் தருமம் எனக்கு ஆயுள் முழு தும் இருப்பது; உங்களுக்கோ அது நீங்கள் அதைக் கைக்கொண் டிருக்கும் வரையில்தான். காங்கிரஸிலிருந்து விலகிவிடுங்கள்; அப்பொழுது அதிலிருந்து நீங்கள் விடுபட்டவர்களாவீர்கள். நாம் உபயோகிக்கும் பாஷை சம்பந்தமாகவும், நாம் மனத்தில் கொள்ளும் எண்ணம் சம்பந்தமாகவும் நாம் தெளிவாக இருப் போம். எண்ணத்தை வெளிப்படுத்துவதற்குத்தானே பாஷை; வேறு எதற்கு? உங்கள் எண்ணம் சரியானதாகவும் உண்மை யோடு கூடியதாகவும் இருக்கட்டும். அப்பொழுது உலகம் முழுவதுமே உங்களை எதிர்த்து நின்றாலும் சுயராஜ்யம் ஏற்படு வதை நீங்கள் துரிதப்படுத்தியவர்களாவீர்கள். தினத்திற்கு

90 லட்சம் பவுன் செலவு செய்யாமல், ஒரு வீட்டைக்கூடக் கொளுத்தாமல், நீங்கள் சுயராஜ்யத்தை அடைந்துவிடுவீர்கள். உங்கள் கொள்கைக்கு நீங்கள் உண்மையாக இருந்தால், இத் தகைய காரியங்களில் எதையும் செய்யாமலே கம்பீரமான சுதந்திர மாளிகையை நீங்கள் எழுப்பிவிடலாம்.

பலாத்காரக் கட்சிக்கு இப்பொழுது ஒன்று கூறுகிறேன். உங்களால் முடிந்தால் முறைகளில் குழப்பம் செய்யாதீர்கள். சில ஆண்டுகளாக நீங்கள் உங்களை அடக்கிக்கொண்டிருந் தீர்கள். இன்னும் சில ஆண்டுகளுக்கும் அடக்கி வைத்துக் கொள்ளுங்கள். நம்முடைய போராட்டம் அப்படி அற்பமான தன்று. உங்களை நீங்களே அடக்கி வைத்துக்கொள்ளுவதால், உங்களுக்கு நஷ்டம் எதுவும் இல்லை.

பேச்சு, எழுத்துச் சுதந்திரம் சுயராஜ்யத்தின் அடிக் கல். அந்த அடிக் கல்லுக்கு ஆபத்து நேருமாயின் அந்த ஒரு கல் லைப் பாதுகாப்பதற்காக உங்கள் சக்தி முழுவதையும் நீங்கள் உபயோகிக்க வேண்டும். கடவுள் உங்களுக்கு உதவி புரிவாராக.

—'ஹரிஜன்' - 29—9—1940.

# 40

# குறை கூறியவர்களுக்குப் பதில்

அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி சமீபத்தில் நிறை வேற்றிய தீர்மானங்களும், அக்கூட்டத்தில் நான் பேசியவை களும், சில பாராட்டுகளைப் பெற்றிருப்பினும் அதிகமாகக் குறை கூறப்பட்டும் இருக்கின்றன. குறை கூறப்பட்டுள்ள இரு விஷயங் களுக்குப் பதில் சொல்ல நான் முயற்சி செய்ய வேண்டும். ஏனெனில், அவை நிரந்தரமான முக்கியத்துவமுள்ளவை. 17-ஆம் தேதிய 'டைம்ஸ் அவ் இந்தியா' பத்திரிகை, 'தாங்கள் எதற் காகப் போராடுகிறார்கள் என்பது ஐரோப்பாவிலுள்ள மக்களுக்கே தெரியாது' என்று நான் கூறியதற்காக மிதமான வகையில் கண்டித்து என்மீது குறை கூறியிருக்கிறது. அது வெறுக்கப்படுவதாகக் காணப்படுகிறது. ஆனால், சத்தியம் பார்வைக்குக் கடுமையானதாகவே இருப்பினும், அதைச் சொல்ல வேண்டியது பொருத்தமானதாகவும் அவசியமானதாகவும் இருக்கும்போது அதைச் சொல்லித்தான் ஆக வேண்டும். இன்னும் முன்னாலேயே அதைச் சொல்லியிருக்க வேண்டும் என்று நம்புகிறேன். தாங்கள் எதற்காகப் போராடுகின்றனர் என்பது யுத்தத்தில் ஈடுபட்டிருக்கும் நாட்டு மக்களுக்குத்

தெரியாது என்று நான் ஏன் நினைக்கிறேன் என்பதையும் நான் கூற வேண்டும். 'ஐரோப்பிய மக்கள்' என்று சொல்லாமல் 'யுத்தத்தில் ஈடுபட்டிருக்கும் நாட்டினர்' என நான் சொல்லி யிருக்கிறேன். நாட்டு மக்களுக்கும் அவர்களுடைய தலைவர் களுக்கும் உள்ள பேதத்தையும் கூறியிருக்கிறேன். தாங்கள் எதற்காகப் போராடி வருகிறார்கள் என்பதைத் தலைவர்கள் அறிந்திருப்பார்கள். அவர்கள் செய்வது சரி என்று நான் ஒப்புக்கொண்டதில்லை. மக்கள் தங்கள் தலைவர்களை நம்புகி றார்கள். ஆகையால், அவர்களைப் பின்பற்றுகிறார்கள் என்பதைத் தவிர ஆங்கிலேயருக்கோ, ஜெர்மானியருக்கோ அன்றி இத்தாலியருக்கோ தாங்கள் போராடிக்கொண்டிருப்பது எதன் பொருட்டு என்பது தெரியாது. இப்பொழுது நடக்கும் யுத்தத்தில் வைத்த பணயம் ரத்தக்களறியாகவும் திடுக்கிடச் செய்வதாகவும் இருப்பதால் அது மாத்திரம் போதாது என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஆங்கிலக் குழந் தைகள் அநியாயமாக ஏன் கொல்லப்படவேண்டும், ஆங்கிலே யரின் அழகான வீடுகள் ஏன் அழிக்கப்பட வேண்டும் என்பவை ஜெர்மானியருக்கும் இத்தாலியருக்கும்-பொதுவாக இரு சாராருக் குமே - தெரியாத விஷயமாக ஒரு வேளை இருக்கலாம். ஆனால், பிரிட்டிஷ் மக்களுக்குத் தாம் போராடுவது எதற்காக என்பது தெரியும் என்று ஒரு வேளை 'டைம்ஸ்' கூறலாம். தென்னாப் பிரிக்காவில் போயர் யுத்தத்தின் போது நான் பிரிட்டிஷ் சிப்பாய்களைக் கேட்டபோது, தாங்கள் போராடுவது எதற்காக என்பது அவர்களுக்குத் தெரியவில்லை. ஏன் என்று தெரிந்து கொள்வது அவர்கள் வேலை அல்ல. தங்களை அணிவகுத்து எங்கே கொண்டு செல்கின்றனர் என்பதுகூட அவர்களுக்குத் தெரி யாது. நான் லண்டனில் இருக்க நேர்ந்து, பிரிட்டிஷாரை நான், ஏன் அவர்களுடைய சிப்பாய்கள் பெர்லினில் நாசம் விளைவித்துக் கொண்டிருக்கிறார்கள் என்று கேட்டால், பிரிட்டிஷ் மக்களால் எனக்கு நேரடியான பதில் சொல்ல முடியாது. பத்திரிகை களில் வெளியாகியிருப்பவைகளை நம்புவதாயிருந்தால், ஜெர்மா னியர் லண்டனில் செய்திருக்கும் நாசங்களைவிடப் பிரிட்டிஷ் திறமையும் வீரமும் பெர்லினில் அதிக நாசத்தை உண்டாக்கி யிருக்கின்றன என்றாகிறது. ஜெர்மன் மக்கள், பிரிட்டிஷ் மக்களுக்கு என்ன கெடுதலைச் செய்தார்கள்? அவர்களுடைய தலைவர்கள் செய்தார்கள். அவர்களைத் தூக்கில் போடுங்கள். ஆனால், ஜெர்மன் மக்களின் வீடுகளையும் ஜெர்மன் பொது மக்களின் வாழ்க்கையையும் ஏன் நாசப்படுத்த வேண்டும்? இந்தப் பைத்தியக்காரத்தனமான நாசம் சர்வாதிகாரத்தின்

பெயரால் செய்யப்பட்டிருந்தாலோ அல்லது சுதந்திரம் அல்லது ஜனநாயகம் என்பவைகளின் புனிதப் பெயரினல் செய்யப்பட்டிருந்தாலோ, இறந்தவருக்கும், திக்கற்றவர்களுக்கும், வீடிழந்து தவிப்போருக்கும் அதில் என்ன வித்தியாசம் தெரிந்துவிடப் போகிறது? சுதந்திரமும் ஜனநாயகமும் ஒரு பாவமும் அறியாதவர்களின் ரத்தத்தினல் கறைப்பட்டால், அவை தெய்வத்துக்குப் பொறுக்காத மகாபாதகங்களே ஆகுமென்று நான் அடக்கத்துடன் மாத்திரம் அல்ல, எனக்குள்ள முழுச் சக்தியையும் கொண்டு வற்புறுத்திச் சொல்லுகிறேன். "என் குழந்தைகள் என்று சொல்லப்படும் இவர்கள், தாங்கள் செய்து கொண்டிருப்பது இன்னது என்பதையே அறியார்கள். என் பிதாவின் முக்கியமான ஆக்ஞையையே மீறி நடப்பதால் என் பிதாவின் பெயரை வீணுக்கு இழுக்கின்றனர்" என்று இறவாத கிறிஸ்து கூறுவதைக் கேட்கிறேன். என் காதுகள் என்னை ஏமாற்றவில்லை என்ருல், இதில் நான் தவறிப்போயே இருப்பேனுயின், நல்லவரோடு சேர்ந்தே அப்பிழையைச் செய்திருக்கிறேன்.

உண்மையை நான் ஏன் சொன்னேன்? சிறந்த வழியைக் காட்டுவதற்கு ஒரு கருவியாக என்னை ஆக்கியிருப்பதனுலேதான். பிரிட்டிஷார் நீதியையே நாடுகிருர்கள் என்ருல், கடவுளின் மேன்மையான சபையிலே அவர்கள் அழுக்கற்ற மெய்யுடன் போக வேண்டும். யுத்தம் சம்பந்தப்பட்ட வரையில் சர்வாதிகாரிகளின் முறையையே தானும் அனுசரித்துக் கொண்டு பிரிட்டன், சுதந்திரத்தையும் ஜனநாயகத்தையும் பாதுகாக்க முடியாது. போரில் ஹிட்லரின் செயல்களையே ஹிட்லரின் வழியிலேயே மிஞ்சிய பிறகு தன்னுடைய போக்கைப் பிரிட்டன் பிறகு மாற்றிக்கொண்டுவிட முடியாது. சென்ற யுத்தம் ஒரு சரியான பாடம். வெற்றி கண்டுவிட்டாலும் அது வெறும் மாயையே; சிக்கிக்கொள்வதற்கு ஒரு கண்ணியே. நான் கூறுவதெல்லாம் செவிடன் காதில் ஊதிய சங்கு போலவே ஆகும் என்பதை நான் அறிவேன். ஆனல், ஒரு நாளைக்கு அது உண்மையாகவும் காதில் படும். சுதந்திரமும் ஜனநாயகமும் உண்மையிலேயே பாதுகாக்கப்பட வேண்டுமாயின், பலாத்கார எதிர்ப்பைவிட எந்த வகையிலும் குறையாத வீரமும், குறையாத வெற்றியும் கொண்டதான அகிம்சை எதிர்ப்பினலேயே அது சாத்தியம். உயிரைப் போக்காமல் உயிரைக் கொடுப்பதாக அது இருப்பதால், அபாரமான வீரமாகவும் அதிகக் கீர்த்தி வாய்ந்ததாகவுமே இருக்கும்.

'ஸ்டேட்ஸ்மன்' செப்டம்பர் 18-ஆம் தேதிய கட்டுரைக்கு நான் இப்பொழுது வருகிறேன். அது நிதானமின்றிக் கோபத்தில் எழுதப்பட்டிருக்கிறது என்பதைச் சொல்ல வருந்துகிறேன். அறியாமல் செய்யப்பட்டிருக்கிறது என்ருலும், அதில் (கடுமை யல்லாத சொல்லே உபயோகிப்பதாயின்) தெளிவான தவறுகள் நிறைந்திருக்கின்றன. ஆனுல், அதில் அடங்கிய நிதானமிழந்த சொல்லமைப்பைப்பற்றி எனக்குக் கவலே இல்லே. இதற்கு முன்னுல் கேட்டறியாத ஒரு கடுமையான போராட்டத்திலும் வெம்மையிலும் இதைப்போன்று எவரும் நிதானம் இழந்ததில்லே என்பது ஆச்சரியப்பட வேண்டியதே.

பலமான தாக்குதலின் சாரம் வருமாறு:

"அடிப்படையான ஒழுக்கமின்மையைக் குறித்தும், தத்துவத்தின் முரண்பட்ட தன்மையைக் குறித்தும், நமது கருத்தை அப்போதைக்கப்போது வெளியிட்டிருக்கிருேம். ஒத்துழையாமை, ஒரு யுத்த முறையேயன்றிச் சமாதான முறை அன்று......அதில், ஆத்மிக மதிப்பு இருப்பதாகக் கூறிக்கொள்ளும் பாசாங்கே இருக்கிறது. கபடமும், வஞ்சனேயும் துவேஷங்களேத் தீவிரமாக்கும் பொதுஜனப் பித்தலாட்டமுமே அதன் விளேவாகும்......இந்தத் தத்துவத்தை ஏற்றுக்கொள்ளும் ஒரு நாடு, தன்னே அடிமைத்தனத்திற்கு ஆளாக்கிக் கொண்டதாகவே ஆகும்."

இந்தியாவில், நம் காலத்துச் சரித்திரத்திற்கு, இவையெல்லாம் நேர்மாருனவையாகும். அகிம்சையோடு கூடிய ஒத்துழையாமையில் ஒழுக்கக்கேடானது எதுவுமே இல்லே என்று நான் கூறமுடியும். பலாத்காரத்தோடு கூடிய எதிர்ப்போ, அதனளவுக்கு ஒத்துழையாமையோ, அது இம்சையோடு கூடியதாக இருந்தால் ஒழுக்கக் கேடானதாகிறது. அது அகிம்சையோடு கூடியதாக இருக்கும்போது ஒழுக்க நெறியுள்ளதாகிறது. தீமையானதுடன் ஒத்துழைக்க மறுப்பது ஒரு புனிதக் கடமை. அதன் அகிம்சைத் தன்மையினுலேயே அது ஆத்மிகம் நிரம்பியதாகிறது. பெயரளவில் மாத்திரமே அது அகிம்சையாக இருக்குமானுல், மேலே தரப்பட்ட விஷயத்தை எழுதியிருப்பவர் உபயோகிக்கும் அடைமொழிகள் பொருத்தமானவைகளாகும். இப்பொழுதுள்ள வாதத்திற்கு உண்மையானதாக இருக்கும் பொருளேயே நான் எடுத்துக்கொள்ள வேண்டும். இப்பொழுது உண்மை விஷயங்களேப் பார்ப்போம். அகிம்சையோடு கூடிய ஒத்துழையாமை, அது என்னதான் குறைபாடுடையதாக இருப்பினும், துன்பப்பட்டுத் தவித்துக்கொண்டிருந்த அடிமைத் தனத்திலிருந்து இந்தியாவுக்குச் சிறிதளவாவது விமோசனம் அளித்திருக்கிறது. அது, இந்தியாவை மனச்சோர்வுச் சகதியிலிருந்து மீட்டு, வேறு எதனுலும் கொண்டுவர இயலாத

கௌரவ நிலைக்குக் கொண்டு வந்திருக்கிறது. பிரயோகிக்கும் போது அகிம்சை கலப்படமானதாகிவிடாதிருந்தால், அதன் பலன் இன்னும் நன்ருகத் தெரியும் என்பதைத் தைரியமாகக் கூறுவேன். வெறுத்துக் கூறப்படும் இந்த அகிம்சையோடு கூடிய எதிர்ப்புத்தான் இந்தியாவை அராஜகத்திலிருந்தும் ரத்தக்களறியிலிருந்தும் இதுவரை காப்பாற்றி வந்திருக்கிறது என்று நான் இன்னும் பலமாகக் கூறுவேன். இந்தியா காப்பாற்றப்பட வேண்டுமாயின் அது அகிம்சை முறையினுல்தான் முடியும். நான் கூறுவதிலுள்ள உண்மையைச் சோதித்துப் பார்க்குமாறு 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகையில் எழுதியவரை அழைக்கிறேன். இதற்கு ஆதாரமாகப் பல அத்தாட்சிகள் அவருக்குக் கிடைக்கும். பாரபட்சமற்று ஆராய்வதால் பிரிட்டனுக்கும் இந்தியாவுக்கும் அவர் சேவை செய்தவராவார்.

[ சிம்லாவுக்குப் போகும் வழியில் ]
25—9—1940 —'ஹரிஜன்' - 29—9—1940

## 41

# வைசிராய் - காந்தி கடிதங்கள்

[பேச்சுச் சுதந்திரம் வேண்டும் என்று காங்கிரஸ் கேட்டது சம்பந்தமாக வைசிராய்க்கும் காந்திஜிக்கும் நடந்த கடிதப் போக்குவரத்து விவரம் 1940 செப்டம்பர் 30-ஆம் தேதி வெளியாயிற்று. அக்கடிதங்கள் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.]

### வைசிராயின் கடிதம்

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

செப்டம்பர் 27-ஆம் தேதியும் 30-ஆம் தேதியும் நாம் பேசிய விஷயத்தின் காரணத்தையும் அதன் விளைவையும் சுருக்கி எழுத்து மூலம் அறிவிப்பது நலமென நினைக்கிறேன்.

என்னைச் சந்தித்துப் பேச அனுமதிக்க வேண்டும் என்று 18-ஆம் தேதி நீங்கள் எனக்குக் கடிதம் எழுதினீர்கள். அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி சமீபத்தில் நிறைவேற்றிய தீர்மானத்தின்படி உள்ள நிலைமையைக் குறித்து, நீங்கள் காங்கிரஸுக்கு வழிகாட்டி என்ற வகையில் மாத்திரமேயன்றி ஒரு சொந்த நண்பர் என்ற வகையிலும், என்னுடன் விவாதிக்க ஆவலுடன் இருப்பதாகவும் உங்கள் கடிதத்தில் எழுதினீர்கள் என்பது நினைவிருக்கும். விஷயங்களைக் குறித்து உங்களுடன் விவாதிக்க நான் மிகவும் தயாராக இருந்தேன். இரு முறை சந்தித்துப்

பேசும் வசதியும் நமக்கு இருந்தது என்பதை நான் சொல்லத் தேவையில்லை.

இந்தப் பேச்சுக்களின்போது நிலைமைபற்றி, முக்கியமாக யுத்த சமயத்தில் பேச்சுச் சுதந்திரம் என்பதைக் குறிப்பாகக் கொண்டு, விரிவாக விவாதிக்கப்பட்டது. அந்த விஷயத்தில் யுத்தத்தை நடத்துவதில் பிரிட்டிஷ் சர்க்காருக்கு எந்தவிதமான சங்கடமும் உண்டாவதைத் தவிர்க்க வேண்டும் என்பதில் நீங்கள் அதிக ஆர்வத்துடன் இருப்பதாகத் தெரிவித்துக் கொண்டீர்கள். இந்தியத் தேசீயக் காங்கிரஸும் மற்றப் பொது ஜனங்களும் யுத்த முயற்சி சம்பந்தமாகத் தங்கள் கருத்தை முழுவதும் அறிவிப்பது, அது முற்றிலும் அகிம்சையோடு கூடிய தாக மாத்திரம் இருக்குமாயின், முக்கியமானது என்று நீங்கள் கருதுவதாக என்னிடம் சொன்னீர்கள்.

மனச்சாட்சிப்படி யுத்தத்தை வெறுப்பவர்கள் விஷயத்தில் பிரிட்டனில் அனுசரிக்கப்படும் சட்டத்தின்கீழ் விசேடமாக நடத் தப்படுவதன் தன்மையை உங்களுக்குக் கூறினேன். அந்த ஏற்பாட்டின்படி மனச்சாட்சிப்படி வெறுப்பவருக்குப் போரில் ஈடுபடும் கடமையிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டுத் தம்முடைய கொள்கையைப் பகிரங்கமாகச் சொல்லிக்கொள்ளவும் அனுமதி தந்திருந்தாலும், சிப்பாய்களையோ அல்லது வெடி மருந்து தயாரிக்கும் தொழிலாளரையோ, தங்கள் விசுவாசத்தைக் கைவிட்டு விடவோ அல்லது தங்கள் முயற்சியைச் செய்யாம லிருக்கும்படியோ தூண்டும் அளவுக்குத் தங்கள் எதிர்ப்பைக் கொண்டு போக அவர் அனுமதிக்கப் படுவதில்லை என்றும் சொன்னேன்.

இந்தியாவில் காணும் நிலைமையைப் பொறுத்து அந்த வகையில் நடத்தப்படுவது போதுமானதல்ல என்று நீங்கள் என்னிடம் தெளிவாகக் கூறினீர்கள். பிரிட்டனில் இருந்துவரும் நிலை இந்தியாவில் இருக்கும் நிலைமைக்கு முற்றிலும் மாறுபட்ட தாக இருப்பதால், இந்தியாவில் யுத்தத்தை எதிர்ப்பவர், எல்லா யுத்தங்களிலுமோ அல்லது இப்பொழுது நடந்துவரும் யுத்தத்திலோ இந்தியா பங்கெடுத்துக்கொள்வதைக் குறித்து எந்தவிதத் தடையுமின்றித் தம்முடைய கருத்தைக் கூறும் உரிமை பெற்றிருப்பது இந்தியாவில் அவசியமானது என்பதே உங்கள் முடிவு என்றீர்கள்.

யுத்த வேலையில் ஈடுபட்டு வரும் தொழிலாளரை, அந்த வேலை நடக்கும் இடங்களில் போய் வேலை செய்ய வேண்டாம்

என்று மாற்ற நீங்கள் உங்களளவில் முயற்சி செய்யாவிட்டாலும், ரத்தத்தைச் சிந்தும் போரில் இந்தியாவை ஈடுபடுத்தும் இந்தியாவின் யுத்த முயற்சிக்கு எந்த வகையிலும் உதவி செய்யாதிருக்குமாறு பிரசங்கங்களின் மூலமோ அல்லது மற்ற வகையிலோ நாடு முழுவதும் மக்களைக் காங்கிரஸ்காரர்களும் காங்கிரஸ்காரரல்லாதவர்களும் கேட்டுக்கொள்ளக்கூடியதாக இருக்க வேண்டும் என்று நீங்கள் கருதுகிறீர்கள் என்பது நமது பேச்சிலிருந்து மேலும் ஏற்பட்டது.

உங்களுடைய வாதங்களை முற்றிலும் சிரத்தையுடனும் கவனமாகவும் கேட்டுக்கொண்டேன். நிலைமையைப்பற்றி நாம் முழுவதும் பரிசீலனை செய்தோம். இதன் பலனை, உங்களுக்கு ஒன்றைத் தெளிவாக்குவது என் கடமை என்று உணர்ந்தேன். நீங்கள் கூறுவதைப் போன்ற காரியம், இந்தியாவின் யுத்த முயற்சியைக் கெடுப்பதுடன் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு யுத்த முயற்சியில், காங்கிரஸ் தவிர்க்க விரும்பும் சங்கடத்தையே செய்துவிடுவதுமாகும் என்பதே நான் உங்களுக்குத் தெளிவாக்கியது. இந்தியாவின் சொந்த நன்மையை முன்னிட்டு, முக்கியமாக யுத்தத்தில் ஏற்பட்டிருக்கும் இந்த நெருக்கடியான சமயத்தில், நீங்கள் கேட்கும் பேச்சு உரிமை யுத்த முயற்சியைக் கெடுத்துவிடுமாகையால், அதை ஏற்றுக்கொள்வது சாத்தியமல்ல என்பதையும் தெளிவுபடுத்திக் கூறினேன்.

## காந்திஜியின் பதில்

அன்புள்ள லார்டு லின்லித்கோ,

நீங்கள் இன்று எழுதிய கடிதம் கிடைத்தது. நான் உங்களிடம் கூறியவிதமாகக் காங்கிரஸின் நிலைமையை அது சரியாக எடுத்துக் காட்டுகிறது. ஏகாதிபத்தியத்திற்குப் பெரிய பலியாகியிருப்பது இந்தியா என்றும், தங்களைப் பொறுத்தவரையில், அந்த ஏகாதிபத்தியத்தைப் பாதுகாப்பதற்காக நடக்கும் ஒரு யுத்தத்திற்குத் தாங்கள் என்றும் அழைக்கப்படாததனால், அதற்கு உதவி செய்வது தங்கள் மனச்சாட்சியின்படி ஆட்சேபகரமானது என்றும் காங்கிரஸ்காரர்களும் சரி, மற்றவர்களும் சரி கருதுகின்றனர். மக்களின் சாதாரணத் தேவையைத் திருப்தி செய்வதற்கான காரியத்தை அரசாங்கம் உணராமலிருப்பது குறித்து நான் மிகவும் வருந்துகிறேன். யுத்த எதிர்ப்பாளன் என்ற முறையில் என் எதிர்ப்பு எவ்விதம் மனச்சாட்சிக்கு இணங்கியதோ அது போன்றே இருப்பது அவர்கள் எதிர்ப்பும். நான் குறிப்பிட்டிருக்கும் அவர்களைவிட என் மனச்சாட்சிக்கு

மாத்திரம் அதிகச் சுதந்திரம் வேண்டும் என்று நான் கேட்க முடியாது.

நமது பேச்சின்போது நான் தெளிவாக எடுத்துக்காட்டியதைப் போன்று, நாஜிஸத்திற்கு வெற்றி ஏற்பட வேண்டுமென்று எந்தப் பிரிட்டிஷாரும் எவ்விதம் எண்ணமாட்டாரோ அதேபோலக் காங்கிரஸும் நாஜிஸ வெற்றிக்கு எதிராகவே இருக்கிறது. ஆனால், காங்கிரஸின் ஆட்சேபத்தை யுத்தத்தில் தாங்களும் ஈடுபடும் நிலைக்குக் கொண்டு போய்விட முடியாது. நீங்களும், இந்தியா மந்திரியும், இந்தியா முழுவதுமே வலிய யுத்த முயற்சிக்கு உதவுவதாகக் கூறியிருப்பதால், இந்தியாவில் மிகப் பெரும்பான்மையினருக்கு அதில் சிரத்தை இல்லை என்பதைத் தெளிவாக்க வேண்டியது அவசியமாகிறது. நாஜிஸத்திற்கும், இந்தியாவை ஆளும் இரட்டை யதேச்சாதிகாரத்திற்கும் எந்தப் பேதத்தையும் அவர்கள் கொள்ளவில்லை. இந்தியா இருக்கும் ஒரு விசேட நிலைமையில் அதற்கு வேண்டியதான சுதந்திரத்தைப் பிரிட்டிஷ் அரசாங்கம் ஒப்புக்கொண்டிருக்குமாயின், தானாக அளிக்கப்படுவதான முயற்சியை மாத்திரமே தான் பெற்று வருவதாகப் பிரிட்டிஷ் அரசாங்கம் கூறி வருவது நியாயமாக இருந்திருக்கும். யுத்தக் கட்சியும், யுத்தம் கூடாது என்ற கட்சியும், ஆகிய இரு கட்சியினருமே முற்றிலும் அகிம்சையை அனுசரித்து வேலை செய்துகொண்டு வரும்வரையிலேயே ஒரே படியில் வைக்கப்படுவார்கள்.

உங்கள் கடிதத்தின் கடைசிப் பாரா சம்பந்தமாக உங்களுக்கு ஒரு விஷயத்தை நினைவூட்ட விரும்புகிறேன். இந்தியா தன்னை அழித்துக்கொள்ளும் அளவுக்குப் போய் - வேறு வகையாகக் கூறின், அது யுத்தமுயற்சியில் பங்கு கொள்ளுவதால் பிரிட்டனுக்கும் மற்ற எதற்கும் நன்மை ஏற்படாது என்பதைக் காட்ட, சமாதான எண்ணத்துடன் இருப்பதற்கு மேற்கொள்ளும் தேசீய நடவடிக்கைகளை நிறுத்திவிடும் அளவுக்கு - சங்கடம் விளைவிக்கக் கூடாதென அது எண்ணியதே இல்லை. பேச்சுச் சுதந்திரம் என்பதில், தனக்கு இஷ்டமானதை இந்தியா தேர்ந்தெடுத்துக் கொள்ளுவது என்பதும் அடங்கியிருக்கிறது. இந்தச் சுதந்திரம் இந்தியாவுக்கு அளிக்கப்பட்டிருக்குமானால், பிரிட்டனுக்குச் சாதகமாகவும் உண்மையான சுதந்திரமாகவும் இந்தியாவின் நிலைமையை அது மாற்றிவிட்டிருக்கும்; அப்பொழுது பிரிட்டன் கௌரவமும் பெற்றிருக்கும்.

ஆகையால், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் யுத்த முயற்சியில் அதற்கு எந்தவிதமான சங்கடத்தையும் உண்டாக்காமலிருக்

கவே காங்கிரஸ் இன்னும் விரும்புகிறது என்பதை நான் மீண்டும் கூறுகிறேன். ஆனால், மனித வர்க்கத்தின் சரித்திரத்தில் ஏற்பட்டிருக்கும் இந்த நெருக்கடியான நிலைமையில், காங்கிரஸ் தன்னுடைய தருமத்தை மறுத்துவிட்டுத் தன் கொள்கையை விடாமல் பிடித்துக்கொண்டிருப்பது என்பது சாத்தியமில்லை. காங்கிரஸ் அழிய வேண்டுமானாலும், தன்னுடைய உறுதியை அறிவித்தே அது அழிய வேண்டும். பேச்சுச் சுதந்திரமாகிய ஒரே விஷயத்தில் நமக்குள் ஓர் உடன்பாட்டிற்கு வர முடியாது போனது துரதிருஷ்டமேயாகும். ஆனால், காங்கிரஸ் நிலையை உணர்ந்து அரசாங்கம் தனது கொள்கையை அமைத்துக்கொள்ளுவது சாத்தியமாகும் என்ற நம்பிக்கையை நான் விடாமல் இருக்கிறேன்.

நமது பேச்சின்போது நான் எழுப்பிய மற்ற விஷயங்களைக் குறித்தும் ஆராய விருப்பந்தான். ஆனால், இந்தக் கடிதம் நீண்டுவிடும் என்று அஞ்சி அதை நான் கிளப்பவில்லை. என்னால் முடிந்த வரையில் சீக்கிரமே அவைகளைக் குறித்துப் பகிரங்கமான அறிக்கை ஒன்றை வெளியிடலாம் என்று நினைக்கிறேன்.

முடிவில், என்னுடைய நீண்ட வாதத்தையும் நான் கூறியதையும் மிகுந்த மரியாதையுடனும் பொறுமையோடும் தாங்கள் கேட்டுக்கொண்டதற்காக என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். நம்முடைய வழிகள் இச்சமயத்தில் மாறுபடுவதாகத் தோன்றினாலும், என்னை வழியனுப்புகையில் தாங்கள் அன்புடன் கூறியதைப் போன்று, நம்மிடையே நிற்கும் நட்பு, இப்படி விலகிச் செல்வதன் சங்கடத்தைச் சகித்துக் கொள்ளும்.

ஏற்பாடு செய்துள்ளபடி நம் கடிதப்போக்குவரத்தைப் பிரசுரிப்பதற்காகப் பத்திரிகைகளுக்குக் கொடுக்கிறேன்.

— 'ஹரிஜன்' - 6--10--1940.

# 42

# சமாதான ஸ்தாபனம்

காங்கிரஸ், ராணுவ மனப்பான்மையுடைய ஸ்தாபனமாக இருந்திருந்தால், அது முழுப் பலத்துடன் கூடிய ராணுவப் படையாக இருந்திருப்பதுடன் அதன் உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் திறமை வாய்ந்த சிப்பாய்களாகவும் பயிற்சி பெற்றிருப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை. இந்தியாவுக்கும் மனித வர்க்கத்திற்

கும் அதிர்ஷ்டவசமாகக் காங்கிரஸ் அப்படிப்பட்ட ஸ்தாபனமாக இல்லை. இந்தியாவில் இதைவிட முற்றிலும் தேசீயமான ஸ்தாபனம் வேறு எதுவும் இல்லை ; இருக்கவும் முடியாது. இந்தியாவுக்கும் மனிதவர்க்கத்திற்கும் மேலும் அதிர்ஷ்டவசமாக, அகிம்சை முறையைக்கொண்டே இந்தியாவின் சுதந்திரத்தை அடைவதென்று 1920-ஆம் ஆண்டு முதல் காங்கிரஸ் பிரதிக்ஞை செய்து கொண்டிருக்கிறது. ஆனால், இடையில் சட்ட மறுப்புச் செய்தாலும், இதுவரையில் அது பெரும்பாலும் ஒரு விவாத சபையாகவே இருந்து வந்திருக்கிறது ; தன்னுடைய முக்கியமான ஆக்க வேலைத் திட்டத்திலும் ஈடுபட்டு வந்திருக்கிறது. ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் நாட்டிற்காக ஏதாவது உற்பத்தி செய்யவேண்டும் என்று ஒரு சமயம் எதிர்பார்க்கப்பட்டது. ஆணும் பெண்ணும் நாட்டிற்காக நூற்க வேண்டுமென்ற விதி இருந்தது. இதைச் செய்யக் காங்கிரஸ்காரர்கள் முன் வரவில்லை. ஆகையால், நூற்பதைப்பற்றிய விதி கைவிடப்பட்டது. ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் வேலை செய்ய வேண்டிய மற்ற விஷயங்களும் உண்டு. ஆனால், எதிர்பார்த்த அளவுக்குக் காங்கிரஸ்காரர் செய்யவில்லை. ஒரு திட்டமான முடிவுக்கு வருவதற்கான சமயம் இப்பொழுது நேரிட்டுள்ளது. அவர்கள் முன்னுலிருக்கும் ஒரே வேலைத் திட்டம், ஓர் ஊழியன் அல்லது சமாதானச் சிப்பாயாக வேண்டியதே. ஒரு சமாதானச் சிப்பாய், வாளேந்தும் சிப்பாயைப் போல் அல்லாமல், யுத்த காலத்திலேயேயன்றிச் சமாதான காலத்திலும் தன்னுடைய ஓய்வு நேரம் முழுவதையும் சமாதானத்தைப் பரப்புவதற்குப் பயன்படுத்த வேண்டும். சமாதான காலத்தில் அவனுக்குள்ள வேலை, யுத்த வாய்ப்பு ஏற்படுவதைத் தடுப்பதும், அதற்குத் தயாரித்துக்கொள்ளுவது மாகும்.

நான் அப்பொழுது வாக்குரிமையோடு கூடிய காங்கிரஸ்காரனுக இருந்தால், காங்கிரஸ் பட்டியலில் இருக்கும் ஒவ்வொரு காங்கிரஸ்காரரும், இனி வரும் காங்கிரஸ்காரரும், ஆக்க வேலைத் திட்டத்தில் வேலை செய்யக் குறைந்தபட்சத் தகுதியைப் பெற்றிருக்க வேண்டும் என்பதற்கே வோட்டளிப்பேன். காங்கிரஸ் தனது ஜனநாயகத் தன்மையுடன் இருக்கவேண்டும் என்பதை எனக்கு நினைவூட்டுவது தவருகும். அதில் சேருகிறவர்கள், அதன் உறுப்பினராவதற்குரிய நிபந்தனைக்கும் கட்டுத்திட்டத்திற்கும் உட்படுவதற்குத் தாமே முடிவு செய்துகொள்ளுவதனுல், அது தன்னுடைய ஜனநாயகத் தன்மையை இழந்துவிடாது ; சிறந்த முறையில் வேலை செய்யும் ஸ்தாபனமாகவே ஆகும்.

கஷ்டமான காலத்தில் பொதுஜன ஆதரவை அடையக்கூடிய தாகக் காங்கிரஸ் இல்லையானால், அது பொதுஜன ஆதரவற்றதே யாகும். வேலையில்லாதவர்களுக்கும் பட்டினி கிடப்போருக்கும் அதனால் வேலை கொடுக்க முடியவில்லை என்றால், கொள்ளைகளி லிருந்து மக்களைக் காப்பாற்றவோ அல்லது அவைகளை எப்படிச் சமாளிப்பது என்பதைச் சொல்லிக் கொடுக்கவோ அதனால் முடியவில்லையென்றால் - ஆபத்து நேரும்போது அவர் களுக்கு உதவ முடியவில்லையாயின் - காங்கிரஸ் தன்னுடைய கௌரவத்தையும் பொதுஜன ஆதரவையும் இழந்துவிடும். ஒருவரோ அல்லது ஒரு கூட்டத்தினரோ, தம் மூலதனத்தைக் கொண்டே நீண்ட நாள் வாழ்ந்துவிட முடியாது. ஒரு ஸ்தாபனம் தன்னையே பரப்பிப் பெருக்கிக்கொள்ள வேண்டும்.

ஏகாதிபத்தியத்துடன் போராடுவதில் முன்னணியில் இருந்த தனாலேயே காங்கிரஸ் பொதுஜன ஆதரவைப் பெற்றிருக்கிறது. பழைய வழி இன்று பயனில்லை. பொதுஜனப் புரட்சியைப் பற்றி யாரும் இப்பொழுது எண்ணவில்லை. அடியிலிருந்து சீராக அமைத்துக்கொண்டு போவதுதான் சிறந்ததும், சீக்கிர மானதும், மிகவும் திறமை வாய்ந்ததுமாகும். அதற்கு ஏற்ற சமயம் இப்பொழுது வந்திருக்கிறது. எந்த விதத்தில் பார்த் தாலும், 'கிராமத்திற்குத் திரும்பிப் போ!' என்பது இப்பொழுது அவசியமானதாகியிருக்கிறது. உற்பத்தியையும் விநியோகத் தையும் ஓர் இடத்தில் தேக்கிவைக்காமல் எங்கும் பரவியதாகச் செய்வதற்கு இதுவே சமயம். ஒவ்வொரு கிராமமும் தன் தேவையைத் தானே பூர்த்தி செய்துகொள்ளக்கூடிய குடியரசாக வேண்டும். இதற்கு வீரியவாசகமான தீர்மானம் தேவையில்லை. தீரமான, ஒன்றுபட்ட, புத்திசாலித்தனமான வேலையே தேவை. எனக்குத் தெரிந்தவரையில் ஆளுவோருக்கும் மக்களுக்கு மிடையே உள்ள பொதுவான விஷயம் இதுதான்.

'சிப்பாயாக இருப்பதா அல்லது சமாதான ஊழியராக இருப்பதா, அல்லது சுயராஜ்யத்தை நிருமாணிக்கும் பணியில் பங்குகொள்ள விருப்பமில்லாது ஒன்றுமில்லாத பேர்வழியாக இருப்பதா?'—இப்படி ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் தமக்குத் தாமே யோசித்து விடை தந்து கொள்ளவேண்டும்.

[பர்டோலியிலிருந்து வர்தாவுக்கு
ரெயிலில் போகும்போது எழுதியது.]
9—1—1942.

— 'ஹரிஜன்' - 18—1—1942.

# 43

# 'ஜெர்மனி வெற்றி பெற்ருல்'

"இந்தியா யுத்தத்தில் ஈடுபடாமலேயே ஜெர்மனி இந்த யுத்தத்தில் வெற்றி பெற்றுவிடுகிறது என்று வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது ஹிட்லர் இந்தியாவைச் சும்மா விட்டுவிடுவாரா ? என் அருமை ஸ்ரீ காந்தியே! நிச்சயமாக விட்டுவிட மாட்டார். இப்பொழுது இந்தியாமீது பிரிட்டனுக்கு இருக்கும் ஆதிக்கத்தைவிட அவருக்கு அதிக ஆதிக்கம் இருக்கும். அதில் வித்தியாசம் இதுதான் : ஆங்கிலேயருடன் நீங்கள் போராட முடியும். ஆனல், ஜெர்மானியன் இந்திய மண்ணில் கால் வைத்துவிட்டால் அவனுடன் நீங்கள் போராட முடியாது. சாத்துவிகச் சட்டமறுப்பு என்ருலே ஆங்கிலேயருக்கு நடுக்கம். ஆனல், நாஜிகளுக்கோ அது வெல்லம் போன்றது."

தென்னுப்பிரிக்காவிலிருந்து ஓர் ஆங்கிலேயர் அக்கறையுடன் எழுதியிருக்கும் நீண்டதோர் கடிதத்திலிருந்து சுருக்கப்பட்டிருப்பதே இக்கேள்வி. காங்கிரஸ் எவ்வளவு பலமாக ஆட்சேபித்தும் எல்லா வழியிலும் இந்தியா இப்பொழுது யுத்தத்திலேயே இருந்து வருகிறது. அப்படியிருக்க, இந்தியா யுத்தத்தில் ஈடுபடவில்லை என்று எண்ணிக்கொள்ளுவது முதல் தவறு. பிரிட்டிஷ் தளபதிகள் ஏற்படுத்தி, பயிற்சியும் அளித்திருக்கும் ஆட்களையெல்லாம் பிரிட்டன் சரியானபடி உபயோகித்துக்கொண்டு வருவதோடு, தன்னல் முடிந்தவரையில் பணத்தையும் செலவு செய்துகொண்டிருக்கிறது. ராஜீய எண்ணமுள்ள இந்தியர்களுக்கு, ஆளுவோரின் குமாஸ்தாக்களாக வேலை செய்யும் தகுதியைத் தவிர வேறு எந்தவிதப் பயிற்சியும் அளிக்கப்படவில்லை. சில அவசிய நிபந்தனைகள் பூர்த்தியாகும் வரையில் அவர்கள் நிச்சயமாக ஒதுங்கியிருந்தே வருகிருர்கள். நேச தேசத்தினர் எந்தச் சுதந்திரத்தைப் பாதுகாக்கப் போராடுவதாகச் சொல்லிக்கொள்ளுகிருர்களோ அதே சுதந்திரம் தங்களுக்கு வேண்டும் என்று அவர்கள் கேட்பதற்காக அவர்கள் மீது எப்படிக் குற்றம் சொல்ல முடியும் என்பது எனக்குத் தெரியவில்லை! இந்தியரின் கோரிக்கை ஏற்றுக்கொள்ளப்பட்டாலும், அவர்கள் செய்யக்கூடியதெல்லாம் போருக்குத் தங்கள் தார்மிக ஆதரவை அளிப்பதுதான். ஆளுவோர் இதைச் சட்டை செய்யவில்லை என்று தெரிகிறது; இதனல் தங்களுக்கு அநுகூலம் ஏற்பட்டுவிடாது என்பது அவர்கள் கருத்து. ஒவ்வொரு தரப்பும் தன்னுடைய தளவாட, ஆள்பல வசதியை முக்கியமாகக் கருதி வரும்போது தார்மிக ஆதரவென்பதற்கு மதிப்பேது ? காங்கிரஸின் உதவியைப் பிரிட்டன் விரும்பவில்லை அல்லது அதுபற்றி அலட்சியமாக இருக்கிறது என்று தெரிகிறது.

அப்படியிருக்க, நாஜிஸம் முறியடிக்கப்பட வேண்டும் என்று உள்ளூறக் காங்கிரஸ் கருதினலும் தன்னுடைய உதவியை அது பிரிட்டனிடம் திணிக்க முடியாது. ஆகையால், பிரிட்டன் தோல்வியடைந்தால், அது காங்கிரஸின் சக்திக்குப் புறம்பான காரணங்களினல் ஆனதாக இருக்குமேயன்றிக் காங்கிரஸ் ஒத்துழைக்காததனல் ஏற்பட்டதாகாது.

நாஜிகள் இந்தியாவுக்கு வந்தால், பிரிட்டனுடன் காங்கிரஸ் எந்தவிதமாகப் போராடியதோ அதே மாதிரியே அவர்களுடனும் போராடும். கேள்வி கேட்டிருப்பவர் நினைப்பதைப் போலச் சத்தியாக்கிரகத்தின் சக்தியை நான் குறைத்து மதிப்பிடவில்லை. ஆனல், அதெல்லாம் வெறும் ஊகம். ஏகாதிபத்தியத்தின் பிடிப்பில் இந்தியா 150 ஆண்டுகளுக்கு மேல் இருந்துவருகிறது. இந்த ஏகாதிபத்தியத்தின்மீது இன்னும் அதிக மோசமான ஆட்சி ஒன்று வெற்றி கொள்ளுமாயின் காங்கிரஸ் எதிர்மறையானதோர் திருப்தியையே அடையும். வேறு ஓர் 'இஸம்' இந்தியாவில் புகுந்துவிட்டாலும் சில ஆண்டுகளுக்கு மேல் அது இங்கு நிலைக்க முடியாது என்பதைக் காங்கிரஸ் அறியும். காங்கிரஸின் மனத்தை அறிந்த வகையில் இதைச் சொல்லுகிறேன். என்னைப் பொறுத்தவரையில், கதைகளில் கூறப்படும் மகாபாரத யுத்தத்தில் நடந்ததே இந்த யுத்தத்தின் முடிவிலும் நேரும் என்று ஒரு திருவாங்கூரினர் சரியாகவே விவரித்திருக்கிருர். அந்த இதிகாசத்தில் விவரிக்கப்பட்டிருப்பதே இன்று நம் கண்முன்னல் நடந்து வருகிறது. யுத்தத்தில் ஈடுபட்டிருக்கும் நாட்டினர் மிகுந்த கோபத்தோடும் மூர்க்கத்தோடும் தங்களை நாசப்படுத்திக்கொண்டு போவதால் முடிவில் இரு தரப்பினரும் சளைத்துப் போய்விடுவார்கள். உயிரோடு மிஞ்சிய பாண்டவர்களுக்கு ஏற்பட்ட கதியையே இந்த யுத்தத்தில் வெற்றி பெற்றவர்களும் அடைவர். மிகச் சிறந்த போர் வீரனை அர்ச்சுனனை ஓர் அற்பமான திருடன் பட்டப்பகலில் கொள்ளையடித்துவிட்டான். வஞ்சிக்கப்பட்டு வந்திருக்கும் கோடிக் கணக்கான பாட்டாளிகள் எதை அடைவதற்காக இவ்வளவு காலமும் ஏங்கிக்கொண்டிருந்தனரோ அந்தப் புதிய ஒழுங்கு இப்பேரழிவிலிருந்தே தோன்றவேண்டும். சமாதானத்தை விரும்புவோரின் பிரார்த்தனை வீண் போகாது. சத்தியாக்கிரகமே, வேதனைப்படும் ஆத்மாவின் மௌனப் பிரார்த்தனை என்பதில் சந்தேகம் இல்லை.

சேவா கிராமம், 10—2—1942 —'ஹரிஜன்' - 15—2—1942

# 44

# அமைதியாக இருக்கக் கோரிக்கை

சமீபத்தில் பிரிட்டிஷாருக்கு ஏற்பட்டிருக்கும் தோல்விகளால் நாட்டில் பீதி ஏற்பட்டுவிடக் கூடாது. பிரிட்டிஷார் போராடிய அல்லது அது சம்பந்தப்பட்ட எல்லா யுத்தங்களிலும் சில தோல்விகளும் இருந்திருக்கின்றன; அவற்றில் சில மிக மோசமானவை என்றும் கருதப்பட்டன. ஆனால், அவைகளையும் சமாளித்துக்கொண்டு, அத் தோல்விகளையே வெற்றிக்கு முதற் படிகளாக்கிக்கொண்டுவிடும் சாமர்த்தியம் பிரிட்டிஷாருக்கு உண்டு. இதனாலேயே அவர்கள் தவற்றின் மூலமே வெற்றியைக் காண்கின்றனர் என்பது அவர்களுக்கே உரித்தான ஒரு விசித்திரப் பழமொழி. தோல்விகள் அவர்களைத் திகைக்க வைத்து உறுதி குலைந்துவிடும்படி செய்துவிடுவதில்லை. அவற்றை அமைதியாக விளையாட்டு உணர்ச்சியோடு ஏற்றுக்கொள்ளுகின்றனர். கால் பந்து விளையாட்டைப்போல் போர்கள் அவர்களுக்கு ஒரு தேசீய விளையாட்டு. தோற்றுப்போன ஒரு கோஷ்டி, தனக்கும் அதை ஒரு கூட்டு வெற்றியாகவே நினைத்து வெற்றி பெற்ற கோஷ்டியைப் பாராட்டுகிறது. விஸ்கி பானங்களைப் பரிவர்த்தனை செய்துகொண்டு தோல்வியின் துயரை மறந்துவிடுகின்றனர். பிரிட்டிஷாருடன் ஏற்பட்ட தொடர்பினால் உருப்படியானது எதையும் நாம் அறிந்துகொள்ளவில்லையென்றாலும், துரதிருஷ்டம் சம்பவிக்கும்போது அமைதியாக இருப்பதையாவது அவர்களிடமிருந்து நாம் கற்றுக்கொள்ளுவோம்.

திகிலடைந்துவிடுவதற்குக் கொஞ்சமாவது காரணம் இருக்கிறதா? அகிம்சையில் நம்பிக்கையுள்ளவர்களுக்கு அது நிச்சயமாக இல்லை. அஞ்சுவதோ, தன்னிடமே அவநம்பிக்கை அடைவதோ அவர்களிடம் கிடையாது. கவசமணிந்த சிப்பாய்களுக்கும் இவை கிடையா. ஒரு வேளை அகிம்சைக்கு உரிய தன்மைகள் புத்தகத்தில் கூறும் கோட்பாடுகளாக இருக்கலாம். சரியான அனுபவத்தில் அவற்றை எந்த அளவுக்கும் நாம் பார்ப்பதில்லை. இரு தரப்பும் பலாத்காரத்தில் மூழ்கியிருந்தாலும், பயத்தையோ அவநம்பிக்கையையோ காட்டிக்கொள்வதில்லை என்பதற்கு இந்த யுத்தம் போதிய அத்தாட்சியாகும். இரு தரப்பிலும் காட்டப்படும் எதையும் பொருட்படுத்தாத ஒரு வீரத்தைக் கண்டு நான் திகைப்படைவதோடு மெச்சுகிறேன். நினைக்க முடியாத அளவில் மனிதரிடம் தென்படும்

தீரத்திற்கு இந்த யுத்தம் ஓர் எடுத்துக்காட்டு. ஆகையால், எந்த முறையில் பார்த்தாலும், ஆபத்து நேரிடும்போது பயம், அவநம்பிக்கை, கோழைத்தனம் இவை ஏற்பட்டால் நாம் வெட்கப்பட வேண்டும். ஆகையால், ஒவ்வோர் ஊழியரும் கோழைத்தனத்தால் வரும் தீங்கை எதிர்த்துத் தம்மையே இரும்பாக்கிக்கொள்வதோடு தம்மால் முடிந்தவரை அதைப் பரவவிடாமல் தடுப்பதே அவருடைய புனிதக்கடமையாகும். 'கோழைகள், மரணம் வருவதற்கு முன்னால் பன்முறை செத்து விடுகின்றனர்'. நாமும் அப்படித்தான் என்று நிரூபிக்கப் படாமல் இருக்கட்டும்.

உண்மையான ஆபத்து நகரங்களுக்குத்தான். சிங்கப்பூர் வீழ்ந்துவிட்டதாலும், பர்மாவை இழக்கக்கூடுமென்பதாலும், இந்த ஆபத்து சீக்கிரத்தில் ஏற்படுவதாக இருக்கலாம். இதற்கான சிறந்த எச்சரிக்கை, நகரங்களில் இருக்க வேண் டாதவர்கள் அல்லது ஆபத்திலிருந்து தப்பித்துக்கொள்ள விரும்புகிறவர்கள், அமைதியான முறையில் கிராமங்களுக்குப் போய்விடுவதே. திகிலால் ஏற்படும் பரபரப்பை அடை யக் கூடாது. வர்த்தகத்தை முன்னிட்டோ அல்லது வேறு காரியங்களுக்கோ நகரங்களில் இருக்க வேண்டியவர்கள் அப் போதைக்கப்போது அதிகாரிகள் அறிவிக்கிறபடி நடந்துகொள்ள வேண்டும். எந்தக் காரணத்தை முன்னிட்டாவது அவ்விதம் செய்ய முடியாதவர்கள் முன்னுடியே வெளியே போய்விட வேண்டும். இந்தச் சாதாரண முன்னேற்பாட்டைச் செய்து விட்டால், எதிர்காலத்தைக் கலக்கமின்றி நாம் சமாளித்துக் கொண்டுவிட முடியும். நமக்குள் ஒற்றுமை என்பதே இல்லை; ஆளுவோருக்கும் ஆளப்படுவோருக்குமிடையே உயிர்ப்பிணைப்பும் கிடையாது. ஆகையால், இதைவிட நான் அதிகம் கூறுவதற் கில்லை. இது துக்கரமானது. என்றாலும், உண்மைதானே. எல்லாக் கட்சியினருமே தாம் திக்கற்ற நிலையில் இருப்பதை உணருவதால் இந்தத்துயர் பின்னும் பலமானதாகிறது.

[கல்கத்தாவுக்கு மகாத்மா ரெயிலில் சென்றபோது 17—2—1942-இல் எழுதியது.] —'ஹரிஜன்' - 22—2—1942

## 45

# வெளியேற்றமே விரும்பத் தக்கது

நகரங்களில் இருக்க வேண்டாதவர்களும், அங்கு வசிக்கத் தகுதியில்லாதவர்களும், அங்கு இருக்க விரும்பாதவர்களும் நகரங்களிலிருந்து வெளியேறுவது என்ற எனது யோசனை

சம்பந்தமாக என்னுடைய விரிவான கருத்துக்களைத் தெரிவிக்குமாறு ஒருவர் என்னைக் கேட்கிறார். தம்முடைய விருப்பத்திற்கு மாறாக யாரும் அங்கே தங்க வேண்டிய கடமை எதுவும் இல்லை. குண்டு வீச்சு நடந்தால், போரில் ஈடுபடாத சாதாரண மக்கள் பெருந் தொல்லையாகவே அங்கு ஆகிவிடுகின்றனர் என்பது நன்றாகத் தெரிகிறது. பலமுள்ள ஓர் எதிரியிடமிருந்து வெற்றிகரமாகப் பாதுகாத்துக்கொள்ளுவதற்கு எதிரியைத் திக்குமுக்காடவைப்பது ஒன்றில் மட்டுமே கவனம் இருக்க வேண்டும். பாதுகாத்துக்கொள்பவரின் கவனம் மற்றவைகளில் சிதறிவிடக் கூடாது. ராணுவ நோக்கில் பார்க்கும் நிலைமை இது.

ஆனால், ஜீவகாருண்யத்திற்காகவோ அல்லது ராஜீயக் காரணத்திற்காகவோ யுத்தத்தை எதிர்ப்பவர்களும் இருக்கின்றனர். சங்கடத்தை உண்டாக்க வேண்டும் என்ற நோக்குடன் இவர்கள் தங்கினாலன்றி இவர்கள் நகரங்களில் இருக்க வேண்டியதில்லை. அப்படிப்பட்டவர்கள் யாரும் நம்மில் இல்லை என்று நம்புகிறேன். ஆகையால், மக்கள் நகரங்களுக்கு வெளியிலேயே இருக்க வேண்டும். குண்டு வீச்சு வரும்போது என்ன செய்வதென்று தெரியாதவர்களும் இருக்கிறார்கள். அவர்களும் வெளியேறிவிட வேண்டும். என்னுடைய கருத்துக்கும், என்னுடைய யுத்த எதிர்ப்புக்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லை என்பதை வாசகர் காணலாம். இந்த விஷயத்திற்கு, ஓரளவுக்கு ராணுவ அவசியமும் யுத்த எதிர்ப்பாளரின் கடமையும் ஒரு செயலையே அவசியமாக்குகின்றன.

ஏதாவது ஒரு நகரத்தை - நேற்றுவரையில் யுத்தத்தில் ஈடுபட்டிருந்த எல்லா நகரங்களையும் முழுவதுமாக - என் வழிக்குத் திருப்பிவிட என்னால் முடிந்தால், படையெடுத்து வரும் ராணுவத்தை நான் வரவேற்க வேண்டும். அவர்களையும் என் வழிக்கு மாற்ற முயற்சிசெய்ய வேண்டும் அல்லது தங்களால் இயன்றமட்டும் மோசமாக எதைச் செய்யமுடியுமோ அதையெல்லாம் செய்யும்படி அவர்களை நான் சவாலுக்கு அழைக்க வேண்டும். ஆனால், அத்தகைய நல்ல அதிர்ஷ்டம் எனக்கு இல்லை. நகரங்கள் என் வழிக்கு மாற்றப்பட்டுவிடுமாயின், ஆளுவோர் உட்பட இந்தியா முழுமையும் மாற்றப்பட்டு இந்தியாவில் அமைதி இருக்கும் ; உலகத்திலும் அமைதி நிலவும். ஆனால், அப்படி முடியும் என்பது இன்னும் கொஞ்ச காலத்திற்குப் பகற்கனவாகவே இருக்கும். ஜப்பானியரோ அல்லது நாஜிகளோ ஆங்கிலேயரைப் போன்றவர்கள் அல்ல என்று கூறப்படுவதனால் மாத்திரம் என் நிலையிலிருந்து என்னை

அசைத்துவிட முடியாது. மனிதனுக்கு மனிதன் அடிப்படையான பேதம் இருப்பதாக நான் கொள்ளுவதில்லே. ஆனல், நம் முன்னல் இருந்து வரும் உண்மையான பிரச்னையை விட்டு விட்டு ஊகத்தைப்பற்றிய விஷயத்தில் வாசகரின் கவனத்தை நான் திருப்பி நிற்க வைக்கக்கூடாது.

நகரங்களை விட்டுப் போய்விட வேண்டியவர்கள் எல்லோருமோ அல்லது அவர்களில் ஒரு பகுதியினரோ, நகரங்களிலிருந்து வெளியேறிக் கிராமங்களுக்குப் போய்விட்டார்கள் அல்லது போக இருக்கிருர்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். அவர்கள் செய்ய வேண்டியது என்ன? கிராம மனப்பான்மையோடு சாத்தியமானவரை கிராம வாழ்க்கை வாழ்வதற்கு என்று அவர்கள் அங்கு போக வேண்டும். நகரச் சூழ்நிலேயை அங்கு உண்டாக்கிக்கொள்ளாமல், தாற்காலிகமான மாளிகைகளைக் கட்டிக்கொள்ளாமல் இருக்கலாம். கிராமங்களில் சேவை உணர்ச்சியுடன், அம்மக்களின் பொருளாதார நிலேமையையும் மற்ற நிலேமைகளையும் ஆராய்ந்து, அவர்களுக்குப் பிச்சை அளிப்பதுபோல் அல்லாமல், நிரந்தரமான வேலேயை அவர்களுக்குக் கொடுத்து அவர்களுடைய நிலேமையைச் சீர்படுத்த வேண்டும். வேறு வகையாகச் சொன்னல், கிராமவாசிகளிடையே நிர்மாண வேலேத் திட்டத்தை நிறைவேற்றி வைக்கவேண்டும். இவ்விதம் கிராமவாசிகளுடன் தங்களையும் ஒன்ருக்கிக்கொள்ளுவதோடு பொருளாதார, சமூக, சுகாதார, ராஜீயப் புனருத்தாரணத்திற்கு ஒழுங்கான வேலேத் திட்டத்துடன் ஒருவகைக் கூட்டுறவுக் கழகமாகிவிட வேண்டும்.

புதிதாக வந்தவர்கள் சமாளிக்க வேண்டியிருக்கும் பெரிய பிரச்னை, திருட்டு, கொள்ளைகளைப்பற்றியதே. இதனல் அவர்கள்தம் முழுச் சக்தியையும் உபயோகிக்க வேண்டியதாக இருக்கும். இதற்கு அகிம்சையான வழி இருக்கிறது. இது அவர்களுக்குத் தெளிவாகவில்லேயென்ருல், கிராமவாசிகளுடன் ஒத்துழைத்து, திருடர்கள், கொள்ளைக்காரர் இவர்களை எதிர்ப்பதற்கு ஆயுதப் பாதுகாப்புக்கு ஏற்பாடு செய்துகொள்ள வேண்டும். குற்றப் பரம்பரையினர் என்று சொல்லப்படுகிறவர்களைத் திருத்துவது உட்பட, இப்படிப்பட்ட சிறு காரியத்திற்குக் கூட,அரசாங்கத்தை நாம் நீண்டகாலமாக எதிர்பார்த்து வந்திருக்கிறேம். அரசாங்கம் ஏதாவது செய்ய முடியும் என்ருலும், இந்த நெருக்கடியான சமயத்தில் அதனல் அதிகமாக எதுவும் செய்ய இயலாது. பலாத்காரத்தைக் கொண்டோ அல்லது அகிம்சையினலோ அல்லது இரண்டினலுமோ இந்த வேலேயை, வெளி

யேறிப் போய்க் கிராமங்களில் குடியேறுகிறவர்கள்தாம் செய்து கொள்ள வேண்டும்.

சேவா கிராமம், 10—3—1942 —'ஹரிஜன்' - 15—3—1942

# 46

# வெளியேற்றம்

**கேள்வி** : உத்தியோக நிமித்தமாகவோ அல்லது மற்றக் காரணங்களுக்கோ நகரங்களில் இருக்க வேண்டாதவர்கள் நகரங்களிலிருந்து வெளியேறிப் போய்விட வேண்டும் என்று நீங்கள் யோசனை கூறியிருக்கிறீர்கள். ஆனால், வெளியில் போய்த் தங்குவதற்கு வீடு வாசல் இல்லாதவர்களும், போகும் இடங் களில் வரவேற்கப்படாதவர்களுமான எளிய மக்கள் என்ன செய்வது ?

**பதில்** : இதில் உண்மையிலேயே கஷ்டம் உண்டு. அவர்கள் எந்த மாகாணத்தைச் சேர்ந்தவர்களோ அந்த மாகாணத்தினர் அவர்களுக்கு வசதி செய்து கொடுக்க வேண்டும். நாம் ஒரே தேசீய இனத்தினராயின், எத்தகைய நிலைமைக்கும் சரிக்கட்டிக் கொண்டு போவதில் நமக்குக் கஷ்டமே இராது. நாம் புதிதான தோர் சமூக ஒழுங்கை அமைத்தாக வேண்டுமாயின் இப்பொழு திலிருந்தே அந்த வேலையில் நாம் ஈடுபடலாம். அகிம்சை முறை யிலிருந்துதான் நான் பேச முடியுமேயன்றி வேறு வகையில் பேசுவதற்கில்லை. இவ்வழியில் தேச மக்களின் மனம் வேலை செய்துகொண்டிருக்குமாயின், அறிந்தோ அறியாமலோ தனிப் பட்டவர்களும் சமூகத்தினரும், நீங்கள் கூறுவதைப் போன்ற எல்லோரையுமே, தம்மிடையே ஒருவிதத் தயக்கமுமின்றி ஏற்றுக் கொண்டுவிடுவார்கள். இத்தகைய காரியம் நடந்துகொண்டு வருகிறது என்பதை அறிவேன். ஆனால், எல்லோர் மனத்திலும் ஊன்றும் அளவுக்கு இது பெரிதாக நடக்கவில்லை. உழைத் துப் பிழைக்கவல்ல யாரும் பிறர் அளிக்கும் தருமத்தை நம்பி வாழ்வதை நாம் தடுக்க வேண்டும். போதிய உணவு கிடைக்கும் வகையில் அவருக்கு வேலை கொடுக்க வேண்டும். இவ்வாறு மக்கள் இடம் பெயர்வது, புத்திசாலித்தனமாகச் செய்யப்படுமாயின், ஓசைப்படாமலே கிராமங்கள் மறு அமைப்பை அடையும்.

சேவா கிராமம், 26—4—1942 —'ஹரிஜன்' - 3—5—1942

**கேள்வி** : வெடிகுண்டு வீச்சுக்கு ஆளாகக்கூடிய நகரங்களி லிருந்து வெளியேறிக் கிராமங்களில் குடியேறுமாறு நீங்கள் யோசனை கூறுகிறீர்கள். கிராமங்கள் பத்திரமாக இருக்கின்றன

என்று நினைக்கிறீர்களா? உண்மையில் நகர மக்களைவிடக் கிராம வாசிகளே அதிக திகில் அடைந்து போயிருக்கிறார்கள். அங்கே போதுமான போலீஸ் பாதுகாப்பு இல்லை. இதனால் கிராம வாசிகள் ஒவ்வொரு நிமிடமும் திருடர், கொள்ளைக்காரர் இவர்கள் காரணமாகப் பீதி அடைந்திருக்கிறார்கள். ஆகையால், சட்டியி லிருந்து அடுப்பில் குதித்ததாகவே இது ஆகுமல்லவா?

**பதில்:** கிராமங்களில் கிடைக்கும் சுகமான வாழ்க்கைக்காகக் கிராமங்களுக்குப் போய்விடுமாறு நான் கூறவில்லை. பீதிக்கு உள்ளாவது என் திட்டத்தில் சேர்ந்தது அன்று. இப்போது தெளிவாக்கியபடி ராணுவ நோக்குடன் கவனித்தாலும் அது நல்லதே. இப்பொழுதும் நல்லதாகவே இருக்கிறது. கிராமங் களுக்குப் போவதனால்தான் நீங்கள் குறிப்பிடும் ஆபத்துக்களெல் லாம் தோன்றுகின்றன. ஆனால், கிராமங்களுக்குப் போய்விட வேண்டும் என்பதற்கு இது மற்றொரு காரணமாக எனக்குத் தோன்றுகிறது. அனுபவமுள்ளவர்களும் ஏற்றவர்களுமான நகர மக்கள் செய்யவில்லையென்றால், கிராமத்தினருக்குத் தைரியத்தை உண்டாக்கி அவர்களுடைய பீதியை யார்தான் போக்குவது? கிராமங்களுக்குப் போகும் வயதானவர்களுக்கும் வலிவற்றவர் களுக்கும் அவர்கள் பாதுகாப்பு அளிப்பதோடு இப்பத்திரிகை யில் நான் குறிப்பிட்டிருப்பதைப் போன்று கிராமவாசிகளுக் குப் பல வழிகளிலும் உதவி செய்யலாம். உண்மையான ஒவ்வொரு செயலுக்கும் இச்சமயத்தில் வேண்டுவது தைரியமே.

சேவா கிராமம், 4—5—1942 —'ஹரிஜன்' - 10—5—1942

# 47

# 'பொசுக்கல் முறை'-1

ருஷியா அனுசரித்துவரும் பொசுக்கல் முறை* மனித வர்க் கம் நடுக்குறும்படி செய்திருக்கிறது. ஆனால், எதிரியை மடக்குவதற்கு எந்தக் கஷ்டமும் பெரிதல்ல என்ற வகையில் காட்டப்பட்டு வரும் வியக்கத்தக்க தியாகத்தையும் வீரத்தையும்

* படையெடுத்து முன்னேறி வரும் எதிரியின் கைக்குப் பயனுள்ளதான எப்பொரு ளும் சாதனமும் கிடைக்காத வகையில், ஒரு பகுதியிலிருந்து வெளியேறுவதற்கு முன் னால் இவைகளையெல்லாம் அடியோடு அழித்துவிட்டுப் போய்விடும் முறைக்கே 'பொசுக்கல் முறை' என்று இரண்டாவது உலக யுத்த காலத்தில் பெயர் வழங்கியது. ருஷியாவுக்குள் முன்னேறி வந்த ஜெர்மன் படையினர் விஷயத்தில் இம்முறையை முதன் முதலில் ருஷியர் கையாண்டனர். பிறகு போரில் ஈடுபட்ட எல்லா நாடுகளுமே இம்முறையை அனுசரித்து வந்தன.

பாராட்டுவதைத் தவிர மனித வர்க்கம் வேறு எதையும் செய்யச் சக்தியற்றதாக இருக்கிறது. பாராட்டுகிறவர்கள் கொள்ளும் வியப்பில் நானும் பங்கு கொள்ளுகிறேன். ஆனல், அவர்களைப் போன்று நான் பாராட்டவில்லை.

எதைப் போற்றுகிருேமோ அதைப்போல நாமும் செய்ய விரும்புகிருேம். அத்தகைய சமயம் நம் முன்பு தோன்றும் போது, எதிரியின் முன்னேற்றம் தடைப்படும் என்பதற்காக இந்தியாவின் வளம் எல்லாம் சுட்டெரித்து நாசப்படுத்தப் படுவதை நாம் மனச்சஞ்சலமின்றி நினைத்துப் பார்க்கவும் இயலுமா ? அல்லது அதிலுள்ள தியாகம், வீரம் இவற்றின் மேன்மையைத்தான் நாம் உணரமுடியுமா ?

யுத்தத்தை எதிர்ப்பவன் என்ற வகையில் நான் இதற்கு தரும் விடை ஒன்றுதான் இருக்க முடியும். தாக்கவோ அல்லது பாதுகாக்கவோ உயிரை அல்லது சொத்துக்களை நாசப்படுத்துவதில் வீரமோ தியாகமோ இருப்பதாக நான் காணவில்லை. நான் ஏதாவது செய்ய நேர்ந்தால், என் விளைச்சல் நிலமும் வீடுவாசலும் எதிரிக்குப் பயன்பட்டுவிடாத படி தடுக்க வேண்டும் என்பதற்காக அவற்றை அழித்துவிடுவதற்கு மாருக அவற்றை எதிரி பயன்படுத்திக்கொள்ளட்டும் என்று விட்டுவிட்டு வந்துவிடுவேன். என் வீட்டையும் பயிர்களையும் நான் விட்டுவிட்டுப் போவது பயந்துகொண்டு செய்வதாக இல்லாமல், நான் எவரையும் எதிரியாகக் கருத மறுப்பதனுலேயே என்ருல், அதாவது, ஜீவதயை நோக்கத்தின் பேரிலேயே நான் அவ்விதம் செய்வதாயின், இதில் நியாயமும், தியாகமும், வீரமுங்கூட இருக்கின்றன.

ஆனல், இந்தியாவின் விஷயத்தில் காரியார்த்தமாகக் கவனிக்க வேண்டியதும் ஒன்று இருக்கிறது. ருஷியர்கள் தேசீய உணர்ச்சியை வளர்த்துக்கொண்டிருக்கும் வகையில் இந்தியரிடம் தேசீய உணர்ச்சி இல்லை. இந்தியா இப்போரில் ஈடுபட்டிருக்கவில்லை. ஆனல், இந்நாட்டை வென்று ஆள்பவர்கள் போரில் இறங்கி இருக்கின்றனர். வென்று ஆளும் இவர்களை விரட்டிவிட்டு ஜப்பான் வந்துவிடுகிறது என்று வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது வாய் செத்திருக்கும் பொதுமக்கள் அந்த மாறுதலை அப்போதைக்கோ அல்லது அதிக காலத்திற்கோ கவனிக்காமல் இருக்கலாம். படித்தவர்களிடையே யுத்த விளைவுபற்றி மாறுபட்ட அபிப்பிராயங்கள் இருந்து வருகின்றன. நோக்கம் என்ன என்பது இதற்குப் பொருத்தமில்லாதது. இந்தியாவின்

சிப்பாய்கள் எந்த வகையிலும் தேசீய ராணுவத்தினரல்ல. ராணுவம் அவர்கள் தொழிலாகையால், அவர்கள் சிப்பாய் களாக இருக்கின்றனர். போராடுவதற்கு அவர்களுக்குச் சம் பளம் கொடுத்தால் ஜப்பானியருக்காகவும் அல்லது வேறு எவருக்காகவும் போராடுவார்கள். இந்த நிலைமையில் பொசுக்கி விட்டுப் போவது என்ற கொள்கை முற்றிலும் அங்கீகரிக்க முடியாத காரியமாகும்.

ஆகையால், பொசுக்கல் கொள்கைக்கு எதிராக இந்திய அபிப்பிராயம் வெளியிடப்பட்டு வருவது திருப்திக்குரிய விஷய மாகும். ராணுவத்தின் தேவையைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. ஆனால், ஒரு நாடு ஒப்புக்கொண்டிருக்கும் தேசீய அல்லது ஜீவதயையான நோக்கத்தை ராணுவத்தேவை மீறி விடும்படி அனுமதிக்க விட்டுவிடக்கூடாது. இவ்விதம் ராணுவம் பலமுள்ள மக்கள் அதிகாரத்தின் காரணமாக இருக்க வேண்டுமே யன்றி அதற்கு மீறியதாக இருக்கவே கூடாது. சமயம் நேர்ந்தால், இந்தியாவின் விசேட நிலைமையை உத்தேசித்துப் பொசுக்கல் கொள்கை இந்தியாவில் அனுசரிக்கப்பட மாட்டாது என்று இந்திய அரசாங்கம் ஐயம் திரிபறக் கூறிவிடுமானல் கவலை நீங்குவதோடு நிலைமையிலும் அமைதி ஏற்படும்.

சேவா கிராமம், 16—3—1942 —'ஹரிஜன்' – 22—3—1942

# 48

# 'பொசுக்கல் முறை' - 2

'பொசுக்கல் முறை' பற்றி 'ஹரிஜன்' - பத்திரிகையில் நான் எழுதியிருந்த கட்டுரையைக் குறித்து ஒருவர் வருமாறு எழுது கிறார் :

'ஹரிஜன்' மார்ச் 22-ஆம் தேதித் தாளில் 'பொசுக்கல் முறை' என்ற தலைப்பில் நீங்கள் எழுதியிருக்கும் கட்டுரையில் வருமாறு கூறியிருக்கிறீர்கள் :

'யுத்தத்தை எதிர்ப்பவன் என்ற வகையில் இதற்கு என் விடை ஒன்று தான் இருக்கமுடியும். தாக்குவதற்கோ அல்லது பாதுகாப்புக்கோ உயிரை அல் லது சொத்துக்களை நாசப்படுத்துவதில் வீரமோ, தியாகமோ இருப்பதாக நான் காணவில்லை. நான் ஏதாவது செய்ய நேர்ந்தால், என் பயிர்களும் வீடும் எதிரிக்குப் பயன்பட்டு விடுவதைத் தடுக்கவேண்டும் என்பதற்காக அவற்றை அழிப்பதற்குப் பதிலாக அவற்றை எதிரி பயன்படுத்திக்கொள்ளட்டும் என்று விட்டுவிட்டு வந்துவிடுவேன். என் வீட்டையும் பயிர்களையும் நான் விட்டுவிட்டு வந்துவிடுவது எதிரிக்குப் பயந்துகொண்டு செய்வதாக இல்லாமல், நான் எவரையுமே எதிரியாகக் கருத மறுப்பதனாலேயே என்றால், அதாவது ஜீவதயை நோக்கத்தின் பேரிலேயே நான் அவ்விதம் செய்வதாயின், அதில் நியாயமும் தியாகமும் வீரமுங்கூட இருக்கின்றன.'

முதலாவதாக, ருஷியாவின் எதிர்ப்பில் இருந்துவரும் பலாத்காரத்தை நான் அங்கீகரிக்கவில்லையாயினும், படையெடுத்து வருவோரை எதிர்க்க அவர்கள் அனுசரித்து வரும் பொசுக்கல் கொள்கையில் மிகுந்த வீரமும் தியாகமும் இருக்கின்றன என்பதே என் கருத்து. ஆகையால், பாதுகாப்புக்காகச் சொத்துக்களை அழிப்பதில் வீரமோ அல்லது தியாகமோ கிடையாது என்று நீங்கள் கூறுவதை என்னுல் புரிந்துகொள்ள முடியவில்லை. இரண்டாவதாக படையெடுத்து வருவோரை எதிர்க்குமாறு மக்களுக்கு நீங்கள் கூறினுலும், பயத்தினுல் இல்லாமல் ஜீவதயை நோக்கத்தோடு மக்கள் தங்கள் பயிர்களையும் வீடு வாசல்களையும் உபயோகித்துக்கொள்ள எதிரிக்கு விட்டுவிட்டு வரவேண்டும் என்கிறீர்கள். தீமையைத் தடுத்தாகவேண்டும் என்ற உங்கள் போதனைக்கு இது எவ்விதம் பொருத்தமானதாகும் என்பதும் எனக்கு விளங்கவில்லை. எதிரிக்குப் பயன்படுவதாக இருக்கும் எதுவும்-பயிர்கள், வீடு வாசல். இவைபோன்றவை – எதிரியின் கையில் சிக்காதபடி செய்ய உயிரையே தியாகம் செய்வது படையெடுத்து வருவோரை அகிம்சையோடு எதிர்ப்பவரின் கடமையாகிறது என நான் நினைக்கிறேன். படையெடுத்து வருவோரை அகிம்சையினுல் எதிர்ப்பது எப்படி என்பதை மக்கள் தெரிந்துகொள்வது மிக அவசியமானதால் இவ்விஷயத்தைக் குறித்து விளக்கமாகக் கூறுமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

இதன் பொருள் நிச்சயமாகத் தெளிவானதே. என்னேடு சண்டையிடும் என் சகோதரன், நீரை உபயோகித்துக்கொண்டு விடக்கூடாது என்பதற்காக நான் கிணற்றில் விஷத்தைக் கலப்பதிலோ அல்லது கிணற்றைத் தூர்த்துவிடுவதிலோ வீரம் எதுவும் இல்லை. சம்பிரதாய முறையிலேயே அவனுடன் போராடி வருகிறேம் என்று வைத்துக்கொள்ளுவோம். தியாகம் என்றுல், அதன் மூல அர்த்தம் உணர்த்துவதைப் போன்று, புனிதத் தன்மையையே குறிப்பிட வேண்டும். ஆனுல், அச்செய்கை என்னைப் புனிதப்படுத்தாததால் அது தியாகமாகாது. தம் முகத்தின்மீது கோபங்கொண்டு ஒருவர் தம் மூக்கை அறுத்துவிடுவதைப் போன்றதே அத்தகைய நாசம். பழங்காலப் போர் வீரர்களுக்குச் சிறந்த யுத்த தருமங்களும் இருந்தன. கிணறுகளில் விஷமிடுவதும், உணவுப் பயிர்களை அழிப்பதும் செய்யத் தகாத காரியங்கள். என்னுடைய கிணறுகளையும் பயிர்களையும் வீடு வாசல்களையும் அப்படியே விட்டுவிட்டு வந்துவிடுவதில் வீரமும் தியாகமும் இருக்கின்றன என்றே நான் கூறுவேன். நான் விட்டுவரும் பொருள்களைத் தின்றுகொண்டு எதிரி என்னைத் துரத்தக்கூடும் அபாயத்தை வேண்டுமென்றே நான் வருவித்துக்கொள்ளுவதில் வீரம் இருக்கிறது. எதிரிக்கு ஏதாவது வைத்துவிட்டு வரும் உணர்ச்சி, என்னைப் புனிதப்படுத்திக் கண்ணியமுக்குகிறதாகையால், அதில் தியாகம் இருக்கிறது.

"நான் செய்ய நேர்ந்தால்" என்று நிபந்தனை போட்டு நான் தெரிவித்திருப்பதைக் கவனிக்க இக்கேள்வி கேட்டவர் தவறிவிட்டார். இப்பொழுது நான் சாகத் தயாராக இல்லை. பின்னர்ச் சரியான சந்தர்ப்பம் வரும்போது எதிர்த்து நிற்கலாம் என்ற நம்பிக்கையில், அமைதியான முறையில் பின்வாங்குவது என்ற ஒரு நிலையை ஊகித்தே இவ்வாறு சொன்னேன். இங்குக் கவனிக்க வேண்டியது உணவுப் பயிர்கள் போன்றவைகளை அழிக்காமலிருப்பதேயன்றி எதிர்த்து நிற்பதன்று. எதிர்ப்பு, பலாத்கார மூலமாயினும், அகிம்சை மூலமாக என்றாலும், அதைக் குறித்துத் தீரச் சிந்தித்து ஏற்பாடு செய்ய வேண்டும். முன் யோசனையில்லாத எதிர்ப்பு, ராணுவ பாஷையில், வீம்புக்கான வீரம் என்று கருதப்படும்; அகிம்சையின் பாஷையில் அது பலாத்காரம் அல்லது மதியீனமாகும். பின்வாங்குவது தடுப்புக்கு ஒரு திட்டமாகும்; பின்னர்ப் பெரு வீரமும் தியாகமும் வரப் போவதை முன்னால் அறிவிப்பதாகவும் அது இருக்கலாம். பின் வாங்குவது எல்லாமே சாவதற்கு அஞ்சுவதைக் காட்டும் கோழைத்தனம் ஆகிவிடாது. ஆக்கிரமிப்பவர், உடைமைகளைப் பற்றாமல் இருப்பதற்கு அவரை விரட்டப் பலாத்காரத்தினாலோ அல்லது அகிம்சையினாலோ முயலும் வீரர் அநேகமாக இறந்து போவதுண்டு. ஆனால், அச்சமயம் பின்வாங்க அவருடைய விவேகம் வற்புறுத்தினால் அவர் வீரத்தில் குறைந்தவராகிவிடமாட்டார்.

சேவா கிராமம், 7—4—1942 —'ஹரிஜன்' - 12—4—1942

# 49

# அகிம்சையைப் பலவீனமாக்குவது?

**கேள்வி**: காங்கிரஸ் தொண்டர்களை ஒழுங்குபடுத்துவது சம்பந்தமாகக் காங்கிரஸ் காரியக் கமிட்டி வெளியிட்டிருக்கும் யோசனைகளில், அந்த ஸ்தாபனம் 'கண்டிப்பான அகிம்சை அடிப்படை'யைக் கொண்டதாக இருக்க வேண்டும் என்று தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆனால், இதற்காகச் சில காங்கிரஸ் கமிட்டிகள் தயாரித்திருக்கும் பிரதிக்ஞைப் பத்திரங்களில், தொண்டர்கள் அவ்வேலையில் இருக்கும்போது மாத்திரம் அகிம்சையை அனுசரிக்க வேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது. கர்நாடக மாகாணக் காங்கிரஸ் கமிட்டி இந்த முறையில் பிரதிக்ஞைப் பத்திரங்களைத் தயாரித்திருக்கிறது. இந்தக் கமிட்டி நியமித்திருக்கும் தொண்டர்களின் பிரதம நிர்வாகி, தொண்டர்களைத் திரட்டுவதற்கு என்று நடந்த ஒரு பொதுக்கூட்டத்தில் பேசுகையில், கடமையை நிறைவேற்றும்

பணியில் இருக்கும் ஒரு தொண்டர், அவசர நிலைமை ஏற்படும் போது, பலாத்காரத்தை மேற்கொண்டு தம்முடைய சொந்த உரிமையைப் பாதுகாத்துக்கொள்ளலாம் என்றும், அவர் செய்யும் அத்தகைய காரியம் காரியக் கமிட்டியின் கட்டளையை மீறியதாகாது என்றும் கூறினர். இவையெல்லாம் குழப்பத்தையே உண்டாக்கி வருகின்றன. காரியக் கமிட்டியின் கட்டளையைக் கண்டிப்பாக நிறைவேற்றி வைக்கப் போவதில்லையென்றால், தனிப்பட்டவர்களின் கருத்துக்கு ஏற்றபடியெல்லாம் அகிம்சையின் தன்மையைக் குறைத்துவிடுவதைவிட அகிம்சை நிபந்தனையைக் கைவிட்டுவிடுவதே மேல். இதில் உங்கள் கருத்து என்ன ?

**பதில் :** இக்கேள்வியைப் போன்ற விஷயங்களில் விடை கூறுவதற்குக் காங்கிரஸின் அனுமதி தேவை. ஆகையால், என் விடைகளை அதிகார பூர்வமானவையாகக் கொண்டுவிடக் கூடாது. என் சொந்த அபிப்பிராயம் தீர்மானமானது. காங்கிரஸாலோ அல்லது காங்கிரஸின் பெயராலோ துவக்கப்படும் எந்தப் படையும் தற்பாதுகாப்புக்குப் பலாத்காரத்தை உபயோகிக்கும் என்பதற்கே இடமில்லை. காங்கிரஸின் அகிம்சை அமைப்பு முழுவதுமே தகர்ந்துவிடும் ஆபத்து இருப்பதால் இந்த விதியை அனுசரிப்பதில் சிறிதும் வழி இருப்பதற்கில்லை. தனிப்பட்ட காங்கிரஸ்காரரின் சொந்த வாழ்க்கையைக் காங்கிரஸ் கட்டுப்படுத்துவதில்லை. கட்டுப்படுத்த முடியாது என்பதனால், சொந்தத் தற்காப்புக்குப் பலாத்காரத்தை உபயோகிப்பதைக் காங்கிரஸ் அனுமதிப்பதாகத் தெரிகிறது. தனிப்பட்டவர்கள் தங்கள் சொந்த வாழ்க்கையில் காங்கிரஸ் விதிகளுக்குக் கட்டுப்பட்டவர்கள் அல்ல. தமக்கான ஒரு நீதி முறை ஏதாவது இருக்குமானல் அதன்படியே அவர்கள் நடப்பார்கள்.

**கேள்வி :** அகிம்சையில் முழு நம்பிக்கையுள்ள காங்கிரஸ்காரர்கள் சிலர் இருக்கிறார்கள். அவர்கள் தொகை குறைவே. அந்த அடிப்படையில் ஒன்றுபட அவர்கள் விரும்புகிறார்கள். அத்தகையவர்களைக் காங்கிரஸ் கமிட்டிகள் ஒன்று சேர்க்கக் கூடாதா ? இல்லாவிட்டால், காங்கிரஸின் ஆதரவில் தங்கள் படையை அமைத்துக்கொள்ளக் காங்கிரஸ் கமிட்டிகள் அவர்களை அனுமதிக்கக்கூடாதா ?

**பதில் :** காங்கிரஸ் கமிட்டிகள் பிரிவுகளை அமைக்க முடியாது. காங்கிரஸுக்கு ஒரே கொள்கைதான் இருக்கமுடியும்.

இன்று உள்நாட்டுக் காரியங்கள் சம்பந்தப்பட்டவரையில் சுத்தமான அகிம்சையே அதன் கொள்கை. ஆகையால், தனியான சமாதானக் கமிட்டிகளுக்கு நியாயமிருப்பதாக நான் காணவில்லை. பரிசுத்தமான மனப்போக்குடையோர் அடக்கத்துடன் இருப்பார்களாயின், தாங்கள் எண்ணுவதே சரியானது என்றும் இருக்கவில்லையாயின், ஜனநாயக ஸ்தாபனங்களில் காண்பது போன்று கொள்கையில் பூரணமான நம்பிக்கையில்லாத ஆண்களும் பெண்களும் நிறைந்த ஸ்தாபனங்களில் உணர்வூட்டுபவர்களாக இவர்கள் இருக்கலாம்.

**கேள்வி:** காங்கிரஸ் தலைவர்களிடையே திகைக்க வைக்கும் வகையில் அபிப்பிராய பேதம் இருந்து வருகிறது. சர்தார் ஒரு தொனியில் பேசுகிறார்; ராஜாஜி வேறு வகையில் பேசுகிறார்; மௌலானா இன்னொரு விதமாகப் பேசுகிறார்; ஜவாஹர்லால்ஜியோ வேறு ஒரு விதமாகப் பேசுகிறார். சாதாரணமானவர்களைப்பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை. இவர்களில் யாரைப் பின்பற்றுவது? காங்கிரஸின் கொள்கைக்கும் தீர்மானங்களுக்கும் விளக்கம் கூற முழு அதிகாரமும் பெற்றவர் என்று இவர்களில் யாரைக் கருதுவது?

**பதில்:** சட்டப்படியும் விதிகளின்படியும் காங்கிரஸ் தலைவரே முழு அதிகாரத்தையும் பெற்றவர். ஆரம்பக்கட்டத்தில் ஒரு சமயம் ஏற்பட்டதைப் போன்று, தலைவருக்கும் காரியக் கமிட்டி உறுப்பினரில் பெரும்பான்மையினருக்குமிடையே கருத்து வேற்றுமை ஏற்படுமானால், தலைவரின் அபிப்பிராயத்தை மீறியதாகிவிடும் பெரும்பான்மையினரின் கருத்து. ஆனால், நெருக்கடியான சமயங்களில் சட்டயோசனைக்கு அதிக மதிப்புக் கிடையாது. மக்கள் தாம் விரும்பும் வீரர்களையே கண்மூடித்தனமாகக்கூடப் பின்பற்றுவார்கள். ஆகையால், நான் கூறும் யோசனை என்னவெனில், அகிம்சையைப்பற்றிய சிக்கலான விஷயத்தில், சட்டப்படியல்லாமல் அதன் விளக்கத்தின் பேரில் ஒவ்வொருவரும் தம் தம் அதிகாரத்துக்கே இணங்க வேண்டும் என்பதே. நீங்கள் குறிப்பிட்டிருக்கும் நான்கு பிரபலமான தலைவர்களும் ஒன்றுகக் கூடியிருக்கும்போது, ஒரே விளக்கத்தை அவர்கள் கூறக்கூடும். ஆனல், அவர்கள் பிரசங்கங்களில் அதே விஷயத்தில் ஒவ்வொருவரும் ஒவ்வோர் அம்சத்தை அதிகமாக வலியுறுத்திப் பேசக்கூடும்.

[26—3—1942-இல் டில்லிக்குப் போகும்
வழியில் எழுதியது]

—'ஹரிஜன்' - 5—4—1942

**கேள்வி :** ஒரு தருமமாக இல்லாமல் ஓர் உபாயமாகக் காங்கிரஸுக்குள் அகிம்சை வருவதற்கு நீங்கள் அனுமதித்திருப்பதால் நெருக்கடியான சமயத்தில் அது தகர்ந்துவிடுவதற்கு ஏதுவாகிவிடாதா என்று பல ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு முறை உங்களைக் கேட்கும் துணிவு எனக்கு ஏற்பட்டது. அப்படி நினைக்கவில்லை என்று நீங்கள் சொன்னீர்கள். ஆனால், இப்பொழுதும் அப்படி நினைக்கிறீர்களா ? அகிம்சையில் நம்பிக்கையுள்ளவர்களின் ஒழுங்கான படை ஒன்றை வைத்திருந்து, அவர்களைக் கோஷ்டிகளாக உலகமெங்கும் நீங்கள் அனுப்பியிருக்கக் கூடாதா ? காலத்தை வீணாக்கிப் பொறுப்பை ஏற்றுக் கொள்ள நாம் தயாராக இல்லாததாகவே இது தோன்றுகிறது.

**பதில் :** ஆம். காங்கிரஸுக்கு அகிம்சையை ஓர் உபாயமாகக் காட்டியதில் நான் சரியானதையே செய்தேன் என்ற என் கருத்தை இன்றும் கொள்ளுகிறேன். ராஜீயத்தில் அதைப் புகுத்துவதாயின் நான் வேறுவிதமாக எதுவும் செய்திருக்க முடியாது. தென்னாப்பிரிக்காவிலுங்கூட அதை ஓர் உபாயமாகவே கொண்டு வந்தேன். எதிர்ப்பாளர்கள் சிறு தொகையினராக அடக்கமான ஒரு பகுதிக்குள் இருந்ததால் எளிதில் நிர்வகிக்க முடிந்தது ; அங்கு அது வெற்றியையும் காண முடிந்தது. இங்கோ ஒரு பெரிய நாட்டில் எண்ணற்றவர்கள் சிதறிக்கிடக்கின்றனர். இதன் பலன் என்னவெனில், எளிதாக நிர்வகிக்கவோ அல்லது பயிற்சியளிக்கவோ முடியவில்லை. என்றாலும், அவர்கள் உடன்பட்டு வந்திருப்பது அற்புதமானதாகும். அவர்கள் இன்னும் நன்றாக உடன்பட்டு நல்ல பலனையும் காட்டியிருக்க வேண்டும். ஆனால், அடைந்திருக்கும் பலனைப் பொறுத்தவரையில் அது எனக்கு ஏமாற்றம் தரவில்லை. அகிம்சையைத் தருமமாகக் கொண்டவர்களைக்கொண்டு நான் ஆரம்பித்திருந்தால்,என் மட்டில் என்பதில்தான் போய் முடிந்திருக்கும். நான் குறைபாடுகளும் உள்ளவன் என்ற வகையில் குறைபாடுகளுள்ள ஆண்களுடனும் பெண்களுடனும் புறப்பட்டுத் திக்குத் தெரியாத கடலில் யாத்திரை செய்து வந்தேன். கப்பல், அது அடைய வேண்டிய இடத்தை அடைந்துவிடவில்லையென்றாலும், புயலை அது தாங்கிக்கொள்ளும் என்று ஓரளவு நிரூபிக்கப்பட்டிருப்பதற்காகக் கடவுளுக்கு என் நன்றி.

சேவா கிராமம், 7—4—1942 —‘ ஹரிஜன்’ - 12—4—1942

# 50

# அகிம்சையான தடுப்பு

ஜப்பான் நம் தலைவாசல் கதவைத் தட்டிக்கொண்டிருக்கிறது. அகிம்சை வழியில் நாம் செய்யவேண்டியது என்ன? நாம் சுதந்திர நாட்டு மக்களாக இருந்தால், ஜப்பான் நம் நாட்டுக்குள் புகாமல் தடுப்பதற்கு அகிம்சையோடு காரியங்களைச் செய்ய முடியும். அவர்கள் இந்நாட்டில் இறங்கிய சமயமே அகிம்சையோடு கூடிய எதிர்ப்பு ஆரம்பமாகும். இவ்விதம் அகிம்சையோடு எதிர்ப்பவர்கள், அவர்களுக்கு எந்த உதவியையும் செய்யவும், தண்ணீர்கூடக் கொடுக்கவும் மறுத்துவிடுவார்கள். ஏனெனில், தங்கள் நாட்டைக் கவர வரும் யாருக்கும் உதவுவது அவர்களுடைய கடமையைச் சேர்ந்தது அன்று. ஆனால், ஒரு ஜப்பானியர் வழி தவறிப் போய்த் தாகத்தால் செத்துக்கொண்டிருப்பாராயின், ஒரு மனிதன் என்ற வகையில் உதவியைக் கோருவாரானல், யாரையுமே தமக்கு எதிரியாக எண்ணாத அகிம்சையோடு கூடிய ஓர் எதிர்ப்பாளர், தாகத்தால் தவிப்பவருக்கு நீர் அளிப்பார். தங்களுக்கு நீர் கொடுக்கும்படி இந்த எதிர்ப்பாளரை ஜப்பானியர் கட்டாயப்படுத்துகிறார்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். இதை எதிர்க்கும் செயலில் எதிர்ப்பாளர்கள் சாகவேண்டும். எதிர்ப்பாளர்கள் எல்லோரையுமே அவர்கள் அழித்துவிடுவார்கள் என்பதும் எண்ணக்கூடியதே. அகிம்சையோடு கூடிய எதிர்ப்பாளரைக் கொல்லும் ஆக்கிரமிப்பாளர், வரவர மனத்தாலும் உடலாலும் சோர்ந்துபோய் வெறுப்புக்கொண்டுவிடுவார் என்பதே இத்தகைய அகிம்சையோடு கூடிய எதிர்ப்பின் உள் நம்பிக்கையாகும். துன்பம் விளைவிக்க முற்படாமல் ஒத்துழைக்க மறுக்கும் (தமக்குப்) புதியதான இந்தச் சக்தி என்ன என்பதை ஆக்கிரமிப்பாளர் ஆராயத் தொடங்குவார். மேற்கொண்டு படுகொலை செய்யாமலும் இருந்துவிடக்கூடும். ஆனால், ஜப்பானியர் சிறிதும் இரக்கமில்லாதவர்கள், எவ்வளவு பேரைக் கொல்லுவது என்பதைக் குறித்துக்கூட அவர்கள் கவலைப்படுவதில்லை என்பதை எதிர்ப்பாளர்கள் காணக்கூடும். பணிந்துவிடுவதைவிட அழிந்துபோய் விடுவதையே விரும்புவதால் அகிம்சையோடு கூடிய எதிர்ப்பாளர்கள் அந்த வகையில் வெற்றி கொண்டவர்களே ஆவர்.

ஆனால், நான் கூறியிருக்கிறபடி அவ்வளவு எளிதாகக் காரியங்கள் நடந்துவிடா. நாட்டில் குறைந்தது நான்கு கட்சிகளாவது இருக்கின்றன. முதற் கட்சி, பிரிட்டிஷாரும் அவர்கள்

உருவாக்கியிருக்கும் ராணுவமும். இந்தியாவை அபகரித்துக் கொள்ளும் நோக்கம் எதுவும் தங்களுக்கு இல்லை என்று ஜப்பானியர் சொல்லிக்கொள்ளுகின்றனர். அவர்கள் சண்டையெல்லாம் பிரிட்டிஷாருடனேயே. இதில் ஜப்பானில் இருக்கும் சில இந்தியரும் அவர்களுக்கு உதவி செய்கின்றனர். அவர்கள் எத்தனை பேர் என்று ஊகிப்பது கஷ்டம். ஆனால், பெருந் தொகையினர் இருக்கக்கூடும். ஜப்பான் கூறுவதை அவர்கள் நம்புகிறார்கள். பிரிட்டிஷ் பிடிப்பிலிருந்து நாட்டை விடுவித்து விட்டு ஜப்பானியர் விலகிவிடுவார்கள் என்று எண்ணுகிறார்கள். மோசமானதே நேருவதாயிருந்தாலும், பிரிட்டிஷ் ஆட்சியில் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கும் களைப்பு அதிகமாயிருப்பதால், மாறுதலுக்காக ஜப்பானிய ஆட்சியை வரவேற்கவும் அவர்கள் தயாராயிருக்கிறார்கள். இது இரண்டாவது கட்சி. மூன்றாவது கட்சியினர் நடுநிலைமையினர். அகிம்சை வழியில் இல்லாதவ ரானாலும், பிரிட்டிஷாருக்கோ அல்லது ஜப்பானியருக்கோ இவர் கள் உதவி செய்யமாட்டார்கள்.

நான்காவதும் கடைசியானதும், அகிம்சையோடு கூடிய எதிர்ப்பாளரின் கட்சி. அக்கட்சியினர் ஒரு சிலரே என்றால், எதிர் காலத்திற்கு ஓர் உதாரணமாக இருப்பர்கள் என்பதைத் தவிர அவர்கள் எதிர்ப்புச் சரியான பலனுள்ளதாக இராது. அத்தகைய எதிர்ப்பாளர்கள், ஆக்கிரமிப்பாளருக்கு அடிபணியா மல் தாம் இருக்கும் இடங்களிலேயே அமைதியுடன் சாவார்கள். வாக்குறுதிகளை நம்பி ஏமாந்துவிடமாட்டார்கள். மூன்றாமவர் ஒருவரின் உதவியைக் கொண்டு பிரிட்டிஷ் பிடிப்பிலிருந்து விடுதலையை அடைய அவர்கள் நாடவில்லை. தங்களுடைய போராட்ட வழி ஒன்றையே திடமாக அவர்கள் நம்புகிறவர்கள்; மற்றவைகளை அல்ல. அவர்கள் போராடுவது, விடுதலை என்ற ஒன்று இருப்பதைக்கூட அறியாமல் இருக்கும் வாயில்லாப் பூச்சிகளான கோடிக்கணக்கான மக்களின் சார்பில்தான். அவர் களுக்குப் பிரிட்டிஷாரிடம் பகையுமில்லை; ஜப்பானியரிடம் பட்சமும் இல்லை. எவருக்கும் நல்லதையே விரும்புவதைப் போல் இவ்விரு தரப்பாருக்கும் நல்லதையே விரும்புகின்றனர்; நியாயமானது எதுவோ அதையே இருவரும் செய்யவேண்டும் என விரும்புகிறார்கள். எல்லா விதமான சந்தர்ப்பங்களிலும் அகிம்சை ஒன்றே மனிதர் நியாயமானதைச் செய்யத் தூண்டு வது என்பதை நம்புகிறார்கள். ஆகையால், தம்முடன் வருவோர் போதிய பேர் இல்லாததனால், தம் லட்சியத்தை எய்த அகிம்சையோடு கூடிய எதிர்ப்பாளர்களால் முடியாது

போனால், அவர்கள் தங்கள் வழியைக் கைவிட்டு விடமாட்டார்கள்; சாகும்வரையில் தொடர்ந்து அதைக் கடைப்பிடித்தே தீருவார்கள்.

அகிம்சைவாதிகளுக்கு முன் இருக்கும் வேலை மிகக் கஷ்டமானது. தங்கள் லட்சியத்தில் நம்பிக்கையுள்ளோரை எந்தக் கஷ்டமும் திகைத்து நிற்கச் செய்துவிடாது.

இது நீண்ட நாட்கள் தொடர்ந்துவரும் வேதனையாகவே இருக்கும். சாத்தியமல்லா முயற்சிகளை அகிம்சையோடு கூடிய எதிர்ப்பாளர்கள் செய்யாதிருப்பார்களாக. அஸ்ஸாமில் இப்பொழுது அபாயம் ஏற்படலாம் என்ற நிலைமை இருந்து வருகிறது. கேரளத்திலிருக்கும் ஓர் எதிர்ப்பாளர், அஸ்ஸாமின் பாதுகாப்புக்கு உடலைப்பற்றியவரையில் பொறுப்பாளியல்ல. அஸ்ஸாம் அகிம்சை நோக்குடன் இருந்தால், அதன் காரியத்தை அதுவே கவனித்துக்கொள்ளும். அது அப்படி இல்லையென்றால், கேரளத்திலிருந்து போகும் அகிம்சை எதிர்ப்பாளர் கோஷ்டி எதுவும் அதற்கோ அல்லது வேறு எந்த மாகாணத்திற்கோ உதவி செய்துவிட முடியாது. தம்முடைய அகிம்சையைக் கேரளத்தில் காட்டுவதன் மூலமே அஸ்ஸாம் முதலியவற்றிக்குக் கேரளம் உதவ முடியும். ஜப்பானிய ராணுவம் இந்தியாவில் அடி வைத்துவிட்டால் அஸ்ஸாமோடு அது நின்றுவிடாது. பிரிட்டிஷாரைத் தோற்கடிப்பதற்கு அது இந்தியா முழுவதையும் பிடித்துக்கொள்ள வேண்டும். ஒவ்வோர் அங்குல மண்ணுக்கும் பிரிட்டிஷார் போராடுவார்கள். இந்தியாவை இழந்துவிடுவது, முழுத் தோல்வியை அவர்கள் ஒப்புக்கொள்வதாகும். ஆனால், அது அப்படித்தான் என்றாலும், இல்லையென்றாலும், இந்தியா முழுவதும் தன் கைக்கு வந்துவிடும் வரையில் ஜப்பான் சும்மா இருக்காது என்பது தெளிவு. ஆகவே, அகிம்சையோடு கூடிய எதிர்ப்பாளர்கள், தத்தம் இடங்களில் தயாராக இருக்க வேண்டும்.

ஒரு விஷயத்தைத் தெளிவாகக் கூறிவிடவேண்டும். பிரிட்டிஷ் ராணுவம் எங்கு நேரடியாக 'எதிரியுடன்' போராடிக் கொண்டிருக்கிறதோ அங்கு நேரடியான எதிர்ப்புச் செய்வது ஒரு வேளை சரியல்ல என்றாகலாம். பலாத்காரத்துடன் கலந்துவிடும் அல்லது கூடிவிடும்போது அது அகிம்சையோடு கூடிய எதிர்ப்பாக இராது.

நான் அடிக்கடி கூறிவந்திருப்பதைத் திரும்பவும் கூறுகிறேன். ஆக்க வேலைத் திட்டத்தைத் தொடர்ந்து உறுதியுடன்

நடத்திக்கொண்டு போவதே அகிம்சைக்குச் சிறந்த தயாரிப் பாவதோடு அகிம்சையை வெளிப்படுத்துவதுமாகும். சோதனைக் காலம் வரும்போது ஆக்க வேலைத் திட்டத்தின் ஆதரவு இல்லாமலேயே அகிம்சையின் பலத்தைக் காட்ட முடியும் என்று யாராவது நம்பினால், மோசமான தோல்வியையே அடைவார்கள். பட்டினி கிடக்கும் நிராயுதபாணியான ஒருவர், நல்ல உணவைக் கொள்ளும் கவசமணிந்த ஒரு சிப்பாயிடம் தம் சரீர பலத்தைக் காட்ட முற்பட்டால் நிச்சயமாகத் தோல்வி அடைவதைப் போன்றதே இது. ஆக்க வேலைத் திட்டத்தில் நம்பிக்கை இல்லாதவர்களுக்குப் பட்டினி கிடக்கும் கோடிக் கணக்கான மக்களைப் பற்றிய திட்டமான உணர்ச்சி எதுவுமே இல்லை என்பதுதான் என் கருத்து. அந்த உணர்ச்சியற்றவர்கள் அகிம்சையோடு போராட இயலாது. சரியான நடைமுறையில் என்னுடைய அகிம்சையின் விஸ்தரிப்பு, பட்டினி கிடக்கும் மனித வர்க்கத்துடன் நான் கொண்ட தொடர்பிற்கு ஏற்றதாக இருந்து வந்திருக்கிறது. நான் கருதும் அகிம்சைக்கு வெகு தொலைவிலேயே இன்னும் இருக்கிறேன். ஏனெனில், வாயில்லாப் பூச்சிகளான மனித வர்க்கத்துடன் என் எண்ணம் இணைவதற்கு வெகு தொலைவிலேயே நான் இன்னும் இருந்து கொண்டிருக்கிறேனல்லவா ?

[வர்தாவுக்கு ரெயிலில் போகும் வழியில்
5—4—1942-இல் எழுதியது.] —'ஹரிஜன்' - 12—4—1942

# 51

# ஒவ்வொரு பிரிட்டானியருக்கும்

தென்னாப்பிரிக்காவில் என்னுடைய பொது வாழ்க்கையை ஆரம்பித்த சமயத்தில், தென்னாப்பிரிக்காவிலிருக்கும் ஒவ்வொரு பிரிட்டானியருக்கும் ஒரு பகிரங்கக் கடிதம் எழுதினேன். அதனால் பலன் ஏற்பட்டது. உலகத்தின் சரித்திரத்தில் நெருக் கடியான நிலைமை ஏற்பட்டிருக்கும் இச் சமயத்தில் அதே உதாரணத்தைத் திரும்பச் செய்யவேண்டும் என்று உணரு கிறேன். உலகத்தில் ஒவ்வொரு பிரிட்டானியருக்கும் எனது வேண்டுகோளை இச்சமயம் அறிவிக்கவேண்டும். அவர் தம்முடைய நாட்டின் ஆலோசனைச் சபையில் செல்வாக்கே இல்லாதவராக இருக்கலாம். ஆனால், அகிம்சையின் சாம்ராஜ்யத்தில் உண்மை யான எண்ணத்திற்கு மிக்க மதிப்பு உண்டு; உண்மையின் குரலுக்கு முழு மதிப்பு உண்டு. பொதுஜன வாக்கே தெய்வ வாக்கு என்பது ஏட்டுச் சுரைக்காய் அல்ல. மனித வர்க்கத்தின்

திடமான அனுபவத்தின் அறிவிப்பே அது. ஆனால், அதற்கு ஒரு தகுதி இருக்கிறது. அதன் உண்மை, அகிம்சைத்துறைக்கே அடங்கியதாகும். பலாத்காரம், ஏதோ ஒரு சமயத்தில்தான் மக்கள் குரலை அடக்கிவிடும். ஆனால், அகிம்சைத்துறை ஒன்றிலேயே நான் வேலை செய்வதால், வெளிப்படுவதும் வெளிப்படாததுமான ஒவ்வோர் உண்மையான எண்ணமும் எனக்கு முக்கியமானதாகிறது.

ஆசிய, ஆப்பிரிக்க ஆதிக்கத்தைத் துறந்து - இப்போதைக்கு இந்தியாவிலிருந்து மாத்திரமாவது - வெளியேறிவிடுமாறு பிரிட்டிஷாருக்கு நான் விடுக்கும் கோரிக்கையை ஆதரிக்குமாறு ஒவ்வொரு பிரிட்டிஷாரையும் கேட்டுக்கொள்ளுகிறேன். உலகம் ஆபத்தில்லாமலிருப்பதற்கும், நாஜிஸமும் பாசிஸமும் ஒழிவதற்கும் இக்காரியம் மிக அவசியம். இதில் ஜப்பானின் ' இஸ ' த்தையும் சேர்க்கிறேன். அந்த இரண்டின் சரியான அநுகரணம் அது. என்னுடைய கோரிக்கையை ஏற்றுக்கொள்வது, சர்வாதிகார (அச்சு) வல்லரசுகளின் திட்டங்களையெல்லாம் கலக்கிவிடுவதோடு பிரிட்டனின் ராணுவத் திட்டங்களையும் மாற்றிவிடும்.

என்னுடைய கோரிக்கையை ஏற்றுக்கொண்டால் - இந்தியாவிலும் ஆப்பிரிக்காவிலுமுள்ள பிரிட்டிஷ் நலன்களை விட்டுவிடுவதால் ஏற்படும் நஷ்டத்தை, யுத்தத்தினால் பிரிட்டனுக்கு வளர்ந்துகொண்டே போகும் செலவுடன் ஒப்பிட்டால் அது ஒன்றுமே இல்லை என்பது தெளிவாகும் - நீதியின் தராசில் போட்டு நிறுத்துப் பார்க்கும்போது, அது பிரிட்டனுக்கும் இந்தியாவுக்கும் உலகத்திற்கும் லாபத்தைத் தவிர வேறு எதுவும் இல்லை.

ஆசியாவிலிருந்தும் ஆப்பிரிக்காவிலிருந்தும் அவர்கள் வெளியேறிவிட வேண்டும் என்று நான் கோரியபோதிலும் தற்சமயம் நான் இந்தியாவோடு நிற்கிறேன். யுத்தத்தில் இந்தியா பங்குகொண்டிருப்பதைக் குறித்துப் பிரிட்டிஷ் ராஜதந்திரிகள் பேசுகிறார்கள். யுத்தப் பிரகடனம் செய்வது சம்பந்தமாக ஒப்புக்குக்கூட இந்தியா கலந்தாலோசிக்கப்படவில்லை. ஏன் அப்படி? இந்தியா, இந்தியருக்குச் சொந்தமானதல்ல, அது பிரிட்டிஷாருக்குச் சொந்தமானது; பிரிட்டிஷாரின் உடைமை என்றும் சொல்லப்படுகிறது. பிரிட்டிஷார் முக்கியமாக இந்தியாவைப்பற்றித் தாங்கள் விரும்புவதையெல்லாம் செய்து வருகின்றனர். எல்லா யுத்தங்களை

யும் எதிர்ப்பவனாகிய நான், பல வழிகளிலும் யுத்த வரி செலுத்தும்படி செய்கின்றனர். இவ்விதம் நான் தபாலில் போடும் ஒவ்வொரு கடிதத்திற்கும் அரை அணாவும், ஒவ்வொரு கார்டுக்கும் காலணாவும், ஒவ்வொரு தந்திக்கும் இரண்டு அணாவும் யுத்த வரியாகக் கொடுக்கிறேன். இருக்கும் பயங்கரமான நிலைமையில் சாதாரண விஷயமே இது. ஆனால், பிரிட்டிஷாரின் தந்திரத்தை இது காட்டுகிறது. நான் பொருளாதாரம் படித்தவனாயிருந்தால், வலியக் கொடுத்திருக்கும் உதவி என்று தவறாகக் கூறப்பட்டு வருவதைத் தவிர, யுத்தத்திற்காக இந்தியாவை எவ்வளவு கொடுக்கும்படி செய்திருக்கிறார்கள் என்பதைக் காட்டும் திடுக்கிட வைக்கும் புள்ளி விவரத்தை நான் தர முடியும். அடக்கி ஆண்டு கொண்டிருப்பவருக்குக் கொடுக்கும் எதையும் வலியக் கொடுப்பதாகக் கூறவே முடியாது. என்னை அடக்கி ஆளும் இந்தப் பிரிட்டானியன் பத்திரமாக ஆசனத்தில் அமர்ந்து என்மேல் சவாரி செய்கிறான். தன் விருப்பத்தை அவன் மெல்லச் சொல்ல வேண்டியதுதான், இந்தியாவில் அது உடனே நிறைவேற்றப்பட்டுவருகிறது என்று நான் சொன்னால் அது மிகைப்படுத்திக் கூறுவதாகாது. ஆகையால், வெற்றி கொண்ட உரிமையுடன் ராணுவ பலத்தின் மூலம் இந்தியாவைப் பிரிட்டன் விடாமல் பிடித்துக்கொண்டிருப்பதோடு இந்தியாவுடன் நிரந்தரமான போரில் இருக்கிறது என்றே சொல்லலாம். பிரிட்டனின் யுத்தத்தில் கட்டாயப்படுத்திப் பங்குகொள்ளும்படி செய்யப்பட்டிருப்பதால் இந்தியா எப்படிப் பலனை அடைகிறது? இந்தியச் சிப்பாய்களின் வீரத்தினால் இந்தியாவுக்கு எந்த லாபமும் இல்லை.

ஜப்பானியரின் ஆக்கிரமிப்பு இந்தியாவைப் பற்றிக் கொள்ளுவதற்கு முன்னால், இந்தியாவின் வீடு வாசல்களை, இந்தியரையும் இந்தியரல்லாதாரையும் கொண்ட பிரிட்டிஷ் படையினர் கைப்பற்றிக்கொண்டிருக்கின்றனர். அவற்றில் குடியிருப்போர் திடீரென்று வெளியேற்றப்படுகின்றனர்; தங்களுக்கென வேறு இடங்களுக்கு அவர்கள் போக வேண்டியிருக்கிறது. காலி செய்துவிடுவதற்காக அவர்களுக்குக் கொடுக்கப்படும் சிறு தொகையைக் கொண்டு அவர்கள் எதுவும் செய்து கொள்ள முடிவதில்லை. அவர்கள் செய்து வந்த தொழிலும் போயிற்று. குடிசை கட்டிக்கொண்டு அவர்கள் பிழைப்புக்கும் வழி தேட வேண்டும். அவர்கள் தேசாபிமானத்தினால் வீடு வாசல்களைக் காலி செய்துவிட்டுப் போகவில்லை. சில தினங்

களுக்கு முன்னுல் இச்சம்பவம் எனக்கு அறிவிக்கப்பட்ட போது, வீடு வாசல்களை இழந்தவர்களை, அதற்காகக் கவலைப் படாமல் சகித்துக்கொள்ளும்படி சொல்ல வேண்டும் என்று இப்பத்திரிகையில் எழுதினேன். ஆனுல் என் சக ஊழியர் கள் இதை ஆட்சேபித்தார்கள். வெளியேற்றப்பட்டிருப்போ ரிடம் போய் நானே அவர்களுக்கு ஆறுதல் சொல்லவேண்டும் அல்லது அசாத்தியமானதான இக்காரியத்தைச் செய்ய வேறு யாரையாவது அனுப்ப வேண்டும் என்று அழைத்தார் கள். இந்த ஏழை மக்களை இப்பொழுது நடத்தியதைப் போல நடத்தியிருக்கவே கூடாது. காலி செய்துவிட்டுப் போகும்படி சொன்னதுமே தக்க இடத்தில் அவர்களைக் குடி அமர்த்தியிருக்க வேண்டும்.

கிழக்கு வங்காளத்திலிருக்கும் மக்களை, நீரிலும் நிலத்திலும் வசிப்பவர்களாகக் கருதவேண்டும். இவர்களில் ஒரு பகுதியினர் நிலத்திலும் மற்ருெரு பகுதியினர் ஆறுகளின் நீர்மீதும் வாழு கின்றனர். ஓர் இடத்திலிருந்து மற்ருேர் இடத்திற்குப் போக இவர்களிடம் லேசான படகுகள் இருக்கின்றன. இப்படகு களை ஜப்பானியர் உபயோகித்துக் கொண்டுவிடுவார்களோ என்ற பயத்தின் பேரில் அவற்றை ஒப்படைத்து விடுமாறு உத்தரவிடப்பட்டிருக்கின்றனர். ஒரு வங்காளிக்குத் தம் பட கைக கொடுத்துவிடுவது என்பது தம் உயிரைக் கொடுத்து விடுவதைப் போன்றது. ஆகையால், தம் படகை எடுத்துக் கொண்டவர்களைத் தமக்கு எதிரியாகவே எண்ணுகிருர்கள்.

பிரிட்டன் யுத்தத்தில் வெற்றி பெற்ருக வேண்டும். இந்தி யாவுக்கு ஒரு நஷ்டம் இழைத்தாவது அப்படிச் செய்யவேண் டியது அவசியமா? அப்படி அது செய்யத்தான் வேண்டுமா?

இந்தத் துயர் மலிந்த அத்தியாயத்தில் நான் கூற வேண் டிய வேறு சிலவும் உண்டு. இந்திய வாழ்க்கையைச் சூழ்ந் திருக்கும் ஒரு பொய்மை நம்மைத் திணறச் செய்கிறது. நீங்கள் காணும் ஒவ்வோர் இந்தியரும் அதிருப்தியுடன் இருக் கிருர். ஆனுல், அதைப் பகிரங்கமாக அவர் சொல்லிக்கொள் வதில்லை. சர்க்காரில் பெரிய உத்தியோகத்திலிருப்பவர் களும் சின்ன உத்தியோகங்களில் இருப்பவர்களும் இதற்கு விலக்கு அல்ல. ஏதோ காதில் விழுந்ததைக் கொண்டு சாட்சி யாக நான் இதைச் சொல்லவில்லை. பிரிட்டிஷ் அதிகாரிகள் பல ருக்கு இது தெரியும். ஆனுல், இத்தகையவர்களிடமிருந்து வேலை வாங்கும் கலையை அவர்கள் கையாண்டு வருகிருர்கள்.

எங்கும் பரவிய இந்த அவநம்பிக்கையையும் பொய்மையையும் ஒருவர் தமது முழு ஆத்மாவையும் கொண்டு எதிர்த்தாலன்றி வாழ்வே வீணாகிவிடும்.

நான் கூறுவதையெல்லாம் நம்பிவிட நீங்கள் மறுக்கலாம்; நான் கூறுவதும் மறுக்கப்படலாம். என்றாலும், மறுப்பையும் சமாளித்து நான் கூறுவது நிலைத்து நிற்கும்.

உண்மையானது, முழு உண்மையானது, உண்மையைத் தவிர வேறு எதுவும் இல்லை என்று நான் நம்புவதையே சொல்லியிருக்கிறேன்.

நான் இவ்விதம் உரக்கச் சிந்திப்பதை என் மக்கள் ஆதரிக்கலாம், ஆதரிக்காமலும் போகலாம். இது சம்பந்தமாக நான் யாரையும் கலந்தாலோசிக்கவில்லை. இந்த வேண்டுகோளை நான் மௌன விரதம் இருக்கும் நாளில் எழுதுகிறேன். இப்பொழுது என் கவலையெல்லாம், பிரிட்டிஷ் செய்கை குறித்தே. அமெரிக்காவில் அடிமைத்தனம் ஒழிக்கப்பட்டபோது பல அடிமைகள் அதை ஆட்சேபித்தார்கள்; சிலர் அழுதார்கள். ஆட்சேபங்களும், கண்ணீரும் இருந்தாலும் சட்ட அளவில் அடிமைத்தனம் ஒழிக்கப்பட்டது. ஆனால், அந்த ஒழிப்பு, அமெரிக்காவின் தென்பகுதிக்கும் வடபகுதிக்கும் இடையே நடந்த ரத்தக் களறியான யுத்தத்தின் பலன். ஆகவே, நீக்ரோக்களின் நிலை முன்னால் இருந்ததற்கு இப்பொழுது எவ்வளவோ மேல் என்றாலும், உயர்ந்த சமூகத்திலிருந்து அவர்கள் ஒதுக்கப்பட்டவர்களாகவே இன்னும் இருந்து வருகின்றனர். அதைவிட மேலும் உயர்வானதான ஒன்றையே நான் கேட்கிறேன். எங்களில் சிலருக்கு ஆட்சேபமாகவும் அழுகையுமாகவும் இருந்தாலும், இயற்கைக்கே விரோதமான ஓர் ஆதிக்கத்திற்கு முடிவு ரத்தம் சிந்தாமல் ஏற்பட்டுப் புதிய சகாப்தமும் பிறக்க வேண்டும் என்று கேட்கிறேன்.

பம்பாய், 11—5—1942. —'ஹரிஜன்' - 17—5—1942

# 52

# இரு செயல்கள்

பிரிட்டிஷ் அதிகாரம் வெளியேற வேண்டும் என்று நான் கேட்பதில் இரு செயல்கள் அடங்கியிருக்கின்றன. ஒன்று, இப்பொழுது இருந்துவரும் அவசர நிலைமையைச் சமாளிப்பது.

மற்றென்று, பிரிட்டிஷ் ஆதிக்கத்திலிருந்து சுதந்திரத்தைப் பெறுவது. இரண்டாவதில் தாமதம் இருக்கும். அதன் கருத்துப்பற்றி எத்தனையோ குழப்பங்கள் இருந்து வருகின்றன. அப்போதைக்கப்போது ஏற்படும் பிரச்னைகளைச் சமாளிக்க என்னால் ஆன முயற்சியை நான் செய்து வருகிறேன்.

முதல் விஷயம், தாமதத்தை ஒப்பவில்லை; பிரிட்டிஷார் வெளியேறுவது சம்பந்தமாகக் கூறப்படும் யோசனையையும் கவனிக்காமல், தாமதமின்றித் திட்டமான காரியத்தைச் செய்தாக வேண்டியதை அது வற்புறுத்துகிறது. (1) துருப்புகளின் நடத்தை; (2) வரவிருக்கும் உப்புப் பஞ்சம்; (3) உணவுத் தானியங்கள் கட்டுப்பாடு; (4) ராணுவ வசதிக்காக வெளியேற்றப் படுவது; (5) ஒரு பக்கம் ஐரோப்பியர், ஆங்கிலோ-இந்தியர், ஆங்கிலோ-பர்மியர் இவர்களிமிடருந்து மறு பக்கம் இந்தியரை வேற்றுமைப்படுத்திப் பாரபட்சமாக நடத்துவது ஆகியவைகளைப் பற்றியது அது.

முதல் இனம் சம்பந்தமாக, மக்களுக்குச் சட்டம் இருக்கிறது; பொதுஜன அபிப்பிராயமும் முற்றிலும் அவர்கள் பக்கம் இருக்கிறது. அரசாங்க இயந்திரம் எப்பொழுதும் மெதுவாகவே நகரும். எல்லாம் முன்கூட்டியே ராணுவ ஏற்பாடுகளுக்கு அடகு வைக்கப்பட்டிருக்கும் சமயத்தில் இன்னும் அதிக மெதுவாகவே அது நகரும். ஒழுக்கம் தவறி நடக்கும் தனிப்பட்டவர் யாராயிருந்தாலும், அவர்களை எதிர்த்துத் தங்களைப் பாதுகாத்துக்கொள்ளுவதற்கு எங்குள்ள மக்களும் தெரிந்துகொள்ள வேண்டும். இதில் அகிம்சை, இம்சை என்ற பிரச்னை எழுவே இல்லை. அகிம்சை வழி எப்பொழுதுமே மிகச் சிறந்தது என்பதில் சந்தேகமில்லை. ஆனல், எங்கு அது தானுக வரவில்லையோ அங்கே பலாத்கார வழி அவசியமானதும் கௌரவமானதுமாகும். இதில் செயலற்றிருப்பது அசல் கோழைத்தனமாவதோடு ஆண்மையற்றதுமாகும். எது நேர்ந்தாலும் இது வெறுக்கப்பட வேண்டும். வடக்கில் ஸ்டேஷன்களில் பிளாட்பாரத்தில் சாமான்களை விற்கும் அங்காடிக்காரர்கள் தற்காப்புக்கு ஒன்றுபட்டிருக்கிறுர்கள் என்றும், அந்த ஸ்டேஷன்களில் சிப்பாய்கள் உஷாராக நடந்துகொள்ளுகிறுர்கள் என்றும் பண்டித நேரு என்னிடம் கூறினர்.

உப்புப் பஞ்ச விஷயத்தில் சட்டம் அவ்வளவாக மக்களுக்குச் சாதகமானதாக இல்லை. ஆனல், நியாயம் முழுவதும் அவர்கள்

பக்கம் இருக்கிறது. காந்தி-இர்வின் ஒப்பந்தத்தில் உப்புப்பற்றிக் குறிப்பிடும் விதிக்கு அரசாங்கம் பரந்த பொருளை அளித்து, முடிந்த இடங்களிலெல்லாம் உப்புத் தயாரித்துக்கொள்ள மக்களை அனுமதிக்கும் என்று நம்பிக்கொண்டிருக்கிறேன். வழக்குத் தொடரப்பட்டாலும் அதையும் பொருட்படுத்தாமல் உப்புத் தயாரித்துக்கொள்ளுமாறு மக்களுக்கு யோசனை கூறுவேன். அவசியம் நேரும்போது சட்டம் எதுவும் செய்யாது. பட்டினி கிடப்பவன், உணவு எங்கிருக்கக் கண்டாலும் எடுத்துச் சாப்பிட்டே தீருவான். ரிஷி விசுவாமித்திரரும் இதைத்தான் செய்தார்.*

மூன்றாவது விஷயத்தைச் சமாளிப்பது கஷ்டமானது. ஆனால், இரண்டாவதற்கான விதிகளே இதற்கும் பொருந்தும். உப்பைப் போல அவ்வளவு எளிதாக உணவை உற்பத்தி செய்ய முடியாது. ஏழை மக்களுக்கு நிர்ணயித்த விலையில் உணவு கிடைக்கும்படி செய்வதற்குப் புத்திசாலித்தனமான முறைகளைக் கூறித் தங்களால் ஆனதைச் செய்வதோடு அரசாங்கத்தையும் கட்டாயப்படுத்தத் தாங்கள் ஒன்றுபட வேண்டியது வர்த்தகர்களின் கடமை. உரிய காலத்தில் இது செய்யப்படவில்லையானால், கடைகள் கொள்ளையிடப்படுவது தினசரிச் சம்பவமாகிவிடும்.

நான்காவது விஷயம் : ஈடு செய்ய நிலமும் கட்டிடங்களும், மக்களுக்குத் தயாரிக்கப்பட்டிருக்கும் இடத்திற்கு அவர்களையும் சாமான்களையும் கொண்டு போவதற்கு வண்டி வசதிகளும் கொடுத்து, தகுந்த பிழைப்பைத் தேடிக்கொள்ளும் வரையில் அவர்களுடைய வாழ்க்கைக்குப் போதிய ஊதியமும் கொடுக்க அரசாங்கம் தயாராயிருந்தாலன்றி வெளியேறும்படி மக்களிடம் அதிகாரிகள் கூற முடியாது என்பதில் சந்தேகம் இல்லை. குடியேறுவதற்கு மக்களுக்கு எங்கும் இடம் இல்லையென்றால், காலி செய்துவிட்டு வெளியேற அவர்கள் மறுத்துவிட்டு அதனால் ஏற்படுவதை அனுபவிக்க வேண்டும்.

ஐந்தாவது சம்பந்தமாக, வேற்றுமை காட்டப்படுவதற்கு மக்கள் உடன்பட மறுத்துவிட வேண்டும்; அது தகர்ந்துவிடும். அவைகளுக்கெல்லாம் உடன்பட்டுவிடுகிறது என்ற பழக்கத்தை நாம் கொண்டிருப்பதனாலேயே இந்தக் கஷ்டங்களெல்லாம்

* பஞ்சக் காலம் ஒன்றில் பசியின் கொடுமையை சகிக்க முடியாமல் நாயின் இறைச்சியை அம்முனிவர் தின்றதாகப் புராணங்கள் கூறும்.

ஏற்படுகின்றன. காலஞ்சென்ற லார்டு வில்லிங்டன் கூறியதைப் போன்று, 'முடியாது' என்று கூறுவதே உண்மையில் அளிப்பதற்குச் சாத்தியமான பதிலாக இருக்கும். அதனுல் ஏற்படுவதை ஏற்றுக்கொள்ள வேண்டும்.

சேவா கிராமம், 22—6—1942 —' ஹரிஜன் ' - 28—6—1942

# அகிம்சையின் நிலைமை—சுதந்திரத் தருவாயில்

[இப்பகுதியில் தந்திருக்கும் காந்திஜியினுடைய கட்டுரைகளின் முக்கியத்துவத்தை அறிவதற்கு 1942-ஆம் ஆண்டுக்குப் பிறகு நாட்டில் ஏற்பட்ட நிலைமையை நினைவுபடுத்திக் கொள்ளுவது முக்கியம். 1942 ஆகஸ்டு 8-ஆம் தேதி பம்பாயில் கூடிய அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியில், பிரிட்டன் இந்தியாவிலிருந்து வெளியேறிவிடவேண்டும் என்ற தீர்மானம் நிறைவேறியது. அத்தீர்மானம், பிரிட்டிஷார் எல்லோரும் போய்விடவேண்டும் என்பதன்று, ராஜீய அதிகாரம் இந்தியர் கைக்கு மாறவேண்டும் என்பதே எனக் காங்கிரஸ் தலைவர் மௌலானா ஆஜாதும் விளக்கினர். ஆகஸ்டு 9-ஆம் தேதி விடியற்காலை 4 மணிக்கு காந்திஜியையும் மற்றத் தலைவர்களையும் கைது செய்தனர். மகாத்மாவைப் புனாவிலிருக்கும் ஆகாகான் அரண்மனையிலும், மற்றவர்களை அகமத்நகர் கோட்டையிலும் சிறை வைத்தார்கள். இவ்விதம் தலைவர்கள் திடீரெனச் சிறை வைக்கப்பட்டதால் நாடெங்கும் மக்கள் கொதிப்படைந்தனர். அரசாங்கத்தின் அடக்குமுறை ஆவேசம் அளவு கடந்ததாயிற்று. ஆகஸ்டு 15-ஆம் தேதி காலையில் ஸ்ரீ மகாதேவ தேசாய் மாரடைப்பினால் மாண்டார். இச் செய்தியைக் கேட்டு மக்களின் கொந்தளிப்பு மேலும் அதிகரித்தது. சிறைப்பட்டிருந்த காந்திஜிக்கும் வைசிராய்க்கும் நடந்த நீண்ட கடிதப் போக்குவரத்துக்குப் பிறகு காந்திஜி 1943 பிப்ரவரி 10-ஆம் தேதி உண்ணாவிரதத்தை ஆரம்பித்தார். அவர் உயிருக்கு ஆபத்து என்ற நிலை இருந்தும் அரசாங்கம் அவரை விடுதலை செய்யவில்லை. மார்ச் 2-ந் தேதி உண்ணாவிரதம் பூர்த்தியாயிற்று. 1944 பிப்ரவரியில் காந்திஜியின் அறுபத்திரண்டு வருட வாழ்க்கைத் துணைவி கஸ்தூரிபா, ஆகாகான் அரண்மனையில் காலமானார். அவ்வாண்டு மே 5-ஆம் தேதி மகாத்மா விடுதலையானார். அதன் பின்னர்க் காந்திஜி கூறியவை, எழுதியவையே இப்பகுதியில் வருவன.]

# 1

# நாசவேலையும் ரகசியமும்

"தந்திக் கம்பிகளை அறுப்பது* அகிம்சைக் கொள்கைக்கு எப்படி விரோதமானதாகும்?" என்று ஒரு நண்பர் சில நாட்களுக்கு முன்பு காந்திஜியைக் கேட்டார்.

காந்திஜி விடுதலையானதிலிருந்து கேட்கப்பட்டுவரும் பல கேள்விகளுக்கு இது ஓர் உதாரணமாகும். காந்திஜி ஆகாகான் அரண்மனையிலிருந்து வெளிவந்ததும் அவரைச் சந்தித்த மற்றொரு நண்பர், ஒரு பிரச்னையை அவரிடம் போட்டார்: "இன்று நம் இளைஞரிடையே இருவிதக் கருத்துள்ளவர்கள் இருக்கிறார்கள். செயல் திட்டத்திற்கு அகிம்சையின் வேலை தீர்ந்து விட்டது என்று இதில் ஒரு தரத்தினர் கருதுவதோடு அதை வெளிப்படையாகவும் கூறுகிறார்கள். பொது மக்களை எழுப்புவதாகிய அதன் வேலையை அகிம்சை செய்துவிட்டது; சுதந்திரத்திற்கான போராட்டத்தின் இறுதிக் கட்டத்தையும் அது வகுத்துவிட்டது. இந்தப் போராட்டத்தில் ஆயுத பலத்தை ஒதுக்கிவிட முடியாது. அகிம்சையில் நம்பிக்கை இருப்பதாகக் கூறிக்கொள்ளும் மற்றொரு பகுதியினரோ, அதன் முறையில் மாறுதல் செய்வதற்கோ, மேலும் விரிவுபடுத்துவதற்கோ இடமில்லை என்கிறார்கள். பெரிய அளவில் தயார் செய்யப்படும் நாச வேலையே நமது போராட்டத்தின் அடுத்த அம்சமாக இருக்கும் என்று அவர்கள் உறுதியாகக் கூறுகின்றனர்."

அகிம்சையோடுகூடிய வேலைத் திட்டத்தின் ஒரு பகுதியாக நாச வேலை இருக்க முடியும் என்பதையும், தாம் அறிந்துள்ள அகிம்சையிலிருந்து அது தோன்றக்கூடும் என்பதையும் காந்திஜி ஆட்சேபித்தார். விரும்பினாலும் விரும்பாமற் போனாலும் நாச வேலை நிலைத்துவிட்டது என்று அந்த நண்பரோ விடாப்பிடியாகக் கூறினார். உடனே காந்திஜி மறுத்து, "பொறுப்பில்லாமல் ஜோசியம் கூறிக்கொண்டிருப்பதில் பயனில்லை. நாம் எந்நிலையில் இருக்கிறோம், அதன் சம்பந்தமாக நம் போக்கு எவ்விதம் இருக்கப் போகிறது என்பதே உண்மையான பிரச்னை" என்றார்.

---

* 1942 ஆகஸ்டில் காந்திஜியுள்பட எல்லாத் தலைவர்களையும் அரசாங்கம் கைது செய்து அடக்குமுறை ஆவேசத்திலும் இறங்கிய பின்னர், ஆத்திரமடைந்த மக்கள் அரசாங்கத்திற்கு எதிரான நடவடிக்கைகளிலெல்லாம் ஈடுபட்டனர். பல இடங்களில் அப்பொழுது தந்திக் கம்பிகளையும் அறுத்தார்கள்.

நண்பர் தமக்கு இருந்த சில சந்தேகங்களைப்பற்றிக் காந்திஜியைக் கேட்டார். அரசாங்கத்தின் சொத்துக்களை நாசம் செய்வது பலாத்காரமாகுமா? "தமக்குச் சொந்தமல்லாத எந்தச் சொத்தையும் அழிக்கும் உரிமை யாருக்கும் இல்லை என்று கூறுகிறீர்கள். அப்படியானல், அரசாங்கத்தின் சொத்து என் சொத்து அல்லவா? அது என் சொத்து; அதை நான் நாசம் செய்யலாம் என்கிறேன்" என்ருர் அவர்.

இதற்குக் காந்திஜி கூறிய பதிலாவது: "உங்கள் வாதத்தில் இரட்டைத் தவறுகள் அடங்கியிருக்கின்றன. அரசாங்கத்தின் சொத்து இன்று தேசீயச் சொத்தாக இல்லை; தேசீயச் சொத்தாக இருக்கிறது என்றே வைத்துக்கொண்டாலும், அரசாங்கத்தின்மீது அதிருப்தி கொண்டிருக்கிறேன் என்பதனல் அச் சொத்துக்களை நான் அழித்துவிடக் கூடாது. அரசாங்கத்தின் செய்கைகளில் சிலவற்றைத் தாம் ஏற்றுக் கொள்ளத் தயாராயில்லை என்பதற்காகப் பாலங்கள், தந்தி, ரெயில் பாட்டைகள் முதலியவைகளை அழித்துவிடத் தமக்கு உரிமை இருக்கிறது என்று ஒவ்வொருவரும் சொல்லக் கிளம்பி விடுவதாயின் ஒரு தேசீய அரசாங்கங்கூட ஒரு நாளுக்குமேல் ஓடாது. மேலும், தீமை மனிதரில்தான் இருக்கிறதேயன்றி உயிரில்லாதவையான பாலங்கள், பாட்டைகள் முதலியவைகளில் இல்லை. தீமை மிகுந்த மனிதரையே சமாளிக்க வேண்டும். பாலங்கள் முதலியவைகளை வெடிமருந்து வைத்து நாசப்படுத்துவது இந்தத் தீமையைச் சார்ந்ததில்லை; எந்தத் தீமையை ஒழிக்க முயல்கிருேமா அந்தத் தீமைக்குப் பதிலாக இன்னும் மோசமான தீமையையே அது கிளப்பிவிடும்."

அதன் பேரில் அந்த நண்பர் கூறியதாவது: "தீமை நம்முள்ளேதான் இருக்கிறதேயன்றிப் பாலத்தில் இல்லை. பாலத்தை நல்ல காரியத்திற்கும் கெட்ட காரியத்திற்கும் உபயோகித்துக்கொள்ளலாம் என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். அதை வெடிமருந்து வைத்துத் தகர்த்துவிடுவதால் இன்னும் மோசமான பலாத்காரத்தை பதிலுக்கு அது கிளப்பி விட்டுவிடுகிறது என்பதையும் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனல், போராட்டத் தந்திரத்தில் இயக்கத்தின் வெற்றிக்கும், மக்கள் உறுதி கெட்டுவிடாமல் தடுப்பதற்கும் இது அவசியமாகலாம்."

இதற்குக் காந்திஜி கூறியதாவது: "இது ஒரு பழைய வாதம். புரட்சிக்காரர்களின் பயங்கர நடவடிக்கைகளுக்கு ஆதாரமாக இந்த வாதம் ஒரு சமயம் கூறப்பட்டு வந்தது.

நாசவேலை ஒரு பலாத்கார முறை. உடலினல் ஆன பலாத்காரம் பயனில்லை என்பதை மக்கள் அறிந்துகொண்டிருக்கிருர்கள். அந்தப் பலாத்காரத்தை நாசவேலை என்று மாறிய முறையில் வெற்றிகரமாக அனுசரிக்கலாம் என்று எண்ணுகிருர்கள்போல் இருக்கிறது. மக்கள் உயர்ந்த வீரத்தையும் அஞ்சாமையையும் காட்டுகின்றனர். முழு அகிம்சையும் வேலை செய்திராவிடில் அந்த உயர்வைப் பொதுமக்கள் முழுவதுமே அடைந்திருக்க மாட்டார்கள் என்பது என்னுடைய திடமான நம்பிக்கை. அது எப்படி வேலை செய்கிறது என்பதை நாம் இன்னும் முற்றிலும் அறியவில்லை. ஆனுல், நாம் செய்த தவறுகளாலும், அடைந்த தோல்விகளாலும் அகிம்சையின் மூலம் பலத்திலிருந்து இன்னும் அதிக பலத்திற்கு நாம் முன்னேறியிருக்கிறேம் என்பது உண்மை. இதற்கு மாருகப் பயங்கரச் செயல்கள் மன உறுதியைக் குலைத்திருக்கின்றன. அவசரப்பட்டுச் செய்வது அவலமாகவே முடியும்.''

அந்நண்பர் கூறியதாவது : ''பலாத்கார நடவடிக்கைகளில் பயிற்சி பெற்றிருப்பவர், அத்தகைய அனுபவம் இல்லாதவரைவிட, உண்மையான அகிம்சைக்குக் கிட்டத்தில் வந்துவிடுகிருர் என்பதை நாம் கண்டிருக்கிறேம்.''

**காந்திஜி :** ஒரு விதத்தில்தான் அது உண்மையாக இருக்கலாம். மீண்டும் மீண்டும் பலாத்கார முறையை உபயோகித்து அதன் பயனின்மையை அவர் தெரிந்துகொண்டிருக்கலாம்; அவ்வளவுதான். தீய காரியத்தை ருசி கண்டவன் தீயதைச் செய்தே அறியாதவனுடைய நற்செயலுக்குக் கிட்டத்தில் இருக்கிருன் என்று நீங்கள் கூற முடியுமா? உங்கள் வாதம் அப்படித்தான் இருக்கிறது.

பிறகு விவாதம் ரகசியத்தைப் பற்றியதில் திரும்பியது. சம்பந்தப்பட்ட நண்பர் வருமாறு வாதித்தார் : ''தனிப்பட்டவரின் ரகசிய நடவடிக்கை ஒருவித மனப்பான்மையை உண்டாக்குவதால் அது ஒரு தீமையே. ஆனுல், ஏற்பாட்டோடு கூடிய ரகசிய நடவடிக்கை பயனுள்ளதாகலாம். செய்கையின் விளைவுகளைச் சமாளிக்கச் சம்பந்தப்பட்டவர் தைரியத்துடன் தயாராக இருப்பாராயின், அது ரகசிய நடவடிக்கை ஆகாது. தம்முடைய லட்சியத்தை நிறைவேற்றிக்கொள்ளுவதற்காக ரகசியத்தை அவர் மேற்கொள்ளுகிருர். விசாரணையின்போது, பின்னல் கேள்விகள் கேட்கப்படுகையில், அதில் எந்தச் சம்பந்தமும் வைத்துக்கொள்ள அவர் மறுக்கலாம். அவர் பொய்யான வாக்குமூலம் ஒன்றைக் கொடுக்க வேண்டியிராது.''

ஆனல், காந்திஜி இதில் விடாப்பிடியாக இருந்தார். அவர் கூறியதாவது : ''எவ்வளவுதான் பெரியதாக இருந்தாலும் சரி, எந்த ரகசிய ஸ்தாபனமும் எந்தவித நன்மையையும் செய்ய முடியாது. உங்களைச் சுற்றி ஒரு பாதுகாப்புச் சுவரை எழுப்பிக்கொள்ள ரகசியம் முற்படுகிறது. அத்தகைய பாதுகாப்புக்களையெல்லாம் அகிம்சை புறக்கணிக்கிறது. பகிரங்கமாகவோ, எண்ணவே இயலாத கடுமையான கஷ்டங்களையும் எதிர்த்தோ அது செயலாற்றுகிறது. பல நூற்றுண்டுகளாகச் சொல்லொணுத கொடுமைகளினுல் நசுக்கப்பட்டு வந்திருக்கும் ஏராளமான மக்களைச் செயலில் இறங்க நாம் திரட்ட வேண்டியிருக்கிறது. பகிரங்கமான உண்மை முறையைத் தவிர வேறு எதைக் கொண்டும் இவர்களைத் திரட்ட முடியாது. ரகசியம் என்பதை வெறுத்தே இளமைப் பருவத்திலிருந்து எழுபத்தாறு வயதுக்கு வளர்ந்து வந்திருக்கிறேன். லட்சியத்தைத் தளர்த்திவிடுவது என்பது எதுவுமே இருக்கக் கூடாது. முறையை முற்றிலும் அனுசரிப்பது என்பதில் நாம் உறுதியுடன் இருந்தாலன்றி எவ்வகையிலும் முன்னேறிவிட முடியாது. நமது கொள்கையின்படியே நாம் முற்றிலும் இருந்ததில்லை என்பதை அறிவேன். மோசமான தவறுகளும் இருந்திருக்கின்றன. நம் ஆயுதங்களில் குறைபாடு இல்லாதிருக்குமாயின் நாம் நமது லட்சியத்தை அடைந்திருப்போம். ஆனல், நமது கொள்கையை அனுசரிப்பதில் நாம் தவறுகள் செய்திருந்தாலும், வாயில்லாப் பூச்சிகளேயான கோடிக்கணக்கான மக்களிடம் அகிம்சை சந்தடியின்றி உணர்வை எழுப்பி வேலை செய்து வந்திருக்கிறது. எப்பொழுதும் இப்படியே நம்மால் இருந்து வர முடியும் என்பது முடியாது. நாம் சலனமற்று இருந்துவிட முடியாது. முன்னேறிப் போகவேண்டும் ; அப்படி இல்லாது போனல் பின்னல் வழுக்கி வீழ்ந்துவிடுவோம்.''

**நண்பர் :** அப்படியானல், ஆகஸ்டுப் புரட்சி, சுதந்திரப் போராட்டத்தில் ஒரு பின்னடைதலை உண்டாக்கியிருக்கிறது என்று நீங்கள் கருதுகிறீர்களா ? அதில் நம் மக்கள் காட்டியிருக்கும் எல்லாத் தீரமும் வீரமும் வீண் என்று கருதுகிறீர்களா ?

**காந்திஜி :** இல்லை. நான் அப்படிச் சொல்லவில்லை. சரித்திரப் போக்கிலே ஆகஸ்டு எழுச்சி* உள்பட ஒவ்வொரு

* 1942 ஆகஸ்டில் மகாத்மா காந்தியையும் மற்றத் தலைவர்களையும் கைது செய்து அடக்குமுறை அட்டூழியங்களில் அரசாங்கம் இறங்கியதும், மக்கள் எதிர்த்து வீறு கொண்டு எழுந்ததே ஆகஸ்டு எழுச்சி என்பது. பிரிட்டிஷ் ஆட்சியின் சின்னம் என்று

போராட்ட முறையினுலும் சுதந்திரத்தை நோக்கி நாடு முன்னேறியிருப்பதே காணப்படும். நான் சொன்னதெல்லாம், நான் கருதும் வகையிலான அகிம்சையின் வீரத்தை நாம் காட்டியிருப்போமாயின், முன்னேற்றம் இன்னும் அதிகமானதாக இருக்கும் என்பதே. இந்த வகையில் நாசவேலை நடவடிக்கைகள் நாட்டின் சுதந்திரத்தைப் பின்னுக்குக் கொண்டு வந்து விட்டன. ஜயப்பிரகாஷ் நாராயண் போன்றவர்களின் தீரம், தேசாபிமானம், தன்னலத் தியாக உணர்ச்சி ஆகியவைகளில் எனக்கு அதிக மதிப்பு உண்டு. ஆனல், ஜயப்பிரகாஷ் என் லட்சிய மனிதனுக இருக்க முடியாது. வீரத்திற்கு நான் ஒரு பதக்கத்தை அளிப்பதாயின், அது அவருடைய மனைவியைத் தான் அடையும்; அவரை அடையாது. அவருடைய மனைவி எளிமை மிக்கவளாகவும், ராஜீய விஷயங்களை அறியாதவளாகவும் இருந்தபோதிலும், சத்தியாக்கிரக சக்தியின் அப்பட்டமான உருவாகத் திகழ்பவள். அச்சக்தியின் முன்பு ஜயப்பிரகாஷும் வணங்கியே ஆகவேண்டும். ஆகஸ்டு எழுச்சியைக் குறித்து நான் கூறியிருப்பது, நடந்துபோனதைக் குறித்த ஒரு தீர்ப்பன்று; அதைக் கண்டிக்க நான் விடாமல் மறுத்து வந்திருக்கிறேன். ஆனல், வருங்காலத்திற்கு வழிகாட்டியாக இருக்கட்டும் என்பதற்கே அவ்வாறு செய்தேன்.

முடிவாக அந்நண்பர், "நம் மக்களுக்கு அகிம்சையில் நம்பிக்கை இருக்கிறது. ஆனல், அதைச் சக்தியுடன் இயக்கு

---

தாங்கள் கருதியவைகளை யெல்லாம் மக்கள் தாக்கினர். போலீஸ் ஸ்டேஷன்கள், தபாலாபீஸ்கள், ரெயில்வே ஸ்டேஷன்கள் ஆகியவைகளைத் தாக்கினர். தந்தி, டெலிபோன் கம்பிகளை அறுத்தார்கள்; ரெயில் தண்டவாளங்களை நீக்கிப் பாலங்களைச் சேதப்படுத்தினர். தலைவர்கள் சிறைப்படுத்தப்பட்டதை அடுத்த ஒரு வாரத்தில், அரசாங்க அறிக்கைகளின்படி, 250 ரெயில்வே ஸ்டேஷன்கள் நாசமாயின அல்லது சேதமடைந்தன; 500 தபாலாபீஸ்கள் தாக்கப்பட்டன. பிகாரிலும், உத்தரப் பிரதேசத்தின் கிழக்கு ஜில்லாக்களிலும் பல வாரங்கள் வரையில் ரெயில் போக்குவரத்தே முடியாதுபோயிற்று. மற்ற அரசாங்கக் கட்டிடங்களேயன்றி 150 போலீஸ் ஸ்டேஷன்கள் தாக்கப்பட்டன. மக்கள் தரப்பில், அரசாங்க அறிக்கைகளின்படி, ஆகஸ்டிலிருந்து நவம்பர் வரை 900 பேர் கொல்லப்பட்டனர்; அதற்கும் அதிகமானவர்கள் காயமடைந்தனர். நிராயுதபாணிகளான, தலைவர்களில்லாத மக்கள் மீது ராணுவமும் போலீஸும் 538 சந்தர்ப்பங்களில் சுட்டிருப்பதாக அரசாங்க அறிக்கைகளே கூறின. 538 சமயங்களில் சவுக்கடி தண்டனைகள் கொடுக்கப்பட்டன. கிராம மக்களுக்கு ரூ. 90 லட்சம் கூட்டு அபராதம் விதிக்கப்பட்டது. 1942 முடிவிற்குள் 60,000 பேர் கைதியானுர்கள். 20,000 பேர் தண்டனை அடைந்தார்கள். 18000 பேர் விசாரணையின்றிச் சிறைவைக்கப்பட்டார்கள். ஆயிரக்கணக்கான காங்கிரஸ் தொண்டர்கள் போலீஸாரிடம் பிடிபடாமல் தலைமறைவாகி ரகசியமாக வேலை செய்து வந்தார்கள். அவ்விதம் தலைமறைவாக இருந்து வேலை செய்தவர்களில் ஸ்ரீ. ஜயப்பிரகாஷும் ஒருவர். ஸ்ரீமதி அருணு ஆஸப் அலியும் தலைமறைவாக இருந்தார்.

வது எப்படி என்பது அவர்களுக்குத் தெரியவில்லை. இந்தத் தோல்விக்கு காரணம் என்ன ?" என்று கேட்டார்.

இதற்குக் காந்திஜி கூறிய பதிலாவது : "துன்பமிக்க பல ஆண்டுகளாக அதனை விடாமல் அனுசரித்து வந்ததனுல், அகிம்சையில் அமோக சக்தி இருப்பதை மக்கள் காணத் தொடங்கினர்கள். ஆனல், அதன் உருவத்தையும் அழகையும் அவர்கள் இன்னும் காணவில்லை. அகிம்சையைச் சரியான வகையில் ஏற்பாடு செய்வதற்கு எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளுக்கெல்லாம் அவர்கள் உடன்பட்டிருப்பார்களாயின், பதினெட்டு அம்சங்களைக் கொண்ட ஆக்கவேலைத் திட்டத்தில் ஒவ்வொன்றையும் முற்றிலும் நிறைவேற்றி வந்திருப்பார்களாயின், நமது இயக்கம் நம்மை லட்சியத்திற்குக் கொண்டு விட்டிருக்கும். ஆனல், இன்றே ஆக்க வேலையில் நமக்கு இருக்கும் நம்பிக்கை குறைவாக இருப்பதால் நம் மனம் குழப்பம் அடைந்திருக்கிறது. கஷ்டங்களைப் பொருட்படுத்தாமல் ஒருவர் முன்னேறியாக வேண்டும் என்பதை அறிவேன்."

[மதுரைக்குப் போகும் வழியில்
2--2--1946-இல் ரெயிலில் எழுதியது.] —'ஹரிஜன் - ' 10—2—1946

## 2

# கீழுக்குப் போய்க்கொண்டிருக்கிறேமா?

"சொந்த விருப்பு வெறுப்புகளுக்கும், ஆசைகளுக்கும், பொருமைகளுக்கும் நம் ஸ்தாபனத்தில் இடம் இருக்கக்கூடாது. ஆகையால், வெறுப்பு, துவேஷம், தனிப்பட்ட வாழ்க்கையிலும் பொதுப் பிரசங்கங்களிலுங்கூட பழி வாங்கும் குணம் ஆகியவை காங்கிரஸ்காரர்களிடையே சாதாரணமாகத் தென்படுவதோடு இதனல் கட்டுத்திட்டமின்மையும் காலித்தனங்களும் அதிகரித்துக்கொண்டு வருவதும் என் மனத்தை அதிகமாக வருத்தி வருகின்றது."

ஒரு நண்பர் எழுதியிருக்கும் நீண்ட கடிதத்திலிருந்து இப்பகுதி இங்கே கொடுக்கப்படுகிறது. அப்பெண்மணி சில சம்பவங்களையும் குறிப்பிட்டுத் தாம் கூறுவதை விவரிக்கிருர். ஆனல், என் காரியத்திற்குப் போதுமானதை இங்கே கொடுத்திருக்கிறேன். அவர் கூறும் ஒவ்வொரு வார்த்தையையும் நான் மனமார ஆமோதிக்கிறேன். நான் பத்திரிகைகளை நுட்பமாகப் படிப்பதில்லையென்றாலும், அவருடைய அனுபவத்தில் உண்மை இருக்கிறது என்று நம்புகிறேன். இப்பொழுது நாம் சுதந்திர உரிமை

யைப் பெறும் நிலைக்கு வந்திருப்பதால் புகார் கூறப்படும் தீமைகள் ஒழிந்து, ஆத்திரம், கட்டுப்பாடின்மை, பொது விஷயத்திலும் சொந்த விஷயத்திலும் பொறுமைகள் ஆகிய இவற்றிற்குப் பதிலாக அமைதியும், கண்டிப்பான கட்டுப்பாடும், ஒத்துழைப்பும், நல்லெண்ணமும் ஏற்பட வேண்டும். இன்றேல் சுயராஜ்ய இயந்திரத்தில் பிளவு கண்டு கலகலத்துப் போய் நமது வருங்கால நிலை சீர்கெட்டும் சகிக்க முடியாததுமாகி இப்பொழுது இருப்பதைவிட மோசமானதாகவும் ஆகிவிடும். மகிஷதாலில் நான் சொன்னது போலச் சுயராஜ்யத்தின் பிரகாசத்தை இந்தியாவின் எழுத்தறிவில்லாத கோடிக்கணக்கான மக்கள் உணர வேண்டும். இப்பொழுது இருக்கும் யதேச்சாதிகார அவசரச் சட்ட ஆட்சிக்கும், சுயராஜ்யத்தின் கீழ் அமையும் ஒழுங்கான, ஜனநாயக, அகிம்சை ஆட்சிக்குமுள்ள வித்தியாசத்தை அவர்கள் உணர வேண்டும். உண்மையான பொறுப்பு மக்களுக்கு வரும்போது, இந்நாட்டில் இருந்துவரும் அன்னிய ராணுவத்தின் பெரும் பளு நீக்கப்பட்டுவிடும்போது, நாம் சகஜமாகவும், கண்ணியமாகவும் கட்டுக்குப் பணிவந்தவர்களாகவும் இருப்போம் என்ற நம்பிக்கையுடன் இருக்கிறேன். முற்றிலும் போலியானதும் விபரீதமுமான ஒரு நிலையில் நாம் இப்பொழுது இருந்துகொண்டிருக்கிறோம். இதிலிருந்து நாம் சீக்கிரத்தில் வெளிப்பட்டுவிடுவது நமக்கும், ஆளுவோருக்கும், உலகிற்கும் நல்லது. ஆகையால், என் நண்பருக்கும், அவரைப் போன்று சிந்திப்பவர்களுக்கும் நான் ஒன்றுமட்டும் கூறுகிறேன். இவர்கள் மிகச் சிலரே ஆயினும், தாங்கள் நினைப்பதைக் கண்டிப்பாக நிறைவேற்றிக்கொண்டு வருவார்களாக.

[மதுரையிலிருந்து சென்னைக்கு ரெயிலில் வந்து
கொண்டிருக்கும்போது 4—2—1946-இல் எழுதியது.] —'ஹரிஜன்' - 10—2—1946

# 3

# அகிம்சை முறையும் போட்டி அரசாங்கமும்

*1942*-இல் ஆகஸ்டு எழுச்சியின்போது துன்பத் தீயை மிதுனபுரி* அனுபவித்ததைப் போன்று இந்தியாவின் வேறு எந்தப் பகுதியும் அனுபவிக்கவில்லை எனலாம். அப்பொழுது

* மிதுனபுரி வங்காளத்தில் ஒரு ஜில்லா. ஸ்ரீ மகாதேவ தேசாய் ஆகாகான் அரண்மனையில் திடீரென இறந்து விட்டார் என்பதை அறிந்து திடுக்குற்ற நாட்டு மக்கள் பல இடங்களில் கொதித்தெழுந்ததைப் போன்றே மிதுனபுரியிலும் கொதித்து எழுந்தனர். அங்கு ராணுவமும் போலீஸும் அம்மக்களை அடக்க அளவு கடந்த அட்டூழியங்களைச் செய்தன.

இயற்கையின் கோபாவேசத்தை மனிதனின் மிருகத்தனம் பூர்த்தி செய்துவிட்டது. அவர்கள் அனுபவித்த துன்பம் அவர்களைத் திருத்தியபோதிலும் மக்கள் உணர்ச்சியை ஒடுக்கி விடவில்லை. அங்கு நடந்த காந்திஜியின் பிரார்த்தனைக் கூட்டங்களுக்குச் சில சமயங்களில் லட்சத்திற்கு மேற்பட்ட மக்களும் வந்திருந்தார்கள். அப்பொழுது அவர்களிடம் காணப்பட்ட சிறந்த கட்டுப்பாடும், அவர்கள் முழு அமைதியுடன் இருந்ததும், அவர்கள் அனுபவித்த துன்பத்தினால் திருந்தியிருப்பதைக் காட்டின.

காந்திஜி மகிஷதாலுக்குச் சென்றிருந்தபோது மிதுனபுரி காங்கிரஸ் ஊழியர்கள் அவருடன் விவாதித்தனர். அகிம்சை, ஜாதீய சர்க்கார்* ஆகியவை இயற்கையாகவே இந்த விவாதத்தில் முக்கியமாக இருந்தன. மிதுனபுரி ஜில்லாவில் சுதாஹாடா, நந்திக் கிராமம், மகிஷதால், தாம்லுக் ஆகிய தாணுக்களில் 17-12-1942-இலும் 16-1-1943-இலும் ஜாதீய சர்க்கார்கள் அமைக்கப்பட்டன. காந்திஜி விடுதலையான பிறகு ரகசியம், தலைமறைவான வேலை ஆகியவைகளைக் குறித்து அவர் வெளியிட்ட அறிக்கை பிரசுரமானதும் 1944 ஆகஸ்டு 8-ஆம் தேதி அந்தச் சர்க்கார்கள் கலைக்கப்பட்டன. 1944 செப்டம்பருக்கெல்லாம் தலைமறைவாக இருந்து வந்த 150 ஊழியர்கள் பகிரங்கமாக வெளி வந்து தாங்களே அதிகாரிகளிடம் தங்களை ஒப்படைத்துக்கொண்டனர். மகிஷதாலுக்குக் காந்திஜி சென்றபோது அவரிடம் அந்த ஊழியர்கள் விரிவானதோர் அறிக்கையை அளித்தனர். ஆகஸ்டு எழுச்சியின்போது எவ்விதம் மக்கள் தாணுக்களைக் கைப்பற்றி, கச்சேரிகளைக் கொளுத்தி, போக்குவரத்துச் சாத்தியமாகாதபடி செய்து, போட்டிப் போலீஸ் படை, வேவுகாரர்கள் பகுதி, கோர்ட்டுகள் ஆகியவைகளை அமைத்தனர், அவற்றில் குற்றம் செய்தோரும், சமூகத்திற்கு விரோதமான செயல்களில் ஈடுபட்டவரும் 'சட்டப்படி' எவ்வாறு தண்டிக்கப்பட்டார்கள் என்பனவெல்லாம் அந்த அறிக்கையில் விவரமாகக் கூறியிருந்தனர். யாரையும் கொல்லுவதைக் கண்டிப்பாகத் தாங்கள் தவிர்த்து வந்ததாகவும், ஆகவே, அகிம்சையோடு தாங்கள் நடந்துகொண்டிருப்பதாகவும் கூறிக்கொண்டனர்.

பிறகு, போட்டி அரசாங்கம், நாச வேலை ஆகியவைகளைக் குறித்து காந்திஜியுடன் முழுவதும் விவாதித்தனர். அப்பொழுது காந்திஜி கூறியதாவது :

---

* ஜாதீய சர்க்கார் என்பது மக்கள் அமைத்துக்கொண்ட போட்டி அரசாங்கமாகும்.

"செய்யப்பட்டவை யாவும் சரியாகவே செய்யப்பட்டிருக்கின்றன என்றோ, அம்மாதிரிதான் செய்யப்பட்டிருக்க வேண்டும் என்றோ நான் கூற முடியாது. இதற்கு மாருக, அதில் பல காரியங்களைச் செய்திருக்கக் கூடாது. செயலற்றவர்களாக மக்கள் இருந்துவிடவில்லை என்பது திருப்திக்குரிய விஷயமானாலும், இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகும் காங்கிரஸின் கொள்கை என்ன என்பதை அவர்கள் அறியவில்லையென்றால், அது துக்கப்பட வேண்டிய விஷயமே. எண்ணிப் பாராமல் அவர்கள் செய்துவிட்டார்கள். அதன் தன்மைக்கேற்பவே அது நீடித்து இருக்க முடியவில்லை.

"எப்படி ஒரு ரெயில் பாதையைத் தகர்த்தீர்கள், ஒரு சாலையை உபயோகிக்க முடியாதபடி எப்படிச் செய்தீர்கள், எவ்விதம் ஒரு கச்சேரியைக் கொளுத்தினீர்கள், தாணாவைப் பிடித்துக் கொண்டீர்கள், போட்டி சர்க்கரை அமைத்தீர்கள் – இப்படியெல்லாம் உங்கள் அறிக்கைகளில் விரிவாகக் கூறியிருக்கிறீர்கள். அகிம்சை நடவடிக்கையின் முறைகளல்ல இவை. கொல்லுவது அல்லாத காரியமெல்லாம் அகிம்சையோடுகூடியதே என்று எண்ணிக்கொண்டுவிடும் பிசகை மக்கள் செய்திருக்கிறார்கள். சில சமயங்களில் கொல்லுவது பலாத்காரத்தின் மிகத் தெளிவான பகுதி. விஷமம் செய்கிறவனை உடனே நீங்கள் கொன்றுவிட்டால், அவனைப் பொறுத்தவரையில் அது அதோடு முடிந்த மாதிரி ஆகிறது. ஆனால், தொந்தரவு இழைத்துக்கொண்டே இருப்பதுதான் மிகவும் மோசமானது. அது விஷமத்தைப் போக்கிவிடவில்லை. இதற்கு மாருக, அது நம் தலைக்கே உலை வைத்துவிடுகிறது. அதிகாரிகள் வஞ்சந் தீர்த்துக்கொள்ள எழுந்தனர். எப்படியும் அவர்கள் வஞ்சந் தீர்த்துக்கொள்ளத் தானே பார்ப்பார்கள் என்று நீங்கள் சொல்லலாம். ஆனால், நாம் விரும்புவதோ அல்லது அடையப் பார்ப்பதோ அதுவன்று. அவர்கள் பீதியடையும்படி செய்வதனால் நமக்கு ஒரு லாபமும் இல்லை.

"*1942* ஆகஸ்டில் அதிகாரிகள் பீதி அடைந்தனர். இதற்குக் காரணம் நாமே என்று சொல்லுவதற்கு இடம் வைத்துவிட்டோம். தோல்வி என்ன என்பதையே அறியாதவர்கள் அவர்கள்; அடிப்படையில் அவர்கள் கோழைகளல்ல. ஆகையால், தாணாக்கள், கச்சேரிகள், பஞ்சாயத்துக் கோர்ட்டுகள் முதலியன உங்கள் கையில் விளையாட்டுப் பொம்மைகளாகக் கொஞ்ச காலத்திற்கு இருக்கவிட்டு வைத்தனர். தங்களை ஒழுங்குபடுத்திக்கொள்ளும் வேலையையெல்லாம் பூர்த்தி செய்துகொண்டதும்

அவர்கள் நம்மீது பழி வாங்க முழு வேகத்துடன் திரும்பிவிடு வார்கள். இந்த வழியில் இந்தியா சுதந்திரத்தை அடைந்து விட முடியாது. இதைத் திரும்பச் செய்யவும் கூடாது.

"இன்று நீங்கள் பிரிட்டனை மாத்திரமல்ல, மூன்று பெரிய வல்லரசுகளையே எண்ணிப் பார்க்க வேண்டியவர்களாக இருக் கிறீர்கள். அவர்களுடைய ஆயுதங்களைக் கொண்டு அவர்களுடன் நீங்கள் வெற்றிகரமாகப் போராட முடியாது. என்னதான் ஆனாலும், அணுக்குண்டுக்கு எதிராக உங்களால் ஒன்றுமே ஆகாது. எல்லா ரக ஏகாதிபத்தியங்களுடனும் போராடுவதற் குப் பழையவை யாகிவிட்ட பலாத்காரப் புரட்சிக்குப் பதிலாகப் புதிய யுத்த முறை ஒன்று நம்மிடம் இருந்தாலன்றி, உலகத் திலே இருக்கும் ஒடுக்கப்பட்ட இனத்தினருக்குக் கதிமோட்சத் திற்கு இடமே இல்லை.

"ருஷிய உதாரணத்தைக் கண்டு யாரும் தவறி மதி மயங்கவேண்டாம். நம் பழக்க வழக்கங்கள் ருஷிய முறை களுக்கு முற்றிலும் மாறுபட்டனவாகும். ருஷியாவில் மக்கள் எல்லோருமே ஆயுதபாணிகளாக இருந்தனர். ஆனால், இந்திய மக்களோ, அவசியமான பயிற்சியை அவர்களுக்கு அளிப்பதாக இருந்தாலும், ஆயுதம் ஏந்தமாட்டார்கள். முதல்தரமான ராணுவ நாடான ஜப்பானை ஒரேயடியாக நேசநாட்டினர் நிராயுத பாணியாக்கி யிருக்கும்போது, அத்தகைய பயிற்சியை நம் மக்களுக்கு அளிக்க நம்மை அவர்கள் அனுமதிப்பார்கள் என்று எண்ணுவது வீணே. இன்று ஜப்பான் வெற்றி கொண்டிருப்ப வரின் காலடியில் வீழ்ந்து கிடக்கிறது. ஆனால், அகிம்சைக்கோ தோல்வியே கிடையாது. ஆனால், அது போலியானதாக இல் லாமல் உண்மையானதாக இருக்கவேண்டும். அத்தகைய அகிம்சையை அனுசரிப்பதற்கு நான் ஒருவனே மிஞ்சி நின்றாலும் அதற்காக நான் ஒரு சொட்டுக் கண்ணீரும் சிந்தமாட்டேன்."

"ஏதோ நாங்கள் செய்தோம்; துன்பங்களையும் அனுபவித் தோம்" என்று கூறிய அந்நண்பர்கள், "எங்களுடைய சக்திகள் சரியான வழியில் போயிருக்கின்றனவா, பொதுஜன விழிப்புத் தவறான வழியில் திருப்பப்பட்டிருக்கிறதா என்பதைச் சந்தே கிக்க ஆரம்பித்திருக்கிறோம். ஆனால், அகிம்சைப் புரட்சி, அதி காரத்தைக் கைப்பற்றும் ஒரு வேலைத் திட்டமல்லவா?" என்றும் கேட்டனர்.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: "தவறு இதில்தான் இருக்கிறது. ஓர் அகிம்சைப் புரட்சி, 'அதிகாரத்தைக் கைப்

பற்றும்' வேலைத் திட்டமல்ல. உறவுகளில் மாறுதல் ஏற்படும் படி செய்து, அமைதியான முறையில் அதிகார மாற்றம் ஏற் படும்படி செய்யும் வேலைத்திட்டமே அது. பம்பாயில் நடந்த அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் ஆகஸ்டு 8-ஆம் தேதியன்று நான் பேசியபோது எடுத்துக் காட்டிய ஐந்து வழிகளையும் மக்கள் முற்றிலும் நிறைவேற்றியிருப்பார் களாயின், சரியான அகிம்சைச் சூழ்நிலையும் இருந்திருந்தால், அரசாங்கத்தின் அடக்குமுறைச் சக்தி பலமற்றதாக ஆகிப் போய்த் தேசீயக் கோரிக்கைக்கு உடன்பட்டுவிடும்படி அது கட்டாயப்படுத்தி இருக்கும். அன்னியப் படையெடுப்பின் காரணமாகவோ அல்லது அத்தகைய வேறு காரணங்களினாலோ ஆட்சியாளர் அதிகாரத்தைக் கைவிட்டுப் போய் ஒரு வெற்று நிலை உண்டாகியிருந்தால், இயற்கையாகவே மக்கள் ஸ்தாபனம் அதன் வேலைகளை மேற்கொண்டிருக்கும். ஆனால், அத்தகைய ஜாதீய சர்க்காருக்கு, அகிம்சையையும் மக்கள் ஆணையை நிறை வேற்றுவதையும் தவிர வேறு அதிகாரம் எதுவுமில்லை. அது பலவந்தத்தை ஒரு நாளும் உபயோகிக்காது. மாறுபட்ட கருத் துடையவர்கள்கூட அதன் கீழ் முழு அளவுப் பாதுகாப்பையும் அடைவார்கள்.''

பலவந்த முறையுடன் ஒப்பிட்டால் அகிம்சை முறைக்கு அதிக சக்தி நிச்சயமாக உண்டு என்பதற்கு உதாரணமாகக் காந்திஜி பர்டோலி விஷயத்தைக் குறிப்பிட்டார். மிதுனபுரியில் ஆரம்பக் கட்டங்களில் சில அதிகாரச் சின்னங்களைக் கைப்பற்றிக் கொள்ளுவதில் அவர்கள் வெற்றி பெற்றாலும், அந்த வெற்றியின் பலனை விடாமல் வைத்துக்கொண்டிருக்க அவர்களால் முடியவில்லை. ஆனால், பர்டோலியிலோ, தாங்கள் போராட்டத் தில் பெற்ற வெற்றியின் பலனை விடாமல் வைத்துக் கொண்டிருக்கச் சத்தியாக்கிரகிகளால் முடிந்தது. காந்திஜி மேலும் கூறியதாவது: ''மேலும், பெண்களிடம் பலாத்காரம் நடந்ததைத் தடுக்க உங்களுடைய வீரத்தினால் ஆகவில்லை என்பதையும் நீங்கள் கண்டீர்கள். அது இப்பொழுது பொறுக்க முடியாதது. கெட்ட எண்ணத்தோடு அவர்களை நோக்க எவனாலும் முடியாமல் இருக்க வேண்டும். இதற்கு உயர்ந்த வகையான வீரம், அதாவது அகிம்சை தேவை. சாவதன் மூலமும் எதிர்ப்பை அளிக்கவல்லது அது. அதற்கு எதிராக ஆக்கிரமிப்புச் சக்தி நிலைக்க முடியாது. இதைச் செய்யவே நான் முயன்றுகொண்டிருக்கிறேன். இதற்கு நாளாகலாம். கோடிக்கணக்கானவர்களுக்கு இந்த உயர்வான வீரம் ஏற்படும்

படி செய்வதற்கு நெடுநாளாகும். இந்த வகையான அகிம்சை எப்பொழுதாவது செயலில் வருமா, வராதா என்பது எனக்குத் தெரியாது. ஆனால், அகிம்சையில் இத்தனை ஆண்டுகளாகப் பயிற்சி பெற்று வந்திருக்கும் நீங்கள், அகிம்சை அதற்குரிய எல்லாப் பிரகாசத்தையும் உங்கள் வசத்தில் காட்ட வேண்டும் என்பதை நீங்கள் உணர வேண்டும்.''

பிறகு அவர்கள் சரியான வழியில் எப்படி ஆரம்பிப்பது என்பதை அறிய விரும்பினார்கள். இதற்குப் பதிலளிக்கையில் காந்திஜி, ராட்டையைப் பதினெட்டு அம்சங்கள்' கொண்ட ஆக்க வேலைத் திட்டத்தின் சின்னமாகவும் நடுநாயகச் சூரியனாக'வும் கைக்கொள்ளுமாறு அறிவித்தார். சமூக ஐக்கியத்தையும் அகிம்சைக் கட்டுப்பாட்டையும் அடைவதற்கு அதுவே சிறந்த வழி. தீமையின் தன்மைகளை ஒதுக்கி, அதன் வலிமையை ஒடுக்குவது அகிம்சை நடவடிக்கையின் முறையில் அடங்கியிருக்கிறது. அகிம்சை அடிப்படையிலுள்ள ஜாதீய சர்க்கார், அரசாங்க அதிகாரிகளை நிர்ப்பந்தத்திற்கு உட்படுத்தாது; ஒன்று, அவர்கள் மக்களுடன் ஒன்றுபட்டுவிட வேண்டும்; அல்லது அன்னிய அரசாங்கத்தின் கட்டளைகளைக் கலப்பற்றதான காட்டுமிராண்டித்தனத்துடன் நிறைவேற்றி வைக்கும் அவசியத்திற்கு இடம் அளித்து, அதனால் அவர்களே வெறுப்புற்று உத்தியோகத்திலிருந்து விலகிக்கொண்டுவிட அவர்களைத் தனியாக விட்டுவிட வேண்டும். அவர்களுடைய உறவினரும் அன்பர்களும் அவர்களைக் கைவிட்டு விடுவார்கள். மக்களில் யாரும் அநியாயத்தின் கீழோ, மற்றவர்கள் செய்யும் தவறுகளுக்கோ உள்ளாகித் துன்பப்படவில்லை என்பதை இது காட்டுகிறது. தீண்டாமை, பிறரைச் சுரண்டி வாழ்வது, வகுப்புத் துவேஷம் ஆகியவைகளுக்கு ஜாதீய சர்க்காரில் இடமில்லை. அப்படி இருப்பின் தன்னுள்ளேயே பகையும் பிரிவும் அதிகமாகி அது வீழ்ச்சியடையும்.''

சேவா கிராமம், 9—2—1946 — 'ஹரிஜன்' - 17—2—1946

4

# துவேஷத்தைத் திருப்புவது எப்படி?

துவேஷம் எங்கும் இருக்கிறது. தேசத்தை நேசிக்கும் ஆத்திரக்காரர்கள், அவர்களால் முடிந்தால், பலாத்காரத்தின் மூலம் சுதந்திரத்தை அடைவதற்கு இந்நிலைமையைச் சந்தோஷமாகவே பயன்படுத்திக்கொள்ளுவார்கள். எந்தக் காலத்

திற்குமே, எல்லா இடங்களுக்குமே அது தவருனது என்று நான் கூறுகிறேன். ஆனல், சுதந்திரத்திற்காகப் போராடுகிற வர்கள் தங்கள் கொள்கை சத்தியமும் அகிம்சையும் என்று உலகத்திற்குச் சொல்லி வரும் ஒரு நாட்டில் இது இன்னும் தவருனதும் நேர்மையற்றதுமாகும். துவேஷத்தை அன்பாக மாற்றிவிட முடியாது என்று அவர்கள் வாதிக்கிருர்கள். பலாத் காரத்தில் நம்பிக்கை இருப்பவர்கள், 'அவசியத்திற்கு ஏற்ற படி பகிரங்கமாகவோ அல்லது ரகசியமாகவோ உங்கள் எதிரி யைக் கொல்லுங்கள். அவனுக்கும் அவன் சொத்துக்கும் நஷ் டத்தை உண்டு பண்ணுங்கள்' என்று சொல்லிக்கொண்டு இயல் பாகவே இதை உபயோகித்துக்கொள்ளுவார்கள். இதன் பலன் துவேஷம் அதிகமாவதும் பதிலுக்குத் துவேஷம் உண்டாவ தும், இரு தரப்பிலும் வஞ்சந் தீர்த்துக்கொள்ள முற்படுவ துமே ஆகும். சமீபத்தில் மூண்ட யுத்தத் தீ இன்னும் அணைந்துவிடவில்லை. துவேஷத்தைப் பயன்படுத்தும் வழி பய னற்றது என்பதை இந்த யுத்தம் தெளிவாகவே அறிவிக்கிறது. இதில் வெற்றி பெற்றவர்கள் எனக் கூறப்படுவோர் உண்மை யிலேயே வெற்றி பெற்றிருக்கின்றனரா அல்லது தங்களுடைய எதிரிகளைச் சோர்வுறச் செய்ய முயன்றதில் தாமே மனச்சோர்வு அடைந்திருக்கிருர்களா என்பதை இனித்தான் பார்க்கவேண் டும். எப்படியிருந்தாலும் இது ஒரு தீமைமிக்க விளையாட்டே. இவ்வுதாரணத்தை வைத்துக்கொண்டு இதைச் சற்று மாற்றி நம் நாட்டிலிருக்கும் செயல்முறையில் நம்பிக்கை உள்ள அறிஞர் கள், 'நம் எதிரியை நாம் கொன்றுவிடக் கூடாது; ஆனல், அவன் சொத்துக்களை அழித்துவிட வேண்டும்' என்கிருர்கள். 'அவன்' சொத்து என்று நான் கூறும்போது அவர் களுக்கு நான் ஒரு வேளை அநீதி செய்வதாகும். ஏனெனில், எதிரி என்று சொல்லப்படுகிறவர் தமக்குச் சொந்தமான சொத்து எதையும் கொண்டு வரவில்லை, தாம் கொண்டுவரும் அச்சிறு உடைமைகளுக்கும் நாம் பணம் கொடுக்கும்படி செய்திருக் கிருர் என்பதே இதிலுள்ள விசேடம். ஆகையால், நாம் அழிப்பனவெல்லாம் நம் உடைமைகளேயாம். அதில் பெரும் பகுதியை-ஆட்களையோ அல்லது சாமான்களையோ, அவர் இங்கே உண்டாக்குகிருர். உண்மையில் அவருக்கு உள்ளதெல்லாம் அதைக் காத்துவரும் உரிமை ஒன்றுதான். அழிப்பதிலுங் கூட நாம் அதிக அளவு நஷ்டப்பட வேண்டியிருக்கிறது. ஒரு பாவமும் அறியாதவர்கள் இந்த நஷ்டத்துக்கு ஈடு செய்ய வேண்டியவராகிருர்கள். தண்டனை வரியும், அதனல் ஏற்படு பவைகளுமே அதன் விளைவு. ஆகையால், கொல்லாமை

என்ற பொருளில் அகிம்சையானது பலாத்கார முறையைவிட சிலாக்கியமாகி விடும் என எனக்குத் தோன்றவில்லை. கொஞ்சங் கொஞ்சமாகச் சித்திரவதை செய்வது என்பதே அதன் பொருளாகிவிடும்; இப்படி மெதுவாகச் செய்வது பலனில்லாமற் போகும்போது உடனே கொல்லுவதும் அணுக்குண்டு போடுவதுமான நிலைக்கு வந்து விடுவோம். அணுக்குண்டே இம்சை முறைக்கு இன்று உலகில் உயர்ந்த எடுத்துக்காட்டாக இருந்து வருகிறது. இதனாலேயே பகைமையைச் சரியான வழியில் திருப்புவதற்கு அகிம்சையையும் தவிர்க்க முடியாதபடி அதனுடன் சேர்ந்ததான சத்தியத்தையும் உபயோகித்துக்கொள்ளுமாறு 1920-இல் கூறினேன். துவேஷம் கொண்டிருப்பவர், துவேஷத்திற்கென்றே அப்படிச் செய்யவில்லை. தம் வெறுப்புக்கு ஆளானவர்களைத் தம் நாட்டிலிருந்து விரட்டவேண்டுமென்பதனாலேயே துவேஷம் கொள்ளுகிறார். ஆகையால், பலாத்கார முறையைப் போலவே அகிம்சை முறையினாலும் அவர் தாம் விரும்புவதை அடைய முடியும். நாம் இழந்துவிட்ட சுதந்திரத்தைத் திரும்ப அடைவதற்கு இம்சை முறையைவிட அகிம்சை முறையே சிறந்தது என்று சென்ற இருபத்தைந்து ஆண்டுகளாகக் காங்கிரஸ், விரும்பியோ அல்லது விரும்பாமலோ மக்களுக்குக் கூறி வந்திருக்கிறது. முன்பெல்லாம் இருந்ததைவிட மக்கள் மனத்தை, அதிக துரிதமாகவும், மிகுதியான அளவிலும் அகிம்சையை அனுசரிப்பதன் மூலம் அடைய முடிகிறது என்பதை நமது முன்னேற்றத்தினால் கண்டுகொண்டும் இருக்கிறோம். என்றாலும், உண்மையைக் கூற வேண்டின், நமது அகிம்சை நடவடிக்கை அரை மனசுள்ளதாகவே இருந்து வந்திருக்கிறது. பலர் இம்சை எண்ணத்தை உள்ளத்தில் வைத்துக்கொண்டு அகிம்சையை உதட்டளவில்தான் உபதேசம் செய்து வந்திருக்கிறார்கள். ஆனால், கபடம் அறியாத பொது மக்களின் மனம், நம் உள்ளத்தில் மறைந்திருப்பதன் ரகசியப் பொருளைக் கண்டுகொண்டது. ஆகையால், அவர்கள் உள்ளங்களில் எந்த விதமான ஆதரவு ஏற்பட்டிருக்க வேண்டுமோ அது அவர்களையும் அறியாமல் ஏற்படவில்லை. கபடம், நற்குணம் போல் நடித்திருக்கிறது. ஆனால், நற்குணத்தின் இடத்தில் அதனால் வீற்றிருக்க முடியாது. ஆகவே, அகிம்சைக்கு, இன்னும் அதிக அளவு அகிம்சைக்கு நான் வாதாடுகிறேன். அறியாமல் நான் அப்படிச் செய்யவில்லை; எனக்கு இருக்கும் அறுபது ஆண்டு அனுபவத்துடனேயே கூறுகிறேன். வாயில்லாப் பூச்சிகளேயான பொது மக்கள் இன்று பட்டினி

கிடைப்பதால், இது நெருக்கடியான சமயம். நாட்டின் இப் பொழுதுள்ள தேவைகளுக்கு அகிம்சையின் சக்தியை எந் தெந்த வகையிலெல்லாம் உபயோகித்துக்கொள்ளலாம் என் பதைக் குறித்து அறிவுள்ள வாசகர்களுக்குப் பல வழிகள் தாமே தோன்றும். இந்திய தேசீய ராணுவம் இப்பொழுது நம் மனத்தை வசியம் செய்துகொண்டிருக்கிறது. நேதாஜியின் பெயர் மந்திர சக்திபோல் யாரையும் கவரவல்லது. அவ ருடைய தேசாபிமானம் யாருடைய தேசாபிமானத்திற்கும் குறைந்ததன்று (இங்கு நான் நிகழ்காலத்தை உபயோகிக் கிறேன்) அவருடைய எல்லாச் செய்கைகளிலும் வீரம் பிரகா சிக்கிறது. உயர்வான செயல் புரிய முயன்றூர். ஆனல், தவறிவிட்டார். யார்தாம் தவறவில்லை? உயர்ந்த காரியத் தைச் செய்யவே முயலுகிறோம்; எல்லாருக்குமே வெற்றி கிட்டி விடுவதில்லை. என் பாராட்டலும் போற்றுதலும் இதற்குமேல் செல்லா. ஏனெனில், அவருடைய செயல் தோல்வியடைந்தே தீரும் என்பதை அறிவேன். அவர் தமது இந்திய தேசீய ராணுவத்தை வெற்றியுடன் இந்தியாவுக்குக் கொண்டு வந் திருந்தாலும் நான் இதையே கூறியிருப்பேன். ஏனெனில் இந்த வகையில் பொதுமக்கள் சுதந்திரம் அடைந்தவர்களாகி யிருக்க மாட்டார்கள். தன்னலத் தியாகம், இனம், வகுப்பு இவையெல்லாம் மீறிய ஒற்றுமை, கட்டுப்பாடு ஆகியவற்றின் படிப்பினையை நேதாஜியும்,அவருடைய ராணுவத்தாரும் நமக்குக் கொண்டு வந்திருக்கிறூர்கள். விவேகத்துடன் பகுத்தறிவோடும் நாம் போற்றுவோமானல், இந்தப் பண்புகள் மூன்றையும் நாம் கண்டிப்பாகக் கடைப்பிடிப்போம். ஆனல், பலாத்காரத்தைக் கண்டிப்பாக உறுதியுடன் தள்ளுவோம். இந்திய மக்களை அடிமைத்தனத்திலிருந்து தம் ஆயுத பலத்தைக் கொண்டு தம்மால் விடுவிக்க முடியும் என்று நேதாஜி படையினர் ஒருவர் எண்ணவோ அல்லது கூறவோ இடந் தர மாட்டேன். ஆனல், அவர் நேதாஜியிடம் உண்மையாக இருப் பவராயின், நாட்டிற்கும் உண்மையோடு இருப்பவராயின் பொதுமக்கள் ஆண்கள், பெண்கள், குழந்தைகளுட்பட எல் லோரும் தீரத்துடன் இருக்குமாறும் தன்னலத் தியாகம் செய்யுமாறும், ஒற்றுமையுடன் இருக்கும்படியும் போதிப்பதில் தம்மை ஈடுபடுத்திக்கொள்ளுவார். அப்பொழுது அவர் உல கத்தின் முன்பு நிமிர்ந்து நிற்க முடியும். ஆனல், ஆயுதம் தாங்கிய சிப்பாயாக மாத்திரமே அவரால் செயல் புரிய முடியுமானல், மக்களிடம் மாத்திரமே அந்தப் பெருமையைக் காட்ட அவரால் முடியும். ஆனல் தாமே விரும்பிச் சிப்பாயாக

விளங்கும் ஒரு மதிப்பு, அவருக்கு இராது. ஆகையால்' காப்டன் ஷா நவாஜ் கூறியிருப்பதை நான் வரவேற்கிறேன். நேதாஜியின் பெருமைக்குப் பங்கம் வராமல் இருப்பதற்காக இந்திய மண்ணில் அடிவைத்த பிறகு அவர் காங்கிரஸ் தளத்தில் பணிவுள்ள அகிம்சைச் சிப்பாயாகவே தாம் பணியாற்றப் போவதாகக் கூறுவதை நான் வரவேற்கிறேன்.

சேவா கிராமம், 15—2—1946 —'ஹரிஜன்' - 24—2—1946

# 5

# நேதாஜி படையினருக்குச் செய்தி

## 1

கைதிகளாக இருந்து விடுதலையான நேதாஜிப் படையினரைப் போய்ப்*பார்த்துவிட்டு வந்த மறுநாள் மாலை பிரார்த்தனைக் கூட்டத்தில் காந்திஜி கூறியதாவது :

"நேற்று முதல் என் மனத்தில் எழுந்திருக்கும் எண்ணங்களை உங்களுடன் பகிர்ந்துகொள்ளுகிறேன். விடுதலையான நேதாஜிப் படையினருக்கு இந்தியா சிறந்த வரவேற்பை அளித்திருக்கிறது. தேசீய வீரர்கள் என்று அவர்கள் போற்றப்பட்டிருக்கிறார்கள். எழுந்த பொதுஜன உணர்ச்சியின் வேகத்தில் ஒவ்வொருவரும் நிதானத்தை இழந்துவிட்டார்கள் எனத் தோன்றுகிறது. என்றாலும், ஆராய்ந்து பாராத இந்த வீர வணக்கத்தில் நானும் பங்கு கொள்ள முடியவில்லை என்பதை மனம் விட்டு நான் ஒப்புக்கொள்ள வேண்டும். இந்திய தேசீய ராணுவத்தினர், நேதாஜி போஸின் திறமை, தியாகம், தேசாபிமானம் ஆகியவைகளை நான் பாராட்டுகிறேன். ஆனால், அவர்கள் அனுசரித்த முறையை நான் அங்கீகரிக்க முடியாது. சுதந்திரத்தை அடைவதற்காகக் காங்கிரஸ் சென்ற இருபத்தைந்து ஆண்டுகளாக மேற்கொண்டு வந்திருக்கும் முறைக்கு

* இரண்டாவது உலக யுத்த ஆரம்ப காலத்தில் இந்தியாவிலிருந்து திடீரென மறைந்துவிட்ட ஸ்ரீசுபாஷ் சந்திர போஸ் எப்படியோ ஜெர்மனிக்குப் போய் அங்கிருந்து ஜப்பானுக்குச் சென்றுவிட்டார். மலேயா ஜப்பானியரிடம் பிடிபட்டதும் அங்கு யுத்தக் கைதிகளாக பிரிட்டிஷார் விட்டுப்போன இந்திய ராணுவத்தினரையும் மலாயா வாழ் இந்தியரையும் கொண்ட ராணுவத்தைத் திரட்டி, பர்மா வழியாக இந்தியாமீது படையெடுத்தார். அந்த ராணுவமே நேதாஜிப் படை அல்லது இந்திய தேசீய ராணுவம் என்பது. அந்தமானில் தாற்காலிகமாக இந்திய சுதந்திர அரசாங்கத்தை அமைத்துக் கொண்ட இப்படையினர் இந்திய எல்லைக்குள் அஸ்ஸாமில் இம்பாலில் புகுந்தும் போராடினர். ஜப்பான்மீது அணுக்குண்டு வீழ்ந்து ஜப்பான் போரில் சரணாகதி யடைந்த பிறகு நேதாஜிப்படையினரும் பின் வாங்கவேண்டியதாயிற்று. யுத்தம் நின்றதும் இப்படையினரைக் கைது செய்து இந்தியாவுக்குக்கொண்டு வந்து வைத்திருந்தபோதே காந்திஜி இவர்களைச் சந்தித்துப் பேசினார். பின்னர் இப்படையினர் விடுதலையாயினர்.

விரோதமானது அம்முறை. 'ஸ்திதப்பிரக்ஞன்' (நிதானம் தவருத அறிவாளி) அதாவது, ஒரு சத்தியாக்கிரகியைப்பற்றி நேற்று உங்களுக்குச் சொன்னேன். அந்த லட்சியத்தை நாம் ஏற்றுக்கொள்ளுவதாயின், யாரையுமே எதிரிகளாக நாம் கருதோம். எல்லா விரோதத்தையும் கெட்ட எண்ணத்தையும் நாம் விட்டுவிட வேண்டும். அந்த லட்சியம் முனிவர்கள், மகான்கள் போன்ற ஒரு சிலருக்கு மாத்திரம் இருப்பது அன்று; எல்லோருக்கும் உரியது அது. என்னை நானே தோட்டி என்று கூறிக்கொண்டிருக்கிறேன். நான் போனிக்ஸில் இருந்த போது பெயரளவிலே அன்றி உண்மையாகவே தோட்டியாகவும் இருந்திருக்கிறேன்.* தாழ்ந்தோரிலும் தாழ்ந்தோராக இருப்பவரில் நானும் ஒருவனுக இருக்க வேண்டும் என்ற உள்ளத்தின் வேட்கையால் தூண்டப்பெற்று அங்கு வாளியையும் துடைப்பத்தையும் கையில் எடுத்துக்கொண்டேன். ஆகவே, பணிவுள்ள பாட்டாளி என்ற வகையில் உங்களுக்கு ஒன்று உறுதியாகக் கூறுகிறேன். சாதாரணமான எளிய கிராமவாசியும் அவர் விரும்பினுல், அதற்கு முயன்ருல், இன்று பிரார்த்தனையில் கூறப்பட்ட கீதையின் வாக்கியங்களில் விவரிக்கப்பட்டிருக்கும் சமமன நிலையை அடைய முடியும். ஒப்புக்கொள்ள நாம் சிரத்தைகொள்ளாவிடினும், அது நமக்குத் தெரியாமலேயே இருப்பினும், சிலவேளையில் நாம் நமது புத்தியை இழந்து விடுகிருேம். நிதானமான புத்தியை உடையவர், ஒரு குழந்தையிடங்கூடத் தமது பொறுமையை இழந்துவிட மாட்டார்; கோபமடையவோ அல்லது வசவில் இறங்கவோ மாட்டார். கீதையில் உபதேசிக்கப்படும் தருமம் இந்த வாழ்விலேயே பின்பற்ற வேண்டியதாகும். நீங்கள் இங்கே செய்வதெற்கெல்லாம் பிரதிபலனுக அடுத்த ஜன்மத்தில் உயர்வை அடைவதற்கான முறையே அன்று அது. அப்படிப்பட்டது தருமத்திற்கே மறுப்பாகும்.

"சிறையில் வைக்கப்பட்டிருந்த இ. தே. ரா.-வினரைப் போய் நான் பார்த்தது என்னைப் பொறுத்தவரையில் ஒரு கடமையைப் பற்றியதாகும். அவர்களைச் சந்திக்க முடிந்தது எனக்கு மிகுந்த திருப்தியை அளித்தது. அவர்களும் என்னை மிக்க அன்போடு வரவேற்ருர்கள். அந்த அன்பை நான் என்றும் மறவேன். நாட்டிடம் பற்றுள்ள சேவகன் நான் என்பதை அவர்கள் ஒப்புக்கொள்ளுகிருர்கள் என்பதற்கு அறிகுறியாகவே அவர்களுடைய வரவேற்புக்கு நான் பொருள் கொள்ளுகிறேன்.

* மகாத்மா காந்தி நூல்கள் முதல் தொகுப்பு - 316-ஆம் பக்கம் காண்க.

"நேதாஜி எனக்கு ஒரு மகன் மாதிரி. காலஞ் சென்ற தேசபந்து தாஸின்* தலைமையின்கீழ் முன்னுக்கு வரக்கூடிய தளபதியாக அவர் இருந்த சமயத்தில் அவரைப்பற்றி நான் அறிய நேரிட்டது. இ. தே. ரா-வினருக்கு அவர் கடைசியாக விடுத்த செய்தியில், அன்னிய மண்ணில் அவர்கள் ஆயுதங்களுடன் போராடினார்கள், இந்தியாவுக்குத் திரும்பியதும் காங்கிரஸின் தலைமையில், அது காட்டும் வழியில் அகிம்சைப் போர்வீரர்களாக நாட்டுக்குச் சேவைசெய்ய வேண்டும் என்று கூறியிருக்கிறார். இ. தே. ரா. இந்தியாவுக்குக் கூறும் செய்தி, தகராறுகளைத் தீர்த்துக்கொள்ளுவதற்கு ஆயுதங்களை மேற்கொள்ளும் முறையை உபதேசிப்பது அல்ல (அது பரீட்சிக்கப்பட்டுப் பயனற்றதெனத் தெரிந்துவிட்டது). அகிம்சை, ஒற்றுமை, பற்று, கட்டுப்பாடு ஆகியவைகளை வளர்ப்பதேயாகும்.

"இ. தே. ரா-வினர் அவர்களுடைய உடனடி நோக்கத்தில் தோற்றிருக்கலாம். ஆனால், அவர்கள் பெருமைப்படுவதற்கான விஷயங்கள் அவர்களிடம் எவ்வளவோ இருக்கின்றன. இந்தியாவின் எல்லா மதங்களையும் ஜாதிகளையும் கொண்டவர்கள் ஒரு கொடியின்கீழ் ஒன்றாகக் கூடி, வகுப்பு அல்லது மத உணர்ச்சியை அடியோடு நீக்கிவிட்டு ஒன்றாகும் ஒற்றுமை உணர்ச்சியை அவர்களுக்கு ஊட்டியது அவைகளில் சிறப்பு மிகுந்ததாகும். நாம் எல்லோரும் பின்பற்ற வேண்டிய உதாரணம் அது. போராடும் உற்சாகத்திலும் உணர்ச்சியிலும் இதை அவர்கள் செய்திருப்பார்களெனின் அது பெரிதல்ல. சமாதானத்திலும் அது தொடர்ந்து இருந்து வர வேண்டும். அதுதான் மேலானதும் மிகக் கஷ்டமானதுமான வேலை. கொல்லாமலும் நமது கடமையைச் செய்துகொண்டும் நாம் சாக வேண்டும். இதற்குக் கீதையில் கூறப்பட்டிருக்கும் ஸ்திதப்பிரக்ஞனுக்குரிய குணங்களை நாம் பழகிக்கொள்ள வேண்டும்.

"வாளின் வன்மையைவிடச் சத்தியாக்கிரகத்தின் வலிவு இன்னும் அதிக சக்தி வாய்ந்தது. இ. தே. ரா. படையினருக்கு இதை நான் கூறினேன். இதைத் தாங்கள் உணர்ந்துகொண்டிருப்பதாகவும் காங்கிரஸ் கொடியின் கீழ் உண்மையான அகிம்சைப் போர்வீரர்களாகச் சேவை செய்ய இனிப் பாடுபடுவதாகவும் அவர்கள் என்னிடம் ஆனந்தத்தோடு கூறியதையும் கேட்டேன்."

புது டில்லி, 8—4—1946

— 'ஹரிஜன்' - 14—4—1946

* பிரபல வங்கத் தலைவர், ஸ்ரீ சித்தரஞ்சன் தாஸ்.

## 2

செங்கோட்டையில் சில தினங்களுக்கு முன்னால் இ. தே. ரா. படையினருடன் நான் பேசிக்கொண்டிருந்தேன். விடுதலையான பிறகு அவர்கள் என்ன செய்ய வேண்டும் என்பதைக் குறித்து விவாதித்தோம். விடுதலையானதும் காங்கிரஸ் கொடியின்கீழ் உண்மையான அகிம்சைப் போர்வீரர்களாக இந்தியாவுக்குச் சேவை செய்வதாக என்னிடம் அவர்கள் உறுதி கூறினர். உடுக்கத் துணிகூட இராதவருக்குத் துணி கொடுக்க நூற்பவனும், நெருங்கிவரும் உணவுப் பஞ்சத்தைச் சமாளிப்பதற்கு நிலத்தை உழுது அதிகமாக உணவை உற்பத்தி செய்பவனும் இன்று இந்தியாவின் உண்மையான போர்வீரனாவான் என அவர்களுக்குச் சொன்னேன். அகிம்சை முறையைக் கொண்டு இந்தியாவின் சுதந்திரப் போராட்டத்தை நடத்தி வருவதென்று காங்கிரஸ் அறிவித்திருக்கிறது. ஆனால், ஏற்படக்கூடிய அன்னிய ஆக்கிரமிப்பிலிருந்து அந்தச் சுதந்திரத்தைப் பாதுகாக்கவும் அந்த முறையையே அது பின்பற்றுமா என்பதைக் குறித்துக் காங்கிரஸ் இன்னும் முடிவு செய்யவில்லை. உடல் வலுவில் மிக்க பலவீனமாக இருப்பவரும், முடவரும், நொண்டியும் சமமாகச் சுதந்திரத்தில் பங்குகொள்ளுவதாயின், அந்தச் சுதந்திரத்தைப் பாதுகாப்பதிலும் அவர்கள் சமமான உதவியைச் செய்வதாக இருக்க வேண்டும். இது எனக்குத்தானாகவே தெளிவான உண்மையாகும். யுத்தத் தளவாடங்களிலேயே இதற்கு நம்பிக்கை வைப்பதாயிருந்தால் இது எவ்விதம் சாத்தியமாகும் என்பது எனது எளிய புத்திக்கு விளங்கவில்லை. ஆகையால், அகிம்சை, அதாவது சத்தியாக்கிரகம் அல்லது ஆத்ம சக்தியே அதற்கு ஏற்றது என்று சத்தியம் செய்வேன். அப்படித் தொடர்ந்து செய்தும் வருவேன். உடல் சக்தியின்மை அதில் ஓர் இடையூறு அன்று. ஒரு பலவீனமான பெண்ணோ அல்லது குழந்தையோகூட, அதிக சக்தி வாய்ந்த ஆயுதங்களுடன் இருக்கும் அரக்கனையும் சமமான முறையில் அப்பொழுது எதிர்த்து நிற்க முடியும்.

நூற்கும் ராட்டையை நடுநாயகமாகக் கொண்ட பதினெட்டு அம்சங்களைக் கொண்ட ஆக்க வேலைத் திட்டம், கட்டுப்பாட்டுடன் அமைந்த சமூகத்தின் அந்த உணர்ச்சியைச் சரியான வகையில் காட்டுவதாகும். தேசீய வார காலத்தில் அந்த ஆக்க வேலைத் திட்டத்தை நிறைவேற்றிவைப்பதில் பிரார்த்தனையுடன் நம்மை ஈடுபடுத்திக்கொள்ளுவதன் மூலம் நாம் அந்த உணர்ச்சியை அடைவோமாக.

இ. தே. ரா-வினருக்கு ஒன்று இராதுபோனால் இன்னுமொன்றைச் செய்வதற்கு இரு காரியங்கள் உண்டு. சுதந்திர இந்தியாவில் ஆயுதம் தாங்கும் சிப்பாய்களாக அவர்கள் சேவை செய்யலாம் அல்லது அகிம்சையே அதிக உயர்வானதும் சக்தி வாய்ந்ததுமான வழி என்பதில் அவர்கள் மனத்தெளிவுடன் இருந்தால், அவர்கள் தங்களை அகிம்சைப் போர்வீரர்களாக மாற்றிக்கொள்ளலாம். மக்களிடையே அகிம்சைக் கட்டுப்பாட்டைப் புகுத்துவதற்கு அவர்கள் தங்களுடைய பயிற்சியையும் கட்டுப்பாட்டையும் பயன்படுத்தலாம். நூற்கக் கற்றுக்கொண்டு சிறந்த ஆக்க வேலை ஊழியர்களாகலாம். இதை அவர்கள் செய்வார்களானால், உலகம் முழுமைக்குமே கீர்த்தி வாய்ந்த ஓர் உதாரணத்தை உண்டாக்கியவர்களாவார்கள்.

தங்களுக்குள்ள சிறந்த பலம், வீரம், சக்தி ஆகியவைகளை நேதாஜி படையினர் காட்டியிருக்கிறார்கள். ஆனால், அவர்கள் சாதித்து இருப்பது என்னைக் கவர்ந்துவிடவில்லை என்பதையும் நான் ஒப்புக்கொள்ளவே வேண்டும். பிறரைக் கொல்லாமலே சாவதற்கு இன்னும் அதிகமான வீரம் வேண்டும். கொல்லுவதிலும், பதிலுக்குக் கொல்லப்படுவதிலும் ஆச்சரியகரமானது எதுவும் இல்லை. ஆனால், ஒருவர் தம்மைக் கொல்லுவதற்கு எதிரியிடம் தம் கழுத்தைக் கொடுக்கிறார், ஆனால், எதிரியின் இஷ்டத்திற்குப் பணிந்துவிட மாத்திரம் மறுக்கிறார் என்றால், அது மிகவும் உயர்ந்த ரக வீரத்தைக் காட்டுகிறது.

கஷ்டமான காலம் நமக்கு வரவிருக்கிறது. நமது அகிம்சை நம்மைச் சுதந்திரத்தின் வாசலுக்குக் கொண்டு வந்திருக்கிறது. வாசலில் நுழைந்ததும் நாம் அகிம்சையைத் துறந்துவிடுவதா? என்னைப் பொறுத்தவரையில், நான் நினைப்பதான வீரர்க்குரிய அகிம்சை, சுதந்திரத்தில் வெற்றி பெறுவதற்கு எப்படிப் பயன்பட்டதோ அதேபோல் அன்னியர் ஆக்கிரமிப்பையும் உள்நாட்டுக் குழப்பங்களையும் சமாளிப்பதற்கு மிகவும் சிறந்த ஆற்றலைக்கொண்ட முறை என்பதில் நிச்சயமான உறுதி கொண்டிருக்கிறேன். பிரிட்டிஷார் வெளியேறப் போகிறார்கள். மற்ற நாடுகளிடையே இந்தியா அடையப்போகும் ஸ்தானம் என்ன? சீனாவைப் போல ஐந்தாம் ரக நாடாக இருப்பதோடு திருப்தி அடைந்துவிடுமா? சீனா பெயரளவில்தான் சுதந்திரத்துடன் இருந்தது. இந்தியா, முதல்தர ராணுவ வல்லரசாவதற்கு வெகு காலம் பிடிக்கும். இதற்கு அது ஒரு மேற்கத்திய வல்லரசின் ஆதிக்கத்தின் கீழ் இருந்து வர வேண்டும்.

உண்மையான அகிம்சையோடு கூடிய இந்தியா அன்னிய நாட்டிடம் அஞ்ச வேண்டியது எதுவுமில்லை; பாதுகாப்புக்குப் பிரிட்டிஷ் கடற்படையை எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டியதுமில்லை. வீரருக்குரியதான அகிம்சையை நாம் இன்னும் அடைந்துவிடவில்லை என்பதை நான் அறிவேன்.

புது டில்லி, 16—4—1946 —' ஹரிஜன் ' - 21—4—1946

# 6

# நேதாஜி படையினரின் மனக் குழப்பம்

இ. தே. ரா - வில் பெரிய அதிகாரிகளாக இருந்தவர்களில் 50 முதல் 60 பேர் வரையில் காந்திஜியை, அவர் டில்லியில் இருந்தபோது தோட்டிகள் குடியிருக்கும் இடத்தில் சந்தித்தனர். இவர்களுடைய கதி என்னவாகும் என்பது தெரியாமல் இருந்த சமயம் இவர்கள் காபூல் பாசறையில் முள் வேலிக்குள் அடைபட்டிருந்தபோது இவர்களைப் பார்க்கக் காந்திஜி சென்றிருந்த சமயம் இவர்கள் பாடியதைப்போன்றே இத்தடவையும் முதலில் குருதேவின் * "ஜனகணமன அதிநாயக ஜயஹே பாரத பாக்யவிதாதா" என்ற கீதத்தை ஒட்டி இ. தே. ரா-வினர் ஹிந்துஸ்தானியில் ஆக்கிய பாடலை எல்லோரும் சேர்ந்து பாடினர். பிறகு காந்திஜி அவர்களுக்கு ஹிந்துஸ்தானியில் சிலசொற்கள் பேசினர். அவர் கூறியதாவது :

"மற்ற நண்பர்கள் என்னிடம் தங்களுக்குள்ள மனக் குழப்பத்தைக் கூறினர்கள். உங்களுக்கும் அதே போன்ற மனக்குழப்பம் இருப்பதாக அறிந்தேன். சுயராஜ்யத்தை அகிம்சையின் மூலமும் சமாதான முறையிலும் அடைவது என்பதுதான் காங்கிரஸின் கொள்கை. ஆனல், அந்தக் கொள்கை அதன் காரியத்தைத் தீர்த்துக்கொண்டுவிட்டதல்லவா? இப்பொழுது முன்னிருக்கும் வேலைக்கு, மாறியிருக்கும், மாறிக்கொண்டிருக்கும் காலத்தை அனுசரித்து, அது பயனற்றதாகிவிடவில்லையா என்று வெளியிலிருக்கும் பலர்-காங்கிரஸுக்குள் இருப்பவர்களுங்கூட - இப்பொழுது சந்தேகிக்க ஆரம்பித்திருக்கிறர்கள்.

* குருதேவ் என்ற சொல் மகாகவி ஸ்ரீ ரவீந்திரநாத் டாகுரைக் குறிக்கும். காந்திஜி ரவீந்திரரைக் குருதேவ் என்று அழைத்தார். 1911 டிசம்பரில் கல்கத்தாவில் கூடிய ஓர் அரசியல் மகாநாட்டில் கவியரசர், 'ஜனகண மன' என்ற கீதத்தைப் பாடினர். நேதாஜியின் படையினர் இதைத் தம் தேசீய கீதமாகக்கொண்டிருந்தனர். இன்று சுதந்திர இந்தியாவின் தேசீய கீதமாகவும் இது திகழ்கிறது.

"நீங்கள் சுபாஷ் பாபுவின் தலைமையின்கீழ்ச் சேவை செய்து போர்க்களத்தில் சிறந்த போர்வீரர்களாக உங்கள் ஆற்றலை நிரூபித்திருக்கிறீர்கள். வெற்றியும் தோல்வியும் கடவுள் கையில் தான் இருக்கின்றனவேயன்றி நம் கையில் இல்லை. நீங்கள் இந்தியாவுக்குத் திரும்பியதும், காங்கிரஸின் கட்டுப்பாட்டுக்கு இணங்கி அதனுடைய கொள்கைப்படி நீங்கள் நடந்து கொள்ள வேண்டும் என்று நேதாஜி உங்களிடமிருந்து விடை பெற்றுப் பிரியும்போது உங்களுக்குக் கூறினர். உங்களுடைய நோக்கம் இந்தியாவை விடுவிக்க வேண்டுமென்பதேயன்றி ஜப்பானியருக்கு உதவி செய்ய வேண்டும் என்பதே அல்ல என்று எனக்குச் சொன்னர்கள். நேரடியான நோக்கத்தில், அதாவது பிரிட்டிஷாரைத் தோற்கடித்துவிடுவதில் நீங்கள் தோற்று விட்டீர்கள். ஆனல், நாடு விழித்துக்கொண்டுவிட்டது; படையினரில்கூட அதனல் புதிய ராஜீய உணர்ச்சி ஏற்பட்டு, சுதந்திரத்தைப்பற்றி அவர்கள் எண்ணத் தலைப்பட்டுவிட்டார்கள் என்ற திருப்தி உங்களுக்கு இருக்கிறது. உங்கள் தளத்தில் இருந்த ஹிந்துக்கள், முஸ்லிம்கள், பார்ஸிகள், கிறிஸ்தவர்கள், ஆங்கிலோ-இந்தியர், சீக்கியர்கள் இவர்கள் இடையே முழு ஒற்றுமையையும் ஏற்படுத்திக்கொண்டீர்கள். அது சாமான்ய விஷயம் அன்று. எனினும், இந்தியாவிற்கு வெளியில், சுதந்திர நிலையில் நீங்கள் அடைந்ததை இந்திய நிலைமைக்கு ஏற்ப அப்படியே வைத்திருந்து அழிய விடாமல் காத்துவர வேண்டும். உங்களுக்கு அதுதான் உண்மையான சோதனை.

"அகிம்சை உணர்ச்சியை நீங்கள் கொண்டுவிடுவீர்களானல், இங்கும் நீங்கள் உள்ளத்தில் சுதந்திரம் உள்ளவர்களாக இருக்கலாம். உதாரணமாக, தம் உள்ளத்தில் சுதந்திரத்தை அடைந்துவிட்டவர்களை, அவர்களுடைய உறுதிக்கு எதிராகத் தம்மை வணங்கும்படி செய்துவிட இவ்வுலகத்திலுள்ள எந்த அரசாங்கத்தினலும் ஆகாது. அந்த அரசாங்கம் அவர்களைக் கொன்றுவிடுவதாக மிரட்டுமானல் தங்கள் கழுத்தைக் கொடுப்பார்களேயன்றிப் பணிய மறுத்துவிடுவார்கள். அத்தகைய அக்கிரமமான படுகொலையைக் கண்டு ஒரு சிப்பாயின் உணர்ச்சி புரட்சி செய்யும். இவ்விதம் அவர்கள் செத்தாலும், உயிருடன் இருந்தாலும் சுதந்திரமானவர்களாகவே இருப்பார்கள். அவர்கள் என்றுமே அடிமைகளாக இருக்கமாட்டார்கள். நீங்கள் எல்லோரும் உள்ளத்தில் சுதந்திரமுள்ளவர்களாக ஆகிவிட்டால், இந்தியா முழுவதுமே சுதந்திரத்தை அடைந்துவிடும். அவர்கள் உங்களைச் சிறையில்

அடைக்கலாம். நீங்கள் அதை வரவேற்பீர்கள் அல்லது அவர் கள் சிறையில் அடைப்பதற்கு முன்பு நாங்கள் பிணமாகிவிடு வோம் என்று நீங்கள் அவர்களிடம் சொல்லிவிடலாம். அகிம் சைப் போர் வீரர் இந்த இரண்டில் எதையும் செய்யலாம், இரண்டுக்குமே உயர்வகையான வீரம் வேண்டும். இந்தியா வின் நாற்பது கோடி மக்களுக்குத் திரும்பவும் உயிர் ஏற் படும்படி செய்ய வேண்டியது நம் வேலை. அவர்களுடைய உள்ளங்களிலிருந்து பயத்தைப் போக்க வேண்டும். என்று பயத்தை அவர்கள் விட்டொழிக்கின்றனரோ அன்று இந்தியா வின் தளை இற்று விழுந்து அது சுதந்திரம் பெறும்

"பல ஆண்டுகளுக்கு முன்னால் நான்கானா சாகேபில் நான் வருமாறு கூறினேன் : 'சீக்கியர்கள் போரில் தங்கள் வீரத் திற்கு ருசுக்களைக் காட்டியிருக்கின்றனர். கிர்பான்களுக்கு (உடைவாளுக்கு)ப் பதிலாக உணர்ச்சியின் வாளை அல்லது அகிம் சையை என்று அணிகிறார்களோ அன்றுதான் குரு கோவிந்த சிங் கின் * லட்சியத்தை நிறைவேற்றியவர்களாவார்கள்.' ஒருவர் தம் முடைய வாளை வைதுக்கொண்டிருக்க விரும்பும் வரையில் அவர் பயமின்மையைப் பூரணமாக அடைந்துவிட்டவராக மாட்டார். அகிம்சை என்ற வாளுடன் நீங்கள் இருக்கும் வரையில் உலகத்தில் எந்தச் சக்தியும் உங்களை அடிமை கொண்டுவிட முடியாது. வெற்றி கொண்டவருக்கும் தோல்வி யுற்றவருக்கும் அது பெருமை அளிக்கிறது. நேதாஜி உங்களுக்கு புதியதோர் உணர்ச்சியை எழுப்பினார். அந்த உணர்ச்சியை அகிம்சையின் மூலமே சாகாதிருக்கச் செய்ய முடியும்."

போரிலுள்ள வீரம் என்ற வகையில் அகிம்சையின் முக் கியத்துவத்தை இவ்விதம் காந்திஜி விளக்கிய பிறகு சிறந்த, தன்மதிப்புள்ள பிரஜையாவதற்கு ஒரு சத்தியாக்கிரகப் போர் வீரருக்குத் தேவையான உயர்ந்த ரக வீரத்தைப்பற்றி அவர் களுக்கு எடுத்துக் கூறினார். "எல்லாவற்றையும்விட நீங்கள் என்றுமே பிச்சை எடுக்கவோ, இன்னொருவர் தரும் தான தருமத்தில் வாழவோ கூடாது. ஏனெனில், இந்தியாவுக்காக நீங்கள் உங்கள் உயிரையும் பொருட்படுத்தாமல், நாட்டிற்காக இம்பால் சமவெளியில் போராடியிருப்பதால், இதற்காக உங் களைப் போஷிக்கவேண்டும் என்று நீங்கள் எதிர்பார்க்கக் கூடாது. நீங்கள் அப்படி எதிர்பார்ப்பீர்களானால், உவர்ப்பை

* சீக்கியர்களின் பத்தாவது குரு; சிறந்த வீரர்களைக் கொண்டதாக சீக்கிய சமூ கத்தை அமைத்தவர்; 17-ஆம் நூற்றாண்டின் இறுதியில் இருந்தவர்.

இழந்த உப்பைப் போல், உங்கள் மதிப்பு எல்லாவற்றையுமே இழந்துவிட்டவர்களாவீர்கள். நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபட்டு நீங்கள் சாப்பிடலாமேயன்றிப் பிச்சையெடுக்கவோ, பிறர் இடும் பிச்சையைக் கொண்டு வாழவோ மறந்துவிட வேண்டும். சுருங்கச் சொன்னால், இதுவரையில் ஆயுதங்களை உபயோகிப்பதில் நீங்கள் காட்டியிருப்பதைப் போன்று அதே அளவு வீரத்தையும் அகிம்சை ரக தீரத்தையும் நீங்கள் காட்டியாக வேண்டும்.

"நிலம் வேண்டுமென நீங்கள் விரும்பினால் அது கிடைக்கும். அதைச் செப்பனிட்டு மாதிரியாக விளங்கும் பண்ணைகள் ஆக்கிவிடுங்கள். நாம் பொதுமக்களிடையே நெடுங்காலமாக இருந்துவரும் செயலின்மையிலிருந்து விடுபட வேண்டும். விடாமுயற்சிக்கும் கடின உழைப்புக்கும் உதாரணங்களாக நீங்கள் ஆவதன்மூலமே அதை நீங்கள் செய்ய முடியும். மலஜலம் கழிக்கும் இடங்களைச் சுத்தம் செய்வது ஆபாசமான வேலை, மதிப்புக் குறைவான காரியம் என்று எண்ணாமல், வாளியையும் துடைப்பத்தையும் திறமையுடனும் லாகவமாகவும் கையாளக்கூடியவர்களாகவும் நீங்கள் இருக்கவேண்டும். விக்டோரியா கிராஸ் பதக்கத்தைப் பெறுவதைவிட இந்த வேலையில் தேறுவது இன்னும் வீரம் மிக்கதாகும்."

பிறகு வந்த கேள்விகளும் பதில்களுமாவன :

**கேள்வி :** போராடுவதிலேயே தம் வாழ்நாளையெல்லாம் கழித்திருக்கும் ஒருவர் எப்படி அகிம்சையை வெற்றியுடன் மேற்கொள்ள முடியும்? இந்த இரண்டும் ஒன்றுக்கொன்று பொருத்தமில்லாதவையல்லவா?

**பதில் :** அதை நான் ஒப்புக்கொள்ள முடியாது. *பாத்ஷா கான் ஒரு பட்டாணியர். ஆனால், இன்று அவர் அகிம்சைப் போர்வீரராக இருக்கிறார். டால்ஸ்டாயும் ராணுவத்தில் சேவை செய்தார். என்றாலும், ஐரோப்பாவில் அவர் உயர்ந்த அகிம்சைப் போதகரானார். அகிம்சையில் இருக்கும் சக்தி முழுவதையும் நாம் இன்னும் அடைந்து விடவில்லை. 1942-இல் அரசாங்கம் என்னைக் கைது செய்யாதிருந்தால், ஜப்பானை எதிர்த்து அகிம்சையினால் போராடுவது எப்படி என்பதை நான் காட்டியிருப்பேன்.

**கேள்வி :** தற்பாதுகாப்புக்கு வாளை உபயோகிப்பது அகிம்சையை மீறுவதாகாது அல்லவா?

---

* எல்லைப்புறக் காந்தி, அப்துல் கபார் கான்.

**பதில்** : வேவல், ஆகின்லெக் அல்லது ஹிட்லர் ஆகியவர்களும் அவசியமில்லாமல் வாளை உபயோகிக்கவில்லை. இதற்குள்ள நியாயம் எதுவானாலும் அது இம்சையே.

**கேள்வி** : அகிம்சையை நீங்கள் அனுசரித்தால் உலகத்தை உங்களுடன் நீங்கள் கொண்டுபோக முடியாது. இரண்டில் ஒன்றையே நீங்கள் தேர்ந்தாகவேண்டும்.

**பதில்** : இதிலும் நான் மாறுபட்ட கருத்துக் கொள்ளுகிறேன். சீர்திருத்தக்காரன் எதிர்ப்பு வெள்ளத்தை மீறித் தன் உயிருக்கு ஆபத்து நேருவதையும் பொருட்படுத்தாமல் எப்பொழுதும் போகவேண்டியிருக்கும். எதையும் ஆழ்ந்து சிந்திக்காத பொதுஜனம் மகிழ்ச்சி ஆரவாரம் செய்வதைக் கண்டு நீங்கள் நிலை தவறி விடக்கூடாது. நாட்டிற்கு நீங்கள் சொல்லவேண்டியது வாளை ஏந்துவது எப்படி என்பதல்ல; அதற்கு அஞ்சாமல் இருப்பது எப்படி என்பதே.

**கேள்வி** : வெற்றியுடன் சுபாஷ் பாபு உங்களிடம் திரும்பியிருந்தால் நீங்கள் என்ன செய்திருப்பீர்கள் ?

**பதில்** : உங்களுடைய ஆயுதங்களையெல்லாம் கீழே போடும்படியும், என் முன்னால் அவற்றைக் கொண்டு வந்து குவிக்க வேண்டுமென்று கூறும்படியும் அவரிடம் சொல்லியிருப்பேன்.

முஸ்ஸோரி, 30—5—1946 —'ஹரிஜன்' - 9—6—1946

## 7

# மீண்டும் நேதாஜி படையினர்

இந்திய தேசீய ராணுவத்தின் தளபதி ஒருவர் சென்ற வாரம் காந்திஜியைப் பார்க்கப் பஞ்சகனிக்கு* வந்தார். "எங்களுக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுங்கள். அடுத்தபடியாக எங்களை என்ன செய்யச் சொல்லுகிறீர்கள் ?" என்று கேட்டார்.

---

* பஞ்சகனி பம்பாய் மாகாணத்தில் ஒரு சிறிய மலை வாசஸ்தலம். வைத்திய ஆலோசனையின் பேரில் 1944-இல் காந்திஜி அங்கே போய்ச் சிறிது காலம் தங்கினார். மூன்று மாதங்கள் இடைவிடாத உழைப்பிற்குப் பின்னர் 1944 ஜூலை 13-ஆம் தேதி மீண்டும் பஞ்சகனிக்குச் சென்று சிறிது காலம் அங்கு இருந்தார். அந்த இடத்தின் சிறந்த சீதோஷ்ண நிலையை ஏழை எளியவர்களும் ஹரிஜனங்களும் அங்கே தங்கி அனுபவிக்க இடவசதி எதுவுமே இல்லை என்பதை 1944-இல் கண்ட மகாத்மா அதை குறித்து வருந்தினர். மற்றவர்களைப்போலவே ஹரிஜனங்களும் அங்கே தாராளமாகப் போய்த் தங்குவதற்கு ஓர் இடம் ஏற்பட்டாலன்றித் தாம் திரும்பப் பஞ்சகனிக்கு வரப் போவதில்லை என்று அத்தடவை காந்திஜி கூறிவிட்டார். ஆனால், அகமதாபாதைச் சேர்ந்த சேத் சாந்திலால் பஞ்சகனியில் ரூ. 45,000 க்கு ஒரு கட்டிடத்தை வாங்கி, ஜாதி மத பேதமின்றி எல்லோரும் அதில் தங்குவதற்கு அதைத் தானமாக அளித்தார். இது மகாத்மாவுக்கு ஆனந்தம் அளித்தது.

இதற்குக் காந்திஜி கூறியதாவது : "போர்க்களத்தில் நீங்கள் காட்டிய அதே வீரத்தையும் தைரியத்தையும் இங்கு நீங்கள் நிரூபிக்க வேண்டும். இந்திய தேசீயச் சேனையில் எல்லாத் தரத்தினரிடையேயும் சரியான ஒற்றுமை இருந்தது. ஹிந்துக்கள், முஸ்லிம்கள், சீக்கியர்கள், பார்ஸிகள் முதலிய எல்லாச் சமூகத்தினரும் உடன்பிறந்த சகோதரர்கள் போல் இருந்தீர்கள். உயர்வு தாழ்வு இல்லை; தீண்டாமையும் இல்லை. அந்த ஒற்றுமையை இங்கே காட்டுங்கள். ஆனால், அதுபோல் உங்களால் செய்யமுடியாது என்றே அஞ்சுகிறேன்."

"ஆம். நம்மைப் பிரிட்டிஷ் அதிகாரம் ஆண்டுகொண்டிருக்கும் வரையில் எங்களால் முடியாது" என்று பதில் கூறினார் இ. தே. ரா. நண்பர்.

காந்திஜி மேலும் கூறியதாவது : "சரி, பிரிட்டிஷார் இருந்தாலும் அதையும் பொருட்படுத்தாமல் நாம் செய்யக் கூடியது எவ்வளவோ இருக்கிறது. நான் வேண்டுமென்று விரும்பியே தோட்டியாகியிருக்கிறேன். நான் அவ்விதம் செய்வதை யார் தடுத்துவிட முடியும்? ஷா நவாஜ்[1] எப்பொழுதும் போல் இந்தியராகவே இருக்கிறார். அப்படி அவர் இருப்பதை யாரும் தடுத்துவிட முடியாது. உண்மையில் அவர் எங்கே சென்றாலும் ஹிந்து நண்பர்களுடனேயே தங்குகிறார். ஆனால், அப்படியிருந்தும் இந்தியாவிற்கு வெளியில் தம்மால் செய்ய முடிந்ததை இங்கே செய்துவிட முடியாது என்பதை உணருகிறார். இ. தே. ரா-வினர் தங்கள் வீடு வாசல்களுக்குத் திரும்பியதும் தங்கள் சூழ்நிலைக்கு ஏற்ப ஆகிவிடுகின்றனர். வெளியில் தாங்கள் கற்றுக்கொண்டதையெல்லாம் விட்டுவிடுகிறார்கள். அவர்கள் பழைய வழிக்கே திரும்பிவிடாமல் தடுப்பது கஷ்டம்.

"அதோடு உங்களுக்காக இந்தியா லட்சக்கணக்கில் செலவிடவேண்டும் என்று நீங்கள் எதிர்பார்ப்பது சரியல்ல. கரிபால்டியின்[2] சிப்பாய்களைப் போல நீங்கள் இருக்கவேண்டும்.

1. ஷா நவாஜ் - பிரிட்டிஷ் இந்திய ராணுவத்தில் அதிகாரியாக இருந்து பிறகு மலாயாவில் நேதாஜிப் படையில் சேர்ந்து சிறந்த சேவை செய்தவர்.

2. கரிபால்டி (1807-1882)-மிகச் சிறந்த இத்தாலியப் போர் வீரரும் தேச பக்தருமாவார். அரசாங்கக் கப்பல் ஒன்றைக் கைப்பற்றுவதற்காக நடந்த சதியில் பங்குகொண்டிருந்தார் என்பதற்காக 1834-இல் தூக்குத் தண்டனை அடைந்தார். ஆனால், சிறையிலிருந்து தப்பித் தென் அமெரிக்காவுக்குப் போய்விட்டார். அங்கே சில ஆண்டுகள் அந்நாட்டின் சுதந்திரப் போராட்ட வேலைகளில் ஈடுபட்டிருந்தார். 1848-இல் இத்தாலிக்குத் திரும்பி வந்து ரோமன் குடியரசு இயக்கத்தில் தீவிரமாக ஈடுபட்டார். ஆனால் உயிருக்காக நாட்டைவிட்டு வெளியேற வேண்டியதாயிற்று. நியூயார்க்கில் குடியேறினார். 1854-இல் இத்தாலிக்குத் திரும்பினார். அங்கு 1859-இல் யுத்தம் மூண்டுவிடவே

அந்தச் சிப்பாய்களுக்கு அவர்களுடைய தலைவர், 'ரத்தம், உழைப்பு, கண்ணீர்' ஆகியவையே அவர்களுக்குக் கிடைக்கும் எனக் கூறியிருந்தார். போர்க்களத்திற்குப் போகாத நேரங்களில் அவர்கள் நிலத்தை உழுது தங்களுக்கு வேண்டியதைத் தாங்களே தேடிக்கொண்டனர். அவர்களுக்கு யாரும் சம்பளம் கொடுக்கவில்லை. ஆடம்பரமாகச் செலவிடும் பிரிட்டிஷாரிடம் நீங்கள் பயிற்சி பெற்றவர்கள். பிரிட்டிஷார் கொடுக்கக்கூடிய தான விக்டோரியா கிராஸ் பதக்கங்களையோ அது போன்ற சம்மானங்களையோ நீங்கள் எதிர்பாாப்பீர்களானால், ஏமாற்றம் அடைந்து போவீர்கள். பட்டினியாகக் கிடக்கும் இந்தியாவின் கோடிக்கணக்கான மக்களினால் அப்படியெல்லாம் செய்ய இயலாது. நீங்கள் அவர்களுடன் ஒன்றாகி அவர்களுக்குச் சேவை செய்யவேண்டும். இன்று சாதாரண மக்கள் ராணுவத்தைக் கண்டு நடுநடுங்குகின்றனர். ராணுவத்தினர் மிரட்டுபவர் போல் நடந்துகொள்கிறார்கள்; அவர் என்ன அட்டகாசம் செய்தாலும் கேள்வி முறை இல்லை. மக்களுக்கு உங்களைக் கண்டு பயம் ஏற்படாமல் இருக்க நீங்கள் அவர்களின் நண்பர்களும் ஊழியர்களும் என்பதை நிரூபிக்க வேண்டும்.''

"இந்தியாவில் வெளியில் செய்ததைப் போன்றே இங்கும் மக்களுக்கு நண்பர்களாக இருப்போம்" என்றார் இ. தே. ரா. தளபதி.

காந்திஜி மேலும் சொன்னதாவது: "அதுதான் நல்லது. ஆனால், ஒன்று உங்களுக்குச் சொல்லுகிறேன்: இந்தியாவில் இ. தே. ரா-வினரைச் சமாளிப்பது கஷ்டமாக இருப்பதை உங்கள் தலைவர்கள் காண்கிறார்கள். அற்பப் போட்டிகளும் பொறாமைகளும் இருந்துவருகின்றன. 'அவனுக்கு ஒன்று கிடைத்திருக்கும்போது எனக்கு மாத்திரம் ஏன் இல்லை?' என்ற இந்த வகையான உணர்ச்சியே மேலெழுகிறது. வெளிநாடுகளிலோ நிலைமை வேறாக இருந்தது. திறமை மிக்கவரான நேதாஜி உங்களுக்குத் தலைவராக இருந்தார். எங்களுக்கிடையே கடுமையான அபிப்பிராய பேதம் இருந்தபோதிலும், அவருடைய தீவிர தேச பக்தி, தீரம், ஆற்றல் ஆகியவைகளை நான் எப்பொழுதும் போற்றி வந்திருக்கிறேன்.''

"அவருக்கு உங்களிடம் எவ்வளவு ஆழ்ந்த அன்பும் மதிப்பும் இருந்தன என்பது உங்களுக்குத் தெரிந்திராது" என்று

---

இவரை ஒரு படைக்குத் தலைவராக்கினர். ஆஸ்திரியப் படைகளைப் பல இடங்களில் முறியடித்து வெற்றி கண்டார். அடுத்த ஆண்டு தம் தலைமையில் இத்தாலியை விடுவிக்க ஒரு படையைத் திரட்டினார். இப்பிரமாதமான காரியத்தை வெற்றிகரமாக முடித்து, சிறந்த போர் வீரர், தேசாபிமானி என உலகப் புகழை எய்தினார்.

குறுக்கிட்டுக் கூறினர் தளபதி; "சுதந்திரத்திற்கான அடுத்த போராட்டத்தில் நாங்கள் செய்யவேண்டியதென்ன?" என்றும் அவர் கேட்டார்.

காந்திஜி கூறியதாவது: "சுதந்திரப் போராட்டம் இன்று நடந்துகொண்டு வருகிறது. அது நிறுத்தப்பட்டு விடவேயில்லை. ஆனல் என் இஷ்டமே நிலைப்பதானல், அது அகிம்சையோடு கூடிய போராட்டமாகவே இருக்கும். அகிம்சையில் சென்ற இருபத்தைந்து ஆண்டுகளாகப் பெற்றிருக்கும் பயிற்சி பொதுமக்களிடம் பதிந்திருக்கிறது. ஒரு குழந்தை, ஒரு பெண் அல்லது தள்ளாத ஒரு கிழவன்கூட, மிகவும் வல்லமையுடையதான ஓர் அரசாங்கத்தை வெற்றியுடன் எதிர்த்து நிற்கக்கூடிய ஓர் ஆயுதம் அகிம்சையில் இருக்கிறது என்பதை மக்கள் தெரிந்துகொண்டிருக்கிருர்கள். உங்கள் உணர்ச்சி மாத்திரம் பலமானதாக இருக்குமாயின் உடல்வலிவு இல்லாதது ஓர் இடையூருகவே இராது. இதற்கு மாருக, தென்னுப்பிரிக்காவில் ஜூலுக்கள் இருப்பதைப் பார்த்திருக்கிறேன். அவர்கள் நல்ல உடற்கட்டும் பலமும் உள்ளவர்களாக இருந்தும் ஒரு வெள்ளைக்காரக் குழந்தையின் முன்பு நடுநடுங்குகிருர்கள்.* வெள்ளைக்காரச் சிப்பாய்கள், ஜூலுக்கள் வசிக்கும் இடத்திற்குப் போய் அங்கே தூங்கிக்கொண்டிருக்கும் ஆண்கள், பெண்கள், குழந்தைகள் முதலியோரைச் சுட்டுப் போட்டுவிட முடியும். ஜூலுக்களிடம் எதிர்ப்பு உணர்ச்சி இல்லை; அவர்களுக்குள்ள உடல் வலிவு அதற்கு ஈடாக நிற்கவில்லை."

பாத்லாபுர், 5—8—1946 —'ஹரிஜன்' - 11—8—1946

# 8

# துணையற்று இல்லை

தம்முடன்கூடப் பலர் இருந்தும் தாம் துணையற்றிருப்பது போல் உணருவது குறித்துச் சில தினங்களுக்கு முன்னல் ஒரு நண்பர் எனக்கு எழுதினர். அவர் இவ்வாறு கூறியது, உத்தியோகத்திலுள்ளவர்களின் வார்த்தையில் அவநம்பிக்கை கொள்ளுகிறேன் என்று நான் அவருக்குச் சொன்னது இதை அவர் குறிப்பிடத் தூண்டியாதாகும். அவர் சொல்லவில்லை. தாம் கொண்டுள்ள நம்பிக்கையில் நான் பங்கு கொள்ளுவேன் என்று

*ஜூலுக்களின் இந்நிலையைக் குறித்து மகாத்மா தாம் எழுதிய 'தென்னுப்பிரிக்க சத்தியாக்கிரகம்' என்ற நூலில் விவரமாகக் கூறியிருக்கிருர். இதை 'மகாத்மா காந்தி நூல்கள்' முதல் தொகுப்பு 15-ஆம் பக்கத்தில் காண்க.

அவர் நினைத்தார். அப்படிச் செய்யாததைக் கண்டதும் ஏமாற்றமடைந்தார். உள்ளர்த்தம் உடைய தம் கடிதத்தின் மூலம் அவர் கருதியது அவ்வாறு இல்லாதிருக்கலாம், என்றாலும், நான் செய்துகொண்ட பொருள் அதுதான். அவர் கடவுளிடம் பக்தியுள்ளவராகையால் தாம் துணையற்றிருப்பதாக எண்ணிக்கொள்ளக் கூடாது என்று எழுதினேன். ஏனெனில், கடவுள் எப்பொழுதும் அவருடன் இருக்கிறார். உலகம் முழுவதுமே தம்மைக் கைவிட்டு விட்டாலும் அதற்காக அவர் ஏன் கவலைப்பட வேண்டும்? நான் சொல்லுவது எதுவாயினும், நம்பிக்கை மூளையிலிருந்து வராமல் உள்ளத்திலிருந்து வரும்வரையில் அவர் நம்பிக்கை வைக்கட்டும்.

நான் வேறு விதமாக உணருகிறேன். பரஸ்பர நம்பிக்கையும், பரஸ்பர அன்பும் நம்பிக்கையுமாகா; அன்புமாகா. உங்களை வெறுப்பவர்மீது அன்பு கொள்ளுவதே உண்மையான அன்பு; உங்களுடைய அண்டை வீட்டுக்காரரிடம் உங்களுக்கு அவநம்பிக்கை இருந்தாலும் அவரிடம் அன்புடன் இருப்பதே அன்பாகும். ஆங்கில உத்தியோகஸ்தர்களிடம் நான் அவநம்பிக்கை கொள்ளுவதற்கு எனக்குச் சரியான காரணங்கள் இருக்கின்றன. என்னுடைய அன்பு உண்மையானதாக இருக்குமானால், எனக்கு அவநம்பிக்கை இருந்தாலும், ஆங்கிலேயரிடம் அன்புடன் இருக்க வேண்டும். என் நண்பனை நான் நம்பும் வரையில்தான் என் அன்பு என்றால், என் அன்பால் என்ன பயன்? திருடர்கள்கூட இதைச் செய்கின்றனர். நம்பிக்கை போய் விட்டதென்றால் உடனே அவர்கள் விரோதிகள் ஆகிவிடுகின்றனர்.

பம்பாயில் நான் எத்தனையோ நாட்கள் இருந்திருக்கிறேன். பொதுஜனக் காரியங்களுக்கு அது எவ்வளவோ பணவுதவியைச் செய்திருக்கிறது. அகிம்சையில் கொஞ்சத்தை அது ஓரளவுக்கு அளித்திருக்கிறது என்றும் நினைத்தேன். ஆனால், அதே பம்பாயில் இன்று என்ன நடந்துகொண்டிருக்கிறது என்பதைப் பாருங்கள். அகிம்சைக்கு அது மயான பூமியாகிவிடுமா?

ஆங்கிலேயருக்கு இழைக்கும் தீயிடல், கொள்ளை, அவமதிப்பு ஆகியவைகளெல்லாம் காலிகளின் வேலை என்று நான் நினைக்கவில்லை. காலிகள் யார்? ஆங்கில ஆட்சி இல்லாது போய் விட்டாலும், காலிகளே இருக்கமாட்டார்களா? காலிகள்மீது குற்றஞ் சொல்லும் பழக்கத்தை விட்டுவிட வேண்டும். அந்த ரகத்தினரை உற்பத்தி செய்பவர்கள் நாம்தான். தங்கள் சூழ்நிலைக்கு ஏற்ப அவர்கள் ஆகிறார்கள்.

தானியக்கடைகளைக் கொள்ளை அடித்த அறிவின்மையைச் சிந்தித்துப் பாருங்கள். கொள்ளையடித்தவர்கள் தங்களுக்காக அவற்றை எடுத்துக்கொண்டு விடவில்லை. அப்படிச் செய்தார்கள் என்றாலும், அவர்கள் பட்டினி கிடப்பவர்கள் அல்ல. பட்டினி கிடப்போருக்கு என்றிருப்பது அந்தத் தானியம். அது தவறான தற்குப் பயன்படுகிறது என்பதற்காகக் கொள்ளையடிப்பது அந்தத் தவறான உபயோகத்தைத் தடுத்து விடாது. பிறரை அபகரிக்கும் ஆட்கள் இருக்கும் வரையில், கொள்ளை போன தானியங்களுக்குப் பதிலாக வேறு தானியங்களைக் கொண்டு வந்துவிடுவார்கள். இந்த இரண்டு கொள்ளைக் கூட்டங்களுக்கு இடையே, பட்டினி கிடப்போர் முன்னைவிட இன்னும் அதிக மாகவே பட்டினி கிடப்பார்கள்.

கலகக்காரர்களைத் தூண்டிவிட்டவர்கள், தாங்கள் என்ன செய்கிறார்கள் என்பதை அறியாமலேயே செய்திருக்கின்றனர். கலகம் செய்பவர்கள் முடிவில் பணிந்துதான் ஆகவேண்டும். அல்லது இம்சைக்கு ஒரு பாடமாக இது செய்யப்படுகிறதா? சரித்திரத்தைப் புரிந்துகொள்ளும் வழி இது அன்று.

சௌரிசௌராவுக்குப் பிறகு நான் செய்ததைப் போல் இப்பொழுது ஏன் நான் திரும்பச் செய்யவில்லை? இதை என்னை நானே கேட்டுக் கொள்ளுகிறேன் ; ஒருவேளை மற்றவர் களும் கேட்கலாம். அவ்வழியில் எனக்கு ஆக்ஞை பிறக்க வில்லை. ஆக்ஞை வந்துவிட்டால், வந்துவிடும்போது, நல்ல தாயினும் சரி, தீயதாயினும் சரி, உலகில் எதுவுமே என்னைத் தடுத்து விடாது. இந்தியரைப் போன்றே ஆங்கிலேயரிடமும் நான் அன்பு கொள்ளுகிறேன் என்ற உண்மையை நான் மீண்டும் உறுதியாகக் கூறுகிறேன். இருவரும் மனிதரே. எனினும், இந்திய மக்களுக்காக மக்களின் ஆட்சியை நான் விரும்புகிறேன். சுய ஆட்சி அல்லது சுயராஜ்யம் மக்களின் பிறப்புரிமை என் பதை லோகமான்யர் நமக்குப் போதித்திருக்கிறார். அந்தச் சுய ராஜ்யத்தை, பம்பாய், கல்கத்தா, கராச்சியில் இப்பொழுது நடந்துகொண்டிருப்பதைக் கொண்டு அடைந்து விடமுடியாது.

நான்கணா செலுத்திய உறுப்பினராக இருந்தாலும் சரி, இராவிட்டாலும் சரி, காங்கிரஸ் என்ன செய்யவேண்டும் என் பதை ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் தமக்குத் தாமே சிந்திக் கட்டும். நம்மையும் ஏமாற்றிக்கொண்டு உலகத்தையும் ஏமாற்ற வேண்டாம்.

புனா, 24—2—46 —'ஹரிஜன்' – 3—3—1946

# 9

# கடற்படையினர் கலகமும் பிறகும்

## 1

இந்தியாவில் இப்பொழுது நடந்து வரும் சம்பவங்களை மனவேதனையுடன் கவனித்துக்கொண்டு வருகிறேன். கடற்படையினரின் இந்தக் கலகமும்* அதற்குப் பின்னல் நடந்து வருபவையும், எந்த வகையிலும் அகிம்சைச் செயல் ஆகா. ‘ஜய் ஹிந்த்’ என்றோ அல்லது வேறு எந்தக் கோஷத்தையோ கூவுமாறு ஒருவர் கட்டாயப்படுத்தப்படுவது வாயில்லாப் பூச்சிகளான கோடிக்கணக்கான இந்திய மக்களைப் பொறுத்தவரையில், சுயராஜ்யத்தின் சவப்பெட்டியில் ஓர் ஆணியை அறைந்துவிட்டதாகவே ஆகும். கிறிஸ்தவ ஆலயங்களையும் அவை போன்றவைகளையும் நாசப்படுத்துவது, காங்கிரஸ் விளக்கியிருக்கும் சுயராஜ்ய வழிகள் ஆகா. என் அகிம்சைக்கும் காங்கிரஸின் அகிம்சைக்கும் வேறுபாடே இருக்கலாம். என்றாலும், டிராம் வண்டிகளையும் மற்றச் சொத்துக்களையும் கொளுத்துவதும் ஐரோப்பியர்களை அவமானப்படுத்திக் காயப்படுத்துவதும், என் அகிம்சையைச் சேர்ந்தவை அல்ல என்பதோடு, காங்கிரஸ் ரக அகிம்சையும் அன்று. இந்த அறிவு கெட்ட இம்சையின் வெறியாட்டத்தின் தலைவர்களென்று தெரிந்துவிட்டவர்களும், தெரியாமல் இருந்து வருபவர்களும், தாங்கள் செய்வது இன்னது என்பதை அறியட்டும். அதன்பின் தங்கள் புத்தி போகும் வழியில் போகட்டும். அகிம்சை நட

---

* பிரிட்டிஷ் இந்தியக் கடற்படையிலிருந்த இந்தியச் சிப்பந்திகளிடையேயும் தேசீய உணர்ச்சியும் ஆவேசமும் மிகுந்திருந்தன. அப்படையிலிருக்கும் வெள்ளையரைவிடத் தாங்கள் இழிந்தவர்களாய் நடத்தப்படுவதாக ஆத்திரமடைந்தனர். தங்கள் குறைகளைப் போக்க வேண்டும் என்று ஒரு கோரிக்கையை மேலதிகாரிகளுக்கு 1946 பிப்ரவரி 19–ஆம் தேதி அனுப்பினார்கள். அன்று மகாத்மா புனாவில் இருந்தார். அதற்கு ஒரு வாரத்திற்கு முன்னால்தான், பின்னால் ஏற்படப் போவதை ஜோசியம் சொல்லுவதைப் போன்று காந்திஜி, ‘துவேஷத்தைத் திருப்புவது எப்படி ?’ என்ற தலைப்பில் ‘ஹரிஜன்’ பத்திரிகையில் எழுதினார். அக்கட்டுரை இங்கே 611–ஆம் பக்கத்தில் பிரசுரமாகியிருக்கிறது.

இந்தியக் கடற்படையினரிடையே ஏற்பட்டிருந்த அதிருப்தி, பிப்ரவரி 20-ஆம் தேதியும் அதை அடுத்த நாட்களிலும் மோசமான நிலைக்குப் போய்விட்டது. அதிகாரிகளின் உத்தரவுக்குக் கட்டுப்பட மறுத்து, இவர்கள் செய்த புரட்சி பம்பாய், கராச்சி முதலிய இடங்களிலும் காட்டுத் தீ போலப் பரவிவிட்டது. இரு தரப்பிலும் சுட்டுக் கொண்டனர். இதையொட்டிப் பம்பாயில் கலவரங்களும், அட்டூழியங்களும் நடந்தன. அதை அடுத்து 22-ஆம் தேதியே மகாத்மா அக்கட்டுரையை எழுதினார். கடற்படையினரின் போக்கை, காந்திஜி கண்டித்ததைக் குறித்து சோஷியலிஸ்டுகள் ஆத்திரமடைந்தனர். தாம் கூறியதை ஆட்சேபித்த ஸ்ரீமதி அருணா ஆஸப் அலி போன்றவர்களுக்குப் பின்னால் வரும் கட்டுரைகளில் மகாத்மா பதில் சொல்லியிருக்கிறார்.

வடிக்கையின் மூலம் சுயராஜ்யத்தை அடையப் போவதாக இந்தியாவின் காங்கிரஸ் உலகிற்குக் கூறியது. ஆனால், நடவடிக்கையில், அதிலும் தனது வாழ்வின் நெருக்கடியான சமயத்தில், அது தன் சொல்லைப் பொய்யாக்கிக்கொண்டது என்ற பெயர் வேண்டாம். வேண்டுமென்றேதான் 'அறிவு கெட்ட' என்ற அடைமொழியை உபயோகித்திருக்கிறேன். ஏனெனில், அறிவுள்ள இம்சைச் செயல் என்றும் ஒன்று இருக்கிறது. இப்பொழுது நான் காணும் ராணுவச் சம்பவங்கள் புத்திசாலித்தனமாகச் செய்யப்படுவன அல்ல. கடற்படையிலிருக்கும் இந்தியர், அகிம்சையை அறிந்து அதை உணருவாரானால், அகிம்சையோடு கூடிய எதிர்ப்பு கண்ணியமானதாகவும், ஆண்மையுள்ளதாகவும், ஒன்றுபட்டதாகவும் இருப்பின், முற்றிலும் பயன் தருவதாகவும் இருக்க முடியும். தனிப்பட்டவருக்கு எப்பொழுதும் அது அப்படித்தான் இருக்கிறது. வேலை பார்ப்பது தங்களுக்கும் இந்தியாவுக்கும் அவமானம் விளைவிப்பதாக இருந்தால் அவர்கள் ஏன் தொடர்ந்து அந்த வேலையில் இருக்க வேண்டும்? இது போன்ற நடவடிக்கையை அகிம்சையோடு கூடிய ஒத்துழையாமை என்று கூறியிருக்கிறேன். இன்று இருக்கும் வகையில் அவர்கள் இந்தியாவுக்கு ஒரு கெட்ட, கண்ணியமற்ற உதாரணத்தையே காட்டிக்கொண்டிருக்கிறார்கள்.

இம்சை வழியில் செயல் புரிய ஹிந்துக்களும் முஸ்லிம்களும் மற்றவர்களும் சேர்ந்திருப்பது தீயது. இது ஒருவருக்கொருவர் இம்சை புரிந்துகொள்ளும் அளவுக்குக் கொண்டு போய்விடும்; அநேகமாக அதற்கு இது தயாரிப்பாகவும் இருக்கலாம். இதனால் இந்தியாவுக்கும் உலகிற்கும் தீங்கே.

இந்தியரின் ஆட்சி ஏற்படுவதற்காகத் தாங்கள் 'வெளியேற'ப் போவதாக ஆளுவோர் அறிவித்திருக்கின்றனர். உள்ளத்திற்குள் மறைந்து கிடந்த அவநம்பிக்கையோடு கூடிய அமைதியின்மை காட்டப்பட்டு வருவதன் காரணமாக, அவர்கள் கூறுவதைச் செய்கையில் காட்டுவது கணமும் தாமதப்பட்டு விடாமல் இருக்கட்டும். அவர்களுக்குள்ள சக்தி ஆட்சேபிக்க முடியாதது. மக்களையோ அல்லது அவர்களில் ஒரு பகுதியினரையோ அடக்கிவைப்பதற்கு அந்தச் சக்தி உபயோகிக்கப்படுவது தகாதது மாத்திரமல்ல; இழிவானதுமாகும். மக்கள் வெகு நீண்ட காலமாக அன்னியரின் காலின் கீழ் மிதியுண்டு கிடந்துவிட்டனர்.

புனா, 28—2—1946 —'ஹரிஜன்' - 3—3—.1946

## 2

பம்பாயில் நடந்திருப்பவைகளைக் குறித்து நான் வெளியிட்ட அறிக்கையைத் தீரமாக மறுத்திருப்பதற்காக ஸ்ரீமதி அருணு ஆஸப் அலியைப் பாராட்டுகிறேன். தமக்கு மாத்திரமேயன்றித் தலைமறைவாக இருந்து வரும் ஏராளமான ஊழியர்களுக்கும் அவர் பிரதிநிதியாக இருக்கிருர் என்பது மாத்திரம் இல்லாதிருக்குமாயின், எனக்குப் பிறந்தவரல்லவாயினும் எதிர்ப்புக்காரியாகிவிட்டாள் என்ருலும், அவர் என் மகளே என்பதும் இல்லாதிருந்தால், அவருடைய மறுப்பைக் கவனித்தே இருக்கமாட்டேன். அவர் தலைமறைவாக இருந்தபோது அவரைப் பன்முறை சந்தித்திருக்கிறேன். அவருடைய வீரத்தையும் ஆற்றலையும் அடங்காத தேசாபிமானத்தையும் வியந்தேன். என்னுடைய வியப்பெல்லாம் அதோடு நின்று விட்டது. அவர் தலைமறைவாக இருந்து வந்தது எனக்குப் பிடிக்கவில்லை. தலைமறைவான நடவடிக்கை எதையும் நான் பாராட்டவுமில்லை; கோடிக்கணக்கானவர்கள் தலைமறைவாக இருந்துவிட முடியாது என்பதை அறிவேன். கோடிக்கணக்கானவர்கள் அப்படி இருக்க வேண்டியதுமில்லை. ரகசியமாகத் தங்கள் நடவடிக்கைகளைச் செய்துகொண்டிருப்பதால் கோடிக்கணக்கான மக்களுக்குத் தாங்கள் சுயராஜ்யத்தைக் கொண்டு வந்துவிட முடியும் என்று ஒரு சிலர் எண்ணிக் கொண்டிருக்கலாம். இது கரண்டியால் ஊட்டுவதைப் போன்றதாகாதா ? பகிரங்கமான சவாலும் பகிரங்கமான நடவடிக்கையுமே எல்லோரும் பின்பற்ற வேண்டியவை. ஆண், பெண், குழந்தைகள் உள்பட எல்லோரும் உண்மையான சுயராஜ்யத்தை உணரவேண்டும். அப்படி உணரும்படி செய்யப் பாடுபடுவது உண்மையான புரட்சி. இந்தியாவின் முயற்சி, அதைப் பறித்துக்கொண்டிருப்பவருக்கு எந்த விதமான தீங்கும் செய்யாமல், மக்கள் எல்லோருடைய தியாகத்தையும் கோருவதாகவும் நிராயுதபாணியானதாகவும் பகிரங்கமானதாகவும் இருக்கிறது. இதனுலேயே உலகத்தில் வஞ்சிக்கப்பட்டு வரும் எல்லா இனத்தினருக்கும் இந்தியா ஓர் உதாரணமாகியிருக்கிறது. பகிரங்கமான, ஆயுதமே இராத இப்போராட்டம் இல்லாதிருந்தால், இந்தியாவின் கோடிக்கணக்கான மக்கள் விழிப்படைந்திருக்க மாட்டார்கள். நேரான இவ்வழியிலிருந்து ஏற்படும் ஒவ்வொரு திருப்பமும் விருத்தியடைந்து வரும் புரட்சியைத் தாற்காலிகமாக நிறுத்திவைத்து விடுவதேயாகும்.

1942 சம்பவங்களை இந்த வீரப்பெண்மணி காண்பதைப் போல நான் காணவில்லை. ஒரே சமயத்தில் மக்கள் தாமாகவே உணர்ச்சிகொண்டு எழுந்தது நல்லதே. சிலரோ அல்லது பலரோ பலாத்காரத்தில் இறங்கியது நல்லதன்று. அத்தருணம் ஏற்பட்ட பொறுமையற்ற ஓர் ஆர்வத்தினுல் ஸ்ரீ கிஷோர்லால் மஷ்ருவாலா, காகா சாஹிப் முதலிய ஊழியர்கள் அகிம்சைக்குத் தவருன பொருள் கூறிவிட்டதனுல் பிரமாதம் எதுவும் ஏற்பட்டுவிடவில்லை. அவர்கள் அப்படிச் செய்தார்கள் என்பது, அகிம்சை எவ்வளவு நுட்பமான ஆயுதம் என்பதையே காட்டுகிறது. நான் காட்டும் உபமானம், யார் மீதும் தவருன எண்ணத்தைக் கற்பிப்பதற்காக அல்ல. ஒவ்வொருவரும் அவரவருக்குச் சிறந்தது என்று தோன்றிய வகையில் செய்தனர். கட்டுப்பாடான, அளவு கடந்த பலாத்காரத்தின் முன்னுல் செயலற்று இருந்துவிடுவது என்பது கோழைத்தனம் என்றே ஆகியிருக்கும். 1942-இல் நடந்த காரியங்களுக்கு நான் தரும் மதிப்பைச் சொல்லத் தவறிவிடுவேனயின், நான் பலவீனமுள்ளவனுகவும் தவறு செய்பவனுகவும் ஆவேன்.

'சட்ட ரீதியான போர் முனையைவிட முட்டுக்கட்டையால் ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் ஒற்றுமை'யை அருண உண்டாக்க விரும்புகிருர். இம்சை வகையில்கூட இது தவருன யோசனை. முட்டுக்கட்டை போடும் விஷயத்தில் ஒற்றுமை நேர்மையாக இருந்தால் சட்ட ரீதியான முனையிலும் அது இருக்கவேண்டும். போராடுகிறவர்கள் முட்டுக்கட்டையிலேயே எப்பொழுதும் நின்றுவிடுவதில்லை. தற்கொலை செய்து கொள்ளாத புத்திசாலித்தனமும் அவர்களுக்கு உண்டு. முட்டுக்கட்டையான வாழ்க்கையைச் சட்ட ரீதியானது எப்பொழுதும் தொடர்ந்தே ஆகவேண்டும்; அந்தப் போர் முனை என்றுமே விலக்கு அன்று.

பிரிட்டிஷார் கூறுவதில் அவநம்பிக்கை வைத்து, அவர்கள் தவறிவிடுவார்கள் என்று எதிர்பார்த்துச் சச்சரவை வலிய வருவித்துக்கொள்ளுவது முன் யோசனை இராததைத்தான் நிச்சயமாக வெளிப்படுத்துகிறது. ஒரு பெரிய நாட்டை ஏமாற்றுவதற்காகவா அரசாங்கத் தூது வருகிறது? அப்படி நினைப்பது ஆண்மைக்கோ, பெண்மைக்கோ ஏற்றதன்று. காத்திருப்பதால் என்ன நஷ்டம் வந்துவிடும்? பிரிட்டிஷார் சொல்லுபவை எல்லாம் நம்பக்கூடியவையல்ல என்பதை அரசாங்கத் தூது கடைசித்

தடவையாக நிரூபிக்கட்டும். நம்பிக்கை வைப்பதால் நாட்டுக்கு நன்மை உண்டு. ஏமாற்றப்படுகிறவரிடமிருந்து சரியாக ஆதரவு கிடைக்கும்போது ஏமாற்றுகிறவரே நஷ்டம் அடைவார்.

உண்மை நிலைமையைக் கவனிப்போம். வரப்போகும் தூதுக் கோஷ்டி சிநேக பாவத்தோடு கூடியது என்று சொல்லப்படுகிறது. விடுதலைக்கு அவர்கள் சட்ட ரீதியான ஒரு முறையை வகுப்பார்கள் என்ற நம்பிக்கையும் கூறப்படுகிறது. பிரச்னையோ சிக்கலானது; ராஜதந்திரிகளுக்கு என்றுமே ஏற்பட்டிராத அவ்வளவு சிக்கலானதாகவும் இருக்கக்கூடும். இத்தூதுக் கோஷ்டி விடை கூற முடியாத ஒரு புதிரைக் கூறக் கூடும் என்பதும் சாத்தியமே. அப்படியாயின் அவ்வளவும் அவர்களுக்குத்தான் தீமை. இருக்கும் கஷ்டங்களைச் சிருஷ்டித்தவர்கள் அவர்கள். இந்தக் கஷ்டத்திலிருந்து விடுபட யோக்கியமான வழியைக் காண அவர்கள் விரும்புவார்களானால் அதற்கு வழி இருக்கிறது என்பதில் எனக்கு எந்தவிதமான சந்தேகமும் இல்லை. ஆனால், நாடும், அதற்கேற்ப நேர்மையாக நடந்துகொள்ளவேண்டும். அது அவ்விதம் செய்தால், தற்காலிகமாகவாவது வழியடைப்பை ஒதுக்கிவைக்கவேண்டும். தங்களுடைய வீரமும் தியாகமும் கொடுத்திருக்கும் சக்தியைப் புத்திசாலித்தனமாகப் பயன்படுத்திக்கொள்ளுமாறு அருணாவையும் அவருடைய நண்பர்களையும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

பணிந்துவிடுமாறு சர்தார் பட்டேல் கூறிய புத்திமதியைக் கேட்டுக் கப்பற் படையினர் நடந்திருப்பது ஆறுதல் அடைய வேண்டிய விஷயமாகும். அவர்கள் தங்கள் கௌரவத்தைச் சரணாகதி யாக்கிவிடவில்லை. நான் அறிந்த வரையில் அவர்கள் கீழ்ப்படியாது கலகத்தில் இறங்குவதற்கு மோசமான யோசனையே கூறப்பட்டிருக்கின்றனர். குறை உள்ளதாக எண்ணிக்கொண்டோ அல்லது உண்மையான குறைகளினாலேயோ அவ்விதம் செய்தார்களாயின், அவர்கள் விரும்பும் ராஜீயத் தலைவர்கள் முன் வந்து வழிகாட்டுவதற்கும் குறுக்கிடுவதற்கும் அவர்கள் பொறுமையுடன் காத்திருக்க வேண்டும். இந்தியாவின் சுதந்திரத்திற்காகவே கலகம் செய்தார்கள் என்றால், அவர்கள் இருமடங்கு தவறு செய்துவிட்டவர்களாவர். தயாராயிருக்கும் ஒரு புரட்சிக் கட்சியினிடமிருந்து அழைப்பு இல்லாமல் அவர்கள் அப்படிச் செய்திருக்கக்கூடாது. தங்களுடைய பலத்தினால் அன்னிய ஆதிக்கத்திலிருந்து இந்தியாவை விடுவித்துவிட

முடியும் என்று அவர்கள் நம்பியிருப்பார்களானல், அவர்களு டைய புத்தியில்லாமையையும் அறியாமையையுமே அது காட்டு கிறது.

இதற்கு முன்பு எப்பொழுதுமே இல்லாத வகையில் போரா டியவர்கள் தைரியத்தைக் காட்டியிருக்கிருர்கள் என்று அருணு கூறுவது சரி. ஆனல், அந்தத் தைரியம் காலத்திற்கு ஏற்ப இராமல் இதைப்போலத் தற்கொலைக்குச் சமமானதாகவும் ஆகும்போது அது அசட்டு வீரமாகும்.

மக்களுக்கு, "இம்சையா அல்லது அகிம்சையா என்ற தத்துவ நீதிபற்றி அக்கறை இல்லை" என்று சொல்ல அருணு வுக்கு உரிமை உண்டு. ஆனல், பொது மக்களுக்கு எந்த வழி சுதந்திரத்தைக் கொண்டுவரும், இம்சையா அல்லது அகிம்சையா என்பதை அறிந்துகொள்ளுவதில் ஜனங்களுக்கு அதிக அக்கறை உண்டு. என்னதான் குறைபாடுகள் இருப்பினும் அகிம்சை வழியிலேயே இதுவரை மக்கள் போயிருக்கிருர்கள். பல தலைமுறையாகத் தூங்கிக் கிடந்த இந்தியாவை அகிம்சை வழி எழுப்பிவிட்டதா, இல்லையா? தெளிவற்றதா ளுலும் சுயராஜ்ய வேட்கையை அது அவர்களுக்கு உண்டாக் கியதா, இல்லையா? இதை அருணுவும் அவருடைய தோழர்களும் ஒவ்வொரு தடவையும் தம்மையே கேட்டுக்கொள்ளவேண்டும். இதற்கு ஒரே ஒரு பதில்தான் உண்டு என்பது என் கருத்து.

ஸ்ரீமதி அருணுவின் அறிக்கையில் இருக்கும் மற்ற விஷயங்கள், அவருடைய எண்ணக் குழப்பத்தையே வெளிப் படுத்துகின்றன என எனக்குத் தோன்றுகிறது. ஆனல், அவைகளின் பரிகாரத்திற்குப் பொறுக்கலாம்.

அவருடைய கருத்தையே எடுத்துக் கூறுகிறது என்ற நம்பிக்கையிலேயே இதைக் கூறி வந்திருக்கிறேன் என்பதை நான் சொல்லத் தேவையில்லை. அப்படி இல்லையென்ருல் முன்கூட்டியே அவரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுகிறேன். செய்தியை அனுப்பிய நிருபர் அவருடைய கருத்தைச் சரியாக வெளியிடவில்லை என்று ஏற்பட்டாலும், என் வாதம் அதனல் பாதிக்கப்பட்டுவிடவில்லை. ஏனெனில், என்னுடைய வாத மெல்லாம், செய்தது யாரானுலும் பொது மக்களைத் தவருன வழியில் கொண்டு போவதாயிருக்கும் பகுதியை மாத்திரம் குறிப்பிட்ட ஆளைப்பற்றியதல்ல என்பதேயாகும்.

புரு, 26—2—1946 —'ஹரிஜன்' - 3—3—1946

## 10

# கருத்துக்களின் மோதல்

"தங்கள் நிலைமை அவமானமுள்ளதாக இருந்தால் ராஜீநாமாச் செய்துவிடுமாறு பிரிட்டிஷ் இந்தியக் கடற்படைச் சிப்பந்திகளுக்குக் காந்திஜி கூறியிருப்பதை அவர் (அருணா) புரிந்து கொள்ள முடியவில்லை. அவர்கள் அப்படிச் செய்தால், அவர்களுக்குப் பிழைப்பதற்கு இருக்கும் ஒரே வழியை விட்டுவிட வேண்டிவரும். மேலும், அவர்கள் கொள்கைக்காகப் போராடினார்கள். அவர்கள் ராஜீநாமாச் செய்துவிடுவார்களானால், வேலையில்லாத் திண்டாட்டம் இருக்கும் இக்காலத்தில், அந்த வேலைக்கு வர நூற்றுக்கணக்கானவர்கள் தயாராயிருப்பார்கள். புதிதாக வருகிறவர்களும் இதே போல் வித்தியாசமாக நடத்தப்படுவார்கள். கடற்படைச் சிப்பந்திகள் எதையுமே சாதித்து இருக்க முடியாது. காங்கிரஸ்காரர்களே சட்ட சபைக்குப் போய்க்கொண்டிருக்கிறார்கள். அப்படி இருக்கும்போது வேலைகளை விட்டுவிட்டு வந்துவிடும்படி கடற்படைச் சிப்பந்திகளுக்குச் சொல்லக் காங்கிரஸ்காரர்களுக்கு வாயில்லை. அப்படிக் கூறுவது நாட்டிற்கு நன்மை செய்ததாகாது."

அருணா ஆஸப் அலி பத்திரிகைகளுக்கு விடுத்த அறிக்கையிலிருந்து கூறப்படும் மேலே கொடுக்கப்பட்டிருக்கும் ஒவ்வொரு கூற்றும், காங்கிரஸ் பொதுவாகக் கொண்டிருக்கும் அல்லது கொண்டிருப்பதாகக் கூறப்படும் கருத்துக்கு மாறுபட்டதாகும். அந்தக் கருத்து அவருக்கு இருந்தாலும் இல்லாமற்போனாலும், அவர் சொன்னதாகக் கூறப்படும் கருத்துக்கள் இங்குப் பொருத்தமற்றவை. இச்சமயத்திற்கு அவற்றை அவற்றின் தகுதியைக் கொண்டு கவனித்துக் காங்கிரஸின் தீர்மானங்களுக்கு அவை முற்றிலும் பொருந்தாதவை என்பதைக் காட்டுவது மாத்திரமே போதும்.

காலஞ்சென்ற லாலா லஜபதிராயின் தலைமையில் 1920-இல் கல்கத்தாவில் நடந்த காங்கிரஸின் விசேட மகாநாட்டில் செய்த தீர்மானத்தின்படி. அகிம்சை நடவடிக்கையின் முதல் கொள்கை, அவமதிப்பு உண்டாக்குவதாக இருக்கும் எல்லா விஷயத்திலும் ஒத்துழையாமை செய்வது என்பது. இந்தியக் கடற்படை ஆளப்படுபவரின் நன்மைக்காக ஏற்பட்டது அன்று என்பதை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். இவர்கள் கண்ணை மூடிக்கொண்டு அதில் போய்ச் சேரவில்லை.

அங்கே வித்தியாசமாக நடத்தப்படுகிறார்கள் என்பது பகிரங்கமாகத் தெரிகிறது. இந்தியாவை அடிமையாக வைத்திருப்பதற்கென்றே தெளிவாக உள்ள ஒரு துறையில் உத்தியோகத்திற்காக ஒருவர் போனால், அதைத் தவிர்க்க முடியாது. நிலைமையைத் திருத்த ஒருவர் முயன்று பார்க்க வேண்டும்; முயற்சி செய்யவும் வேண்டும். ஆனால், அது ஓரளவுக்குத் தான் சாத்தியம். கலகம் உண்டாக்குவதன் மூலம் அதை யாரும் அடைந்துவிட முடியாது. கலவரம் பேருக்குத்தான் வெற்றியை அளிக்கக்கூடும். ஆனால், அந்த வெற்றியின் பலன் கலகம் செய்தவருக்கும் அவர்களின் உறவினருக்குமேயன்றி இந்தியா முழுமைக்கும் அன்று. இந்தப் படிப்பினை நாம் கெட்ட வழியில் வருவதையே காட்டும். கட்டுத்திட்டத்திற்கு உடன்படுவது இப்பொழுது உள்ளது போலவே சுயராஜ்யத்தின் கீழும் அவசியமானதாக இருக்கும். வெற்றி பெறும் கலகத்தினரின்கீழ் இந்தியா, ஒன்றோடொன்று போர் செய்து கொள்ளும் கோஷ்டிகளைக் கொண்டதாகவும், இடைவிடாத சச்சரவுகளினால் களைத்துப் போனதாகவும் இருக்கும்.

அவமானம் செய்யப்படுவதை எதிர்த்துப் போராடி ராஜீநாமாச் செய்த கடற்படைச் சிப்பந்திகளுக்குப் பதிலாக அந்த வேலைக்குப் போக நூற்றுக்கணக்கானவர்கள் தயாராயிருப்பார்கள் என்பது உண்மையாயின், சுயராஜ்யத்திற்கான போராட்டம் தொடுத்துள்ள காங்கிரஸின் இந்தியா அடைந்திருக்கும் முன்னேற்றம் மிகக் குறைவு என்று ஆகும். அவமானப்படுத்தப்பட்ட சகோதரர்கள் விட்டுச் சென்ற பதவிகளுக்கு நூற்றுக்கணக்கானவர்கள் போய்த் தாமும் அவமானப்படத் தயாராயிருக்கும் அளவுக்கு நாம் உணர்வற்றவர்களானால், பொது மக்களுக்கு நாம் சுயராஜ்யத்தைக் கொண்டு வர முடியுமா? அந்த எண்ணமே, அதுவும் சுயராஜ்யம் கிட்டத்தில் வந்துவிட்டது என்று இருக்கும் இச்சமயத்தில், காங்கிரஸ்காரர்களுக்கு ஏற்புடையதன்று.

இந்தியக் கடற்படையில் சேர்ந்திருப்பது ஒன்றே அவர்களுடைய பிழைப்பிற்கான ஒரே மார்க்கம் என்று சொல்லுபவர்கள், அவர்களைக் குறித்துக் கேவலமான கருத்துக் கொண்டிருப்பவர்களாவர். ஒரு சிப்பாயின் வாழ்க்கை கஷ்டமான வாழ்க்கை. இணைந்து வேலை செய்யும்படி அவர் கட்டுத்திட்டங்களுக்கு உட்படுத்தப்பட்டிருக்கிறார்; கடப்பாரை, மண்வெட்டி கொண்டு வேலை செய்யவும் பழக்கப்பட்டிருக்கிறார். அப்படிப் பட்ட ஒருவர், சிப்பாயாக இருப்பதைத் தவிரப் பிழைப்புக்குத்

தமக்கு வேறு வழியேயில்லை என்று எண்ணவும் கூசுவார். சிப்பாய்களால் பாடுபட்டு வேலை செய்து பிழைக்க முடியாது என்று நாம் எண்ணினால், அவர்களைக் குறித்து நாம் தவறான கருத்துக் கொண்டிருப்பவர்களே ஆவோம். ஓர் உழைப்பாளி எந்த வேலையையும் நன்றாகவே செய்வான். தானே விரும்பிச் சிப்பாயாக ஆனவன், தனக்குக் கொடுக்கப்படும் கௌரவத்தையோ, வசதிகளையோ பொருட்படுத்த மாட்டான் என்பதே உண்மையானதாகும். கொல்லுவது ஒரு தொழிலாக இருப்பதைப் போக்கி, அதற்கு இவ்வளவு காலமாகப் பூசி வைக்கப்பட்டிருக்கும் கனமான மெருகையும் இன்னும் நாம் நாசப்படுத்தவில்லையென்றால், அருமையான இருபத்தைந்து ஆண்டு காலத்தை நாம் வீணாக்கிவிட்டவர்களாவோம்.

ராஜீநாமாச் செய்வதால் கடற்படைச் சிப்பந்திகள் எந்த நன்மையும் அடைந்திருக்க மாட்டார்கள் என்று அருணா ஆஸப் அலி கூறியதாகச் சொல்லப்படுகிறது.... அவர்கள் ஆண்மையோடு தங்கள் உத்தியோகங்களை விட்டிருப்பார்களானால், மானத்தையும் மதிப்பையும் காக்கும் வழியைப் பம்பாய் நகரினருக்குச் சொல்லிக் கொடுத்திருப்பார்களானால், உயிரையும் சொத்துக்களையும், மிக அருமையானதான உணவுப் பொருள்களையும் அழிக்காமல் பம்பாயை விட்டிருப்பார்களாயின், கௌரவத்தையும் மதிப்பையும் அவர்கள் அடைந்திருப்பார்கள். கவனத்திற்குரியதான ஒன்றை அடைந்ததாகவும் அது நிச்சயமாக ஆகியிருக்கும்.

அவருடன் பேட்டி என்று கூறப்படுவதில் காணும் கடைசிக் கூற்று எண்ணக் குழப்பத்தையே காட்டுகிறது. நாட்டின் மானத்தையும் சுதந்திரத்தையும் காப்பதற்காகக் காங்கிரஸ்காரர்கள் சட்டசபைக்குப் போயிருக்கிறார்கள் ; கடற்படைச் சிப்பந்திகள் செய்தது தங்களுடைய நாட்டு மக்களுக்கும் அவர்களுடைய சுதந்திரத்துக்கும் விரோதமாகப் பயன்படலாம் என்பதும் வயிற்றுப் பிழைப்பிற்காக உத்தியோகத்திற்குப் போனதும் ஒன்றாகா. வாக்காளர்களின் பிரதிநிதிகளாக, அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டுக் காங்கிரஸ்காரர்கள் சட்டசபைகளுக்குப் போகின்றனர். அதுவும், வாக்காளர்களின் கோரிக்கையைத் தவறாகக் கூறுவோர் உள்ளே போய்விடாமல் இருப்பதைத் தடுப்பதற்காகக் காங்கிரஸ்காரர்கள் போகின்றனர். சட்டசபைக்குள் போவது என்பது முற்றிலுமே தவறானதாக இருக்கலாம். ஆனால், இப்பொழுது கூறப்பட்டதைப்போல ஒப்பிட்டுச் சொல்வதற்கு எதுவும் இல்லை.

புனா, 3—3—1946 —'ஹரிஜன்' - 10—3—1946

# 11

# வெட்கப்பட வேண்டியது

[கீழே வருவது, மகாத்மா காந்தி 1946 மார்ச் 11-ஆம் தேதி பம்பாயில் ரங்தா மாளிகைப் பிரார்த்தனைக் கூட்டத்தில் பேசியதாகும்.]

'சமீபத்தில் பம்பாயில் நடந்த சம்பவங்களைக் குறித்து நான் வெட்கப்படுவதோடு அவமானத்தையும் அடைகிறேன். நீங்களும் அப்படியே உணர்ந்திருப்பீர்கள். அந்த மானக் கேடான சம்பவங்களில் ஈடுபட்டவர்கள் யாரும் உங்களில் இல்லை என்றே நம்புகிறேன். ஆனால், அதனால் மாத்திரம் நீங்கள் என் பாராட்டுதலுக்கு உரியவர்களாகிவிட முடியாது. மதில்மீது பூனையாகவோ அல்லது 'இரண்டு பொருள்படுவது தான் நியாயம்' என்பதன்கீழ் அடைக்கலம் புகுந்திருக்கவோ யாராலும் முடியாது என்ற கட்டத்தை நாம் இப்பொழுது அடைந்திருக்கிறோம். தன் எண்ணத்தைப் பகிரங்கமாகச் சொல்லி, அதில் உறுதியாக நிற்க வேண்டும். பெருந் தீ மூண்டிருக்கும் இச்சமயத்தில் செயலற்றிருப்பது மன்னிக்க முடியாதது. அனுசரிக்க முடியாத அவ்வளவு கஷ்டமான லட்சியமா அது? ஆயினும், அது ஒன்றே இப்பொழுது இருக்கும் கஷ்டங்களைச் சமாளித்து உங்களைப் பத்திரமாகக் கொண்டு போகக் கூடியது என்று உங்களுக்குக் கூறுகிறேன்.

இத்தகைய கோரமான எழுச்சிகளைக் காலிகளின் செய்கை என்று கூறிவிடுவது இக்காலத்தில் ஒரு நாகரிகமாகப் போய்விட்டது. 'நாம் அதில் கலக்கவில்லை' என்ற தரும வழியில் விலகி நிற்பது நேர்மையன்று. அந்தக் காலிகள் என்போர்தாம் யார்? அவர்களும் நம் நாட்டினரே. நாம் எல்லோரும் ஒன்று என்று சொல்லிக்கொள்கிறோம். அப்படியிருக்கும் போது, நம் நாட்டினரில் யாரேனும் அத்தகைய செய்கைகளில் ஈடுபடும்போது அதில் நமக்குமுள்ள பொறுப்பை நாம் மறுத்துவிட முடியாது. நடந்த காரியங்களுக்குப் பொறுப்புள்ளவர்கள் காலிகள் என்று கூறிக் கண்டிக்கப்படுவதோ அல்லது தேசாபிமானிகள் என்று போற்றப்படுவதோ பெரிதல்ல. போற்றுதலோ அல்லது குற்றம் சாட்டப்படுவதோ நம் எல்லோரையும் சமமாகச் சேருவதாகும். சுதந்திரத்தை அடைய ஆசைப்படுகிறவர்கள், ஆண்மையோடும் கண்ணியமாகவும் செய்யக்கூடிய ஒரே வழி நம் கடமையைச் செய்வதில் இரண்டையும் ஏற்றுக்கொள்வதாகும்.

உண்பதிலும், உறங்குவதிலும், உடலைப்பற்றிய மற்றக் காரியங்களைச் செய்வதிலும் மிருகத்தினின்று வேறுபட்டவனல்ல மனிதன். ஒழுக்க அளவில் மிருகத்திற்கு மேம்பட்டவனுவதற்குச் செய்யும் இடைவிடாத முயற்சி ஒன்றே மிருகத்தினின்று மனிதனை வேருக்குகிறது. மனித வர்க்கம் திக்குத் தெரியாத நிலையில் இருக்கிறது. மிருக தருமமா அல்லது மனித தருமமா? இதில் ஒன்றை மனிதன் தேர்ந்துகொள்ள வேண்டும். இந்தியாவில் இருக்கும் நாம், இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னரே மனித தருமத்தை விரும்பி மேற்கொண்டோம். ஆனால், மேலான வழியையே நாம் பின்பற்றுவதாகக் கூறிக்கொண்டாலும், செயல் முறையில் அத்துடன் ஒத்துப் போகவில்லை என்றே அஞ்சுகிறேன். வீரர்களின் வழியே அகிம்சை என்று நாம் நாடறியக் கூறியிருக்கிருேம். ஆனால், நம்மில் சிலர், அகிம்சையைப் பலவீனர்களின் ஆயுதமாக உபயோகித்து, அதன் மதிப்பையும் கெடுத்துவருகிருர்கள். சமீபத்தில் பம்பாயில் நடந்திருப்பதைப் போன்ற குற்றங்களைப் பார்த்துக்கொண்டு சும்மா இருப்பது கோழைத்தனம் என்பதே என் கருத்து. வீரருக்கு உரியது அகிம்சை என்பதை மிக்க அடக்கத்துடனேயே கூறுகிறேன். 'கடவுளின் வழி வீரருக்கேயன்றிக் கோழைகளுக்கு அல்ல' என்று பிரீதம் பாடினர். கடவுளின் வழி என்று இங்கே கூறப்பட்டிருப்பது, அகிம்சையின், சத்தியத்தின் வழியாகும். சத்தியத்தையும் அகிம்சையையும் தவிர வேறு எதையும் நான் கடவுளாக எண்ணவில்லை என்று முன்பே கூறியிருக்கிறேன். அகிம்சைத் தத்துவத்தை, அதன் விளைவுகளைப்பற்றி முற்றிலும் அறியாமலேயே நீங்கள் ஏற்றுக்கொண்டிருப்பீர்களாயின், அதை மறுத்துவிட உங்களுக்கு உரிமை உண்டு. ஒருவர் தம் தவறுகளை ஒப்புக்கொண்டு திருந்திக் கொள்ளலாம் என்பதை நம்புகிறேன். அப்படிப் ஒப்புக்கொண்டு விடுவது ஒருவரைப் பலப்படுத்துவதோடு ஆத்மாவையும் பரிசுத்தமாக்குகிறது. பதிலுக்குப் பதில் செய்யாமல் துன்பத்தை அனுபவிப்பதற்கும், திருப்பி அடிக்காமலேயே அடிகளை வாங்கிக் கொள்ளுவதற்கும் பலத்தையும் தீரத்தையுமே அகிம்சை விரும்புகிறது. ஆனால், இதுவே அதன் முழுப்பொருளாகிவிடாது. முழு உண்மையையும் சொல்லி, அதற்கு ஏற்றபடி நடக்கவும் வேண்டிய சமயத்தில் மௌனமாக இருந்துவிடுவது கோழைத்தனமாகிறது. காங்கிரஸ் பிரகடனம் செய்திருக்கிறபடி, இந்தியாவின் சுயராஜ்யத்தைச் சத்தியத்தினுலும் அகிம்சையினுலும் நாம் அடைவதாயிருந்தால் அந்தத் தைரியத்தை நாம் வளர்த்துக்கொள்ள வேண்டும். அதற்காகவே வாழ்ந்து, அதற்

காகவே சாவதற்கும் ஏற்றதானதொரு லட்சியம் அது. அந்த லட்சியத்தை ஏற்றுக்கொண்டிருக்கும் ஒவ்வொருவரும், ஒரு தனி ஆங்கிலப் பெண்ணோ அல்லது குழந்தையோ தாக்கப்படும் போது அது உங்களுடைய அகிம்சா தருமத்திற்கே ஒரு சவால் என்றும், உங்களுடைய உயிரைக் கொடுத்தாயினும் தாக்கப் படுபவரைக் காக்க வேண்டும் என்றும், உணர வேண்டும். அப்பொழுதுதான், 'கடவுளின் வழி வீரருக்கேயன்றிக் கோழை களுக்கு அல்ல' என்று பாட உங்களுக்கு உரிமை உண்டு. இப்பொழுது இருக்கும் அரசாங்கத்தினிடம் தனக்குக் குறை இருக்கிறது என்பதற்காகப் பாதுகாப்பற்று இருக்கும் ஆங்கிலப் பெண்களையும் குழந்தைகளையும் தாக்குவது மனிதத் தன்மைக்கே இழுக்காகும்.

—'ஹரிஜன்' - 7—4—1945

# 12

# சிறந்த வழி

இவ்வாரத்தில் காந்திஜியின் புத்திமதியைப் பெறுவதற் காக ராணுவத்தினர் பலர் காந்திஜியின் முகாமுக்கு வந்திருந் தனர். அவர்களில் ஒருவர் காந்திஜியைப் பார்த்தார். அவர் அதிகப் பரபரப்பு அடைந்திருந்தார். "என்ன ஆகிறதோ ஆகட்டும் என்ற கடின நிலைக்கு எங்கள் ஆட்கள் வந்துவிட் டனர்" என்றார். பணிந்து போய் அவமானங்களை, அநீதிகளை எல்லாம் சகித்துக்கொள்ளும்படி காந்திஜி அவர்களுக்குக் கூறுவாரா?

"இல்லை" என்று பதிலளித்தார் காந்திஜி "ஆனால், நான் கலப்பற்ற அகிம்சை நடவடிக்கையையும், பகிரங்கமாகச் செய்யப்படுவதையுமே விரும்புவேன். ரகசியம் என்பதையே வெறுக்கிறேன்" என்றார்.

வந்தவர் திகைத்துவிட்டார். போராடும் சிப்பாய்களிடையே தங்கள் குறைகளுக்குப் பரிகாரம் காணும் வகையில் அகிம் சைக்கு என்ன இடம் இருக்க முடியும் என்று அவர் ஆச்சரி யப்பட்டார். அவர்களுக்குக் காந்திஜி கூறியதாவது:

"நாடு செய்ய வேண்டியதாக இருக்கும் தியாகத்தையும் உயர்ந்த அகிம்சையையும் மேற்கொள்ளுவதற்கு அகிம்சை நடவடிக்கை வேலைத் திட்டம் ஒன்றை 1942 ஆகஸ்டு 7-ஆம் தேதி அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் நான்

பேசியபோது கூறினேன். பத்திரிகைகள் என்ன செய்யவேண்டும், மாணவர்கள் என்ன செய்ய வேண்டும், சுதேச மன்னர்கள் என்ன செய்ய வேண்டும், கடைசியாக இந்தியச் சிப்பாய்கள் என்ன செய்ய வேண்டும் என்பதை அந்தப் பிரசங்கத்தில் கூறினேன். எல்லோரும் நான் சொன்னபடி செய்திருப்பார்களானல், திகைக்க வைக்கும் பலன் ஏற்பட்டிருக்கும். அந்த வேலைத் திட்டத்தின்படி இன்னும் நடக்கலாம். சிப்பாய்கள், இந்தியாவுக்குச் சுதந்திரம் கொண்டுவரவும் அச்சுதந்திரத்தைக் காப்பதற்கும் தாங்கள் சிப்பாய்களாக இருப்பார்களேயன்றி வயிற்றுப் பிழைப்புக்கெனச் சிப்பாய்களாக இருக்கப்போவதில்லை என்று அறிவித்துவிட வேண்டும். இன்று இருக்கும் அரசாங்கத்திடம் அவர்கள் விசுவாசமில்லாமல் இருப்பார்களாயின் நாளைக்கு அதே விதமாக அவர்கள் தேசீய அரசாங்கத்தினிடமும் விசுவாசம் இல்லாதவர்களாக இருப்பார்கள். ஆகையால், தாங்கள் ஊதியம் பெறும் அரசாங்கத்தினிடம் அவர்கள் விசுவாசமற்றவர்களாக இருக்க வேண்டும் என்பதை நான் விரும்பவில்லை. ஆனல், ஒரு சிப்பாய் தன்னுடைய மேலதிகாரியிடம் போய், தம்முடைய நாட்டின் சுதந்திரத்தை அவர் ஆதரிக்கும் வரையில்தான் தாம் அவருடைய ஆளாக இருக்க முடியும் என்றும், தம் சொந்த மக்களின் சுதந்திரத்தை நசுக்குவதற்குத் தாம் ஆயுதத்தை ஏந்த முடியாது என்றும் கூறுவாரானல், அப்பொழுது அவர் விசுவாசமற்றவராக இருக்க முடியாது. இவ்விதம் அந்தச் சிப்பாய்கள் கூறியதற்காக அவர்கள் நீக்கப்பட்டாலும், கண்டிக்கப்பட்டாலும் அல்லது ராணுவக் கோர்ட்டில் அவர்களுக்குத் தண்டனை விதிக்கப்பட்டாலும் அதை அவர்கள் பொருட்படுத்தக்கூடாது. இதன் மூலம் அவர்கள் ஒரு தீப்பொறியை ஏற்றியவர்களாவர். எந்த வல்லரசின் எந்தவிதமான ஆயுதங்களினலும் அத்தீப்பொறியை அணைத்துவிட முடியாது. ரத்தம் சிந்தாமலே சீக்கிரத்தில் இந்திய ராணுவம் முழுவதிலும் தேசாபிமான உணர்ச்சி நிரம்பிவிடும். இதற்கு மாருக அவர்கள், கட்டுப்பாடின்மையிலும், பலாத்காரத்திலும், காலித்தனத்திலும் இறங்கிவிடுவார்களானல், அவர்களிடம் யாருக்குமே அனுதாபம் இல்லாமற் போவதோடு அவர்களுக்குப் பாடம் கற்பிக்க அதிகாரிகள் இதை ஒரு சந்தர்ப்பமாகவும் உபயோகித்துக் கொள்ளக் கூடும்.''

''நான் இங்கு வந்தபோது என் மூளை குழம்பியிருந்தது'' என்ருர் வந்தவர்; ''இப்பொழுது விஷயங்களை மிகத் தெளி

வாகக் காண்கிறேன். பெரிய பிழையிலிருந்து நீங்கள் எங்களைக் காப்பாற்றிவிட்டீர்கள். அவசரப்பட்டோ அல்லது புத்தி கெட்டோ எதையும் செய்துவிடமாட்டோம்" என்றார்.

புனா, 3—3—1946 — 'ஹரிஜன்' - 10—3—1946.

# 13

# காலித்தனத்தை எதிர்த்துச் சத்தியாக்கிரகம்

காலிகள் கொள்ளை அடிப்பதைத் தடுக்க ஒரு சத்தியாக்கிரகி என்ன செய்ய வேண்டும் என்று ஒரு நண்பர் மெதுவாக ஒரு கேள்வியைக் கேட்கிறார். சத்தியாக்கிரகத்தின் ரகசியத்தை அவர் அறிந்திருப்பாரானால் இக்கேள்வியைக் கேட்டிருக்க மாட்டார்.

தாம் எதைச் சரியென்று எண்ணுகிறாரோ அதற்காகத் தாமே தனித்து என்றாலும், உயிரைக் கொடுக்கத் தயாராயிருப்பதே சத்தியாக்கிரகத்தின் மூலக்கொள்கையாகும். இதற்கு அதிகமாக யாரும் செய்ய முடியாது. ஒருவன் வாளை வைத்திருக்கிறான் என்றால், சில தலைகளை அவன் துண்டித்து விடக்கூடும். ஆனால், முடிவில் இன்னும் பெரிய அளவான பலத்தினிடம் அவன் சரணாகதி அடைய வேண்டும். இல்லையானால், போராடிக்கொண்டே மாள வேண்டும். சத்தியாக்கிரகியின் வாள் அன்பு; அதிலிருந்து வரும் அசைக்க முடியாத உறுதியில் தம்மை எதிர்க்கும் நூறு காலிகளையும் அவர் தம் சகோதரர்களாகவே பாவிப்பார். அவர்களைக் கொல்ல முயல்வதற்குப் பதிலாக அவர்கள் கையால் தாம் இறப்பதற்கு முற்பட்டு அதன் மூலம் சாவாமையை எய்துவார்.

இது நேரானது, எளிதானது. ஆனால், பெருவாரியான மக்களின் மத்தியில் தனி ஒருவராக இருக்கும் சத்தியாக்கிரகி எவ்விதம் வெற்றி பெற முடியும்? பம்பாய் நகரில் கொள்ளி வைக்கவும் கொள்ளையடிக்கவும் நூற்றுக்கணக்கான காலிகள் கட்டவிழ்த்துவிடப்பட்டிருக்கின்றனர். தனித்த ஒரு சத்தியாக்கிரகி, கடலில் ஒரு நீர்த்துளிபோலவே இருப்பார். கடிதம் எழுதியிருப்பவர் இவ்விதம் வாதம் செய்கிறார்.

ஒரு சத்தியாக்கிரகி, தாம் தனியாக இருந்தாலும் சரி அல்லது பலருடன் சேர்ந்து இருந்தாலும் சரி, ஆபத்திலிருந்து மாத்திரம் அவர் ஓடி விடவே மாட்டார் என்பதுதான் என் பதில்,

போராடியே அவர் இறப்பாரானல், அவர் தமது கடமையை முற்றிலும் செய்தவராவார். ஆயுதம் தாங்கிய போரிலும் இதுவே பொருந்தும். சத்தியாக்கிரகத்தில் இது இன்னும் அதிக சக்தியுடன் பொருந்துகிறது. மேலும், ஒருவருடைய தியாகம் பலரைத் தியாகம் செய்யத் தூண்டுவதோடு பெரிய பலன்களையும் உண்டாக்குகிறது. இந்தச் சாத்தியம் எப்பொழுதும் உண்டு. ஆனல், பலனைப்பற்றிய ஆசை தோன்றுவதைக் கண்டிப்பாகத் தவிர்க்க வேண்டும்.

இக்காலத்தில் ஆண் பெண் ஒவ்வொருவரும் தற்பாது காப்புக்கான கலையைக் கற்க வேண்டும் என்று நம்புகிறேன். இதை மேற்கத்திய நாடுகளில் ஆயுதங்களினல் செய்கிருர்கள். வயது வந்த ஒவ்வோர் ஆணும் ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பயிற்சிக்காகக் கட்டாயமாக ராணுவத்தில் சேர்க்கப்படுகிருர். சத்தியாக்கிரகப் பயிற்சி எல்லோருக்குந்தான். எந்த வயதினராயினும் எந்தப் பாலினராயினும் வேற்றுமையின்றி அதில் இருக்கலாம். இந்தப் பயிற்சியின் முக்கிய அம்சம் மனப் பயிற்சியேயன்றி உடற் பயிற்சி அல்ல. மனப்பயிற்சியில் கட்டாயப்படுத்துவது என்பது இருக்க முடியாது. சூழ்நிலை மனத்தில் வேலை செய்கிறது என்பதில் சந்தேகமில்லை. ஆனல், அது கட்டாயப்படுத்துவதை நியாயம் என்ருக்காது.

சத்தியாக்கிரகத்தில் அவசியமான பயிற்சி பெறுவதைக் கடைக்காரர்கள், வியாபாரிகள், மில் சிப்பந்திகள், தொழிலாளர்கள், விவசாயிகள், குமாஸ்தாக்கள், மேலும் சொன்னல் எல்லோருமே தங்களுடைய கடமையாகக் கருதவேண்டும்.

ஆயுதங் கொண்டு எதிர்ப்பதைவிடச் சத்தியாக்கிரகம் என்றுமே மேலானது. இதைச் செய்து காட்டுவதன் மூலமே சரியாக நிரூபிக்க முடியுமேயன்றி வாதத்தினல் ஆகாது. ஆயுதம் பலமுள்ளவர்களை அலங்கரிக்கிறது. பலவீனர்களுக்கு அது என்றுமே அணியாகாது. பலவீனர்கள் என்போர் உள்ளத்திலும் உணர்ச்சியிலும் பலவீனர்களேயன்றி உடலில் அல்ல. அந்தக் கட்டுத்திட்டம் போற்றத்தக்க ஒரு குணமேயன்றி வருந்த வேண்டிய குறையல்ல.

அதனிடம் இருக்கும் மற்றக் கட்டுத்திட்டங்களையும் தெரிந்து கொள்ளவேண்டும். தவருன லட்சியங்களைப் பாதுகாக்க இதை உபயோகிக்கவே முடியாது.

சத்தியாக்கிரகப் படைகளை, ஒவ்வொரு கிராமத்திலும், நகரங்களில் சேர்ந்த சில கட்டிடங்களுக்கும் ஏற்பாடு செய்து

கொள்ள முடியும். இதை ஏற்பாடு செய்கிறவருக்கு நன்ருகத் தெரிந்தவர்களைக் கொண்டதாக ஒவ்வொரு படையும் இருக்க வேண்டும். இதில் சத்தியாக்கிரகத்திற்கும் ஆயுதப் பாதுகாப்புக்கும் மாறுபாடு இருக்கிறது. ஆயுதப் படை விஷயத்தில் அரசாங்கம் ஒவ்வொருவருடைய சேவையையும் எடுத்துக் கொள்ளுகிறது. சத்தியாக்கிரகப் படை விஷயத்திலோ, அகிம்சையிலும் சத்தியத்திலும் நம்பிக்கை இருப்பவர்கள் மாத்திரமே அதில் சேரத் தகுதியுடையவர்களாவர். ஆகையால், இப்படையைத் திரட்டுபவருக்கு அதில் சேருவோரை நெருக்கமாகத் தெரிந்திருக்க வேண்டியது அவகியமாகிறது.

['ஹரிஜனபந்து'விலிருந்து மொழிபெயர்த்தது.]

புனு, 6—3—1946 —'ஹரிஜன்' - 17—3—1946

# 14

# கடமை என்ன ?

"பொதுஜனங்களின் கலவரங்கள் அதிகரித்துக்கொண்டு வரவர ராணுவத்தினரின் அக்கிரமங்களும் வரவர அதிக மிருகத்தனமானவைகளாகி வருகின்றன என்பதை நீங்கள் அறிவீர்கள். பொதுஜனங்களின் காலித்தனங்களை நீங்கள் கண்டிக்கிறீர்கள். ஆனுல், ராணுவத்தினரின் மிருகத்தனத்தைக் குறித்து நீங்கள் எதுவுமே சொல்லவில்லையே !"

புத்தி கெட்ட போக்கிற்கு இது ஓர் உதாரணம். தகாதவைகளைச் செய்ய மக்களுக்கு எந்தவித உரிமையும் இல்லை ; ராணுவமோ வெறித்தனத்தின் உருவானது. ராணுவத்தின் வெறியாட்டங்கள் கண்டிக்கப்படவில்லை என்பது அர்த்தமில்லாதது. ஆனுல், அரசாங்கத்திற்கு ஓர் எச்சரிக்கையாக ராணுவத்தின் நடத்தையைக் கண்டிக்க வேண்டியது அவசியமாகிறது. எதற்கும் சமயமும் சந்தர்ப்பமும் உண்டு. பொதுஜன அட்டூழியங்களைக் குறித்துக் கண்டிக்கும்போது அது அசந்தர்ப்பமானதாகும்.

ஒரு சத்தியாக்கிரக தளபதியின் கடமை என்ன? அவர் தம்முடைய படையைத் திருத்திக்கொள்ளுவதா அல்லது எதிரியின் படையைத் திருத்துவதா ? தம்முடையதை அவர் திருத்திக்கொள்ளும்போது எதிர்த்து நிற்கும் படையின் பலம் தானே ஒன்றும் இல்லாததாகிவிடுகிறது. இதே காரியம் போதிய அளவுக்கு நீண்ட காலம் தொடர்ந்து நடந்து வருமானுல், உண்மையில் எதிரி தாமே முற்றிலும் மாறுதல் அடைந்துவிட்டவராகிவிடுகிருர். குறை கூறுபவர் சொல்லியிருப்பது என்னைக் குறித்தே. மற்றவர்கள் ராணுவத்தின் அட்டூழியங்களைக் குறித்து

முன்பே கண்டித்திருக்கிறார்கள். அவர்கள் செய்தது சரியா, தவறா என்பதை அறிய நம்மிடம் போதுமான விவரங்கள் இன்னும் இல்லை என்றே நான் எண்ணுகிறேன். இவை வரும் என்று எதிர்பார்க்கிறேன். என்றாலும், ஆராயும் ஒளியைத் தமக்குள்ளேயே திருப்பிக்கொண்டு பார்க்க வேண்டியதுதான் மக்கள் கடமை. மற்றவர்கள் செய்யும் தவறுகளைக் குறித்தே அதிகப்படியாக எண்ணிக்கொண்டிருப்பது, அறியாமலேயே அதே போல் நடக்கச் செய்துவிடும். அப்பொழுது பனங்காய் கறுப்பென்று கரிச்சட்டி பழித்த கதையாகிவிடும்.

[' ஹரிஜனபந்து'விலிருந்து மொழிபெயர்த்தது.]

பம்பாய், 15—3—1946 — ' ஹரிஜன் ' - 24—3—1946

# 15

# அகிம்சைத் தொண்டர்படை

சாந்தி தளங்களை அமைப்பதற்குக் கொஞ்ச காலத்திற்கு முன்னால் என் தூண்டுதலின் பேரில் ஒரு முயற்சி நடந்தது. ஆனால், பலன் ஒன்றுமில்லை. என்றாலும், அத்தகைய ஒரு ஸ்தாபனத்தின் உறுப்பினர்கள் தொகை, அதன் தன்மையை முன்னிட்டு அதிகமாக இருக்க முடியாது என்ற பாடத்தைக் கற்றுக்கொண்டோம். சாதாரணமாக, பலாத்காரத்தை அடிப்படையாகக் கொண்ட ஒரு பெரிய தொண்டர்படையைத் திறமையாக நடத்துவதில் கட்டுப்பாட்டுக்கு விரோதமான காரியம் நடந்தால், அது பலாத்காரத்தை உபயோகிக்கக்கூடும் என்பதும் அடங்கியிருக்கிறது. அத்தகைய ஸ்தாபனங்களில் மனிதனுடைய ஒழுக்கத்தைக் குறித்துக் கவனிப்பதுமில்லை; வற்புறுத்தப்படுவதுமில்லை. அகிம்சை ஸ்தாபனங்களில் மாறுபட்டதாக நிலைமை இருக்க வேண்டும். இவற்றில் ஒழுக்கம் அல்லது ஆத்ம சக்தியே எல்லாம் என்றாகிறது. உடல் பலத்திற்கோ இரண்டாவது இடந்தான். அப்படிப்பட்டவர்களில் பலரைக் காண்பது கஷ்டம். இதனாலேயே அகிம்சைப் படை திறமையுள்ளதாக இருக்க வேண்டுமானால், சிறியதாக இருக்க வேண்டும். அத்தகைய படைகள் எங்கும் சிதறி இருக்கலாம். ஒரு கிராமத்திற்கோ அல்லது வட்டத்திற்கோ அத்தகைய படை ஒன்று இருக்கலாம். அதில் இருப்பவர்கள் ஒருவரையொருவர் நன்றாக அறிந்திருக்கவேண்டும். ஒவ்வொரு படையும் தானே தலைவரைத் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும். எல்லா உறுப்பினருக்கும் ஒரே மாதிரியான அந்தஸ்தே இருக்கும். ஆனால், ஒவ்வொருவரும் அதே வேலையைச் செய்வதால் ஒருவர்

தலைவராக இருந்து, அவருடைய கட்டுத்திட்டங்களின் கீழ் எல்லோரும் இருக்க வேண்டும். இல்லையானல், வேலை சரியாக நடக்காது போகும். இரண்டு அல்லது அதற்கு மேற்பட்டுப் படைகள் இருக்கும் இடங்களில் தலைவர்கள் தங்களுக்குள் கலந்தாலோசித்துப் பொதுவான நடவடிக்கை முறையை வகுத்துக் கொள்ளவேண்டும். அப்பொழுதுதான் வெற்றி ஏற்படும்.

மேற்கண்ட வகையில் அகிம்சைப் படைகளை அமைத்தால் அவர்கள் எளிதில் சங்கடத்தை நிறுத்தலாம். அகாடாக்களில் (உடற்பயிற்சிக் கூடங்களில்) கொடுக்கும் எல்லாப் பயிற்சிகளும் இவர்களுக்குத் தேவையில்லை. ஆனல், அதில் ஒரு பகுதி மாத்திரம் அவசியம்.

இத்தகைய ஸ்தாபனங்களைச் சேர்ந்தவர்கள் எல்லோருக்கும் ஒன்று மாத்திரம் பொதுவானதாக இருக்க வேண்டும். அதுதான் கடவுளிடத்தில் திடமான நம்பிக்கை. அவர் ஒருவரே உடனிருப்பவரும், செய்பவரும். அவரிடத்தில் நம்பிக்கையில்லாவிடில் இந்தச் சமாதானப் படைகள் உயிரற்றிருக்கும். கடவுளை யார், எப்பெயர் கொண்டு அழைத்தாலும் சரி, அவருடைய பலத்தைக் கொண்டே வேலை செய்ய முடியும் என்பதை ஒவ்வொருவரும் உணர வேண்டும். அப்படி உணர்ந்துவிட்டவர் இன்னொருவரின் உயிரைப் போக்கமாட்டார். அவசியம் வந்தால் தம்மைக் கொல்லுவதற்கும் அனுமதித்து, அதனல் தமது வெற்றியின் மூலம் மரணத்தையும் வென்று வாழ்வார்.

இந்தத் தருமத்தை உணர்வது யாருடைய வாழ்வில் அழியா உண்மையாகிவிட்டதோ அவருடைய மனம் நெருக்கடியால் திகில் அடைந்துவிடாது. செயலுக்குரிய சரியான வழியைத் தாமே அவர் அறிந்துகொள்ளுவார்.

நான் மேலே சொல்லியிருப்பவைகளைத் தவிர என்னுடைய அனுபவத்திலிருந்து திரட்டிய சில விதிகளையும் கூற விரும்புகிறேன் :

1. ஒரு தொண்டர் எந்த ஆயுதத்தையும் வைத்துக்கொள்ளக் கூடாது.

2. படையின் உறுப்பினர் எளிதில் அடையாளம் புரிந்துகொள்ளக் கூடியவராக இருக்க வேண்டும்.

3. முதலுதவி செய்வதற்குத் தயாராக ஒவ்வொரு தொண்டரும் காயங்களுக்குக் கட்டத் துணி, கத்தரிக்கோல், ஊசி, நூல், விரணசிகிச்சைக் கத்தி ஆகியவைகளை வைத்திருக்க வேண்டும்.

4. காயம் பட்டவர்களை எப்படி அகற்றித் தூக்கிக்கொண்டு போவது என்பது தெரிய வேண்டும்.

5. தீயை எப்படி அணைப்பது, தான் வெந்துவிடாமல் தீப்பிடித்த இடத்திற்கு எப்படிப் போவது, மீட்பு வேலையின்போது எப்படி உயரமான இடத்தில் ஏறுவது, மீட்பவரை எடுத்துக்கொண்டோ, எடுக்காமலோ எப்படி இறங்குவது ஆகியவை தெரிந்திருக்க வேண்டும்.

6. தாம் இருக்கும் இடத்தில் வசிப்பவர்கள் எல்லோருடனும் நன்ருகப் பழகியிருக்க வேண்டும்.

7. உள்ளத்தில் என்றும் ராம நாமத்தை உச்சரித்து வருவதோடு நம்பும் மற்றவர்களும் அதே போலச் செய்யுமாறு தூண்டவேண்டும்.

மனச் சோம்பலினுலோ அல்லது கெட்ட பழக்கங் கொண்டுவிட்டதனுலோ பலர் கடவுள் இருக்கிருர், நாம் கேட்காமலேயே அவர் வந்து உதவுவார் என்று நினைக்கின்றனர். அப்படியானுல் அவருடைய நாமத்தை உச்சரிக்கும் அவசியம் ஏன்? நாம் நம்பினுலும், நம்பாவிட்டாலும் கடவுள் இருக்கிருர் என்பது உண்மை. ஆனுல், கடவுளை உணர்வது வெறும் நம்பிக்கையைவிட நிச்சயமாக மேலானது. விடாமற் பயிற்சி செய்வதனுலேயே அது வரும். எல்லாச் சாத்திரங்கள் சம்பந்தமாகவும் இதுவே உண்மை. சாத்திரங்களுக்கெல்லாம் சாத்திரமான இவ்விஷயத்தில் இது இன்னும் எவ்வளவு உண்மையாக இருக்கும்!

மனிதன் கிளிப்பிள்ளைபோல் கடவுளின் பெயரைச் சொல்லிவிட்டு அப்படிச் செய்வதற்காகப் பலனை எதிர்பார்க்கிருன். உண்மையாகக் கடவுளை நாடுகிறவருக்கு ஜீவநம்பிக்கை இருக்க வேண்டும். அத்தகைய நம்பிக்கை, கிளிப்பிள்ளை போல் பாராயணம் செய்வதிலுள்ள பொய்மையை அவன் உள்ளத்திலிருந்து போக்குவதோடு மற்றவர் உள்ளங்களிலிருந்தும் அகற்றிவிடுகிறது.

['ஹரிஜனபந்து'விலிருந்து மொழிபெயர்த்தது.]
புது டில்லி, 26—4—1946 —'ஹரிஜன்' - 5—5—1946

## 16

# அறப் போரா, மறப் போரா?

காங்கிரஸுக்கு உற்ற துணையாக இருப்பது ஒழுக்க பலம் ஒன்றே என்பதை அடிக்கடி மறந்துவிடுகிருேம். ஆட்சி அதிகாரம், ஒழுக்கத்தில் போர் மனப்போக்கையும் கலக்கிறதென் ருலும், அதற்கு இருப்பது போர் மனப்போக்கே. ஏழு மாகாணங்களில் காங்கிரஸ் பதவியை ஏற்றுக்கொண்டது முதல் இந்த முக்கியமான பாகுபாடு முன்னுல் வந்திருக்கிறது. இந்தப் பதவி வகிப்பு, ஒன்று அதிக கௌரவத்தை நோக்கி

அல்லது முழு நஷ்டத்தை நோக்கிப் போவதேயாகும். அது முழுக் கஷ்டமாக முடிந்துவிடக்கூடாது என்ருல், மந்திரிகளும் சட்டசபை உறுப்பினரும் தங்கள் சொந்த அல்லது பொது நடத்தை சம்பந்தமாகக் கண்காணிப்புடன் இருக்க வேண்டும். இவர்கள் ஸீஸரின் மனைவியைப் போன்று எல்லாவற்றிலுமே பிறர் சந்தேகிக்க முடியாதவர்களாக இருக்க வேண்டும். தங்களுக்கோ அல்லது தங்கள் உறவினருக்கோ, இல்லாவிடில் நண்பர்களுக்கோ சொந்த லாபத்தைச் செய்யக்கூடாது. உறவினருக்கோ அல்லது நண்பர்களுக்கோ ஏதாவது உத்தியோகம் வந்தால், அந்தப் பதவிக்கு வந்த மனுதார்களில் அவர்களே சிறந்தவர்களெனத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாக இருக்கவேண்டும். சர்க்கார் உத்தியோகத்தினுல் அவர்களுக்கு ஏற்படக்கூடிய மதிப்பைவிட அவர்களுக்கு வெளியார் தரும் மதிப்பு மிகுதியாக இருக்கவேண்டும். மந்திரிகளும், காங்கிரஸின் பெயரால் சட்டசபைக்கு வந்திருப்பவர்களும், தங்கள் கடமையை நிறைவேற்றுவதில் கொஞ்சமும் அஞ்சாதவர்களாக இருக்க வேண்டும். தங்களுடைய ஸ்தானங்கள், பதவிகளை இழக்கும் ஆபத்துக்கு உட்படவும் அவர்கள் என்றும் தயாராக இருக்க வேண்டும். காங்கிரஸின் கௌரவத்தையும் சக்தியையும் உயர்த்துவதற்குப் புறம்பாகப் பதவிகளிலும் சட்டசபை ஸ்தானங்களைப் பெறுவதிலும் எந்த மதிப்பும் இல்லை. இந்த இரண்டும், பொது விஷயங்களிலும் சொந்த விஷயத்திலும் ஒழுக்கமுடன் இருப்பதைப் பொறுத்தவையாகவே இருப்பதால், ஒழுக்கத்தில் எந்த இழுக்கு ஏற்பட்டாலும் அது காங்கிரஸுக்குத் தீமையாகிவிடும். அகிம்சையின் அவசியமான விளைவு இது. பிரிட்டிஷ் அதிகாரிகளுக்கும் அவர்களை அண்டிப் பிழைப்பவர்களாக இருப்பவர்களுக்கும் உடல் துன்பம் எதையும் உண்டாக்காமல் இருப்பது என்பதோடு காங்கிரஸின் அகிம்சை அடங்கிவிடுமானுல், அத்தகைய அகிம்சை நமக்குச் சுதந்திரத்தைக் கொண்டு வரவே முடியாது. முடிவான அளவில் அது தோல்வியடைந்தே தீரும். நிச்சயமாகத் தீமையானது என்று இல்லாவிட்டாலும், அது பயனற்றது என்பதை முடிவான அளவில் வருவதற்கு முன்னுலேயே நாம் கண்டு கொள்ளுவோம்.

காங்கிரஸின் அகிம்சையை அந்தக் குறுகிய நோக்கோடு எண்ணுகிறவர்கள், அது அறுந்த தந்தியைப் போன்றது என்று சொல்லுகிருர்களென்ருல் அந்த வாதத்தில் அதிக பலமும் இருக்கிறது.

இதற்கு மாறாக, அகிம்சை அதன் எல்லா அம்சங்களுடனும காங்கிரஸின் கொள்கையாக இருக்கிறது என்றால், ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் தம்மைத் தாமே சோதித்துக்கொண்டு அதற்கு ஏற்றாற்போலத் தம்மைத் திருத்திக்கொள்ளட்டும். காரியக் கமிட்டியின் ஆக்ஞைக்காக அவர் காத்துக்கொண்டிருக்கவேண் டாம். பொது ஜன அபிப்பிராயத்தை விளக்கும் வகையில் மாத்திரமே காரியக் கமிட்டி எதையும் செய்ய முடியும். உத் தரவின்படி உருவாக்கவோ அல்லது வெளிக்காட்டவோ கூடிய தன்மையுடையதன்று, அகிம்சை. தனிப்பட்டவர்களின் தீவிர முயற்சியின் பேரில் நிலைபெறுவதான உள் வளர்ச்சியே அது.

கலகம் போன்றவை நடக்கும் சமயங்களில் தங்களையே அர்ப்பணம் செய்யத் தயாராக இருப்பதாகக் கூறித் தொண் டர்களாகத் தங்களைப் பதிவு செய்துகொள்ள அநேகரிடமிருந்து எனக்குக் கடிதங்கள் வந்திருக்கின்றன. அப்படி எழுதியிருப் போருக்கு நான் ஒரு யோசனை கூறுவேன்: தங்களை அவர்கள் சக ஊழியர்களாகப் பதிவு செய்துகொண்டு, உள்ளூர்ப் படை களை அமைத்து, நான் கூறியிருக்கும் யோசனைகளின்படி பயிற் சியை ஆரம்பிக்கட்டும். அவசர நிலைமை வரும்போது தயாராக இருப்பது என்பதோடு அவர்கள் இருந்துவிட வேண்டாம். சொந்தமான வீடு, சமூகம், பொருளாதாரம், ராஜீயம், மதம் ஆகிய அன்றாட வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் அவர் கள் தயாராக இருக்கட்டும். அப்பொழுதுதான் தங்கள் சொந்தப் பகுதிகளில் ஏற்படும் அவசர நிலையைச் சமாளிக்கக் கூடியவர்களாக அவர்கள் ஆவார்கள். தாங்கள் வேலை செய்து வரும் இடத்திற்கு நூற்றுக்கணக்கான மைல்களுக்கு அப்பால் நடக்கும் சம்பவங்கள் சம்பந்தமாக, மறைமுகமாக அல்லாமல், தங்கள் செல்வாக்கைப் பயன்படுத்த அவர்கள் முயற்சி செய்ய வேண்டியதில்லை. எடுத்த எடுப்பிலேயே சரியாகச் செய்ய ஆரம்பித்தால் அந்த ஆற்றல் தானே ஏற்படும்.

—'ஹரிஜன்' – 23—4—1938

# 17

# கொள்ளை

ஒருவர் வருமாறு எழுதுகிறார்:

''உணவுத் தானியம் வாங்குவதற்குக் கிடைக்காமல் மக்கள் பட்டினி கிடக்கும்போது அரசாங்கக் கிடங்குகளிலும் தனிப்பட்டவரின் கிடங்குகளி லும் உணவுத் தானியம் கிடந்து சீரழியவிடப்பட்டிருக்கிறது என்று வைத்துக் கொள்ளுவோம். அப்பொழுது ஊழியர்கள் செய்ய வேண்டியது என்ன?

மக்களைக் காப்பதற்குத் தரசனா உப்பளப் படையெடுப்பில் நீங்கள் செய்ததைப் போன்று ஏதாவது ஒன்றை மேற்கொள்வது அனுமதிக்கக்கூடியதாகுமா? கொள்ளையடிப்பது அல்லது வாயில்லாக் கால்நடைகளைப்போலச் சாவது ஆகிய இரண்டையும் நீங்கள் ஏற்கவில்லை. அப்படியானால், இவற்றிற்குப் பதிலாகச் செய்யக்கூடியதுதான் என்ன?''

**பதில்:** கொள்ளையடிப்பது என்பது என்றுமே நன்மையைச் செய்ய முடியாது என்பது எல்லோருக்கும் தெரிந்தது. இது ஏதாவது காரியத்தைச் செய்தது உண்டு என்று சொல்லப்படுமானால், மிக முக்கியமான தேவையைக் குறித்து அதிகாரிகளின் கவனத்திற்குக் கொண்டுவருவது ஒன்று மாத்திரமே இதனால் ஏற்படும் நன்மையாகும். நான் யோசனை கூறியபடி விரும்பியே, தாமே ஒருவர் பட்டினி இருப்பதென்பது மிகச் சிறந்தது. ஏனெனில், அதனளவில் அது நல்லதாவதோடு சரியானபடி கோரிக்கையை எடுத்துக் காட்டுவதாகிறது என்பதனாலும் அது நல்லதாகிறது. அதனளவிலேயே நல்லதாக இருப்பது ஏனெனில், தாமே பட்டினி இருப்பவர்கள் தம் உறுதியின் பலத்தைக் காட்டுவதோடு அது பசியின் துன்பத்திலிருந்தும் அவர்களைக் காக்கிறது. பொதுஜன மனச்சாட்சியையும், அதிகாரிகளுக்கு மனச்சாட்சி என்று ஒன்று இருக்குமானால் அதையும் அது எழுப்புகிறது.

தரசனா உப்பளப் படையெடுப்பைப்* பொறுத்தவரையில், என் கருத்தின்படி, தவறுகள் பல செய்யப்பட்டிருந்தாலும்,

*1930-இல் மகாத்மா காந்தி, தண்டிக்குத் தம் தொண்டர்களுடன் யாத்திரையாகச் சென்று, உப்புச் சட்டத்தை மீறியதும் நாடெங்கும் சட்ட மறுப்பு ஆரம்பமாயிற்று. அரசாங்கத்தின் அடக்கு முறை அட்டூழியங்களும் அதிகமாயின. ஏப்ரல் 14-ந் தேதி ஜவாஹர்லால் நேருவைக் கைது செய்து, சிறையிலேயே உப்புச் சட்டத்தின்படி விசாரணை நடத்தி அன்றே 6 மாத தண்டனையும் விதித்தனர். இதனால், சட்ட மறுப்பு இயக்கம் மேலும் தீவிரமாயிற்று. கல்கத்தா, சென்னை, கராச்சி ஆகிய இடங்களில் போலீஸார் சுட்டனர்; இந்தியாவெங்கும் தடியடித் தாண்டவம் தாராளமாக நடந்தது. மே 1-ஆம் தேதி காந்திஜி, 'காலிகள் ஆட்சி' என்ற தலைப்பில் ''டயரின் செய்கை கூட அவ்வளவு அக்கிரமமல்ல என்று ஆகிவிட்டது. மக்களின் முன்பு இருக்கும் கடமை தெளிவானது. கட்டுப்பாடான இக்காலித்தனத்துக்கு, அதிக துன்பத்தை அனுபவிப்பதன் மூலம் பதில் சொல்லியாக வேண்டும்" என்று எழுதினார். தரசனா என்ற உப்பளத்தில் இன்னும் அதிக திட்டமான வகையில் உப்புச் சட்டத்தை மீறுவது என்று காந்திஜி முடிவு செய்தார். தரசனா பம்பாய்க்கு 154 மைல் தூரத்தில் உள்ள உப்பளம். வைசிராய்க்கு ஒரு நோட்டீஸ் தயாரிக்கப்பட்டது. ''கடவுள் அருள் இருந்தால்......ஆம் தேதி தரசனாவுக்குப் புறப்பட்டு என் சகாக்களுடன்......ஆம் தேதி அங்கே சேர்ந்து, அந்த உப்பளத்தை ஒப்படைக்கும்படி கேட்பது என்று இருக்கிறேன். தரசனா, தனிப்பட்டவரின் சொத்து என்று பொது மக்களுக்குக் கூறப்பட்டிருக்கிறது. இது வெறும் வேஷம். வைசிராய் மாளிகையைப் போல் அது அரசாங்க நிர்வாகத்திலேயே இருக்கிறது......இந்தப் படைப்பை, வேடிக்கையாகவும் விஷமத்தனமாகவும் கூறப்படுவது போல. மூன்று வழிகளில் தடுத்து விடலாம்: உப்பு வரியை நீக்குவதன் மூலம்; கைது செய்யப்பட்ட ஒவ்வொருவருக்கும் பதிலாக ஆள் அனுப்ப நாட்டினால் முடிந்தாலன்றி

அத்தகைய காரியங்களில் அது சரியானதேயாகும். அது ஒரு வீரமிக்க போராட்டம். அதில் ஏற்பட்ட துன்பங்கள் தீரத்துடன் அனுபவிக்கப்பட்டன. ஆனால், இதற்கும் கொள்ளைக்கும் உள்ள வித்தியாசத்தைத் தெளிவாக மனத்தில் வைக்க வேண்டும். தரசனா உப்பளம் தேசீயச் சொத்தெனக் கருதப்பட்டது. அதில் நோக்கம், சொத்தைப் பலவந்தமாகப் பறித்துக்கொள்ளுவது என்பது அன்று. இந்தியாவில் நிலத்திலோ, கடலிலோ கிடைக்கும் உப்பெல்லாம் தனது சொத்தாக நாடு கொள்ளுவதற்குள்ள உரிமையை வற்புறுத்தவே அந்தப் போராட்டம். அந்தப் போராட்டம் வெற்றி பெற்றதென்றால், அதாவது அரசாங்கம் இணங்கியதென்றால், அந்தப் படையெடுப்பும் அதைப் போன்றவையும் சம்பந்தப்பட்டதான நாட்டின் துன்பத்திற்கு அவர்கள் அவ்விதம் செய்திருக்கலாம். உண்மையில், தேசம் முழுவதுமான அளவில் மக்கள் அனுபவித்த துன்பத்தின் மொத்தப் பலன், இர்வின்-காந்தி ஒப்பந்தம் என்பதில் முடிந்தது. ஆகையால், கடிதம் எழுதியிருப்பவரின் எண்ணத்தில் இருக்கும் கொள்ளைக்கும் தரசனா படையெடுப்பிற்கும் எந்த விதமான பொருத்தமும் இல்லை என்பதைக் காணலாம்.

புது டில்லி, 13—6—1946 — 'ஹரிஜன்' - 23—6—1946

---

முடியும் என்று நான் நம்புகிறேன்-என்னையும் என் கோஷ்டியையும் கைது செய்வது; உடைக்கப்படும் ஒவ்வொரு தலைக்கும் பதிலாக மற்றொரு தலை வந்தாலன்றி-வரும் என்று நான் நம்புகிறேன்-கேவலம் காலித்தனத்தினால்" என்று அந்த நோட்டீஸ் கூறியதோடு உப்பு வரி நீக்கப்பட்டாலன்றித் தாம் தரசானாவுக்குப் புறப்படப் போவதாகவும் கூறினார்.

ஆனால், காந்திஜி மே 4-ஆம் தேதி கைதியானார். ஸ்ரீ அப்பாஸ் தயாப்ஜியின் தலைமையில் கோஷ்டி புறப்பட இருந்தது. மே 12-ஆம் தேதி அவரும் தொண்டர்களும் கைதியாயினர். மறுநாள் 2,000 தொண்டர்கள் தரசனா உப்பளத்தின் மீது படையெடுத்தனர். இதற்குள் உப்பளத்தைச் சுற்றி முள்வேலி போட்டு, அகழி வெட்டி, அதில் நீரும் நிரப்பியிருந்தனர். தொண்டர்கள் ஒரு கோஷ்டியினர் அகழியில் நீந்தி, முள்வேலியை அடைந்தனர். பிறகு நடந்த காட்சிபற்றி நேரில் கண்ட அமெரிக்கப் பத்திரிகையாளர் கூறியதாவது: "......உத்தரவு பிறந்ததும் போலீஸார் இரும்புப் பூண் கட்டிய தடிகளால் தாக்கினர். அடியைத் தடுக்க ஒரு தொண்டர்கூட கையைத் தூக்கவில்லை. அடிபட்டு வீழ்ந்தனர்......பின்னால் இருந்த தொண்டர்கள் தொடர்ந்து முன் சென்று, அடியை ஏற்றனர். பகல் 11 மணிக்கு ஆஸ்பத்திரியில் போய்ப் பார்த்தபோது காயம்பட்டவர்கள் 320 பேர் அங்கே கிடந்ததாகவும், தலையில் பட்ட அடியால் மண்டை உடைந்து அநேகர் பிரக்ஞையற்றுக் கிடந்ததாகவும், விலாவிலும் வயிற்றிலும் பட்ட உதையினால் அவதிப்பட்டுக் கிடந்தவர்கள் பலர்" என்றும் அப்பத்திரிகையாளர் கூறினர். அவர் மேலும் கூறியதாவது: "பதினெட்டு ஆண்டுகளாக நிருபனாக இருந்து வருகிறேன். இருபது நாடுகளில் பொதுஜனக் கலகம், தெருச் சண்டை, புரட்சி ஆகியவைகளைக் கண்டிருக்கிறேன். தரசனாவில் பார்த்ததைப் போலச் சோகமான காட்சியை நான் கண்டதே இல்லை."

# 18

# ‘இந்தியாவிலிருந்து வெளியேறு’ என்பதன் பொருள்

அகிம்சையின் வகையில், ‘இந்தியாவிலிருந்து வெளியேறு’* என்பது ஆத்மாவின் வீரியமிக்க அறைகூவலாகும். அது ஒரு கோஷம் அன்று. முழுதும் சத்தியத்துடனும் அகிம்சையோடும் கூடிய முறையினால் அன்னிய ஆட்சியும் ஆதிக்கமும் முடிவடைவது என்பதையே அது குறிக்கும். அன்னியரின் நாசம் என்பது அதன் பொருள் அன்று; ஆனால், இந்தியரின் வாழ்க்கை முறைக்கு விருப்பத்துடன் அவர்கள் இணங்குவது என்பதே அதன் பொருள். இந்த ஏற்பாட்டில் அன்னியர்மீது துவேஷம் என்பதற்கே இடமில்லை. நம்மைப்போல அவரும் மனிதரே. அவரைக் குறித்து இருக்கும் பயமே துவேஷத்தை உண்டாக்குகிறது. பயம் போய்விட்டால் துவேஷம் இருக்க முடியாது.

இவ்விதம் அவர் மாறுதலை அடைவது நாமும் மாறுதல் அடைவதைக் காட்டுகிறது. நாம் தாழ்ந்தவர்களாக இல்லாமற் போய்விடும்போது அவர் உயர்வாயிருக்க முடியாது. அணுக்குண்டு அளவுக்கு விருத்தியாகி இருக்கும் அவருடைய ஆயுதசாலைகளும் ஆயுதங்களும் நம்மை அச்சுறுத்துவனவாக இருக்கமுடியாது. அவைகளை நாம் கவரவும் எண்ணமாட்டோம் என்றாகிறது. அவற்றைக் கவரும் எண்ணத்தை விடுவதன்முன் அவை நம்மிடம் இருந்தாக வேண்டும் என்று நினைப்பதில் நாம் தவறு செய்துவிடுகிறோம். ஆசையை மூட்டும் இந்த வாதம் துன்பத்தை நீடிக்கத்தான் செய்கிறது. தீமையை வெறுக்க நான் கற்றுக்கொள்ளுவதற்கு முன்னர் என்னால் ஆன தீமைகளையெல்லாம் நான் செய்தாக வேண்டுமா? தீமை என்று தெரிந்த மாத்திரம் அதை விட்டொழிக்க வேண்டியதல்லவா? இல்லையானால், விட்டுவிட முடியாத அளவுக்குத் தீமையை நாம் விரும்புகிறோம் என்று உள்ளூற நாம் ஒப்புக்கொண்டுவிட வேண்டும்.

---

* ‘பிரிட்டிஷார் இந்தியாவிலிருந்து வெளியேறவேண்டும்’ என்று 1942 ஆகஸ்டில் பம்பாயில் கூடிய அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் தீர்மானித்தது. அதையடுத்து மறுநாளே காங்கிரஸ் தலைவர்களெல்லாம் கைதானதோடு நாடெங்கும் அரசாங்கத்திற்கு எதிரான போராட்டமும் ஆரம்பமாயிற்று. அப்படிக் காங்கிரஸ் பிரிட்டிஷாரை வெளியேறும்படி சொன்னதன் தத்துவத்தையே காந்திஜி இங்கு விவரிக்கிறார்.

அன்னிய ஆட்சி முடிந்து போய்விடுகிறது என்று வைத்துக்கொள்ளுவோம். அன்னியர் என்ன செய்ய வேண்டும்? பிரிட்டிஷ் ராணுவ பலம் அவரைப் பாதுகாத்துக்கொண்டிருந்த வரையில் அவர் சுயேச்சையாக இருந்தார் எனக் கருத முடியாது. இந்தியாவின் கோடிக்கணக்கான மக்கள் அனுபவிக்க முடியாத சலுகைகளைத் தாம் கொண்டிருப்பது தவறு என்பதைச் சுதந்திரமுள்ளவரான அவர் கண்டுகொள்வார். இந்திய மகன் ஒருவனுக்கு ஏற்றவையான கடமைகளைச் செய்துகொண்டு அவர் வாழ்வார். இந்தியாவுக்கு நஷ்டம் ஏற்பட இனி அவர் வாழமாட்டார். இதற்கு மாறாக அவர், இந்தியாவுக்கெனத் தம் ஆற்றல் யாவையும் அளிப்பார். தமது தேவையின் மூலம் தாம் புகுந்த நாட்டிற்கு இன்றியமையாதவராகவும் இருப்பார்.

ஐரோப்பியர் விஷயத்தில் உண்மை இதுதான் எனின், தாங்களும் ஐரோப்பியர்களைப்போல் இருந்து தனிச்சலுகைகளைக் கேட்கலாம் என்பதற்காக ஐரோப்பியப் பழக்க வழக்கங்களை மேற்கொண்டிருந்த இந்தியர், மற்றவர்கள் விஷயத்திலும் இது இன்னும் எவ்வளவு உண்மையாக இருக்கும்? தாம் இதுவரை அனுபவித்து வந்த தனிச் சலுகைகளெல்லாம் இனியும் இருந்து வர வேண்டும் என்று அவர்கள் எதிர்பார்ப்பார்களாயின் தாம் கஷ்டத்தில் இருப்பதாகவே உணர நேரும். அவர்கள் இதுவரை அனுபவித்து வந்திருக்கும் தனிச் சலுகைகளுக்கு எந்தவிதமான நியாயமும் இல்லை. அவை அவர்களுடைய கௌரவத்திற்கும் இழுக்காக இருந்திருக்கும். ஆகையால், அந்தத் தனிச் சலுகைப் பளுவிலிருந்து அவர்களை நீக்கியதற்காக அவர்கள் நன்றியறிதலுள்ளவர்கள் ஆக வேண்டும்.

ஆளுவோரும் ஆளப்படுவோருமான நாம் எல்லோரும் இதுவரை, இயல்பிற்கே ஒவ்வாத திணறச் செய்யும் சூழ்நிலையில் இருந்து வந்திருக்கிறோம். ஆகையால், பலத்தை யளிக்கும் சுதந்திரக் காற்றைச் சுவாசிக்கும்போது சுவாசப்பையையே நாம் இழந்துவிட்டதைப் போன்றுகூட ஆரம்பத்தில் நமக்குத் தோன்றும். இரு தரப்பாரும் அகிம்சையே சரி என்று உணருவதனால் அந்த வகையில் உண்மையான நிலை ஒழுங்காக ஏற்படும்போது உலகத்திற்கே அது சிறந்த பாடமாக இருக்கும்.

உருலி, 29—3—1946 —'ஹரிஜன்' - 7—4—1946

# 19
# சுதந்திரம்

சுதந்திரத்திற்கு விளக்கம் கூறும்படி நண்பர்கள் விடாமல் எனக்குச் சவால் விட்டு வருகின்றனர். கூறியதை மீண்டும் கூறல் என்ற தவறு இருந்தாலும் சரி, நான் கனவு கண்டு வரும் சுயராஜ்யம் என்பது, ராமராஜ்யம் – அதாவது இவ்வுலகத்தில் நிலவும் கடவுளின் ஆட்சியே. தொலைவிலுள்ள சொர்க்க வாழ்வு எப்படி இருக்குமென்று எனக்குத் தெரியாது. அக் காட்சியைக் காணும் ஆவல் எனக்கு இல்லை. நிகழ்காலத்தில் இருப்பதே போதிய அளவு கவர்ச்சியுள்ளதாக இருக்குமாயின் வருங்காலம் அதற்கு மாறானதாக இருக்க முடியாது.

ராஜீயம், பொருளாதாரம், ஒழுக்கம் ஆகியவைகளடங்கியதாகச் சுதந்திரம் இருக்க வேண்டும்.

'ராஜீயம்' என்றால் எந்த முறையிலும் பிரிட்டிஷ் ராணுவத்தின் ஆதிக்கம் நீங்கியதாக இருக்க வேண்டும் என்பது பொருளாகிறது.

'பொருளாதாரம்' என்றால், பிரிட்டிஷ் முதலாளிகள், மூலதனம், அதே போன்று இந்திய முதலாளிகள், மூலதனத்தினிடமிருந்து முழுவதும் விடுதலை பெறுவது சுதந்திரம் என்றாகிறது. அதாவது, மிகத் தாழ்ந்த நிலையிலிருப்பவர், உயர் நிலையிலிருப்பவருடன் தாம் சமம் என்று உணர வேண்டும். மூலதனமோ முதலாளிகளோ தங்களுடைய திறமையையும் மூலதனத்தையும் தாழ்ந்த நிலையில் இருப்பவர்களுடனும் ஏதும் இல்லாதவர்களுடனும் பகிர்ந்துகொண்டால்தான் இது நடக்கும்.

'ஒழுக்கம்' என்பது, ஆயுதம் பூண்ட பாதுகாப்புப் படைகளிடமிருந்து சுதந்திரம். பிரிட்டிஷ் ராணுவம் இருந்த இடத்தில் ஒரு தேசீய ராணுவத்தின் ஆதிக்கம் ஏற்படுவதை நான் எண்ணும் ராமராஜ்யம் விலக்குகிறது. தனது தேசீய ராணுவத்தினாலாயினும் ஆளப்படும் ஒரு நாடு, ஒழுக்கத்தில் சுதந்திரமானதாக இருக்கமுடியாது. ஆகையால், அதன் பலவீனமான உறுப்பினர் என்று சொல்லப்படுகிறவர் தமது முழு ஒழுக்க உயர்வையும் அடையவே முடியாது.

போரில் பிரிட்டிஷார் வெற்றி அடையும்படி செய்தார் ஸ்ரீ சர்ச்சில் என்று கூறப்படுகிறது. ஆனால், அவர் தமது அபர்டீன்

சொற்பொழிவில் தீவிர அகிம்சைச் சீர்திருத்தக்காரரின் நோக்கிலிருந்து அறிவு புகட்டும் சொற்களைக் கூறியிருக்கிறூர்.* கவசம் அணிந்த ஒரு போர் வீரர் உணர்வார் என்ருல், நமது தலைமுறையில் நடந்திருக்கும் இரு போர்கள் எவ்வளவு நாசத்தை விளைவித்திருக்கின்றன என்பதை அவரும் அறிவார். அவ

---

* மேலே குறிப்பிட்டிருக்கும் ஸ்ரீ சர்ச்சிலின் பேச்சு இது :

" உலகம் அதிகத் துன்பத்தில் இருக்கிறது. உலகத்தில் துவேஷம் அதிகமாக மிகுந்திருக்கும் சமயம் இது. இப்பொழுது மனித சமூகத்தின் பல குடும்பத்தினர்- வெற்றி பெற்ரேரும் தோற்றவர்களும், ஒரு பாபமும் அறியாதவர்களும் அல்லது குற்றம் செய்தவர்களும் – திகைப்பிலும், துன்பத்திலும் அல்லது அழிவிலும் மூழ்கிக் கிடக்கின்றனர். நமது வாழ்நாளில் நடந்துவிட்ட இரு யுத்தங்கள், உள்ளத்திலிருந்து கண்ணியத்தையும் உயர்ந்த பண்பையும் போக்கிவிட்டன.

" 19-ஆம் நூற்ருண்டு, ' கிறிஸ்தவ நாகரிகம் ' என்று சொல்லியிருக்கக்கூடிய தானதற்கு அளவற்ற தீமைகள் ஏற்பட்டுவிட்டன. ஏனெனில், முக்கியமான நாடுகள் எல்லாம், கஷ்டங்களினுல் பாதிக்கப்பட்டிருக்கின்றன ; அக்கஷ்டங்கள் அவற்றின் உணர்ச்சிகளை மழுங்கச் செய்துவிட்டன. சமூக உறவில் இருந்த விரும்பத்தக்க அம்சங்களையெல்லாம் அழித்துவிட்டன.

" கொடிய யுத்தத்தின் கடும் புயலினுல் விஞ்ஞானம் மாத்திரமே முன்னுக்குப் புரண்டு வந்திருக்கிறது. மனிதருக்குப் பகுத்தறிவு அல்லது நற்குணம் வளர்ந்ததற்கு மேலாக, அழிக்கும் சக்தியை விஞ்ஞானம் மனிதர் வசம் கொடுத்திருக்கிறது.

" உணவுப் பொருளின் அதிக உற்பத்தியே ஒவ்வொரு சமயத்திலும் பெரும் பிரச்னையாகத் தோன்றிய இவ்வுலகத்தில், பல நாடுகளின் மக்கள் பஞ்சத்தால் வாடுவதுடன் எல்லோருக்குமே பற்ருக்குறையும் ஏற்பட்டிருக்கிறது. மக்கள் அனுபவித்துவிட்ட, அனுபவித்து வரும் துன்பங்களின் காரணமாக மனிதவர்க்கம் மனே சக்திகளை இழக்கலாயிற்று. நம்மை ரத்தமிராமல் வெளுக்கச் செய்தது ரத்தத்தைச் சிந்தும் இந்தப் போர்மட்டும் அன்று.

" மனிதரை ஊக்குவிக்கும் ஜீவ ஊற்று இச்சமயம் வற்றிப்போய் விட்டது. திரும்ப அது கசிவதற்குச் சமயம் வரவேண்டும். மனிதவர்க்கம், அது இன்று இருக்கும் துன்ப நிலையில், கரடுமுரடானதும் பழைய காட்டுமிராண்டித்தனமானதுமான ஒரு நிலையைக் கொள்ளாதுபோனுல் புதிய அதிர்ச்சிகளையோ, சச்சரவுகளையோ சமாளிக்கவே முடியாது. துன்பத்துடன் தப்பிப் பிழைத்து வந்திருக்கும் நமக்கு இன்னும் கஷ்டமான சோதனைகளை, இப்பொழுது இருக்கும் துவேஷங்களும் குழப்பங்களும் உண்டாக்காமல் இருக்குமா என்பதும் நமக்குத் தெரியாது. பல நாடுகளின், ஒன்றுபட்ட முயற்சியே இப்பொழுது இருக்கும் தேவைக்குச் சற்றும் போதாததாக இருக்கும்போது, கட்சித் தகராறுகளும் சச்சரவுகளும் கிளப்பப்பட்டிருக்கின்றன. இயந்திரம் உருவாக்கிய கோரமான வெறியர்கள் தங்கள் லட்சியங்களைக் குறித்து ஒருவருக்கு மேல் ஒருவர் போட்டியிடுகின்றனர்.

" ஒவ்வொரு நாட்டின் சாதாரண மக்களும் தங்கள் சகோதர மக்களிடம் அன்புள்ளவராகவும் வீரமுள்ளவராகவும் சேவை செய்பவர்களாகவும் நெடுகவும் காட்டிக்கொண்டு வந்திருக்கின்றனர். என்ருலும், ஏகச் சக்கிராதிபதிகளும் மன்னர்களும் இருந்த பழங்காலத்தில் இருந்ததைப் போலவே ஒருவருக்கொருவர் சச்சரவிட்டுக் கொள்ளும்படி பல சக்திகளும், ஸ்தாபனங்களும், கொள்கைகளும் வேண்டுமென்றும் இரக்கமின்றியும் தூண்டி வருகின்றன. மூச்சு விட அவகாசமும், தேற்றிக்கொள்ளச் சிறந்த சமயமும், கடவுளும் மனிதனும் இணைந்து செய்யும் ஒரு சமாதானமும் இப்பொழுது தேவைப்படுவதைப் போன்று என்றுமே தேவைப்பட்டதில்லை."

— ' ஸ்டேட்ஸ்மன் ' 29—4—1946

ருடைய பேச்சைப் பத்திரிகைகளில் வெளியானபடி நான் கீழே கொடுத்திருக்கிறேன். அப்பேச்சில் அடங்கியிருக்கும் நம்பிக்கையின்மைக்கு எதிராக நான் பொதுமக்களுக்கு ஓர் எச்சரிக்கை செய்யவேண்டும். யுத்தத்தின் கோரத்திலிருந்து மனித வர்க்கம் பின்வாங்கிக்கொள்ளுமானால், எதுவும் கெட்டுப்போய் விடாது. உடல் வெளுத்துப் போய்விடும் அளவுக்கு மனிதர் ரத்தம் சிந்தி இருப்பது வீண்போகாது. உயர்வானதோ அல்லது தாழ்வானதோ எந்தக் காரியத்தின் பொருட்டும் மற்றவர்களின் ரத்தத்தைச் சிந்துவதற்குப் பதிலாக நம் ரத்தத்தையே தாராளமாகக் கொடுக்கவேண்டும் என்ற பாடத்தை நமக்குப் போதித்திருக்குமானால், அது வீண் போகாது.

பிரிட்டிஷ் மந்திரி சபைக் கோஷ்டி ' தன் காரியத்தை நியாயமாகச் செய்துவிடுமாயின் ', இந்தியா ஒரு முடிவுக்கு வர வேண்டியிருக்கும். ராணுவ பலமுள்ள ஒரு வல்லரசாவதற்கான முயற்சியில், சில ஆண்டுகளாவது, மேலே குறிப்பிடப்பட்ட நம்பிக்கையின்மைக்கு எதிராக உலகத்திற்குத் தான் எடுத்துக் கூற எதுவும் இல்லாமல், ஐந்தாம் தர வல்லரசாக இருக்க அது விரும்புகிறதா ? அல்லது தன்னுடைய அகிம்சைக் கொள்கையை மேலும் தொடர்ந்து, சீராக்கிக்கொண்டு, வெற்றி எனக் கூறப்படும் ஒரு சுமையின் கீழ் நசுங்கிக்கொண்டிருக்கும் உலகத்தை விடுவிக்கத் தான் கஷ்டப்பட்டு அடைந்திருக்கும் சுதந்திரத்தை உபயோகித்து முதல் தர நாடாக அது விளங்கப் போகிறதா ? இதில் ஒன்றைப்பற்றி இந்தியா முடிவு செய்து கொள்ள வேண்டும்.

புது டில்லி, 2—4—1946 —' ஹரிஜன் ' - 5—5—1946

# 20

# சில வினாக்கள்

அகிம்சை வேலை செய்வதைக் குறித்து லண்டன் நண்பர் ஒருவர் ஏழு வினாக்களைக் கேட்டிருக்கிறார். இதே போன்ற கேள்விகளுக்கு ' எங் இந்தியா ' அல்லது ' ஹரிஜன் ' பத்திரிகையில் விடை கூறப்பட்டிருந்தபோதிலும், இப்பொழுது பதிலளிப்பது ஒரு வேளை பயனுள்ளதாக இருக்குமாயின், ஒரு கட்டுரையில் அவற்றிற்குப் பதில் அளிப்பது பயனுள்ளதே யாகும்.

**வினு - 1 :** இக்காலத்திய நாடு ஒன்று, முக்கியமாக ராணுவ பலத்தை அடிப்படையாகக் கொண்டிருப்பது, உள்நாட்டு வெளிநாட்டுக் குழப்பச் சக்திகளைச் சமாளிக்க அகிம்சையான எதிர்ப்பை உபயோகிப்பது சாத்தியமா? அல்லது அகிம்சையினுல் எதிர்க்க விரும்பும் மக்கள், முதலில் நாட்டின் ஆட்சி அதிகாரத்திலிருந்து விலகிக்கொண்டு சொந்த முறையிலேயே தங்கள் எதிர்ப்பைச் செய்ய வேண்டுமா?

**விடை :** ராணுவ பலத்தை அடிப்படையாகக் கொண்ட இக்காலத்திய ராஜ்யம் எதுவும், உள்நாட்டு அல்லது வெளிநாட்டுக்குழப்பத்தை மூட்டும் சக்தியை அகிம்சையினுல் எதிர்க்க முடியாது. கடவுளுக்கும் பிசாசுக்கும் ஒருவர் சேவை செய்வதோ அல்லது 'நிதானத்துடனும் ஆவேசத்துடனும்' இருப்பதோ ஒரே சமயத்தில் முடியாது. ஒரு நாடு அகிம்சையின் அடிப்படையில் இருக்க முடியும்; அதாவது, ராணுவ பலத்தை அடிப்படையாகக் கொண்ட உலகக்கூட்டையே அகிம்சையினுல் எதிர்க்க முடியும். அசோகரின் ஆட்சியிலிருந்த நாடு அத்தகையது. இதுபோல் உதாரணங்களைக் கூறிக்கொண்டே போகலாம். அசோகருடைய நாடு அகிம்சையை அடிப்படையாகக் கொண்டதன்று என்று காட்டப்பட்டாலும், விஷயம் பலவீனமானதாகிவிடாது. அதன் தன்மையைக் கொண்டே அதை ஆராய வேண்டும்.

**வினு - 2 :** ஒரு காங்கிரஸ் அரசாங்கத்தினுல், வெளிநாட்டு ஆக்கிரமிப்பையோ அல்லது உள்நாட்டுக் கலகத்தையோ முற்றிலும் அகிம்சை முறையினுலேயே சமாளிக்க முடியும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

**விடை :** 'வெளிநாட்டு ஆக்கிரமிப்பையோ, உள்நாட்டுக் கலகத்தையோ' அகிம்சை முறையினுல் சமாளிக்கக் காங்கிரஸ் அரசாங்கத்தினுல் நிச்சயமாக முடியும். நான் கொண்டுள்ள நம்பிக்கை காங்கிரஸுக்கு இல்லாமல் போகலாம். காங்கிரஸ் தனது போக்கை மாற்றிக்கொள்ளுமானுல், காங்கிரஸ் இதுவரையில் பலவீனர்களின் அகிம்சையையே மேற்கொண்டு வந்திருக்கிறது என்பதும், நாட்டின் அகிம்சையில் அதற்கு நம்பிக்கை இல்லை என்பதுமே நிரூபணமாகும்.

**வினு - 3 :** எதிராளி, அகிம்சையுடன் இருக்கக் கடமைப்பட்டிருக்கிறுன் என்பதை அறிந்திருப்பது மிரட்டிக் காரியத்தைச் சாதித்துக்கொள்பவனுக்கு அனுகூலமாக இருக்குமல்லவா?

**விடை :** பலவீனர்களின் அகிம்சையைக் காணும்பொழுது, மிரட்டிக் காரியத்தை முடித்துக்கொள்ளப் பார்ப்பவர், அச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொள்ளுவார். ஆனால், முற்றிலும் ஆயுதபாணியான மிக வீரமுள்ள சிப்பாயைவிட அல்லது முழுப்படையைவிடப் பலமுள்ளவர்களின் அகிம்சை எப்பொழுதுமே அதிக பலமுள்ளது.

**வினா - 4 :** மற்றவர்களுக்கு வெறுப்பானதாவதோடு அடிப்படையிலேயே நியாயமற்றதான ஒரு சுயநலக் காரியத்தை, வாளைக்கொண்டு (பலாத்காரத்தினால்) நிறைவேற்றிக்கொள்ள இந்திய மக்களில் ஒரு பகுதியினர் முயன்றால், அப்பொழுது என்ன கொள்கையை அனுசரிக்க வேண்டும் என்று நீங்கள் கூறுவீர்கள்? அந்த நிலைமையில் அகிம்சையினால் எதிர்ப்பது ஒரு தனிப்பட்ட ஸ்தாபனத்தினால் சாத்தியமாவதைப் போல் ஆட்சியில் இருக்கும் அரசாங்கமும் அப்படிச் செய்வது சாத்தியமா?

**விடை :** என்றுமே நடக்க முடியாததை இக்கேள்வி கூறுகிறது. ஓர் அகிம்சை ஆட்சி, அறிவுள்ள மக்களின் விருப்பத்தை விசாலமான அடிப்படையாகக் கொண்டதாக இருப்பதோடு அதன் மனத்தை அறிந்து, அதற்கு ஏற்ப நடக்க வல்லதாகவும் இருக்க வேண்டும். அத்தகைய ஆட்சியுள்ள நாட்டில், ஊகிக்கப்படும் பகுதி அற்பமானதாகவே இருக்க முடியும். ஆட்சியின் பிரதிநிதிகளைக்கொண்ட மிகப் பெரும்பான்மையினரின் திடமான உறுதிக்கு எதிராக அதனால் நிற்கவே முடியாது. ஆட்சியிலிருக்கும் அரசாங்கம் மக்களுக்குப் புறம்பானது அன்று. மிகப் பெரும்பான்மை மக்களின் உறுதியே அது. இது, அகிம்சை ரீதியில் கூறுவதாக இருந்தால் ஒன்றுக்கு எதிராக 99 என்று இருக்குமேயல்லாமல் ஓர் எண்ணிக்கையில் பெரும்பான்மை என்று இராது.

**வினா - 5 :** ராணுவ வகையில் பலமுள்ளவர்கள் செய்யும் அகிம்சையான எதிர்ப்பு, ராணுவ வகையில் பலவீனமானவர்கள் செய்யும் எதிர்ப்பைவிடப் பலனுள்ளதாகும் அல்லவா?

**விடை :** இது ஒன்றுக்கொன்று முரணானது. ராணுவ வகையில் பலமுள்ளவர் அகிம்சையின் மூலம் எதிர்ப்பதற்கில்லை. இவ்விதம் ருஷியா, அகிம்சையைக் காட்ட பலாத்காரத்திற்கான சக்தியையெல்லாம் கைவிட வேண்டும். உண்மை என்னவென்றால், ராணுவ பலத்தில் ஒரு சமயம் ஓங்கி இருந்தவர்கள் தங்கள் மனத்தை மாற்றிக்கொண்டால், உலகத்திற்கும் அதனால்

தங்கள் எதிராளிக்கும் தங்களுடைய அகிம்சையை நன்ருகச் செயலில் காட்ட முடியும். அகிம்சையில் உறுதியாக இருப் போருக்குத் தாங்கள் ராணுவத்தில் பலமுள்ளவர்களால் எதிர்க் கப்படுகின்றனரா அல்லது பலக் குறைவானவர்களால் எதிர்க் கப்படுகின்றனரா என்பதைப்பற்றிக் கவலை இல்லை.

**வினு - 6:** அகிம்சை ராணுவத்திற்கு வேண்டிய பயிற்சியும் கட்டுப்பாடும் என்ன? சம்பிரதாயமான ராணுவப் பயிற்சியில் காணும் சில அம்சங்கள் இதற்கான போதனு முறையில் சேர்ந்திருக்க வேண்டாமா?

**விடை:** ராணுவம் பெற்றுவரும் ஆரம்பப் பயிற்சியின் மிகச் சிறு பகுதி அகிம்சை ராணுவத்திற்கும் பொதுவாகும். இவை, யாவன: கட்டுப்பாடு, கவாத்து, சேர்ந்து பாடுவது, கொடி யேற்றம், சமிக்ஞை காட்டுவது. இவையும் முற்றிலும் அவசிய மானவை அல்ல; இவற்றின் அடிப்படையும் வேறு. அகிம்சை ராணுவத்திற்கு நிச்சயமாக வேண்டியவை கடவுளிடம் திடமான நம்பிக்கை, அகிம்சை ராணுவத்தின் தலைவரிடம் காட்டும் முழுப்பணிவு, ராணுவத்தின் பகுதிகளுக்கிடை உள்ளும் புறமுமான பூரண ஒத்துழைப்பு.

**வினு - 7:** இப்பொழுது இருந்துவரும் நிலைமையில், எந்த ராணுவ நடவடிக்கையையும் மேற்கொள்ளுவதற்கு முன்னுல் அகிம்சை எதிர்ப்பை நியாயமான வகையில் பரீட்சிப்பது என்ற ஏற்பாட்டுடன் இந்தியாவையும் இங்கிலாந்தையும் போன்ற நாடுகள் முழு ராணுவத் தகுதியையும் கொண் டிருப்பது அவசியமல்லவா?

**விடை:** இங்கிலாந்தும் இந்தியாவும் முழு ராணுவப் பலத் தையும் வைத்துக்கொண்டிருக்கும்போது எந்தச் சந்தர்ப்பத் திலும் அகிம்சை எதிர்ப்பை நியாயமான வகையில் பரீட்சிப்பது என்பதே ஆகாத காரியம். முன்னுல் கூறியிருக்கும் விடைகள் இதைத் தெளிவுபடுத்தும். ராணுவ பலமுள்ள நாடுகள் எல்லாம், தங்களுக்குள் ஏற்படும் தகராறுகளைத் தீர்த்துக்கொள்ளச் சம ரசப் பேச்சுக்களை நடத்துகின்றன என்பதும் அதே சமயத்தில் முற்றிலும் உண்மையே. ஆனுல், யுத்தம் தொடுப்பது என்ற முடிவுக்கு வருவதற்கு முன்னுல் நடத்தும் ஆரம்ப சமாதானப் பேச்சுக்களைக் குறித்து நாம் இங்கு விவாதிக்கவில்லை. யுத்தத் துக்கு - பச்சையாகச் சொன்னுல் மக்கள் படுகொலையாகிய ராணுவப்போராட்டத்திற்கு - பிரதியான ஒன்றைக் குறித்தே இங்கு விவாதிக்கிரோம்.

சிம்லா, 2—5—1946 —'ஹரிஜன்' - 12—5—1946

# 21

# படையெடுப்பை எதிர்ப்பது எப்படி ?

'ஹரிஜன்' 1946 ஜூலை 28-ஆம் தேதி இதழில் 'சுதந்திரம்' என்ற தலைப்பில் எழுதியிருந்த கட்டுரையை அக்கறையுடன் படித்த ஒரு பிரிட்டிஷ் ராணுவ அதிகாரி கீழ்க்கண்ட கேள்விகளைக் கேட்டார். இந்த அதிகாரி ஒரு ராணுவ எஞ்சினீயர்; அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் விரிவாகச் சுற்றிப் பார்த்திருக்கிறார். ஜெர்மனியில் யுத்தத்தின் கோரத்தைத் தமது கண்ணாலேயே பார்த்திருக்கிறார்.

**கேள்வி :** லட்சிய பூர்வமான இந்த ஆட்சியில் (அது லட்சிய பூர்வமானது என்பதில் சந்தேகம் இல்லை) வெளியார் ஆக்கிரமிப்பைச் சமாளித்துவிட முடியும் என்பது எவ்விதம் நிச்சயமாக இருக்க முடியும்? இயந்திர யுகத்தின் உற்பத்தியான இக்கால யுத்தத் தளவாடங்களும் இக்காலத்திற்கேற்ற ராணுவமும் அரசாங்கத்தினிடம் இல்லையானால், இக்கால ஆயுதங்களுடன் படையெடுத்துவரும் ராணுவம் நாட்டை வென்று மக்களை அடிமைகளாக வைத்துவிடுமே !

**பதில் :** இக்கேள்வியைக் கேட்டிருப்பவர், என்னுடைய கட்டுரையைக் கவனமாகத் திரும்பத் திரும்பப் படித்ததாகவும், அதைத் தாம் விரும்புவதாகவும் கூறிக்கொள்ளுகிறார். மேலும், அவர் ஒரு ராணுவத்தினர். எனினும், என்னுடைய கட்டுரையில் இருக்கும் முக்கியமான விஷயத்தைக் கவனிக்கத் தவறிவிட்டார். ஒரு நாடோ அல்லது ஒரு கோஷ்டியோ என்னதான் சிறியதாக இருப்பினும், தனிப்பட்டவரைப் போலவே அதற்கு ஒரே மனமும், உறுதியும், வீரமும் மாத்திரம் இருக்குமானால், ஆயுதம் தாங்கிய உலகம் பூராவையுமே எதிர்த்துத் தன் கௌரவத்தையும் மானத்தையும் காக்க அதனால் முடியும். நிராயுதபாணியின் இணையில்லாத பலமும் அழகும் அதில்தான் இருக்கின்றன. அகிம்சைப் பாதுகாப்பு எந்தக் கட்டத்திலும் தோல்வி என்பதையே அறியாது; தோல்வியை ஒப்புக்கொள்ளுவதுமில்லை. ஆகையால், அகிம்சையைத் தனது முடிவான கொள்கையாகக் கொண்டுவிடும் ஒரு நாட்டையோ அல்லது கோஷ்டியையோ அணுக்குண்டினால்கூட அடிமையாக்கிவிட முடியாது.

சேவா கிராமம், 8—8—1946 —'ஹரிஜன்' - 18—8—1946

# 22

# ராணுவங்கள் எதற்கு ?

காந்தியைக் காண்பதற்கு வந்திருந்த இந்தோனேஷிய நண்பர்கள், ஆயுத பலத்திலன்றி ஐரோப்பிய ஆக்கிரமிப்பை எதிர்ப்பது தங்களுக்கு எப்படிச் சாத்தியமாகும் என்று கேட்டனர். 'ஐரோப்பா என்றுமே ஆயுத பலத்தில் நம்பிக்கை கொண்டு வந்திருக்கிறது. ஆகவே, அதை ஆயுத பலத்திலன்றி எந்த நாடும் எப்படிச் சமாளித்துவிட முடியும்?' என்று இந்தோனேஷிய நண்பர்கள் கேட்டார்கள்.

அகிம்சையைப்பற்றி அவர்களுக்கு எதுவுமே தெரியவில்லை என்பதை இக்கேள்வி வெளிப்படுத்திவிட்டது என்று காந்திஜி கண்ணியமாகக் கூறினர். அவர் மேலும் கூறியதாவது: "நான் பதிலுக்கு உங்களை ஒரு கேள்வி கேட்கிறேன். பிரிட்டன், அமெரிக்கா, ருஷியா ஆகியவைகளின் ஒன்றுபட்ட ராணுவ பலம் உங்களை அடிமைப்படுத்த விரும்புகிறது என்று வைத்துக் கொள்ளுவோம். அதை எதிர்ப்பதற்கு உங்களுக்கு எவ்வளவு பலாத்காரம் வேண்டியிருக்கும்? ஒரு வேளை ஆசியாவின் முழு ஆதரவும் உங்களுக்கு இருந்தாலன்றி, அந்தப் பலத்தை நீங்கள் எதிர்த்து நிற்க முடியாது. அப்பொழுதும் ஐரோப்பிய யுத்தத் தளவாடங்கள் சிறந்தவையாக இருந்துவிட்டால், நீங்கள் தோல்வி அடையவேண்டியதுதான். ஆனல், நீங்கள் தனியாகவே அகிம்சையின் மூலம் எதிர்த்து நிற்க முடியும். கடைசி மனிதர் வரையில் நீங்கள் அழிக்கப்பட்டுவிடலாம். ஆனல், உங்களை யாரும் வென்றுவிட முடியாது." பிறகு காந்திஜி, சிறிது காலமாக பல சமயங்களிலும் கூறி வருவதையே அவர்களிடமும் கூறினர். சுதந்திரத்திற்காக இந்தியா நடத்திய போராட்டம் சாத்துவிக எதிர்ப்பே என்றும், அது பலமில்லாதவர்களின் ஆயுதம் என்றும், தீவிரமான ஆயுத எதிர்ப்புக்கு அது முதற்படி என்றும் கூறினர். உண்மையிலேயே காங்கிரஸ் அகிம்சையை அனுசரித்திருந்தால், இப்பொழுது ஏற்பட்டிருக்கும் வகுப்புக் கலவரங்கள் நிகழ்ந்திரா என்றார். உடலின் வீரத்தைவிட உள்ளத்தின் வீரம் உயர்வானது. இந்தியா எந்த நிலையை அடையவேண்டும் என்று காந்திஜி விரும்பினரோ, அந்த நிலைமைக்கு அகிம்சை, இந்தோனேஷியா போன்ற கிழக்கு நாடுகளுக்கு வழிகாட்ட முடியும் என்றார். "இன்று வலிமையான பலாத்காரத்தின் வெள்ளம் இந்தியாவுக்கு ஏற்பட்டிருக்கிறது; இதை அகிம்சையின் மூலம்

எதிர்ப்பதென்பதை, அதன் கெட்ட காலமோ என்னவோ, அது அறிந்துகொள்ளவில்லை. நாங்கள் இந்தப் பலத்தை வளர்த்துக் கொண்டாலன்றி, இந்த அநேக ஆண்டுகளாக இந்தியாவைப்பற்றி என்ன உயர்ந்த நம்பிக்கைகளையெல்லாம் நான் வைத்திருந்தேனே அவற்றையெல்லாம் அது நிறைவேற்றவே முடியாது" என்றார் காந்திஜி.

புது டில்லி, 10—7—1947 —'ஹரிஜன்' - 20—7—1947

# 23

# அவருக்குச் சம்பந்தமில்லாத துறை

மேஜர் ஜெனரல் கரியப்பா வருமாறு கூறினர் என்று சொல்லப்படுகிறது :

"இந்தியாவில் இன்று இருக்கும் நிலைமையில் அகிம்சை பிரயோசனமில்லை. பலமான ராணுவம் ஒன்றே உலகத்தில் மிக சிறந்த நாடாக இந்தியாவை ஆக்க முடியும்."

மற்றப் பல நிபுணர்களைப் போன்றே ஜெனரல் கரியப்பாவும் ஆழம் தெரியாமல் காலைவிட்டு அகிம்சையைப்பற்றித் தமக்குள்ள மோசமான, தவறான கருத்தையே வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறார் என அஞ்சுகிறேன். இயற்கையாகவே அகிம்சை எப்படி வேலை செய்கிறது என்பதைக் குறித்து அவருக்கு மேல்வாரியான ஞானந்தான் உண்டு. நான் வாழ் நாளெல்லாம் அகிம்சையில் பழகி வந்திருக்கிறேன். ஆகையால், எனக்குக் குறைபாடுகள் இருந்தாலும், அதில் நான் நிபுணன் என்று கூறிக்கொள்ளுகிறேன். அறுதியான வகையில் கூறுவதானல், எவ்வளவுக்கெவ்வளவு நான் அகிம்சையை அனுசரிக்கிறேனே அவ்வளவுக்கவ்வளவு என் வாழ்க்கையில் முழு அகிம்சையையும் காட்டுவதற்கு நான் இன்னும் எவ்வளவோ தூரத்திலேயே இருந்து வருகிறேன் என்பதைத் தெளிவாகக் காண்கிறேன். உலகத்தில் மனிதனின் மிகப் பெரிய கடமையான இதை அவர் அறியாமல் இருப்பதனலேயே இந்தக் காலத்தில் இம்சைக்கு எதிராக அகிம்சை பயனில்லை என்று அவர் கூறுகிறார். ஆனல், நானே, இந்த அணுக்குண்டு காலத்தில் இம்சையின் ஒன்றுபட்ட எல்லாத் தந்திரங்களையும் சமாளிக்கவல்ல ஒரே சக்தி கலப்பற்றதான அகிம்சையே என்று தைரியமாகக் கூறுகிறேன். தமக்கு ராணுவ சாத்திரத்தையும் பழக்கத்தையும் போதித்த பிரிட்டிஷ் போதகர்களின் உதவியில்லாமல் இப்பொழுது தமக்குத் தாமே நிர்ண

யித்துக்கொள்ள வேண்டியவராயிருக்கும் ஜெனரல், ஆழம் தெரியாமல் காலை விடாமல் இருந்திருப்பாராஞல், அவருக்கே கௌரவமாக இருந்திருக்கும். ஜெனரல் கரியப்பாவைவிடப் பெரிய ஜெனரல்கள், புத்திசாலித்தனமாகவும் பணிவோடும், அகிம்சைச் சக்தியின் சாத்தியங்களைக் குறித்துப் பேசத் தங்களுக்கு எந்த உரிமையும் இல்லை என்பதை ஒப்புக்கொண்டிருக்கிருர்கள். ராணுவ சாத்திரமும் அதன் உபயோகமும் எவ்விதம் வருந்தத்தக்க வகையில் அவை பிறந்த இடத்திலேயே பயனற்றனவாகி வருகின்றன என்பதைப் பார்த்து வருகிரேம். பங்கு மார்க்கெட்டில் சூதாடி ஓட்டாண்டியாகிவிட்டவர், அத்தகைய சூதாட்ட முறையை எங்கேயாவது புகழலாமா ?

புது டில்லி, 7—11—1947 —' ஹரிஜன் ' - 10—11—1947

# 24

# அகிம்சையும் கதரும்

காங்கிரஸ் அமைப்பு விதிகள் பெரும் மாறுதல்களை அடைந்து வருகின்றன. பொய்மையையும் கரவையும் தவிர்ப்பதற்காக விரும்பத்தக்கதான மிகப் பெரும் மாறுதல், காங்கிரஸ் அமைப்பு விதிகளில் முதலாவதில் காணும் ' நியாயமானதும் அமைதியானதும் ' என்ற சொற்களை நீக்குவதுடன் கதரைப்பற்றி இருக்கும் ஷரத்தையும் நீக்கிவிடுவதாகும். காங்கிரஸில் இருப்பவர்களில் பெரும்பாலானவர்கள் சத்தியத்திலோ அகிம்சையிலோ அல்லது கதரிலோ உறுதியுடையவர்களாக இல்லை என்பதை அனுபவம் காட்டுகிறது. சத்தியத்தையும் அகிம்சையையும், அவற்றின் சின்னமாகக் கதரையும் உறுதியுடன் நேசிப்பவன் என்ற முறையில் நான், அந்த ஷரத்துக்களை நீக்கிவிட வேண்டும் என்று தைரியமாகக் கூறுகிறேன். ஆணே அல்லது பெண்ணே, அவர்கள் விரும்பினல், சத்தியத்தோடும் அகிம்சையோடும் நடந்துகொள்ளுவதோடு கதரையும் அணியலாம். இந்தியாவையோ அல்லது உலகத்தையோ ஏமாற்றுவது என்பது மாத்திரம் இருக்கக்கூடாது. விசித்திரமானதாகவே தோன்றினலும், திருத்தமே இல்லாமல் இருப்பதைவிட நான் யோசனை கூறும் திருத்தம் செய்தால் நாம் நலமிக்கவர்களாகவும், அதிக அகிம்சையோடு கூடியவர்களாகவும், கதரை மேலும் விரும்புகிறவர்களாகவும் இருப்போம். இந்த ஷரத்துக்களை நீக்கிவிடவேண்டும் என்று நானே ஒரு சமயம் யோசனை கூறினேன் என்பது நினைவிருக்கும். நான் தோல்வியுற்றதற்காகச்

சந்தோஷப்பட்டேன். அப்படிச் சந்தோஷங் கொண்டது தவறே. இப்பொழுதுங்கூட என் யோசனை நிராகரிக்கப்படுமானால், நான் வருத்தம் அடைவேன். சத்தியத்திற்கு மேலாக நாம் கபடத்தைப் போற்றுகிறோம் என்று நம்மைப் பற்றி யாரும் சொல்லாமல் இருக்கவேண்டும்.

[' ஹரிஜன சேவக் 'கிலிருந்து மொழிபெயர்ப்பு.]
சிம்லா, 8—5—1946 —' ஹரிஜன் ' - 19—5—1946

# 25

# பரிகாரம் என்ன ?

**கேள்வி :** காங்கிரஸிற்குள் கட்சிகள் வளர்ந்துவிட்டது காங்கிரஸ் ஸ்தாபனத்திற்கே கெடுதலாகி இருக்கிறது. இதற்குப் பரிகாரம் என்ன ?

**பதில் :** காங்கிரஸில் ஒரே ஒரு கட்சிதான் இருக்கமுடியும் ; அதாவது, காங்கிரஸ்காரர்களைக் கொண்டதேயன்றி மற்றவர்களைக் கொண்டது அல்ல, மாறுபட்ட அபிப்பிராயம் கொண்ட தனிப்பட்டவர்களுக்கோ அல்லது கோஷ்டிகளுக்கோ காங்கிரஸில் இடமில்லை என்று சொல்லுவதாகாது. உயிரற்ற வகையில் ஒரே மாதிரி இருப்பது என்பதில் எனக்கு நம்பிக்கை கிடையாது. " எல்லோரும் சமத்துவமாகவும் சுதந்திரத்துடனும் பிறந்தவர்கள் " என்பது சாதாரணமாக இயற்கையின் விதி அன்று. உதாரணமாக, அறிவில் எல்லோரும் சமமாகப் பிறப்பதில்லை. ஆனால் அறிவில் மிக்கவர்களாக இருப்பவர்கள், மற்றவர்களுக்கு நஷ்டம் ஏற்படத் தங்களுடைய நலத்தையே கருதி அந்த அறிவைப் பயன்படுத்தாமல், அறிவில் தங்களைவிடக் குறைந்தவர்களுக்குச் சேவை செய்வதில் அதைப் பயன்படுத்துவார்களானால், சமத்துவம் என்ற தத்துவம் நிரூபிக்கப்பட்டதாகும். இன்று காங்கிரஸில் எல்லா வகையினரும் இருக்கிறார்கள். இதனாலேயே காங்கிரஸின் லட்சியத்திலிருந்து 'அமைதியானதும் நியாயமானதும்' என்ற சொற்களை நீக்கவேண்டும் என்று யோசனை கூறியிருக்கிறேன். காங்கிரஸ்காரர்கள் சத்தியத்தையும் அகிம்சையையும் கைவிட்டுவிடவேண்டும் என்பது அதன் பொருள் அல்ல. கரவை ஒழித்துவிடவேண்டும் என்பதே நோக்கம். அது கேட்கக் கொடூரமானதாக இருக்கிறது. வாளின் தத்துவத்தில் நம்பிக்கை இருப்பவர்கள், அதைப் பகிரங்கமாக, வெளிப்படையாகக் கூறட்டும். உள்ளத்தில் வாள் இருக்கும்போது அகிம்சைப் பெயரைக் கூறுவது கபடமும் நேர்மையின்மையுமேயன்றிக் கோழைத்தனமும் ஆகும். பிரிட்டிஷ் அரசாங்கத்

திற்கு எதிராக நாம் அனுசரித்த அகிம்சை, பலவீனமானவர்களின் அகிம்சை. இல்லையென்றால், நமக்குள்ளேயே இந்தச் சச்சரவுகளெல்லாம் ஏன்? கண்மூடித்தனமாகப் பிறரைப் பின்பற்றுவதில் லாபமில்லை என்பதை மறந்துவிடுகிறோம். இங்கிலாந்தில் 'தெருவில் உட்கார்ந்தவர்களை' உதாரணமாகக் காட்டி, நம்முள் இருக்கும் ஒழுங்கின்மையையும் குழப்பத்தையும் நியாயம் என்று சொல்ல முயலுகிறோம். பலவீனர்களின் போலி அகிம்சையை விட ஒழுக்கக் கேடானது வேறு எதுவும் இல்லை. போதிய அகிம்சை நம்மிடம் இருக்குமானால், நம் பொது வாழ்க்கை மிகுந்த சகிப்புத் தன்மையைக் கொண்டதாக இருந்திருக்கும். எத்தனை கருத்துக்கள் உண்டோ அத்தனை கட்சிகளும் இருப்பதற்கு அப்பொழுது இடம் இருக்கும். கட்சிச் சதிகளும் கட்சிச் சச்சரவுகளும் இல்லாமல் மாறுபட்ட கருத்துக்கள் இருந்துவருவது, வாழ்க்கையின் விதியான சுயேச்சை மனப்போக்கு இருப்பதற்கும் அறிகுறியாகும். கட்சிச் சதிகளும் கட்சிச் சச்சரவுகளும் சுயேச்சைக்குப் பொருத்தமற்றவை.

புது டில்லி, 30—9—194 —'ஹரிஜன்' - 6—10—1946

# 26

# உண்மையான ஆபத்து

பம்பாயில் நடந்த அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில், அங்கீகாரத்திற்காகக் கொண்டு வரப்பட்ட காரியக் கமிட்டியின் தீர்மானத்தை எதிர்த்து, ஆவேசமாகப் பேசப்பட்டதை நான் கேட்டேன்.* ஆகையால், எதிர்க்கட்சியினர் சித்திரிக்கும் அபாயத்தை நான் ஒப்புக்கொள்ளுவதற்

---

* 1946 ஜூலை 6-ஆம் தேதி பம்பாயில் நடந்த அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில், "ஜூன் 26-ஆம் தேதி காங்கிரஸ் காரியக் கமிட்டி செய்த தீர்மானத்தை அ. இ. கா. கமிட்டி அங்கீகரிக்கிறது" என்ற தீர்மானத்தைப் பிரேரித்துக் காந்திஜி பேசினார். அத்தீர்மானத்தைச் சோஷியலிஸ்டுகள் பலமாக ஆட்சேபித்தனர்; ஆவேசமாகவும் பேசினர். மறுநாள் அத்தீர்மானத்திற்கு 204 பேர் சாதகமாகவும் 51 பேர் எதிராகவும் வோட்டுக் கொடுக்க, தீர்மானம் நிறைவேறியது. அதன் பின்னரே காந்திஜி, "உண்மையான ஆபத்து" என்ற தலைப்பில் இக்கட்டுரையை எழுதினார். "ஜூன் 16-ஆம் தேதி வெளியான பிரிட்டிஷ் மந்திரி சபைத் தூதுக்கோஷ்டி வெளியிட்ட அறிக்கையின்படி இடைக்காலச் சர்க்கார் அமைப்பதென்ற யோசனையைக் காங்கிரஸ் ஏற்றுக்கொள்ளுவதற்கில்லை; ஆனால், சுதந்திர, ஒன்றுபட்ட, ஜனநாயக இந்தியாவுக்கு அரசியலை அமைப்பதற்கு ஏற்படுத்தப்படும் அரசியல் நிர்ணய சபையில் கலந்துகொள்ளுவதெனக் காங்கிரஸ் தீர்மானிக்கிறது" என்பதே பம்பாயில் நடந்த அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியில் நிறைவேறிய தீர்மானமாகும்.

கில்லை. உறுதியான சத்தியாக்கிரகி யாரும், எதிராளியிடமிருந்து ஏற்படக்கூடிய தெரிவதும் தெரியாமல் இருப்பதுமான ஆபத்துக்களுக்காக அதைரியம் அடைந்துவிடுவதில்லை. ஒவ்வொரு ராணுவமும் பயப்படவேண்டியதைப் போன்று உள்ளுக்குள்ளே இருக்கும் ஆபத்தைக் குறித்தே அவர் அஞ்சவேண்டும்.

எதிர்க்கட்சி எவ்வளவுதான் பேசினாலும், அதன் நோக்கம் நிறைவேற வேண்டுமானால், விஷயத்தை அது நன்கு அறிந்திருப்பதோடு நிதானமும், நல்ல அடிப்படையும் கொண்டதாக அது இருக்கவேண்டும். அந்த எதிர்ப்பின் பலன், கவர்ச்சிகரமான செயலையும் விளைவையும் காட்டக்கூடியதாகவும் இருக்க வேண்டும். சென்ற கூட்டத்தில் எழுந்த எதிர்க்கட்சி இதற்கு பதில் சொல்லட்டும்.

இப்பொழுது என்னுடைய நோக்கம் உள்ளுக்குள் இருந்து வரும் ஆபத்தை எடுத்துக் காட்டுவதேயாகும். முக்கியமான முதல் விஷயம், எண்ணத்திலும் உடலிலும் இருந்துவரும் சோம்பலே. காங்கிரஸ்காரர்கள் சிறைத் தண்டனையை அனுபவித்திருக்கிறார்கள்; சுதந்திரத்தைப் பெறுவதற்கு இனியும் செய்ய வேண்டியது எதுவுமே இல்லை; நன்றியுள்ள ஒரு ஸ்தாபனம் அவர்களுடைய சேவைக்காகத் தேர்தல்களிலும் பதவிகளிலும் தங்களுக்கு முதல் சலுகை காட்ட வேண்டும் என்ற போலித் திருப்தியினாலேயே இந்தச் சோம்பல் ஏற்பட்டிருக்கிறது. இதனால், வெகுமதியாகும் உத்தியோகங்கள் என்று விவரிக்கப்படும் பதவிகளைப் பெறுவதில் வெறுக்கத் தக்க ஆபாசமான போட்டிகள் இருந்து வருகின்றன. இதில் இரட்டைத் தவறுகள் இருக்கின்றன. எதையும் வெகுமதியாகக் கருதக்கூடாது என்று காங்கிரஸ் அகராதியில் இருக்கிறது; சிறைவாசமே அதன் சொந்த வெகுமதி. ஒரு சத்தியாக்கிரகியின் ஆரம்பப் பரீட்சை அது. மாசற்ற ஆட்டுக்குள்ளது போலக் கொல்லப்படும் இடமே அதன் லட்சியம். உத்தியோகம், பதவி இவற்றை அடைவதற்குச் சிறை செல்வது ஓர் அனுமதிச் சீட்டாகக் காங்கிரஸில் உபயோகப்படுகிறது. ஆகவே, சத்தியாக்கிரகி சிறைக்குச் செல்லுவது, திருடர்களும் கொள்ளைக்காரர்களும் செய்வதுபோன்ற மானக்கேடான தொழிலாகிவிடும். தலைமறைவாக இருந்துவரும் ரகத்தினரான என்

அத்தீர்மானத்தைச் சோஷியலிஸ்டுகள் பலமாக எதிர்த்தார்கள். பிரிட்டிஷாரின் நல்லெண்ணத்தில் அவநம்பிக்கையைத் தெரிவித்தார்கள். அ. இ. கா. கமிட்டிக் கூட்டத்தில் தீர்மானத்தைக் கொண்டுவந்து பேசிய மகாத்மா, எதிர்த்த சோஷியலிஸ்டுகளுக்குப் பதில் கூறினார். காந்திஜியின் பிரசங்கம் அடுத்தாற்போல் கொடுக்கப்பட்டிருக்கிறது.

நண்பர்கள், சிறைப்படுவதை மற்ற கஷ்டங்களுடன் ஒப்பிட்டால் மலர்ப் படுக்கை என்றே கருதி, அதைத் தவிர்ப்பதில் ஆச்சரிய மில்லை. காங்கிரஸ் எந்த நிலைக்கு வந்து கொண்டிருக்கிறது என்பதை இது சுட்டிக் காட்டுவதாகும்.

பிரிட்டிஷ் மந்திரி சபைத் தூதுக்கோஷ்டியின் யோசனையின் மீது வந்த தீர்மானத்தை எதிர்த்த நண்பர்கள், தாங்கள் இன்னதைத்தான் குறி வைக்கிறார்கள் என்பதை அவர்களே அறிந்ததாகத் தெரியவில்லை. பிரான்ஸ், சோவியத் ருஷியா அல்லது இங்கிலாந்து செய்ததைப்போல ரத்தம் சிந்தும் புரட்சியின் மூலம் சுதந்திரத்தை அடையவேண்டுமா? அப்படியானால், மனம் விட்டு நேர்மையாக வேலை செய்வது இனியே ஆரம்பமாக வேண்டும். காங்கிரஸைப் பகிரங்கமாகவே அத்தகையதொரு ஸ்தாபனமாக்குவது அபாயம் நிறைந்த பாதையிலே செல்வதாகும். உள்ளுக்குள் மறைந்து வேலை செய்வதென்பது முற்றிலும் அனுசரிப்பதற்கான ஒரு வழியாக இருந்து, அதுவே இப்பொழுது காங்கிரஸுக்கு எதிராக உபயோகிக்கப்படுகிறது என்றால், என்னுடைய வாதத்திற்கு வலிமையே இராது. அந்த எண்ணமே எனக்கு வெறுப்பானதாகிறது. என்னுடைய புத்தி சரியாக இருக்கிறது என்பதற்காகவாவது, அந்த எண்ணத்திற்கு எந்த வித ஆதாரமும் இல்லை என்று நான் நம்பவேண்டும். அப்படியானால், காங்கிரஸ்காரர்களுக்கு ஒன்று கூறவேண்டியது அவர்களுடைய தெளிவான கடமையாகிறது. காங்கிரஸ் ரகமாயிருந்தாலும் அல்லது முஸ்லிம் லீக் ரகமாக இருந்தாலும், இப்பொழுது காங்கிரஸ் ராஜ்யம் அல்லது பிரதிநிதிகள் ராஜ்யம் இருந்து வருகிறது. அதை அடியோடு கண்டிக்காமல், விரிவாக அதைச் சீர்திருத்த அவர்கள் முற்பட வேண்டும் என்று சொல்ல வேண்டும். அதன் அளவு எப்படி இருந்தாலும், பொதுஜன ராஜ்யத்தில் முழு அகிம்சை ஒத்துழையாமைக்கு இடமே இல்லை.

மதுரையிலும், இன்னும் கிட்டத்தில் வந்தால் அகமதாபாதிலும் நடந்திருக்கும் வெறியாட்டங்களுக்குப் பொறுப்பாளி யார்? தீய காரியம் எது நேரினும் பிரிட்டிஷாரின் சதிதான் அதற்குக் காரணம் என்று கூறிவிடுவது தவறு. இத்தகைய புத்தி கெட்ட தத்துவம், பிரிட்டிஷ் ஆதிக்கம் இராது போனாலும் வெளிநாட்டு ஆதிக்கத்தையே நிரந்தரமானதாக்கும். எப்படியும் பிரிட்டிஷார் போய்விடுவார்கள். அரசாங்க அறிக்கையிலிருந்து ஒழுங்கான வகையில் அவர்கள் போக விரும்புகிறார்கள் என்று எனக்குத் தெளிவாகிறது. அல்லது, இந்தியா

அகிம்சை வழியைக் கைவிட்டுவிட்டால் அதன் பலனைப் பல தரப்பட்ட ராணுவ வல்லரசுகளின் தலையீடு ஏற்படக்கூடும் என்று எண்ணிக்கொண்டு இந்தியாவை அதன் விதிக்கு விட்டு விடுவது என்று அவர்கள் போய்விடலாம். தாங்கள் விரும்பு வது எந்த வகையான சுதந்திரம் என்று எதிர்க்கட்சியினர் காங்கிரஸ்காரர்களுக்குக் கூறட்டும். தாங்கள் விரும்பும் சுதந் திரம் இன்னது என்பது பொதுவாகக் காங்கிரஸ்காரர்களுக்கு நிச்சயமாகத் தெரியாது. அநேகமாகக் கிளிப்பிள்ளைபோல அவர்கள் இந்தப் பாடத்தைக் கூறி வருகின்றனர். அல்லது, சுய ராஜ்யம் என்றால் காங்கிரஸ் ராஜ்யந்தான் என்று சொன்னதில் சுதந்திரத்தைப்பற்றிய அவர்களுடைய கருத்து முழுவதும் வெளி யிடப்பட்டிருக்கிறது என்றும் இருக்கலாம். இதில் அவர்கள் தவ ருகவும் ஆகமாட்டார்கள். மேற்கொண்டும் சிந்திப்பதை அவர் கள் காரியக் கமிட்டிக்கு விட்டு விட்டார்கள்; இது ஜனநாயகத் திற்கே புறம்பான வழியாகும். உண்மையான ஜனநாயகத்தில் ஒவ்வோர் ஆணும் பெண்ணும் தமக்குத்தாமே சிந்தித்துக் கொள்ளுமாறு போதிக்கப்படுகின்றனர். ஈகை முதலில் தன் னிடமிருந்தே ஆரம்பமாக வேண்டும் என்பதைப் போலவே ஒவ்வொரு சீர்திருத்தமும் இருக்கவேண்டும் என்பதைத் தவிர உண்மையான புரட்சி எப்படிக் கொண்டு வரப்படலாம் என்பது எனக்குத் தெரியாது.

அப்படியாயின், அரசியல் நிர்ணய சபை ஒன்றுமில்லாது போய்விடுமானல், ஒவ்வொரு சமயத்திலும் பிரிட்டிஷார் கொடி யவர்களாக இருக்கிறார்கள் என்பதனல் ஏற்படாது அது ; நாம் முட்டாள்களாக இருப்பதனலும், சொல்லப் போனல் நாமே கொடியவர்களாக இருப்பதனலுமே அவ்விதம் நேரும். நாம் முட்டாள்களாக இருந்தாலும், கொடியவர்களாக இருந்தாலும், இரண்டுமாகவும் இருந்தாலும், நாம் உள்ளுக்குள் இருக்கும் ஆபத்தைத்தான் பார்க்கவேண்டுமேயன்றி வெளியிலிருந்து வரும் ஆபத்துக்கு அஞ்ச வேண்டியதில்லை என்பதில் நான் அதிகத் தெளிவுடன் இருக்கிறேன். முதலாவது, ஆத்மாவை அரித்து விடுகிறது. இரண்டாவது, அதற்கு மெருகு தருகிறது.

பம்பாய், 9—7—1946 —' ஹரிஜன் ' - 14—7—1946

## 27

# அ. இ. கா. க. கூட்டத்தில் பேச்சு

*1946 ஜூலை 7-ஆம் தேதி பம்பாயில் நடந்த அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் மகாத்மா காந்தி பேசிய தாவது :*

மனிதன் திட்டமிடுகிறான்; ஆனால், அதன் வெற்றி கடவுளின் இஷ்டத்தைப் பொறுத்திருக்கிறதேயன்றி அவனைப் பொறுத்தில்லை; நமது விதியையெல்லாம் நிர்ணயிக்கும் மேலான நீதிபதி கடவுளே என்று நான் அடிக்கடி கூறி வந்திருக்கிறேன். நான் உங்களைப்போல் இல்லை; உரிமையிலேயே கருத்துக்கொண்டவனாகை நான் இருக்கவில்லை. எதிர்ப்பின்றி சகித்துக்கொண்டு இருக்கிறேன். பிரிட்டிஷ் மந்திரி சபையின் யோசனைகளைக் குறித்து நான் முன்பு கூறிய கருத்துக்களில் சில, பொது ஜனங்களின் மனத்தில் அதிகக் குழப்பத்தை உண்டாக்கியிருக்கின்றன என்று அறிந்தேன். ஒரு சத்தியாக்கிரகி என்ற வகையில் முழு உண்மையையே பேசுவது, உண்மையைத் தவிர வேறு எதையும் பேசுவதில்லை என்பதே எப்பொழுதும் என் முயற்சியாக இருந்து வந்திருக்கிறது. உங்களிடம் கூறாமல் எதையும் மறைக்க வேண்டும் என்று நான் என்றுமே விரும்பியதில்லை. மனத்துள் ஒன்றை மறைத்து வைத்திருப்பது என்பதை நான் வெறுக்கிறேன். ஆனால், உள்ளத்தில் இருப்பதைத் தெரிவிப்பதற்கு மொழி ஒரு சிறந்த கருவி எனினும், அது குறைபாடுகளையும் உடையது. தாம் எண்ணுவது அல்லது உணருவதை யாரும் சொற்களால் முற்றிலும் வெளியிட்டுவிட முடியாது. பழங்காலத்திலிருந்த மகான்களும் தீர்க்கதரிசிகளுங்கூட இந்தப் பலவீனத்தால் கஷ்டப்பட்டிருக்கிறார்கள்.

பிரிட்டிஷ் மந்திரி சபைத் தூது கோஷ்டியின் யோசனை குறித்து நான் சொன்னதாகப் பத்திரிகைகளில் என்ன வெளியாயிற்று என்பதை நான் பார்க்கவில்லை.* எல்லாப் பத்திரிகை

---

* பிரிட்டிஷ் மந்திரி சபைத் தூதுக்கோஷ்டி அறிக்கையில் கண்ட யோசனைகளின் மீது காங்கிரஸ் காரியக் கமிட்டி டில்லியில் விவாதித்துக்கொண்டிருந்த சமயத்தில், காந்திஜி தெரிவித்ததாகப் பலவிதச் செய்திகள் பத்திரிகைகளில் வெளிவந்தன. பொய் வதந்திகளும் கிளப்பப்பட்டன. எனவே, இத்தகைய செய்திகளைப் பிரசுரித்துத் தங்களுக்கே தீமையை விளைவித்துக்கொள்ள வேண்டாம் என்று அப்பொழுது காந்திஜி பத்திரிகையாளரை அடிக்கடி எச்சரிக்கை செய்துவந்தார். ஜூன் 19-ஆம் தேதி பத்திரிகை நிருபர்களிடம் பேசிக்கொண்டிருந்தபோது காந்திஜி, "வைசிராயின் இடத்தில் என்னை ஒரு நாளைக்கு நியமித்துவிட்டால் நான் எல்லாப் பத்திரிகைகளையும் நிறுத்திவிடுவேன்" என்றார். "'ஹரிஜன்' தவிர மற்ற பத்திரிகைகளை" என்று சிரித்துக்கொண்டே சொன்னார். பொறுப்பில்லாமல் இவ்விதம் செய்திகளைப் பிரசுரிப்பதால் தீமையே விளையும் என்றார். ஹிந்துக்களின் உரிமைகளுக்குத் தாம் எதிராக இருப்பதாகச் சில செய்திகள் பிரசுரமாவதாகவும், காரியக் கமிட்டிக் கூட்டத்தில் தாம் ஒருவரே பிடிவாதமாக இருப்பதாகவும் செய்திகள் வெளிவந்துகொண்டிருக்கின்றனவென்றும், இவ்விதம் தவறாக வெளிவரும் செய்திகளைப் பொது மக்கள் நம்பவேண்டாம் என்றும் காந்திஜி கூறினார். காரியக் கமிட்டி ஒரு முடிவுக்கு வருவதில் தாமதம் ஏற்படுவதற்குக் காரணம் அதன் உறுப்பினரிடையே அபிப்பிராய

களையும் நானே படித்துவிட முடியாது. என்னுடைய சக ஊழியர்களும் உதவியாளரும் என் முன் எதை வைக்கிறார்களோ அதைப் படிப்பதோடு நான் திருப்தி அடைந்துவிடுகிறேன். இதனால் எனக்கு நஷ்டம் எதுவும் ஏற்படவில்லை என்றே சொல்லுவேன். பத்திரிகைகளில் வெளியானதைக் கொண்டு, நான் டில்லியில் இருக்கும் போது ஒன்று கூறினேன் என்றும் இப்பொழுது வேறு ஒன்றைச் சொல்லுகிறேன் என்றும் ஓர் அபிப்பிராயம் ஏற்பட்டிருக்கிறது எனத் தெரிகிறது. மந்திரி சபைத் தூதுக் கோஷ்டியின் யோசனை குறித்து நான் டில்லியில் பேசிய ஒரு கூட்டத்தில், நான் முன்னால் ஒளியைக் கண்ட இடத்தில் இப்பொழுது இருளையே காண்கிறேன் என்றேன். அந்த இருள் இன்னும் நீங்கிவிடவில்லை. அந்த இருள் அதிகமாகியே இருக்கிறது. என் வழியைத் தெளிவாகக் காண முடிந்திருந்தால், அரசியல் நிர்ணய சபையைப் பற்றிய அந்த யோசனைகளை நிராகரித்துவிடுமாறே காரியக் கமிட்டியைக் கேட்டிருப்பேன். காரியக் கமிட்டி மெம்பர்களுடன் எனக்கு இருக்கும் உறவை நீங்கள் அறிவீர்கள். பாபு ராஜேந்திரப் பிரசாத் ஹைகோர்ட் நீதிபதியாக இருந்திருப்பார். ஆனால், அதற்குப் பதிலாக அவர் சம்பாரணில் என்னுடைய துவிபாஷியாகவும் குமாஸ்தாவாகவும் இருக்க முன் வந்தார். சர்தார் இருக்கிறார். எனக்கு 'ஆமாம் போடும் ஆசாமி' என்ற பட்டப்பெயரை அவர் பெற்றிருக்கிறார். அதை அவர் பொருட்படுத்தவில்லை; அதை அவர் தமக்கு ஒரு பெருமையாகவும் எடுத்துக்கொள்கிறார். அவர் எந்தப் புயலையும் எதிர்த்துச் செல்லும் பறவையைப் போன்றவர். ஒரு சமயம் மேற்கத்திய நாட்டு முறையில் உடை அணிவதும் உணவு கொள்வதுமாய் இருந்தார். ஆனால், என்னுடன் சேர்ந்திருக்க வேண்டும் என்ற முடிவுக்கு அவர் வந்ததிலிருந்து நான் சொல்லுவதே அவருக்குச் சட்டமாகிவிட்டது. ஆனால், அவரும் இந்த விஷயத்தில் என் கருத்தை முற்றிலும் ஏற்றுக்கொள்ளவில்லை. இதற்கு முன்னெல்லாம் என்னுடைய இயல்பான அறிவு நியாயத்தின்மேல் நின்றது; தங்களுடைய மூளைக்கும் உள்ளத்திற்கும் திருப்தியளிக்கும் வகையில் இருந்தது; ஆனால், இச்சமயம் மட்டும் அப்படிச் செய்ய நான் தவறிவிட்டேன் என்று

---

பேதம் அதிகமாக இருக்கிறது என்பதனால் அல்ல என்றார். காரியக் கமிட்டி ஒரு முடிவுக்கு வந்த பிறகு ஜூன் 24-ஆம் தேதி காந்திஜி கூறுகையில், பலத்த எதிர்ப்புக்கு இடையே இம்முடிவுக்குக் காரியக் கமிட்டி வந்திருக்கிறது என்று பத்திரிகைகளில் வெளியாகியுள்ள செய்தி தவறு என்றார். ஜூலை 9-ஆம் தேதி அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியில் காந்திஜி பேசுகையில் பத்திரிகைகளில் வெளியான அந்தத் தவறான செய்திகளைப்பற்றியே குறிப்பிட்டார்.

அவர்கள் இருவரும் கூறுகின்றனர். அவர்களுக்குப் பதிலளித்த நான், என் உள்ளத்தில் சந்தேகங்கள் இருந்ததனுல் அதற்கு எந்தவிதக் காரணத்தையும்கூற முடியவில்லை என்றும், அப்படி இல்லாதிருந்தால் அந்த யோசனைகளை நிராகரித்துவிடுமாறு உடனேயே கூறியிருப்பேன் என்றும் சொன்னேன். அவர்கள் உஷாராக இருப்பதை முன்னிட்டு என்னுடைய சந்தேகங்களை அவர்களுக்குத் தெரிவிக்க வேண்டியது என் கடமை. நான் கூறுவதை அவர்கள் பகுத்தறிவோடு பரிசீலனை செய்து பார்த்து, நான் கூறும் கருத்துச் சரி என்று இருந்தால் மாத்திரமே அதை அவர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும். தீர ஆலோசித்த பிறகு, அநேகமாக ஏகமனதாக அவர்கள் வந்திருக்கும் முடிவு உங்கள் முன்னிலையில் இருக்கிறது. காரியக் கமிட்டி உறுப்பினர்கள், உங்களுக்கு நம்பிக்கையானவர்களும்,சோதிக்கப்பட்டுத் தேர்ந்த சேவகர்களுமாவர். அவர்களுடைய தீர்மானத்தை நீங்கள் அலட்சியமாக நிராகரித்துவிட முடியாது.

யோசனை கூறப்பட்டிருக்கும் அரசியல் நிர்ணய சபை மக்களின் பார்லிமெண்டு அல்ல என்பதை ஒப்புக்கொள்ள நான் தயார். அதில் குறைபாடுகள் பல உள்ளன. ஆனல், நீங்களோ, தேர்ந்த சிறந்த வீரர்கள். ஆபத்தைக் குறித்து ஒரு சிப்பாய் என்றும் அஞ்சுவதே கிடையாது. அவர் அதில் தான் திளைக்கிருர். யோசனை கூறப்படும் அரசியல் நிர்ணய சபையில் குறைபாடுகள் இருக்குமானுல், அவற்றைப் போக்கிக்கொள்ள வேண்டியவர்கள் நீங்கள். அந்த அரசியல் நிர்ணய சபையில் பங்குகொள்ளுவது ஆபத்தானதென்றும், ஆகவே, காரியக் கமிட்டித் தீர்மானத்தை நீங்கள் நிராகரித்துவிட வேண்டும் என்றும் ஸ்ரீ ஜயப்பிரகாஷ் நாராயண் நேற்றுக் கூறியதைக் கேட்டு ஆச்சரியம் அடைந்தேன். ஜயப்பிரகாஷ் போன்ற ஒரு தேர்ந்த போர் வீரரின் வாயிலிருந்து இத்தகைய தோல்வி மனப்பான்மையைக் காட்டும் சொற்களை நான் எதிர்பார்க்கவில்லை. காலஞ்சென்ற சௌத்ரி ராம்பஜ் தத்தின் கவிதையின் ஓர் அடி என் உள்ளத்தில் ஆழப் பதிந்துவிட்டது. ‘நாம் என்றும் தோல்வியுரோம்; சாவிலுங்கூடத் தோல்வியுரோம்’ என்பது அதன் பொருள். இந்தத் தீர்மானத்தை அந்த உணர்ச்சியின் பேரில் நீங்கள் கவனிக்க வேண்டும் என்று உங்களை எதிர்பார்க்கிறேன். ஒரு சத்தியாக்கிரகி தோல்வி என்பதையே அறியான்.

ஆங்கிலேயன் எதைச் செய்தாலும் அது கெடுதலாகவே இருக்கும் என்று ஒரு சத்தியாக்கிரகி கூறுவான் என்றும்

நான் எதிர்பார்க்கவில்லை. ஆங்கிலேயர் கெட்டவர்களாகவே இருக்க வேண்டுமென்பதில்லை. மற்றவர்களிடம் காண்பது போலவே ஆங்கிலேயரிலும் நல்லவரும் கெட்டவரும் இருக்கிருர்கள்; நம்மிடத்திலும் குற்றங் குறைகள் இல்லாமல் இல்லை. ஆங்கிலேயரிடம் நல்லதும் இல்லாதிருந்தால் இப்பொழுது இருக்கும் பலத்தை அவர்கள் அடைந்திருக்க முடியாது. நாம் நமக்குள்ளேயே சண்டை போட்டுக்கொண்டு நம்மைச் சுரண்ட அனுமதித்ததனுல், அவர்கள் வந்து இந்தியாவைச் சுரண்டினுர்கள். கடவுளின் உலகத்தில் கலப்பற்ற தீமை நிலைப்பதில்லை. சைத்தான் ஆதிக்கம் வகித்து வருவதாகத் தோன்றும் இடத்தில்கூடக் கடவுள் ஆட்சி செய்கிருர். ஏனெனில், சைத்தானும் கடவுளுக்கு அடிமையாகவே இருந்து வருகிருன். தரும உணர்ச்சியே இல்லாத ஒருவருக்கு எதிராகச் சத்தியாக்கிரகம் பயன்படாது என்று சிலர் கூறுகிருர்கள். அதை ஒப்புக்கொள்ள நான் ம்றுக்கிறேன். நாம் உண்மையோடு இருந்தால், போதுமான பொறுமையும் நமக்கு இருப்பின், கல் போன்ற மிகக் கடினமான உள்ளமும் உருகிவிடும். ஒரு சத்தியாக்கிரகி உயிரைக் கொடுக்கிருன்; ஆனுல், தளர்ந்து விடுவதில்லை. 'செய் அல்லது செத்துப் போ' என்ற கோஷத்தின் பொருள் அதுதான். 'கொல்லு அல்லது கொல்லப்படு' என்பதல்ல அந்தக் கோஷத்தின் பொருள். அப்படிச் சொல்லுவது, வேண்டுமென்றே சிதைத்து, உண்மைப் பொருளைத் திரித்துக் கூறுவதாகும். அதன் உண்மையான பொருள், 'நாம் நம் கடமையைச் செய்யவேண்டும். அதை நிறைவேற்றுகையில் அவசியமானுல் சாகவும் வேண்டும் என்பதே. பிறரைக் கொல்லாது தான் சாவது என்பதே ஒரு சத்தியாக்கிரகி அணியும் சின்னம். அந்த லட்சியத்தை நாம் கடைப்பிடித்து வந்திருப்போமாயின், இதற்குள் நாம் சுயராஜ்யத்தை அடைந்திருப்போம். ஆனுல், நமது அகிம்சை முடமாகி இருந்தது. மரக் கால் வைத்துக்கொண்டு அது நடந்து வந்தது. அப்படியிருந்தும் இப்பொழுது நமக்குள்ள சக்தியை அதுதான் தந்திருக்கிறது. 1942-இல் என்ன நடந்ததென்பதை நான் அறிவேன். நாச வேலையும், ஒளிந்து செய்த காரியங்களுமே நாட்டை இப்பொழுதுள்ள பலத்திற்குக் கொண்டுவந்திருக்கின்றன என்று ஒரு வேளை நீங்கள் சொல்லலாம். 1942 போராட்டத்தின் போது நாச வேலைகள் காங்கிரஸின் பெயராலேயே செய்யப்பட்டன என்பதை மறுக்க முடியாது. ஆனுல், பொது மக்களின் பலம் அதனுல்தான் என்பதை நான் அடியோடு மறுக்கிறேன். மக்களிடம் தென்படும் பலம் எதுவாயினும், அகிம்சை

யினால் வந்ததுதான். அகிம்சை என்னதான் குறைபாடுடையதாக இருந்தாலும் அல்லது அதை அனுசரித்ததில் தவறு இருந்தாலும் என்ன ? குறைபாடுடையவர்களாக இருந்த தால், அகிம்சையிலும் குறைபாடுகள் தோன்றின. என்னைப் போன்ற குறைபாடுடைய ஒருவரால் அது உங்களுக்கு எடுத்துக் கூறப்பட்டதால், நமது அகிம்சை குறைபாடுடையதாக இருந்தது. அப்பொழுதுங்கூட, குறைபாடுடையதாயிருக்கும் கருவியின் மூலமே அது இத்தகைய அற்புதமான பலனை உண்டாக்கியிருக்கிறதென்றால், குறைபாடே இல்லாத சத்தியாக்கிரகியின் கையில் அதனால் எதைத்தான் சாதிக்க முடியாது ?

1942-இல் நம் மக்கள் சிறந்த வீரத்தைக் காட்டினர். ஆனால், நமது லட்சியத்தை அடைவதற்கு முன்னால் இன்னும் அதிகமான வீரம் நமக்கு வேண்டியிருக்கும். நாம் எவ்வளவோ செய்திருக்கிறோம். ஆனால், இன்னும் செய்ய வேண்டியது எவ்வளவோ இருக்கிறது. இதற்குப் பொறுமை, அடக்கம், பற்றற்ற தன்மை நமக்கு மிக அவசியமானவை. 1942-இல் என்ன நடந்தது, அந்தப் போராட்டத்தின் உட்பொருள் என்ன, அது வேலை செய்த இடத்தில் அரைகுறையாக நின்றுவிட்டதன் காரணம் என்ன என்பதை அறிந்துகொள்ள நீங்கள் முயற்சி செய்யவேண்டும்.

உல்லாசமாக இருப்பதற்கோ அல்லது ஓய்ந்திருப்பதற்கோ இது சமயம் அல்ல. நாட்டின் நன்மைக்காக முள்ளாலான கிரீடத்தை அவர் தரித்துக்கொள்ள வேண்டும் என்று பண்டித ஜவாஹர்லால் நேருவிடம் கூறினேன்; அவரும் ஒப்புக்கொண்டார். அரசியல் நிர்ணய சபை, உங்களுக்கு மலராலான படுக்கையாக இருக்கப் போவதில்லை ; அது முள்ளாலானதாகவே இருக்கும். அதை நீங்கள் தவிர்த்துவிட முடியாது.

ஒவ்வொருவரும் அதில் பிரவேசிக்க வேண்டும் என்பதல்ல அதன் பொருள். தங்களுடைய சட்டப் பயிற்சியினாலும் விசேஷத் திறமையினாலும் அந்த வேலைக்கு விசேடத் தகுதியுள்ளவர்கள் மாத்திரமே அதற்குப் போக வேண்டும். தியாகங்கள் புரிந்ததற்கு வெகுமதியாக நாட வேண்டியது அல்ல அது. ஆனால், தூக்குமேடை ஏறுவதைப் போன்று அல்லது சேவையின் பலிபீடத்தில் ஒருவருடைய சகலத்தையும் தியாகம் செய்வதைப் போன்று கடமை உடையது அது.

அரசியல் நிர்ணய சபையில் நீங்கள் ஏன் சேர வேண்டும் என்பதற்கு மற்றொரு காரணமும் இருக்கிறது. அரசியல் நிர்ணய

சபை யோசனையை நீங்கள் நிராகரித்துவிட்டாலோ அல்லது அரசியல் நிர்ணய சபையே ஏற்படாமற் போய்விட்டாலோ, தனிப்பட்ட அல்லது பொதுஜனச் சட்ட மறுப்பை நடத்தும்படி நான் ஆலோசனை கூறுவேனா அல்லது நானே உண்ணாவிரதத்தை மேற்கொள்ளுவேனா என்று நீங்கள் என்னைக் கேட்டால், 'இல்லை' என்பதுதான் என் பதில். தனித்துச் செல்வதிலேயே எனக்கு நம்பிக்கை. ஒன்றியாகத்தான் நான் இந்த உலகத்திற்கு வந்தேன்; மரண இருள் கவிந்த தனி வழியில் நான் சென்றிருக்கிறேன்; வேளை வரும்போது தனியாகப் போய்விடுவேன். நான் ஒருவனே தனியாக இருந்தாலும் என்னால் சத்தியாகிரகத்தை நடத்த முடியும் என்பதை நான் அறிவேன். இதற்கு முன்னும் அப்படியே செய்துமிருக்கிறேன். உண்ணாவிரதத்திற்கோ அல்லது சட்ட மறுப்புக்கோ இது சமயமல்ல. அரசியல் நிர்ணயசபையைச் சத்தியாக்கிரகத்திற்குப் பிரதியானதொன்று என நான் கருதுகிறேன். அது ஆக்க வழியிலான சத்தியாக்கிரகம்.

இதற்கு மற்றொரு வழி ஆக்க வேலை. அதை நீங்கள் சரிவர நிறைவேற்றியதே இல்லை. அதை நிறைவேற்றியிருப்பீர்களாயின், இப்பொழுது இருப்பதற்குப் பதிலாக ஜயப்பிரகாஷ் நாராயண் கனவு காணும் அரசியல் நிர்ணய சபையையே நீங்கள் அடைந்திருப்பீர்கள். ஆனால், ஒரு சத்தியாக்கிரகி, குறைபாடே இல்லாத நிலைமைகள் வரும்வரையில் காத்திருக்கவோ அல்லது செயலைத் தாமதித்து வைக்கவோ கூடாது. கையில் கிடைக்கும் சரக்கை வைத்துக்கொண்டு, அவர் செயலில் இறங்கி, அதன் மாசையெல்லாம் போக்கிச் சுத்தமான தங்கமாக்கிக்கொள்ளுவார். மே 16-ஆம் தேதிய அரசாங்க அறிக்கையில் இருக்கும் குறைபாடு எதுவாக இருந்தாலும், அதைத் தயாரித்தவர்களின் நேர்மைக் குணத்தில் எனக்கு எந்தவிதமான சந்தேகமும் இல்லை. தாங்கள் வெளியேறிவிட வேண்டியதே என்பதை அவர்கள் அறிவார்கள்; ஒழுங்கான முறையில் வெளியேற அவர்கள் விரும்புகிறார்கள். இதற்காக, இப்பொழுதுள்ள நிலைமையில் தாங்கள் செய்யக்கூடியதான அறிக்கையை அவர்கள் வெளியிட்டிருக்கிறார்கள். நம்மை ஏமாற்றுவதற்கென்றே இங்கிலாந்திலிருந்து அவர்கள் இங்கு வந்திருக்கிறார்கள் என்பதை நம்ப நான் மறுக்கிறேன்.

ஒரு போலிஷ் பெண்மணி இன்றுதான் எனக்கு ஒரு குறிப்பை அனுப்பியிருக்கிறார். பிரிட்டிஷ் ராணுவம் இனிமேல்

அவர்களுக்குச் சரியான பாதுகாப்பு அளிக்க முடியாதாகை யால் இந்தியாவைவிட்டு வெளியேறிவிடுமாறு எல்லா ஐரோப்பியர்களுக்கும் ரகசிய அறிவிப்பு வந்திருப்பதாக அப் பெண்மணி கூறுகிருர். அப்படி வந்திருந்தால், இது நம்மைப் பற்றித் தாழ்வாக அவர்கள் நினைப்பதையே காட்டுகிறது. நம் மத்தியில் பத்திரமாவே இருப்பதாக ஓர் ஆங்கிலக் குழந்தை நினைக்காமற்போனல் சத்தியாக்கிரகி என்ற பெயருக்கே நாம் தகுதியில்லாதவர்களாவோம். இந்தத் தந்திரங்களினுல் ஐரோப் பியரை வெளியே துரத்திவிடுவதில் நாம் வெற்றி பெற்ருலும், அவர்கள் இருந்த இடத்தில் இன்னும் மோசமானதே நிகழும். 'இந்தியாவைவிட்டு வெளியேறு' என்ற நமது தீர்மானத்தில் துவேஷம் என்பது எதுவுமே இல்லை. இனியும் நாம் சுரண்டப் பட மாட்டோம் என்பது ஒன்றே அதன் பொருள்.

நாம் கோழைத்தனமாக இருக்கக்கூடாது. நம் வேலையை நம்பிக்கையுடனும் தைரியத்தோடும் செய்ய முற்படுவோம். ஏமாற்றப்பட்டுவிடுவோமோ என்ற பயம் நம்மைத் திகைப்புறச் செய்யக்கூடாது. ஒரு சத்தியாக்கிரகியை யாரும் ஏமாற்ற முடியாது. என் மனத்தில் சூழ்ந்துள்ள இருளைப்பற்றிக் கவலை இல்லை. அதை ஒளியாக இறைவன் மாற்றிவிடுவான்.

—'ஹரிஜன்' - 21—7—1946

# 28

# நாம் பிரார்த்திப்போமாக

இந்தியா, தான் ஆவலுடன் எதிர்பார்த்து வந்த லட்சிய மான ராஜீய சுதந்திரத்தை அடையும் தறுவாயில் இருக்கிறது என்பதில் சந்தேகமே இல்லை. அந்தப் பிரவேசம் பிரார்த்தனை யோடு கூடியதாக இருக்கட்டும். பிரார்த்தனை, கிழவி சோம்ப லால் பொழுதைப் போக்கும் விஷயம் அல்ல. சரிவர அறிந்து அதை உபயோகித்தால், அது செயல் புரிவதற்கு மிகச் சக்தி வாய்ந்த ஆயுதமாகும்.

ஆகையால், நாம் பிரார்த்திப்போமாக. அகிம்சையைப்பற்றி நாம் எண்ணியது என்ன என்பதையும், நமக்குக் கிடைக்கும் சுதந் திரத்தை அதன் உதவியைக்கொண்டு நிலை பெற நாம் எப் படிச் செய்வது என்பதையும் கண்டுபிடிப்போம். நமது அகிம்சை பலவீனர்களின் அகிம்சையாகவே இருக்குமானல், அத்தகைய அகிம்சையைக் கொண்டு சுதந்திரம் நிலைபெறச் செய்துவிடுவது என்பது நம்மால் என்றுமே முடியாது என்ருகிறது.

நம்மிடம் ஆயுத பலம் இல்லை. அதை உபயோகிக்கும் ஞான மும் நமக்குக் கிடையாது. இதை முன்னிட்டாவது ஆயுத பலத்தைக் கொண்டு நம்மைப் பாதுகாத்துக்கொள்ளுவது சிறிது காலம் வரை நம்மால் ஆகாது என்றும் ஏற்படுகிறது. தேவை யான கட்டுப்பாடும் நமக்கு இல்லை. இதன் பலனை இன்னு மொரு நாட்டின் உதவியை, அதற்குச் சமமானவர்கள் என்றல் லாமல், – 'தாழ்ந்தவர்களாக' என்ற சொல் நம் காதுகளுக்கு அருவருப்பாக இருந்தால் – ஆசிரியனை எதிர்நோக்கும் மாணவர் கள் என்ற முறையில் நாம் நாடவேண்டியிருக்கும்.

ஆகவே, சுதந்திரத்தைப் பெறுவதற்கு அகிம்சையையே நாம் நம்பியிருந்ததைப் போல, பெற்ற சுதந்திரம் போய்விடா மல் காத்துக்கொள்வதற்கும் அகிம்சையை மேற்கொள்ளுவதைத் தவிர நமக்கு வேறு வழி இல்லை. இதன் பொருள், நமக்கு எதிரானவர்கள் என்று தங்களைக் கூறிக்கொள்ளுவோர்களுக்கு எதிராகவெல்லாம் அகிம்சையைக் கையாள்வது என்றாகிறது. சுமார் முப்பது ஆண்டுகளாக அகிம்சையில் பழக்கப்பட்டிருக்கும் ஒருவருக்கு இது பிரமாதமல்ல. 'அவசியமானால் கொல்வது, அச்செயலில் கொல்லப்பட நேர்வது' என்பதற்குப் பதிலாக, 'உன் மானத்திற்காகவும் சுதந்திரத்திற்காகவும் செத்துப் போ, என்பதில் சுருக்கப்பட்டிருக்கிறது அது. வீரமுள்ள ஒரு சிப்பாய் என்ன செய்கிறான்? அவசியமாகும்போது கொல்லுகிறான்; இப்படிச் செய்வதில் தன் உயிரையும் ஆபத்திற்கு உட்படுத்திக் கொள்கிறான். இதைவிட அதிக வீரமும் தியாகமும் அகிம்சைக் குத் தேவையாகின்றன. கொல்லும் செயலில் ஈடுபட்டிருக்கும் ஒருவருக்கு, தமக்கு ஆபத்தை வரவழைத்துக் கொள்வது எளிதாக இருக்கும்போது, ஓர் உயிரைக் கொல்லாமல் விடுவதில் மாத்திரம் அவருக்கு அக்காரியம் மனிதனின் சக்திக்கு மீறியதாக இருப் பானேன்? கொல்லும் கலையை அறிந்தால், அதில் பயிற்சி பெற்றால், நாம் மரணத்துக்கு உள்ளாக முடியும், மற்ற வழிகளில் அவ்வாறு முடியாது என்று நினைப்பது தன்னைத்தானே முழுதும் ஏமாற்றிக்கொளுவதாகவே தோன்றுகிறது. பொய்யானதைத் திரும்பத் திரும்பச் சொல் வதால் ஏற்படும் மனவசியம் இல்லாதிருந்தால், நம்மை நாமே அடி யோடு ஏமாற்றிக்கொள்ள மாட்டோம்.

ஆனால், 'நீங்கள் சொல்லுவது போல் விஷயம் அவ்வளவு எளிதானதாக இருந்தால், பிரார்த்தனையை இதில் ஏன் கொண்டு வரவேண்டும்?' என்று குறை கூறுபவரோ, பரிகசிப்பவரோ

கேட்கலாம். ஒரு நாட்டின் சுதந்திரத்தையும் மானத்தையும் காத்துக்கொள்வதில் வந்து முடியும் வாழ்க்கையின் பல துறைகளில், உயர்ந்ததும் வீரமுள்ளதுமான தன்னலத் தியாகக் கலையைக் கற்றுக்கொள்ளுவதில் முதலாவதாகவும் கடைசியானதாகவும் இருக்கும் பாடம் பிரார்த்தனையே. இதுதான் என் பதில்.

பிரார்த்தனைக்குக் கடவுளிடம் மாறாத நம்பிக்கை வேண்டும் என்பதில் சந்தேகமில்லை. அந்த நம்பிக்கை இல்லையேல் வெற்றியுள்ள சத்தியாக்கிரகம் என்பது எண்ணவும் முடியாதது. கடவுள் என்பது வாழ்வின் அழியாத தருமம். அதாவது, விதியும் அவரே; விதிப்பவரும் அவரே. இவ்வாறு இரண்டறக் கலந்திருக்கும் வரை அவரை எந்தப் பெயரிட்டும் அழைக்கலாம்.

புது டில்லி, 6—4—1946. —'ஹரிஜன்' - 14—4—1946.

## 29

# உலகம் ஒன்றுவதற்கு பாடுபடுக

[1947 ஏப்ரலில் மகாத்மா காந்தி டில்லியிலிருந்த சமயம் ஆசிய உறவு மகாநாட்டிற்கு இரு முறை சென்றார். முதல் தடவையாக 1—4—1947-இல் காந்திஜி அம் மகாநாட்டிற்குச் சென்றபோது அவர் அங்கு எந்தச் சொற்பொழிவும் நிகழ்த்தவில்லை. மகாநாட்டுப் பிரதிநிதிகள் சிலர் அவரைக் கேட்ட கேள்விகளுக்கு அவர் பதில் சொன்னார். அந்தக் கேள்விகளும் பதில்களுமே கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.]

"உலகம் ஒன்றாக இருக்கப் போவதில்லையானால், இந்த உலகில் வாழ நான் விரும்ப மாட்டேன். இந்தக் கனவு என் ஆயுள் காலத்திலேயே நிறைவேறுவதை நான் பார்க்க வேண்டும்" என்று ஒரு கேள்விக்குக் காந்திஜி பதில் கூறினார். உலகம் ஒன்றாக இருக்க வேண்டும் என்ற கொள்கையில் மகாத்மா காந்திக்கு நம்பிக்கை இருக்கிறதா, இப்பொழுதிருக்கும் நிலையில் அது வெற்றி பெறுமா என்று கேட்டதற்கே அவ்வாறு பதில் சொன்னார். அவர் மேலும் கூறியதாவது: "பல தரப்பட்ட ஆசிய நாடுகளிலிருந்தும் இங்கு வந்திருக்கும் பிரதிநிதிகள், ஒரே ஓர் உலகமே இருக்க வேண்டும் என்பதற்காகத் தங்களால் முடிந்தவரை பாடுபடுவார்கள் என்றே நம்புகிறேன். இந்த லட்சியத்தை அடைவதற்கான வழி துறைகளைக் குறித்து இவர்கள் சிந்தித்து முடிவுக்கு வரவேண்டும். ஒரே உறுதியுடன் நீங்கள் வேலை செய்தால், இந்தக் கனவை நம் தலை முறையிலேயே உண்மையாவதை நாம் காண முடியும் என்பதில் சந்தேகமில்லை."



மகாத்மாவும், ஸ்ரீ மகாதேவ தேசாயும். (1939)




டில்லியில் கூடிய ஆசிய பிரச்னைகள் மகாநாட்டில் காந்தியடிகள் (2, ஏப்ரல் 1947)

சீனவிலிருந்து வந்திருந்த டாக்டர் ஹான் லிவூ, ஆசிய ஸ்தாபனம் ஒன்றை அமைப்பதென்று இருக்கும் யோசனையைக் குறித்துக் காந்திஜியின் கருத்து என்ன என்று கேட்டார். இதற்குப் பதிலளிக்கையில் காந்திஜி கூறியதாவது :

" கடிதப் போக்குவரத்தின் மூலம் அநேகமாக உலகத்தின் எல்லாப் பகுதிகளையுமே நான் அறிவேன். அப்படியே, உங்களில் மிகச் சிலரையே நான் நேரில் அறிவேனாயினும், ஒருவேளை யாரையுமே அறியாவிட்டாலும், கடித மூலமே ஆசியாவைப்பற்றியும் அறிவேன். பயன்படக்கூடிய எதையும் நான் கூற முடியுமா என்று சந்தேகிக்கிறேன். ஆனால், கேள்வியோ என் மனத்துக்குப் பிடித்த விஷயத்தைப் பற்றியதாக இருக்கிறது. இப்பொழுது என்னைக் கேட்டிருக்கும் கேள்வியின் சில பகுதிகளை நேற்றுப் பண்டித நேரு விவாதித்தார். நம் சரித்திரத்தில் முதல் தடவையாக இத்தகைய ஒரு மகாநாடு இந்திய பூமியில் நடப்பது மகத்தானதோர் நிகழ்ச்சியாகும். நாம் இன்று காணும் நிலைமையை நான் குறிப்பிட வேண்டியிருப்பதற்காக வருந்துகிறேன். நமக்குள்ளேயே சமாதானமாக எப்படி இருப்பது என்பது நமக்குத் தெரியாது. மனிதத் தன்மையோடும் நட்பின் மூலமும் நம்மால் தீர்த்துக்கொள்ள முடியாத வேற்றுமைகள் நமக்குள் எத்தனையோ இருக்கின்றன. காட்டில் மிருகங்களிடம் நிலவும் சட்டத்தையே நாம் மேற்கொள்ள வேண்டும் என்று நாம் எண்ணுகிறோம். நீங்கள் உங்கள் நாட்டில் இந்த அனுபவத்தைக்கொண்டு எதையும் செய்யக் கூடாதென்பதே எனது விருப்பம். அதற்குப் பதிலாக நீங்கள் அதை இங்கேயே புதைத்துவிட வேண்டும் என்றே விரும்புவேன்.

" இப்பொழுது இந்தியா தனது முழுச் சுயேச்சையை அடையும் தறுவாயில் இருக்கிறது. இந்நாட்டைத் தங்களுக்குச் சொந்தமாக்கிக்கொள்ள விரும்பும் ஒவ்வொருவரிடமிருந்தும் சுயேச்சையாக இருக்க இந்தியா விரும்புகிறது. எஜமானர்கள் மாறுவதை நாங்கள் விரும்பவில்லை. அது எப்படி வரப் போகிறது என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியாது போனாலும் எங்கள் மண்ணில் நாங்களே எஜமானர்களாக இருக்க நாங்கள் விரும்புகிறோம். எங்களுக்குத் தெரிந்ததெல்லாம், நாங்கள் எங்கள் கடமையைச் செய்ய வேண்டும், பலனை மனிதன் கையில் விட்டுவிடாமல் கடவுள் கையில் விட்டுவிட வேண்டும் என்பதே. மனிதன், தன் விதியைத் தானே நிர்ணயித்துக்

கொள்ளுகிறுன் என்று கூறப்படுகிறது. ஓரளவுக்கு அது உண்மையே. நம் நோக்கங்கள், நம் திட்டங்களனைத்தையும் உருவாக்கி நம் எண்ணங்களையும் திட்டங்களையும், மீறித் தன் விருப்பத்தை நிறைவேற்றி வரும் ஒரு பெரிய சக்தி அனுமதிக்கும் அளவுக்குத்தான் மனிதன் தன் விதியை நிர்ணயித்துக்கொள்ள முடியும்.

"அம்மாபெரும் சக்தியை 'அல்லா' என்றே 'குதா' என்றே 'கடவுள்' என்றே அழையாமல், சத்தியம் என்ற பெயரால் நான் அழைக்கிறேன். எனக்குச் சத்தியமே கடவுள்; நம் திட்டங்களையெல்லாம் ஆள்வதும் சத்தியமே. முழு உண்மையும், இப்பெரிய சக்தியான சத்தியத்தின் உள்ளத்தில் மாத்திரமே இடம் பெற்றிருக்கிறது. சத்தியம் நெருங்க முடியாதது, அது நம்மால் அடைய முடியாத ஒன்று என என் இளமை நாட்களிலிருந்து நான் போதிக்கப்பட்டு வந்திருக்கிறேன். கடவுள் அறிய ஒண்ணுதவர் என்று நான் நம்புமாறு ஓர் ஆங்கிலப் பெரியார் எனக்குப் போதித்தார். அவர் நம் அறிவுக்கு எட்டக் கூடியவரே. ஆனல், நமக்குள்ள அறிவின் எல்லை அனுமதிக்கும் அளவுக்குத்தான் அவரை அறிய முடியும்.

"கனவான்களாகிய நீங்கள், ஆசியாவின் பல பகுதிகளிலிருந்தும் இங்கு வந்திருக்கிறீர்கள். ஆர்வத்தோடும் உற்சாகத்துடனும் நீங்கள் வந்திருப்பதால், நீங்கள் எல்லோரும் ஆண்டுதோறும் அல்லது இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை அல்லது மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை மகாநாடுகளை நடத்த வேண்டும். கூட்டங்களின் இன்பமான நினைவுகளுடன் சென்று சத்தியத்திற்குப் பெரிய கோயில் ஒன்று எழுப்புவதற்கு எல்லா முயற்சிகளையும் செய்ய வேண்டும்.

"ஆசியாவின் பிரதிநிதிகள் எல்லோரும் ஒன்ருகக் கூடியிருக்கிறுர்கள். ஐரோப்பாவுக்கு எதிராக, அமெரிக்காவுக்கு எதிராக அல்லது ஆசியாக்காரர்களல்லாதாருக்கு எதிராகப் போர் தொடுப்பதற்கா இது? 'இல்லை' என்று மிகவும் அழுத்தந் திருத்தமாக நான் கூறுகிறேன். இது அகில இந்தியா விடுக்கும் செய்தி. அகிம்சையைக் கொண்டே முக்கியமாகவும் அதிக அளவிலும் தனது சுதந்திரத்தை அடைந்திருக்கும் இந்தியா, உலகத்தின் மற்றப் பகுதிகளை அடக்கிவைப்பதற்காக அந்தச் சுதந்திரத்தை உபயோகிக்கப் போகிறதென்ருல், நான் மிகவும் துக்கத்தையே அடைவேன் என்பதை ஒப்புக்கொள்ள

எனக்குச் சுதந்திரம் உண்டு. ஆசியா எனக் கூறப்படும் இந்த விசாலமான கண்டத்தில் இருக்கும் பல இனத்தினரையும் ஐரோப்பியர் சுரண்டியிருக்கிறார்கள்.

"மற்ற மேற்கத்திய நாடுகள் ஒவ்வொன்றையும் போல ஆசியா வாழ வேண்டும், சுதந்திரத்துடன் வாழ வேண்டும் என்ற மாறாத உறுதி ஏற்படாமல் இம்மகாநாட்டிலிருந்து நாம் போய் விடுவோமாயின் அது துயர்மிக்க விஷயமாகும். இதைப் போன்ற மகாநாடுகள் தொடர்ந்து நடந்து வர வேண்டும் என்று கூறத்தான் விரும்பினேன். அவை எங்கே கூடுவது என்று என்னை நீங்கள் கேட்டால், அதற்கு இடம் இந்தியா தான்."

—'ஹரிஜன்' - 20—4—1947

# 30

# ஆசியா விடுக்கும் செய்தி

[1947 ஏப்ரல் 2-ஆம் தேதி புதன்கிழமை டில்லியில் புராணு கில்லாவில் (பழைய கோட்டை) நடந்த ஆசிய உறவு மகா நாட்டின் கடைசிக் கூட்டத்தில் மகாத்மா பேசினார். அதன் விவரமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

நண்பர்களே! உண்மையான இந்தியாவை நீங்கள் பார்க்க வில்லை. அதனால், நீங்கள் கூட்டியிருக்கும் மகாநாடு உண்மையான இந்தியாவிலே நடைபெறவில்லை. டில்லி, பம்பாய், சென்னை, லாகூர் ஆகியவை பெரிய நகரங்கள். ஆகவே, மேற்கத்திய வழியைப் பின்பற்றியவை. இந்தியாவின் உண்மை உருவை நீங்கள் காண விரும்பினால், அதை நீங்கள் எங்கள் கிராமங்களில் இருக்கும் எளிய பங்கிகளின்* வீடுகளில்தான் காண முடியும். இதைப் போன்ற கிராமங்கள் 7,00,000 இருக்கின்றன. அவற்றில் 38 கோடி மக்கள் வாழ்கிறார்கள்.

உங்களில் சிலர் கிராமங்களைப் பார்ப்பீர்களானால், பார்த்த மாத்திரத்தில் அவை உங்களைக் கவர்வனவாக இரா. சாணக் குவியலின் கீழே நீங்கள் கிளறிப் பார்க்க வேண்டும். அவை சொர்க்கம்போல் திகழ்வன என்று நான் உண்மையை மறைத்துக் கூறவில்லை. இன்று அவை சாணக்குவியல்களாகவே இருக்கின்றன. அவை முன்பு அப்படி இருந்ததில்லை. நான் இப்பொழுது கூறுவது சரித்திரத்தில் காண்பதைக் கொண்டல்ல, நானே நேரில் பார்த்ததைக் கொண்டே கூறுகிறேன். இந்தியாவின் ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலைக்கு நான் பிரயாணம்

* தோட்டிகள்.

செய்திருக்கிறேன். கண்களில் ஒளியே இல்லாமல் துன்பத்தில் உழலும் மனித வர்க்கத்தின் மாதிரிகளையும் நான் பார்த்திருக்கிறேன். அவர்கள்தாம் இந்தியா. எளிய குடிசைகளிலும் சாணச் சகதிக்கு இடையேயும் எளிய பங்கிகளைக் காணலாம். ஞானத்தின் சாரம் அவர்களிடம் தென்படுவதை நீங்கள் காண்பீர்கள்.

ஞானம் கிழக்கிலிருந்தே மேற்கு நாடுகளுக்குப் போயிருக்கிறது. அந்த ஞானிகளில் முதலானவர் ஜோர்வாஸ்தர்* அவர் கிழக்கைச் சேர்ந்தவர். அவருக்குப் பின்னர் வந்தவர் புத்தர். அவரும் கீழ்நாட்டினர்; இந்தியாவைச் சேர்ந்தவர். புத்தருக்குப் பின்னர் வந்தவர் யார்? ஏசு. அவரும் கிழக்கிலிருந்து வந்தவரே. ஏசுவுக்கு முன்னால் மோஸஸ் இருந்தார். அவர் எகிப்தில் பிறந்தவராயினும் பாலஸ்தீனத்தைச் சேர்ந்தவர். ஏசுவுக்குப் பிறகு முகம்மது தோன்றினார். கிருஷ்ணர், ராமர், ஒளிகளெனத் திகழ்ந்த மற்றவர்பற்றி நான் இங்குக் கூறாமல் விடுகிறேன். அவர்களைக் குறைந்த ஜோதிகளாக நான் கருதவில்லை. ஆனால், படித்தவர்கள் உலகு அவர்களைப்பற்றி அவ்வளவாக அறிந்திருக்காது. ஆசியாவில் தோன்றிய இவர்களுக்கு இணையாக உலகில் வேறு எவரையும் நான் அறியேன். ஆனால், பிறகு என்ன நடந்தது? கிறிஸ்தவம் மேற்கத்திய நாட்டில் பரவியதும் அதன் உருவமே மாறிவிட்டது. இதைச் சொல்ல வேண்டியிருப்பதற்காக வருந்துகிறேன். மேற்கொண்டும் நான் பேசப் போவதில்லை.

பெரிய நகரங்களில் நீங்கள் பார்ப்பது உண்மையான இந்தியா அன்று என்பதை நீங்கள் அறிந்துகொள்ள வேண்டும் என்பதற்காகவே அந்தக் கதையை உங்களுக்குக் கூறினேன். நம் கண் முன்னால் நடந்துகொண்டிருக்கும் படுகொலைகள் நிச்சயமாக வெட்கக்கேடான காரியமே. நான் நேற்று உங்களுக்குச் சொன்னது போல இந்தப் படுகொலைகளின் நினைவை இந்தியாவின் எல்லைக்கு வெளியில் கொண்டு போகாதீர்கள்.

ஆசியாவின் போதனையை நீங்கள் அறிந்துகொள்ளவேண்டும் என்றே நான் விரும்புகிறேன். மேற்கத்தியக் கண்ணாடியைக் கொண்டோ அல்லது அணுக்குண்டைப்போல ஒன்றைச் செய்வதனாலோ அதை அறிந்துகொள்ள முடியாது. மேற்கத்திய நாடு

---

* ஜோர்வாஸ்தர் - பாரசீகத்தில், சுமார் கி. மு. 7-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஞானி. இவருக்குப் பாரசீக மொழியில் வழங்கும் பெயர் ஜாரதுஷ்ட்ர. கடவுள் ஒருவரே, அவரே ஆஹுரா மஸ்தா என்று இவர் கண்ட சமயம் கூறுகிறது, இன்று இந்தியாவில் உள்ள பார்ஸிக்காரர்கள் இவருடைய சமயத்தைப் பின்பற்றுபவர்.

களுக்கு ஒரு போதனையாகச் செய்வது சத்தியத்தின், அன்பின் போதனையாகவே இருக்க வேண்டும். உங்கள் அறிவுக்குமட்டும் இதைச் சொல்ல நான் விரும்பவில்லை. உங்கள் உள்ளங்களை வெற்றி கொள்ளவே விரும்புகிறேன்.

இந்த ஜனநாயக காலத்தில், ஏழைகளிலும் ஏழைகளான வர்களும் விழிப்படைந்திருக்கும் இச்சமயத்தில், இன்னும் மிக அதிகமான பலத்துடன் இந்தப் போதனையை நீங்கள் திரும்ப அளிக்க முடியும். நீங்கள் சுரண்டப்பட்டிருக்கிறீர்கள் என்ப தற்காக வஞ்சம் தீர்த்துக்கொள்ளுவதன் மூலம் மேற்கத்திய நாடுகளை வெல்லும் காரியத்தைப் பூர்த்தி செய்துகொள்வது உங்களால் முடியாது; உண்மையாகப் புரிந்துகொள்ளுவத னாலேயே முடியும். கிழக்கில் தோன்றிய இந்த ஞானிகள் நமக்கு விட்டுச் சென்றிருக்கும் போதனைகளின் ரகசியத்தை அறிந்துகொள்ளுவதற்கு, உங்கள் அறிவை மாத்திரமல்ல, உங்கள் உள்ளத்தையும் ஒன்றுபடுத்திக் கொள்ளுவீர்களாயின், அந்த மகத்தான போதனைகளுக்கு ஏற்புடையவர்களாக நாம் உண்மையிலேயே ஆகிவிடுவோமானால், மேற்கத்திய நாடுகள் மீது வெற்றி கொள்வது பூர்த்தியாகிவிடும் என்பதில் நான் நம்பிக்கை உள்ளவன். இந்த வெற்றியை மேற்கத்திய நாடு களும் விரும்பும்.

ஞானத்தை அடைவதற்காக மேற்கு நாடுகள் ஏங்கிக்கொண் டிருக்கின்றன. பைபிளின் தீர்க்கதரிசனம் நிறைவேற்றப்பட்டுப் பெரும் பிரளயமே ஏற்பட்டுவிடுவதைப் போன்று மேற்கத்திய நாடுகள் மாத்திரமல்ல, உலகமே அழியப் போவதை அணுக் குண்டு குறிப்பிடுவதால், அணுக்குண்டு பெருகுவதைக் கண்டு அந்நாடுகள் மனம் இடிந்து போயிருக்கின்றன. அதன் கொடு மையையும் பாபத்தையும் உலகிற்கு எடுத்துரைக்க வேண்டிய வர்கள் நீங்களே. உங்கள் போதகர்களும், என் போதகர்களும், ஆசியாவுக்கு விட்டுச் சென்ற பெருநிதியம் இதுவேயாம்.

—'ஹரிஜன்'- 20—4—1947

# 31

## காங்கிரஸ் மந்திரிகளும் அகிம்சையும் : இரண்டு கேள்விகள்

**கேள்வி :** பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் காங்கிரஸ் அகிம்சை யோடு போராடிக்கொண்டிருந்தது. ஆனால், காங்கிரஸ்காரர் அதிகாரத்திற்கு வந்து விட்டவுடன், தவறான வழிகளில் சென்று தொல்லை கொடுத்துக்கொண்டு வரும் தங்கள் சொந்தச் சகோ

தரர்களைச் சுடுகிறார்கள். அது சரியா? கலவரங்களை அகிம்சையினால் அடக்குவதற்கு முயற்சி செய்கையில் தங்களுடைய உயிரையே கொடுக்கும் தைரியம் அதிகாரத்தில் இருக்கும் காங்கிரஸ்காரர்களுக்கு இல்லையென்றால், ரவிசங்கர மகராஜ், ஸானே குருஜி போன்ற தனிப்பட்டவர்கள் சிலரைத் தவிரப் பொதுவாகக் காங்கிரஸ்காரர்களின் அகிம்சை பலவீனமானவர்களின் அகிம்சையே என்றுதான் காட்டுகிறதல்லவா?

**பதில் :** நீங்கள் கிளப்பும் இம்சை, அகிம்சையைப்பற்றிய விஷயம் பழமையானதொன்று. இது சம்பந்தமாக நான் வேணது சொல்லியிருக்கிறேன். பலரைப்போன்று உங்களுக்கும் அகிம்சை பிடிக்கவில்லையென்றால், நீங்கள் அதைக் கைவிட்டுவிட வேண்டும். அதற்காக உங்கள்மீது நான் குற்றம் சொல்ல மாட்டேன். இதே போல மற்றவர்கள் செய்தால் அதை நீங்களும் பொருட்படுத்தக்கூடாது. கொள்கை இதுதான்: "ரிஷிகளால் எது கூறப்பட்டதோ, மகான்கள் எதை அனுசரித்து வந்தார்களோ, அது ஒருவருடைய மனத்திற்கு உகந்ததாக இருக்குமாயின், அதை அவர் பின்பற்றி அதன்படி நடந்துவரவேண்டும்." ஒருவருடைய மனத்திற்கு உகந்ததாக இருப்பது, ரிஷிகள் கூறியதற்கும் மகான்கள் அனுசரித்து வந்ததற்கும் மாறுபட்டதாக இருக்குமானால், அப்பொழுது என்ன செய்வது என்ற கேள்வி எழலாம். அப்பொழுது ஒருவர், தமது சொந்தப் பொறுப்பில் தம் மனப்போக்கின்படி நடந்துகொள்ளலாம் என்பதே அதற்குப் பதில். அநேகச் சீர்திருத்தங்களும், புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கும் பலவும் இந்த வழியில் தான் செய்யப்பட்டிருக்கின்றன. நம் சங்கராசாரியர்கள் தீண்டாமை இருந்து வருவதை ஆதரித்திருக்கிறார்கள். ஆனால், நமது அறிவு, உள்ளம் ஆகிய இரண்டும் அது ஹிந்து மதத்திற்கே இழுக்கு என்று கருதுகின்றன. நம் நம்பிக்கை தவறானது என்று மற்றவர்கள் நினைப்பதற்காக நாம் கவலைப்படுவதில்லை.

**கேள்வி :** பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அதிகாரிகளை ராவணனின் கரங்கள் என்று 1920-ஆம் ஆண்டிலிருந்து நீங்கள் விவரித்திருக்கிறீர்கள். இதே கரங்களைக் காங்கிரஸ் அரசாங்கங்கள் உபயோகிக்கின்றன. சந்தேகத்தின் பேரிலோ அல்லது புகார் கூறப்படும் ஒரு குற்றத்திற்காகவோ கைது செய்யப்படுகிறவரை, குற்றத்தை அவர் ஒப்புக்கொள்ளும்படி செய்வதற்கோ அல்லது அவரைப் பயமுறுத்துவதற்கோ அடிப்பது குற்றமெனப் பிரிட்டிஷ் அரசாங்கம் செய்த சட்டங்கள் கூறுகின்றன. 1942-ஆம் ஆண்டு புரட்சியின்போது கைதியான

என்னைப் போன்ற பலர் அடிக்கப்பட்டனர். இவ்விதம் போலீஸார் செய்த அக்கிரமங்களைக் குறித்துக் காங்கிரஸ் அரசாங்கங்கள் விசாரணை நடத்தக்கூடாதா ?

**பதில் :** பிரிட்டிஷ் அரசாங்கத்தை நான் பலமாகக் கண்டித்திருக்கிறேன். இன்றும் அப்படியே கண்டிக்கிறேன். பிரிட்டிஷ் அரசாங்கத்தின்கீழ் இருந்த போலீஸ் அதிகாரிகள் எல்லோருமே, காங்கிரஸ் அரசாங்கங்களின்கீழ் வந்த பிறகுகூட பேய்க்கணங்களாக இருந்துவரவேண்டும் என்பது இல்லை. 1942-ஆம் ஆண்டிலோ, அதற்கு முன்னுலோ நடந்த போலீஸ் அக்கிரமங்களைக் குறித்து விசாரிக்கக் காங்கிரஸ் அரசாங்கங்களுக்கு உள்ள உரிமையை யாரும் ஆட்சேபிக்கவில்லை. ஆனால், அந்த உரிமைகள் எப்பொழுதும் உபயோகிக்கப்படுவதில்லை. சில உரிமைகளை உபயோகித்துக்கொள்ளாமல் இருப்பதே புத்திசாலித்தனம் என்பதற்கான சமயங்களும் உண்டு என்பதை நாம் எல்லோரும் அறிவோம். நீங்கள் குறிப்பிடுவதைப் போன்ற அக்கிரமங்களைக் குறித்து விசாரணை நடத்துவதில்லை என்ற கொள்கையைக் காங்கிரஸ் பொதுவாக அனுசரித்து வருகிறது. எப்பொழுதுமே இத்தகைய குற்றங்களை நிரூபிப்பது கஷ்டம் என்பதை நீங்கள் அறியவேண்டும். குற்றம் சந்தேகத்திற்கு இடமில்லாததாக இருக்கும் விஷயங்களில் விசாரிக்கும் உரிமை உபயோகிக்கப்படுகிறது என்று நம்புகிறேன். ஆனால், காங்கிரஸ் மந்திரி சபைகள் செய்வது சரியா, தப்பா என்று நாம் ஆராயப் புக வேண்டாம் என்பதே நான் கூறும் புத்திமதி. அதிகாரத்தை ஏற்றுக்கொள்ளுவதென முடிவு செய்வதில் காங்கிரஸ் புத்திசாலித்தனமாகவே நடந்திருக்கிறது என்ற நம்பிக்கையே போதுமானது.

['ஹரிஜனபந்து'விலிருந்து மொழிபெயர்த்தது.]

பஞ்சகனி, 25—7—1946. —'ஹரிஜன்' - 4—8—1946.

# 32

# சரியா, தவரு ?

ஸ்ரீ சங்கரராவ் தேவ் வருமாறு எழுதுகிருர்:

"தம்மைச் சத்தியாக்கிரகிகள் என்று சொல்லிக்கொள்ளுகிறவர்கள், அரசாங்கங்களின் மந்திரிகளானதுமே ராணுவத்தையும் போலீஸையும் ஏன் உபயோகித்துக்கொள்ள முற்படுகின்றனர் என்பதைப் பலர் புரிந்துகொள்ளுவதில்லை. இது தருமத்திற்கும் அகிம்சைக் கொள்கைக்கும் விரோதமானது என்று மக்கள் கருதுகின்றனர். இப்படிப் பொதுஜனம் கருதுவதற்கு நியாயமும் இருப்பதாகத் தோன்றுகிறது. காங்கிரஸ் மந்திரிகளின் கருத்துக்கும் அவர்கள் நடவடிக்கைக்கும் இடையிலுள்ள பொருத்தமின்மையையும், இதைக் காங்கிரஸ்காரர்களும் காங்கிரஸல்லாதாருமான எதிராளிகள் தங்

களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ளுவதையும் பற்றிக் குறை கூறப் படுவதை நம் ஊழியர்களால் சமாளிக்க முடியாமலிருக்கிறது.

"பொதுவாகச் சொன்னால், பலவீனர்களின் அகிம்சையே காங்கிரஸின் அகிம்சை. நாட்டில் இப்பொழுது ஏற்பட்டிருக்கும் நிலைமையில் அது அப்படித்தான் இருக்க முடியும். இந்த உண்மை உங்களுக்கு நன்றாகத் தெரிந்தது. பலமுள்ளவர்களின் அகிம்சையில் ஓர் அக்கினிப் பிழம்பு இருக்கிறது என்று நீங்கள் கூறிவருகிறீர்கள். அதே சமயத்தில், அகிம்சையை உபயோகிப்பதன் மூலம் அவர்களைப் பலமுள்ளவர்களாக்குவதற்காகப் பலமில்லாதவர்களுக்குத் தலைமை வகிக்க ஒப்புக்கொண்டீர்கள். அவர்களுக்குப் பலவீனம் இருந்தும் இன்று ஆட்சி அதிகாரம் அவர்கள் கைக்கு வந்திருக்கிறது. போலீஸ், ராணுவம் இவற்றின் உதவி இராமல் கலவரங்களை அடக்குவது என்பது இன்று அவர்களால் முடியாத காரியம். அப்படிச் செய்ய அவர்கள் முயற்சி செய்வார்களானால், அவர்கள் அதில் வெற்றி பெறாது போவதோடு மாத்திரமன்றிப் பொதுமக்களின் ஒத்துழைப்பும் அவர்களுக்குக் கிடைக்காது.

"பெரிய பதவியை ஏற்றுக்கொள்ள வேண்டி வந்தால் ஒரு சத்தியாக்கிரகி ஏற்றுக்கொள்ளலாமா, ஏற்றுக்கொண்டால் அகிம்சையை எப்படி அவர் வளர்க்க முடியும் என்று ஒரு சமயம் நான் உங்களைக் கேட்டேன். அகிம்சையைத் தமது தருமமாக்கிக் கொண்டவர் உத்தியோகங்களை ஏற்றுக்கொள்ளக் கூடாது, அங்கு அவர் சந்தோஷமாகவே இருக்க முடியாது என்று நான் கருதுகிறேன். ஆனால், அகிம்சையை ஒரு கொள்கையாக மாத்திரம் கொண்டவர்களுக்கு இதில் எந்த விதமான கஷ்டமும் இல்லை. காங்கிரஸ்காரர்களில் பலர் பதவிகளை ஏற்றுக்கொண்டிருக்கின்றனர்; அவர்களை நீங்கள் அனுமதித்தும் இருக்கிறீர்கள். அகிம்சையில் நம்பிக்கை இருப்பவர்கள், கலவரங்களின்போது தங்கள் சொந்த முறையிலாவது அகிம்சையை அனுசரித்து நடக்க வேண்டும் என்று நீங்கள் எதிர்பார்க்கலாமா என்ற கேள்வி எழுகிறது. மேலும், அகிம்சையின் மூலம் நாம் பலத்தை அடைந்திருக்கிறோம். ஆட்சி செய்வது என்பதை மிகக் குறைவாகக் கொண்டதான ஒரு ராஜ்யத்தை அமைக்க அந்த அகிம்சையை எப்படி உபயோகிப்பது? விரும்பும் லட்சியத்தை நோக்கியுள்ள நமது பாதையை நீங்கள் சுலபமாக்கவில்லையானால், சத்தியாக்கிரகம் முழுச் சக்தியையும் கொண்ட ஆயுதம் என்று கருதப்படாது போகும்."

என் கருத்தின்படி இதற்குப் பதில் சொல்லுவது எளிதானது. காங்கிரஸ் அமைப்பு விதிகளிலிருந்து 'சத்தியமும் அகிம்சையும்' என்ற சொற்களை நீக்கிவிட வேண்டும் என்று கொஞ்ச நாளாக நான் கூறி வருகிறேன். ஆனால், அவை உண்மையாகவே நீக்கப்பட்டிருந்தாலும், நீக்கப்படாமல் இருந்தாலும் – நீக்கப்பட்டுவிட்டதாகவே வைத்துக்கொள்ளுவோம் – அப்பொழுது எந்தச் செய்கையைக் குறித்தும் அது நியாயமானதா அல்லது தவறானதா என்பதில் நாம் சுயேச்சையான முடிவுக்கு வரமுடியும். உள் நாட்டு அமைதியை நிலைநாட்டுவதற்கு ராணுவத்தை, போலீஸையுங்கூட உபயோகிப்பதையே நம்பியிருக்க வேண்டியவர்களாக நாம் இருக்கும் வரையில், பிரிட்டனுக்கோ அல்லது வேறு ஒரு வெளி வல்லரசுக்கோ

நாம் தொடர்ந்து அடிமைகளாக இருந்து கொண்டிருப்போம் என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன். அப்பொழுது அரசாங்கம் காங்கிரஸ்காரர்களிடமிருந்தாலும் காங்கிரஸல்லாதவர்களிடம் இருந்தாலும் எல்லாம் ஒன்றுதான். காங்கிரஸ் மந்திரிகள் அகிம்சையை அனுசரிக்கப் பிரதிக்ஞை கொண்டிருக்கவில்லை என்றே வைத்துக்கொள்ளுவோம். ஹிந்துக்கள், முஸ்லிம்கள், மற்றவர்கள் ராணுவ, போலீஸ் பாதுகாப்புத் தங்களுக்கு வேண்டும் என விரும்புகிறுர்கள் என்றும் வைத்துக் கொள்ளுவோம். அவர்கள் கேட்டால் அதை அவர்கள் தொடர்ந்து பெற்று வருவார்கள். அகிம்சைப் பிரதிக்ஞை கொண்டிருக்கும் மந்திரிகள், ராணுவமும் போலீஸும் உபயோகிக்கப்படுவதை ஆட்சேபிப்பார்களாகையால், அவர்கள் ராஜீநாமாச் செய்துவிடவேண்டும். இதனுல் முக்கியமாக என்ன தெரிகிறதென்ருல், பரஸ்பரம் ஒரு சமரசத்திற்கு வந்துவிடும் புத்திசாலித்தனம் நம் மக்களுக்கு ஏற்படாமல் இருக்கும் வரையில், காலித்தனங்களும் தொடர்ந்து இருந்தே வரும்; அகிம்சையின் உண்மையான பலத்தை நம்முள் உண்டாக்கிக்கொள்ள நம்மால் முடியாது, என்பதேயாம்.

இந்த அகிம்சைப் பலத்தை எப்படி உண்டாக்கிக்கொள்ளுவது என்பதை இப்பொழுது பார்ப்போம். அகமதாபாதிலிருந்து வந்த ஒரு கடிதத்திற்கு ஆகஸ்டு 4-ஆம் தேதி 'ஹரிஜன்' பத்திரிகையில் நான் பதில் எழுதியிருக்கிறேன். வீரத்தோடு சாகும் பலத்தையும் உள்ளத்தில் அன்பையும் நாம் வளர்த்துக் கொள்ளாதிருக்கும் வரையில், பலமுள்ளவர்களின் அகிம்சையை வளர்த்துக்கொள்ள முடியும் என்று நாம் நம்புவதற்கில்லை.

லட்சிய பூர்வமானதோர் சமூகத்தில் அரசாங்கம் என்பது ஏதாவது இருக்கவேண்டுமா, இருக்க வேண்டாமா என்ற பிரச்னை வேறு இருக்கிறது. இச்சமயம் இதைப்பற்றி நாம் கவலைப்பட வேண்டிய அவசியமில்லை. அத்தகையதோர் சமூகத்தை அமைப்பதற்கு நாம் தொடர்ந்து வேலை செய்து கொண்டு வருவோமாயின், அதனுல் மக்கள் பலனை அடையும் அளவுக்கு அது மெதுவாக உருவெடுக்கும். யூக்ளிடின் கோடு அகலம் என்பதே இல்லாத ஒன்று. அதை எழுத யாராலும் முடிந்ததில்லை; எப்பொழுதும் முடியப் போவதுமில்லை. என்ருலும், லட்சியமான அக்கோட்டை மனத்தில் வைத்து ஜியோமிதியில் நாம் முன்னேற்றம் அடைந்திருக்கிறோம். இதில் எது உண்மையாகிறதோ அதுவே மற்ற லட்சியங்களின் விஷயத்திலும் உண்மையாகும்.

உலகத்தில் எங்கும் அரசாங்கமே இல்லாத ஒரு ராஜ்யம் கிடையாது என்பதும் நினைவில் இருக்க வேண்டும். அப்படி என்றாவது ஒரு நாளைக்கு ஏற்படுவதாயின் அது இந்தியாவில் தான் இருக்கும். ஏனெனில், அதற்கான முயற்சியாவது செய்யப் படும் ஒரே நாடு நம்முடையதுதான். அவசியமான அளவுக்கு வீரத்தைக் காட்டுவதற்கு நம்மால் ஆகவில்லை. அதை அடை வதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. அதில் நம்பிக்கை இருப்ப வர்கள், அதைச் செய்து காட்ட வேண்டும். அப்படிச் செய்ய சிறைப் பயத்தை நாம் இப்பொழுது உதறித் தள்ளிவிட்டது போல் மரண பயத்தையும் அடியோடு உதறிவிட வேண்டும்.

['' ஹரிஜன் சேவக் ' கிலிருந்து மொழிபெயர்ப்பு.]

புது டில்லி, 6—9—1946 —' ஹரிஜன் ' - 15—9—1946

## 33

# சத்தியத்தையும் அகிம்சையையும் நீக்க வேண்டும்

தம் பெயரையும் எழுதி, சேவைக்கென்றே அர்ப்பணம் செய்துகொண்டு விட்டவர் தாம் என்றும் கூறிக்கொள்ளும் ஒருவர் வருமாறு எழுதுகிறார் :

'' உங்கள் ' ஹரிஜனபந்து ' பத்திரிகையை ஒழுங்காகப் படித்துக் கொண்டு வருகிறேன். சமீபத்தில் நீங்கள் ஸ்ரீ சங்கரராவ் தேவுக்கு விடுத்த பதிலில் வருமாறு கூறுகிறீர்கள்: ' காங்கிரஸ் அமைப்பு விதிகளிலிருந்து சத் தியம் அகிம்சை என்ற சொற்களை நீக்கிவிட வேண்டும் என்று கொஞ்ச காலமாகவே சொல்லி வருகிறேன்.'

''இப்பொழுது இருக்கும் நிலைமையில் இப்படிச் செய்துவிட்டால், மக்கள் காங்கிரஸில் தங்களுக்குள்ள நம்பிக்கையை இழந்துவிடுவார்கள். ஏனெனில், 'காங்கிரஸ் அதிகாரத்தில் இல்லாதிருக்கும்வரையில் சத்தியத்தையும் அகிம்சை யையும் அனுசரிப்பது நல்லது என்று அது கருதியது. ஆனால், இப்போது அதிகாரம் வந்துவிட்டதால் இந்தச் சொற்களையே அதன் விதிகளிலிருந்து நீக்கி விடப்பார்க்கிறது ' என்று எண்ணுவார்கள். முஸ்லிம் லீகின் நேரடி நடவடிக்கை மிரட்டலுக்கு எதிரிடையாக அந்த நீக்கத்தைக் காங்கிரஸ் மேற்கொண்டிருக் கிறது என்றுகூட மக்கள் ஊகித்துக்கொள்ளுவார்கள்.

'' அமைப்பு விதிகளிலிருந்து இந்தச் சொற்களை நீக்கிவிட்டால், இந்த முறைகளினாலேயே கிடைத்த அதன் உயர்ந்த பீடத்திலிருந்து காங்கிரஸ் விழுந்துவிடும். அது கௌரவத்தையும் இழந்துவிடும். சத்தியமும் அகிம்சையும் இல்லாமல் நீங்களே ஓர் அடிகூட முன்னுக்குப் போக முடியாது என்று நீங்கள் அடிக்கடி சொல்லி வந்திருக்கிறீர்கள். இவற்றை அனுசரித்ததனாலல்லவா காங்கிரஸ் நம்பகமானது, தயாளமுள்ளது, சேவை உணர்ச்சியும் வீரமும் நிறைந்தது என்று பொது மக்கள் நினைக்குமாறு செய்திருக்கிறது? வேர் நாசப்

படுத்தப்பட்டால், மரமும் அழிந்தே போகும். வேர்கள் மேலும் மேலும் ஆழமாக இறங்கி அவை அழிந்து போகாமல் இருக்க நீங்கள் வகை செய்ய வேண்டும்.

"ஆகையால், ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் அந்தக் கொள்கையை அனு சரித்து நடந்தாக வேண்டும். யாராவது மறுத்தால் காங்கிரஸைவிட்டுப் போய் விட வேண்டும் என்று நீங்கள் வற்புறுத்த வேண்டும்."

அகிம்சைக்காகப் பாடுபடுபவனுகிய நான், ஒரு நல்ல காரியத்தைச் செய்யும்படிகூட ஒருவரை எவ்விதம் வற்புறுத்த முடியும்? தவறுகள் செய்வதைத் தவிர்த்துக்கொள்ளுவதற்காக அடிமையாக இருந்து வருவதைவிடச் சுதந்திர மனிதனுகத் தவறுகளைச் செய்வதே மேல் என்று ஒரு பிரபலமான ஆங்கிலேயர் கூறியிருக்கவில்லையா? இதிலுள்ள உண்மையில் எனக்கு நம்பிக்கை உண்டு. காரணம் தெளிவானதே. கட்டாயத்திற்கு உட்பட்ட ஒருவரின் மனம் சீர்திருந்தாது; உண்மையில் இன்னும் மோசமானதாகவே ஆகும். கட்டாயப்படுத்துவது நீங்கியதும் உள்ளிருக்கும் குறைபாடுகள் எல்லாம் மேலும் அதிக சக்தியுடன் வெளிக் கிளம்பிவிடும்.

மேலும், யாரும் சர்வாதிகாரியாக இருக்கக்கூடாது. தன் உறுப்பினர்கள் சத்தியத்தையும் அகிம்சையையும் பின்பற்றித் தான் ஆகவேண்டும் என்று காங்கிரஸும் அவர்களைக் கட்டாயப்படுத்த முடியாது. இவற்றை மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்ள வேண்டும்.

அமைப்பு விதிகளிலிருந்து அச்சொற்களை நீக்கிவிட வேண்டும் என்று ஓர் ஆண்டிற்கு மேலாகவே நான் சொல்லி வருகிறேன். இம்சை அல்லது அகிம்சை என்பதைப்பற்றியே கவலைப்படாத முஸ்லிம் லீகின் நேரடி நடவடிக்கை யோசனை பிறப்பதற்கு வெகு காலத்திற்கு முன்பிருந்து நான் கூறி வருகிறேன். ஆகவே, என் சிபாரிசுக்கும் லீகின் தீர்மானத்திற்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லை. ஆனல், என் சொற்களுக்குத் தகாத நோக்கங்களையெல்லாம் அநேகமாகக் கற்பித்துக் கொள்ளுகிறவர்கள் விஷயத்தில் நான் எதுவும் செய்வதற்கில்லை.

என்னுடைய சிபாரிசு சரி என்பதற்குச் சரியான ஆதாரங்கள் என்னிடம் இருக்கின்றன. சத்தியம், அகிம்சை என்ற போர்வையில் அசத்தியத்தையும் இம்சையையும் காங்கிரஸ் பாதுகாக்காதிருக்கலாம். இது ஒன்றே போதுமான காரணம் அல்லவா? காங்கிரஸ்காரர்கள் உள்ளொன்று வைத்துப் புறமொன்று செய்கிறவர்களல்ல என்ருல், இவ்விரு தூண்களிலும் காங்கிரஸுக்குப் பிடித்தம் இருக்க வேண்டும் என்பதைவிடச் சிறந்தது எதுவுமில்லை.

காங்கிரஸ், எந்த ஏணியின் மூலம் இவ்வளவு உன்னத நிலைக்கு ஏறியதோ அந்த ஏணியை அதிகாரத்திற்குப் போனதுமே உதைத்துத் தள்ளிவிட வேண்டும் என்று நான் ஒருபோதும் விரும்ப மாட்டேன். காங்கிரஸ்காரர்கள் அதிகாரத்தில் இருக்கும் போது சத்தியத்தையும் அகிம்சையையும் துறந்துவிடுவார்களானால், காங்கிரஸைச் சுற்றிலும் இருந்துவரும் பிரகாசம் மங்கி விடும் என்றே நினைக்கிறேன்.

ஒரு தவறுபற்றி நாம் எல்லோரும் உஷாராகவே இருக்க வேண்டும். அமைப்பில் இல்லாத ஒன்றை அனுசரிக்கக்கூடாது என்ற விதி எதுவுமில்லை. இச்சொற்கள் நீக்கப்பட்டு விட்டால் எல்லோரும் அல்லது காங்கிரஸ்காரர்களில் பெரும்பான்மையினராவது, சாவின் அளவுக்குக்கூட, அகிம்சையையும் சத்தியத்தையும் மனமார அனுசரிப்பார்கள் என்பதே எனது நம்பிக்கை.

கடிதம் எழுதியவர் ஒரு விஷயத்தைக் குறிப்பிட மறந்து விட்டார். அதை நான் தெளிவுபடுத்த விரும்புகிறேன். காங்கிரஸ் விதிகளில் இருக்கும் சொற்கள் 'அமைதியான, நியாயமான' என்பவை. சத்தியத்தோடும் அகிம்சையோடும் என்பது அச்சொற்களுக்குப் பொருளாகவில்லையெனின் அப்பொருள்தான் உண்டு என்று விளக்க எனக்கு உரிமை கிடையாது. காங்கிரஸ் அவற்றை ஒரு கொள்கையாக மேற்கொண்டிருக்கிறதேயன்றி தருமமாகக் கொள்ளவில்லை. அவற்றை வைத்திருக்கவோ அல்லது நீக்கிவிடவோ எனக்கு உரிமை இருக்கிறது என்பதற்கே இடமில்லை. ஆனல், அது இருந்துகொண்டிருக்கும் வரை, கொள்கை தருமமாகவே ஆவதால் அதை அனுசரிக்கவேண்டியது கடமையாகிறது. 'சமாதானத்தோடு' என்பதைப் 'இம்சையோடு' என்றும், 'நியாயமான' என்பதைப் 'பொய்மையோடும்' என்றும் வியாக்கியானம் செய்துகொள்ளலாம் என்ருல், என் சிபாரிசுக்கு அர்த்தமே கிடையாது.

[குஜராத்தி மூலத்திலிருந்து மொழிபெயர்ப்பு.]
புது டில்லி, 21—9—1946 —'ஹரிஜன்' - 29—9—1946

## 34

# அதிகப்படியான பாராட்டு

ஒரு ராணுவ அதிகாரி ஒரு நண்பருக்கு வருமாறு எழுதுகிருர்:

"எல்லா ஜனநாயக நாடுகளிலும் ராஜீயவாதிகள் ராணுவத்தைக் குறித்து ஒன்றுமே தெரியாதவர்களாகவும், சிரத்தையில்லாதவர்களாகவும் இருப்பது எவ்வளவு பரிதாபகரமானது! ராணுவம் அவர்களுக்கு எவ்வளவோ

கற்றுத் தரக்கூடும். வேறு எந்த அரசாங்க உத்தியோகத்தையும்விட ராணுவம் மாத்திரம், அதில் சேவை செய்கிறவர்கள் அதிக விசுவாசமாகவும் அன்போடும் இருக்கும்படி செய்வது ஏன் என்பது ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய விஷயமாகிறதல்லவா ? மேலும், மற்ற உத்தியோகங்களைவிட அதிக ஆபத்தான, அசௌகரியமான, சோதனையான சமயத்தில்கூட விசுவாசத்துடனும் அன்போடும் இருக்கும்படி ராணுவம் வைத்திருக்கிறது. உங்களிடம் சிறந்தோர் ராணுவம் இருக்கிறது. அதில் சேவை செய்ய உங்களில் சிறந்தவர்களாக இருப்போர் ஏராளமாக முன்வரும்போது அது இன்னும் சிறந்ததாக இருக்கும். சரியான அதிகாரிகளை நியமியுங்கள். அதைப்பற்றிய பயமே உங்களுக்கு இருக்க வேண்டியதில்லை. அது இணையற்றதாக இருக்கும். ஆனால், தவறான அதிகாரிகள் நியமிக்கப்பட்டால் அல்லது ராஜீய விஷயங்களுடன் அதைக் கலந்துவிட்டால் நீங்கள் அதிகக் கஷ்டப்படவேண்டிவரும். இந்தியா கஷ்டமான பல ஆண்டுகளை இனிச் சமாளித்துக்கொள்ள வேண்டியிருக்கும். ஆனால் ஒன்றை நிச்சயமாகக் கூறுவேன்: அந்தக் கஷ்டங்களையெல்லாம் நீங்கள் வெகு சீக்கிரத்தில், குறைந்த அளவே ரத்தம் சிந்துவதன் மூலம், சமாளிக்கச் செய்ய வல்லது உங்களிடம் இப்பொழுது இருக்கும் ராணுவமே. ஆனால், அதற்கு நீங்கள் சரியான அதிகாரிகளை நியமித்து, ராஜீயத்தையும் மத வித்தியாசங்களையும் அதில் கலக்காமல் இருக்கும்படி பார்க்கவேண்டும்."

எல்லா ஜனநாயக நாடுகளின் ராஜீயவாதிகளும் ராணுவத்தில் சிரத்தை இல்லாமல் இருக்கிறார்கள் என்பது உண்மையாக இருந்தால் அது பரிதாபப்பட வேண்டிய விஷயமன்று. அதிலுள்ள பரிதாபமெல்லாம் அதனிடம் தவறாக அவர்கள் சிரத்தை கொண்டிருப்பதே. ராணுவத்தினரை ஜனநாயகங்கள் தங்கள் காப்பாளர்களாகக் கருதுகின்றன. அவை செல்வத்தைக் கொண்டு வருகின்றன ; மற்ற நாடுகளை அடிமைப்படுத்துகின்றன ; உள்நாட்டுக் குழப்பங்கள் ஏற்படும்போது ஆட்சி அதிகாரத்தை அவை நிலைநிறுத்துகின்றன. ஆகையால், விரும்ப வேண்டியதெல்லாம், ஜனநாயகம் உண்மையானதாக இருக்க வேண்டுமானால், எதற்குமே ராணுவத்தை எதிர்பார்ப்பதை விட்டுவிட வேண்டும் என்பதே.

ராணுவம் இந்தியாவுக்கு என்ன செய்திருக்கிறது ? அந்த ராணுவத்திற்காகத்தான் இக்கடிதம் எழுதியிருப்பவர் வாதாடுகிறார். எந்த வகையிலும் அது இந்தியாவின் நன்மைக்காகச் சேவை செய்ததில்லை என்றே அஞ்சுகிறேன். தாக்காத, நிராயுதபாணிகளான கோடிக்கணக்கான மக்களை அது அடிமைப்படுத்தி வைத்திருந்தது. அவர்களை வறியவர்களாக்கியது. இந்த ராணுவத்தின் பிரிட்டிஷ் பகுதி எவ்வளவு சீக்கிரத்தில் அனுப்பப்பட்டு வேறு நல்ல வழியில் உபயோகிக்கப்படுகிறதோ அவ்வளவுக்கு இந்தியா, பிரிட்டன் ஆகிய இரண்டுக்கும், உலகுக்கும் நல்லது. அதனுடைய இந்தியப் பகுதி, அழிப்புக்

காரியத்திலிருந்து எவ்வளவு சீக்கிரத்தில் நீக்கப்பட்டு ஆக்கக் காரியங்களுக்குப் பயன்படுத்தப்படுகிறதோ அவ்வளவும் இந்தியாவின் ஜனநாயகத்திற்கு நல்லது. தான் நிலைப்பதற்கே ராணுவ உதவியை நம்பியிருப்பதான ஒரு ஜனநாயகம் கேவலமானதாகும். சுதந்திரமாக புத்தி வளர்வதில் ராணுவ பலம் குறுக்கிடுகிறது. அது மனிதனின் ஆத்மாவை நசுக்கி விடுகிறது. இந்த 'மிகத் திறமையான' ராணுவம், பல வருட அன்னிய ஆதிக்கத்தை உண்டாக்கியது. அதன் ராணுவ சேவா முயற்சி இருந்து வந்தாலும், இந்தியா நீண்ட அல்லது குறுகிய கால உள்நாட்டுப் போரில் சிக்கி மீள வேண்டியிருக்கும். ராணுவ பலத்தில் உள்ள மோகத்தை அது போக்கிவிடும் என்றே நான் நம்ப வேண்டும். எந்த ஒரு சமூக ஒழுங்குக்கும் அவசியமானதான கட்டுத்திட்டத்தைத் தனியாகப் பிரித்து வைத்துவிட்ட பிறகு அவை மிருகத்தனமாக்கும் முறைகளாகும். சுதந்திர இந்தியா, இப்பொழுது இருக்கும் ராணுவச் செலவையே செய்து வர வேண்டியிருந்தால், பஞ்சத்தில் வாடும் கோடிக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கவே முடியாது.

முஸ்ஸோரி, 30--5--1946 --'ஹரிஜன்' - 9--6--1946

# 35

# ராமராஜ்யமும் அகிம்சையும்

கடைசியாக ஆகஸ்டு 15-ஆம் தேதி முழு டொமினியன் அந்தஸ்தாக உருவாகவிருக்கும் இப்பொழுதுள்ள ஆட்சியிலிருந்து காந்திஜி கனவு கண்டு வரும் சுயராஜ்யம் பிறக்குமா? அகிம்சையின் சென்ற முப்பது ஆண்டு அனுபவம் நாட்டில் எங்கும் பரவியிருக்கும் இம்சையில் முடிந்திருப்பதைக் குறித்து அவர் வெட்கப்படவில்லையா? இக்கேள்வியை அடிக்கடி காந்திஜியிடம் பலர் கேட்டு வருகிறார்கள். இதற்கு அவர் கூறிய பதிலாவது:

"வரப் போகும் டொமினியன் அந்தஸ்திலிருந்து கடவுள் ஆட்சி ஏற்படும் என்பதற்கான அறிகுறி எதுவும் இல்லை என்பதை ஒப்புக்கொள்ள வேண்டியிருப்பதற்காக வருந்துகிறேன். பிரிட்டிஷ் ஆட்சி நீங்கும் கடைசித் தேதியை எதிர்பார்த்து டொமினியன் அந்தஸ்து வழங்கப்படுகிறது என்று நம்புகிறேன். இப்படிச் செய்யாமல் 'இந்தியாவை விட்டு

வெளியேறுவது' என்பதை அடுத்த ஜூன் 3-ஆம் தேதிக்கு முன்னல் கொண்டு போகும் திட்டத்தை வகுக்க முடியாதவர் களாக இருக்கிருர்கள். அது எப்படி இருந்தாலும், இந்தப் புதிய ராஜ்யங்கள் இரண்டும் தங்கள் அரசியலை அமைத்துக்கொண்டதும் பிரிட்டிஷ் டொமினியன்களின் குடும்பங்களிலிருந்து தனியாகிப் பூரண சுதந்திரத்தைப் பிரகடனம் செய்துகொள்ளலாம். அவை உள்நாட்டு ராணுவ ஆதிக்கத்திற்குப் புறம்பாக உலக சுதந்திர நாடுகளின் குடும்பத்திலிருக்கவும் முயற்சி செய்யலாம். எதிலும் திட்டமானதாக இல்லாத ஒரு கொள்கையை இந்தியா அனு சரிக்கும் என்று நான் எண்ணவில்லை. இந்தியா அவ்விதம் இருந்தால், பொய்யாகத் தன்னை ஜனநாயகம் என்று சொல்லிக் கொள்ளும் ஜப்பான் அல்லது ஜெர்மனியைப் போல இதுவும் உலக சமாதானத்திற்கு ஆபத்தாகவே ஆகும். ஜனநாயகம் என்பதும் ராணுவ உணர்ச்சி என்பதும் ஒன்றுக்கொன்று எதிரிடையானவை என்றே கொள்ள வேண்டும். ஒரு ஜனநாயகவாதி, தம்முடைய ராஜ்யத்தின் ஒழுக்க பலத்தில் நம்பிக்கை வைக்கிருரேயன்றி உலகத்திற்கு எதிர்ப்பாகத் தம் நாடு வீசக்கூடிய ஆயுத பலத்தில் நம்பிக்கை வைப்பதில்லை. சுதந்திரமான சுயேச்சை நாடுகளின் உலகக் கூட்டை இந்தியாவின் முயற்சியினுல் அமைத்துவிட முடிந்தால், கடவுள் ஆட்சி அதாவது ராம ராஜ்யம் தோன்றும் என்ற நம்பிக்கை ஏற்பட்டே தீரும். எனினும், அத்தகைய மகிழ்ச்சிக்குரிய சம்பவம் நடப்பதற்கு முன்னல், இன்று ஒன்றுக்கொன்று விரோதிகளாக இருந்துவரும் இரு புதிய ராஜ்யங்களும் நட்புடனும் கூட்டாளிகளாகவும் இருக்க வேண்டும். ஆனல், அறிகுறியோ இதற்கு நேர்மாருன தாக இருக்கிறது என்பதை ஒப்புக்கொள்ள வேண்டியிருப் பதற்காக வருந்துகிறேன்.

இரண்டாவது வகை முதலில் வந்ததற்குத் தொடர்புடையது. சென்ற முப்பது ஆண்டுகளாக அனுசரித்த அகிம்சை என்று சொல்லப்படுவதன் பலனைக் குறித்து நான் வெட்கப்படுவதற்கு எல்லாக் காரணங்களும் உண்டு. நமது அகிம்சை பலவீனரின் அகிம்சை என்று இதற்கு முன்பே நான் ஒப்புக்கொண்டிருக் கிறேன். ஆனல், உள்ளத்தில் பலவீனம் உள்ளவர்கள் தாம் அகிம் சையைப் பின்பற்றுபவர்களெனச் சொல்லிக்கொள்ளவே முடி யாது. சாத்துவிக எதிர்ப்பு, தீவிர ஆயுத எதிர்ப்புக்கான தயாரிப்பே ஆகும். அது பலமுள்ளவர்களின் அகிம்சையாக இருந்திருப்பின், ஒரு தலைமுறையில் அதை அனுசரித்து வந்தி ருப்பதால், அண்மையில் உயிரையும் சொத்துக்களையும் அழித்த

வெறியாட்டம் ஏற்படாதபடி செய்திருக்கும். மேலும், துணியையும் உணவையும் பங்கீடு செய்து கொடுக்கும் அவசியமும் இருந்திருக்காது. சத்தியமும் அகிம்சையும் செயலாகும் விதத்தை மக்கள் அறிந்திருந்தால், பற்ருக்குறையைத் தாங்களே ஒழுங்கு செய்துகொண்டிருப்பார்கள். பற்ருக்குறையை ஆங்காங்கு இருப்பவர்களே சரியாக்கிக்கொண்டுவிட முடியாது என்ற நம்பிக்கையை நான் அங்கீகரிப்பதற்கில்லை. பயங்கர யுத்தத்திஞல் ஏற்பட்ட புத்தி கெட்ட நாசத்திஞல் உலகம் பற்ருக்குறையால் கஷ்டப்பட்டு வரும்போது, இந்தியாவைப் போன்ற ஒரு பெரிய நாடு உலக உணவு, துணி உற்பத்தியில் தானும் பங்குவாங்க மறுத்துவிடவேண்டும். இந்தியாவுக்கு இப்பொழுது வேண்டியதெல்லாம், அதன் கோடிக்கணக்கான மக்கள் அதிகமாகவும், நிதானமாகவும் கஷ்டப்பட்டு வேலை செய்வதும், அறிவோடும் புத்திசாலித்தனமாகவும் அவர்களுக்கு வழிகாட்டுவதுமேயாகும். அறிவுக்கும் ஆற்றலுக்கும் நாட்டில் பஞ்சமே இல்லை. சிவில் சர்விஸ் அதிகாரிகளைக் காலஞ்சென்ற ஸ்ரீ மாண்டேகு ஒரு மர யந்திரம் என வருணித்தார். ஆகையால், அகிம்சையையும் சத்தியத்தையும் உண்மையாகவே உணர்ந்திருப்பதாயின், சிவில் சர்விஸ் உத்தியோகஸ்தர்களை எதிர்பார்த்துக்கொண்டிருக்கக்கூடாது. இந்தக் கனவான்கள் ஒரு வகையான நிபுணர்கள். இத்தேச மக்களின் நன்மைக்கு என்று இவர்கள் நியமிக்கப்பட்டவர்களே அல்ல. அன்னிய ஆட்சி எந்த விதத்திலாவது நடந்துகொண்டிருக்கும்படி பார்ப்பதே இவர்கள் வேலை. பட்டினி கிடப்பவர்களையும் அம்மணமாக இருப்போரையும் கோடிக்கணக்கில் கொண்ட ஒரு நாட்டினரின் சோர்வைப் போக்கி உணர்ச்சியும் புத்துயிரும் அளிக்கக்கூடிய ஒரு வேலையை, ஒரு சிலரேயான இவர்களால் வெற்றிகரமாகச் செய்துவிடவும் முடியாது. வர்த்தகர்கள், உற்பத்தியாளர்கள், விஞ்ஞானிகள் ஆகியோர், அத்தியாவசியமான இத்தேவையில் நாட்டுக்கு விரும்பிச் சேவை புரியும்படி செய்ய வேண்டும். அரசாங்க ஊழியர்கள் இக்கஷ்டமான நிலையை அகற்றத் தம் பங்கைச் செய்ய முன் வருவார்களா? அரசாங்க உறுப்பினர்கள் சிவப்பு நாடாச் சுவட்டிலிருந்து விடுபட்டுப் பொது மக்கள் தங்களுக்குத் தாங்களே உதவி செய்துகொள்ளுமாறு வேண்டிக்கொள்ளுவார்களா? நம்முள் அகிம்சையோ அல்லது சத்தியமோ இல்லையென்ருல், ஏன், எப்படி இவையெல்லாம் நடக்க முடியும்?

புது டில்லி, 5—7—1947 —'ஹரிஜன்' - 13—7—1947

# 36

# காஷ்மீர்மீது படையெடுப்பு

*[ஸ்ரீ வின்ஸ்டன் சர்ச்சில், ஹிட்லர், முஸோலினி, ஜப்பானியர் ஆகியோர் தங்களுடையவை எல்லாவற்றையுமே இழந்துவிடுவதாக இருந்த சமயத்தில் தம்முடைய அகிம்சா முறையை அவர்கள் அனுசரிக்க வேண்டும் என்று காந்திஜி புத்திமதி கூறத் துணிந்ததைக் குறித்துக் கடிதம் எழுதிய ஒருவர் அவரை ஏளனம் செய்தார். தாம் எந்தக் கஷ்டத்திற்கும் உள்ளாகாதிருந்த சமயத்தில் இந்தப் புத்திமதியை அவர்களுக்குக் கூறிய காந்திஜி, காங்கிரஸ் அரசாங்கத்திலிருக்கும் தம் சொந்தநண்பர்கள் அந்த அகிம்சையைக் கைவிட்டுவிட்டுக் காஷ்மீருக்கு ராணுவ உதவியையும் அனுப்பியிருக்கும்போது மாத்திரம் ஏன் தமது அகிம்சையைக் கைவிட்டுவிட்டார் என்று அக்கடிதம் எழுதியிருப்பவர் கேட்டார். படையெடுத்தவர்களைக் காஷ்மீரிகள் அகிம்சையோடு எப்படி எதிர்ப்பது என்பதைத் திட்டமாகக் கூறும்படியும் அவர் காந்திஜியைக் கேட்டார். இக்கடிதத்திற்குக் காந்திஜி பிரார்த்தனைக் கூட்டத்தில் கூறிய பதிலே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]*

கடிதம் எழுதியிருப்பவர் காட்டிக்கொண்டிருக்கும் அறியாமைக்காக வருந்துகிறேன். யூனியன் மந்திரி சபையிலிருக்கும் நண்பர்களிடம் இவ்விஷயத்தில் எனக்கு எந்த விதமான செல்வாக்கும் இல்லை என்பதை நான் அடிக்கடி கூறி வந்திருக்கிறேன்; இது இங்கே கூடியிருப்போருக்கு நினைவிருக்கும். அகிம்சையில் நான் கொண்டிருக்கும் கருத்து எப்பொழுதும் போல எனக்கு உறுதியாகவே இருக்கிறது. மந்திரி சபையில் இருப்போர் எனக்குச் சிறந்த நண்பர்களே. என்றாலும் என் கருத்தை நான் அவர்கள்மீது திணிக்க முடியாது. அவர்களுக்குள்ள நம்பிக்கைக்கு எதிராக அவர்கள் நடந்துகொள்ள வேண்டும் என நாம் எதிர்பார்க்க முடியாது. என் நண்பர்களிடம் எனக்கு முன்னால் இருந்து வந்த பிடிப்பை நான் இழந்துவிட்டேன் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். இதைக் கொண்டு ஒவ்வொருவரும் திருப்தி அடைந்து இருக்கவேண்டியதே. மதிப்புக்குரிய ஒருவர் இம்சையில் நம்பிக்கையுள்ளவராக இருப்பினும் அவருக்கு உரிய மதிப்பை அளிக்க மறுப்பதை என்னுடைய அகிம்சை தவிர்க்கிறது. இவ்விதம் சுபாஷ் போஸ், பலாத்காரத்தில் வைத்திருந்த நம்பிக்கையையும் பின்னால் அவர் மேற்கொண்ட காரியங்களையும் நான் ஒப்புக்கொள்ளா

விட்டாலும், அவருடைய தேசாபிமானத்தையும் ஆற்றலையும் வீரத்தையும் நான் விடாது பாராட்டாமல் இருந்ததேயில்லை. அதே போல, காஷ்மீரிகளுக்கு உதவ யூனியன் அரசாங்கம் ராணுவத்தை உபயோகித்திருப்பதை நான் அங்கீகரிக்கவில்லை; ஷேக் அப்துல்லா ஆயுதத்தைக் கைக்கொண்டதை நான் ஏற்கவில்லை. எனினும், முக்கியமாக, மீட்டுவரும் அந்த இரு துருப்பினரும், தங்களைப் பாதுகாத்துக்கொள்ளப் போராடி வரும் காஷ்மீரிகளும், கடைசி மனிதன் வரை வீரத்தோடு ஒரு வேளை உயிர் விடுவதாக இருந்தாலும் அவர்களுடைய ஆற்றல் மிக்க, போற்றற்குரிய செய்கைகளை நாம் பாராட்டாமல் இருக்க முடியாது. அவர்கள் அவ்விதம் செய்ய முடிந்தால், ஒரு வேளை இந்தியாவின் தன்மையையே அவர்கள் மாற்றிவிடக்கூடும் என்பதை நான் அறிவேன். ஆனால், நோக்கத்திலும் செயலிலும் பாதுகாப்புப் போர் முற்றிலும் அகிம்சையோடு கூடியதாக இருக்குமானால், 'ஒரு வேளை' என்ற சொல்லை நான் உபயோகித்திருக்க மாட்டேன். ஏனெனில், பாகிஸ்தான் மந்திரி சபையின் கருத்தை மாற்ற முடியாது போனாலும் யூனியன் மந்திரி சபையின் கருத்தை, அப்பாதுகாப்புக்கெனப் போராடுவோரின் கருத்துக்கு மாற்றும் அளவுக்கு இந்தியாவில் மாறுதல் ஏற்படும் என்ற உறுதியுடன் நான் இருப்பேன்.

நான் யோசனை கூறும் அகிம்சை முறையில் பாதுகாத்துக்கொள்ளுவோருக்கு எந்தவித ராணுவ உதவியும் இராது. யூனியனிலிருந்து எத்தகைய தயக்கமுமின்றி அகிம்சை உதவியை அனுப்ப முடியும். ஆனால், பாதுகாத்துக்கொள்ளுவோர், தங்களுக்கு அத்தகைய உதவி கிடைத்தாலும் கிடைக்காது போயினும், ஆக்கிரமித்திருப்போரை அல்லது மிக அதிக அளவில் வரும் கட்டுப்பாடான ராணுவத்தின் பலத்தை எதிர்த்தே தீருவார்கள். தாக்குகிறவர்கள்மீது உள்ளத்தில் எந்தவிதமான கெட்ட எண்ணமும் இல்லாமல், தங்கள் முஷ்டியுட்பட எந்தவிதமான ஆயுதத்தையும் உபயோகிக்காமல் எதிர்த்துத் தங்களைப் பாதுகாத்துக் கொள்ளுவோர் தங்கள் கடமையை நிறைவேற்றும் உறுதியில் தவறாது நின்று சாகிறார்கள் என்றால், சரித்திரம் இதுவரை கண்டறியாத வீரத்தை அது காட்டியதாகும். பிறகு காஷ்மீர் புண்ணிய பூமியாவதோடு அதன் மணம் இந்தியா முழுவதிலும் மாத்திரமேயன்றி உலகம் முழுதும் கமழும். என்றாலும், என்னுடைய சக்தியின்மையை நான் ஒப்புக்கொண்டாக வேண்டும். கீதை

யின் இரண்டாவது அத்தியாயத்தின் கடைசியில் விவரிக்கப் பட்டுள்ள தன்னடக்கம் அளிக்கும் பலம் என்னுடைய சொற் களுக்கு இல்லை. இதற்கு வேண்டிய தபஸ்சர்யம் (தவ ஒழுக்கம்) எனக்கு இல்லை. கடவுள் விரும்பினால், அத்தகைய தகுதியை எனக்கு அளிக்குமாறு நான் அவரைப் பிரார்த்திக்க முடியும். என்னுடன் கடவுளைப் பிரார்த்திக்குமாறு உங்களையும் அழைக் கிறேன்.

பிர்லா மாளிகை, புது டில்லி.
5—11—1947 —'ஹரிஜன்' - 16—11—1947

# 37

# அணுக்குண்டு

ஊழிக்காலத்து மாறுதல்கள் உலகில் ஏற்பட்டு வருகின் றன. சத்தியத்திலும் அகிம்சையிலும் நான் கொண்ட நம்பிக் கையையே இன்னும் அனுசரித்து வருகிறேனா? அந்த நம்பிக்கையை அணுக்குண்டு வெடிக்கச் செய்துவிடவில்லையா? அது அப்படிச் செய்துவிடவில்லை என்பது மாத்திரமல்ல, அந்தச் சக்திகள் இரண்டுமே உலகில் மிக வல்லமை வாய்ந்த சக்திக ளாக இருக்கின்றன என்று மிகத் தெளிவாக எனக்கு என் நம் பிக்கை காட்டிவிட்டது. ஆத்மசக்திமுன் அணுக்குண்டு பயனற்ற தாகும். ஒன்றுக்கொன்று எதிரான இந்த இரு சக்திகளும் முற்றி லும் மாறுபட்ட வகையின. ஒன்று தருமத்தின்மீது நிற்பது; ஆத்மிகமானது. மற்றொன்று, பௌதிகமானது; உலகியலானது. முன்னால் கூறியது முற்றிலும் உயர்வானது. பின்னால் சொன்னது, அதன் இயல்பைக் கொண்டே முடிவுடையது. ஆத்மாவின் சக்தி என்றும் முன்னேறுவதும் முடிவு இல்லாததுமாகும். அதன் முழு விகாசம் உலகில் எதனாலுமே வெல்லுதற்கரிதாக நிற்கிறது. இதைச் சொல்லுவதில் நான் புதிதாக ஒன்றையும் சொல்லிவிடவில்லை என்பதை அறிவேன். இந்த உண்மைக்கு ஒரு சாட்சியாகவே இருக்கிறேன். இன்னும் என்னவெனில், உடலின் நிறம் எதுவாக இருந்தாலும் ஆண், பெண், குழந்தை ஒவ்வொருவரிடமும் அந்தச் சக்தி குடிகொண்டிருக்கிறது. பல ரிடம் அது வெளிக்கிளம்பாமல் இருக்கிறது. ஆனால், விடா முயற்சியோடு கூடிய பயிற்சிகள் மூலம் அதை எழுப்பிவிட முடியும்.

இந்த உண்மையை ஒப்புக்கொண்டு, அதை அடைவதற்குச் சரியான முயற்சியும் செய்யவில்லையாயின் அழிவிலிருந்து தப்ப

வழியில்லை என்பதையும் கவனிக்க வேண்டும். அக்கம் பக்கத்தில் இருப்பவர்கள் ஆதரித்தாலும் ஆதரிக்காவிட்டாலும், ஒவ்வொருவரும் வாழ்க்கையின் எந்தத் துறையிலும் தாமே வெளிப்படுவதற்குத் தம்மைப் பயிற்சி செய்துகொள்ளுவதிலேயே இதன் பரிகாரம் அடங்கியிருக்கிறது.

—'ஹரிஜன்' - 10—2—1946

# 38

# இம்சையை நிறுத்துவது எப்படி ?

**கேள்வி :** இந்தியாவில் பலாத்காரம் அதிகரித்துக் கொண்டு வருகிறது, மக்கள் அகிம்சை வழியிலிருந்து மெல்ல விலகிக்கொண்டிருப்பதால் பலாத்காரச் செயல்கள் மேலும் அதிகரிக்கும் என்று இங்கிலாந்துக்குத் திரும்ப இருக்கும் ஒரு ராணுவ அதிகாரி, கொஞ்ச காலத்திற்கு முன்னுல் புனைவில் என்னிடம் கூறினர். "மேனுடுகளிலிருக்கும் நாங்கள் பலாத்காரத்தில் நம்பிக்கை வைத்திருப்பதோடு எங்கள் சமூகமும் அதையே அடிப்படையாகக் கொண்டது. அடிமைப் பட்டிருந்த பல இனத்தினர் பலாத்காரத்தைக் கொண்டே தம் சுதந்திரத்தை அடைந்து இன்று அமைதியாக வாழ்ந்து கொண்டிருக்கிருர்கள். பலாத்காரத்தை நிறுத்துவதற்காக நாங்கள் அணுக்குண்டைக் கண்டுபிடித்திருக்கிறேம். சென்ற மகாயுத்தம் இதை வலியுறுத்தும்" என்று கூறிய ராணுவ அதிகாரி மேலும் சொன்னதாவது : "உங்கள் மக்களுக்குக் காந்திஜி அகிம்சை வழியைக் காட்டியிருக்கிருர். அணுக்குண்டைப்போல உடனே மக்களை அகிம்சையினராக மாற்றி அமைதியின் ஆட்சியைக் கொண்டு வருவதற்கான சக்தி எதையாவது அவர் கண்டுபிடித்திருக்கிருரா ? காந்திஜியின் 'அணுக்குண்டு' இம்சை வழியில் செல்லும் மக்களை நிறுத்த முடியாதா? தமது சக்தியை மக்கள்மீது உபயோகித்து, இம்சை எண்ணங்களை எல்லாம் விட்டுவிட்டுத் தமது தருமத்தை மேற்கொள்ளுமாறு மக்களிடம் சொல்லும்படி காந்திஜியிடம் கூறுங்கள். நாடு முழுவதிலும் பரவிக்கொண்டிருக்கும் பயங்கர மான இம்சைகளிலிருந்து தம் மக்களை வேறு வழியில் திருப்ப அவரால் முடியவில்லையானல், ஏமாற்றம் அடைந்தவராக அவர் வாழ்வதுடன் அவருடைய வாழ்நாளின் வேலையும் பாழாகிவிடும் என்று உங்களுக்குக் கூறுகிறேன்."

**பதில் :** சிந்தனையின் குழப்பம் இக்கேள்வியில் அதிகமாக இருக்கிறது. இம்சையை அணுக்குண்டு நிறுத்திவிடவில்லை. மக்களின் உள்ளத்தில் அது நிரம்பியிருப்பதோடு மூன்றாவது உலக யுத்தத்திற்கு ஏற்பாடுகளும் நடந்து வருகின்றன என்றும் சொல்லலாம். மனித வர்க்கத்திற்கு இம்சை என்றுவது அமைதியைக் கொண்டு வந்தது உண்டு என்று சொல்லுவதைப் போன்ற மதியீனம் வேறில்லை. இம்சை என்றுமே, எதையுமே சாதித்துவிடவில்லை என்று சொல்லுவதும் அப்படியே.

இம்சையை நிறுத்தாவிட்டால் நான் வருத்தப்படவேண்டியிருக்கும் என்பது அகிம்சையின் விஷயத்தில் புகுத்தவேண்டிய விஷயமன்று. இம்சையை யாரும் நிறுத்த முடியாது. கடவுள் ஒருவரே அதைச் செய்ய வல்லவர். மனிதர்கள், அவர் ஆட்டிவைக்கும் கருவிகள். இங்கு உலகியலான முறைகளால் இம்சையை நிறுத்த முடியாது. ஆனால் இம்முறைகளை இதற்குப் பயன்படுத்தக் கூடாது என்பதற்கில்லை. இதில் முடிவு செய்வது கடவுள் அருளே. அவர் தருமப்படி அவர் வேலை செய்கிறார். ஆகையால், அந்தத் தருமப்படி இம்சையும் நிறுத்தப்படும். கடவுளின் தருமத்தை முற்றிலும் மனிதன் அறிவதில்லை ; அறியவும் என்றும் முடியாது. ஆகையால், நம் சக்திக்கு எட்டிய வரையில் நாம் முயற்சி செய்யவேண்டும். அகிம்சையில் நமது சோதனை இந்தியாவில் ஓரளவுக்கு வெற்றி பெற்றிருக்கிறது என்று நான் கருதுகிறேன். எனவே, கேள்வியில் கண்ட சந்தேகத்திற்கே இடமில்லை. முடிவாக, அகிம்சை உலகத்தின் மிகச் சிறந்த கொள்கைகளில் ஒன்று; உலகத்தில் இருக்கும் சக்தி எதுவும் அதை அழித்துவிட முடியாது. லட்சியத்தை எடுத்துக் காட்ட முயன்று வருகையில் என்னைப் போன்ற ஆயிரக்கணக்கானவர்கள் சாகக்கூடும். ஆனால் அகிம்சை மாத்திரம் சாகாது. அதில் நம்பிக்கையுள்ளவர்கள் லட்சியத்திற்காகச் சாவதன் மூலமே அகிம்சையின் நற்செய்தி பரவும்.

['ஹரிஜன சேவக்'கிலிருந்து மொழிபெயர்ப்பு.]

சிம்லா, 9—5—1946 —'ஹரிஜன்' - 19—5—1946

# 39

# அணுக்குண்டும் அகிம்சையும்

வேறு எதனாலும் செய்ய முடியாத வகையில் அணுக்குண்டு அகிம்சையைக் கொண்டு வந்துவிடும் என்று அமெரிக்க நண்பர்கள் கூறுகிறார்கள். அது கொண்டு வரும். ஆனால்

அதனுடைய நாச சக்தி உலகில் அவ்வளவு வெறுப்பை உண்டாக்கி, அச்சமயத்திற்கு மாத்திரம் அது உலகத்தை இம்சையிலிருந்து திருப்பிவிடும் என்பதுதான் அதற்குப் பொருளாயிருக்க வேண்டும். வாந்தி வரும் அளவுக்கு ஒருவன் ருசியான பண்டங்களையெல்லாம் தின்றுவிட்டு, வாந்தியெல்லாம் நின்ற பிறகு அதே தின்பண்டங்களைக் கொள்ள இரட்டிப்பு உற்சாகத்துடன் திரும்புவதற்காகத் தாற்காலிகமாக அவற்றினின்று விலகிப் போய்விடுவது போன்றதே இது. இதே போலத்தான் உலகமும் தனது வெறுப்பெல்லாம் குறைந்துவிட்ட பிறகு இன்னும் அதிக உற்சாகத்துடன் இம்சையில் இறங்கிவிடும்.

தீமையிலிருந்து நன்மையும் பிறப்பது உண்டு. ஆனால், அது கடவுளின் திட்டமேயன்றி மனிதனின் திட்டமன்று. நன்மையிலிருந்து நன்மையே பிறப்பதைப் போன்று தீமையிலிருந்து தீமையே பிறக்கும் என்பது ஒன்றையே மனிதர் அறிவர்.

அமெரிக்க விஞ்ஞானிகளும் ராணுவத்தினரும் அணுசக்தியை நாசகாரியத்திற்குத் தயாரித்துக்கொண்டார்களென்றாலும் மற்ற விஞ்ஞானிகள் அந்தச் சக்தியை உயிரினத்தின் நன்மைக்காக உபயோகித்துக்கொள்ளக்கூடும் என்பதும் நடக்கக்கூடியதே. ஆனால், என் அமெரிக்க நண்பர்கள் கூறுவது அதுவன்று. நிச்சயமான உண்மையைக் குறிப்பிடக்கூடிய ஒரு கேள்வியைக் கேட்டுவிட அவர்கள் அவ்வளவு அப்பாவிகள் அல்ல. தன் நாசவேலைக்கு, இழிவான காரியத்திற்கு, தீக்குண்டு வைப்பவன் நெருப்பைப் பயன்படுத்திக்கொள்கிறான். அதே நெருப்பை ஒரு குடும்பப் பெண், மனித வர்க்கத்திற்கு உடல் வலிவைத் தரும் உணவைத் தயாரிப்பதற்கு அன்றாடம் உபயோகிக்கிறாள்.

எனக்குத் தெரிந்தவரையில், மனித வர்க்கம் எவ்வளவோ காலமாக நீடித்து இருக்கும்படி செய்துவந்த மிகச் சிறந்ததான உணர்ச்சிகளை அணுக்குண்டு சாக அடித்துவிட்டது. யுத்தச் சட்டங்கள் என்று கூறப்படுவனவும் இருந்து வந்தன; அவை யுத்தங்களைச் சகிக்கக் கூடியனவாகச் செய்தன. இப்பொழுது நாம் அப்பட்டமான ஒரு உண்மையை அறிவோம். பலம் என்ற ஒன்றைத் தவிர யுத்தங்களுக்குச் சட்ட வரம்பு வேறு எதுவுமே இல்லை. நேச தேச ராணுவ பலத்திற்கு அணுக்குண்டு பயனற்ற வெற்றியைக் கொண்டு வந்திருக்கிறது. ஆனால், தற்சமயத்திற்கு ஜப்பானின் ஆத்மாவை அழித்ததில் அது முடிந்திருக்கிறது.

அப்படி அழித்த நாட்டின் ஆத்மா என்ன கதியாகும் என்பது அவ்வளவு சீக்கிரத்தில் தெரிந்துவிடாது. இயற்கையின் சக்திகள் விசித்திரமான வகையில் வேலை செய்கின்றன. தெரியாதிருக்கும் பலன்களை, அதேபோன்ற சம்பவங்களின் தெரிந்த பலன்களைக் கொண்டு அனுமானித்து அந்த விசித்திரத்தை நாம் புரிந்து கொள்ள முடியும். ஓர் அடிமையை வைத்திருக்கும் கூண்டில், தாமோ அல்லது தமக்குப் பதிலாக இன்னொருவரோ இராமல், அந்த அடிமையை அங்கு வைத்திருக்க முடியாது. ஜப்பான் தன்னுடைய தகுதியற்ற ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ளுவதற்காகக் கையாண்ட அக்கிரமங்களுக்குச் சமாதானம் கூற நான் விரும்புவதாக யாரும் எண்ணிவிட வேண்டாம். இதில் இருக்கும் வித்தியாசமெல்லாம் அளவில்தான். ஜப்பானின் பேராசை அதிகக் கேவலமானது என்றே வைத்துக்கொள்ளுகிறேன். ஆனால், குறிப்பிட்ட ஒரு பகுதியில் கொஞ்சமும் கருணையின்றி ஜப்பானிய ஆண்கள், பெண்கள், குழந்தைகளை அழிப்பதற்கான உரிமையை இதுபோன்ற அநியாயத்தைக் குறைவாகச் செய்தவர்கள் எடுத்துப் போட்டுக்கொள்ளலாகாது.

அந்தக் குண்டினால் விளைந்த ஒரு பெருந் துன்பத்திலிருந்து நியாயமாக அறிய வேண்டிய நீதி ஒன்று உண்டு. இம்சையை எதிர் இம்சையினால் அழித்துவிட முடியாததைப் போன்றே அந்தக் குண்டைப் போட்டிக் குண்டினால் அழித்துவிட முடியாது என்பதே அது.மனித வர்க்கம் அகிம்சையின் மூலமே இம்சையிலிருந்து விடுபட வேண்டும். துவேஷத்தை அன்பினாலேயே வெல்ல முடியும். பதிலுக்குத் துவேஷம் காட்டுவது துவேஷத்தின் பரப்பையும் ஆழத்தையுமே அதிகரிக்கும். நான் இதற்கு முன்னால் பன்முறை என்ன கூறி வந்திருக்கிறேனோ, என்னுடைய சக்திக்கும் திறமைக்கும் ஏற்ற வகையில் நான் எதை அனுசரித்து வந்திருக்கிறேனோ, அதையே திரும்பவும் கூறுகிறேன் என்பதை அறிவேன். நான் முதன்முதலில் சொன்னதில்கூடப் புதியது எதுவுமில்லை. மலைகள் எவ்வளவு பழமையானவையோ அவ்வளவு பழமையானது அது. அதையேதான் நான் திரும்பச் சொல்லுகிறேன்; என்னுள் ஒவ்வோர் உடற்கூறிலும் நான் நம்பியுள்ளதையே உறுதியுடன் அறிவிக்கிறேன். வாழ்க்கையின் பல துறைகளில் பெற்ற அறுபது ஆண்டுகளின் பழக்கம் அந்த நம்பிக்கையை வலுப்படுத்தியிருக்கிறது; நண்பர்களின் அனுபவமும் அதைப்பலப் படுத்தியிருக்கிறது. என்றாலும், நடுவான அந்த உண்மையின் மூலம் ஒருவர் தன்னந்தனியாகவும் பின்வாங்காமலும் நிற்க முடியும். சத்தியத்தை நம்பாதவர்கள் இருந்து

கொண்டு வரும் வரையில் சத்தியத்தைப்பற்றித் திரும்பத் திரும்பச் சொல்லியே ஆக வேண்டும் என்று பல ஆண்டுகளுக்கு முன்னால் மாக்ஸ் முல்லர் கூறியதை நான் நம்புகிறேன்.

புனா, 1—7—1946 —'ஹரிஜன்'- 7—7—1946

## 40

# இருப்பது அகிம்சை ஒன்றே

ஓர் ஆங்கில நண்பர் கேட்டதாவது:

"உலகம் முன்னேறிக்கொண்டிருக்கிறதா? இக்கால உலகத்தில் வாழ்வை உருவாக்குவதும், வாழ்வுக்கெனப் போராடுவதும் எளிதாவதால் மனிதனுடைய எண்ணங்களும் உணர்ச்சிகளும் அவனை மந்தப்படுத்துவதில் முடிந்திருக்கின்றனவா?"

"அதுதான் உங்கள் கருத்தாயின் அதை நான் ஆதரிப்பேன்" என்று பதில் கூறினார் காந்திஜி.

"அணுக்குண்டைப்பற்றி என்ன?"

"ஓ! அதைப்பற்றியா? அவ்விஷயத்தில் நான் திருத்த முடியாத கருத்துடையவனாக இருக்கிறேன் என்பதை நீங்கள் எந்தவிதத் தயக்கமுமின்றி உலகம் முழுவதற்கும் அறிவித்துவிடலாம். ஆண்கள், பெண்கள், குழந்தைகளையெல்லாம் அடியோடு அழிப்பதற்கு அணுக்குண்டை உபயோகித்தது, விஞ்ஞானத்தைக் கொடிய வழியில் பயன்படுத்தியதாகும் என நான் கருதுகிறேன்."

"அதற்குப் பரிகாரம் என்ன? அகிம்சை பயன்படாத ஒரு பழைய முறையாகிவிட்டதா?"

"இல்லை; அதற்கு மாறாக, இந்த விஷயத்தில் அகிம்சை ஒன்றுதான் வழி" என்று பதில் கூறினார் காந்திஜி. "அது ஒன்றைத்தான் அணுக்குண்டினால் அழிக்க முடியாது. ஹிரோஷிமாவை *அணுக்குண்டு அடியோடு அழித்துவிட்டது என்று முதன் முதலில் நான் அறிந்தபோது நான் அப்படியே பிரமித்துப் போய் விடவில்லை. இதற்கு மாறாக எனக்கு நானே, 'இப்பொழுதாவது உலகம் அகிம்சையை அனுசரித்தாலன்றி மனித வர்க்கத்திற்கு அது தற்கொலையாகவே ஆகும்' என்று சொல்லிக்கொண்டேன்."

புது டில்லி, 24—9—1946 —'ஹரிஜன்'- 29—9—1946

---

* ஜப்பானில் உள்ள இரண்டு நகரங்கள் இரண்டாவது உலக யுத்தத்தின் போது அமெரிக்கா போட்ட அணுக்குண்டினால் அழிந்தன.

# 41

# அணுக்குண்டும் ராட்டையும்

'நியூயார்க் போஸ்'டின் ஸ்ரீ ஆண்டுரு பிரீமான், கனு காந்தியிடம் நூற்கக் கற்றுக்கொண்டிருந்தார். அவர் பண்டித நேருவுடன் வடமேற்கு எல்லைப்புற மாகாணச் சுற்றுப் பிரயாணத்தில் சென்றுவிட்டுத் திரும்பியதும் காந்திஜியைக் கண்டு பேசியபோது ராட்டையைக் குறித்தே தொடர்ந்து கேட்டார். மேற்கத்திய நாட்டை உள்ளுக்குள் வாட்டும் ஒரு நோய் கடைசியில் அணுக்குண்டு அளவுக்கு வளர்ந்திருக்கிறது. ஆகவே, அம்மக்களுக்கு நூற்கும் ராட்டை கலாசார வழியிலும் இந் நோயைத் தீர்க்கும் விதத்திலும் பயன்படலாமென்று கருதியே அவர் காந்திஜியிடம் வந்திருந்தார்.

"அமெரிக்காவுக்கு நூற்கும் ராட்டை விடுக்கும் செய்தி ஏதாவது உண்டா? அணுக்குண்டுக்கு எதிரான ஆயுதமாக அது இருக்க முடியுமா?" என்று அவர் கேட்டார்.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: "அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கும் உலகிற்கும் அது நல்ல போதனை விடுக்க இருக்கிறது என்றே எண்ணுகிறேன். இந்தியா நூற்கும் ராட்டையை இன்று தனதாக்கிக்கொண்டுவிடவில்லை. அதைத் தனதாக்கிக் கொண்டுவிட்டது என்பதை இந்தியா உலகிற்குச் செய்து காட்டுவதற்கு முன்னல் ராட்டை விடுக்கும் போதனை எதுவும் இருக்க முடியாது. குற்றம் ராட்டையினுடையதன்று. இந்தியாவையும் உலகையும் காப்பது ராட்டையிலேயே இருக்கிறது என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமே இல்லை. இந்தியா இயந்திரத்தின் அடிமையாகிவிட்டதென்ருல், உலகத்தைக் கடவுள்தான் காக்க வேண்டும் என்பேன்."

"அதைவிடச் சிறந்த பணி ஒன்று இந்தியாவுக்கு இருக்கிறது. அதாவது, உலகத்தில் நட்பையும் அமைதியையும் நிலைநாட்டுவது. மகாநாடுகளினல் மாத்திரம் அமைதியை உண்டாக்கிவிட முடியாது. மகாநாடுகள் நடந்துகொண்டிருக்கும் போதே சமாதானத்திற்குப் பங்கம் விளைவதை நாம் எல்லோரும் பார்க்கிரோம்" என்ருர் காந்திஜி.

"வழியைக் காட்ட வேண்டியது இந்தியாவாக இருக்கும் போது இந்தியா குழப்பத்தில் இருப்பது வேதனையாகத்தான் இருக்கிறது. முன்னின்று இதைச் செய்யவல்ல நாடு எது என்ருல்,

அது இந்தியாதான். அதனால் முடியும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா ?" என்று ஸ்ரீ பிரீமான் கேட்டார்.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: "அது செய்துகொண்டு தான் இருக்கிறது. ஆனால், அது மெதுவாகத்தான் நடக்கிறது என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். பண்டித நேரு கதரை 'நமது சுதந்திரத்தின் சின்னம்' என்று சொன்னார். வெறியருக்கும் ஓட்டாண்டிகளுக்கும் ஆறுதல் அளிப்பதாக மாத்திரம் அது இருக்கும் வரையில் சுதந்திரத்தின் சின்னமாக அது இருக்க முடியாது. மனிதன் சாதிக்க முடியாதவை எத்தனையோ இருக்கின்றன. ஆனால், எல்லாம் கடவுளால் ஆகும். கடவுள் எனக் கூறப்படும் ஜீவசக்தி ஒன்று இல்லையேல் நூற்கும் ராட்டைக்கு இடமே இல்லை."

"நூற்கிறவர்கள் இங்கு வெறியர்கள் என்று அழைக்கப் படுவதில்லையே ?" என்று ஸ்ரீ பிரீமான் சற்றுக் கவலையோடு கேட்டார்.

அதற்குக் காந்திஜி கூறியதாவது: "இல்லை. அமெரிக்கர் என்ன சொல்லக்கூடும் என்பதைப் பார்ப்பதற்காகவே நான் அவ்வாறு கூறினேன். என்னைக் காத்துக்கொள்ளுவதற்கு என்னை அப்பெயர் கொண்டு அழைப்பதற்கு அனுமதிக்கிறேன். ஒரு நண்பர் என்னை 'அனுபவ லட்சியவாதி' என்று வருணித்திருக்கிறார்."

ஸ்ரீ பிரீமான் சொன்னதாவது: "சுமாராகப் புத்தியுள்ளவன், ஓர் அமெரிக்கன் என்ற முறையில் நான் ஒன்று கூற முடியும். நூற்போரை வெறியர்கள் என்று பல அமெரிக்கர் சொல்லுவார்களெனினும் ஆழ்ந்து சிந்திப்பவர்களும் பலர் இருக்கிறார்கள். அழிவிலிருந்து நாகரிகத்தைக் காப்பதற்கு ஏதாவது செய்தாக வேண்டும். வாழ்க்கையை எளிமை மிக்கதாகச் செய்ய வேண்டும்."

காந்திஜி கூறிய பதிலாவது: "வேறு வகையில் மனிதனுக்குரிய தன்மை நிலைத்திருக்க முடியாது. 'இந்த இறுதி வரையில்' * என்ற சொற்றொடர் கொண்டிருக்கும் பொருளைப் பின்பற்றி நிற்கிறேன். அந்நூல் என் வாழ்க்கையில் ஒரு திருப்பத்தை உண்டாக்கியது. உலகம் நமக்கு என்ன செய்ய வேண்டும் என்று விரும்புவோமோ அதையே நாம் இறுதி வரையில் செய்யவேண்டும். எல்லோருக்கும் சமமான சந்தர்ப்பம் இருக்க வேண்டும். சந்தர்ப்பத்தை மாத்திரம் அளித்தால்

* ஜான் ரஸ்கின் என்பவர் இயற்றிய 'அண்டு திஸ் லாஸ்ட்' என்ற நூல்.

மனிதர் ஒவ்வொருவரும் ஆத்மிக வளர்ச்சியை அடைவதற்கு ஒரே மாதிரியான சாத்தியம் இருக்கிறது. நூற்கும் ராட்டினம் இதைத்தான் உருவகப்படுத்துகிறது. ”

—' ஹரிஜன்' - 17—11—1946

## 42

# அகிம்சை எங்கே, கதர் எங்கே ?

கத்தியவாடிலிருந்து ஒருவர் வருமாறு எழுதுகிறார் :

“ பல ஜில்லாக்களிலும் மாகாணங்களிலும் இருப்பதைப் போன்றே கத்தியவாடிலும், கதரிலும் அகிம்சையிலும் இருந்த நம்பிக்கையை மக்கள் விட்டு வருகின்றனர். ராஜீய விஷயங்களில் அகிம்சை எப்படி வேலை செய்ய முடியும் என்று பல காங்கிரஸ்காரர்களும் காந்தீயவாதிகளும் விவாதிப்பதாகத் தோன்றுகிறது."

இக்கடிதத்தை எழுதியிருப்பவர், உதாரணங்களைக் கொடுத்து, பல வாதங்களிலும் இறங்குகிறார். என்றாலும், கடிதத்தில் கண்ட முக்கியமான வாக்கியங்களைக் கொடுப்பதோடு நான் திருப்தியடைகிறேன். இவற்றில் மூன்று தவறுகள் அடங்கியிருக்கின்றன.

கத்தியவாடிலோ அல்லது இந்தியாவின் வேறு எந்தப் பகுதியிலோ மக்களுக்கு அகிம்சையிலும் கதரிலும் உண்மையான நம்பிக்கை கிடையாது என்று கொஞ்ச காலமாக நான் விளக்கிச் சொல்லிக்கொண்டு வருகிறேன். கதரைச் சின்னமாகக் கொண்ட அகிம்சையில் மக்கள் இணைந்துவிட்டனர் என்று நம்பியது உண்மையில் என்னையே நான் ஏமாற்றிக்கொண்டதாகும். மக்கள் உண்மையாகவே அகிம்சையின் பேரால் வீரியமற்றவர்களிடம் காணும் வெளி அமைதியை அனுசரித்து வந்திருக்கிறார்கள். தங்களுடைய உள்ளங்களிலிருந்து இம்சை எண்ணத்தை விரட்டிவிட அவர்கள் முயற்சி செய்வதே கிடையாது. இந்த உண்மையைச் சுலபமாகவே எவரும் ஆராய்ந்து பார்த்துக் கொள்ளலாம். ராஜ்கோட் குழப்பம் சம்பந்தமாக நான் ராஜ்கோட்டுக்குச் சென்றபோது, ராஜ்கோட்டில் ‘ராமரே’ இல்லை. ஆகவே, கத்தியவாடிலேயே இல்லை என்பது எல்லோருக்கும் நன்றாகத் தெரிந்த விஷயம். எனவே, இப்பொழுது தான் அவர்களுடைய நம்பிக்கை மறைந்து வருகிறது என்று சொல்லுவது பொருத்தமானதே அல்ல.

ராஜீய விஷயங்களில் அகிம்சையின் ஆற்றலைக் குறித்து இப்பொழுது ஆட்சேபிப்பதும் அதே போலத் தகுதியற்ற தாகும். அன்னிய ஆட்சிக்கு எதிராக மக்கள் நடத்திய போராட்டம் ராஜீய விஷயமல்ல என்ருல் அது வேறு என்ன? சகோதரனேடு சகோதரன் அடித்துக்கொள்ளும் வெட்கக் கேடான சச்சரவை இன்று நாம் பார்த்து வருகிருேம். இதில் ராஜீய விஷயம் மிகக் குறைவு. இன்று தருமத்தின் பேரால் அதர்மமே நாட்டில் தலை விரித்தாடி வருகிறது. அன்னிய ஆட்சியை எதிர்த்துப் போராடுவதில் அனுசரித்து வந்த வெளித்தோற்றமான அமைதியுங்கூட இன்று தென்பட வில்லை.

இக்கடிதத்தை எழுதியிருப்பவர், காங்கிரஸ்காரர்களுக்கும் காந்தீயவாதிகளுக்கு மிடையே பாகுபாடுபடுத்தியிருப்பதில் மூன்ருவது தவறு இருக்கிறது. உண்மையில் இதற்கு ஆதாரமே கிடையாது. காந்தீயவாதி ஒருவன் உண் டென்ருல், அவன் நானுகத்தான் இருக்க முடியும்; அவ்விதம் அகம்பாவத்தோடு கூறிக்கொள்ளாத அளவுக்கு நான் அடக்கமுடையவன் என்றே நம்புகிறேன். காந்தீயவாதி என்ருல் காந்தியை வழிபடுகிறவர். வணங்கி வழிபடுவதற்கு ஒரு கடவுள் இருக்க வேண்டும். ஆனல், அப்படிச் சொல்லிக்கொள்ளும் அகந்தை எனக்கு என்றுமே இருந்ததில்லை. ஆகவே, என்னை வழிபடுபவர் யாரும் இருப்ப தற்கில்லை. மேலும், தங்களைக் காந்தீயவாதிகள் என்று கூறிக் கொள்ளுபவர்கள் காங்கிரஸ்வாதிகள் அல்ல என்று எப்படிச் சொல்ல முடியும்? நான்கணு செலுத்தும் மெம்பர்களாகிக் காங்கிரஸ் புத்தகத்தில் தங்களைப் பதிவு செய்துகொள்ளா விட்டாலும் காங்கிரஸின் ஊழியர்களாக எத்தனையோ பேர் இருக்கின்றனர். நானும் அந்த வகையைச் சேர்ந்தவனே என்பதை வாசகர் அறிய வேண்டும். ஆகவே, இக்கடிதத்தை எழுதியிருப்பவர் செய்திருக்கும் பாகுபாடு அர்த்தமற்றதெனச் சொல்ல வேண்டியதாகிறது.

நாட்டில் இன்று நடந்துவரும் பல காரியங்களில் எனக்குப் பங்கு இல்லை; அவை பற்றி ஒன்றும் சொல்லுவதற்குமில்லை என்பதை நான் திரும்பத் திரும்பச் சொல்லி வருகிறேன். காங்கிரஸ் ஆட்சி அதிகாரத்தை ஏற்றுக்கொண்டதும் விரும் பியே அகிம்சைக்கு அது விடை கொடுத்துவிட்டது என்பதில் ரகசியம் எதுவும் இல்லை. மேலும் உணவு, துணிப் பங்கீடு முறை

நாட்டிற்கு மிகவும் தீமையானது என்று நான் உறுதியாக நம்புகிறேன். என் வழியில் நடப்பதாக இருந்தால், இந்தியாவுக்கு வெளியிலிருந்து உணவுத் தானியத்தில் ஒரு மணியைக்கூட நான் வாங்கமாட்டேன். நாட்டில் போதுமான உணவுப் பொருள் இருக்கிறது என்பது இன்றுகூட என்னுடைய திடமான நம்பிக்கை. சகிக்கவொண்ணாத கட்டுப்பாட்டு முறையினால் கிராமவாசிகள் தானியங்களையும் பருப்பு வகைகளையும் ஒளித்து வைக்க வேண்டியதாயிற்று. அதோடு மக்கள் என்னைப் பின்பற்றுவதாயிருந்தால், ஹிந்துக்கள், சீக்கியர்கள், முஸ்லிம்களுக்கிடையே கொலை அளவுக்கு வரும் சச்சரவே இராது. உண்மையான விஷயம் என்னவெனில், நான் செல்லக்கூடிய காசு என்று என்னைப் பற்றி எண்ணிக்கொண்டிருந்ததைப்போல் இல்லாமல் இன்று நான் செல்லாக் காசாகிவிட்டேன் என்பதே. என் குரல் காட்டிலே கதறுவது போலத்தான்.

கதரைப் பொறுத்தவரையில், அதன் வேரான அகிம்சையிலிருந்து அதைப் பிய்த்து நாம் எடுத்துவிட்டால், அதற்கு ஒரு வகையான இடம் இருக்கிறது. மிக மேன்மையான தான அகிம்சையின் சின்னம் என்ற பெருமைப்படும் ஸ்தானத்தில் அது இப்பொழுது இல்லை. ராஜீயத்துறையில் இருப்பவர்கள் கதரை ஆதரிப்பதனால் அதற்கு மௌசு. இன்று மும்மடங்கான பாராட்டுக்குரியது கதர் அல்ல ; மில் துணியே. ஏனெனில், நம் மில்கள் உற்பத்தி செய்யாதிருக்குமாயின், கோடிக்கணக்கானவர்கள் அம்மணமாக இருக்க நேரும் என்ற மருளில் நாம் இன்று இருக்கிறோம். இதைவிடப் பெரிய மனப்பிராந்தி வேறு என்ன இருக்க முடியும் ? நாட்டில் போதுமான பருத்தி சாகுபடி செய்கிறோம். நம்மிடம் வேண்டிய கைத்தறிகளும் ராட்டினங்களும் இருக்கின்றன. கையினால் நூற்பதிலும் நெய்வதிலும் பழக்கமில்லாத நாடு அன்று இந்தியா. ஆனால், தங்கள் தேவைக்குக் கையினால் நூற்பதையும் கையினால் நெய்வதையும் கோடிக்கணக்கான மக்கள் மேற்கொள்ளமாட்டார்கள் என்ற பயம் எப்படியோ நம்மை ஆட்கொண்டுவிட்டது. மருண்டவனுக்கு இருண்டதெல்லாம் பேய்தான். உண்மையில் நோய் எதுவும் இராமல் அந்நோயின் பெயரைக் கேட்டமாத்திரம் ஏற்படும் பயத்தினாலேயே பலர் செத்தும்விடுகின்றனர் என்பது நமக்குத் தெரியாதா ?

[குஜராத்தி மூலத்திலிருந்து மொழிபெயர்ப்பானது.]

-- 'ஹரிஜன்' - 2—11—1947

## 43

# கட்சித் தகராறும் ஊழியர் கடமையும்

**கேள்வி:** ஓர் ஊழியர், கொஞ்ச காலத்திற்குப் பிறகு அதிகார ஆசை பிடித்தவராகிவிடுகிறார் என்பதே நமது அனுபவமாக இருந்து வருகிறது. அவருடன் இருக்கும் மற்ற ஊழியர்கள் அவர் அப்படி ஆகிவிடாமல் தடுத்து வைப்பது எப்படி? வேறு விதமாகக் கூறுவதாயின், ஸ்தாபனத்தில் ஜனநாயகத் தன்மை கெடாமல் வைப்பது எப்படி? சம்பந்தப்பட்ட கட்சியுடன் ஒத்துழையாமை செய்வதில் பயனில்லை என்பதைப் பார்த்திருக்கிறோம். இதனால் ஸ்தாபனத்தின் வேலையே கெட்டுவிடுகிறது.

**பதில்:** இது உங்கள் அனுபவம் மாத்திரமன்று; எல்லோருடைய அனுபவமும் இதுதான். அதிகார ஆசை மனிதனுக்கு இயல்பானது; அநேகமாக அவன் சாகும்போதுதான் அதுவும் சாகிறது. ஆகையால், அப்படி ஆசை இல்லாமல் ஒருவரை இருக்கும்படி சக ஊழியர்கள் தடுத்து வைப்பதென்பது மிகவும் கடினமானது. மனிதரிடம் இருக்கும் இக்குறை அந்தச் சக ஊழியர்களுக்கும் இருக்கக்கூடும் என்பதே அதற்குக் காரணமாக இருக்கலாம். முற்றிலும் அகிம்சையோடு கூடிய ஒரு ஸ்தாபனத்தை உலகில் நாம் காணுமலிருக்கும் வரையில், ஒரு ஸ்தாபனத்தின் ஜனநாயகத்தன்மையை முற்றிலும் நாம் அறிந்திருப்பதாகச் சொல்லிக்கொள்ளுவதற்குமில்லை. ஏனெனில், சரியான அகிம்சை ஒரு ஜனநாயகத்திற்குப் பக்கபலமாக இருந்தாலன்றிச் சரியான ஜனநாயகம் சாத்தியமே இல்லை என்பதை நிச்சயமாக நிரூபிக்க முடியும். ஒத்துழையாமை, எப்பொழுதுமே இல்லாதுபோனாலும் அடிக்கடி இருப்பதைப் போன்று பலாத்காரமாக இருக்குமானால், கேள்வி சரியானதாக இருந்திருக்கும். ஒத்துழையாமையின் அகிம்சைத் தன்மையைக் குறித்து அனுபவத்தினால் எனக்குச் சிறிது தெரியும் என்று கூறிக்கொள்ளுகிறேன். ஆகையால், அகிம்சையோடு கூடிய ஒத்துழையாமையை நல்ல காரியத்திற்கு உபயோகித்தால் அது வெற்றி பெற்றே தீரும் என்று யோசனை கூறுவேன். அகிம்சையோடு கூடிய ஒத்துழைப்பை அளிப்பதனால் எந்த ஸ்தாபனத்திற்கும் தீமை ஏற்படாது. சிறந்த அளவு அரைகுறை அகிம்சை, மோசமான அளவு அகிம்சையின் பெயரில் உலவும் அப்பட்டமான இம்சையில் ஏற்பட்ட அனுபவத்தினால் இக்கேள்வி கேட்டவர் அவதிப்படுகிறார். அகிம்சை

பூரணமாக இல்லாததும் அல்லது அடியோடு இல்லாமலிருந்ததும் போன்ற முக்கியமான இரு குறைகளினால் ஒத்துழையாமை உருப்படாமல் போனதைப்பற்றிய சம்பவங்கள் 'ஹரிஜன்' பத்திரிகையிலும் 'எங் இந்தியா'விலும் எத்தனையோ வெளியாகியிருக்கின்றன. அதிகாரத்தை வகிப்பதில் மற்றவர்கள் ஆசை பிடித்தவர்களாக இருக்கிறார்கள் என்று புகார் கூறுகிறவர்கள் இந்த ஆசையில் கொஞ்சமும் குறைந்தவர்களல்ல. அரை டஜன் என்பதற்கும் ஆறு என்பதற்கும் வித்தியாசம் காண்பதுபோன்று இது வீண் வேலையேயாகிறது என்பதையும் எனது நீண்ட கால அனுபவத்தில் பார்த்திருக்கிறேன்.

**கேள்வி:** அநேகமாக எல்லாக் கிராமங்களிலுமே கட்சிகளும் தகராறுகளும் இருக்கின்றன. உள்ளூர் உதவியை நாடும்போது, நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், உள்ளூர் ராஜீயச் சச்சரவுகளில் நாமும் ஈடுபட்டவர்கள் ஆகி விடுகிறோம். இந்தக் கஷ்டத்திலிருந்து வெளிப்படுவது எப்படி? தகராறில் இருக்கும் இரு கட்சிகளையும் விட்டுவிட்டு வெளி ஊழியர்களின் உதவியைக்கொண்டு வேலையைச் செய்துகொண்டு போவதா? இத்தகைய வேலை வெளி உதவியைக்கொண்டே செய்யப்பட வேண்டியதாவதுடன் அந்த உதவி இல்லாது போகும்போது எல்லாம் சிதறிவிடுகிறது என்பதே எங்கள் அனுபவமாக இருந்திருக்கிறது. உள்ளூர்க்காரர்களே முயற்சி எடுக்கும்படி செய்து உள்ளூர் ஒத்துழைப்பைப் பெறுவதற்கு என்ன செய்ய வேண்டும்?

**பதில்:** நம் நகரங்களில் காணப்படுவதைப் போன்று கிராமங்களிலும் கட்சிகளும் தகராறுகளும் காணப்படுவது இந்தியாவின் துரதிருஷ்டமே. கிராமங்களின் நன்மையைப் பற்றிய சிந்தனை இல்லாமல் ராஜீய அதிகார வேட்டை கிராமங்களில் புகுந்து, சிலர் தங்கள் அதிகாரத்தை வளர்த்துக்கொள்வதற்காக அதை உபயோகித்துக் கொள்ளும்போது, கிராமங்களின் அபிவிருத்திக்கு உதவுவதற்குப் பதிலாக அந்த அபிவிருத்திக்கு அது இடையூறாகவே ஆகிவிடுகிறது. விளைவு எதுவானாலும் சரி, உள்ளூர் உதவியைச் சாத்தியமான வரையில் நாம் உபயோகித்துக்கொள்ள வேண்டும்; ராஜீயப் பல வேட்டை இழுக்கு இல்லாதிருந்தால் நாம் செய்வது தவறாகிவிடுவதற்கில்லை என்றே கூறுவேன். ஆங்கிலம் படித்த ஆண்களும் பெண்களும் நாட்டின் முதுகெலும்பான கிராமங்களை அலட்சியம் செய்துவிடும் பெருங்குற்றத்

தைச் செய்திருக்கிறார்கள் என்பதையும் நாம் நினைவில் வைக்க வேண்டும். நாம் அலட்சியம் செய்துவிட்ட நினைப்புப் பெர்றுமை கொள்ளத் தூண்டும். யோக்கியமான ஊழியர் எவருமே இல்லாத கிராமத்தை நான் பார்த்ததில்லை. நம் கிராமங்களின் மதிப்பை உணருவதற்கு வேண்டிய அடக்கம் நமக்கு இல்லாததனுல் அத்தகைய ஊழியரைக் கண்டுபிடிக் கத் தவறிவிடுகிரேம். உள்ளூர் விவகாரங்கள் எதிலும் சம் பந்தப்படக்கூடாது. எங்கு நன்மையாகிறதோ அங்கெல்லாம் எல்லாக் கட்சியினரிடமிருந்தும், எக்கட்சியிலும் இராதவர்களிட மிருந்தும் உதவியை நாம் ஏற்றுக்கொள்ளும்போது, அப்படிச் செய்ய நாம் கற்றுக்கொண்டவர்களாவோம். கிராமவாசிகளைப் புறக்கணித்து விடுவது என்பது வெற்றிக்கு ஆபத்து என்றே கருதுவேன். இதிலுள்ள கஷ்டத்தை நான் அறிவேனுகை யால், ஒரு கிராமத்திற்கு ஓர் ஊழியர் என்ற விதியைக் கண் டிப்பாக அனுசரிக்க முயன்றிருக்கிறேன். அந்த ஊழியருக்கு வங்காளி தெரியாதபோது மாத்திரம் மொழிபெயர்ப்பாளர் ஒருவரின் உதவி அளிக்கப்படுகிறது. இந்த முறை இதுவரை யில் காரியத்திற்கு ஏற்றதாக இருந்திருக்கிறது என்றே கூறு வேன். ஆகவே, உங்கள் அனுபவத்தை நான் ஏற்றுக்கொள்ளு வதற்கில்லை. அவசரப்பட்டு முடிவுக்கு வந்துவிடும் தவருன பழக்கமும் நம்மிடம் இருக்கிறது. ‘வேலை, வெளி உதவியைக் கொண்டே செய்யப்பட வேண்டியதாவதுடன் அந்த உதவி இல்லாது போகும்போது எல்லாம் சிதறிவிடும்’ என்று ஒரேயடியாகக் கண்டிக்கக் கிளம்பிவிடுவதற்கு முன்னுல் நான் ஒன்று கூறுவேன். ஒரு கிராமத்தில் சில ஆண்டுகள் வசித்து உள்ளூர் ஊழியர்களைக் கொண்டு வேலை செய்ய முயன்றிருப் பதை, உள்ளூர் ஊழியர்கள் மூலம் அவர்களைக் கொண்டு வேலை செய்ய முடியாது என்பதற்கு ஒரு முடிவான ருசுவாகக் கருதக் கூடாது என்றும் சொல்லுவேன். இதற்கு மாறுபட்டதும் உண் மையாகவே இருக்கலாம். கடைசி வாக்கியத்தை விவரமாக ஆராய்ந்துகொண்டிருப்பது எனக்கு அனுவசியமானதாகிறது. முக்கியமான ஊழியருக்கு நான் வருமாறு திட்டமாகக் கூறு வேன்: ‘உங்களுக்கு வெளி உதவி ஏதாவது இருந்தால் அதை விட்டுவிடுங்கள். தனித்திருந்தே, தைரியமாகவும் புத்திசாலித் தனமாகவும் கிடைக்கக்கூடிய உள்ளூர் உதவியைக் கொண்டு வேலை செய்யுங்கள். நீங்கள் வெற்றி பெறவில்லையானல், உங் களையே குறை கூறிக் கொள்ளுங்கள்; வேறு யார் மீதும் எதன் மீதும் குறை சொல்ல வேண்டாம்.’

— ‘ஹரிஜன்’ - 2—3—1947

1

# புனிதத்தின் சிறப்பு

[ஜெர்மன் நண்பர் ஒருவர் எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருந்த பல விஷயங்களுக்குப் பதிலளித்த காந்திஜி, அகிம்சையைக் கையாளுவது சம்பந்தமாகப் பெண்களின் நிலையைக் குறித்தும் குறிப்பிட்டு 8-10-1925-இல் 'எங் இந்தியா'வில் எழுதினர். அக்கட்டுரையின் இப் பகுதி மாத்திரம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

"சத்தியாக்கிரகத்திற்குப் பூரணமான அகிம்சை அவசியமாகிறது. கற்பழிக்கப்பட்டு விடும் அபாயத்திலிருக்கும் ஒரு பெண்கூடப் பலாத்காரத்தினல் தன்னைப் பாதுகாத்துக்கொள்ளக்கூடாது."-இது லட்சிய பூர்வமான ஒரு நிலைக்கே உரித்தாகும். ஆகையால், துவேஷமும் கோபமும் இல்லாமல், தங்களுக்குள் பலாத்கார எண்ணமும் இல்லாமல், தங்களைப் புனிதமாக்கிக் கொண்ட ஆண்கள், பெண்கள் சம்பந்தமாகவே இது கூறப்பட்டது. கற்பனை செய்துகொள்ளும் இந்நிலையில் ஒரு பெண் தான் கற்பழிக்கப்படுவதற்கு அமைதியாக அனுமதித்துவிடுவாள் என்பது அதன் பொருள் அன்று. முதலாவதாக, அத்தகைய பெண் பலாத்காரம் செய்யப்படும் அபாயத்திலேயே இருக்க மாட்டாள். இரண்டாவதாக, அவள் அத்தகைய ஆபத்தில் இருந்தால், முரடனுக்கு இம்சை செய்யாமலேயே தனது மானத்தைக் காத்துக்கொள்ள அவளால் முற்றிலும் முடியும்.

ஆனல், நான் விவாதத்திற்குப் போய்விடக்கூடாது. பலாத்காரத்தைக் கொண்டு தங்களைப் பாதுகாத்துக்கொள்ளக்கூடிய பெண்களும் அதிகமானவர்கள் இல்லை. என்றாலும், தாக்குதல் சம்பவங்களும் அதிகமாக இல்லை என்பதும் சந்தோஷப்பட வேண்டியதாகும். அது எப்படி இருந்தாலும் சரி, பூரணமான புனிதமே தன்னளவில் பாதுகாப்பு என்பதை அப்படியே நான் நம்புகிறேன். எவ்வளவு மோசமான முரடனும், மிகக் கண்ணைப் பறிக்கும் ஒளியின் முன்பு அச்சமயம் அடங்கிப் போய்விடுகிறன்.

# 2

# மானத்தைக் காத்துக்கொள்ளுவது எப்படி ?

**கேள்வி :** *பெண்களின் மானத்தை ஒருவர் காப்பது எப்படி?*

**பதில் :** 'ஹரிஜன்' பத்திரிகையைத் தொடர்ந்து நீங்கள் படித்து வரவில்லை என்றே அஞ்சுகிறேன். பல ஆண்டுகளுக்கு முன்னுலேயே இவ்விஷயத்தைக் குறித்து விவாதித்திருக்கிறேன்; அதற்குப் பிறகும் விவாதித்திருக்கிறேன். இவ்விஷயத்தை இரு தலைப்புக்களின் கீழ் விவாதிக்கலாம் : (1) ஒரு பெண் தன் கற்பை எப்படிக் காத்துக்கொள்ளுவது? (2) அவளுடைய ஆண் உறவினர்கள் அதை எப்படிக் காப்பது?

"முதல் கேள்வியைப் பொறுத்தவரையில், எங்கு அகிம்சைச் சூழ்நிலை இருக்கிறதோ, எங்கு இடைவிடாது அகிம்சைப் போதனை இருந்து வருகிறதோ அங்கு ஒரு பெண், தான் பிறருடைய பாதுகாப்பை எதிர்பார்க்க வேண்டியவள் என்ருே, அல்லது உதவியற்றவள் என்ருே எண்ணிக்கொள்ள மாட்டாள். அவள் உண்மையிலேயே புனிதமாக இருந்தால் உண்மையில் நிர்க்கதியாக நிற்கமாட்டாள். அந்தப் புனிதத்தன்மையாலேயே தனக்கிருக்கும் பலத்தை அவள் உணர்வாள். ஒரு பெண்ணின் சம்மதத்திற்கு மாருக ஒரு பெண்ணைக் கற்பழித்துவிடுவது என்பது முடியாத காரியம் என்று நான் எப்பொழுதும் கூறி வந்திருக்கிறேன். அவள் பயத்திற்கு இடங்கொடுத்துவிட்டபோதோ அல்லது தனது ஒழுக்கத்தின் பலத்தை அவள் உணராதிருக்கும்போதோ மாத்திரமே அக்கிரமம் நிகழ்ந்துவிடுகிறது. தாக்குபவனின் உடல் வலிவை எதிர்த்துத் தன்னைக் காப்பாற்றிக்கொள்ள அவளால் முடியவில்லையானுல், அவளைக் கற்பழிப்பதில் அவன் வெற்றி பெறுவதன் முன்னர் உயிரைத் துறப்பதற்கான பலத்தை அவளுடைய புனிதத்தன்மை அவளுக்கு அளிக்கிறது. சீதையின் விஷயத்தை எடுத்துக்கொள்ளுவோம். ராவணனுடைய வலிமைக்கு முன்னே அவள் பலவீனமானவள். ஆனுல், அவளுடைய புனிதத்தன்மை, அவனுடைய ராட்சச பலத்தையும் விட அதிக சக்தி வாய்ந்தது. அவளை வசியப்படுத்திக்கொள்ள அவளுக்கு ஆசையை மூட்டும் எத்தனையோ தந்திரங்களையெல்லாம் செய்தான். ஆனுல், அவளுடைய சம்மதமின்றி அவளை

நெருங்கவும் அவனால் முடியவில்லை. இதற்கு மாருக ஒரு பெண், தன்னுடைய உடல் பலத்தையோ அல்லது தன்னிடம் இருக்கும் ஆயுதத்தையோ மாத்திரம் தனது பாதுகாப்புக்கு நம்பியிருப் பாளாயின், அவளுடைய பலமெல்லாம் ஓய்ந்துவிடும்போது அவள் நிச்சயமாக அப்போராட்டத்தில் தோல்வியையே அடைவாள்.

"இரண்டாவது கேள்விக்கு எளிதில் பதில் சொல்லி விடலாம். சகோதரர் அல்லது தந்தை அல்லது நண்பர், தம் பாதுகாப்பில் இருப்பவளுக்கும் அவளைத் தாக்குபவனுக்கும் இடையே நிற்பார். பிறகு அவர், இழிவான காரியத்தில் இறங்க வேண்டாம் என்று அவன் மனத்தை மாற்ற முயற்சி செய்வார்; அல்லது அவனைத் தடுப்பதில் தாமே கொல்லப்படுவதற்கும் இடந் தருவார். இவ்விதம் தமது உயிரையே கொடுப்பதன் மூலம் அவர் தமது கடமையைச் செய்வதோடு தமது பாது காப்பில் இருந்தவளுக்குப் பலத்தை அடையப் புதிய வழியையும் அளித்தவராவார். அவளுக்குத் தன்னுடைய மானத்தைக் காத்துக்கொள்ளுவது எப்படி என்பது இப்பொழுது தெரிந்து விடும்".

புனாவிலிருந்து வந்திருந்த சகோதரிகளில் ஒருவர், "ஆனால், இதில்தான் சிக்கல் இருக்கிறது. ஒரு பெண் தன்னுடைய உயிரையே கொடுத்துவிடுவது எப்படி? அப்படிச் செய்வது அவளுக்குச் சாத்தியமா?" என்று கேட்டார்.

இதற்குக் காந்திஜி கூறிய பதிலாவது: "ஓ! ஆணைவிட என்றுமே இதைச் செய்ய அவளால் முடியும். ஓர் அற்ப விஷ யத்தின் பொருட்டும் உயிரை விடுவது பெண்களால் முடியும் என்பதை நான் அறிவேன். சாதாரணமான படிப்புக்குப் போக மறுக்கப்படவே இருபது வயதுள்ள ஒரு பெண் சில நாட்களுக்கு முன்பு தன்னையே எரித்துக்கொண்டு மாண்டாள். அப்படிப்பட்ட அமைதியான தீரத்தோடும் உறுதியோடும் அவள் அழிந்தாள்! சாதாரண மண்ணெண்ணெய் விளக்கினால் தன் புடைவைக்குத் தீயிட்டுக்கொண்டாள்; அவள் பலத்த சத்தம் போடவும் இல்லை. இதனால், எல்லாம் முடிந்துவிடுவதற்கு முன்னால் என்ன நடந் தது என்பது பக்கத்து அறையில் இருந்தவருக்கும் தெரியாது. இந்த விவரங்களையெல்லாம் நான் கூறுவது அவளுடைய உதா ரணத்தைப் பின்பற்ற வேண்டும் என்று சொல்லுவதற்காக அல்ல; ஒரு பெண் எவ்வளவு எளிதில் தனது உயிரைப் போக் கிக்கொண்டுவிட முடியும் என்பதைக் காட்டுவதற்காகவே

கூறுகிறேன். என்றாலும், இந்தத் துணிச்சல் எனக்குக் கிடை யாது. ஆனால், வேண்டியது உள் ஒளியேயன்றி வெளி ஒளி அல்ல என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன்.''

குழந்தைகளைச் சமாளிப்பதில் கோபமில்லாமல், இம்சையை உபயோகிக்காமல் எப்படி இருக்க முடியும் என்பதைக் குறித்து அதே சகோதரி ஆச்சரியப்பட்டார். இதற்குக் காந்திஜி உள்ளம் விட்டுச் சிரித்துக்கொண்டே கூறியதாவது : "அவ னுக்கு ஐந்து வயதாகும் வரையில் அவனோடு விளையாடு ; பத்து ஆண்டுகள் வரை அவனை அடித்து வழிக்குக் கொண்டு வா; அவனுக்குப் பதினாறு வயதானதும் அவனை நண்பனாக நடத்து' என்ற நமது முதுமொழி உங்களுக்குத் தெரியும். ஆனால், கவலைப்பட வேண்டாம். சில சமயங்களில் உங்கள் குழந்தை யிடம் நீங்கள் கோபமாக இருக்கவேண்டியிருந்தால், அந்தக் கோபத்தை அகிம்சையான கோபம் என்றே கூறுவேன். நான் கூறுவது புத்திசாலிகளான தாய்மார்களைப் பற்றியதேயன்றித் தாயாகவே இருக்கத் தகுதியற்ற ஒன்றும் தெரியாதவர்களைக் குறித்து அன்று.''

சேவா கிராமம், 26—8—1940 —' ஹரிஜன் ' - 1—9—1940

## 3

# அக்கிரமமான தாக்குதல்கள்

உலகம் முழுவதுமே இன்று சோதனையில் இருந்து வரு கிறது. யுத்தத்திலிருந்து யாரும் தப்ப முடியாது. ராமாயணமும் மகாபாரதமும் கவிகளின் கற்பனையிலிருந்து தோன்றியனவாக இருந்தபோதிலும் அவற்றின் ஆசிரியர்கள் வெறும் சந்தம் பாடுகிறவர்கள் அல்ல. அவர்கள் மகான்கள். அவர்கள் வருணித்தவையே இன்று நம் முன்னால் நடந்துகொண்டு வரு கின்றன. ராவணர்கள் ஒருவருக்கொருவர் போராடிக்கொண்டு வருகின்றனர் ; இணையில்லா வலுவையும் காட்டிக்கொண்டு வருகிறார்கள். கொல்லும் பயங்கர ஆயுதங்களை ஆகாயத்தி லிருந்து வீசுகின்றனர். போர்க்களத்தில் வீரச்செய்கை எதுவும் அவர்களுடைய சக்திக்கோ அல்லது கற்பனைக்கோ அப்பாற் பட்டதன்று.

மனிதன் இவ்விதம் சண்டை போட்டுக்கொள்ள மாட் டான் ; நிச்சயமாகத் தேவதைகள் சண்டையிட்டுக்கொள்ள

மாட்டார்கள். மிருகங்கள்தாம் இப்படிச் செய்யும். சிப்பாய்கள், தமக்கு உடல் வன்மை இருக்கிறது என்ற திமிரால் கடைகளைக் கொள்ளையடிக்கிறார்கள். பெண்களிடம் தகாத முறையில் நடந்துகொள்ளுவதைக் குறித்தும் அவர்கள் வெட்கப்படவில்லை. யுத்த காலத்தில் இத்தகைய சம்பவங்கள் நடவாதவாறு தடுப்பதற்கு நிர்வாகத்திற்குச் சக்தியில்லை. ராணுவம் அவர்களுடைய முக்கியமான தேவைகளைப் பூர்த்தி செய்கிறது ; ராணுவத்தினர் செய்யும் தகாத காரியங்கள் விஷயத்தில் அவர்கள் கண்களை மூடிக்கொண்டுவிடுகின்றனர். நாடு முழுவதுமே ராணுவமயமாக்கப்பட்டிருக்கும் இடங்களில் ராணுவ வாழ்க்கையின் வழியே அதன் நாகரிகமாகிவிடுகிறது. ஆகையால், ஒரு சிப்பாய் செய்யும் இத்தகைய அடாத காரியங்கள் கண்டிக்க வேண்டியவைகளல்லாமற் போகின்றன. ஆனால், இந்தியா இப்படி ஆவதற்கு இன்னும் எத்தனையோ தலைமுறைகளாகும்.

இதனால் ஒரு சகோதரி எனக்கு அனுப்பியிருக்கும் கீழ்க் கண்டவை போன்ற கேள்விகள் எழுகின்றன :

(1) ஒரு சிப்பாய், ஒரு பெண்ணைத் தாக்குவானாயின் கற்பை இழந்துவிட்டவள் என்று அவளைச் சொல்ல முடியுமா?

(2) சமூகம் அத்தகைய பெண்ணைக் கடிந்து சாதியிலிருந்து தள்ள வேண்டியதுதானா?

(3) இத்தகைய நிலைமையில் பெண்களும் பொதுமக்களும் என்ன செய்ய வேண்டும்?

அப்பெண் உண்மையில் தனது கற்பை இழந்திருப்பாளாயின் அதற்காக அவள் எத்தகைய கண்டனத்திற்கும் உரியவளாகிவிட மாட்டாள் ; அவளைச் சாதி கெட்டவளாகவும் நடத்தக் கூடாது. அவள் கொடூரமாகத் துன்புறுத்தப்பட்டிருப்பதால் அவள் நமது அனுதாபத்திற்கு உரியவள். காயம் பட்டவர்களுக்கு எப்படிக் காயத்தை ஆற்றுவோமோ அதேபோல அவளுக்கு ஏற்பட்ட புண் ஆறும்படி நாம் செய்ய வேண்டும்.

தன்னுடைய மானத்தை இழப்பதற்கு விரும்பிச் சம்மதித்துவிடும் பெண்ணே வெறுக்கப்பட வேண்டியவள். எந்த விதத்திலும் விபசாரமும், பலவந்தமாகக் கற்பழிக்கப்பட்டுவிடுவதும் ஒரே பொருளைக் குறிப்பனவாகா. விஷயத்தை இக்கருத்துடன் நாம் கவனிப்பதாயின், நமக்கு இதுவரை வழக்கமாக இருந்து வந்திருப்பதைப் போன்று, இனி நாம் அத்தகைய சம்பவங்களை மறைத்து வைக்க மாட்டோம். அப்பொழுது பெண்கள் சம்பந்தமாக ஆண்கள் நடந்துகொள்ளும் அத்தகைய காரியங்களைக் குறித்துப் பொதுஜன அபிப்பிராயம் எதிரிடையாக வளர்ந்து அது தாராளமாக உபயோகிக்கவும் படும்.

பத்திரிகைகள் விடாமல் கிளர்ச்சி செய்து வருமாயின் வெள்ளைக்கார அல்லது மாநிறச் சிப்பாய்கள் இவ்விதம் நடந்து கொள்வதை நிறுத்திவிடுவார்கள். அத்தகைய அயோக்கியச் செயல்களைத் தடுக்கும்படியும் அவர்களுடைய அதிகாரிகள் கட்டாயப்படுத்தப்படுவர்.

பெண்கள், நகரங்களைவிட்டுக் கிராமங்களுக்குப் போய் விடவேண்டும் என்பதே அவர்களுக்கு நான் கூறும் புத்தி மதி. சேவை செய்வதற்கு அங்கு அவர்களுக்கு எத்தனையோ துறைகள் இருக்கின்றன. கிராமங்களில் தாக்கப்படுவார்கள் என்ற அபாயமும் குறைவு. ஆனால், அவர்கள் எளிய வாழ்வு வாழ்ந்து ஏழைகளுடன் தாங்களும் ஒன்றாகிவிட வேண்டும். பட்டுகள், சாட்டின்கள், நகைகள் ஆகியவைகளையெல்லாம் அணிந்துகொண்டு தங்களுடைய செல்வத்தைக் காட்டுவார்களாயின், ஓர் ஆபத்துக்குப் பயந்து ஓடியவர்கள் இரட்டை ஆபத்துக்குத் தங்களைக் காட்டிக் கொடுத்துக்கொண்டு விட்டவர்களாகிவிடுவர். கடமையை முன்னிட்டு நகரங்களில் இருக்க வேண்டியவர்களை இயற்கையாகவே என் புத்திமதி குறிப்பிடவில்லை.

என்றாலும், பெண்கள் முக்கியமாகத் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயம், பயமின்றி இருப்பது எப்படி என்பதே. பயமே இல்லாத ஒரு பெண், தனது புனிதத் தன்மையே தனக்குள்ள சிறந்த கேடயம் என்பதை அறிந்து இருப்பாளாயின், அவளை மானபங்கப்படுத்திவிடவே முடியாது. இது என் திடமான கருத்து. மனிதன் எவ்வளவுதான் மிருகத்தனத்துடன் இருந்தாலும், ஜொலிக்கும் அவளுடைய புனிதத் தன்மையின் கனலுக்கு முன்னால் அவன் வெட்கித் தலை குனிவான்* பெண்கள் இவ்விதம் தங்களைத் தாங்களே காத்துக்

---

* ஒரு பெண்ணுக்கு காந்திஜி 1932 செப்டம்பர் 2-ம் தேதி எரவாடாச் சிறையிலிருந்து எழுதிய கடிதத்தில் கூறியதாவது :

" மிகவும் பேய்த்தனமான மனிதனைக்கூட வெற்றிகரமாக எதிர்க்கும் வலுவைக் கடவுள் உனக்கு அளிப்பார் என்ற நம்பிக்கையுடன் இரு. என்றும் பயப்படாதே. அத்தகைய அவசர நிலைமை ஏற்படும்போது உனது பலத்தையெல்லாம் காட்டு. அது இம்சை ஆகாது. ஒரு சுண்டெலி பூனையிடம் இம்சை செய்ய முடியாது. ஆனால் அது விரும்பினால், தன்னை உயிரோடு பூனை தின்ன முடியாது என்று செய்துவிட முடியும். இவ்விதம் பூனையின் காரியத்தைக் கெடுத்துவிடும் எலி. அதை இம்சையாகச் செய்யவில்லை. தீய காரியத்தில் ஈடுபடுபவன் இயல்பாகவே பலவீனமானவன் என்பதை நினைவில் வை. புனிதமான ஒரு பெண்ணிடமிருந்து எழும் பயங்கரமான ஒளியை அவனால் தாங்க முடியாது. அவளுடைய கூச்சலைக் கேட்ட மாத்திரத்திலேயே நடுநடுங்குவான்."

கொண்டதற்கு இக்காலத்தில்கூட எத்தனையோ உதாரணங்கள் இருக்கின்றன. இதை நான் எழுதும்போது அத்தகைய இரு சம்பவங்கள் நினைவுக்கு வருகின்றன. இக்கட்டுரையைப் படிக்கும் பெண்களுக்கு இத்தகைய தீரத்தை வளர்த்துக் கொள்ள முயற்சி செய்யுமாறு சிபாரிசு செய்கிறேன். தாக்கப் பட்டு விடக்கூடும் என்று நினைத்த மாத்திரத்திலேயே இன்று அவர்கள் நடுநடுங்கிப் போவதை விட்டுவிட முடிந்தால், அவர்கள் முற்றிலும் பயமற்றவர்களாகிவிடுவர். தீரத்தைச் சோதித்துக்கொள்ளுவதற்காக இக்கசப்பான அனுபவத்தை ஒருவன் அடைந்து பார்க்க வேண்டிய அவசியம் இல்லை. நல்ல வேளையாக இந்த அனுபவங்கள் லட்சக்கணக்கான அல்லது ஆயிரக் கணக்கானவர்களுக்கு ஏற்படுவதில்லை. எல்லாச் சிப்பாய்களுமே மிருகங்கள் அல்ல. நல்ல உணர்ச்சிகளையெல்லாம் அடியோடு இழந்துவிடுபவர்கள் மிகச் சிலரே. பாம்புகளில் நூற்றுக்கு இருபதே விஷமுள்ளவை; அவைகளிலும் மிகச் சிலவே கடித்துவிடுகின்றன. அவைகளை மிதித்தாலன்றி அவை நம்மைக் கடிப்பதில்லை. ஆனால், பயமே நிறைந்தவர்களாய், பாம்பைக் கண்டதுமே நடுநடுங்கி விடுபவர்களாக இருப்போருக்கு இந்த விஷயம் தெரிந்தும் பயனில்லை. ஆகையால், பெற்றோரும் கணவன்மார்களும் பயமற்று இருக்கும் கலையைப் பெண்களுக்குப் போதிக்க வேண்டும். கடவுளிடம் உறுதியான நம்பிக்கை வைப்பதன் மூலமே இதைக் கற்றுக்கொள்ள முடியும். அவர் கண்ணுக்குத் தெரியாமலிருந்தாலும் அவர் ஒருவரே தவறாமல் பாதுகாப்பவர். யாருக்கு இந்த நம்பிக்கை இருக்கிறதோ அவரே மற்றெல்லாரிலும் பயமில்லாதவர்.

ஆனால், அத்தகைய நம்பிக்கையையோ, தீரத்தையோ, ஒரே நாளில் அடைந்துவிட முடியாது. இதற்கு மத்தியில் நாம் மற்ற முறைகளைக் கண்டுபிடிக்க முயலவேண்டும். ஒரு பெண் தாக்கப்பட்டாள் என்றால், இம்சையா, அகிம்சையா என்பதைச் சிந்தித்துக்கொண்டு அவள் நின்றுவிடக்கூடாது. தன்னைப் பாதுகாத்துக்கொள்ளுவது ஒன்றே அவளுடைய முக்கியமான கடமை. தன்னுடைய மானத்தைப் பாதுகாத்துக்கொள்ளுவதற்கு அவள் புத்தியில் அச்சமயம் தோன்றும் எல்லாவிதமான முறைகளையும் வழிகளையும் உபயோகித்துக் கொள்ள அவளுக்கு உரிமையுண்டு. கடவுள் அவளுக்கு நகங்களையும் பற்களையும் அளித்திருக்கிறார். தனது முழுப் பலத்தையும் கொண்டு அவைகளை அவள் உபயோகித்துக்கொண்டு, அவசியம் ஏற்பட்டால் அம்முயற்சியில் இறக்கவும் துணியவேண்டும். ஆணோ

அல்லது பெண்ணே, சாவைப்பற்றிய பயத்தையெல்லாம் விட்டொழித்திருந்தால், தம்மைப் பாதுகாத்துக்கொள்வது அவர்களாலே முடியும்; தம் உயிரைக் கொடுப்பதனால் மற்ற வர்களையும் பாதுகாக்க முடியும். உண்மையில் சாவுக்கு நாம் அதிகமாகப் பயந்துவிடுகிறோம். இதனால், முடிவில் அதிக மானதாயிருக்கும் உடல் வலிவுக்குப் பணிந்து போய்விடு கிறோம். படையெடுத்து வந்தவனுக்குச் சிலர் முழந்தாளிட்டு வணங்கிவிடுவார்கள்; சிலர் லஞ்சம் கொடுக்க முற்படுவர்; வேறு சிலரோ வயிற்றினாலேயே ஊர்ந்து செல்வதற்கும் மற்ற அவமானம் மிகுந்த முறைகளுக்கும் உடன்படுவர்; சில பெண் கள் சாவதற்குப் பதிலாகத் தங்கள் உடலையே ஒப்படைத்தும் விடுவார்கள். குற்றம் கூறும் உணர்ச்சியுடன் நான் இதை எழுதவில்லை. மனித சுபாவத்தைத்தான் எடுத்துக்காட்டு கிறேன். நமது வயிற்றினாலேயே நாம் ஊர்ந்து சென்றாலும் சரி, அல்லது ஒருவனுடைய காம இச்சைக்கு ஒரு பெண் இடங் கொடுத்து விட்டாலும் சரி, இழிவான தொன்றைச் செய்வது உயிர்மேல் வைத்திருக்கும் ஆசையைத்தான் காட்டுகிறது. ஆகையால், உயிரை எவன் இழக்கிறானோ அவனே அதைக் காக்க முடியும்...தேன த்யக்தேன புஞ்ஜீதா:'* வாசகர் ஒவ்வொருவரும் இந்த ஒப்பற்ற சுலோகத்தை மறவாமல் நினைவில் கொள்ள வேண்டும். இதில் வெறும் வாயளவு நம் பிக்கை போதாது. அது உள்ளத்தின் ஆழத்தில் மாத்திரம் ஊடுருவி நிற்க வேண்டும். வாழ்வின் இன்பத்தை அனுபவிக்க வாழ்வின் மீதிருக்கும் ஆசையை ஒருவர் விடவேண்டும். அதுவே நமக்குச் சுபாவமாகிவிடவும் வேண்டும்.

---

*1942-ஆம் ஆண்டு போராட்டத்தில் சிறை வைக்கப்பட்டிருந்த மகாத்மா விடுதலை யாகி வெளிவந்த பிறகு அவருடன் விவாதிக்கப் பலர் வந்தனர். ஒரு சமயம் காங்கிரஸ் ஊழியர்களான பெண்கள் வந்தனர். அவர்களில் ஒரு பெண், "அரசாங்கத்தின் அளவு கடந்த இம்சை, பதிலுக்குப் பலாத்காரத்தில் இறங்கிவிடுமாறு நம் மக்களைச் செய்துவிட்டது என்பதை நமது கடைசிப் போராட்டத்தில் கண்டோம். இப்பிரச்னையை எப்படிச் சமாளிப்பது ?" என்று கேட்டார். இதற்குக் காந்திஜி அளித்த பதிலாவது: "இது பெண்களின் கவலை. அகிம்சை பெண்களிடம் இயல்பாக இருக்கும் தன்மை என்று நான் எத்தனையோ தடவைகளில் கூறியிருக்கிறேன். எத்தனையோ காலமாக ஆண்கள் பலாத்காரத்தில் பயிற்சி பெற்று வந்திருக்கின்றனர். அகிம்சையினராவதற்கு அவர்கள் பெண்களின் குணத்தை வளர்த்துக்கொள்ள வேண்டும். அகிம்சையை நான் மேற்கொண்டதிலிருந்து நானே மேலும் மேலும் பெண்ணாகியிருக்கிறேன். பெண்கள் குடும்பத்திற்காகத் தியாகம் செய்து பழகியிருப்பவர்கள். தேசத்திற்காகத் தியாகம் செய்ய இப்பொழுது கற்றுக்கொள்ள வேண்டும். லட்சாதிபதிகளின் மனைவிகள் உள் பட எல்லாப் பெண்களையும் என் அகிம்சை ராணுவத்தில் சேர்ந்துகொள்ளுமாறு அழைக்கிறேன். கணவன்மார்கள் தாங்கள் லட்சக்கணக்கில் சேவை செய்ததற்காகப் பெருமை அடையலாம். தங்கள் மனைவிமார்களின் சேவைக்காகவும் அவர்கள் பெருமை அடையட்டும்."–ஸ்ரீ பியாரிலால் எழுதிய 'மகாத்மா காந்தி-கடைசிக் கட்டம்; முதல் பகுதி.'

இதுவரை சொன்ன எல்லாம் ஒரு பெண் செய்ய வேண்டியது என்ன என்பதைப் பற்றியவை. ஆனால், இத்தகைய குற்றங்களைப் பார்த்துக்கொண்டிருக்கும் ஓர் ஆண் செய்ய வேண்டியது என்ன? முன்னால் சொன்னதிலேயே இதற்கும் பதில் அடங்கியிருக்கிறது. பார்த்துக்கொண்டு சும்மா இருப்பவனாகவே அவன் இருக்கக்கூடாது. பெண்ணை அவன் பாது காக்க வேண்டும். போலீஸ் உதவிக்காக அவன் ஓடக்கூடாது. ரெயிலில் அபாயச் சங்கிலியை இழுத்துவிடுவதோடு அவன் திருப்தி அடைந்து இருந்துவிடக்கூடாது. அகிம்சையை அனுசரிக்க முடிந்தவனாக அவன் இருந்தால், அப்படிச் செய்வதில் அவன் தன் உயிரைத் தந்தாவது துன்பத்திலிருக்கும் பெண்ணைப் பாதுகாப்பான். அவனுக்கு அகிம்சையில் நம்பிக்கை இல்லையென்றால், அதை அனுசரிக்க அவனால் முடியாது எனின், தனக்கு இருக்கக்கூடிய முழுச் சக்தியையும் கொண்டு அவளைக் காப்பாற்ற வேண்டும். இந்த இரண்டில் எதுவானாலும் தன்னளவில் உயிரைவிட அவன் தயாராக இருக்க வேண்டும்.

நான் கிழவன், தள்ளாதவன், பல் இல்லாதவன். இதனால், நான் அகிம்சையைச் சொல்லிக்கொண்டு ஒரு சகோதரி மானபங்கம் செய்யப்படுவதை உதவியற்றுப் பார்த்துக்கொண்டிருப்பேனாயின், என்னுடைய மகாத்மா விருது பரிகசிக்கப்பட்டு, அவமதிக்கப்பட்டு மறைந்து போய்விடும். நானே அல்லது என்னைப்போன்றவர்களோ குறுக்கிட்டு இம்சையின் மூலமோ அல்லது அகிம்சையினாலோ எங்கள் உயிர்களை விடுவோமாயின் துன்பத்திற்காளான பெண்ணை நாங்கள் நிச்சயமாகக் காப்பாற்ற முடியும்; இல்லாதுபோயினும், அவள் மானபங்கமுறுதுவதை உயிரோடு பார்த்துக்கொண்டிருப்பவர்களாக இருக்கமாட்டோம்.

பார்த்துக்கொண்டிருப்பவர்களைப்பற்றியவை இவை. ஆனால், நமது நாட்டின் சூழ்நிலை முழுவதிலும் வீரமான உணர்ச்சி நிலவி வருமாயின், அது எல்லோருக்கும் தெரிந்துவிடுமானால், பெண்கள் கற்பழிக்கப்படுவதை எந்த இந்தியனும் பார்த்துக்கொண்டு சும்மா இருக்கமாட்டான்; பெண்களைத் தீண்டிவிடும் துணிச்சல் எந்தச் சிப்பாய்க்கும் இருக்கவே இருக்காது என்று நான் தைரியமாகக் கூறுவேன். அத்தகைய உணர்ச்சி இல்லாததுதான் வெட்கப்படவேண்டிய விஷயம். ஆனால், இக்குறையைப் போக்குவதற்கு முன் வரத் தயாராகச் சிலர் இருக்கின்றனர் என்றால் அது எவ்வளவோ மேல்.

அரசாங்கத்தினிடம் செல்வாக்குள்ளவர்கள், அதிகாரிகள் தக்க நடவடிக்கை எடுக்கும்படி செய்ய முயற்சி செய்ய வேண்டும். ஆனால், தன்னுதவியே சிறந்த உதவி. இப்பொழுதுள்ள நிலையில் நமது சொந்த பலத்தையும் கடவுள் உதவியையுமே நாம் நம்பியிருக்க முடியும்.

[19-2-1942-இல் வர்தாவுக்குப் போகும் வழியில் ரெயிலில் எழுதியது.] —'ஹரிஜன்' - 1--3--1942

4

# பெண்கள் தாக்கப்படுவதும் அகிம்சையும்

1945 டிசம்பர் 29-ஆம் தேதி இரவு மகிஷதாலையும் சுற்றுப்புறக் கிராமங்களையும் சேர்ந்த சுமார் 200 ஆண்களையும் பெண்களையும் காந்திஜி சந்தித்தார். அவர்களில் உள்ளூர் ஊழியர்களும், 1942 எழுச்சியின்போது போலீஸ், ராணுவ அட்டூழியங்களுக்கு ஆளானவர்களும் இருந்தனர். தம்மை ஏதாவது கேட்க விரும்பினால் கேட்கலாம் என்றார் காந்திஜி. "எங்கள் பெண்கள் மானபங்கப்படுத்தப்படும் நிலையிலும் நாங்கள் அகிம்சையோடு இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகிறதா ?"—இது அவர்கள் கேட்ட முதற் கேள்வி. சுயராஜ்யம் பெறுவதற்காகத் துன்பங்களை அனுபவிப்பதில் அவர்களுக்கு நம்பிக்கை உண்டு. அகிம்சையிலிருந்து தவறிவிட்டால் சுயராஜ்யம் வருவது காலதாமதமாகிவிடும் என்பதிலும் அவர்களுக்கு நம்பிக்கை உண்டு. ஆனால் தங்கள் பெண்கள் மானபங்கப்படுத்தப்படும்போது அவர்கள் என்ன செய்வது ?

இதற்குக் காந்திஜி கூறிய பதிலாவது : "இதே கேள்வியை 1920-இலும் 1921-இலும் என்னைக் கேட்டார்கள். அப்பொழுது கூறிய பதிலையே இப்பொழுது திரும்பவும் சொல்ல முடியும். அகிம்சையைப்பற்றியும், நான் கருதும் சுயராஜ்யத்தைக் குறித்தும் சரியாகத் தெரிந்துகொள்ளவில்லை என்பதையே இக்கேள்வி காட்டுகிறது. பெண்களின் மானத்தைக் கொடுத்தாவது சுயராஜ்யத்தைப் பெற வேண்டும் என்று நான் விரும்பவில்லை. அகிம்சை என்று வழங்கும் ஒன்றினால் பெண்கள் மானத்தைப் பாதுகாக்க முடியவில்லையென்றால், பெண்கள் தங்கள் மானத்தைக் காத்துக்கொள்ளுமாறு அது செய்யவில்லையானால், அது அகிம்சையே அன்று. நான் கூறுவதை நம்புங்கள்; அது அகிம்சைக்கு மாறான ஒன்றேயாகும்."

1909-இல் 'ஹிந்த் ஸ்வராஜ்' என்ற நூலில் தாம் எழுதியது என்ன என்பதையும் அவர் விவரித்தார். (இதை 'மகாத்மா காந்தி நூல்கள்': முதல் தொகுப்பு 679-ஆம் பக்கம் முதல் 698-ஆம் பக்கம் வரையில் காணலாம்.) மேலும், காந்திஜி கூறியதாவது: "அந்த வாதத்திற்கு அனுபவம் அதிக பலத்தை அளித்திருக்கிறது. ராவணனிடமிருந்து சீதையைக் காப்பாற்றியது யார்? சீதைக்கு இருந்த சிறந்த புனிதத் தன்மையின் காரணமாக அவளுடைய சம்மதமின்றி அவளை நெருங்கும் துணிவு ராவணனுக்கு ஏற்படவில்லை என்று கவி கூறுகிறார். முடிவாக, உங்களுக்கு ஓர் எச்சரிக்கையும் செய்கிறேன். அகிம்சை விரதத்தை மேற்கொண்டதனால் தங்கள் மாதர்களின் மானத்தைப் பாதுகாப்பது தங்களால் முடியாது போய்விட்டது என்று சொல்லிக்கொண்டு யாராவது என்னிடம் வருவார்களானால், அப்படிப்பட்டவர்களுக்கு நான் இடங்கொடுக்கவே மாட்டேன். கோழைத்தனத்திற்குக் கவசமாக அகிம்சை எப்பொழுதும் உபயோகிக்கப்பட்டுவிடவே கூடாது. அது வீரர்களுக்குரிய ஆயுதம். அத்தகைய அட்டூழியங்களைத் திக்கற்றுப் பார்த்துக்கொண்டிருப்பவர்களாகிவிடுவதைவிடப் பலாத்காரத்தைக் கொண்டு போராடி அதனால் அவர்கள் சாவதும் மேல் என்பேன். அத்தகைய அட்டூழியங்களின் கதையை வந்து சொல்ல உண்மையான அகிம்சைவாதி உயிரோடு இருக்கவே மாட்டார். அகிம்சையோடு எதிர்ப்பதில் அவர் அந்த இடத்திலேயே உயிரை விட்டுவிடுவார்."

இச்சந்தர்ப்பத்தில் காந்திஜியின் வடமேற்கு எல்லைப்புற யாத்திரை நினைவுக்கு வருகிறது. அங்கே குதா-இ-கித்மத்கார்கள் இதே கேள்வியைக் கேட்டனர். மகிஷதாவில் இப்பொழுது காந்திஜி தாம் கூறிய பதிலையே அவர்களுக்குக் கூறினார். "அந்தத் துஷ்டன் உங்களைக் கொன்றுவிடவில்லை. ஆனால், உங்களைக் கட்டிவைத்து வாயையும் அடைத்து நீங்கள் பேசாமல் அட்டூழியத்தைப் பார்த்துக்கொண்டிருக்கும்படி செய்துவிட்டால் அப்பொழுது என்ன செய்வீர்கள்?" என்று அவர்கள் உடனே கேட்டனர்.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: "கட்டுகளைத் தகர்த்துக்கொள்ளுவதற்குப் பாடுபடுவேன் அல்லது அம்முயற்சியில் என்னையே தகர்த்துக்கொள்வேன். எப்படியும் திக்கற்ற சாட்சியாக மாத்திரம் இருந்துவிட மாட்டேன். அந்தத் தீவிரமான உணர்ச்சி இருக்கும்போது கடவுள் உங்கள் உதவிக்கு வருவார்; அந்த அக்கிரமத்தை உயிரோடு பார்த்துக்கொண்

டிருக்கும் வேதனையிலிருந்து உங்களை எப்படியும் *அவர் மீட்பார்.''

மகிஷதால், 29—12—1945 — 'ஹரிஜன்' - 10—2—1946

5

# செய்வது என்ன ?

ஒரு நண்பர் கீழ்வரும் கேள்விகளை அனுப்பியிருக்கிறார் :

**கேள்வி :** காலிகளோ அல்லது மற்றவர்களோ தாக்கினாலும் கண்டிப்பான அகிம்சையையே அனுசரிக்க வேண்டும் என்று நீங்கள் எப்பொழுதும் கருதி வருவதோடு கூறியும் வந்திருக்கிறீர்கள். பெண்கள் தாக்கப்படும்போதும் அல்லது கற்பழிக்கப்படும்போதும் அப்படித்தான் இருந்து வரவேண்டுமா? அகிம்சை சம்பந்தமாக நீங்கள் கூறுவதைப் பின்பற்ற மக்களால் முடியவில்லையாயின், அவர்கள் கோழைகளாகச் சாக வேண்டும் என்று யோசனை கூறுவீர்களா? அல்லது ஆக்கிரமிப்பைப் பலாத்காரத்தினால் எதிர்க்க வேண்டும் என்பீர்களா?

**பதில் :** நான் கற்பனை செய்துகொள்வது போன்ற ஒரு சமூகத்தில், கேள்வி கேட்டிருப்பவர் கூறும் அட்டூழியம் நடக்கவே நடக்காது. ஆனால், நாம் இன்று வாழ்ந்துவரும் ஒரு சமூகத்தில் அத்தகைய அக்கிரமங்கள் நடந்துகொண்டுதான் வருகின்றன. இதில் என் பதில் சந்தேகத்திற்கு இடமில்லாதது. அகிம்சையோடிருக்கும் ஓர் ஆண் அல்லது பெண், தற்பாதுகாப்புக்கு அல்லது தம் பெண்டிரின் மானத்தைக் காப்ப

---

* ஒரு பெண் தன்னுடைய மானத்தை ஆயுத உதவியைக் கொண்டாயினும் காத்துக்கொள்ள வேண்டுமா, வேண்டாமா என்று ஒரு பெண்மணி எரவாடாச் சிறையிலிருந்த மகாத்மா காந்திக்கு எழுதினார். இதற்குக் காந்திஜி 1932 ஜூலை 31-ஆம் தேதி எழுதிய பதிலில் வருமாறு கூறினார் :

"உள்ளத்தில் புனிதமாக இருக்கும் ஒரு பெண்ணுக்கு, கடவுள் தன்னைக் காக்கக் கடமைப்பட்டிருக்கிறார் என்ற நம்பிக்கையும் இருக்க வேண்டும். அதே ஆயுதங்கள் அப்பெண்ணுக்கு எதிராகவும் உபயோகிக்கப்பட்டுவிடுமாகையால் ஆயுதங்களை நம்பியிருப்பது சரியல்ல. அன்பு விதியை மேற்கொண்டிருப்பவருக்கு ஆயுதங்கள் தேவையே இல்லை. அவளுடைய அகிம்சை, அவளுடைய அன்பு ஆகிய இரண்டுமே அவளுடைய ஆயுதங்கள்."

இதே விஷயத்தைக் குறித்துக் காந்திஜி எழுதிய மற்றொரு கடிதமாவது : "ஆணையோ அல்லது பெண்ணையோ பாதுகாப்பதற்கு, புறம்பான ஆயுதம் எதுவுமே தேவையில்லை. ஆயுதம் அநேகமாக எதிரிக்குத்தான் உதவுவதாகிவிடுகிறது என்பது ஒரு காரணம். மேலும், அன்பின் விதியை மேற்கொண்டு நடக்கிற ஆணோ பெண்ணோ தம் சாவின் மூலம் தம்மைப் பாதுகாத்துக்கொள்ளுவரேயன்றிக் கொல்லுவதனால் அன்று. தங்கள் கற்பு, அதாவது கடவுள் தங்களுக்குப் பாதுகாப்பு என்ற நம்பிக்கையைத் திரௌபதியைப்போல் பெண்கள் வளர்த்துக்கொள்ள வேண்டும். நல்ல நெறி என்ற உருவில் கடவுள் நம் உள்ளத்தில் உறைந்து நம்மைப் பாதுகாக்கிறார்."—('மகாதேவ தேசாயின் தினக்குறிப்பு' என்ற நூலிலிருந்து.)

தற்கு வஞ்சம் தீர்த்துக்கொள்ளுவதோ, கோபமோ, துவேஷமோ இல்லாமல் சாவார்; சாக வேண்டும். இதுவே உயர்ந்ததான வீரம்.

நான் காட்டும் வழி என்று தவருகக் கூறப்படும் வாழ்வின் மகத்தான இந்த விதியைப் பின்பற்ற முடியாதவர்களாக இருந்தால், அல்லது விரும்பாதவர்களாக இருந்தால், அடுத்த படியாகவுள்ள சிறந்த முறை, சாகும் வரை எதிர்த்துத் தாக்குவது அல்லது எதிர்ப்பது. என்ருலும், முதல் கூறிய முறைக்கு இது விலகியதாகும். இம்சையைவிட மிக மோசமான பேடிமையே கோழைத்தனம். கோழைக்குப் பழி தீர்த்துக்கொள்ளும் ஆசை இருக்கிறது. ஆனுல், சாவதற்கு அஞ்சுகிருன். தன்னைப் பாதுகாக்க வேண்டும் என்று மற்றவர்களையோ அல்லது ஆட்சியில் இருக்கும் அரசாங்கத்தையோ எதிர்பார்க்கிருன். மனிதருள் இழிவானவன் கோழை. ஆண்களும் பெண்களுமடங்கிய சமூகத்தில் வாழ்வதற்கே அவன் தகுதி இல்லாதவன். கடைசியாக, இன்னும் ஒன்றும் கூறுகிறேன்: பெண்கள் என்னுடைய யோசனையைப் பின்பற்றினுல், இப்பொழுது பின்பற்றுவார்களானுல், தம்முடைய சகோதரனிடமிருந்தோ அல்லது சகோதரியிடமிருந்தோ உதவியை எதிர்பார்த்துக்கொண்டிராமல், ஒவ்வொருவரும் தம்மைப் பாதுகாத்துக்கொள்ள முடியும்.*

புது டில்லி, 9—9—1946 ‘ஹரிஜன்’ - 15—9—1946

---

* மகாதேவ தேசாய் தமது தினக் குறிப்பில் 1932 ஜூன் 3-ஆம் தேதியிட்டு இது சம்பந்தமாகக் காந்திஜியின் மற்ருெரு கருத்தையும் வருமாறு கொடுத்திருக்கிருர்:

“ ‘எஸ்’ஸுக்குப் பாபு வழக்கம்போல் நீண்ட கடிதம் எழுதினுர். அதாவது: ஒரு பெண்ணைப் பலவந்தமாகக் கெடுப்பதைப்பற்றி நீங்கள் கூறியிருக்கும் நியாயம் சரியானதே. கற்பழிக்கப்படும் அபாயத்தில் இருக்கும் ஒரு பெண்ணுக்குத் தற்கொலை செய்துகொள்ள உரிமை உண்டு என்ருல், அப்பெண்ணுகிய சொத்தைப் பாதுகாப்பதற்குக் கடமைப்பட்டிருக்கும் தருமகர்த்தாவுக்கும் அச்சொத்து, தம்மிடமிருந்து திருடப்பட்டுவிட்டதால், தற்கொலை செய்துகொள்ள உரிமை உண்டு. ஆனுல், தாம் செய்யவேண்டிய சரியான காரியம் எது என்பதை அவரே சிந்தித்து முடிவுக்கு வந்திருக்க வேண்டும். பலவந்தம் செய்யப்படுவதிலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ளத் தன் உயிரைப் போக்கிக்கொள்ள வேண்டாம் என ஒரு பெண் கருதிவிடுவாளானுல், அவள் தவறு செய்துவிட்டாள் எனக் கூற நமக்கு உரிமை இல்லை. தம் பாதுகாப்பில் இருக்கும் இந்தச் சொத்தைப் பாதுகாக்க ஒரு தருமகர்த்தா உயிரைக் கொடுத்து விடுவாராயின், அவர் செய்தது சரிதான் என்று நாம் எண்ணிக் கொள்ள முடியாது. இதெல்லாம் அச்சமயத்தில் ஒவ்வொருவரின் மனப்போக்கும் இருக்கும் நிலையைப் பொறுத்தது. என்ருலும் ஒரு பெண்ணுக்குத் தேவையான வீரம் மாத்திரம் இருக்குமானுல், தனது கற்பு கெடுவதைவிடத் தனது உயிரைக் கொடுக்கவே அவள் தயாராய் இருப்பாள் என்று இன்னும் நம்புகிறேன். நான் பெண்களுடன் பேசும்பொழுது அத்தகைய மனப்போக்கிற்கே உற்சாகம் அளித்து, உறுதி மாத்திரம் இருந்தால் உயிரைப் போக்கிக்கொள்ளுவது சுலபமான

# 6

# பெண்களின் துயரம்

"கவனிக்க வேண்டிய முக்கியமான விஷயம் சாவு அல்ல. ஆனால், சாவை எப்படி ஏற்கிருய் என்பதே."—இவ்வாறு ஒரு சமயம் காந்திஜி கூறினர். அவர் மேலும் கூறியதாவது: "நீ மாத்திரம் வீரத்தோடு சாவதாக இருந்தால், உன் சகோதரன் ஒருவனின் கையில் மாளுவது ஒரு பாக்கியம். ஆனால், திருட்டுத்தனமாக அபகரித்துச் செல்லப்பட்டுப் பலவந்தமாக மதம் மாற்றப்படும் பெண்களின் நிலைமை என்ன? யாரையும் பலவந்தமாக 'மதம் மாற்றி'விட முடியாது என்பது இங்கு விஷயத்திற்கு முக்கியமன்று. இந்தியப் பெண்கள் தாங்கள் உதவியற்றிருப்பதாக இவ்வளவு தூரம் ஏன் உணர வேண்டும்? வீரம் ஆண்களுக்கு மாத்திரம் ஏகபோகமாக இருப்பதா? ஜான்ஸி ராணி வாள் ஏந்தியதோடு தன் வாளின் வீரத்தால் தன் காலத்துச் சிறந்த வீரர்களையும் தூக்கியடித்தாள். என்ருலும், பொதுவாகப் பெண்கள் வாள்களை ஏந்துவதில்லை. எல்லோரும் ஜான்ஸி ராணிகள் ஆகிவிட முடியுமா? ஆனால், சீதையின் உதாரணத்தை எல்லாப் பெண்களும் பின்பற்ற முடியும். மகா வல்லமையுள்ள ராவணனுக்குச் சீதையைத் தொடும் தைரியங் கூட வரவில்லை. ஜான்ஸி ராணியைப் போன்றவர்களை அடக்கி விட முடியும்.

"சீதையின் உதாரணம் ஏதோ புராணக் கதை என்று யாரும் அலட்சியமாக எண்ணிவிட வேண்டாம். ஆலிவ் டோக்கின்* உதாரணத்தையும் உங்களுக்குக் கூறுகிறேன். அப்பெண்

---

காரியம் என்பதையும் தெளிவாக எடுத்துக் காட்டுவேன். ஏனெனில், உதவிக்கு ஆண் யாருமே இல்லாமற் போனல், ஒரு கட்டாரியையோ அல்லது கைத்துப்பாக்கியையோ உபயோகிக்கக் கற்றுக்கொள்ளாதுபோயின், தவறு செய்கிறவனுக்கு இணங்கிவிடுவதைத் தவிரத் தாங்கள் எதுவுமே செய்ய இயலாது என்ற தவருன கருத்து அநேகம் பெண்களுக்கு இருந்துவருகிறது. பாதுகாப்பவரின் கையிலிருக்கும் ஆயுதத்தை நம்பவேண்டாம் என்றே நான் அவர்களுக்கு நிச்சயமாகக் கூறுவேன். அவர்களுடைய கற்பே அவர்களுக்குச் சரியான பாதுகாப்பாக இருக்கும். அப்படி இல்லையென்ருல் கட்டாரியையோ கைத்துப்பாக்கியையோ உபயோகிப்பதற்குப் பதில் அவர்கள் தற்கொலை செய்துகொள்ளலாம். தங்களை அபலைகள் என்று எண்ணிக்கொள்ள வேண்டியதே இல்லை."

* தென் ஆப்பிரிக்காவில் காந்தியடிகள், மீர் ஆலமினுல் தாக்கப்பட்டு நினைவிழந்திருந்தபோது, ஸ்ரீ டோக் என்பவர் வீட்டில்தான் முதற் சிகிச்சை பெற்ருர். இப்பெருந்தகையாரின் குமாரியே ஆலிவ் டோக் அம்மையார். இவர் நீக்ரோக்களின் சமூகச் சீர்திருத்தத்தில் ஈடுபட்டவர். இவர்களைப்பற்றிய செய்திகளை மகாத்மா காந்தி நூல்கள், முதற் பாகம், 218-226–ஆம் பக்கங்களில் பார்க்க.

மணி தன்னை யாராவது தாக்குவார்களோ என்ற பயம் ஒரு சிறிதும் இல்லாமல், ஆப்பிரிக்காவின் மத்தியில், ஆடைகளைக் கூட அணியாத காட்டுமிராண்டிகளான நீக்ரோக்களிடையே போய் வசிக்கும் துணிவு கொண்டார். இந்தியப் பெண்கள் அத்தகைய உயர்ந்த வகை வீரத்தைப் பழகிக்கொள்ளவேண்டும் என்றே நான் விரும்புகிறேன். பலவந்தமாகத் தூக்கிச் சென்று விடாமல் ராணுவமும் போலீஸும் பெண்களைப் பாது காக்கலாம். ஆனால், இதற்கு முன்னால் போலீஸும் ராணுவமும் இருந்தும் அபகரிக்கப்பட்டவர்கள், அபகரிக்கப்படக் கூடியவர்கள் கதி என்ன? தங்கள் தலையிலுள்ள ஓர் உரோமத்திற்குத் தீங்கு ஏற்படுவதற்குள் உயிரை விட அவர்கள் கற்றுக்கொள்ள வேண்டும். மூச்சுத் திணறிவிடும்படி செய்துகொண்டோ அல்லது நாக்கைக் கடித்துக்கொண்டோ ஒரு பெண் செத்து விடுவது சாத்தியம் என்று துணிந்து கூறுவேன்.''

சாவதற்குக் காந்திஜி மேற்கண்டவாறு கூறிய முறையை மறு நாள் அவர் மாற்றிக்கொள்ள வேண்டியதாயிற்று. யாரும் தம்மை மூச்சுத்திணற அடித்துக்கொண்டோ அல்லது நாக்கைக் கடித்துக்கொண்டோ செத்துவிட மாட்டார்கள் என்று, முதல் நாள் காந்திஜி கூறியதைக் கேட்டுக்கொண்டிருந்த டாக்டர் சுசீலா கூறினார். மறு நாள் காலை காந்திஜியைச் சந்தித்த டாக்டர் பி. ஸி. ராயும், டாக்டர் சுசீலா கூறியதை ஒப்புக் கொண்டார். அதன் பேரில் காந்திஜி பிறகு சொன்னதாவது :

'' உடனே உயிரை மாய்த்துக்கொள்ள வைத்திய சாத்திரம் அறிந்திருக்கும் ஒரே முறை, கடுமையான விஷத்தை உட்கொண்டு விடுவதேயாம். வேறு எதுவும் இல்லையென்றால், மானபங்கப்படுத்தப்படும் அபாயத்திலிருப்பவர்கள், அத்தகைய மானபங்கத்திற்கு உடன்படுவதற்கு முன்னால் விஷத்தை உட்கொண்டுவிடுமாறு யோசனை கூறுவேன். எனினும், சில யோகசாதனங்களினால் உயிரைப் போக்கிக்கொண்டுவிட முடியும் என்று யோக சாதனங்களை அறிந்தவர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். இதைப்பற்றி ஆராய முயல்வேன். என்னுடையது வெறும் வறட்டுக் கருத்து அன்று. உண்மையாகச் செய்ய வேண்டும் என்ற உணர்ச்சியின் பேரிலேயே கூறுகிறேன். மானபங்கப்படுத்தப்பட்டுவிடுவதற்கு முன்னால் செத்து விடுவது என்ற இரும்பான உறுதி கொண்டு விட்டால், அதுவே போராட்டத்திற்குத் தயாராகிவிட்டதாகும். கணவனோடு இருக்கும்போதோ அல்லது மயானத்தில் சுடலை

யின் நடுவோதான் ஒரு பெண்ணுக்குச் சுகம் என்று எண்ணும் வகையில் நம் நாட்டுப் பெண்கள் வளர்க்கப்பட்டிருக்கிறார்கள். தாங்கள் உதவியற்றவர்கள் என்று உணரும்படி பெண்கள் இருப்பதைவிட ஆயுதங்களைக் கையாள இந்தியப் பெண்கள் பயிற்சி பெறுவதையே நான் விரும்புவேன். பெண்கள் கட்டாரிகளையும் கைத்துப்பாக்கிகளையும் எடுத்துச் செல்லும் வழக்கம் அதிகமாகிக்கொண்டிருக்கிறது. என்றாலும், பலத்த தாக்குதல்களுக்கிடையில் ஒருவருடைய மானத்தைக் காத்துக்கொள்ளுவதற்கு ஆயுதங்கள் போதுமானவை அல்ல என்பதை நான் அறிவேன். ஆயுதங்கள் ஒருவரின் உதவியற்ற நிலையின் சின்னமேயன்றிப் பலத்தின் சின்னமன்று. ஒருவரிடம் இருக்கும் ஆயுதத்தைப் பறித்துவிட்டால் பிறகு அடைக்கலம் புகுவது தவிர வேறு வழியில்லை.''

புது டில்லி, 18—10—1946 —'ஹரிஜன்' - 27—10—1946

# 7

# கோழைத்தனம் போன்ற பாபம் வேறில்லை.

கிழக்கு வங்காளத்திலே பெண்கள் மானபங்கத்திற்குள்ளாவது குறித்துப் பிரார்த்தனைக் கூட்டத்தில் காந்திஜி கூறியதாவது :

''நம் பெண்கள் சுலபத்தில் திகில் அடைந்துவிடுகின்றனர். *மானபங்கப்படுத்தப்படுவதற்குத் தங்களை அனுமதித்து விடுவதற்குப் பதிலாகத் தற்கொலை செய்துகொள்ளுமாறு நான் பெண்

* ஸ்ரீ மகாதேவ தேசாய் தமது தினக்குறிப்பில் 1932, மே 30-ஆம் தேதியிட்டு வருமாறு எழுதியிருக்கிறார் : 'எஸ்' பிரச்னைகளைத் தாமே கற்பனை செய்துகொண்டு பாபுவிடம் அவைகளுக்குப் பரிகாரங்களைக் கேட்பது வழக்கம். அவரிடம் பாபுவுக்குப் பிரியமாகையால் அவருடைய கடிதங்களுக்கு விவரமாகவே பதில் எழுதுவார். பலவந்தத்திற்கு உட்பட்டுவிட்ட பெண் கருத் தரித்ததைப்பற்றியும் அப்பெண் தற்கொலை செய்துகொள்ளுவதைக் குறித்தும் இத்தடவை கேட்டிருந்தார். அதற்குப் பாபு எழுதிய பதிலாவது : "ஒரு பெண்ணின் விருப்பம் இல்லாது யாரும் அவளைப் பலவந்தம் செய்து கெடுத்துவிட முடியாது என்பது என் கருத்து. இதை டாக்டர்களும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். தன்மானத்தைக்காத்துக்கொள்ளுவதற்கு அவள் சாகத்தயாராயில்லாததனால், தவறிழைப்போனுக்கு முடிவில் இணங்கிவிடுகிறாள். ஆனால், சாவைப்பற்றிய பயமே முற்றிலும் இல்லாதவள்தான் கற்பழிக்கப்படுவதற்கு முன்னாலேயே இறந்துவிடுவாள். இதை எழுதுவது எளிது, ஆனால், அனுசரிப்பது கஷ்டமே. ஆகையால், தவறிழைப்பவனுக்கு விரும்பாமலே இணங்கி விடுபவள், பலவந்தமாகக் கெடுக்கப்பட்டாள் என்று நாம் வைத்துக்கொள்ளுவதே நல்லது. அவள் அதனால் கருத் தரித்துவிடுவாளாயின் கருவைச் சிதைக்க அவள் முற்படக்கூடாது. அத்தகைய அட்டூழியத்திற்கு உட்பட்ட பெண் குற்றமற்றவள் ; அவளுக்காகப் பரிதாபப்பட வேண்டும்......"

களுக்குக் கூறிய புத்திமதியைப்பற்றித் தப்பான அபிப்பிராயம் உண்டாகியிருக்கிறது. விரும்பினால் தற்பாதுகாப்புக்கு அவர்கள் ஓர் உடைவாளை வைத்துக்கொள்ளலாம். பெருமளவான பலத்திற்கு முன்னால் உடைவாள் பயனற்றே போகும். மானபங்கத்திற்கு உடன்படுவதைவிட விஷம் தின்று தங்களை மாய்த்துக் கொள்ளுமாறு நான் அவர்களுக்குக் கூறினேன். இதற்குத் தயாராக இருப்பது ஒன்றே அவர்களைத் தைரியத்துடன் இருக்கும்படி செய்யும். சாவதற்கு அஞ்சாத ஒரு பெண்ணை எவனும் மானபங்கம் செய்துவிட முடியாது. தற்பாதுகாப்புக்கு அவர்களுக்கு இருக்கும் வழிகள் இரண்டு. தாங்கள் கொல்லுவது கொல்லப்படுவது அல்லது கொல்லாமலேயே சாவது என்பன அவை. பின்னர்க் கூறிய வழியைத்தான் நான் பெண்களுக்குப் போதிப்பேனேயன்றிப் முன்னர் வருவதையன்று. எல்லாவற்றையும்விடப் பயமின்றி அவர்கள் இருக்க வேண்டும் என்றும் விரும்புகிறேன். கோழைத்தனத்தைவிடப் பெரிய பாபம் வேறு எதுவுமே இல்லை.

"ஆனால், பலாத்காரத்தில் நம்பிக்கையுள்ளவர்களுக்கும் ஓர் ஒழுக்க விதி உண்டு. கிழக்கு வங்காளத்தில் அனுசரிக்கப்பட்டதாகக் கூறப்படும் முறையை நீங்கள் அனுசரித்துவிட வேண்டாம். மௌலானா சாகிபின் அறிக்கையையும், அகில இந்திய மஜ்லிஸ்-ஈ-ஆஹ்ராரின் முன்னாள் தலைவரின் அறிக்கையையும் நீங்கள் படித்திருப்பீர்கள். பலவந்த மதமாற்றத்தையோ, பெண்களை அபகரித்துச் செல்லுவதையோ, பெண்களின் கற்பைக் கெடுப்பதையோ இஸ்லாம் அனுமதிக்கவில்லை என்று அவர்கள் கூறியிருக்கிறார்கள்."

புது டில்லி, 27—10—1946

—'ஹரிஜன்' - 3--11--1946

## 8

# வாளன்று, ஒழுக்கந்தான்

சண்டீபூரில் தாம் தங்கியிருந்த வீட்டின் முன் தாழ்வாரத்தில் கூடியிருந்த பெண்களின் கூட்டத்தில் பேசுகையில் காந்திஜி கூறியதாவது :

"பெண்கள், கடவுளையும் தங்கள் சொந்த பலத்தையும் நம்பியிருக்க வேண்டுமேயன்றிப் பிறர் உதவியை எதிர்பார்த்திருக்கக் கூடாது. அவர்கள் இன்னும் அதிக வீரத்துடன் இருக்க வேண்டும். பயங் கொண்டுவிடுவார்களானால் காலிகளின் அட்டூழியங்களுக்கு எளிதில் இலக்காகிவிடுவார்கள்.

"இந்தியப் பெண்கள் அபலைகள் (பலமற்றவர்கள்) அல்ல. முன்காலத்தில் அவர்கள் வீரமான செய்கைகளுக்குப் பெயர் போனவர்கள். அந்தக் கீர்த்தியை அவர்கள் அடைந்தது ஒழுக்கத் தினுலேயே யன்றி வாளினுல் அன்று. இன்றுகூட நாட்டுக்கு அவர்கள் பல வழிகளில் உதவி செய்யலாம். சில பயனுள்ள வேலைகளைச் செய்வதன் மூலம் தங்களுக்கு உதவியாக இருப்பதுடன் நாடு முழுமைக்கும் உதவியாக இருந்து அது தன் லட்சியத்தை எய்தச் செய்யலாம்.

"* நோவாகாலியில் நடந்ததற்கெல்லாம் பொறுப்புள்ளவர் ஆண்கள் மாத்திரமல்ல; இதற்குப் பெண்களும் பொறுப்புள்ளவர்களாவர். முன்பு திரௌபதியும் சீதையும் செய்ததைப் போன்று அச்சமின்றித் தைரியமாக இருப்பதோடு கடவுளிடத்தில் நம்பிக்கையையும் வைக்குமாறு உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்."

—'ஹரிஜன்' - 26--1--1947

# 9

# ஒரு பெண்ணின் சங்கடம்

**கேள்வி :** *காலிகள் தாக்கும்போது ஒரு பெண் என்ன செய்வது? ஓடிவிடுவதா அல்லது பலாத்காரத்தினுல் எதிர்ப்பதா? தப்பி ஓடிவிடுவதற்குப் படகுகளைத் தயாராக வைத்திருப்பதா அல்லது ஆயுதங்களை உபயோகித்துப் பாதுகாத்துக்கொள்ளத் தயாராவதா?*

**பதில் :** இக்கேள்விக்கு என் பதில் மிக எளிதானது. என்னைப் பொறுத்தவரையில் பலாத்காரத்திற்குத் தயாராகிக் கொள்ளுவது என்பதற்கே இடமில்லை. உயர்வகை வீரத்தை விருத்தி செய்துகொள்ளுவதாயின் எல்லாத் தயாரிப்பும் அகிம்சைக்கானதாகவே இருக்க வேண்டும். கோழைத்தனத்தைவிடப் பலாத்காரத்தை உபயோகிப்பதே மேல் என்ற அளவில்தான் பலாத்காரத்தை ஏற்க முடியும். ஆகையால், அவசர நிலைமையில் தப்பி ஓடிவிடுவதற்கு என்று நான் படகுகளைத் தயார் செய்து வைத்துக்கொள்ள மாட்டேன். அகிம்சையோடு கூடிய ஒருவருக்கு அவசர நிலைமை என்பதே கிடையாது. ஆகவே, ஆணுயிருந்தாலும், பெண்ணுயிருந்தாலும், பெருந்தன்மையாகவும் அமைதியுடனும் மரணத்திற்குத் தயாராவது ஒன்றேதான் சிறந்தது. அவனே அல்லது அவளோ உதவியற்

* நோவாகாலி, கிழக்கு வங்காலத்தில் ஒரு ஜில்லா. நோவா காலி என்பதற்குப் படகுக் கால்வாய் என்பது பொருள்.

றிருந்தாலும், சாக அஞ்சக்கூடாது. ஏனெனில், கடவுளிட மிருந்தே உண்மையான உதவி கிடைக்கும். இதைத் தவிர நான் வேறு எதையும் உபதேசம் செய்ய முடியாது; நான் உபதேசம் செய்கிறபடி நடக்கவே நான் இங்கு இருக்கிறேன். அத்தகைய ஒரு வாய்ப்பு எனக்கு இருக்குமா, அளிக்கப் படுமா என்பது எனக்குத் தெரியாது. காலிகள் தாக்கும் போது ஆயுதங்களின்றித் தடுத்துக்கொள்ள முடியாத பெண் களுக்கு ஆயுதங்களை வைத்துக்கொள்ளுமாறு யோசனை கூற வேண்டியதில்லை. அவர்கள் ஆயுதங்களையே வைத்துக்கொள்ளு வார்கள். ஆயுதங்களை வைத்துக்கொள்ளுவதா, கூடாதா என் பதைக் குறித்து இடைவிடாது கேட்கப்பட்டு வருவதில் ஏதோ தவறு இருக்கிறது. இயற்கையாகவே சுயேச்சையுடன் இருக்க மக்கள் அறிந்துகொள்ள வேண்டும். உண்மையான, சரியான எதிர்ப்பு அகிம்சையில்தான் உண்டு என்ற முக்கிய மான போதனையை அவர்கள் நினைவில் வைத்திருப்பார்களா யின், அதற்கு ஏற்றாற்போலத் தங்களுடைய நடத்தையையும் அமைத்துக்கொள்வார்கள். உலகம் அதைத்தான் யோசிக்கா மல் செய்துகொண்டு வந்திருக்கிறது. அது அகிம்சையினால் பிறந்த உயர்ந்த வகையான தீரமாக இல்லாததனால், அது அணுக்குண்டு அளவுக்கு ஆயுதத்தைத் தாங்குகிறது. பலாத் காரம் பயனில்லாதது என்பதை அதில் காணாதவர்கள் இயல் பாகவே தம்மால் இயன்ற அளவு ஆயுதமே தாங்குவார்கள்.

நான் தென்னாப்பிரிக்காவிலிருந்து திரும்பியதிலிருந்து நன்கு உணர்ந்ததும், இடைவிடாததுமான அகிம்சைப் பயிற்சி இந்தியாவில் இருந்து வந்திருக்கிறது. அதன் பலனையும் பார்த்திருக்கிறோம்.

**கேள்வி:** சரண் புகுவதைவிட உயிரையே போக்கிக் கொண்டுவிட வேண்டும் என்று ஒரு பெண்ணுக்கு யோசனை கூறலாமா?

**பதில்:** இக்கேள்விக்குத் திட்டமான பதில் தேவையா கிறது. நோவாகாலிக்குப் புறப்படும்முன் இக்கேள்விக்கு டில்லி யில் நான் பதில் சொல்லியிருக்கிறேன். ஒரு பெண் நிச்சயமாகவே சரணடைவதற்கு முன்னால் தனது உயிரையே போக்கிக் கொள்ளுவாள். அதாவது, என்னுடைய வாழ்க்கைத் திட்டத் தில் சரணாகதி என்பதற்கு இடமே கிடையாது. ஒருவருடைய உயிரை எந்த வழியில் தானே போக்கிக்கொள்ளுவது என்று என்னைக் கேட்கிறார்கள். அதற்கான முறையை



நோவாகாலியில் வகுப்பு வெறித்தீயை அணைக்க கிராமந்தோறும் சென்ற மகாத்மா
தனியே மூங்கில் பாலத்தின்மீது நடக்கிருர்



பிகாரில் கருணாமூர்த்தியிடம் கஷ்ட நிவாரணத்துக்கு நன்கொடை தந்த ஒரு குருட்டு கிராமவாசியுடன்
(26 மார்ச், 1947)

எடுத்துக் கூறுவது என் வேலை அன்றென நான் உடனே கூறினேன். அத்தகைய நிலைமைகளில் தற்கொலையை அங்கீ கரிப்பதில் மற்றொன்றும் இருக்கிறது. தற்கொலைக்குக்கூடத் தயாராயிருக்கும் மனமுடைய ஒருவரிடம், தமது மனத்தையே எதிர்ப்பதற்குத் தேவையான வீரமும், தம்மைத் தாக்க வருப வனை வலிவிழந்து போகும்படி செய்துவிடும் மனத்தூய்மையும் இருக்கும் என்ற நம்பிக்கையும் இருக்கிறது. இந்த வாதத்தை நான் மேற்கொண்டும் நீடிப்பதற்கில்லை. ஏனெனில், மேலும் விவரித்துக்கொண்டு போவதை அது அனுமதிக்க வில்லை. நிச்சயமான ருசு அதற்குத் தேவை; அது இல்லை என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன்.

**கேள்வி:** தன் உயிரையே போக்கிக்கொள்வது அல்லது தாக்குபவனின் உயிரைப் போக்கிவிடுவது இந்த இரண்டில் எதைச் செய்யுமாறு நீங்கள் யோசனை கூறுவீர்கள்?

**பதில்:** தன்னையே மாய்த்துக்கொள்ளுவது அல்லது தாக்கு பவனைக் கொல்லுவது என்ற இரண்டில் ஒன்றை எதைத் தேர்ந்துகொள்வதென்றால்,முதல் சொன்னதைச் செய்யவேண்டும் என்பதில் என் மனத்தில் எந்தவிதமான சந்தேகமும் இல்லை.

பல்லா, 27—1—1947 —'ஹரிஜன்' - 9—2—1947

# 10

# பெண்களுக்குப் புத்திமதி

காந்திஜி நோவாகாலி கிராமங்களில் கால்நடையாக யாத்திரை செய்து வந்தபோது ஒரு நாள் மாலை ஒரு நெல் வயல் ஓரத்தில் உலாவிக்கொண்டிருந்தார். அப்பொழுது பல பெண்கள் அவரை வந்து பார்த்தார்கள். தங்களுடைய சோகம் மிகுந்த கதையை அவரிடம் சொல்லுவதற்கும், தாங்கள் இப் பொழுது வாழ்ந்துகொண்டிருக்கும் நிலைமை என்ன என்பதைக் காந்திஜிக்கு அறிவிக்கவுமே அப்பெண்கள் அங்கு வந்தனர்.

ஒரு வயதான மாது கண்ணீரைத் துடைத்துக்கொண்டே, "மகாத்மாஜி, நாங்கள் என்ன செய்வது என்பதைத் தயை செய்து கூறுங்கள். எங்கள் உயிருக்கும் சொத்துக்களுக்கும் பாது காப்பில்லை. அபாயம் இருக்கிறது என்பது தெரிந்தும் நாங்கள் எங்கள் கிராமங்களில் எப்படி வசிப்பது?" என்று கேட்டார்.

இதற்குக் காந்திஜி அவர்களுக்குக் கூறியதாவது: "நீங்கள் எல்லோரும் கொஞ்சமேனும் பயமின்றி இருக்க வேண்டும் என்று நான் நோவாகாலிக்கு வந்ததிலிருந்து கூறிக்கொண்டு

வருகிறேன். அதன்படி நீங்கள் நடந்து வருவீர்களானல்-உங்கள் வேலைகளிலெல்லாம் சற்றும் பயமின்றி நீங்கள் இருந்து வருவீர்களாயின்-நீங்கள் அமைதியோடு வாழ முடியும்.'' பிறகு காந்திஜி ஆகாயத்தை நோக்கித் தம் கையால் சுட்டி, ''அவனிடம் நம்பிக்கை வையுங்கள். அவனிடம் பிரார்த்தித்து, அவன் ஒருவனைத் தவிர இந்த உலகில் வேறு யாருக்கும் பயப்படாதீர்கள்'' என்ருர்.

—'ஹரிஜன்' - 19—1—1947.

# 11

# அகிம்சையின் ஆட்சி

வழக்கமான பிரார்த்தனை முடிந்த பிறகு காந்திஜி, தமக்கு வந்திருக்கும் இரு கடிதங்களைக் குறித்துக் கூறியதாவது:

''இதில் ஒரு கடிதம் பஞ்சாபில் எனக்குத் தெரிந்த ஒரு பெண்மணியிடமிருந்து வந்திருக்கிறது. நன்ருக எழுதப்பட்டிருக்கும் கடிதம் ஒரு பிஹாரியிடமிருந்து வந்திருக்கிறது. அவர் அதில் தம் விலாசத்தைக் கொடுக்கவில்லை; ஒருவேளை பெயரையும் மாறு பெயராகக் கொடுத்திருக்கக்கூடும். இரண்டும் நட்போடு கூடிய கடிதங்களே. ஆனல், கோபத்தில் எழுதப்பட்டிருக்கின்றன. அவர்களுக்கு அகிம்சையில் நம்பிக்கை போய்விட்டது. நான் என்னுடைய சேவையினல் அடைந்த நற்பெயரைக் காத்துக்கொள்ளுவதற்காக ராஜீய விஷயங்களிலிருந்து விலகி விடுமாறு அக்கடிதங்களில் எனக்குப் புத்திமதி கூறியிருக்கிருர்கள். இவர்களுக்கு அகிம்சையின் சிறப்புத் தெரியாது. சிப்பாய்களோ, போலீஸாரோ, மற்றவர்களோ ஒருவருடைய மானத்தைக் காக்க வேண்டும் என்பது அல்ல; ஒவ்வொரு பெண்ணும் ஆணும், தம் மானத்தைத் தாமே காத்துக்கொள்ளுபவராக இருக்க வேண்டும் என்பதே நான் கண்டு வரும் கனவு. அகிம்சையின் ஆட்சியில்தான் அது சாத்தியமேயன்றி வேறு எதிலும் அல்ல. அகிம்சையின் மூலம் உயர்ந்தவகையான வீரத்தைக் காட்ட வேண்டுமென்று கூற நான் சளைத்ததே இல்லை. பிஹாரின் மக்களுக்குச் சம்பாரணில் அவுரி பயிரிட்டு வந்த விவசாயிகளின் அகிம்சை உதாரணமாக இருந்து வருகிறது. ஒரு நூற்ருண்டுக்கு மேலாக இருந்து வந்த அக்கிரமங்களுக்கு முடிவு கட்ட அவர்களால் முடிந்தது.''

— 'ஹரிஜன்' - 4—5—1947

# 1

# போலீஸ்படைபற்றி என் கருத்து

ஒரு நண்பர் வருமாறு எழுதுகிறுர் :

" நீங்கள் சமீபத்தில் குறிப்பிட்ட சகோதரி சரியாகவே கூறியிருக்கிறுர். வெளிநாட்டு ஆக்கிரமிப்பை அகிம்சை முறை கொண்டு சமாளிக்க எப்பொழுதும் முயற்சி செய்ய வேண்டும் என்றும், ஆயுதபலத்தைவிட அகிம்சையின் மூலம் நல்ல பலனை அடைய முடியும் என்பதைச்செய்து காட்டுவதற்கு இப்பொழுதுள்ள நிலைமை தகுந்த வாய்ப்பை அளிக்கிறது என்றும் அவர் கூறுகிறுர். ஆனுல், உள்நாட்டுக் குழப்பங்களை அடக்குவதில் அகிம்சையை ஆயுதமாக உபயோகிப்பதில் கஷ்டம் இருக்கிறது. நம் நாட்டில் மூன்று வகையான உள்நாட்டுக் கலவரங்கள் இருக்கக்கூடும். வகுப்புக் கலவரம், தொழில்பற்றிய கலவரம், கொள்ளைகள். இவற்றிற்கு மூல காரணங்கள், பரஸ்பர அவநம்பிக்கை, சமூக அநீதி, பொருளாதாரச் சுரண்டலினுலும் வேலையில்லாத் திண்டாட்டத்தினுலும் ஏற்பட்டிருக்கும் மோசமான ஏழைமை. இந்தக் காரணங்கள் இருந்துகொண்டிருக்கும் வரையில், ஆயுதப் படைகள் இருந்தாலும், இம்மூன்று வகைக் கலவரங்களும் நடந்துகொண்டுதான் வரும். இந்த மூல காரணங்களைப் போக்குவதற்குச் சரியான உபாயம் உங்கள் ஆக்க வேலைத் திட்டமே. ஆனுல், அதற்கு நாளாகும். இதற்கு மத்தியில் செய்ய வேண்டியது என்ன? கஷ்டங்களை அகிம்சை தீர்த்துவிடுமா ?

"எந்த வகையிலுமே இம்சையை அனுசரிக்காததான ஒரு சமூக ஒழுங்கை நாம் சிந்திக்க முடியுமா? வாதத்திற்காகப் பார்ப்போம். ஒரு சமூகம் இருக்கிறது ; அதில் பெரும்பான்மையினரிடம் பிறருக்குப் பொறுமையைக் கிளப்பக்கூடிய சாமான்களே இல்லை ; அதில் எல்லோரும் திருப்தியுடன் வாழ்வதற்கான பொருள்கள் இருக்கின்றன என வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது கூட, நிலம் யாருக்குச் சொந்தம் என்பதிலோ, பணம் கொடுக்கல் வாங்கலிலோ, மற்றப் பேரங்களிலோ தகராறே இராது என்று எண்ணுவது சாத்தியமாகத் தோன்றவில்லை. ஆகையால், இவற்றிற்கு நீதி கிடைக்க நாம் வழி செய்வதோடு, கோர்ட்டுகளின் அல்லது சமரசக் குழுக்களின் முடிவுகள் நிறைவேற்றிவைக்கப்படுவதற்கும் வகை செய்ய வேண்டும். இதற்குப் போலீஸ் படை இருக்க வேண்டியது அவசியமாகும். இதில் நீங்கள் விட்டுக் கொடுத்திருக்கிறீர்கள். ஆனுல், போலீஸ் படைக்கு என்ன கட்டுத் திட்டங்களை விதிப்பீர்கள் என்பதை அறிய நான் விரும்புகிறேன். இன்று அகிம்சை அரசாங்கம் ஒன்று ஆட்சியில் இருக்குமாயின், உள்நாட்டுக் கலவரங்களை அடக்குவதற்கு அது போலீஸ் படையை உபயோகிக்குமா? அப்படையை எப்பொழுதுமே வைத்துக்கொண்டிருக்க நீங்கள் விரும்புகிறீர்களா அல்லது தாற்காலிகமாக வைத்துக்கொள்ளுவீர்களா? ஒரு போலீஸ் படை அவசியம் இல்லாதது என்று ஏற்படும் ஒரு சமயத்தை எண்ணிப் பார்க்கவும் என் மனம் மறுக்கிறது. அகிம்சைக்கு இந்தக் குறைபாட்டை வைத்துக்கொள்வதைத் தவிர வேறு வழி இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை."

இக்கடிதத்தில் கேட்கப்பட்டிருக்கும் கேள்வி மிக முக்கிய மானதாவதோடு கவனிக்க வேண்டியதுமாகும். நம்முள் உண்மையான அகிம்சை நிலைபெற்றுவிடுமானால், நமது சத்தியாக்கிரக இயக்கம் என்று சொல்லப்பட்டவை யாவும் உண்மையிலேயே அகிம்சையோடு கூடியவைகளாக இருந்தால், இக்கேள்விகளே எழுந்திரா. ஏனெனில், அவைகளே தீர்க்கப்பட்டிருக்கும்.

வட துருவப் பகுதியை என்றும் பார்த்தே இராத ஒருவருக்குக் கற்பனையில் கூறும் வருணனை என்னதான் விரிவானதாக இருந்தாலும், அதன் உண்மை நிலையைப்பற்றி அரை குறையான கருத்தையே அது தெரிவிக்கும். இதுவேதான் அகிம்சை விஷயத்திலும். எல்லாக் காங்கிரஸ்காரர்களும் தங்கள் கொள்கை விஷயத்தில் உண்மையோடு இருந்திருப்பார்களானால், நாம் இன்று இருப்பதைப் போல இம்சையா அல்லது அகிம்சையா என்பதில் ஊசலாடிக் கொண்டிருக்கமாட்டோம். அகிம்சையின் விளைவு எங்குமே நன்றாகத் தெரிந்தும் இருக்கும். வகுப்பு ஒற்றுமை இருந்திருக்கும்; தீண்டாமைப் பிசாசு விரட்டப்பட்டிருக்கும்; பொதுவாகச் சொன்னால் ஒழுங்கான ஒரு சமூகத்தையும் உருவாக்கிக்கொண்டிருப்போம். ஆனால், இப்பொழுதோ நிலைமை நேர் மாறானதாக இருக்கிறது. சில வட்டாரங்களில் காங்கிரஸுக்கு நிச்சயமான எதிர்ப்பும் இருந்து வருகிறது. காங்கிரஸ்காரரின் பேச்சில் நம்பிக்கை விழுவதுமில்லை; முஸ்லிம் லீகுக்கும் பெரும்பாலான சுதேச மன்னர்களுக்கும் காங்கிரஸினிடம் நம்பிக்கை இல்லை; உண்மையில் அதற்கு விரோதமாகவே இருக்கிறார்கள். காங்கிரஸ்காரர்களிடம் உண்மையான அகிம்சை இருந்தால், இத்தகைய அவநம்பிக்கைகளே இருக்கமாட்டா; உண்மையில் காங்கிரஸினிடம் எல்லோருக்கும் அன்பு இருக்கும்.

ஆகையால், அகிம்சைவாதிகளுக்கு முன்னால் ஒரு கற்பனைச் சித்திரத்தையே நான் கொடுக்க முடியும்.

நாம் முற்றிலும் உண்மையான அகிம்சையில் ஊறிவிடாத வரை அகிம்சையின் மூலம் சுயராஜ்யத்தை அடைவது என்பதும் முடியாமலிருக்கக்கூடும். நாம் பெரும்பான்மையினராக இருக்கும்போது, அதாவது அகிம்சா தருமத்திற்குப் பெரும்பான்மை மக்கள் உடன்படும்போதே, அகிம்சை ஆட்சி அதிகாரத்திற்கு வர முடியும். அந்த ஆனந்தமான நிலைமை நிலவும்

போது இம்சை உணர்ச்சி வெகுவாய் மறைந்துவிட்டிருக்கும்; உள்நாட்டுக் குழப்பமும் கட்டுக்கு அடங்கிப் போயிருக்கும்.

என்றாலும், அகிம்சை ராஜ்யத்தில்கூட ஒரு போலீஸ் படை அவசியமே என்பதற்கு நான் விட்டுக் கொடுத்திருக்கிறேன். இது என்னுடைய அகிம்சையின் குறைபாட்டுக்கு அறிகுறி என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ராணுவம்பற்றிக் கூறுவது போல ஒரு போலீஸ் படை இல்லாமல் இருக்கவும் நம்மால் முடியும் என்றும் சொல்லும் தைரியம் எனக்கு இல்லை; நான் சொல்லவும் முடியும். போலீஸ் படையே அவசியமில்லாத ஒரு ராஜ்யத்தைச் சிந்தித்துப் பார்க்கிறேன். ஆனால், இதில் நாம் வெற்றி பெற முடியுமா என்பதை வருங்காலம் ஒன்றே காட்டும்.

ஆயினும், என் எண்ணத்தில் இருக்கும் போலீஸ், இன்றிருக்கும் போலீஸ் படைக்கு முற்றிலும் வேறானதாக இருக்கும். அகிம்சையை நம்புகிறவர்களே அதில் இருப்பார்கள். அவர்கள் மக்களின் ஊழியர்களாக இருப்பார்களேயன்றி யஜமானர்களாக இருக்கமாட்டார்கள். மக்கள் தாமாகவே அந்தப் போலீஸாருக்கு எல்லாவித உதவியும் அளிப்பார்கள். குறைந்துகொண்டே போகும் கலவரங்களைப் பரஸ்பர ஒத்துழைப்பின் மூலம் எளிதாகச் சமாளித்துவிடுவார்கள். போலீஸ் படையிடம் சில வகையான ஆயுதங்கள் இருக்கும். ஆனால், அவற்றை எப்பொழுதோதான் உபயோகிப்பார்கள். உண்மையில் போலீஸார் சீர்திருத்துவோராக இருப்பர். முக்கியமாக, அவர்களுடைய போலீஸ் வேலை திருடர்கள், கொள்ளைக்காரர்களைப்பற்றியதாகவே இருக்கும். தொழிலாளிக்கும் முதலாளிக்கும் இடையே தகராறுகளும், வேலை நிறுத்தங்களும் அகிம்சை ராஜ்யத்தில் மிகக் குறைவாகவும், எப்பொழுதோ ஏற்படுவனவாகவும் இருக்கும். ஏனெனில், சமூகத்திலிருக்கும் முக்கியமான சக்திகளிடம் மதிப்பை வகிக்கும் அளவுக்குச் செல்வாக்குடையதாக அகிம்சைப் பெரும்பான்மை இருக்கும். இதே போல வகுப்புக் கலவரங்களுக்கும் இடமே இராது. அத்தகைய காங்கிரஸ் அரசாங்கம் அதிகாரத்திற்கு வரும்போது 21 வயதுடைய ஆண்களும் பெண்களும் வாக்குரிமை பெற்றிருப்பார்கள் என்பதையும் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். இன்று இருக்கும் கண்டிப்பான, திணித்து வைக்கப்பட்டிருக்கும் அரசியலுக்கு இந்தச் சித்திரத்தில் இடமில்லை.

சேவா கிராமம், 20-8-1940

—'ஹரிஜன்' – 1—9—1940.

# 2

# உண்மையான இந்தியா

இந்தியா முழுவதிலும் உள்ள கிராமங்களில் எல்லாம் நான் அடிக்கடி சுற்றிப் பார்த்து வந்தும் ஏமாற்றம் அடையவில்லையென்றால், ஏழு லட்சம் கிராமங்களுக்கும் பாதுகாப்பு இருக்கிறது, போலீஸ் பாதுகாப்பு வேண்டியதில்லை என்று நான் திண்ணமாகக் கூற முடியும். தன்னந்தனியே இருந்து வரும் கிராமாதிகாரி கிராமத்தையே நடுங்க வைப்பவர், கிராமங்களுக்கு அவரே நாட்டாண்மை செலுத்தி வருகிறார்; சர்க்காருக்குச் சேர வேண்டிய தீர்வையை வசூலிப்பதற்குச் சிறிய வரித் தண்டல்காரருக்கு உதவியாக இருப்பார். மனிதன் அல்லது மிருகங்கள் செய்யும் நாசத்திலிருந்து கிராமவாசிகளின் சொத்துக்களையோ அல்லது கால்நடைகளையோ போலீஸார் காப்பாற்றியதாக நான் அறிந்ததே இல்லை. போலீஸ் பட்டேலை, அவன் இருக்கும் விதத்திற்காக குறை கூறிப் பயனில்லை. அவன் அவ்வேலைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறான்; அதைச் சரிவரச் செய்து வருகிறான். மக்களின் சேவகனாகத்தான் இருக்க வேண்டும் என்று அவன் போதிக்கப்படவில்லை. தனது யஜமானனை வைசிராயின் பிரதிநிதியாக அவன் இருக்கிறான். தலைமையில் ஏற்பட்டிருக்கும் மாறுதல், தூரத்திலிருக்கும் கிராமத்தில் இன்னும் பிரதிபலிக்கவில்லை. அது எப்படி ஏற்படும்? அது அடியிலிருந்து வந்தது அன்று. தம் மந்திரிகளைக்கூட நீக்கவோ அல்லது சிறைப்படுத்தவோ வைசிராய் இன்னும் சட்ட ரீதியான ராணுவ அதிகாரத்தை வைத்துக்கொண்டிருக்கிறார். மந்திரிகளுக்கோ, வைசிராயைச் சிறைப்படுத்தவோ, மீறவோ சட்டரீதியான அதிகாரமோ, வேறு எந்தவிதமான அதிகாரமோ கிடையாது. ஸிவில் சர்விஸ் அதிகாரிகள் இன்னும் வைசிராயின் அதிகாரத்தில்தான் இருக்கிறார்கள். எல்லா அதிகாரங்களையும் வைசிராய் விட்டுவிடப் போவதில்லை. பிரிட்டிஷ் அரசாங்கத்தின் உத்தரவின் பேரில் சாத்தியமான அளவு சீக்கிரத்திலேயே பிரிட்டிஷ் நிர்வாகம் முழுவதையும் கைவிட்டுவிடப் போகிறார்கள் என்பதை வெகு தூரத்திலிருக்கும் கிராமம் உணர வேண்டும் என்று வைசிராய் விரும்பவில்லை என்பதன்று நான் கூறுவதன் பொருள்.

இந்தியா வாழ்வது கிராமத்தில்தான்; ஆணாயினும் பெண்ணாயினும், ஒவ்வோர் இந்தியரும், அவரவர்களின் சொந்தப்

போலீஸ்காரர். இதை நாம் இன்னும் அறிந்துகொள்ளவில்லை என்பதைக் காட்டுவதற்கே இதை எழுதுகிறேன். அக்கம் பக்கத்தில் இருப்பவர், எந்த மதத்தைப் பின்பற்றுபவராக இருந்தாலும் அல்லது மறுப்பவராக இருந்தாலும், அவர்மீது மனத்துள் விஷமம் கொள்ளாதிருந்தால்தான் ஒவ்வோர் ஆணும் பெண்ணும் தங்களுக்குத் தாங்களே போலீஸ்காரராக முடியும். நான் குறிப்பிட்டிருக்கும் அளவுக்கு ராஜீயப் புத்திப் போக்குள்ளவர்கள் துரதிருஷ்டவசமாகப்போகவில்லையென்ருல், போக முடியவில்லையாயின், எல்லாப் பயத்தையுமாவது விட்டொழித்து விட்டு ராணுவம் அல்லது போலீஸிலிருந்து கிடைக்கும் எந்தப் பாதுகாப்பும் தமக்கு வேண்டாம் என்று மறுத்துவிட வேண்டும். ஒவ்வொரு வீடும், இருண்ட பழைய காலத்தில் இருந்தது போல் அல்லாமல், உண்மையான புராதன கருத்தின்படி, கிராமம் அதன் சொந்தக் கோட்டையாகி, கெட்ட எண்ணம் கொள்ளுவது அல்லது கொல்பவனுக இருக்கப் போகிறவனைத் தான் கொல்ல முடியாவிட்டாலும் வேறு யாராவது கொன்றுவிட வேண்டும் என்று விரும்புவது என்பது இல்லாமல், ஒவ்வொருவரும் உயிர் துறப்பதை ஒரு கலையாக அறிந்தால் ஒழிய இந்தியா தனது பெருமையை அடைய முடியாது என்பது நிச்சயம். ஆகையால், இந்தப் பாடத்தை நாம் ஒவ்வொருவரும் நம்முள்ளேயே ஆழப் பதித்துக்கொண்டிருப்போமாயின் எவ்வளவு நன்ருக இருந்திருக்கும்! பரிசீலனை செய்யும் சிரமத்தை எடுத்துக்கொள்ளுவோமாயின் இப்பாடத்திற்கு ஆதரவாக எவ்வளவோ சான்றுகள் இருக்கின்றன.

புது டில்லி, 12—10—1946 —'ஹரிஜன்' - 20—10—1946

## 3

# அகிம்சையும் சுதந்திர இந்தியாவும்

பேலியாகாட்டாவில் காந்திஜியின் முகாமில் உள்ளூர் மாணவர்களில் சிலர் வந்து கூடியிருந்தார்கள். அவர்களில் யாராவது கலகங்களில் கலந்துகொண்டது உண்டா என்று முதலில் காந்திஜி அவர்களைக் கேட்டார். இல்லையென்று பதில் சொன்னர்கள். அவர்கள் செய்ததெல்லாம் தற்பாதுகாப்புக்காக; ஆகையால், அது கலவரத்தில் சம்பந்தப்பட்டதல்ல என்றனர்.

இது, அகிம்சைக்குரியதான மிக முக்கியமான சில பிரச்னைகளைப்பற்றிப் பேசக் காந்திஜிக்கு வாய்ப்பை அளித்தது. அவர் கூறியதாவது:

"தவிர்க்க முடியாத தற்காப்பு என்று கூறி, இம்சையும் யுத்தமும் நியாயம் என்று காட்டுவதற்கு, மனிதவர்க்கம் நெடுகவுமே முயற்சி செய்து வந்திருக்கிறது. ஆக்கிரமிப்பவனின் பலாத்காரத்தை, எதிர்ப்பவனின் மேலான பலாத்காரத்தைக் கொண்டே தோற்கடிக்க முடியும் என்பது ஒரு சாதாரண விதி. உலகம் எங்குமே மனிதர் இவ்விதம் ஆயுதபலப் போட்டியென்ற சுழலில் சிக்கியிருக்கின்றனர். வாளைக் கலப்பையாக மாற்றிக்கொள்ளும் வகையில் உலகம் எந்தக் கட்டத்தில் பத்திரமான நிலைக்கு வரும் என்பது இன்னும் யாருக்கும் தெரியாது. தற்பாதுகாப்பின் உண்மையான கலையில் மனிதவர்க்கம் இன்னும் முழு ஆற்றலையும் பெறவில்லை.

"ஆனால், தாங்கள் உபதேசித்ததையே நடைமுறையிலும் அனுசரித்துக் காட்டப் பெரிய மகான்கள், பதிலுக்குத் தாக்காமல் இருப்பதிலேயே உண்மையான பாதுகாப்பு மார்க்கம் இருக்கிறது என்பதை வெற்றிகரமாகக் காட்டியிருக்கிறார்கள். இது விசித்திரமாகத் தோன்றலாம். ஆனால், நான் சொல்ல விரும்புவதெல்லாம் இதுதான்: இம்சை, பதிலுக்குச் செய்யப்படும் இம்சையிலேயே வளருகிறது. ஆக்கிரமிப்பவருக்குத் தாக்குவதற்கு எப்பொழுதும் ஒரு நோக்கம் இருக்கிறது. ஏதாவது ஒன்று செய்யப்பட வேண்டும் என்று அவர் விரும்புகிறார்; பாதுகாப்பில் இறங்குகிறவர் தம்மிடம் சிலவற்றைச் சரணாகதியாக்க வேண்டும் என்று விரும்புகிறார். இப்பொழுது பாதுகாத்துக்கொள்ள இருப்பவர் தம் மனத்தை உறுதிப்படுத்திக்கொள்கிறார்; ஓர் அங்குலத்தையும் விட்டுக் கொடுப்பதில்லை என்ற உறுதியுடன் இருக்கிறார் என்றும் வைத்துக் கொள்ளுவோம். அதே சமயத்தில் ஆக்கிரமிப்புக்காரரின் இம்சைக்கு இணையாகத் தம் இம்சையும் இருக்க வேண்டும் என்ற ஆசைக்கும் அவர் இடங்கொடுக்கவில்லை என்று வைத்துக்கொள்ளுவோம். எதிராளியைத் தண்டிப்பதால் தமக்கு லாபமில்லை, அவ்வழியில் தம் இஷ்டப்படி நடக்கும்படி எதிராளியைச் செய்துவிட முடியாது என்பதைச் சீக்கிரத்திலேயே ஆக்கிரமிப்பாளர் உணர்ந்துகொள்ளும்படி அப்பொழுது செய்துவிட முடியும். இப்படிச் செய்வதாயின் துன்பத்தை அனுபவிக்க நேரும். இந்தக் கலப்பற்ற துன்பமே, சரணாகதி என்பதை அறியாத உண்மை உருவில் ஆன தற்பாதுகாப்பு.

"இத்தகைய எதிர்ப்பின்மையால், பாதுகாத்துக்கொள்ளுபவர் உயிரையே இழக்க நேரும்போது, இதைத் தற்பாதுகாப்பு

என்று எப்படிச் சொல்ல முடியும் என்று சிலர் கேட்கலாம். ஏசு சிலுவையில் மாண்டார், ரோமன் பைலாத்* வென்றான் என்பதை நான் ஒப்புக்கொள்ள முடியாது. வெற்றி பெற்றது ஏசுவே என்பதை உலக சரித்திரம் நன்றாகக் காட்டு கிறது. கிறிஸ்துவின் எதிர்ப்பின்மைச் செயலினால் சமூகத்தில் நல்லவைகளின் சக்தி வெளியிடப்பட்டிருக்கும்போது உடல் அதன் அழிவை அடைந்துவிட்டதனால் என்ன?

"உயிரை இழப்பதனால் மனிதன் வாழ்வைப் பெறும் இந்த உண்மையான தற்காப்புக் கலையில் ஆற்றல் மிகுந்தவர்கள் இருந்ததைத் தனிப்பட்டவர்களின் சரித்திரம் எடுத்துக் கூறும். மனித வர்க்கத்தின் பெருங் கூட்டத்தினர் உபயோகிக்க இம் முறை இன்னும் சரியாக்கப்படவில்லை. இவ்வழியில் இந்தியா வின் சத்தியாக்கிரகம் குறைபாடுடைய ஒரு சோதனையேயாகும். இதனாலேயே ஹிந்து - முஸ்லிம் சச்சரவில் அது பயனற்ற தாகியது."

இந்த மாணவர்கள் காந்திஜியைச் சந்தித்ததற்கு இரண்டு அல்லது மூன்று நாட்களுக்கு முன்னால் இது சம்பந்தமாகத் தமது மனத்தில் இருந்த சுமையைக் காந்திஜி, தம்மைப் பார்க்க வந்த பேராசிரியர் ஸ்டூவர்ட் நெல்ஸனிடம் வெளியிட்டார். அமெரிக்காவிலுள்ள தமது கல்லூரிக்குப் புறப்படுவதற்கு முன்னால் காந்திஜியைப் பார்த்துப் போகவே இப்பேராசிரியர் வந்திருந்தார். சமாதான முறைகளைக் கொண்டே சுதந்திரத் தைப் பெறுவதில் அநேகமாக வெற்றியடைந்திருக்கும் இந்தியர், உள் நாட்டுச் சச்சரவை அதே முறைகொண்டே சமாளித்துக் கொள்ள முடியாமல் இருப்பது ஏன் என்று அவர் காந்திஜியைக் கேட்டார். இதற்குக் காந்திஜி கூறியதாவது:

"இது முக்கியமான கேள்வியாகையால் நான் பதில் சொல்ல வேண்டும். சத்தியாக்கிரகம் என்று நான் எதைத் தவறாக நினைத்துக்கொண்டேனே அது சத்தியாக்கிரகம் அன்று; அது சாத்துவிக எதிர்ப்பு, பலவீனர்களின் ஆயுதம் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். இதுவரையில் தங்களை ஆண்டு வந்த வர்கள்மீது கெட்ட எண்ணத்தையும் கோபத்தையும் இந்தியர் உள்ளத்தில் வைத்திருந்திருக்கிறார்கள். அதே சமயத்தில் அவர் களை அகிம்சையால் எதிர்ப்பதாகவும் பாசாங்கு செய்து வந்திருக் கின்றனர். ஆகையால், அவர்களுடைய எதிர்ப்பு, பலாத்காரத்

* இவர், ஏசு கிறிஸ்துவைச் சிலுவையில் ஏற்ற, யூதர்கள் சட்டப்படித் தீர்ப்புக் கூறியவர்; இஸ்ரேயிலில் ஆட்சி புரிந்த ரோம் நாட்டு அதிகாரி. இவர், இந்தப் பாபச் செயலிலிருந்து தாம் கை கழுவிவிட்டதாகக் கூறினார்.

தினுல் தூண்டப்பட்டதேயன்றிச் சத்தியாக்கிரகத்தின் மூலம் மனத்தை மாற்றுவதற்கு, மனிதன் என்ற வகையில், பிரிட்டிஷாரிடம் மதிப்பு வைத்ததனுல் அன்று.

"இப்பொழுது பிரிட்டிஷார் வலிய இந்தியாவிலிருந்து வெளியேறிக்கொண்டிருப்பதால் வெளித் தோற்றமான அகிம்சை உடனே சிதைந்துவிட்டது. நாம் ரகசியமாகப் போஷித்து வந்த இம்சையின் போக்கு, இந்திய தேசீயக் காங்கிரஸ் கட்டுத் திட்டங்களை விதித்திருந்தும், நம்மையே சுற்றிக்கொண்டு, அதிகார விநியோக விஷயம் வந்ததும் நாம் ஒருவரையொருவர் குரல்வளையைப் பிடித்துக்கொள்ளும்படி செய்திருக்கிறது. வகுப்பு வாத உருவில் மாறியிருக்கும் இம்சையின் சக்தியை அடக்கும் முறையை இந்தியா இப்பொழுது கண்டுபிடித்துவிடுமானுல், நலவுரிமைகளில் இருக்கும் வித்தியாசங்களைத் தொலைக்கும் வகையில் ஆக்க வேலைக்கு அமைதியான வழியில் அந்தச் சக்தியைத் திருப்பிவிட முடிந்தால், அது மகத்தான நாளே என்பதில் சந்தேகமில்லை.

"இந்தியாவின் அகிம்சையோடு கூடிய ஒத்துழையாமை என்று சொல்லப்பட்டது எல்லாம் உண்மையில் அகிம்சையோடு கூடியன அல்ல என்று பல ஆங்கில நண்பர்கள் எனக்கு எச்சரிக்கை செய்தார்கள் என்பது உண்மையே. பலவீனர்களின் செயலின்மையே யல்லாமல் அது திடமான உள்ளத்தவரின் அகிம்சையன்று. அப்படி ஏற்படுவதற்கு நலவுரிமை பற்றிய சச்சரவுக்கிடையே மனித ஒற்றுமை, சகோதரத்துவ உணர்ச்சி ஆகியவற்றை இத்தகையோர் போக்கிக்கொள்ளவே மாட்டார்கள். இப்படிப்பட்டவர்கள், எதிராளி மனமாற்றமடையத்தான் என்றுமே முயற்சி செய்வார்களேயன்றி எதிராளியை நிர்ப்பந்தம் செய்யமாட்டார்கள்.

"உண்மை இதுதான்: நான் மயக்கத்திலேயே நெடுகவும் இருந்துவிட்டேன். ஆனுல், அதற்காக நான் வருத்தப்படவில்லை. என்னுடைய அறிவு அந்த மயக்கத்தினுல் மூடப்படாமல் இருந்திருக்குமாயின், இன்று வந்துள்ள நிலைக்கு இந்தியா வந்தே இராது. இந்தியா இன்று சுதந்திரம் அடைந்துவிட்டது; உண்மை நிலையும் இன்று எனக்குத் தெளிவாக விளங்குகிறது. அடிமைத்தனத்தின் சுமை இன்று நீங்கிவிட்டதால், இரு நாடுகளுக்குள்ளோ அல்லது ஒரே நாட்டின் இரு சாராருக்குள்ளோ ஏற்படும் மனிதச் சச்சரவுகளைத் தீர்த்துக்கொள்ளக் கையாளப்படும் வழக்கமான பலாத்கார முறையைக் கைவிடு

வதற்கு, ஒன்றுபட்ட முயற்சியைச் செய்வதற்கு, நன்மையான வைகளின் சக்திகளையெல்லாம் திரட்ட வேண்டும். இந்தியா இதில் தவறிவிடாது என்ற நம்பிக்கை எனக்கு இன்னும் இருக்கிறது. இரு புதிய ராஜ்யங்கள் பிறந்திருப்பது, மற்ற மனிதவர்க்கத்திற்கு அதிருஷ்டமேயன்றி ஆபத்து அல்ல என்பதை உலகிற்கு நிரூபிக்கும் என்றும் நம்புகிறேன். இந்தியா அடைந்திருக்கும் சுதந்திரம் மதிப்புடையதாகவே இருக்க வேண்டுமானல், திரளான தகராறுகளைத் தீர்ப்பதற்கு அகிம்சை ஆயுதத்தை ஒழுங்காக்கிக் கொள்ள வேண்டியது சுதந்திர இந்தியாவின் கடமை.''

கல்கத்தா, 20—8—1947 —'ஹரிஜன்'- 31—8—1947

# 1

# தேர்தலில் எதிர்க்கட்சியினரின் அடாச் செயல்கள்

[‘ அகிம்சைக்கு எல்லையுண்டா ? ’ என்ற தலைப்பின் கீழ் மகாத்மா காந்தி 15—8—1926 ‘ எங் இந்தியா’வில் எழுதிய கட்டுரையே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

ஒருவர் எழுதியிருக்கும் விவரமான கடிதத்தின் சாராம்சம் கீழே கொடுக்கப்படுகிறது. இவர் தமது முழுப் பெயரையும் விலாசத்தையும் கொடுத்திருக்கிறார்:

“ சென்னையில் காங்கிரஸ் ஊழியர்களுக்கு என்ன நேர்ந்து வருகிறது என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும். சென்ற இரு நாட்களில் ஜஸ்டிஸ் கட்சியின் ஆட்கள் அருவருக்கத்தக்க செயல்களில் மிஞ்சிவிட்டார்கள். ஸ்ரீ........., ஸ்ரீ......யுடன், காங்கிரஸ் அபேட்சகரான ஸ்ரீ......க்காக வாக்காளர் ஆதரவைத் தேடச் சென்றிருந்தார். ஸ்ரீ......யையும் மற்றவர்களையும் பின் தொடர்ந்து போய்க்கொண்டிருந்த ஜஸ்டிஸ் கட்சி ஆட்கள் சிலர், அவர்கள் ஜஸ்டிஸ் கட்சி அபேட்சகரின் வீட்டுக்குப் பக்கத்தில் வந்ததும் திடீரென்று காங்கிரஸ் ஊழியர்களை வளைத்துக்கொண்டு, ஸ்ரீ...., ஸ்ரீ....இருவர் முகங்களிலும் துப்பிவிட்டனர். முகத்தில் துப்புவது என்பது எவ்வளவு மோசமான செய்கை என்பதை நீங்கள் நன்கு அறிவீர்கள். வகுப்புவாதம் பொது வாழ்க்கையைக் கெடுத்து இவ்வளவு இழிவான காரியங்களுக்கு இறங்கிவிட்டதா? இதை உங்களுக்கு எழுதியிருப்பதன் நோக்கம், இத்தகைய மோசமான, அவமதிப்பு மிகுந்த நிலைமையில் காங்கிரஸ் ஊழியர் என்ன செய்ய வேண்டும் என்பதைக் குறித்து உங்கள் அகிம்சைக் கொள்கையை நீங்கள் விளக்க வேண்டும் என உங்களைக் கேட்டுக்கொள்ளுவதற்கேயாகும். .....என்பவரைத் தாக்கியிருக்கிறார்கள். அரசாங்கத்தைப் பொறுத்தவரையில் எங்களுடைய போக்கு அகிம்சையுடன் இருப்பதே சாதகமானதாக இருக்கிறது என்பதை ஒப்புக்கொள்ளுகிறோம். ஆனால், அடிக்கவும், மேலே துப்பவும், அமைதியோடு இருக்கும் காங்கிரஸ் ஊழியர்மீது மலத்தை வீசவும் முற்பட்டிருக்கும் தவறான வழியில் செல்லும் கொடியவரான நம் நாட்டினரின் விஷயத்திலும் அதே போக்கை அனுசரிக்க வேண்டுமா? இன்னும் ஒன்றையும் உங்கள் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். காங்கிரஸிடம் அனுதாபமுள்ளவர்கள் பலர் இருக்கிறார்கள். ஆனால், கூலி பெறும் காலிகளின் தொகையை விரலை விட்டு எண்ணிவிடலாம். ஆகையால், நாங்கள் நினைத்தால் பலாத்கார முறையை அனுசரித்துக் காலித்தனத்தை அடக்கிவிடலாம். ஆனால், நாங்களோ அகிம்சைப் பிரதிக்ஞை கொண்டிருக்கும் ஒரு ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கிறோம். ஆத்திரத்தை மூட்டும் காரியங்கள் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டு போகின்றன. காங்கிரஸைப் பின்பற்றும் இளைஞர்கள் தாங்களே நிலைமையைச் சமாளித்துக்கொண்டு விடுவதில் இறங்காதபடி தடுப்பதும் காங்கிரஸ் ஊழியர்களுக்கு முடியாததாகிவிடக்கூடும். ஆகையால், தனிப்பட்டவரின் பாதுகாப்பு அகிம்சைக்கு உகந்ததா, அதை எந்தத் தகுதியுடன் உபயோகிக்க வேண்டும் என்று நான் உங்களைக் கேட்கலாமா? ஜஸ்டிஸ் கட்சியின்

காலிகள் செய்துவரும் காரியங்கள், அகிம்சையில் எங்களுக்குள்ள நம்பிக்கையைக் கடுமையான வகையில் சோதித்து வருகின்றன. ஆகவே, சென்னையிலுள்ள நாங்கள் இந்த நெருக்கடியான சமயத்தில் நீங்கள் கூறும் புத்திமதியினால் அதிகப் பலனை அடைந்தவர்களாவோம். காலித்தனமான செய்கைகளைக் கொண்டு ஜஸ்டிஸ் கட்சி இப்பொழுது பரீட்சை நடத்தி வருகிறது என்றும், இது வெற்றி பெற்றால் நவம்பரில் வரப் போகும் கவுன்சில், அசெம்பளித் தேர்தல்களில் காங்கிரஸுக்கு எதிரான போராட்டத்தில் இதைச் சரியான கலையாக அது உபயோகித்துவிடக்கூடும் என்றும் கேள்விப்படுகிறோம். உங்கள் கருத்தை முடிந்த அளவுக்குச் சீக்கிரமாகவே நீங்கள் பிரசுரிக்க வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்வதற்கு ஒரு காரணம் இது.''

நான் இக்கடிதத்திலிருந்து ஆட்களின் பெயரையும் இடத்தின் பெயர்களையும் நீக்கியிருக்கிறேன். ஏனெனில், அவைகளைக் கண்டுகொள்ளுவது என் காரியத்திற்குத் தேவையில்லை. சமயத்திற்கு ஏற்றதான அகிம்சை என்ற காலம் வெகு காலத்திற்கு முன்பே போய்விட்டது. உள்ளத்தில் அகிம்சையோடு இல்லாதவர்கள், இக்கடிதத்தை எழுதியிருப்பவர் குறிப்பிடும் சந்தர்ப்பங்களில் அகிம்சையோடு இருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. அகிம்சையே காங்கிரஸின் தருமமாக இருந்த போதிலும் அகிம்சையோடு இருப்பதற்கு அல்லது இருந்து வருவதற்கு யாரும் அந்தத் தருமத்தைச் சொல்லுவதில்லை. அகிம்சையோடு இருக்கும் காங்கிரஸ்காரரும், தாம் வேறு வகையாக இருக்க முடியாது என்பதற்காகவே அவ்விதம் இருந்து வருகிறார். ஆகையால், எனது கண்டிப்பான யோசனை என்னவென்றால், அகிம்சையைக் குறித்து என்னையோ அல்லது வேறு காங்கிரஸ்காரரையோ யாரும் ஆலோசனை கேட்க வேண்டியதில்லை என்பதே. ஒவ்வொருவரும் தங்கள் சொந்தப் பொறுப்பில் நடந்துகொள்ளுவதோடு அவருடைய ஆற்றலுக்கும் நம்பிக்கைக்கும் உகந்த வகையில் காங்கிரஸின் தருமத்தை விளக்கிக்கொள்ள வேண்டும். பலவீனமானவர்கள், தங்களுடைய கோழைத்தனம் காரணமாகத் தங்கள் சொந்த கௌரவத்தைப் பாதுகாத்துக்கொள்ளவோ, தங்கள் கவனிப்பில் ஒப்படைக்கப்பட்டிருப்பவரின் மானத்தைக் காக்கவோ முடியாமலிருக்கும்போது, என் ஆலோசனை அல்லது காங்கிரஸ் தருமத்தின் நிழலில் மறைந்துகொண்டுவிடுகின்றனர் என்பதை நான் அடிக்கடி கவனித்து வந்திருக்கிறேன். ஒத்துழையாமை உச்சநிலையில் இருந்த சமயத்தில் பெட்டியாவில் நடந்த சம்பவத்தை இப்பொழுது நினைவூட்டுகிறேன். சில கிராமவாசிகள் கொள்ளையடிக்கப்பட்டனர். கொள்ளைக்காரர்களின் தயைக்குத் தங்கள் மனைவிமார்களையும் குழந்தைகளையும் சொத்துக்களையும் விட்டுவிட்டு அக் கிராமவாசிகள் ஓடிவிட்

டார்கள். தங்கள் பாதுகாப்பிலிருந்தவர்களை இவ்விதம் விட்டு ஓடிவிட்ட அவர்களுடைய கோழைத்தனத்தை நான் கண்டித்த போது, அவர்கள் தாங்கள் அகிம்சையோடு இருந்ததாக வெட்க மில்லாமல் சொன்னார்கள். அவர்களுடைய நடத்தையை நான் பகிரங்கமாகக் கண்டித்தேன். அகிம்சையை உணராதவர்கள், தங்கள் பெண்டு பிள்ளைகளின் மானத்தைக் காக்க வேண்டி யவர்களாக இருப்பவர்கள் உபயோகிக்கும் பலாத்காரத்தை முற்றிலும் ஆதரிப்பதே என்னுடைய அகிம்சை என்றும் சொன்னேன். அகிம்சை வீரமுள்ளவர்களுக்குரிய உயர்ந்த நற்குணமேயன்றிக் கோழைத்தனத்தை மறைக்கும் முக்காடு அல்ல. வாளேந்துவதற்கு வேண்டியதைவிட இன்னும் எவ்வளவோ அதிகமான வீரம் அகிம்சையை அனுசரிப்பதற்குத் தேவை. சமயங்களில் வாளேந்தும் வலிமையிலிருந்து அகிம் சைக்கு மாறுவது சாத்தியம்; அது எளிதான கட்டங்கூட. ஆகையால், தாக்குவதற்கான ஆற்றல் இருக்கிறது என்பதை அகிம்சை புலப்படுத்துகிறது. வஞ்சம் தீர்த்துக்கொள்ளும் ஆசையைத் தெரிந்து அடக்கிக்கொள்வதுதான் அது. ஆனால், செயலற்று, பேடித்தனமாக, திக்கற்றுப் பணிந்துவிடுவதைவிட வஞ்சம் தீர்த்துக்கொள்ளுவது என்றுமே உயர்வானதுதான். மன்னித்துவிடுவது அதைவிட உயர்வானது. வஞ்சம் தீர்த்துக் கொள்ளுவதுங்கூடப் பலவீனமே. வஞ்சம் தீர்த்துக்கொள்ளும் ஆர்வம், கற்பனை செய்துகொண்டோ அல்லது உண்மையா கவோ நேரும் தீமைக்கு அஞ்சுவதாலேயே பிறக்கிறது. நாய் குரைக்கிறது; அதைக் கண்டு ஒருவன் பயப்பட்டால் அது கடித்து விடுகிறது. இந்த உலகில் யாருக்குமே அஞ்சாத ஒருவர், தமக்குத் துன்பம் விளைவிக்க வீணில் முயன்று வருகிறவர் மீது கோபத்தை வருவித்துக்கொள்ளுவதுகூட அதிகச் சங்கடமானது என்று கருதுவார். தம்மீது தூசை வீசப் பார்க்கும் குழந்தைகள் மீது சூரியன் வஞ்சம் தீர்த்துக்கொள்ளுவதில்லை. அவர்கள் செய்வது அவர்களுக்குத்தான் தீமையாகிறது.

ஜஸ்டிஸ் கட்சி ஆட்களின் தகாத செயல்களைக் குறித்துக் கடிதம் எழுதியிருப்பவர் கூறுவது உண்மையா என்பது எனக்குத் தெரியாது. இதற்கு மாறான கதையும் இருந் தாலும் இருக்கக்கூடும். கூறப்பட்டிருப்பவை உண்மை என்றே வைத்துக்கொண்டால், துப்பப்பட்டவர்களை, அடிபட்டவர்களை, யார்மீது மலம் வீசப்பட்டதோ அவர்களை நான் பாராட்டவே முடியும். பதிலுக்குச் செய்வதென்று மனத்திலும் எண்ணாமல் அவமதிப்பை வீரத்துடன் அனுபவித்ததனால் அவர்களுக்கு

எந்தவிதமான தீமையும் இல்லை. ஆனால், அவர்களுக்கு ஆத்திரம் ஏற்பட்டிருந்தால், திருப்பித் தாக்காமலிருப்பதே அச்சமயத்திற்கு ஏற்றது என்பதற்காக ஆத்திரத்தை அடக்கிக்கொண்டிருந்தால், அவர்கள் அத்துன்பத்தை அனுபவித்தது முற்றிலும் தவறு. சுயமதிப்பு உணர்ச்சி, சந்தர்ப்ப அனுகூலம் எதையுமே மீறிவிடும். ஜஸ்டிஸ் கட்சியினரின் காலிகள் ஒரு சிலரே இருக்க, காங்கிரஸ்காரர்கள் ஏராளமாக இருக்கிறார்கள் என்று கடிதம் எழுதியிருப்பவர் கூறுகிறார். பிரபலமான காங்கிரஸ்காரர்கள் என்னவிதமான தண்டனை அளித்துவிட முடியும் என்று நான் ஆச்சரியப்படுகிறேன். மலத்திற்குப் பதிலாக மலம் வீசி, துப்பியதற்குப் பதிலுக்குத் துப்பி, திட்டியதற்காகப் பதிலுக்குத் திட்டுவதா? அல்லது ஒரு சில காலிகளை அலட்சியம் செய்துவிடுவது அநேகரைக்கொண்ட கட்சிக்கு அதிக சுயமதிப்புடையதாகுமா? ஒத்துழையாமையே 'நாகரிகமாக' இருந்தபோது பொதுக்கூட்டங்களில் குழப்பம் விளைவிக்க முற்பட்ட காலிகள் சம்பந்தமாக என்ன செய்யப்பட்டு வந்தது என்பதை நான் அறிவேன். தொண்டர்கள் அவர்களைப் பிடித்து வைத்துக்கொள்ளுவார்கள்; அவர்களுக்கு ஒருவிதத் துன்பமும் செய்யமாட்டார்கள். அவர்கள் தொடர்ந்து கூச்சல் போட்டுக்கொண்டிருந்தால், அக்கூச்சலைப் பொருட்படுத்துவதில்லை. அந்த நாட்களில்கூட பல சம்பவங்களில் அகிம்சை விதி மீறப்பட்டது உண்டு என்பதையும் அறிவேன். கூட்டங்களில் குழப்பத்தை உண்டாக்க யாராவது துணிந்தால், எதிர்த்து ஏதாவது சொன்னால், பலாத்காரத்தோடு பெரும்பான்மையினர் கூச்சல் போட்டு அடக்கிவிடுவார்கள். சில சமயங்களில், பெரும்பான்மையினருக்கு மதிப்புக் குறைவாகும் வகையில் அந்த ஆளை அடித்தும் விடுவது உண்டு. அச்சமயம் அவர்கள் புத்தியில்லாமல் தங்களையே காட்டிக் கொடுத்துத் தவறான வழி காட்டியவர்களுமாகின்றனர். ஜஸ்டிஸ் கட்சியை அல்லது வேறு ஒரு கட்சியைக் காங்கிரஸுக்குத் திருப்பிவிட வேண்டும் என்பதே நோக்கம் என்றால், அப்பொழுது அவர்கள் கொடூரமாக நடந்துகொண்டாலும் அவர்களைக் கண்ணியமாகவே நடத்த வேண்டும். இந்தக் காங்கிரஸ்காரருக்கும், அவர் யாருக்குப் பிரதிநிதியோ அவர்களுக்கும் நான் இந்த யோசனையைக் கூறுகிறேன். எதிர்ப்பாளரையெல்லாம் நசுக்கிவிடுவதே நோக்கமாயின், அப்பொழுது பதிலுக்கு இரட்டிப்பான வஞ்சம் தீர்த்துக்கொள்வதோ அல்லது டயரின் வழியோதான் தேர்ந்த முறை. ஆனால், அது நம்மைச் சுயராஜ்யத்திற்கு அருகில் கொண்டு வருமா என்பது வேறு விஷயம்.

திடநம்பிக்கை இல்லாத இடத்தில் என்னுடைய ஆலோசனைகளெல்லாம் வீணே. ஆகையால், ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் எது சரி, எது சரியல்ல என்பதைத் தீரச் சிந்தித்து, பிறகு திட்டமான ஒரு முடிவுக்கு வந்து, விளைவுகளைக் குறித்துக் கவலைப்படாமல் அதன்படி நடக்கட்டும். அப்பொழுது தவருகச் செய்திருந்தாலும் அவர் உண்மையாக நடந்துகொண்டவராவார். மனத்தில் திடமான உறுதியும் நம்பிக்கையும் இல்லாமல் கொஞ்சமும் தவறே இல்லாமல் செய்யும் ஒரு காரியத்தைவிட, அறியாமலே செய்துவிடும் ஆயிரம் தவறுகள் மேல். கபடத்தனத்தைப் போன்றதே அது. எல்லாவற்றிற்கும் மேலாக, நாம் நம் நாட்டுக்கு உண்மையுடனிருந்து, அதற்கான லட்சியத்தை அது அடையும்படி செய்ய வேண்டுமானல், நாம் நமக்கே உண்மையுடன் இருக்க வேண்டும். விரும்பினல் போட்டுக்கொள்ளுவது, இல்லாதுபோனல் தூர எறிந்துவிடுவது என்பதற்கு ஓர் ஆடையைப் போன்றதன்று அது. அது அமரும் இடம் உள்ளம்; நம் சுபாவத்தில் பிரிக்க முடியாத ஓர் அங்கமாக அது இருக்க வேண்டும்.

— 'எங் இந்தியா' – 12—8—1926.

# 2

# தேர்தலில் காலித்தனங்கள்

**கேள்வி :** பம்பாயில் சமீபத்தில் நடந்த தேர்தலில் நடந்த காலித்தனத்தினல் ஏற்பட்ட நஷ்டத்தை நீங்கள் அறிந்திருப்பீர்கள் என்பதில் சந்தேகமில்லை. இத்தகைய சந்தர்ப்பத்தில் அகிம்சையின் போதகர் மௌனமாக இருப்பது அழகா?

**பதில் :** நான் மௌனமாக இருப்பது அழகா, இல்லையா என்ற பிரச்னையில் இறங்க நான் விரும்பவில்லை. வருங்காலத்தில் என்ன நடக்கப் போகிறது என்பதற்குக் காலித்தனம் முன்னறிவிப்பாக இல்லாதிருக்குமாயின் அதைப்பற்றிக் கவனிப்பதே தவருனது. எங்கோ திடீரென ஏற்பட்டுவிடும் தாக்குதல்களுக்காக நாம் கவலைப்படக் கூடாது. பொது மக்களிடையே அகிம்சை அறிவு படிப்படியாக ஏற்படும். இத்தகைய சம்பவங்களின் படிப்பினையால் அது வளர்வதாக இருப்பினும் இருக்கக்கூடும். ஆனல், இந்தக் காலித்தனம் வரவிருக்கும் தொற்று நோய்க்கு அறிகுறியாகவும் இருக்கலாம். தாங்கள் செய்வது மாத்திரமே சரி, மற்றவர்கள் செய்வதெல்லாம் தவறு என்று சிலர் கருதுகின்றனர். தங்கள் கருத்துக்கு மற்றவர்கள்

உடன்பட வேண்டும் என்று வற்புறுத்துவது பயனில்லாதது என்று அவர்கள் கருதுவதுமில்லை. இத்தவறுதலைத் திருத்தியாக வேண்டும். நாம் செய்வது சரியே என்றால், நமக்கு நிச்சயமாகப் பொறுமை இருந்தாக வேண்டும்.

இப்பொழுது நாம் நம் தவறுகளையே தெரிந்துகொள்ள முடியாதவர்களாக இருப்பதாகக் காண்கிறோம். ஆய்ந்து பார்க்கும் திறமை இல்லாதவர் அல்லது இன்பத்தை நுகர்வதற்கென்றே வாழ விரும்புவோர், தவறுதலைத் தெரிந்துகொள்ள முடியாது. அப்படிப்பட்டவர்களே அநேகர் இருக்கிறார்கள் என்றால், 'நமது அகிம்சை பலவீனர்களின் ஆயுதமாகவே இருந்திருக்கிறது', இம்சையே அகிம்சையின் வேஷத்தில் நடமாடிக் கொண்டிருக்கிறது என்ற முடிவுக்கே நாம் வந்துவிட வேண்டும். இந்தப் பலவீனம் தொடர்ந்து இருந்து வந்தால், பிரிட்டிஷ் ஆட்சி போனதும் ரத்த ஆற்றுப் பெருக்கிடையே நாம் செல்ல வேண்டியிருக்கும். இன்னுமொரு வல்லரசின் ஆதிக்கத்தில் நாம் போய்விட நேரிடவும் கூடும்; அல்லது இடைவிடாத போரில் பலமான ஆயுதமுள்ளவர்களுக்குப் பணிய வேண்டியும் இருக்கலாம். அத்தகைய சச்சரவைக் காணும் துர்ப்பாக்கியம் நமக்கு ஏற்படுமாயின், அகிம்சையில் நம்பிக்கையுள்ளவர்கள் அதை நிறுத்தும் முயற்சியில் ஆனந்தத்தோடு மரித்து அதன் மூலம் வாழ்வார்கள்.

பொது மக்களுக்குப் போதிய அளவு அகிம்சை உணர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. பிரிட்டிஷார் போன பிறகும் அங்குமிங்கும் சிறு சச்சரவுகள் இருந்தாலும் நாம் சகோதரர்களாக அமைதியாக வாழ்ந்து உலகிற்குச் சமாதான போதனையைச் செய்துவருவோம் என்பதே என் நம்பிக்கை.

சச்சரவிட்டதனால் ஏற்பட்ட நன்மை என்ன என்பதைப் பம்பாயில் சச்சரவிட்டவர்களே அறிவார்கள். 'சச்சரவிட்டது யார்? எதற்காக அந்தச் சச்சரவு? இதனால் ஏதாவது லாபம் இருந்தால் அது என்ன?' என்பது எனக்குத் தெரியாது.

['ஹரிஜனபந்து'விலிருந்து மொழிபெயர்ப்பு.]

புது டில்லி, 22—4—1946 —'ஹரிஜன்' – 28—4—1946

## 3

# கம்யூனிஸ்டு செயல்கள்

**கேள்வி** : காங்கிரஸைப் பகிரங்கமாக எதிர்த்துக் கொண்டிருக்கும் கம்யூனிஸ்டுகளின் நடவடிக்கைகளைச் சமாளிப்பது எப்படி?

**பதில் :** ஹிந்து-முஸ்லிம் பிரச்னைக்கு நாம் கூறிய விதியே* கம்யூனிஸ்டுகள் விஷயத்திலும் பொருந்தும். 'முஸ்லிம்' என்று நான் கூறுவது முஸ்லிம் லீகையே. ஏனெனில், எல்லா முஸ்லிம்களும் முஸ்லிம் லீகர்கள் அல்ல. பத்துக் கோடி இந்திய முஸ்லிம்களும் தனியான ராஜ்யத்தைத் அமைத்துக்கொள்ளாவிடில் அமுங்கி, அழிந்துவிடும் அபாயத்தில் இருக்கிறார்கள் என்ற கூச்சலை இன்று முஸ்லிம் லீகர்கள் கிளப்பியிருக்கிறார்கள். இந்தக் கூச்சல் வீண் பீதியைக் கிளப்பும் கூச்சலைத் தவிர வேறு எதுவுமில்லை என்று நான் சொல்லுகிறேன். முஸ்லிம்கள் இந்தியாவின் ஜனத்தொகையில் நான்கில் ஒரு பகுதியினராக இருக்கின்றனர். அப்படியிருக்க அவர்களை யாரும் நிரந்தரமாக நசுக்கவோ, அழித்துவிடவோ முடியும் என்று கூறுவது அறிவீனமான பேச்சு. ஆனால், பாகிஸ்தான் வேண்டும் எனக் கேட்பது நியாயம் அல்லது அது இஸ்லாமுக்கு நல்லது என்று நான் உணரும்படி செய்துவிட்டால் அதை ஒப்புக்கொண்டுவிட நான் தயங்கமாட்டேன். எனினும், முஸ்லிம் லீக் கூறுகிறபடியான பாகிஸ்தான் கோரிக்கை இஸ்லாமுக்கு விரோதமானது என்று நான் நிச்சயமாக நம்புகிறேன். ஆகையால், அது பாபமானது என்று சொல்ல நான் தயங்க

---

* 'ஹிந்து-முஸ்லிம் பிரச்னையை எப்படிச் சமாளிப்பது?' என்று அன்று இக்கேள்விக்கு முன்னால் கேட்டதற்குக் காந்திஜி வருமாறு பதில் கூறினார்: "இவ்விஷயத்தில் என்னுடைய தோல்வியை நான் ஒப்புக்கொள்ள வேண்டும். நான் இன்று கூறுவதெல்லாம் வனாந்தரத்தில் போட்ட கூச்சலாகவே இருக்கிறது என்பதை நான் அறிவேன். ஆயினும், என்னுடையது ஒன்றே அனுபவசாத்தியமான பரிகாரம் என்று கூறுவேன். ஒரு குறிப்பிட்ட சமூகத்தைச் சேர்ந்த சிலர் மனிதத்தன்மை இல்லாத காரியங்களில் ஈடுபட்டார்கள் என்பதனால் அச்சமூகம் முழுவதையுமே கண்டித்துக் குற்றம் செய்வதாகக் கருதலாம் என்ற கருத்தை நான் ஏற்றுக்கொள்ளவே முடியாது. முஸ்லிம் லீக், ஹிந்துக்களைத் துஷிக்கலாம்; இந்தியாவை தார்-உல்-ஹரப் என்றும், அங்கு ஜெஹாத் சட்டமே நடந்து வருகிறதென்றும், காங்கிரஸுடன் ஒத்துழைக்கும் முஸ்லிம்கள் யாவரும் குஸ்லிங்குகள்(துரோகிகள்) என்றும், அவர்கள் யாவரும் அழிக்கப் பட வேண்டியவர்கள் என்றும் சொல்லலாம். ஆனால், இத்தகைய முரட்டுப் பேச்சுக்கள் இருந்தாலும், எல்லா முஸ்லிம்களுடனும் நட்புடன் இருக்கவும், நம் அன்பிற்கு அவர்களைக் கட்டுப்படச் செய்வதையும் மாத்திரம் நாம் விட்டுவிடவே கூடாது. ஹிந்துக்கள் லட்சக் கணக்கில் பதிலுக்கு எதுவும் செய்யாமல் அல்லது உள்ளத்தில் கோபம் இல்லாமல் துண்டு துண்டாகத் தாங்கள் வெட்டப்படுவதற்கு உடன்படுவார்களாயின் இப்போதே அது சாத்தியமாகும். அகிம்சை வெறும் கற்பனையே என்றும் அது நடக்காத காரியம் என்றும் எள்ளி நகைக்கின்றனர். என்றாலும், ஹிந்து தருமம் வாழவும், இந்தியா பிரிவினையாகாமல் இருப்பதற்கும் அது ஒன்றே வழி என்று நான் உறுதியாகக் கூறுவேன். அகிம்சை இதை நமக்குப் போதிக்கவில்லை என்றால், சென்ற இருபத்தைந்து ஆண்டு காங்கிரஸின் அகிம்சைச் சரித்திரம் நமக்கு எதையுமே போதிக்கவில்லை என்றே ஆகும்."

காந்திஜி இவ்விதம் பதிலளித்த பிறகே கம்யூனிஸ்டுகளின் நடவடிக்கைபற்றிய கேள்விக்கு மேற்கண்டவாறு பதிலளித்தார்.

வில்லை. இஸ்லாம் மனித வர்க்கத்தின் ஒற்றுமையையும் சகோதரத்துவத்தையும் போதிக்கிறதேயன்றி மனித குடும்பம் ஒன்ருக இருப்பதைக் குலைப்பதைக் கோரவில்லை. ஆகையால், இந்தியாவை, ஒன்றுக்கொன்று சச்சரவிட்டுக்கொண்டிருக்கும் குழுக்களாகப் பிரிக்க வேண்டும் என்பவர்கள், இந்தியாவுக்கும் இஸ்லாமுக்கும் விரோதிகளே யாவர். அவர்கள் என்னைத் துண்டு துண்டாக வெட்டி விடலாம். ஆனல், தவருனது என்று நான் நினைப்பதை அங்கீகரிக்கும்படி செய்ய மாத்திரம் அவர்களால் ஆகாது.

கம்யூனிஸ்டுகளின் விஷயம் கொஞ்சம் வேருன நிலையில் இருப்பது. சங்கடங்களை அதிகரிப்பதையே அவர்கள் தங்களுடைய தொழிலாகக் கொண்டிருக்கிருர்கள் என்று தோன்றுகிறது. அவர்களில் எனக்கு நண்பர்களும் இருக்கிருர்கள். அவர்களில் சிலர் எனக்கு மகனைப் போன்றவர்கள். ஆனல், நியாயத்திற்கும் அநியாயத்திற்கும், உண்மைக்கும் பொய்க்கும் அவர்கள் எந்தப் பாகுபாட்டையும் கவனிப்பதில்லை என்றே தோன்றுகிறது. குற்றச்சாட்டை அவர்கள் மறுக்கிருர்கள். ஆனல், அவர்கள் செய்து வருவதாகக் கூறப்படும் செய்கைகளோ அக் குற்றச்சாட்டுகளை உறுதிப்படுத்துகின்றன. இந்தியாவை விட்டு ருஷியாவே தங்களுக்கு ஆத்மிகத் தாய் நாடு என்று அவர்கள் கருதுகின்றனர்; ருஷியாவிலிருந்தே ஆக்ஞைகளைப் பெறுகிருர்கள் என்றும் தோன்றுகிறது. ஒரு வெளி நாட்டை இவ்விதம் நம்பியிருப்பதை நான் அங்கீகரிக்க முடியாது. நமக்கு இப்பொழுதுள்ள உணவு நெருக்கடியில் கூட ருஷியக் கோதுமையை நாம் எதிர்பார்க்கக் கூடாது என்று நான் கூறி வருகிறேன். வெளி நாட்டின் தானத்தை நம்பிக்கொண்டிருப்பதைவிட நம் பூமி நமக்கு அளிப்பதைக் கொண்டு வாழும் ஆற்றலும் தீரமும் நமக்கு வேண்டும். அப்படி இல்லை என்ருல், ஒரு சுதந்திர நாடாக இருக்க நாம் தகுதியுடையவர்கள் அல்ல. இதுவே வெளிநாட்டுக் கொள்கைகள் விஷயத்திலும் பொருந்தும். அவைகளை ஜீரணித்து இந்தியாவுக்கு ஏற்ற வகையில் அனுசரிக்க முடிந்த வரையில் மாத்திரமே அவைகளை நான் ஏற்றுக்கொள்ளுவேன். ஆனல், அவர்களுக்குக் கீழ்ப்படிய மாத்திரம் நான் மறுத்துவிட வேண்டும்.

ஆகையால், கம்யூனிஸ்டுகள் சம்பந்தமாக என் முறை இதுதான்: நான் அவர்கள் கையில் மடிந்தாலும் மடியவேண்டுமேயன்றி நான் திருப்பி அவர்களுக்கு எதுவும் செய்யக் கூடாது.

புது டில்லி, 30 - 9 - 1946

–'ஹரிஜன்' - 6-10-1946

# 4

# கொள்ளையை ஒழிப்பது எப்படி ?

மறுநாள் டாக்டர் மாட்* முன்னுரையாகக் கீழ்க்கண்ட குறிப புடன் கேட்க ஆரம்பித்தார்: "நான் கேட்ட கேள்விக்கு உங்க ளுக்கே உரியதான வழியில் உங்கள் கருத்துக்களைக் கூறினீர் கள். நான் சொல்லக் கூடியதைவிட அதிகமாக அக்கருத்துக் களை நான் மதிக்கிறேன். எண்ணத்தில் மாத்திரம் ஓரளவு முன்னேற்றம் இருக்கிறதேயன்றி அது செய்கையில் இல்லை என்று நீங்கள் ஒப்புக்கொள்ளுவது எனக்குத் திருப்தியளிக் கிறது. பல தலைவர்களின் மூளை, இந்த முக்கியமான பிரச்னை களைக் குறித்து முன்னேற்றமான வழியில் சிந்திக்க ஆரம்பித் திருக்கிறது என்பதே ஒரு பெரிய விஷயம். உண்மையாகவே சரியான வகையில் செய்யப்பட்டு வரும் சில காரியங்களையும் உங்களுக்குக் காட்டுகிறேன். ஆனால், இன்றே, உங்கள் கவ னத்தை வேறு ஒரு விஷயத்தில் ஈடுபடுத்த விரும்புகிறேன். அடிக்கடி உபயோகிக்கப்பட்டு வரும் சொல்லையே நானும் உபயோகிக்கலாம் என்றால், 'கொள்ளைக்கார' நாடுகள் விஷ யத்தில் என்ன செய்வது? அமெரிக்காவில் தனிப்பட்ட

---

*காந்திஜியுடன் விவாதித்த டாக்டர் மாட், 1936-இல் ஒரு முறை காந்திஜியைச் சந்தித்தார். இரண்டாவது முறையாக 1938-இல் வந்த இவர் யார் என்பதைக் குறித்து 'ஹரிஜன்' 10—12—1938 இதழில் ஸ்ரீ மகாதேவ தேசாய் வருமாறு எழுதியிருக் கிறார் :

" இப்பொழுது இவருக்கு வயது 73. ஆனால், இவர் பழைய தீவிரம் எதையும் இன் னும் இழந்துவிடவில்லை. சிறந்த கட்டுத்திட்டத்திற்குட்பட்ட வாழ்க்கையின் ரகசியத்தை இவர் நன்கு அறிவாராகையால் நூறாண்டு பலனுள்ள வாழ்வை இவர் பூர்த்தி செய்து விடுவார் என்று நம்பலாம். இவர், ஒரு பெரிய பழைய தட்டுமுட்டுச் சாமான் வியாபாரி யின் மகன். இவர் வக்கீலாக வேண்டும் எனத் தந்தை எண்ணினார். ஆனால், தந்தை யின் தொழிலையோ, வக்கீல் தொழிலையோ இவர் விரும்பவில்லை. உலகமெல்லாம் சுற் றிக் கடவுள் பணியில் ஈடுபடவே - தம் உள்ளத்தையும் உடலையும் அதில் ஈடுபடுத் துவதென்றே - சிறு வயதில் முடிவு செய்துகொண்டார். சளைக்காத இந்தப் பணியின் காரணமாகப் பெரிய பதவிகளை ஏற்கவும் மறத்துவிட்டார். வுட்ரோ வில்ஸன், அமெரிக்க ஜனாதிபதியாவதற்கு ராஜிநாமாச் செய்த பிரின்ஸ்டன் கல்லூரித் தலைவர் பதவியை டாக்டர் மாட் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். ஜனாதிபதி வில்ஸன், சீனா வில் அமெரிக்க ஸ்தானிகர் பதவியை இவருக்கு அளிப்பதாகக் கூறினார். இவர் அதை யும் நிராகரித்துவிட்டுக் கிறிஸ்தவத்தை ஒன்றுபடுத்துவதற்காக உலகின் ஒரு மூலையி லிருந்து மற்றொரு மூலைக்குச் சென்றார். இவருடைய வாழ்க்கை வரலாற்றை எழுதி யிருப்பவர், இவர் சென்றிருக்கும் நாடுகளின் தொகையையும் அவர் பிரயாணம் செய் திருக்கும் தொலைவையும் கணக்காகவும் அன்போடும் கூறியிருக்கிறார். 1934-இல் எழு திய ஸ்ரீ பேஸில் மாத்யூஸ், 'டாக்டர் மாட் செய்திருக்கும் யாத்திரைகள் 17,00,000 மைல் களாகின்றன; அதாவது, உலகத்தை அறுபத்தெட்டு முறை சுற்றி வந்த தூரமாகிறது' என்கிறார்......"

கொள்ளைக் கூட்டம் இருந்தது. ஊர்தோறும் நாடு முழுவது மாகப் பலமான போலீஸ் நடவடிக்கையின் மூலம் இக்கொள் ளைக்காரக் கூட்டம் அடக்கப்பட்டிருக்கிறது. நாடுகளுக் கிடையே நடக்கும் கொள்ளை அக்கிரமங்களை அடக் குவதற்கு இதுபோன்ற முறைகளையாவது நாம் கைக் கொள்ளக்கூடாதா? உதாரணமாக, மஞ்சூரியாவில் உபயோகிக் கப்படும் கெடுதலான அபினி விஷம், அபிஸீனியாவிலும் ஸ்பெ யினிலும் நடந்தவை, ஆஸ்திரியாவைத் திடீரெனக் கைப்பற்றி யது, பிறகு ஜெக்கோஸ்லாவோகியாவின் விஷயம் ஆகியவை களைப்பற்றியே கூறுகிறேன். ஜெக் சம்பந்தமாகவும், யூதப் பிரச்னை குறித்தும் நீங்கள் எழுதியிருந்தது என்னை அதிக மாகக் கவர்ந்தது என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் தெரி வித்துக்கொள்ள விரும்புகிறேன். சர்வதேசப் போலீஸ் போன்ற ஒன்றை நாம் ஏற்படுத்தலாமா?

**காந்திஜி :** இப்பிரச்னை எனக்குப் புதியதே அல்ல.

**டாக்டர் மாட் :** அதை நான் சொல்லவில்லை.

**காந்திஜி :** இந்திய நிலைமை சம்பந்தப்பட்ட வரையில் அதே போன்ற பிரச்னைகளை நான் சமாளிக்க வேண்டியிருக் கிறது. வகுப்பு, தொழிலாளர் கலகங்களை நாங்கள் அடக்க வேண்டியிருந்தது. பலவற்றில் போலீஸ் படையையும் சிலவற் றில் ராணுவத்தையும் மந்திரிகள் உபயோகித்திருக்கிறார்கள். அப்படிச் செய்வதைத் தவிர மந்திரிகளுக்கு வேறு வழியில்லை என்பதை நான் ஒப்புக்கொண்டாலும், காங்கிரஸ் மந்திரிகள் தங்களிடம் இருக்க வேண்டிய சரக்கில், அதாவது அவர்களுக்குப் பழக்கமான அகிம்சை ஆயுத விஷயத்தில், ஓட்டாண்டிகளாகி விட்டார்கள் என்றே கூறினேன். நீங்கள் கேட்டிருக்கும் கேள்வி விஷயத்திலும் நான் அதையே கூறுவேன். அதாவது, உலகத்திலுள்ள சிறந்தவர்களின் மூளைகளில் அகிம்சை உணர்ச்சி ஏற்படவில்லையென்றால், கொள்ளைக் கூட்டத்தைச் சமாளிக்கப் பழைய வழியையே அவர்கள் அனுசரிக்க வேண் டும் என்பேன். ஆனால், நாம் காட்டுத் தருமத்துக்கு மேலே இன்னும் போய்விடவில்லை. 1900 ஆண்டுகள் பழமையான கிறிஸ்தவ தருமம் இருந்தும், அதற்கும் பழமையானதான ஹிந்து தருமமும் புத்த தருமமும் இருந்தும், இஸ்லாம் தருமம் போதித்து வந்தும், (நான் சரியாகவே அவற்றைப் படித்திருக் கிறேன் என்றால்) கடவுள் நமக்கு அளித்திருக்கும் செல் வத்தை உணர நாம் இன்னும் கற்றுக்கொள்ளவில்லையெனில், மனிதர் என்ற வகையில் நாம் அதிகமாக முன்னேறிவிடவில்லை

என்பதையே அது குறிக்கும். ஆனால், தங்களிடம் அகிம்சை உணர்ச்சி இல்லாதவர்கள் இம்சை முறையை உபயோகிப்பதை நான் அறிய முடிகிறது. என்றாலும், அகிம்சையை அறிந்தவர்கள், கொள்ளை அக்கிரமங்கூட அகிம்சையினாலேயே சமாளிக்கப்பட வேண்டும் என்பதைச் செய்துகாட்ட வேண்டும் என்பேன். ஏனெனில், இம்சை முறையை எவ்வளவுதான் நியாயமாக உபயோகித்தாலும், ஹிட்லர், முஸ்ஸோலினியின் இம்சைச் சக்திபோலவே, அதே சகதியிலேயே நம்மைக் கொண்டு போய் விட்டுவிடும். அளவில் மாத்திரமே இதில் கொஞ்சம் வித்தியாசம் இருக்கும். அகிம்சையில் நம்பிக்கையுள்ள நீங்களும் நானும் நெருக்கடியான சமயத்தில் அதை உபயோகிக்க வேண்டும். இப்பொழுது நாம் சுவரின்மீதே நம் தலைகளை மோதிக்கொள்ளுகிறோம் என்று தோன்றினாலும், கொள்ளைக்காரரின் உள்ளங்களையும் திருப்பிவிட முடியாதோ என்று நாம் சஞ்சலப்பட வேண்டியதில்லை.

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது.]

— 'ஹரிஜன்' - 10—12—1938

## 5

## வருந்தத்தக்க சம்பவம்

அன்று சேவாகிராமத்திலிருந்து சர்தார் வல்லபபாய் பட்டேல் புறப்படும்போது கேடா ஜில்லாவில் ஒரு வீட்டில் நடந்த கொள்ளையைப்பற்றி என்னிடம் கூறினார். ஆயுதம் தாங்கிய கொள்ளைக்காரர்கள் வீட்டிற்குள் புகுந்து, வீட்டில் இருந்தவர்களை அடித்துப் போட்டுவிட்டுக் கொள்ளையடித்துக் கொண்டு ஓடிவிட்டார்கள். இக்கதை மனத்தை உருக்குவதாக இருந்தது. அத்தகைய ஒரு சமயத்தில் நான் என்ன செய்யவேண்டும் என்பதைச் சிந்தித்தேன். அந்நிலையில் காங்கிரஸ்காரர்கள் செய்ய வேண்டியது என்ன என்ற நினைவும் வந்தது. அதுமுதல் கொள்ளையினால் எழுந்த எண்ணம் என்னைப் பிடித்துக்கொண்டுவிட்டது. 1920 முதல் காங்கிரஸ் தொடர்ந்து அகிம்சைக் கொள்கையின் கீழ் வேலை செய்து வருகிறது; சர்தாரைப் போன்ற ஒருவரைத் தலைவராகக் கொண்டிருக்கும் வசதியும் குஜராத் மாகாணத்திற்கு இருந்திருக்கிறது. என்றாலும், துணிகரக் கொள்ளைகள் நடக்க முடிகிறது. அப்படியானால், காங்கிரஸின் செல்வாக்கு எவ்வளவு ஊடுருவி இருக்கிறது என்று சொல்ல முடியுமா? பிரிட்டிஷ் ஆட்சி இன்று இல்லாது போய்விடுகிறதென்றால், அகிம்சைக்

காங்கிரஸ்வாதிகள் உடனே ஆட்சிக்கு வருவார்கள் என்று மக்கள் எண்ணுகின்றனர். ஆனால், அது அப்படியன்று. இதற்காக நான் சென்ற இருபது ஆண்டுகளாக வேலை செய்து வருகிறேன். ஆனால், என் கனவு இன்னும் நிறைவேற வில்லை. 1920-இல் காங்கிரஸ் மேற்கொண்ட முறையில் அதற்கு உறுதியான நம்பிக்கை இல்லை. ஆகவே, காங்கிரஸின் அகிம்சை உண்மையில் பலவீனர்களின் அகிம்சையாகவே இருந் திருக்கிறது. ஆனால், அரசாங்கத்தையோ பலமுள்ளவர்களா லேயே நடத்த முடியும். உலகில் அகிம்சையே அதிக பலமான சக்தி என்று நம்புகிறவர்களினாலேயே ஓர் அகிம்சை அரசாங் கத்தை நடத்த முடியும். இந்தப் பலம் நமக்கு இருந்திருந் தால், ஹிந்து-முஸ்லிம் கலகங்கள் இருக்க மாட்டா; திருட்டு கள், கொள்ளைகளும் இரா. இத்தகைய பலம் இருப்பதற்கு ஓர் ஏசுவோ அல்லது ஒரு புத்தரோ வேண்டும் என்று சிலர் சொல்லலாம். ஆனால், அது அப்படி அன்று. ஏசுவோ அல் லது புத்தரோ ராஜீயத் துறையில் அகிம்சையைச் சோதிக்க வில்லை; அவர்கள் நாளில் இன்று இருப்பதைப் போன்ற ராஜீயம் இருந்ததும் இல்லை. ஆகையால், காங்கிரஸின் பரீட்சை புதிதானது. காங்கிரஸ்காரர்கள் முழு நம்பிக்கை யுடனும், முழு உணர்வோடும், உண்மையாகவும் அதைப் பரீட்சிக்கவில்லை என்பதே இதிலுள்ள துக்ககரமான விஷயம். இந்த அவசியமான மூன்று குணங்களும் அவர்களுக்கு இருந் திருக்குமானால், காங்கிரஸ் இன்றிருப்பதைவிட இன்னும் எவ் வளவோ உயர்வானதாக இருந்திருக்கும். ஆனால், நடந்து விட்டதைக் குறித்து நான் வருந்திப் பயனில்லை. இப்பொழுது நமக்கு வழி காட்ட மாத்திரமே நடந்து போனதைப்பற்றி நான் குறிப்பிடுகிறேன். நாம் இப்பொழுது விழித்துக் கொண்டாலும் வெற்றி நமக்கே; விழித்துக் கொள்ளாது போனால் நிச்சயமாகத் தோல்வியடைவோம். பலமுள்ளவர்கள் கைக்குத்தான் எப்பொழுதுமே சக்தி போகிறது. அந்தச் சக்தி, உடல் சக்தியாக இருக்கலாம் அல்லது உள்ளத்தின் சக்தியாகலாம்; தயங்காது கூறின், அது உணர்ச்சியின் சக்தி யாகவும் இருக்கலாம். உள்ளத்தின் பலம் என்பதே ஆத்ம பலம். ஆயுத பலத்தினால் ஆன சக்தியை நாம் அடைவதற்கு முயற்சி செய்ய வேண்டும் என்று இன்று முடிவு செய்வ தனால், பொதுமக்களிடையே இருபது ஆண்டுகளாகச் செய்து வந்திருக்கும் வேலையையெல்லாம் நாம் வீணாக்கிவிட வேண்டும். மாறுபட்டதான ஒரு பயிற்சியை அளிப்பதற்கு எவ்வளவோ காலத்தை நாம் செலவிடவும் வேண்டும். இந்த நெருக்கடியான

சமயத்தில் அவ்வளவு காலத்தைச் செலவிடுவது நம்மால் ஆகாது. ஏதாவது ஒருவகையான பலம் யாருக்கு இருக்கிறதோ அவர் அதை உபயோகித்து அதிகாரத்தைக் கைப்பற்றிக்கொள்ளுவார் என்பது இன்று நிச்சயம். காங்கிரஸ்காரர்கள் அதிகாரத்தைப் பெற வேண்டுமானால் அது அகிம்சை அல்லது ஆத்ம சக்தியினாலேயே பெறுவதாக இருக்க வேண்டும் என்பது என்னுடைய திடமான நம்பிக்கை.

இந்தத் துறையில்கூடப் புதிதான வேலையைச் செய்வதற்கு நமக்கு நேரமோ அல்லது சாதனங்களோ இல்லை. இதுவரையில் பலவீனமானவர்களின் ஆயுதமாகவே அகிம்சையை உபயோகித்து வந்திருக்கும்போது அதைப் பலமுள்ளவர்களின் ஆயுதமாகத் திடீரென்று மாற்றிவிட முடியும் என்று நாம் எப்படி எதிர்பார்க்க முடியும்? ஆனால், நிலைமை இவ்விதம் இருப்பினும், இந்தச் சமயத்திற்கு இந்தச் சோதனை ஒன்றே நமக்கு ஏற்றது, தகுதியானது என்று கருதுகிறேன். இதில் ஆபத்து எதுவுமே இல்லை. இதில் தோல்வியும் வெற்றியின் உருவையே அடைகிறது. ஏனெனில், இச்சோதனையில் முழு அளவுக்கும் மக்கள் போக முடியாதுபோயினும் அவர்கள் பள்ளத்தில் இறங்கிவிடமாட்டார்கள். உடல் பல வழியைப் பின்பற்றுவதாயின் அவர்கள் கோழைகள் என்று நிரூபிக்கப்பட்டுவிட நேருவதோடு, பழக்கமில்லாத வழியில் போகச் செய்த முயற்சியில் ஆயிரக்கணக்கானவர்கள் நாசமாகிவிடவும் கூடும்.

ஆகவே, திருடர்களும் கொள்ளைக்காரர்களும் யார் என்பதைக் கண்டுபிடிக்க வேண்டியது காங்கிரஸ்காரர்களின் கடமையாகிறது. அவர்கள் போக்கை அறிந்துகொண்டு அவர்களைத் திருப்ப முயற்சி செய்ய வேண்டும். அதற்கு வேண்டிய ஊழியர்கள் கேட்ட மாத்திரத்தில் கிடைத்துவிட மாட்டார்கள். ஆனால், இதில் எவ்விதம் ஆபத்தும் இருக்கிறதோ அதே போல இது முக்கியமான வேலையுமாகும் என்பதைக் காங்கிரஸ்காரர்கள் அறிந்து அவர்களில் ஒரு தொகையினர் இந்த வேலையில் தங்களை ஈடுபடுத்திக்கொள்ள வேண்டும்.

இதற்கு வேண்டிய இரண்டாவது விஷயமும் ஒன்று உண்டு. கொள்ளைக்காரர்களின் தீய செயல்களைத் தடுக்க அல்லது அவர்களை மாற்ற முயலுவதில், கஷ்டமான சந்தர்ப்பங்களில் கொள்ளைக்காரர்களை எதிர்த்து நின்று துன்பத்தை அனுபவிப்பதற்கும் சாவதற்குங்கூடத் தயாராக இருப்பவர்களான ஊழியர்களை நாம் தயாரிக்க வேண்டும். இந்த

வேலைக்கும் சில ஊழியர்கள் மாத்திரமே முன்வருவதாகவும் இருக்கலாம். ஆனால், நாடு முழுவதுமே சமாதானப் படைகள் இருப்பது கட்டாயமாக அவசியமே. இல்லையானால், குழப்ப நிலைமை ஏற்படும்போது இதுவரையில் தான் அடைந்திருக்கும் கௌரவத்தையெல்லாம் காங்கிரஸ் இழந்துவிட நேரும்.

மூன்றாவதாக, பணக்காரர்கள் இன்று தங்களுடைய கடமை என்ன என்பதை ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். தங்கள் சொத்துக்களைப் பாதுகாத்துக்கொள்ளுவதற்கு ஊதியம் தந்து வைக்கப்படும் ஆட்களே அவர்களுக்கு எதிராகத் திரும்பி விடக்கூடும். ஆயுதங்களுடனே அல்லது அகிம்சை ஆயுதத்தைக் கொண்டோ போராடுவது எப்படி என்பதைப் பணம் படைத்தவர்கள் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. அகிம்சை ஆயுதத்தை உபயோகிக்கும் வழியைப் பின்பற்ற விரும்புகிறவர்களுக்குச் சிறந்ததும் பலனுள்ளதுமான மந்திரம் இதுதான்: 'சொத்தைத் துறப்பதனாலே அதை அனுபவி! (தேன த்யக்தேன புஞ்ஜீதா:)' விவரித்தால் இதுதான் அதன் பொருள்: கோடிக்கணக்கில் சம்பாதிப்பதாயினும் சம்பாதியுங்கள். ஆனால், சொத்து உங்களுடையதல்ல என்பதைத் தெரிந்துகொள்ளுங்கள்; மக்களுடையது அது. உங்களுடைய நியாயமான தேவைக்கு வேண்டியதை எடுத்துக்கொள்ளுங்கள்; மீதத்தைச் சமூகத்திற்காக உபயோகியுங்கள். இந்த உண்மை இதுவரையில் அனுசரிக்கப்படவில்லை. ஆனால், பணம் படைத்த வகுப்பினர் இந்தச் சங்கடமான சமயத்தில்கூட இதன்படி நடக்காது போவார்களாயின், அவர்கள் தங்களுடைய சொத்திற்கும் ஆசைகளுக்கும் அடிமைகளாக இருந்து வருவதோடு, முடிவில் அவர்களை ஆக்கிரமித்துக் கொள்ளுவோருக்கும் அடிமையாகிவிடுவார்கள்.

ஆனால், இந்த யுத்தத்தின் முடிவு என்பது முதலாளிகளின் ஆட்சிக்கும் முடிவாகவே ஆகும் என்று எனக்குத் தோன்றுகிறது. ஏழைகளின் ஆட்சி, ஆயுத பலத்தினாலோ அல்லது அகிம்சையினாலோ ஏற்படும் நாள் வருவதைக் காண்கிறேன். உடல் எவ்விதம் நிரந்தரமானதன்றோ அதே போலவே உடல் சக்தியும் நிரந்தரமானதன்று என்பது நினைவில் இருக்கட்டும். ஆனால், ஆத்மா என்றும் அழிவற்றது என்பது போன்றே ஆத்ம சக்தியும் நிரந்தரமானது.

சேவா கிராமம், 25—1—1942 — 'ஹரிஜன்' - 1—2—1942

# 6

# உண்மையாயின் மிருகத்தனமானது

*மார்வாரி கஷ்ட நிவாரண சங்கத்தின் சமூக சேவைப் பகுதியின் கௌரவச் செயலாளர் வருமாறு எழுதுகிறார் :*

பர்மா, மலேயாவிலிருந்து வெளியேறி வருபவர்களுக்குச் சாதி, மத, நிற பேதமின்றிக் கல்கத்தா மார்வாரி கஷ்ட நிவாரண சங்கம் செய்துவரும் வேலையைக் குறித்து மிகச் சுருக்கமாக உங்களுக்குத் தெரிவித்துக்கொள்வதோடு மிக ஆபத்தான ஒரு விஷயத்தில் உங்கள் மதிப்பு மிக்க ஆலோசனையைப் பணிவுடன் நாடவேண்டியவனாகவும் இருக்கிறேன். ரெயில், பாட்டை, கடல் மூலம் தினந்தோறும் அகதிகள் கல்கத்தாவிற்கு ஆயிரக்கணக்கில் வந்து கொண்டிருக்கின்றனர். இவர்களுக்கு உணவு, வைத்திய வசதி, இவர்களை வெளியே ஏற்றி அனுப்புவதற்கு ஏற்பாடுகள் ஆகியவற்றை இச்சங்கம் மேற்கொண்டிருக்கிறது. பிரசவம் போன்று அவசரமாக ஏற்பட்ட நிலைமைகள் பலவும் கவனிக்கப்பட்டன. கௌரவமான உள்ளூர் வர்த்தக ஸ்தாபனங்களின் ஒத்துழைப்பினால், வேலையில்லாமல் திண்டாடும் அகதிகளுக்குத் தக்க வேலைகளைத் தேடித் தரவும் சங்கம் முயற்சி செய்து வருகிறது.

இந்தச் சந்தர்ப்பத்தில் வருந்தத் தக்க ஒரு சம்பவத்தைக் குறித்தும் உங்களுக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இவ்விஷயத்தில் என்னுடைய கடமை என்ன என்பதைக் குறித்துத் தங்கள் ஆலோசனையைக் கூறுவீர்களாயின் நன்றியுடையவனாவேன்.

மார்ச்சு 14-ஆம் தேதி இரவு. சிட்டகாங் மெயில் வந்ததுமே நான் பல தொண்டர்களுடன் அகதிகளின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் வேலையில் ஈடுபட்டேன். அப்பொழுது ஒரு பிரிட்டிஷ் சிப்பாய், ஓர் ஏழை அகதியின் சிறு குழந்தையைப் பிடித்து எடுத்து ரெயிலுக்கு அடியில் எறிந்துவிட்டான். நான் உங்களுடைய உயர்ந்த தருமமான அகிம்சையைப் பின்பற்றும் பணிவுடையவனாயினும், அந்தச் சிப்பாயின் மிருகத்தனமான காரியத்திற்காக அவனை அடிக்கவேண்டுமென்று ஆத்திரங் கொண்டேன். இருந்தாலும், நானும் என் தொண்டர்களும் எங்களையே எவ்வளவோ சிரமப்பட்டு அடக்கிக்கொண்டோம். ஸ்டேஷன் ராணுவ அதிகாரிகளுக்கு விஷயத்தைக் கூறினேன். ஆனால், அவர்களுடைய போக்கு அனுதாபத்துடன் அதைக் கவனிப்பதாக இல்லை. இன்னும் இரவு நேரங்களில் பல சிப்பாய்கள் பிளாட்பாரத்தில் திரிந்துகொண்டுதான் இருக்கிறார்கள். இந்தச் சிப்பாய்களுக்கும் நிவாரண வேலைத் தொண்டர்களுக்கும் பொது மக்களுக்குமிடையே கைகலப்பு ஏற்பட்டுவிடக்கூடும். ஆகையால், சீக்கிரத்தில் இதைச் சமாளிக்க வேண்டியதாகிறது. வங்காளக் காங்கிரஸின் பொதுஜனப் பாதுகாப்புக் கமிட்டியிடமும் இதைப்பற்றித் தெரிவித்திருக்கிறேன்.

கீழ்க்காணும் விஷயங்களில் எனக்கு ஆலோசனை கூறுவீர்களாயின் நன்றியுள்ளவனாவேன் :

1. இது பற்றி நான் பத்திரிகைகள் மூலம் ஒரு கிளர்ச்சியை உண்டாக்குவதா ?

2. திக்கற்ற ஒரு பெண்ணிடம் அயோக்கியத்தனமாக ஒரு சிப்பாய் நடந்து விடுகிறான் என்று வைத்துக்கொள்வோம். அதை நாம் பேசாமல் சகித்துக்கொள்ளுவதா அல்லது பலாத்காரத்தின் மூலம் அந்தச் சிப்பாயை அடக்குவதா ?

இது சம்பந்தமாக 'ஹரிஜன்' பத்திரிகையில் நீங்கள் ஓர் அறிக்கையை வெளியிடுவீர்களாயின் அது எங்களுக்கு அதிக உதவியாக இருக்கும். மேற் கண்ட சம்பவம் முழுதும் உண்மையானது என்பதைக் குறித்து முழுப் பொறுப்பையும் ஏற்றுக்கொள்ள நான் தயாராயிருக்கிறேன்.

சிப்பாய்களின் தகாத செய்கைகளைக் குறித்து ஆதாரபூர்வமான தகவல்களுடன் எனக்கு வந்திருக்கும் பல கடிதங்களை நான் வெளியிடாது இருந்துவிட்டேன். வெளியிடாதிருப்பது கோழைத்தனம் என்றாகாவிட்டாலும் தவறு என்ற நிலைமையில் மாத்திரமே அவற்றை வெளியிட்டிருக்கிறேன். பொது மக்கள் பத்திரமாக இருக்க வேண்டும் என்பதற்காக மாத்திரமல்ல, சிப்பாய்களின், அரசாங்கத்தின் பத்திரத்திற்காகவும் சம்பந்தப் பட்ட இக்கடிதம் எல்லோருக்குமே தெரிந்ததாக இருக்கும் படி செய்வது அவசியமாகிறது. மார்வாரி கஷ்ட நிவாரண சங்கம், இருபத்தைந்து ஆண்டுகளாக இருந்து வரும் ஒரு தரும ஸ்தாபனம். அதற்கு இந்தியா முழுவதிலுமே நற் பெயருண்டு. அதற்கு நிதி இருப்பதோடு தேர்ந்த ஊழியர் களும் அதனிடம் இருக்கிறார்கள். அதன் ஊழியர்கள் முன்னிலை யில் சிப்பாய்கள் யோக்கியமாக நடந்துகொள்ள வேண்டும் என்பதற்கு அதன் கௌரவம் ஒன்றே போதுமான பாதுகாப் பாக இருந்திருக்க வேண்டும். கடிதத்தில் கூறப்பட்டது போல் சிப்பாய் நடந்துகொண்டதாக இருந்தால் அவருக்கு வெறி பிடித்துப் போயிருக்க வேண்டும். இல்லையானால், குடி போதை யிலாவது இருந்திருக்க வேண்டும். முற்றிலும் பரிசீலனை செய்யப்பட்டுப் பரிகாரம் கிடைக்கும்வரையில் மார்வாரி நிவாரண சங்கம் இவ்விஷயத்தை விட்டுவிடாது என்றே நம்புகிறேன். விஷயத்தை மறைத்துவிட அதிகாரிகள் விரும்ப மாட்டார்கள் ; கடிதம் எழுதியிருப்பவர் கூறுவது உண்மை என நிரூபிக்கப்பட்டால் அதற்குத் தக்க பரிகாரத்தைத் தேடு வார்கள் என்றும் நம்புகிறேன்.

இதுவரை நான் கூறியவை அவ்விஷயத்தைப்பற்றி. இது போன்று இனி நடந்தால் என்ன செய்வது என்பதற்குக் கடிதத்தை எழுதியிருப்பவர் என் யோசனையைக் கேட்கிறார். இம்சை அல்லது அகிம்சை நடவடிக்கை, சமயத்திற்கு ஏற்ற தாக இருக்க வேண்டும். தொண்டர்கள், முடிந்தால் சரீர

பலத்தைக்கொண்டு குழந்தையை அந்தச் சிப்பாய் தொட முடியாதபடி தடுத்திருக்க வேண்டும்; அப்படித் தடுப்பதிலோ அல்லது அவனிடமிருந்து குழந்தையைப் பறிப்பதிலோ சிப்பாய் காயப்பட நேர்ந்தாலும் அதையும் பொருட்படுத்தாது செய்திருக்க வேண்டும். குழந்தை மீட்கப்பட்ட பின்போ அல்லது அம்முயற்சியில் தோற்றுப் போன பின்னரோ நடப்பவை, பாதுகாக்கச் சென்றவர்கள் பலாத்கார நோக்கத்துடன் சென்றனரா அல்லது அகிம்சை நோக்கத்துடன் சென்றனரா என்பதைப் பொறுத்து மாறுபடும். அகிம்சை நடத்தை, குற்றவாளியிடம் தயாளமாகவும் கண்ணியமாகவும் நடந்துகொள்ளச் செய்யும். ஆனால், தயாளமாக நடப்பதோ, கண்ணியத்துடன் நடந்துகொள்ளுவதோ, யோசித்துக் காரணத்தோடு செய்யக்கூடியதாக இருக்க வேண்டும். எல்லாச் சம்பவங்களின் சம்பந்தமாகவும் முன்கூட்டியே இப்படித்தான் நடக்க வேண்டும் என்ற விதியை நிர்ணயித்துவிடுவது கஷ்டம். நான் கூறக்கூடியதெல்லாம் இதுதான்: உண்மையிலேயே தயாளமான ஒரு காரியத்திற்கு, குற்றவாளியைப் பொறுத்தவரையிலும், மனப்பூர்வமாக அதை உணர்ந்துகொள்ளுவதும் வேண்டும். தென்னாப்பிரிக்காவில் ரெயில்வே ஸ்டேஷன்களில் ஆப்பிரிக்கர்கள் அவமதிக்கப்படும்போது அவர்கள் முரட்டுத்தனமாக நடந்துகொள்ளும் வெள்ளைக்காரர்களிடம், "என் சகோதரரே, உங்கள் முரட்டுத்தனத்திற்குக் கடவுள் உங்களை மன்னிப்பார்" என்பார்கள். வெள்ளைக்காரர்கள் மேற்கொண்டும் அதிகமாக அவமதிக்காவிட்டாலும் பரிகாசமாகச் சிரித்துவிட்டுப் போவார்கள். இத்தகைய சம்பவங்களை நான் அறிவேன். இதே போன்ற சந்தர்ப்பங்களில் நான் சும்மா இருந்து அவமதிப்பை அனுபவித்திருக்கிறேன். ஆப்பிரிக்கர் காட்டிய தயாளம் எனக்கூறப்படுவது, கேலி செய்யப்படத்தக்கதான சாதாரண இயந்திரம் போன்ற செய்கையேயாகும் என்பதில் சந்தேகமில்லை. எனக்கோ நடுக்கம். மேற்கொண்டும் அவமதிப்பை உண்டாக்கிக்கொள்ள நான் விரும்பவில்லை. சட்டப்படி நடவடிக்கை எடுத்துக்கொள்ள நான் நிச்சயமாக விரும்பவில்லை. அப்பொழுது நான் அகிம்சை நடத்தையை உருவாக்கிக்கொள்ள முயன்று வந்தேன். எனக்கு உண்மையான வீரம் மாத்திரம் இருந்திருக்குமாயின், என்னை அவமதித்தவர்களை ஆட்சேபித்து, வருவது வரட்டும் என்று துணிந்திருப்பேன்.

தனக்கு ஏற்படும் அவமதிப்பு அல்லது துன்பம் சம்பந்தமானவற்றில் அகிம்சையோடு நடந்துகொள்ளுவது என்று

சொல்லப்படுவதைக் குறித்த பரிசீலனையை நான் உட்புகுத்தியிருக்கிறேன். துன்பத்திற்காளான குழந்தையின் அல்லது எனக்குக் கடிதம் எழுதியிருப்பவர் ஊகிக்கும் துன்பத்திற்காளான குழந்தையின் சங்கதி என்ன? அகிம்சையோடு கூடியதான செய்கை வேறுவிதமாக இருக்காது, இருக்கக்கூடாது என்று நினைக்கிறேன். தமக்குச் சொந்தமாக ஏற்படும் துன்பத்திற்கும், தம் பாதுகாப்பில் இருப்பவருக்குச் செய்யப்படும் துன்பத்திற்கும் பாகுபாடு செய்வது தவறு அல்ல. இருப்பினும், அது நியாயம் இல்லாதது. தனக்குச் செய்துகொள்ளுவதற்கு அதிகமாகத் தன்னுடைய பாதுகாப்பிலிருப்பவருக்குச் செய்ய வேண்டும் என்று மனிதன் எதிர்பார்க்கப்படவில்லை. தன்னுடைய பாதுகாப்பில் இருப்பவரின் மானத்தைக் காப்பதற்காக அவன் தன்னையே தியாகம் செய்துகொள்ளுவான் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், தனக்காகவும் அவ்விதமே செய்துகொள்ள வேண்டுமென்றே எதிர்பார்க்கப்படுகிறான். இதற்கு மாறாக அவன் நடந்துகொள்ளுவானாயின், அவனைக் கோழை என்று எல்லோரும் கூறிவிடுவதோடு தன் சொந்த மானத்தைக் காப்பாற்றிக்கொள்ள அவனால் முடியவில்லையென்றால், அவனுடைய பாதுகாப்பில் இருப்பவரின் மானத்தைக் காப்பாற்றுவதும் அவனால் முடியாது. ஆனால், பகுத்தறிவதனால் மாத்திரம் சரியான அகிம்சை நடத்தை ஏற்பட்டுவிடுவதில்லை என்று நான் கூறுவேன். பகுத்தறிவது அவசியமான ஆரம்ப காரியமே. ஆனால், திரும்பத் திரும்பத் தோல்வியிலேயே முடிவதாக இருந்தாலும், நடத்தை சரியானதாக ஆவது திரும்பத் திரும்பப் பழக்கப்படுத்திக்கொள்ளுவதனாலேயே ஏற்படும்.

பலாத்காரத்தோடு கூடிய செய்கை எப்படி இருக்க வேண்டும் என்பதைக் குறித்துப் பரிசீலனை தேவையே இல்லை.

சேவா கிராமம், 23—3—1942 — 'ஹரிஜன்' - 29—3—1942

# 7

# குற்றவாளியும் அகிம்சையும்

**கேள்வி :** சுதந்திர இந்தியாவில் உங்களுடைய அகிம்சையை அனுசரித்துக் குற்றவாளிகள் எவ்விதம் நடத்தப்படுவார்கள்?

**பதில் :** அகிம்சை வகையான சுதந்திர இந்தியாவில் குற்றங்கள் இருக்கும்; ஆனால், குற்றவாளிகள் இருக்கமாட்டார்கள். மற்ற வியாதிகளைப் போலவே குற்றமும் ஒரு வியாதி. இப்

பொழுது இருந்துவரும் சமூகமுறையின் விளைவு இது. ஆகையால் கொலை உள்பட எல்லாக் குற்றங்களுமே நோய் போன்று சிகிச்சை செய்யப்படும். அத்தகைய இந்தியா என்றாவது ஏற்படுமா என்பது வேறு விஷயம்.

புது டில்லி, 28—4—1946 —'ஹரிஜன்' - 5—5—1946

# 8

# திருட்டு

**கேள்வி :** தம்மிடம் வைத்திருக்கும் வேலைக்காரன் திருட்டுப் பழக்கமுள்ளவனாக இருக்கிறான்; நியாயமாக அவர் எடுத்துக் கூறிப் பார்த்தும், அடித்துப் பார்த்தும் அவன் திருந்துவதாக இல்லை. அவனை வேலைக்கு வைத்திருப்பவர் என்ன செய்வது?

**பதில் :** கண்டுபிடிக்கப்பட்டுவிடாமல் இருந்தாலும் மற்றவர்களுங்கூடத் திருட்டுப் பழக்கமுள்ளவர்களாக இருக்கக்கூடும். கவனித்துப் பார்த்தால், நாம் எல்லோருமே திருடர்தாம் என்பது தெரியும். இதில் இருக்கும் வித்தியாசமெல்லாம், அது நாமாகவே இருந்தால் நம்மைச் சகித்துக்கொள்ளுகிறோம், கண்டு பிடிக்கப்பட்ட மற்றவர்களையும் சாதாரணமாகத் தென்படுபவர்களையும் நாம் சகிப்பதில்லை என்பதே. தாம் விற்கும் சரக்கிற்கு முடிந்தவரையில் லாபம் வைத்து விற்கிறார்கள் பலர். அப்படிப் பட்டவர் திருடர் அல்லவென்றால் மனிதரா? வாங்குபவர் ஏமாறுவதற்குத் தயாராகத்தானே இருக்கிறார் என்று பதில் சொல்லப்படுமானால், அது உண்மையை ஆட்சேபிப்பதாகும். வாங்குகிறவர் விரும்பி வாங்குகிறார் என்பதைவிட அவர் வேறு விதியில்லாதிருக்கிறார் என்பதுதான் உண்மையானது. குறிப்பிடப்பட்டிருக்கும் திருட்டு, சமூகத்தில் உள்ளுக்குள் ஆழத்தில் நிலைபெற்றுவிட்டதான ஒரு நோயின் அறிகுறி. பணம் படைத்த சிலருக்கும், ஓட்டாண்டிகளாக இருப்போருக்கும் நிரந்தரமாக இருந்துவரும் சச்சரவின் அடையாளமே அது. ஆகையால், வேலைக்கு வைத்திருப்பவருக்கு நான் கூறும் புத்திமதி, திருடனுக்கு ஆசை பிறப்பதற்கு இடந் தருவதாக இருப்பவையெல்லாம் நீக்கிவிட்டு, அவனைத் தமது சொந்தச் சகோதரனைப் போன்று நடத்துக என்பதேயாகும். எந்தச் சிகிச்சைக்கும் இணங்க, அது என்னதான் ஜீவகாருண்யமுள்ளதாக இருந்தாலும் அவன் மறுத்துவிடுவானாயின், அவனைத் தன் வழியே போகும்படி சொல்லிவிட வேண்டியதே. அந்தச் சந்தர்ப்

பத்தில் தம்முடைய சொந்தச் சகோதரனைத் தாம் அப்படி நடத்துவாரா என்பதை வேலைக்கு வைத்திருப்பவர் எப்பொழுதும் தம்மைத் தாமே கேட்டுக்கொள்ள வேண்டும்.

பஞ்சகனி, 14—7—1946 — 'ஹரிஜன்' - 21—7—1946

# 9

# குற்றவாளிகளுக்கு இயற்கை வைத்தியம்

உருலியில் மாலைப் பிரார்த்தனைக் கூட்டத்தில் காந்திஜி பேசுகையில், தாம் எண்ணுகிறபடியான சுயராஜ்யத்தை அமைப்பதற்கு இயற்கை வைத்தியமும் அவசியமான துணைப் பொருளாகும் என்றார். உண்மையான சுயராஜ்யத்தை அடைவதற்கு முன்னால் உடல், உள்ளம், ஆத்மா ஆகிய மூன்றும் புனிதமாவது அவசியம் என்றார்.

இந்த உபதேசத்தை நடைமுறையில் செய்துகாட்டுவதற்கான சந்தர்ப்பம் இருபத்து நான்கு மணி நேரத்திற்குள்ளே ஏற்பட்டுவிடும் என்று காந்திஜி அப்பொழுது எண்ணியிருந்திருக்கமாட்டார். மறுநாள் உடம்பெல்லாம் காயங்களுடன் ஒரு கிராமவாசியை அவரிடம் கொண்டு வந்தனர். அக்கிராமவாசியின் வீட்டிலிருந்து நகைகள் முதலியவைகளைத் திருடிக் கொண்டு போய்விட்ட கொள்ளைக்காரர்கள் அவரைக் காயப் படுத்திவிட்டார்கள். அதன் பேரில் உருலி கிராமவாசிகளுக்குக் காந்திஜி கூறியதாவது :

"இச்சம்பவம் சம்பந்தமாகப் பரிகாரம் தேடிக்கொள்ளுவதற்கு மூன்று வழிகள் இருக்கின்றன. இதில் முதல் வழி, வழக்கமான சம்பிரதாயப் பழக்கத்தை அனுசரித்துப் போலீசுக்குப் புகார் செய்துகொள்ளுவது. அப்படிச் செய்வது போலீஸார் லஞ்சம் போன்றவைகளை வாங்க மேற்கொண்டும் சந்தர்ப்பம் அளிப்பதாகிறதேயன்றிப் பொதுவாகத் துன்பமடைந்தவருக்குப் பரிகாரம் கிடைப்பதில்லை. இரண்டாவது வழி, கிராம மக்கள் சாதாரணமாக அனுசரித்து வருவதை ஒட்டி அக்குற்றத்தைச் சகித்துக்கொண்டு சும்மா இருந்துவிடுவது. கோழைத்தனத்திலிருந்தே இது ஏற்படுவதால் இது வெறுக்கத் தக்கதாகும். கோழைத்தனம் இருக்கிறதென்றால், குற்றம் அதிகரித்தே தீரும். இதில் இன்னும் மோசமானது என்னவெனில், அப்படிச் சகித்துக்கொண்டு இருந்துவிடுவதால் நாமும் குற்றத்திற்கு உடந்தையானவர்கள் ஆகிவிடுகிறோம். பரிகாரம்

தேடிக்கொள்ளுவதற்கு இருக்கும் மூன்ருவது வழி, புனிதமான சத்தியாக்கிரகம். இதற்கு முக்கியமான தேவை ஒன்று உண்டு. 'திருடர்களும் குற்றவாளிகளும் நம் சகோதரர்களே. குற்ற மாகிய நோய் அவர்களைப் பற்றிவிட்டதால், அந்நோயிலிருந்து அவர்களைக் குணப்படுத்த வேண்டும்' என்று நாம் கருதவேண் டும். திருடன் அல்லது குற்றவாளிமீது கெட்ட எண்ணம் வைத்து அவனைத் தண்டிக்க முயலுவதற்குப் பதிலாக, அவன் உள்ளத்தை நன்கு புரிந்துகொண்டு, அவன் அக்குற்றத்தைச் செய்வதற்குக் காரணம் என்ன என்பதைக் கண்டுபிடித்து, அதற்குப் பரிகாரம் செய்ய முயற்சி செய்யவேண்டும். உதா ரணமாக அவனுக்கு ஒரு தொழிலைச் சொல்லிக் கொடுத்து, அவன் யோக்கியமாக வாழ்வதற்கு வசதி அளித்து, அவன் வாழ்க்கையை மாற்ற வேண்டும். திருடனே அல்லது குற்ற வாளியோ நம்மில் வேருனவன் அல்ல என்பதை நீங்கள் உணர வேண்டும். நீங்கள், உங்கள் உள்ளத்தையே ஆராய்ந்து, கவ னித்துப் பார்ப்பீர்களாயின், அவர்களுக்கும் (குற்றவாளிகளுக்கும்) உங்களுக்குமிடையே இருக்கும் வித்தியாசம் அளவில் அதிக மில்லை என்பதைக் காண்பீர்கள். பிறரை ஏய்த்து அல்லது வேறு முறையில் செல்வத்தைச் சேர்த்த பணக்காரர் செய்திருக்கும் திருட்டுக் குற்றம், முடிச்சவிழ்ப்பவன், வீட்டுக்குள் புகுந்து கொள்ளையடிப்பவன் செய்த குற்றத்தைவிட எந்தவிதத்திலும் குறைவானதன்று. கௌரவமானவர் என்ற வெளித்தோற்றத் தின் மறைவில் பணக்காரர் ஒளிந்துகொண்டு சட்டப்படி தண்டனையை அடையாமல் தப்பித்துக் கொண்டிருக்கிருர்கள். உண்மையைச் சொன்னுல், ஒருவருடைய நியாயமான தேவைக்கு அதிகமாகச் சேகரித்து வைப்பதோ அல்லது செல்வத்தைத் திரட்டுவதோ திருட்டேயாகும். செல்வம் சம்பந்தமாகப் புத்தி சாலித்தனமான கட்டுப்பாடு இருக்குமானுல், பூரணமான சமூக நீதியும் நிலவுமாயின், திருட்டு நடப்பதற்கான சந்தர்ப்பமே இராது.ஆகவே, திருடர்களும் இருக்கமாட்டார்கள். நான் எண் ணும் சுயராஜ்யத்தில் திருடர்கள் இருக்கமாட்டார்கள்; குற்றவாளி களும் இருக்கமாட்டார்கள். அந்தச் சுயராஜ்யத்தில் அவ்விதம் இல்லாது போனுல், அது பெயரளவிலேயே சுயராஜ்யம். சமூகத் தில் இருக்கும் நோய்க்கு அறிகுறியே குற்றவாளி. நான் கூறிய படி இயற்கை வைத்தியத்தில் உடல், உள்ளம், ஆத்மா ஆகிய மூன்றுக்கும் சிகிச்சை அடங்கியிருப்பதால் உருவியில் இருந்து உடல் நோயைப் போக்குவதோடு மாத்திரம் நீங்கள் திருப்தி யடைந்து இருந்துவிடக் கூடாது; உங்களுக்கிடையே பூரண மான சமூக அமைதி இருப்பதை முன்னிட்டு உள்ளத்தையும்

ஆத்மாவையும் குணப்படுத்துவதும் உங்கள் வேலையாக இருக்க வேண்டும்.

"நான் இதுவரையில் விளக்கிக் காட்டினது போலக் குற்ற வாளியைச் சமாளிக்கும் விஷயத்தில் இயற்கை வைத்திய முறையை நீங்கள் அனுசரிப்பதாக இருந்தால், அதுதான் சத்தி யாக்கிரக வழி. குற்றம் நடக்கும்போது அதைப் பார்த்துக் கொண்டு நீங்கள் சும்மா இருக்கக்கூடாது. பூரணமான பக்குவம் அடைந்துவிட்ட ஒருவர் மாத்திரம், தம்முள்ளேயே தம்மைப் பற்றிய பற்று எதுவுமின்றி உலகத்தைப் பற்றிய கவலேயோ அல்லது பொறுப்போ இல்லாமல் இருக்க முடியும். ஆனல், அந்தப் பக்குவத்தைத் தாம் அடைந்துவிட்டதாக யார் சொல் லிக்கொள்ள முடியும்? நடுக்கடலில் திடீரென்று ஏற்படும் அமைதியைக் குறித்து அனுபவமுள்ள மாலுமிகள் கவலே யோடேயே கவனிக்கிருர்கள். வாழ்க்கைக் கடலேப் பொறுத்த வரையிலும் அதுவேதான். பொதுவாக, புயல் ஏற்படும் என் பதையே அது முன்கூட்டி அறிவிக்கிறது. ஆகையால், ஒரு சத்தியாக்கிரகி, திருப்பித் தாக்காததோடு குற்றவாளிக்குப் பணிந்துவிடவும் மாட்டான். ஆனல், தன்னேக் குணப்படுத்திக் கொள்வதன் மூலம் அவனேக் குணப்படுத்தவே முயலுவான். சத்தியாக்கிரக தருமத்தை அனுசரிப்பதாகப் பாசாங்கு செய் வது, அதே சமயத்தில் போலீஸ் உதவியையும் நாடுவது என்ற வகையில் ஒரே சமயத்தில் இரண்டு குதிரையிலும் சவாரி செய்ய அவன் முற்படமாட்டான். சத்தியாக்கிரக வழி யைப் பின்பற்றுவதற்காக அவன் முதலில் போலீஸ் உதவியை நாடுவது என்பதைக் கைவிட வேண்டும். குற்றவாளி தானே போலீஸிடம் சரண் புகுவதென்ருல், அது வேறு விஷ யம். அதே சமயத்தில் நீங்கள் போலீஸிடமும் போய் அவ னுக்கு எதிராக அங்கு அறிவிப்பதென்ருல், அவனுடைய உள் ளத்தை நீங்கள் தொடுவது என்பதையோ, அவன் நம்பிக்கை யைப் பெறுவது என்பதையோ எதிர்பார்க்க முடியாது. அப்படிச் செய்வது, வைத்த நம்பிக்கையை அடியோடு துரோகம் செய்து விட்டதாகும். ஒரு சீர்திருத்தக்காரர் போலீஸுக்கு உளவு கூறுபவராகவும் இருக்க முடியாது. பலாத்காரக் குற்றங்களேச் செய்துவிட்டுப் பலர் என்னிடம் வந்து தங்கள் குற்றங்களே ஒப்புக்கொண்டிருக்கிருர்கள். இவர்களேப்பற்றிப் போலீஸுக் குத் தகவல் கொடுக்கப் பல தடவைகளிலும் மறுத்திருக் கிறேன். தம்மிடம் குற்றத்தை ஒப்புக்கொண்டிருக்கும் ஒருவ ருக்கு எதிராகச் சாட்சியம் கூறும்படி ஒரு சத்தியாக்கிரகியை

எந்தப் போலீஸ் அதிகாரியும் கட்டாயப்படுத்த முடியாது. தம்மிடம் வைத்த நம்பிக்கையைத் துரோகம் செய்துவிடும் குற்றத்தை ஒரு சத்தியாக்கிரகி என்றுமே செய்யமாட்டார். குற்றங்களையும் குற்றவாளிகளையும் சமாளிக்கும் விஷயத்தில் உருலி மக்கள் சத்தியாக்கிரக முறையை அனுசரிக்க வேண்டும் என விரும்புகிறேன். குற்றவாளிகளின் வீடுகளுக்கே போய் அவர்களுடன் தொடர்பு வைத்துக்கொண்டு, அன்பினுலும் தன்னலமற்ற சேவையினுலும் அவர்களுடைய நம்பிக்கையைப் பெற்றுத் தீமையிலிருந்தும் ஆபாசச் செயல்களிலிருந்தும் அவர்களை நீக்கி, யோக்கியமாக வாழ்வதற்கான வழியைப் போதித்து அவர்கள் மறுவாழ்வு பெற உதவி செய்ய வேண்டும்.

பாத்லாபூர், 5—8—1946 —'ஹரிஜன்' - 11—8—1946

## 10

# பிகாரே, நீயுமா !

சத்தியாக்கிரகத்தின் பொன்னுன காலத்தில் அற்புதமாக நடந்துகொண்ட பிகார், சட்ட விரோதமான குற்றங்களைச் செய்து தன்னை அவமானத்திற்கு உட்படுத்திக்கொண்டு வருவது விதியின் கோர விளையாட்டேயாகும். (பிரசுரமாகியிருக்கும் செய்திகள் உண்மை என்றுல்) காரணமில்லாமல் ரெயில்களில் சங்கிலியைப் பிடித்து இழுத்து நிறுத்துவது பிகாரில் சர்வ சாதாரணமாகிவிட்டது. அதனுல் ரெயில் வண்டிகள் உரிய காலத்தில் வந்து சேருவதில்லை. ரெயில் பிரயாணத்திற்கு டிக்கெட்டுகளை வாங்குவது அனுவசியமானது என்று பிரயாணிகள் எண்ணுகிருர்கள். ஒரு தேசீய சர்க்காரின் கீழ்ப் பிரயாணத்திற்குக் கட்டணம் கொடுப்பது அனுவசியமானது என்றும் வாதிக்கின்றனர். கொள்ளைக்கும் கொலைக்கும் 'ஜய் ஹிந்த்' ஏற்ற கோஷமாகக் கருதப்படுகிறது.

எவ்வளவு மோசமாகச் சொல்ல முடியுமோ அவ்வளவு மோசமாகக் கூறப்படும் இந்தக் குற்றச் சாட்டுகளில் எவ்வளவு தூரம் உண்மை இருக்கிறது என்பது எனக்குத் தெரியாது. சட்ட ரீதியானதற்கும் சட்ட விரோதமானதற்கும் எந்தப் பாகுபாட்டையுமே காணுதவர்களைக்கொண்ட பிகாரின் சில பகுதிகளை நான் அறிவேன். பிகாரில் மாத்திரமல்ல, இந்தியா முழுவதிலுமே சட்ட விரோதமான காரியங்கள்



மகாத்மா நோவாகாலிக்குச் செல்லும்போது (நவம்பர் 1916)



நோவாகாலி யாத்திரையின்போது ஒரு கிராமத்திற்குப் போகும் வழியில் மகாத்மாஜி

கடந்துவருவதற்குப் பெரும்பாலும் நானே பொறுப்பாளி என்ற வாதம் கூறப்படுவதையும் கேள்விப்படுகிறேன். இது யோசனையில்லாத குற்றச்சாட்டு என்பதை நான் சொல்லத் தேவையில்லை. அனுசரிக்கும்படி நான் கேட்டுக்கொண்டதைச் சட்ட விரோதமான காரியம் என்றும் விவரிக்கலாம் என்ருல், உடலுக்கு அவசியமான சிறந்த ஆகாரத்தை உட்கொள்ளும்படி சொன்னதைப் போன்றதே அது. என்னுடைய 'சட்ட விரோதமான செய்கை'யில் கட்டுத்திட்டமும், ஆக்க வேலையும், சமூகத்தின் நன்மையும் அடங்கியிருக்கின்றன. நியாயமில்லாத, தீமையான சட்டத்திற்கு எதிராகச் செய்யப்படும் சரியான எதிர்ப்பே அது. கடமையைச் சுயநலத்திற்காகத் தட்டிக் கழிக்கும் முறையை அது என்றுமே மேற்கொள்ளாது. திட்டமான, எப்பொழுதோ ஏற்படும் அவசர நிலைமையைத் தவிர மற்றச் சமயங்களில் ரெயிலில் சங்கிலியைப் பிடித்து இழுக்காமலிருப்பதும், நாம் பிரயாணம் செய்யும் வகுப்புக்குரிய கட்டணத்தைச் செலுத்தாமல் பிரயாணம் செய்வதில்லை என்பதும் நம் கடமை. சட்ட விரோதமான காரியம் என்று சொல்லப்படும் என் வேலைத் திட்டத்தில் கொள்ளை, தீயிடல், கொலை ஆகியவை ஒரு பகுதியாக என்றுமே இருந்ததில்லை. என்னுடைய வேலைத் திட்டம் குறிப்பிட்ட சிலருக்கு மாத்திரம் நல்லதாக இருக்கலாம், ஆனல், பொது ஜனங்களைப் பொறுத்த வரையில் அது நல்லதாகவே இருக்க முடியாது என்ற வாதம் சொல்லப்படுகிறது. கெட்ட அல்லது விஷமுள்ள ஆகாரத்தையும் பொது ஜனங்கள் உட்கொண்டுவிடக்கூடுமே என்பதற்காக நல்ல ஆகாரம் கொடுக்காமல் பொதுமக்களை நான் பட்டினி போட்டுவிடுவதா என்ற கேள்வியில் அடங்கியிருக்கிறது, அந்த வாதத்திற்குப் பதில்.

என் சொந்த விஷயம் என்று தோன்றுவதில் வேண்டுமென்றேதான் நான் இறங்கியிருக்கிறேன். அப்படிச் செய்திருப்பது – பிகாரில் இப்பொழுது நடந்து வருவதாகச் சொல்லப்படுவது – அசல் விஷத்தைக் கொடுத்து வருவதேயாகும் என்பதை எடுத்துக்காட்டுவதற்கேயன்றி இது என்னைப் பற்றிச் சமாதானம் சொல்லிக்கொள்ளுவதற்காக அல்ல. அது, தோன்றியபடியெல்லாம் நடப்பதேயன்றிச் சுயாட்சி வழியாகாது ; விதியற்றுப் பிறரை எதிர்பார்ப்பதே அன்றி அது சுதந்திரம் ஆகாது ; தற்கொலையே அல்லாமல் அது வாழ்வன்று. பிரஜ் கிஷோர் பிரசாத், ராஜேந்திர பிரசாதின் பிகாரை நான் அறிவேன் ; அதில் வசித்தும் இருக்கிறேன். அந்தப் பிகாரா, மேலே

வருணிக்கப்பட்டிருக்கும் நிலைக்கு வந்துவிட்டது? எவ்வளவோ பொறுமையுடன் உழைத்துச் செய்திருக்கும் சிறந்த ஆக்க வேலையை அறிவு கெட்டு நாசம் செய்துவிடுவதைப் பிகாரின் பொதுநல ஊழியர்கள் அனுமதிக்காமல் இருக்கட்டும். பிகாரே, ஜாக்கிரதை!

புது டில்லி, 29—9—1946 —'ஹரிஜன்' - 6—10—1946

# ஹிந்து-முஸ்லிம் சச்சரவில் அகிம்சை

[பல மதங்களையும் சேர்ந்த சமூகங்கள், அமைதியாகவும் ஒன்றுபட்டும் வாழ வேண்டியது அவசியம், அது சாத்தியம் என்பதை மகாத்மா, தென்னாப்பிரிக்காவிலிருந்த காலம் முதலே வற்புறுத்தி வந்திருக்கிறார். இது சாத்தியமானாலன்றி இந்திய சமூகம் இன்பமாக வாழ முடியாதென்றும் கூறி வந்தார். இதனாலேயே சந்தர்ப்பம் கிடைத்தபோதெல்லாம், முக்கியமான மதங்கள் யாவும் சமத்துவமானவையே என்று மகாத்மா வற்புறுத்தி வந்ததோடு, சரித்திரத்தின் பலதரப்பட்ட கட்டங்களிலும் மதங்களுக்குள் புகுந்துவிட்ட மூட நம்பிக்கைகளைப் போக்கியாக வேண்டியது முக்கியம் என்றும் எடுத்துக் கூறி வந்தார். மகாத்மா, தமது வாழ்நாளின் கடைசி நேரம் வரையில், முடிவாக வகுப்பு வெறிக்குத் தாமே பலியாகிவிட்ட சமயம் வரையிலுங்கூட, வகுப்புச் சமரசத்திற்காகவும் சமாதானத்திற்காகவும் பாடுபட்டு வந்தார். ஆகையால், இந்த வகுப்பு ஒற்றுமையின் அவசியத்தைப் பற்றிக் காந்திஜி எழுதியவை ஏராளமாக இருப்பதில் ஆச்சரியம் இல்லை.

ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையைக் குறித்து மகாத்மா எழுதிய கட்டுரைகளில் பெரும்பாலானவற்றில் அகிம்சையின் முக்கியத்தைப்பற்றியும் ஆங்காங்கு விளக்கியிருக்கிறார். எனினும், வகுப்பு ஒற்றுமையைப்பற்றியும் அதற்குத் தொடர்பான விஷயங்களைக் குறித்தும் தனித் தொகுப்பாக வெளியிட வேண்டியிருப்பதால் அக்கட்டுரைகள் யாவும் இத்தொகுப்பில் கொடுக்கப்படவில்லை.

வகுப்பு ஒற்றுமைக்காகத் தாம் செய்யக்கூடிய மிகச் சிறந்த உபதேசம் தமது உயிரையே தத்தஞ் செய்துவிடுவது தான் என்பதை மகாத்மா செய்தே காட்டினார். 1946 ஆகஸ்டு 16-ஆம் தேதியை முஸ்லிம் லீகின் தலைவர் காய்தே ஆஜாம் ஜின்னா, நேரடி நடவடிக்கைத் தினமாகக் கொண்டாடினார். அது முதல் இந்தியாவெங்கும் வகுப்புக் கலவரங்கள் மூண்டன. நாடு இரண்டாகப் பிரிக்கப்பட்டதும் நிலைமை இன்னும் அதிக மோசமாகிவிட்டது. ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒருவரையொருவர் கொன்று கொண்டனர். அட்டூழியங்கள் எங்கும் சர்வ சாதாரணமாயின. அச்சமயம் சிந்திய

ரத்தமும், நடந்த அக்கிரமங்களும் இந்திய சரித்திரத்தில் இருண்ட பகுதியாகவே இருந்துவரும். இவற்றையெல்லாம் கண்டு கண் கலங்கிய மகாத்மா, அன்பு ஒன்றையே ஆயுத மாகக் கொண்டு, ஏற்படக்கூடிய ஆபத்துக்களுக்கெல்லாம் அஞ்சாமல், படுகொலைகள் நடந்த இடங்களுக்கெல்லாம் வீரத்தோடு சென்றார். கல்கத்தா, நோவாகாலி, பிஹார், புது டில்லி ஆகிய இடங்களுக்கெல்லாம் சென்றார். கலகப் பகுதிகளில் நடந்தே போய்த் துன்புற்ற மக்களுக்கு ஆறுதல் கூறினர்; வெறியர்களுக்குப் புத்திமதி சொன்னர். சமூக அமைதியை உண்டாக்கத் தம்மால் முடியாது போனதற்குக் கடுந்தவமாகப் பட்டினி விரதத்தையும் மேற் கொண்டார். இவ்விதம் தள்ளாத வயதில் உயிரைக் கொடுக் கவும் முன்வந்தார்; உயிரையும் அமைதிக்காக அர்ப்பணம் செய்துவிட்டார். நாட்டில் அமைதியும் ஏற்பட்டது.

அகிம்சை ஆயுதத்தைக் கொண்டு அவர் நடத்திய கடுமையான சோதனைக் கட்டம் அது. இக்கடுந்தவத்தில் காந்திஜி ஈடுபட்டிருந்த அந்நாட்களில் அவர் எழுதியவை மிகச் சொற்பம். ஆயினும் அவர் பேசியவை, பத்திரிகைகளுக்கு விடுத்த அறிக்கைகள் ஆகியவற்றிலும் முக்கியமானவை மாத் திரமே இப்பகுதியில் திரட்டித் தரப்பட்டிருக்கின்றன.]

## 1

# பலாத்காரம் செய்யக்கூடியது என்ன?

பத்திரிகைச் செய்திகளை நம்புவதாயிருந்தால், சிந்துவி லிருக்கும் பொறுப்பு வாய்ந்த மந்திரிகளும், அதேபோலப் பொறுப்பு வாய்ந்தவர்களாக இருக்கும் எல்லா இடங்களிலு முள்ள லீகர்களும், அப்பட்டமான பாஷையில் பலாத்காரத்தை உபதேசம் செய்துவருகிறார்கள். அப்பட்டமாகச் சொல்லுவது என்பது கபடத் தன்மையிலிருந்து மாறுபட்டதாகையால் அது அதனளவில் ஒரு நற்குணமே. ஆனல் அதுவே ஆபாச கீதமாகி விடும்போது, லீகர்களாக இருந்தால் என்ன, வேறு யாராக இருந்தால்தான் என்ன, அது வெறுக்கத்தக்க தீமையே ஆகிறது. லீகரல்லாத எந்த முஸ்லிமும் துரோகியே என்கிறார் ஒருவர். ஹிந்து காபிர், அதற்கான கதியை அவர் அடைய வேண்டி யவரே என்கிறார் இன்னும் ஒருவர்.

நேரடி நடவடிக்கை என்பது என்ன, அதைச் செய்ய வேண்டியது எப்படி என்பதைக் கல்கத்தா கண்கூடாகச் செய்து காட்டி வருகிறது.

இதில் லாபம் அடைகிறவர் யார்? நிச்சயமாக முஸ்லிம் பொதுமக்கள் அல்ல; இஸ்லாமை நல்லறிவுடன் பின்பற்றி வருகிறவரும் அல்ல. இஸ்லாம் என்பதற்கே நல்லறிவு, அமைதி என்பதுதான் பொருள். 'ஸலாம் அலெக்கும்' என்று ஒருவருக்கு வந்தனம் கூறுவதன் பொருள், 'உங்களுக்கு அமைதி உண்டாவதாக' என்பதே.

வாழ்க்கையில் பலாத்காரத்திற்கும் இடம் இருக்கக்கூடும். ஆனல், பத்திரிகைகளில் வெளிவரும் செய்திகளை நம்பலாம் என்று வைத்துக்கொண்டால், இப்பொழுது கல்கத்தாவில் நாம் கண்டு வருவதைப் போன்ற பலாத்காரத்திற்கு இடம் இருக்க வேண்டும் என்பது அல்ல. அறிவிழந்த இம்சை மூலம் பாகிஸ்தான் எந்த உருவைக் கொண்டதாயினும், அதை அடைவதற்கு வழி இது அன்று. அறிவற்ற இம்சையைப்பற்றி நான் எழுதும்போது, அறிவுள்ள இம்சை இருக்கக் கூடும் என்பதையே நினைத்துக்கொள்ளுகிறேன். கல்கத்தாவில் நடக்கும் ஆர்ப்பாட்டம் அறிவுள்ள இம்சைக்கு உதாரணமாகாது.

அறிவற்ற இம்சை செய்யக்கூடியதெல்லாம், பிரிட்டிஷ் அல்லது அன்னிய ஆட்சியின் ஆயுளை நீடிப்பதேயாகும். பிரிட்டிஷ் மந்திரி சபையின் அறிக்கையைத் தயாரித்தவர்கள், பிரதிநிதிகளான இந்தியர் கைக்கு அதிகாரத்தை அமைதியாக மாற்றிவிட விரும்புகிறார்கள் என்றே நம்புகிறேன். ஆனல், பிரிட்டிஷ் துப்பாக்கியையும் துப்பாக்கி முனையையும் நாம் விரும்புவதானல் பிரிட்டிஷார் போகமாட்டார்கள். அவர்கள் போய்விட்டாலும் வேறோர் அன்னிய வல்லரசு அந்த இடத்திற்கு வந்துவிடும். பிரிட்டிஷ் துப்பாக்கி முனை உபயோகிக்கப்படும் ஒவ்வொரு சமயத்தையும் நாமே கிளறிவிடுபவர்களாக இருந்துவிடுவோமாயின், நாம் பெருந்தவறு செய்தவர்களாவோம். அப்படிக் கிளறிவிடுபவரின் வேலை நடந்து வருகிறது என்பதில் சந்தேகமில்லை. அந்த வழியில் அழிவுக்குப் போகாமல் இருப்போமாக.

சிறிது காலமாகக் கல்கத்தா கெட்ட பெயர் எடுத்துவிட்டது. சென்ற சில மாதங்களில் மிருகத்தனமான சம்பவங்கள் பலவற்றை அது பார்த்துவிட்டது. இன்னும் இந்தக் கெட்ட பெயர் அதற்குத் தொடர்ந்து இருந்துவருமானல், அரண்மனைகள் மலிந்த நகரம் என்பதற்குப் பதிலாக அது அழிந்துபட்டவரின் நகரமாகிவிடும்.

கல்கத்தாவின் பலாத்காரம் அடக்கப்பட்டு, எல்லா இடங்களுக்கும் பரவுவதற்குச் சமிக்ஞையாக அது இல்லாது இருக்குமா? இது முஸ்லிம் லீக் தலைவர்களையே பொறுத்திருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. என்றாலும், மற்றவர்களுக்கும் அதில் பொறுப்பில்லாது போகாது. அவர்கள் திருப்பித் தாக்கலாம் அல்லது தங்களைத் தாங்களே அடக்கிக் கொள்ளலாம். மன உறுதி மாத்திரம் இருக்குமாயின் தங்களையே அடக்கிக்கொள்ளுவது எளிதானது, சாதாரணமானது; திருப்பித் தாக்குவது சிக்கல் நிறைந்தது. அது கொடிய இம்சைக்கு எதிரான இம்சையாகுமா, ஒன்றை எதிர்த்துப் பெருமளவு கொடுமையாக இருக்குமா?

சேவா கிராமம், 19—8—1946 —'ஹரிஜன்' - 25--8--1946

## 2

# மாற்று

கல்கத்தாவில் சமீபத்தில் நடந்த விசனிக்கத் தக்க, வெட்கக்கேடான நிகழ்ச்சிகளைப்பற்றி விவரமாக ஒருவர் வருணித்துவிட்டு வருமாறு கேட்கிறார்: "இத்தகைய நிலைமைகளில் நமது கடமை என்ன? இத்தகைய நெருக்கடியில் காங்கிரஸ் அதைச் சேர்ந்தவர்களுக்குத் தெளிவான அறிவிப்பு எதையும் கூறுவதில்லை. தூரத்தில் இருந்துகொண்டு அகிம்சையைக் குறித்து உபதேசம் செய்துகொண்டிருப்பதில் பயன் இல்லை. அகிம்சையோடு எதிர்த்து நிற்பது என்றால், எல்லாச் சொத்துக்களும் அழிக்கப்பட்டு ஒவ்வொரு ஹிந்துவும் கொல்லப்படுவதிலேயே முடியும்."

பத்திரிகைகளில் வெளியாகியிருக்கும் காங்கிரஸ் காரியக் கமிட்டித் தீர்மானத்தின் கடைசி வாக்கியத்தில் சாத்தியமான அளவுக்கு அது தெளிவான வழியையே காட்டியிருக்கிறது. 'ஒருவரையொருவர் அறிந்துகொள்ளுவது, நட்போடு கூடிய விவாதம், அவசியமானால் இரு தரப்பாரும் ஒப்புக்கொள்ளும் மத்தியஸ்தம் ஆகிய இவற்றினாலன்றி, மிரட்டலினாலும் இம்சையாலும் சகோதரரைக் கொன்றுகொள்ளுவது குறையாது. அனுபவத்தில் நடக்கக்கூடியதான இந்த யோசனையில் இருக்கும் உண்மையை அறிந்துகொள்ளுவதற்கு, ஒருவர் தருமம் என்ற வகையில் அகிம்சையில் நம்பிக்கையுள்ளவராக இருக்க வேண்டும் என்பதில்லை. உறுதியான வீரத்தின் மூலம் கடைசி மனிதன் வரை ஹிந்துக்கள் சாவதாக இருந்தால்,

அதுவே ஹிந்து தருமத்தையும் இந்தியாவையும் காப்பாற்றிய தாவதோடு இந்நாட்டில் இஸ்லாமையும் புனிதப்படுத்தியதாகும்.

பரஸ்பரக் காட்டுமிராண்டித்தனத்தை நிறுத்துவதற்கு இப்பொழுது மூன்ருமவர் தலையிட வேண்டியிருக்கிறது. அப்படித் தலையிடுவதால் முஸ்லிம்களுக்கோ ஹிந்துக்களுக்கோ எந்தவித லாபமும் இல்லை. கல்கத்தா விஷம் இந்தியா முழுமைக்கும் பரவி, இரு சாராரும் ஒருவரையொருவர் குத்திக்கொள்ளாமல் பிரிட்டிஷ் துப்பாக்கி மருந்து தடுத்து வைப்பதாக இருந்தால், இன்னும் வெகு காலத்திற்குப் பிரிட்டிஷ் ஆட்சி அல்லது அதற்குப் பதிலாக வரும் ஓர் ஆட்சியின் கீழேயே இந்தியா இருந்துவரும். எவ்வளவு காலம் என்பது, இவ்விரு கட்சியினரும் நல்லறிவு கொள்ளும் காலத்தையே பொறுத்திருக்கிறது. அன்னிய சம்பந்தம் எதுவும் இல்லாமல் பரஸ்பரம் சண்டை இட்டுக்கொண்டு களைத்துப் போவதனல் அது ஏற்படலாம்; அல்லது எவ்வளவோ கஷ்டமிருந்தும் பலாத்காரமே இல்லாமல் ஒரு கட்சியினர் இருப்பதன் மூலமும் அது ஏற்படலாம். இக்கால ஆயுதங்களைப்பற்றியே ஒன்றும் தெரியாமல், அவை கிடைப்பதற்கு அரிதானதாகும் இப்பொழுதுள்ள நிலைமையில், வெற்றிகரமான பரஸ்பரச் சச்சரவு என்பது முற்றிலும் அசாத்தியமானதாகும். வெளியாரின் அல்லது வெளிக்குத் தெரியும்படியான பயிற்சி எதுவும் அகிம்சைக்கு அவசியமில்லை. பதிலுக்குச் செய்வதற்காகக்கூடக் கொல்லுவதில்லை என்ற உறுதியும், வஞ்சம் தீர்த்துக்கொள்ளாமலேயே சாவதற்குத் துணிவதுமே அதற்குத் தேவை. இது அசல் பகுத்தறிவும் பிரபஞ்ச தருமத்தைக் கூறுவதுமேயன்றி அகிம்சையைப்பற்றிய உபதேசமன்று. இந்தத் தருமத்தில் அழியாத நம்பிக்கை மாத்திரம் இருக்குமாயின், சகிப்புத் தன்மையை அனுசரிப்பதற்கு ஆத்திரமூட்டும் செய்கை எதுவும் தடுத்துவிடாது. வீரர்களின் அகிம்சை என்று இதை நான் விவரித்து வந்திருக்கிறேன்.

முடிவாக, நாம் பொதுஜன அளவில் வீரருக்குரிய அகிம்சையை அனுசரித்துப் பழக்கமில்லாதவர்கள். பொதுமக்கள் அளவில் இல்லை என்ருலும் கோஷ்டிகளாகவாவது அகிம்சையை அனுசரிப்பது சாத்தியமா என்பதைச் சிலர் சந்தேகிக்கிருர்கள். தனிப்பட்ட சிலரால்தான் அது சாத்தியம் என்கிருர்கள். அது எப்பொழுதுமே தனிப்பட்டவர்களுக்கு மாத்திரமே என்று இருப்பதாயின், அதனல் மனித வர்க்கத்திற்கு எந்த விதமான பயனும் இல்லை.

அது எப்படி இருந்தாலும் ஒன்று மாத்திரம் தெளிவானது. வீரமுள்ளவர்களின் அகிம்சையை அனுசரிப்பதற்கு மக்கள் ஒரு வேளை தயாராயில்லாதிருப்பர்களாயின், தற்பாது காப்புக்குப் பலத்தை உபயோகித்துக்கொள்ள அவர்கள் தயாராக இருக்க வேண்டும். இதில் ஒளிவு மறைவு எதுவும் இருக்கக்கூடாது. தற்பாதுகாப்பு முயற்சி முற்றிலும் எளிதாக இருக்க வேண்டும். அப்பொழுதுங்கூட அது கோழைத்தன மானதாகவோ அல்லது முரட்டுத்தனமானதாகவோ இருக்கக் கூடாது. ஆகையால், அதில் ரகசியம் என்பதும் இருக்கக் கூடாது. பின்புறம் இருந்து குத்துவதும், கண்டுபிடிக்க முடி யாதபடி ஒளிவதும் அத்தகையதாகும். நாம் நிராயுதபாணி களான மக்கள், ஆயுதங்களை உபயோகித்துப் பழக்கப்படாத வர்கள் என்பதை நான் அறிவேன். அந்த நிலைமையில் நாம் இருப்பது நல்லதா என்பதில் மாறுபட்ட அபிப்பிராயங் கள் இருக்கலாம். தற்காப்புக்கு ஆயுதங்களை உபயோகிப்ப தற்கு எந்தவிதப் பயிற்சியும் தேவையில்லை என்ற உண்மையை யாரும் மறுப்பதற்கில்லை. இக்காரியத்திற்கு வேண்டியதெல் லாம் பலமான கரங்களும், பலமான உறுதியுமேயாகும்.

இன்னும் ஒருவருக்குத் துன்பத்தை உண்டாக்குவது நிச் சயமாக இம்சையே. இன்னும் ஒருவருக்குத் துன்பத்தை உண்டாக்கும் கருத்தை உள்ளத்தில் வைத்துக்கொண்டிருந்தும், கோழைத்தனம் காரணமாகத் தன்னையோ அல்லது தனக்கு அக்கம் பக்கத்தில் இருப்பவரையோ பாதுகாக்க விரும்பாம லிருப்பதும் இம்சையே; இது முற்கூறியதைவிட இன்னும் மோசமானதுமாகும்.

அப்படியானல், தலைவர்கள் செய்யவேண்டியது என்ன? புதிய மந்திரிகள் செய்யவேண்டியது என்ன? சமூகச் சமரசம் உண்டாக்குவதற்கென்றே மிரட்டல் மூலம் சமரசத்தை ஏற்படுத்த முயல்வது கூடாது. ஒரு முஸ்லிமை அல்லது ஹிந்து அல்லாதவர் எவரையுமே என் சொந்தச் சகோதரனுகவே நான் கருதுகிறேன். இது அவரைத் திருப்தி செய்வதற்காக அல்ல. அவரும் என்னைப் போன்று அதே இந்தியத் தாயின் மகனுக இருக்கிறார் என்பதனுலேயே. அவர் என்னை வெறுக்கலாம்; நான் சகோதரன் அல்ல என்று மறுக்கலாம். இதனுல் அவர் எனக்குச் சகோதரராக இல்லாது போய்விட மாட்டார். அவர் என்னை வெறுப்பினும் சரி, ஏற்காது போனுலும் சரி, அவரைக் கவர நான் முயலவேண்டும். அவர் எத்தகையவராக இருந் தாலும் சரி, பிரிட்டிஷ் துருப்பினரையோ, அவர்களிடம் பயிற்சி

பெற்ற போலீஸையோ உபயோகிப்பதில்லை என்ற முடிவுக்குப் புதிய மந்திரிகள் வந்துவிட வேண்டும். நம்மை எதிர்ப்பவர் நம் விரோதி அல்ல. இதுகாறும் மக்களை அன்னியர் வசத்தில் வைத்திருக்கத் துருப்பினர் உபயோகிக்கப்பட்டு வந்திருக்கிறார்களேயன்றி மக்களுக்கு உதவி செய்ய உபயோகிக்கப்பட்டதில்லை. முடிந்த வரையில் அவர்களை இப்பொழுது ஆக்க வேலைக் காரியங்களுக்கு உபயோகித்துக்கொள்ளலாம். இத்தகைய வேலைகளுக்கு ராணுவம் விசேஷத் தகுதியுடையது. ராணுவத்தினர் நினைத்ததுமே கூடார நகரங்களை எழுப்பக்கூடியவர்கள்; அதற்கான பயிற்சியும் பெற்றிருக்கிறார்கள். சேகரிப்பது எப்படி, சுத்தமான தண்ணீர் வைப்பது எப்படி, சரியான சுகாதார ஏற்பாடுகளைச் செய்வது எப்படி என்பன அவர்களுக்குத் தெரியும். எப்படிக் கொல்லுவது, அச்செயலில் கொல்லப்படுவது எவ்விதம் என்பதை அவர்கள் அறிவார்கள் என்பதில் சந்தேகமில்லை. அவர்கள் செய்யும் வேலையின் இப்பகுதியை மாத்திரமே பொதுமக்கள் நன்கு அறிவார்கள். ஆனால், அவர்களுடைய வேலையில் இது மிக முக்கியமான பகுதியே. இதன் நிலைக்களத்தைத்தான் பாராட்டி, விளம்பரப்படுத்திப் பின்பற்றவும் வேண்டும். இதன் மிருகப் பகுதி மனிதத் தன்மையற்றது; மற்றது பரிசுத்தமான மனிதப் பண்புடையது. அதை நாம் அனுசரித்து, நம்மால் முடிந்தால் துருப்புகளை மனித இயல்புடையவர்களாக்குவோம். இம்முயற்சி செய்யத்தக்கது. தம்மைச் சுற்றியிருக்கும் ஆடம்பரங்களைக் கண்டு திகைப்புறாதவர்களே இதைச் செய்ய முடியும். உள்ளத்திலும், செயலிலும் பழிவாங்குவதென்பதோ, பதிலுக்குப் பதில் செய்வதென்பதோ இல்லாமல் மரணத்தை எதிர்நோக்கும் வீரம் நமக்கு ஏற்படும்போதுதான் இது சாத்தியமாகும்.

புது டில்லி, 2—9—1946 —'ஹரிஜன்' - 8—9—1946

## 3
# என்ன செய்வது ?

ஒரு நண்பர் கீழ்வரும் கேள்விகளை அனுப்பியிருக்கிறார் :—*

---

* இக்கட்டுரையில் குறிப்பிட்டவர் காந்திஜியைக் கேட்டிருந்த கேள்விகள் நான்கு. முதல் கேள்வி, காலிகள் தாக்கும்போது பெண்கள் அகிம்சையை அனுசரிக்க முடியாமற் போனால் கோழைகளாக மடிவதா அல்லது பலாத்காரத்தைக் கொண்டு எதிர்ப்பதா என்பது. இதற்குக் காந்திஜி அளித்த பதில் தனியே 723–ஆம் பக்கத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது.

1. இன்று முஸ்லிம் லீக் மேற்கொண்டிருக்கும் இருவித நடிப்பை நீங்கள் சந்தேகத்திற்கு இடம் வைக்காமல் கண்டிக்க வேண்டாமா? அதன் தலைவர்கள், ஒரு பக்கம் ஹிந்துக்களுக்கு எதிராகப் பலாத்காரத்தையும் மதப்போர் வெறியையும் பகிரங்கமாகத் தூண்டி வருகின்றனர். மற்றொரு பக்கத்தில் அவர்களே, போலீஸ், நீதி இலாகா உள்பட நிர்வாகத்தின் எல்லா அதிகாரங்களையும் நிர்வகிக்கும் மந்திரி பதவிகளையும் வகித்து வருகிறார்கள்.

2. சரித்திரத்தில் என்றுமே காணாத இந்த முரண்பாட்டை ஒழிக்கக் கூடிய சட்டப்படியுள்ள அதிகாரம் எதுவும் இந்தியாவில் இல்லையா?

3. இப்பொழுது நடந்துவரும் சம்பவங்கள் தொடர்ந்து நடக்க அனுமதித்தால் உள்நாட்டுக் கலகமே ஏற்பட்டுவிடும் என்பதை உணருகிறீர்களா? அத்தகைய அபாய நிலைமை ஏற்பட்டுவிட்டால் அதைச் சமாளிக்க உங்கள் நாட்டு மக்களுக்கு நீங்கள் என்ன புத்திமதி கூறுவீர்கள்?

**பதில் 1:** குறிப்பிடப்பட்டிருக்கும் இருவிதமான நடிப்பும் கெடுதலானதே என்பதில் சந்தேகமில்லை. நமது தேசீய வாழ்வில் அது ஒரு துயர்மிகுந்த அத்தியாயம். என் கண்டனம் எல்லாவற்றிற்குமே உரியதாகும். அந்நடிப்பு மிகக் கேடு விளைவிப்பதால், வெகு நாள் நீடிக்காது.

**பதில் 2:** சட்டப்படி பிரிட்டிஷாருக்கே அதற்கு வேண்டிய அதிகாரம் இருக்கிறது. அவர்கள் கையில் நாம் எல்லோரும் பொம்மைகளே. ஆனால், அந்த அதிகாரத்தின்மீது குறை கூறுவது தவறும் அசட்டுத்தனமுமாகும். அதன் இயல்பை ஒட்டி அது நடக்கிறது. நம்மைக் கைப்பாவைகளாக இருக்கும்படி அந்த அதிகாரம் கட்டாயப்படுத்தவில்லை. அவர்களிடம் வலியப் போய் நாம் சிக்கிக்கொள்ளுகிறோம். பிரிட்டிஷ் தந்திரத்திற்கு உடந்தையாக இருக்க நம்மில் யாருமே மறுத்து விடலாம்.

பிரிட்டிஷ் அதிகாரம் இந்தியாவை விட்டு வெளியேறப் பார்க்கிறது என்பதையும் நாம் மனம் விட்டு ஒப்புக்கொள்ளவே வேண்டும். எப்படி வெளியேறுவது என்பது அதற்குத் தெரியவில்லை. நேர்மையாக அது இந்தியாவை விட்டுப் போக விரும்புகிறது. ஆனால், போவதற்கு முன்னால் இதுவரையில் தான் செய்து வந்த தவறுகளுக்கெல்லாம் பரிகாரம் செய்து விட்டுப் போகவும் பார்க்கிறது. பாறைக்குள் சிக்கிய தேரை போல் அது இருப்பதால் அதனால் துன்பம் எங்கிருக்கிறது என்பதை நான் அறியவேண்டும். செய்த தவறுக்குத் துரிதமாகப் பரிகாரம் செய்துவிடுவதானால், இந்தியாவை அதன் விதிக்கு விட்டுவிட்டுப் போய்விடும்படி அந்த அதிகாரத்திற்கு நான் சொல்லி வருகிறேன். ஆனால், பிரிட்டிஷ் அதிகாரிகளாக இருப்பவர்களால் இந்த முக்கியமான உண்மையைப் புரிந்து

கொள்ள முடியவில்லை. இந்தியாவைப்பற்றி நமக்குத் தெரிந்ததைவிடத் தங்களுக்கு அதிகம் தெரியும் என்ற நம்பிக்கையில் அவர்கள் பெருமைப்பட்டுக் கொள்கின்றனர். ஒரு நூற்றுண்டுக்கு மேல் நம்மை வெற்றிகரமாக அடிமைப்படுத்தி வைத்திருந்துவிட்டதால் நம் விதியை நிர்ணயிப்பதற்குத் தாங்கள் நீதிபதிகளாக இருக்க முடியும் என்றும் கருதுகின்றனர். அமைதியான வழியின் மூலம் நாம் சுயேச்சையை அடைவதாயின், அதற்காக நாம் முணுமுணுக்க வேண்டியதில்லை. துவேஷத்தை என்றுமே கொண்டதன்று சத்தியாக்கிரகம். மனத்தை மாற்றுவதில்தான் அதற்கு நம்பிக்கையுண்டேயன்றி அழிப்பதில் அல்ல. அதற்கு ஏற்பட்ட தோல்வி, சத்தியாக்கிரகியின் பலவீனத்திலேயேயன்றி அந்தத் தருமத்திற்குள்ள குறைபாட்டிலைன்று. பிரிட்டிஷ் அதிகாரம் (காரணம் எதுவாலும்) வெளியேற முடிவு செய்துவிட்டால், மேற்கொண்டு வளரும் குறைபாடுகளையும் பலவீனங்களையுமே அது காட்டும். மேலும் மேலும் உடைந்துபோன குழல் போன்றதே அது என்பதையே கட்சிகள் தெரிந்துகொள்ளும். ஹிந்துக்களும் முஸ்லிம்களும் செய்வதைப் போன்று கட்சிகள் சச்சரவிட்டுக் கொள்ளும்போது, இவற்றில் ஒரு கட்சியோ அல்லது எல்லாருமோ ஒரு விஷயத்தை அறியவேண்டும். இந்தியா சுதந்திர நாடாக இருப்பதாயின், ஒருவரோ அல்லது இருதரப்பினருமோ தங்கள் பாதுகாப்புக்குப் பிரிட்டிஷ் அதிகாரத்தை எதிர்பார்ப்பது என்பதை உறுதியுடன் விட்டுவிட வேண்டும்.

**பதில் 3:** இப்பொழுது கடைசிக் கேள்விக்கு வருகிறேன். நாம் இன்னும் உள்நாட்டுப் போர் நிலைமைக்கு வந்துவிடவில்லை. ஆனால், அதை நெருங்கிக்கொண்டிருக்கிறோம்; இப்பொழுது அதைப் பழகிக் கொண்டிருக்கிறோம். பொது மக்கள் அளவில், தேசம் முழுவதும் என்ற அளவில் செய்யப்பட்டு வரும் காலித்தனத்திற்கு ஒரு கௌரவமான பெயரே யுத்தம் என்பது. பிரிட்டிஷார் புத்திசாலித்தனமாக இருந்தால், இதில் அவர்கள் சம்பந்தப்படாமல் இருந்துவிடுவார்கள். ஆனால், தோன்றுவனவோ இதற்கு மாறானவையாக இருக்கின்றன. 1935-ஆம் வருடச் சட்டப்படி தங்களுக்கு அளிக்கப்பட்ட சட்டசபை ஸ்தானங்கள், பிரிட்டிஷ் நலவுரிமைகளைப் பாதுகாப்பதற்கும், ஹிந்துக்களையும் முஸ்லிம்களையும் பிரித்து வைக்க வேண்டும் என்பதற்காகவுமேயன்றி, அவற்றிற்கு அவர்களுக்கு உரிமை உண்டு என்பதனால் அல்ல என்பதை மாகாணச் சட்டசபைகளிலுள்ள ஆங்கிலேய மெம்பர்கள்கூடக் காண மறுக்கிறார்கள். ஆனால்,

இதை அவர்கள் பார்க்கவில்லை. இது சின்ன விஷயம்; என்ருலும், காற்று எப்பக்கமாக அடிக்கிறது என்பதைக் காட்டும் ஒரு துரும்பு இது. இந்தச் சகுனங்களையெல்லாம் பார்த்துச் சுயராஜ்யத்தை உருவாக்குபவர்களும், அதை நேசிப்போரும் திக்பிரமை அடையக் கூடாது. முதலில் சத்தியாக்கிரகம், முடிவிலும் சத்தியாக்கிரகம் என்பதே என்னுடைய ஆலோசனை. சுதந்திரத்திற்கு இதைவிடச் சிறந்த வழி வேறு எதுவுமில்லை. சுதந்திரக் காற்றைப் பருக விரும்பும் ஒவ்வொருவரும் ராணுவ அல்லது போலீஸ் உதவியை நாடுவதில்லை என்று திடம் செய்துகொண்டுவிட வேண்டும். பலமான தங்கள் சொந்தக் கைகளையே நம்பியிருக்க வேண்டும். தங்கள் கையையோ மற்றவர்களின் கையையோவிடத் தங்கள் திடமான மனத்தையும் உறுதியையும் நம்பியிருப்பதே நிச்சயமாக இன்னும் மேலானது.

புது டில்லி, 9—9—1946 —'ஹரிஜன்' - 15—9—1946

## 4

# நட்பான பிரஸ்தாபனை

செல்வாக்குள்ள பிரிட்டிஷ் தினப்பத்திரிகையின் டைரக்டர் ஒருவர் காந்திஜியைப் பார்க்கப் புது டில்லிக்கு வந்திருந்தார். இந்தியாவுக்கு நட்போடு கூடிய நற்காரியத்தைச் செய்யத் தமது பத்திரிகை ஆவலுடன் இருக்கிறது என்ருர். "கலகங்களைப்பற்றிய செய்திகளைப் பிரமாதப்படுத்துவதால் லாபமில்லை. என் பத்திரிகை அப்படிச் செய்வதில்லை" என்ருர் அவர். இதற்குக் காந்திஜி அவரிடம் கூறியதாவது: "இன்று நாங்கள் இருவிதத் தீமைகளால் கஷ்டப்பட்டு வருகிறேம். உண்மை கூறப்படாமலிருப்பதும், கற்பனை செய்து பொய் கூறப்படுவதுமே அத்தீமைகள். பொருத்தமான உண்மைகளை மறைக்காமல், எவ்விதக் கட்சிச் சார்பு அல்லது துவேஷமுமில்லாமல் உண்மையோடு கூறி வந்தால், நீங்களும் உங்கள் பத்திரிகையும் இந்தியாவுக்கு உண்மையான சேவை செய்தவர்களாவீர்கள். நியாயமான லட்சியத்தை உண்மை எப்பொழுதும் கெடுத்துவிடுவதே இல்லை."

இப்பொழுது இருந்துவரும் சங்கடம் எப்பொழுது முடியும் என்று அவர் கேட்ட மற்ெருரு கேள்விக்குக் காந்திஜி கூறியதாவது: "குறையும் என்பதற்கான அறிகுறி எதையும் இன்னும் நான் காணவில்லையென்ருலும் அது ஒழிந்தே தீரும். சுயநலத்தை முன்னிட்டுச் சிலர் அதைக் கிளறிவிட்டு வருகின்

றனர். இன்று என் குரல் வனந்தரத்தில் ஒலிக்கும் குரலாக இருக்கலாம். ஆனல், பிரிட்டிஷ் துருப்புகள் இங்கு இருக்கும் வரையில், ஹிந்துக்களும் முஸ்லிம்களும் அவர்களின் உதவியை எதிர்பார்த்துக்கொண்டுதான் இருப்பார்கள் ; கலகமும் இருந்து கொண்டுதான் இருக்கும் என்று மீண்டும் கூறுகிறேன். சுதந்திரர்களாவதற்குப் போராடிக்கொண்டிருக்கும் மக்களுக்கு இதைவிட மோசமானது எதுவும் நேர முடியாது.''

இவ்விதம் கூறியது நண்பரின் பிரிட்டிஷ் மனச்சாட்சிக்கு அதிர்ச்சியாகிவிட்டது. ''தங்கள் துருப்புகள் சீக்கிரத்தில் வெளியே போய்விடவே பிரிட்டிஷார் விரும்புவார்கள். தடுப்பது யார்?'' என்று அவர் கேட்டார்.

இதற்குக் காந்திஜி, ''உடனே வெளியேறிவிடுவது காரிய சாத்தியமானது என்பதை நீங்கள் காட்டாமற் போனல், தடுப்பது பிரிட்டிஷாரே தவிர வேறு யார்?'' என்ருர்.

இப்படியே சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்த பிறகு அந்த நண்பர், இந்தியாவிலிருக்கும் பிரிட்டிஷ் வர்த்தகரும் மற்ற நலத்தினரும் அவர்களுடைய ஆட்களுமே வெளியேறுவதற்குக் குறுக்காக நிற்கின்றனர் என்பதை ஒப்புக்கொண்டார். சட்டத்தையும் அமைதியையும் நிலைநாட்டுவதில் பிரிட்டிஷ் துருப்புகள் செய்துவரும் வேலை சம்பந்தமாக அவருக்கு இன்னும் சந்தேகம் தீரவில்லை. ''அவர்கள் இங்கு இருக்கும் வரையில் அமைதி நிலவாது என்று நீங்கள் கூறுகிறீர்கள். என்ருலும், அமைதியை நிலைநாட்ட அவர்கள் வேண்டும் என்று தினந்தோறும் கோரிக்கை அதிகமாகிக்கொண்டே வருகிறது. அவை போதுமான அளவு உபயோகிக்கப்படவில்லை என்பது தான் புகாராக இருந்து வருகிறது'' என்ருர் அவர்.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: ''அவர்கள் போய்விட வேண்டும் என்பதற்குக் காரணமே இதுதான். அவர்கள் இருப்பது தடுக்கும் முறையாக இல்லை, தண்டிப்பதாக இருக்கிறது என்பதுதான் என் கருத்து. சங்கடம் ஏற்பட்டுவிட்ட பிறகே சட்டத்தையும் அமைதியையும் நிலைநாட்ட அப்படைகள் உபயோகிக்கப்படுகின்றன. வருங்காலச் சரித்திராசிரியர்கள் இதை எடுத்துக் கூறுவார்கள். கிழக்கு வங்காளத்திலும் கூட அமைதி நிலைநாட்டப்பட்டுவிடும். ஆனல், எவ்வளவு படுகொலைகளுக்கும் துன்பங்களுக்கும் பிறகு ! இந்தியாவிலிருக்கும் பிரிட்டிஷ் படைகள், இந்தியாமீது திணிக்கப்பட்டிருக்கும் பிரிட்டிஷ் நலன்களைப் பாதுகாக்க இருக்கின்றனவே

யன்றி இந்தியாவைப் பாதுகாப்பதற்கு அல்ல. பிரிட்டிஷ் நலன்கள் அவ்வளவு பலமாக இங்கு வேரூன்றிவிட்டதால் பிரிட்டிஷ் அரசாங்கத்திலும் அதைப் பிய்த்து எடுத்துவிட முடியாது. தரும காரியங்களைச் செய்வதற்கென்று இங்கு வந்தவர்களல்ல, பிரிட்டிஷார். அவர்கள் தொடர்ந்து இங்கு இருந்து வந்ததற்கும், தங்கள் படைகளைத் தொடர்ந்து வைத்துக்கொண்டிருந்ததற்கும் என்னதான் மாறுபட்ட காரணம் கூறப்பட்டாலும், பரோபகார சிந்தனை எதுவும் அதற்குக் காரணமே அல்ல.''

பிறகு யுத்தத்தைப் பற்றிப் பேச்சு வந்தது. ''நாம் சமீபத்தில் கண்டதைப் போன்ற யுத்தங்கள் தொடர்ந்து ஏற்படுவதை எப்படி நிறுத்தலாம் என்று நீங்கள் எண்ணுகிறீர்கள்?'' என்று கேட்டார் வந்தவர். இதற்குக் காந்திஜி கூறியதாவது : ''பிறரைச் சுரண்டுவது, வஞ்சம் தீர்த்துக்கொள்ளுவது இவற்றின் இயற்கையான பலன்களே யுத்தங்கள். அணுக்குண்டு அதன் தவிர்க்க முடியாத விளைவாகிவிட்டது. ஆகையால், பெரிய நாடுகள் சுரண்டும் எண்ணத்தையும் வஞ்சம் தீர்த்துக்கொள்ளுவது என்பதையும் விட்டாலன்றி உலகத்தில் சமாதானம் இருக்கும் என்ற நம்பிக்கைக்கே இடமில்லை. யுத்தத்தின் போது என் மனத்தில் உள்ளதைக் கூறிவிட முயன்றேன். பிரிட்டிஷ் மக்களுக்கும், ஹிட்லருக்கும், ஜப்பானியருக்கும் பகிரங்கக் கடிதங்களும் எழுதினேன். நான் எடுத்துக்கொண்ட சிரமத்திற்கு நான் ஐந்தாம் படையினன் என்றே கூறப்பட்டேன்.''

''ஆனால், அகிம்சை செயலாவதற்கு வெகு காலம் ஆகும். ஆயினும், இரண்டாம் போர் முனை ஒன்று அப்பொழுது தோன்றாது போயிருக்குமாயின் ருஷியாவே போய்விட்டிருக்கும்'' என்று வாதித்தார் நண்பர்.

இதற்குக் காந்திஜி கூறியதாவது : ''இவையெல்லாம் அறிவை எழுப்பும் வாதங்கள். இந்த வகையில் நான் எண்ண அனுமதிக்கப்படவில்லை. இல்லையானால், என்னுடைய தருமத்தையே நான் மறுப்பதாகும். எனக்குக் கசப்பான அனுபவங்கள் எவ்வளவோ ஏற்பட்டிருந்தபோதிலும், அந்தத் தருமம் இதற்கு முன்னால் இருந்ததையெல்லாம்விட இன்னும் அதிகப் பிரகாசமாகவே இருந்து வருகிறது. கண்மூடித் திறப்பதற்குள் ஏராளமான மக்கள் ஒரு குறிப்பிட்ட கருத்துக்கு மாறிவிட்ட எத்தனையோ அற்புதங்களைச் சரித்திரம் நமக்கு அளிக்

கிறது. போயர் யுத்தத்தை எடுத்துக்கொள்ளுங்கள். ஆங்கில மொழிக்கு அது 'மாபேகிங்' என்ற சொல்லை அளித்தது. மாபேகிங் தினத்தில் மக்கள் வெறிபிடித்து விட்டவர்கள் போலவே ஆகிவிட்டனர். என்றாலும், பிரிட்டிஷ் மக்கள் எல்லோருமே இரண்டு ஆண்டுகளுக்குள் மாறுதலையே அடைந்துவிட்டனர். ஹென்றி காம்பெல் பானர்மான் பிரதம மந்திரியானார்; யுத்த லாபங்கள் எல்லாமே கைவிடப்பட்டு விட்டன. சமீபத்தில் தேர்தலில் பிரிட்டிஷ் தொழிற்கட்சி அடைந்த வெற்றியும் குறிப்பிடத்தக்கது. சர்ச்சிலுக்குப் பேச்சுத் திறமையும், அறிவு ஆற்றலும் எவ்வளவோ இருந்தும், நேற்று வரையில் அவர் சொல்லியபடி நடந்து அவரைப் போற்றி வந்த பிரிட்டிஷ் மக்களுக்கு இன்று அவர் தெய்வமாக இல்லாமற் போய்விட்டது போதுமானதோர் அற்புதமாகவே எனக்குத் தோன்றுகிறது. மற்றச் சக்திகளெல்லாம் போய்விட்டாலும் ஒன்று மாத்திரம் நிலைத்து நிற்கும். அதைக் கடவுள் என்று அழைத்தாலும், இயற்கை என்றாலும் உங்களுக்கு இஷ்டமான எப்பெயர் சொன்னாலும், அழியாத சக்தி அது. நம்பும் என்னைப் போன்ற ஒருவருக்கு அந்த நம்பிக்கை நீடித்து இருந்து வர மேலே குறிப்பிட்டது போன்ற சம்பவங்களே போதுமானவை.''

சோடேபூர், 30--10--1946 --'ஹரிஜன்' - 10—11—1946

# 5

# பெருத்த வேதனை

கல்கத்தாவில் சமீபத்தில் நடந்த கோரமான சம்பவங்களைக் குறித்து ஒரு நண்பர் ஒரு நாள் காந்திஜியுடன் விவாதித்துக்கொண்டிருந்தார். குறுகிய வகுப்புவாதத்தைக் கொண்ட எண்ணத்தைக் கண்டு அவருடைய மெல்லுணர்வும் சீரிய குணமும் குன்றிப் போயின. ஏற்பட்ட உயிர்ச் சேதம் வருந்தத் தக்கதே என்றாலும், அதுகூட அவருக்கு அவ்வளவு வருத்தம் அளிக்கவில்லை. ஆனால், கல்கத்தா சம்பவங்களினால் மனித உணர்ச்சி அடைந்திருக்கும் இழிவான நிலையே அவரை அதிகமாக வருத்திவிட்டது. "வகுப்புவாதம் என்ற வகையில் என்றுமே நினைத்திராதவர்கள்கூட இன்று வகுப்புவாத மனப்போக்குடையவர்களாகிவிட்டார்கள். அது மாத்திரம் அல்ல. வெறித்தனம் பரவிவிட்டது" என்றார்.

வங்காளத்திலிருந்து வந்த கதைகளையெல்லாம் கேட்டுக்கொண்டே உட்கார்ந்திருந்த காந்திஜி, மனத்துள் ஒரு

முடிவுக்கு வந்துவிட்டார். “நான் டில்லியை விட்டுப் புறப்படுவது, வங்காளத்திற்குப் போவதற்கு என்றிருக்குமேயன்றிச் சேவா கிராமத்திற்குத் திரும்புவதற்கு என்று இராது. இல்லையானல், நான் இங்கேயே இருந்துகொண்டு ஒன்றுக்கும் உதவாமல் கிடப்பேன்” என்ருர்.

அன்று மாலை இதைப்பற்றி வங்காளத்திலிருந்து வந்திருந்த இரு நண்பர்களுடன் கலந்தாலோசித்தார். “நாங்கள் முதலில் அங்கே போய் நிலைமையை உங்களுக்குத் தெரிவிக்க எங்களை அனுமதியுங்கள். எங்களால் முடிந்ததைக் கொஞ்சம் செய்து பார்க்க எங்களுக்கும் வாய்ப்பளியுங்கள். அவசியமானல், பிறகு நீங்கள் வரலாம்” என்றனர். காந்திஜியும் ஒப்புக் கொண்டார்.

“வங்காளத்தில் பரவிவரும் வகுப்புவாத வெறியாட்டத்தைத் தடுப்பதற்கு உண்ணுவிரதம் இருப்பதை நீங்கள் வரவேற்பீர்களா?” என்று பேச்சின் நடுவே ஒருவர் காந்திஜியைக் கேட்டார். “இல்லை” என்பதே இதற்குக் காந்திஜி அளித்த பதில். அவர் மேலும் கூறியதாவது: “அகமதாபாதிலிருந்து மதிப்பிற்குரிய என் சகா ஒருவர், என்னையே அதற்குப் பலி கொடுத்துக்கொள்ள அழைத்திருக்கிருர். ‘அகிம்சை வழியை நாம் நம்புகிருேம். ஆனல், அதற்கு வேண்டிய பலம் நமக்கு இல்லை. உங்கள் உதாரணம், ஊசலாடிக்கொண்டிருக்கும் எங்கள் நம்பிக்கையை நிதானப்படுத்தி எங்களைப் பாதுகாக்கும்’ என்கிருர். அந்த வாதம் சரியானது; அதிகமாகக் கவர்வதாகவும் இருக்கிறது. ஆனல், அதையெல்லாம் அடக்கிக் கொண்டு ‘முடியாது’ என்று கூறிவிட்டேன். என் உள்ளத்துள் அழைப்பு எதுவும் தோன்றவில்லை. அது வந்துவிட்டால் வேறு எதுவும் என்னைத் தடுத்துவிட முடியாது. அதைப் பற்றி எனக்கு நானே விவாதித்துக்கொண்டேன். ஆனல், என் நியாயங்களை நான் எடுத்துக்காட்ட வேண்டியதில்லை. மக்கள் விரும்பினல் என்னைக் கோழை என்று சொல்லிக் கொள்ளட்டும். அதற்கான தருணம் வந்துவிடும்போது அதை ஏற்பதற்கு வேண்டிய பலத்தைக் கடவுள் எனக்கு அளிப்பார், நான் அதற்குச் சித்தமாகவும் இருப்பேன் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு.

“உண்ணுவிரதத்தை இயந்திரம்போல் மேற்கொண்டுவிட முடியாது. அது அதிக சக்தி வாய்ந்தது. ஆனல், பழக்கமில்லாது உபயோகித்தால் ஆபத்தானது. மனத்திலேனும் பதிலுக்குப் பதில் செய்வதென்ற எண்ணமின்றிச் சாவை



துயருற்றவருக்கு ஆறுதல் கூறும் பெருந்தகையார்—(நோவாகாலி) 1947



(நோவாகாலி) அகிம்சை யாத்திரையில் அகிம்சாமூர்த்திக்கு அடிபணிந்து வணங்குகிறார்
அவதியுற்ற ஒரு கிராமவாசி

எதிர்நோக்குவதற்கு வேண்டியதைவிடப் பூரணமான சுயத் தூய்மை இதற்கு வேண்டும். சரியான தியாகமான அந்த ஒரு செய்கையே உலகம் முழுவதற்கும் போதுமானது. ஏசுவின் உதாரணம் அவ்விதமே கருதப்படுகிறது.

"ஏசுவின் அந்த வரலாறு சரித்திரபூர்வமான உண்மையாக இருந்தாலும், இல்லாமற்போயினும், அதைப்பற்றி எனக்குக் கவலை இல்லை. எனக்குச் சரித்திரத்தையும்விட அது அதிக உண்மையானது. ஏனெனில், அது சாத்தியமானதே என்று நான் கருதுகிறேன். பிறருக்காக ஒரு பாவமும் அறியாது செய்யும் தியாகத்தைப்பற்றிய தருமத்தை அதன் உண்மையான பொருளுடன் எடுத்துக்கொண்டால் அது நிரந்தரமான தருமமாக உறுதிப்பட்டதாகிறது.

"ஏசுவின் படிப்பினையை இப்பொழுது இருக்கும் நிலைக்கு எவ்விதம் அனுசரிக்கலாம் என்பதையும் கவனிப்போம். பம்பாயில் வெறிபிடித்த ஒரு கூட்டத்தின் ஆத்திரத்தை ஒரு ஹிந்துவும் ஒரு முஸ்லிமும் வீரத்துடன் எதிர்த்து நின்றனர். ஒருவரையொருவர் அன்போடு தழுவிய வண்ணம் செத்தார்களேயன்றி ஒருவரை மற்றொருவர் கைவிட மறுத்துவிட்டனர். கூட்டத்தின் வெறியாட்டத்தை அடக்க முயன்றதில் அதேபோலவே ரஜாப் அலியும், வசந்த ராவ் ஹேகிஸ்தேயும் மடிந்தனர். 'இதனால் என்ன ஆகிவிட்டது? அத் தீ இன்னும் வளர்ந்துகொண்டுதான் இருக்கிறது' என்று மக்கள் கேட்கலாம். அது வீணாகிவிட்டது என்று எண்ண நான் சிறிதும் தயாராயில்லை. அதன் பலனை இன்று நாம் காண முடியாமலிருக்கலாம். நமது அகிம்சை இன்னும் கலப்பான விஷயமாகவே இருக்கிறது. பலரால் புரிந்துகொள்ளமுடியாத மௌனமாகவே, கண்ணுக்குப் புலனாகாத வழியிலேயே, பாலில் பிரைமோர் கலந்ததுபோல் அது தொடர்ந்து வேலை செய்துகொண்டுதான் வருகிறது. நான் கூறுவதற்கு மற்றோர் உதாரணமாகச் சம்பாரண் சத்தியாக்கிரக சரித்திரத்தை நினைவுபடுத்துகிறேன். மிக மோசமானதான கட்டாய அவுரிச் சாகுபடிக்கு எதிராக, முன்னர்ச் சென்ற அரை நூற்றாண்டில், ரத்தம் சிந்திய கலவரங்கள் எத்தனையோ அங்கே நடந்திருக்கின்றன. ஆனால், ஒவ்வொரு முயற்சியும், முன்னால் இருந்ததைவிடப் பிடிப்பை வலுவாக்கியது. பிறகு பலாத்காரச் செயல்களே இல்லாத சம்பாரண் பொதுஜனச் சத்தியாக்கிரகம் வந்தது. நூறு ஆண்டுகளாக இருந்து வந்த தீமை ஆறே மாதங்களில் ஒழிக்கப்பட்டுவிட்டது.

"ஆகையால், போங்கள். என்னால் இயன்றதைச் செய்தேன். உங்களை மேற்கொண்டும் நான் தாமதித்து வைக்கமாட்டேன். உங்களுக்கு என் ஆசிகள். நீங்கள் மூவரும் கொல்லப்பட்டுவிட்டீர்கள் என்று நாளை எனக்குச் செய்தி கிடைக்குமானால், எனக்கு மகிழ்ச்சி இருக்குமேயன்றிக் கண்ணீர் வராது என்பதை உங்களுக்குக் கூறுகிறேன்."

"அப்படிக் கொல்லப்படுவது உண்மையில் ஆனந்தமானதே" என்று அவர்களும் கூறினார்கள்.

காந்திஜி மேலும் கூறியதாவது: "என் சொற்களைக் கவனத்தில் வைத்துக்கொள்ளுங்கள். அதைக் குறித்து மூடத் துணிவு எதுவும் வேண்டாம். அங்கே போக வேண்டும் என்று உணர்வதால் நீங்கள் போக வேண்டுமேயன்றி நான் உங்களைப் போகச் சொல்லுவதற்காக நீங்கள் போகக்கூடாது."

"அதில் சந்தேகமே இல்லை" என்று அவர்கள் ஒருமித்துப் பதில் சொல்லிவிட்டு அங்கே போய் அப்பெருந்தீயை எதிர் நோக்கிப் புறப்பட விடைபெற்றனர்.

அன்று மாலை பிரார்த்தனைக் கூட்டத்தில் காந்திஜி கூறியதாவது: "என்னை வங்காளத்திற்கு வருமாறு அழைத்து இன்று எனக்குப் பல செய்திகள் வந்திருக்கின்றன. ஆத்திரத்தின் ஆவேசம் அங்கு அதிகரித்துக்கொண்டே போகிறது. அதை அடக்கிவிடுவதற்கு வேண்டிய சக்தி எனக்கு எதுவும் இருப்பதாக உணராவிடினும் வங்காளத்திற்குப் போக வேண்டும் என்ற பரபரப்பு எனக்கு இருக்கிறது. பண்டித நேரு திரும்பி வந்து காரியக் கமிட்டி கூடும்வரையில் பொறுத்திருக்க வேண்டியது என் கடமை எனக் கருதுகிறேன். எனினும், கடவுளின் கரங்களில் இருக்கிறேன் நான். எதற்கும் நான் காத்திருக்க வேண்டியதில்லை என்று உணர்ந்தால் தேதியை எதிர்பார்த்து நான் தயங்கமாட்டேன். என் மனமெல்லாம் வங்காளத்தில் இருக்கிறது."

புது டில்லி, 16—10—1946 —'ஹரிஜன்' - 27—10—1946

## 6

# பைத்தியக்காரத்தனத்தின் வெறியாட்டம்

இந்த வாரத்தில் நடந்த சம்பவங்கள், நான் சென்ற வாரம் குறிப்பிட்டதைப் போன்று காந்திஜியின் உணர்ச்சியில் பதிந்திருந்த இருளைப் போக்கக்கூடியனவாக இல்லை. ஒருநாள்

பேசிக்கொண்டிருக்கும்போது சாதாரணமாக அவர், "நான் எங்கு நிற்கிறேன் என்பதைக் காண்பதற்காக என்னையே சோதித்துக்கொள்ள முயன்று வருகிறேன்" என்றார். தம் மனத்திலுள்ள ஏக்கத்தையெல்லாம் இப்பொழுது பிரார்த்தனைக் கூட்டங்களில் கொட்டிக்கொண்டிருக்கிறார். முதலில் அஸ்ஸாமில் வெள்ளக் கொடுமை உண்டாயிற்று. ஆயிரக்கணக்கானவர்கள் வீடிழந்தனர். லட்சக்கணக்கில் பொருட்சேதம்; பலர் இறந்தும் போயினர். அது கடவுளின் செயல். ஆனால், வங்காளத்தில் மனித வர்க்கத்தினரில் ஒரு பகுதியினரைப் பைத்தியக்காரத்தனத்தின் வெறியாட்டம் பற்றிக்கொண்டிருக்கிறது என்பது அஸ்ஸாமிலிருந்து வந்திருக்கும் செய்தியைவிட இன்னும் அதிக மோசமானது. மிருகங்களினும் இழிவான நிலைக்கு மனிதன் தாழ்ந்துவிட்டான். அங்கு மிகச் சிறுபான்மையினராக இருக்கும் ஹிந்துக்கள், முஸ்லிம்களினால் தாக்கப்படுகின்றனர் என்று தகவல்கள் வந்து கொண்டிருக்கின்றன. நோவாகாலியில் நடந்து வருபவைகளைக் குறித்து அறிந்ததிலிருந்து, இதில் தமது கடமை என்ன என்பதைக் குறித்துக் காந்திஜி தீவிரமாகச் சிந்தித்து வருகிறார். பிரார்த்தனைக் கூட்டத்தில் அவர் கூறியதாவது:

"கடவுள் எனக்கு வழி காட்டுவார். அகிம்சைப் போதனையைப் பொறுத்த வரையில் மக்களிடையே என் மதிப்பு வெகுவாய்க் குறைந்துவிட்டது என்பதை அறிவேன். என்றாலும் என்னிடம் அன்பு காட்டி வருகிறார்கள். அதற்காகப் பாராட்டுகிறேன்; நன்றியும் செலுத்துகிறேன். ஆனால், என்னுடைய நன்றியையும் பாராட்டுதலையும் தெரிவித்துக்கொள்ளுவதற்கு ஒரு வழிதான் உண்டு. கடவுள் என்னிடம் ஒப்படைத்திருக்கும் சத்தியத்தைப் பின்பற்றுவதற்கென்று என்னுடைய வாழ்நாளெல்லாம் தத்தம் செய்யப்பட்டிருக்கிறது. இதனால் மக்களின் அன்பையும் மதிப்பையும் இழந்துவிடும் சங்கடம் நேர்ந்தாலும் அதையும் பொருட்படுத்தாமல் சத்தியத்தை மக்கள் முன்பு வைத்து, அவர்கள் மூலம் உலகத்தின் முன்னால் அதை நான் நிறுத்தி வைக்க வேண்டும். மக்களுக்கு என் நன்றியையும் பாராட்டுதலையும் தெரிவித்துக் கொள்ள இருக்கும் வழி அதுவே. இச்சமயத்தில் ஒன்று உங்களுக்குச் சொல்ல வேண்டியது அவசியம் எனக் கருதுகிறேன். நோவாகாலியிலும் கிழக்கு வங்காளத்திலும் நடந்தவைகளுக்காகப் பதிலுக்குப் பதில் செய்வது என்ற வகையில் ஹிந்துக்கள் எண்ணிவிடுவது தவறு. அகிம்சை காங்கிரஸின் கொள்கை. அதுவே நம்மை இன்றுள்ள பலத்திற்குக் கொண்டு வந்திருக்கிறது. பலமுள்ள பிரிட்டிஷார் விஷயத்தில் மாத்திரம் அதன்

உபயோகத்தைக் கொள்ளுவது என்று கட்டுப்படுத்திக்கொண்டு, நம் சகோதரர்கள் விஷயத்தில் மாத்திரம் இம்சை தாராள மாக உபயோகிக்கப்படுமானால், அது ஒரு கோழையின் பரீட்சை யாகவே கருதப்படும். இதையே நம் கொள்கையாக என்றும் அனுசரிக்க முடியும் என்பதை நம்ப நான் மறுக்கிறேன். காங் கிரஸின் உறுப்பினர் பட்டியலில் ஹிந்துக்களே மிகப் பெரும் பான்மையினராக இருந்தபோதிலும், அது சமமாக எல்லாச் சமூ கத்தினரின் ஸ்தாபனமேயன்றி ஹிந்து ஸ்தாபனம் அன்று. பண்டித நேருவுக்குப் பதிலாக ஆசாரிய கிருபளானி காங்கிரஸ் தலைவராகியிருக்கிறார். இப்பதவி, அவர் சுகமாக வீற்றிருப்பதற் காக அல்ல என்று அவரிடம் கூறினேன். மந்திரி சபையின் பிரதம மந்திரி முள்ளாலான கிரீடத்தையே அணிய வேண்டியிருக்கிற தென்றால், காங்கிரஸ் தலைவர் முள்ளால் ஆன படுக்கையிலேயே படுக்க வேண்டியிருக்கிறது. காலஞ்சென்ற ஸர் சையது அகமது, ஹிந்துக்களும் முஸ்லிம்களும் இந்தியாவின் இரு கண்கள் என்றார். இந்த இரு கண்களையும் காங்கிரஸ் தலைவர் வேற்றுமை படுத்திப் பார்க்க முடியாது. இருவருக்கும் சமமாகச் சேவை செயய அவர் பிரதிக்ஞை பூண்டிருக்கிறார். ஆகையால், கொல் லாமலேயே உயிர் துறக்கும் கலையை மக்களுக்கு உபதேசிப் பதற்காகக் கிழக்கு வங்காளத்திற்குச் சமாதானத் தூது போகு மாறு அவரிடம் கூறியிருக்கிறேன். தமது சொந்த உதாரணத் தின் மூலம் அதைச் செய்து காட்டுவது அவருடைய பாக்கிய மாக இருக்கும். அவர் தம் மனைவியுடன் அங்கே போகிறார். அவர் போவது, இந்தியாமுழுவதையுமே ஆக்கிரமித்துவிடக்கூடிய தாக இருக்கும் சகோதரப் படுகொலைகளை நிறுத்துவதற்கேயன்றி ஒரு கட்சியினரைப் பாதுகாப்பதற்காக அல்ல. ஆசாரிய கிரு பளானிக்கும் அவர் மனைவிக்கும் இது ஒரு நல்ல ஆரம்பம். காலஞ் சென்ற சுபாஷ் பாபுவின் சகோதரர் சரத் பாபுவும் அவருடன் போகிறார். ஜாதி மதத் தடை எதையும் அவர் அறியார். சில ஆண்டுகளுக்கு முன்பு சரத் பாபுவின் வீட்டில் இருந்திருக்கிறேன். சுபாஷ் பாபு, சரத் பாபுவிடம் எவ்வளவு மதிப்பு வைத்திருந்தார் என்பதை நான் அறிந்தேன்.

“வங்காளம் நமக்கு எவ்வளவோ அளித்திருக்கிறது. குரு தேவரின் கீதத்தை நாம் இப்பொழுது பாடக் கேட்டோம். அவர் பிறந்தது வங்காளத்தில்தான். அத்தகைய வங்காளத்தின் நற் பெயருக்கு இப்பொழுது இழுக்கு உண்டாக்கப்படுகிறது. பக்தனை விசால மனமுடையவனாகவும் பயமில்லாதவனாகவும் ஆக்குமாறு குருதேவரின் கீதம் கடவுளை வேண்டுகிறது. உதட்

டில் அந்தக் கீதத்துடனேயே அவர்கள் அங்கே போகிறார்கள். அவர்களுக்கு வெற்றி ஏற்பட வேண்டுமென விரும்ப வேண்டியது, உங்கள் கடமை.

" தங்கள் மனத்திற்குள்ளேயே பார்த்துக்கொள்ளுமாறு முஸ்லிம் லீகையும் கேட்டுக்கொள்ளுகிறேன். இடைக்காலச் சர்க்காருக்குள் வருவதென்று அவர்கள் முடிவு செய்திருக்கிறார்கள். சகோதரர்களாக இருந்து வேலை செய்யவே அவர்கள் வருகிறார்கள் என நம்புகிறேன். அவர்கள் அவ்விதம் செய்தால் எல்லாம் சரியாகிவிடும். முஸ்லிம்களைக் கொல்ல வேண்டாம், அவர்கள் மீது உள்ளத்தில் கெட்ட எண்ணம் கொள்ள வேண்டாம் என்று நான் ஹிந்துக்களைக் கேட்டுக்கொண்டதைப் போன்றே முஸ்லிம்களையும் கேட்டுக்கொள்ளுகிறேன். பாகிஸ்தானுக்காகப் போராடுவதாயினும் நியாயமாகச் சகோதரர்களாகப் போராடட்டும். பாகிஸ்தானில் சிறுபான்மையினர் முற்றிலும் பாதுகாப்பு அளிக்கப்படுவார்கள், ஒவ்வொருவருக்கும் நீதி கிடைக்கும் என்று காய்தே ஆஜாம் ஜின்னா கூறுகிறார். முஸ்லிம்கள் எங்கே பெரும் பகுதியினராக இருக்கின்றனரோ அந்த இடம் பாகிஸ்தான் மாதிரியே. ஆகையால், ஹிந்துக்களை தங்கள் சொந்தச் சகோதரர்களாகப் பாவிக்கும்படியும், விரோதிகளாகக் கருத வேண்டாம் என்றும் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். கிழக்கு வங்காளத்தில் நடப்பதுதான் இனி நடக்கப் போவது என்றால், அது பாகிஸ்தானுக்கே கெடுதலானது. ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒருவருக்கொருவர் பாதுகாப்பாகித் தங்கள் நடுவிலிருக்கும் சிறுபான்மைச் சமூகத்தினருக்குச் சிறிதேனும் துன்பம் விளையப் பார்ப்பதில்லை என்று தாங்களே பிரதிக்ஞை செய்துகொள்ளுவார்கள் என்றும் நம்புகிறேன். இதைச் செய்ய அவர்கள் தெரிந்துகொண்டாலன்றி, அதிகாரத்தைத் தம் கையில் அவர்கள் பெற்றிருப்பது கண்ணை மறைக்கும் மூடி என்றே கூறுவேன். வங்காளத்தில் நடந்துகொண்டிருப்பவை மனிதர் செய்யக்கூடியவையல்ல. மனிதராக இருக்க அவர்கள் முதலில் தெரிந்துகொள்ள வேண்டும்."

புது டில்லி, 18—10—1946. —'ஹரிஜன்' - 27—10—1946

# 7

# அழைப்பு

அதிகமான வேதனை, ஆழ்ந்த சிந்தனை, அதிக விவாதம் ஆகியவைகளுக்குப் பிறகு அக்டோபர் 28–ஆம் தேதி வங்காளத்திற்குப் புறப்படுவதென்று காந்திஜி தேதியைக் குறிப்

பிட்டார். அச்சமயம் அத்தகைய நீண்ட யாத்திரையை அவர் மேற்கொள்ளாமல் இருக்கும்படி செய்வதற்காகக் கடைசி நேரத்தில் முயன்ற ஒரு முக்கியமான நண்பரோடு விவாதித்தபோது, "அங்கு என்னல் என்ன செய்ய முடியும் என்பதை நானே அறியேன்" என்ருர் காந்திஜி. அவர் மேலும் கூறுகையில், "நான் அங்கே போனலன்றி எனக்கு அமைதியே இருக்க முடியாது என்பதை மாத்திரமே அறிவேன்" என்ருர். பிறகு அவர் 'சிந்தனையின் சக்தி'யைக் குறித்து விவரித்ததும், "எனக்கு இருவகை எண்ணங்கள் இருக்கின்றன. ஒன்று சோம்பலானது; மற்ருென்று சுறுசுறுப்பானது. அந்தச் சோம்பல் எண்ணங்கள் ஒருவர் மூளையில் ஆயிரக்கணக்கில் இருக்கலாம். அவை ஒரு பொருட்டல்ல. கரு உருவாகாத முட்டையில் உள்ள நீரைப் போன்றதே அது. ஆனல், ஒரு பரிசுத்தமான தீவிர எண்ணம் ஆழத்திலிருந்து எழுந்து, ஒருவருடைய தனிப்பட்ட உத்வேகம் முழுவதையும் பெற்றதாகி மிக்க சக்தியுடையதாவதோடு சக்தியுள்ள கருவாகவும் வேலை செய்கிறது. நோவாகாலி மக்களிடம் போக வேண்டும் என்று என்னுள் தானே தோன்றியிருக்கும் ஆர்வத்தை அடக்க நான் விரும்பவில்லை" என்ருர்.

சென்ற ஞாயிற்றுக்கிழமை புதுடில்லியில் காந்திஜி பிரார்த்தனைக் கூட்டத்தில் பேசும்போது கூறியதாவது:

"நாளைக் காலை கல்கத்தாவுக்குப் புறப்படப் போகிறேன் கடவுள் டில்லிக்கு என்னைத் திரும்ப எப்பொழுது கொண்டு வருவார் என்பது தெரியாது. கல்கத்தாவிலிருந்து நோவா காலிக்குப் போக விரும்புகிறேன். அது கஷ்டமான யாத்திரை; என் தேக நிலையும் சரியாக இல்லை. ஆனல், தம் கடமையை ஒருவர் செய்தாக வேண்டும். கடவுள் நல்ல வழி செய்வார் என்று நம்பவும் வேண்டும். வழியிலிருக்கும் கஷ்டங்களையெல்லாம் கடவுள் எப்பொழுதுமே போக்கி விடுகிருர் என்பதல்ல. ஆனல், அவற்றைச் சகிக்க முடியும்படி அவர் செய்கிருர். யாரும் ஸ்டேஷனுக்கு வர வேண்டாம். என்னிடம் இந்தியா போதுமான அன்பைக் காட்டியிருக்கிறது. அதை மேலும் காட்டிக்கொள்ளவேண்டிய அவசியமில்லை.

"யார் செய்தது தவறு என்பதைக் குறித்து யார்மீதும் தீர்ப்புக் கூற நான் வங்காளத்திற்குப் போகவில்லை. மக்களின் ஊழியனகவே அங்கே போகிறேன். ஹிந்துக்களையும் முஸ்லிம்களையும் சந்திப்பேன். சில முஸ்லிம்கள் இன்று என்னை விரோதி

யாகக் கருதுகின்றனர். அவர்கள் என்றுமே அப்படி எண்ணியது கிடையாது. ஆனால், அவர்களுடைய கோபத்திற்காக நான் கவலைப்படவில்லை. என் மதத்தினரே என்மீது சில சமயங்களில் கோபப்படவில்லையா ? எந்தத் தேசத்தினராயினும், எந்த இனத்தினராயினும் நிறத்தினராயினும், மனிதவர்க்கம் எல்லாமே என் உற்றார் உறவினரே என்பதை என்னுடைய பதினேழாவது வயதிலிருந்தே நான் கற்றுக்கொண்டிருக்கிறேன். அவர்கள் கடவுளின் சேகவர்கள் என்றால், அவருடைய படைப்பான எல்லாவற்றிற்குமே சேவகர்களாக வேண்டும். அந்த வகையிலேயே நான் வங்காளத்திற்குப் போகிறேன். ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒருவருக்கொருவர் என்றுமே எதிரிகளாக இருக்க முடியாது என்று அவர்களுக்குக் கூறுவேன். அவர்கள் யாவரும் இந்தியாவில் பிறந்து வளர்ந்தவர்கள் ; இந்தியாவில் வாழ்ந்து மரிக்க வேண்டியவர்கள். மத மாற்றம், அடிப்படையான உண்மையை மாற்றிவிடாது. மத மாற்றம், தேசீய இனத்தில் மாறுதலை உண்டாக்கி விடுகிறது என்று நம்புவதாயிருப்பினும் அவர்கள் விரோதிகளாக வேண்டிய அவசியமில்லை.

" பெண்களின் துயரம் என்றுமே என் உள்ளத்தை உருக்கி விடுகிறது. என்னால் முடிந்தால் அவர்களின் கண்ணீரைத் துடைத்து அவர்களுக்குத் தைரியத்தை மூட்டவே வங்காளத்திற்குப் போக விரும்புகிறேன். கல்கத்தாவில் கவர்னரையும் பிரதமர் ஸ்ரீ சுகரவர்த்தியையும் பார்த்துவிட்டுப் பிறகு நோவாகாலிக்குப் போவேன். சச்சரவிட்டுக்கொள்ளுபவர்களிடையே சமாதானத்தை உண்டாக்குவதே இளமைப் பருவத்திலிருந்து என் வேலையாக இருந்திருக்கிறது. நான் வக்கீலாக இருந்தபோதுங்கூட, இரு கட்சிக்காரருக்குமிடையே ஒற்றுமையை ஏற்படுத்தவே முயன்றேன். இரு சமூகங்களும் ஏன் ஒற்றுமையை அடைந்துவிடக்கூடாது ? நான் எதிலும் தளராத நம்பிக்கை வைப்பவன்.

" உங்களிடமிருந்து இந்த உதவிதான் எனக்குத் தேவை. ஒருவரையொருவர் படுகொலை செய்து கொள்ளுவது நிற்க வேண்டும், இரு சமூகத்தினரும் உள்ளத்தில் ஒன்றாக வேண்டும் என்று என்னுடன் நீங்களும் பிரார்த்திக்க வேண்டும். இந்தியா பிரிக்கப்படுவதோ அல்லது ஒன்றாக இருப்பதோ பலாத்காரத்தினால் முடிவாகிவிடாது. ஒருவரையொருவர் உணர்வதன் மூலம் அது ஏற்பட வேண்டும். பிரிந்துவிடுவது, அல்லது ஒன்றாக இருப்

பது இவற்றில் எந்த முடிவுக்கு வருவதாயினும் நல்லெண்ணத்தின் பேரிலும் சமரசமாகவும் அம்முடிவுக்கு வர வேண்டும். எவருக்கும் அவமானம், மரியாதைக் குறைவு என்பதான எதற்கும் நான் உடந்தையாக இருக்க முடியாது. ஆகையால், சமாதானம் சரியானபடி இருக்க வேண்டுமானுல், அது கௌரவமானதாகவும் இருப்பதோடு மானத்தை விற்று ஏற்பட்டதாகவும் இருக்கக்கூடாது. நான் இவ்விதம் கூறுவதில், என்னை வந்து பார்த்த ஒரு பிரபலமான முஸ்லிம் சொன்னதையே நான் திரும்பக் கூறுகிறேன். "லட்சியம், பாகிஸ்தானுக இருந்தாலும் சரி, பிரிவினையாகாத இந்தியாவாக இருந்தாலும் சரி, ரத்தம் சிந்தாமலும் சச்சரவில்லாமலும் அந்த லட்சியத்தை நாம் அடைய வேண்டும். நமக்குள் சச்சரவிட்டுக்கொண்டு ரத்தம் சிந்தாமல் அதை நாம் அடைய முடியாது என்ருல் அது லாயக்கற்றது" என்ருர் அவர்.

"நோவாகாலிக்குப் போக நீங்கள் ஏன் விரும்புகிறீர்கள்? நோவாகாலியைவிட மிக மோசமான காரியங்கள் பம்பாய், அகமதாபாது, சாப்ரா ஆகிய இடங்களில் நடந்து வருகின்றன. அங்கு நீங்கள் போகவில்லை. நீங்கள் அங்கு இப்பொழுது போவதனுல் தற்சமயம் இருந்துவரும் ஆத்திரம் அதிகரித்து விடாதா? அந்த இடங்களில் துன்பங்களுக்கு ஆளாகியிருப்பவர்கள் முஸ்லிம்களாகையால் நீங்கள் போகவில்லை. நோவாகாலியில் துன்பம் அடைந்திருப்பவர்கள் ஹிந்துக்களாகையால் நீங்கள் போகிறீர்களல்லவா?" என அன்று ஒரு முஸ்லிம் நண்பர் என்னைக் கேட்டார். ஹிந்துக்கள், முஸ்லிம்கள் என்று நான் பாகுபாடு பார்ப்பதில்லை என அவருக்குச் சொன்னேன். என் நண்பர் குறிப்பிட்ட இடங்களில் நோவாகாலியில் நடந்ததைப் போன்ற காரியங்கள் கிட்டத்தட்ட நடந்திருந்தாலும் அந்த இடங்களுக்கு நான் நிச்சயமாகப் போயிருப்பேன். அங்கு நேரில் நான் இருந்தாலன்றி ஒன்றும் செய்ய முடியாது என்பதை உணர்ந்தாலும் போயிருப்பேன். கற்பழிக்கப்பட்டிருக்கும் பெண்களின் அபயக் குரலே திடீரென்று என்னை நோவாகாலிக்கு அழைக்கிறது. என்னுடைய அகிம்சை முறை இப்பொழுது பரீட்சையில் இருந்து வருகிறது. இந்த நெருக்கடியான நிலைமையில் அது என்ன செய்யப் போகிறது என்பது இனியே தெரிய வேண்டும். அதனுல் ஒரு பயனுமில்லை என்ருல் நான் பிரயோஜனமற்றவன் என்று சொல்லிவிடுவதே மேல். இக் குழப்பங்களில் கடைசித் தீப்பொறி அணையும் வரையில் நான் வங்காளத்தைவிட்டுப் புறப்படப் போவதில்லை. ஓர் ஆண்டோ

அதற்கு மேலோ நான் இங்கேயே இருக்கலாம். அவசியமானல் இங்கேயே உயிரையும் விடுவேன். ஆனல், தோல்வியை மட்டும் ஏற்றுக்கொள்ளமாட்டேன். நானே இங்கு நேரில் இருப்பதால் நான் ஏதேதோ செய்யக்கூடும் என்ற நம்பிக்கையை மக்களுக்கு உண்டாக்கி, அவர்கள் எதிர்பார்ப்பதில் தவிர என்னல் எதுவுமே செய்ய முடியவில்லையென்ருல், மரணம் எவ்வளவோ மேல். அவசியமானல் காங்கிரஸ் மகாநாட்டுக்குக்கூடப் போகாதிருந்துவிடுவதென்று மனத்தில் தயார் செய்துகொண்டுவிட்டேன். அதே போல் சேவாகிராமம், கடைசியாக இப்பொழுது நான் அன்பு வைத்திருப்பதான உருளி, ஆகியவற்றின் பொறுப்புக்களிலிருந்தும் என்னை மனத்தில் விலக்கிக்கொண்டுவிட்டேன்.''

நோவாகாலிக்குச் சீக்கிரம் போக வேண்டுமென்பதில் காந்திஜி அதிக ஆர்வத்துடனிருந்தபோதிலும், நான்காவது நாள் பிரார்த்தனைக் கூட்டத்தில் கூறுகையில், தாம் கருதியபடி அடுத்த நாள் புறப்பட முடியவில்லை என்று அறிவித்தார். அவருக்குச் சீக்கிரமாக ரெயில் ஏற்பாடு செய்ய முடியவில்லை என்று பிரதம மந்திரி தமக்கு அறிவித்திருப்பதாகக் கூறினர். சனி அல்லது ஞாயிற்றுக்கிழமை புறப்பட முடியும் என்று நம்புவதாகவும், இதற்கு நடுவில் தம்மால் இயன்ற சேவையை நகரில் செய்யப் போவதாகவும் கூறினர்.

சோடேபூர், 1—11—1946 —'ஹரிஜன்' - 10—11—1946

# 8

# பிகாரிலிருந்து கெட்ட செய்தி

சௌமுஹானி என்ற இடத்தில் 8—11—'46-இல் காந்திஜி பிரார்த்தனைக் கூட்டத்தில் கூறியதாவது:

"இப்பொழுது நமக்குக் கெட்ட காலம்; சிறு தயாளத்திற்கெல்லாங்கூட நன்றியுள்ளவர்களாக இருக்க வேண்டியவர்களாக இருக்கிறேம். இந்தியா முழுதும் பக்ரீத் அமைதியாக முடிந்தது, ஒவ்வொருவருக்கும் மனநிம்மதியாயிற்று. ஆனல், பிகாரிலிருந்து கிடைத்திருக்கும் செய்தி எனக்குள்ளேயே போராட்டத்தை உண்டாக்கிவிட்டது. இந்தியாவில் என்னுடைய ராஜீய வாழ்வு சரியாக ஆரம்பமானதே பிகாரில் தான். பிகார் மக்களுக்காக நான் சலிப்பின்றிப் பாடுபட்டு வந்திருக்கிறேன். அவர்கள் என்னிடம் எவ்வளவோ அன்பையும் ஆர்வத்தையும் பொழிந்திருக்கிருர்கள். பிரஜ்கிஷோர் பாபு, ராஜேந்திர பாபு இவர்களின் பிகார் அது. அந்தப் பிகார்

இன்று வெறிபிடித்துப் போய் இந்தியாவின் நற்பெயரையே பாழாக்கிவிட்டது. ஆங்கிலேயருக்கு எதிராக மக்கள் வெறி பிடித்து எழுந்துவிடுவார்களாயின், என் சாவையே காண்பார்கள் என்று எத்தனையோ தடவை சொல்லியிருக்கிறேன். நமது சொந்த நாட்டினரும், நமது உற்ருர் உறவினருமேயான ஒரு பாவமும் அறியாத முஸ்லிம்களுக்கு எதிராக அந்த வெறி கிளம்பியிருக்கிறதென்ருல் அதைப் பார்த்துக்கொண்டு நான் எப்படி இருக்கமுடியும்?''

''கல்கத்தாவுக்கு வந்ததும், முக்கியமாகத் தேக நிலை காரணமாகப் பாலும் இல்லாத கொஞ்ச ஆகாரத்தோடு இருந்து வந்தேன். நாட்டில் மூண்டுள்ள சம்பவங்கள் அந்த ஆகாரத் தோடேயே தொடர்ந்து இருந்து வருமாறு என்னைச் செய்தன. விஷயம் முற்றிலும் திருந்திலைன்றிப் பிகார் என்னை முழுப் பட்டினிக்கே கொண்டு போய்விடும்'' என்று 4-ஆம் தேதி ஞாயிற்றுக் கிழமை ராஜகுமாரி அமிர்த கௌருக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார். ''கால அளவு எதுவும் இராது. நீங்கள் பரபரப்பு அடைந்துவிட வேண்டாம். ஆனல், துன்பத்தினூடே சென்றும் என்னுடைய தருமத்தைக் கடைப்பிடிக்கும் பலம், எனக்கு இருப்பதாக நான் உணருவதற்கு உண்மையில் மகிழ்ச்சி அடையுங்கள்'' என்று எழுதினர்.

மறுநாள் பண்டித ஜவாஹர்லாலுக்குக் காந்திஜி எழுதியதாவது: ''பிகாரிலிருந்து வந்த செய்தி என்னை உலுக்கிவிட்டது. என் சொந்தக் கடமை தெளிவாக இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. ஆழ்ந்த பற்று பிகாருடன் என்னைப் பிணைக்கிறது. அதை எப்படி நான் மறக்க முடியும்? கேள்விப்படுவதில் பாதி உண்மையாக இருந்தாலும், மனிதத்தன்மையை பிகார் மறந்துவிட்டதையே அது காட்டுகிறது. அதற்குக் காலிகள் மீதே குறை கூறுவது பொய்யாகும். ஓர் உண்ணுவிரதத்தைத் தவிர்க்க நான் எவ்வளவோ முயன்றும் இனியும் அதைத் தவிர்த்துவிட முடியாது...' இந்த அறிவு கெட்ட படுகொலைகளைக் காண்பதற்கு நீ உயிர் வைத்திருப்பானேன்? பட்டப்பகல் போல வெட்ட வெளிச்சமாக இருப்பதைப் பார்க்க மக்கள் மறுத்து, நீ சொல்வதையும் அவர்கள் பொருட்படுத்தவில்லையென்ருல், உன் காலம் தீர்ந்துவிட்டது என்பதை அது காட்டவில்லையா?' என்று என் அந்தராத்மா எனக்குச் சொல்லுகிறது. இந்த வாதத்தில் இருக்கும் நியாயம் தடுக்க முடியாத வகையில் என்னை உண்ணுவிரதத்தை நோக்கித் துரத்துகிறது.

ஆகையால், இந்த வெறியாட்டம் நிற்காவிட்டால், சாகும் வரையில் உண்ணாவிரதத்தை மேற்கொள்ளுவதென்றிருப்பதாக ஓர் அறிக்கையை வெளியிடப் போகிறேன்.* இந்த உண்ணாவிரதத்தைக் கொஞ்ச காலத்திற்குத் தாமதப்படுத்த வேண்டியிருக்கலாம். 'டில்லியில் இதைப்பற்றி நீங்கள் என்னைக் கேட்டபோது, இதைப்பற்றி அச்சமயம் நான் எண்ணிக்கொண்டிருக்கவில்லை' என்று கூறினேன். இப்பொழுது அதெல்லாம் மாறிவிட்டன. மாறுபட்டு நீங்கள் நினைப்பதாயிருந்தால் என்னுடன் நீங்கள் மல்லாடலாம். நீங்கள் எது சொன்னாலும் நான் கவனிப்பேன். ஆனால், என்னுடைய குணத்தை நீங்கள் அறிவீர்களாகையால், நான் உத்தேசித்திருக்கும் காரியத்தை அங்கீகரிப்பீர்கள் என்றே நம்புகிறேன். நான் இறந்துவிடக்கூடும் என்பதைக் குறித்துக் கொஞ்சமும் எண்ணாமல், எப்படியாயினும் உங்கள் வேலையைச் செய்துகொண்டு போங்கள். கடவுள் நன்றாகக் கவனித்துக்கொள்ளுவார் என்று என்னை விட்டுவிடுங்கள். கவலைக்கு இடங் கொடுக்க வேண்டாம்."

இந்தக் கடிதத்தின் நகலைச் சர்தார் பட்டேலுக்கும் அனுப்பச் செய்தார். பண்டித ஜவாஹர்லால் நேருவோ, சர்தாரோ காந்திஜியின் முடிவை மாற்ற முயற்சி செய்யவில்லை. இந்தப் பணயம் எவ்வளவு பெரிது என்பதை அவர்கள் நன்றாக அறிவார்கள். இந்தியாவின் சுதந்திரத்திற்குக் குறைந்தது அல்ல அது.

சௌமுஹானி, 8-11-1946 —'ஹரிஜன்' - 17—11—1946

# 9

# பிகாருக்கு

என் கனவுகளிலிருந்த பிகார் அவற்றைப் பொய்யாக்கி விட்டது. பாரபட்சமான அல்லது மிகைப்படுத்தப்பட்ட செய்திகளை நான் நம்பிக்கொண்டிருக்கவில்லை. மத்திய சர்க்காரின் பிரதம மந்திரியும் அவருடைய சகாவும் தொடர்ந்து அங்கு இருந்து வருவதிலிருந்தே துயரின் கதை தெளிவாகிறது. முஸ்லிம் லீக் அரசாங்கத்தின்கீழ் இருக்கும் வங்காளத்தில் நிலைமை இதைவிட திக மோசமாகிவிடாவிட்டாலும் இதைவிட நன்றாக இருந்துவிடவில்லை என்று பதில் சொல்லலாம். வங்காளத்தில் நடந்ததன் பலனே பிகார் என்றும் கூறப்படலாம்.

---

* மகாத்மா காந்தி குறிப்பிடும் அறிக்கை, இக்கட்டுரைக்கு அடுத்தாற் போல் 'பிகாருக்கு' என்ற தலைப்பின் கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கிறது.

ஒரு கட்சியினர் கெட்ட செய்கையைச் செய்தார்களென்பது, எதிர்க் கட்சியினரும் அதே போன்ற காரியத்தைச் செய்வதை நியாயமாக்கிவிடாது. அதுவும் நீண்ட, ஏராளமான ராஜீய காரியங்களைச் செய்ததற்கு நியாயமாகவே பெருமை கொள்ளுபவர் செய்வது நியாயமே ஆகாது. ஒரு வாரத்திற்கு அதிகமாகவே நான் கல்கத்தாவில் இருந்தபோதிலும் வங்காளத்தின் துன்பம் எவ்வளவு பெரியது என்பது எனக்கு இன்னும் தெரியாது என்பதை நான் ஒப்புக்கொள்ளவே வேண்டும். பிகார் என்னை அழைத்தாலும் நோவாகாலிக்குப் போகும் திட்டத்தை நான் இடையில் முறிக்க முடியாது. முஸ்லிம் லீகிடம் வகுப்புவாதம் இருக்கிறதென்று காங்கிரஸ் குற்றம் சொல்லி வருகிறது. அப்படி இருக்க, பதிலுக்கு வகுப்புத் துவேஷம் கிளப்புவது வகுப்புத் துவேஷத்திற்குப் பரிகாரம் ஆகுமா ? நூற்றுக்குப் பதினன்கு பேராகப் பிகாரில் இருக்கும் முஸ்லிம்களைக் காட்டுமிராண்டித்தனமாக நசுக்கப் பார்ப்பது தேசீயமா ?

சில ஆயிரம் பிகாரிகள் செய்யும் பாபத்திற்காகப் பிகார் முழுவதையுமே நான் கண்டிக்ககூடாது என்று எனக்கு யாரும் சொல்லத் தேவையில்லை. ஒரு பிரஜ்கிஷோர் பிரசாதுக்காகவும், ஒரு ராஜேந்திரப் பிரசாத்துக்காகவும் பிகார் பெருமைப்படவில்லையா ? பிகாரின் தவருன நடத்தை தொடர்ந்து இருந்து வருமானல் இந்தியாவிலுள்ள எல்லா ஹிந்துக்களையுமே உலகம் கண்டிக்கும் என்றே அஞ்சுகிறேன். அதுதான் அதன் வழி ; அது தவருன வழியும் அன்று. சில சீக்கியர்களும், சில முஸ்லிம்களும், கிறிஸ்தவர்களும், பார்ஸிகளும் மற்றவர்களும் தன்னிடம் இருப்பதாகக் காங்கிரஸ் பெருமையடித்துக்கொண்டபோதிலும் காங்கிரஸ் ஹிந்து ஸ்தாபனமே என்று காய்தே ஆஜாம் ஜின்ன சொல்லி வருகிருர். பிகாரில் ஹிந்துக்களின் தவருன போக்கு அவர் கூறுவதை மெய்யாக்கிவிடும். சிறுபான்மையினரான முஸ்லிம்களை மிகப் பெரும்பான்மையினரான ஹிந்துக்களுடன் சமத்துவமாகப் பாவித்து, அவர்களைப் பாதுகாக்க வேண்டிய சகோதரர்களாகக் கருதப் பிகாரி ஹிந்துக்கள் கடமைப்பட்டிருக்கிருர்கள். காங்கிரஸின் கௌரவத்தை உயர்த்த எவ்வளவோ செய்திருக்கும் பிகார், அதற்குச் சமாதிக் குழியை முதலில் தோண்டியதாகிவிட வேண்டாம்.

என்னுடைய அகிம்சையைக் குறித்து நான் எந்த வகையிலும் வெட்கப்படவில்லை. இந்த நெருக்கடியான கட்டத்தில்

என்னுடைய அகிம்சையினுல் என்னுள்ளேயே தன்னை எவ்வளவு தூரம் காட்டிக்கொள்ள முடிகிறது என்பதைப் பார்க்கவே நான் வங்காளத்திற்கு வந்திருக்கிறேன். ஆனால், இந்தக் கடிதத்தில் அகிம்சையைப்பற்றி உங்களுக்குப் பேச நான் விரும்பவில்லை. என்றாலும், நீங்கள் செய்திருப்பதாகக் கூறப்படும் காரியம் வீரமான காரியமாக இருக்க முடியாது என்று உங்களுக்குச் சொல்லவே விரும்புகிறேன். சில நூறு பேரை ஆயிரக்கணக்கானவர்கள் கொல்லுவது வீரமே அல்ல. இது கோழைத்தனத்திலும் கேவலமானது; எந்தப் பகுதியின் தேசீயத்திற்கும் கௌரவமானதன்று. அடிக்கு எதிராக நீங்கள் அடி கொடுத்திருப்பீர்களாயின் உங்கள்மீது குற்றம் சொல்ல யாரும் துணிந்திருக்க மாட்டார்கள். உங்களைக் கேவலப்படுத்திக்கொண்டு இந்தியாவையும் கீழுக்கு இழுத்துவிடும் காரியத்தை நீங்கள் செய்திருக்கிறீர்கள்.

'உங்கள் ராணுவத்தைக் கொண்டு போய்விடுங்கள், நீங்களும் போய் இந்தியாவின் மற்ற காரியங்களைக் கவனியுங்கள்' என்று பண்டித ஜவாஹர்லால்ஜி, நிஷ்டார் சாகிப், டாக்டர் ராஜேந்திரப் பிரசாத் ஆகியோருக்கு நீங்கள் சொல்லவேண்டும். நீங்கள் செய்துவிட்ட மனிதத் தன்மையற்ற காரியங்களுக்காக நீங்கள் வருந்தி, உங்களுடைய சகோதர சகோதரிகளைப் போலவே முஸ்லிம்களும் உங்கள் பாதுகாப்பில் இருக்கிறார்கள் என்று அவர்களுக்கு உறுதியளித்தால் மாத்திரமே அவர்கள் அப்படிச் செய்ய முடியும்.

ஒவ்வொரு முஸ்லிம் அகதிக்கும் திரும்பவும் வீடுகளை நீங்கள் கட்டிக் கொடுத்து, அப்படிச் செய்ய உதவும்படி உங்கள் மந்திரிகளை நீங்கள் கேட்டுக்கொண்டு, அந்த அகதிகள் தங்கள் வீடுகளுக்குத் திரும்பி வரும் வரையில் நீங்கள் ஓய்ந்து இருக்கக் கூடாது. குறை கூறுவோர், உங்கள் மந்திரிகளைப்பற்றி என்னிடம் சொல்லுகிறார்கள் என்பதை நீங்கள் அறியமாட்டீர்கள்.

உங்களைச் சேர்ந்தவனாகவே நான் என்னைக் கருதிக்கொள்ளுகிறேன். உங்கள் அன்பே என்னுள் அந்த விசுவாசத்தைக் கொள்ள என்னைத் தூண்டியிருக்கிறது. பிகாரி ஹிந்துக்கள் என்ன செய்யவேண்டும் என்பதைக் குறித்து நீங்கள் அறிவதைவிட நான் நன்றாக அறிவேன் என்று நான் சொல்லிக் கொள்ளுவதால், ஏதாவது ஒரு வகைப் பிராயச்சித்தத்தை நான் மேற்கொண்டாலன்றி நான் அமைதியோடு இருக்க

முடியாது. நான் கல்கத்தாவுக்கு வந்ததுமே, முக்கியமாகத் தேக நிலையை முன்னிட்டு, கூடியவரை மிகக் குறைந்த அளவு ஆகாரத்துடனேயே இருந்து வருகிறேன். பிகார் அக்கிரமத்தைப்பற்றி நான் அறிந்த பிறகு அதற்குப் பிராயச்சித்தமாக அதே ஆகாரமே தொடர்ந்து இருந்து வருகிறது. தவறு செய்து வரும் பிகார் மக்கள் புதிய ஏட்டைத் திருப்பினால் அன்றி அந்தக் குறைந்த ஆகாரம் சாகும் வரையில் பட்டினி என்றாகிவிடும்.

என் செய்கை, தெய்விகக் கடமையாகச் செய்யப்படும் பிராயச்சித்தத்தைத் தவிர வேறு ஏதோ என்று பிகார் தவறாக எண்ணிக்கொள்ளும் என்ற பயம் எதுவுமில்லை.

உதவிக்கோ அல்லது அனுதாபம் காட்டுவதற்கோ நண்பர்கள் யாரும் என்னிடம் ஓடி வரவேண்டாம். என்னைப்போலவே வேறு யாரும் செய்ய முற்படுவது முற்றிலும் தவறானதோடு பொறுத்தமற்றதும் ஆகும். அனுதாப உண்ணாவிரதம், அரை உண்ணாவிரதம் என்பனவெல்லாம் வேண்டாதவை. அத்தகைய காரியங்கள் தீமையையே விளைவிக்கும். என்னுடைய தவம் செய்யக்கூடியதெல்லாம், என்னை அறிந்தவர்களின், என்னுடைய யோக்கியப் பொறுப்பை நம்புகிறவர்களின் மனச்சாட்சியைத் துரிதப்படுத்துவதே. எனக்காக யாரும் கவலைப்பட வேண்டாம். எல்லோரையும் போலவே கடவுள் பராமரிப்பில் நானும் இருக்கிறேன்.

சிறிது காலமே நிலைப்பதான இவ்வுடலின் மூலம் சேவையை அவன் விரும்பும்வரையில் எனக்கு எதுவும் நேர்ந்துவிடாது.

உங்கள் ஊழியன்,
மோ. க. காந்தி.

சோடேபூர், 6—11—1946

—'ஹரிஜன்' – 10—11—1946

## 10

# தருமத்திற்கு ஒரு சவால்

[அமெரிக்க அசோசியேடட் பிரஸ் என்ற செய்தி ஸ்தாபனத்தின் நிருபர் 6-11-1946-இல் காந்திஜியைக் கேட்ட கேள்விகளும் அதற்கு அவர் அளித்த பதில்களும் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.]

**கேள்வி - 1 :** *1942*-இல் ஏற்பட்ட அமைதியின்மை, இந்திய தேசீய ராணுவ இயக்கமும் அமைதியின்மையும், பிரிட்டிஷ் இந்தியக் கடற்படைக் கலகம், பம்பாய், கல்கத்தா கல

வரங்கள், காஷ்மீர் போன்ற இந்திய சமஸ்தானங்களின் இயக்கங்கள், தற்போது நடந்த வகுப்புக் கலவரங்கள் ஆகிய சமீபத்திய இந்திய சரித்திரத்தை முன்னிட்டு இந்திய வாழ்க்கையில் அகிம்சை இன்னும் வேரூன்ருததால் உங்களுடைய அகிம்சா தருமம் தோற்றுவிட்டது என்று சொல்லலாமா?

**பதில் :** இவ்விதம் பொதுப்படையாகப் பேசுவது ஆபத்தானது. நீங்கள் கூறுவதையெல்லாம் இம்சை என்றே நிச்சயமாகச் சொல்லலாம். ஆனல், அகிம்சா தருமம் அதனல் தோற்றுவிட்டதாகாது. சொல்லுவதானல், பொதுஜனத்தின் உள்ளத்தை மாற்றுவதற்கான உபாயத்தை நான் இன்னும் கண்டுபிடித்துவிடவில்லை என்று சொல்லலாம். ஆனல், இந்தியாவின் ஏழு லட்சம் கிராமங்களைச் சேர்ந்த கோடிக்கணக்கான மக்கள், நீங்கள் குறிப்பிடும் இம்சைகளில் ஈடுபடவில்லை என்றே கூறுவேன். இந்திய வாழ்க்கையில் அகிம்சை வேரூன்றி இருக்கிறதா என்ற கேள்விக்கு இப்பொழுது பதில் கூறுவதற்கு இயலாது; நான் இறந்த பிறகே இதற்கு விடை கிடைக்கும்.

**கேள்வி - 2 :** வீரருக்கான அகிம்சையை ஒருவர் அடைவதற்குத் தமது அன்ருட வாழ்க்கையில் அவர் என்ன செய்ய வேண்டும்? குறைந்தபட்ச வேலைத் திட்டம் என்ன?

**பதில் :** வீரருக்கான அகிம்சையை வளர்த்துக்கொள்ள விரும்பும் ஒருவர், குறைந்தபட்சம் செய்ய வேண்டியது, முதலில் தமது எண்ணத்திலிருந்து கோழைத்தனத்தைப் போக்கிவிட வேண்டும். அப்படிப் போக்கிவிட்டதை ஒட்டிச் சிறியதும் பெரியதுமான தம் ஒவ்வொரு நடவடிக்கையையும் ஒழுங்குபடுத்த வேண்டும். இவ்விதம் பின்பற்றி வருகிறவர், கோபம் அடையாமலேயே மேலிருப்பவருக்குத் தாழ்ந்து போய்விட மறுத்துவிட வேண்டும். என்ருலும், தாம் இருக்கும் பதவி எவ்வளவுதான் லாபம் தருவதாக இருந்தாலும் அதைத் தியாகம் செய்துவிடத் தயாராக இருக்க வேண்டும். தம்மை வேலைக்கு வைத்திருந்தவரிடம் அகிம்சைவாதிக்கு ஆத்திர உணர்ச்சி எதுவுமே இல்லை என்ருல், அவரிடம் வீரருக்கான அகிம்சை இருக்கிறது என்பதாகும். கூடப் பிரயாணம் செய்யும் ஒருவர், என் மகனை அடிப்பதாக மிரட்டுகிருர், அடிக்க முற்படுகிறவரிடம் நான் நியாயத்தை எடுத்துக் கூறும்போது அவர் என்மீதே பாய்கிருர் என்று வைத்துக்கொள்வோம்.

அப்பொழுது அவர் அடிப்பதைத் தயையோடும் கௌரவமாக வும், அவரிடம் உள்ளத்தில் எந்தவிதமான கெட்ட எண்ணமும் இல்லாமல், ஏற்றுக்கொள்ளுவேனுயின், வீரருக்கான அகிம்சையை நான் காட்டியவனுவேன். ஒவ்வொரு சமயமும் கோபத்தை அடக்கிக்கொள்ளுவதில் நான் வெற்றி பெற்ருல், அடிக்கு அடி கொடுக்க என்னுல் முடிந்தும் அடிக்காமல் இருந்தால், என்னை என்றும் கைவிட்டுவிடாத, மிகவும் பிடிவாதமான எதிராளியுங் கூட உணரும்படி தூண்டும், வீரருக்குரிய அகிம்சையை நான் விருத்தி செய்துகொள்ளுவேன்.

—'ஹரிஜன்' - 17--11--1946

# 11

# தருமத்தின் துணிகரச் செயல்

சென்ற புதன் கிழமையன்று காலையில் ஒரு முக்கியமான முடிவைக் காந்திஜி தம் கோஷ்டியினருக்கு அறிவித்தார். தம் கோஷ்டியினரில் பெண்கள் உட்பட ஒவ்வொருவரையும், பாதிக் கப்பட்டிருக்கும் ஒவ்வொரு கிராமத்திலும் தங்கச் செய்து, ஒவ் வொருவரும் அக்கிராமத்திலிருக்கும் ஹிந்துச் சிறுபான்மையினர் பத்திரமாகவும் ஆபத்தில்லாமலும் இருப்பதற்குத் தம்மைப் பணயம் ஆக்கிக்கொள்ள வேண்டும் என்று காந்திஜி முடிவு செய்துவிட்டார். அவசியமானுல் உயிரைக் கொடுத்தும் அக் கிராமத்திலிருக்கும் ஹிந்துக்களைப் பாதுகாப்பது என்று அவர் கள் பிரதிக்ஞை கொள்ள வேண்டும். தமது முடிவு தம் கோஷ்டியைச் சேர்ந்த யாரையும் கட்டுப்படுத்தாது என்ருர். போய்விட விரும்புகிறவர்கள் தாராளமாகப் போய், தமது ஆக்க வேலைத் திட்டத்தில் வேறு எதையாவது மேற்கொண்டு வேலை செய்து வரலாம் என்ருர். "முஸ்லிம்களின் மீதோ அல்லது இஸ்லாத்தினிடமோ உள்ளத்தில் கெட்ட எண்ணம் இருப்ப வர்கள் அல்லது நடந்துவிட்டவைகளைக் குறித்துத் தங்களுக்கு ஏற்பட்ட வெறுப்பை அடக்க முடியாதவர்கள் போய்விட வேண்டும். இந்தத் திட்டத்தின்கீழ் அவர்கள் வேலை செய் தால் அவர்கள் என் மீது தவருன கருத்து ஏற்படும்படியே செய்வார்கள்" என்ருர் காந்திஜி. "என்னைப் பொறுத்த வரை யில், என் முடிவு தீர்மானமானது; என்றும் மாற்ற முடியாதது. நான் விவாதத்திற்கே இடம் வைக்கவில்லை" என்ருர் அவர். மேலும் அவர், "ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒற்றுமையாகவும் சமாதானத்தோடும் வாழ்வதற்குத் தெரிந்துகொள்ளும் வரை யில் கிழக்கு வங்காளத்திலேயே நான் ஆழ்ந்துவிடப் போகிறேன்.

என்னுடைய தோழர்கள் எனக்குச் செய்யக்கூடிய சேவையும் இனி எனக்குக் கிடையாது. ஆங்காங்கு எனக்குக் கிடைக்கும் உதவியே எனக்குப் போதும்'' என்றார்.

அன்று மாலை தமது கருத்தைக் குழாத்தினரிடம் மேற்கொண்டும் விளக்கினர். அதன்மீது நடந்த விவாதத்தில் ஸ்ரீ டக்கர் பாபா, ஸ்ரீமதி ஸுசேதா கிருபளானி ஆகியோரும் கலந்துகொண்டனர். காந்திஜி கூறியதாவது: ''இக்காரியத்தை நான் மேற்கொள்ளாது போனால் என்னுடைய அகிம்சை பூர்த்தியானதாகாது. ஒன்று, அகிம்சையாவது பிரபஞ்ச தருமமாக இருக்கவேண்டும்; அல்லது அவ்வாறு இராமல் இருக்கவேண்டும். பதஞ்சலியின் அகிம்சா சூத்திரத்தில், 'அகிம்சா பிரதிஷ்டாயாம் ஸந்நிதெள வைரத்யாக:' என்று இருப்பது தவறு என்றும், 'அதில் மாறுதல் செய்ய வேண்டும்' என்றும், 'அகிம்சா பரமோதர்ம:' என்பது 'ஹிம்சா பரமோ தர்ம:' என்று இருக்க வேண்டும்; அதாவது, 'உயர்ந்த தருமம் இம்சையே' என்றும் கூறினர் காலஞ்சென்ற ஒரு நண்பர். நெருக்கடியான கட்டத்தில் அகிம்சையில் நான் நம்பிக்கையை இழந்துவிட்டால், அந்த நண்பருக்குத் தவறாகப் பட்ட அந்தத் திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்ள வேண்டியதே.

''அநேகமாக வங்காளி ஆண்களை விட வங்காளிப் பெண்களைப்பற்றி நான் அதிகமாக அறிவேன். இன்று அவர்கள் தாம் நசுக்கப்பட்டவர்கள், திக்கற்றவர்கள் என்று நினைக்கின்றனர். நானும் என்னுடைய தோழர்களும் செய்யும் தியாகமாவது, மானத்தோடு உயிர் துறக்கும் கலையை அவர்களுக்குப் போதிக்கும். கொடுமைப்படுத்துவோரின் கண்களைத் திறந்து அவர்களுடைய உள்ளங்களை உருகும்படியும் அது செய்யும். என் கண்கள் மூடியவுடனே அவர்கள் கண்கள் திறந்துவிடும் என்று நான் சொல்லவில்லை. ஆனால், அதுவே முடிவான பலனாக இருக்கும் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை. அகிம்சை மறைந்தால் ஹிந்து தருமமும் மறைந்துவிடும்.''

''இதிலுள்ளது ராஜீயப் பிரச்னையே அன்றி மதப் பிரச்னையன்று. இது காங்கிரஸுக்கு எதிரான இயக்கமேயன்றி ஹிந்துக்களுக்கு எதிரானதன்று'' என்று குழாத்தைச் சேர்ந்த ஒருவர் கூறினர்.

''முற்றிலும் ஹிந்துக்களையே கொண்ட ஸ்தாபனம் காங்கிரஸ் என்று அவர்கள் நினைக்கிறார்கள் என்பதை நீங்கள் காணவில்லையா? மத சம்பந்தமானது, ராஜீய சம்பந்தமானது,

மற்றவை என இப்படித் தனித்தனியான சட்டம் அடித்த பிரிவு என்னிடம் எதுவுமில்லை என்பதை நான் மறந்துவிடவில்லை. சொற்கள் என்னும் காட்டில் நாம் வழி தவறிவிடவேண்டாம். இச் சிக்கலைப் பலாத்காரத்திஞல் சமாளிப்பதா, அகிம்சையிஞல் சமாளிப்பதா என்பதே பிரச்னை. வேறுவிதமாகச் சொன்ஞல், என் முறைக்கு இன்று ஏதாவது செய்யும் ஆற்றல் உண்டா?'' என்ருர் காந்திஜி.

''உங்கள் ரத்தத்திற்காக வெறிபிடித்துத் திரிகிறவர்களிடம் நீங்கள் நியாயத்தைக் கூறி எப்படித் திருத்த முடியும்? சில தினங்களுக்கு முன்புதான் நம் ஊழியர்களில் ஒருவர் கொலையுண்டார்'' என்ருர் மற்ருெருவர்.

இதற்குக் காந்திஜி, ''அதை நான் அறிவேன். அந்தச் சீற்றத்தைத் தணிப்பதே நம் வேலை'' என்ருர்.

இப்பொழுதுள்ள நிலைமையில் கிராமத்திற்குத் திரும்பி வருவதில் ஆபத்து அதிகமாக இருக்கும்போது வெளியேறி விட்டவர்களைத் தங்கள் கிராமங்களுக்குத் திரும்பும்படி அழைப்பது சரியா என்று மற்ருெருவர் கேட்டார். இதற்குக் காந்திஜி கூறியதாவது: ''ஒரு கிராமத்தின் முஸ்லிம்கள் எல்லோரும் சேர்ந்து, அவர்களுக்கு ஆபத்து நேரிடாது என்று உத்தரவாதம் அளித்தால், இதற்கு ஆதாரமாக ஒரு நல்ல ஹிந்துவும் ஒரு நல்ல முஸ்லிமும் கிராமத்தில் அவர்களுடன் வசித்து - அவசியமாஞல் தங்கள் உயிரைக் கொடுத்தும் - அவர்களைப் பாதுகாப்பார்களாயின், வெளியேறிவிட்டவர்களைத் தங்களுடைய கிராமங்களுக்குத் திரும்பிவிடுமாறு அழைப்பதில் எந்தவிதக் கெடுதலும் இல்லை. அந்த அளவு உத்தரவாதம் இருக்குமாஞல், அகதிகள் தங்களுடைய கிராமங்களுக்குத் திரும்பி, என்ன ஆபத்து இருந்தாலும் அதற்கும் உடன்பட வேண்டியதே. இந்த முறையில் வசிப்பதற்கு வேண்டிய தீரம் அவர்களுக்கு இல்லையென்ருல், ஹிந்து தருமத்தின் விதி, அது கிழக்கு வங்காளத்திலிருந்தே மறைந்துவிட வேண்டியதுதான். கிழக்கு வங்காளத்தின் பிரச்னை வங்காளத்தைப்பற்றியது மாத்திரம் அன்று; இந்தியாவுக்கான போராட்டம் அது; இன்று கிழக்கு வங்காளத்தில் அது முடிவு செய்யப்பட்டு வருகிறது. ஹிந்து மதம் வெறுக்கத் தக்கது, ஆகையால், ஹிந்துக்களைப் பலவந்தமாக இஸ்லாமுக்கு மதம் மாற்றுவதே பெருமை என்று இன்று முஸ்லிம்களுக்குச் சிலர் போதித்து வருகின்றனர். பலவந்தமாக மதம் மாற்றப்பட்டவர்களின் சந்ததியையாவது இது இஸ்லாமுக்கு மிச்சமாக்கும். பதிலுக்குப்



கடைசி உண்ணாவிரதத்தின்போது காந்திமகான் (புது டில்லி 18, ஜனவரி, 1948)



டில்லி பிர்லா மாளிகையில் பிரார்த்தனைக் கூட்டத்திற்குச் செல்லும் வழியில் மகாத்மா (ஜனவரி 1948)

பதில் செய்வதுதான் இன்றைய தருமம் என்ருகிவிட்டால், இதில் ஹிந்துக்கள் வெற்றி பெறுவதற்கு, முஸ்லிம்கள் செய்து வருவதாகக் கூறப்படும் கேவலமான காரியங்களில் அவர்களை விட ஹிந்துக்கள் மிஞ்சிவிட வேண்டும். ஹிட்லரின் ஆயுதங்களைக்கொண்டே ஹிட்லருடன் போராட முற்பட்ட ஐக்கிய நாட்டினர், ஹிட்லரையே மிஞ்சிவிடுவதில் முடிந்திருக்கிறது.''

"துன்பம் இழைப்போர் இன்னும் இக்கிராமங்களில் இருந்துகொண்டு வரும்போது மக்களுக்கு நாம் நம்பிக்கை ஊட்டுவது எப்படி?'' என்று கடைசியாக ஒருவர் கேட்டார்.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: "இதனுலேயே கிராமங்களுக்குத் திரும்பி வந்துவிடுகிறவர்களின் பாதுகாப்புக்கு உத்தரவாதமாக ஒரு நல்ல முஸ்லிமும் ஒரு நல்ல ஹிந்துவும் இருக்க வேண்டும் என்று நான் வற்புறுத்துகிறேன். அந்த நல்ல முஸ்லிமை, வங்காள சர்க்காரை அமைத்துக்கொண்டிருக்கும் முஸ்லிம் லீக் தர வேண்டும்.''

தத்தபாராவிலிருந்து ஒரு நண்பருக்குக் காந்திஜி எழுதிய கடிதத்தில் வருமாறு கூறினர்: "நான் இங்கு ஈடுபட்டிருக்கும் வேலையே எனது கடைசிச் செயலாகலாம். உயிரோடும், துன்புருமலும் நான் திரும்பினல் அது எனக்கு மறு பிறப்பே போன்றது. என்னுடைய அகிம்சை, இதற்கு முன்பு என்றுமே நடந்தறியாத வகையில், இங்கு முழுக்க முழுக்கச் சோதிக்கப்பட்டு வருகிறது.''

காஜிர்கில், 16—11—1946 —'ஹரிஜன்' - 24—11—1946

# 12

# 'செயல்புரி, இன்றேல் செத்தொழி' என்ற தூது

சத்தியாக்கிரகத்தின் பாட்டையில் சற்று நிற்பதற்கோ, ஓய்வு பெறுவதற்கோ இடம் கிடையாது; மேலும் மேலும் போய்க்கொண்டிருக்க வேண்டியதே. இன்றேல் பின்னடைய வேண்டியதுதான். 'தருமத்தின் துணிகரச் செயல்' என்ற காந்திஜியின் முடிவு தத்தபாராவில் செய்யப்பட்டது. காஜிர்கில்லுக்குப் போய்ச் சேர்ந்ததும் இன்னும் ஒரு படி மேலே போய்விட்டார். வங்காள மந்திரி சபையினுல் அங்கீகரிக்கப்படும் ஒரு நல்ல முஸ்லிம், தம் குடும்பத்தினரில் ஒருவராகத் தம்மை

ஏற்றுக்கொள்ளத் தயாராயிருந்தால், ஒரு முஸ்லிம் குடும்பத்துடனேயே காந்திஜி வசிக்க வேண்டும் என்பது அது. 16-ஆந் தேதி காந்திஜியை வந்து பார்த்த ஸிவில் சப்ளை மந்திரி கப்ரான் சாகேபிடம் இதைப்பற்றி விவாதித்து, யாருக்காவது தம்மைச் சிபாரிசு செய்ய முடியுமா என்று கேட்டார். தம் சகாக்களிடமிருந்து முற்றிலும் விலகி, அவரைக் கவனித்துக் கொள்ளுவது எப்படி என்பதையே அறியாதவர்களுடன் வசிக்கக் காந்திஜி முற்பட்டதைக் கண்டு அவர் திகைத்துப் போய்விட்டார். "என்னை நானே கவனித்துக்கொள்ளுகிறேன். யாருடைய சேவையும் எனக்குத் தேவையில்லை" என்றார் காந்திஜி. "அப்படியானால் எந்த முஸ்லிம் குடும்பமும் உங்களை வைத்துக்கொள்ளத் தயாராக இருக்காது என்று நான் சொல்ல வேண்டியிருக்கும் என அஞ்சுகிறேன்" என்று கப்ரான் சாகேப் சிரித்துக்கொண்டே கூறினார். அவ்வளவு எளிதில் விட்டுவிடுகிறவரல்ல காந்திஜி. மாலைப் பிரார்த்தனைக்குப் பிறகு பேசியபோது இதைப்பற்றி விவரித்துச் சொன்னார். அவர் கூறியதாவது: "நான் நோவாகாலியில் முஸ்லிம்களுக்கிடையே இருக்கிறேன். ஹிந்து நண்பர்களுடன் வசிப்பது என்பது எனக்குப் பிடிக்கவில்லை. லீகைச் சேர்ந்த முஸ்லிமுடன் வசிக்க முடியுமா என்பதைப் பார்க்க விரும்புகிறேன். எனது தேவை மிகச் சொற்பம். எனக்கு வேண்டியதெல்லாம் சுத்தம், சுத்தமான நீர், ஆட்சேபமில்லாத உணவு, என் வழியில் ஆண்டவனைப் பிரார்த்திப்பதற்குச் சுதந்திரம் ஆகியவையே. இதில் என் எண்ணம் ஒன்று. ஒரு முஸ்லிம் லீக் நண்பருடன் நான் வசிப்பதை ஹிந்துக்கள் பார்த்ததும் அவர்களுக்குத் திரும்பவும் நம்பிக்கை ஏற்பட்டுத் தாராளமாகத் தங்களுடைய வீடு வாசல்களுக்குத் திரும்பக்கூடும். என்னைக் கிட்டத்திலிருந்து பார்த்து, நான் நண்பனா, விரோதியா என்பதைத் தெரிந்து கொள்ளுவதற்கும் முஸ்லிம் நண்பர்களுக்கு வாய்ப்பு ஏற்படும்."

ஆனால், தம்மை ஏற்றுக்கொள்ளுவதற்கு ஒரு முஸ்லிம் குடும்பம் தயாராக முன் வரும் வரையில் தமது புதிய 'தருமத்தின் துணிகரச் செயலை' ஒத்தி வைக்கக் காந்திஜி விரும்பவில்லை. ஒரு நாள் காந்திஜி வருமாறு கூறினார்: "ஆகாகான் அரண்மனையில் நான் சிறை வைக்கப்பட்டிருந்தபோது, அகிம்சையை முக்கிய அம்சமாகக் கொண்டது இந்தியா என்பதைக் குறித்து ஒரு விளக்கவுரை எழுதுவது என்று ஒரு சமயம் ஆரம்பித்தேன். எழுதிக்கொண்டு போகும்போது மேற்

கொண்டு செய்ய என்னால் ஆகவில்லை. நிறுத்திவிட வேண்டியதாயிற்று. ஹிந்து தருமத்தில் இரு அம்சங்கள் இருக்கின்றன. தீண்டாமை, கற்கள் முதலியவைகளை வணங்கும் மூடநம்பிக்கை, மிருக பலி ஆகியவைகளோடு கூடிய சரித்திர பூர்வமான ஹிந்து தருமம் ஒரு பக்கத்தில் இருக்கிறது. மற்றொரு பக்கத்திலோ, அகிம்சையின் சாரமான கீதை, உபநிஷதங்கள், பதஞ்சலியின் யோக சூத்திரம், எல்லாப் படைப்பும் ஒன்றே என்பது, உள்ளத்திலே திகழ்வதும் உருவில்லாததும் அழிவற்றதுமான கடவுளின் பரிசுத்தமான வழிபாடு ஆகியவைகளைக் கொண்ட ஹிந்து தருமம் இருக்கிறது. என் வரைக்கும் ஹிந்து தருமத்தின் பெருமை அகிம்சையில்தான். ஆனால் அது சந்நியாசிக்கு மாத்திரமே ஏற்றது என்று நம் மக்கள் சொல்லிவிடுகின்றனர். அக் கருத்தை நான் ஏற்றுக்கொள்ள முடியாது. வாழ்வின் மார்க்கமே அதுதான்; அதை உலகிற்கு இந்தியா காட்ட வேண்டும் என்று கருதுகிறேன். நான் நிற்கும் நிலை என்ன? என் வரைக்கும் இந்த அகிம்சையை நான் பிரதிபலிக்கிறேனா? பிரதிபலிக்கிறேன் என்றால், சூழ்நிலையை விஷமாக்கும் சூது, துவேஷம் ஆகியவை நீங்கவேண்டும். இதுவரையில் நான் எந்தச் சகாக்களின் உதவியை எதிர்பார்த்திருந்தேனோ அந்தச் சகாக்களிடமிருந்து விலகி, ஏகாந்தமாகப் போய்விடுவதனாலும், என் காலிலேயே நான் நிற்பதனாலுமே என்னை நான் அறிவதோடு கடவுளிடம் எனக்கு இருக்கும் நம்பிக்கையையும் சோதிக்க முடியும்.''

சேவாகிராம ஆசிரமத்தினருக்கு வருமாறு எழுதினார்:

''ஆசிரமத்திற்குச் சீக்கிரத்தில் திரும்புவேனா, திரும்பாமலேயே இருப்பேனா என்பதுபற்றிய நம்பிக்கையையெல்லாம் நீங்கள் விட்டுவிட வேண்டியதே என்று அஞ்சுகிறேன். என் சகாக்களின் நிலைமையும் அதுதான். பகீரதப் பிரயத்தனமாக நாங்கள் செய்ய வேண்டிய காரியங்கள் இருக்கின்றன; நான் சோதிக்கப்படுகிறேன். என் கருத்துப்படியான சத்தியாக்கிரகம் பலவீனர்களின் ஆயுதமா அல்லது உண்மையிலேயே பலமுள்ளவர்களின் ஆயுதமா? ஒன்று, பிந்தியதை நான் அடைந்தாக வேண்டும் அல்லது அதை அடைவதற்காகச் செய்யும் முயற்சியில் என் உயிரையாவது விட வேண்டும். நான் தேடுவதும் அதுவே. அதைத் தேடியே அழிவுற்ற இக்கிராமத்தில் ஆழ்ந்துவிட்டேன். இறைவன் எண்ணப்படி எல்லாம் நடக்கும்.''

தமது சுருக்கெழுத்து எழுதுபவரும் டைப் அடிப்பவரு மான பரசுராம், தம் வங்காளி மொழிபெயர்ப்பாளரான பேராசிரியர் நிர்மல குமார போஸ் ஆகிய இருவர் மாத்திரமே உடன்வர, கொலம்பஸ் மாதிரி திசை விளங்காத இருளை முன்னோக்கிச் செல்லவேண்டிக் காந்திஜி காஜிர்கில்லில் இருந்த தமது முகாமை 20-ஆம் தேதி கலைத்து விட்டார். புறப்படுமுன் சிறு கோஷ்டி சூழ இருக்கச் சிறிது நேரம் பிரார்த்தனை நடந்தது. அவருக்குப் பிரியமான 'வைஷ்ணவ ஜனதோ தேனே கஹியே' என்ற கீதத்தைப் பாடினர். அவரைச் சுமந்து சென்ற சிறு படகு பாலத்தைக் கடந்து ஸ்ரீராம்பூர்த் திசையே மறைந்துவிட்டபோது பலருக்குத் துக்கத்தினால் நெஞ்சு தழு தழுத்தது; கண்களில் நீர் திரையிட்டது.

காந்திஜி புறப்பட்ட பிறகு அவருடைய கோஷ்டியினர் ஒவ்வொருவராகக் குறிப்பிட்ட இடங்களுக்குப் பிரிந்து போயினர்.

காஜிர்கில், 24—11—1946 —'ஹரிஜன்' - 8—12—1946

## 13

# பத்திரிகைகளுக்கு அறிக்கை

[ஸ்ரீராம்பூருக்குப் புறப்படுவதற்கு முன்னால் காந்திஜி, பத்திரிகைகளுக்குக் கீழ்க்கண்ட அறிக்கையை வெளியிட்டார்.]

மிகைப்படுத்தப்படுவதற்கும் பொய்மைக்கும் மத்தியில் நான் இருப்பதாகக் காண்கிறேன். உண்மையைக் கண்டு பிடிக்க என்னால் ஆகவில்லை. பரஸ்பர அவநம்பிக்கை மோசமான வகையில் இருந்து வருகிறது. மிகப் பழைய நண்பர்களெல்லாம் போய்விட்டார்கள். நான் எவற்றை நம்பி ஆணை வைக்கிறேனோ, நான் அறிந்த வரையில் இந்த அறுபது ஆண்டுகளாக எனக்கு உறுதியைத் தந்து வந்திருக்கும் அந்த அகிம்சையும் சத்தியமும், நான் அவற்றிற்குரியதைக் கூறும் பெருமைகளைக் காட்டத் தவறுவனவாகத் தோன்றுகின்றன.

அவைகளைச் சோதிப்பதற்கு அதிகமாக என்னையே சோதித்துக்கொள்ளுவதற்கு ஸ்ரீராம்பூர் என்று சொல்லப்படும் கிராமத்திற்குப் போகிறேன். என்னுடன் இத்தனை ஆண்டுகளாக உடனிருந்து நான் எளிய வாழ்வை நடத்த உதவியாக இருந்தவர்களைத் துண்டித்துக்கொண்டு நான் போகிறேன். என் வங்காளி போதகராகவும் மொழிபெயர்ப்பாளராகவும் பேராசிரியர் நிர்மல குமார் போஸையும், என்னிடம் அதிகப் பற்றுள்ள

தன்னலமற்ற, மௌனம் நிரம்பிய சுருக்கெழுத்து வல்லவரும் டைப் அடிப்பவருமான ஸ்ரீ பரசுராமையும் உடன் அழைத்துச் செல்லுகிறேன்.

நான் அழைத்து வந்த மற்ற ஊழியர்கள், நோவாகாலியின் மற்றக் கிராமங்களுக்குப் பிரிந்து போய், முடிந்தால் இரு சமூகங்களுக்குமிடையே சமாதான வேலை செய்து வருவார்கள். சிறு அபாவைத் (அபா காந்தி) தவிர அவர்களெல்லோரும் துரதிருஷ்டவசமாக வங்காளிகள் அல்லாதவர்கள். எனக்குப் பேராசிரியர் என். கே. போஸ் இருப்பதைப் போன்று அவர்கள் ஒவ்வொருவருக்கும் வங்காளி போதிப்பவராகவும் மொழிபெயர்ப்பாளராகவும் ஒரு வங்காளி உடன் செல்லுவார்.

விநியோக வேலையையும், தேர்ந்தெடுக்கும் வேலையையும் காதிப் பிரதிஷ்டானைச் சேர்ந்த ஸ்ரீ சதீஷ் சந்திர தாஸ்குப்தா கவனிப்பார். உள்ளூர் முஸ்லிம் லீக் குடும்பத்தினருடன் வாழ வேண்டும் என்பதே என் லட்சியம். ஆனால், அந்த நன்னாளுக்காகக் காத்திருந்து சும்மா இருக்கக்கூடாது என்று காண்கிறேன். இதற்கு மத்தியில் முஸ்லிம்களுடன் அவர்கள் கிராமத்திலேயே என்னால் முடிந்த அளவு தொடர்பு கொள்ளவேண்டும். பாதிக்கப்பட்டிருக்கும் ஒவ்வொரு கிராமத்திற்கும் யோக்கியமான வீரமுள்ள ஒரு ஹிந்து உடன் செல்லுவதற்கும், அதே போன்று யோக்கியமான வீரமுள்ள முஸ்லிமை அனுப்புவதற்கும் வழி செய்ய வேண்டும் என்பதே லீக் மந்திரிகளுக்கு என்னுடைய யோசனை. அவசியமாயின், அவர்கள் தங்கள் உயிரைக் கொடுத்தேனும் கிராமங்களுக்குத் திரும்பி வரும் ஹிந்து அகதிகளுக்கு ஆபத்து ஏற்படாமலிருக்க உத்தரவாதம் அளிக்க வேண்டும். இப்படி ஏதாவது செய்யாமல் அவர்கள் கிராமங்களுக்குத் திரும்பிவிடும்படி செய்வது சிரமம் என்பதை ஒப்புக்கொள்ள வருந்துகிறேன்.

கிராமங்களில் சிறுபான்மைச் சமூகத்தினருக்கு வாழ்க்கை பத்திரமானதாகவும் அமைதியானதாகவும் இல்லை என்று எனக்குக் கிடைத்திருக்கும் எல்லாத் தகவல்களிலிருந்தும் தெரிகிறது. ஆகையால், தங்களுடைய வீடு வாசல்கள், நில புலம், பயிர்கள், சுற்றம் ஆகியவைகளையெல்லாம் விட்டுவிட்டு, போதிய உணவின்றி வாழ்வதே மேல் என்று அவர்கள் கருதுகிறார்கள்.

இங்கு வந்து சமாதான வேலையில் ஈடுபடுவதற்குத் தங்களை அனுமதிக்குமாறு வங்காளத்திற்கு வெளியிலிருந்து பல நண்பர்கள் எனக்கு எழுதியிருக்கிறார்கள். ஆனால், வர வேண்

டாம் என்று அவர்களைக் கண்டிப்பாகக் கேட்டுக்கொண்டிருக் கிறேன். ஊடுருவ முடியாதிருக்கும் இந்த இருளில் சிறிது வெளிச்சத்தை நான் காணும்போது அவர்கள் வர அனுமதிக்க நான் ஆசைப்படுவேன்.

இதற்கு மத்தியில் கடிதப் போக்குவரத்துப் போன்ற மற்ற வேலைகளையெல்லாம் – 'ஹரிஜனை'யும் அதனுடன் தொடர்புள்ள வாரப்பத்திரிகைகளையும் நடத்தும் கஷ்டமான வேலையுள்பட எல்லாவற்றையுமே – நிறுத்திவைக்க நானும் பியாரிலாலும் முடிவு செய்திருக்கிறோம். சேர்ந்தும் தனியாகவும் அப்பத்திரிகைகளை நடத்தி வருமாறு ஸ்ரீ கிஷோரிலால், ஸ்ரீ காகா சாகேப், ஸ்ரீ விநோபா, ஸ்ரீ நரஹரி பரீக் ஆகியவர்களைக் கேட்டுக்கொண் டிருக்கிறேன். பியாரிலாலும் நானும், எங்களுக்குள்ள வேலை அனுமதிப்பதாயின், ஆங்காங்கே கிராமங்களிலிருந்து எப்பொழுதாவது எழுதி வருவோம். கடிதப் போக்குவரத்துக்கள் சேவா கிராமத்திலிருந்து கவனிக்கப்படும்.

இவ்விதம் நிறுத்திவைத்திருப்பது எவ்வளவு காலத்திற்கு நீடிக்கும் என்பதை என்னால் கூற முடியாது. இது மாத்திரம் கூறுவேன் : இரு சமூகங்களுக்கும் பரஸ்பர நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது, கிராமங்களில் அவ்விருவரும் ஒழுங்கான வாழ்க்கையைத் தொடங்கிவிட்டார்கள் என்பதில் எனக்குத் திருப்தி ஏற்பட்டாலன்றிக் கிழக்கு வங்காளத்திலிருந்து புறப்படும் உத்தேசம் எனக்கு இல்லை. இது இல்லையானால், பாகிஸ்தானும் நிலைக்காது; ஹிந்துஸ்தானும் நிலைக்காது. பரஸ்பரம் சச்சரவினால் பிளவுண்டு காட்டுமிராண்டித்தனத்தில் மூழ்கிவிடும் இந்தியாவுக்கு அடிமைத்தனமே காத்திருக்கிறது.

மிகக் குறைவானதாக இருக்கும் என் உணவைக் குறித்து யாரும் கவலைப்பட வேண்டியதில்லை. டாக்டர் ராஜேந்திர பிரசாதிடமிருந்து வருமாறு தந்தி வந்தது :

"கடிதம் கிடைத்தது. இங்கு அமைதி இருந்து வருகிறது எனத் தந்தி கொடுத்திருக்கிறேன். இப்போதைக்கு ஒரு வாரமாக எந்தவிதச் சம்பவமும் இல்லை. நிலைமை திருப்தியாக இருக்கிறது. நீங்கள் எப்பொழுதும் போலச் சாப்பிட்டு வர வேண்டுமென ஆவலுடன் விரும்புகிறேன். நான் 19–ஆம் தேதி டில்லிக்குப் போகிறேன்."

இத்தந்தி கிடைத்ததும் நேற்று முதல் ஆட்டுப்பால் சாப்பிடத் தொடங்கிவிட்டேன். உடல் அனுமதித்ததும் வழக்கம் போல் சாப்பிட்டு வருவது என்று இருக்கிறேன். எதிர்காலம் கடவுள் கையில்தான் இருக்கிறது.

காஜிர்கில், 20—11—1946

—'ஹரிஜன்' – 1—12—1946

# 14

# முதல் பாடம்

நவம்பர் 7-ஆம் தேதி காலை, 'கிவி' என்ற கப்பலின் சாப்பாட்டு அறையில், பாபு, காலஞ் சென்ற ஹரிதயாள நாகின் குமாரரும், கஷ்ட நிவாரண ஸ்தாபனங்கள் பலவற்றின் பிரதிநிதிகளுமாக 20 அல்லது 25 ஊழியர்களும் காந்திஜியைச் சந்தித்தபோது சாந்த்பூரில் அவர் முதல் பாடத்தைக் கூறினர். காந்திஜி கூறியதாவது: " தனிப்பட்ட ஒருவரைப் பலவந்தமாக மதம் மாற்றுவது அல்லது ஒரு பெண்ணை அபகரித்துக்கொண்டு போய்க் கற்பழித்து விடுவது என்பதே என்னால் சகிக்க வொண்ணாதது. இத்தகைய அவமானங்களுக்கு நாம் உட்பட்டுச் சகித்து வருகிறோம் என்று நாம் உணரும் வரையில் இந்த அவமானங்களுக்கு உட்படுத்தப்பட்டே வருவோம். போலீஸ் அல்லது ராணுவப் பாதுகாப்பு இல்லாமல் நம்மால் முடியாது என்று நாம் சொன்னால், உண்மையில் போர் ஆரம்பமாகும் முன்பே நாம் தோல்வியை ஒப்புக்கொண்டு விடுகிறோம். கோழைகளாக இருக்கும் மக்களை உலகத்தில் எந்தப் போலீஸும் ராணுவமும் பாதுகாத்துவிட முடியாது. ஆயிரக்கணக்கானவர்கள் சில பேரை அக்கிரமம் செய்து பயமுறுத்தி வருகிறார்கள். ஆகவே, இந்தச் சில பேர் என்ன செய்ய முடியும் என்று இன்று நீங்கள் கூறுகிறீர்கள். மக்கள், எல்லோருமே தாம் உதவியற்றிருப்பதாக உணர்வதாயின், ஒரு சிலர் மாத்திரமே போதும், அவர்களைத் துன்புறுத்தித் திகிலடையச் செய்வதற்கு. உங்களுக்குள் இருக்கும் தொல்லையெல்லாம், நீங்கள் கதியற்றிருப்பதாக உங்களைப்பற்றிக் கொண்டுவிட்ட உணர்ச்சியும், பிறர் உதவியை நம்பியிருக்கும் பழக்கமுமேயன்றி எண்ணிக்கையில் நீங்கள் குறைவாக இருக்கிறீர்கள் என்பதல்ல. இதற்குப் பரிகாரம் உங்களிடமே இருக்கிறது. எல்லோருமே கிழக்கு வங்காளத்திலிருந்து வெளியேறிவிடுவது என்ற உங்கள் கருத்தை நான் எதிர்ப்பதற்கும் அதுதான் காரணம். வீரியமின்மைக்கோ, உதவியின்மைக்கோ இது பரிகாரம் ஆகாது."

"அத்தகைய யோசனையைக் கிழக்கு வங்காளம் எதிர்க்கிறது" என்று அவர்கள் பதில் சொன்னார்கள். காந்திஜி மேலும் கூறியதாவது:

"அவர்கள் வெளியேறக் கூடாது. உடல் வலிவோடு கூடிய 20,000 பேர் வீரர்களாக அகிம்சையோடு உயிர்விடத் தயாராக இருப்பது இன்று விசித்திரக் கதைபோலத் தோன்றும். ஆனால், பகிரங்கமான போராட்டத்தில் மக்களில் உடல் வலிவோடு கூடிய 20,000 பேர் சிறந்த சிப்பாய்களாகக் கடைசி மனிதன் வரையில் இறந்தால், அது அப்படிப்பட்ட கதையாக இராது. தெர்மாபைலேயைக் காத்துச் சாகாப் புகழ் எய்திய ஐந்நூறு லியோனிதாஸ்களைப் போல அவர்கள் சரித்திரத்தில் புகழ் பெறுவார்கள்" என்றதும் தெர்மாபைலேயில் மாண்ட வீரர்களின் கல்லறைகளில் பொறிக்கப்பட்டுள்ள வரிகளைக் குறிப்பிட்டார் :

'நீர் யாரோ அறியோம்!
எங்கள் அன்னை ஸ்பார்ட்டாவிடம்
இச்செய்தியைக் கூறுவீர் :
அவள் ஆணையை ஏற்று
வெவ்வினை முடித்து நாங்கள்
மண்மிசை மடிந்து கிடப்பதை.'

"அந்த ஒரு நிலைமையில் மாத்திரமே நீங்கள் கிழக்கு வங்காளத்தில் வாழ முடியும் என்று கூரைமீது ஏறியும் கூறுவேன். முஸ்லிம்களுக்குப் பதிலாக ஹிந்து அதிகாரிகளும், ஹிந்து போலீஸும், ஹிந்து ராணுவமும் வேண்டும் என்று நீங்கள் கேட்டிருக்கிறீர்கள். இது தவறான கூக்குரல். ஹிந்து போலீஸ், ஹிந்து அதிகாரிகள், ராணுவத்தார் இதற்கு முன்னால் இக்காரியங்களையெல்லாம் - கொள்ளை, தீயிடல், பெண்களை அபகரித்துச் செல்லுவது, கற்பழிப்பது ஆகியவைகளை-முன்பு செய்திருக்கிறார்கள் என்பதை நீங்கள் மறந்துவிடுகிறீர்கள். சிற்றரசர்களைக் கொண்ட கத்தியவாரைச் சேர்ந்தவன் நான். மனித சுபாவம் எவ்வளவு கேவலமான நிலைக்குத் தாழ்ந்துவிடக்கூடும் என்பதைக் குறித்து நான் விவரிப்பதற்கில்லை. சிறு சமஸ்தானங்கள் சிலவற்றில் எந்தப் பெண்ணின் கற்பும் தப்ப முடியாது. இதுபோன்ற சமஸ்தானாதிபதி காலியல்ல; முறையாகப் பட்டத்திற்கு வந்தவனே."

"இவை தனிப்பட்டவரின் ஒழுங்கீனத்தைப்பற்றியவை. இங்கோ இது மக்கள் அளவில் பரவி இருக்கிறது" என்றார் ஒருவர். இதற்குக் காந்திஜி, "ஆனால், தனிப்பட்டவரெனக் கூறப்படுபவர் தனியாகச் செய்யவில்லை. அவருடைய சிறு சமஸ்தானத்துச் சிப்பந்திகள் பின்னின்று ஆதரவு தருகின்றனர்" என்றார்.

"அவரை ஒத்தவர்களாலாவது அவர் கண்டிக்கப்படுகிருர். ஆனல், இங்கு அத்தகைய செய்கைகள் முஸ்லிம்களினல் கண்டிக்கப்படவில்லை" என்ருர் ஒருவர்.

**காந்திஜி:** இச்செய்கைகளை ஷஹீத் சுகரவர்த்தி முதல் எல்லோரும் கண்டிக்கிருர்கள் என்பதைத் தவிர நான் இங்கு வந்ததிலிருந்து வேறு எதுவும் கேள்விப்படவில்லை. கண்டனச் சொற்கள் உங்கள் காதுக்கு இனிமையாக இருக்கலாம். ஆனல், தங்கள் வீடுகள் படுநாசமாக்கப்பட்டு, பெண்கள் அபகரித்துச் செல்லப்பட்டுப் பலவந்தமாக மதம் மாற்றப்பட்டும் பலவந்தமாக மணந்துகொள்ளப்பட்டும் இருக்கும் துர்ப்பாக்கியப் பெண்களுக்கு அக்கண்டனச் சொற்கள் ஆறுதல் அளித்துவிடமாட்டா. ஹிந்துக்களுக்கே இது மானக்கேடான விஷயம்; இஸ்லாமுக்கும் மானக்கேடு. உங்களை நான் சும்மா விட்டு வைக்கப் போவதில்லை. 'இந்த ஆசாமி நம்மை விட்டு எப்பொழுது போவார்?' என்று இப்பொழுது நீங்கள் உங்களுக்குள் சொல்லிக்கொள்ளலாம். ஆனல், இந்த ஆசாமி போகவே மாட்டார். உங்கள் அழைப்பின்பேரில் அவர் வரவில்லை; அவர் இஷ்டப்படிதான் அவர் போவார். ஆனல், கிழக்கு வங்காளத்தில் அவர் வேலை நிறைவேறிவிட்டால் உங்கள் ஆசீர்வாதங்களுடன் போவார்.

"பாகிஸ்தான் பெறுவது என்ற அவர்களுடைய திட்டத்தில் ஒரு பகுதியே இது" என்று தூதுக் கோஷ்டியில் ஒருவர் சொன்னர்.

**காந்திஜி:** அது அசல் பைத்தியக்காரத்தனம். அதை அவர்கள் தெரிந்துகொண்டுவிட்டனர். சீக்கிரத்தில் அவர்களே அலுத்துப் போய்விடுவார்கள். இது இப்பொழுதே அவர்களுக்குப்புரிய ஆரம்பித்துவிட்டது.

**ஒருவர்:** அப்படியானல், அவர்கள் ஏன் இங்கு வந்து ஒழுங்குபடுத்தக்கூடாது?

**காந்திஜி:** அந்த நிலைமை வரும். அலுத்துப்போவது நெருக்கடியைக் காட்டுகிறது. நோய் குணமானதும் உடலைத் தேற்றிக்கொள்ளத்தான் வேண்டும். நான் இயற்கை வைத்தியம் செய்பவன் என்பது உங்களுக்குத் தெரியும். (இதைச் சொல்லித் திடீரெனக் காந்திஜி உரக்கச் சிரிக்கவே எல்லோரும் சேர்ந்து சிரித்தனர்.)

"ஆனல், நாம் சமுத்திரத்தில் சிறு துளிபோன்றே இருக்கிறோம்......" என்று ஒருவர் கூறி, அந்த விவாதத்தை மீண்டும் தொடர்ந்தார். இதற்குக் காந்திஜி கூறியதாவது:

"கிழக்கு வங்காளத்தில் ஒரே ஒரு ஹிந்துவே இருந்தாலும், முஸ்லிம்களுக்கு நடுவே போய் வசித்துச் சாகவே வேண்டியது என்றாலும், சாகவும் அவர் தைரியங்கொள்ள வேண்டும் என்றே விரும்புகிறேன். பிறரை நம்பிப் பிழைப்பவராகவும் அடிமையாகவும் அவர் வாழக்கூடாது. போராடாமலேயே சாவதற்கு வேண்டிய அகிம்சைப் பலம் அவருக்கு இல்லாமல் இருக்கலாம். ஆனால், தவறுக்கு உடன்பட்டுவிடாமல், மனிதனைப் போராடிச் செத்தால், அவர்களுடைய பாராட்டை அவர் பெறுவார். எவ்வளவுதான் கொடியவனாகவும் கல்நெஞ்சனாகவும் இருந்தாலும் வீரனுக்குரிய மரியாதையைக் கொடுக்காத மனிதன் எவனும் இல்லை. நாம் எண்ணிக்கொள்ளுவதைப் போன்று காலி இழிவான மனிதன் அல்ல; அவனிடமும் உயர்ந்த குணம் இருக்கும்."

விவாதத்தைத் தொடங்கிய அந்நண்பர் இன்னும் விடாப்பிடியாகவே இருந்தார். "காலி, நியாயத்தை உணர்வதில்லை" என்றார் அவர். இதற்குக் காந்திஜி, "ஆனால், அவன் வீரத்தை உணர்கிறான். தன்னைவிட வீரமுள்ளவர்கள் நீங்கள் என்பதை அறிந்தால், உங்களுக்கு மரியாதை செலுத்துவான்" என்றார். அவர் மேலும் கூறியதாவது :

"நாம் இப்பொழுது விவாதிக்கும் காரியத்திற்கு ஆயுதங்களை உபயோகிப்பதைக் கைவிட வேண்டும் என்று நான் கூறவில்லை என்பதை நீங்கள் கவனிக்க வேண்டும். உங்களுக்கு ஆயுதங்களை நான் கொடுக்க முடியாது. சிட்டகாங் ஆயுதசாலையில் கொள்ளையிட்டவர்களுக்கு ஆயுதங்களை நான் கொடுக்க வேண்டியதில்லை. அந்தக் கொள்ளையில் ஈடுபட்டவர்களைக் குறித்த மிகவும் துக்ககரமான விஷயம் என்னவென்றால், தங்களையே பெருக்கிக்கொள்ள அவர்களால் முடியாததுதான். அவர்களுடைய வீரம் குன்றிப் போய்விட்டது. அது மற்றவர்களுக்குப் பரவவும் இல்லை."

அதன்பேரில் சிட்டகாங் ஆயுதசாலைக் கொள்ளைக் கோஷ்டியைப்பற்றி விவாதம் ஆரம்பமாயிற்று.

"அது பரவ முடியாது போனதில் ஆச்சரியமில்லை. அவர்கள் கண்டிக்கப்பட்டனர்" என்று அக்கோஷ்டியில் ஒருவர் பதில் சொன்னார்.

**காந்திஜி :** யாரால் கண்டிக்கப்பட்டனர்? நான் கண்டித்தேன். அது வேறு விஷயம்.

**அவர் :** மக்கள் கண்டித்தனர். நானும் ஆயுதசாலையைக் கொள்ளையடித்தவர்களில் ஒருவனே.

**காந்திஜி :** மக்கள் கண்டிக்கவில்லை. நீர் ஆயுதசாலையைக் கொள்ளையிட்டவரல்ல. அப்படி இருந்தால், இவைகளையெல்லாம் சொல்ல நீர் இங்கு இருந்திருக்கமாட்டீர். அவர்களில் அத்தனை பேரும் இங்கு நடந்திருக்கும் காரியங்களைக் கண்ணுரைப் பார்த்துக்கொண்டிருக்க உயிரோடு இருந்திருப்பதே மிகவும் துயர் மூட்டும் விஷயம் என்று எனக்குத் தோன்றுகிறது. அந்தக் கொள்ளையில் ஈடுபட்டபோது சாவுக்கும் துணிந்து காட்டிய அதே வீரத்தையும் அஞ்சாமையையும் இந்த நெருக்கடி சம்பந்தமாகவும் காட்டியிருப்பின் அவர்களை வீரர்களெனச் சரித்திரம் போற்றியிருக்கும். இப்போது உள்ளபடி அச்சரித்திரத்தில், ஒரு சிறு குறிப்பாகவே அவர்கள் பெயர் பதிவாகியது. நான் ஏற்கனவே சொன்னதைப் போல, ஆயுதங்களை உபயோகிக்க நீங்கள் கற்றுக்கொண்டதை மறந்துவிட வேண்டும் என்ருே அல்லது என்னுடைய வகையான வீரத்தைப் பின்பற்ற வேண்டும் என்ருே இப்பொழுது நான் உங்களைக் கேட்கவில்லை என்பதைக் காண்பீர்கள். என் விஷயத்தில்கூட நான் அதை உபயோகிக்கவில்லை. கிழக்கு வங்காளத்தில் அதைப் பரீட்சிக்கவே நான் இங்கு வந்திருக்கிறேன். சம்பிரதாயமான வீரத்தை நீங்கள் மேற்கொள்ளும்படியே விரும்புகிறேன். அது இல்லையென்ருல், இழிவும் அவமானமுமே என்னும்போது வீரத்தோடும் அஞ்சாமலும் சாவை எதிர்நோக்கும் திடத்தை ஆண் பெண் ஆகிய இருபாலாருக்கும் நீங்கள் பரப்ப முடிவதாக இருக்க வேண்டும். அப்பொழுதுதான் ஹிந்துக்கள் கிழக்கு வங்காளத்தில் வாழ முடியுமேயன்றி வேறு எதனுலும் அல்ல. முஸ்லிம்களும் நம் ரத்தத்தின் ரத்தம், நம் எலும்பின் எலும்பே யாவர்.

**ஒருவர் :** இங்கு முஸ்லிம்களும் ஹிந்துக்களும் ஆறு பேருக்கு ஒருவர் என்ற விகிதாசாரத்தில் இருக்கின்றனர். அவ்வளவு பெருந்தொகையினரை நாங்கள் எதிர்த்து நிற்க முடியும் என்று எப்படி எதிர்பார்க்கிறீர்கள் ?

**காந்திஜி :** இந்தியா பிரிட்டிஷாருக்கு அடிமைப்பட்டபோது ஒரு கோடி இந்தியருக்கு எதிராக 70,000 ஐரோப்பியச் சிப்பாய்களே இருந்தனர்.

**அவர் :** நம்மிடம் ஆயுதங்களில்லை. அரசாங்கம் தனது துப்பாக்கி முனை கொண்டு அவர்களுக்கு ஆதரவளிக்கிறது.

**காந்திஜி :** தென்னுப்பிரிக்கா இந்தியருக்கு ஆபத்துக்கள் இதைவிட இன்னும் எவ்வளவோ அதிகம் இருந்தன. ஏராளமான ஐரோப்பியருக்கும் நீக்ரோக்களுக்கும் நடுவே இந்தியச் சமூகம் மிகச் சிலரைக்கொண்டதாகும். ஐரோப்பியரிடம் ஆயுதங்கள் இருந்தன. எங்களிடம் எதுவுமில்லை. ஆகவே, சத்தியாக்கிரக ஆயுதத்தைக் கொண்டு வந்தோம். இன்று தென்னுப்பிரிக்காவில் வெள்ளைக்காரர்கள், இந்தியனை மதிக்கின்றனர் ; ஜுலுக்கள் சிறந்த உடற்கட்டுப் பெற்றிருந்தும் அவர்களை மதிப்பதில்லை.

**ஒரு நண்பர் :** அப்படியானுல், நாங்கள் எப்படியும் ஆயுதங்களைக் கொண்டு போராட வேண்டியதே.

**காந்திஜி :** எப்படியும் என்பதல்ல. பலாத்காரத்திற்கும் அதற்குரிய தருமம் உண்டு. உதாரணமாகத் திக்கற்ற கிழவர்கள், பெண்கள், குழந்தைகளைப் படுகொலை செய்வது கேவலமான கோழைத்தனமேயன்றி வீரமல்ல. உயிரைக் கொடுத்தாயினும் அவர்களைப் பாதுகாக்க வேண்டியது வீரத்திற்கு அழகு. அத்தகைய வீரச்செயல்கள் இஸ்லாமின் ஆரம்ப சரித்திரத்தில் ஏராளமாக இருக்கின்றன. அவற்ருல் இஸ்லாம் அதிக பலமுள்ளதாகிறது.

**ஒருவர் :** ஹிந்துக்கள் தாக்கக் கிளம்புவதை நீங்கள் அனுமதிப்பீர்களா ?

**காந்திஜி :** பிகார் மக்கள் இதைச் செய்து தங்களுக்கும் இந்தியாவுக்கும் அவமானத்தைத் தேடிக்கொண்டுவிட்டார்கள். இந்தியாவின் சுதந்திர கடிகாரத்தின் முள்ளை அவர்கள் பின்னுக்குத் திருப்பிவிட்டனர். பிகாரைப் பற்றிப் பேச எனக்கு உரிமை உண்டு. சம்பாரணில் அகிம்சை முறையைச் சரியானபடி செய்து காட்ட எனக்குச் சாத்தியமாகும்படி அதிருஷ்டம் என் பக்கம் இருந்ததால் ஒரு வகையில் வங்காளத்தைவிடப் பிகாருக்கு நெருங்கியவனுகவே நான் உணர்கிறேன். பிகாரில் பதிலுக்குப் பதில் செய்தது, முஸ்லிம்களை 'நிதானமடையும்படி' செய்தது என்று கூறப்படுவதைக் கேட்கிறேன். தற்சமயத்திற்கு அவர்கள் அடக்கப்பட்டனர் என்று கருதுகிருர்கள். இருவருமே இந்த ஆட்டத்தை ஆடுவார்கள் என்பதை அவர்கள் மறந்து விடுகின்றனர். பிகார் நம் அடிமைத்தளையில் இன்னும் ஒரு சங்கிலியையும் கோத்து விட்டது. பிகாரில் செய்யப்பட்டது திரும்பச் செய்யப்படுமானுல், அல்லது புத்திப் போக்கில் பிகார் திருந்தவில்லையெனில், நான் இப்பொழுது கூறும் சொற்களைக் குறித்து வைத்துக்கொள்ளுங்கள் : 'சீக்கிரத்

திலேயே இந்தியா, முப்பெரும் வல்லரசுகளின் பிடிப்பின்கீழ்ப் போய்விடும். அநேகமாக அதில் ஒரு வல்லரசு ஆக்ஞையைச் செலுத்துவதாக ஆகிவிடலாம்.' வங்காளத்திலும் பிகாரிலும் இந்தியாவின் சுதந்திரம் இன்று நிச்சயமற்ற நிலையில் இருக்கிறது. பிரிட்டிஷ் அரசாங்கம், ஆட்சி அதிகாரத்தைக் காங்கிரஸ் கையில் ஒப்படைத்தது, காங்கிரஸிடம் அதற்குள்ள அன்பினால் அல்ல; காங்கிரஸ் அதைப் புத்திசாலித்தனமாகவும் சரியாகவும் நடத்தும், தவருக உபயோகித்துவிடாது என்ற நம்பிக்கை கொண்டதன் பேரிலேயே. இன்று தமது காலுக்கு அடியிலேயே பெரும் பள்ளம் தோன்றுவதைப் பண்டித ஜவாஹர்லால் நேரு காண்கிருர். அப்படி நடக்க அவர் விட மாட்டார். அதனலேயே அவர் பிகாரில் இருக்கிருர். அவசியமாகும் வரை அங்கேயே இருக்கப் போவதாகவும் கூறுகிருர்.

"பிகாரிகள் கோழைகளாக நடந்துகொண்டு விட்டனர். உபயோகித்துத்தான் ஆக வேண்டும் என்ருல், உங்கள் ஆயுதங்களையும் உபயோகித்துக்கொள்ளுங்கள். தவருன காரியங்களுக்கு அவற்றை உபயோகிக்காதீர்கள். பிகார் அதன் ஆயுதத்தைச் சரியானபடி உபயோகிக்கவில்லை. பதிலுக்குப் பதில் செய்யப் பிகாரிகள் விரும்பினல், நோவாகாலிக்கு வந்து கடைசி ஆள் வரையில் செத்திருக்க வேண்டும். ஆனல், ஆயிரம் ஹிந்துக்கள், மிகச் சிலரேயான முஸ்லிம்கள்மீது, தங்கள் மத்தியில் வாழும் ஆண், பெண், குழந்தைகள்மீது பாய்வது காட்டுமிராண்டித் தனமேயன்றிப் பதிலுக்குப் பதில் செய்வதாகாது. திக்கற்றவர்களையும் பலவீனர்களையும் காப்பது ஆயுதங்களுக்குப் பெருமை. கிழக்கு வங்காள ஹிந்துக்களுக்குப் பிகார் செய்திருக்கக்கூடிய சிறந்த உதவி, தங்கள் மத்தியில் வாழும் முஸ்லிம் மக்களுக்குத் தங்கள் உயிரைக் கொடுத்தும் முழுப் பாதுகாப்பை அளிப்பதே. அவர்கள் உதாரணம் நல்ல படிப்பினையாக இருந்திருக்கும். இப்பொழுதுள்ள பைத்தியக்காரத்தனம் போய்விட்ட பிறகு, செய்ததற்கு வருந்தி, அப்படிச் செய்வார்கள் என்றே இன்னும் நம்புகிறேன். நான் உயிரோடு இருக்க வேண்டுமென்று அவர்கள் விரும்பினல் நான் அதற்கு விதிக்கும் விலை அதுவேயாகும். முதல் பாடம் இங்கு முடிகிறது."

காஜிர்கில், 18—11—1946 —'ஹரிஜன்' - 1—12—1946.

## 15

# என்றும் காணாத இருள்

*ராஜ்கோட் ஸ்ரீ நாராயணதாஸ் காந்திக்கு எழுதிய கடிதத்தில் காந்திஜி கூறியதாவது :*

*"பழக்கமான ஆகாரத்திற்குத் திரும்பிவிட்டேன். ஆகையால் கவலைப்பட எதுவுமில்லை. உண்மையில் ஒருவன் சிந்தனையோடு கூடிய வாழ்க்கையை நடத்திக்கொண்டு போகும்போது கவலைப் படுவதற்கே இடமில்லை. நான் இப்பொழுது மேற்கொண்டிருக்கும் வேலை, என் வாழ்க்கையிலேயே அதிகச் சிக்கலானதும் கஷ்டமானதுமாகும். 'இரவோ இருளடர்ந்ததாக இருக்கிறது. நானோ வீட்டுக்கு வெகு தொலைவில் இருக்கிறேன். எனக்கு வழி காட்டும்' என்று நூற்றுக்கு நூறு உண்மையுடன் நான் பாட முடியும்.*

*"என் வாழ்க்கையில் இதற்கு முன்பு என்றுமே இத்தகைய இருளை நான் கண்டதில்லை. இரவோ வெகு நீண்டதாகத் தோன்றுகிறது. திகைப்படைந்து விட்டவனாகவோ, ஏமாற்றம் அடைந்தவனாகவோ நான் உணராதது ஒன்றே ஆறுதல். ஏற்படுவது எதுவாயினும் நான் தயாராகவே இருக்கிறேன். 'செய்திரு அல்லது செத்தொழி' என்பதை இங்கே சோதிக்க வேண்டியிருக்கிறது. இங்கே 'செய்' என்பது ஹிந்துக்களும் முஸ்லிம்களும் சமாதானத்தோடும் ஒற்றுமையாகவும் வாழக் கற்றுக்கொள்ள வேண்டும் என்பதேயாகும். இல்லையானால் இம்முயற்சியில் நான் சாக வேண்டும். இது மிகக் கஷ்டமான வேலையே. கடவுள் விருப்பம் நிறைவேறும்.*

*வாழ்த்துக்களுடன்,*

*பாபு.*

[குஜராத்தி மூலத்திலிருந்து மொழிபெயர்த்தது.]
5—12—1946

—'ஹரிஜன்' - 5—1—1947

## 16

# ஸ்ரீராம்பூரில்

கல்கத்தாவிலிருந்து சக ஊழியர்களுடன் காந்தியைக் காண ஸ்ரீராம்பூருக்கு வந்த ஒரு நண்பர், "மனிதவர்க்கத்தைத் தாழ்ந்த நிலையிலிருந்து உயர்த்தவே நீங்கள் முயற்சி செய்து வருகிறீர்கள் என்று நம்புகிறோம். ஆனால், நீங்கள் வெற்றி பெறுவீர்களா என்பதுதான் எங்களுக்குச் சந்தேகமாக இருக்கிறது" என்றார்.

**காந்திஜி :** அதைப்பற்றி நானே சந்தேகப்படுகிறேன். நான் வெற்றி பெறலாம்; அல்லது அம்முயற்சியில் நான் அழியலாம். வெற்றி அல்லது தோல்வி முடிவான சோதனை அன்று.

**நண்பர் :** நீங்கள் சொல்லுவது சரியே.

**காந்திஜி :** கடைசி வரையில் முயற்சி செய்வது ஒன்றே உண்மையான சோதனை.

அதிகாரிகளைப் பொறுத்தவரையில் அவர்கள் மனப்போக்கில் ஏதாவது மாறுதல் இருக்கிறதா என்று நண்பர் பிறகு கேட்டார். "அரசாங்கத்தின் கொள்கையில் நல்லதற்கான மாறுதல் இருக்கிறது" என்றார் காந்திஜி. "ஆனால், மன மாற்றத்தைப் பொறுத்தவரையில், அது உருப் பெறுவதற்கு நீங்களும் நானுமே உதவி செய்ய வேண்டும்" என்றார்.

ஹிந்துக்கள் எவ்வளவு சிரத்தையற்றவர்களாகிவிட்டார்கள் என்பது வேதனைப்பட வேண்டியதாக இருக்கிறது என்று வந்தவர் கூறினர். இதற்குக் காந்திஜி கூறியதாவது: "இது ஹிந்துக்களிடம் மாத்திரமே ஏகபோகமாக இருப்பதன்று. சிரத்தையின்மை நம் எல்லோருக்குமே பொதுவானது. நான் ஒருவன் மாத்திரமே என்றாலும், கிழக்கு வங்க ஹிந்துக்களுக்கு வந்துவிட்ட இந்தச் சிரத்தையின்மையை எதிர்த்து நான் போராடியே ஆகவேண்டும். இந்தச் சமூகத்திற்கு அல்லது அந்தச் சமூகத்திற்கு ஒரு நற்பணியைச் செய்ய வேண்டும் என்பதற்காக நான் இங்கு வரவில்லை. எனக்கே ஒரு நற்பணியைச் செய்துகொள்ளுவதற்காக வந்திருக்கிறேன். தனிப்பட்டவர்கள் அனுசரித்துக்கொள்ளுவதற்கு என்று மாத்திரம் இருப்பதன்று அகிம்சை. சமூகமே மொத்தத்தில் அனுசரிக்கக்கூடியது, அனுசரித்தாக வேண்டியது அது. எனக்கே அதை நோவாகாலியில் பரிசோதித்துக்கொள்ளுவதற்காக வந்திருக்கிறேன். என்னுடைய அகிம்சை பிரயோசனமற்றதாகிவிட்டதா? நான் இங்கே தோல்வியடைந்துவிட்டால், அந்தத் தருமமே தவறானது என்பதற்கு அது ருசுவாகாது. அப்போது என்னுடைய சாதனை(முயற்சி)யே சரியானதாக இல்லை என்பேன்; இம்முறையில் எங்கோ தவறு இருக்கிறது என்றே ஆகும்."

**நண்பர் :** பிகார் நிலைமையைப்பற்றி நீங்களும் ஜவாஹர்லாலும் எவ்விதம் தீவிரமாக எண்ணிக் காரியத்தில் இறங்கினீர்களோ அதேபோல லீக் தலைவர் நோவாகாலி நிலைமை விஷயத்தில் செய்திருந்தால் ஒரே நாளில் இங்கே அமைதி ஏற்பட்டிருக்கும்.

**காந்திஜி :** அவ்விதம் ஒப்பிடுவது தன்னையே இழிவுபடுத்திக்கொள்வதாகும். வேண்டியதெல்லாம், தன்னைத் தானே சோதித்துக்கொள்ளுவதும் மேலும் சோதித்துக்கொள்ளுவதுந் தான். முஸ்லிம்களிடம் மாத்திரமல்ல, ஹிந்துக்களிடமும் பேசவே நான் இங்கு வந்திருக்கிறேன். அவர்கள் ஏன் அப்படிக் கோழைகளாக இருக்கிறார்கள்? வீரமும் உடல் வலிவும் பொறுத்தவரையில் ஹரிஜனங்களும் நமசூத்திரர்களும் மேல். அவர்கள் வீரத்துடன் இருக்கிறார்கள். ஆனால், மற்ற ஹிந்துக்கள் ஜாதி வித்தியாசங்களை அடியோடு விட்டொழிக்க வேண்டும். இந்தத் துன்பம் ஹிந்துக்களுக்குக் கண் திறந்து, தீண்டாமையை வேரோடும் கிளைகளோடும் அவர்கள் களைந்தெறிந்து விடுவதில் முடிவதாயின், ஒரு நல்ல காரியம் ஏற்பட்டதாகவே ஆகும்.

பிறகு இந்தியாவில் ஆரம்ப நாட்களில் தமக்கு ஏற்பட்ட அனுபவங்களைக் காந்திஜி கூறினார். சம்பாரண் சத்தியாக்கிரகத்தின்போது, ராஜேந்திர பாபு வீட்டில் இல்லாத சமயம், அவர் வீட்டிலே வெளியில்தான் தாம் உட்கார்ந்திருக்க முடிந்தது என்றும், ராஜேன் பாபுவின் வேலைக்காரர் எவ்விதம் தம்மைக் குளிக்கவும் விடவில்லை என்பதைப்பற்றியும் சொன்னார்.* இப்பொழுது நிலைமை மாறியிருக்கிறது என்றாலும் இன்னும்

---

* மகாத்மா குறிப்பிடும் இச்சம்பவத்தைக் குறித்து டாக்டர் ராஜேந்திர பிரசாத் தாம் எழுதியிருக்கும் 'அண்ணல் காந்தி அடிச்சுவட்டில்' என்ற நூலில் வருமாறு கூறுகிறார் :

"அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்திற்காக நான் கல்கத்தா போய் அங்கிருந்து பூரிக்குப் போய்விட்ட சமயத்தில், வீட்டைக் கவனித்துக்கொள்ளுவதற்காக ஒரு வேலைக்காரன் மாத்திரமே பாட்னாவில் என் வீட்டில் இருந்தான். மற்ற வேலைக்காரர்களெல்லோரும் விடுமுறை எடுத்துக்கொண்டு அவரவர்களுடைய ஊர்களுக்குப் போய்விட்டார்கள். வீட்டில் தங்கியிருந்த வேலைக்காரனோ அப்பாவியான ஒரு கிராமவாசி. மகாத்மா காந்தியுடன் பாட்னாவுக்கு வந்ததும் அவரை நேரே என் வீட்டிற்கு ராஜகுமார் சுக்லா அழைத்துக்கொண்டு போனார். பாட்னாவில் காந்தியடிகளைத் தங்கும்படி செய்வதற்கு வேறு யாரையும் ராஜகுமார் சுக்லாவுக்கு அங்கே தெரியாது. துர்ப்பாக்கியவசமாக நானோ ஊரில் இல்லை. என் வேலைக்காரனோ, கிராமத்திலிருந்து வரும் கட்சிக்காரர் என்று அவரை எண்ணிக்கொண்டு விட்டான். அவன்மீது குறை சொல்லிப் பயனில்லை. உண்மையில் ராஜகுமார் சுக்லாவும் அப்படிப்பட்ட கிராமத்துக் கட்சிக்காரரே. கிராமத்துக்காரராகவே அவர் பேச்சும் இருக்கும். நடை, உடை, தோற்றம் எல்லாவற்றிலும் அசல் கிராமவாசியாகவே அவர் இருப்பார். காந்தியடிகளின் உடை, தோற்றம் முதலியவைகளும் பெரும்பாலும் கிராமவாசியைப் போன்றே இருந்தன. நான் முன்னடியே கூறியதைப்போல, அவர் இடுப்பில் வேட்டியும் ஒரு சட்டையும் போட்டிருப்பார். கத்தியவாரியின் முண்டாசும் இருக்கும். பொதுக்கூட்டங்களுக்குச் சென்றாலும் விழாக்களுக்குப் போனாலும் இதுதான் அப்போது அவர் ஆடை. கல்கத்தாவில் அவரை வரவேற்பதற்காக நடந்த கூட்டத்திலும், பிறகு அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்திலும் அதே உடையில்தான் நான் அவரைப் பார்த்தேன். வழக்கமாக அவர் இடுப்பில் ஒரு வேட்டி கட்டி, மேலே ஒரு சட்டை

எவ்வளவோ செய்ய வேண்டியிருக்கிறது என்ருர். தீமையையெல்லாம் போக்கிக்கொள்ள ஹிந்து தருமம் இன்னும் அதிக தூரம் முன்னேற வேண்டியிருக்கிறது என்பதை வந்தவரும் ஒப்புக்கொண்டார்.

நோவாகாலியில் நடந்திருக்கும் கட்டாய மதமாற்றங்களைப் பற்றி வந்தவர் கூறி, இவ்விதம் மதம் மாற்றப்பட்டவர்கள் துரிதமாகத் திரும்பவும் ஹிந்துக்களாக்கப்படாது போனல், ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே இருக்கும் பகைமை நிரந்தரமானதாகிவிடும் என்ருர். இந்த வாதத்திலுள்ள முக்கியத்துவத்தைக் காந்திஜி ஒப்புக்கொண்டு மேலும் கூறியதாவது: "பலர் ஹிந்து மதத்திற்குத் திரும்பிவிட்டனர். ஆனல் எல்லோரும் திரும்பிவிட வேண்டும். பிற மதங்களைச் சகிப்பதில் நான் என்றுமே நம்பிக்கையுடையவன். இன்னும் அதிகமாகவும் போயிருக்கிறேன். சகிப்பது என்பதிலிருந்து, எல்லா மதங்களுக்கும் சமமான மதிப்பு என்பதற்கும் முன்னேறியிருக்கிறேன். அந்த மகத்தான மரத்தின் பல கிளைகளே மதங்கள். ஆனல், வசதியாக இருக்கிறது என்பதற்காக நான் ஒரு கிளையிலிருந்து இன்னும் ஒரு கிளைக்குத் தாவக்கூடாது. அப்படிச் செய்வதால் நான் உட்கார்ந்திருக்கும் கிளையையே வெட்டுபவனுகிறேன். ஆகையால், தானே தோன்றும் ஆர்வமாகவும், உள்ளூற அடைந்த வளர்ச்சியின் பலனுகவும் இல்லாதபடி ஒரு மதத்திலிருந்து மற்ருெரு மதத்திற்கு மாறுவதைத் தவருனதாகவே நான் என்றும் கருதுகிறேன். அவற்றின் தன்மையைக் கொண்டே அத்தகைய மதமாற்றங்கள் மக்கள் அளவுக்குப் பரவி இருக்க முடியாது. அவை ஒருவரின் உயிரைக் காத்துக்கொள்ளவோ, சொத்துக்கோ அல்லது தாற்காலிகமான லாபத்திற்கோ ஏற்படுவனவாக இருக்கவே கூடாது."

---

போட்டுக்கொண்டு தலையில் ஒரு குல்லாயும் வைத்திருப்பார். பிறகு அந்தக் குல்லாய், அவர் பெயராலேயே காந்திக் குல்லாய் என்று வழங்குவதாயிற்று. ஐக்கிய மாகாணத்திலும் பிகாரிலும் எல்லோரும் அணியும் குல்லாய்க்கும் இதற்கும் வித்தியாசமுண்டு. இக்குல்லாய், கையினுல் நூற்று, கையினுலேயே நெய்யப்பட்ட துணியினுலானது. காந்தியடிகள் பெரிய மனிதர் என்பதை அந்த அப்பாவி வேலைக்காரன் அறியான். அவருடைய தோற்றம், உடை முதலியவைகளிலிருந்து அவரை ஒரு சாதாரணக் கட்சிக்காரராகவே அவன் மதித்துவிட்டான். அதற்கு ஏற்றபடியே அவரையும் நடத்தினுன். வீட்டின் எஜமானருக்கு என்று பிரத்தியேகமாக வைக்கப்பட்டிருக்கும் கக்கூஸை உபயோகித்துக்கொள்ளவும் காந்தியடிகளை அவன் அனுமதிக்கவில்லை. மகாத்மா காந்தியால் வழக்கப்படி குளிக்கவும் முடியவில்லை. அடுத்தபடி என்ன செய்வதென்று தோன்ருமல் அவர் திகைத்துக்கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் மகாத்மா பாட்னுவுக்கு வந்து என் வீட்டிலிருக்கிருர் என்பதை அறிந்த ஸ்ரீ மஜார்-உல்-ஹக் அவரைத் தமது விருந்தினராக அழைத்துக்கொண்டு போக அங்கு வந்து சேர்ந்தார்."

ஹரிஜனஞக இருந்து கிறிஸ்தவ மதத்திற்கு மாறிய ஒரு தென்னிந்தியப் பாதிரியைத் தாம் சந்தித்தது குறித்தும், மதம் மாறியிருந்தும் அவருக்கு முன்ஞல் இருந்த பலவீனங்களெல்லாம் அப்படியே இருந்தன என்றும் காந்திஜி கூறிஞர். அவரை ஒரு பாதிரியாகவே தம் மனம் ஏற்கவில்லை என்று காலஞ் சென்ற ஸ்ரீ சார்லி ஆண்டுரூஸிடம் தாம் கூறியதையும் குறிப் பிட்டார் காந்திஜி.

**நண்பர் :** இங்கு, அதுவும் மதத்தின் பெயரால் செய்யப் பட்டிருக்கும் கோரங்களுக்கு முடிவே இல்லை. என் மனம் அடி யோடு சோர்ந்து போவதற்கு இதுவே போதும்.

**காந்திஜி :** மனித ராட்சசர்களை இளம் பருவத்திலிருந்தே நான் பார்த்திருக்கிறேன். அத்தகையோரின் ஆத்மாவைச் சரி யானபடி தொடுவது எப்படி என்பது மாத்திரம் நமக்குத் தெரிந்துவிட்டால், அவர்களும் திருந்திவிட முடியும். எல்லாமே மிகக் கோரமானவைகளாக இருக்கின்றன. அதை நீங்கள் மிகைப்படுத்திச் சொல்லவேண்டிய அவசியமில்லை. எண்ணிக் கையைப்பற்றி எனக்குக் கவலையில்லை என்று அதிகாரிகளுக் குக் கூறியிருக்கிறேன். பெண்களை அபகரித்துச் சென்று, கற் பழித்தது, கட்டாயமாக மணந்துகொண்டது அல்லது பலவந்த மாக மதம் மாற்றியது இதுபோல் ஏதாவது ஒன்று நடந்திருக் கிறதா ? அப்படியாஞல் அதுவே எனக்குப் போதும். அத் தகைய காரியங்கள் நடந்திருக்கின்றன என்று ஒப்புக்கொள்ள வேண்டியதே.

"அபகரித்துச் செல்லப்பட்டுவிட்ட பெண்களை மீட்ப தைப்பற்றிய விஷயம் என்ன ?" என்பது அடுத்த கேள்வி. இத்தகைய சம்பவம் நடந்திருப்பதாகப் புகார் வந்ததும் மீட்கும் கோஷ்டியுடன் ராணுவப் போலீஸ் அனுப்பப்படுகிறது என்றும், குற்றம் செய்தவர்களுக்கு உடனே தகவல் கிடைத் துத் தாங்கள் அபகரித்துச் சென்ற பெண்களை வேறு இடங் களுக்குக் கொண்டுபோய்விடுகின்றனர் என்றும் புகார்கள் கூறப்பட்டன. இதற்குக் காந்திஜி அளித்த பதிலாவது :

"ராணுவ, போலீஸ் உதவியை நம்பியிருக்க வேண்டாம் என்று நம் மக்களுக்குக் கூறியிருக்கிறேன். ஜனநாயகத்தை அனுசரிக்க வேண்டியவர்கள் நீங்கள். ஜனநாயகம், போலீஸ் ராணுவ உதவியை எதிர்பார்த்துக்கொண்டிருப்பது ஆகிய இந்த இரண்டும் ஒன்றுக்கொன்று எதிரானவை. ஓர் இடத்திற்கு அது நல்லது, இன்னுமோர் இடத்திற்கு அது தீமையானது என்று

நீங்கள் சொல்ல முடியாது. ராணுவ உதவி உங்களைக் கேவலமாக்கும். ஒரு ஜனநாயகத்தில் வாக்காளர்கள் ஒரு காலியை அரசாங்கத்தின் தலைவனாக ஆக்கிவிட்டால், தாங்கள் அமைத்துக் கொண்ட அந்த நிலையில்தான் அவர்கள் இருக்க வேண்டும். இல்லையானால், அவசியமாயின் சத்தியாக்கிரகத்தின் மூலம் வாக்காளரின் மனத்தை மாற்ற வேண்டும். அதுதான் ஜனநாயகம். பிகாரிலும் சரி, வங்காளத்திலும் சரி, மக்கள் தைரியமாகத் தங்கள் காலிலேயே நிற்க வேண்டும். ஒவ்வொருவரும் தமது வீட்டையோ அல்லது கிராமத்தையோ விட்டு வெளியேறாமல், இருந்த இடத்திலேயே சாக வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.''

ராஜீயச் சதுரங்கத்தில் வங்காளம் ஒரு காயாக உபயோகிக்கப்படுகிறது என்றார் கண்டு பேச வந்தவர்களில் ஒருவர். ''இல்லை'' என்று காந்திஜி கூறி மேலும் சொன்னதாவது: ''வங்காளம் வங்காளமாக இருப்பதனாலேயே அது இன்று முன்னணியில் நிற்கிறது. டாகுரையும் பங்கிம் சந்திரரையும் பிறப்பித்த இடம் வங்காளம். சிட்டகாங் ஆயுதக் கிடங்கில் கொள்ளையிட்டவர்களின் செய்கை தவறு என்று என் கண்ணுக்குத் தோன்றினாலும், அதைச் செய்த வீரர்கள் இங்கேதான் பிறந்தார்கள். நீங்கள் இதைத் தெரிந்துகொள்ள வேண்டும். வங்காளம் சரியாக நடந்துகொள்ளுவதாயின், இந்தியாவின் பிரச்னையையே அது தீர்த்துவிடும். அதனாலேயே என்னை வங்காளியாக்கிக்கொண்டிருக்கிறேன். அத்தகையவர்களின் வங்காளத்தில் கோழைத்தனம் இருப்பானேன்?''

**வந்தவர்களில் ஒருவர் :** ஆம். ஆபாசப்படுத்தப்பட்டிருக்கும் கோயில்கள் முதலியவற்றைப் பார்க்கும்போது அந்த இடம் தீண்டப்படுவதற்கு முன்னரே வீட்டிலுள்ள ஒவ்வோர் ஆணும் பெண்ணும், குழந்தையும் ஏன் செத்திருக்கக் கூடாது என்று என்னையே கேட்டுக்கொள்கிறேன்.

**காந்திஜி:** அப்படிச் செய்திருந்தால் உங்களுக்கு வேறு உதவி எதுவுமே வேண்டியிராது. இன்று நோவாகாலியில் அதன் முக்கியஸ்தர்களே இல்லை. ஆபத்தைச் சமாளிக்க மறுத்து அவர்கள் வீடு வாசலைத் துறந்து சென்றுவிட்டார்கள். பரிதாபம், மனோரஞ்சன பாபு என்ன செய்வதென்று தெரியாமல் திகைக்கிறார். சமாதானக் கமிட்டிகளில் அவர் யாரைப் போடுவது? காலியாக இருக்கும் அந்த இடத்தை நிரப்பச் சாதாரணமானவர் வரவேண்டும் என்று அவரிடம்

சொன்னேன். வெற்றிடம் என்பது இயற்கையிலேயே இல்லை. இயற்கை அதை வெறுக்கிறது. அவர்களுக்கு எழுதுங்கள் என்று அவரிடம் சொன்னேன். அவர்கள் திரும்பிவந்தால் சரி; இல்லையானல், சாதாரண ஆள் முன்னுக்கு வரவேண்டும். இது அவன் காலம்.

**இன்னுமொருவர் :** மகாத்மாஜி ! இது யுத்தமா, சமதோனமா என்பதை ஒரு சொல்லில் கூறுங்கள். சமாதானக் கமிட்டிகளா, யுத்தக் கமிட்டிகளா ?

**காந்திஜி :** சமாதானக் கமிட்டிகள். சமாதானம் தோற்றுவிடுவதன் பலன் யுத்தமாகிறது. நம் முயற்சி எப்பொழுதும் சமாதானத்தை நாடுவதாகவே இருக்க வேண்டும். ஆனல், அது கௌரவத்தோடு கூடிய சமாதானமாகவும், உயிருக்கும் சொத்துக்கும் நல்ல பாதுகாப்பாகவும் இருக்க வேண்டும். இந்த இரு நிபந்தனைகளின் பேரில் மாத்திரமே அகதிகள் திரும்பி வருவார்கள். ஆனல், போதுமான தைரியத்தைப் பெற்றுவிடுவார்களாயின் எந்தப் பாதுகாப்பும் இல்லாமலேயே திரும்பி வந்துவிடுவார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒரு ஹிந்துவும் ஒரு முஸ்லிமும் உத்தரவாதிகளாக நிற்க வேண்டும் என்று இன்று நான் யோசனை கூறியிருக்கிறேன். மக்களுக்கு வேண்டிய தீரம் மாத்திரம் இருக்குமானல், தங்கள் பாதுகாப்புக்குக் கடவுளையும் தங்கள் உணர்ச்சியின் பலத்தையும் தவிர வேறு எதையும் நம்புபவர்களாக இருக்க மாட்டார்கள். அவர்கள் அவ்விதம் செய்தால், சூழ்நிலையே மாறிப்போயிருப்பதை நோவாகாலியிலுள்ள எல்லாக் காலிகளும் உணர்ந்து யோக்கியமாக நடந்துகொள்ளுவார்கள். நான் கூறுவது இன்னது என்பதை அறிவேன். கொள்ளைக் காரர்களுக்குப் பெயர்போன க்ஷத்தியவாரைச் சேர்ந்தவன் நான். அவர்கள் திருந்திவிடவே முடியாதவர்கள் அல்ல என்பதையும் நான் அறிவேன். நடந்திருப்பவைகளுக்கெல்லாம் காலிகள் மாத்திரமே காரணம் என்பதை நான் நம்பிவிடவுமில்லை.

அமைதியைக் குலைப்பதில் ஹிந்துக்கள் யாரும் பங்குகொண்டுவிடவில்லையாகையால் சமாதானக் கமிட்டிகளில் முஸ்லிம்கள் மாத்திரமே இருக்கலாம் என்று ஒரு யோசனை கூறப்பட்டது. இதற்குக் காந்திஜி, "கூடாது .......... தங்கள் பங்கைச் செய்ய ஹிந்துக்களுக்கு அங்கு இடம் இருக்க வேண்டும். இல்லையானல், சமாதானக் கமிட்டிகள் வெறும் புரட்டு என்ருகிவிடும்" என்ருர்.

"பிகாரை அகிம்சையினல் கட்டுப்படுத்துவது சாத்திய மல்லவா?" என்று ஒரு நண்பர் அடுத்தபடியாகக் கேட்டார். இதற்குக் காந்திஜி கூறியதாவது: "ஆம். ஆனல், 1942-இலிருந்தும் அதற்கு முன்பும் கட்டுப்பாடான பலாத்காரத்தை அனுசரிப்பதில் அது போதனை பெற்றிருக்கிறது. காலிகள் விஷயத்தில் நமது பலவீனம் 1942-இல் உச்ச நிலைக்கு வந்துவிட்டது. 1942 தகுதிகளை நான் அறிவேன். மக்கள் அடங்கிக் கிடந்துவிடவில்லை. என்றாலும், நாம் செய்துவிட்ட தவறுகள் விஷயத்தில் நாம் கண்களை மூடிக்கொண்டுவிட முடியாது. இன்றும், நன்றாக நடந்துகொள்ள நாம் கற்றுக் கொள்ள வேண்டும்."

பாடியால்பூர் 14—12—1946 —'ஹரிஜன்' - 12—1—1947

# 17

# 'செய்திடு அல்லது செத்திடு' என்பதன் வேலை

"உடம்பு குணமானதும் என்னிடம் வாருங்கள். 'செய்திடு அல்லது செத்திடு' என்பதன் பொருளை நான் மேற்கொண்டும் உங்களுக்கு விளக்குகிறேன்" என்று ஆரம்பத்தில் நான் நோயுற்றபோது எனக்குக் கடைசியாகக் காந்திஜி அனுப்பிய குறிப்பில் எழுதியிருந்தார். அதன்படி நான் படுக்கையை விட்டு எழ முடிந்ததும் ஸ்ரீராம்பூருக்குப் போனேன். அன்று நாங்கள் மனம் விட்டுப் பேசியபோது, பேச்சு என்பதைவிட அவரளவில் அவர் வெளிப்படையாக எண்ணியதில், தமது மனத்தில் இருந்தது எல்லாவற்றையுமே கொட்டிவிட்டார். வெளியேறிப் போக வேண்டாம் என்று காந்திஜி எவ்வளவோ கூறிவந்தும் கிழக்கு வங்காளத்திலிருந்து அகதிகள் தொடர்ந்து வெளியே போய்க்கொண்டிருந்தனர். ராணுவ, போலீஸ் பாதுகாப்பு வேண்டும் என்று மேலும் மேலும் எல்லா இடங்களிலிருந்தும் கோரிக்கைகள் வந்தவண்ணம் இருந்தன. ஆனல், காந்திஜியோ, அவர்கள் சுதந்திரத்தை மதிப்பதாயிருந்தால் போலீஸ், ராணுவப் பாதுகாப்பை நம்பியிருக்க வேண்டாம் என்று கேட்டுக்கொண்டார். போலீஸ், ராணுவப் பாதுகாப்புக்குப் பதிலாக வேறு என்ன இருக்கிறது? வலியவர்களுக்கான அகிம்சையை அனுசரிக்குமாறு அவர்களுக்குக் கூறி வந்தார். காந்திஜி மேலும் கூறியதாவது: "என்னைப் பொறுத்தவரை

யில் இது ஒரு புதிதான யோசனையானதால் இது அவர்களைத் திகைக்கவே வைத்தது. என் விஷயத்திலேயே நான் இதை இன்னும் சரியாகச் செய்ய வேண்டியிருந்ததால், அவர்கள் மீது அதற்காக நான் குறை சொல்லவில்லை. 'நம்பிக்கை வையுங்கள்; உள்ளத்தையும் அஞ்சாததாக வைத்துக்கொள்ளுங்கள். பிறகு, ஏசு சொன்னதைப்போல நீங்களும் ஒரு மலையிடம், நீ கடலுக்குப் போ என்று சொன்னால் அது அப்படியே நடக்கும் என்று ஒரு நண்பர் ஒரு சமயம் என்னிடம் கூறியிருந்தார். அந்த நம்பிக்கை எனக்கு இருக்கிறதா? பாழாக்கப்பட்டிருக்கும் ஒரு கிராமத்தில் தன்னந் தனியாக இருப்பதற்காக நான் இங்கு வந்திருக்கிறேன். ஆனால், யாருடைய உதவியும் இல்லாமலேயே நான் இருக்க வேண்டும் என்று நான் விரும்பினாலும் அப்படி என்னைத் தன்னந் தனியனாக்கிக்கொள்ள என்னால் ஆகவில்லை. கடவுளிடம் எனக்குள்ள நம்பிக்கையைச் சோதித்துப் பார்க்க நான் விரும்புகிறேன். என்னிடமிருந்து ஏதாவது பணியைப் பெறக் கடவுள் விரும்புவாரானால்,எல்லாக்கஷ்டங்களையும் சமாளித்து நான் வெளியேற நிச்சயமாக அவர் பார்ப்பார். அப்படி இருக்கும்போது சாவைக் குறித்து நான் ஏன் பயப்பட வேண்டும்?'

"என் உடல்நிலை முற்றிலும் குணமான பிறகு, நெல் வயல்களில் இருக்கும் நீரும் வற்றிய பிறகு, அஞ்சாமைச் செய்தியை மக்களுக்குக் கூறுவதற்காகக் கிராமந்தோறும், வீடு தோறும் போவதாக இருக்கிறேன். விட்டுச் சென்ற கிராமத்திற்குத் திரும்பப் போகமாட்டேன். இவ்விதம் கிராமவாசியோடு கிராமவாசியாகவே வாழ்வேன்."

காலஞ் சென்ற ஸ்ரீ மகாதேவ தேசாய் என்னிடம் அந்தரங்கமாகப் பேசிக்கொண்டிருந்தபோது, "இவரை ஜாக்கிரதையாகக் கவனித்துக்கொள்ளுங்கள். இவர் ஒரு நாளைக்கு டால்ஸ்டாயைப் போன்று நடந்து, நம் எல்லோரிடமிருந்தும் நழுவி, புயலில் தன்னந்தனியாகத் துணிந்து இறங்கிவிடக் கூடும்" என்று அடிக்கடி சொல்லுவார். அவர் சொன்னது இப்பொழுது உண்மையாகவே ஆகிவிட்டது.

காந்திஜியைப் பார்ப்பதற்காகக் கல்கத்தா சர்வகலாசாலையைச் சேர்ந்த பேராசிரியர் அமிய சக்ரவர்த்தி வந்திருந்தார். சாப்பிட்டுக்கொண்டிருந்தபோது, அவர் ஒரு கேள்வி கேட்டார். தவறு செய்கிறவர்களின் எதிர்ப்பு இல்லாதபடி செய்வதற்கு அவர்களை அணுகுவதற்கான முறை என்ன என்

படதே அது. "கொடிய குற்றங்களைச் செய்கிறவர்களைப்பற்றிய சங்கடம் என்னவென்றால், தாங்கள் செய்துவிட்ட குற்றங்களுக்கு வருந்துகிறவர்களாக இல்லாததோடு, பிடிவாதத்துடனும், தாங்கள் செய்துவிட்ட தீய செயல்களுக்காகக் குதூகலப்படு கிறவர்களாகவும் அவர்கள் இருப்பதேயாகும்" என்றார் டாக்டர் சக்ரவர்த்தி.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: "ஆம். அவர்கள் குதூகலமாக இருப்பதற்கு அவர்களுக்குக் காரணமும் இருக் கிறது. அவர்களுடைய போக்கைச் சமாளிப்பதற்கு இருக்கும் ஒரே வழி, அப்போக்குக்குப் பணிந்துவிடாமல் அவர்கள் மத்தி யில் வசித்து ஒருவர் தம்முடைய சத்திய உணர்ச்சியை விடா மல் இருப்பதுதான். நல்ல தன்மையுடன் அறிவும் சேர்ந்திருக்க வேண்டும். நல்லவராக இருப்பது என்பது மாத்திரம் பயனில்லை என்பதை வாழ்க்கையில் பார்த்திருக்கிறேன். ஆத்மிக வீரத் தோடும் ஒழுக்கத்தோடும் சேர்ந்து பகுத்தறியும் சிறந்த குணத்தையும் வளர்த்துக்கொள்ள வேண்டும். நெருக்கடியான தோர் சமயத்தில் எப்பொழுது பேச வேண்டும், எப்பொழுது மௌனமாக இருக்க வேண்டும், எப்பொழுது செயலில் இறங் குவது, சும்மா இருப்பது எப்பொழுது என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். இந்தச் சந்தர்ப்பங்களில் செயலும் செய லற்றிருப்பதும் ஒன்றுக்கொன்று முரண்பாடுடையனவாக இருப் பதற்குப் பதிலாக ஒரே தன்மையனவாகின்றன.

"என்னைச் சுற்றிலும் இருள் கவிந்துகொண்டிருக்கிறது. வெளிச்சம் காணத் தடவிக்கொண்டிருக்கிறேன். ஆனால், சத்தியம் காட்டும் வழியில் நான் காரியத்தையாவது செய்ய வேண்டும் அல்லது சும்மாவாவது இருக்க வேண்டும். எனக்குப் பொறுமையோ, துயர் மிக்க இந்தச் சந்தர்ப்பங்களில் தேவைப் படும் முறை, செயலாற்றல் இவையோ இல்லை என்பதைக் காண் கிறேன். துயரால் தவிப்பும், தீமையும் அடிக்கடி என்னை அழுத்தி விடுகின்றன. நான் பிரயோசனமற்றுக் கிடக்கிறேன். ஆகையால், என்னைச் சகித்துக்கொண்டு இப்பொழுது நமக்கு முற்றிலும் அவசியமான அறிவு காட்டும் வழியில் வேலையாவது செய்ய வேண்டும் அல்லது சும்மாவாவது இருக்க வேண்டும் என்று என் நண்பர்களுக்குச் சொல்லியிருக்கிறேன்.

"இங்கே கிராமங்களில் தங்கள் மூதாதையர் வாழ்ந்த மண்ணில் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் இன்ப துன்பங்களில் ஒன்றாக இருந்திருக்கிறார்கள்; வருங்காலத்திலும் அவர்கள் ஒன்றாக வாழ வேண்டியவர்கள். இதற்கு இங்கே புதிய அடிப்

படையை எழுப்ப வேண்டும். இச்சமயத்திற்கு நான் வங்காளியாகவும் நோவாகாலியைச் சேர்ந்த மனிதனுகவும் ஆகியிருக்கிறேன். இங்கு வாழ்ந்து அவர்கள் பணியில் பங்கு கொள்ளுவது; இருவரையும் ஒன்ருக இணைப்பது; இல்லையானுல், அம்முயற்சியில் அழிந்து போவது என்றே நான் வந்திருக்கிறேன். பற்றி எரியும் தீயின் நடுவே நான் இருக்கிறேன். அது அணையும் வரையில் இங்கு இருப்பேன். இக்காரணத்தை முன்னிட்டு இப்பகுதியிலிருந்து போய்விட நான் விரும்பவில்லை. கொடிய துன்பங்களுக்கு ஆளாகிவிட்ட ஆண்களுக்கும் பெண்களுக்கும் வாழ்வினை வாழக்கூடியதாக்க வேண்டும். இதை ஒழுங்கு செய்யும் வேலை தொடர்ந்து நடந்துகொண்டு போக வேண்டும். உடலை மீட்பதும் ஒழுக்கத்தை நிலைக்கச் செய்வதுமான வேலை நிறைவேற்றப்படவேண்டும்.

பிறகு டாக்டர் சக்ரவர்த்தி ஒரு யோசனை கூறினர். காந்திஜியின் சகாக்கள் இப்பொழுது தனித்தனியாக வெவ்வேறு கிராமங்களில் வேலை செய்து வருகிருர்கள். ஆகையால், கிழக்கு வங்காளத்தில் இப்பொழுது உருவாக்கிப் பரீட்சார்த்தமாக நடந்து வரும் பலமுள்ளவர்களின் அகிம்சை முறையின் அனுபவம் மற்றவர்களுக்கும் கிடைப்பதற்காக அவர்களுடைய அறிக்கைகளையெல்லாம் சேகரித்து ஒன்றுபடுத்த வேண்டும் என்பதே அந்த யோசனை. இதற்குக் காந்திஜி கூறியதாவது: "அதற்கான சமயம் இன்னும் வரவில்லை. என்னுடைய நல்லாசியுடன், ஆனல், இன்னும் உதவியற்றதாகவே இருந்து வரும் சூழ்நிலைக்கு அவர்கள் போயிருக்கிருர்கள். அவர்கள் செல்வது தேய்ந்த பாதை யன்று; திசை விளங்காத வழியே. துயரில் இடிவிழுந்து போன மக்களுக்கிடையேதான் அவர்கள் புரியும் வேலை. அம்மக்களின் மொழியையும் அவர்கள் அறியார். அவர்களுக்குரிய பிரச்னைகளைபற்றியும் பழக்கமிராதவர்கள்.

"அடுத்தபடி என்ன என்பது எனக்கே தெரியாது. நான் அவர்களுக்கு வழிகாட்டுவதற்குமில்லை. அறிக்கைகளை அனுப்ப இப்பொழுது அவர்களால் ஆகவில்லை. அவர்களுக்கு நான் ஒரு வழிக் குறிப்புத் தந்தால் தகவல் தரும் புத்தகத்தையே எழுதிவிடுவார்கள். பெரியாரான டக்கர் பாபா என்னைப் போல வயதானவர். தேர்ந்த சேவையாளர்; சுயநலம் சிறிதும் இராதவர். அவரும் தாம் செய்வது இன்னது என்று தெரியாமலேயே வேலை செய்து வருகிருர். இதற்கு முன்னல் அவர் வாழ்க்கையில் இப்படி என்றுமே செய்ததில்லை. குழப்பம் என்று நமக்கு இருந்து வருவதிலிருந்து ஒழுங்கும் வரும்

என்ற நம்பிக்கையுடனேயே இருக்கிறேன். பிறகு நீங்களும் நாமும் விரும்புவது ஏற்பட்டு எதிர்கால ஊழியருக்கு மதிப்பற்ற தஸ்தாவேஜியாக இருக்கும்.''

**டாக்டர் சக்ரவர்த்தி :** நம் மக்களெல்லோரும், வெளிநாட்டில் இருக்கும் ஊழியர்களும் அப்படியே கருதுகின்றனர். மிக முக்கியமான சோதனைகள் நடத்தப்படும் கூடமாக நோவாகாலி இப்பொழுது ஆகியிருக்கிறது. உலகின் சமூகங்களுக்கிடையேயும், நாட்டினருக்கிடையேயும் தகராறுகள் ஏற்பட்டுச் சமாதானமாக ஒத்துப் போவதற்கு ஒரு புதிய முறை வேண்டியிருக்கும் நிலைமை வரும்போது இங்கே காணும் பரிகாரம் மிகவும் பயன்படும்.

**காந்திஜி :** இதே போன்றே லண்டனிலிருந்தும் நான் கேள்விப்படுகிறேன். நோவாகாலியில் நடந்து வருவதைப்பற்றி அறிய மக்கள் சிரத்தை கொள்ளுகின்றனர். என் பொறுப்பு அதிகம் என்பதையும், நம் வேலையில் உண்மை தொனிக்க வேண்டும் என்றும் நான் விரும்புகிறேன்.

**டாக்டர் சக்ரவர்த்தி :** இங்கு மக்கள் சொல்லொணு வகையில் துன்பங்களை அனுபவித்திருந்தும் இப்பெரும் பணிக்கு நீங்கள் வங்காளத்தைத் தேர்ந்தெடுத்திருப்பதும், இதையே உங்கள் முக்கிய இடமாக நீங்கள் கொண்டிருப்பதும் எங்களுக்குப் பெரும் பாக்கியம். இந்தச் சமயத்தில் இம்மக்களுக்கு உங்களுடைய சேவை எவ்வளவோ தேவையானது என்பதையும், துயரில் ஆழ்ந்த ஆண்களுக்கும் பெண்களுக்குமிடையே வேலை செய்ய நீங்கள் இங்கே வந்திருப்பது முதலியவற்றையும் வங்காளம் முழுதும் உணர்ந்திருக்கிறது.

**காந்திஜி :** இக்காரியம் சரியாக நிறைவேறுமானல், என் வாழ்வின் தலை சிறந்த காரியமாகவே இது இருக்கும். கிழக்கு வங்காளத்தின் மண்ணிலே மக்களிடையே நான் வந்திருக்கிறேன். இதை நான் முதன்முதலில் ஜவாஹர்லாலிடமே சொன்னேன். அவர் கொஞ்சங்கூடத் தயங்காமல், 'ஆம். நீங்கள் இருக்கவேண்டிய இடம் அதுதான். நீங்கள் எங்களோடு இருக்க வேண்டியது எங்களுக்கு எவ்வளவோ முக்கியமென்றாலும் உங்களை வேண்டுவது நோவாகாலிதான்' என்றார். 'எப்பொழுது?' என்று அவரைக் கேட்டேன். 'போக வேண்டும் என்று நீங்கள் விரும்பியவுடன்' என்றார். இரண்டே நாட்களில் நான் புறப்பட்டுவிட்டேன்.

ஒரு வாரங் கழித்து நான் அவரைப் பார்த்தபோது, "நான் இன்னும் இருட்டில் தடவிக்கொண்டுதான் இருக்கிறேன்'

என்று மாத்திரமே கூறினர். எனக்கு எழுதிய குறிப்பில், தம் உள்ளத்தில் தேங்கிக் கிடந்த வேதனையையெல்லாம் கொட்டியிருந்தார்: ''எனக்குச் சாமர்த்தியமில்லை என்பதைக் காண்கிறேன். அகிம்சைக்குத் திறவு கோலை நான் இன்னும் கண்டுபிடித்துவிடவில்லை. இங்கு நான் பிரம்மாண்டமான யக்ஞம் செய்ய முற்பட்டிருக்கிறேன். ஆனல், ஒவ்வொரு கட்டத்திலும் என்னுடைய தகுதியின்மை புலனுகி வருகிறது. என்ருலும், விட்டுவிட்டு ஓடிப்போவது என்பது கிடையாது. நான் ஓடுவது எங்கே? வெற்றி, தோல்வி இரண்டுமே நம் கையில் இல்லை. நம் அளவில் நாம் செய்ய வேண்டியதைச் செய்தாலே போதும். செய்ய வேண்டியது எதையும் செய்யாது நான் விட்டுவைப்பதில்லை. முயற்சி செய்யவே நம்மால் ஆகும். முடிவில் இறைவன் இஷ்டப்படியே நடக்கும்.''

மற்றுமொரு நண்பருக்கு அவர் கூறியதாவது: ''வங்காளத்திலிருந்து தோல்வியுடன் திரும்ப நான் விரும்பவில்லை. அதைவிட ஒரு கொடியனின் கையால் கொல்லப்பட்டே சாவேன். ஆனல், அதை நான் விரும்பவுமில்லை; அதை வருவித்துக்கொள்ளவும் விரும்பவில்லை.'' இதற்குக் குறைந்தது எதையும் தமது சகாக்களிடமிருந்து தாம் எதிர்பார்க்கவில்லை என்றும் தெளிவாகக் கூறினர். பிறகு கொஞ்ச நாட்களுக்கெல்லாம் வேலையில் ஈடுபட்டிருக்கும்போது நான் என்னையும் அறியாமலேயே சங்கடத்தின் வலையில் சிக்கிக்கொண்டு கஷ்டத்தின் பேரில் தப்பியபோது காந்திஜி வருமாறு எழுதினர்: ''மிகவும் கஷ்டமான வேலையாக இருக்கப் போகிறது என்று ஆரம்பத்திலிருந்தே சொல்லிக்கொண்டிருக்கிறேன். இந்த வாழ்வில் இதைவிடக் கஷ்டமான வேலை நமக்கு ஏற்படப் போவதே இல்லை. நாம் நம்மை முற்றிலும் ஆண்டவனுக்கே ஒப்படைத்துக்கொள்ளுவோம். அவர் விரும்புவது நடந்தாகும்......அனுவசியமாக ஆபத்துக்குள் நீங்கள் போக வேண்டியதில்லை. ஆனல், தானே எது வந்தாலும் தயங்காமல் அதைச் சமாளியுங்கள். இந்த வகையில் நாம் எல்லோரும் அழிந்துவிடுவோமாயின் அதைப் பற்றிக் கொஞ்சமும் கவலைப்பட மாட்டேன்.''

தம்மைப்பற்றிய இன்னுமொரு குறிப்பில்அவர் கூறியதாவது: ''நான் மேலும் மேலும் ஆண்டவன் கரங்களுக்கே என்னை ஒப்படைத்துக் கொண்டிருக்கிறேன்.''

[ஸ்ரீ பியாரிலால் எழுதியது]
பாடியால்பூர், 14—12—1946

—'ஹரிஜன்'- 12—1—1947

# 18

# இக்கால புத்தர்

"அகிம்சா தூதரான, இக்கால புத்தரான நீங்கள், இந்நாட்டில் ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக்கொள்வதையும் ரத்தம் சிந்திக்கொள்ளுவதையும் ஏன் நிறுத்தக்கூடாது?" என்று ஜனவரி 15-ஆம் தேதி நாராயண்பூரில் ஒருவர் கேட்டார். இதற்குப் பதிலளிக்கையில் காந்திஜி கூறியதாவது:

"இக்கால புத்தர் என்ற குற்றச்சாட்டிலிருந்து நான் என்னை விடுவித்துக்கொள்ளுகிறேன். நான் சாதாரணமானவன், அதிக அனுபவமுள்ள ஓர் எளிய மனிதனே நான் என்று கூறிக்கொள்ளுகிறேன். இதற்காக இக்கூட்டத்திலிருக்கும் மற்ற யாரையும்விட நான் மேலானவன் என்று கொள்ளவில்லை. இரு சமூகங்களுக்கும், இந்தியாவிலுள்ள எல்லாச் சமூகங்களுக்குமே நான் சமமான ஊழியன். ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக்கொள்வதை நிறுத்தி, அதன் மூலம் ரத்தம் சிந்துவதையும் நிறுத்தும் சக்தி எனக்கு இருக்க வேண்டும் என்றே நான் விரும்புகிறேன். புத்தரும் அவருக்குப் பின்னால் வந்த ஞானிகளும், யுத்தங்களை ஒழிக்க அவரவர் வழிகளில் முயன்றுள்ளனர். அப்படிச் செய்ய என்னால் ஆகவில்லை என்ற உண்மையிலிருந்தே, விசேஷமான சக்தி எதுவும் எனக்குக் கிடையாது என்பது நிரூபிக்கப்படுவதாகிறது. நான் அகிம்சை விரதம் பூண்டிருக்கிறேன். என்னுடைய அகிம்சையின் சக்தியைச் சோதிப்பதற்காக நான் இப்பொழுது நோவாகாலிக்கு வந்திருக்கிறேன் என்பது உண்மை. நான் அடிக்கடி கூறி வந்திருப்பதே போல, இரு சமூகத்தினரும் சரியானபடி சமாதானத்தோடும் ஒற்றுமையாகவும் சொந்தச் சகோதரர்களைப் போல வாழ்வதைச் செயலில் காட்டினாலன்றி வங்காளத்தை விட்டுப் போகும் எண்ணமே எனக்கு இல்லை.

"பிரார்த்தனைக்கு முன்னால் என்னைப் பார்த்த முஸ்லிம் நண்பர்கள் என்னை ஒன்று கேட்டார்கள். கலவரத்தின்போது கொலை செய்தவர்களையும், தீயிட்டவர்களையும், கொள்ளையடித்தவர்களையும் கைது செய்து விசாரணைக்குக் கொண்டு வர வேண்டும் என்று ஹிந்துக்கள் கிளர்ச்சி செய்து வரும்போது, இரு சமூகங்களுக்கும் நட்பு இருக்கும் என்று எவ்விதம் எதிர்பார்க்க முடியும் என்று அவர்கள் கேட்கிறார்கள். அத்தகைய

கிளர்ச்சியை நானும் விரும்பவில்லை என்பதை ஒப்புக்கொள்ளு கிறேன். ஆனால், குற்றஞ் செய்தவர்கள் கைதியாகாதும், விசாரணைக்கு உட்படாமலும் தப்பிக்கொண்டிருக்கும் வரையில், குற்றஞ் செய்தவர்கள் தங்களைத் தாங்களே வெளிப்படுத்திக் கொண்டுவிட வேண்டும் என்று நோவாகாலி முஸ்லிம் பொது ஜன அபிப்பிராயம் வற்புறுத்தாமல் இருக்கும் வரையில், புகார் கூறுகிறவர்களிடம் நான் அனுதாபமே கொள்ளுகிறேன். குற்றஞ் செய்தவர்களை நீதி மன்றத்தின் முன்னால் அல்லது பொது ஜன அபிப்பிராயம் என்னும் நீதிமன்றத்தின் முன் கொண்டுவர முஸ்லிம் அபிப்பிராயம் தீவிரமாக வேலை செய்வதைக் காணவே நான் விரும்புகிறேன். குற்றஞ் செய்தவர்கள், அப்படிச் செய்ததற்காக வருந்திக் கொள்ளையடித்த பொருள்களைத் திருப்பிக் கொடுத்துவிடட்டும். தாக்கப்படுவார்கள் என்ற பயம் இனி வேண்டியதில்லை, வெறி கொண்டிருந்த காலமெல்லாம் போய் விட்டது என்பதை, யாரிடம் குற்றங்களைச் செய்தார்களோ அவர்களுக்கு இப்பொழுது இவர்கள் காட்டட்டும். விஷமிகள் யாரும் குற்றஞ் செய்ய இனித் துணியமாட்டார்கள் என்ற உத்தரவாதத்தை அளிக்கும் வகையில் முஸ்லிம் பொதுஜன அபிப்பிராயம் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் தங்கள் கிராமங்களுக்குத் திரும்புமாறு ஹிந்துக்களுக்குச் சொல்ல முடியும். பொதுஜன அபிப்பிராயம் என்னும் நீதிமன்றத்தின் முன்னால் இவ்விதம் குற்றம் ஒழிக்கப்படுவது, நீதி மன்ற விசாரணையை விட எவ்வளவோ மேலானது என்பது நிச்சயம். வேண்டுவதெல்லாம், திருந்த வேண்டும் என்பதேயன்றி வஞ்சந் தீர்த்துக்கொள்ள வேண்டும் என்பது அல்ல.

—'ஹரிஜன்'-9-2-1947.

# 19

# அகிம்சை வழி

பிரார்த்தனைக் கூட்டத்தில் பிரார்த்தனைக்குப் பிறகு காந்திஜி பேசியதாவது: "பிகாரிலுள்ள ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் முன்னால் இருந்துவந்த உணர்ச்சி திரும்ப ஏற்பட வேண்டும் என்பதே என் நோக்கம். முன்னால் அவர்கள் வெறும் சகோதரர்களைப்போல மாத்திரம் வாழவில்லை. அநேகமாக ஒருவருக்கொருவர் உண்மைச் சகோதரர்களும் சகோதரிகளுமாகவே வாழ்ந்து வந்தார்கள் என்று சொல்லலாம். அப்போதைக்கப்போது அபிப்பிராய பேதங்களும், சச்சரவுங்கூட இருந்திருக்கலாம். ஆனால், இப்பொழுது உள்ளத்தைவிட்டு உள்ளம்

பிரிக்கப்பட்டிருப்பதைப் போன்ற அளவுக்கு எப்பொழுதும் ஏற்பட்டதே இல்லை. உள்ளத்தை வேதனைப்படுத்தும் காரியங்கள் நடந்துவிட்டன; அவைகளைச் சொல்லுவதும் எனக்குக் கஷ்டமாக இருக்கிறது. நடந்ததையெல்லாம் பின்னால் வைத்துக்கொண்டு, இப்பொழுதுள்ள நிலைமையில் உங்கள் கடமை என்ன என்பதை நீங்கள் சிந்திக்க வேண்டும் என்றே விரும்புகிறேன்.

நாட்டின் முன்பு இப்பொழுது இருக்கும் வழிகள் இரண்டே. அடிக்குப் பதில் அடி கொடுப்பது என்ற வழியைப் பஞ்சாப் மேற்கொண்டிருக்கிறது என்று தோன்றுகிறது. மற்றொரு வழி, கலப்பற்றதான அகிம்சை. இம்சை முறையைப் பொறுத்த வரையில், பலாத்காரத்தினால் ஏதோ ஒரு வகையான சமாதானம் மாகாணத்தில் ஏற்படக்கூடும். இத்தீமை, 1857-இல் நடந்ததைப் போன்று இந்தியா முழுமைக்கும் பரவிவிடாது என்று நான் நம்பலாமேயன்றி நம்பிக்கையோடு சொல்லிவிட முடியாது. சிப்பாய் யுத்தத்தின்போது இதே போன்ற காரியங்களே நடந்தன என்பதையும், அதிகமான ஆயுத பலம் கொண்டு அது அடக்கப்பட்டது என்பதையும் நாம் அறிவோம். ஆனால், திணிக்கப்பட்ட ஆட்சி மீது ஏற்பட்ட துவேஷம் ஆழத்தில் இருந்துகொண்டே இருந்தது. அன்று விதைத்ததன் விளைவை நாம் இன்றுங்கூட அறுவடை செய்துகொண்டிருக்கிறோம். கிழக்கிந்தியா கம்பெனியின் இடத்தில் பிரிட்டிஷ் அரசாங்கம் ஆட்சிக்கு வந்தது. அவர்கள் பள்ளிக்கூடங்களையும் கோர்ட்டுகளையும் ஏற்படுத்தினார்கள். இவைகளை இந்தியர் உற்சாகத்துடன் பயன்படுத்திக்கொண்டனர். மேனாட்டுக் கலாசாரத்தைப் பரப்புவதிலும் ஒத்துழைத்தார்கள். இவையெல்லாம் இருந்தும், அரசியல் அடிமையாகிவிட்ட அவமானத்தை, மரியாதைக் குறைவை இந்தியரால் சகிக்கவே முடியவில்லை. அதேபோல, ஆனால் இன்னும் மோசமான வகையில், பஞ்சாப் மக்களுக்கு எதிராக உபயோகிக்கப்பட்ட பலாத்காரத்தின் காரணமாகப் பாஞ்சாலத்தில் அமைதி ஏற்பட்டால், ஹிந்துக்களும் முஸ்லிம்களுமான சகோதர சகோதரிகளுக்குள்ளே மேற்கொண்டும் சச்சரவுக்கும் துவேஷத்திற்குமான வித்து இன்னும் ஆழமாகத்தான் பதிந்துவிடும்.

இவ்விதம், இம்சையை இம்சையினால் போக்கிவிடவே முடியாது. இதற்குள்ள சரியான மாற்று, அகிம்சை வழி ஒன்றே. 1917-இல் சம்பாரணில் பிகார் இப்பாடத்தைக் கற்

றிருக்கிறது. அந்த இயக்கத்திற்குப் பொறுப்பாளிகளான விவசாயிகள், ஆங்கிலத் தோட்ட முதலாளிகளுடன் ஒத்துழையாமையை நடத்தி வந்தபோது பலாத்காரத்தை உபயோகித்து விடாமல் அவர்களைச் சீக்கிரத்தில் கட்டுத்திட்டங்களுக்கு உட்படுத்த முடிந்தது. அவர்களுடைய அகிம்சை பலவீனர்களின் அகிம்சையே என்று இவ்வளவு காலம் கழிந்த பிறகு ஒரு வேளை நான் சொல்லக்கூடும். இந்தியர்கள் தங்கள் சகோதரருக்குள்ளே இப்படிப் பலாத்காரத்தோடு சண்டையிட்டுக் கொள்ளும்போது அத்தகைய அகிம்சையே பயனில்லை; வலியவர்களுக்கான அகிம்சையே உண்மையில் பயனுள்ளதாக இருக்கும்.

இதற்கு முதல் காரியமாக, செய்த தவறுகளுக்கு உண்மையிலேயே வருந்துவது இருக்க வேண்டும். அது, வீரம் பேசுவதை அடிப்படையாகக் கொண்டிருக்கக்கூடாது. திடீரென நமக்கு ஏற்பட்ட வெறியினால் துன்பங்களை அடைந்து விட்டவர்களுக்கு நியாயத்தைச் செய்யவேண்டும் என்ற உண்மையான உணர்ச்சியினால் ஏற்பட்டதாக அது இருக்கவேண்டும். என்னுடைய சொந்தச் செல்வாக்கு அல்லது என்னுடைய முந்திய சேவைகளைக் கொண்டு யாரும் மயங்கிவிட வேண்டாம். அமைதியாகவும் பற்றுடனும் சிந்தியுங்கள். அகிம்சை வழியே சரி என்று உங்கள் அறிவுக்கும் உள்ளத்திற்கும் பட்டால், முஸ்லிம் சகோதரருக்குச் செய்துவிட்ட தவறுகளுக்குப் பரிகாரம் தேட வாருங்கள்.

மாகாண முஸ்லிம் லீகின் காரியதரிசி அன்புடன் என்னிடம் வந்து, வெளியேறியவர்களைத் திருப்பிக்கொண்டு வர அரசாங்கம் ஏற்பாடுகளைச் செய்திருந்தும் ஹிந்துக்களின் புத்திப் போக்கு போதுமான அளவுக்கு நம்பிக்கை அளிப்பதாக இல்லை என்று என்னிடம் புகார் கூறினர். உள்ள நிலையைச் சமாளித்தாக வேண்டும். விரோத மனப்பான்மையே கொஞ்சமும் இல்லாதவாறு ஒழிக்க ஒவ்வொருவரும் உறுதியான முயற்சி செய்ய வேண்டும். உங்கள் முஸ்லிம் அண்டை வீட்டினரும் சகோதர அன்போடு வாழ்வது சாத்தியமாகும்படி செய்யவேண்டும்.

பிகார் ஹிந்துக்கள் அப்படி யோக்கியமாக எண்ணவில்லை என்றால், இக்காலத்தின் சவாலுக்குச் சரியான பதில் இம்சை ஒன்றே என்றுதான் நினைக்கிறார்களெனின், அதை அவர்கள் மனம் விட்டு உண்மையோடு சொல்லிவிடட்டும். உண்மையைச் சொல்லிவிட்டதற்காக வருத்தப்பட மாட்டேன். ஆனால்,

இவ்விதம் அகிம்சை முறை முறியடிக்கப்பட்டுவிடும் நாளை நான் உயிருடன் இருந்து பார்க்க மாத்திரம் விரும்பேன். என்னுடைய இன்பமான நோக்கம் நிறைவேறுவதற்காக நான் எந்த இடத்தில் உயிரை விடுகிறேன் என்பது பெரிய விஷயமல்ல ; இந்தியாவில் எந்த இடமாயினும் அதுவே இனியும் எனக்கு இந்தியாவாக இருக்கும். ஆனால், முடிவில் அகிம்சையே வெற்றி பெறும் என்ற நம்பிக்கையை விடாமல் இன்னும் பற்றிக்கொண்டுதான் இருக்கிறேன். ஏனெனில், இவ்வகையில் பிகார் இன்று செய்து காட்டும் உதாரணத்திலேயே இத்துர்ப்பாக்கிய நாட்டின் வருங்கால அமைதி, அபிவிருத்தி, நம்பிக்கை எல்லாம் நிற்கின்றன.

—'ஹரிஜன்' – 30—3—1947

# 20

# உண்மையான மதம்

மகாத்மாவின் வார மௌன தினத்தன்று பிரார்த்தனைக் கூட்டத்தில் படிப்பதற்காகக் காந்திஜி ஹிந்துஸ்தானியில் எழுதியதன் மொழிபெயர்ப்பு வருமாறு :

"30-ஆம் தேதி காலை வண்டிக்கு நான் திரும்பவும் டில்லிக்குப் போக வேண்டியிருக்கிறது என்பதை உங்களுக்குத் தெரிவிக்க வேண்டியிருப்பதற்காக வருந்துகிறேன். பண்டித நேரு என்னை அழைத்திருக்கிறார். மே 1-ஆம் தேதி காங்கிரஸ் காரியக் கமிட்டி கூடுவதால் அன்று நான் டில்லியில் இருக்க வேண்டும் என்று ராஷ்டிரபதி கிருபளானி எனக்குத் தந்தி கொடுத்திருக்கிறார். இந்தக் கட்டத்தில் உங்களை விட்டுப் போவது எனக்கு வேதனையாக இருக்கிறது. முஸ்லிம்கள் முற்றிலும் பயத்தையெல்லாம் விட்டுவிட்டு, குற்றமற்ற மனச்சாட்சியுடன் போக இரு சமூகங்களும் என்னை அனுமதித்தாலன்றிப் பிகாரிலிருந்து போவது என்பதே எனக்குப் பிடிக்கவில்லை. நோவாகாலியிலிருந்து கிளம்பியபோதும் அப்படித்தான் உணர்ந்தேன். இந்த இரு இடங்களுக்குமே என்னுடைய லட்சியம் 'செய் அல்லது செத்துப் போ' என்பதுதான். சிறுபான்மையினருக்குச் சேவை செய்யுமாறு என் அகிம்சை எனக்கு ஆணையிடுகிறது. இந்த இரண்டு இடங்களிலுமுள்ள ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒருவருக்கொருவர் சமாதானத்தோடு வாழ்ந்து பகையையும் விட்டொழித்து விடுவார்களாயின், அது எனக்கு மறுபிறப்பே போல் ஆவதுடன் அதிகப்படியான பலத்தையும் அளிக்கும். இந்தக் குழப்பத்தில் என்ன ஏற்படும் என்பது கடவுளுக்கே தெரியும்.

முயற்சி செய்து அம்முயற்சியில் அழியத்தான் மனிதனால் ஆகும். கடவுளே எல்லாம் வல்லவர், நாம் எல்லோரும் வெறும் பூஜ்யங்களே. அந்த லட்சியமே என்னை டில்லிக்குக் கொண்டு போகிறது. சீக்கிரமே திரும்பி வேலையை மீண்டும் தொடங்க முடியும் என்று நம்புகிறேன்.

முஸ்லிம்களின் நண்பனாக நடந்து ஹிந்துக்களின் உரிமைகளைக் கெடுத்துவிட்டதாக இன்னும் எனக்குக் கடிதங்கள் வந்து கொண்டிருக்கின்றன என்பதை அறிந்து ஆச்சரியப்படுவீர்கள். முஸ்லிம்களுக்கு நண்பனாக இருக்க முயற்சி செய்வதன் மூலம் நான் உண்மையான ஹிந்து என்று நிரூபித்திருப்பதோடு ஹிந்துக்களுக்கும் ஹிந்து தருமத்திற்கும் சரியானபடி சேவையும் செய்திருக்கிறேன் என்பதற்கு ருசுவாக காட்ட என்னுடைய ஐம்பது ஆண்டு பொது வாழ்க்கையே தவறியிருந்தால் வெறும் வார்த்தைகளினால் மக்களுக்குத் திருப்தி ஏற்பட்டுவிடும்படி செய்ய என்னால் எவ்விதம் முடியும்? சேவை செய்ய வேண்டும், எல்லோருக்கும் நண்பனாக இருக்க வேண்டும் என்பதே உண்மையான மத உபதேசத்தின் சாரம். என் தாயின் மடியில் கிடந்த காலத்திலேயே நான் இதைக் கற்றேன். என்னை ஹிந்து என்று சொல்ல நீங்கள் மறுக்கலாம். இக்பாலின்* கீர்த்தி வாய்ந்த கீதத்திலிருந்து இவ்வடியைக் குறிப்பிடுவதைத் தவிர எனக்கு வேறு சாட்சியம் இல்லை: 'மஜ்ஹப் நஹீம் சிக்காதா ஆபஸ்மேன் பைர் ரக்னா' (ஒருவர் மீது மற்றொருவர் கெட்ட எண்ணங்கொள்ளுமாறு மதம் நமக்குப் போதிக்கவில்லை என்பதே இதன் பொருள்.) நண்பரிடம் நட்போடு இருப்பது யாருக்கும் எளிதானது. தாம் உங்களுக்கு விரோதி என்று எண்ணிக்கொண்டிருப்பவரிடம் நட்புடன் இருக்க வேண்டும் என்பதே உண்மையான மதத்தின் சாரம்; மற்றது வெறும் வியாபாரம்.

—'ஹரிஜன்' - 11—5—1947

## 21

# அகிம்சை, வாழ்வின் உண்மை

**கேள்வி-1:** உங்களுடைய அகிம்சை உபதேசத்தினால் மாறி விடும் ஹிந்துக்கள் சீக்கிரமாக வருங்காலத்தில் முஸ்லிம் லீகைப் பின்பற்றுவோரிடம் அடிபடுவார்கள். முஸ்லிம்கள்

---

* ஸர் மகம்மது இக்பால் - பிரபல உருது கவி

பெருமளவில் ரகசியமாக ஆயுதபாணிகளாகி வருகின்றனர் என்ற நம்பிக்கை இருப்பதால் பொதுவாக இவ்விதமே கருதப்படுகிறது.

**பதில் 1:** அப்படி எண்ணிக்கொள்ளுவது மோசமானதாகும். அப்படி நினைப்பது சரியே என்றால், மாகாண சர்க்கார்கள்மீதும் அது கெட்ட எண்ணத்தைக் கற்பிப்பதாகும். அது எப்படியானாலும், ஆயுத பலம் என்னதான் பலமுள்ளதாக இருந்தாலும், அதைவிடப் பலமுள்ளதான அகிம்சையை என்னுடைய உபதேசத்தின் பலனை ஹிந்துக்கள் அடைய வேண்டும் என்றே நான் ஆசைப்படுகிறேன். உபாத்தியாயர் சொல்லிக்கொடுக்கும் ஒன்றை இன்னொருவர் கேலியாகச் செய்தால், அதற்காக உபாத்தியாயரைக் குற்றங் கூற முடியாது. பீஜ கணிதக் கணக்குகளைப் பல மாணவர்களும் எவ்விதம் கேலியாக எழுதுகிறார்கள் என்பது நமக்குத் தெரியாதா? இதற்கு உபாத்தியாயர்களைக் குற்றஞ் சொல்லுவதா? என்னைப்பற்றி அதிகபட்சம் சொல்லக்கூடியதெல்லாம், நான் தகுதியற்ற அகிம்சைப் போதகன் என்பதே. அதுதான் என்றால், எனக்குப் பின்னால் வருபவராவது இன்னும் அதிகத் திறமை வாய்ந்தவராகவும், வெற்றியுடன் காரியங்களைச் செய்பவராகவும் இருக்க வேண்டும் என்று கடவுளைப் பிரார்த்திப்போம்.

**கேள்வி 2:** இந்தியாவிலிருந்து பிரிட்டிஷார் வெளியேறிய பிறகு நாட்டில் குழப்பமும் அராஜக நிலையும் ஏற்படக்கூடும். தேசீயவாதிகள், துப்பாக்கிகளைக் கொண்டு தற்காப்புச் செய்துகொள்ளுவதை உடனே கற்றுக்கொள்ள ஆரம்பிக்காவிட்டால், முஸ்லிம் லீகைப் பின்பற்றுகிறவர்கள் போராடுவது ஒன்றிலேயே நம்பிக்கையுள்ளவர்களாக இருப்பதால், முடிவில் முஸ்லிம் லீகின் காலடியின்கீழ்க் கிடக்க வேண்டியவர்களாகிவிடுவார்கள் என்ற பயம் இருந்து வருகிறது. பாகிஸ்தானோ, பாகிஸ்தான் இல்லையோ, திரை மறைவில் ஏகாதிபத்தியத்தின் கை ரகசியமாக வேலை செய்துகொண்டு வருவதனாலேயே சங்கடங்கள் உண்டாகின்றன. தேசத்தில் இத்தகைய ஒரு நிலைமை ஏற்பட்டுக்கொண்டு வருவதை முன்னிட்டு, தனிப்பட்டவர்களின் பாதுகாப்புக்கு உங்கள் அகிம்சைத் தத்துவத்தை மாற்றிக்கொள்ள மாட்டீர்களா?

**பதில் 2:** நீங்கள் எண்ணுகிறபடி முஸ்லிம் லீகுக்குத் தேசீயவாதிகள் அஞ்சுவதாக இருந்தால், அவர்கள் தாங்கும் பெருமையான பெயருக்கு அவர்கள் கொஞ்சமும் அருகதை

யுள்ளவர்கள் ஆகமாட்டார்கள். தேசீயவாதிகள் தங்களுடைய செயலின் வட்டத்திலிருந்து முஸ்லிம் லீகைப் பின்பற்றுவோரை ஒதுக்கிவிட முடியுமா? வோட்டுச் சேகரிக்கும் தந்திரத்தைக் குறித்து நான் எண்ணிக்கொண்டிருக்கவில்லை. மற்றவர்களைப் போலவே முஸ்லிம்களும் இந்தியர், அவர்களையும் கவனிக்க வேண்டும் என்றே நான் எண்ணி வருகிறேன். அகிம்சையை நம்புவதைத் தலைவர்கள் விட்டுவிட்டார்களானால், அதை அவர்கள் தைரியமாகவும் மனம் விட்டும் சொல்லிவிட்டுத் தங்கள் காரியத்தை ஒழுங்குபடுத்திக்கொள்ள வேண்டும். என்னைப் பொறுத்தவரையில், எந்தவிதமான மாறுதலுக்கும் இடமே இல்லை. எனக்கு அகிம்சை வெறும் தத்துவம் மாத்திரமல்ல; அதிக அனுபவத்தின்மீது ஏற்பட்ட வாழ்வின் உண்மை அது எனக்கு. ஆப்பிள் பழத்தைத் தின்று, அது இனிப்பானதே என்பதைத் திரும்பத் திரும்ப அறிந்திருக்கும் ஒருவரை, அது கசக்கும் என்று சொல்லும்படி எப்படிச் செய்துவிட முடியும்? அது கசக்கும் என்கிறவர்கள் ஆப்பிள் பழத்தைத் தின்றவர்கள் அல்ல; அதைப் போன்ற வேறு ஏதோ ஒன்றைத் தின்றவர்களே. கேள்வி கேட்டிருப்பவர் கூறுகிறபடி ஏகாதிபத்தியத்தின் கை ரகசியமாகவே வேலை செய்து வருகிறது என்பதை வாதத்திற்காக ஒப்புக்கொள்வதாயினும், ரகசியம் அல்லது பகிரங்க வேலை எதற்கும் அகிம்சை அஞ்சக்கூடாது.

– 'ஹரிஜன்' – 25-5-1947

## 22

# டில்லியில்

[டில்லியில் கடுமையான வெயில். பண்டித நேருவின் அழைப்பிற்கு இணங்கி மே 25-ஆம் தேதி காந்திஜி டில்லிக்கு வந்தார். சில நாட்கள் ஓய்வுக்கும் இடமாற்றத்திற்குமாகச் சர்தாரும் பண்டிதஜியும் முஸோரிக்குப் போயிருந்தனர். அங்கு வருமாறு காந்திஜிக்கு அவர்கள் இருவரும் தந்தி கொடுத்திருந்தார்கள். நோவாகாலி, பிகார், கல்கத்தா ஆகிய இடங்களில் இரு சமூகத்தினருக்குமிடையே நட்புறவு ஏற்பட்டாலன்றித் தமது சேவைத் துறையை விட்டுப் போவதில்லை என்று காந்திஜி பிரதிக்ஞை செய்துகொண்டிருந்ததால் அவர் முஸோரிக்குப் போக முடியவில்லை.]

நாட்டில் நடந்து வருபவை காந்திஜிக்கு அதிகமாக மன வேதனையை உண்டாக்கிவிட்டன. தம்மிடம் வழக்கமாக இருந்த சிப்பந்திகளின் சேவைகளையும் வேண்டாம் என்று விட்டதால் இரு வகையிலும் அவருக்குக் கஷ்டம். தமது உடல் நிலை, உயிர்

பற்றிக் கொஞ்சமும் கவலைப்படாதவர் ஆகிவிட்டார். "இன்று உருவாகி வருவதாக நான் காணும் இந்தியாவில் எனக்கு இடமே இல்லை" என்றார் காந்திஜி. அவர் தொனியில் உணர்ச்சி வேகம் இருந்தது. அவர் மேலும் கூறியதாவது: "125 வயது வரை வாழ்வது என்பதில் வைத்திருந்த நம்பிக்கையை இழந்து விட்டேன். ஒன்று அல்லது இரண்டு ஆண்டுகளுக்கு நான் உயிரோடு இருக்கலாம். அது முற்றிலும் வேறு விஷயம். இப்பொழுது பயமுறுத்தி வரும் இம்சைப் பிரளயப் பிரவாகத்திலேயே இந்தியா மூழ்கிவிடுவதாயின் உயிரோடு இருக்க நான் விரும்பவில்லை. எங்கும் வகுப்புவெறி இருந்து வருகிறது. ராணுவ மயமாக்க வேண்டும், தொழிற்சாலை மயமாக்க வேண்டும் என்றெல்லாம் பேசுகிறார்கள். இந்தியா முதல்தர ராணுவ பலமுள்ள நாடாகவும், தொழில் வளர்ச்சியில் ஓங்கிய நாடாகவும் ஆகலாம். ஆனால், அப்படிப்பட்ட இந்தியாவில் அகிம்சையின் சின்னங்களான கதருக்கும், கிராமக் கைத்தொழில்களுக்கும் இடம் ஏது?"

பழைய ஆசிரமவாசி ஒருவருக்குப் பின் வருமாறு காந்திஜி எழுதினார்: "நான் தீயின் நடுவே இருந்து வருகிறேன். அத் தீ என்னைத் தின்றுவிடாதது கடவுளின் அன்பா அல்லது அவருடைய திருவிளையாடலா?"

அப்படியும் எப்போதும்போல அவரை இருந்துவரச் செய்தது எது? அவ்விதம் செய்தது அவருடைய ஹிமாலய நம்பிக்கையே. 1935-இல் காந்திஜியுடன் சில தினங்கள் தங்கியிருந்த ஓர் ஐரோப்பிய நண்பர் அமெரிக்காவிலிருந்து அவருக்கு வருமாறு எழுதினார்: "அணுக்குண்டுச் சரக்கான யு. 235-ஐத் தயாரிக்கும் இடத்திற்குச் சமீபத்திலுள்ள இவ்வுலகின் பகுதியில் இருந்து கொண்டு பிரார்த்தனையோடு உங்களைச் சிந்திக்கிறேன். உங்களுடைய பிரகாசமான, நட்புடன் கூடிய வழியிலும், ஞானத்திலும் மாத்திரமே மேனாட்டு நாகரிகத்திற்கு நம்பிக்கை ஒளியை நான் காண்கிறேன்." இதற்குப் பதிலாகக் காந்திஜி எழுதியதாவது: "சாத்தியமானால், என் நம்பிக்கை முன்பிருந்ததைவிட இன்னும் நன்றாக பிரகாசிக்கிறது என்பதைத் தவிர என்னை நீங்கள் முன்பு பார்த்தபடியேதான் நான் இருந்து வருகிறேன்."

சீனாவின் ஸ்தானிகர் டாக்டர் லோசியா லூயன், காந்திஜியைப் பார்க்கப் பண்டித நேருவுடன் வந்தார். "விஷயங்கள் எந்த விதத்தில் தாமே உருவாகும் என்று எண்ணுகிறீர்கள்? வருங்காலத்தைப்பற்றி நீங்கள் நினைப்பது என்ன?" என்று அவர் கேட்டார். இதற்குக் காந்திஜி கூறியதாவது: "வங்காளத்

திலும், பிகாரிலும், பஞ்சாபிலும் புத்தி கெட்டு ரத்தஞ் சிந்தப்படுவதைப் பார்க்கும்போது நாம் காட்டுமிராண்டிகளாகிக்கொண்டிருக்கிரும் என்றே தோன்றுகிறது. இத்தனை ஆண்டுகள் நாம் வாழ்ந்து பாடுபட்டதெல்லாம் வீணில் இப்படி ஆவதற்காக அன்று. அன்னிய விலங்கை விட்டொழிப்பதால், எல்லா அழுக்கும் சகதியும் இப்பொழுது மேலே கிளம்புகின்றன என்பதற்கு அறிகுறியே இது என்றே நான் உணர்கிறேன். கங்கையில் பிரவாகம் இருக்கும்போது அதன் நீர் கலங்கலாக இருக்கிறது அழுக்கெல்லாம் மேலே வந்துவிடுகிறது. வெள்ளம் வடிந்ததும் அதன் நீர் தெளிவாகவும் நீல நிறத்தோடும் கண்ணுக்குக் குளிர்மையாகவும் இருப்பதைக் காண்கிரும்.அதையே நான் நம்புவதுடன் அதற்காகவே நான் வாழ்கிறேன். இந்திய ஜனசமூகம் காட்டுமிராண்டியாவதைக் கண்டு வாழ நான் விரும்பவில்லை.

"வருங்காலத்தைப்பற்றி யார் ஜோசியம் கூற முடியும்? அநேக ஆண்டுகளுக்கு முன்னுல் பட்லரின் 'அனலஜி'* என்ற நூலைப் படித்தேன். 'அநேகமாக, முன்னுல் நடந்தவற்றின் பலனே வருங்காலம்' என்று அதில் படித்தேன். இந்தியரின் நம்பிக்கைக்கு இது ஒத்ததாக இருப்பதால் இக்கருத்து என்னிடம் தொடர்ந்து இருந்து வருகிறது. நம் விதியை நிர்ணயித்துக் கொள்ளுகிறவர்கள் நாமே. இப்பொழுது உள்ளதை நாம் திருத்தலாம் அல்லது தடுக்கலாம். அதைப் பொறுத்தே வருங்காலம் இருக்கிறது."

சற்று நேரம் சீன ஸ்தானிகர் சிந்தனையில் ஆழ்ந்தார். பிறகு, "சரித்திரம் திரும்பவும் தானே நடந்து வருகிறது. ஏனெனில், சரித்திரத்தின் பாடத்தை நாம் அறிந்துகொள்வதில்லை" என்ருர். அதற்குக் காந்திஜி கூறியதாவது: "அது முழு உண்மையும் அல்ல. சரித்திரம் தானே திரும்பவும் நடந்துவிடுகிறது என்று இன்று தோன்றலாம். எதுவுமே மாருமல் இருந்துவிடுவதில்லை என்று நான் நம்புகிறேன். மனித சுபாவம், ஒன்று மேலுக்குப் போகிறது அல்லது தாழ்வடைகிறது. அது இந்தியாவில் மேலுக்குப் போய்க்கொண்டிருக்கிறது என்று நம்புவோமாக. அப்படி இல்லையென்ருல், இந்தியாவுக்கு, அநேகமாக உலகம் முழுமைக்குமே பிரளய நாசத்தைத் தவிர வேறு எதுவுமில்லை."

சீனவில் யுத்தத்தினல் ஏற்பட்ட நாசங்களைக் குறித்துப் பிறகு இருவரும் பேசினர்கள். யுத்தத்தினல் களைத்துப்

---

* ஜோசப் பட்லர் (1692—1752)-ஆங்கிலச் சமய அறிஞர். டர்ஹாமில் பிஷப்பாக இருந்தவர். 'அனலஜி ஆப் ரிலிஜன்' (சமயத்தில் காணும் ஒருமைப்பாடு) என்ற புகழ் மிக்க நூலை எழுதியவர்.

போயிருக்கும் ஆசிய நாடுகள், ஜப்பானைப் பின்பற்றி ராணுவமய மாகிவிடுமா? இந்தியா தனது பலத்தை எந்தத் திக்கில் திருப்புகிறது என்பதைப் பொறுத்திருக்கிறது இதற்குப் பதில். பிரார்த்தனைக் கூட்ட முடிவு ஒன்றில் காந்திஜி வருமாறு கூறினார்: "உலகத்தில் இந்தியா சிரிப்புக்கிடமானதாகி வருகிறது. நீங்கள் உங்கள் சுதந்திரத்தை வென்றீர்களே அந்த அகிம்சை இப்பொழுது எங்கே என்று உலகம் கேட்கிறது. நான் வெட்கத்தினால் தலை குனிய வேண்டியதாகிறது. பலாத்காரமே உலகத்தின் நோயாகிச் சாகும் கட்டத்திற்கு அது வந்திருக்கிறது. அந்த உலகத்திற்குச் சுதந்திர இந்தியா, சமாதான பாடத்தை அளிக்குமா அல்லது துவேஷத்தின் பாடத்தை அளிக்குமா?"

அறிஞரான அந்த ஸ்தானிகர், சீன மக்களின் ஆழ்ந்த மரியாதையையும் அன்பையும் காந்திஜிக்குத் தெரிவித்துக் கொண்டார். அந்த அன்பு முக்கியம் என்றார் காந்திஜி. இந்தியாவுடன் அநேக விஷயங்களில் ஒரே விதமாக இருக்கும் சீனாவுக்கு வரத் தாம் ஆசைப்படுவதாகவும் கூறினார். சீன வேதாந்தத்தைப்பற்றிப் பேசிய ஸ்தானிகர், லவோ-த்ஸே கூறியிருக்கும் 'வைத்துக்கொண்டிருப்பது என்பதில்லாத உற்பத்தி, அகந்தையில்லாத செயல், ஆதிக்கம் வகிக்காத சிருஷ்டி' தருமத்தைப்பற்றிச் சொன்னார். காந்திஜியின் முகம் பிரகாசம் அடைந்தது. "நீங்கள் உபநிஷதங்கள் கூறுவதையே கூறுகிறீர்கள். இதே கருத்துக்கள் ஈசோபநிஷதத்திலும் காணப்படுகின்றன." என்றார்.

புது டில்லி, 28--5--1947 —'ஹரிஜன்' - 8—6—1947

# 23

# அடிப்படையான பேதம்

பிரார்த்தனைக்குப் பிறகு காந்திஜி பேசியபோது கூறியதாவது:

"இப்பொழுதெல்லாம் என்னுடைய பேச்சுக்கள் மனச் சோர்வை உண்டாக்குபவையாக இருக்கின்றன என்று கூறப்படுகிறது. நான் பேசாமல் இருப்பதே மேல் என்றும் சிலர் யோசனை கூறுகிறார்கள். இவ்விதம் ஆலோசனை கூறும் பலர், ஓர் ஓவியக்காரரின் கதையையே எனக்கு நினைவுபடுத்துகிறார்கள். அவர் தாம் தீட்டிய சித்திரத்திற்குக் கண்ணாடி போடாமல் அதை ஒரு கடையில் வெளியே வைத்தாராம். அப்படத்தில் யாருக்கு எந்தப் பகுதி பிடிக்கவில்லையோ அதைப் படத்தில் அடையாளமிட்டுச் செல்லலாம் என்றும் அறிவித்துவிட்டாராம். படம் முழுதும்

சாயத்தால் ஒரே மெழுக்காகிவிட்டதே அதன் பலன். எல்லோருக்கும் திருப்தியளித்துவிடுவது என்பது முடியாத காரியம் என்பதைக் காட்டவே அந்த ஓவியக்காரர் விரும்பினார். ஆகையால், தாம் நல்ல சித்திரத்தையே எழுதியிருந்ததாக அவர் திருப்தியடைந்தார். தம்முடைய சித்திர ருசிக்குத் திருப்தியளிப்பதான ஓவியத்தைத் தீட்டவேண்டியதே அவர் வேலை. அதுபோன்றே என் வேலையும். பேச வேண்டும் என்பதற்காக நான் பேசுவதில்லை என்றே நம்புகிறேன். மக்களுக்கு ஒன்றைச் சொல்லியாக வேண்டும் என்று நான் உணரும்போதே பேசுகிறேன். என்னுடைய நெருங்கிய நண்பர்கள் பலர் செய்ததையோ அல்லது செய்துகொண்டிருப்பதையோ நான் ஒப்புக்கொள்ளவில்லை என்பது உண்மை. நான் டில்லியில் இருக்கும்போது, சமீப சம்பவம் எதையாவது குறித்து என் கருத்து ஒன்று இருக்குமாயின், அதை நான் சொல்லாமல் இருக்க முடியாது. இதிலிருக்கும் முக்கியமான பேதந்தான் என்ன? இதைப் பரிசீலனை செய்து பார்த்தால் இதில் அடிப்படையான பாகுபாடு ஒன்றுமட்டுமே இருப்பதையும், மற்ற எல்லாம் அதில்தான் இருக்கின்றன என்பதையும் நீங்கள் காணலாம். அகிம்சை எனது தருமம். அது என்றுமே காங்கிரஸின் தருமமாக இருந்ததில்லை. காங்கிரஸுக்கு எப்பொழுதுமே அது ஒரு கொள்கை. ஒரு கொள்கை, அது இருக்கும் வரையில் மட்டும் தருமமேயன்றி அத்ற்கு மேலும் அல்ல. அவசியம் என்று கருதும்போது அதை மாற்றிக்கொண்டுவிடக் காங்கிரஸுக்கு உரிமை உண்டு. ஒரு தருமத்தை மாற்றிக்கொள்ளவே முடியாது. காங்கிரஸ் விதிகளின்படி கொள்கை அதைக் கட்டுப்படுத்தினாலும், நடைமுறை சந்தேகத்திற்கு இடமின்றிக் கொள்கையை மாற்றிவிட்டது. நுட்பம் அறிந்தவர்கள் உண்மையுடன் சச்சரவிடலாம். நீங்களும் நானும் அப்படிச் செய்ய முடியாது; செய்யக்கூடாது. இன்று இருக்கும் காங்கிரஸின் கர்த்தாக்கள் உண்மையில் கொள்கையை ஏன் மாற்றிக்கொள்ளக்கூடாது? சட்டம், தன்னையே கவனித்துக்கொள்ளும். விதிகளில் ‘அமைதியான’ என்ற சொல் உபயோகிக்கப்பட்டிருக்கிறதேயன்றி, ‘அகிம்சையோடு கூடிய’ என்ற சொல் இல்லை என்பதையும் கவனிக்க வேண்டும்.

காங்கிரஸ் 1934-இல் பம்பாயில் நடந்தபோது ‘அமைதியான’ என்பதற்குப் பதிலாக ‘அகிம்சையோடு கூடிய’ என்ற சொல்லைச் சேர்க்க முயன்று தோல்வியடைந்தேன். ஆகவே ‘அகிம்சையோடு கூடிய’ என்பதற்குக் குறைவானதான ஒரு

பொருளை 'அமைதியான' என்ற சொல்லுக்குக் கொடுத்துவிட லாம். இதில் நான் பேதத்தைக் காணவில்லை. ஆனால், என் கருத்துப் பொருந்தாது. ஏதாவது பாகுபாடு இருந்தால் அதை நிர்ணயிப்பது பண்டிதர்கள் வேலை. இன்று காங்கிரஸ் அனுசரித்து வருவது, அகிம்சை என்பதற்குரிய உண்மைப் பொருளில் அகிம்சை அன்று. இதையே நீங்களும் நானும் உணர வேண்டும். காங்கிரஸ் அகிம்சைக் கொள்கைப் பிரதிக்ஞை கொண்டிருக்குமாயின், அதனால் ஆதரிக்கப்படும் ராணுவம் இராது. ஆனால், அது உற்சாகமாக ராணுவத்தை ஆதரிக்கிறது. மக்கள் நான் சொல்லுவதைக் கேட்காவிட்டால், அது பொது மக்களையே விழுங்கி இந்தியாவில் ராணுவ ஆட்சியை அமைத்து விடும். என்றும் நான் சொல்வதைக் கேட்பார்கள் என்ற நம்பிக் கையை நான் விட்டுவிட வேண்டுமா? எனக்கு மூச்சு இருக்கும் வரையில் நான் அப்படிச் செய்ய முடியாது. என்னுடைய அகிம்சை ஒப்பாரியைக் கேட்டுக்கொண்டிருக்க மக்கள் விரும்ப வில்லையென்றால், மக்களோடு நான் பேசவேகூடாது என்று என் னைக் குறை கூறுவோர் சொல்லுவதற்குக் காரணமே கிடையாது.

ஒரு விஷயத்தைத் தெளிவுபடுத்துகிறேன். சென்ற முப்பது ஆண்டுகளாக நாம் அனுசரித்து வந்தது, சாத்துவிக எதிர்ப்பே யன்றி அகிம்சையோடு கூடிய எதிர்ப்பு அல்ல; அதுவும், விரும் பாததனால், அன்று ஆயுதத்துடன் கூடிய எதிர்ப்பு முடியாததனால் செய்த பலவீனமான எதிர்ப்பே. இதை நான் மனம்விட்டு முற்றிலும் ஒப்புக்கொண்டிருக்கிறேன். மரம் போல் உறுதி யான உள்ளமுள்ளவர்களே அகிம்சையோடு எதிர்க்க முடியும். இந்தியா இரு துண்டுகளாக்கப்பட்டிருக்கிறது. ஒன்று மற்றொன் றின்மீது மிகுந்த சந்தேகம் கொண்டிருக்கிறது. மக்களுடைய வாழ்க்கையின் அத்தியாவசியத் தேவையின் ரூபத்தில் அவர்களுக் குத் தோன்றும் ஒரே ஒரு கடவுளைத்தவிர வேறு மதம் எதையுமே அறியாமல், பட்டினியாகவும் நிர்வாணமாகவும் கிடக்கிறார்கள். கோடிக்கணக்கான அம்மக்களுக்கு வேண்டிய உணவையும் உடை யையும் பற்றியும் சரியானபடி எண்ண முடியாமல் பரஸ்பரச் சச் சரவில் இந்தியாவின் இவ்விரு பகுதிகளும் ஈடுபட்டிருக்கின்றன. அகிம்சை எதிர்ப்பை நாம் அறிந்திருப்போமாயின், இந்த இந்தி யாவுக்குப்பதிலாக முற்றிலும் சிறந்ததான இந்தியாவை உல கிற்குக் காட்டச் சுதந்திர இந்தியாவினால் முடிந்திருக்கும். கொலை பாதகமான சச்சரவோ அல்லது ஒருவருக்கொருவர் எவ்வளவு திறமையாகக் கழுத்தை அறுத்துக்கொள்ளுவது என்பதைக் காட்டும் சினிமாப் படங்களோ அவர்களுக்கு ஏற்றவை அன்று.

புது டில்லி, 15—7—1947 —'ஹரிஜன்' – 27—7—1947

# 24

# பத்திரிகைகளுக்கு அறிக்கை*

நேற்றிரவு, காயங்களுக்குக் கட்டுடன் கூடிய ஒருவரை நான் குடியிருந்த வீட்டின் மதிலுக்குள் சில இளைஞர்கள் கொண்டுவந்தார்கள் என்று சொல்ல வருந்துகிறேன். சில முஸ்லிம்கள் அவரைத் தாக்கிவிட்டனராம். பிரதம மந்திரி அவரைச் சோதித்துப் பார்த்தார். ஆனால், அவர் உடலில் கத்திக் குத்துக் காயம் எதுவுமில்லை என்று சொல்லப்படுகிறது. இதில் முக்கியமான விஷயம் காயம் எவ்வளவு கடுமையானது என்பது அல்ல. நான் வற்புறுத்த விரும்புவதெல்லாம், இந்த வாலிபர்கள் தாங்களே நீதிபதிகளாகவும் தூக்கிலிடுவோராகவும் ஆகிவிட முயன்றிருப்பதே.

இது, கல்கத்தா நேரப்படி இரவு 10 மணி. அவர்கள் தொண்டை கிழியக் கத்த ஆரம்பித்தனர். என் தூக்கம் கலைந்துவிட்டது; நடப்பது இன்னது என்பதை அறியாமல் பேசாமல் படுத்திருக்க முயன்றேன். ஜன்னல் கண்ணாடிகள் உடைக்கப்பட்ட சப்தம் கேட்டது. எனக்கு இரு பக்கங்களிலும் மிக்க வீரமுள்ள இரு பெண்கள் படுத்திருந்தனர்; அவர்களால் தூங்க முடியவில்லை. நான் கண்களை மூடிக்கொண்டிருந்ததால், எனக்குத் தெரியாமலேயே அவர்கள் வெளியிலிருந்த சிறு கூட்டத்தினிடையே சென்று அவர்களைச் சாந்தப்படுத்த முயன்றனர். இப்பெண்களுக்குக் கூட்டத்தினர் எந்தவிதத் துன்பமும் விளைவித்துவிடாததற்காகக் கடவுளுக்கு நன்றி. வீட்டில் இருக்கும் முஸ்லிம் கிழவியை 'பி அம்மா' என்று எல்லோரும் அழைக்கிறார்கள். அவ

---

* நோவாகாலிக்கு மீண்டும் செல்வதற்காகக் காந்திஜி 1947 செப்டம்பர் 6-ந்தேதி கல்கத்தாவுக்குப் புறப்பட்டார். அங்கிருந்து நோவாகாலிக்குப் புறப்பட ஏற்பாடு செய்து கொண்டிருந்தபோது கல்கத்தாவிலேயே கலகம் மூண்டுவிடவே அங்கேயே தங்கினார். ஆனால், சிறிது அமைதி ஏற்பட்டு வந்தபோதிலும் மீண்டும் கலவர அமளி அதிகமாகி வரவே செப்டம்பர் முதல் தேதி காந்திஜி இந்த அறிக்கையை வெளியிட்டார். இதில் காந்திஜி குறிப்பிட்ட அன்று இரவு 8-15 மணிக்கு உண்ணாவிரதத்தை ஆரம்பித்துவிட்டார். மகாத்மாவின் உண்ணாவிரதம் அற்புதமான பலனை உண்டாக்கியது. கலவரம் அடங்கியது. இனி ஒற்றுமையாக இருப்பதாக எல்லாச் சமூகத்தலைவர்களும் காந்திஜியிடம் வாக்குறுதி அளித்தனர். அமைதியும் நிலவியது. 73 மணி நேரத்திற்குப் பிறகு செப்டம்பர் 4-ஆம் தேதி காலை 9-15 மணிக்கு தனது உண்ணாவிரதத்தை நிறுத்திவிட்டார். இத்தடவை காந்திஜி கல்கத்தாவில் 30 நாட்கள் இருந்தார். இதைக் குறித்து மேற்கு வங்க கவர்னராக இருந்த ராஜாஜி கூறுகையில், "காந்திஜி எத்தனையோ காரியங்களை சாதித்திருக்கிறார். ஆனால், அவர் அடைந்த சுயராஜ்யம்கூட, தீமைக்கு எதிராக அவர் கல்கத்தாவில் அடைந்த வெற்றியைவிட உண்மையில் அதிக அற்புதமானது என்பதற்கில்லை" என்றார்.

ரும் ஒரு வாலிப முஸ்லிமும் என் படுக்கைக்கு அருகில் நின்றனர். எனக்கு எத்துன்பமும் ஏற்பட்டுவிடாதவாறு பாதுகாக்கவே நின்றனர் என எண்ணுகிறேன்.

கூச்சல் அதிகமாகிக்கொண்டே வந்தது. மத்தியில் இருக்கும் கூடத்திற்குச் சிலர் வந்துவிட்டனர். கதவைத் திறக்க எல்லாக் கதவுகளையும் தட்டினார்கள். எழுந்து, ஆத்திரத்துடன் இருக்கும் கூட்டத்தை நான் சமாளிக்க வேண்டும் என்று எண்ணினேன். ஒரு கதவின் வாசலில் நின்றேன். நட்போடு கூடிய முகங்கள் என்னைச் சுற்றிலும் இருந்துகொண்டு முன்னால் போக என்னை விடவில்லை. என்னுடைய மௌன விரதம், அத்தகைய சந்தர்ப் பங்களில் அதை மீறிவிடவும் அனுமதிக்கிறது. ஆகவே, மௌன விரதத்தைக் கைவிட்டு, கோபாவேசத்துடன் இருந்த இளைஞர் களிடம் அமைதியாக இருக்குமாறு கேட்டுக்கொண்டேன். நான் கூறிய சில சொற்களை வங்காளியில் மொழிபெயர்த்துக் கூறுமாறு வங்காளி மருமகளிடம் சொன்னேன். அதனாலெல்லாம் ஒரு பயனும் இல்லை. நியாயம் அவர்கள் காதில் ஏறவில்லை.

ஒன்றும் செய்ய முடியாமல், ஹிந்து முறைப்படி என் கரங் களைக் கூப்பினேன். மேலும் பல ஜன்னல் கண்ணாடிகள் நொறுங்கின. கூட்டத்திலிருந்த நண்பர்கள் சாந்தப்படுத்த முயன்றார்கள். போலீஸ் அதிகாரிகளும் இருந்தனர். தங்கள் அதிகாரத்தைக் காட்ட அவர்கள் முற்படவில்லை. இதை அவர் களுக்கு மதிப்பாகச் சொல்லவே வேண்டும். கோரிக்கொள்ளும் முறையில் அவர்களும் கைகூப்பினார்கள். ஒரு தடியடி, என்மீதும் பக்கத்தில் இருந்தவர்கள்மீதும் படாமல் தப்பியது. என்னைக் குறிவைத்து வந்த ஒரு கல், பக்கத்தில் நின்றுகொண்டிருந்த முஸ்லிம் நண்பரைத் தாக்கியது. இரு பெண்களும் என்னை விட்டுப் போகாமல் கடைசிவரையில் என் பக்கத்திலேயே இருந் தார்கள். இதன் நடுவே போலீஸ் சூப்பரின்டெண்டும் அவ ருடைய அதிகாரிகளும் வந்தனர். அவர்களும் பலாத்காரத்தை உபயோகிக்கவில்லை. உள்ளே போய்விடும்படி என்னைக் கேட்டுக் கொண்டார்கள். பிறகு வாலிபர்களைச் சாந்தப்படுத்த அவர் களால் முடிந்தது. கொஞ்ச நேரத்திற்கெல்லாம் கூட்டம் கலைந்தது.

கூட்டத்தைக் கலைக்கப் போலீஸார் கண்ணீர்ப் புகையை உபயோகிக்கவேண்டி யிருந்தது என்பதைத் தவிர மதிலுக்கு வெளியில் என்ன நடந்தது என்பது எனக்குத் தெரியாது. இதன் நடுவே டாக்டர் பி. ஸி. கோஷ், ஆனந்த பாபு, டாக்டர்

நிருபேன் ஆகியவர்கள் உள்ளே வந்து பேசிவிட்டுப் போனார்கள். ஷகீத் சாஹேப், நோவாகாலிக்கு நாளை புறப்படுவது என்று இருந்ததுபற்றிய ஏற்பாடுகளைச் செய்யவீட்டுக்குச் சென்றிருந்தது சந்தோஷிக்க வேண்டியது. இத்தகைய ஆபாச சம்பவம் எங்கே கொண்டு போய்விடும் என்பதை யாரும் கூற முடியாது. இச் சம்பவத்தை முன்னிட்டுக் கல்கத்தாவிலிருந்து நான் நோவா காலிக்குப் புறப்படுவதை எண்ணுவதற்குமில்லை.

இச்சம்பவத்தின் படிப்பினை என்ன? இந்தியா, தான் எவ்வளவோ கஷ்டப்பட்டு அடைந்த சுதந்திரத்தைக் காப்பாற் றிக்கொள்ள வேண்டுமானால், ஆண்கள், பெண்களாகிய எல்லோ ரும், உயிருடன் சுட்டெரிக்கும் சட்டத்தை அடியோடு மறந்துவிட வேண்டும் என்பது எனக்குத் தெளிவாகிறது. முயற்சி செய்யப் பட்டதெல்லாம், அதைக் கவலையற்றுச் செய்துகாட்ட நடந்த முயற்சியே ஆகும். முஸ்லிம்கள் தவருக நடந்திருந்தால், புகார் கூறியவர்கள் மந்திரிகளிடம் போக முடியவில்லையாயின், என் னிடமோ அல்லது என் நண்பர் ஷகீத் சாஹேபிடமோ நிச்சய மாக வந்திருக்கலாம். புகார் கூறும் முஸ்லிம்களும் இப்படியே செய்திருக்கலாம். நாகரிக சமூகத்தின் மிகச் சாதாரண விதிகள் கூட அனுசரிக்கப்படவில்லையாயின், கல்கத்தாவிலோ அல்லது வேறு எந்த இடத்திலோ அமைதி நிலைக்கச் செய்ய வழியே இல்லை. பஞ்சாபிலோ, இந்தியாவுக்கு வெளியிலோ நடக்கும் காட்டுமிராண்டித்தனங்களை அவர்கள் எண்ணிக்கொள்ளவேண் டாம். தம் இஷ்டப்படியெல்லாம் நடந்துகொண்டுவிடுவதில்லை என்ற பொன்னான விதியை ஒப்புக்கொள்ளுவதில் விலக்கு எதுவும் இல்லை.

பாட்னாவிலிருக்கும் என் காரியதரிசி தேவ் பிரகாஷ் வரு மாறு தந்தி கொடுத்திருக்கிறார்: "பஞ்சாபில் நடப்பவைகளால் பொதுஜனங்கள் பரபரப்படைந்திருக்கின்றனர். மக்களின், பத்திரிகைகளின் கடமையை வற்புறுத்தி அறிக்கை வெளியிடுவது அவசியம் எனக் கருதுகிறேன்." ஸ்ரீ தேவ் பிரகாஷ் என்றும் காரணமின்றிப் பரபரப்படைவதில்லை. பத்திரிகைகள் அஜாக்கிரதையாக ஏதாவது சொற்களை உபயோகித்திருக்க லாம். அப்படித்தான் என்றால், வெடிமருந்துமீது நாம் உட்கார்ந் திருக்கும் இச்சமயத்தில் பத்திரிகைகள் அதிக புத்திசாலித்தன மாகவும், நிதானமாகவும் இருக்க வேண்டும். நெறி தவறி நடந்து விடுவது நெருப்பைக் கிளறிவிடுவதாகும். ஒவ்வோர் ஆசிரியரும் நிருபரும் தம் கடமையை முற்றிலும் உணருவர் என்றே நம்புகிறேன்.

ஒரு விஷயத்தை நான் குறிப்பிட வேண்டும். பஞ்சாபுக்கு என்னை அழைத்திருக்கும் அவசரச் செய்தி எனக்கு வந்திருக்கிறது. கல்கத்தாவில் சங்கடம் திரும்ப ஆரம்பமாகிவிட்டது என்று பலவகையான வதந்திகளை நான் கேள்விப்படுகிறேன். அவை முற்றிலும் ஆதாரமில்லாதவையல்ல என்றாலும் மிகைப்படுத்தப்பட்டவை என்றே நம்புகிறேன். கல்கத்தாவில் தவறு எதுவும் இராது, ஒரு முறை ஏற்பட்டுவிட்ட அமைதி கெடாது என்று கல்கத்தா மக்கள் எனக்குத் திரும்பவும் உறுதி கூற வேண்டும்.

அமைதியின் முதல் நாளிலிருந்தே, அதாவது, சென்ற ஆகஸ்டு 14-ஆம் தேதி முதலே, சமாதானம் தாற்காலிகமான அமைதியாக இருக்கக்கூடும் என்று நான் சொல்லி வருகிறேன். அற்புதம் எதுவும் இல்லை. எண்ணியதுதான் உண்மையாகிவிடுமா? கல்கத்தா திரும்பவும் வனாந்தர நீதிக்கே போய்விடுமா? அப்படி ஆகிவிடாது என்றே நம்புவோமாக. நம் உள்ளத்தை ஆண்டவன் தொட்டு, பைத்தியக்காரத்தனம் திரும்பவும் ஏற்பட்டுவிடாதபடிச் செய்ய நாம் எல்லாம் வல்ல கடவுளைப் பிரார்த்திப்போமாக.

மேற்கண்டவை எழுதிய பிறகு, அதாவது என் மௌனத்தின் போது சுமார் 4 மணிக்கு, நகரின் பல பகுதிகளிலும் என்ன நடந்திருக்கிறது என்பதை ஓரளவுக்கு நன்றாகவே தெரிந்துகொண்டேன். நேற்றுவரையில் பத்திரமானதாக இருந்த சில இடங்கள் திடீரென்று அபாயமானவையாகியிருக்கின்றன. பலர் மாண்டிருக்கிறார்கள். மிகவும் ஏழைகளான இரு முஸ்லிம்களின் சவங்களையும் நான் பார்த்தேன். மிகவும் வேதனைப்பட்ட தோற்றத்துடன் இருந்த சில முஸ்லிம்கள் வண்டிகளில் ஏற்றப்பட்டு பத்திரமான இடங்களுக்குக் கொண்டு போகப்பட்டதையும் பார்த்தேன். இந்த அமளியுடன் ஒப்பிட்டால், நான் விரிவாகக் கூறியிருக்கும் நேற்றைய இரவுச் சம்பவம் ஒன்றுமே இல்லை என்றாகிறது என்பதையும் காண்கிறேன். திறந்ததான அத்தீயின் நடுவே நான் குதித்தாலும் அதனாலும் அதைத் தடுத்துவிட முடியாது.

மாலையில் என்னை சந்தித்த நண்பர்களிடம், அவர்களுடைய கடமை என்ன என்பதைக் கூறினேன். அதை நிறுத்துவதற்கு நான் செய்யக்கூடியது என்ன? இந்தச் சில நாட்களாகக் கிழக்குப் பஞ்சாப் என்ன செய்திருக்கிறது என்பதைச் சீக்கியரும் ஹிந்துக்களும் மறந்துவிடக் கூடாது. இப்பொழுது மேற்குப் பஞ்சாபில் இருக்கும் முஸ்லிம்கள் பைத்தியக்கார வேலையை

ஆரம்பித்திருக்கின்றனர். பஞ்சாபில் நடப்பதைக் குறித்துச் சீக்கியரும் ஹிந்துக்களும் ஆத்திரம் அடைந்திருக்கிறார்கள் என்று கூறப்படுகிறது.

பஞ்சாபுக்கு வருமாறு எனக்கு அவசர அழைப்பு வந்திருப்பதைப்பற்றி மேலே கூறியிருக்கிறேன். ஆனால், கல்கத்தா குமிழி வெடித்துவிட்டது என்று இப்பொழுது தோன்றுவதால் எந்த முகத்தை வைத்துக்கொண்டு நான் பஞ்சாபுக்குப் போவது? தோல்வியையே காணாதது என்று எனக்கு இதுவரையில் இருந்துவந்திருக்கும் ஆயுதம் உண்ணாவிரதமே. ஆவேசத்துடனிருக்கும் கும்பலின் முன்னால் போய் நிற்பது என்பது எப்பொழுதும் பயன்படுவதில்லை. நேற்றிரவும் அது நிச்சயமாகப் பலன் தரவில்லை. நேரில் போய் நான் சொல்லும் வார்த்தை செய்ய முடியாததை என் உண்ணாவிரதம் செய்துவிடலாம். கல்கத்தாவில் சச்சரவிட்டு வருபவர்களின் உள்ளங்களை அது தொட்டுவிடுமானால் பஞ்சாபில் சச்சரவிட்டு வருவோரின் உள்ளங்களையும் தொட்டுவிடும், ஆகவே, இன்றிரவு 8-15 மணி முதல் நான் உண்ணாவிரதத்தை ஆரம்பிக்கிறேன்; கல்கத்தாவில் அமைதி ஏற்பட்டால் மாத்திரமே விரதம் முடிவுறும். உண்ணாவிரதம் இருக்கும்போது நான் குடிக்கும் நீரில் உப்பும் சோடா பைகார்பும் கலந்துகொள்ளுவதை வழக்கம் போல் அனுமதித்துக் கொள்ளுகிறேன்.

நான் பஞ்சாபுக்குப் போய் அங்குள்ள மக்களுக்கு உதவ வேண்டும் என்று கல்கத்தா மக்கள் விரும்பினால், வெகு சீக்கிரமாகவே நான் உண்ணாவிரதத்தை நிறுத்திவிடுவது சாத்தியமாகுமாறு அவர்கள் செய்ய வேண்டும்.

கல்கத்தா, 1—9—1947 —'ஹரிஜன்' - 14—9—1947

# 25

# உண்ணாவிரதத்தின் விளைவுகள்

ஒரு நண்பர் வருமாறு எழுதுகிறார்:

"உங்கள் உயிரை ஆபத்திற்குள்ளாக்கிக்கொள்ளுவதே உங்களுக்கு முடிவான, இயற்கையான பரிகாரமாகிவிட்டது என்று எனக்குத் தோன்றுகிறது. அது எப்படியானாலும் சரி, ஒரு நோயாளிக்கு உடலில் மருந்தை ஏற்றிக்கொண்டு அல்லது அவனுக்குப் பிராணவாயுவைக் கொடுத்து அவன் உயிரோடிருக்கும்படி செய்யும் பரிகாரத்தைப் போன்றதே உங்களுடையதும் என்று நான் கருதாமல் இருக்க முடியாது."

அன்பின் காரணமாக ஏற்படும் வேதனையால் உண்டானதே அந்தக் கருத்து. என்றாலும், தாம் குறை கூறியதைக் குறித்து

இக்கடிதம் எழுதியவர் அதிகம் சிந்திக்கவில்லை என்றே நான் கூற வேண்டும். என்னிடம் அன்புள்ள மற்றும் பலரும், அவசரப் பட்டதான இதே கருத்தையே கொள்ளக்கூடும். ஆகையினாலேயே இதைப்பற்றிப் பகிரங்கமாக விவாதிக்க வேண்டியதாயிற்று.

குறை கூறுகிறவரின் உதாரணம் பொருத்தமானது அன்று. மருந்தை ஊசி மூலம் ஏற்றுவது அல்லது பிராணவாயு கொடுப் பது, உடல் நீடித்திருந்து வரவேண்டும் என்பதற்காகச் செய்யும் வெளிப் பரிகாரம். ஆகவே, அவை தாற்காலிகமான பலனுடை யவை என்று சரியாகவே கூறப்படுகின்றன. அந்தப் பரிகாரங் களைச் செய்யாததனால் நஷ்டம் எதுவும் ஏற்பட்டுவிடாது. பூதவுடலை அழிவற்றதாக்கிவிடவே முடியாது. வைத்திய ஆற்றல் செய்யக்கூடியதெல்லாம், அது கொஞ்ச காலத்திற்கு நீடித்து இருக்கும்படி பார்ப்பதே. இந்தத் தாற்காலிக நீடிப்பு நிரந்தர மான பலனை அளிக்காது.

ஆனால், இதற்கு நேர்மாறாக, உண்ணுவிரதம் எவருடைய உடலையும் பாதிப்பதற்கென்று மேற்கொள்ளப்படுவதன்று. அது அவர் மனத்தைப் பாதிக்க வேண்டும். ஆகையால், அது ஆத்மாவைப் பற்றியது. இந்த வகையில் பலனைத் தாற்காலிக மானது என்று சொல்லிவிட முடியாது. நிரந்தரமான தன்மையை யுடையது இது. உண்ணுவிரதம் இருப்பவர் ஆத்மிக வகையில் அதற்குத் தகுதியுடையவரா, பரிகாரத்தைச் சரியான வகை யிலேயே உபயோகித்திருக்கிறாரா என்பன வேறு விஷயம்; இப்போதைய காரியத்திற்கு அவை பொருத்தமில்லாதவை.

எனக்கு நினைவிருக்கும் உண்ணுவிரதங்களிலெல்லாம், ஒன்றே ஒன்றைப்பற்றி மாத்திரம் ஒரு விஷயம் கூற முடியும். அதைப் பற்றிய கருத்தில் தவறு இல்லை யென்றாலும், மாறுபட்ட அறிகுறி யுடன் கூடிய வெளிப் பரிகாரக் கலப்புடையது அது. இத் தவறுதலைச் செய்யாதிருந்தால், அதன் இயற்கையான, பலனுள்ள முடிவு மற்றவைகளைப் போன்றே அதினின்றும் பொழிந்திருக்கும். காலஞ்சென்ற தாகூர் சாஹேபுக்கு எதிராக ராஜகோட்டில் நான் மேற்கொண்ட உண்ணுவிரதத்தையே குறிப்பிடுகிறேன். என் தவறுதலைக் கண்டுகொண்டேன்; பின்வாங்கிக்கொண்டு ஒரு நெருக்கடியைத் தவிர்த்தேன். கடைசியானது, கல்கத்தாவில் இந்தச் செப்டம்பர் மாதத்தில். பலன் எப்படி இருக்க் வேண்டுமோ அப்படித்தான் இருந்தது. ஆத்மாவைப் பொறுத்த வரையில் அதை நிரந்தரமானதாக நான் கருதுகிறேன். அதன் பலனைப் பொறுத்தவரையில் அது நீடித்த தன்மையுடையதாக

இருக்குமா, இருக்காதா என்பதைக் காலம் ஒன்றே காட்டும். அது, உண்ணாவிரதம் இருப்பவரின் புனிதத்தையும், அவருடைய எண்ணம் சரியானதாக இருப்பதையுமே பொறுத்ததாக இருக்க வேண்டும். அந்த விசாரணை இங்கே பொருத்தமற்றது. மேலும், பட்டினி இருப்பவர் அந்த விசாரணையில் இறங்குவதற்குத் தகுதியுடையவர் அல்ல. சரியான தகுதி வாய்ந்த பாரபட்சமற்ற ஒருவரால், அதுவும் நான் இறந்த பிறகே அதைச் சரியானபடிச் செய்ய முடியும்.

[ குஜராத்தி மூலத்தைத் தழுவியது. ]

புது டில்லி, 25--9--1947 —'ஹரிஜன்' - 5—10--1947

## 26

# உண்ணாவிரதம் ஏன்?

**கேள்வி:** *மிகுதியான சங்கடங்கள் ஏற்பட்டுவிடும்போது காந்திஜி உண்ணாவிரதத்தை மேற்கொள்ளுவது ஏன்? இந்தியாவின் பொதுமக்கள் வாழ்வில் இக்காரியத்தினால் என்ன பலன் விளையும்?*

**பதில்:** இத்தகைய கேள்வி இதற்கு முன்பும் கேட்கப்பட்டது உண்டு. ஆனால், இதே வகையில் என்றும் கேட்கப்பட்டதில்லை. என்றாலும், இதற்குப் பதில் எளிதானது. அகிம்சையைப் பின்பற்றுகிறவரின் தளவாடங்களில் இருக்கும் கடைசி ஆயுதம் இது. மனிதனின் சாமர்த்தியங்களெல்லாம் தவறிவிடும்போது அகிம்சைவாதி உண்ணாவிரதத்தை மேற்கொள்ளுகிறார். இந்த உண்ணாவிரதம், பிரார்த்தனை உணர்ச்சியைத் துரிதப்படுத்துகிறது. அதாவது, உண்ணாவிரதம் ஆத்மிகச் செய்கையால் ஆண்டவனிடம் கோருவதாகிறது. இச்செய்கை மக்களின் வாழ்க்கையில் உண்டாக்கும் பலன் என்னவென்றால், உண்ணாவிரதம் இருப்பவரை அவர்கள் அறிந்திருந்தால், உறங்கிக்கொண்டிருக்கும் அவர்களுடைய மனச்சாட்சி விழிப்படைகிறது. ஆனால், இதில் ஓர் ஆபத்தும் இருக்கிறது. அன்பிற்குரியவரின் உயிரைக் காப்பாற்ற வேண்டும் என்பதனால் ஏற்படும் தவறான அனுதாபம் அவர்களுடைய இஷ்டத்திற்கு மாறாகவும் செயலாகிவிடக்கூடும். இந்த ஆபத்தையும் சமாளித்தே ஆகவேண்டும். ஒரு காரியம் நியாயம் என்பதை நிச்சயமாக அறிந்தால், சரியான காரியத்தைச் செய்யத் தயங்கக்கூடாது. விரிவான சிந்தனையை அது அதிகரிக்கவே செய்யும். அத்தகைய உண்ணாவிரதம் அந்தராத்மாவின் ஆக்ஞையின்படியே மேற்கொள்ளப்படுவதால் அவசரத்தைத் தடுக்கிறது.

புது டில்லி, 10--12--1947 —'ஹரிஜன்' - 21—12—1947

# 27

# அநீதியைச் சகிக்க வேண்டாம்

*பிரார்த்தனைக்குப் பிறகு செய்த பிரசங்கத்தில் காந்திஜி கூறியதாவது :*

"எல்லா வகையான போர்களுக்குமே நான் எதிரி. ஆனால், பாகிஸ்தானிடமிருந்து நீதி கிடைக்கும்படி செய்வதற்கு அதைத் தவிர வேறு வழியே இல்லையென்றால், நிரூபிக்கப்பட்டு விட்ட தன்னுடைய பிழையை ஒப்புக்கொள்ளப் பாகிஸ்தான் பிடிவாதமாக மறுக்குமானால், தொடர்ந்து அலட்சியம் செய்தும் வந்தால், இந்திய யூனியன் அரசாங்கம் அதன் மீது போருக்குப் போக வேண்டியே இருக்கும். யுத்தம் என்பது தமாஷானது அன்று. யுத்தத்தை யாரும் விரும்பவில்லை; நாசத்திற்கு வழியே அது. என்றாலும், அநீதியைச் சகித்துக்கொண்டு இருந்துவிட வேண்டும் என்று நான் யாருக்கும் யோசனை கூறமாட்டேன். நியாயமான ஒரு லட்சியத்திற்காக, எல்லா ஹிந்துக்களுமே அழிக்கப்பட்டுவிடுவார்களாயின், அதற்காக நான் கவலைப்பட மாட்டேன். யுத்தம் ஏற்பட்டால், பாகிஸ்தானில் இருக்கும் ஹிந்துக்கள் அங்கு ஐந்தாம் படையினராக இருக்கக்கூடாது. அப்படி இருப்பதை யாரும் சகிக்கமாட்டார்கள். பாகிஸ்தானிடம் அவர்களுக்கு விசுவாசமில்லையாயின் அவர்கள் அதைவிட்டு வந்துவிட வேண்டும். அதே போலத் தங்கள் விசுவாசமெல்லாம் பாகிஸ்தானிடம் இருக்கும் முஸ்லிம்களும் இந்திய யூனியனில் இருக்கக்கூடாது. ஹிந்துக்களுக்கும் சீக்கியருக்கும் நீதி கிடைக்கும்படி பார்ப்பது அரசாங்கத்தின் வேலை. தாங்கள் விரும்புவதை அரசாங்கம் செய்யும்படி செய்ய மக்களால் முடியும். என்னைப் பொறுத்தவரையில் என் வழி வேறானது. சத்தியமும் அகிம்சையுமாகிய கடவுளை நான் வழிபடுகிறேன்.

[பிர்லா மாளிகை, புது டில்லி]
27—9—1947 —ஹரிஜன்' - 5—10—1947

# 28

# கட்டுப்பாடு இல்லை

*ஒருவர் எழுதியிருப்பதன் சாரம் இது :*

"தனிப்பட்டவரின் அகிம்சையை நான் அறிய முடிகிறது. நண்பர்களுக்கிடையே ஒன்றுபட்டதான அகிம்சையும் புத்திக்குப் புலனாகிறது. விரோதிகளே என்று ஒப்புக்கொள்ளுகிறவர்களிடத்திலும் அகிம்சையோடு நடந்து

கொள்ளுவதைக் குறித்து நீங்கள் கூறுகிறீர்கள். இது கானல் நீரைப் போன்றது. உங்களுடைய பிடிவாதத்தை நீங்கள் விட்டுவிடுவீர்களானல் அதுவே கருணையாக இருக்கும். அப்படி நீங்கள் விட்டுவிடவில்லையானல் நீங்கள் இப்பொழுது அனுபவித்துவரும் மதிப்பை இழந்துவிடுவீர்கள். இன்னும் அதிக மோசமானது என்னவென்ருல், மகாத்மா என்று கருதப்படும் நீங்கள், ஒன்றுமே அறியாத அநேகரையும் அவர்களுடைய சமூகத்தையும் தீமைக்கான வழியில் கொண்டு போகிறீர்கள்."

தனிப்பட்டவர் மாத்திரமே உபயோகிக்கக்கூடியதான அகிம்சை, சமூகத்தைப் பொறுத்தவரையில் அதிகப் பயனுள்ளது அன்று. மனிதன் சேர்ந்திருந்து வாழ்பவன். அவன் பெற்றிருக்கும் ஆற்றல்கள் பயனுள்ளவைகளாக இருக்க வேண்டுமாயின், போதிய திறமையுள்ளவர்கள் எவரும் அடையக்கூடியவைகளாக அவை இருக்க வேண்டும். நண்பர்களிடம் மாத்திரமே அனுசரிப்பதாக இருக்கக்கூடியது, அகிம்சையின் ஒரு சுடர்ப் பொறி மாத்திரமே. மதிப்புடையதாக அது ஆகாது. அகிம்சையின் முன்னல் விரோதமெல்லாம் மறைந்து போய் விடுகிறது என்பது ஒரு மகத்தான நீதி மொழி. மிகவும் அதிகமான பகையைப் போக்குவதற்கு அதற்குச் சம அளவான அகிம்சை தேவையாகிறது என்பது அதன் பொருள். இந்த நற்குணத்தின் நாகரிகத்திற்குப் பல பிறப்புக்கள் வரையிலுங்கூட போகக்கூடிய நீண்ட காலப் பழக்கம் வேண்டும். அந்த வகையில் அது பயனற்றதாகிவிடுவதில்லை. வழி நெடுகப் போய்க்கொண்டிருக்கும் ஒரு யாத்திரிகர், நாளுக்கு நாள் அதிக மதிப்புடைய அனுபவங்களைக் காண்கிருர். அதனல், தலைப்பில் அவர் காணப்போகும் அழகின் சாயலை அவர் அதற்கு முன்னலேயே காணலாம். அது அவருடைய ருசியை அதிகரிப்பதாகவும் இருக்கும். இதிலிருந்து பாதை முள்ளே இல்லாமல் மலர் விரிப்பாலானதாகவே இருக்கும் என்று யாரும் எண்ணிக்கொண்டுவிட முடியாது. 'கடவுளை அடைவதற்கான வழி வீரம் மிக்கவர்களுக்குத்தான் தென்படுமேயன்றி மன உறுதி இல்லாதவர்களுக்கு அன்று' என ஒரு கவி பாடியிருக்கிருர். இன்று இருக்கும் சூழ்நிலையில் அதிகமான விஷம் கலந்துவிட்டதால், மூதாதைகளின் அறிவு மொழிகளை எண்ணிப் பார்க்கவும், நடைமுறையிலான அகிம்சையின் பலதரப்பட்ட சிறு அனுபவங்களைக் கவனிக்கவும் மறுக்கிருர்கள். 'ஒரு கெட்ட செய்கை, நற்செய்கையினல் தீமையற்றதாகிவிடுகிறது' என்ற அறிவு மொழி அன்ருட அனுபவத்தினல் வந்தது. உலகத்தின் நடவடிக்கைகள் எல்லாமே அழிக்கும் தன்மையுடையனவாகவே இருக்கு-

மாணுல் உலகம் வெகு காலத்திற்கு முன்பே அழிந்திருக்கும். இதை ஏன் நாம் அறிவதில்லை? அன்பு, அதாவது அகிம்சையே நமது இந்தக் கிரகம் நீடித்திருக்கும்படி செய்கிறது.

இந்த அளவுக்காவது ஒப்புக்கொண்டுதான் ஆக வேண்டும்: வாழ்வின் உயர்ந்த தன்மை மேன்மையடைவதாக, இயற்கையாகவே இருந்து வருவதால் அதை விடாமுயற்சியுடன் வளர்த்தே ஆக வேண்டும். நம்மில் பெரும்பான்மையானவர்கள் கட்டுத்திட்டமில்லாதவர்களாக இருப்பதால், சச்சரவிட்டுக்கொள்ளுவது அல்லது அற்பக் காரியத்திற்கும் ஒருவருக்கொருவர் சண்டையிடுவது என்பதே நமது அன்ருட அனுபவமாக இருக்கிறது.

யாரிடம் கடுமையான கட்டுத்திட்டமிருக்கிறதோ அவருக்கு அகிம்சையின் மதிப்பு மிக்க அருளாகிய இது எளிதில் கிடைக்கும்.

புது டில்லி, 8—12—1947 —'ஹரிஜன்' - 14—12—1947

## 29

# உண்ணுவிரத நிறுத்தம்

மகாத்மா காந்தி தாம் எழுதி வெளியிட்ட அறிக்கையில்* கூறியதாவது :

“சத்தியத்தின் பெயரால், எல்லோரும் அறிந்ததான கடவுளின் பெயரால், நான் உண்ணுவிரதத்தை ஆரம்பித்தேன். சத்தியத்தோடு வாழ்ந்தாலன்றிக் கடவுள் எங்குமே இல்லை. ஆண்கள், பெண்கள், குழந்தைகள், சிசுக்கள் ஆகியவர்கள் நிர

*1947 செப்டம்பர் 9-ஆம் தேதி காந்திஜி டில்லிக்கு வந்தார், பஞ்சாபில் வகுப்புக் கலவர அட்டூழியங்கள் அதிக மோசமாய் இருந்ததனுல் அங்கே போவது என்பதற்காகவே காந்திஜி வந்தார். ஆனுல், தலைநகரிலேயே கலவரங்கள் மிகுந்திருப்பதை அறிந்ததும் திடுக்கிட்டுப் போனுர். அகதிகள் தங்கியிருந்த இடங்களுக்கெல்லாம் சென்ருர். பிரார்த்தனைக் கூட்டங்களிலெல்லாம், அமைதியாக மக்கள் ஒன்றுபட்டு வாழ்வதன் அவசியத்தை வற்புறுத்தினுர். என்ருலும், கலவரங்களும் படுகொலைகளும் நின்றபாடில்லை. இதைக் குறித்து மகாத்மா ஓர் ஊழியரிடம் கூறுகையில், “டில்லி மீதிருக்கும் பிடிப்பை நாம் இழந்துகொண்டு வருகிரோம்” என்ருர். “டில்லி போய் விட்டால் இந்தியா போய்விடும்; உலக அமைதிக்கு இருக்கும் கடைசி நம்பிக்கையும் போய்விடும்” என்ருர். 1948 ஜனவரி 12ஆம் தேதி மாலைப் பிரார்த்தனைக் கூட்டத்தில் பேசுகையில், எல்லாச் சமூகத்தினரிடையேயும் உள்ளத்தின் ஐக்கியத்தை உண்டாக்குவதற்காகக் குறிப்பிடாததோர் காலத்திற்கு, மறுநாள் முதல், உண்ணுவிரதம் இருக்க முடிவு செய்துவிட்டதாகக் காந்திஜி கூறினுர். எல்லாச் சமூகப் பிரதிநிதிகளும் பிரதிக்ஞைப் பத்திரத்தில் கையெழுத்திட்டு அளித்த பின்னர், ஜனவரி 18ஆம் தேதி தாம் உண்ணுவிரதத்தை நிறுத்திய விவரத்தையே காந்திஜி இக்கட்டுரையில் குறிப்பிட்டிருக்கிருர்.

பராதிகளா அல்லது குற்றவாளிகளா என்பதைக்கூடக் கவனிக்காமல், கடவுளின் பெயரால் பொய்யிலும், மக்களைப் படுகொலை செய்வதிலும் நாம் ஈடுபட்டிருந்திருக்கிறோம். அபகரித்துத் தூக்கிச் சென்றுவிடுவதிலும், பலவந்தமாக மதம் மாற்றுவதிலும் ஈடுபட்டிருக்கிறோம். இத்தகைய காரியங்களையெல்லாம் வெட்கமின்றிச் செய்திருக்கிறோம். சத்தியத்தின் பெயரால் இக்காரியங்களை யாராவது செய்திருக்கிறார்களா என்பதை நான் அறியேன். என் உதடுகளில் அதே பெயரை உச்சரித்துக்கொண்டு நான் உண்ணாவிரதத்தை நிறுத்தியிருக்கிறேன். நம் மக்களுக்கு ஏற்பட்டிருக்கும் மன வேதனை சகிக்க முடியாதது. ஹிந்து மகாசபை, ராஷ்டிரீய சுயம் சேவக சங்கம், எல்லைப்புற மாகாணம், பஞ்சாப், சிந்து அகதிகளின் பிரதிநிதிகள் ஆகியவர்களடங்கிய நூற்றுக்கு அதிகமான ஹிந்துக்கள், முஸ்லிம்கள், சீக்கியர்களை டாக்டர் ராஜேந்திர பாபு அழைத்து வந்தார். பிரதிநிதிகளைக் கொண்ட இந்தக் கோஷ்டியில் பாகிஸ்தானின் ஹை கமிஷனரான ஜாஹிர் ஹுஸேன் சாஹிப், டில்லி பிரதம கமிஷனர், டெபுடி கமிஷனர், ஆஜாத் ஹிந்த் பௌஜ் (இ. தே. ரா. வின்) பிரதிநிதியாக ஜெனரல் ஷா நவாஜ் கான் ஆகியவர்கள் இருந்தனர். சிலை போலப் பண்டித நேருவும் அங்கு உட்கார்ந்திருந்ததோடு மௌலானா சாஹிபும் இருந்தார். இப்பிரதிநிதிகள் கையெழுத்திட்டிருந்த ஒரு கோரிக்கையை டாக்டர் ராஜேன் பாபு படித்தார். தங்களுக்கு மேற்கொண்டும் கஷ்டம் தர வேண்டாம் என்றும், உண்ணாவிரதத்தை நிறுத்தித் தங்கள் மனவேதனையைத் தீர்க்குமாறும் அதில் என்னைக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். உண்ணாவிரதத்தை நிறுத்திவிடுமாறு என்னைக் கேட்டுக்கொண்டு பாகிஸ்தானிலிருந்தும், இந்திய யூனியனிலிருந்தும் தந்திகள் வந்த வண்ணம் இருந்தன, இந்த நண்பர்களின் ஆலோசனையை மறுத்துவிட என்னால் முடியவில்லை. என்னவானாலும் அவர்களது வாக்குறுதியை நான் நம்பாமல் இருக்க முடியாது. ஹிந்துக்கள், முஸ்லிம்கள், சீக்கியர்கள், கிறிஸ்துவர்கள், பார்ஸிகள், யூதர்கள் ஆகியவர்களிடையே தகர்க்க முடியாத நட்பு இருந்து வரும் என்று அவர்கள் வாக்குறுதி அளித்திருக்கிறார்கள். அந்த நட்பைத் தகர்ப்பது நாட்டு மக்களையே தகர்ப்பதாகும்.

“இதை நான் எழுதிக்கொண்டிருக்கும்போது ஆறுதல் அளிக்கும் தந்திகள் பிரவாகம்போல் வந்துகொண்டிருக்கின்றன. என் முன் இருக்கும் மனித வர்க்கத்திற்குச் சேவை செய்வதற்குப் போதிய தகுதியையும் அறிவையும் கடவுள் எனக்கு

அளிக்கவேண்டும் என்று விரும்புகிறேன். இன்று பக்தியுடன் செய்யப்பட்டிருக்கும் பிரதிக்ஞை நிறைவேறிவிடுமானுல், கடைசி நேரம்வரையில் மனித வர்க்கத்திற்குச் சேவை செய்வதற்காக என் முழு ஆயுளும் நான் வாழ்வதற்கு அருளவேண்டும் என்ற என் விருப்பமும், கடவுள் முன்பு பிரார்த்தனையும், இரட்டிப்பு மடங்கு தீவிரத்துடன் திரும்ப ஆரம்பமாகிவிடும் என்று உங்களுக்கு உறுதி கூறுகிறேன். சில அறிவாளிகளின் கருத்துப்படி, அந்த முழு ஆயுள் என்பது நூற்று முப்பத்துமூன்று வயது என்றும் சிலர் கூறுகிருர்கள். ஹிந்து மகாசபைத் தலைவர்களும் ராஷ்டிரீய சேவக சங்கத் தலைவர்களும் உள்பட டில்லியிலுள்ள எல்லா மக்களின் நல்லெண்ணத்தின் மூலம், எதிர்பார்ப்பதற்கு முன்னுலேயே என் விரதம் பூர்த்தியாகியிருக்கிறது. நேற்று முதல் ஆயிரக்கணக்கான அகதிகளும் உண்ணுவிரதம் இருந்து வருவதால் பலன் வேறுவிதமாக இருக்க முடியாது. உள்ளத்தின் நட்பு வாக்குறுதியைக் கையெழுத்துமூலம் அளிக்கும் கடிதங்கள் ஆயிரக்கணக்கில் என்னிடம் வந்து குவிந்துகொண்டிருக்கின்றன. உலகத்தின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் தந்தி மூலம் வாழ்த்துக்கள் வந்திருக்கின்றன. எனது இச்செயலில் கடவுளின் கரம் இருக்கிறது என்பதற்கு இதைவிட வேறு என்ன அடையாளம் இருக்க முடியும்? பக்தியுடன் கூடிய எனது விரதம் நிறைவேறியிருக்கிறது என்பதற்குமேல் அதன் உணர்ச்சியும் இருக்கிறது. அது இல்லாவிடில் பிரதிக்ஞை செத்துவிடும். யூனியனில் இருக்கும் ஹிந்துக்கள், முஸ்லிம்கள், சீக்கியர்களிடையே உண்மையான நட்பும், பாகிஸ்தானில் அதே போன்ற நட்புமே விரதத்தின் உணர்ச்சி. முதலாவதானது நிச்சயமானதாகிவிட்டால், இரவுக்குப் பின் பகல் நிச்சயமானது என்பது போல, இரண்டாவதும் தொடர்ந்து ஏற்பட்டே தீரும். யூனியனில் இருள் இருந்தால் பாகிஸ்தானில் ஒளியை எதிர்பார்ப்பது தவருகும். ஆனுல், யூனியனில் இரவு சந்தேகத்திற்கு இடமின்றி நீக்கப்படுமானுல், பாகிஸ்தானில் வேறு விதமாகவே இருக்க முடியாது. அதற்கு வேண்டிய அறிகுறியும் இல்லாமலில்லை. பாகிஸ்தானிலிருந்து அநேக தந்திகள் வந்திருக்கின்றன; எதிர்ப்பானது ஒன்றுகூட இல்லை. சத்தியமேயான கடவுள், நன்ருகப் புலனுகும் வகையில் இந்த ஆறு நாட்களிலும் நடத்திச் சென்றிருப்பதைப் போன்று நமக்கு இனியும் வழிகாட்டுவாராக.''

[ பிர்லா மாளிகை, புது டில்லி, 18—1—1948 ]

# 30

# பிரார்த்தனையின்போது குண்டுவீச்சு

புதன்கிழமை மாலை பிரார்த்தனைக்குப் பிறகு காந்திஜி பேசுகையில், பிர்லா மாளிகைத் தோட்டத்தில் முதல் நாள் குண்டுவீச்சு* நடந்ததைப்பற்றிக் குறிப்பிட்டு வருமாறு கூறினர் :

" அச்சம்பவத்தினுல் நான் பாதிக்கப்படாததைக் குறித்துப் பாராட்டியும், அச்சம்பவத்தைப்பற்றி விசாரித்தும் பலர் ஆவலுடன் தந்தி மூலம் கேட்டு வருகிறுர்கள். அது ராணுவப் பயிற்சி என்றே எண்ணினேன். ஆகையால், அதைப்பற்றிக் கவலைப்படுவதற்கு எதுவுமில்லை. குண்டு வெடித்தது, என்னைக் கொல்லுவதற்காகவே அந்தக் குண்டு என்பதை பிரார்த்தனை முடிந்த வரையில் நான் அறியவே இல்லை. என்மீது ஒரு குண்டு வீசப்பட்டு அது வெடித்தால், அதன் முன்னுல் நான் எவ்விதம் நடந்துகொண்டிருப்பேன் என்பது கடவுள் ஒருவருக்கே தெரியும். ஆகையால், நான் எந்தவிதப் பாராட்டுக்கும் உரியவனல்ல. அத்தகைய குண்டு வெடிப்பதனுல் நான் வீழ்ந்தும், அச்செய் கையைச் செய்தவர் மீது எந்தவிதமான துவேஷமுமின்றி அப்பொழுதும் என் முகத்தில் புன்சிரிப்பே இருந்துவருமாயின், அதற்காக நான் நற்சாட்சிப் பத்திரம் பெற அருகதையுடைய வனுவேன். குண்டு வீசிய தவருன போக்குடைய இளைஞரை யாரும் கேவலமாக மதிக்க வேண்டாம் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். நான் ஹிந்து தருமத்திற்கு விரோதி என்று ஒருவேளை அவர் எண்ணியிருக்கக்கூடும். கெட்ட புத்தியுடைய ஒருவன் தருமத்திற்கு இழுக்கை உண்டாக்கும்போது அவனுடைய உயிரைப் போக்கக் கடவுள் இன்னுமொருவரை அனுப்புவார் என்று கீதை கூறியிருக்கவில்லையா ? அக்கீர்த்தி வாய்ந்த சுலோகத்திற்கு விசேஷமான பொருள் இருக்கிறது. தம்முடன்

*மகாத்மா உண்ணுவிரதத்தை நிறுத்திய இரு தினங்களுக்குப் பிறகு 1948 ஜனவரி 20-ஆம் தேதி பிர்லா மாளிகைத் தோட்டத்தில் பிரார்த்தனைக் கூட்டத்தில் மகாத்மா பேசிக்கொண்டிருந்தபோது அவர்மீது வெடிகுண்டு வீச முயற்சி நடந்தது. மகாத்மா உட்கார்ந்திருந்த இடத்துக்கு 50 கஜ தூரத்தில் குண்டு வெடித்தது. யாருக்கும் காயமில்லை. மேற்குப் பஞ்சாபிலிருந்து வந்த அகதி என்று கூறப்பட்ட மதன் லால் என்ற வாலிபனைக் கைது செய்தனர். அவன் சட்டைப் பையிலிருந்து ஒரு கைக் குண்டை கைப்பற்றினர். குண்டு வெடித்த சப்தம் வெகு தூரத்துக்குக் கேட்கும் அளவுக்குப் பலமானதாக இருந்தது. மகாத்மா எந்தவிதப் பரபரப்பையும் அடையாமல் அமைதியுடன்இருந்தார். 1948 ஜனவரி 30-ஆம் தேதி அதே பிர்லா தோட்டத்திலேயே நாதுராம் கோட்ஸே என்ற பாபி, அகிம்சா மூர்த்தியான மகாத்மாவைச் சுட்டுக் கொன்றுவிட்டான்.

மாறுபட்ட கருத்துடையவர்கள் அவசியம் தீமையானவர்களாகத்தான் இருக்கவேண்டும் என்பதில்லை என்பதை அவ்வாலிபர் உணர வேண்டும். நல்லவர்களின் சகிப்பைத் தவிரத் தீமைக்கு உயிர் எதுவுமே இல்லை. குற்றஞ் சாட்டப்பட்டிருப்பவர் தம்மைத் தாமே புகழ்ந்துகொள்ளுவதாகத் தோன்றுவது போல, தாம் செய்வதே சரி, தீமை செய்கிறவர்களைத் தண்டிப்பதற்கே தம்மைக் கடவுள் அனுப்பியிருக்கிறார் என்று எந்த ஆணும் பெண்ணும் நம்பிக்கொண்டுவிடக் கூடாது.

தங்குவதற்கு வேறு இடம் கிடைக்காததனால் அவ்வாலிபர் ஒரு மசூதியில் தங்கியிருந்தார் என்றும், இப்பொழுது போலீஸார் எல்லா மசூதிகளிலும் இருப்பவர்களை வெளியேற்றி வருவதால் அதை அவர் வெறுத்தார் என்றும் கேள்விப்படுகிறேன். முதலாவதாக, ஒரு மசூதியில் போய் அவர் தங்கியதே தவறு. அங்கிருந்து வெளியேறிவிடுமாறு அதிகாரிகள் கூறியதற்கு உடன்பட மறுத்தது இரட்டிப்புத் தவறாகும்.

இத்தகைய காரியங்களில் ஈடுபட வேண்டாம் என்று இந்த வாலிபருக்கு உதவியாக இருப்பவர்களைக் கேட்டுக் கொள்கிறேன். ஹிந்து தருமத்தைப் பாதுகாப்பதற்கான வழி அல்ல இது. என்னுடைய முறையினாலேயே ஹிந்து தருமத்தைப் பாதுகாக்க முடியும். குழந்தைப் பருவம் முதற்கொண்டே நான் ஹிந்து தருமத்தை அனுசரித்து வருகிறேன். பிசாசு போன்றவைகளைக் குறித்து நான் பயந்தபோது ராம நாமத்தை உச்சரிக்கும்படி என் கிழத் தாதி எனக்குச் சொல்லிக் கொடுத்தாள். பின்னர்க் கிறிஸ்தவர்களுடனும், முஸ்லிம்களோடும், மற்றவர்களுடனும் எனக்குத் தொடர்பு உண்டாயிற்று. ஓரளவுக்கு மற்ற மதங்களைப் பற்றியும் ஆராய்ந்த பிறகே ஹிந்து தருமத்தில் நிலைத்துக்கொண்டேன். எனது நம்பிக்கை குழந்தைப் பருவத்தில் இருந்ததைப் போன்றே இன்றும் உறுதியானதாக இருக்கிறது. நான் நேசித்துப் போற்றி அனுசரித்துவரும் மதத்தைப் பாதுகாப்பதற்குக் கடவுள் என்னை ஒரு கருவியாக்கிக்கொள்ளுவார் என்றே நம்புகிறேன். எப்படியானாலும், கடவுளின் கருவியாக ஆவதற்கு வேண்டிய தகுதியைப் பெறுவதற்கு மதத்தின் அடிப்படையான கருத்துக்களில் இடைவிடாத பயிற்சியைப் பெற்றுப் பழகி வரவேண்டும்.

அச்செய்கைக்கும் சீக்கியருக்கும் எந்தவித சம்பந்தமும் இருப்பதாக நான் நினைத்துவிடக்கூடாது என்று சில சீக்கிய

நண்பர்கள் என்னிடம் வந்து கூறினர்கள். அந்த வாலிபர் சீக்கியரல்ல என்பதை அறிவேன். அவர் சீக்கியர், ஹிந்து, முஸ்லிம் இப்படி எவராக இருந்தால்தான் என்ன? இவ்விதம் செய்தவர்கள் எல்லோருக்கும் நன்மை ஏற்பட வேண்டும் என்றே நான் விரும்புகிறேன். எந்த வகையிலும் அவருக்குக் கஷ்டம் விளைவிக்க வேண்டாம் என்று போலீஸ் இன்ஸ்பெக்டர்-ஜெனரலையும் கேட்டுக்கொண்டிருக்கிறேன். அந்த வாலிபரின் மனத்தை மாற்றி, சரியானதை எண்ணிச் சரியானதைச் செய்பவராகத் திருத்த நீங்கள் முயற்சி செய்ய வேண்டும். அவ்வாலிபரும், அவருக்கு இவ்வழியைக் காட்டியவர்களும், தங்கள் தவறுதலை உணருவார்கள் என்றே நம்புகிறேன். ஏனெனில், ஹிந்து தருமத்திற்கும் நாட்டிற்கும் செய்யப்பட்டிருக்கும் தவறே இது. அதே சமயத்தில் குற்றஞ் சாட்டப்பட்டிருப்பவரிடம் நீங்கள் ஆத்திரமடையக்கூடாது என்றும் உங்களுக்கு எச்சரிக்கை செய்கிறேன். தவறு செய்கிறோம் என்பது தெரியாமலேயே அவர் தவறு செய்திருக்கிறார். அவர்மீது நீங்கள் பரிதாபப்பட வேண்டும். என்னுடைய உண்ணாவிரதத்தைக் குறித்து நீங்கள் உள்ளத்தில் வெறுப்புக் கொண்டிருந்திருப்பீர்களாயின், நாட்டின் கிழ ஊழியனின் உயிரைக் காப்பதற்காகவே அமைதி நிலவும்படி செய்வதென்று நீங்கள் பிரதிக்ஞை செய்துகொண்டிருப்பீர்களானால், தவறு உங்களுடையதேயன்றிக் குண்டு வீசிய வாலிபருடையது அன்று. இதற்கு மாறாக, முழு மனத்தோடு சமாதானப் பிரதிக்ஞையில் நீங்கள் கையெழுத்திட்டிருப்பீர்களானால், அந்த வாலிபரைப் போன்றவர்கள் முடிவில் உங்கள் கருத்தின் வழிக்கு வந்தே தீருவார்கள்.

குண்டு வெடித்தாலும், தோட்டாக்கள் மழை போன்று பொழிந்தாலும், நீங்கள் பிரார்த்தனையை மாத்திரம் தொடர்ந்து செய்துகொண்டு போக வேண்டும் என்றே நான் எதிர்பார்க்கிறேன். தவறு செய்தவரைக் கைது செய்யப் படிப்பில்லாத ஓர் ஏழைப் பெண்ணே காரணமாயிருந்தாள் என்பதை அறிந்து மகிழ்கிறேன். உள்ளம் மாத்திரம் சரியாக இருந்தால், எண்ணமும் சரியானதாக இருப்பின், படிப்பின்மையால் குறைவு எதுவுமே இல்லை. படிப்பில்லாத அந்தச் சகோதரியின் எளிமையான வீரத்தைப் பாராட்டுகிறேன்.

[பிர்லா மாளிகை, புது டில்லி, 21—1—1948]

# 1

# சுதந்திரம்

சுதந்திரத்தை அடியிலிருந்தே தொடங்க வேண்டும். ஒவ்வொரு கிராமம் அல்லது பஞ்சாயத்தும் பூரண அதிகாரமுள்ள குடியரசாயிருக்க வேண்டும். இதிலிருந்தே ஒவ்வொரு கிராமமும் சுயசக்தியில் இயங்கக் கூடியதாயிருக்க வேண்டும். உலகத்தையே எதிர்த்து நின்றும் தன்னைப் பாதுகாத்துக்கொள்ளும் வகையில் கிராம ஆட்சி நடைபெற வேண்டும். புறத்தாக்குதல்களைச் சமாளிப்பதில் அழிந்து போகவும் தயாராயிருக்கும் முறையில் கிராமங்களைப் பக்குவப்படுத்த வேண்டும். ஆகையால், கிராமத்திற்குத் தனிப்பட்டவர்களே ஆதாரம். இதிலிருந்து அண்டையில் இருப்பவர்கள் அல்லது உலகத்தோர் விரும்பித் தரும் உதவியை ஏற்கலாகாது என்று கொள்ளுதல் கூடாது. சுதந்திரமாக-தன்னிச்சையாக-ஒருவருக்கொருவர் உதவி செய்வதாக இருத்தல் வேண்டும். அம்மாதிரி சமுதாயம் சிறப்பான பண்பாடுடையதாயிருக்கும். அந்தச் சமூக அமைப்பில் ஒவ்வோர் ஆணும் பெண்ணும், தங்களுக்குத் தேவையானது என்ன என்பதை நன்கு அறிந்திருப்பதுடன் பிறர் தங்கள் உழைப்பினால் பெற முடியாததைத் தாங்கள் அடையலாகாது என்பதை நன்கு அறிந்திருப்பர்.

இம்மாதிரி சமூகம் உண்மையான அகிம்சை அடிப்படையில் தான் அமைய வேண்டும் என்று சொல்லத் தேவையில்லை. அன்பிலும் அகிம்சையிலும் நம்பிக்கை கொள்ள வேண்டுமானால் ஆண்டவன் இருக்கிறான் என்பதில் ஆழ்ந்த நம்பிக்கை வேண்டும். இங்கு ஆண்டவன் என்று நான் குறிப்பிடுவது புற உதவியின்றி இயங்கும் ஜீவசக்தி; உலகிலுள்ள மற்ற எல்லாச் சக்திகளுக்கும் ஆதாரமாயிருக்கும் மகாசக்தி; மற்றச் சக்திகளெல்லாம் மறைந்த பின்பும் நிறைந்திருக்கும் மேலான சக்தி. எதிலும் பரவியுள்ள இந்த ஜீவ ஒளி இன்றி நான் உயிர் வாழ்வதற்கு எவ்வித முகாந்தரமும் என்னால் கூற முடியாது.

கணக்கற்ற கிராமங்கள் கொண்ட இந்த அமைப்பு விரிவடையுமே ஒழிய உயரத்தில் வளராது. வாழ்க்கை என்பது கீழே குறுகி மேலே விரியும் கோபுரமல்ல. அது வட்ட வடிவமாகக் கடல் போல் அகன்று மையத்தில் தனி மனிதனைக் கொண்டு இயங்குவது. அத்தனி மனிதன் கிராம நலனுக்காகத்

தன் உயிரையே தியாகம் செய்வான். ஒவ்வொரு கிராமமும் பிற கிராமங்களின் நன்மைக்காக மடிந்து போகத் தயாராக இருக்கும். இந்த வகையில் இயங்கிக் கடைசியாக லட்சிய சமூகம் அகங்காரமோ, எதிர்ப்பு மனப்பான்மையோ இன்றி அடக்கமே கொண்ட தனி மனிதர்களின் கூட்டமாக விளங் கும். ஒவ்வொருவரும் சமூகம் என்னும் பெருங்கடலில் இணை பிரியாத பகுதியனராக இருப்பர்.

ஆகையால், இந்தச் சமூக அமைப்பின் வெளி விட்டத்தில் இருப்பவர்கள், உள்ளே இருப்பவர்களை நசுக்குவதற்கு தங்கள் சக்தியைப் பயன்படுத்தமாட்டார்கள். உள்ளிருப்பவர்களுக்கு ஆக்கமளித்து, அதன் மூலம் தாங்களும் பலம் பெறுவார்கள். 'இதெல்லாம் மனக்கோட்டை ; இது சிந்திப்பதற்குரியதல்ல' என்று ஒரு சிலர் எள்ளிப் பேசலாம். க்ஷேத்திர கணித ஆசிரியர் கூறும் புள்ளியை எந்த மனிதனும் வரைய முடியாது. என்றாலும், அந்தக் கொள்கைக்கு மிகுந்த பொருள் உண்டு. அதே போல நான் விவரித்துள்ள லட்சிய சமூகம் மனித சமு தாயத்திற்கு வாழ்வளிக்க வல்லது. இந்த லட்சியத்தைப் பூரணமாக அடைய இயலாது போனாலும் இந்தியா இந்த லட்சியத்திற்காகவே வாழ்வதாக. நாம் அடைய விரும்பும் லட் சியம் ஓரளவாவது கைகூட வேண்டுமானால், அது என்ன என் பதைத் தெளிவாக அறிந்துகொள்ள வேண்டும். இந்தியாவின் ஒவ்வொரு கிராமமும் குடியரசாகத் திகழும் நாள் நெருங்கி வர வேண்டுமானால், பெரியவன், சிறியவன், முதல்வன், கடை யன் என்கிற பாகுபாடோ, ஏற்றத்தாழ்வோ இல்லாதாக என்னு டைய லட்சிய சமூகம் உருப் பெற வேண்டும்.

என்னுடைய இந்த லட்சிய சமூகத்தில் எல்லா மதங் களுக்கும் சமத்துவம் உண்டு. நாம் எல்லோரும் மகோன்னத மான மரத்தின் கிளைகள். இந்த மரத்தின் வேர் பூமியின் பாதாளத்தில் ஊடுருவிப் பதிந்திருப்பதனால் இந்த மரத்தைச் சாய்த்துவிட முடியாது. பெருங் காற்றுக்கூட இதை அசைக்க முடியாது.

மனித உழைப்பைத் தவிர்க்கும், அதிகாரத்தை ஒரு சிலரிடம் சேர்த்துவைக்கும் இயந்திரங்களுக்கு இந்தச் சமூகத் தில் இடம் கிடையாது. பண்பாடு மிக்க மனித சமுதாயத்தில் உழைப்புக்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு. தனிப்பட்டவருக்கு உதவி புரியக்கூடிய இயந்திரத்திற்கு இதில் இடம் உண்டு. அம் மாதிரி இயந்திரங்கள் யாவை என நான் இதுவரை சிந்தித்துப்

பார்த்ததில்லை. ஸிங்கரின் தையல் இயந்திரம் மனிதருக்கு உதவி புரியத்தக்கது என நான் எண்ணுகிறேன். ஆனால், அதுவும் மேல்வாரியாகத்தான். என் லட்சிய சமுதாயத்தில் அதற்கு அவசியம் இல்லை.

பஞ்சகனி 21—7—1946 ' ஹரிஜன் ' - 28—7—1946

# 2

# சோஷலிஸ்டு யார் ?

எனக்குத் தெரிந்தமட்டில், சோஷலிஸம் என்பது அழகான சொல். சோஷலிஸத்தின்கீழ்ச் சமூகத்தில் யாவரும் சமம்— உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்பதே கிடையாது. தனி மனிதன் அமைப்பில் தலை மேலே இருப்பதால் அது உயர்ந்தது என்றோ, கால் தரையில் நிற்பதால் அது தாழ்ந்தது என்றோ அர்த்தமில்லை. மனிதனின் அங்கங்கள் எப்படிச் சமமோ அவ்வாறே சமூகத்தில் எல்லாப் பிரிவினரும் ஒரே அளவினர். இது தான் சோஷலிஸம்.

சோஷலிஸத்தில் அரசனும் குடியானவனும், பணம் படைத்தவனும் ஏழையும், முதலாளியும் தொழிலாளியும் ஆகிய யாவரும் ஒரே அளவில் நிற்பவர்கள். மத நோக்கிலிருந்து பார்த்தாலும் சோஷலிஸத்தில் இருவிதப் பிரிவினை கிடையாது. அதில் எல்லாம் ஒன்றே. உலகத்திலுள்ள எல்லாச் சமூகங்களையும் பார்த்தால் இரட்டை அல்லது பல்வேறு பிரிவினைகள் இருப்பதையே காணலாம். இவன் உயர்ந்தவன், அவன் தாழ்ந்தவன், இவன் ஹிந்து, அவன் முஸ்லிம், மூன்றுமவன் கிறிஸ்தவன், அடுத்தவன் பார்ஸி, சீக்கியன், யூதன் என்று வேற்றுமை காண்கின்றனர். இந்த வகுப்பு ஒவ்வொன்றிலும் உட்பிரிவுகள் வேறு இருக்கின்றன. நான் காணும் ஒருமைப்பாட்டில் பல்வேறு பகுதிகளிலும் ஒற்றுமை இருக்கிறது.

எல்லோரும் சோஷலிஸப் பாதையை மேற்கொண்ட பிறகு இந்த நிலையை அடைவதற்கு முயற்சி செய்யலாம் என நாம் தத்துவம் பேசிக்கொண்டிருக்க வேண்டியதில்லை. நமது வாழ்க்கை முறையை மாற்றிக்கொள்ளாமல் பேசிக்கொண்டே போகலாம் ; கட்சிகள் அமைத்துக்கொண்டிருக்கலாம், கிடைத்ததைப் பருந்து மாதிரி கொத்திக் கொண்டு போகலாம். ஆனால், இது சோஷலிஸம் ஆகாது. சோஷலிஸப் பாதையில் செல்வதை எவ்வளவுக் கெவ்வளவு விளையாட்டாகக் கருதுகிறோமோ அவ்வளவுக்கவ்வளவு அது நமக்குக் கிட்டாமல் அப்பால் செல்லும்.

ஒருவனை நம் வழிக்குத் திருப்பினால், அதிலிருந்து சோஷலிஸம் வளரத் தொடங்கும். ஒரு நல்ல சோஷலிஸ்டு அடிப்படையை உருவாக்கிவிட்டால், பின்னால் சேருபவர்கள் 1-க்குப் பின்னால் பூஜ்யத்தைச் சேர்ப்பதால் மதிப்பு உயருவது போல் தரத்தில் சிறப்பளிப்பார்கள். ஆனால், முதலில் சேர்ந்தது பூஜ்யமாயிருந்தால், அப்புறம் எவ்வளவு பூஜ்யங்கள் சேர்ந்தாலும் மதிப்புப் பெருகாது. ஒரு காகிதத்தில் நிரம்பப் பூஜ்யங்களை எழுதுவது எப்படி வீண் செயலோ அம்மாதிரி உதவாக்கரைகளைச் சேர்ப்பது பயனற்ற பணியாகும்.

சோஷலிஸம், பளிங்கு போல் பரிசுத்தமானது. ஆகையால் அதை அடையப் பரிசுத்தமான முறையையே கைக்கொள்ள வேண்டும். தீய முறைகளை அனுஷ்டித்தால், தீய பயனே கிட்டும். ஆகையால், அரசனின் தலையை வாங்கிவிடுவதால் அரசனும் ஆண்டியும் ஒன்றாகிவிட மாட்டார்கள். முதலாளியின் வருமானத்தைப் பறிப்பதனால் தொழிலாளி அவருடன் சமநிலை அடைந்து விடமாட்டான். பொய்மூலம் உண்மையை அடைய முடியாது. உண்மையான நடவடிக்கையினால்தான் உண்மையை அடைய முடியும். அகிம்சையும் உண்மையும் ஜோடிகளல்லவா என்று கேட்டால் சந்தேகமின்றி ‘இல்லை’ என்றுதான் பதில் கூறுவேன். உண்மையில் அகிம்சை அடங்கியிருக்கிறது. அவ்வாறே அகிம்சையில் உண்மை இருக்கிறது. அதனால்தான் இவ்விரண்டையும் ஒரு நாணயத்தின் இரு புறங்கள் என்று கூறுகிறார்கள். நாணயத்தின் இரு புறங்களில் பதித்திருப்பதையும் படித்துப் பாருங்கள். வார்த்தைகள் வெவ்வேறாயிருக்கலாம். ஆனால், நாணயத்தின் மதிப்பு ஒன்றுதான். இந்த ஆனந்த நிலையைப் பூரணத் தூய்மையின்றி அடைய முடியாது. உடம்பிலோ, மனத்திலோ களங்கம் இருந்தால் உங்களிடம் பொய்யும் பலாத்கார எண்ணமும் குடிகொண்டிருக்கின்றன என அறிந்து கொள்ளலாம்.

ஆகையால், உண்மையும் அகிம்சையும், தூய்மையும் நிரம்பிய சோஷலிஸ்டுகள்தான் இந்தியாவிலும் உலகிலும் சோஷலிஸ்டு சமுதாயத்தை அமைக்க முடியும். முற்றிலும் சோஷலிஸ்டு அடிப்படையான நாடே உலகில் இல்லை. மேலே குறிப்பிட்ட முறைகள் மூலமன்றி அத்தகைய சமுதாயம் நிலைபெறுவது முடியவே முடியாது.

புது டில்லி, 6—7—1947 —‘ஹரிஜன்’ - 13—7—1947

## 3

# நம்பிக்கை அவசியம்

சத்தியமும் அகிம்சையும் சோஷலிஸத்தில் உருப் பெற வேண்டும். இந்த நிலை ஏற்பட வேண்டுமானால் சோஷலிஸ பக்தனுக்குக் கடவுளிடம் தளராத நம்பிக்கை வேண்டும். சத்தியம், அகிம்சை இவற்றில் கொண்ட மூடநம்பிக்கை உறுதி நெருக்கடியான சமயத்தில் தளர்ந்துவிடும். ஆகையினால்தான் சத்தியமே கடவுள் என நான் கூறுகிறேன். இந்தக் கடவுள் உயிருள்ள சக்தி. அந்தச் சக்தியிலிருந்து வந்ததுதான் நமது உயிர். அந்தச் சக்தி நமது உடலில் இருக்கிறது. ஆனால், அது உடலல்ல. அந்த மகாசக்தி இருப்பதை எவன் மறுக்கிறானோ அவன், அந்தப் பரம்பொருளால் ஏற்படும் சக்தியின் பயனைப் பெற தவறிவிட்டு வீரியம் இழந்தவனாயிருக்கிறான். சுக்கான் இராத கப்பல் தத்தளித்து மூழ்கிப் போவது போல் முன்னேற வழி தெரியாமல் அவன் மாய்ந்துவிடுகிறான்.

பெருஞ் சக்தியையும், அதனுள் அடங்கியிருக்கும் அதன் எல்லையற்ற பயன்களையும் மிகக் கஷ்டப்பட்டு ஆராய்ந்தறிவதில் எத்தனையோ பேர் ஆழ்ந்து ஈடுபட்டிருக்கின்றனர்.

இந்த ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கையில் சத்தியாக்கிரகத்தைக் கண்டேன் என நான் பெருமையுடன் கூறிக்கொள்கிறேன். ஆனால், சத்தியாக்கிரகத்தின் எல்லா நியதிகளையும் கண்டுபிடித்துவிட்டதாக நான் கூறவில்லை. ஆயினும், சத்தியாக்கிரகத்தின் மூலம் எல்லாத் தூய நலன்களையும் அடைய முடியும் எனத் திட்டமாகவும், பயமின்றியும் கூறுகின்றேன். அது மிக உயர்ந்த சாதனம்; கை கண்ட மருந்து; பெரிய சக்தி என்று கூறலாம். வேறு எந்த வழியிலும் சோஷலிஸத்தை அடைய முடியாது. அரசியல், பொருளாதார அறத்துறைகளில் காணப்படும் எல்லாத் தீமைகளிலிருந்தும் சத்தியாக்கிரகத்தின் மூலம் சமூகத்தை விடுவிக்க முடியும்.

புது டில்லி, 13—7—47

—'ஹரிஜன்' - 20—7—47

## 4

# உடைமையின்மை அல்லது ஏழைமை

சொத்துரிமையைத் துறப்பது திருடாமையின் ஓர் அம்சம். ஒரு சாமானை நாம் திருடிப் பெறாமல் இருந்தாலும், தேவையில்லாமல் அதை நாம் வைத்திருந்தால், அதைத் திருடியவர்களாகவே நாம் கருதப்படுவோம். அதை நாம் பத்திரப்படுத்தி வைத்துக்

கொள்வது, அது வருங்காலத்திற்காகப் பத்திரப்படுத்திக்கொள் வது என்ருகும். சத்தியத்தை நாடுபவன், அன்பு மதத்தைப் பின் பற்றுபவன், நாளைக்கென்று எதையும் ஒதுக்கி வைத்துக் கொள்ளலாகாது. ஆண்டவன் எதையும் அடுத்த நாளைக் கென மிகுத்து வைத்துக்கொள்வதில்லை. தேவைக்கு மீறி அவன் உற்பத்தி செய்வதுமில்லை. அவனுடைய தரும நியாயத்தில் அசையாத நம்பிக்கை கொண்டோமாஞல், நமது அன்ருட உணவுத் தேவையை—நமக்கு மிகவும் அவசியமானவைகளை—அவன் அளிப்பான் என்று உறுதியாயிருக்க வேண்டும். இந்த நம்பிக்கையுடன் வாழ்ந்த முனிவர்களும் பக்தர்களும் இது உண்மை என்பதைத் தங்கள் அனுபவத்தில் கண்டிருக்கின் றனர். மனிதனுக்கு அன்ருடம் தேவையான உணவை மட்டும் ஆண்டவன் அளிக்கிருன் என்கிற தெய்வ நீதியை அறியாதவர் களும், அலட்சியம் செய்பவர்களுந்தான், உலகில் ஏற்றத்தாழ்வு இருப்பதற்கும், அதன் விளைவாக மக்கள் சொல்லொணுத் துயரங் களுக்கு உட்படுவதற்கும் காரணமாக இருந்திருக்கின்றனர். தங்களுக்குத் தேவையில்லாத பல பொருள்களைப் பணக்காரர் கள் குவித்து வைத்திருக்கின்றனர். அது மட்டுமல்ல; தேவை யில்லாத பொருள்கள் கவனக் குறைவிஞல் கெட்டுப் போவ துடன் வீணுகிப் போகின்றன. இதே சமயத்தில் லட்சக் கணக்கான மக்கள் உண்ண உணவின்றிப் பட்டினி கிடந்து மடிகின்றனர். ஒவ்வொருவரும் தமக்குத் தேவையானதையே வைத்திருந்தால் யாரும் வறுமையினல் வாடமாட்டார்கள்; எல்லோரும் திருப்திகரமாக வாழ்க்கை நடத்துவதும் சாத்திய மாகும். தற்போதுள்ள நிலைமையில் ஏழைகள் மட்டுமல்ல, பணக்காரர்களும் திருப்தியற்றவர்களாகவே இருக்கிருர்கள். ஏழைக்கு லட்சாதிபதியாவதில் ஆசைதான். லட்சாதிபதி கோடீசுவரஞக விரும்புகிருன். எல்லோரும் திருப்திகரமாக வாழ்வதற்காகப் பணக்காரன் தன் உடைமைகளில் ஒரு பகுதி யைத் துறந்து வழிகாட்ட வேண்டும். பணக்காரர்கள் ஒரு வரம்புக்குட்பட்டுச் சொத்துக்களை அனுபவிக்க முன் வருவார் களாஞல், பட்டினியாயிருப்பவர்களுக்கு உணவு சுலபமாகக் கிடைக்கும்; ஏழைகளும் பணக்காரர்களுடன் சேர்ந்து திருப்தி கரமான மனப்பாங்குடன் வாழ்வார்கள். உடைமையின்மை லட்சிய பூரணமாக நிலவ வேண்டுமாஞல், பறவை கள் மாதிரி மனிதனும் தங்குவதற்கு வீடு வேண்டுமென விரும்பலாகாது. உடையையோ, உணவையோ நாளைக்கென்று மிகுத்தி வைக்கலாகாது. மனிதனுக்குத் தினசரி உணவு தேவைதான். ஆஞல், அதைத் தருவது ஆண்டவன் அருளே

யொழிய மனிதனின் வேலையல்ல. இந்த லட்சியத்தை அடைவது மெத்த கடினம். அப்படியே அடைந்தாலும், இது மிகச் சிலரால்தான் முடியும். ஆனால், நம் போன்ற சாமான்ய லட்சிய ஆர்வமுள்ளவர்கள், இந்தக் கடின நிலை கண்டு அஞ்ச வேண்டாம். ஆனால், இந்த லட்சியம் என்றும் நம் மனத்தில் நிலைத்திருக்க வேண்டும். ஆயினும், இந்த லட்சியத்தை ஞாபகத்தில் இறுத்திக்கொண்டு நமது உடைமைகளைப் பரிசீலனை செய்து, அவைகளைக் குறைத்துக்கொள்ள முயற்சிசெய்ய வேண்டும். உண்மையான நாகரிகம், நம் தேவைகளைப் பெருக்கிக்கொள்வதன்று; தேவைகளைத் தீர்மானமாகவும், தன்னிச்சையாகவும் குறைத்துக் கொள்வதுதான். இந்த முயற்சி வெற்றி பெற்றால்தான் மனத் திருப்தியும் சந்தோஷமும் நிலவி நமது பணி ஆற்றலும் வளம் பெறும். இந்த அளவைக்கொண்டு மதிப்பிட்டால் தேவையில்லாத பல பொருள்கள் நமது ஆசிரமத்தில் இருப்பதைக் காணலாம். இப்படித் தேவைக்கு மீறிய பொருள்கள் இருப்பதால் அண்டையில் இருப்பவர்களைத் திருட்டுத் தொழில் புரியத் தூண்டுகிறது.

பரிசுத்தமான சத்திய நிலையிலிருந்து பார்த்தால், நமது உடல்கூட ஓர் உடைமைதான். இன்பத்தை நுகர்வதற்கே ஆன்மாவுக்குத் தங்குமிடமாக உடல் சிருஷ்டியாயிற்று என்னும் கூற்று உண்மை. இந்த இன்ப விருப்பம் மறைந்தால் அப்புறம் உடலுக்குத் தேவையில்லை; மனிதன் பிறப்பு இறப்பு என்னும் மாயச் சுழலிலிருந்து விடுபடுகிறான். ஆன்மா எங்கும் இருப்பது. அப்படி இருக்கையில், கூண்டுபோன்ற உடலில் அடைபட்டிருக்க அதற்கு என்ன அவசியம் இருக்கிறது? அந்தக் கூட்டில் இடம் பெறுவதற்காகத் தீமை புரிந்து பிறரைக் கொல்லுவதற்குத்தான் என்ன அவசியம் இருக்கிறது? இப்படிப் பார்த்தால் நாம் பூரண துறவறத்தின் மகிமையை அறிகிறோம். இதன் விளைவாக உடலுள்ளவரையில் அதைச் சேவை புரிவதற்காகப் பயன்படுத்துகிறோம். ஆகையால், நமது வாழ்க்கை லட்சியம் பணிபுரிவதேயொழிய உணவு தேடுவதல்ல என்பது தெளிவாகிறது. நாம் உண்பதும், உறங்குவதும், விழித்திருப்பதும், தாகத்திற்கு நீர் அருந்துவதும் ஆகிய எல்லாம் சேவை செய்வதற்கே என்று ஏற்படுகிறது. இம்மாதிரி மனநிலை அடைவதால் இன்பம் சுரக்கிறது. காலக்கிரமத்தில் பரம்பொருளின் பேரொளியைக் காணும் பாக்கியம் கிட்டும். இந்த நோக்கிலிருந்து நமது நிலையை ஆராய்ந்தறிந்துகொள்ள முற்படுவோம்.

நடவடிக்கைகளுக்கு மட்டுமல்ல, இத்தகைய சிறப்புக்கும் உடைமையின்மைக் கொள்கை ஆக்கம் அளிக்கும். பயனற்ற விஷ

யங்களால் மூளையை நிரப்பிக்கொள்கிறவன், உத்தமமான உடைமையின்மைக் கொள்கைக்கு மாருக நடப்பவனுகின்ருன். கடவுள்பாலுள்ள கவனத்தை இழப்பதும் அல்லது கடவுளிடம் பக்தி கொள்ளத் தடுப்பதுமான இந்த எண்ணங்கள் நமது ஆன்மிக முன்னேற்றத்திற்குத் தடையாயிருக்கின்றன. இந்தச் சந்தர்ப்பத்தில் கீதை 13-ஆம் அத்தியாயத்தில் ஞானத்தைப்பற்றிய விவரங்களை நாம் கவனிக்க வேண்டும். அடக்கம் (அமானித்துவம்) ஞானம் என்றும், மற்றவை அறியாமை என்றும் அந்த அத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கிறது. இது உண்மையானல்-இது உண்மை என்பதில் சந்தேகமில்லை- இன்று ஞானம் என்று போற்றிப் பின்பற்றும் எவ்வளவோ விஷயங்கள் கலப்பற்ற அறியாமை. இவற்ருல் நன்மைக்குப் பதிலாகத் தீமையே அடைகிருேம். இந்த அறியாமையினுல், மனம் நிலையற்றதாகிறது; அதில் சூன்யம் குடிகொண்டு விடுகிறது; ஓயாமல் தீமையில் ஈடுபட்டிருப்பதால் அதிருப்தி வளம் பெறுகிறது. உடைமையின்மை என்ருல் செயலற்று இருக்கவேண்டும் என்ருகாது. இதைச் சொல்ல வேண்டியதில்லை. நம் வாழ்வின் ஒவ்வொரு கணமும் உடலும் உள்ளமும் இடைவிடாது உழைத்து வர வேண்டும். அந்த உழைப்புச் சாத்துவிகமானதாக இருக்கவேண்டும்; சத்தியத்திற்கு அழைத்துச் செல்வதாயிருக்க வேண்டும். சேவைக்குத் தனது வாழ்வை அர்ப்பணம் செய்துகொண்டவன் கணமேனும் சும்மா இருக்க முடியாது. ஆனல், நல்ல செயலுக்கும் தீய செயலுக்கும் உள்ள மாறுபாட்டை உணர்ந்துகொள்ள வேண்டும். சேவையில் ஒருமனப்பட்டு ஈடுபட்டவர்களுக்கு இந்த உணர்வு இயல்பாகவே ஏற்படும்.

எர்வாடா மந்திர், 1930.
'எர்வாடா மந்திரி'லிருந்து, அத்தியாயம்- 6.

## 5

# சம விநியோகம்

நிர்மாணத் திட்டத்தைப்பற்றிச் * சென்ற வாரம் வெளிவந்த கட்டுரையில் சம விநியோகத்தை 13 அம்சங்களில் ஒன்ருகக்குறிப்பிட்டிருந்தேன். ஒவ்வொருவருக்கும் இயல்பான தேவைகளைப் பூர்த்தி செய்யும் அளவுக்குச் சாதனங்கள் கிடைக்க வேண்டும் என்பதுதான் சமமான விநியோகத்தின் உண்மைப் பொருள். உதாரணமாக, ஒருவனுக்கு ஜீரணசக்தி குறைவாயிருந்தால் ரொட்டிக்குக் கால் பவுண்டு மாவுதான் வேண்டும். மற்ருெருவனுக்கு

* 'ஹரிஜன்' 18—8—1940 பக்கம் 252 பார்க்க.

ஒரு பவுண்டு வேண்டுமானால் இருவரும் தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ள வசதி பெற வேண்டும். இந்த லட்சியம் கைகூட வேண்டுமானால் சமூக அமைப்பு முழுவதையும் திருத்தியமைக்க வேண்டும். அகிம்சை அடிப்படையிலுள்ள சமூகம் வேறு லட்சியத்தைக் கைக்கொள்ள முடியாது. இந்த லட்சியத்தை நாம் அடையச் சக்தியற்றவர்களாயிருக்கலாம். ஆனால், அதை மனத்தில் இறுத்திக்கொண்டு அதை அடைவதற்கே உழைத்து வர வேண்டும். எந்த அளவுக்கு நாம் இந்த லட்சியப் பாதையில் முன்னேறுகிறோமோ அந்த அளவுக்கு நமது வாழ்க்கையில் திருப்தியும் இன்பமும் சுரக்கும். அகிம்சை முறையில் இயங்கும் ஒரு சமுதாயத்தை அமைக்கப் பணி புரிந்தவர்களும் ஆவோம்.

இம்முறையை பிறரும் மேற்கொள்ளும் வரையில் காத்திராமல் ஒவ்வொருவரும் தனித் தனியே இதைப் பின்பற்றத் தொடங்குவதும் சாத்தியமாகும். தனிப்பட்டவர், ஒரு நடைமுறையைப் பின்பற்ற முடியுமானால் அம்மாதிரியே பல பேரடங்கிய கூட்டத்தினரும் அவ்வழியே செல்லலாம் என்பதைப் புரிந்துகொள்ளலாம். ஒரு நியாயமான காரியத்தைச் செய்ய யாரும் பிறருக்காகக் காத்திருக்க வேண்டியதில்லை என்பதையே இங்கு நான் வற்புறுத்திக் கூற வேண்டியது அவசியமாகிறது. நோக்கம் பூரணமாக நிறைவேறுமா என்கிற சந்தேகத்தினாலேயே மனிதர் எந்த நற்பணியையும் தொடங்குவதில் தயங்குகின்றனர். இம்மாதிரி மனப்பாங்கே முன்னேற்றத்திற்குத் தடையாயிருக்கிறது.

அகிம்சை மூலம் எப்படிச் சமவிநியோகத்தை நிலைநாட்ட முடியும் என்பதை இப்போது கவனிப்போம். இதை அடைவதற்கு முதற்படி, இந்த வழியை மேற்கொண்டவன் சொந்த வாழ்க்கையில் இதற்கான மாறுதல்களைச் செய்துகொள்ள வேண்டியது தான். இந்தியாவின் வறுமை நிலையை உத்தேசித்து, அவன் தன் தேவைகளை முடிந்த அளவு குறைத்துக்கொள்ள வேண்டும். அவன் அநியாய வழிகளிலும் தன் வருவாயைப் பெறமாட்டான். வியாபார லாபத்திற்காகச் சூதாட்ட முறைகளை அறவே துறந்து விடுவான். இந்தப் புது வாழ்க்கை முறைக்கொப்ப அவன் வாசஸ்தலமும் எளிமையாக அமைந்திருக்கும். வாழ்க்கையின் ஒவ்வோர் அம்சத்திலும் தன்னடக்கம் கைக்கொள்ளப்படும். தனது தனி வாழ்க்கையில் இயன்ற அளவு சீர்திருத்தம் செய்து முடிந்ததும் இந்த லட்சியத்தைத் தன்னுடைய சகாக்களுக்கும் மற்றும் அண்டையிலுள்ளவர்களுக்கும் போதனை செய்ய முற்படுவான்.

பார்க்கப் போனால், இந்தச் சம வினியோகக் கொள்கைக்கு அடிப்படையாகத்தான் பணக்காரர்கள் தங்கள் உபரி தனத்தை ஏழைகளின் நலனுக்காகப் பயன்படுத்த வேண்டும் என்னும் கொள்கை அமைந்திருக்கிறது. அந்தக் கொள்கைப்படி அவர்கள், அண்டையில் இருப்பவர்களைவிட ஒரு ரூபாய்கூட அதிகப்படியாக வைத்திருக்கலாகாது. இந்த நன்னிலையை எப்படி ஆக்குவது? அகிம்சை மூலமா? அல்லது பணக்காரர் களின் உடைமைகளைப் பறிமுதல் செய்தா? பறிப்பதென்றால் அதற்காகப் பலாத்காரத்தை மேற்கொள்ள வேண்டி வரும். பலாத்காரச் செயலினால் சமூகத்திற்கு எவ்வித நன்மையும் விளையாது. பணக்காரனின் உடைமைகளைப் பறிப்பதனால் சமூகமே ஏழைமை நிலை அடைந்துவிடுகிறது. ஏனெனில், பணத்தை எப்படித் திரட்டுவது என்பதை அறிந்த ஒருவரின் மேதையைப் பயன்படுத்த முடியாமல் சமூகம் இழந்துவிடுகிறது. ஆகையால், அகிம்சை வழியே சாலச் சிறந்தது என்பதைத் தெள்ளெனத் தெரிந்துகொள்ளலாம். பணக்காரரிடம் அவரு டைய தனம் விட்டுவைக்கப்படும். தன் தேவைக்கு நியாயமாக வேண்டியதை எடுத்துக்கொண்டு பாக்கியுள்ளதற்கு அவர் தருமகர்த்தாவாக இருந்து அதை ஏழைகளின் நலனுக்குப் பயன்படுத்துவார். தருமகர்த்தாவாயிருப்பவர் நாணயமாக நடந்துகொள்வார் என்று இந்த வாதத்தை மேற்கொள் பவர்கள் நம்புகின்றனர்.

ஒரு மனிதன் எப்பொழுது தன்னைச் சமூக ஊழியன், அதற்காகவே சம்பாதிப்பவன், அதன் நலனுக்கே செலவு செய்பவன் என்று கருதுகிறானோ அவன் செயல்களில் தூய்மை பரவுகிறது; அவன் அகிம்சை அடிப்படையில் வேலை செய் கிறான். மேலும், மக்கள் மனம் இம்மாதிரி வாழ்க்கை முறையை நாடிச் சென்றால், சமூகத்தில் அமைதியான புரட்சி ஏற்படும். இதன் விளைவாக மக்களிடையே எவ்வித மனக்கசப்பும் துலங்காது.

மனித இயல்பில் இம்மாதிரி மாறுதல் ஏற்பட்டதற்குச் சரித்திரச் சான்று இருக்கிறதா என்று கேட்கலாம். இம்மாதிரி மாறுதல் தனிப்பட்டவர்களிடையே நிச்சயமாக ஏற்பட் டிருக்கிறது. சமூகம் முழுதும் மாறியதற்கு உதாரணம் காட்ட முடியாமல் இருக்கலாம். இதிலிருந்து நாம் தெரிந்துகொள்ள வேண்டியது என்னவென்றால், அகிம்சை முறையில் இம்மாதிரி பேரளவான சோதனை இதுவரையில் கைக்கொள்ளப் படவில்லை என்பதுதான். அகிம்சை தனிப்பட்டவர்கள் பெரிதும்

கைக்கொள்ளத்தக்க ஆயுதம். ஆகையால், அதைத் தனி மனிதர்கள் பயன்படுத்திக்கொள்வதுடன் நிறுத்திக்கொள்ள வேண்டும் என்னும் தப்பான கருத்து நம்மை ஆட்கொண்டு விட்டது. ஆனால், இது உண்மையல்ல. அகிம்சை என்பது சமூகத்தின் ஒரு பண்பு. இதை மக்கள் நம்பும்படி செய்வது எனது லட்சியம். அதுவே நான் செய்யப்போகும் சோதனையுமாகும். அற்புதங்கள் நிகழும் இந்நாளில், ஓர் எண்ணம் புதிது என்பதனாலேயே அது உதவாதது என்று யாரும் கருதுதல் கூடாது. அதைக் கையாள்வது கடினம் என்பதனால் அது பயன்படாது என்று கூறுவதும் காலப்போக்கிற்கு ஒவ்வாததாகும். நான் கனவிலும் காணாதவை எல்லாம் நிகழ்கின்றன ; கைகூடா என்று நினைத்தவை எல்லாம் கைகூடி வருகின்றன. பலாத்காரத் துறையில் பல புதுமைகளைக் கண்டுபிடித்திருப்பது கண்டு நாம் அடிக்கடி வியப்புறுகிறோம். இதையும்விடக் கனவும்காண முடியாததைச் சாதிக்க முடியாது என்று நாம் எண்ணிய பல அதிசயங்களை அகிம்சைத் துறையில் காண்போம் என நான் அழுத்தமாகக் கூறுவேன். மதங்களின் சரித்திரங்களை ஆராய்ந்து பார்த்தால் இம்மாதிரி பல அற்புதங்கள் நிகழ்ந்திருப்பதைக் காண்போம். மதப் பற்றையே சமூகத்திலிருந்து அகற்ற முயற்சி செய்வது நடக்காத காரியம். இம்மாதிரி முயற்சி நிறைவேறுமானால், சமூகமே அழிந்துவிடும் என்றுதான் கொள்ள வேண்டும். மூடநம்பிக்கை, தீய பழக்கங்கள், மற்றும் பல குறைபாடுகள் ஒவ்வொரு காலத்திலும் புகுந்து தாற்காலிகமாக மதத்தைப் பலவீனப்படுத்துகின்றன. தீமைகள் தோன்றி மறைகின்றன. ஆனால், மதம் அழியாமல் நிலைத்து நிற்கிறது. ஏனெனில், மதத்தின் வலிமையால்தான் உலகம் உயிர் பெற்று வாழ்கிறது. மதம் என்பதற்கு முடிவான விளக்கம் தெய்வ நீதிக்குப் பணிதல் என்பதே. தெய்வமும் தெய்வ நீதியும் ஒரே பொருள் கொண்டவை. யாரும் இது வரையில் கடவுளைப் பார்த்ததில்லை. ஆனால், அவதார புருஷர்களும் தீர்க்கதரிசிகளும் தங்களுடைய தவ வலிமையால் மக்கள் நித்தியமான இந்நீதியை ஓரளவு புரிந்துகொள்ள உதவியிருக்கின்றனர்.

ஆனால், எவ்வளவோ முயன்றும் பணக்காரர்கள் ஏழைகளின் உண்மையான தருமகர்த்தாக்களாக மாறாமல், ஏழைகள் துன்புறுத்தப்பட்டுப் பட்டினியால் சாக நேரிட்டால் என்ன செய்வது ? இந்தப் புதிருக்கு வழி கண்டுபிடிக்க முயன்றதன் விளைவாக, அகிம்சா முறையில் ஒத்துழையாமையும், சாத்துவிகச்

சட்ட மறுப்பும் நியாயமான, கைகண்ட மருந்துகளாக எனக்குப் புலப்பட்டன. சமூகத்திலுள்ள ஏழைகளின் உதவியின்றிப் பணக்காரர்கள் பணம் சேர்க்க முடியாது. மிருகத்தின் குணம் மனிதனிடம் ஓரளவு இருப்பதிலிருந்து அவன் பலாத்கார முறையில் ஆதியிலிருந்தே பழக்கப்பட்டிருக்கிறான். அவன் நாலு கால் பிராணியிலிருந்து (மிருகத்திலிருந்து) இரண்டு கால் பிராணியாக (மனிதனாக) மாறிய பின்புதான் அகிம்சைக்குரிய வன்மை பற்றிய உணர்வு அவன் ஆன்மாவுக்கு ஏற்பட்டது. இந்த உணர்வு அவனுள்ளே நிதானமாக, ஆனால், நிச்சயமாக வளர்ந்துகொண்டே வந்திருக்கிறது. இந்த ஞானம் ஏழை மக்களிடம் புகுந்து பரவத் தொடங்குமானால், அவர்கள் புதிய பலம் பெறுவர். ஆளைக் கொல்லும் ஏற்றத்தாழ்வுகளால் ஏற்பட்ட பட்டினி நிலையிலிருந்து தங்களை விடுவித்துக்கொள்வதற்கான வழியைத் தெரிந்துகொள்வர்.

—'ஹரிஜன்' – 25—8—1940

## 6

# ஆலைத் தொழிலாளர்களுக்கு

[அகமதாபாத் ஆலை முதலாளிகளுக்கும் தொழிலாளர்களுக்கும் 1917-ஆம் ஆண்டில் நடந்த போராட்டத்தின் இரண்டாம் ஆண்டு விழாவில் தொழிலாளர்களுக்குக் காந்திஜி ஆற்றிய சொற்பொழிவில் அடங்கிய கருத்துக்கள் இங்கு கொடுக்கப்பட்டிருக்கின்றன.]

### சாத்துவிகச் சட்டமறுப்பும் பலாத்காரச் சட்டமறுப்பும்

நாட்டின் சட்டத்தைத் துராக்கிருதமாக மீறுவதன் மூலம் தொழிலாளர்கள் தங்கள் கோபத்தைத் தீர்த்துக்கொள்வார்களானால் அவர்கள் தற்கொலை செய்துகொண்டவர்களாவார்கள். அதனால் இந்தியாவும் சொல்லொணாத் துயரங்களை அனுபவிக்க வேண்டிவரும். பலாத்காரம் பயன் அளிக்கும் போல் தோன்றுவதைக் கண்டு நீங்கள் அந்த முறையை மேற்கொள்ளும் தவறு செய்யலாகாது என விரும்புகிறேன். நான் சத்தியாக்கிரகம், சாத்துவிகச் சட்ட மறுப்பு இரண்டையும் போதிக்கத் தொடங்கிய பொழுது, துராக்கிருதச் சட்ட மறுப்பை அதில் அடங்கியதாக நான் கருதவில்லை. சத்தியத்தைப் பலாத்காரத்தின் மூலம் பரப்ப முடியாது என்பதை என் அனுபவத்திலிருந்து நான் அறிந்துகொண்டிருக்கிறேன். தங்கள் இயக்கம் நியாய

மானது என்று நம்புபவர்கள் எல்லையில்லாப் பொறுமையுடைய வர்களாயிருக்க வேண்டும். துராக்கிருத சட்ட மறுப்பு, பலாத் காரம் ஆகிய இரண்டையும் கைவிட்டவர்களே சாத்துவிகச் சட்ட மறுப்பை மேற்கொள்ளத் தகுதியுள்ளவர்கள். எப்படி ஒரு மனிதன் ஒரே சமயத்தில் கோபமுள்ளவனாகவும் சாந்தமுள்ள வனாகவும் இருக்கமுடியும்? அவ்வாறே சாத்துவிகச் சட்டமறுப்பு, துராக்கிருதச் சட்ட மறுப்பு இரண்டையும் ஒரே காலத்தில் மேற்கொள்ள முடியாது. ஒருவன் தன் உணர்ச்சிகளை வென்ற பிறகே தன்னடக்கம் பெற முடியும். அதே போல நாட்டின் சட்டத்திற்குத் தன்னிச்சையாகக் கீழ்ப்படிந்து கட்டுப்பட்ட வன்தான் சாத்துவிகச் சட்ட மறுப்பைக் கைக்கொள்ளும் சக்தி பெறுகிறான். மனிதனைப் பல ஆசைகள் மயக்கும்பொழுதும் அவைகளுக்கு ஆளாகாமல் மீளுபவனே புலனை வென்றவ னாகிறான். அதேபோல் கோபத்துக்கு இடம் இருந்தும் கோபப் படாமல் இருக்கக் கற்றவனே தன்னடக்கமுள்ளவனாகிறான். இந்தச் சோதனையில் சென்ற ஆண்டு நாம் தோற்றுவிட்டோம். இந்த நன்னாளில் சென்ற ஏப்ரல் மாதம் நீங்கள் செய்த தவறு களைநினைத்துப் பார்த்து மீண்டும் அம்மாதிரி தவறு செய்வதில்லை என்று நீங்கள் சங்கற்பம் செய்துகொள்ள வேண்டும் என்பதே என் மனமொப்பிய பிரார்த்தனை.

## ஆலைத் தொழிலாளர்கள் நிலை

பொதுவாக, ஆலைத் தொழிலாளர்களின் நிலை என்ன என்பது பற்றிச் சில வார்த்தைகள் கூறுகிறேன். இதுபற்றி அவர்கள் தெரிந்துகொள்ள வேண்டியது நிரம்ப இருக்கிறது. அதிகக் கூலி பெறுவதனால் மட்டும் நாம் பணக்காரர்களாக முடியாது; பணம் சம்பாதிப்பது வாழ்க்கை லட்சியமுமல்ல. உங்களுக்கு அதிகப்படி கூலி வாங்கித் தருவதற்கு மட்டும் அநசூயா பென் தம் வாழ்க்கையை அர்ப்பணம் செய்யவில்லை. அவரது தியாகத்தின் நோக்கம், நீங்கள் சந்தோஷமாக வாழ் வதற்கான கூலி பெற உதவவும், உங்கள் வாழ்க்கை உண் மையான மதப்பற்றுள்ளதாக மாறவும், ஆதி அந்தமில்லாத அறநெறிகளை நீங்கள் மேற்கொள்ளவும், குடிப்பது, சூதாடுவது போன்ற தீய பழக்கங்களை நீங்கள் கைவிடவும், உங்கள் வருவாயை நல்வழிகளில் பயன்படுத்தவும், உங்களுடைய வீடு களைச் சுத்தமாக வைத்துக்கொள்ளவும், உங்கள் குழந்தை களுக்கு நீங்கள் கல்வியறிவு புகட்டவும் உங்களுக்கு உதவி புரிவதுதான்.

உங்களுடைய பொருளாதார நிலை சீர்பட்டிருக்கிறது. இன்னும் சீர்பட இடம் இருக்கிறது. இந்த மேம்பாடு இரு வகைகளில் நிறைவேறலாம். ஒன்று, ஆலை முதலாளிகளைக் கலந்து கொள்வதன் மூலம்; மற்றொன்று, அவர்களை மிகவும் நிர்ப்பந்தித்து இணங்க வைப்பதன் மூலம். முதல் வழி ஒன்று தான் நியாயமானது. மேனாடுகளில் முதலாளிக்கும் தொழிலாளிக்கும் ஓயாமல் ச ச் ச ர வு இருந்துகொண்டே யிருக்கிறது. ஒவ்வொரு சாராரும் மற்றவரைத் தங்களுக்கு இயல்பான பகைவர்களாகக் கருதுகின்றனர். இந்த மனப்பாங்கு இந்தியாவிலும் தலைகாட்டத் தொடங்கிவிட்டது போல் இருக்கிறது. இது நிலைத்துவிட்டால் அத்துடன் தொழில் நசித்து அமைதியும் குலைந்துவிடும். இரு சாராரும் ஒருவரை மற்றவர் நம்பியே வாழ வேண்டும் என்பதை உணர்ந்தார்களானால் ச்ச்சரவுக்கு இடமே இராது.

## நியாயமான கோரிக்கை

முதலாளியின் கடமை என்ன என்பதுபற்றி நான் ஆராயப் போவதில்லை. தொழிலாளி மட்டும் தம்முடைய உரிமைகளையும் பொறுப்புக்களையும் உணர்ந்து, தமது காரிய சித்திக்குத் தூய முறைகளையே கைக்கொண்டால் இரு தரத்தாருக்கும் நன்மையுண்டு. ஆனால், இதற்கு இரண்டு விஷயங்கள் அவசியம். கோரிக்கைகளும், அவைகளை அடைவதற்கான முறைகளும் நியாயமாகவும், தெளிவாகவும் இருக்கவேண்டும். முதலாளிகளின் நிலைமையைப் பயன்படுத்திக்கொள்வது நீதியான கோரிக்கை ஆகாது. தனது வாழ்க்கையை நடத்தித் தன் குழந்தைகளுக்கு நல்ல முறையில் கல்வி கற்பிப்பதற்குப் போதிய அளவு கூலி கேட்பது மிகவும் நியாயமான கோரிக்கை. பலாத்காரத்தைக் கைக்கொள்ளாமல் நியாயம் கோருவதும், மத்தியஸ்த முறை மூலம் முதலாளிகளின் நல்லெண்ணத்தை நம்பி அவர்களிடம் முறையிடுவதும் நியாயமான வழிகள்.

## சங்கங்களும் மத்தியஸ்தமும்

ஆகையால், உங்கள் நோக்கங்கள் ஈடேறுவதற்குச் சங்கங்கள் வேண்டும். இந்த வகையில் வேலை தொடங்கப்பட்டுவிட்டது. ஆலையில் ஒவ்வொரு பகுதித் தொழிலாளர்களும் ஒவ்வொரு சங்கம் அமைத்து, அமைப்பு விதிகளின்படி சிரத்தையாகச் செயலாற்றுவர் என நம்புகிறேன். அப்புறம் நீங்கள் சங்கங்களின் மூலம் ஆலை முதலாளிகளிடம் முறையிடலாம். அவர்

கள் முடிவு உங்களுக்குத் திருப்தி அளிக்காவிட்டால் நீங்கள் மத்தியஸ்தம் கோரலாம். மத்தியஸ்தம் சம்பந்தமான கொள்கை களை இரு சாராரும் ஏற்றுக்கொண்டிருப்பது திருப்திக்குரிய விஷயம். மத்தியஸ்தக் கொள்கையை விரிவாகப் பயன்படுத்து வதன் மூலம் இனி வேலை நிறுத்தம் தொடங்க இடம் இராது என்கிற நிலை ஏற்படும் என நம்புகிறேன். நீதி பெறுவதற்கு, வேலை நிறுத்தம் தொழிலாளர்களின் பிறப்புரிமை என்பதை நான் அறிவேன். ஆனால், மத்தியஸ்தக் கொள்கையை முதலாளிகள் ஒப்புக்கொண்டுவிட்டால் வேலை நிறுத்தம் செய்வது குற்ற மாகக் கருதப்பட வேண்டும். கூலிகள் உயர்ந்துவருகின்றன, மேலும் உயரக்கூடும் என்று நம்பலாம். ஆனால் வேலை நேரத் தைக் குறைக்கவும் அவசியம் இருக்கிறது. ஆலைத் தொழிலாளி கள் தினமும் 12 மணி, அதற்கு மேலுங்கூட, வேலை செய்கின்றனர். இவ்வளவு நேரம் தினமும் வேலை செய்பவர்களுக்கு அறிவு வளர்ச்சிக்கு அவகாசம் கிடைக்காது. ஆகையால் மிருகங் களுக்கும் கேடான நிலையில் ஆலைத் தொழிலாளிகள் இருக் கின்றனர். இந்தக் கேட்டிலிருந்து விடுபட முயல்வது நம் கடமை. ஆனால், நம் தொழில்கள் நசிப்பதற்கு இடங் கொடாமல் பாதுகாக்க வேண்டும்.

ஆலைத் தொழிலாளிகள் சோம்பேறிகளாயிருக்கின்றனர்; அவர்கள் வேலையில் கவனம் செலுத்துவதில்லை; பூரா வேலை நேரத்தையும் வேலை செய்வதில் செலவிடுவதில்லை என்றும் ஆலை முதலாளிகள் என்னிடம் கூறுகின்றனர். தினமும் 12 மணி நேரம் வேலை செய்ய வேண்டியவர்கள் கவனத்துடன், சிரத்தை யாக வேலை செய்வார்கள் என நான் எதிர்பார்க்கவில்லை. ஆனால் வேலை நேரம் தினசரி 10 மணியாகக் குறைக்கப்பட் டால், தொழிலாளர்கள் 12 மணி நேரத்தில் செய்த வேலையை இந்தக் குறுகிய கால அளவில் சிரத்தையுடன் செய்வார்கள் என நான் கண்டிப்பாய் நம்புகிறேன். வேலை நேரக் குறைப் பினால் இங்கிலாந்தில் நற்பயன் ஏற்பட்டிருக்கிறது. ஆலைத் தொழிலாளிகள், ஆலை முதலாளிகளின் நலனே தங்கள் நலன் என்று கருதத் தொடங்கினால், அவர்கள் உயர்வு பெறுவ துடன் நாட்டுத் தொழில்களும் வளம் பெறும். ஆகையால், வேலை நேரத்தை 12-இலிருந்து 10 மணியாகக் குறைக்கும்படி ஆலை முதலாளிகளை வற்புறுத்த விரும்புகிறேன். 12 மணி நேரத்தில் செய்த வேலையை 10 மணி நேரத்தில் செய்து முடிக்கும்படி தொழிலாளர்களையும் கேட்டுக்கொள்ளு கிறேன்.

வேலை நேரத்தில் மிச்சமான காலத்தையும், அதிகப்படியாகக் கிடைக்கக்கூடிய கூலியையும் எப்படிப் பயன்படுத்துவது என்பதை இப்போது ஆராய வேண்டும். அதிகப்படியாகக் கிடைக்கும் கூலியைக் கஞ்சா வாங்குவதிலும், மீதமாகும் நேரத்தைச் சூதாட்டத்திலும் செலவு செய்வது அடுப்புக்குப் பயந்து கொதிக்கும் சட்டியில் விழுவதற்கொப்பாகும். அதிகப்படியாகக் கிடைக்கும் பணத்தை நம் குழந்தைகளுக்குக் கல்வி புகட்டுவதிலும், மிச்சமாகும் நேரத்தில் நமது அறிவை வளர்ப்பதிலும் செலவிட வேண்டும் என்பது தெளிவாகத் தெரிகிறது. இவ்விரண்டு விஷயங்களிலும் ஆலை முதலாளிகள் நிரம்ப உதவி புரியலாம். சுத்தமான பாலும், ஆரோக்கியமான சிற்றுண்டியும் கிடைக்கக்கூடிய உணவு விடுதிகளை அவர்கள் தொழிலாளருக்காகத் திறந்துவைக்கலாம். அவர்கள் வாசகசாலைகள் நடத்தலாம்; தீமைக்கு வழியிராத விளையாட்டுக்களில் தொழிலாளர்கள் ஈடுபட உதவலாம். இம்மாதிரி ஆரோக்கியம் மிக்க சூழ்நிலை ஏற்பாட்டால் மதுபானத்திலும் சூதாட்டத்திலும் அவர்களுக்கு இருக்கும் ஆர்வம் அகன்று விடும். இம்மாதிரி வசதிகள் வழங்கத் தொழிலாளர் சங்கங்களும் முயல வேண்டும். முதலாளிகளுடன் போராடுவதற்குப் பதிலாகத் தங்களைச் சீர்திருத்திக்கொள்வதில் ஈடுபடுவது பயனுள்ள பணியாகும்.

## தொழில் பாகுபாடு

சிறுவர்களைப் பள்ளியிலிருந்து பிரித்துக் கூலி வேலைக்கு அனுப்புவது நமது தேசத்தின் நலிவையே காட்டுகிறது. எந்த நாடும் தன் குழந்தைகளைத் துஷ்பிரயோகம் செய்து வாழ முடியாது. 16 வயது வரைக்குமாவது அவர்கள் பள்ளியிலிருக்க வகை செய்ய வேண்டும். இம்மாதிரியே பெண்களும் ஆலைத் தொழிலில் ஈடுபடாதிருக்க ஏற்பாடு செய்ய வேண்டும். ஆணும் பெண்ணும் வாழ்க்கையில் கூட்டாளிகள் என்றால்–பரஸ்பரம் உதவி புரிந்து வாழ வேண்டும் என்றால்– அவர்கள் வீட்டு வேலைகளில் பங்கு போட்டுச் செய்தால்தான் சிறப்பாகக் குடித்தனம் செய்ய முடியும். புத்தி மிக்க தாயானவள், தனது வீட்டு வேலைகளைச் செய்வதிலும், குழந்தைகளைப் பராமரிப்பதிலும் முழு நேரமும் செலவாகும் என்பதை நன்கு உணர்வாள். வாழ்க்கையை நடத்தக் கணவனும் மனைவியும் கூலி வேலை செய்து வாழ வேண்டிய நிலை ஏற்பட்டால் கண்டிப்பாக நாடு நசித்து விடும். கடன்பட்டவன் தன் முதலீட்டைக் கரைத்துக் காலட்சேபம் நடத்துவதுபோல் ஆகும்.

## ஆத்ம சக்தியை வளர்க்க

தொழிலாளர்கள் கல்வி மூலம் தங்கள் அறிவை வளர்த்துக் குழந்தைகளையும் அறிவு பெறச் செய்வது எவ்வளவு அவசியமோ அம்மாதிரியே அவர்கள் தங்கள் ஆன்மிக சக்தி வளர்வதற்கும் பாடுபட வேண்டும். ஆன்மிக சக்தி என்றால் மதப்பற்று என்பதே பொருள். ஆண்டவனிடம் உண்மையான பக்தி உள்ளவர்களையும், சமயத்தின் உண்மையான தன்மையை உணர்ந்தவர்களையும் உலகம் எதிர்த்துப் போராடுவதில்லை. அப்படியே எதிர்த்தாலும் இவர்கள் தங்கள் சாந்த குணத்தால் அவர்களுடைய வெறியை அடக்கிவிடுவார்கள். மதம் என்றால் **நமாஸ்** செய்வதோ அல்லது ஆலயத்திற்குச் செல்வதோ அன்று. தன்னைத் தானே அறிந்து கடவுளைப்பற்றியும் அறிந்துகொள்வது என்பதுதான் அதன் பொருள். நெசவு தெரியாமல் எப்படி நெசவாளியாக முடியாதோ அதேபோல் சில கோட்பாடுகளைப் பின்பற்றாவிட்டாலும் ஒருவன் தன்னை அறிந்துகொள்ள முடியாது. இந்தக் கோட்பாடுகளில் முக்கியமானவை மூன்று. இவைகளை யாரும் கடைப்பிடிக்கலாம். முதலில் உண்மையைப் பின்பற்றவேண்டும். உண்மை பேசத் தெரியாதவன் செல்லாக் காசு மாதிரி மதிப்பிழந்தவனாவான். இரண்டாவது கோட்பாடு, பிறருக்குத் தீங்கிழைத்தலாகாது. பிறருக்குத் தீங்கிழைப்பவன் அவர்களிடம் அழுக்காறு கொள்கிறான். ஆகையினால், அவன் உலகத்தில் உயிர் வாழத் தகுதியற்றவன். ஆனால், உலகம் அவனை என்றென்றும் எதிர்த்துக்கொண்டேயிருக்கும். ஆகையினால், அவன் பிறருக்கு அஞ்சியே வாழ வேண்டி வரும். அன்பு என்னும் கயிற்றால் நாம் பிணைக்கப்பட்டுள்ளோம். ஒவ்வொன்றிலும் ஓர் **ஆகர்ஷண சக்தி** இருக்கிறது. அந்தச் சக்தியின்றி எதுவும் உயிர் பெற்றிருக்க முடியாது. இந்த உலகம் பல அணுக்களைக் கொண்டது. இவைகளைப் பிணைக்கும் ஒரு சக்தி இல்லாவிட்டால் உலகம் இன்றுள்ள மாதிரி ஒன்றுபட்டிராமல் சிதைந்துபோயிருக்கும் என விஞ்ஞானிகள் கூறுகின்றனர். ஜடப்பொருள்களிலேயே பிணைக்கும் சக்தி இருப்பதுபோல் உயிருள்ள பிராணிகளிடமும் இந்தச் சக்தி இருக்க வேண்டும். உயிர் வாழ் பிராணிகளைப் பிணைக்கும் சக்திதான் **அன்பு.** தாய் தந்தை, அண்ணன் தங்கை, நண்பர்கள் எல்லோருக்குள்ளும் அன்பு நிலவுகிறதைக் காண்கிறோம். இந்த அன்புச் சக்தியை உயிருள்ள எல்லாப் பிராணிகளிடமும் உபயோகிக்க நாம் கற்றுக் கொள்ள வேண்டும். இந்த உபயோகத்தின் மூலம்தான் நாம் கடவுளை அறிந்துகொள்ள முடியும். அன்பு உள்ள இடத்தில்

உயிர் இருக்கிறது. துவேஷம் நாசத்திற்கு வழி காட்டுகிறது. இந்த அன்பு நியதியை நீங்கள் அறிந்துகொள்ள அநசூயா பென் உதவி புரிவார் என நம்புகிறேன். அவர் உங்களிடத்தில் அன்பு கொண்டிருக்கிறார் என்பதை நீங்கள் அறிவீர்களானால், மனித ஜாதிமுழுவதினிடமும் அன்பு கொள்வதன் மூலம் அவரிடம் நீங்கள் அன்பு காட்டுவீர்கள் என நான் நம்புகிறேன். நம்முடைய உணர்ச்சிகளை வெல்ல வேண்டும் என்பது மூன்றாவது கோட்பாடு. வடமொழியில் இதைப் **பிரம்மசரியம்** என்பார்கள். மணமாகாத நிலை என்கிற குறுகிய பொருளில் இந்தச் சொல்லை நான் உபயோகிக்கவில்லை. ஒருவன் சிற்றின்பத்தில் ஈடுபடாமல் துறவியாகவோ, தூய இல்லற வாழ்க்கை நடத்துபவனாகவோ இருந்து, பலவித போகங்களில் திளைப்பவனாயின் அவன் பிரம்மசாரி ஆக முடியாது. தன் புலன்களையெல்லாம் முற்றிலும் அடக்கியவன்தான் தன்னைத்தானே நன்கு அறிய முடியும். தன்னடக்கத்தை முற்றிலும் அடைந்தவனே உண்மையான **பிரம்மசாரி**; அவனே பரம பக்தன்; அவனே உண்மையான ஹிந்து; அவனே உண்மையான முஸ்லிம்.

தகாத வார்த்தைகளுக்கோ, இழி சுவையான பாட்டுகளுக்கோ செவி சாய்ப்பது பிரம்மசரியத்திற்கு முரணானது. ஆண்டவன் நாமத்தை உச்சரிக்காமல், வெறும் வசைமொழிகளைப் பிதற்றுவது நாவுக்கு ஏற்றதன்று. இவ்வாறே ஒவ்வொரு புலனும் போகும் வழியே செல்பவன் தனது நிலையை அறியாமல் அழிந்து போகிறான். தனது உணர்ச்சியை அடக்கிப் பூரணமாகத் தன்னடக்கம் அடைந்தவனையே உண்மையான மனிதனாகக் கருத முடியும். குதிரையைக் கட்டுப்படுத்த முடியாதவன், அதன் மீது ஏறிக் கீழே விழுகிறானே அந்த நிலையில் நாம் இருக்கின்றோம். குதிரையின் லகானைப் பிடித்திழுத்து அதை அடக்கும் திறன் உள்ளவன் அதன்மீது ஏறி வெகுவாய்க் குறித்த இடத்திற்குச் செல்ல முடியும். அம்மாதிரியே புலனடக்கம் செய்தவன் முக்தி நிலையை அடைய முடியும். அவன்தான் சுயராஜ்யத்திற்குத் தகுதியுடையவன். அவன்தான் உண்மையை நாடிச் செல்லும் திறனுடையவன். அவன் மட்டுந்தான் கடவுளை அறிந்துகொள்ளும் யோக்கியதையுடையவன். இவைகளையெல்லாம் ஏட்டுச் சுரைக்காய் எனத் தள்ளிவிடக்கூடாது என்பதே என் உண்மையான அவா. இந்த உண்மைகளைக் கடைப்பிடிப்பதன் உயர்வை அறிந்தாலன்றி நாம் முன்னேற முடியாது என்பதை நம்பும்படி உங்களைக் கேட்டுக்கொள்கிறேன். நான் உங்களுக்குக் கூறியவை யாவும் என் அனுபவத்தின் ஒரு சிறு பகுதி. உங்கள் மீதுள்ள அன்பி

னுல்தான் நான் உங்களுக்குப் பணி புரிகிறேன். உங்கள் துயரத்திலும் நான் பங்குகொள்வதற்குக் காரணம், நான் மனிதனுகப் பிறந்த பயனை அடைந்தேன் எனக் கூறி என்னைப் படைத்தவனிடம் அருள் பெறலாம் என்னும் நம்பிக்கைதான். நீங்கள் உண்மை உரைப்பதின் மதிப்பை உணராமல், உங்களிடமுள்ள அரக்க சுபாவம் பிறருக்குத் தீங்கு இழைக்க, உங்கள் உணர்ச்சி போனபடி நீங்கள் ஆடினுல், உங்கள் கூலி நான்கு மடங்கு பெருகினுலும், உங்கள் வேலை நேரம் இப்போது இருப்பதில் கால் பங்காகக் குறைந்தாலும் என்ன பயன்? நாம் அதிகக் கூலி பெறவேண்டும், வேலை குறைய வேண்டும் என்பன எல்லாம் எதற்காக? சுத்தமான குடியிருப்பு வசதி பெறுவதற்காகவும், நம் உடலை சுத்தமாக வைத்திருப்பதற்காகவும், நமது மனம் தூய்மையை அடைவதற்காகவும், ஆன்மா பரிசுத்தமாவதற்குந்தான். இந்த நால்வகைச் சுத்தத்திற்காகவே கூலி உயர்வும் வேலைக் குறைவும் மிக மிக அவசியம். இந்த நன்னேக்கம் இல்லையேல் கூலி உயர்வையும் வேலைக் குறைவையும் கோரிப் பெறுவது பாபமாகும். இந்த உயர் நோக்கம் ஈடேறுவதற்கான சக்தியை அநசூயா பென்னுக்கும் உங்களுக்கும் ஆண்டவன் அருளுவானுக!

—'எங் இந்தியா' - 28—4—20, 5—5—1920

# 7

# அகிம்சை ஒன்றே பாதுகாப்பு

பல்கலைக்கழகப் பட்டம் பெற்ற சில மாணவர்கள் தொழிலாளர் நலனுக்கு உழைக்கத் திட்டமிட்டிருந்தனர். தொழிலாளர்களை ஒன்றுபட்டு இயங்கச் செய்வதில் பயிற்சி பெற அகமதாபாத் சென்ற அவர்கள், திரும்புகையில் சில நாட்கள் வர்தாவில் தங்கிச் சென்றனர். அவர்களுக்கு அவகாசம் அளித்து, அவர்கள் எழுப்பும் பிரச்னைகளுக்குப் பதில் கூறக் காந்தியடிகள் இசைந்தார். தென்னுப்பிரிக்காவில் அவர் பொது வாழ்வில் ஈடுபட்ட நாளிலிருந்து அவர் எப்படித் தொழிலாளர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார் என்பதை அவர் விளக்கிக் கூறினுர். தென்னுப்பிரிகாவில் அவர் வக்கீல் தொழில் நடத்த முடிவு செய்தவுடன் அவருக்கு ஒழிந்த நேரங்களை அங்குக் குடியேறியுள்ள இந்தியர் நலனைக் கவனிப்பதில் செலவிடுவதாகத் திட்டம் செய்தார். அப்படி முடிவு செய்த பிறகு அவருடைய உதவியை முதன்முதலாக நாடி வந்தவன் ஓர் ஒப்பந்தக் கூலி. இந்தத் தொடர்பு அவருக்குத்

தொழிலாளர்களிடம் நாட்டம் செலுத்த உதவியது. தொழி லாளர்கள் தங்களுக்கும் முதலாளிகளுக்குமுள்ள தகராறுகள், தங்கள் குடும்பத் தொல்லைகள் முதலியன பற்றி அவரிடம் முறையிட்டனர். இதனுல் அவர்களுடைய வாழ்வைப்பற்றிய உண்மைகளைக் காந்தியடிகள் நன்கு உணர்ந்துகொள்வது சாத் தியமாயிற்று. அச்சமயம் அடிகள் அவர்களுக்குச் செய்த முதல் போதனை அகிம்சையைப் பற்றித்தான். சத்தியாக்கிரக இயக்கத்தின் நெருக்கடியான கட்டத்தில் 60,000 தொழிலா ளர்கள் வேலை நிறுத்தம் செய்து சிறைத்தண்டனை நிச்சயம் கிடைக்கும் என்ற நிலையில் அகிம்சையைக் கைக்கொள்ளு வதென்று சபதம் செய்திருந்தனர். அவர்கள் சொல்லொணுக் கஷ்டப்பட்டனர்; பட்டினி கிடந்தனர்; சிலர் உயிரையும் விட்டனர். ஆனுல், கடைசி வரையில் அவர்கள் அகிம்சை விரதத்தைக் கைவிடவில்லை. அவர்கள் நிலை மிகவும் கஷ்டமானது. இங்குள்ள தொழிலாளர்களைவிடத் தொல்லை மிகுந்தது அவர்கள் வாழ்வு. அவர்கள் சுதந்திர மனிதர்களல்ல; ஒப்பந்தப்படி உழைக்க வேண்டியவர்கள். தங்களுடைய முதலாளிகளிடமிருந்து நீதி பெற மட்டுமின்றி தங்கள் அழிவுக்கே காரணமாயிருந்த வெறுக்கத்தக்க 3 பவுன் வரியை ரத்து செய்வதற்கும் போராட வேண்டியிருந்தது. ஆனுல், அகிம்சை அவர்கள் வெற்றி பெற உதவியாயிருந்தது. சம்பார ணிலும், அகமதாபாதிலும் காந்தி அடிகள் செய்த பணி சமீப கால சரித்திரமாகும். சம்பாரணைப் பொறுத்த மட்டில் அந்த இடத் தொழிலாளர்களின் நிலை கிட்டத்தட்ட தென்னுப்பிரிக்கா ஒப்பந் தக் கூலிகள் நிலை போன்றதுதான். சென்ற அரை நூற்ருண் டாக அவர்கள் கிளர்ச்சி செய்தும் வெற்றி பெருததற்குக் காரணம், அகிம்சை போன்ற ஒன்றுபடுத்தும் சக்தியை அவர்கள் அறியாததுதான். அங்கே பல கலகங்கள் நிகழ்ந்தன. ஆனுல், ஒவ்வோர் ஆண்டும் அவர்கள் நிலை மோசமாகிக்கொண்டே வந்தது. ஆனுல், அகிம்சையின் மகிமையை முதன்முதலாக உணரத் தொடங்கியதும் அவர்கள் புத்துயிர் பெற்றனர். கடைசியாகச் சிறு போராட்டத்திற்குப் பின் அவர்கள் விடுதலை பெற்றனர்.

அகிம்சையில் அவசியமான கட்டுப்பாடில்லாவிட்டால் அவர் களுக்குள் சச்சரவு இருக்கும்; தங்களுக்கு இருக்கும் சக்தியை வளர்ப்பதற்கு அவர்கள் தயாராயிருக்கமாட்டார்கள். அடிப் படைத் தத்துவமான அகிம்சையை ஏற்றுக்கொண்டால் ஸ்தாபன ஒழுங்கு, தொழில் நுட்பம் எல்லாம் தாமாகவே

வந்தடையும். வகுப்பு ஒற்றுமையும் இயல்பாகவே துலங்கும். அவர்களுக்கு ஆள் பலம் இருக்கிறது. எனினும், அவர்கள் பிறர் கையை எதிர்பார்த்திருக்கின்றனர்; முதலாளிகள் தயவில் அவர்கள் வாழ வேண்டியிருக்கிறது. இதற்குக் காரணம், அவர்கள் தங்களுக்குள் இருக்கும் சக்தியை உணராததுதான். இல்லாவிடில் அவர்கள் ஏன் தங்களுடைய சக்தியைத் திரட்டி, முதலாளிகள் விதிப்பது போன்ற நிபந்தனைகளை அவர்கள் விதிக்க இயலவில்லை? பணம் போலவே உழைப்பும் சிறந்த முதலீடு என்பதை அவர்கள் உணர வேண்டும். அகிம்சை முறையை ஏற்றுக்கொண்டால்தான் இந்த உணர்வு ஏற்படும்.

இந்த உணர்வு ஏற்பட்டு, அவர்களும் தங்கள் உரிமைகளைப் பெற்ற பின்பு அகிம்சை தேவையில்லை என்று நினைக்கலாகாது. அவர்கள் அகிம்சையைக் கைவிட்டார்களானல், முதலாளிகளைப் போன்றே தீய நிலைக்கு வந்து பிறரைச் சுரண்டுபவர்களாவார்கள். தங்களுடைய சக்தியை உணர்ந்து அதனுடன் அகிம்சையைக் கடைப்பிடித்தால், அவர்கள் முதலாளிகளுடன் ஒத்துழைத்து அதனல் ஏற்படும் சக்தியை நல்வழியில் பயன்படுத்தலாம். அப்புறம் முதலாளித்துவம் தங்களுக்கு மாறுபட்டது என நினைக்கமாட்டார்கள். ஆலையும், அதில் இயங்கும் யந்திரங்களும் சுரண்டல் சாதனங்கள் அல்ல, உற்பத்திக்கு உதவுபவை என மதித்துத் தங்கள் சொத்தைப் போல் அவைகளைப் பாதுகாப்பர். அவர்கள் காலத்தை வீணுக்கமாட்டார்கள்; தங்களால் இயன்றமட்டும் உழைப்பார்கள். முதலாளிகளும் தொழிலாளிகளும் ஒருவருக்கொருவர் தருமகர்த்தாக்களாயிருப்பதுடன் இருவரும் சாமான் வாங்குவோரின் தருமகர்த்தாக்களாயும் இருப்பர். தருமகர்த்தாக் கொள்கை ஒரு சாரார் மட்டும் கையாளும் நற்பண்பல்ல. இதனல் தருமகர்த்தா மேலோன் என்றும் பொருள்படாது. நான் கூறியபடி அது பரஸ்பரம் நன்மை நல்கும் முறை. ஒரு சாரார் மற்றொரு சாராரின் நலனைக் காப்பதன்மூலம் தம் நலனையும் காத்துக்கொள்கின்றனர். 'நீங்கள் ஆண்டவனைத் திருப்தி செய்யுங்கள், ஆண்டவன் உங்களைத் திருப்தி செய்யட்டும். இந்தப் பரஸ்பர திருப்தியின் மூலம் உலகுக்கே நலன் விளையட்டும்.' என்று போதிக்கிறது கீதை. பிரபஞ்சத்தில் கடவுள்கள் எனத் தனி இனத்தவர் கிடையாது; உற்பத்தி செய்யும் சக்தியுள்ளவர்கள் யாவருமே, அந்தச் சக்தியைக் கொண்டு சமுதாயத்திற்குப் பாடுபடுபவர்கள் யாவருமே கடவுள்கள் - முதலாளிகள் மட்டுமல்ல தொழிலாளர்களுந்தான்.

—'ஹரிஜன்' - 25—6—1938

# 8

# தொழிலாளர் ஒன்றுபட வேண்டும்

மோதியாபர்ஜில் தொழிலாளர் வசிக்கும் பகுதியில் உள்ளவர்களுக்குக் காந்திஜி சில உபதேச மொழிகள் கூறினர்: "தொழிலாளர்களிடையே ஹிந்து, முஸ்லிம் வேற்றுமையில்லை என நான் நம்புகிறேன். நீங்கள் எல்லோரும் தொழிலாளர்கள். வகுப்புத் துவேஷம் தொழிலாளர்களிடம் புகுந்தால், இரு வகுப்பினரும் தொழிலையே பலவீனம் அடையச் செய்வார்கள். அதனுல், தமக்கும், தம் நாட்டிற்கும் ஊறு செய்தவராவர். தொழிலாளர்கள் தெரிந்தே அறியாமையில் உழன்றதனுல் அடிமைப்பட்டு வாழ்ந்தனர்; அதோடு முதலாளிகளின் சரக்குகளையும் யந்திரங்களையும் நாசம் செய்வதும், முதலாளிகளைக் கொல்வதும் நல்லது என அகம்பாவத்துடன் நம்பினர். ஆழ்ந்த நம்பிக்கையின் விளைவாக நான் தொழிலாளனுகவும், தோட்டியாகவும் இருந்து வருகிறேன். இதனுல் என் அக்கறை தொழிலாளர் அக்கறையுடன் ஒன்றுபட்டதாயிருக்கிறது. ஆகையால், பலாத்காரம் உங்களைக் காப்பாற்ருது என்று கூற விரும்புகிறேன்.

"உழைப்பு, முதலீட்டைவிட உயர்வானது என்று நான் பல ஆண்டுகளாகக் கூறிவந்திருக்கிறேன். உழைப்பின்றிப் பொன், வெள்ளி, தாமிரம் முதலிய உலோகங்கள் வீண் சுமையாகும். பணமின்றி உழைப்பாளி உயிர் வாழ்வது என்பதை நான் அறிந்துகொள்ள முடியும். உழைப்புக்கு விலையே கிடையாது. அவ்வாறல்ல பொன். பாட்டாளியும் முதலாளியும் இணைந்து, கணவன் மனைவி மாதிரி வாழ வேண்டும் என நான் விரும்புகிறேன். இரு சாராரும் ஒத்துழைத்தால் அற்புதங்கள் நிகழ்த்தலாம். ஆனுல், இந்த அற்புதம் நிகழ வேண்டுமானுல், தங்களுக்குள் ஒத்துழைப்பு அவசியம் என அறிந்து நடந்து கொள்ள வேண்டும். அப்புறம் முதலாளிகளிடம் சம நிலையில் நின்று அவர்களுடன் ஒத்துழைக்க முன்வர வேண்டும். ஒற்றுமைக் கலையை அறிந்துதான் முதலாளிகள் தொழிலாளிகளைக் கொண்டு செலுத்துகின்றனர். தனித்து நின்ருல், நீர்த்துளிகளைக் காற்று அடித்துச் செல்வது மாதிரி சிதறுண்டு போகவேண்டியதுதான். ஒத்துழைப்பு அடிப்படையில் பல துளி பெரு வெள்ளமாகிக் கப்பல்கள் செல்லும் கடலாகிவிடும். அம்மாதிரியே உலகத்தில் எப்பகுதியிலாவது தொழிலாளர் ஒன்றுபட்டால் அவர்களுக்கு உயர்ந்த கூலி கொடுப்பதாகச் சொல்லி

ஏமாற்ற முடியாது ; அற்பக் காசுக்கு ஆசைப்பட்டுச் சுயநிலையை இழக்க மாட்டார்கள். உண்மையுடன் அகிம்சை முறையில் தொழிலாளர் ஒன்றுபட்டால், காந்தம் இரும்பை இழுப்பது போல் தேவையான மூலதனத்தைச் சேகரித்துக்கொள்ளலாம். அப்புறம் முதலாளிகள் மூலதனத்திற்குத் தருமகர்த்தாவாகத் தான் இருக்க முடியும். இந்த நன்னாள் உதயமாகும் பொழுது முதலாளிக்கும் தொழிலாளிக்கும் வித்தியாசமே இருக்காது. அப்பொழுது தொழிலாளர்களுக்கு நிரம்ப உணவும், குடியிருக்க நல்ல சுகாதார வசதிகளுள்ள வீடுகளும், குழந்தைகளுக்குத் தேவையான கல்வியும், சுய அபிவிருத்திக்கான ஓய்வு வசதியும், நல்ல வைத்திய உதவியும் கிடைக்கும்.''

—'ஹரிஜன்' - 7--9--1947

# 9

# வேலை நிறுத்தங்கள்

எங்கும் வேலை நிறுத்தங்கள் நடைபெற்று வருகின்றன. தற்போதுள்ள கொந்தளிப்பின் அறிகுறிகளே இவை. புரி படாத எத்தனையோ வித எண்ணங்கள் எல்லோரையும் ஆகர் ஷித்து வருகின்றன. புரிபடாத ஒருவித நம்பிக்கை திட்டமான உருப் பெருவிட்டால் மிகுந்த ஏமாற்றம் எங்கும் நிலவும். இந்தியத் தொழிலாளர் உலகம், உலகத்தின் பிற பகுதிகளைப் போலவே, அவர்களுடைய ஆலோசகர்களின் அல்லது வழி காட்டுபவர்களின் பிடியில் அகப்பட்டுக்கொண்டிருக்கிறது. இந்த வழி காட்டுபவர்கள், எப்பொழுதும் யோக்கியப் பொறுப்புடன் நடந்துகொள்கின்றனர் என்று கூறுவதற்கில்லை. அப்படியே ஒழுங்காக நடந்துகொண்டாலும் புத்திசாலித்தனமாயிருப்ப தில்லை. தொழிலாளர்கள் தங்கள் நிலை பற்றி அதிருப்தி அடைந்துள்ளனர். அப்படி அதிருப்தி அடைவதற்குக் காரணம் இருக்கிறது. முதலாளிகள் செழிப்படையும் பிரதானக் கருவிகள் தொழிலாளிதாம் என்று இவர்களுக்குக் கற்பிக்கப்பட்டு வரு கிறது. இந்தப் போதனை நியாயமானதுதான் என்பதில் ஆட் சேபணையில்லை. ஆகையால், அவர்களை வேலை நிறுத்தம் செய் யத் தூண்டுவது அவ்வளவு கஷ்டமில்லை. இந்திய அரசியல் நிலையும் நம் தொழிலாளர்களைப் பாதிக்கத் தொடங்கிவிட் டது. அரசியல் காரணங்களுக்காக வேலை நிறுத்தத்தை ஏற் படுத்தலாம் என எண்ணும் தொழிலாளர் தலைவர்களுக்கும் குறைவில்லை.

அரசியல் நலனுக்காகத் தொழிலாளர் வேலை நிறுத்தங் களைச் சிருஷ்டிப்பது மகத்தான தவறு என்றே நான் கருது

கின்றேன். இம்மாதிரி வேலை நிறுத்தங்கள், அரசியல் நோக்கங்கள் ஈடேறுவதற்கு உதவி புரியும் என்பதை நான் மறுக்கவில்லை. ஆனால், அகிம்சை முறையான ஒத்துழையாமைத் திட்டத்தில் அதற்கு இடமில்லை. நாட்டின் அரசியல் நிலையை உணர்ந்து பொது நலனுக்கு உழைக்கத் தொழிலாளர் முன்வரத் தயாராகும் வரையில் தொழிலாளர்களை அரசியல் நலனுக்குப் பயன்படுத்துவது அபாயகரமானது என்பதை நிரூபிப்பது கஷ்டமல்ல. ஆனால், இந்த உணர்வைத் தொழிலாளர்களிடம் உடனடியாக எதிர்பார்க்க முடியாது. அவர்கள் தங்கள் நிலையை உயர்த்திக்கொண்டு, கஷ்டமின்றிக் கௌரவமாகக் காலங் கழிக்கச் செய்யத் தக்க நிலையை அடையும் வரையில் நாம் எதிர்பார்க்கும் அரசியல் உணர்வு அவர்களுக்கு ஏற்படாது. தொழிலாளர் செய்யக்கூடிய சிறந்த அரசியல் சேவை, தங்கள் நிலையைச் சீர்திருத்திக்கொண்டு உலக ஞானம் பெற்று, தங்கள் உரிமைகளை வற்புறுத்தத் தெரிந்துகொண்டு, தங்கள் சீரிய உழைப்பினால் தயாராகும் சரக்குகளைத் தங்கள் முதலாளிகள் வகையாகப் பயன்படுத்தும்படி வற்புறுத்துவது முதலியவற்றை அவர்கள் அறிந்துகொள்வதுதான். தங்கள் நிலையைத் தொழிலின் பங்குதாரர்கள் என உயர்த்திக்கொள்வதுதான் அவர்கள் அடைய வேண்டிய ஒழுங்கான முன்னேற்றம். தொழிலாளர் நிலையைச் சீர்திருத்துவதற்கென்றே இப்போதைக்கு வேலை நிறுத்தத்தைக் கையாள வேண்டும். தேசாபிமான உணர்வு பெற்றதும் அவர்கள் தாங்கள் தயாரித்த சரக்குகளின் விலை நியாயத்தை, கோரும்போதுதான் இவ்வேலை நிறுத்தத்தைக் கையாள வேண்டும்.

வெற்றிகரமான வேலை நிறுத்த நிபந்தனைகள் எளியவை. இந்த நிபந்தனைகள் நிறைவேறினால் அவை தோல்வியுரா :

(1) வேலை நிறுத்தத்திற்கான காரணம் நியாயமாக இருக்க வேண்டும்.

(2) வேலை நிறுத்தம் செய்பவர்களிடம் ஒற்றுமை நிலவ வேண்டும்.

(3) வேலை நிறுத்தம் செய்யாதவர்கள் மீது பலாத்காரப் பிரயோகம் கூடாது.

(4) சங்கத்து நிதியின் உதவியை எதிர்பாராமல் வேலை நிறுத்தக் காலத்தில் தொழிலாளர்கள் தங்களைத் தாங்களே

காப்பாற்றிக்கொள்ள வேண்டும். ஆகையால், அவர்கள் பய னுள்ள தாற்காலிகத் தொழில்களில் ஈடுபட வேண்டும்.

(5) வேலை நிறுத்தம் செய்பவர்களின் இடங்களைப் பற்றிக் கொள்ள ஏராளமான ஆட்கள் இருக்கும்வரையில் வேலை நிறுத் தம் செய்வது தகுந்ததல்ல. இந்த நிலையில் தகாத முறையில் தொழிலாளிகள் நடத்தப்பட்டாலும், போதிய கூலி கொடுக்கப் படாவிட்டாலும், வேலையை ராஜீநாமாச் செய்துவிடுவதே சிறந்தது.

(6) மேலே கூறப்பட்ட நிபந்தனைகள் நிறைவேறாமலே பல வேலை நிறுத்தங்கள் வெற்றி பெற்றுள்ளன. இதிலிருந்து நாம் அறிந்துகொள்ளக்கூடியது யாதெனில், முதலாளிகள் பலவீன மாயிருந்தார்கள், அவர்கள் குற்றமே அவர்கள் மனத்தை உறுத் தியது என்பதுதான். தவறான உதாரணங்களைப் பின்பற்றி யதன் மூலம் நாம் கொடிய தவறுகள் செய்திருக்கிறோம். நாம் போதிய அளவு புரிந்துகொள்ளாத முன்மாதிரிகளைப் பின் பற்றாமல் இருப்பதே தக்க பாதுகாப்பு. வெற்றிக்கு அவசியம் என்பவைகளை உணர்ந்து அவைகளைப் பின்பற்றுவதுதான் வெற்றி பெறுவதற்கான வழி.

—'எங் இந்தியா' - 2—3—1947

# 10

# அமைதியான வேலை நிறுத்தத்திற்கான நிபந்தனைகள்

பிரிட்டிஷ் சமாதானப் பிரியர்களின் பத்திரிகையான 'இனி யுத்தமில்லை' என்பதிலிருந்து சில பகுதிகளை ஒரு நண்பர் எனக்கு அனுப்பியுள்ளார். அந்தப் பகுதியில் கீழ்க் காணும் நிபந்தனைகள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. ஓர் அமைதியான வேலை நிறுத்தத்திற்கு ஸ்ரீ பென்னர் பிராக்வே ஒரு சோதனை விதித்திருக்கிறார் :

1. மனித உயிரை மாய்க்கவல்ல சமூகக் கொடுமைகளை எதிர்த்துச் செய்யப்படும் வேலை நிறுத்தம், யுத்தத்தை எதிர்த்துச் செய்யப்படும் வேலை நிறுத்தம் போலவே அமைதியாயிருக்கக்கூடும். (துப்பாக்கியால் மாள்பவர்கள் போல் வயிற்றுக்குப் போதாத கூலி கொடுப்பதாலும் மனிதர் மாள்கின்றனர்.)

2. இந்தக் கொடுமைகளைச் 'சட்ட வரம்புக்குட்பட்டு'த் தவிர்க்க முடி யுமானால் யுத்தத்தைத் தவிர்க்கவும் சட்டபூர்வமான நடவடிக்கைகளால் முடி யும். நம் சட்டபூர்வமான சாதனம் காரியசித்திக்குப் போதாது.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு வாக்காளர், தொழிலாளர் கூலி குறையப் போகிறதென்றோ, யுத்தம் நிகழப் போகிறதென்றோ நினைக்கவே இல்லை.

3. கூலிக் குறைவை எதிர்த்து வேலை நிறுத்தம் (முக்கியமாக பொது வேலை நிறுத்தம்) செய்வது தேச மக்களையோ, பூர்வமான அரசாங்கத்தையோ 'பணிய வைப்பவற்கு ஒரு முயற்சி' என்றால், யுத்தத்தை நிறுத்துவதற்காகச் செய்யப்படும் வேலை நிறுத்தமும் அதே வகைப்பட்டதுதானே? உள்ளபடியே இருவித வேலை நிறுத்தங்களும், தேச மக்களில் பெரும்பாலோரின் ஆதரவு பெற முடியாவிட்டால் வெற்றி பெறாது.

4. வேலை நிறுத்தத்தைப் பொருளாதாரத் தடைக்கு ஒப்பிடுவது சரியல்ல. பட்டினி கிடக்க வேண்டிய அபாய நிலை இருப்பதால், முதலில் வேலை நிறுத்தம் செய்பவர்கள் தான் பாதிக்கப்படுவார்கள். சமீபத்தில் நடந்த பொது வேலை நிறுத்தத்தில் (பிரிட்டனில்), தொழிற்சங்கக் காங்கிரஸ் ஆரோக்கியத்தையும் உயிரையும் காப்பாற்றுவதில் ஒத்துழைக்கத் தயாராக இருந்தது. ஆனால், அரசாங்கம் ஒத்துழைக்க மறுத்தது.

5. ஒரு வேலை நிறுத்தம் அமைதியானதா, அல்லவா என்பதை முடிவு செய்வது, அது எந்த மனோபாவத்தின் விளைவாகத் தொடங்கப்பட்டது என்பதைப் பொறுத்தது. போரை எதிர்த்து வேலை நிறுத்தம் தொடங்குவது, போர் மீது வெறுப்புக் கொள்ளாமல் ஆட்சியினர்மீது வெறுப்புக்கொண்டு தொடங்குவதாகுமானால், அதிலிருந்து உள்நாட்டுச் சச்சரவு ஏற்படுமானால், அது அமைதியான இயக்கம் ஆகாது. அதே மாதிரி கூலிக் குறைவுக்காக வேலை நிறுத்தம் செய்பவர் முதலாளிகள் மீதோ, ஆட்சியினர் மீதோ துவேஷங் கொண்டோ அல்லது சமூக விரோத மனோபாவத்துடனே செயல் புரிந்தால் அதுவும் அமைதியான வேலை நிறுத்தம் ஆகாது. தீமைகளைக் கண்டிக்கும் நோக்குடன் இருவகையிலும் வேலை நிறுத்தம் செய்தால் அது அமைதியான செயலேயாகும்.

6. வேலை நிறுத்தம் செய்பவர்களின் பேச்சிலும், சில சமயங்களில் அவர்களுடைய செயல்களிலும், அமைதிக்கு மாறான போக்கு காணப்பட்டாலும் பெரிய வேலை நிறுத்தத்தின் அடிப்படையான அம்சம் அறநெறி அடிப்படையில் கண்டனம் செய்வதேயொழியச் சமூக விரோதச் செயல் புரிவதோ, சொந்த வெறுப்பை வெளியிடுவதோ அல்ல என நான் தயங்காமல் கூற முடியும். இது தான் அதற்கு ஆன்மிக சக்தியளிப்பது. இதில்தான் வேலை நிறுத்தம் செய்பவர்களின் அதிசயிக்கத்தக்க சுயக்கட்டுப்பாட்டின் ரகசியம் அடங்கியிருக்கிறது.

ஏதாவது ஒரு சமயம் நடக்கும் ராணுவப் போரின் கொடுமைகளைமட்டும் கவனித்து, நமது சமூக அமைப்பின் தீமைகளால் ஏற்படும் நீடித்த கொடுமைகளைக் கவனிக்காத சமாதானப்போக்கு பிரயோசனமற்றது. யுத்தத்தை ஒழிப்பது மாத்திரமல்ல, சமாதான அடிப்படையற்ற நமது நாகரிகத்தையே ஒழிக்க விரும்பும் மானிட இயக்கத்தை நமது சமாதான இயக்கம் ஆதரிக்காவிட்டால் மனித இனத்தின் முன்னேற்றத்திற்கு அது சிறிதும் உதவி புரிய முடியாது. அதை எதிர்பாராமலே வாழ்க்கையின் வேகம் பெருகி முன்னேறும்.

இந்த உண்மையை ஒப்புக்கொள்ளும் அளவுக்கு 'யுத்த ஒழிப்பு இயக்கம்' தனது லட்சியத்தை நிறைவேற்றிக் கொள்ளும்.

இந்த அருமையான நிபந்தனைகளுடன் மற்றுமொரு சோதனையைச் சேர்க்க விரும்புகிறேன். யாருடைய குறைகளின் நிவர்த்திக்காக வேலை நிறுத்தம் செய்யப்படுகிறதோ அவர்களை மட்டுமே அதில் கலந்துகொள்ள வேண்டும். உதாரணமாக, டிம்பக்டு தீக்குச்சித் தொழிலாளர்கள் தங்கள் நிலையில் திருப்தி கொண்டுள்ளவர்களானால், வாழ்க்கைக்குப் போதாத கூலி பெறும் அவ்வூர் நூலாலைத் தொழிலாளர்களிடம் அனுதாபம் காட்டுவதற்காகத் தாங்களும் வேலை நிறுத்தம் செய்தால் அது ஒரு வகைப் பலாத்காரமேயாகும். டிம்பக்டு ஆலை முதலாளிகளின் சரக்கை வாங்காமல் இருப்பார்களானால், அதுவே பலாத்காரக் குற்றச்சாட்டுக்குட்படாமல் துணி ஆலைத் தொழிலாளர்களுக்குச் சிறந்த உதவி புரிந்ததாகும். ஆனால், நேரடியாக எவ்விதக் கஷ்டத்திற்கும் உள்ளாகாதவர்களும் வேலை நிறுத்தம் செய்ய வேண்டிய சந்தர்ப்பங்கள் ஏற்படலாம். மேலே கற்பனை செய்த இந்த உதாரணத்தில் தீக்குச்சித் தொழில் முதலாளிகள் துணி ஆலை முதலாளிகளுடன் சேர்ந்துகொண்டால், தீக்குச்சித் தொழிலாளர்கள் துணி ஆலைத் தொழிலாளர்களிடம் அனுதாபம் காட்ட வேண்டியது அவசியமேயாகும். நான் சேர்த்த யோசனையை, நிலைமையை விளக்குவதற்காகவே குறிப்பிட்டேன். இறுதியாகப் பார்க்கப் போனால், ஒவ்வொரு சம்பவத்தையும் அதனதன் சாதக பாதகங்களைக்கொண்டே பரிசீலனை செய்ய வேண்டும். பலாத்காரம் என்பது விவரிக்க இயலாத ஒரு நுண்ணிய சக்தி. பலாத்காரம் நிலவுவதாகத் தோன்றினாலும் அது புகுந்த விதத்தை அறியவே முடியாது.

—'எங் இந்தியா' – 18—11—1926.

# 11

# வேலை நிறுத்தங்கள் : அதிகாரம் பெற்றவையும் பெருதனவும்

**கேள்வி :** *மார்ச் 30-ஆம் தேதி நீங்கள் எழுதிய தலையங்கத்தில், அகிம்சாவாதிகளான சத்தியாக்கிரகிகள் தொழிலாளர் வேலை நிறுத்தங்களைத் துரிதப்படுத்தி போராட்டத்தின் போக்கைத் தடை செய்யமாட்டார்கள் என எதிர்பார்ப்பதாக எழுதியிருக்கிறீர்கள். உள் அர்த்தமான 'துரிதப் படுத்தி' என்னும் சொல் தவிர வேறு ஒன்றும் நீங்கள் சொல்லவில்லை. முதலில் இதை நான் படிக்கையில் இச்சொல்லை நான் கவனிக்கவில்லை. அதுபற்றிப் பிறகு நான் விவரிக்க வேண்டி இருந்தது. கவனித்துப் படிக்கும் வாசகர் அல்லது உங்க*

ளுடைய சிந்தனை முறை எழுத்துப் போக்கை அறிந்தவர்கள், இவர்களைத் தவிரப் பிறர் இதைத் தவறுதலாகப் புரிந்து கொள்ளலாம்; துரிதப் படுத்தி என்னும் சொல்லின் பொருளைப் புரிந்துகொள்ளாமல் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்வதை நீங்கள் வெறுப்பதாகவே வியாக்கியானம் செய்யக் கூடும்.

யுத்த போனஸுக்காக அகமதாபாதில் நடந்த போராட்டத்தை அறிந்தவர்கள், தொழிலாளர் வேலை நிறுத்தத்திற்கு நீங்கள் விரோதி எனக் கொள்ளமாட்டார்கள். அகமதாபாத் வேலை நிறுத்தம் தவிர்க்கப்பட்டது என்பது உண்மை. ஆனால், அதை நீங்கள் அங்கீகரித்தீர்கள். தொழிலாளர்களும் தங்கள் கோரிக்கையை அடைந்தனர். அகமதாபாதில் வேலை ஒழுங்காக நடைபெற்றது. தொழிலாளர்கள் தங்களுடைய கோரிக்கைகளை ஒழுங்காகத் தயாரித்துச் சமர்ப்பித்தனர். மத்தியஸ்த வேலை பூர்த்தியடைந்தது. வேலை நிறுத்தம் செய்யலாமா, கூடாதா என்பதுபற்றி நூறு ஆயிரத் தொழிலாளர்களுக்கு அழைப்பனுப்பி, அவர்களும் வோட்டளித்து முடிவு செய்தனர். இவ்வளவு ஒழுங்காக வேலை செய்தும் வேலை நிறுத்தத்தைத் தவிர்க்க முடியவில்லையென்றால், பலாத்காரத்தில் இறங்கமாட்டார்கள் என்று உறுதி பெற்று அதை நீங்கள் ஆதரித்திருப்பீர்கள்.

**பதில்** : நீங்கள் கூறுவது சரி. ஒழுங்கான வேலை நிறுத்தங்களை ஏற்பாடு செய்வதில் நான் நிபுணன் எனக் கருதுகிறேன். மிகப் பாதகமான சூழ்நிலையில் தென்னாப்பிரிக்காவில் ஒரு வேலை நிறுத்தத்தை முதல் முறையாக நான் வெற்றியுடன் நடத்தினேன். இந்த முறையை அகமதாபாதில் பக்குவப்படுத்தினேன். இதில் முழு வெற்றி அடைந்து விட்டதாக நான் கூறவில்லை. அங்கீகாரம் பெருத வேலை நிறுத்தங்களையே நான் கண்டித்திருக்கிறேன். தொழிலாளர்களைக் கட்டுப்படுத்தும் சக்தியைக் காங்கிரஸ் இன்னும் பெறவில்லை; சில காங்கிரஸ்காரர்கள் அந்தச் சக்தி பெற்றுள்ளனர். எல்லா வேலை நிறுத்தத் தலைவர்களும் தத்தம் முறைகளையே கையாளுகின்றனர். அவர்கள் எல்லோரும் அகிம்சாவாதிகள் எனக் கூற முடியாது. சிலர் சுயநலக்காரர்களாகவும் இருக்கின்றனர். மற்றும் சிலர் யோக்கியப் பொறுப்பற்றவர்களாயிருக்கின்றனர். ஆகையால், நேரடியாக இல்லாவிட்டாலும் மறைமுகமாகவாவது ஒத்துழைக்கும்படி நான் கேட்டுக்கொள்ளுகிறேன். சுதந்திரப் போராட்டத்திற்கு உதவி புரிய வேலை நிறுத்

தங்கள் செய்ய வேண்டும் என்று நான் விரும்பவில்லை. பொது ஜன சாத்துவிகச் சட்ட மறுப்பு ஆரம்பிக்க வேண்டிய நிலை ஏற்படுமானல், அது எவ்வாறு இருக்க வேண்டும் என்பதை இப்பொழுது என்னல் கூற முடியாது. ஆனல், அதை நான் நடத்துவதாயிருந்தால், அதன் கீழ் என்ன நிகழாது என்பதை என்னல் கூற முடியுமா? இந்தியா முழுவதிலுமுள்ள தொழிலாளர்களிடையே அகிம்சை முறையில் காங்கிரஸ் செல்வாக்குப் பெறுமானல், காங்கிரஸ் இன்று இருப்பதைவிடச் செல்வாக்கு மிகுந்ததாக இருக்கும்.

தொழிலாளர்கள்பற்றிக் காங்கிரஸ் ஒரே கொள்கையை வகுத்து, அதை நிறைவேற்றுவதற்கு வேண்டிய தொண்டர்களைப் பெறுமானல் அந்தச் செல்வாக்கை அது அடைய முடியும்.

—' ஹரிஜன்' – 20—4—1940

# 12
# முதலாளித்துவமும் வேலை நிறுத்தங்களும்

தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்கையில் முதலாளிகள் எப்படி நடந்துகொள்ள வேண்டும்? இந்தப் பிரச்னை வெகுவாக எல்லோர் மனத்தையும் கவர்ந்து வருகிறது. இந்தச் சமயத்தில் இதற்கு மிகுந்த முக்கியத்துவம் உண்டு. வேலை நிறுத்தத்தை அடக்கி ஒடுக்குவது ஒரு வழி, (' அமெரிக்க ' வழி என்பார்கள் இதை). காலிகளைச் சேர்த்துக்கொண்டு தொழிலாளர்களை ஒடுக்குவதுதான் இந்த முறை. இது தீயது, அழிக்கும் தன்மை வாய்ந்தது என்றே எல்லோரும் கருதுவார்கள். ஒழுங்கான, கௌரவமான வழியாவது: ஒவ்வொரு வேலை நிறுத்தமும் நியாயமானதுதான என்பதை ஆராய்ந்தறிந்து தொழிலாளர்களுக்கு நியாயமாக உரியதை அவர்களுக்கு வழங்குவதேயாம். தொழிலாளர்களுக்கு உரியது என்ன என்பது முதலாளிகள் நினைப்பதன்று; தங்களுக்குரியது எனத் தொழிலாளர்கள் நினைப்பதையும் பொதுஜன அபிப்பிராயம் நியாயமென ஒப்புக்கொள்ளக்கூடியதையும் வழங்குவதே யாகும் இது.

காலம் மாற மாறத் தொழிலாளர் உலகம் தன் தேவைகளை வற்புறுத்தி வருகிறது. தேவைகள் நாளுக்கு நாள் அதிகரித்தும் வருகின்றன. தங்கள் கோரிக்கைகள் உடனடியாக நிறைவேற்றப்படுவதற்கு அவர்கள் பலாத்காரத்தைக் கையாளக்கூடத் தயங்குவதில்லை. தங்கள் கோரிக்கைகள் கைகூட அவர்கள் புதிய முறைகளையும் கையாளுகிருர்கள். முதலாளி

களின் சொத்துக்களை அழிக்கவும், அவர்களுடைய இயந்திரங்களை ஓடமுடியாமல் செய்யவும், தங்களுடன் சேராத முதியோர்களையும் பெண்களையும் துன்புறுத்தவும், 'கருங்காலி'களை பலாத்காரத்துடன் தடுக்கவும் அவர்கள் தயங்குவதில்லை. இம்மாதிரி சந்தர்ப்பங்களில் முதலாளிகள் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் ?

தாங்கள் சிருஷ்டித்ததாக நினைக்கும் தொழில்களுக்குத் தொழிலாளிகளே உண்மையான உரிமையாளர்கள் என்பதை முழுமனத்துடன் முதலாளிகள் மதிக்க வேண்டும். இதுவே நான் அவர்களுக்குக் கூறும் நல்லுரை. மேலும் தொழிலாளர்களுக்கு நல்ல கல்வியளித்து, அதன் மூலம் உறங்கிக் கிடக்கும் அவர்களது அறிவை வளர்ப்பது தங்கள் கடமை எனக் கருதவேண்டும்; இப்படித் தொழிலாளர்கள் ஒன்றுகூடி இருப்பதனால் ஏற்படும் சக்தியை வளர்க்க வேண்டும்.

இந்த உயர்வான பணியை முதலாளிகள் ஒரே நாளில் செய்துவிட முடியாது. இதற்கிடையில் வேலை நிறுத்தம் செய்பவர்களால் தொழில் நிலையங்களில் செய்யப்படும் அழிவு வேலைக்கு என்ன செய்வது? தொழில், முதலாளிக்கு எவ்வளவு சொந்தமோ அந்த அளவுக்குத் தொழிலாளர்களுக்கும் சொந்தமாகையால், தொழில் முழுவதையும் அவர்களே நிர்வகிக்கும்படி முதலாளிகள் விட்டுவிட வேண்டும் என நான் யோசனை கூறுவேன். அவர்கள் கோபங் கொண்டு ஆலையைவிட்டு வெளியேறலாகாது. தங்கள் செயல் நியாயமானது என்பதை உணர்ந்து தங்களது நல்லெண்ணத்திற்கு அறிகுறியாகத் தங்களது எஞ்சினீயர்கள் மற்றும் இயந்திர நிபுணர்கள் உதவி புரியும்படி செய்ய வேண்டும். இதனால், தங்களுக்கு எவ்வித நஷ்டமும் ஏற்படாது என்பதை முதலாளிகள் இறுதியில் உணர்வார்கள். உண்மையில் அவர்களுடைய நியாயமான நடவடிக்கை எதிர்ப்புச் சக்தியை அகற்றும். அவர்கள் தொழிலாளர்களின் ஆசிகளையும் பெறுவார்கள்; தங்களது மூலதனத்தைச் சரியாகப் பயன்படுத்தியவர்களும் ஆவார்கள். இப்படி அவர்கள் செய்தால் அதைத் தருமம் செய்ததாக நான் கருதமாட்டேன். முதலாளிகள் தங்கள் தனத்தைப் புத்திசாலித்தனமாகப் பயன்படுத்தியவர்கள் ஆவார்கள்; தங்கள் தொழிலாளர்களிடம் நாணயமாக நடந்துகொண்டதன் மூலம் அவர்களைக் கௌரவம் மிகுந்த கூட்டாளிகளாகச் செய்த பெருமையும் அவர்களுக்குக் கிட்டும்.

உருலி, 23—3—1946 —'ஹரிஜன்' - 31—3—1946

## 13

# அமைதியான வேலை நிறுத்தங்கள்

**கேள்வி :** காலித்தனமும் பலாத்காரமும் புகாமல் வேலை நிறுத்தத்தை எப்படி நடத்துவது ?

**பதில் :** வேலை நிறுத்தம், பிறரது தூண்டுதலோ சூழ்ச்சியோ யின்றி எதேச்சையாக இருக்க வேண்டும். பிறர் நிர்ப்பந்த மின்றித் தொடங்கப்பட்டால் அதில் காலித்தனத்திற்கோ, கொள்ளைக்கோ இடம் இராது. அம்மாதிரி வேலை நிறுத்தத் தில் வேலை நிறுத்தம் செய்வோரிடையே பூரண ஒத்துழைப்பு நிலவும். அது அமைதியாக நடக்க வேண்டும் ; பலாத்காரம் அதில் தலைகாட்டலாகாது .தங்கள்பிழைப்புக்காக வேலைநிறுத்தம் செய்வோர் தனித்தனியாகவோ, கூட்டாகவோ ஏதாவது ஒரு வேலை செய்ய வேண்டும். எந்த வேலையை மேற்கொள்வது என்பதை முன்கூட்டியே திட்டம் செய்யவேண்டும். அமைதி யாகவும், நிச்சயமாகவும் பயன் தரத்தக்கபடி, உறுதியுடன் நடத் தப்படும் வேலை நிறுத்தங்களில் காலித்தனத்திற்கும் கொள்ளை யடிப்பதற்கும் இடமில்லை என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. இம்மாதிரி வேலை நிறுத்தங்களை நான் பார்த்திருக்கிறேன். ஆகையால் உங்களுக்குக் காட்டுவது ஆகாயக்கோட்டையன்று.

புது டில்லி, 26—5—1946 —'ஹரிஜன்' - 2—6—1946

## 14

# அகிம்சை முறையான வேலை நிறுத்தம்

இங்குமட்டுமல்ல, பிற இடங்களிலும் இந்த வேலை நிறுத்த ஜுரம் பரவுவதற்கு அடிப்படைக் காரணம், வாழ்க்கை மத அடிப்படையிலிருந்து பெயர்ந்துவிட்டதும், ஓர் ஆங்கில ஆசிரி யர் கூறுவது போல், "பணப்பித்து" மதத்தின் இடத்தை ஆக்கிரமித்துக்கொண்டதுந்தான். இது நிலையற்றதான ஒரு பிடிப்பு. வாழ்க்கையில் மதப்பற்று இருந்தாலுங்கூட வேலை நிறுத்தங்கள் இருந்தே தீரும். ஏனெனில், மதம் வாழ்க்கையின் எல்லா அம்சங்களையும் ஆட்கொண்டுவிட முடியாது, ஆகை யால் ஒரு புறம் சுரண்டிப் பிழைப்பதும், மற்றொரு புறம் வேலை நிறுத்தங்களும் இருந்துகொண்டே இருக்கும். ஆனால், இந்த மாதிரி வேலை நிறுத்தம் யாருக்கும் தீங்கு விளைவிக்காது. அம்மாதிரி வேலை நிறுத்தம்தான் ஜெனரல் ஸ்மட்ஸைப் பணிய வைத்தது. "நீங்கள் ஓர் ஆங்கிலேயரைக் காயப்படுத்தியிருந்தால் கூட உங்களைச் சுட்டிருப்பேன். ஆனால், உங்களைச் சிறையில் அடைத்து, உங்களையும் உங்கள் மக்களையும் எவ்வகையிலாவது

வெல்வதற்குப் பார்க்கிறேன். ஆனல், நீங்கள் எதிர்த்துத் தாக்குதல் செய்யாமலிருக்கையில் நான் என்ன செய்ய முடியும்?," என அவர் கூறினர். தென்னப்பிரிக்காவில் கூலிகள் என அழைக்கப்படும் இந்தியர் பிரதிநிதியான ஒரு கூலியுடன் அவர் சமாதானம் செய்துகொண்டார்.

—'ஹரிஜன்' - 22—9—1946

## 15
# உழுவோரின் பலம்

ஒரு நிலச்சுவான்தார் தம் குடியானவர்களைச் சுரண்டி, அவர்களது உழைப்பின் பலன் பூராவையும் தாம் பறித்துத் தம் சொந்த நலனுக்குப் பயன்படுத்துகிறார் என வைத்துக்கொள்வோம். அவருடன் குடியானவர்கள் வாதாடினலும், அவர் கேட்பதாயில்லை. தம் மனைவி மக்களின் பராமரிப்புக்காக இவ்வளவு பணம் வேண்டுமே என்று எதிர்வாதம் செய்கிறார். குடியானவர்களோ, அல்லது அவர்களை ஆதரிக்கும் செல்வாக்குள்ளவர்களோ, நிலச்சுவான்தாரின் மனைவியைத் தங்கள் சார்பாக அவளுடைய கணவனுக்கு சிபாரிசு செய்யுமாறு செய்யலாம். அவர்களைச் சுரண்டிக் கொண்டுவரும் பெரும் பணம் தனக்குத் தேவையில்லை என அந்த அம்மாள் கூறலாம். நிலச்சுவான்தாரின் குழந்தைகளும், தாங்களே சம்பாதித்து வாழ்க்கையை நடத்திக் கொள்வதாகவும், தந்தையின் பணம் தேவையில்லை என்றும் கூறலாம்.

ஒரு வேளை நிலச்சுவான்தார் யார் சொல்லையும் கேட்காதவராக இருக்கலாம்; அல்லது அவருடைய மனைவியும் மக்களும் அவருடன் சேர்ந்து குடியானவர்களை எதிர்க்கலாம். இவ்வாறு நேருமானல், குடியானவர்கள் பணியலாகாது. நிலத்தைவிட்டு வெளியேறச் சொன்னல் அவர்கள் வெளியேற வேண்டும். ஆனல், நிலம் உழவனுக்குத்தான் சொந்தம் எனச் சந்தேகத்திற்கு இடமின்றிச் சொல்லிவிட வேண்டும். நிலச்சுவான்தார் எல்லா நிலத்தையும் தாமே சாகுபடி செய்துவிட முடியாது. ஆகையால், குடியானவர்களின் நியாயமான கோரிக்கைக்குப் பணிந்தே ஆக வேண்டும். ஒரு வேளை வெளியே சென்ற குடியானவர்களுக்குப் பதிலாக வேறு உழவர்கள் அமர்த்தப்படலாம். பலாத்காரமற்ற கிளர்ச்சி தொடர்ந்து நடந்து, அதன் விளைவாகப் புதிய குடியானவர்களும் அப்புறப்படுத்தப்பட்டவர்களுடன் சேர்ந்துகொள்வர். இவ்வாறாகச் சத்தியாக்கிரகம் என்பது பொதுஜனங்களுக்கு உண்மை நிலையை எடுத்துக் கூறி, அதன் பயனைச் சமூகம் பூராவும் ஒன்று திரண்டு அதை யாராலும்

எதிர்க்கமுடியாத நிலை ஏற்படும். பலாத்காரம் இந்த இயல்பான வளர்ச்சியைத் தடை செய்து, சமூகம் பூராவையும் திருத்தியமைக்கும் புரட்சியை நீடிக்கச் செய்கிறது.

சத்தியாக்கிரக வெற்றிக்கு மூன்று நிபந்தனைகள் அவசியம். (1) சத்தியாக்கிரகி, தனது உள்ளத்தில் எதிராளியிடம் பகைமை உணர்ச்சிக் கொள்ளலாகாது; (2) போராட்டத்திற்குரிய பிரச்னை உண்மையாகவும், தகுந்த காரணம் கொண்டதாகவும் இருக்க வேண்டும்; (3) இறுதி வரையில் சத்தியாக்கிரகி தனது லட்சியத்திற்காகக் கஷ்டப்படத் தயாராயிருக்க வேண்டும்.

—'ஹரிஜன்' - 31--3--1945

# 16

# என் முரண்பாடுகள் எனப்படுவன

எனக்குத் தொடர்ந்து எழுதிப் புதிர் போடும் நிருபர்கள் சிலர் இருக்கின்றனர். அப்படி ஒருவரிடமிருந்து வந்த கடிதம் இங்கே உதாரணமாகத் தரப்படுகிறது:

''பொருளாதாரச் சிக்கல்கள் எழும்போதும், முதலாளிகளுக்கும் தொழிலாளிகளுக்கும் உள்ள பொருளாதாரத் தொடர்புபற்றி உங்களைக் கேள்வி கேட்கும்போதும், நீங்கள் தருமகர்த்தாக் கொள்கையைப் பிரகடனம் செய்கிறீர்கள். இந்தக் கொள்கையைப் புரிந்துக்கொள்ள முடியாமல் திகைக்கிறேன். பணக்காரர்கள் யாவரும் தங்கள் சொத்தை ஏழைகளுக்காகவே தருமகர்த்தாக்கள் மாதிரி பரிபாலித்து அவர்கள் நலனுக்கே அதைச் செலவிட வேண்டும் என நீங்கள் விரும்புகிறீர்கள். இது சாத்தியமா என உங்களை நான் கேட்டால், மனித இயல்பில் உள்ள சுயநலப் போக்கினால் இவ்வாறு நான் கேட்கிறேனென்றும், மனிதனின் நல்லெண்ண அடிப்படையில் உங்கள் கொள்கை வகுக்கப்பட்டது என்றும் நீங்கள் கூறுவீர்கள். ஆனால், அரசியல் துறையில் மனித நற்பண்பில் நம்பிக்கை இழக்காமல் இம்மாதிரி கருத்துக்களை உங்களால் கொள்ள முடியாது. இந்தியாவை ஆள்வதற்கும் பிரிட்டிஷார் இதே தருமகர்த்தாக் கொள்கையைத்தான் பிரகடனம் செய்கின்றனர். ஆனால், வெகு நாட்களுக்கு முன்பே பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தில் நீங்கள் நம்பிக்கை இழந்துவிட்டீர்கள். இன்று அதற்கு உங்களைவிடப் பரம விரோதி வேறு யாரும் இருக்க முடியாது.

''பொருளாதாரத் துறைக்கு ஒரு நியாயமும், அரசியல் துறைக்கு மற்றொரு நியாயமும் அனுசரிப்பது முரண்பாடாக இல்லையா? பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திடமும் பிரிட்டிஷாரிடமும் நீங்கள் நம்பிக்கை இழந்துவிட்டதுபோல் முதலாளித்துவத்திடமும் முதலாளிகளிடமும் நீங்கள் நம்பிக்கை இழக்கவில்லை என்று கூறுகிறீர்களா? பல காலத்திற்கு முன் அடிபட்டுப்போன 'மன்னர்கள் தெய்வாசம் பெற்றவர்' என்னும் கொள்கையும், உங்கள் தருமகர்த்தாக் கொள்கையும் ஒன்றே போல் தொனிக்கிறது. மற்ற மக்களுக்குத் தருமகர்த்தா மாதிரி ஒருவன் அவர்களிடமிருந்து அரசியல் அதிகாரம் பெற்று, அதை அவன் துஷ்பிரயோகம் செய்ததும், மக்கள் கிளர்ந்தெழுந்ததும் ஜனநாயகம் உதயமாயிற்று. அதே போல் இப்பொழுது ஒரு சிலரிடம் மக்கள் அளித்த பொருளாதாரப்

பொறுப்பைத் தங்கள் சுயநலப் பெருக்கத்திற்கும், பிறருக்குக் கெடுதி விளை விக்கும் முறையிலும் பயன்படுத்தினல், ஒரு சிலரிடமிருந்து பொருளாதாரப் பொறுப்பை எஞ்சியுள்ளவர்கள் பறித்து விடுகின்றனர். இதன் விளைவாக, சோஷலிஸம் உதயமாகிறது.

"நல்லதோ, கெட்டதோ, அதை அடைய இதுவரை பலாத்காரமே தேர்ந்த வழியாகக் கருதப்பட்டு வந்தது. நல்ல காரியத்திற்காகப் பலாத்காரத்தைப் பயன்படுத்தினலும் தீமைகளை விளைவிப்பதோடு பெற்ற நன்மையையும் அது பாழ்படுத்திவிடுகிறது. பலாத்காரத்திற்கு மேலானதான அகிம்சையைக் கையாண்டால், அதன் விளைவாக மனித உறவு களங்கம் அடைவதில்லை. இந்த வழியின் பெருமையை வெற்றியுடன் நிரூபித்துக் காட்டியதே உலகத்திற்கு நீங்கள் செய்த மகத்தான சேவை. ஆகையால், தற்போதுள்ள பொருளாதார அமைப்பை எதிர்த்து ஒழித்து ஒரு புதிய அமைப்பை வகுக்க வேண்டும் என்பதே என் ஆசை மிக்க விருப்பம்."

முதலாளித்தும், ஏகாதிபத்தியம் இவ்விரண்டையும்பற்றி நான் கொண்டுள்ள கருத்துக்களில் முரண்பாடு ஏதும் இருப்ப தாக எனக்குத் தோன்றவில்லை. என் நிருபருக்குச் சிந்தனைக் குழப்பம் ஏற்பட்டிருக்கிறது. அரசர்கள், ஏகாதிபத்திய வாதி கள், முதலாளிகள் ஆகியோர் தங்களைப்பற்றி என்ன சொல்லிக் கொள்கிருர்கள் என்பதுபற்றி நான் பேசியதுமில்லை, சிந்தித் ததுமில்லை. மூலதனத்தை எப்படிப் பயன்படுத்தலாம் என்பது பற்றிப் பேசியுள்ளேன்; எழுதியுமிருக்கிறேன். சொல்வது ஒன்று, அதன்படியே நடந்துகாட்டுவது வேறு. என் போல் மக்களின் ஊழியன் என்று தம்மைச் சொல்லிக்கொள்பவர்கள், அம்மாதிரி பிரகடனம் செய்வதனல் மட்டும் மக்களின் ஊழியர்கள் ஆகிவிட மாட்டார்கள். என்றென்றும் சொற்படியே நடக்கக்கூடியவர்களை எல்லோரும் பாராட்டுவார்கள். அவ்வாறே ஒரு முதலாளி, தமது சொத்திலுள்ள ஏகபோக உரிமையைத் துறந்து, அதை மக்களின் தருமகர்த்தாவாகப் பரிபாலித்து வந்தால், அவரையும் எல்லோரும் வாழ்த்துவார்கள். என் யோசனையை அவர்கள் ஏற்றுக்கொள்ளாமல் போகலாம்; என் கனவு நனவாகாமல் போய்விடலாம். ஆனல், சோஷலிஸ்டுகள் காணும் கனவு மட்டும் பலிக்கும் என யார் உத்தரவாதம் கூறமுடியும்? மூல தனத்தை முதலாளிகள் துஷ்பிரயோகம் செய்கிருர்கள் என்பதை அறிந்ததும் சோஷலிஸம் உதயமாகிவிடவில்லை. நான் ஏற்கனவே வாதாடியபடி, சோஷலிஸமும் கம்யூனிஸமுங்கூட ஈசோபநிஷதத்தின் முதல் செய்யுளிலேயே விவரிக்கப்பட்டி ருக்கின்றன. சில சீர்திருத்தவாதிகள், மனிதர்களின் மனத்தை மாற்ற முடியும் என்பதில் நம்பிக்கை இழந்தவுடன் சாத்திரீய சோஷலிஸம் எனப்படும் கொள்கை உதயமாயிற்று என்பது உண்மை. சாத்திரீய சோஷலிஸ்ட்டுகள் தீர்க்க முயலும்

பிரச்னையைத் தீர்ப்பதில் தான் நான் ஈடுபட்டிருக்கிறேன். ஆனால், எந்தப் பிரச்னையையும் அப்பழுக்கற்ற அகிம்சை முறை மூலந்தான் நான் அணுகுகிறேன் என்பது மட்டும் உண்மை. அந்த முயற்சி தோல்வியுறலாம். அப்படித் தோல்வியுற்றால் அகிம்சை முறையில் என் அறியாமையையே அது காட்டும். அந்தக் கொள்கையில் எனது நம்பிக்கை நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டிருக்கிறது; அதை விளக்குவதில் நான் குறைபாடுள்ளவனாயிருக்கலாம். சர்க்கா சங்கம், கிராமக் கைத்தொழில் சங்கம் இவ்விரண்டின் மூலந்தான் அகில இந்திய அடிப்படையில் அகிம்சை முறைபற்றிய சோதனை நடைபெறு கிறது. காங்கிரஸ் போன்ற பூரண ஜனநாயக ஸ்தாபனத்தில் கொள்கைகள் அடிக்கடி மாறலாம். இம்மாதிரி மாறுதல்களால் பாதிக்கப்படாமல் என்னுடைய சோதனைகளைச் செய்ய உதவுவதற்கே இவ்விரு பூரண நிர்வாகப் பொறுப்புள்ள ஸ்தாபனங்களைக் காங்கிரஸ் சிருஷ்டித்திருக்கிறது. தருமகர்த்தாக் கொள்கை சிறப்பானது என்பது இனித்தான் நிரூபணமாக வேண்டும். தக்க மனிதர்கள் சொத்தை மிகுந்த பயனுள்ள முறையில் நிர்வகிப்பதே தருமகர்த்தாக் கொள்கை.

—'ஹரிஜன்' - 20—2—1937

# 17

# தருமகர்த்தா முறை

**கேள்வி:** பலாத்காரத்தால் மட்டுமே அடையக்கூடியதை அகிம்சை மூலம் பாதுகாக்க முடியுமா?

**பதில்:** பலாத்காரத்தால் பெற்றதை அகிம்சை மூலம் பாதுகாக்க முடியாதது மட்டுமல்ல, அகிம்சையை மேற்கொள்பவன் தீய முறையில் பெற்ற பொருள்களையெல்லாம் துறந்துவிட வேண்டும்.

**கேள்வி:** பகிரங்கமாகவோ, மறைமுகமாகவோ பலாத்காரமின்றிப் பொருளைக் குவிக்க முடியுமா?

**பதில்:** பலாத்காரமின்றித் தனிப்பட்டவர்கள் பொருள் குவிக்க முடியாது. ஆனால், அகிம்சை அடிப்படையில் துவங்கும் சமூகத்தில் அரசாங்கம் பொருள் குவிக்க முடியும். அப்படிச் சேர்ப்பது விரும்பத்தக்கது; தவிர்க்க முடியாதது.

**கேள்வி:** ஒரு மனிதன் பொருட் செல்வமோ, அருட் செல்வமோ என்ன சேகரித்தாலும் அதைச் சமூகத்தில் பிறர் உதவி கொண்டுதான் சேகரிக்கிறான். அவ்வாறானால், அதில்

ஒரு பகுதியைத் தனது சொந்த நலனுக்குப் பயன்படுத்தத் தரும நியாயப்படி அவனுக்கு உரிமை உண்டா?

**பதில் :** இல்லை.

**கேள்வி :** ஒரு தருமகர்த்தாவின் அடுத்த வாரிசு யார் என்பதை எப்படி நிர்ணயிப்பது? அவனுக்குத் தன் வாரிசின் பெயரைப் பிரேரிக்க மட்டும் உரிமை உண்டா, அந்தப் பெயரை அரசாங்கந்தான் உறுதிப்படுத்த வேண்டுமா?

**பதில் :** வாரிசை நியமிக்கும் உரிமை முதன் முதலாகத் தருமகர்த்தாவாக வருபவருக்கு இருக்க வேண்டும். ஆனால், அவருடைய நியமனத்தை அரசாங்கமே பூர்த்தி செய்ய வேண்டும். இந்த ஏற்பாடு, தனிப்பட்டவர்களும் அரசாங்கமும் தங்கள் இஷ்டம் போல் நடப்பதைத் தடுக்கிறது.

**கேள்வி :** தருமகர்த்தாக் கொள்கைப்படி தனிப்பட்டோர் சொத்துப் பொதுவுடைமையானவுடன் அதில் உரிமை பலாத்கார அடிப்படையில் இயங்கும் அரசாங்கத்தினதா அல்லது கிராம சமுதாயம் அல்லது முனிசிபாலிடிகள் போன்று தம்மிச்சையாக அமைந்துள்ள ஸ்தாபனங்களுடையதா? இந்த ஸ்தாபனங்கள் அரசாங்கத்தாரால் இயற்றப்பட்ட சட்டங்கள் மூலமும் உரிமை பெற்றவைகளாக இருக்கலாம்.

**பதில் :** இந்தக் கேள்வி சிந்தனைக் குழப்பத்தினால் எழுந்தது. உரிமை மாறியதும் சட்டப்படி சொத்துரிமை தருமகர்த்தாவுக்கேயொழிய அரசாங்கத்திற்கல்ல. சொத்துப் பறிமுதலாவதைத் தடுப்பதற்கே தருமகர்த்தாக் கொள்கை ஏற்பட்டது. இதன் மூலம் ஆதி உரிமையாளர் தம் சொந்த உரிமையைச் சமூக நலனுக்காகப் பயன்படுத்தச் சந்தர்ப்பம் அளிக்கப்பட்டது. அரசாங்கம் என்றென்றும் பலாத்கார அடிப் படையிலேயே இயங்க வேண்டும் என்கிற அவசியமும் இல்லை. கொள்கையில் அரசாங்கம் அந்த அடிப்படை கொண்டதா யிருக்கலாம். ஆனால், நடைமுறையில் வெகுவாய் அகிம்சை முறையைக் கடைப்பிடிக்க வேண்டியது அவசியம் என்று வற்புறுத்தப்படுகிறது.

ஸாத்காரியா (நோவாகாலி) 2—2—1947 — 'ஹரிஜன்' – 16--2--1947

# 18

# வர்க்கப் போராட்டத்தை தவிர்க்க முடியுமா?

**கேள்வி:** தொழிலாளர்கள், குடியானவர்கள், ஆலை வேலையாட்கள் முதலியோருக்கு நீங்கள் உதவி செய்வதால், உங்களால் வர்க்கப் போராட்டத்தைத் தவிர்க்க முடியுமா?

**பதில்:** கட்டாயம் முடியும். ஆனால், மக்கள் அகிம்சை முறையைப் பின்பற்ற வேண்டும். அகிம்சையைக் கொள்கையாகப் பின்பற்றினால்கூட அகிம்சை மூலம் வெற்றி பெறலாம் என்பதைச் சென்ற ஓராண்டில் கண்டோம். கொள்கையளவில் மட்டுமல்ல, அகிம்சையை மக்கள் வாழ்க்கை முறையாகக் கொண்டார்களானால் வர்க்கப் போராட்டம் நிகழவே முடியாது. இம்முறையில் அகமதாபாத்தில் சோதனை நடந்துவருகிறது. அதனால், திருப்திகரமான பலன் கிடைத்திருக்கிறது. அந்தப் பலன் நிச்சயமானது என்பதற்குத் தக்க சூழ்நிலை இருந்து வருகிறது. அகிம்சை முறை மூலம் நாம் முதலாளியை அழிக்க விரும்பவில்லை; முதலாளித்துவத்தைத்தான் அழிக்க விரும்புகிறோம். தன் மூலதனத்தைப் பெருக்க, அதைப் பாதுகாக்க, அதைத் திரட்ட யாரை முதலாளி நம்பியிருக்கிறானோ அவருக்குத் தருமகர்த்தாவாக மூலதனத்தை நிர்வகிக்கும்படி முதலாளியை நாம் அழைக்கிறோம். முதலாளிக்கு மனமாற்றம் ஏற்படும் வரையில் தொழிலாளி காத்திருக்க வேண்டிய அவசியமும் இல்லை. மூலதனம் எப்படிச் சக்தியோ அம்மாதிரியே உழைப்பும் ஒருவிதச் சக்தி. இவ்விரு சக்திகளையும் ஆக்கத் துறையிலும் அழிவுத் துறையிலும் பயன்படுத்தலாம். ஒரு சக்தி மற்றொன்றை நம்பியே நடக்க வேண்டும். தொழிலாளி தனது சக்தியை உணர்ந்தவுடன் அவன் முதலாளியின் அடிமையாயிருப்பதற்குப் பதிலாகக் கூட்டாளியாகிவிடுகிறான். தொழிலாளி தொழிலின் ஏகபோக உரிமையாளனாக விரும்பினால் அவன் பொன் முட்டையிடும் வாத்தைக் கொன்றவனாவான். அறிவிலும், சந்தர்ப்பங்கள் வாய்ப்பதிலும் ஏற்றத் தாழ்வுகள் உலகமுள்ளமட்டில் இருந்துகொண்டேதான் இருக்கும். பாலைவனத்தில் இருப்பவர்களைவிட ஆற்றங்கரையில் வாழ்பவருக்குப் பயிரிட அதிக சந்தர்ப்பம் உண்டு. ஏற்றத் தாழ்வுகள் நம்முன் நின்றபோதிலும் சமத்துவ அடிப்படையை நாம் மறந்துவிடுவதற்கில்லை. பட்சிகளையும் விலங்குகளையும் போலவே ஒவ்வொரு மனிதனுக்கும் வாழ்க்கைக்கு அத்தியாவசியமான பொருள்

களைப் பெற உரிமையுண்டு. ஒவ்வொருவருக்கும் உரிமை இருப்பதுபோல் கடமையுமுண்டு. உரிமைக்கு எதிர்ப்பிருந்தால் அதைச் சமாளிக்கும் கடமையும் உண்டு. கடமைகளையும் அதற்கேற்ற உரிமைகளையும் அறிந்துகொண்டால், அடிப்படை சமத்துவத்தை நிலைநாட்டலாம். என் அங்கங்களால் உழைக்க எனக்கு உரிமையுண்டு. இந்த உண்மையைப் பாதுகாக்க வேண்டுமானால், என் உழைப்பின் பலனை மறுக்கிறவனுடன் ஒத்துழைக்காமல் இருக்க வேண்டும். முதலாளிக்கும் தொழிலாளிக்குமுள்ள இந்தச் சமத்துவத்தை நான் ஏற்றுக்கொண்டால் நான் முதலாளியை அழிக்கலாகாது. அவன் மனத்தை மாற்ற நான் முயல வேண்டும். நான் அவனுடன் ஒத்துழையாமை செய்தால் அவன் விழிப்படைந்து தனது பிழையை உணர்வான். நான் ஒத்துழையாமை செய்கையில், என் வேலையைச் செய்ய வேறு யாராவது வந்துவிடுவார்களோர் என அஞ்ச வேண்டியதில்லை. என் முதலாளிக்கு உதவி புரியலாகாது என்பதை என் போன்ற தொழிலாளிக்கு இதற்குள் உணர்த்தலாம் என எதிர்பார்க்கலாம். தொழிலாளர்கள் கூட்டத்திடையே இவ்வுணர்வு ஏற்படச் செய்வது நிதானமாக நடக்கலாம். ஆனால், இது நிச்சயமாகப் பலனளிக்குமாகையால் இதைச் சுருக்கமான வழியெனக் கொள்ளலாம். முதலாளியை ஒழிப்பது, நிச்சயம் தொழிலாளியை அழிப்பதற்கொப்பாகும் என்பதை எளிதில் நிரூபித்துவிடலாம். ஏனெனில், கடைத்தேற முடியாத அளவுக்கு மனிதன் கீழ்த்தரமானவனல்ல. மேலும், மற்றவன் முழுதும் தீயவன் என்று எண்ணி அவனை அழித்துவிடும் அளவுக்கு இவ்வுலகில் எவனும் அவ்வளவு லட்சிய மனிதனல்ல.

—'எங் இந்தியா' - 26—3—1931

# பின்சேர்க்கைப் பகுதி

## 1

## காங்கிரஸ் காரியக் கமிட்டி அறிக்கை

**[1939 செப்டம்பர் 14-ஆம் தேதி வர்தாவில் கூடி ஆலோசித்த காங்கிரஸ் காரியக் கமிட்டி ஒரு நீண்ட அறிக்கையை வெளியிட்டது. அந்த அறிக்கையைக் குறித்தே மகாத்மா 23-9-1939-இல் 'காரியக் கமிட்டி அறிக்கையை' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதினர். (422—424-ஆம் பக்கங்களில் பார்க்க.) அகிம்சையைக் குறித்து மகாத்மாவுக்கும் காரியக் கமிட்டிக்கும் ஏற்பட்ட கருத்து வேற்றுமையைப் புரிந்துகொள்ளுவதற்குக் காரியக் கமிட்டி அறிக்கையின் முழு விவரத்தையும் தெரிந்து கொள்ளுவது அவசியமாவதால் அது கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]**

காரியக் கமிட்டி வெளியிட்ட அறிக்கையாவது :

1. ஐரோப்பாவில் யுத்தப் பிரகடனம் செய்திருப்பதால் ஏற்பட்டிருக்கும் ஆபத்தான நெருக்கடியைக் குறித்துக் காரியக் கமிட்டி தீர ஆலோசித்தது. யுத்தம் ஏற்பட்டால், நாட்டு மக்களுக்கு வழிகாட்டிச் செல்ல வேண்டியதான கொள்கைகளைக் குறித்துத் திரும்பத் திரும்பக் காங்கிரஸ் அறிவித்து வந்திருக்கிறது. ஒரு மாதத்திற்கு முன்புதான் இக்கமிட்டி அவைகளைத் திரும்பவும் வற்புறுத்திக் கூறியதுடன் இந்தியாவிலிருக்கும் பிரிட்டிஷ் ஆட்சி இந்தியப் பொதுஜன அபிப்பிராயத்தை அலட்சியம் செய்து வருவதைக் குறித்துத் தனது வெறுப்பையும் தெரிவித்தது. பிரிட்டிஷ் அரசாங்கத்தின் இக்கொள்கையில் சம்பந்தம் வைத்துக்கொள்ளாதிருப்பதற்கு முதற் காரியமாக, மத்திய சட்ட சபைக் கூட்டத்திற்குப் போகாமல் இருந்துவிடுமாறு அதிலிருக்கும் காங்கிரஸ் உறுப்பினருக்கு அறிவித்தது. அதன் பிறகு, இந்தியா போரில் ஈடுபட்டிருக்கும் நாடு என்று பிரிட்டிஷ் அரசாங்கம் அறிவித்திருப்பதுடன் அவசரச் சட்டங்களைப் பிறப்பித்து, இந்திய அரசாங்கச் சட்டத் திருத்தச் சட்ட மசோதாவையும் நிறைவேற்றி, முக்கியமாக இந்திய மக்களைப் பாதிக்கும் வகையில் மாகாண சர்க்கார்களின் அதிகாரங்களையும் நடவடிக்கைகளையும் கட்டுப்படுத்தும் பல மோசமான நடவடிக்கைகளை மேற்கொண்டிருக்கின்றனர். இந்திய மக்களின் சம்மதமில்லாமலேயே இது செய்யப்பட்டிருப்பதோடு இத்தகைய காரியங்களில் இந்திய மக்களின் கருத்தைப் பிரிட்டிஷ் அரசாங்கம் வேண்டுமென்றே கவனிக்க மறுத்திருக்கிறது. இப்படி நடந்திருப்பதைக் குறித்துக் கமிட்டி கடுமையான கருத்துக் கொள்ளுகிறது.

2. பாஸிஸம், நாஜிஸம், அவற்றின் கொள்கை ஆகியவற்றையும், அவை அனுசரிக்கப்படுவதையும், பலாத்காரத்தையும் போரையும் அவை போற்றுவதையும், மனித உணர்ச்சிகளை அவை நசுக்கி வருவதையும், தான் அங்கீகரிக்க முடியாது என்று காங்கிரஸ் திரும்பத் திரும்பக் கூறி வந்திருக்கிறது. அவை திரும்பத் திரும்ப ஈடுபட்டிருக்கும் ஆக்கிரமிப்புக்களையும், நியாயமான நாகரிக ஒழுங்கு முறைகளையும் அவை முறியடித்திருப்பதையும் அது கண்டித்திருக்கிறது. இந்திய மக்கள் பல ஆண்டுகளாக எந்த ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப்

போராடி வருகிறார்களோ அந்த ஏகாதிபத்தியத்தின் கொள்கையே பாஸிஸத்திலும் நாஜிஸத்திலும் தீவிரமாக இருந்து வருகிறது என்பதையும் அது கண்டது. ஆகையால், சமீபத்தில் ஜெர்மனியில் இருக்கும் நாஜி ஆட்சி போலந்துமீது ஆக்கிரமித்திருப்பதைத் தயக்கமின்றிக் கண்டிப்பதோடு அதை எதிர்த்து வருபவர்களிடம் அனுதாபமும் கொள்ளுகிறது.

3. இந்தியாவுக்கு யுத்தமா, சமாதானமா என்பதை இந்திய மக்களே முடிவு செய்ய வேண்டும் என்றும், அவர்கள்மீது வெளி அதிகாரம் எதுவும் இம்முடிவைத் திணிக்கக்கூடாது என்றும், ஏகாதிபத்தியத்திற்காக இந்தியாவின் வசதிகள் உபயோகிக்கப்படுவதை இந்திய மக்கள் அனுமதிக்கக் கூடாது என்றும் மேலும் காங்கிரஸ் விடுத்திருக்கிறது. சுமத்தப்படும் முடிவு எதையுமோ, அல்லது தாங்கள் அனுமதிக்காத காரியங்களுக்காக இந்த வசதிகள் உபயோகிக்கப்படுவதையுமோ அவசியமாக அவர்கள் எதிர்த்தே ஆக வேண்டும். சிறந்ததான ஓர் லட்சியத்திற்கு ஒத்துழைப்பு வேண்டுமாயின் கட்டாயத்தினாலோ, திணிப்பதனாலோ அதை அடைய முடியாது. வெளி அதிகாரம் பிறப்பிக்கும் உத்தரவு எதையும் இந்திய மக்கள் நிறைவேற்றியாக வேண்டும் என்பதற்குக் கமிட்டி உடன்பட முடியாது. இரு தரப்பாரும் சரியானது என்று கருதும் லட்சியத்திற்கு ஒத்துழைப்பு, சமத்துவமானவர்கள் பரஸ்பர சம்மதத்தின் பேரில் அளிப்பதாக இருக்க வேண்டும். இந்திய மக்கள் சமீபத்தில் பேரபாயங்களுக்கு உட்பட்டுத் தங்களுடைய சுதந்திரத்தை அடைவதற்கும், சுதந்திர ஜனநாயக ஆட்சியை அமைப்பதற்காகவும் விரும்பித் தியாகங்களையும் செய்திருக்கின்றனர். இந்திய மக்களின் அனுதாபமெல்லாம் ஜனநாயகத்திற்கும் சுதந்திரத்திற்கும் பக்கத்திலேயே இருந்து வருகிறது. தனக்கே சுதந்திரம் மறுக்கப்படும்போது, தன்னிடம் இருக்கும் கொஞ்ச சுதந்திரமும் எடுத்துக்கொள்ளப்படும்போது, ஜனநாயகத்தின் சுதந்திரத்திற்காக நடந்துகொண்டு வருவதாகக் கூறப்படும் போரில் இந்தியா ஈடுபட முடியாது.

4. ஜனநாயகத்திற்காகவும், சுதந்திரத்திற்காகவும், ஆக்கிரமிப்பை அடக்குவதற்காகவுமே தாங்கள் போராடுவதாகப் பிரிட்டிஷ் அரசாங்கமும் பிரெஞ்சு அரசாங்கமும் கூறுகின்றன என்பதைக் கமிட்டி அறியும். ஆனால், பேசும் வார்த்தைக்கும், அறிவிக்கப்படும் கொள்கைகளுக்கும், உண்மையான நோக்கங்களுக்கும் காரியங்களுக்குமிடையே எவ்வளவோ வித்தியாசங்கள் இருக்கின்றன என்பதைக் காட்டுவதற்குச் சமீப சரித்திரத்தில் ஏராளமான உதாரணங்கள் இருக்கின்றன. 1914–18–ஆம் வருடப் போரின்போது, ஜனநாயகத்தைப் பாதுகாப்பதும், சிறு நாடுகளின் சுதந்திரமும், சுயநிர்ணய உரிமையுமே யுத்த நோக்கங்கள் என்று கூறப்பட்டன. ஆனால், இந்தக் கொள்கைகளைப் பிரகடனம் செய்த நாடுகளே ஒட்டமான் சாம்ராஜ்யத்தைப் பங்கு போட்டுக்கொள்ளுவதற்காக ரகசிய ஒப்பந்தங்களைச் செய்துகொண்டன. நாடு பிடிக்கத் தாங்கள் விரும்பவில்லை என்று சொல்லிக்கொண்டபோதிலும் வெற்றி பெற்ற வல்லரசுகள் தங்கள் காலனி நாடுகளை அதிகரித்துக்கொண்டன. இப்பொழுது நடக்கும் ஐரோப்பிய யுத்தமே வார்சேல்ஸ் ஒப்பந்தத்தின்,அதைச் செய்தவர்களின் மோசமான தவறுகளையே எடுத்துக்காட்டுவதாகிறது. அவர்கள் தங்கள் வாக்குறுதியை மீறித் தோற்ற நாடுகளின்மீது ஏகாதிபத்திய சமாதானத்தைக் கட்டாயமாகப் புகுத்தினர். அந்த ஒப்பந்தத்தினால் ஏற்பட்ட, நம்பிக்கை அளிப்பதாக இருந்த ஒரே அம்சமான சர்வதேச சங்கமும், ஆரம்பத்திலேயே கழுத்து நெரிக்கப்பட்டதோடு அதைச் சேர்ந்த முக்கியமான நாடுகளே அதைக் கொன்றும்விட்டன.

5. நம்பிக்கை அளிப்பதாகத் தோன்றும் ஒரு பிரகடனம்கூட, கேவலமான காரியத்தினால் பின்னால் எப்படிக் கைவிடப்பட்டுவிடும் என்பதைப் பின்னால் ஏற்பட்ட சரித்திரம் மீண்டும் தெளிவாக்குகிறது. மஞ்சூரியாவில் ஆக்கிரமிப்புக்குப் பிரிட்டிஷ் அரசாங்கம் உடந்தையாக இருந்தது; அபிஸீனியாவிலும், ஸ்பெயினிலும் ஜனநாயகத்திற்கு ஆபத்து ஏற்பட்டது; அவை வேண்டுமென்றே துரோகம் செய்யப்பட்டன. கூட்டுப் பாதுகாப்பு முறையில் திடமான நம்பிக்கையைத் தெரிவித்த நாடுகளே, அம்முறை நாசமாவதற்குச் சதி செய்தன.

6. ஜனநாயகம் ஆபத்தில் இருக்கிறது என்றும், அது பாதுகாக்கப்பட வேண்டும் என்றும் மீண்டும் கூறப்படுகிறது. இதைக் கமிட்டி முற்றிலும் ஒப்புக்கொள்ளுகிறது. இந்த லட்சியத்திலும், நோக்கத்திலும் மேற்கத்திய மக்கள் நம்பிக்கை கொண்டிருப்பதோடு இவற்றிற்காகத் தியாகங்களைச் செய்யவும் அவர்கள் தயாராக இருக்கிறார்கள் என்று கமிட்டி நம்புகிறது. ஆனால், மக்களின் லட்சியங்களும், போராட்டத்தில் தங்களையே தியாகஞ் செய்து கொண்டிருக்கும் மக்களின் லட்சியங்களும் உணர்ச்சிகளும், திரும்பத் திரும்ப அலட்சியம் செய்யப்பட்டு வந்திருப்பதோடு அவர்களுக்கு நம்பிக்கை இருக்கும்படியும் செய்யப்படவில்லை.

7. இருப்பது அப்படியே இருந்துகொண்டு வரும்படி செய்வதற்கு—ஏகாதிபத்திய அடிமை நாடுகளும், காலனிகளும், தனி உரிமையும், சலுகைகளும் இருந்துகொண்டு வருவதற்கே—யுத்தம் என்றால், இதில் இந்தியா எந்த விதமான சம்பந்தமும் வைத்துக்கொள்ள முடியாது. ஜனநாயகமும், ஜனநாயகத்தை அடிப்படையாகக்கொண்ட உலக ஒழுங்குமே பிரச்னை என்றால், அப்பொழுது இதில் இந்தியாவுக்கு அதிக அக்கறை உண்டு. இந்திய ஜனநாயகத்தின் நன்மை, பிரிட்டிஷ் ஜனநாயகத்தின் அல்லது உலக ஜனநாயகத்தின் நன்மைக்கு விரோதமானதன்று என்று கமிட்டி நம்புகிறது. ஆனால், இந்தியாவின் அல்லது வேறு இடங்களின் ஜனநாயகத்திற்கும், ஏகாதிபத்தியத்திற்கும் பாஸிஸத்திற்கும், இயற்கையாகவே அழித்துவிட முடியாத தகராறு இருந்து வருகிறது. ஜனநாயகம் நிலைக்கவும், விருத்தியாகவுமே பிரிட்டன் போராடுகிறது என்றால், அதனிடம் இருக்கும் நாடுகளில் அது அவசியமாகவே ஏகாதிபத்தியத்தை ஒழித்துவிட்டு இந்தியாவில் முழு ஜனநாயகத்தை அமைக்க வேண்டும். அரசியல் நிர்ணய சபை மூலம் தங்களுக்கு வேண்டிய அரசியலைத் தாங்களே, வெளியார் குறுக்கீடு இல்லாமல், அமைத்துக்கொண்டு, தன் கொள்கைகளைத் தானே அமைத்துக்கொள்ள வேண்டும். ஆக்கிரமிப்புக்கு எதிராகப் பரஸ்பரப் பாதுகாப்புக்கும், பொருளாதார ஒத்துழைப்புக்கும், சுதந்திர ஜனநாயக இந்தியா மற்றச் சுதந்திர நாடுகளுடன் சந்தோஷமாகச் சேர்ந்துகொள்ளும். உலகத்தின் அறிவையும் வசதிகளையும் பயன்படுத்தி மனிதவர்க்கத்தின் உயர்விற்கும் முன்னேற்றத்திற்குமான, சுதந்திரத்தையும் ஜனநாயகத்தையும் அடிப்படையாகக்கொண்ட, உலக ஒழுங்கை அமைக்கவும் அது பாடுபடும்.

8. ஐரோப்பாவுக்கு ஏற்பட்டுவிட்ட நெருக்கடி, மனிதவர்க்க நெருக்கடியேயன்றி ஐரோப்பிய நெருக்கடி மாத்திரமல்ல. மற்ற நெருக்கடிகளையும் யுத்தங்களையும் போலவே இன்றைய உலகத்தின் முக்கியமான அமைப்பை இது அப்படியே விட்டுவிட்டுப் போய்விடாது. ராஜீயத்திலும், சமூக அமைப்பிலும், பொருளாதாரத்திலும், நல்லதற்கோ அல்லது கெட்டதற்கோ, அது உலகத்தை மாற்றியமைக்கவும்கூடும். சென்ற மகா யுத்தத்திலிருந்து பயங்கரமான வகையில் வளர்ந்திருக்கும் சமூக, ராஜீயச் சச்சரவுகளினாலும் மாறுபாடுகளினாலும் இந்த நெருக்கடி தவிர்க்க முடியாததாகும். இந்தத் தகராறுகளும்

